ஸ்ரீமத் வீரை ஆளவந்தார்
அருளிய

# ஞான வாசிட்டம்

மூலமும் உரையும்



சீர்வளர்சீர் முத்துராமலிங்க ஆண்டவர்

கோவிலூர் மடாலயம்
கோவிலூர் - 630307

# ஸ்ரீமத் வீரை ஆளவந்தார் அருளிய
# ஞான வாசிட்டம்
## மூலமும் உரையும்

பாக்களின் சீர் பிரித்து, எளிய நடையில் உரையைத் தொகுத்தவர்
**ஸ்ரீ P.C. இராமலிங்கம்,** வேதாந்த சபை, குடியாத்தம்.

கோவிலூர் ஆதீனம்
**ஸ்ரீலஸ்ரீ மெய்யப்ப ஞானதேசிக சுவாமி**களின்
அருளாணையின் வண்ணம் இந்நூல் வெளியிடப்படுகிறது.

**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் 630 307.
(காரைக்குடி அருகில்)
போன்: 04565 – 238783
E-mail: koviloormutt@gmail.com

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

*நம்முடைய சற்குருநாதர் நாச்சியப்ப சுவாமிகளின் அரசாட்சிக் காலத்தில் வேதாந்த மரபு நூல்கள் பதினாறில் பனிரெண்டு நூல்களை மொத்தம் நான்கு தொகுதிகளாக வெளியிட்டார்கள். (முதல் பாகம் - நாநா ஜீவவாதக் கட்டளை, கீதாசாரத் தாலாட்டு, சசிவன்ன போதம்; இரண்டாம் பாகம் - மகாராஜா துறவு, வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம்; மூன்றாம் பாகம் - இலட்சணா விருத்தி, வேதாந்த சூடாமணி, கைவல்ய நவநீதம்; நான்காவது பாகம் - விவேக சூடாமணி, அஞ்ஞவதைப் பரணி, ஈசுவர கீதை) நாம் பட்டம் ஏற்றுக் கொண்ட பின் 2014 ஆம் ஆண்டு பகவத் கீதை, 2020 ஆம் ஆண்டு பஞ்சதசி ஆகிய இரு நூல்களை வெளியிட்டோம்.*

*இப்பொழுது பதினான்காவது நூலான* **பிரம கீதையும்** *பதினாறாவது நூலான* **ஞானவாசிட்டமும்** *வெளியிடுகிறோம். இந்த ஞானவாசிட்டம் என்கிற நூல் ஆதியில் வசிஷ்டர் இராமபிரானுக்கு அளித்த உபதேசங்களின் தொகுப்பு. ஆனால் இதனை வடமொழியில் யோகவாசிட்டம், இராமகீதை, விமலராமாயணம் என்று பலபட அழைக்கப்படுகின்ற நூலாக வெளியிட்டவர் வால்மீகி முனிவர் என்று வரலாறு கூறுகிறது. வசிஷ்ட முனிவர் தன்னுடைய சீடர் இராமருக்கு உபதேசித்து அருளியது, தன்னுடைய புதல்வராகிய சுகருக்கு உபதேசித்தார். அங்ஙனம் வழிவழியாக சிரவணம் செய்துவர வால்மீகிக்கும் உபதேசிக்கப் பட்டது. அருகிலிருந்த முனிவர்கள் இதனை நூலாக்கி அளித்தால் எல்லோருக்கும் பயன் பெறும் என்று வேண்டிக் கொண்ட காரணத்தால் யோகவாசிட்டம் என்ற பெயரில் பரவியது. இந்நூலை வீரை.ஆளவந்தார் என்னும் மகான் தமிழ் மொழியில் ஆக்கி மக்களுக்குப் பயன்பட அளித்தார்.*

*ஞானவாசிட்டம் 2055 பாடல்கள் கொண்ட நூல். இதற்குப் பல உரைகள் எழுதப்பட்டன. கருணாநிதி சுவாமியின் சீடரான நித்தியானந்த சுவாமி அவர்கள் சமுசார தாரணி என்று ஒரு உரையும், வீரசேகர ஞான தேசிக சுவாமிகளின் சீடரான வீர.சுப்பையா சுவாமிகள் எழுதிய வீரசேகரம் என்னும் உரையும், பிறசை அருணாசல சுவாமிகள் எழுதிய ஒரு உரை நூலும் கிடைக்கப் பெற்றுள்ளன. இவை அனைத்தும் ஞானவாசிட்டத்தினுடைய பொதுப்பொருள் உட்கருத்து (வாச்சியார்த்தம், லட்சியார்த்தம்) அனைத்தும் அனைவருக்கும் தெளிவாகப் புரியும் வண்ணம் உள்ளன. இருந்தும் இன்றைய வேதாந்த மாணாக்கர்களுக்கும், முமூட்சுகளுக்கும் எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய ஓர் உரை தேவை என்று கருதினோம்.*

*நாம் நம் திருமடத்தில் முமூட்சுகளுக்கு நாநா ஜீவ வாதக் கட்டளை தொடங்கி ஞானவாசிட்டம் வரை வகுப்புகள் நடத்தி வருகிறோம். நான் வகுப்புகளில் நடத்திய பொருள் குறிப்புகள் கொண்டு உரை நூலை வெளியிட எண்ணினோம். ஆனால் அதிர்ஷ்டவசமாகக் குடியாத்தம், காமாட்சியம்மன் பேட்டையைச் சேர்ந்த வேதாந்த*

ஆச்சாரியார் உயர்திரு. PC.இராமலிங்கம் அவர்கள் ஆறு பிரகரணங்களுக்கும் உரை எழுதி உள்ளது அறிந்து அவரிடம் வேண்டி அவருடைய உரையை முழுமையாகப் பெற்று அதனை அச்சேற்றி வெளியிடுகின்றோம்.

யாவரும் புரிந்து கொள்ளக் கூடிய நல்லதொரு உரையைச் சுருக்கமான முறையில் எழுதியருளிய நண்பர் PC.இராமலிங்கம் அவர்களுக்கு நம்முடைய திருமடத்தின் சார்பாக நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறோம். நண்பர் PC.இராமலிங்கம் அவர்கள் பல்லாண்டு நலமுடன், வளமுடன் வாழ்ந்து மென்மேலும் அனேக முமூட்சுகளுக்கு வேதாந்த சாஸ்திரங்களைக் கற்பிக்கவும், வேதாந்த நூல்களை எழுதி உதவவும் கோவிலூர் ஆண்டவர் திருவடி சிந்தித்து வாழ்த்துகிறோம்.

இந்த நூல் வெளிவர உதவிய சொர்ணம் சுவாமி, முல்லை மு.பழநி, திருமதி. ஆனந்தலட்சுமி, பிழைதிருத்தம் செய்ய உதவிய நா.வேங்கடாசலம், அச்சிட்ட அன்பர்கள் அனைவருக்கும் நம்முடைய நன்றிகள், வாழ்த்துகள், ஆசீர்வாதங்கள்.

இந்த வேதாந்த நூல்கள் வெளிவருவதற்கு எல்லா வகையிலும் உதவிய அனைத்து நல் உள்ளங்களுக்கும் நம்முடைய குருமுதல்வர் திருவடி சிந்தித்து வாழ்த்துகிறோம்.

ஆசீர்வாதங்கள்

**ஸ்ரீ சற்குருநாதன் துணை**

**செப்டம்பர் 2021**

# முகவுரை

**வே**த சாகை என்றால் 'சம்ஹிதை, பிராம்மணம், ஆரண்யகம்' என்ற பகுதிகள் உண்டு. 'சம்ஹிதா' என்றால் ஒழுங்குபடுத்திச் சேர்த்து வைத்தது என்று பொருளாம். ஒரு வேதத்தின் உட்பொருள் முழுவதையும் முறையாகச் சேர்த்து மந்திரங்களாகக் கொடுத்திருப்பது தான் 'சம்ஹிதை'. பிராம்மணம் என்ற பாகத்தில் வைதிகமான கர்மங்கள் எப்படிச் செய்ய வேண்டும் என்றும், சம்ஹிதையில் சொல்லப்பட்டுள்ள மந்திரங்களை யக்ஞம் (வேள்வி-யாகம்) என்ற செயலாக மாற்றுகின்ற போது, மந்திரங்களில் உள்ள வார்த்தைகளுக்கு இப்படித்தான் அர்த்தம் கொள்ள வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறதாம். சம்ஹிதை, பிராம்மணம் பகுதிகளில் காட்டுக்குப் போய் தவம்செய் என்று சொல்லவில்லை. இல்லறத்தில் இருந்து கடைப்பிடிக்க வேண்டிய கர்ம அனுட்டானங்கள் தான் உள்ளனவாம். இப்படிக் கர்மங்களைச் செய்வதால் சித்த சுத்தி ஏற்பட்டு காட்டுக்குப் போவதற்குத் தயார்செய்வது தான் ஆரண்யகம். ஆக சம்ஹிதை மந்திரம், பிராம்மணம் கர்மா. இதன் தத்துவார்த்தத்தை விளக்குவதிலும், யாகம் செய்வதன் உட்பொருளை விசாரணை செய்வதிலும் தான் ஆரண்யகம் முக்கியத்துவம் தருகிறது.

ஆரண்யகங்களுக்கு முடிவில் தான் உபநிடதங்கள் வருகின்றன. இவற்றையே வேதாந்தம் என்றும் ஞானமார்க்கம் என்றும் சொல்கிறோம். இவை சீவாத்மா பரமாத்மா இருவரிடை பேதம் இல்லை என்பதை உணர வைப்பதற்காக ஏற்பட்டவை. *(சூத்திரம் என்பது சித்தாந்தத்தை ரத்தினச் சுருக்கமாகச் சொல்வது. பாஷ்யம் என்பது அதற்கு விரிவுரை. அந்த விரிவுரையையும் ஆரம்பம் முதல் முடிவு வரை விரிவாக விளக்குவது தான் வார்த்திகம்).* இந்த வேதாந்தம் என்கிற ஞான மார்க்கத்தில் பயணம் செய்ய அடிப்படைத் தகுதிகள் சாதன சதுட்டயம் என்ற நான்கு ஆகும். இதனை வேறொரு கோணத்தில் புரிந்து கொள்ளலாம்.

முதல் தகுதி - அழிவது எது, அழியாதது எது என்று தெளிந்து கொள்வது. அழியக்கூடியது உலகப் பொருள்களும், தேகமும். அழியாதது கடவுள் அதாவது பிரம்மம். அழியாத நிலையில் என்றுமிருக்கும் கடவுள் தான் உயர்ந்தவர் எனக் கருதுவது பக்தியோகம். அடுத்தது தினமும் நடைபெறும் இன்ப துன்ப நிகழ்வுகளில் நிராசையோடு பலன் கருதாமல் நடந்து கொள்வது கர்மயோகம். இரண்டாவது தகுதி கர்மயோகத்தோடு பொருந்தி வருவதைக் காணலாம். மூன்றாவது மனதைத் தேவையான வழியில் பயன்படுத்தி அடக்குவது அதாவது மனம், இதெல்லாம் பிராணாயாமத்தின் ஒருபகுதி என்று கொண்டால் இராஜயோகம். பக்தியோகம், கர்மயோகம், இராஜயோகம் என்ற மூன்று மார்க்கங்களையும் தன்னுள் அடக்கி, தீவிரமான மோட்ச இச்சை உடைய நான்காவது தகுதி ஞானயோகம் என்பது புலனாகும். ஆகவே ஞான மார்க்கம் மற்ற மூன்றையும் உள்ளடக்கியது. ஞானயோகத்தின் உயிர் நாடியாக விளங்குவது தத்துவ விசாரம். பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தையும் அதன் தத்துவங்களையும் விசாரித்து அறிவதே விசாரம்.

*சென்னை வியாசர்பாடி கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகளின் சீடராக விளங்கிய ஸ்ரீமத் சிவராஜானந்த சுவாமிகள் குடியாத்தம் நகரில் தங்கியிருநந்து சுமார் 12-க்கும் மேலான சீடர்களுக்கு அவரது இல்லத்தில் தினந்தோறும் வேதாந்த சாத்திரங்களைக் கற்பித்து வந்தார். சுவாமிகளின் சீடர்களில் ஒருவரான அடியேனின் தந்தை பங்கி நா.சின்னதம்பி அவர்களே எனக்கு ஆதி குருவாக அமைய, பின்பு குடியாத்தம் நகரை அடுத்த மகாதேவ மலையின் குகையில் இருந்து வேதாந்த தத்துவங்களைப் போதித்த தவத்திரு மலையம்மையார் அவர்களின் சீடரான தவத்திரு பெருமாள் சுவாமி இவரது சீடர் வாலாசா தவத்திரு பி.திருவேங்கடம் சுவாமிகளிடம் வேதாந்த நூல்களைப் பயின்று, பின்பு குடியாத்தம் நகரில் வேதாந்த சபை என்ற பெயரில் நான்கைந்து அன்பர்களுடன் வேதாந்த விசாரம் செய்து வருகிறோம்.*

*குடியாத்தம் வேதாந்த சபையில் விசாரம் செய்து அறிவதற்காக ஒன்பது வேதாந்த சாத்திரங்களைப் படித்து உணர்ந்தால் போதுமானது என்பதாக வைத்துக் கொண்டிருக்கிறோம். அவை 1.நாநா சீவ வாதக்கட்டளை 2.கைவல்ய நவநீதம் 3.வாசுதேவ மனனம் 4.விசார சாகரம் 5.வேதாந்த சூடாமணி 6.தத்துவானு சந்தானம் 7.பஞ்சதசி 8.ஞான வாசிட்டம் 9.பகவத் கீதை ஆகியன. இந்த நூல்களை சபையில் போதித்தும், படித்தும், விசாரம் செய்தும் வருகிறோம்.*

*இராமபிரானுக்கு வசிட்ட முனிவர் அருளிச் செய்தது ஞான வாசிட்டம் என்ற நூல். வடமொழியில் வால்மீகி முனிவர் பரத்வாசருக்குக் கூறியதாக 'யோக வாசிட்டம்' என்ற பெயரில் விளங்குகிறது. தமிழில் ஞான வாசிட்டம் என்ற பெயரில் ஆளவந்தார் முனிவர் அழகிய எளிய பாக்களாகப் பாடியுள்ளார். இந்நூல் 2055 செய்யுள்களைக் கொண்டுள்ளதாக யாப்பு இலக்கணத்தில் புணர்ச்சி விதிகளின்படி சீர் பிரிக்காமல் மிக மிகக் கடினமான உரைகள் எழுதப்பட்டதாகவும் உள்ளதால், திருவருளும், குருவருளும் துணைபுரிய, இக்காலத்தில் படிப்பவர்களுக்கு எளிதாக அமைய பாக்களின் சீர் பிரித்து எளிய நடையில் உரை தொகுக்கப்பட்டுள்ளது. இடையறாத ஆர்வமுடன் படித்துப் பொருள் உணர்ந்து பயன்பெற வேண்டுகிறேன். ஆன்ம லாபம்.*

**செப்டம்பர் 2021** **P.C. இராமலிங்கம்**

*வேதாந்த சபை, குடியாத்தம்.*
*வேலூர் மாவட்டம்.*
*அலைபேசி: 99409-27133*

# உள்ளே

## ஞான வாசிட்டம் - பொருள் அட்டவணை

| பிரகரண எண் | பிரகரணம் | பாக்கள் | கதைகள் |
|---|---|---|---|
| | பாயிரம் | 14 | |
| 1 | வைராக்கியப் பிரகரணம் | 147 | 1 |
| 2 | முமுட்சுப் பிரகரணம் | 28 | |
| 3 | உற்பத்திப் பிரகரணம் | 327 | 8 |
| 4 | திதிப் பிரகரணம் | 250 | 5 |
| 5 | உபசாந்திப் பிரகரணம் | 535 | 9 |
| 6 | நிருவாணப் பிரகரணம் | 754 | 14 |
| | மொத்தம் | 2055 | 37 |

# ஸ்ரீமத் வீரை ஆளவந்தார் அருளிய

# ஞான வாசிட்டம்

# மூலமும் உரையும்

## பாயிரம்

### (கலிவிருத்தம்)

பெண்மை பாதியன் பெற்ற களிற்றினை
அண்மை தூரம்அற அகத்(து) உன்னுவாம்
திண்மை ஞானச் சிறப்(பு)உயர் வாசிட்டம்
உண்மை யாக ஒருங்(கு)உரை செய்யவே.

**பொழிப்புரை:** *திடமான அனுபவ ஞானத்தை அடையச் சாதனங்களைக் கூறுவதில் சிறந்து உயர்ந்து விளங்கும் வண்ணம் வசிட்ட முனிவர் இராமபிரானுக்கு வினா விடை வடிவில் அருளிய இந்த நூலினை வால்மீகி ரிஷி இயற்றியவாறு அர்த்தம் மாறாமல் தமிழ்ப் பாக்களால் உரை செய்வதற்கு உமை ஒரு பாகன் பெற்ற ஆனை முகத்தானை அருகாமை மற்றும் தூரத்தில் இல்லாமல் தன் வடிவமாகவே சிந்தையில் நினைப்பாம்.* **(1)**

போற்(று)இ ராமன் புகல்வை ராக்கியம்
தோற்று நூற்றிரு பத்திரண் டாம்சுகன்
சாற்று சீர்இரு பத்தைந்து தற்பதத்
தேற்றம் வேண்டினர் சீர்இரு பத்தெட்டே.

**பொழிப்புரை:** *யாவரும் போற்றுகின்ற இராம பிரான் மனித உருவில் அவதாரம் எடுத்த பிறகு அதற்கேற்ப அறியாதவர் போல குருவினை அணுகி கேட்டதற்குப் புகன்ற முதலாவதான வைராக்கிய பிரகரணம் 128 விருத்தப் பாக்களாகும். வியாச முனிவரின் தவப்புதல்வனான சுகப் பிரம்மத்திற்கு ஜனக மகாராஜாவினால் பரிசோதித்து உபதேசிக்கப்பட்ட சுக உபாக்கியானம் 25 பாக்களாக உள்ளன. தத் பத அர்த்தத்தில் தெளிவு பெற விருப்பம் கொண்ட முமுட்சுப் பிரகரணம் 28 பாக்களாக உள்ளன.* **(2)**

ஞான விண்மகன் நாற்பத்து நாலதாம்
மான லீலை மகிமைதொண் ணூறதாம்
ஆன ஊசியும் ஐயெட்டு ஏழுமாம்
ஈனம் அற்றசீர் ஆராய்ந்தவர் ஈர்ஐந்தே.

**பொழிப்புரை:** *கர்த்தா தன்மை இல்லாது அனைத்தையும் செய்து காலனுக்கு அகப்படாத சிதாகாசன் (ஞானவிண்மகன்) கதை 44 பாக்களால் அமைந்துள்ளது. சரஸ்வதியின் அருளினால் ஞானம் பெற்ற லீலை கதை 90 பாக்கள் ஆகும். கற்கடி என்பவள் ஊசி வடிவம் தரித்தும், பின்னர் நிராசையால் ஞானத்தையும் அடைந்த கற்கடி கதை 47 பாக்கள் ஆகும். ஐந்தவர் எனப் பெயர் பெற்றவர் ஆராய்ந்து பிரம்மாவின் பதமே சிறந்தது எனத் தவம்செய்து அடைந்த கதை 10 பாக்களால் ஆனதாகும்.* **(3)**

வஞ்ச இந்திரன் வன்கதை ஒன்பதாம்
நெஞ்சி னுக்(கு)இரு பத்திரு நீள்கவி
தஞ்ச பாலகன் தன்கதை எட்டதாம்
எஞ்சு சித்தன் இருபதும் ஆறுமே.

**பொழிப்புரை:** *பெயர் மாத்திரத்தால் பெரும் வஞ்சம் செய்து தீர மனத்துடன் இருந்த அவன் மனத்தின் செயலைக் காட்டிய கதை 9 பாக்கள் ஆகும். மனதின் வடிவமும் அதன் வேறு வேறு வகையாலே பயன் அடைதலும் காட்டும் கதை 22 பாக்களால் ஆனது. தஞ்சம் அடைந்த பாலகனுக்குப் பொய்யாகப் புனைந்து கூறிய கதை 8 பாக்களால் ஆனது. இலவண ராசாவுக்கு இராசசூய வேள்வியில் துயரத்தைத் தந்து தேவலோகத்தில் இருந்து வந்த சித்தன் காரணமாக நடந்த கதை 26 பாக்கள் ஆகும்.* **(4)**

துன்னும் உற்பத்தி சொல்லெழு பத்தொன்றாம்
நன்னர் வெள்ளியும் நாற்பதோடு ஏழதாம்
மன்ன தாமனும் ஐயெட்டு மூன்றுமாம்
மின்ன வீமன்இ ருபதும் ஐந்துமே.

**பொழிப்புரை:** *மனத்தினாலே வாசனைக்குத் தக்கபடி நெருங்கி உண்டாம் உற்பத்திப் பிரகரண இதோபதேசம் 71 செய்யுள்கள் ஆகும். நன்மையாக தியானம் செய்து கொண்டிருந்து வாசனையினால் பல பிறப்பு அடைந்து எமதருமனின் திருவருளால் இனிய பதம் அடைந்த சுக்கிரன் கதை 47 பாக்களாகும். வாசனை இல்லாமல் இருந்து பின்னர் வாசனையால் கட்டுண்டு இருந்தவரான தாமவியாள கடர் கதை 43 பாக்கள் ஆகும். இச்சூழ்ச்சியை உணர்ந்த சம்பராசுரனால் ஞானத்தோடு சிருட்டிக்கப்பட்ட வீம பாசதிடர் கதை 25 பாக்கள் ஆகும்.* **(5)**

துதிகொடு(டு) அசுரன் தொல்கதை நூற்றெட்டாம்
மதிநெ டும்கசன் வன்கதை நால்ஐந்தாம்
திதிள னும்கதை ஏழும் சனகன்தன்
முதிய நற்கதை முப்பதும் ஆறுமே.

**பொழிப்புரை:** *பவித்திரமான இடத்தை அக்கினி பகவானால் பெற்று தவம் செய்ததால் யாவரும் துதிக்கும்படி வாழ்ந்த தாசூர முனிவர் வனதேவதை புத்திரனுக்கு ஞான உபதேசம் செய்து அந்த மைந்தனும் ஞானம் அடைந்த கதை 108 பாக்கள் ஆகும். சூக்கும தீர்க்க புத்தி விருத்தியால் சமாதி அடைந்திருந்த வியாழ பகவான் புதல்வராகிய கசன் அனுபூதி நிறைந்த கதை 20 பாக்கள் ஆகும். திதிப் பிரகரண இதோபதேசமாய் பெரியோர் சொரூபமும் நடையும் குணமும் அதிகாரிகள் செய்ய வேண்டிய கடமையும் கூறும் கதை 7 பாக்கள் ஆகும். ஆகாய பலம்போல் தெய்வ சம்பத்தால் சனக மன்னன் திட ஞான போதக இனிமையான கதை 36 பாக்கள் ஆகும்.* **(6)**

**உரிய புண்ணியன் ஒன்பது நாற்பது**
**நரகின் மாவலி நாலுடன் ஐம்பதாம்**
**பிரக லாதன் பிழைப்(பு)எழு பத்திரண்(டு)**
**அரிய காதியும் ஐந்துடன் முப்பதே.**

**பொழிப்புரை:** *உபசாந்திக்கு உரியவனாய் (தம்பி பாவனனுக்கு அனுக்கிரகம் புரிந்த) புண்ணியன் கதை 49 செய்யுள்கள் ஆகும். துன்பமற்ற (பெரிய வலிமையையும் பெரும் ஆயுளையும் பெற்ற) மகாபலிச் சக்கரவர்த்தி கதை 54 செய்யுள்கள் ஆகும். (பாற்கடல் வாசன் நாராயணரது அருளினால் ஞானம் பெற்று சமாதி அடைந்திருந்த) பிரகலாதன் கடை 72 செய்யுள்கள் ஆகும். ஏனையோரால் செய்தற்கு அரிய (தவம் செய்து மாயையை வென்ற) காதிப் பிராமணரது கதை 35 செய்யுள்கள் ஆகும்.* **(7)**

**சித்தம் ஆறித் தெளிந்த உத்தாலகன்**
**ஒத்த எண்பதுக்(கு) ஒன்று குறையவாம்**
**சுத்த நாற்பதும் ஆறும் சுரகுவாம்**
**பத்தும் ஏழுமாம் பாச விபாசரே.**

**பொழிப்புரை:** *மனதைப் போராடி யோக வலிமையால் வென்று சம திருஷ்டி அடைந்த உத்தாலக முனிவரது கதை 79 பாக்கள் ஆகும். விவகார வேளையெலாம் சமாதியே பெற்று அரசாட்சி செய்த தூய குண சுரகு மன்னவன் கதை 46 பாக்கள் ஆகும். பாச விபாசர் என்னும் பெயர்கள் வாய்ந்த இரு நேயரும் உரையாடலால் ஞானம் அடைந்த கதை 17 பாக்கள் ஆகும்.* **(8)**

**ஏத மற்ற எழுபதும் ஆறுமே**
**வீத கவ்வியன் மேல்எழுபத் தொன்றாம்**
**போத முந்(து)உப சாந்தி புசுண்டனும்**
**ஓத நூறு கவியில் ஒன்றில்லையே.**

**பொழிப்புரை:** *(முன்பு சிவகணமாய் இருந்து வந்து) குற்றமற்ற சித்தம் உடைய வீத கவ்வியன் கதை 76 செய்யுள்கள் ஆகும். ஞான மகிமையால் ஆகாயத்தில் நடப்பதும் துச்சம் எனக் காட்டும் உபசாந்தியைத் தரும் இதோபதேசம் 71 செய்யுள்கள் ஆகும். பிராண விருத்தியைப் பின்பற்றி நீண்ட காலம் விசிராந்தி அடைந்து புகழ்ந்து கூறத்தக்க புசுண்டன் கதை 99 செய்யுள்கள் ஆகும்.* **(9)**

தேவ பூசை சிறந்த எழுபதாம்
மேவும் வில்வம் மிகுபதி னாறதாம்
ஏவம் அற்ற சிலைக்கதை எட்டதாம்
தாவில் அர்ச்சுனன் சாற்(று)இருபத் தொன்றே.

**பொழிப்புரை:** *பரமசிவன் வசிட்ட பகவானுக்கு உபதேசித்த விசிராந்தி சாதக விசேடமான தேவ பூசை கதை 70 செய்யுள்கள் ஆகும். மேலான பிரம்ம சொரூபமே எல்லா வடிவமாகவும் இருக்கின்றது என்று உணர்த்தும் வில்வ பலக் கதை 16 செய்யுள்கள் ஆகும். அசங்கத் தன்மையால் திருசிய சம்பந்த குற்றமற்ற சித்தானது அசையாமல் சிலை போன்றது என உணர்த்தும் கதை 8 செய்யுள்கள் ஆகும். யுத்தம் பெரிதும் வந்தும் பகவான் திருவருளால் சித்த விசிராந்தி மாறாது செய்த அருச்சுனன் கதை 21 செய்யுள்கள் ஆகும்.* **(10)**

சதஉ ருத்திரன் தன்கதை முப்பதாம்
உதவும் ஐயைந்தோ(டு) ஒன்(று)என்பர் பேய்க்கதை
முதுப கீரதன் முப்பத்து மூன்றதாம்
எதிர்சி கித்துவசன் எண்பது மும்மையே.

**பொழிப்புரை:** *ஜன்ம பரம்பரை சங்கற்பம் மாத்திரம் எனக்காட்டும் முனிவரன் கதை 30 செய்யுள்கள் ஆகும். அனைத்து சந்தேகங்களையும் நீக்கி விடை உதவும் படியான வேதாள மன்ன வினாவிடை கதை 26 செய்யுள்கள் ஆகும். மிகுந்த வைராக்கியம் அடைந்த பகீரதன் கதை 33 செய்யுள்கள் ஆகும். இதத்தை உபதேசித்த சூடாலையை எதிர்த்து அவள் சொன்ன கதையை நம்பாமல் காட்டிற்குச் சென்று தவம் வருந்திச் செய்து அவளாலேயே ஞானம் அடைந்த சிகித்துவசன் கதை 280 செய்யுள்கள் ஆகும்.* **(11)**

புகல்க சன்பதின் மூன்றுபொய் யாமவன்
இகழும் நாலைந்து நீண்ட விரதங்கள்
இகலில் பத்தொன் பதாம்இக்கு வாகுவின்
அகில ஞானம் அறுபதும் ஆறுமே.

**பொழிப்புரை:** *பிதாவால் மனத்தியாகமே சகலத் தியாகம் என உபதேசிக்கப்பட்ட கசன் கதை 13 செய்யுள்கள் ஆகும். அகங்காரத்தோடு கூடி விவகரிக்கும் யாவரும் துக்கம் உடையவரே எனக் காட்டும் மித்தியா புருடன் கதை 20 செய்யுள்கள் ஆகும். சித்த விசிராந்தி கெடாதபடி அதி திடமான புத்தியால் செய்யத் தக்கனவாம் என பரமசிவன் பிருங்கீசற்கு உபதேசித்த மூன்று விரதங்கள் 19 செய்யுள்கள் ஆகும். ஜகத்தின் காரணம் யாது என மநு பகவானிடம் கேட்டு ஞானம் அடைந்த இட்சுவாகு கதை 66 செய்யுள்கள் ஆகும்.* **(12)**

மானு வேடனும் மற்(று)இருபத் தைந்தாம்
ஆன யோகம் அறுபதும் எட்டுமாம்
மோன உண்மை மொழிந்துள வாசிட்ட
ஞான நூல்கதை நாற்பது மூன்றுமே.

**பொழிப்புரை:** *மானைக் காணோம் என்று பின்தொடர்ந்து சென்ற வேடன் அங்கிருந்த முனிவனைக் கேட்ப அவர் துரியத்தைக் கூறி லௌகீகம் மறந்த தன்மையைக் கூறும் கதை 25 பாக்கள் ஆகும். எல்லா நூல்களின் சாராம்ச அர்த்தத்தையும் தொகுத்துக் கூறுவதான நிர்வாணத்தின் இதோபதேசம் 68 பாக்கள் ஆகும். மறுகு வாதனைகள் தீர்ந்த மௌனத்தை ஒழிய வேறு ஒரு கதி நல்லதில்லை என உணர்த்தும் ஞான சாதனத்தினை விரிவாகக் கூறும் 43 கதைகளாம்.* **(13)**

**பாக மார்பதி கம்பதி னான்கதாம்**
**ஆகவே இரண்டா யிரத் தைம்பது**
**மாகவிக்(கு) ஐந்(து)அதி கம்இவ் வாசிட்டம்**
**யோக ஞானத்தின் உண்மை உரைக்குமால்.**

**பொழிப்புரை:** *பாகம்=பங்கு=பிரிவு அதிபக்குவமாக உபோற்காதமாய் மற்றொன்று வந்து கலவாது மங்களம் உள்படக் கூறும் பாயிரச் செய்யுள் 14 செய்யுள்கள் ஆகும். இவையாவும் ஒன்றாகச் சேர்ந்து இந்த வாசிட்டம் 2050 செய்யுள்களுக்கு 5 அதிகம். திட நிருவிகற்ப சமாதியில் உண்டாகும் சாட்சாத்காரத்தினால் எய்தும் பிரம்மானந்த மோட்சம் முதலியவற்றின் யதார்த்த தத்துவத்தைக் கூறுவது ஆகும்.* **(14)**

**(பாயிரம் முற்றும்)**

# ஞான வாசிட்டம்
# நூல்

# 1. வைராக்கியப் பிரகரணம்

**(கலிவிருத்தம்)**

பொன்னுல கத்தினில் புவியில் அந்தரத்(து)
என்னுடை உட்புறத்(து) இலங்கு கின்றது
மன்னுசிற் சோதியே வடிவம் யாவுமாய்த்
துன்னுவது) அப்பொருள் தொழு(து)இறைஞ் சுவாம்.

**பொழிப்புரை:** *சுவர்க்கத்திலும், பூலோகத்திலும், இரண்டுக்கும் மத்தியமான அந்தரத்திலும், என்னுடைய உள்ளும் வெளியிலும், விபுவாய் விளங்குகின்ற ஞான வடிவமாகிய ஆன்மாவே எல்லா வடிவமும் ஆகித் திகழ்கின்றமையால் அந்த ஆன்மாவை மீண்டும் மீண்டும் வணங்குவாம்.* **(1.1)**

**நூல் பெருமை**

திகழுநான் முகன்முதல் தேவர் மூவரும்
சகலவே தங்களும் சாத்தி ரங்களும்
புகலுஞா னத்தினால் புரணம் ஆனது
நிகரில்வா சிட்டமா நிபுண ஞானநூல்.

**பொழிப்புரை:** *வசிட்டர், மரீசி முதலான முனிவர்களுக்கு எல்லாம் ஞான ஆசிரியராக விளங்கும் நான்முகன் முதலிய விஷ்ணு, மகாதேவர் முத்தேவர்களும், காண்டம் மூன்றில் கர்மம், பக்தி, ஞானம் மூன்றையும் போதிக்கின்ற வேதங்களும், அந்த வேதங்களை அனுசரித்து முனிவர்களால் கூறப்பட்ட சாத்திரங்களும் சொல்கின்ற ஞானம், ஞான சாதனங்களால் தன்னிடத்திலேயே சகல சாத்திரங்களின் அர்த்தமும் உள்ளடங்கி இருப்பதால் நிகரில்லாது இந்த ஞான வாசிட்ட நூலானது நிறைந்து முழுமை பெற்று விளங்குகின்றது.* **(1.2)**

தலைமைநான் முகன்மனத் தாம ரைக்(கு)இனன்
சிலையில்ரா கவன்திருச் செவிக்குத் தெள்ளமு(து)
உலை(வு)இல்வான் மீகிவாக்(கு) உதித்த தத்துவ
நிலைமைவா சிட்டமா நிபுண ஞானநூல்.

**பொழிப்புரை:** *அண்ட புவனங்கள் அனைத்துக்கும் தலைமையாய்த் திகழும் நான்முகனின் மனமாகிய தாமரை மலர்வதற்கு (இந்நூல்) சூரியன் போன்றதாம்.*

*வில்வித்தைக்கு இருப்பிடமாய் இருப்பவரும், சிலையா(கல்லா)கிய அகலிகையைப் பெண்ணாக்கி யவரும், சிலை (ஜடம்) இல்லாது எப்போதும் சேதனமாய் விளங்குபவரும், வில்லினை வளைத்து சீதா பிராட்டியை மணந்தவரும், கல்லினைப் போல் சமாதி நிலையில் இருப்பவரும் ஆகிய இராம பிரானின் அழகிய செவிகளுக்கு சஞ்சலம் இன்றி தவம்புரிந்த வால்மீகி ரிஷியின் திருவாக்கில் உதித்தது இந்நூல். சொரூப நிலையைப் போதித்து மோட்சத்தை அளிக்க வல்லதும் ஆனது இந்த வாசிட்டம் என்னும் ஞானநூல்.* **(1.3)**

**பெரியவர் அறி(வு)உறு பெருமை சான்றது**
**விரிவுறு சிறியவர் மேவொ ணாதது**
**வரிசையில் உயர்ந்தது வசிட்ட சங்கிதை**
**அரியமெய்ஞ் ஞானநூல் அனைத்தின் மிக்கதே.**

**பொழிப்புரை:** *சாதனங்கள் நான்கும் கைவரப்பெற்று, சிரவணம் முதலியவற்றில் நிறைந்த நிலைமையும், உள்முக நாட்டமும், மனநிறைவும் உடைய ஆசாரிய பெருமக்கள் உபதேசிக்க எளிதில் அறிந்து கொள்ளும்படியான பெருமை உடையது இந்நூல். இந்திரிய விஷயங்களில் மனம் செல்கின்றதாய் மோட்ச விருப்பம் இல்லாதவரான சிறியவரால் அணுக முடியாதது இந்நூல். கதை மேற்கோள், உதாரணங்கள் எடுத்துக் கூறி பரமானந்தம், சமாதி ஆகியவற்றைக் காட்டும் ஞான நூலாக வசிட்டர் அருளிய உபதேச நூல். மெய்ஞ்ஞானத்தைப் போதிக்கும் சாத்திரங்களின் அனைத்திலும் மிகவும் உயர்ந்தது இந்த ஞான நூல்.* **(1.4)**

**தெருளுறா மகர்க்(கு)இதம் செய்யும் அன்பினால்**
**அருமைவா சிட்டநூற்(கு) அன்னை ஒப்பளோ**
**உரியதாய் பிறவியை உள்ள(து) ஆக்குவள்**
**பெருமைவா சிட்ட(ம்)இப் பிறப்பை மாற்றுமே.**

**பொழிப்புரை:** *ஞானத்தை அடையும் விருப்பம் உடையவர்களுக்கு அவரவர் பக்குவம் நோக்கி இதமாக உபதேசம் செய்யும் இந்நூலுக்கு பெற்ற தாயும் நிகராக ஆவாளோ? பெற்றெடுத்த தாயானவள் மீண்டும் மீண்டும் பிறவியைத் தருபவள். பெருமை மிகுந்த இந்த வாசிட்ட ஞான நூலானது அவித்தையை அகற்றி பிறப்பதிலிருந்து விடுதலை தரும். (அதனால் ஈன்ற தாயினையும் உவமை சொல்ல முடியாது)* **(1.5)**

### அவையடக்கம்

**எண்ணுறு பெருங்குணத்(து) இராமன் தன்மயம்**
**நண்ணுற வசிட்டனே நவின்ற ஞானநூல்**
**பண்ணுறு தமிழினால் பாடு கேன்சுதை**
**மண்ணுறு கலத்தினும் வைக்கும் ஏழையேன்.**

**பொழிப்புரை:** *பூவுலகில் அவதாரம் செய்ததற்கு ஏற்ப ஞானம் விரும்பும் அதிகாரி போல் நடித்த அனந்த கல்யாண குணங்களை உடைய இராம பிரான் சுபாவமாகவே பெற்றிருக்கும் தன் சொரூப நிலையில் நிலைத்து நின்று பிரம்மானந்தம் அனுபவிக்க*

*வசிட்ட மா முனிவரே நேரடியாக திருவாய் மலர்ந்து அருளிச் செய்த இந்த ஞான நூலினை, சிறந்த தேவலோக அமிர்தத்தை சாதாரண மண் கலத்தில் வைக்கின்ற அற்ப அறிவுடைய யான், பல சந்தங்கள் நிறைந்ததாகச் செந்தமிழில் இயற்றி அளிக்கின்றேன்.* **(1.6)**

**அதிகாரியை அறிவித்தல்**

பந்தம்)உற் றனன்பர பதத்தைச் சேர்கஎன்று)
அந்தநிச் சயம்உளான் அறிவி லான்அலன்
சிந்தனை துயர்கெடச் சித்தைச் சேர்ந்துளான்
இந்தநூற்(கு) உரியவன் என்று கொள்கவே.

**பொழிப்புரை:** *இந்த ஞான நூலுக்கு அதிகாரி யார் எனில், "நான் பந்தத்தை அடைந்திருக்கிறேன், பந்தம் நீங்கி மோட்சத்தை அடைவேன்" என்ற திட நிச்சயத்தை உடையவனே ஆவன். அஞ்ஞானம் மிகுந்தவனும் அல்லன். சிந்தனையால் (சங்கற்பத்தால்) உண்டாகும் துக்கத்தை நீக்கியவரும் தன்னை ஆன்மாவாக உணர்ந்த ஞானியும் அதிகாரி அல்லன்.* **(1.7)**

ஒருங்(கு)உணர் குரவனாம் உயர்வான் மீகனை
மருங்குறப் பரத்துவன் வணங்கி வன்பவம்
நெருங்குவெந் துயரிலே நின்ற(து) எங்ஙனம்
அருங்குணத்(து) இராமன்நீ அருளில் கூறு)என்றான்.

**பொழிப்புரை:** *முற்றறிவு உடைய ஞான ஆசாரியனாம் மேலான வான்மீகனை ஒழுங்காக சீடத்துவ விதிப்படி பரத்துவாசன் வணங்கி, "கொடிய பிறவித் துயர் நிறைந்த சம்சார வாழ்வில் அரிய குணங்களைக் கொண்ட இராம பிரான் வாழ்ந்து அரசாண்டது எவ்வாறு?" என்று தேவரீர் அருள வேண்டும் என்று கேட்டுக்கொண்டான்.* **(1.8)**

நல்லது சிறுவநீ உரியை நான்அது
சொல்லுவன் கேட்குதி துயர்செய் மோகநீ
வெல்லலாம் மோகம்தான் சகத்தின் வேறு)அன்றி
மல்லல்வான் நிறம்படைத் தென்ன வந்துறும்.

**பொழிப்புரை:** *உத்தமமான குழந்தாய்! நீ கேட்ட வினா நன்றானது. முன்பு இராமாயணத்தைப் பாராயணம் செய்தமையால் மனத்தூய்மையும் சாதனமும் பெற்றுள்ள நீ கேட்பதற்குத் தகுதி உள்ளவன் ஆவாய். பிறப்பு இறப்பு என்ற துயரத்தைத் தருகின்ற ஆவரண விட்சேப வடிவ அஞ்ஞானமாகிய மோகத்தை நீ வெற்றி கொள்ளலாம். இந்த அஞ்ஞானம் சகத்தின் சம்பந்தம் உடையதாய் காரிய வடிவமாய் இருப்பது. பரந்து விரிந்திருக்கும் உறுப்பில்லாத ஆகாயமானது நீல நிறத்தை அடைந்தது போல, அஞ்ஞானிகளின் இடத்தில் அத்தியாசமாக ஆரோபித்து, கற்பனையான ஒற்றுமையால் வந்து அடைந்தாகும்.* **(1.9)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**இறப்பிலா இந்த மோகம் இறையும்மீட்டு் எண்ணம் இன்றி**
**மறப்பதே நல்ல(து) என்று மதித்(து)உயர் மனத்தி னுக்குத்**
**திறப்படக் காணப் பட்ட(து) இல்லெனச் சித்தி னாலே**
**உறப்பெறும் எப்போ(து) அப்போ(து) உயர்பர சுகம்அ(து) ஆமே.**

**பொழிப்புரை:** *(பாம்பின் தோற்றம் அதற்கு அதிஷ்டானமாகிய கயிற்றைப் பற்றி அறிந்த போதே அகன்று விடுவது போல், இருப்பது போல் தோற்றம் அளிக்கின்ற) இந்த அஞ்ஞானமாகிய மோகமானது அதிஷ்டானத்தைப் பற்றி அறியாததால் நாசம் ஆகாதிருந்து சகத் மயமாகத் தோற்றம் அளிப்பதை அணுவளவும் மீண்டும் மீண்டும் நினைப்பு வராதபடி மறந்து போவது நல்லது என்று நிச்சயித்து, காணப்படும் அனைத்தும் தன்னைக் (ஆத்மாவைக்) காட்டிலும் வேறொன்றில்லை என்று மனதில் மிக மிகத் திடமாக வலுப்பெற்றால் மீண்டும் எழும் எண்ணம் வராது. எப்பொழுது எண்ணம் இல்லாத கணம் வருமோ அப்பொழுது நிகரற்ற மோட்ச இன்பம் வந்து எய்தும்.* **(1.10)**

**வழிபடும் இதனை விட்டு மற்றுள நூல்கள் என்னும்**
**குழிகளில் புரண்(டு)அஞ் ஞானக் குணத்தினால் பிறப்போர்க்(கு) எல்லாம்**
**ஒழிவற ஒருவர் செய்தற்(கு) உரித்தன்றாய்த் தானே உண்டாகும்**
**கழித(ல்)இல் பரம இன்பம் கற்பங்க ளானும் கூடா.**

**பொழிப்புரை:** *வித்வான்களால் போற்றி துதிக்கப்படும் இந்த திருசிய (காணப்படும் அனைத்தையும்) மறந்து போதலையும், அதனைக் காட்டிக் கொடுக்கின்ற வேதாந்த சாத்திரங்களையும் விடுத்து, மற்ற விஷயங்களைக் காட்டுகின்ற நூல்களாகிய படுகுழியில் தானும் விழுந்து புரண்டு, தன்னைச் சார்ந்தோர்களையும் விழச் செய்து, அறியாமையின் தன்மையினால் பிறவிகளை அடைந்து கொண்டிருப்போர்க்கு எல்லாம் கெடுதல் இன்றி யாவராலும் உண்டாக்கத் தகுதி இல்லாததாய் சுயம் சோதியாய் எப்பொழுதும் விளங்கும் பரமானந்தம் பல ஆயிரம் கோடி பிரமதேவனின் ஆயுட்காலம் கழிந்தாலும் கிடைக்காது.* **(1.11)**

**அலைசெய்வா தனையைச் சேடம் அறவிடல் நல்ல(து) என்றும்**
**நிலைபெறு முத்தி என்றும் நிமலமா நெறிஈ(து) என்றும்**
**தலைமையோர் பகர்வர் அன்ன(து) இருவகை சனன நல்கி**
**உலைதரு மலினம் ஒன்(று)அ(து) ஒழித்திடும் சுத்தம் ஒன்றே.**

**பொழிப்புரை:** *விட்சேபத்தை உண்டு பண்ணும் வாசனைகளை மிச்சம் இன்றி விடுதலே சீவன் முத்தி என்றும், இதுவே நிலைத்த விதேக முத்தி என்றும், மலம் இல்லாத நெறிமுறை என்று அறிந்த சத் புருடர்கள் கூறுகின்றனர். அந்த வாசனை இரு வகையாகும். ஒன்று பிறப்பினைத் தந்து உழல வைப்பதான மலின வாசனை. மற்றது அந்தப் பிறப்பினை ஒழித்திடும் சுத்த வாசைன என்பதாகும். (உலக வாசனை, தேக வாசனை, சாத்திர வாசனை என்னும் மூன்று வாசனைகளையும் விடாமல் திருசிய மறப்பு வராது என்பது பொருள் ஆகும்)* **(1.12)**

மடமையின் செறிவே மெய்யாய் மலிஅகங் காரம் துன்றிப்
படர்தரு பிறப்பை மேன்மேல் பயில்விக்கும் மலினம் என்பர்
அடர்தரு சனனம் என்னும் அங்குரம் இன்றி செந்தீச்
சுடமுளை யாவித்து ஒக்கும் சுத்தவா தனையது என்பர்.

**பொழிப்புரை:** *அறியாமையின் நெருக்கமே (அடர்த்தியே) ஆகாரமாய் கனமான அகங்காரத்துடன் நெருங்கி துன்பத்தைத் தருகின்ற பிறவிகளை மேன்மேலும் கொடுப்பது மலின வாசனை என்று சொல்வர். அடர்ந்த மறுபிறவி என்னும் சென்மத்தைத் தரக்கூடிய முளையில்லாமல் நெருப்பில் சுடப்பட்ட வித்தானது முளைக்காதது போன்றது சுத்த வாசனை என்பர்.* **(1.13)**

மெய்தரி நிமித்த மாகத் தரிப்பதாம் விளம்பும் சுத்தம்
எய்தினர் பிறவி யான அனர்த்தத்தின் என்றும் எய்தார்
நொய்தினில் நோக்க வேண்டும் நோக்கெலாம் நோக்கி இன்பம்
செய்திடும் சீவன் முத்தி சேர்ந்தவர் என்ன லாமே.

**பொழிப்புரை:** *நிகழ்காலத்தில் வந்த பிறவியில் உடல் நிலைத்திருப்பதற்காக மட்டும் சுத்த வாசனையைக் கொண்டிருப்பவர் துயரத்தைத் தரும் இனிவரும் பிறவிகளை அடையார். அதி சூட்சுமமாக அறிய வேண்டியதெல்லாம் அறிந்து பரம சுகத்தைக் காணும் அவரை வாழும் காலத்திலேயே சீவன் முத்தி அடைந்தவர் என்று சொல்லலாம்.* **(1.14)**

ஆன்றதோர் சீவன் முத்திப் பதத்தினை அடைந்துஇ ராமன்
பூன்றமாம் மனத்த னான நெறியினைப் புகலக் கேட்பில்
சான்றஇக் கேள்வி யாலே சரைமர ணங்கள் தீர்தி
தோன்றலே எனவான் மீகித் தொல்முனி சொல்ல லுற்றான்.

**பொழிப்புரை:** *மேன்மை உடைய ஒப்பற்ற சீவன் முத்தியை அடைந்து இராமன் மகத்தான மனம் உடையவன் ஆன நெறியினைக் கூற, பரத்துவாச! நீ செவ்வையாகச் சிரவணம் செய்யில் (கேட்பாய் ஆகில்) இந்தச் சிரவணத்தினால் மூப்பு மரணம் இல்லாத நிலை எய்தும் என்று தொன்மை வாய்ந்த வான்மீகி முனிவன் சொல்லத் தொடங்கினார்.* **(1.15)**

சதுமறை நூல்கள் யாவும் தரித்தனன் விநோதத் தாலே
எதுபயம் என்ன அஞ்சாது இருந்தனன் சின்னாள் பின்னாள்
முதுபயன் நதிகள் யாவும் முனிவரது இடமும் காண்பான்
கதுமெனக் காத லானான் கார்நிறக் கமலக் கண்ணன்.

**பொழிப்புரை:** *மேக நிறத்தையும், தாமரை போன்ற கண்களும் உடைய இராமபிரான் நான்கு வேதங்களையும், பிற சாத்திரங்கள் அனைத்தையும் தெளிவாகக் கற்று உணர்ந்து, இனி நமக்கு பயம் ஏது என்று அஞ்சாது சிலநாட்கள் இருந்தனன். வாலிப வயது கழிந்த பின்பு நிறைந்த பயன்களைத் தரும் நதிகள், முனிவர் வசிப்பிடங்கள் என இவற்றைக் காண்பதற்கு சீக்கிரமாக விருப்பம் கொண்டான்.* **(1.16)**

தந்தைதன் சரணம் என்னும் நகம்எனும் தாது பூத்த
அந்த(ம்)இல் கமலப் போதை அன்னம்போல் அணைந்து தாழ்ந்து
முந்தைநன் நதிகள் தேவர் ஆலயம் முனிவர் கான்கள்
எந்தைநின் அருளில் காண்பான் எண்ணிய(து) என்றன் உள்ளம்.

**பொழிப்புரை:** *நகமாகிய உகிர் என்ற கேசரம் உடைய குவியாத தாமரை மலர் போன்ற தன்னுடைய தந்தையின் பாதங்களை அன்னப் பறவை போல் சார்ந்து வணங்கி, "பழமையான நதிகள், தேவாலயங்கள், முனிவர்களுடைய தபோவனங்கள் ஆகியவற்றை நின் அருளினால் காண்பதற்கு என் உள்ளம் எண்ணம் கொண்டுள்ளது."* **(1.17)**

முடிவிலா(து) இரந்த(து) எல்லாம் முடிவுறா(து) இல்லை நின்னால்
அடியனேன் முன்னம் வேட்ட வரமும்நீ அருள்தி என்னப்
படிபுகழ் வசிட்ட னோடும் பார்த்திபன் இனிதின் எண்ணிக்
கடிதுபோய் மீள்தி என்னக் கார்கழல் வணங்கிப் போனான்.

**பொழிப்புரை:** *"யாசகர் அனைவரும் யாசித்த பொருள்கள் நின்னால் நிறைவேற்றாமல் விடுபட்டதில்லை. அடியேன் முன்பு விரும்பிய வரமும் நீ அருள் செய்ய வேண்டும்" என்று இராகவன் கேட்க, மன்னன் உலகம் புகழ்கின்ற வசிட்ட முனிவரோடும் கலந்து ஆலோசித்து, "விரைவாகச் சென்று திரும்பி வருக" என்று கூற, இராம பிரான் மன்னன் பாதங்களை வணங்கித் தன்இல்லத்திற்குச் சென்றான்.* **(1.18)**

தம்பிய ரோடு நன்னாள் ஏகித்தன் நாடு நீங்கிப்
பம்பிய நதியும் கானும் பற்(று)அற்றோர் இடனும் பாலை
வெம்பிய நிலனும் வேலைக் கரைகளும் விலங்கல் சார்வும்
வம்(பு)இயல் அலங்கல் வீரன் நோக்கினன் மகிழ்ச்சி கூர.

**பொழிப்புரை:** *சுப தினத்தில் தம்பிகளுடன் புறப்பட்டு தன்னுடைய நாட்டை விட்டு வெளியில் சென்று நீர் நிறைந்த நதிகள், காடுகள், பற்று அற்ற மகான்களின் தபோவனங்கள், வெப்பம் நிறைந்த பாலை நிலம், சமுத்திரம், மலை சார்ந்த இடங்கள் முதலானவற்றை வாசனையுள்ள மலர்மாலை சூடிய வீரனாகிய இராமபிரான் மகிழ்ச்சியோடு கண்டனன்.* **(1.19)**

துன்னுறு அமரர் போற்ற மானிடர் துதிப்ப மீண்டு
தன்னுயர் சிவலோ கத்தைச் சார்தரும் ஈசன் என்னப்
பொன்னுல கத்தை மேவும் புரந்தரன் புதல்வன் என்ன
மன்னுறை அயோத்தி புக்கான் மலர்சொரிந்(து) யாரும் ஏத்த.

**பொழிப்புரை:** *தன்னுடைய உயர்ந்த சிவலோகத்தை அடைந்த மகேசுவரன் போல, தேவர்கள் போற்ற, மானிடர் துதிசெய்ய, அனைவரும் மலர் தூவி ஏத்தித் தொழ, சுவர்க்க லோகத்து இந்திரன் மைந்தன் போல மண்ணுலகில் அரசாளும் தசரதன் வீற்றிருக்கும் அயோத்தி நகரைத் திரும்ப வந்து சேர்ந்தான்.* **(1.20)**

நோக்கிய தேச நீதி நுவல்வுற்றுப் புலரும் முன்னே
சேக்கைநின்(று) எழுந்து நித்த நியமங்கள் செய்தும் தாதை
நீக்க(ம்)இல் சரணம் தாழ்ந்து நெடுந்தவ வசிட்டன் முன்னோர்
வாக்கினால் ஞான நீதி வாய்ந்தபல் கதைகள் கேட்டும்.

**பொழிப்புரை:** *தாம் கண்டு வந்த தேசங்கள் ஆசாரங்கள் குறித்து ஒருவருக்கு ஒருவர் பேசிக் கொண்டிருந்து, விடிவதற்கு முன்பு படுக்கையிலிருந்து எழுந்து தினமும் செய்ய வேண்டிய காலைக் கடன்களை முறைப்படி செய்தும், தமது தந்தையின் பிரிவில் லாத பாதங்களை வணங்கியும், பெரும் தவ முனிவரான வசிட்டரிடம் உண்மையான ஞானத்தைத் தருகின்ற பல கதைகளையும் கேட்டும் இருந்தனர்.* **(1.21)**

தந்தைசொல் படியே தானை தன்னுடன் வேட்டை கண்டும்
பந்துமித் திரர்கள் பின்னோர் தம்மொடும் பருகி ராநீத்(து)
இந்துவும் அமுதும் போல நிருபருக்(கு) இனிய செய்தும்
ஐந்துடன் ஈர்ஐந்(து) ஆண்டு புக்கினன் அனைய நாளில்.

**பொழிப்புரை:** *தந்தை சொல்லிய படி சேனைகளுடன் வேட்டையாடியும், உறவினர் நண்பர்கள் தம்பியர்களோடும் உண்டும் இரவுகளைக் கழித்தும், சந்திரனும் அமிழ்தினைப் போல மன்னர்களுக்கு விவகாரங்களை இனிமையுறச் செய்தும், பதினைந்து ஆண்டுகளை அடைந்த காலத்தில்.* **(1.22)**

நிறைஎழில் மேனி எல்லாம் நெடுஞ்சரற் கால நீர்போல்
குறைவுற நெடுங்கண் செய்ய குளிர்முகம் விளர்ப்பத் தும்பி
உறையும்வெண் கமலம் போல ஒருகையால் கபோலம் ஏந்தி
அறைகழல் இராமன் அம்பு யாசனத்(து) இருப்ப தானான்.

**பொழிப்புரை:** *வீரதண்டை முதலிய ஆபரணங்களைக் கால்களில் அணிந்துள்ள இராம பிரான் அழகு வாய்ந்த திருமேனியானது சரற்கால மழை பெய்து ஓய்ந்த போது குறைந்து வரும் தண்ணீர் போல குறைவு அடைய, வண்டு விழுந்த வெண்தாமரை போல விசாலமான கண்கள் குளிர்ந்த முகம் வெளுப்ப, ஒரு கரத்தில் கபோலம் ஏந்தி பத்மாசனத்தில் செய்கை இன்றி மௌனமாக இருந்தனன்.* **(1.23)**

சிந்தனை வயத்த னாகிச் செய்தொழில் அனைத்தும் விட்டு
புந்திநைந்(து) யார்க்கும் கூறான் புனையு(ம்)ஓ வியமே போலச்
சந்ததம் இருப்பை நோக்கித் தமர்அடி தாழ்ந்து வேண்ட
நொந்(து)அயர் முகத்த னாகி நோக்கரு நியமம் செய்தான்.

**பொழிப்புரை:** *இராமபிரான் சிந்தனை வயப்பட்டு, தொழில் அனைத்தையும் விடுத்து, புத்தி துக்கப்பட்டு எவருக்கும் எதுவும் கூறாமல் வரைந்த ஓவியம் போல எப்பொழுதும் இருப்பதைக் கண்டு, பணியாளர்கள் இராகவனுடைய பாதங்களை வணங்கி வேண்டியதற்கு ஏற்ப, மனம்நொந்து தளர்ச்சி அடைந்த முகம் உடையவனாகி பார்ப்பதற்கு முடியாதபடி காலைக்கடன்களை விருப்பம் இன்றிச் செய்தான்.* **(1.24)**

மடிமிசை கொண்டு தாதை வருந்துவ(து) என்கொல் என்ன
அடிபணிந்(து) அயர்(வு)ஒன்(று) இல்லென்(று) அனையவன் இருந்த நாளில்
படிபுகழ் காதி மைந்தன் வருதலும் பணிந்து போற்றி
முடியுடை வேந்தர் வேந்தன் பூசனை முறையில் செய்தான்.

**பொழிப்புரை:** *தந்தை தசரதன் இராகவனைத் தன் மடி மீது இருத்தி வருந்துவதற்குக் காரணம் என்ன என்று கேட்க, தந்தையின் பாதங்களைப் பணிந்து தங்கள் கருணையினால் துயரம் ஒன்றும் இல்லை என்று கூறி இராகவன் இருந்த போது, உலகம் புகழும் விசுவாமித்திரர் வருகை தரவும் அவரைப் பணிந்து வணங்கி பூசையை முறைப்படி தசரத மன்னன் செய்தான்.* **(1.25)**

நினைவற எளிதின் வந்த நின்னுயர் காட்சி யாலே
வினையெலாம் தவிர்ந்து வெய்யோன் மேவிய கமலம் ஒத்தேன்
இனைய(து)ஓர் இன்பம் என்றும் இயைந்திலேன் மழையி லாநாள்
நனைதரு மழையும் அந்தன் நண்ணிய கண்ணும் ஒத்தே.

**பொழிப்புரை:** *(தசரத மன்னன் விசுவாமித்திர முனிவரைப் பார்த்து கூறல்) எண்ணி எதிர்பாராமலே கிடைத்த தங்களுடைய மேலான தரிசனத்தால் எனது வினை எல்லாம் நீங்கி சூரியனது ஒளிக்கிரணங்களைப் பெற்ற தாமரை மலர் போன்று உய்ந்தேன். இத்தகைய பேரானந்தம் இதுநாள் வரையில் அடைந்ததில்லை. மழையின்றி வாடும் மக்கள் குளிரும் வண்ணம் மழை பெய்து பயிர்களை வளர்ப்பது போலவும், பிறவியிலேயே கண்ணிலாத ஒருவன் இரு கண்களையும் பெற்றது போலவும் மகிழ்கின்றேன்.* **(1.26)**

உடலொடு விண்செல் மார்க்கம் உற்றென ஒழிந்த ஆவி
கடமுற வந்த(து) என்னக் கனைகடல் அமுத கும்பம்
இடமுற எய்திற்(று) என்ன எந்தைநீ வந்த இன்பம்
சடமெலாம் குளிர்ப்ப நின்(று)என் தளர்வெலாம் அகற்றிற்(று) அன்றே.

**பொழிப்புரை:** *தேகத்தோடு ஆகாயத்தில் சென்று நடக்கும் வழி கிடைத்ததே போல, உடலை விட்டு வெளிச்சென்ற உயிரானது மீண்டும் உடலில் வந்து தங்கியது போல, பாற்கடலில் இருந்து எழுந்த அமுத கலசமானது தன்னை நாடி இந்த இடத்திற்கே வந்து அடைந்தது போல என் தந்தை அனைய தேவரீர் வந்து தரிசனம் தந்த இன்பமானது தேகம் எல்லாம் குளிர்ந்து என் தளர்வு எல்லாம் அகற்றியது.* **(1.27)**

காதலும் பயமும் அன்பும் கதமும்வன் பிணியும் இல்லா
மாதவ இவண்நீ வந்த வர(வு)இது புதுமைத் தாகும்
யாதுநீ கருதிற்(று) அன்ன(து) இயற்றினன் உணர்த்து(க) என்றான்
மேதகு முனிவன் கேட்டு மெய்புள கெறிந்து சொல்வான்.

**பொழிப்புரை:** *விருப்பமும், அச்சமும், அன்பும், குரோதமும், கொடிய பிணியும் இல்லாத பெருந்தவத்தை உடையாய்! இங்கு தாங்கள் வந்த வரவு புதுமை (அற்புதம்) ஆகும். தேவரீர் எதைக் கருதி வந்தீரோ அதனை யான் செய்து முடித்து விட்டேன் என்று கருதி சொல்லுக என்று தசரதன் சொன்னான். மேன்மை பொருந்திய விசுவாமித்திர முனிவர் கேட்டு உடல் புளகாங்கிதம் அடையச் சொல்வான்.* **(1.28)**

மன்னவர் வணங்க வாழ்வோய் வசிட்டன்சொல் மறாதோய் பானு
தன்னுயர் குலத்தில் வந்தோய் ஆதலால் தக்க சொன்னாய்
முன்னுறு செந்தீ வேள்வி முயல்வதற்(கு) இடையூ(று) ஆகி
இன்னல்செய் அரக்கர்க்(கு) ஆற்றா(து) எய்தினன் இரங்கல் வேண்டும்.

**பொழிப்புரை:** *(விசுவாமித்திரர் கூறல்) சிற்றரசர்கள் வணங்க வாழ்பவனே! வசிட்ட முனி வார்த்தைக்கு மறுப்புத் தெரிவிக்காதவனே! சூரிய குலத்தில் உதித்தவனே! ஆதலால் உனக்குத் தகுதியான வார்த்தையைச் சொன்னாய். சில சித்திகளை அடைவதற்காக யான் செய்ய முயன்ற வேள்விகளுக்கு இடையூறு செய்து துன்பம் விளைவிக்க வரும் அரக்கர்களுக்குப் பயந்து இங்கு வந்தேன். நீ இரக்கத்துடன் அதற்கு வேண்டியதைச் செய்ய வேண்டும்.* **(1.29)**

அருள்செய வல்லை நீஎன்(று) அரும்புகல் புகுந்தேன் நின்னை
வெருளுறும் புலிபோல் மொய்ம்பன் விண்ணவர்க்(கு) இறைபோல் வீரன்
மருளுறும் அரக்கர் காலன் வாய்ம்மைநின் முதன்மை மைந்தன்
தெருளுறும் இராமன் என்னும் சிகைமுடிச் சேயை ஈவாய்.

**பொழிப்புரை:** *எண்ணி வந்த காரியத்தை எளிதாக முடிக்கின்ற சாமர்த்தியம் மிக்கவன் நீ என்று உம்மிடம் தஞ்சம் என்று வந்தேன். பயப்படத் தக்க புலிபோல் வலிமை உடையவனும், தேவர்களுக்கு கடவுள் போன்றவனும், மயக்கம் உறும் அரக்கர்களுக்கு காலனைப் போன்றவனும், சத்தியம் நிறைந்தவனும் ஆகிய உன்னுடைய முதல் மைந்தன் அழகான சிகை முடியை உடையவன் அனைத்தும் உணர்ந்த இராமன் என்னும் மகனை என் காரியம் நிறைவேறத் தருவாய்.* **(1.30)**

தேவரில் தேசு மிக்க என்பெரும் சேமம் தன்னால்
ஏவரும் நிருதர் சேனை இராமனே எளிது கொல்லும்
காவல சிறுவன் என்னும் கவலையை ஒழிஎன் போல்வார்
ஓவலில் சங்கை யான கருமத்தில் உள்ளம் வையார்.

**பொழிப்புரை:** *எவராலும் முடியாது என்றபோதிலும், தேவர்களைக் காட்டிலும் சிறப்பு மிக்க என்னுடைய பெரும் ஜாக்கிரதையான பாதுகாப்பினால் இராமனே அரக்கர் படைகளை எளிதாகக் கொல்வான். காவலனே! இராமன் சிறுவன் என்ற கவலையை ஒழிப்பாய். என்னைப் போன்றோர் பொருத்தம் இல்லாத சந்தேகத்திற்கு இடமான கர்மங்களில் மனதைச் செலுத்தமாட்டார்கள்.* **(1.31)**

யாரினும் இராமன் மேன்மை வசிட்டனும் யானும் ஆதி
ஆரியர் அறிவேம் மாட்சி அறம்புகழ் வேண்டின் அந்தப்
பேரிய லானை ஈதி பெருமையோர் கொடாத(து) உண்டோ
வீரிய அரக்கர் மாய்தல் மெய்யென விளம்பி விட்டான்.

**பொழிப்புரை:** *யாவரினும் இராமன் மேன்மை உடையவன் என்பதை வசிட்டனும் யானும் ஆதி அறிஞர் யாவரும் அறிவோம். பெருந்தன்மையும், புண்ணியமும், புகழும்*

*வேண்டுமென்றால் அந்த மகத்துவம் வாய்ந்த முதல் மகனைத் தருவாய். பெருமை மிக்கவர்கள் கொடுக்காதது உண்டோ? பலம் உடைய அரக்கர்கள் மாள்வது உண்மை என்று கூறினான்.* **(1.32)**

**முனிமொழி கேட்ட மன்னன் முகூர்த்தம்)ஒன்(று) அயர்ந்து சோர்ந்து**
**தனிஒரு சிறுவன் மூவைம் பருவத்தன் சமர்கண் டில்லான்**
**பனிசெய்வல் லரக்கர்க்(கு) ஆற்றான் பகைஞர்கோள் அறிதல் தேற்றான்**
**அனிகமோ(டு) ஏகி யானே அவரொடும் அரும்போர் செய்வேன்.**

**பொழிப்புரை:** *விசுவாமித்திர முனிவர் கூறியதைக் கேட்ட தசரத மன்னன் ஒரு முகூர்த்த காலம் அயர்வு அடைந்து சோர்ந்து போய், முனிவரே! பதினைந்து ஆண்டுகளே நிரம்பிய சிறுவன் தனியாகச் சென்று பேரரினைக் காணாதவன், பனிபோல் மூடி மாயங்கள் செய்வதில் வல்லமை மிகுந்த அரக்கரோடு போர் புரிய வல்லவன் அல்லன். பகைவர்களின் வஞ்சகத்தை அறிந்து போர்செய்யும் சாமர்த்தியம் அறியாதவன். ஆதலால் சேனைகளுடன் யானே வந்து அரக்கர்களோடு கடுமையான போரினைச் செய்வேன்.* **(1.33)**

**முன்னவன் நீங்கில் மற்ற மூவரும் வாழார் யானும்**
**இன்னுயிர் வாழேன் இன்று இராவணன் ஒழிந்த யாவர்**
**அன்னவர்க்(கு) அஞ்சேன் முன்னம் இராவணன் அமர்க்கும் அஞ்சேன்**
**என்னிடப் பொருதும் வீரர் வீரங்கள் நிலைமைத் தாமோ.**

**பொழிப்புரை:** *புத்திரர்கள் நால்வரின் மூத்தவனான இராமன் நீங்கிவிட்டால் ஏனைய மூவரும் வாழ மாட்டார்கள். யானும் இவ்வுலக வாழ்க்கையில் இருக்கமாட்டேன். முதுமையை அடைந்துள்ள யான் இராவணன் தவிர மற்ற அரக்கர்கள் எவருக்கும் பயப்பட மாட்டேன். முன்பு வாலிப பருவத்தில் இருந்த போது இராவணன் செய்யும் போருக்கும் அஞ்ச மாட்டேன். என்னிடம் சண்டையிடும் வீரர்களின் வீரம் ஒரே நிலைமையில் இருக்கின்றதோ? மாறிக் கொண்டிருக்கின்றதே.* **(1.34)**

**காலவேற் றுமையால் எல்லாப் பொருள்களும் கலங்கி வேறாம்**
**மேலவர் இளைத்தோர் ஆவர் வெய்யவன் குலத்துப் பூமி**
**பாலனாம் யான்மேற் செய்வ(து) யாதெனப் பரிகேன் மூப்பால்**
**சாலவும் என்றான் மன்னன் தாபதன் முனிந்து சொல்வான்.**

**பொழிப்புரை:** *காலம் மாறிக்கொண்டே இருப்பதனால் எல்லாப் பொருள்களும் கலக்கம் அடைந்து வேறு வேறு திறன் உடையதாக ஆகின்றது. வீரர்களும் இளைத்தவர் ஆகின்றனர். சூரிய குலத்தில் இந்தப் பூமியில் உதித்த யான் முதுமையை அடைந்ததால் இனிமேற்கொண்டு எந்தவிதமாக உதவி செய்வது என்று துயர் அடைகின்றேன் என்றான் தசரத மன்னன். இதனைக் கேட்ட முனிவன் கோபத்துடன் சொல்வான்.* **(1.35)**

**கருதிய(து) அளித்தேன் என்று கழறிய வாய்மை பொய்த்தாய்**
**செருஉயர் சிங்க மாநீ சிறுவிலங்(கு) இயற்கை செய்தாய்**
**மருவிய கிளைஞ ரோடும் வாழ்தியாம் போதும் என்று**
**பெருமுனி முனிய மண்விண் பெரும்பயம் பிடித்த(து) அன்றே.**

**பொழிப்புரை:** *எண்ணி வந்த காரியத்தை முடித்துவிட்டதாகக் கருதிக் கொள்ளவும் என்று நீ அளித்த வாக்குறுதியைத் தவறினாய். போர்க்களத்தில் அஞ்சாத சிங்கம் போன்ற நீ, சிறிய விலங்குகள் அச்சத்தை அடைவதைப் போல் பேசுகிறாய். யான் திரும்பிப் போகின்றேன். உனது சுற்றத்தாரோடு வாழ்வாயாக என்று பெரும் தவம் செய்த முனிவன் கூற, மண்ணிலும் விண்ணிலும் பெரும்பயம் வந்தடைந்தது.* **(1.36)**

மாதவன் முனிவு நோக்கி வசிட்டனும் மனுகு லத்தே
சாதனாய்த் தசர தப்பேர் தரித்தனை சபதம் காவாய்
தீ(து)உறில் பிறி(து)ஆர் காப்பார் திருத்திநீ நிறுத்து நீதி
மேதினி கடவா(து) என்றால் வேந்தநீ கடக்கற் பாற்றோ.

**பொழிப்புரை:** *விசுவாமித்திர முனிவரின் கோபத்தைக் கண்ட வசிட்ட முனிவனும் "மனு வம்சத்தில் உதித்து தசரதன் என்ற காரணப் பெயரைத் தாங்கிய மன்னா! நீ சொன்ன சொல்லைக் காப்பாற்றுவாய். தவமுனிவர் செயல்களுக்கு இடையூறு உண்டாகும் காலத்தில் நின்போன்ற அரசர்கள் காப்பாற்றாவிடில் யார் காப்பாற்றுவார்? இன்ன இன்ன முறைப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று நீ பிறப்பித்த நெறிமுறையினை உலகில் மக்கள் யாவரும் மீற மாட்டார்கள் என்றால் வேந்தனாகிய நீ மீறலாமோ" என்று சொன்னான்.* **(1.37)**

எரிகாக்கும் அமுத(ம்)என்ன இம்முனிவன் நனிகாக்கும் இராமன் தன்னைச்
செருவாழ்க்கை அரக்கர்செயும் தீங்(கு)அணுகா(து) எனக்கேட்ட திண்தோள் வேந்தன்
அருள்வாய்த்த குமர(ன்)எது செய்கின்றான் எனஉழையர் அங்கை கூப்பி
விரிதீர்த்தம் ஆடிவரும் நாள்துடங்கி உறுதுயரம் விளம்பல் உற்றார்.

**பொழிப்புரை:** *தேவலோகத்தில் அமுத கலசத்தைக் காக்கும் அக்கினையைப் போல, இந்த விசுவாமித்திர முனிவர் இராமனை உன்னைக் காட்டிலும் அதிகமாகக் காப்பார். போர்செய்வதே வாழ்க்கையாகக் கொண்ட அரக்கர்கள் செய்கின்ற தீங்கு இராமனை அணுகாது என்று வசிட்டன் சொல்லக் கேட்ட பலம்பொருந்திய தோள்களை உடைய தசரத மன்னன் மனத்துயர் ஒழிந்து வசிட்ட முனிவரின் சொற்படி இராமனை அனுப்ப, குமரனாகிய இராமன் என்ன செய்கின்றான் என்று கேட்க, இராமனுக்குச் சேவை செய்பவர்கள் இருகரம் கூப்பி வணங்கி, புண்ணிய நதிகளில் நீராடித் திரும்பிய நாள் தொடங்கி இன்று வரை இராமன் அடைந்து வரும் மனத் துயரத்தைச் சொல்லத் தொடங்கினர்.* **(1.38)**

பதம்பணிந்து வேண்டியபின் பண்டைநிய மம்சிறிதும் பண்ணா நிற்கும்
இதம்தரும்மா தரும்நிதியும் இல்லமும்பொய் ஆதலினால் என்னே என்னும்
சிதம்படுநல் துகில்அடிசில் சீதநீர் ஆதிகளில் சிந்தை தீரும்
மதம்தவிர்சந் நியாசியர்போல் மான(ம்)இராச் சியமகிழ்ச்சி மறுக்க மாற்றும்.

**பொழிப்புரை:** *அவருடைய பாதம் பணிந்து வேண்டியதன் பின்னர், பழைய நியம முறைகள் சற்று செய்வார் அல்லது செய்யாமல் இருப்பார். இதமுடன் பேசுகின்ற மாதர், செல்வம், வீடு அனைத்தும் மித்தையாம் ஆதலால் அவற்றால் எனக்கு*

*ஆகவேண்டியது என்ன இருக்கிறது என்று சும்மா இருப்பார். வெண்மையான துணி, ஆகாரம், குளிர்ந்த நீர் போன்ற அனுபவிக்கும் பொருள்களிலும் மனம் பற்றார். காமம் லோபம் முதலியவை தவிர்த்த சந்நியாசி போல் மானம், இராச்சியம், மகிழ்ச்சி, துக்கம் எதனையும் கொள்ளவில்லை.* **(1.39)**

**இடற்(று)இல்பதம் ஒழிந்தபல தொழிலால்போம் வாழ்நாள்என்(று) இரங்கிப் பாடும்**
**அடர்செல்வம் ஆபத்துக்(கு) இடம்என்றே ஆசைதவிர்ந்(து) யார்க்கும் ஈயும்**
**படர்கின்ற கருத்(து)அறியேம் இவற்(கு)ஆரே நற்குணங்கள் பயிற்ற வல்லார்**
**தொடர்செய்கை இதுவென்று தொழு(து)உரைத்தார் முனிகேட்டுச் சொல்வ தானான்.**

**பொழிப்புரை:** *துன்பம் இல்லாத பதமான மோட்சத்தை அடைவதற்கு இல்லாத பலவிதமான தொழில்களைச் செய்தே வாழ்நாள் கழிந்து போகும் என்று மனம் இரங்கித் திரும்பத் திரும்ப அதனையே சொல்லிக்கொண்டிருப்பார். நிறைந்த செல்வம் எல்லாம் ஆபத்துக்கு இடம்தரக் கூடியவை என்று ஆசையை விடுத்து, வேண்டுமென்று கேட்டவர்களுக்கு அள்ளி அள்ளித் தருகிறார். அவர் மனதில் படர்கின்ற கருத்து என்ன என்பதை நாங்கள் அறிய முடியவில்லை. இவருக்கு நல்ல குணங்களை எடுத்துரைக்கும் திறன்மிக்கவர் யார்? இவ்வாறாக அவரது செய்கை தொடர்கின்றது என்று பணிந்து கூறினர். இதனைக் கேட்ட முனிவர் கூறத்தொடங்கினார்.* **(1.40)**

**இப்பெரிய செல்வனைநீர் இனக்கலையில் தனிக்கலைபோல் ஈங்குத் தம்மின்**
**கைப்படும்இம் மாமோகம் காதலினால் ஆபத்தால் கலந்த(து) அன்றால்**
**செப்பரிய நிராசையினால் விவேகத்தால் வரும்உணர்வின் செல்வம் ஆகும்**
**தப்(பு)இல்பல யூகத்தால் மோகம்போய்த் தளர்(வு)அறும்தத் பதத்தில் எம்போல்.**

**பொழிப்புரை:** *(விசுவாமித்திரர் கூறல்) இத்தகைய பேரறிவுச் செல்வனை நீர் இனமான்களில் தனி மான் போல் இச்சபையில் அழைத்து வருமின். இராகவருக்கு வரப்பெற்ற இந்த மகா மோகமானது இராகத்தினால் ஆபத்துகளால் வந்தது அல்ல. சொல்வதற்கு அரிய நிராசையினாலும் விவேகத்தாலும் வரும் உணர்வு என்னும் செல்வம் ஆகும். தவறாத சுருதி வாக்கியம், யுக்திகளால் மோகத்தை நீக்கிவிட்டால் அது நீங்க, வசிட்ட முனி முதலான எம்மைப் போல அடைந்திருக்கும் ஆயாசம் எல்லாம் அற்று நிம்மதி அடைவன்.* **(1.41)**

**மனநிறைந்து மானமுடன் மானவருக்(கு) ஏற்றவெலாம் மகிழ்ந்து செய்யும்**
**எனமுனிவன் புகல்போதில் இராமனும்தா தையைத்தொழுவான் ஏகித் தாதை**
**கனைகழல்கள் முனிவர்பதம் கலைமறையோர் அடிகுரவர் கால்கள் தாழ்ந்து**
**தன(து)இருதாள் வணங்கினரைத் தலையால்சொல் லால்விழியால் சற்க ரித்தான்.**

**பொழிப்புரை:** *மனம் நிறைந்தவனாய் மதிப்புடன் மனுகுல வம்சத்தாருக்கு தகுதியான விவகாரங்களை மகிழ்ச்சியுடன் செய்பவன் என்று முனிவர் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது இராமன் அந்த சபையில் நுழைந்து தந்தையின் வீரக்கழல் அணிந்த பாதங்கள், முனிவரின் பாதம், கலைகள் கற்ற மறையவர் அடிகள், ஆசிரியர் திருவடிகளை வணங்கி, சபையில் இருந்தவர் தனது இருதாள்களை வணங்கினவர்க்குத் தக்கவாறு தலைஅசைத்தும், இன்சொல்லாலும், பார்வையாலும் உபசரித்தான்.* **(1.42)**

மடிமிசைவந்(து) இருத்திஎன மன்னுரைப்ப வாராது மடித்த தூசைப்
படிமிசைஇட்(டு) இருத்தலுமே பார்த்திபன்பார்த்(து) உயர்உணர்வு படைத்த மைந்தா
முடிவறுநல் நலங்களுக்கு முன்னியல்பாத் திரம்ஆனாய் மூர்க்கர் போல
நொடியு(ம்)இனி மனம்தளர்ந்து நோக்(கு)இனிய மெய்வாடி நோதல் வேண்டாம்.

**பொழிப்புரை:** *மடியின் மீது வந்து அமர்க என்று மன்னன் அழைத்த போதிலும், நிறைந்த சபையில் அவ்வண்ணம் செய்வது தகாது என்று போகாமல், மடித்து வைக்கப்பட்ட கம்பளத்தைத் தரைமீது விரிக்கச் செய்து, அதன்மீது அமர்ந்த இராமனைப் பார்த்து தசரதன் "உயர்ந்த விவேகத்தால் நிறைந்த மைந்தனே! அளவற்ற நல்ல நலங்கள் உடையவற்றை அனுபவிக்கத் தகுதி படைத்தவன் ஆன போதிலும், அறிவற்றவர் போல இனி ஒரு கணமேனும் மனம் தளர்ந்து காண்பதற்கு அழகிய உடல் வாடி துயரப்பட வேண்டாம்."* **(1.43)**

விருத்தர்மறை யவர்குரவர் விளம்புபதம் தனைமோகம் மேவா தான
கருத்துடைய உன்போல்வார் கலந்தனரால் நீவாளா கவலா நின்றாய்
வருத்துறும்ஆ பத்தெல்லாம் வன்மோகம் அறில்அருகும் வாரா(து) என்று
பெருத்தமுடி மன்னவர்கோன் பேசியபின் வசிட்ட(ன்)இவை பேசல் உற்றான்.

**பொழிப்புரை:** *அனுபவம் மிக்க பெரியவர், சாத்திரம் கற்றவர், ஆசிரியர் ஆகியோர் சொல்கின்ற பதத்தை, மோகம் பின்தொடர்ந்து வராத சிந்தையுடைய உன்னைப் போன்றவர்கள் அடைந்தனர். நீ வீணாகக் கவலை கொள்கிறாய். துன்பம் தரும் ஆபத்து எல்லாம் வலிமையான மோகம் அற்றுவிட்டால் அருகில் வராமல் வெகு தூரத்திற்கு ஓடிப்போகும் என்று உயர்ந்த மகுடம் சூடிய அரசர்களுக்கு எல்லாம் அரசன் கூறியதன் பிறகு, வசிட்ட முனிவன் பேசத் தொடங்கினான்.* **(1.44)**

வெலற்(கு)அரிய தீமுயற்சி விடய(ம்)எனும் பகைஎளிதின் வென்ற சூரா
கலக்குறுபே தையர்க்(கு)உரித்தாம் மடம்செறிமோ கக்கடலில் கவிழேல் என்றான்
நலக்குறுகோ சிகன்புகல்வான் நல்மனையை எலிநலியும் நலிவு போல
அலக்க(ண்)உறு காரணம்என் காதலித்த(து) ஏ(து)அதனை அடைதி என்றே.

**பொழிப்புரை:** *வெல்வதற்கு அரிதான தீய முயற்சிக்கான விஷயங்களாகிய பகையை எளிதில் வென்ற சூரனே! கலக்கம் அடைகின்ற அஞ்ஞானியர் தமக்கு உரியதான அறியாமை நிறைந்த மோகக் கடலில் விழவேண்டாம் என்று வசிட்டன் கூறினான். பின்பு நலம் நிறைந்த விசுவா மித்திர முனிவன் "நல்ல மனையை எலி குடைந்து கெடுப்பது போல துயரம் அடைவதற்குக் காரணம் என்ன? நீ விரும்பியது என்ன? அதனை அடைவாயாக"* என்றான். **(1.45)**

மீட்(டு)அணுகா(து) அகத்துயர்போம் விளம்(பு)என்ன முகில்குரலால் வெம்மை தீர்ந்து
வாட்ட(ம்)அறு மயில்என்ன மகிழ்ந்(து)இடர்போய் அருள்மூர்த்தி மடவ னேனைச்
சேட்டமுறு மாதவநீ செப்(பு)எனமுன் செப்புதலால் செப்பு கின்றேன்
கேட்(டு)அருள்தி மேலவர்சொல் மறுக்குநர்யார் எனஇனிது கிளத்தல் உற்றான்.

**பொழிப்புரை:** *விரும்பியதை அடைந்து விட்டால் மீண்டும் துன்பம் அணுகாது, மனதில் உள்ள குறைகள் யாவும் நீங்கும் என்று விசுவாமித்திரர் சொன்னதைக் கேட்டு மேகங்களின் இடி ஓசையைக் கேட்டு வாட்டம் போக்கிடும் மயில்போல மகிழ்ந்து மனதிலிருந்து துயரம் போய், அருள்கின்ற மூர்த்தியாகத் திகழ்கின்ற இராமன், "ஐஸ்வரியத்தையும் பெரும் தவத்தையும் உடைய முனிவரே! சொல்வாய் என்று தாங்கள் பணித்தலாலே சொல்கின்றேன். கேட்டதை அருள்செய்ய வேண்டுகிறேன். மேன்மை பொருந்தியவர்களின் சொற்களை மறுப்பவர் எந்த வகையில் அறிவாளிகள்?" என்று இனிமையாகச் சொல்லத் தொடங்கினார்.* **(1.46)**

**தந்தைஇவன் இல்பிறந்து வளர்ந்துபல கலைதரித்துச் சதாசா ரத்தால்**
**வந்(து)உயர்நல் நதிஆடி வாரிதிசூழ் புவிஉழன்று வருத லோடும்**
**இந்தநெடும் சகமோகத்(து) இச்சையெலாம் தீர்ந்த(து)இதில் இன்பம் இல்லை**
**அந்த(ம்)உறல் பிறப்பதற்கே பிறப்பதுமீட்(டு) இறப்பதற்கே அநித்தம் யாவும்.**

**பொழிப்புரை:** *(இராமன் கூறல்) இந்தத் தந்தையின் அரண்மனையில் பிறந்து வளர்ந்து பல கலைகளையும் கற்றுத் தெளிந்து நல் ஒழுக்கம் உடையவனாய் நடந்து, புண்ணிய நதிகளில் மூழ்கி, கடல்சூழ் உலகத்தில் உழன்று இருப்பதோடு இந்த பரந்த சகத்தின் மீதான மோகத்தின் காரணமான ஆசை எல்லாம் தீர்ந்து போனது. இந்த சம்சார வாழ்வில் இன்பம் இல்லை. இறப்பது பிறப்பதற்கே. பிறப்பது மீண்டும் இறப்பதற்கே. அனைத்தும் அநித்தம் (நிரந்தரம் இல்லாதது).* **(1.47)**

பாவமதாய் ஆபத்துப் பயில்இடமாய்;த் தம்மில்தாம் பற்(று)இன் றாயும்
தாவுமனக் கற்பனையால் சம்பந்த மாய்இருப்புச் சலாகை போலாம்
மேவுபெரும் செல்வத்துக்(கு) இடமாகும் எப்பொருளும் விடயத் தாலும்
பூவலயத் தாலு(ம்)எது பயன்யாம்ஆர் வருவ(து)எது பொய்பொய் பொய்யாம்.

**பொழிப்புரை:** *கர்மம் செய்வதால் வந்து சேர்கின்ற பெரும் செல்வத்துக்கு எல்லாம் இடம் தரும் எப்பொருளும் பாவத்திற்குக் காரணமாகி ஆபத்து எல்லாம் உறைகின்ற இடமாகி ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாமல் தாவுகின்ற மனக் கற்பனையால் (மனோ ராச்சியத்தால்) இரும்பினால் ஆன ஊசி போலச் சம்பந்தம் உடையதாகும் விஷயங்களாலும், பூவுலக இராச்சியத்தினாலும் என்ன பயன்? யான் ஆர்? (ஆத்ம விசாரம்) உண்டாவது எது? (தேக விசாரம்) ஆத்மாவைத் தவிர ஏனையவை அனைத்தும் எக்காலத்தும் மித்தையாகும். (இரும்பு ஊசியானது அரக்கு, கட்டை போல பரஸ்பரம் தொடர்பு கொள்ளாததாம்)* **(1.48)**

யாதுயார் பெற்ற(து)என இவ்வண்ணம் நினைவேற்கு வழிச்செல் வோர்க்கு
மோதுகா னலில்அம்பு முறைமைபோல் பொருள்முழுதில் மூளா ஆசை
பேதியா இத்துயர்போம் நெறிநாடில் பெரும்தருதான் பெற்ற தீயால்
வேதல்போல் வேகின்றேன் இடர்அடைகல் லாம்திறவா வெய்யா மோகம்.

**பொழிப்புரை:** *யார் எந்தப் பொருளைப் பெற்றார்கள் என்று இந்தப்படிக்கு விசாரித்த எனக்கு பிரயாணம் செய்வோர்கள் வழியில் வீசும் கானலில் தெரிகின்ற தண்ணீர் பேரில்*

*ஆசை கொள்ளாததைப் போல், பாவங்களைத் தருகின்ற பொருள்களின் மீது ஆசை மூளாது. ஞானத்தால் அன்றி நாசமாகாத இந்தத் துயர் ஒழிகின்ற வழியை அறியாமல் பெரிய மரம் ஒன்று தீப்பற்றி எரிவது போல் உள்ளம் வேகின்றேன். கொடிய சம்சார துன்பமானது இடை வெளியில்லாத கல்லினைப் போல் மிகவும் கடினமானது ஆகும்.* **(1.49)**

**இனம்இகழும் என்(று)அஞ்சி இத்துயருக்(கு) அழு(து)ஆற்றேன் ஈன்ற மாதர்**
**தனம்முதலா ஆபத்தோர்க்(கு) எனச்சிந்தா இனம்சுழலும் தானம் ஆகும்**
**கனம்இலதாம் உதார(ம்)அதாம் என்னினு(ம்)இன் பம்பயவாக் கயவர் என்ன**
**அனக(ர்)எனத் தரம்அறியா(து) அரசரைப்போல் அடைந்தார்பால் அணுகும் செல்வம்.**

**பொழிப்புரை:** *உறவினர்கள் இகழ்வார்களே என்று பயந்து இந்தத் துயருக்கு அழுது தீர்க்காமல் இருக்கிறேன். பெற்றெடுத்த மாதர், செல்வம் முதலான ஆபத்தை உடையோர்க்கு சிந்தா குலக் கூட்டம் சுழல்கின்ற இடமாகும். அற்பமாக இருப்பினும், உதாரமாய் அதிகமாய் இருப்பினும், குணம் இல்லாதவர், குணம் உடையவர் என்ற தரம் அறியாத அரசனைப் போல் நெருங்கியவர்பால் சேர்ந்திடும் செல்வம்.* **(1.50)**

**கருமவகை யால்விரிந்த கட்செவிப்பால் விடமாகும் கணக்கே போல்ஆம்**
**திருவெனும்சூ றைக்காற்றால் பனிபோலச் சிதறார்ஆர் சேரார் சேர்ந்தோர்**
**இருவகைக்கும் குளிர்ந்(து)இனியர் நன்றிஅறி வோர்அறிஞர் இனியோர் சூரர்**
**பொரு(வு)இல்ள வரும்திருவால் புழுதிசெறி சுடர்மணிபோல் புன்மை சேர்வார்.**

**பொழிப்புரை:** *பாம்பு பால் குடித்தாலும் அது விஷமாக ஆவது போல், பலவிதமான கருமங்களினால் பெரும்அளவில் சேர்ந்த செல்வம் என்ற சூறைக் காற்றினால் பனிபோலச் சிதறி ஓடாதார் யார் உளர்? அன்னியர் தம்மவர் என்னும் இருவகையினரும், மனம் குளிர இனிமையாகப் பேசுபவர், செய்ததற்கு நன்றியுடன் இருப்பவர், அறிஞர், இனிமையாகக் காரியம் செய்பவர், சூரர் முதலான நிகர் இல்லாத எவராகிலும் வரப்பெறும் செல்வத்தால் பிரகாசமான மணியானது புழுதியில் படிவதைப் போலத் தாழ்மையை அடைவர்.* **(1.51)**

**தீ(து)அடையாச் செல்வர்மொழி திறம்பாத சூரர்நடுத் தெரிந்து நோக்கும்**
**நாத(ர்)இவர் மிகஅரியர் நாகம்சூழ் குழிவல்லி நனைபோல் செல்வம்**
**சாதனத்துக்(கு) அரி(து)உளத்தை இழுத்(து)இமைப்பில் இறும்தலைகீழ்த் தளிரில் நான்ற**
**ஓதுதுளி ஒத்தஉயிர் மத்த(ர்)என அகாலத்தில் உடல்விட்(டு) ஓடும்.**

**பொழிப்புரை:** *மக்களால் இகழப்பெறாத செல்வந்தர், சொன்ன சொல் தவறாத சூரர், சமமான நோக்குடைய தலைவர் இவர்கள் மிக மிக அரிதாகக் காணப்படுவர். பாம்புகள் சூழ்ந்த குழியில் இருக்கும் முல்லை அரும்பு செல்வமானது நல்ல சாதனங்களைச் சம்பாதிக்க விடுவது அரிதிலும் அரிது. மனதை இழுத்து கணப்பொழுதில் தள்ளிவிடும். தலைகீழாகத் தொங்குகின்ற தளிர் இலை ஒன்றில் கீழே விழத் தயாராக இருக்கும் நீர்த்துளி போல் உயிரானது உன்மத்தரைப்போல் அகாலத்தில் இந்த உடலைவிட்டு ஓடிவிடும்.* **(1.52)**

**வளர்புலமாம் அராத்தீண்ட மனம்அயர்வோர் மெய்யுணர்வு வாய்த்தி லாதோர்**
**தளர்வுறுகா ரணம்வாழ்நாள் தனிமோகம் எனும்முகிலில் சார்மின் போலும்**
**அளவுபடும் உடல்மெய்என்(று) அழுந்திநாம் இதில்மகிழேம் ஆகா யத்தைப்**
**பிளவிடவா யுவைப்பிடிக்கத் திரைநோக்க எளி(து)இதனைப் பேண வொண்ணா.**

**பொழிப்புரை:** *வளர்கின்ற விஷயங்களாகிய பாம்பு கடிக்க மனம் அயர்ச்சி அடைவோருக்கும், ஆத்ம நிச்சயம் அடையாதவர்க்கும் வாழ்நாள் தளர்வு அடைந்து கழிப்பதற்குக் காரணமாக அமைகிறது. மேகத்தில் தோன்றி மறைகின்ற மின்னல் போல ஒப்பற்ற சம்சார வாழ்வில் எல்லைக்குட்பட்ட தேகத்தை உண்மை என்று நம்பி இதில் மகிழ மாட்டேன். பரந்திருக்கும் ஆகாயத்தைத் துண்டு துண்டாக்குவது, வாயுவை அசையாமல் கட்டிப் போடுவது, நீர் அலைகளைக் கோர்த்தல் செய்வது இவையும் எளிதாகலாம். ஆனால் வாழ்நாள் ஆயுளைக் காக்க முடியாது.* **(1.53)**

**சரற்பருவ மேக(ம்)எனத் தைலம்தீர் விளக்(கு)என்னத் தரங்கம் என்னத்**
**திரப்படநீங் குவதாகிச் சிறிது(ம்)இளைப் பாறாத சிந்தைத் தாகிப்**
**பரப்புடைய சேட்டையதாய்ச் சூனியமாம் வாழ்நாளின் பயனை நாடில்**
**துரப்பரிய துயர்ஆக்கும் ஒட்டகத்துக்(கு) உயிர்தொலைக்கும் சூலே போல.**

**பொழிப்புரை:** *சரத் கால (அற்ப) மேகம் போலவும், எண்ணெய் தீர்ந்த விளக்கு போலவும், நிலையில்லாது ஒன்று அழிந்து மற்றொன்று உண்டாகிக் கொண்டே இருக்கின்ற அலைகள் போலவும், எப்பொழுதும் ஒழிகின்ற தன்மையதாய், சற்றும் அமைதியாக இல்லாத சிந்தையாகி, பலவிதமான விவகாரங்களைச் செய்வதாய் பயன் ஒன்றும் இல்லாததாய்க் கழியும் வாழ்நாளில் என்ன பயன் என்று ஆலோசித்துப் பார்த்தால், பெண் ஒட்டகம் கர்ப்பம் அடைவதே அதன் உயிரைப் பறிப்பது போல நீக்க முடியாத துயரத்தை மட்டுமே உண்டு பண்ணக்கூடியதாக இருக்கிறது.* **(1.54)**

**அடையவேண் டிய(து)அடைந்து மேல்துயரம் அற்(று)இன்பம் அளவி லாதாய்க்**
**கடையதாம் தருவிலங்கு பறவைகள்போல் வீணாள்கள் கழியா தாகித்**
**தடையிலா மனனத்தால் வாழ்வதே உயர்வாழ்நாள் சனனம் தீர்ந்தோர்**
**உடையபிறப்(பு) உயர்ந்ததாம் கிழவேச ரிப்பிறப்பாம் ஒழிந்த வெல்லாம்.**

**பொழிப்புரை:** *அடைய வேண்டியதை அடைந்து இனிமேற்கொண்டு துயரம் அணுகாமல் அளவில்லாத இன்பத்தை அடைந்து கீழான மரம் விலங்கு பறவை போல வீணாகக் காலம் கழிக்காமல், இடையூறு இல்லாத விசாரத்தால் வாழ்வதே உயர்ந்தது ஆகும். இனி, பிறவி தொடராத வண்ணம் இருப்பவர் தம் பிறவி உயர்ந்தது ஆகும். மற்றவை கிழக் கழுதையை; போல் ஆகும்.* **(1.55)**

**அவிவேகிக் குப்பாரம் சாத்திரம்மெய் அறிவிலோர்க்(கு) அங்கம் பாரம்**
**நவில்சாந்தி இல்லாதோர்க்(கு) உளம்பாரம் அவாவினர்க்கு ஞானம் பாரம்**
**செவிதான உருவாழ்நாள் மனம்புந்தி அகங்காரம் செயல்கள் எல்லாம்**
**குவிபாரம் ஆம்சுமடர் சுமைபோலப் புந்திநலம் கூடா தார்க்கே.**

**பொழிப்புரை:** *விவேகம் இல்லாதவர்க்குச் சாத்திரம் சுமையாகும். உண்மை அறிவில்லாத அதாவது அனாத்மாக்களில் மனம்பற்றியவர்களுக்கு உடல் சுமையாகும். மன அமைதி இல்லாதவர்க்கு உள்ளம் சுமையாகும். ஆசை உடையவர்க்கு ஞானம் சுமையாகும். மனம் கவரக்கூடிய உருவம், வாழ்நாள், மனம், புத்தி, அகங்காரம், செயல்கள் இவை எல்லாம் கெட்ட புத்தி உடையவர்க்குச் சுமையைச் சுமப்பவர்க்கு சுமைபோலத் துயரத்தைக் கொண்டுவந்து குவிக்கக்கூடிய பாரம் ஆகும்.* **(1.56)**

**சின்னாள்மெய்ப் பயின்(று)இளமை தீநட்பை விடு(ம்)அறிஞர் திறம்போல் நீங்கும்**
**மன்னாது சுகநிலைமை மரணத்தின் பாத்திரமாம் வாணாள் போல**
**இன்னாத(து) இல்லைஇடர் மோகத்தால் வாளாவந்(து) எங்கும் வாளா**
**துன்னாநின் றதுபொல்லாப் பொய்அகங்கா ரப்பகையால் துணுக்(கு)என் கின்றேன்.**

**பொழிப்புரை:** *சில நாட்கள் மட்டும் உடலில் இளமையானது இருந்து துயரம் தரும் என்று தீய நட்பினைக் கொள்ளாமல் விடுகின்ற அறிஞரைப் போல நீங்கிவிடும். நிலை யில்லாத சுகமானது மரணத்தின் வசப்படும். வாழ்நாள் போல துயரத்தைத் தராத பொருள் உலகில் இல்லை. துன்புறுத்தும் மயக்கத்தினாலே வீணாக உண்டாகி வீணாகவே எங்கும் மாறிக் கொண்டே இருக்கின்றது. பொல்லாத மித்தையான அகங்காரம் என்னும் பகையைக் கண்டு அச்சம் அடைகின்றேன்.* **(1.57)**

**மனத்துயரும் ஆபத்தும் வளர்தொழிலும் அகங்கரத்தால் வரும்இத் தைப்போல்**
**கனத்தபகை இலதுநெடுங் காலம்வினை இதுசேர்ந்து கலங்கா நின்றேன்**
**அனத்தொடுதண் ணீர்நுகரேன் அரும்போகம் விளம்புவ(து)என் அகங்கா ரம்சேர்**
**தினத்தொழில்கள் ஓம(ம்)உண(வு) அனைத்தும்பொய் அகங்காரம் தீர்தல் மெய்யே.**

**பொழிப்புரை:** *மனதின் துன்பங்களும் ஆபத்தும் வளர்கின்ற விவகாரங்களும் அகங்காரத்தால் உண்டாகும் இதனைப் போல பெரும் பகை வேறு ஒன்று இல்லை. நீண்ட காலம் அகங்காரம் சேர்ந்து கலங்குகின்றேன். அன்னமும், தண்ணீரும் அருந்த விரும்பவில்லை. இனிமையான போகத்தை அனுப்பவிப்பது பற்றி சொல்வதற்கு என்ன உளது? அகங்கார வசப்பட்டுத் தினமும் செய்து வந்த ஓமம், உணவு முதலிய அனைத்தும் பொய்யாகும். அகங்காரம் விடலே உண்மையாகும்.* **(1.58)**

**அகங்கார முகில்படர ஆசைமலை மல்லிகைஅவ் வளவிற்(று) ஆகும்**
**மிகும்துயர்இவ் வகங்காரத் தொழில்பிரிந்தும் பேதைமையில் மிகவும் நொந்தேன்**
**செகம்தனில்ஆ பத்(து)இடமாய்த் திரம்துறப்ப தாய்உள்ளாய்த் தியக்க மாயும்**
**உகந்தவிசா ரமும்உணர்வும் இலாஅகங்கா ரம்போம்ஆ(று) உபதே சிப்பாய்.**

**பொழிப்புரை:** *தேகம் என்கின்ற மலையில் அகங்காரம் என்னும் மேகமானது எந்த அளவுக்குப் படர்கின்றதோ அந்த அளவுக்கு ஆசையாகிய மலைமல்லிகை விரிந்து படரும். மிகுந்த துயரத்தைத் தருகின்ற இந்த அகங்காரத்தின் தொழில்களை விடுத்தும்; அதாவது, அகங்காரம் இல்லாத தன்மை அடைந்தும் பேதைமையினால் (மூர்க்கத் தன்மையால்) மிகவும் துயர் அடைந்தேன். உலகத்தில் ஆபத்துக்கு எல்லாம் இடமாக நிலையில்லாததுமாய் உள்ளாக இருப்பதாய் துன்பத்திற்கான மயக்கம் தருவதாயும் உரிய விசாரமும் விவேக உணர்வும் இல்லாததாயும் இருக்கின்ற அகங்காரம் போகின்ற வழியினை உபதேசிக்க வேண்டும்.* **(1.59)**

காமமுதல் வினைக்(கு)உடைந்து கற்றவர்நல் தொழில்அகலும் கடும்காற்(று) உற்ற
மாமயிலின் பீலிபோன்(று) அதிதூரம் நகர்நாய்போல் வாளா சுற்றும்
ஆம்அதுகிஞ் சிலும்கிடையா(து) அருநிதிபெற் றாலு(ம்)மகிழ்ந்(து) அமைந்(து)உட்
கொள்ளாச்
சேமமுறு கரண்டகம்நீர் தரியாபோல் திரியுமனத் தீய(து) அன்றே.

**பொழிப்புரை:** *கெட்டதாய்ச் சுழலும் மனமானது காமம் முதலான செயல்களால் மெலிந்து, கற்றவர் செய்யும் சேவை முதலான தொழில்களைச் செய்வதில் இருந்து புயல்காற்றில் அகப்பட்ட அழகிய மயிலின் பீலி போல் வெகுதொலைவுக்கு அகன்று பறந்து சென்றுவிடும். நகரில் உள்ள நாய் போல வீணாகச் சுற்றித் திரிந்தாலும் ஒரு சிறிதும் அதற்குக் கிடைக்காது. மூங்கிலால் ஆன பூக்குடலையில் நீர் நிற்காதது போல பெரும் செல்வம் கிடைத்தாலும் மகிழ்ந்து அதனைச் சஞ்சலத்தால் அனுபவித்து பூரணத்தை அடையாது.* **(1.60)**

காத(ல்)எனும் மனைவியின்பின் செல்கின்ற மனம்என்னும் கடிய ஞாளி
பேதைமைமே வியஎன்னைப் பிணம்தின்னு மாறுபோல் பிடுங்கித் தின்னும்
மோதுபெரும் காற்றினால் முறிந்(து)எழுந்த துரும்புபோல் மோகம் எய்த
வாதைமனம் பெரும்பாழில் மிகவீழ அதிதூரம் மலங்கத் தள்ளும்.

**பொழிப்புரை:** *ஆசை என்கின்ற மனைவியின் பின்னால் செல்கின்ற மனம் என்னும் குரூரம் கொண்ட நாய் அறியாமை உடைய என்னைப் பிணம் தின்னுவதைப் போல் பிடுங்கித் தின்னும். வீசியடிக்கும் பெரும் காற்றினால் முறிந்து மேலே கிளம்பிய துரும்பு போல மோகம் வந்து எய்த ஜடமாகிய மனமானது கீழான பிறவிகளிலும் விழ வைத்து சொர்க்க நரகங்களில் கலங்கும்படி தள்ளிவிடும்.* **(1.61)**

வேர்அறுபொய் யாய்ச்செறிந்த வடிவாகி விசாரத்தால் விரோதம் ஆகும்
கோரமனம் பேய்பிடித்த சிறுவரைப்போல் பலதொழிலில் கூட்டா நிற்கும்
பார்அகன்று பாதலம்போம் பாதலத்தில் நின்(று)அகன்று பாரில் மீளும்
சோரமனம் கிணற்றுமரம் பழங்கயிற்றால் எடுப்பதுபோல் தொழிலில் தள்ளும்.

**பொழிப்புரை:** *வேர் இல்லாத பொய்யான நெருங்கிய வடிவாகி விசாரத்தால் ஒழிகின்ற கோர மனமானது பேய் பிடித்து ஆட்டும் சிறுவரைப் போல் பலவிதமான தொழில்களில் ஈடுபட வைக்கும். உலகத்திலிருந்து நீங்கி பாதலத்திற்குச் செல்லும். உடனே பாதலத்திலிருந்து நீங்கி உலகத்திற்கு மீண்டு வரும். கள்ள மனமானது கிணற்று நீரில் ஊறிப்போன மரத்தை பழைய நைந்த கயிற்றினால் வெளியே எடுப்பதுபோல் பல தொழில்களில் தள்ளும்.* **(1.62)**

கடுமனவன் பேய்கனலின் கொடிதாகும் மலைகளினும் கடத்தற்(கு) ஒண்ணா
நெடுவயிரத் தினும்வலிது கடல்பருகி மேருவினை நேரே பேர்த்துச்
சுடுகனலை விழுங்குகினும் நிறுத்தரிது புலன்முழுதும் தோன்று மூலம்
கெடும்உல(கு)ஈ(து) உண்(டு)எனில்உண்(டு) இலதாகில் இல(து)இதனைக் கெடுத்தல்
வேண்டும்.

**பொழிப்புரை:** *கடுமையான மனம் என்னும் கொடிய பேயானது நெருப்பினைக் காட்டிலும் கொடியதாகும். மலைகளைத் தாண்டிச் சென்றாலும் இதனைக் கடக்க முடியாது. நீண்ட வஜ்ஜிராயுதத்தினும் வலிமையானது. கடல்நீரைக் குடித்து மேருமலையை பேர்த்து எடுத்து, சுடுகின்ற நெருப்பை விழுங்கினாலும் மனதை நிறுத்துவது அரிதிலும் அரிதாகும். புலன்களில் தோன்றுகின்ற பொருள்களின் மூலமான உலகமானது இந்த மனம் இருந்தால் இருக்கும். மனம் இல்லை எனில் இருக்காது. இத்தகைய மனதினைப் பெரும் முயற்சியால் ஒழித்திடல் வேண்டும்.* **(1.63)**

**வரையில்(ல்)எழும் வனம்போல மகிழ்ச்சிஇடர் இவைஅனைத்தும் மனத்தில் தோன்றும்**
**புரைஇல்விவே கத்தின்மனம் பொன்றி(ல்)அவை பொன்று(ம்)எனப் புந்தி செய்தேன்**
**கரைத(ல்)அறு மோக(ம்)எனும் கார்இருளில் தொழிற்(கு)அடங்காக் காதல் அல்லா(து)**
**உரைதருகா மாதிகளாம் உலூகநிரை உணர்(வு)எனும்விண் உலாவும் அன்றே.**

**பொழிப்புரை:** *மலையில் உண்டாகின்ற பெரும்காடுகள் போல மகிழ்ச்சி துன்பம் இவை அனைத்தும் மனதில் தோன்றும். குற்றம் இல்லாத விசாரத்தினால் மனமானது இல்லாமல் போகும். மனமானது இல்லாது போனால் துன்பம் இல்லாமல் போகும் என்று எண்ணுகின்றேன். ஆசையானது ஞானத்தால் அன்றி நாசமாகாத அஞ்ஞானமாகிய கரிய இருளில் எந்த தொழில் விவகாரம் செய்தாலும் முடிக்க முடியாமல் செய்யுமே தவிர சொல்லப்பட்ட காமம் முதலிய கோட்டான்கள் வரிசையாக உணர்வு என்கின்ற உள்ளமாகிய ஆகாயத்தில் உலாவரும்.* **(1.64)**

**ஆதரித்த நற்குணங்கள் ஆகுவினால் தந்திரிபோல் ஆசை யாலே**
**சேத(ம்)உறும் சொரூபநிலை செறிதரவல் லமையில்லாச் சிந்தை யேங்கள்**
**மீதுவலை உறுபுள்போல் மெலியவரும் ஆசைத்தீ வெதுப்ப நொந்தேன்**
**கோ(து)இல்அமு தில்குளித்தும் குளிரா(து)என்(று) என்மனத்தில் குறிக்கின் றேனால்.**

**பொழிப்புரை:** *சம்பாதித்து வைத்த நல்ல குணங்கள் எல்லாம் எலியினால் கடிக்கப்பட்ட வீணைத் தந்திக் கம்பிகள் இசையை இழப்பது போல ஆசையினால் சேதம் அடைந்து சொரூப நிலையை நெருங்கி நிற்க வல்லமை இல்லாத சிந்தையை உடைய நாங்கள், வலையில் அகப்பட்ட பறவை போல மெலியச் செய்யும் ஆசைத் தீயினால் தகிக்க நொந்துபோனேன். குற்றம் இல்லாத அமிழ்தத்தில் குளித்தாலும் உள்ளம் குளிர்ச்சி அடையாது என்று என் மனதில் கருதுகின்றேன்.* **(1.65)**

**பின்னுறுபக் கத்(து)இருள்போல் பேராண்மைத் தீரரையும் பீதி செய்யும்**
**நல்நயனம் குருடாக்கும் உபசாந்தத் தோர்தமையும் நடுக்கம் செய்யும்**
**கின்னமுறு காத(ல்)எனும் கிழமடந்தை ஒருபொருளும் கிட்டா தேனும்**
**இன்இதயம் நயந்(து)எவர்க்கும் பின்தொடரும் மனோரதமும் எய்தா(து) ஆகும்.**

**பொழிப்புரை:** *(ஆசையானது) பௌர்ணமியை அடுத்து வரும் நாட்களில் இரவின் இருள் போல பேராண்மை கொண்ட தீரரையும் பயப்படுத்தும். நல்ல விழிகளையும் ஒன்றும் அறியாதவராகக் குருடாக்கும். பரம சாந்தம் உடையோரையும் நடுக்கம் கொள்ளச் செய்யும். துன்பம் தரும் ஆசை என்கின்ற வயது முதிர்ந்த (கிழத்தனம்*

*அடைந்த) வேசியானவள் எந்தப் பொருளும் கிட்டாது என்ற போதிலும் இனிய இதயம் காட்;டி யாவரையும் தொடர்ந்து பின்செல்வாள். சென்ற போதிலும் மனதில் ஆசைகொண்ட எதுவும் அடைய மாட்டாள் அதாவது எந்த ஆடவரையும் வசப்படுத்த முடியாது. (அதைப் போல ஆசையானது அலைக்கழிக்கும் என்பது பொருள்)* **(1.66)**

**முதிர்பருவத் தளர்ச்சியால் முடியாத நடனகதி முயல்வாள் ஆகி**
**மதிமகிழ்ச்சி அறநடிக்கும் ஆடும்கூத் தியை வருத்தும் ஆசை**
**எதிர்கிடைத்தற்(கு) அரும்பொருளில் சென்(று)எய்தும் அமைந்தாலும் இன்பம் தேடும்**
**கதியறஓர் இடத்(து)உறையா(து) உலைகின்ற வானரம்போல் காதல் தானே.**

**பொழிப்புரை:** *வயது முதுமையால் உடல் தளர்ச்சியுற்று முடியாத போதும் முயற்சி செய்பவள் ஆகி, புத்தியில் மகிழ்ச்சி இன்றி நடனம் ஆடுபவளைப் போல வருத்துகின்ற ஆசையானது கைக்குக் கிடைக்காது என்ற போதிலும் அந்த அரிய பொருளைத் தேடிச் செல்லும். ஒருகால் அந்தப் பொருள் கிடைத்தாலும் உடனே மற்றொரு பொருளில் இன்பத்தைத் தேடிச் செல்லும். ஓடி அலைகின்ற குரங்கு போல ஆசையானது செல்வது இன்றி ஓர் இடத்தில் நிற்காது.* **(1.67)**

**காவில்மதர் வண்(டு)என்னப் பாதலம்விண் திசைஅனைத்தும் கணத்(து)உ லாவும்**
**வாவிவளர் மயல்ஒன்றே வருத்த(ம்)அனைத் தினும்பெரிய வருத்தம் நல்கும்**
**மேவு(ம்)அரண் உறைபவர்க்கும் துயர்செய்யும் ஆசையெனும் விடூசி கைக்குத்**
**தேவர்புகழ் மந்திரமாம் சிந்தைஅறல் உல(கு)இடர்போம் சிந்தை அற்றால்.**

**பொழிப்புரை:** *பூஞ்சோலையில் உள்ள மலர்களில் உள்ள தேனைப் பருகிப் போதையோடு திரிகின்ற வண்டினைப் போல, பாதாள லோகம் முதல் ஆகாயம் வரை எல்லாத் திசைகளிலும் ஒரு கணத்தில் சென்று உலாவி வரும். மேன்மேலும் வளர்கின்ற ஆசை ஒன்றே துன்பம் அனைத்திற்கும் பெரிய துன்பத்தைத் தரும். கோட்டை போன்ற அரண் அமைத்து அதில் வசிப்பவர்களுக்கும் துயரத்தைத் தர வல்லது. அந்த ஆசை என்ற விஷ வியாதிக்கு அருமையான மந்திரமானது தேவர்கள் புகழ்கின்ற சிந்தை நாசமே ஆகும். சிந்தை நாசமானால் உலகில் இடர் நீங்கிப்போகும்.* **(1.68)**

**பைந்தொடியார் ஆசைநோய் கெம்பீர மனிதரையும் பதுமம் தன்னை**
**முந்(து)இரவிக் கதிர்போலும் மிளிர்விக்கும் கனஇடியின் முனைகூர் வாளும்**
**வெந்தஇருப் புப்பொறியும் எனக்கொடிய மனவேட்கை மேரு ஒத்தோர்**
**சுந்தரஞா னியர்தீரர் சூரரையெல் லாம்இமைப்பில் துரும்பு செய்யும்.**

**பொழிப்புரை:** *அழகிய வளையல் அணிந்த மாதர் ஆசையானது கெம்பீரமான (திடகாத்திரமான) மனிதர்களையும் தாமரையை மலர வைக்க வேகமாகப் பரவும் சூரியக் கதிர்கள் போல விரைவில் பற்றி மலர வைக்கும். பேர் இடி, முனை கூர்மை உடைய வாள், நெருப்பாகவே மாறிவிட்ட இரும்புத் துகள்கள் இவைக கூடக் கொடியது இல்லை எனும்படியாக மனதில் உள்ள ஆசையானது மேரு மலையைப் போல் அசையாத மனம் உடைய அழகிய ஞானியர், தீரர், சூரர் அனைவரையும் கண் இமைக்கின்ற நேரத்தில் துரும்பு போல் ஆக்கிக் கெடுத்துவிடும்.* **(1.69)**

**ஈரித்த குடல்நரம்பால் செறிந்துபல விகாரியாய் இரங்க வாடிப்**
**பூரித்த உடல்பிறப்பில் பொலிந்தாலும் துன்பத்தின் பொருட்டே ஆகும்**
**பாரித்த சிற்றின்பம் சிறுதுன்பம் அனுபவிக்கும் பகர்ந்த மெய்போல்**
**நேரிட்ட குணம்இலதும் துயர்உளதும் நீசமுமாம் நிலைவேறு) உண்டோ.**

**பொழிப்புரை:** *மல மூத்திரங்களால் நிறைந்த குடல் நரம்புகளால் ஆகி பற்பல மாறுபாடுகளை அடைந்து பரிதாபத்துக்கு உரியதாகி வளர்ந்த உடல் சம்சார வாழ்வில் நன்றாக இருப்பது போல் தோன்றினும் அது துன்பத்தின் காரணமே ஆகும். சிறு காரணத்தால் மகிழும் வேறொரு சிறு காரணத்தில் துன்பப்படும். சொல்லப்பட்ட இன்பத்தையும் அடைகின்றது துன்பத்தையும் அடைகின்றதும் ஆகிய உடல்போல் பொருந்துகின்ற குணம் இல்லாததும், துயரத்தை உடையதும், கீழ்மையானதும் ஆகிய ஒன்று வேறு இருக்கின்றதா?* **(1.70)**

**அற்பமதாம் சு(க்)அசுகத்தில் அழுந்து(ம்)உடல் நிலைஎனினும் அழி(வு)என் றாலும்**
**நற்பலம்என் அகங்கரனுக்(கு) அகமாகிப் பொறிபசுக்கள் நாலோ(டு) ஆறும்**
**கற்பனைசெய் மனத்தொழும்பும் ஆசைமனை வியும்வாயாம் கடையும் ஆங்கே**
**பற்பலபல் என்புகளாம் தோரணமும் நாக்குரங்கும் பயின்று தோன்றும்.**

**பொழிப்புரை:** *அற்பமாகக் கிடைக்கின்ற சுகத்திலும் துன்பங்களிலும் அழுந்துகின்ற உடலானது நிலையானதாக இருந்தாலும், அழிவுடையதாக இருந்தாலும் அதனால் நல்ல பயன் என்ன உளது? அகங்காரம் வசிக்கின்ற வீடாகி, ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து ஆக பத்து புலன்களாகிய எருமைகளும், எக்கணத்திலும் ஏதாவது ஒன்றைச் சிந்தித்து மனோராச்சியம் செய்து கொண்டிருக்கின்ற மனம் என்னும் வேலைக்காரனும், ஆசை எனப்படும் மனைவியும், வாசல் போல் இருக்கின்ற வாயும், அதில் பலப்பல தோரணங்கள் போல் தொங்கும் துர்நாற்றம் வீசும் பற்களும், தாவித் திரியும் குரங்கு போன்ற நாக்கும் உடைய தேகத்தில் பற்று எவ்வாறு உண்டாகும்?* **(1.71)**

**நிதியு(ம்)அர சும்செயலும் இவ்வுடம்பும் வேண்டுவன நிற்கின் அன்றோ**
**விதியில்வரு காலனால் சிலநாள்இ வையெலாம் வீந்து போகும்**
**உதிரமொடு தசைஉடைத்தாய் உடைவ(து)இயல் பாய்த்தாழ்ந்தோர் உயர்ந்தோர் ஒத்தே**
**அதிகசரா மரண(ம்)உறும் தரம்அறியா(து) இவ்வுடலில் அழ(கு)என் கொல்லோ.**

**பொழிப்புரை:** *செல்வமும், அரசும், செயல்களும் நிலையானதாக இருந்தால் விருப்பம் கொள்ளலாம். அல்லது இந்த உடல் தான் நிலையாக இருக்குமாயின் விருப்பம் கொள்ளலாம். இவை அனைத்தும் நிலையில்லாது, வினை முடியும் தருவாயில் எமதர்மன் வருகையால் சில தினங்களிலேயே நாசமாகிப் போகும். இரத்தமும் சதையும் உடையதாய் அழிவதே இயல்பாகி, தாழ்ந்தவர் உயர்ந்தவர் எவருக்கும் சமமாக அந்தந்தக் காலத்தில் ஏற்றத்தாழ்வு பார்க்காமல் முதுமையும் மரணமும் அடைகின்ற இந்த உடலில் இனிமை என்பது எங்கே இருக்கிறது?* **(1.72)**

**மின்னிடத்தில் சரற்கால மேகத்தில் கந்தர்வ வியன்மூ தூரில்**
**நன்நிலைமை எண்ணுவோன் எவன்அவனே உடல்நிலைமை நாடு கிற்போன்**
**மன்னுகிலா(து) அசைந்துபல தொழில்தரங்கம் செறிபிறவி வாரி தன்னில்**
**என்னபிறப்(பு) எய்துகினும் இளமைமிகு துயரத்துக்(கு) ஏது வாகும்.**

**பொழிப்புரை:** *மின்னல் இடத்தில், சரற்கால மேகத்தில், கந்தர்வ நகரில் நிலையான தன்மை உளது என்று எண்ணுகின்ற அவனே இந்த உடலில் நிலைத்த தன்மையை நாடுபவன் ஆவான். நிலையில்லாது அசைந்து பல செயல்கள் என்னும் அலைகள் நிறைந்த பிறவியாகிய சம்சாரக் கடலில் எந்த பிறவி உண்டானாலும் இளமை என்பது மிகுந்த துயரத்துக்குக் காரணம் ஆகும்.* **(1.73)**

**தொலை(வு)அறும்ஆ பத்(து)எளிமை சொல்லின்மை மடம்ஆசை துவட்சி எய்தி**
**அலைவுறுசை சவத்துடனே உலைஇயல்பாம் மனம்கூடி ஓத நீரில்**
**அலைமடவார் விழிஅனலின் கொழுந்தொடுமின் இவைக்கெலாம் அலைவு கற்பித்(து)**
**அலைதல்)உறு நாய்போல மலம்அருந்தும் அற்பத்தால் மகிழும் வாடும்.**

**பொழிப்புரை:** *ஒழிவில்லாத ஆபத்து, அதனைப் போக்கும் திறமை இல்லாமை, பிறரிடம் தெரிவித்தாவது பரிகாரம் செய்ய முடியாத சொல்வன்மையும் இல்லாமை, அறியாமை, ஆசை, துவண்டு போதல் முதலியவற்றை அடைந்து அலைகின்ற இளமைப் பருவத்துடன் இயல்பாகவே சஞ்சலம் கொண்ட மனம் கூடி (அதாவது சஞ்சல மனதின் பக்கம் இருந்து காண்கின்ற) கடல்நீரில் அலைகள், மருள் தரும் பெண்களின் கண்கள், தீச்சுவாலை, மின்னல் இவற்றிடத்தும் அலைகின்ற தன்மையைக் கற்பித்து, மலம் உண்ணும் நாய் போல், அற்பப் பொருள் கிடைத்தால் அதில் சந்தோஷமும், அது கைதவறிப் போனால் வருத்தமும் அடைந்து (இளமைப் பருவத்தே) துயரப்படுவன்.* **(1.74)**

**மண்நுகரும் விண்மதியை வரவழைக்கும் இம்மடமை மகிழ்ச்சி ஆமோ**
**நுண்ணுகுரு தாய்தந்தை உற்றோர்மூத் தோர்எவர்க்கும் நடுக்கம் கூரும்**
**புண்ணுறுசை சவம்பயத்துக்(கு) இடமாகும் குற்றமெலாம் பொதிந்த கூடாம்**
**எண்ணு(ம்)அவி வேகவிடன் வாழ்மனையாம் யார்க்கு(ம்)இதில் இன்பம் எய்தா.**

**பொழிப்புரை:** *உலகம் முழுவதையும் அனுபவிக்க விரும்புதல், மண்ணிலிருந்து கொண்டு ஆகாயத்தில் தோன்றும் நிலவினை இங்கே கொண்டு வர ஆசை கொள்வது முதலான மடமையொடு கூடிய இளமைப் பருவம் மகிழ்ச்சி உடையது ஆகுமோ? கல்வி கற்பிக்கும் ஆசிரியர், ஈன்ற தாய் தந்தையர், நலம் விரும்பும் உறவினர்கள், வயதிலும் அறிவிலும் மூத்தவர்கள் முதலான எவருக்கும் பயந்து நடுங்கும் புண்படும்படியான இளமைப் பருவம் பயத்துக்கான இடமாகும். குற்றம் அனைத்தும் பொதிந்திருக்கும் கூடாகும். அடைய முடியாததை அடையச் சிந்திக்கின்ற அவிவேகி மூடன் வாழ்கின்ற வீடாகும். இந்த இளமைப் பருவத்தில் எவருக்கும் சந்தோஷம் உண்டாகுமோ?* **(1.75)**

**இப்பருவத்(து) அனர்த்தம்(ம்)அகன்(று) இடரில்வீழ்(வு) எவ்வனத்தில் ஏறி நெஞ்சாம்**
**ஒப்பரிய பொந்தி(ல்)உறை காமன்(ன்)எனும் பேய்அறைய உள்ளம் வாடும்**
**செப்பரிய விரவுடைத்தாய்த் தெளிந்துபரி சுத்தமாய்த் தெளிந்த தேனும்**
**மைப்புயல்நாள் நதிநீர்போல் மதிகலங்கும் எவ்வனத்தில் மயங்கு நாளில்.**

**பொழிப்புரை:** *இந்த பால்ய பருவத்தில் அனர்த்தங்கள் நீங்கி துன்பத்தில் வீழ்வதற்காகக் காளைப் பருவத்தில் பிரயாணம் செய்து ஒப்பில்லாத பொந்தில் (துளை) இருக்கின்ற காமன் என்கிற பேய் அடிக்க உள்ளம் பரவசமாய்த் துன்பம் உறும். புத்தியானது சொல்லற்கரிய சாத்திர உணர்வுடன் விரிவடைந்து தெளிந்து சுத்தமாக இருந்த போதிலும், கார்மேகம் வரும் மழைக் கால நாட்களில் ஆற்றில் வரும் புதுவெள்ளம் கலங்கியிருப்பது போல், வாலிபப் பருவத்துடன் கூடி மயக்கம் உறும்பொழுதும் மதியானது கலங்கும்.* **(1.76)**

**கருத்(து)எனும்மான் மருண்(டு)ஓடி விடயம்(ம்)எனும் குழியில்விழக் காயம் என்னும்**
**மருத்தலத்தில் எவ்வனமாம் கடுங்கானம் எழுந்துமிக வளரா நிற்கும்**
**பெருத்ததுயர் இளமைநலம் எவ்வள(வு)உண்(டு) அவ்வளவும் பெருகா நிற்கும்**
**அருத்திகளும் எவ்வனம்அவ் வளவும்விரைந்(து) எழுந்துமிக அனர்த்தம் செய்யும்.**

**பொழிப்புரை:** *மனம் என்கின்ற மான் மயங்கி ஓடி ஐம்புலன்களின் விஷயங்களாகிய சப்தம், பரிசம் முதலிய குழியில் விழுந்திடத் தேகம் என்கிற பாலை நிலத்தில் கானல் நீர் என்ற இளமைப் பருவம் தோன்றி வளர்ந்து நிற்கும். நிறைந்த இளமைப் பருவம் எதுவரையில் இருக்கின்றதோ அதுவரையில் மிகப் பெரிய துயரங்கள் பெருகி வரும். காமம் முதலியவை இளமைப் பருவம் இருக்கின்ற வரையில் விரைவாகப் பெருகி நாசத்தையே செய்யும்.* **(1.77)**

**எத்திறத்தோர் எவ்வனமாம் இடையூற்றைக் கடந்(து)எளிதின் ஏற வல்லோர்**
**அத்திறத்தோ ரேபுருடர் அவர்களே தொழற்(கு)உரியோர் அவரே சான்றோர்**
**மெய்த்திறத்தோர் சேர்இடமாய் விநயநிதி படைத்(து)அருளால் விளங்கா நிற்கும்**
**சுத்தகுணம் எவ்வனம்இவ் வுலகி(ன்)உள தோவிசும்பில் சூழ்கா(டு) உண்டோ.**

**பொழிப்புரை:** *எந்தத் திறமையுடைவர் இளமைப் பருவத்தின் இடையூற்றினைக் கடந்து எளிதாக கரை ஏற வல்லவர்களோ, அந்தத் திறமை உடையவரே உத்தமர். அவர் வணங்குதற்கு உரியவர். அவரே சான்றோர் ஆவர். உண்மையான திறம் உடையவர்கள் சேர்ந்து திகழ்கின்ற இடமாக, பணிவு முதலான செல்வங்களைக் கொண்டு கருணை நிரம்பி, சுத்தமான குணங்களுடன் நிறைந்து விளங்கும் இளமைப் பருவமானது இவ்வுலகத்தினில் இருக்கின்றதோ? ஆகாயத்தில் சூழுகின்ற காடு உண்டோ?* **(1.78)**

**சந்துறு நரம்போ(டு) என்பு தசைசெறி பாவை ஒப்பார்**
**எந்திரத்(து) இயங்கும் அங்க பஞ்சரத்(து) இனிமை என்னே**
**கந்தமென் குழலார் கண்ணில் தோல்தசை கண்ணீர் புண்ணீர்**
**சிந்தையில் பிரித்து நோக்கில் சீரிதேல் மோகம் செய்வாம்.**

**பொழிப்புரை:** *பொருத்தமாக நரம்பு எலும்பு தசை முதலானவை நிறைந்த பொம்மைக்கு நிகராக எந்திரம் போல இயங்குகின்ற தேகமாகிய கூட்டினில் இனிமை என்ன இருக்கிறது? வாசனை மலர்சூடிய கூந்தலை உடைய மாதர்களின் கண்ணில் தோல் மாமிச தசை கண்ணீர் ரத்தம் இவற்றைச் சிந்தையில் பகுத்துப் பார்த்தால் சந்தோஷம் உண்டாவதாக இருந்தால் மயக்கம் கொள்ளலாம்.* **(1.79)**

மேருவின் குவட்டின் வீழும் விரிதிரை கங்கை நீர்போல்
ஆர(ம்)உற்(று) இலங்கு கின்ற அணிஇழை மடவார் கொங்கை
ஊர்அயல் மயானம் தன்னில் உற்றபோ(து) உருண்டைச் சோற்றில்
நேருறு கவளம் போல நிரைநிரை நாய்கள் துய்க்கும்.

**பொழிப்புரை:** *மேரு மலை முகட்டில் இருந்து விழுகின்ற பெரிய அலைகள் உடைய கங்கை நதியின் தண்ணீர் போல், முத்து மாலை ஆபரணம் நெருங்கி விளங்குகின்ற மாதர் தம் கொங்கையை ஊருக்கு வெளியே இருக்கின்ற மயானத்தில் கொண்டு போய் (உயிர்போன உடலைப்) போட்டபோது உருண்டையாக உருட்டிய சாதத்தின் கவளம் போல (கருதி) நாய்கள் வரிசை வரிசையாக வந்துதின்னும்.* **(1.80)**

மேவுதற்(கு) அரிதாய்க் கேசம் புகையதாய் விழிக்கு நன்காய்த்
தீவினைச் சிகைசேர் மாதர் எனும்கனல் திருணம் போல
யாவரைச் சுடாது தூரத் தெரிகின்ற நரகத் தீக்குப்
பாவையர் குளிர்ந்த மேனி பசையிலா விற(கு)அ(து) ஆமே.

**பொழிப்புரை:** *தொடுவதற்கு முடியாததாய்க் கூந்தலாகிய மை பூசியவராய் பார்ப்பதற்கு அழகாகத் தெரிபவராய் பாவ வடிவ வினையாகிய சுவாலை சேர்ந்து ஒளிர்கின்ற மாதராகிய கனல் துரும்பினைப் போல யாரைத் தான் சுட்டு எரிக்காது? தொலை தூரத்தில் தெரிகின்ற நரக மாகிய அக்கினிக்குப் பெண்களின் குளிர்ந்தமேனி ஈரமில்லா விறகு போல்வதாம்,* **(1.81)**

மாமடம் செறிந்த நெஞ்சின் மனிதராம் புள்பி டிக்கக்
காமனாம் வேடன் வீசும் வலைஒப்பார் கருங்கண் மாதர்
தீமனச் சே(று)ஆர் சன்மச் சிறுகுழி மீனாம் மாந்தர்க்(கு)
ஏமவா தனைக யிற்றுத் தூண்டிலுக்(கு) இரையும் ஒப்பார்.

**பொழிப்புரை:** *மிகுந்த அறியாமை உடைய மனமுடைய மனிதராம் பறவையைப் பிடிக்க மன்மதன் என்கிற வேடன் வீசும் வலையைப் போன்றவர் கரும்குவளை மலர்க் கண்கள் கொண்ட மாதர். கொடிய மனச் சேறு நிறைந்த அற்பப் பிறப்பாகிய குழியில் உள்ள மீன்களாகிய மனிதர்களைப் பிடிக்க உதவிடும் கெட்ட வாசனை என்னும் கயிற்றுத் தூண்டிலில் வைக்கப்படும் இரை (உணவு)க்கு (பெண்கள்) நிகர் ஆவர்.* **(1.82)**

முதுதுயர் விலங்கும் ஆகி முடிவில்கா மாதி என்னும்
புதுமணி வைத்த செப்பாம் பூவையர் இன்பம் வேண்டேன்
இதுதசை இதுநெய்த் தோர்என்(பு) இதுநரம்(பு) இதுவென்(று) எண்ணில்
விதுமுக மாதர் வேட்கை விரோதமாம் சிறிது நாளில்.

**பொழிப்புரை:** *பெரும் துயரைத் தரத்தக்க கைவிலங்கு என்னும் தடையாகி, முடிவில்லாத விருப்பு முதலிய புதிய மணிகள் வைத்த சிமிழ் போன்ற மாதர்களின் இன்பத்தை வேண்டமாட்டேன். இது தசை, இது ரத்தம், இது எலும்பு, இது நரம்பு என்று பிரித்துப் பார்க்கின்ற தன்மையினால் நிலவினைப் போன்ற மாதர்களின் மீதான விருப்பம் சிலநாட்களில் தானாக பகையாக மாறி அருவெறுப்பாக மாறும்.* **(1.83)**

**பாரியை உடையோன் யாவன் அவனுக்கே பற்றாம் போகம்**
**நாரியை இல்லா தாற்குப் போகத்தில் நலம்எங்(கு) உண்டாம்**
**காரிகை தன்னை நீங்கில் கருத்துறு சகத்து நீங்கும்**
**பேரியல் சகத்து நீங்கில் பிரி(வு)இல்பேர் இன்பம் உண்டாகும்.**

**பொழிப்புரை:** *எவன் மனைவியின் மீது ஆசை கொண்டிருக்கின்றானோ அவனுக்கே இன்பத்தில் பற்று உண்டாகும். பெண் ஆசை இல்லாதவனுக்குப் போகத்தில் எவ்வாறு சுகம் உண்டாகும்? பெண்ணாசையை விட்ட மாத்திரத்தால் மனதில் உல்லாச உலகமானது நீங்கி விடும். பெயர் வடிவங்களாகிய மனதில் உள்ள உலகம் நீங்கிடில் பேதமில்லாத பேரின்பம் தானே வரும்.* **(1.84)**

**வந்துறு போதில் நன்றாய் வரியளிச் சிறகு போலச்**
**சந்ததம் சலித்துத் தள்ளற்(கு) அரியதாம் போகம் தன்னை**
**முந்துநோய் மரணம் மூப்பு முதலவாம் துயர்கட்(கு) அஞ்சிச்**
**சிந்தையில் விரும்பேன் எங்ஙன் சேர்வரும் பதத்தைச் சேர்வேன்.**

**பொழிப்புரை:** *காண்பதற்கு நன்றாக இருப்பதாய் பொறிவண்டின் சிறகு அசைந்து கொண்டிருப்பது போல எப்போதும் அதிக சஞ்சலமாய் இருந்து தள்ளுதற்கு அரிதாகிய அளவில்லாத போகத்தை அனுபவித்து அதனால் நோய்கள் முந்திக்கொண்டு வந்து அடைய, தொடர்ந்து மூப்பு, மரணம் முதலான துயரங்களும் வந்தடையும் என்பதற்கு அஞ்சி போகத்தை மனதில் விரும்பேன். எவ்வகையிலாவது முயற்சி செய்து சேர்வதற்கு அரிய ஆனந்த பதத்தைச் சேர்வேன்.* **(1.85)**

**ஈறு சைவ வத்தை எவ்வனம் விழுங்கும் இத்தை**
**மாறுறு சரைவி முங்கும் மயக்கம்நோய் வருத்தம் மிக்க**
**பேறுறு சரைகைக் கொண்டால் பேரறி(வு) அகன்றிட்(டு) ஓடும்**
**வேறுறும் அணங்கால் முன்னை மெல்லியல் அகலு மாபோல்.**

**பொழிப்புரை:** *முடிவில்லாதது என்று கருதும் பால்யப் பருவத்தை வாலிபப் பருவம் விழுங்கி விடும். இந்த வாலிபப் பருவத்தை, வருத்தம் தரும் நோய்களும் அவற்றிற்குக் காரணமான மயக்கமாகிய அகந்தை மமதை என்பதையே பிரயோசனமாகக் கொண்ட கிழப்பருவமானது வந்து விட்டால் சக்களத்தியாக வந்த இரண்டாவது மனைவியால் முதல் மனைவி பிரிந்து செல்வது போல், பெரும் பிரஞ்ஞை அகன்று ஓடிவிடும்.* **(1.86)**

**புரையுடன் நெகிழ்வு சோர்வு பொருந்திய லோபம் துன்பம்**
**கரையுறு கருமம் தன்னில் வலியின்மை கடுநோய் தோற்றம்**
**வரைபொருள் செயமாட் டாமை மைந்தரே முதலோர் நிந்தை**
**சரைநரை வருகா லத்துத் தரும்துயர் விவிதம் ஆகும்.**

**பொழிப்புரை:** *குற்றம் குறைகளுடன் சேர்ந்து தளர்ச்சியும் அயர்ச்சியும் ஆசையும் லோபமும் துன்பமும் பொருந்தி வரத் தனக்குரிய கருமத்தையும் செய்து கொள்வதற்கு ஆற்றல் இல்லாமை, கடுமையான நோய்கள் தோன்றுதல், குறித்த காரியத்தையும் செய்ய முடியாமை, பிள்ளைகளின் நிந்தை முதலானவை மயிர்வெளுக்க மூப்பு வரும் காலத்தில் வந்து அடையும் துன்பங்கள் பலப்பல ஆகும்.* **(1.87)**

விருத்தராய் நடுக்கு வோரை மித்திரர் மைந்தர் உற்றார்
கருத்துறு மாதர் தாசர் நகைசெய்வர் காணொ ணாதாய்
வருத்தமும் சரையும் உற்று வலிகுணம் இழந்த மூப்பை
அருத்திவந்(து) அடையும் கட்டை மரம்கழு(கு) அடையு மாபோல்.

**பொழிப்புரை:** *கிழப் பருவம் அடைந்து உடல் நடுங்குபவரை நண்பர், பிள்ளைகள், உறவினர், மனதுக்கு இசைந்த மாதர்கள், வேலைக்காரரர்கள் காண்பதற்கு அருவருப்பாய்ச் சிரிப்பார்கள். மொட்டை மரத்தைக் கழுகுக் கூட்டம் வந்து அடைவது போல, துயரமும், தோல் சுருக்கமும் அடைய, வலிமையும் குணத்தின் திண்மையும் இழந்துவிட்ட மூப்பினை ஆசை வந்து அடையும்.* **(1.88)**

குற்றமும் இளைப்பும் மேவிக் குறிதன்றி உளத்தைச் சுட்டு
துற்றஆ பத்துக்(கு) எல்லாம் தோழியாம் ஆசை துன்னும்
உற்றதோர் பரலோ கத்துக்(கு) உறுதிஏ(து) என்று மூப்பில்
பற்றுறு பரிகா ரம்தீர் பயம்மிகப் படரும் அன்றே.

**பொழிப்புரை:** *தீனத்தன்மையும் மெலிவும் உண்டாக இருதயத்தில் தாபத்தைக் கொடுப்பதாய், வந்த ஆபத்துக்கு எல்லாம் தோழிபோல் ஆசை நெருங்கி வரும் கிழப்பருவத்தில் இனி பரலோகம் சென்று அடைவதற்கு என்ன செய்திருக்கிறேன் என்றும், பாவம் செய்திருப்பின் அதற்கான பரிகாரம் செய்வதற்கும் முடியவில்லையே என்றும் பயம் அதிக அளவில் வரப்பெறும்.* **(1.89)**

ஆதரச் செருக்கு மல்கும் அருந்துதற்(கு) அரிது மூப்பில்
காதல்செய் வலியி லாமை கருத்தெலாம் வெந்து சோரும்
போதுறு நீ(று)ஆர் முற்றல் பூசணிப் பெருங்காய் போல
மேதகு காலன் மாந்தர் வெண்நரை தலையைத் தின்னும்.

**பொழிப்புரை:** *ஆசையானது செருக்குடன் எழுந்து வரும். எதையும் அனுபவிப்பதற்கு முடியாது. விரும்பியதைச் செய்யும் பலம் இருக்காது. இதனை நினைத்து உள்ளம் வெந்து சோர்வு அடையும். முற்றிய காலத்து விபூதி பூசியதைப் போன்ற பூசணிக் காய் போல வெள்ளை நரை நிறைந்த தலையை மேன்மை மிக்க எமதர்மன் வந்து தின்னுவான்.* **(1.90)**

மரணமா மன்னன் முன்னர் வருநரைக் கவரி வீசித்
திரளுறு வியாதி ஆதி ஆகிய சேனை செல்லும்
தரமறு நரைவெண் சாந்தார் சரீரமாம் மனைக்குள் ஆபத்(து)
உரவலி யின்மை சோர்வாம் ஒண்டொடி மகளிர் வாழ்வர்.

**பொழிப்புரை:** *மரணம் என்கின்ற அரசன் வருகின்ற போது வெளுத்த நரை முடி கவரி வீச, ஒன்றாகத் திரண்ட வியாதிகள் ஆகிய படைகள் முன்னே செல்ல, தரம் இல்லாத வெண்மை நிறச் சாந்து பூசிய தேகம் என்ற வீட்டுக்குள் மிகுந்த பயம், ஞான பலம் இல்லாமை, சோர்வு ஆகிய மென்மையான தோளுடைய வளையல் அணிந்த பெண்கள் வாழ்வர்.* **(1.91)**

நரையுறு தீவாழ் நாளாம் பேயுடன் நண்ணி வாழ்(வு)என்
சரைவெலற்(கு) அரிது யார்க்கும் ஈடணை மூன்றும் தள்ளும்
நிரைபவத்(து) அவிளை யாகி நிகழ்இன்பப் பொருள்கள் எல்லாம்
புரையுறும் எலியால் நூல்போல் காலனால் பொன்றும் அன்றே.

**பொழிப்புரை:** *நரைத்த முடியுடன் பயனில்லாத வாழ்நாள் எனும் பேயுடன் இருந்து வாழும் வாழ்வில் என்ன பிரயோசனம்? யாவர்க்கும் மூப்பினை வெல்லுவது அரிது. மூவாசை களையும் தள்ளும். வரிசையாக வரும் சம்சார உலகவாழ்வில் மயல் கொண்டு சுக சாதனம் எனக்கருதும் பொருள்கள் எல்லாம், எதையும் கெடுக்கின்ற சுண்டெலியால் கடித்துக் குதறப்பட்ட துணிபோலக் காலனால் கெடுக்கப்படும்.* **(1.92)**

மகரநீர் கடல்கு டிக்கும் வடமுகக் கனலே போலச்
சகலமும் விழுங்கும் காலன் சகத்திடை விழுங்கா(து) இல்லை
புகலரும் பெரியா ரேனும் பொழு(து)ஒரு கணமும் தாழான்
அகிலமும் விழுங்கித் தானே அகிலமாய் நிற்கும் அன்றே.

**பொழிப்புரை:** *மீன்கள் நிறைந்த கடல் நீரை வற்றச் செய்யும் வடமுக அக்கினி போல, எல்லாவற்றையும் விழுங்குகின்ற காலன், இந்த உலகத்தில் விழுங்காதது எதுவும் இல்லை. சொல்வதற்கு அரிய பெரியோர்கள் என்றாலும் ஒருகணமும் தாமதம் செய்யமாட்டான். அகில உலகத்தையும் விழுங்கித் தானே விசுவமூர்த்தியாய் நிற்பான்.* **(1.93)**

விழுமியர் சுபத்தின் பாலர் மேருவை ஒப்போர் எல்லாம்
பழுதறு கருடன் கொல்லும் பாம்பெனக் காலன் கொல்லும்
புழுதியோ(டு) இலைது ரும்பு பொன்மலை புணரி வெள்ளம்
செழுமகேந் திரமும் காலன் சிதைத்துதன் வடிவம் ஆக்கும்.

**பொழிப்புரை:** *மேலோர், தூய்மை சுபத்தைச் சார்ந்தோர், மேரு மலைக்கு நிகரானவர் எல்லோரையும் குற்றம் இல்லாத கருடன் கொல்லுகின்ற பாம்பினைப் போலக் காலன் கொல்லும். புழுதி, இலை, துரும்பு, பொன்மலை, கடல் நீர், செழுமையான மகேந்திர மலை அனைத்தையும் காலன் சிதைத்து ஆன்ம மயமாய்ச் செய்து கொள்வன்.* **(1.94)**

அகல்பூதக் கொது(கு)இரையும் அண்டமெனும் கனியுகுத்த அத்தி யாயும்
பகலவனே கண்ணாகப் பகற்பொழுது பார்வையால் பதங்கள் பார்த்துச்
சகம்எனும்தொல் வனத்(து)உலக பால(ர்)எனும் பழம்பறித்துத் தானே தின்னும்
திகழுலகா மணிமாலை குணமூன்றால் கோத்தணிந்து சிந்தும் காலன்.

**பொழிப்புரை:** *அளவற்ற பிராணிகளாகிய கொசுக்கள் இரைச்சலிடுவதும், அண்டங்களாகிய கனிகள் உதிர்ந்து கொண்டிருக்கும் அத்தி மரமாயும், பகல்பொழுது சூரியன் கண்ணாக இருந்து நோக்குவதால் பழுத்திருப்பவை எவை எனப்பார்த்து பிரபஞ்சம் என்னும் பழைய வனத்து சகத் ரட்சகர் என்னும் பழங்களைக் கொய்து சுயம் புசித்துக் கொண்டிருப்பன். விளங்குகின்ற உலக மணிமாலையை முக்குணங்களால் நிரப்பி அலங்கரித்து எமனால் மீண்டும் சிதறுமாறு செய்யும்.* **(1.95)**

**சிறியசகப் பழங்குடிலில் சித(று)உலக மணியமனாம் செப்பில் சேர்க்கும்**
**அறி(வு)இல்பல பூதமாம் விலங்குகளும் பறவைகளும் அளவற்(று) எங்கும்**
**முறியஉலர் சகப்பாலை தனில்வேட்டை யாடிநெடு முதுகற் பத்தில்**
**பொறிவடவைத் தாமரைசேர் கடல்விளையாட்(டு) ஓடைகளாப் பொருந்தும் காலனே.**

**பொழிப்புரை:** *அற்பமான உலகமாகிய சிறிய வீட்டில் பரவிக் கிடக்கும் பெரியோர்கள் எனும் மணியை எமனாம் சம்புடத்தில் பொறுக்கி அடைக்கும் தீனர்களாயும் மூடங்களாயும் இருக்கும் பற்பல பிராணிகளாகிய விலங்குகள், பறவைகள் அளவில்லாமல் நாசமாகுமாறு உலர்ந்த பிரபஞ்சமாகிய பாலைவனத்தில் வேட்டையாடி விரிந்த உலகமாகிய வனத்தில் கற்பத்தின் முடிவில் பொறிபறக்கும் வடவா அக்கினி என்னும் தாமரையை அலங்கரிக்கும் சமுத்திரத்தை விளையாடும் ஓடைகளாகக் காலன் அதில் பொருந்திநிற்பான். (நாசம்செய்வான்)* **(1.96)**

**கைப்பினொடு புளிப்புகார்ப்(பு) இவைமுதலாம் சுவைபடைத்த கனபூ தத்தால்**
**ஒப்பரிய பால்தயிரை ஆதியாய் வருகின்ற உததி தன்னால்**
**துப்புடையன் விவிதமாம் தோற்ற(ம்)உள சகங்களினால் சுற்றிச் சுற்றி**
**வைப்புடைய அவற்றவற்றாம் பெருங்கற்பம் பலகாலும் வட்டம் செய்யும்.**

**பொழிப்புரை:** *கைப்பு, புளிப்பு, உறைப்பு முதலான சுவைகளை உடைய சகல பிராணிகளும், உவமை சொல்லுவதற்கு அரிய பாற்கடல், தயிர்க்கடல் முதலான எழுகடல் குடிக்கும் தண்ணீராகவும், காணப்படுகின்ற பலவிதமான உலகங்களை அன்னமாகவும் புசிப்பன். சிறிது காலம் இருப்பனவாய் கடல் முதலிய அவை அவற்றின் மகாகற்பம் அனேக முறை சூழ்ந்து சூழ்ந்து வட்டம் இடும்.* **(1.97)**

**தொல்லுலகில் தோன்றுகின்ற சராசரமாம் பொருள்அனைத்தும் தொலைத்து மாற்றி**
**வெல்லரிய சங்கார காளராத் திரிமிகவும் வெருட்சி மிக்க**
**வல்லபமா நடைஉடைத்தாய் மாதர்கணம் அனைத்து(ம்)உடன் மருவப் பட்டுப்**
**புல்லரிய சகமோகப் பொறிவனத்தில் புலிப்பேடு போல வாழும்.**

**பொழிப்புரை:** *பழமையான உலகத்தில் காணப்படுகின்ற அசையும் அசையாப் பொருள் அனைத்தையும் வேறுபடுத்தி நாசம் செய்யும் எவராலும் வெற்றி கொள்ள முடியாத சண்டிகா தேவியானவள் அதிகோரமாய் பயப்படும்படி திறம்கொண்டு சஞ் சாரம் செய்பவளாய் சப்த (ஏழு) மாதர் பின்தொடர, மோக வடிவமாகிய பிரபஞ்சத்தில் காட்டினில் பெண்புலியைப் போல வாழ்ந்து கொண்டிருக்கும் (கால பகவானுக்கு மனைவியாம்).* **(1.98)**

**படர்பூதம் தொலைத்(து)இரதம் பயில்புவியாம் பானபாத் திரம்கைப் பற்றி**
**மடல்சூழ்)உற் பலம்கழுநீர் வனசம்)என உலகநிரை மாலை சூடி**
**விடுகோடை இடிநகைக்கும் நரஅரியை விளையாட்டு விகங்க மாக**
**நெடுநீள்வன் புயமாம்பஞ் சரத்தினிடை ஏந்துகின்ற நெறியன் ஆகி.**

**பொழிப்புரை:** *பிராணிகளின் கூட்டங்களை நாசம் செய்து அறுசுவை (ரசம்) ஆகிய கடல் சூழ்ந்த பூமி என்கின்ற குடத்தைக் கையில் ஏந்தி, கருங்குவளை, செங்கழுநீர் தாமரை என மேல் லோகம் கீழ் லோகம் அனைத்தையும் வரிசையாக மாலையாகச் சூடி, கோடை காலத்து இடியும் சிறியதே என்று சொல்லும் அளவுக்குச் சிரிக்கும் நரசிங்க மூர்த்தியைப் பறவையாக அசுரர்களைக் கொல்லும் பொருட்டு நீண்டு உயர்ந்த திடமான புயமாகிய கூண்டினுள்ளே தொங்க விட்டுக் கொண்டிருக்கின்ற தன்மை உடையவன் ஆகி அக் கால பகவான் இருப்பன்.* **(1.99)**

**மன்னுசுரற் ககனம்போல் மாசின்றிச் சுரவீணை மதுர மேவி**
**முன்னுயர்கா லனைக்கேளீஇக் கோகிலக்குஞ் சாக்கொண்டு முழுதும் இன்மை**
**என்னும்)அடல் சிலைதாங்கி எழுதுயரா கியகணைகள் ஏந்தி எங்கும்**
**துன்னுநட னம்புரிந்து தன்வசமாய் மிகவிளங்கிச் சுற்றா நிற்கும்.**

**பொழிப்புரை:** *விரிந்து பரந்திருக்கின்ற சரத் கால ஆகாயம் போல் களங்கம் இல்லாத ஒலியுடைய வீணையின் இனிய நாதத்தைச் செவியில் கவர்ந்து, மகா காலன் என்னும் தேவனையே விளையாட்டுக் குயில் குஞ்சு எனக் கொண்டு, எப்பொழுதும் இல்லாததாகிய வெற்றி வில்லினைத் தாங்கி, எழுகின்ற துயரங்கள் ஆகிய அம்புகளை ஏந்தி, எல்லா இடங்களிலும் சுற்றுபவனாய், தன் வசமாய்க் கூத்தாடி கூத்தாடிச் சுற்றுவன்.* **(1.100)**

**பொன்னுலகு தரிஅணியாம் புணர்பாவம் எனுநூலால் பூட்டிக் கட்டும்**
**பல்நரகச் சிலம்புகளைப் பாதலமாம் பதத்(து)அணியும் பானு திங்கள்**
**என்னுமணி சேர்இமவான் எனும்எலுப்பு மணிமேரு என்னும் பொற்பூண்**
**தன்னிருகா தினும்தரிக்கும் சக்கரவெற்(பு) அணிகலையாத் தழுவும் அன்றே.**

**பொழிப்புரை:** *சுவர்க்க லோகம் முதலானவையே அணிந்து கொள்ளும் ஆபரணமாம். சீவர்கள் இடத்தில் சேர்கின்ற பாவம் என்னும் நூலினால் கோர்த்துக் கட்டும் பலவிதமான நரகமாகிய சிலம்புகளைப் பாதாளமாகிய தனது பாதங்களில் அணியும். சந்திர சூரியன் என்னும் ரத்தினம் பதித்த பனிமலை என்னும் வெள்ளை நிற ஆபரணத்தையும். மேரு மலை என்னும் தங்க ஆபரணத்தையும் தன்னுடைய இரு காதுகளில் அணிவாள். சக்கர வாள மலையை இடையில் அணியும் துணியாகக் கொள்வன்.* **(1.101)**

**பின்னுறத்தாழ்ந்(து) அலைந்(து)இலங்கும் முருகன்வா கனமயிலின் பீலி சூடும்**
**முன்நயனப் பெருங்குழிகள் பயம்செய்யும் மதிசடைதாழ் முடிகள் பூணும்**
**கன்னிஉமை குழல்கவரி மலைநிகர்பை ரவர்ஆடும் கவந்தம் மேவும்**
**பல்நயனக் குழிவிளங்கும் இந்திரன்தன் மேனிஎனும் பலிஓ(டு) ஏந்தும்.**

**பொழிப்புரை:** *பின்புறத்தில் தாழ்ந்து அலைகின்ற முருகன் வாகனமாகிய மயிலின் பீலியை சூடுவன். முன்புறத்தில் கண்கள் மிகப் பயங்கரத்தைச் செய்ய, சந்திரனைச் சூடிய அரன் தலைகளை அலங்காரமாகத் தரிப்பன். உமையின் கூந்தலைச் சாமரம் போல் வீசி, கூத்தாடும் பைரவருடைய மலைபோன்ற தலை முண்டங்களைத் தாங்கி, பல கண்களை உடைய இந்திரன் மேனியைப் பிச்சை எடுக்கும் பாத்திரமாக வைத்துக்கொள்வன்.* **(1.102)**

**மிகவுணங்கு சாரீர கட்வாங்கப் பங்குகளால் விளக்கம் துன்று**
**மகம்உடைத்தாய்த் தனைத்தானே பயம்செய்து புவனமெலாம் தொலைத்து மாற்றும்**
**அகிலமுமாம் ஒருவடிவின் முடிவட்டம் எனும்கமலத்(து) அலங்க லோடு**
**நிகரி(ல்)நட னம்புரிந்து பெருங்கற்பம் தனில்விளங்கா நிற்கும் அன்றே.**

**பொழிப்புரை:** *மிகவும் காய்ந்த தேக சம்பந்தமாகிய முதுகெலும்பினால் செய்த பாரங்களாலே ஆகாயத்தில் நிறைந்து வியாபித்து விளக்கம் உடையதாய் பிறர் பயப் படும்படி தன்னைத் தானே பயப்படுத்திக் கொண்டும், எல்லா உலகங்களையும் நாசம் செய்தும், விசுவரூபமாகிய ஒரு வடிவத்தின் சிர சக்கரம் என்னும் தாமரை மாலைகளோடும் ஒப்பற்ற நடனம் புரிந்து கற்பகாலங்களில் விளங்குவான்.* **(1.103)**

**பொருள்க(ள்)எல்லாம் பொருள்அன்றாம் கடியமனம் அகங்கரத்தின் பொருட்டே ஆகும்**
**தெருளுறுபா வங்க(ள்)எலாம் அபாவமாம் பவமுடிவு தெரியா தாகும்**
**மருளுமதி யாகுலத்தால் உளம்வெதும்பும் ஆசைநோய் வளரா நிற்கும்**
**இருள்மயல்தீர் பவர்அரியர் எவ்வனம்தான் வருத்தத்தால் ஏகா நிற்கும்.**

**பொழிப்புரை:** *பொருள்கள் அனைத்தும் பொருள்கள் அல்ல (அதாவது சத்தியமானவை அல்ல). கொடிய மனமானது அகங்காரத்தின் வசமாகிப் போவதாகும். அறிவின் தெளிவுடைய இருக்கின்ற பொருள் இல்லாததாக ஆகின்றன. பிறவியின் முடிவு எப்பொழுது என்பது தெரியாததாக உள்ளது. மயங்கும் மதியானது துன்பங்களால் உள்ளே வெதும்பிக் கொண்டிருக்கிறது. ஆசையாகி நோய் வளர்கின்றது. இந்த இருளாகிய மயலில் இருந்து விடுபட்டவர் அரிதாவர். இந்த இளமையானது மிகவும் வருத்தத்துடன் கழிகிறது.* **(1.104)**

**பெரியவர்நண்(பு) அதிதூரம் செல்கதிகிட் டா(து)உண்மை பெறற்கொ ணாதாம்**
**கரியமனம் மோகிக்கும் உள்மகிழ்ச்சி தூரமதாம் கருணை தோன்றா**
**விரியு(ம்)இழி(வு) அதிதூரத் தினும்அணுகும் நிலைமைபோய் வேறாம் வீழ்வோர்**
**திரியஉடன் எழுவர்சிறி யவர்கூட்டம் எளி(து)அரிது தெளிந்தோர் கூட்டம்.**

**பொழிப்புரை:** *சத்சங்கப் பெரியவர்கள் நட்பும் அதி தொலைவில் உள்ளது. செல்லுகின்ற வழியும் தெளிவாகக் கிட்டுவதாக இல்லை. சத்தியம் அடையப்பட முடியாததாக உள்ளதாம். விஷயங்களில் கலக்கம் அடைந்த மனமானது மயலை அடையும். அகத்தில் மகிழ்ச்சி தொலை தூரம் சென்றுவிட்டது. கருணையும் தோன்றவில்லை. பெரிய இழிவானது தொலைவில் இருந்து வந்து நெருங்குகின்றது. நிலைமை மாறி அதைரியம் உண்டாகும். மக்கள் விழுவதும் மாறி எழுவதும் ஆக இருக்கின்றனர். கெட்ட சகவாசம் எளிதாம். நல்லவர் சகவாசமோ அரிதாம்.* **(1.105)**

கொண்ட பாவனை பிறவியாம் பூதங்கள் குலைந்துபோம் திசைதோன்றா
கண்ட தேசங்கள் பிறசொலாத் திரிந்திடும் கனகிரி துகள்ஆகும்
உண்(டு)ள னும்தன்மை விழுங்கிட உலகுபோம் உம்பர்போம் புவனம்போம்
மண்டு வாரிபோம் உடுக்கள்போம் தானவர் வானவர் கணம்போகும்.

**பொழிப்புரை:** *போக்கும் வரவும் உடைய பொருள்களால் எழுந்த கவர்ச்சி உடைய பாவனையே (சம்ஸ்காரம்) பிறவிக்குத் தளையாம். எல்லாப் பிராணிகளும் சிதறி ஓடிப்போகும். திசைகளும் தெரிய முடியாமல் போகும். காணப்படும் தேசங்களும் உருமாறி வேறொன்றாகப் போகும். மலைகளும் தூள் ஆகும். சத்துத் தன்மை உடைய பரமான்மா விழுங்கிட இவ்வுலகம் காணாமல் போகும். சொர்க்கமும் போய்விடும். இந்த உலகும் காணாமல் போய்விடும். தண்ணீர் நிறைகின்ற கடலும் போம். நட்சத்திரங்கள் காணாமல் போம். தேவர்கள் அசுரர்கள் கூட்டங்களும் காணாமல் போகும்.* **(1.106)**

சித்தர் பொன்றுவர் துருவனும் சிதைகுவன் சிவன்அயன் திருமார்பன்
தத்து வம்தனில் ஒன்றுவர் காலமும் கருமமும் முடிவாகும்
மத்த வானும்போம் மயக்கமே தருவதாய் வாக்கொடு செவிக்(கு)எட்டாச்
சுத்த மாம்பொருள் ஒன்றினால் இகழ்வுறத் தொல்லுல(கு) இழிவாகும்.

**பொழிப்புரை:** *சித்தர்கள் மாய்வர். துருவனும் சிதைந்து போவான். சிவன் அயன் திருமால் ஆகிய பெரியோர் பரப்பிரம்மத்தில் ஒடுங்குவர். காலமும் கர்மமும் முடிவுக்கு வரும். பரந்த ஆகாயமும் போகும். உணர்ந்து கொள்வதில் மயக்கம் தருவதாய் வாக்கு செவிக்குப் புலப்படாத சுத்தமாகிய பரப்பிரம்மம் ஒன்றினால் இகழ்வுற இந்த உலகமானது தோற்றமாய் மாய்ந்து போகும்.* **(1.107)**

இன்ன போதுமங் கலங்களாம் இருதுவீ(டு) யாத்திரைக்(கு) இதுகாலம்
அன்ன தேஉற(வு) இச்சுகம் இருந்தவா அற்புத உளபோகம்
என்ன என்னவா ளாநினைத்(து) உலகங்கள் இறக்கின்ற உயர்ந்தோரை
உன்னி முந்துறப் பகல்எலாம் தேடிடா(து) ஒழியுமேல் துயில்உண்டோ.

**பொழிப்புரை:** *இந்தப் பொழுது மங்கலமாம். வசந்த ருது(காலம்) இது. யாத்திரைக்கு உகந்த காலமாகும். அவர்களும் இவர்களுமே உறவினர்கள். இத்தகைய சுகம் எத்தனை சிறப்பினைப் பெற்றுள்ளது. ஆகா, அற்புதம் என்னே என்னே என்று வீணாக நினைத்து உலகிலுள்ள பிராணிகள் இறக்கின்றன. உயர்ந்த ஞானிகளை நினைந்து இரவு பகல் பாராது அடைவதற்கு முயற்சி செய்யாமல் போனால் கவலையில்லா உறக்கம் வருமோ?* **(1.108)**

மனைவியும் மகரும் பொன்னும் மமதைசெய் அமுதம் போல
நினைவினால் நேயம் செய்து நீள்நிலத்(து) உள்ள எல்லாம்
அனையவர்க் காகச் செய்வர் அருத்திக ளான எல்லாம்
வினையுற முடியும் காலை விடங்களின் மயக்கம் செய்யும்.

**பொழிப்புரை:** *மனைவி, புத்திரர், செல்வம் அனைத்தையும் எனது எனது என்று அபிமானம் கொண்டு, புத்தியினாலே விருப்பம் வைத்து, விரிந்து பரந்த பூமியில் உள்ள*

*எல்லா வற்றையும் அவர்களுக்காகவே செய்வர். ஆசையால் ஆக்கப்பட்ட அனைத்தும் போகம் அனுபவித்து முடிக்கும் தருவாயிலும், வினை முடிந்து செல்லும் காலத்திலும், விஷம் ஏறினால் வரும் மூர்ச்சைபோலத் துன்பங்களைச் செய்யும்.* **(1.109)**

**பகையெலாம் துரந்து தள்ளிப் பாக்கியம் பலவந்(து) எய்த**
**இகலறத் துய்க்கும் நாளில் எவ்விடத்(து) இருந்தோ வந்து**
**மிகையறு காலன் கொல்லும் விவிதமாம் இடத்தில் நின்று**
**வகுந்தின்வந்(து) ஒன்று வார்போல் மனைவிசேய் முதலா மாயை.**

**பொழிப்புரை:** *பகை எல்லாம் துரத்தி மீண்டும் வராதவாறு தள்ளி, பாக்கியம் பலவும் அடைந்து, இடையூறு இன்றி அனுபவிக்கும் காலத்தில், எந்த இடத்தில் இருந்தோ வந்த தனக்கு மேலாக வலிமை ஒன்று இல்லாத காலன் கொல்வான். பல இடங்களில் இருந்து நாற்சந்தி வழியில் கூடுவோர் போல, மனைவி பிள்ளைகள் முதலான எல்லாம் மாயை ஆகும்.* **(1.110)**

**கற்பமாம் கணகா லத்தில் கமலயோ னிகளும் மாய்வர்**
**சிற்பமாம் கலைக ளாலே செறிந்தகா லத்தின் சால**
**அற்பமும் மகத்தும் நாடி அளப்புறு புந்தி பொய்யாம்**
**பற்பல தீதின் மாளும் பயிலும்மன் னுயிர்கள் எல்லாம்.**

**பொழிப்புரை:** *கற்பம் எனும் நொடிப் பொழுதில் பிரம்ம தேவர்களும் ஒடுங்கிவிடுவர். சிற்பம் முதலான கலைகளால் அடுக்கடுக்காகப் பொருந்திய காலத்தின் கற்பனையால் சிறிதும் பெரிதுமாகப் பாவித்து எண்ணுகின்ற புத்தி மித்தையாம். இருக்கின்ற பல சீவர்களும் பல விதமான குற்றங்களில் மூழ்கி நாசத்தை அடைகின்றார்கள்.* **(1.111)**

**கற்றவர் அரியர் சாலக் கருமமும் துயரி னாலே**
**உற்றசூ னியமாம் எல்லா உயிர்தரித்(து) உழல்வ(து) எங்ஙன்**
**நற்றவத் தினமும் மேலாம் செல்வமும் அந்தச் செய்கை**
**முற்றுமாய்ந்(து) உளத்தே தோன்றும் யாமு(ம்)அம் முறையில் செல்வோம்.**

**பொழிப்புரை:** *கற்ற விவேகிகள் இவ்வுலகில் காணப்படுவது மிகவும் அரிதாக உள்ளது. கர்மமும் உண்டாகும் துயரினால் வரப்பெற்ற சூனியம் முதலான அனைத்தையும் வைத்துக் கொண்டு உயிர் வாழ்வது எப்படி? (மேலோர்கள் வாழ்ந்த) நல்ல அந்தத் தினங்களும் அந்த மேன்மையும், அந்த செல்வமும், அந்த செய்கையும் முற்றிலுமாக அழிந்து உளத்தில் நினைவு மாத்திரம் நிற்பதாயிற்று. யாமும் அந்த வழியில் செல்வோம்.* **(1.112)**

**பிணிசெ(ய்)ஆ பத்துச் செல்வம் பிறப்(பு)இறப்(பு) என்ப எல்லாம்**
**கணிதமாம் கணத்தில் போகா தனஇல்லை கடிய சூரன்**
**துணிவ(ன்)ஓர் ஏழை யாலே நூற்(று)உடல் துணியும் ஒன்றால்**
**பணிதரு கீழோர் மேலாம் பலவட்டம் வரும்இவ் வாறே.**

**பொழிப்புரை:** *நோய்கள் முதலிய துன்பத்தை உண்டாக்கும் ஆபத்துகள், செல்வம், பிறப்பு இறப்பு என்ற இவை எல்லாம் கணப் பொழுதில் நாசமாகும். நொடிப் பொழுதில் நாசம் ஆகாதது எதுவும் இல்லை. பலவீனம் உள்ள ஒருவனால் அனேக உடல்களைக் கொல்பவனாகிய சூரன் நாசமாவன். மற்றவரை வணங்கும் இடத்தில் உள்ள கீழோர் மேலான தன்மையை அடைவர். இவ்வாறு உலகம் அனேகமுறை சுற்றிக் கொண்டே இருக்கும்.* **(1.113)**

**அனையகுற் றங்க ளாம்காட்(டு) எரியினால் அறவும் வெந்த**
**நினைவில்நீ ரில்கா னல்போல் நெடியபோ கங்கள் தோன்றா**
**வினையுறு மரணம் வாழ்நாள் இரண்டையும் விரும்பு கில்லேன்**
**இனையதோர் இடரும் இன்றி இருந்தவா(று) இருக்கின் றேனால்.**

**பொழிப்புரை:** *மேற்கூறிய குற்றங்களால் காட்டுத் தீயினால் முழுதும் வெந்து போன சித்தத்தில் நீரில் கானல் போல் பெரும் போகங்கள் தோன்றமாட்டாது. வினையினால் வருகின்ற மரணம், வாழ்க்கை ஆகிய இரண்டினையும் விரும்பவில்லை. இத்தகைய எந்த இடரும் இல்லாமல், (பிடிப்பு இன்றி) இருந்தபடி இருக்கின்றேன்.* **(1.114)**

**தெரிவுறு வயதில் வந்த புந்தியால் சித்தம் தன்னைப்**
**பரிகரி யாது விட்டால் பரிகரிப் பதுமற்(று) எந்நாள்**
**விரிவிடம் விடம்அ(து) அன்று விடயமே விடமாம் துன்பம்**
**புரிவிடம் கொல்வ தோர்மெய் புலன்மறு பிறப்பும் கொல்லும்.**

**பொழிப்புரை:** *இள வயதில் வந்த விவேக புத்தியால் விஷயங்களில் செல்லும் மனதை அடக்காவிடில், அதை அடக்கும் நாள் வாய்ப்பது என்றோ? மிகச் சக்தி வாய்ந்த காளகூட விஷமும் விஷம் அல்ல. சப்தம், பரிசம் முதலான விஷயங்களே விஷமாகும். விஷயங்களால் உண்டாகும் துன்பமாகிய விஷம் கொல்வது இந்த ஒரு தேகத்தை மட்டுமே. ஆனால் விஷயங்கள் வாசனை வடிவமாகி மறுபிறப்புகளிலும் கொன்றுகொண்டே இருக்கும்.* **(1.115)**

**மகிழ்வுசோர்(வு) உறவு சார்வு வாழ்வுசா(வு) என்ப எல்லாம்**
**திகழ்வதாம் அறிவு சான்றோர் சிந்தையில் பந்தம் ஆகாப்**
**புகலுறும் ஆயுள் வாயு சிதறிய புயல்நீர் ஒக்கும்**
**நிகர்அறு போகம் மேக மிசைஎழு நெடுமின் போலும்.**

**பொழிப்புரை:** *மகிழ்ச்சி, சோர்வு, நண்பர், உறவினர், வாழ்வு, சாவு என்கின்ற இவை எல்லாம் பரிபூரணத்தை உணர்ந்த பெரியோர்களின் உள்ளத்தில் பந்தத்தை உண்டாக்க மாட்டாது. நீண்டதாக இருக்கின்றது என்று புகழப்படும் ஆயுளானது, காற்றினால் சிதறடிக்கப்பட்ட மேக நீர் போல்வதாம். நிகர் இல்லாத போகமானது மேகங்களில் தோன்றும் நீண்ட மின்னல்போல் சஞ்சலத்தை உடையதாம்.* **(1.116)**

**மாந்தர்தம் இளமை நில்லா(து) இவையெலாம் மனத்தில் எண்ணிச்**
**சாந்திகொள் பெரியோர் நீவிர் சமாதியோ கத்தைச் சார்மின்**
**ஆய்ந்தஎன் சிந்தை சீவ நாயகன் வசமா கைக்கே**
**ஏய்ந்தது நிலையும் எய்தா(து) இறைவனைப் பிரிந்தாள் போல.**

**பொழிப்புரை:** *மக்களின் இளமைப் பருவமானது நிலையில்லாதது. இவற்றை எல்லாம் மனதில் எண்ணிப் பார்த்து சாந்தி அடைந்த பெரியோர்களாகிய தாங்கள் சமாதியில் நின்று சுகத்தைப் பெறுவீர். இவற்றை ஆராய்ந்து பார்த்த என் சித்தம் சீவேசுவரன் வசமாவதற்குப் பொருந்தியதாகும். அந்த நிலையை அடையாது எதைப்போல என்றால் கணவன் வீட்டில் அவனுடன் இருந்து இச்சைப்படி அடையாதவளாய், அதே சமயம் அவனை விட்டு வெளியே போக முடியாதவளாயும் இருப்பதைப் போல உள்ளது.* **(1.117)**

**ஆதலால் வருத்தம் குற்றம் உபாதியோடு ஐயம் இன்றி**
**மீதுறு மோகம் இன்றி விளங்கிய நிலைமை ஏது**
**காதல்செய் இன்பம் மிக்க விடயமாம் கனலில் வீழ்ந்தும்**
**தீதுறா நிலைமை யேது தீயினுள் இரதம் போலே.**

**பொழிப்புரை:** *ஆதலால் வருத்தம், விட்சேபம், உபாதியாகிய மனம் இவை சந்தேகம் இன்றி மேலோங்கி வருகின்ற மயக்கம் இல்லாமல் ஆனந்தமாய் இருக்கப்பட்ட நிலைமை எதுவாகும்? விரும்புகின்ற இன்பம் அதிகரிக்கும் விஷயமாகிய பெரும் நெருப்பில் வீழ்ந்தும் கெடுதல் இல்லாத நிலைமை எது? அக்கினியில் விழுந்த பாதரசமானது துன்பப் படாமல் ஓடிப்போவது போலவாம்.* **(1.118)**

**வசனமாம் தொழிலே அன்றி வருபவம் தான்வேறு இல்லை**
**அசைதரு புனலை அன்றி அளக்கர்வேறு இலாத தேபோல்**
**நசையுறு பெரியோர் எங்ஙன் நவையுறு துயரம் தீர்ந்தார்**
**இசையநீ உணர்ந்தது அந்த நிலையினை எனக்குச் சொல்வாய்.**

**பொழிப்புரை:** *பலவாகச் சொல்லப்படுகின்ற விவகாரங்களை விடுத்து, வருகின்ற சம்சாரமானது வேறாக இல்லை. அசைகின்ற தண்ணீரை விடுத்து சமுத்திரம் வேறாக இல்லாதது போல. யாவரும் விரும்புகின்ற பெரியோர்கள் எவ்வாறு குற்றம் பொருந்திய துயரத்தை அகற்றினார்கள்? என் உள்ளம் உணருமாறு தேவரீர் அந்த நிலையை எனக்கு அருளிச் செய்ய வேண்டும்.* **(1.119)**

**இந்நிலை இலதா வேனும் உளது இயம் பார்ஆ வேனும்**
**அந்நிலை ஐயம் இன்றி அகங்கரம் இன்றி யானே**
**துன்னுற மாட்டேன் செய்வது ஏதெனில் சோறும் வேண்டேன்**
**நல்நய நீரும் வேண்டேன் நலம்பெறு துகிலும் வேண்டேன்.**

**பொழிப்புரை:** *இத்தகைய யுக்தியானது இல்லை என்றாலும், இருந்து உபதேசிக்கமாட்டீர் என்றாலும், அந்த நிலையை சந்தேகம் இன்றி அகங்காரம் இன்றி யானே அடைய மாட்டேன். அடையாவிடில் என்ன செய்வாய் எனில், உணவு உண்ணமாட்டேன். குளிர்ந்த நீரினையும் பருக மாட்டேன். அழகான துணிமணிகளை உடுக்க மாட்டேன்.* **(1.120)**

**முழுகுதல் தானம் ஆதி நியமங்கள் முழுதும் செய்யேன்**
**விழுமிய கருமம் சம்பத்(து) ஆபத்தில் மேவேன் யாக்கை**
**நழுவுவ(து) அன்றி ஒன்றும் நயக்கிலன் மௌனி யாகி**
**எழுதும்ஓ வியம்போல் காமம் கோபம்பற்(று) இன்றி நிற்பேன்.**

**பொழிப்புரை:** *குளித்தல், தானம் செய்தல் முதலிய முறையாகச் செய்ய வேண்டியதை முழுமையாகச் செய்ய மாட்டேன். பெரும் காரியங்களிலும், சம்பத்துகளிலும், ஆபத்திலும் பொருந்த மாட்டேன். தேகத்தை விட்டொழிப்பது தவிர வேறு ஒன்றையும் விரும்பமாட்டேன். மௌனம் உடையவனாய் வரையப்பட்ட ஓவியம் போல் காமம் கோபம் பற்று இன்றி நிற்பேன்.* **(1.121)**

**எனஉரைத்(து) அமல சீத மதிஎன இனியோன் இன்சொல்**
**வினவுநல் விவேகம் தன்னால் விரிந்(து)அலர் மனத்(து)இ ராமன்**
**மனமகிழ் முனிவர் முன்னர் வாய்மொழி அமைந்து நின்றான்**
**கனமுகில் முன்னர்க் கேகா ரவந்தவிர் கலாபி போன்றே.**

**பொழிப்புரை:** *(வான்மீகி கூறல்)* என்று இவ்வாறு உரைத்து, *நிர்மல குளிர்ச்சியான சந்திரனைப் போல இனிமையான சொல்லால் உயர்ந்த விசாரத்தோடு கூடிய விவேகத்தால் விரிந்து மலர்ந்த மலரைப் போன்ற மனம் உடைய இராம பிரான் மேகங்களுக்கு முன்னால் சப்தம் நீங்கிய மயில் போல மனதில் மகிழ்ச்சியோடு விளங்கும் முனிவர் முன்பாக மேற்கொண்டு ஒன்றும் பேசாமல் இருந்தார்.* **(1.122)**

**(வைராக்கியப் பிரகரணம் முற்றும்)**

# 1. வைராக்கியப் பிரகரணம்

## (i) சுகர் கதை

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

மைம்மல மாமோ கத்தை மாய்த்திடும் புதுமைத் தான
செம்மல்வா சகங்கள் கேட்டுத் திருந்(து)அவை இருந்தோர் எல்லாம்
இம்மொழி கேட்ப போல எழப்புள(கு) உவகை மிக்கார்
விம்மல்சேர் சித்தர் சேனை விண்மிசை களித்த அன்றே.

**பொழிப்புரை:** *அஞ்ஞானமாகிய மலத்தினால் உண்டாகும் சோகங்களைத் தருகின்ற பெரிதான மோகத்தை நாசம் செய்யும் அற்புதமான இராமபிரானின் வாசகங்களைக் கேட்டு, மதி தெளிந்து சபையில் இருந்தவர் எல்லாம் இந்த மொழி கேட்க வருவன போல மயிர்கூச்சம் எய்தி மிகுந்த மகிழ்ச்சியும் அடைந்தனர். திரளாகக் கூடிய சித்தர் கூட்டம் ஆகாயத்தில் களிப்பு அடைந்தன.* **(1.1.1)**

நன்றுநன்(று) என்னும் சொல்லும் நன்மலர் மழையும் கூடி
ஒன்றிஓர் கடிகை பாதி இழிந்தபின் ஊழி காலம்
வன்துயர் உழன்று சிந்தை மயங்கிய யாங்கள் எல்லாம்
இன்(று)இரா கவன்சொல் என்னும் இன்னமு(து) அமையப் பெற்றோம்.

**பொழிப்புரை:** *நல்லது நல்லது என்னும் கோஷமும், உற்சாகப்படுத்தும் விதமாகத் தேவர்கள் சொரிந்த வாசனை மலர்மாரியும் அரை நாழிகை (கால் முகூர்த்தம்) பெய்தன. பின்பு கற்ப காலம் வரையில் கொடிய துயர்களில் உழன்று சிந்தை மயக்கம் அடைந்த சித்தர்களாகிய நாங்கள் அனைவரும் இன்று இராம பிரான் மொழிந்த சொல் என்னும் இனிய அமுதினால் செவிகள் நிரம்பப் பெற்றோம்.* **(1.1.2)**

திருந்திய இவன்சொ லாலே தெளிவுறு சிந்தை பெற்றோம்
பெருந்தகை முனிவர் சொல்லும் பொருளினைப் பெறுதும் என்னாப்
பொருந்திய விண்ணில் நின்று பூதலத்(து) இழித லோடும்
இருந்தபே ரவையோர் எல்லாம் எழுந்(து)எதிர் கொள்வ(து) ஆனார்.

**பொழிப்புரை:** *விசாரத்தின் கோணத்தோடு இராம பிரான் கூறிய வார்த்தைகளால் தெளிவான சிந்தையை அடைந்தோம். இனி பெருந்தகை முனிவர் சொல்லப்போகும் உபதேசத்தையும் கேட்போம் என்று ஆகாயத்தில் இருந்து பூமிக்கு வந்து தசரதர் சபைக்கு வரவும், அந்தச் சபையில் இருந்தவர் எல்லோரும் எழுந்து அவர்களை எதிர்கொண்டனர்.* **(1.1.3)**

வந்துறு சித்தர்க்(கு) எல்லாம் வசிட்டனும் காதி சேயும்
முந்துபூ சனைகள் செய்தார் முனிவருக்(கு)அவரும் செய்தார்
அந்தநல் அவையின் வேந்தும் அருச்சனை அவருக்குச் செய்தார்
நந்துமன் னவர்க்கும் அன்னார் நன்சொலால் பூசை செய்தார்.

**பொழிப்புரை:** *வந்த சித்தர்களுக்கு எல்லாம் வசிட்ட முனியும் விசுவாமித்திர முனியும் பூசைகள் செய்தனர். அந்த சித்தர்களும் இரு முனிவர்களுக்கு பூசை செய்தனர். சிறந்த அந்த சபையின் வேந்தன் தசரதன் சித்தர்களுக்குப் பூசை செய்து வணங்கினான். மன்னவனுக்கு அவர்கள் இனிய சொற்களால் வாழ்த்தி ஆசீர்வாதம் செய்தனர்.* **(1.1.4)**

தொழுதுமுன் இருந்த செங்கண் தோன்றற்கும் உபசா ரங்கள்
பழு(து)இல்பூ மழையால் நல்ல மொழிகளால் பரிந்து செய்து
விழுமிய குணத்தால் மிக்கோன் விரத்தியாய் விளம்பும் சொற்கள்
முழுதுநல் உதாரம் ஆகி முடிவில்அற் புதமாம் என்றார்.

**பொழிப்புரை:** *அனைவரையும் தொழுது முன்னால் நின்றிருந்த தாமரை இதழ் போன்ற கண்களை உடைய இராம பிரானுக்கும் குறையிலாத பூக்களை மழை போல் சொரிந்து இனிய மொழிகளால் மரியாதை செய்து, சிறந்த குணங்களால் மேன்மை அடைந்திருக்கும் இராம பிரான் வைராக்கியம் நிரம்பக் கூறிய வார்த்தைகள் ஆழ்ந்த கருத்துடையனவாய் முடிவில் அற்புதமாக இருந்தன என்று (வந்த சித்தர் ரிஷிகள்) கூறினர்.* **(1.1.5)**

ஈசனே படைத்த தாகி எண்ணில்தீ முயற்சி மிக்க
மாசுறு மாயை தன்னில் வருசுகம் அரிது சாலத்
தேசுறு சதுரச் சிந்தை செல்வனுக்(கு) உணரற் பாற்றேல்
பேசுறு நாங்கள் எல்லாம் பேதையர் என்னச் சொன்னார்.

**பொழிப்புரை:** *ஈசனால் படைக்கப்பட்ட எண்ணிலாத கொடிய துர்வடிவமாய் குற்றம் அடைந்த மாயையாகிய சம்சார வாழ்வில் ஆன்ம சுகம் வரப்பெறுவது அரிதாக இருக்கிறது. ஒளிமிகுந்த விவேக சிந்தை உடைய இராம பிரானுக்கு உபதேசிக்காமல் போனால், அனைவராலும் புகழப் பெறும் நாம் எல்லோரும் அறிவிலாதவர் ஆவோம் என்று சொன்னார்கள்.* **(1.1.6)**

ஈ(து)அவர் உரைத்த பின்னர் இராமனை இனிது நோக்கிக்
காதிசேய் உரைப்பான் நீயே களங்க(ம்)இல் புந்தி யாலே
தீதற அனைத்தும் கண்டாய் தெளிவுறப் பிறி(து)ஒன்(று) இல்லை
போதமார் சுகனும் நீயும் புந்தியால் ஒப்பீர் அன்றே.

**பொழிப்புரை:** இவ்வாறு சித்தர் முனிக் கூட்டம் கூறிய பிறகு, விசுவாமித்திர முனிவர் இராம பிரானை இன்முகத்துடன் நோக்கி பின்வருமாறு சொல்கின்றான். களங்கம் இல்லாத புத்தியாலே நீயே விபரீதம் இல்லாமல் அனைத்தும் அறிந்தாய். தெளிவு பெற வேறு ஒன்று தேவை இல்லை. ஞானமயமாகிய சுகனும் நீயும் (மன அமைதி - விசிராந்தி வேண்டுவதால்) புத்தியினால் ஒன்று போலவே இருக்கின்றீர். **(1.1.7)**

இகலற உணர்வுற் றோனும் இளைப்பற நயந்தான் என்று
மகமுனி உரைப்பக் கேட்ட வள்ளலும் உரைப்பான் ஐயா
அகம்அறு உணர்(வு)உண் டாயும் ஆறுதல் முன்னம் இன்றி
சுகமுறப் பின்உண் டானது(து) எங்ஙனம் சுகனுக்(கு) என்றான்.

**பொழிப்புரை:** *விபரீதம் இன்றி அறிய வேண்டியதை அறிந்தவன் ஆயினும் மனஅமைதி இல்லாமல் இருந்து பின்னர் அடைந்தான் என்று விசுவாமித்திர முனி கூறியதைக் கேட்ட வள்ளல் இராம பிரான் "ஐயனே தற்போதம் இழந்த ஞானமானது உற்பத்தியாகியும் மன அமைதி முன்பு இல்லாமல் இருந்து பின்னர் பிரம்மானந்தம் பெறும்வண்ணம் சுகருக்கு உண்டானது எவ்வாறு?" என்று கேட்டார்.* **(1.1.8)**

என்னலும் முனிவன் சொல்வான் எழுபிறப்(பு) அறுக்கும் ஞானம்
துன்னிய சுகனும் நின்போல் தொல்லுல(கு) இயல்பை நாடி
மன்னிய விவேகம் உண்டாய் மாசறும் உணர்வு பெற்றும்
அந்நிலை ஐயம் ஆகி ஆறுதல் அற்றான் அன்றே.

**பொழிப்புரை:** *என இராமபிரான் கேட்டதும் விசுவாமித்திர முனிவன் கூறுவான். தேவர் மனிதர் பறவை முதலான எழுவகைப் பிறப்புகளையும் போக்கக்கூடிய ஞானத்தை விசாரத்தினால் எளிதில் அடைந்த சுகனும் உன்னைப் போல அனாதியாக சொல்லி விளக்க முடியாததான உலகின் அசுத்தம் துக்கம் அனித்தியம் இவற்றை ஆராய்ந்து விவேகம் உண்டாகி குற்றம் இல்லாத ஞானம் வரப்பெற்றும், அந்த நிலையானது சந்தேகத்தினால் மாறுபட்டு மன அமைதியை அடையவில்லை.* **(1.1.9)**

விடலறும் அசைவு விட்டு விடயத்தில் மீண்ட நெஞ்சன்
வடவரை உறையும் தாதை மருங்குற எய்தி இந்த
இடருறு மாயை வந்த(து) எங்ஙனம் இறப்ப(து) எங்ஙன்
தொடர்பில்ஆ ருடைய(து) எம்மட்(டு) என்(று)இது தோன்றிற்(று) என்றான்.

**பொழிப்புரை:** *எளிதில் விடுவதற்கு இயலாத சஞ்சலத்தை விடுத்து விஷயங்களில் இருந்து திரும்பி மனம் உடைய சுகர் வடமலை எனப்படும் மேருமலையில் இருக்கின்ற தன்னுடைய தந்தை வியாச பகவானை அணுகி, இந்தத் துயர் செயும் மாயை எப்படி வந்தது? ஒடுங்குவது எப்படி? எவரைத் தொடர்பாக உடையது? (யாரைச் சார்ந்துள்ளது?) எதுவரையில் இருக்கும்? எந்தக் காலத்தில் தோன்றியது என்று கேட்டான்.* **(1.1.10)**

அன்னவன் கேட்ட எல்லாம் அறிவுற உரைத்த போது
முன்னம்நான் உணர்ந்த வாறே மொழிந்தனை எனஅச் சொல்லால்
நன்னிலை பெறாமை கண்டு நல்லுணர்(வு) எனக்குத் தோன்றா
மன்னவன் சனகன் என்பான் வழுவறும் உணர்வின் மிக்கான்.

**பொழிப்புரை:** *சுகர் கேட்டவற்றுக்கு எல்லாம் ஞானம் உதயமாகும் வண்ணம் கூறிய போது, "ஏற்கெனவே நான் அறிந்ததையே கூறினீர்" என்று சுகர் சொல்ல, தத்துவமான ஞானம் வரப் பெறாதது கண்டு தனக்கு அந்த ஞானம் தோன்றாதா என்பாயாகில் மிதிலையில் சனகன் என்ற மன்னவன் சந்தேக-விபரீதம் இல்லாது உணர்ந்தவன் இருக்கின்றான்.* **(1.1.11)**

ஆயவன் தனையே கேட்(கு)என்(று) அருளொடு தாதை ஏவப்
போயினன் சனகன் வாழும் பொன்மனை வாயில் சேர்ந்தான்
தூயவன் வரவு கேட்டுச் சோதிப்பான் கருதி மன்னன்
ஏயினன் இல்லை நாள்ஏழ் இருந்தனன் விகற்பம் இல்லோன்.

**பொழிப்புரை:** *அத்தகைய அரசனையே கேட்டு அறிந்து கொள்வாய் என்று கருணையோடு தந்தை கூறியதால், மிதிலை நகரை அடைந்து, சனகன் வாழும் அழகான அரண்மனை வாயில் வந்து சுகர் சேர்ந்தான். பரிசுத்த பிரம்மச்சரியத்தை உடைய சுகர் வந்ததை அறிந்த மன்னன் சோதித்துப் பார்க்கக் கருதி, அவனைப் போய் அழைத்து வரவில்லை. ஏழு நாட்கள் சும்மா இருந்துவிட்டான்.* **(1.1.12)**

மற்றுநாள் ஏழும் வேறோர் இடத்துற வைத்துப் பின்னர்
பொற்றிரள் அழகார் அந்தப் புரத்திடை நாள்ஏழ் வைத்துச்
சிற்றிடை மாதர் போகம் சிறந்தஊண் அளிப்பத் துய்த்தான்
குற்றமும் குணமும் நாடான் குளிர்நிறை மதியம் ஒத்தான்.

**பொழிப்புரை:** *பின்பு மற்றொரு ஏழு நாட்கள் வேறொரு மாளிகையில் தங்க வைத்தான். அதன் பின்னர் பொன் முதலியவை நிறைந்துள்ள அழகான அந்தரங்க இடத்தில் ஏழு நாட்கள் தங்க வைத்து, சிறிய இடையை உடைய மங்கையர் உபசரிக்கும் போகத்திலும், அறுசுவை கொண்ட சிறந்த உணவையும் அளித்து அனுபவிக்க வைத்தான். சுகர் தோஷத்தையும் நன்மையையும் நாடவில்லை. குளிர்ந்த பூரண சந்திரனைப் போல இருந்தான்.* **(1.1.13)**

மன்னவன் சனகன் தந்த போகத்தின் மகிழ்ச்சி யாவும்
மன்னவன் முன்னம் செய்த அவமதித் துன்பம் யாவும்
இன்னவன் மனத்தைச் சற்றும் இழுத்தில இளமென் தென்றல்
பொன்அச லத்தின் மிக்க பொருப்பினை இழுக்க வற்றோ.

**பொழிப்புரை:** *மன்னவன் சனகன் அளித்த போகத்தில் மகிழ்ச்சியும், அந்த மன்னவன் முன்பு அவமதித்த செய்கையால் வந்த துன்பம் யாவும் சுகரிஷி மனதைச் சற்றும் அசைக்க வில்லை. அற்பமான மென்மையான தென்றல் காற்றானது, மேரு மலையைக் காட்டிலும் வலுவோடு ஊன்றியிருக்கும் மலையினை அசைக்க முடியும் ஆற்றல் உள்ளதோ?* **(1.1.14)**

ஆங்(கு)அவன் நிலைமை நோக்கி அடிபணிந்(து) அரசன் போற்றி
தாங்(கு)உல கத்தின் செய்கை தவிர்ந்துபேற்(று) அனைத்தும் பெற்றாய்
ஈங்குறு பொருள்ஏ தென்ன எங்ஙனம் மாயை தோன்றிற்(று)
ஓங்கிய(து) எங்ஙன் போவ(து) உள்ளவா(று) உரைசெய் என்றான்.

**பொழிப்புரை:** *அங்கே சுகரிஷி இருந்த நிலையை நோக்கிய சனக மன்னன், அவனுடைய அடி பணிந்து பிரியமாகப் பேசி, ஒன்றுக்கு ஒன்று உதவி செய்வதாக அமைந்த உலகத்தின் காரியங்களைத் தவிர்த்து எல்லாவித பிரயோசனங்களையும் பெற்றாய். இங்கு வந்த*

*காரியம் என்ன என்று கேட்க, அதற்கு சுகரிஷி மாயை எவ்வாறு தோன்றியது? எவ்வாறு விரிந்து பரவியது? அது போவது எவ்வாறு? என்பதை உள்ளபடி அருள்செய் என்றான்.*
**(1.1.15)**

**மெய்ம்முறை முனிவன் கேட்ப வேந்தனும் வியாசன் சொன்ன**
**அம்முறை உரைத்த லோடும் அறிஞனும் விவேகத் தால்முன்**
**இம்முறை அறிந்தேன் நீயும் எந்தையும் அதுவே சொன்னீர்**
**மொய்ம்முறை நூல்கள் எல்லாம் மொழிபொருள் ஒன்றே என்றார்.**

**பொழிப்புரை:** *உண்மையான மார்க்கத்தைக் கேட்க வேண்டிய நெறியையே முனிவன் கேட்க, சனக மன்னனும் வியாசர் சொன்ன அந்தப் பிரகாரமே உரைத்ததும், விவேகியான சுகரும் முன்பே விவேக விசாரத்தாலே கூறிய முறைகளை அறிந்தேன். தாங்களும் எனது தந்தையும் அதனையே கூறினீர்கள். வேதங்களும் அதனைச் சார்ந்த உப நிடதம் சாத்திரங்களும் சொல்லியுள்ள பொருள் ஒன்றே தான் என்றார்.*
**(1.1.16)**

**தன்னுள்விகற் பித்(து)எழுந்த விகற்பம் போகில்**
**தவிர்ந்திடும்மா யையில்பயன்ஓர் சற்றும் இல்லை**
**இன்னவகைத்(து) ஓர்உண்மை இயம்ப வேண்டும்**
**யாவர்மயக் கழும்மாற்றும் இறைவ என்ன**
**மன்ன(ன்)அதற்(கு) உரைசெய்வான் முனிவ நீயே**
**மதித்(து)உணர்ந்தும் பிதாஉரைக்க மறுத்தும் கேட்டாய்**
**அந்நிலையே நிச்சயம்இங்(கு) அகண்ட ஞான**
**ஆகாய புருட(ன்)உளன் அயல்ஒன்(று) இல்லை.**

**பொழிப்புரை:** *துன்ப மயமான சம்சாரம் தனக்குள் எழுகின்ற மனோராச்சியம் முதலான விகற்பத்தால் வந்ததாம். இந்த விகற்பம் போனால் மாயை போய்விடும். அப்போது இந்த சம்சாரத்தில் பிரயோசனம் ஒன்றும் இல்லை, இது சாரம் அற்றதாம். இந்தப் பிரகாசம் முன்னரே சுயமான விசாரத்தால் அறிந்துள்ளேன். இந்த சந்தேகம் கொண்ட விஷயத்தில் சத்தியத்தை சஞ்சலம் நீங்கும்படி இது தான் முடிந்த முடிவு என்று அருள வேண்டும். லௌகீக வைதீக சம்பந்தம் உடைய அனைவரின் மயக்கங்களையும் தீர்த்து வைக்கின்ற அரசரே! உம்மால் யான் இளைப்பாற வேண்டும் என்று சுகர் கூற, மன்னன் அதற்கு விடை கூறுவதாவது-முனிவரே! நீரே நிச்சயித்துத் தெரிந்து கொண்டும், உமது தந்தை உபதேசிக்க மீண்டும் கேள்விகளைக் கேட்டீர். நீர் உணர்ந்ததைக் காட்டிலும் மேலான ஒன்று நிச்சயம் செய்யத் தக்கதாக இல்லை. அந்த நிலையே நிச்சயமானது. அகண்ட ஞான சிதாகாச புருடனே இருக்கின்றான். அவனைத் தவிர வேறு ஒன்றில்லை.*
**(1.1.17)**

**அவ்வறிவு சங்கற்பத் தால்கட்(டு) உண்ணும்**
**அதுவிடில்வீ(டு) உறும்அந்த அறிவு தன்னைச்**
**செவ்விதில்நீ அறிந்தனையால் போகத்(து) இச்சை**
**செகக்காட்சி அனைத்தினையும் தீர்தி ஆனாய்**

எவ்வ(ம்)அற நிறைமனத்தால் அடையற் பால
யாவும்அடைந் தாய்காட்சிக்(கு) எட்டா(து) ஒன்றில்
கவ்வையற அடைகின்றாய் முத்தன் ஆனாய்
கருத்தி(ல்)உறும் மயக்கமெனும் கவலை தீர்வாய்.

**பொழிப்புரை:** *அந்த சிற்சொரூபமானது நான் எனது என்னும் சங்கற்ப வசத்தால் பந்தப்படும். அந்த சங்கற்பம் ஒழிந்தால் மோட்சம் உண்டாகும். அறியத்தக்க அந்தப் பரம்பொருளை நீர் தெளிவாக உணர்ந்துள்ளீர். போகங்களில் இருந்தும் விருப்பமும், உலகில் காண்பவற்றில் இருந்து நாட்டமும் தீர்ந்துள்ளீர். சலனம் நீங்கிப் பரிபூரணமான மனத்தினால் அடைய வேண்டியதை அடைந்துள்ளீர். பிரத்தியட்சம் முதலான பிரமாணங்களுக்கு எட்டாத வஸ்துவைக் கவலையற அடைந்திருக்கின்றீர். மோட்ச வடிவமாகவே விளங்குகின்றீர். அதனால் சிந்தையில் கொண்ட மயக்கமாகிய கவலையை விடுவீர்.* **(1.1.18)**

சனக(ன்)எனும் மன்னவர்கோன் இவ்வா(று) ஓதத்
தன்னிலையாம் பரம்பொருளில் தளர்ச்சி ஆறி
அனகசுகன் பயம்நீங்கிச் சோகம் மாறி
அயர்(வு)அகன்று செயல்அடங்கி ஐயம் தீர்ந்து
கனகவரை ஏறிநிரு விகற்ப மான
கலங்காத சமாதியில்சிற் ககனத்(து) உற்றான்
தினகரனைச் செறிவருடம் ஈரைஞ் ஞூற்றில்
திரியொடுநெய் மாண்(டு)அவிந்த தீபம் போன்றே.

**பொழிப்புரை:** *சனகன் என்னும் மன்னவன் இவ்வாறு உபதேசித்த (ஞான அடைவினால் தடை எனப்பட்டதன் அதிஷ்டானத் தன்மையைக் கண்டு) பின்னர், தனது வடிவமான பரம வஸ்துவில் அமைதி அடைந்து, அகங்காரம் இன்றி சுகன் பயம் நீங்கிச் சோகம் மாறி, அயர்வும் அகன்று செயலற்று சந்தேகம் எல்லாம் தீர்ந்து மேருமலைக்குச் சென்று எந்தவொரு விகற்பமும் இல்லாத சமாதியில் அழுந்தி, சூரியனைச் சார்ந்து கணக்கிடும் வருடம் ஆயிரம் ஆண்டு காலம் கழிந்து, திரியும் நெய்யும் தீர்ந்து போனதால் அணைந்த தீபம் போல் சிதாகாசமாக எஞ்சினார்.* **(1.1.19)**

சிந்தனையாம் களங்க(ம்)அறச் சுத்தன் ஆகித்
திரைகடலில் செறிந்(து)ஒன்றாம் திவலை போல
வந்துறுவா தனைபோய்தற் பதத்தொன் றானான்
மாயாமோ கம்தீர்ந்து வருத்தம் தீர்ந்தான்
அந்தநெறி உனக்குமாம் அறிவ(து) எல்லாம்
அறிந்தமனத் திற்(கு)உரிய அடை(வு)ஏ(து) என்னில்
சந்ததமும் மகிழ்ச்சிசெறி போகம் எல்லாம்
தன(து)என்னும் சுதந்தரத்தைத் தவிர்ந்து நிற்றல்.

**பொழிப்புரை:** *எண்ணங்களாகிய களங்கம் (தூல அஞ்ஞானம்) அற்றுப் போக, (மூல அஞ்ஞானம் நீங்கி) சுத்தன் ஆகி, அலைகடல் நீரில் தோன்றிய நீர்க்குமிழியானது அந்தக்*

*கடல் நீரில் ஐக்கியமாவது போல, வந்து சேர்ந்த வாசனைகள் போய், தத் பதமான பரமான்மாவில் ஐக்கியம் ஆனான். மாயையினால் வந்த மோகம் தீர்ந்து துக்கமும் தீர்ந்தான். அந்த வழியே உனக்குமாம், அதிகம் வேண்டுவதில்லை. அறிய வேண்டியதை அறிந்த மனதிற்கான இலக்கணம் என்னவெனில், எப்பொழுதும் சந்தோஷத்தைத் தருகின்ற போகங்கள் எல்லாம் தன்னுடையது என்பதான சுதந்தரத்தைத் தியாகம் செய்து இருத்தல் ஆகும்.* **(1.1.20)**

**போகமுறு பாவனையால் பொருள்அல் லாத**
**பொருளில்(ல்)எழு பந்தநிலை பொருந்த வன்(பு)ஆம்**
**சோகமுறு பாவனைதான் சாந்தம் ஆகில்**
**துயர்பந்தம் மிகத்தேய்ந்து தொலைந்து போகும்**
**ராகவனே வாதனையில் நேர்மை வீடாம்**
**இகப்பொருளில் வாதனையின் இறுகல் பந்தம்**
**சேகறவென் றவர்க்(கு)ஏது இன்றிப் போகத்**
**திரள்வெறுப்பாம் மேலவரே சீவன் முத்தர்.**

**பொழிப்புரை:** *போகத்தின் பாவனையினால் அனாத்ம பொருள்களில் உண்டாகின்ற பந்தமானது திடமானது ஆகும். துயரத்தைத் தரும் இந்தப் பாவனைகள் நீங்கி சாந்தம் உதயமானால், இந்தத் துயரமாகிய பந்தம் அடியோடு தேய்ந்து தொலைந்து போகும். இராகவனே! வாசனை சிறுகலே மோட்சமாம். காணப்படும் பொருளில் வாசனையின் திடத்தன்மையே பந்தம் ஆகும். புகழ் முதலிய காரணங்களை முன்வைத்து வராமல், அடியோடு நீங்கும்படி வென்றவர்க்குப் போகக் கூட்டங்களின் மேல் இயல்பாகவே வெறுப்புத் தோன்றும் அந்த உயர்ந்தவரே சீவன் முத்தர் எனப்படுவர். (வாழும் காலத்திலேயே முத்தர்)* **(1.1.21)**

**ராமன்மனத்(து) உணர்பொருளே பொருள்வேற்று) இல்லை**
**எனஉயர்ந்தோர் வாக்கினால் இயம்பக் கேட்டு**
**மாமனத்தின் இளைப்பாறி ஐயம் நீங்கும்**
**மகத்தான இவனுக்கு மதித்துச் சொல்வான்**
**ஏமமுறு காலமூன்(று) அறிந்தோன் ஆகி**
**இரவிகுல குருவாகி எல்லாம் நோக்கி**
**நாமஉரு அனைத்துக்கும் சான்றாய் நின்ற**
**நல்வசிட்டன் எனச்சபையில் நவின்ற பின்னர்.**

**பொழிப்புரை:** *இராகவன் மனத்தில் உணர்ந்த பொருளே பொருளாகும் வேறு ஒன்றில்லை என்பதை உயர்ந்தவர் வாக்கினால் கேட்டு, மனதில் அமைதி அடைந்து சந்தேகம் நீங்கிச் சுகவடிவம் ஆவன். மகத்தான தகுதிவாய்ந்த அதிகாரியான இவனுடைய புத்தியை அனுசரித்து உபதேசிக்கக் கூடியவர் யார் எனில், முக்காலங்களையும் அறிபவர் ஆகி, சூரிய குல அரசர்களுக்கு எல்லாம் குல குருவாகி, அனைத்து சாத்திரங்களையும் கற்றுணர்ந்தவராகி பெயர் வடிவம் (நாம ரூபம்) அனைத்துக்கும் சாட்சியாய் இருக்கின்ற வசிட்ட முனிவரே என்று (விசுவாமித்திர முனி) அந்த சபையில் கூறிய பின்னர்.* **(1.1.22)**

நல்வசிட்டன் முகநோக்கி உணர்தி யோமுன்
நாம்இருவர் பகைநீங்க நல்லோர் எல்லாம்
தொல்வினைபோய் முத்திபெறக் கமல வேதா
சொன்னதனி ஞானத்தின் தொகுதி எல்லாம்
கல்விமிகு இராமனுக்குச் செப்பல் வேண்டும்
காதல்தீர் மாணாக்கன் கருத்தில் சொல்லும்
செல்வஉப தேச(ம்)ஏ(து) அதுவே ஞானச்
செழுநூலின் பொருளு(ம்)இது சிறப்பும் ஈதே.

**பொழிப்புரை:** *சத்துவ சீலரான வசிட்ட முனிவரின் திருமுகத்தைப் பார்த்து, நினைவிருக்கின்றதா? முன்னர் நம் இருவரின் பகை நீங்கும் பொருட்டும், உத்தமர்கள் எல்லாம் அனாதியான அஞ்ஞானம் நீங்கி முத்தி பெறும் பொருட்டும், தாமரையில் வீற்றிருக்கும் பிரம்ம தேவன் உபதேசித்து அருளிய பிரம்ம வித்தையின் சாரத்தின் அர்த்தங்களையும் கல்வி கேள்விகளிலும் பணிவிலும் மிக்க இராமனுக்கு உபதேசிக்க வேண்டும். சகல ஆசைகளையும் விடுத்த மாணாக்கன் சிந்தையில் ஞானம் உதிக்கும்படி சொல்லும் உபதேசம் எதுவோ அதுவே ஞானம். ஞானத்தைக் குறித்துப் பேசுகின்ற எல்லா வேதாந்த சாத்திரங்களின் அர்த்தமும் இதுவே, சிறப்பு வாய்ந்ததும் இதுவே.*
**(1.1.23)**

காதல்செறி பொல்லாமா ணாக்க னுக்குக்
கற்பித்த உபதேசம் கருநாய்த் தோல்உள்
மேதகுபால் எனஅசுத்தம் மேவும் என்று
மிகுகாதி சேய்பலவும் விளம்பக் கேட்டுத்
தீதறுநா ரதன்வேத வியாதன் ஆதித்
திரள்முனிவர் நன்(று)இதெனச் சிறப்பு செய்தார்
காதிபுதல் வனைநோக்கிக் கமலத் தோன்நேர்
கமலமுனி புதல்வ(ன்)இவை கழறல் உற்றான்.

**பொழிப்புரை:** *ஆசைகள் நிறைந்த துட்ட மாணாக்கனுக்கு கூறி அருளும் உபதேசமானது கறுத்துக் கழிபட்ட நாய்த் தோலால் ஆன துருத்திப் பையினுள் ஊற்றப்பட்ட பசுவின் பாலானது அசுத்தம் அடையும் என்று விசுவாமித்திரர் பலவாக எடுத்து உரைத்ததைக் கேட்டு, அந்த சபையில் வீற்றிருந்த நாரதன், வேத வியாசர் உள்ளிட்ட முனிவர்கள் எல்லாம் நல்லது நல்லது என்று விசேடமாக ஆமோதித்தனர். விசுவாமித்திர முனியை நோக்கி, பிரம்ம தேவ னுக்கு நிகரான பிரம்ம தேவனின் புதல்வர் வசிட்டர் பின்வருமாறு கூறலானார்.*
**(1.1.24)**

கலைமுனியே நீர்மொழிந்த படியே செய்வேன்
கற்றுணர்ந்த பெரியோர்சொல் கடப்பார் யாரே
நிலையில்பவ மயக்க(ம்)அறப் பதும வேதா
நிடதமலை மேல்உரைத்த நிமல ஞானம்

அலை(வு)இல்மனத்(து) இருக்கின்ற(து) உரைப்பேன் என்ன
அஞ்ஞானத் தொகுதிகெட அகண்ட ஞானத்
தொலை(வு)இல்பர பதம்எவர்க்கும் தோன்று மாறு
சுத்தவிந யத்துடனே சொல்வ தானான்.

**பொழிப்புரை:** *அனைத்து சாத்திரங்களையும் அறிந்த மகரிஷியே! நீர் சொன்னபடியே செய்வேன்.* கற்றுணர்ந்த பெரியோர்களின் வாக்கினைக் கடக்க முடிபவர் யார் உளர்? நிலையில்லாத சம்சாரமாகிய பிறவித் தொடர் அற்றுப் போக, தாமரை மலரில் வீற்றிருக்கும் எனது தந்தை பிரம்ம தேவன் நிடதமலை மேல் இருந்து உபதேசித்து அருளிய நிர்மலமான ஞான அர்த்தங்கள் எல்லாம் நிச்சலமான மனத்தில் அப்படியே இருக்கின்றது. அதனை இராமனுக்கு உபதேசிப்பேன் என்று அஞ்ஞானக் கூட்டம் எல்லாம் அழிந்து ஓட, அகண்ட ஞான அழிவில்லாத மோட்ச பதம் அனைவருக்கும் கிட்டுமாறு மிகவும் அடக்கத்துடன் கூறத் தொடங்கினார். **(1.1.25)**

**(வைராக்கியப் பிரகரணத்தில் சுகர் கதை முற்றும்)**

# 2. முமுட்சுப் பிரகரணம்

முந்தைய பிரகரணங்களில் நித்திய அனித்திய வஸ்து விவேகத்திலிருந்து வைராக்கியம் சமாதி நிலைக்கும், முமுட்சு அடையும் பலனுக்கும் முக்கியத் தன்மை வாய்ந்ததாகச் சொல்லப்பட்டது. இதில் முமுட்சு விவகாரம், சமாதி இவ்வாறு செய்யத் தகுந்தவை என்பதைக் குறிப்பிடுவதாய், மனன நிதித்தியாசனங்களை உடையதாய், சிரவண வடிவமாக உபதேசிக்கப்படுகிறது.

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

ராகவகேள் இப்பவத்தில் என்றும் எல்லாம்
இயல்புறுநன் முயற்சியினால் யாவர்க்கும் எய்தும்
மாகலைநல் நூல்முயற்சி ஒன்றாம் ஒன்று
வருநூல்இ லாமுயற்சி மற்(று)இ வற்றின்
சோக(ம்)இல்நூல் வழிவீடாம் நூல்இ லாமை
துன்பமாம் சைசவத்தில் தொடரும் இந்நூல்
மோக(ம்)இல்நல் லோர்கூட்டம் குணங்க ளாலே
முயற்சியுறு பெரியோர்க்கு முத்திப் பேறாம்.

**பொழிப்புரை:** *இராகவனே! மன ஒருமையுடன் கேட்பாய். இந்த சம்சார வாழ்வில் எப்பொழுதும் அனைத்தும் இயல்பாக இடைவிடாது முயற்சி செய்கின்ற எல்லார்க்கும் கிடைக்கும். (இது இருவகைப்படும்) முதலாவது மேன்மை பொருந்திய உபநிடத வேதாந்த சாத்திர வழியிலான முயற்சி. மற்றொன்று சாத்திர வழியல்லாத முயற்சி. இவற்றில் துயரத்தை அகற்றும் சாத்திர வழி மோட்சத்திற்குப் பயன்ஆகும். சாத்திர வழி அல்லாத முயற்சியானது துன்பம் தரும் பந்தத்திற்குக் காரணமாகும். இளவயது முதற்கொண்டு பயின்று வந்த இந்த சாத்திரம், மோகம் அற்ற நல்ல சாது சத்சங்கம், கருணை, புண்ணிய புருடர்களுடன் பழக விருப்பம் முதலிய நற்குணங்கள் இவற்றாலே முயற்சி செய்யும் பெரியோர்களுக்கு முத்தியாகிய பயன் அடையத் தக்கதாம்.* **(2.1)**

முற்பிறப்பின் வாதனையின் வயத்தின் நின்றேன்
முயற்சியிலேன் என்செய்கேன் முனிவ என்ன
அற்புதனே தன்வருத்த முயற்சி யாலே
அடையலாம் பரமபதம் அயல்வே(று) இன்று
சொற்பயில்வா தனைத்திரளின் பேதம் சொல்லின்
சுப(ம்)அசுபம் எனஇரண்டாம் சொன்ன வற்றில்
வற்புறுமுற் பவம்தோறும் தொடர்ந்து வந்த
வாதனைஏ(து) அதுஒன்றே மருவி நிற்கும்.

**பொழிப்புரை:** *முன் பிறப்பின் வாசனையின் வசத்தில் நின்று அதன்படி செய்கின்றேன். சாத்திர முயற்சி இல்லாதவனாய் இருக்கின்றேன். என்செய்வேன்? முனிவரே! என்று கேட்டால், அற்புத குணங்கள் வாய்ந்த இராகவனே! தான் கஷ்டப்பட்டுச் செய்யும் அதிதீவிர முயற்சியாலே உயர்ந்த நிலையை அடையலாம், மாறாக வேறு வழி ஒன்றும் இல்லை. மேற் சொல்லிய வாசனைகளின் பேதத்தைச் சொன்னால், சுப வாசனை, அசுப வாசனை என்று இரண்டு வகைப்படும். அவற்றில் வலிமை மிக்கதாய் முன் பிறவிதோறும் அனுசரித்து வரும் வாசனை எதுவோ அதுஒன்றே தானே அடைந்து வளர்ந்து நிற்கும்.* **(2.2)**

**சுத்தவா தனைதொடரில் அதனால் மெல்லத்**
**தூயபர பதம்பெறுவை சுத்தம் அல்லாப்**
**பெத்தவா தனைதொடரில் துன்பம் ஆக்கும்**
**பெரிதுவருந்த தியும்இதனைப் போக்க வேண்டும்**
**வைத்தசுபம் அசுப(ம்)எனும் வழிஇ ரண்டால்**
**வாதனையாம் நதிபெருகில் வருத்தத் தாலே**
**மெத்தமுயன்(று) அசுபவாத னையைத் தள்ளி**
**மிக்கசுப வாதனையில் மேவி நிற்பாய்.**

**பொழிப்புரை:** *சுப வாசனைகள் தொடர்ந்து வருமானால் மெள்ள மெள்ள இறுதி நிலையான மோட்ச பதத்தை அடைவாய். சுத்தம் இல்லாத பந்தத்தைத் தரும் அசுப வாசனை தொடர்ந்து வருமானால் துன்பத்தில் தள்ளிவிடும். எப்பாடு பட்டேனும் இந்த அசுப வாசனையை ஒழித்தே ஆகவேண்டும். பழக்கத்தினால் வருகின்ற சுப வாசனை, அசுப வாசனை ஆகிய இரண்டினால் வாசனைகளாகிய நதி பெருக்கெடுத்து ஓடினால், மிகவும் கஷ்டப்பட்டு அசுப வாசனை தொடராமல் தள்ளிவிட்டு, மிகுதியாகச் சுப வாசனையுடன் வாழ்வாய்.* **(2.3)**

**மிகமுயன்று வருந்தாமல் சமம்ஆ கின்ற**
**வேண்டுகோளால் தன்முயல்வால் விநோதம் தன்னால்**
**பகர்மனமாம் சிறுமகவை நிறுத்தல் வேண்டும்**
**பலபிறப்பில் பரிசயங்கள் அகலப் பண்ணி**
**அகல்சுபவா தனைஉதித்தால் முயற்சிப் பேறாம்**
**ஐயுறினும் சுபமுயல்வை அதுதீ(து) அல்ல**
**திகழ்மனம்போய்த் தற்பதத்தைத் தெளியு மட்டும்**
**தேசிகன்நூல் சொல்வழியில் செல்லு வாயே.**

**பொழிப்புரை:** *மிகவும் முயன்றும் முடியாவிட்டால் வருந்தாமல் சம பாவனையைப் பயிற்சி செய்வதாலும், இடைவிடாது முயற்சி செய்வதாலும், நல்வழியில் திருப்ப உதவும் சாத்திரம் கதைகள் மூலமாகவும் மனம் என்னும் சிறு பாலகனை நிறுத்தல் வேண்டும். பல பிறவிகளில் உண்டான பதிவுகளால் வரும் பழக்கங்களை மெள்ள மெள்ள அவசரப்படாமல் விலகும்படி செய்து, விரிவான (அதிகஅளவில்) சுப வாசனை சேருமாயின் அதுவே முயற்சிக்கு கிடைத்த பெரும் பயனாம். சந்தேகம் உண்டானாலும்*

*சுப வாசனையானது தீது ஆகாது. அந்த மனம் தூயதாக ஆக ஆக அசுப வாசனை குறைய தத் பதமாகிய அந்த பரப்பிரம்மத்தைத் தெளிவாக உணரும் வரை, குரு மற்றும் சாத்திர வழிகளில் முயற்சி செய்வாயாக.* **(2.4)**

தூயதா இகத்(து)இனிதாய்ப் பெரியோர் மேவும்
சுபத்தினால் மனஅழுக்கும் துயரும் அற்ற
நேயமாம் பதமேவி அதுவும் தள்ளி
நிலைநிற்பாய் மீட்;(டு)அணுகா நெறிய தாக
மாயைநினை(வு) ஒழித்துநிறை சாந்தி இன்பம்
வழுவாமல் உதாரமா மதியால் எய்தி
ஆயமொழிப் பொருள்முன்பின் கருது நெஞ்சை
அமர்சமம்செய்(து) ஆன்மாவில் அனுசந் திப்பாய்.

**பொழிப்புரை:** *பரிசுத்தமாய் இங்கு இனியதாகப் பெரியோர்கள் அடையும் சுப வாசனையினால் மனதின் அழுக்கும் துயரும் நீங்கி பரமான்ம வஸ்துவை உணர்ந்து பின்பு அதனையும் தள்ளி சொரூபமாகவே நிற்பாய். மீண்டும் தொடராதவண்ணம் சம்சார பாவனையை ஒழித்து பூரணமான சாந்தம் இன்பம் நழுவாமல் உதார புத்தியால் அடைந்து முன்பு பயின்ற கருத்துகளை விசாரிக்காமல் மனதைச் சமரசம் செய்து அடக்கி உனது சொரூபத்திலேயே நிலை நிற்பாய்.* **(2.5)**

தேங்கமலத்(து) அயன்உரைத்த மொழிகேள் என்னச்
செப்பியபா ரணம்ஏ(து)என்(று) இராமன் கேட்ப
ஓங்குமுனி உரைசெய்வான் முடி(வு)அற்(று) எங்கும்
உளதாகி அனைத்தினுக்கும் உறையுள் ஆகி
வீங்குபொருள் களில்விளக்கம் ஆகி மேவும்
மெய்ஞ்ஞான விண்ணி(ல்)நின்று விண்டு வந்தான்
ஆங்(கு)அவன் மனக்கமலத்(து) அயன்உண் டாகி
அகிலம்மன விகற்பம்போல் அளித்தான் அன்றே.

**பொழிப்புரை:** *தேன்சொரியும் தாமரையில் வீற்றிருக்கும் பிரம்ம தேவன் கூறியதைக் கேள் என்று வசிட்டர் கூற, அவ்வாறு கூறியதன் காரணம் என்ன என்று இராமபிரான் கேட்டார். தவநலம் மிகுந்த வசிட்டர் கூறுவதாவது: முடிவிலாது எங்கும் பரந்து உளதாகி எல்லா பொருள்களுக்கும் சார்விடமாகி, உற்பத்தியாகி வளரும் பொருள்களில் விளங்குவதாகி பொலிகின்ற அறிவானந்த ஆகாயத்திலிருந்து மகாவிஷ்ணு உதித்தார். அவரது மனமாகிய தாமரையிலிருந்து பிரம்ம தேவன் உதித்து மனமானது விகற்பம் அடைவதைப் போல சகல உலகங்களையும் படைத்தார்.* **(2.6)**

உல(கு)அளித்த அயன்தானே நாநா வாக
ஓங்கியப ரதவருடத்(து) உயிர்கள் எல்லாம்
அலகி(ல்)துயர் உறக்கண்டு புதல்வர் நோவுக்(கு)
அழுங்குபிதா எனஅழுங்கி அவர்கள் உய்வான்

**பலகருமம் தவம்தானம் நதிமற்(று) எல்லாம்**
**பவம்தீரா ஞானத்தால் பவம்போம் என்றே**
**கலக(ம்)இலா மனத்(து)அளித்தான் என்னைத் தன்போல்**
**கமண்டலமும் செபவடமும் கையில் காண.**

**பொழிப்புரை:** *உலகங்களைப் படைத்த பிரம்ம தேவரே, பலவிதமாக விரிந்திருக்கும் பரத கண்டத்தில் இருக்கும் உயிர்கள் எல்லாம் அளவில்லாத துயர் அடைவதைக் கண்டு, பிள்ளைகள் நோய்க்கு வருத்தப்படும் தந்தையைப் போல், வருத்தப்பட்டு, அந்த உயிர்கள் எல்லாம் உய்வதற்காகப் பல கர்ம முறைகள், தவம், தானம், தீர்த்தங்கள் இவையெல்லாம் அளித்தும் பிறவித் துன்பம் தீராததால் ஞானத்தால் பிறவித் துன்பம் நீங்கும் என்றே நல்ல உள்ளத்தோடு தன்னைப் போல என்னையும் கமண்டலமும் செபமாலையும் கையில் இருக்குமாறு தோன்றச் செய்தான்.* **(2.7)**

**வந்(து)இறைஞ்சும் என்னைத்தான் மகிழ்ந்து மேவும்**
**வனசத்தின் வடபால்ஓர் மடல்மேல் வைத்(து)என்**
**சிந்தைதனை நாழிகைஓர் இரண்டு மாயை**
**சேர்கவென சபித்தலுமே தியக்கம் உற்ற**
**புந்தியுடன் மெய்யுணர்வை மறந்தேன் கல்லாப்**
**புல்லரைப்போல் புலம்பு(ம்)எனைப் போதன் பார்த்து**
**வெந்துயர்என் எனமாயை விளைந்த வாறும்**
**வீடுறுமா றும்கேட்டேன் விளங்கச் சொன்னான்.**

**பொழிப்புரை:** *தோன்றி அடிபணிந்து வணங்குவதைக் கண்ட என்னை மகிழ்ச்சியுடன் தாம் வீற்றிருக்கும் தாமரையின் வட பக்கத்தில் இருக்கும் ஒரு இதழ்மேல் அமர வைத்து என் சிந்தையில் இரண்டு நாழிகை காலம் (ஒரு முகூர்த்த காலம்) மாயை தனைச் சேர்ந்திடுக என்று எண்ணியதும், மயக்கம் அடைந்த புத்தியுடன் மெய்யுணர்வை மறந்தேன். கல்லாத மூடரைப் போல புலம்புகின்ற என்னைப் பிரம்ம தேவன் பார்த்து கொடிய துயரம் அடைவது ஏன் என்று கேட்ப, மாயை உண்டானது எப்படி? அதிலிருந்து விடுபட்டு வீடு அடைவது எப்படி? என்று கேட்டேன். அவர் விளக்கமாக உபதேசித்தார்.* **(2.8)**

**ஆன்மாவை அறிந்(து)அலை(வு)அற்(று) இருந்த என்னை**
**அயன்பார்த்து நாமேநின் அறிவை மாற்றி**
**ஊன்மாயை பின்(பு)ஒழித்தேம் உயிர்ள லாம்நின்**
**உபதேசம் பெற்(று)உய்ய உபாயம் செய்தோம்**
**மேல்மாயும் வினைநிறைந்த சம்புத் தீவில்**
**மேவியபா ரதவருடம் விரைவில் மேவித்**
**தான்மாளாக் கிரியினர்க்குக் கிரியை சாற்றிச்**
**சாதனம்உள் ளோர்க்(கு)உணர்வைச் சாற்று(க்) என்றான்.**

**பொழிப்புரை:** *அறிய வேண்டிய ஆன்மாவை அறிந்து சொரூபத்தில் சஞ்சலம் இல்லாமல் இருந்த என்னைப் பிரம்ம தேவர் பார்த்து, யாமே நின்னுடைய அறிவை*

*மாற்றி, தேகம் முதலிய மாயையை உணர்வில் உதித்த பின்பு மாயைதனை ஒழித்தோம். சீவர்கள் எல்லாம் உன்னுடைய உபதேசம் பெற்று உய்வதற்கான உபாயத்தைச் செய்தோம். மேன்மேலும் இறந்தும் பிறந்தும் துயரப்படுவதற்கான கர்மங்களைச் செய்பவர்கள் நிறைந்த பரத கண்டத்தில் இருக்கும் சம்புத் தீவிற்கு விரைவாகச் சென்று, தான் மரணம் அடையாமல் இருக்கும் வழி தெரியாது கர்மங்களைச் செய்பவர்களுக்குக் கர்ம காண்ட நெறிமுறைகளை உபதேசித்தும், நான்கு சாதனங்களை உடைய அதிகாரிகளுக்கு பிரம்ம வித்தையை உபதேசிக்குமாறும் அருளிச்செய்தார்.* **(2.9)**

**அவன்உரைப்ப வந்(து)உயிர்கள் உளநாள் எல்லாம்**
**ஆகுவ(ன்)இங்(கு) ஒருசெயலும் ஆசை இல்லை**
**இவண்இருந்து சுழுத்தியுறும் செய்கை யாலே**
**இடர்மனத்தைக் கடந்துசெயல் யாவும் செய்கேன்**
**கவருறும்என் செயல்ஒன்றும் இல்லை வீர**
**கலைநிறைவும் பேதைமையும் கருமத் தாலே**
**விவரமதாய் ஆராய்ந்து மேன்மை யான**
**மெய்க்குருவைக் கொண்(டு)உணர்வோர் மேதை மிக்கோர்.**

**பொழிப்புரை:** *பிரம்ம தேவராகிய தந்தை ஏவியதற்கு ஏற்ப, சீவர்கள் வாழும் நாள் வரையில் இங்கிருந்து அனுக்கிரகம் செய்துகொண்டிருப்பேன். இங்கு ஒரு செயலிலும் ஆசை இல்லை. சுழுத்தியில் அபிமானம் இன்றி இருப்பது போல துயர மனத்தைக் கடந்து செயல்களைச் செய்வேன். கவர்ச்சி (கர்த்தா பாவனை) தரக்கூடிய செயல் ஒன்றும் இல்லை. வீரனே! கலைகளினால் உண்டான நிறைவான உணர்வும், அறியாமையும் அனுஷ்டானத்தால் விவரமாக ஆராய்ந்து மேன்மை மிக்க உண்மையான குருநாதனைக் கண்டு சேவை செய்து அறிவர் அறிவில் மிகுந்தவர்.* **(2.10)**

**ஓதுகின்ற பொருள்முழுதும் முன்பின் கூட்டி**
**உணர்பவர்க்(கு)அல் லதுபசுவை ஒப்போர்க்(கு) எல்லாம்**
**தீ(து)அகன்ற குருஉண்மை செப்பார் அன்றே**
**திகழ்சாந்தி விசாரமொடு செறிசந் தோடம்**
**சாதுசங்கம் எனவீட்டின் வாயில் காக்கும்**
**சதுட்டயரும் உறவாகில் தடைவே(று) உண்டோ**
**மேதினிகா வலர்மனையில் கடைகாப் பாளர்**
**விடுவதுபோல் வீட்டி(ல்)அவர் விடுவர் அன்றே.**

**பொழிப்புரை:** *உபதேசிக்கப்படும் அர்த்தம் முழுவதையும் முன்பு கூறியதோடு கூட்டி உணர்பவர்களைத் தவிர பசுவுக்கு நிகரான புத்தி உடையவர்க்கு குற்றம் இல்லாத குருவானவர் உபதேசம் செய்யமாட்டார் அல்லவா! சாதனமாகத் திகழ்கின்ற சாந்தி, விசாரம், சந்தோடம், சாது சங்கம் (சத் சங்கத் தொடர்பு) ஆகிய மோட்ச வீட்டின் வாயிலைக் காக்கும் நான்கும் கைவரப் பெறில், மோட்ச வீட்டில் நுழைவதற்குத் தடை வேறு உண்டோ? பூமியைக் காக்கும் அரசனது அரண்மனை வாசல் காப்பாளர் அரண்மனை உள்ளே செல்ல அனுமதிப்பது போல, இந்த நான்கும் மோட்ச வீட்டின் உள்ளே கொண்டு போய் விடுவர்.* **(2.11)**

அந்நால்வர் தமில்ஒருவர் அன்பா னாலும்
அனைவரு(ம்)ஒத்(து) அன்பாவர் ஆத லாலே
பல்நாளும் மிகமுயன்று யாது நீத்தும்
பற்றிஒரு வரையேனும் பழக வேண்டும்
மன்னாத பிறப்(பு)அறுக்க நல்லோர் நன்னூல்
மாதவத்தால் அறிவைமுதல் வளர்க்க வேண்டும்
இன்னாத மாயைஎனும் நஞ்சம் போதம்
என்கின்ற காருடமந் திரத்தால் மீளும்.

**பொழிப்புரை:** *(சாந்தி, விசாரம், சந்தோடம், சத்சங்கம் என்ற) அந்த நால்வர்களில் ஒருவர் அன்பாக வசப்பட்டாலும், அனைவரும் ஒருமித்து அன்பாக வசப்படுவர். பல நாட்கள் மிகவும் முயற்சி செய்தும் எதையாவது விட்டுக் கொடுக்க வேண்டியிருப்பின் விட்டுக் கொடுத்தும், ஒருவரையாவது வசப்படுத்தப் பழக வேண்டும். நித்தியம் இல்லாத பிறவியைத் தொலைக்க சத் புருடர், நல்ல சாத்திரம், தவ வலிமை முதலியவற்றால் அறிவை முதலில் வளர்க்க வேண்டும். துன்பத்தைத் தரும் மாயை என்னும் சம்சார வாழ்வாகிய நஞ்சினைப் போதம் (ஞானம்)என்கின்ற கருட மந்திரத்தால் முறிக்க முடியும் (போக்கலாகும்).* **(2.12)**

சரமழைகள் நெய்தல்மலர் மழையை ஒக்கும்
தழல்பள்ளி பனிநீரில் சயனம் ஒக்கும்
சிரம்அரிதல் சுகம்உறுநித் திரையை ஒக்கும்
தேக(ம்)அரி வதுகலவை செறிபூச்(சு) ஒக்கும்
நிரவதிக நாராசம் மருமம் பாய்தல்
நெடுங்கோடை சிவிறியில்நல் நீரை ஒக்கும்
விரவரிய விடய(ம்)எனும் விடவி டூசி
விவேகமிகுத் தவர்க்(கு)அல்லால் விலக்கொ ணாதே.

**பொழிப்புரை:** *சப்தம், பரிசம் முதலான விஷயம் என்னும் விஷ வியாதியைக் குறித்து அம்பு மழை குவளை மலர் சொரிவது போலாகும். நெருப்பில் படுத்தல் குளிர்ந்த பனி நீரில் படுப்பது போலாகும். தலையை வெட்டுவது ஆனந்தமான தூக்கம் போலாகும். தேகத்தை வெட்டுவது சந்தனக் குழம்பைப் பூசிக்கொள்வது போலாகும். அளவற்ற நாராசம் உடலின் மர்ம இடங்களில் பாய்தல் பெரும் கோடை காலத்தில் தாரைக்கிரகம் வீசும் சுத்த தண் ணீரைப் போலதாகும். தீண்டுதற்கு அரிய சப்தம் முதலான விஷமாகிய விஷயங்களை விட்டு விட்ட அதி தீவிர விவேகிகளுக்கு அல்லாமல் மற்றவர்களுக்கு விலக்க முடியாதது.* **(2.13)**

ஊன(ம்)இலா ஞானநூல் விசாரத் தாலே
உயர்வீடு நண்ணு(ம்)எனல் உண்மை அன்றோ
தான்அறியும் அனுபூதி ஞான நூல்
சற்குருஇம் மூவகையும் தம்மில் ஒத்தே

ஆனவகை இயற்றில்விடா(து) ஆன்மாத் தோன்றும்
அற்பஅறி வினர்கற்ற அரிய மெய்நூல்
ஈனமுறு மடமைதெறும் இதுபோல் மற்ற
எந்தநூல் களும்மடமை இகவா(து) அன்றே.

**பொழிப்புரை:** *குற்றம் இல்லாத ஞான சாத்திரங்களின் விசாரத்தாலே உயர்ந்த மோட்சம் கிடைக்கும் என்று கூறுவது உண்மை அல்லவா! தான் அடையும் அனுபவம், ஞான சாத்திரம், சற்குரு இந்த மூன்றையும் தம் உள்ளத்தில் ஒருமித்து முயன்ற அளவில் விடாது பயிற்சி செய்து வந்தால் ஆன்மா உணரத்தக்கதாகும். சிறிது அறிவுடையவர் இந்த ஞான சாத்திரங்களைக் கற்றால் பிறப்பு இறப்பினைத் தரும் அறியாமையைக் கெடுக்கும். இதைப் போல வேறு எந்த நூல்களும் அறியாமையைப் போக்காது.* **(2.14)**

மடமையொடு வாழ்கின்ற வாழ்வின் நீசர்
மனைதொறும்ஓட்(டு) இரந்(து)உழல்தல் வரிசை ஆகும்
அடர்தனம்நட்(பு) உறவுபர தேசம் தீர்த்தம்
ஆச்சிரமம் மெய்வருத்தம் அனைத்தி னாலும்
தொடர்உதவி இல்லைமன வருத்தத் தாலே
தூயபதம் உறுமுத்தித் துவார பாலர்
கடவகுணம் கேட்டிஉயர் சாந்தி வந்தால்
காதலும்துன் பமும்கதிர்முன் கங்குல் போல்போம்.

**பொழிப்புரை:** *அறியாமையொடு வாழ்கின்ற வாழ்வைக் காட்டிலும் நீசர்களின் வீடுகள்தோறும் சென்று ஓட்டினால் பிச்சை எடுத்து உண்டு வாழ்தல் உயர்ந்தது ஆகும். அதிக செல்வம், நட்பு, உறவினர், அயல் தேசம் (யாத்திரை) செல்லுதல், தீர்த்தங்களில் மூழ்;குதல், ஆசிரமங்களில் வசித்தல், உடல் வருந்தி செய்தல் இவை எல்லாவற்றி னாலும் எந்தவித உதவியும் இல்லை. மனதை வெற்றி கொள்வதாலேயே சுத்தமான அந்தப் பரம பதம் கிடைக்கும். முத்தி வீட்டின் துவார பாலரைக் கடக்கக் கூடிய குணங்களைக் கேட்பாய். உயர்ந்த சாந்தியானது வந்துவிட்டால் ஆசைகளும் துன்பமும் சூரியன் முன் இரவு நிற்காதது போலப் போய்விடும்.* **(2.15)**

நல்லவரும் தீயவரும் அன்னை போல
நம்புதற்காய் அமு(து)உண்ண நண்ணி னாலும்
மல்லன்மலர் மகள்புணர்ந்த போதும் ஒவ்வா
மகிழ்ச்சிதரும் சாந்தியுளோர் மரணம் செல்வம்
கொல்அமர்எய் தினும்அசையார் புலன்ஐந் தாலும்
குற்றமும்நன் மையும்நுகர்ந்து குளிரார் வாடார்
தொல்லறிஞர் மகம்புரிந்தோர் முனிவர் மொய்ம்பர்
தூயவர்யா ரினும்விளங்கும் தூய்மை யோரே.

**பொழிப்புரை:** *நல்லவரும் தீயவர்களும் தாயிடம் நம்புவதற்குச் சமமானது, அமிழ்தம் பருகக் கிடைத்தாலும், வளமையான தாமரையில் இருக்கும் இலக்குமி வந்து சேர்ந்தாலும்*

*(செல்வம் கிடைத்தாலும்), நிகர் அற்ற ஆனந்தத்தைச் சமம் (சாந்தியானது) தரும். சாந்தி உள்ளோர் (சம சாலிகள்) மரணம், செல்வம், யுத்தம் எது வந்தாலும் அசைந்து கொடுக்க மாட்டார். ஐந்து புலன்களாலும் நல்லதையும் தீயதையும் அனுபவித்தும் மகிழ்ச்சியோ வாட்டமோ அடையார். பேரறிவாளர், யாகம் செய்தவர், முனிவர், வலிமையுடையவர், குணம் நிறைந்தோர் இத்தகைய எல்லோரைக் காட்டிலும் சமம் (சாந்தி) உடையவரே எப்பொழுதும் சிறந்து விளங்கும் தூயவர் ஆவர்.* **(2.16)**

**ஆரியர்பே ணுவதாகி அயலோர்க்(கு) எல்லாம்**
**அரிதான சாந்திஅமு(து) அருந்தி மேலோர்**
**சீரியவீட் டினைஉற்றார் நீயும் அந்தச்**
**செயல்புரிவாய் நன்னுஸலால் தெளிந்த சுத்த**
**நேரியபுந் தியினாலே விசாரம் தன்னை**
**நிறைத்திடுக அதுநிறைந்தால் நிக(ற்)இல் புந்தி**
**கூரியதாய் வீ(டு)உணரும் விசாரம் தானே**
**கொடும்பவநோய்க்(கு) அருமருந்தாம் குறிப்(பு)உ ளோர்க்கே.**

**பொழிப்புரை:** *மேலோர்கள் விரும்பி பின்பற்றுவதாகி மற்றவர்களுக்கு எல்லாம் கிடைத்தற்கு அரிதான சாந்தி (உபசமம்) என்னும் அமிழ்தினை அருந்தி, உயர்ந்தவர்கள் சிறந்த மோட்ச வீட்டினை அடைந்தனர். நீயும் அந்த செயல்களைச் செய்வாய். நல்ல வேதாந்த சாத்திரங்களினால் தெளிந்த சுத்தமான புத்தியால் விசாரத்தைச் செய்வா யாக. அந்த விசாரம் முழுமையானால் நிகர் இல்லாத புத்தியானது சூக்குமம் ஆகி மோட்ச வீட்டினைக் காட்டும். மோட்சத்தை அடைய வேண்டும் என்ற குறிப்பு உள்ள வர்களுக்கு விசாரம் ஒன்றே கொடிய பிறவி நோய்க்குச் சிறந்த மருந்தாகும்.* **(2.17)**

**கருகியகங் குலின்மறையாக் கதிர்க்கும் மட்காக்**
**காண்பரிய பொருள்எல்லாம் காணும் கண்ணால்**
**தெருளுறநான் ஆர்உலகம் வந்த வா(று)என்**
**செறிபிறவி யார(து)எனும் திகழ்வி சாரம்**
**இருள்உறும்ஆ பத்தினுக்கு மருந்தாம் அப்பால்**
**ஏற்றமுள சந்தோடம் ஏ(து)என்(று) ஓதில்**
**வருபொருளில் இன்ப(ம்)அறத் துய்த்து வாரா**
**வனபொருளில் துன்பமிலா மகிழ்ச்சி தானே.**

**பொழிப்புரை:** *(விசாரப் பார்வையானது) இருண்ட இரவில் மறையாது, சூரிய ஒளிக்கும் மங்காது விளங்கி, காண்பதற்கு அரிதான பொருள்களை எல்லாம் விசாரத்தின் பார்வையால், ஞானம் உதிக்குமாறு நான் யார்? இந்த உலகம் வந்த வகை என்ன? நிறைந்த பிறவிகள் யாருடையது? என்னும் சிறந்த விசாரமானது துன்பத்தைத் தரும் ஆபத்துக்கு அரிய மருந்தாகும். அதன் பின்னர் அடைகின்ற சந்தோடம் எது என்று சொன்னால், கிடைக்கின்ற பொருளில் இன்பம் அனுபவித்தும், கிடைக்காத பொருளுக்கு ஏக்கம் இல்லாமலும் இருப்பதே மகிழ்ச்சி தானே.* **(2.18)**

நிக(ர்)அறுசந் தோடஅமு(து) அமையப் பெற்றால்
நெடும்போகம் நஞ்சா(ம்)அந் நிறைசந் தோடம்
அகலுறஆ சையில்விழுநெஞ்(சு) அறிவை நோக்கி
அழுக்குறுகண் ணாடியில்ஆ னனம்போல் தோன்றா
மகிழ்குணம்எய் தியபுருட மகிமை யோனை
மாதவரும் நராதிபரும் வணங்கா நிற்பர்
சகம்எனும்மா யையைவெல்லத் தக்கோர்க்(கு) எல்லாம்
தப்பாத சகாயமாம் சாது சங்கம்.

**பொழிப்புரை:** *ஈடற்ற சந்தோடம் என்னும் அமிழ்தினை அடைந்தவர்க்கு நீண்டு விரிந்துள்ள போகமானது விஷம் போல்வதாகும். அந்த சந்தோடம் இல்லாமல் ஆசையில் விழுகின்ற சித்தமானது சிதான்மாவை நோக்கினால், அழுக்கான கண்ணாடியில் முகம் தெளிவாகத் தோன்றாதது போலத் தெரியும். சந்தோடமாகிய குணத்தை அடைந்த புருடர்களில் சிறந்தவனைத் தவசிகளும் மன்னர்களும் போற்றிப் புகழ்வர். உலகமாகிய மாயையினை வெற்றி கொள்ள முயற்சி செய்பவர்களுக்கு எப்போதும் எல்லாவிடத்திலும் தப்பாமல் உதவி புரிவது சாது சங்கமே.* **(2.19)**

அறக்குறவை நிறைவாக்கும் சம்பத்(து) ஆக்கும்
ஆபத்தைச் சுபமாக்கும் அசுபம் தன்னைச்
சிறக்கு(ம்)உயர்ந் தவர்கூட்டம் என்னும் கங்கைச்
சீதநீர் ஆடினர்க்குச் செந்தீ வேள்வி
இறக்கரிய தவம்தானம் தீர்த்தம் வேண்டாம்
இடர்பந்தம் அறுத்(து)எவர்க்கும் இனியோர் ஆகிப்
பிறப்(பு)எனும்வே லைப்புணையாம் உணர்வு சான்ற
பெரியோரை எவ்வகையும் பேண வேண்டும்.

**பொழிப்புரை:** *எப்பொழுதும் குறைவுள்ளதை நிறைவாக ஆக்கும். ஆபத்தைச் சம்பத்து ஆக்கும். அசுபத்தைச் சுபம் ஆக்கும். சிறந்து மேலானவர்களின் கூட்டம் என்கின்ற குளிர்ச்சியான கங்கை நீரில் மூழ்கினவர்களுக்கு அக்கினி வளர்த்துச் செய்யும் வேள்வி, கெடாத பயனைத் தரும் தவம், தானம், தீர்த்தம் ஆடல் இவை தேவையில்லை. துயர் தரும் பந்தத்தை விடுத்து எல்லாருக்கும் இனியவர் ஆகிப் பிறப்பு இறப்பு என்கின்ற சமுத்திரத்தைக் கடக்க முயற்சிப்பவர்க்கு அறிவு மிகுந்த சாது சங்கப் பெரியோர்கள் ஓடம் போல்வர். ஆதலால் சாது சங்கப் பெரியோர்களை எந்த வகையிலேனும் சேவிக்க வேண்டும்.* **(2.20)**

நிறைபவம்தீர் உபாயநான்காம் இவர்க ளோடு
நிறைநட்பார் பவக்கடலை நீத்தார் அன்னாய்
குறையுமன மோகம்தீர் இச்சொல் கேட்பாய்
குணம்விரும்பா(து) இச்சொல்லைக் குறிக்கொண் டோர்க்கு
மறைஉணர்வு வலிதில்வரும் காமம் ஆதி
மயக்க(ம்)அறும் சரற்கால வாவி நீர்போல்
கறைதவிர்ந்து மனம்தெளியும் கவசத் தோரைக்
கணைகள்போல் மிடிமுதலாம் கவலை தாக்கா.

**பொழிப்புரை:** *துயர் நிறைந்த பிறவியைத் தீர்க்கும் உபாயம் நான்காகும். இவற்றுடன் நிறைந்த நட்புக் கொண்டவர் (அதனைக் கடைப்பிடிப்பவர்) பிறவியாகிய கடலைத் தாண்டிடுவார். லட்சுமிகரமாய் விளங்குகின்றவனே! மலின வாசனையால் குறைவுடைய மனத்தின் மோகம் தீர்க்கின்ற இந்தச் சொற்களைக் கேட்பாய். பயனை விரும்பாமல் மோட்சத்தைத் தரவல்ல இந்த உபாயத்தைக் குறிக்கோளாகக் கொண்டவர்க்கு வேதம் சொல்லும் பரபோதம் வலிந்து தானே வந்தடையும். காமம் முதலான மயக்கம் அற்றுப்போகும். சரற்காலத்தில் குளத்தில் உள்ள தெளிந்த நீர் போல, களங்கம் நீங்கி, மனமானது தெளிவடையும். மார்பில் கவசம் அணிந்தவரை அம்புகள் தொலைக்க முடியாதது போல, இவர்களை வறுமை முதலான துன்பங்கள் தாக்கமாட்டாது.*

**(2.21)**

**தருபயம்செய் மாயைமனம் ஈரா தாகும்**
**சமபாவம் தரங்கம்தீர் சாக ரம்போல்**
**மருவ(ல்)உறும் விசாரத்தால் மிக்கோர்க்(கு) எல்லாம்**
**வாரிதிபோல் ஆழமும்பொன் வரைபோல் மொய்ம்பும்**
**திருமதியின் குளிர்ச்சியும்வந்(து) எய்தும் நன்னூல்**
**செய்கையின்நல் லோர்புந்தி செவ்வை யான**
**கருமவழி மகிழ்(வு)எய்தும் மறுவி லாத**
**கற்புடையாள் தன்மனையில் களிக்கு மாபோல்.**

**பொழிப்புரை:** *பயத்தைத் தரக்கூடிய சம்சாரமாகிய மாயையானது மனத்தை இழுக்காது. சம பாவம் அலைகள் இல்லாத கடல்போல் உண்டாம். விசாரத்தால் மிகுந்த தெளிவுடையவர்கள் எல்லாம் கடலின் ஆழத்தில் அமைதியாக இருப்பது போல் அமைதியுடனும், மேரு மலையின் திடம்போலவும், சிறந்த நிலவின் குளிர்ச்சி போல் சித்தமும் வந்தடையும். நல்ல சாத்திரங்களையும், நல்ல செய்கைகளையும் உடையவர் புத்தியானது, சாத்திரத்திற்கு விரோதம் இல்லாத சிறப்பான கருமங்களில் மகிழ்ச்சி அடையும். களங்கம் இல்லாத கற்புடையவள் தன்னுடைய இல்லத்தில் களிப்படைவது போலவே.* **(2.22)**

**அற்புதங்கள் அனைத்து(ம்)இலா இவனுக்(கு) அந்த**
**அரும்சீவன் முத்திபதம் அடைவில் முற்றும்**
**சொற்புலனுக்(கு) அதீதனாய் உலகர் போலத்**
**தோன்றிடுவோன் புந்தியில்ஓர் தொழில்பற் றாதோன்**
**நற்பயன்பொல் லாப்பயனால் சுகம்சோர் வில்லோன்**
**நண்ணியது புசித்(து)இனிது நன்றாய் நிற்போன்**
**பொற்புறுநல் ஆசார விரோத மான**
**போகங்கள் தமில்சிறிதும் பொருந்தி டாதோன்.**

**பொழிப்புரை:** *சடை, நகங்கள் வளர்த்தல் முதலான விசேடங்கள் இல்லாத இவனுக்கு அருமையான அந்த சீவன் முத்தி பதம் முறையாக உண்டாகும். கூறும் சொற்களைக் கடந்தவனாய், உலக மக்கள் போலச் சாதாரணமாகத் தோற்றம் அளிப்பான். அவனுடைய*

*புத்தியில் அபிமானத்துடன் எந்த செய்கையும் செய்யான். நல்ல பலன், தீய பலன் எது வரினும் மகிழ்ச்சி துக்கம் கொள்ள மாட்டான். கிடைத்ததை நன்று என்று புசித்து இருப்பன். அழகுடைய ஆசாரத்திற்கு விரோதமான போகங்களில் சற்றும் விருப்பம் கொள்ள மாட்டான்.* **(2.23)**

ஒருகணமும் ஒழியாமல் சுக(ம்)அ(து) ஆகி
உடல்கடவா னாய்ச்சான்றோர் உசாவி னாலே
பெருகியஇவ் வீட்டுநெறி விசாரம் செய்வோன்
பிறவிதீர் மெய்ஞ்ஞானம் பெற்றோன் ஆகி
வெருளு(ம்)மறு பிறப்பி(ன்)உறான் தாயர் யோனி
விதன(ம்)உறான் சிறிதாகி மிளிர்போ கத்தின்
மருளுமனப் பாவியராய் வெருள்வோர் தாயர்
வயிற்றில்மலப் புழுஎன்றே வழங்கற் பாலோர்.

**பொழிப்புரை:** *ஒரு கணமும் ஒழியாத சுகம் உடையராய், தேக அபிமானத்தைக் கடந்து செல்ல சாது சங்க சான்றோர்களுடன் ஆராய்பவனாய் இருந்து பெருகிய இந்த முத்தி நெறியை விசாரம் செய்கின்றவன் பிறவியைத் தொலைக்கின்ற மெய்ஞ்ஞானத்தை அடைந்தவன் ஆகி, மிரட்டுகின்ற மறு பிறப்பினை அடையான். தாயின் கருவில் துயரம்அடையச் சேரமாட்டான். அற்பமாக வரும் போகத்தில் மயக்கம் கொள்ளும் பாவியராகிப் பயம் உடையவர் தாயின் வயிற்றில் மலப் புழு ஆவர் என்றே சொல்லத் தகுந்தவர்.* **(2.24)**

தகும்அவர்கள் தம்மில்தாம் எய்தப் பட்ட
தருமமொடு பொருள்தேடும் சரிதை யோராய்த்
துகள்தீர்தம் மிடத்தி(ல்)இளைப் பாறி மாறாத்
துரிய(ம்)எனும் சாந்திநிலை தோன்று மட்டும்
மிகுநூல்கள் உபசாந்தி ஒழுக்கம் போதம்
மிக்கவர்கூட்(டு) உற(வு)இவற்றால் விசாரம் வேண்டும்
நிகரிலா விசாரத்தால் தோன்றி நிற்கும்
நிமலதுரி யத்தி(ன்)நிலை நிகழ்த்தல் பாற்றோ.

**பொழிப்புரை:** *தகுதியுடைய அறிஞர்கள் தம்மில் தாம் அடைந்த தருமத்தின் வழியில் பொருள் தேடும் செய்கை உடையவராய்த் துன்பம் இல்லாத தம் ஆன்மாவில் அமைதி அடைந்து, மாறாத துரியம் என்னும் நிலை அடையும் வரையில் தத்துவ சாத்திரங்கள், உபசாந்தி, சந்தோடம், ஞான பிரக்ஞை (உணர்வு) மிகுந்தவர்களின் சேர்க்கை இவற்றுடன் விசாரத்தில் ஈடுபட வேண்டும். ஈடற்ற விசாரத்தினால் தோன்றி நிலைத்து நிற்கும் நின்மல துரிய நிலையை எடுத்துரைக்க இயலுமோ?* **(2.25)**

பாவனைதீர் துரிய(ம்)அதில் இளைப்பு நீங்கிப்
பவம்என்னும் கடல்கடந்து பாரம் சேர்ந்தோன்
சீவ(ன்)என நின்றாலும் சீவத் தன்மை
தீர்ந்தாலும் இல்லறத்தில் செறிவுற் றாலும்

கேவலம்சந் யாசியாய் இருந்த போதும்
கிளர்சுருதி மயக்கத்தால் கிடைப்பட் டாலும்
யாவதும்செய் தும்தவிர்ந்தும் பயன்ஒன் றில்லை
இமகிரிஉ றாக்கடல்போல் இயல்பில் நிற்பன்.

**பொழிப்புரை:** *வாசனை எண்ணம் ஒழிந்த துரிய நிலையில் அமைதி அடைந்து, பிறவியாகிய கடலைக் கடந்து முத்திக் கரை சேர்ந்தவன், சீவன் என்று விவகாரத்தில் ஈடுபட்டாலும், சீவத் தன்மை இல்லாமல் சமாதியில் நின்றாலும், இல்லறத்தில் இருந்தாலும், எல்லாவற்றையும் துறந்த துறவியாய்த் திரிந்தாலும், வேத சாத்திரங்களைப் படித்தும் எடுத்துச் சொன்னாலும், பிறவற்றைச் செய்தாலும், செய்வதை விட்டு விட்டாலும் பயன் ஒன்றும் இல்லை. மேரு மலை கடையப்படாத பாற்கடல் அமைதியாக இருப்பது போல் தன் அறிவு சொரூபமான தன்னுடைய இயல்பில் இருப்பான்.* **(2.26)**

ஊகம்(ம்)உள தேல்சிறுவர் உரையும் கொள்க
ஒழிந்த(து)அயன் உரைசெயினும் திரணம் ஒப்ப
ஏகவிடு வாய்ஞானம் எளிது தோன்ற
இயம்பு(ம்)உவ மான(ம்)எலாம் ஏக தேச
மாகநினை வாய்உருவம் அற்ற ஞானம்
ஆகார மாம்உவமைக்(கு) அண்டா(து) என்னும்
மூக(ர்)அனு பவம்இல்லா விகற்பத் தாலே
மொழிகுதர்;க்கம் அறி(வு)அழிக்கும் முயல வேண்டாம்.

**பொழிப்புரை:** *சுருதி யுக்தி அனுபவத்துக்குப் பொருத்தமாக இருப்பின் பாலகன் சொல்வதையும் ஏற்றுக்கொள்வாய். இவ்வாறு இல்லாது பிரம்ம தேவர் கூறினாலும் துரும்புக்கு நிகராகத் தூரத்தில் விட்டுவிடுவாய். பிரம்ம வித்தை எளிதாகத் தோன்றும் பொருட்டுச் சொல்லப்படுகின்ற உதாரணங்கள் யாவும் ஒருவாறாக (ஏகதேசமாக) கொள்வாய். உருவம் இல்லாத பிரம்மத்திற்கு உருவத்தோடு கூடியவை எவ்வாறு உவமையாகப் பொருந்தும் என்று கூறும் மூர்க்கரின் அனுபவம் இல்லாத விபரீத விவாதமாக (பசுவை ஓநாய் ஆக்கிய திருடர் கதை போல) எடுத்து உரைப்பது குதர்க்கம் ஆகும். விவேகத்தைக் கெடுக்கும் அதில் முயற்சி செய்ய வேண்டாம்.* **(2.27)**

தந்திரியில் எழும்இசைபோல் சாந்தி முன்னாம்
சற்குணத்தின் ஞான(ம்)எழும் தம்மில் தாம்ஆம்
இந்தஇரண் டும்குளமும் மலரும் போல
இனிதுவளர்ந் திடும்ஒக்க இரண்டும் கற்கில்
வந்(து)அணுகும் தனித்தனியே இரண்டும் கற்கில்
வருபயன்ஒன்(று) இலதாம்இவ் வாய்மை கேள்வி
முந்து(ம்)அறம் பொருள்இன்பம் கீர்த்தி வாழ்நாள்
முழு(து)அளிக்கும் மனத்தெளிவால் முத்தி நல்கும்.

**பொழிப்புரை:** *வீணை நரம்பில் எழுகின்ற இசையைப் போல, உபசாந்தி முதலிய கல்யாண குணங்களினால் ஞானம் உதயமாகும், ஞானத்தால் சமாதியாம். இந்த இரண்டும் குளமும் தாமரையும் போல் வளர்ந்து நிற்கும். சமமாய் இரண்டினையும் பயிற்சி செய்து வந்தால் மோட்சம் சுலபமாகும். தனித்தனியாக (ஒவ்வொன்றாக) பயிற்சி செய்தால் எந்தவிதப் பயனும் இல்லாது போகும். இந்த உண்மையைக் கேட்டு உணர்ந்தால், அறம், பொருள், இன்பம், புகழ் ஆகியவற்றை வாழ்நாள் முதலியவற்றை நிறையத் தரும். புத்தி நிர்மலத்தன்மையைத் தந்து அதனால் மோட்சத்தை அளிக்கும்.* **(2.28)**

*(ஞானமும் நல்லொழுக்கமும் பரஸ்பரம் - ஒன்றுக்கொன்று காரணம் ஆகி விருத்தி அடைவனவே ஆகும். நல்லொழுக்கத்தாலே ஞானம் வளரும், ஞானத்தாலே நல்லொழுக்கம் வளரும். இந்த மெய்யுணர்வும் நல்லொழுக்கமும் ஒன்றற்கு ஒன்று சாதகமாகியே வளரும். மதிமான் ஆனவன் சாந்தியினாலும், பிரஞ்ஞையினாலும், மகா புருடத் தன்மையினாலும், திடமுயற்சியினால் சிரவணாதி முறையாய் ஞானத்தையும், நல்லொழுக்கங்களையும் பயில வேண்டும். இவ்வுலகத்தில் ஞானம் நல்லொழுக்கம் என்பவற்றைச் சமமாகப் பயிலாத வரை அதிகாரிக்கு அந்த இரண்டில் ஒன்றுகூடச் சித்திக்க மாட்டாது.)*

**(முமுட்சுப் பிரகரணம் முற்றும்)**

# 3. உற்பத்திப் பிரகரணம்

## (i) ஞான விண்மகன் கதை

*ஞானத்தினாலேயே ஆன்மாவுக்கு மோட்சம் அல்லாமல், கரும உபாசனைகளில் இல்லை என்பதையும், ஆன்மாவானது தன்னைத் தானே அறியாமல் தன்பால் காணப்படும் அறியப்படும் உலகத்தை மன சங்கற்பத்தால் படைக்கின்றது எனவும், மனதும் சீவ விவர்த்தம் ஆதலினாலும் இப்போது சீவ சொரூபம் இது என்று கூறுகிறார்...*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**முத்தியை நயந்தோர் செய்கை மொழிந்தனம் சகங்கள் தோன்றும்**
**அத்திறம் இனிது கேட்பாய் அனுபவப் பேற்றி னாலே**
**ஒத்துமுன் னிலைப்பேர் பெற்ற உணர்வுநம் சீவன் இத்தைச்**
**சித்தொடு புமான்அ கந்தை முன்னிலைச் சீவன் என்ப.**

**பொழிப்புரை:** *முத்தியை விரும்பியவர் விவகாரத்தை இதுவரையில் கூறினோம். இனி உலக உற்பத்தியைக் கூறுவோம். நன்கு கேட்பாய். (ஒவ்வொரு மதப் பிரிவினரும் அவரவர் ஒரு கருத்தைக் கொண்டு இது தான் சீவன் என்றும் சீவத் தன்மைக்குச் சில விசேடங்களையும் சொல்கின்றனர். அதனால்) அனுபவத்தினால் ஒத்து வரும் பிரம்மத்தில் ஐக்கியம் ஆகக் கூடிய உணர்வுடையதே அந்த நம்முடைய (உபநிடதமாகிய வேதாந்தம் கூறும்) சீவன் ஆவன். இதனையே சம்வித் என்றும், புமான் என்றும், அகந்தை என்றும், பிரத்தியட்ச இயற்கையன் என்றும் சொல்வர்.* **(3.1.1)**

**சீவ(ன்)எவ் அறிவி னாலே தெரிவுறு அதுப தார்த்தம்**
**தாவுறும் விவித மான சங்கற்ப விகற்பம் உற்று**
**மேவிய மயக்கம் தன்னால் விரிந்தநீர் அலையா மாபோல்**
**பூவல யங்கள் ஆகிப் பொலிந்தது புகன்ற சீவன்.**

**பொழிப்புரை:** *சீவன் எந்த உணர்வினாலே ஒன்றை அறிந்து கொள்கின்றதோ அது பதார்த்தம் எனப்படும். மாறி மாறி உண்டாகும் பலப் பல விதமான சங்கற்ப விகற்பங்களாக ஆக்கப்பட்ட மயக்கங்களால் அசைந்த நீரானது அலை என்று (சொல்லப்பட்டு) விளங்குவது போல, அந்தப் பரமாத்மா சிருட்டி காலத்தில் சாமானியமாகத் திருசியத் (காணப்படும் அறியப்படும்) தன்மையை அடைந்து சீவத்துவத்தை அபிமானத்தால் பெற்று சகங்களாகத் திகழ்கின்றது.* **(3.1.2)**

பன்னுகா ரணம்ஒன் றில்லை படைக்கும்முன் படைக்க வேண்டும்
என்னும்லீ லையினால் தானே இயைந்தகா ரணம்அ(து) ஆகி
முன்னுறு பொதுவாம் காட்சி மெய்ப்பொருள் திரள்கள் ஆகித்
தன்னுளே சகமாய்க் காற்றுள் சலனம்போல் அறிவுள் தங்கும்.

**பொழிப்புரை:** *எல்லாவற்றையும் படைப்பதற்கு முன்பு சொல்லத்தக்க காரணம் ஒன்றும் இல்லை. படைக்க வேண்டும் என்னும் லீலையினால் (விளையாட்டினால்) ஏக வடிவமாய் இருக்கின்ற நான் அனேக வடிவங்களாக ஆவேன் என்று சங்கற்பித்த சுயமாகப் பொருந்திய காரணம் ஆகி, பிரத்தியட்சமான ஆன்ம சொரூபம் தன்னிடத்தில் சப்தம் முதலிய குணங்களை உடைய ஆகாயம் முதலான பொருள் கூட்டங்கள் ஆகி இந்த சகமாகக் காற்றில் அசைவு (சலனம் இருப்பது போல்) சித்தின் பால் இருக்கும்.* **(3.1.3)**

எல்லையில் திசைகள் காலம் புறம்பெனும் இவற்றிற்(கு) ஏற்ற
பல்லுரு வாய்எங்(கு) எவ்வா(று) எழுந்த(து)அப் படிஅங்(கு) ஆகும்
செல்லும்இந் நெறியால் இந்தச் செகம்எனும் பிரம கற்பம்
புல்லுகா ரணம்இ லாத பொருள்எனப் புந்தி செய்க.

**பொழிப்புரை:** *வரம்பற்ற திசைகள், காலம், வெளிப்புறம் ஆகிய இவற்றிற்கு எற்ற பல உருவாக எவ்விடத்தில் எவ்வாறு உதயம் ஆனதோ அப்படி அங்கு ஆகும். இந்த நெறி முறையால் பிரம்ம தேவனின் கற்ப காலம் வரையில் சென்று கொண்டிருக்கும் மயல் மயமாகத் தோற்றும் இந்தச் சகத்திற்குப் பொருந்துகின்ற காரணம் இல்லாத பொருள் என்று புத்தியில் நிலை நிறுத்துவாயாக.* **(3.1.4)**

இதனைமுன் னிலையாம் சீவன் இமைப்பினில் படைத்த(து) ஆகும்
அதன்வடி வாகி நிற்கும் அனுமான முதல எல்லாம்
விதமுறு காட்சி மெய்ம்மை பந்த(ம்)அ'(து) இன்மை வீடாம்
திதமுறு இதுபோம் ஆறு செப்புதும் தெரியக் கேட்பாய்.

**பொழிப்புரை:** *இந்தத் தோற்றத்தைப் பிரத்தியட்ச சைதன்யம் கணப்பொழுதில் படைத்ததாகும். அதன் வடிவமாகி அந்தக்கரணப் பிரமாதா (காண்பான்) முதலான எல்லாமாக இருக்கும் திருசியமாகும் (காணப்பெறும்) விதவிதமான காட்சி எல்லாம் மெய்யானது என்ற எண்ணமே பந்தம் ஆகும். அந்த எண்ணம் இல்லாமையே மோட்சம் ஆகும். நிலையில்லாத இந்த காண்பவை கற்பிதம் ஆவதால் அதன் தொடர்புடைய பந்தமும் கற்பிதம் ஆகும் என்பதால் இந்த திருசிய (காணப்படும்) பொருள்களில் சத்தியத்துவ புத்தி நீங்கும் வண்ணம் கூறுகின்றேன், உணர்ந்து கொள்ளும் வகையில் கேட்பாயாக.* **(3.1.5)**

மண்டிய சுழுத்தி தன்னில் வருகனாப் போவ(து) என்னக்
கண்டன உலகம் எல்லாம் கற்பனை முடிவில் போக
எண்தரு அலைவு தோற்றம் பெயர்எலாம் இன்றி ஆழ்ந்து
தண்டல்இல் இருள்தே(சு)இன்றித் தனித்த(து)ஓர் உண்மை நிற்கும்.

**பொழிப்புரை:** *நெருங்கிய ஆழ்துயிலில் வருகின்ற கனவானது மறைந்து போவது போலக் காணப்படுகின்ற தோற்றமான இந்த சகம் எல்லாம் முடிவில் (பிரளயத்தில்) அழிந்து போக, அனேக சஞ்சலம், தோற்றம், பெயர்கள் எல்லாம் இல்லாமல் போய், கம்பீரமாகப் பூரணமாக, இருள் ஒளி இரண்டும் இன்றி, சத்து மாத்திரமாக எஞ்சி நிற்கும்.* **(3.1.6)**

**சத்தியம் பிரமம் ஆன்மா பரம்முதல் சாற்ற வேண்டி**
**இத்திறப் பெயர்மே லோரால் இடப்பெற்ற இந்த ஆன்மா**
**சித்திர மாகத் தானே வேறுபோல் திகழ்ந்து தீது**
**மெத்திமேல் வருசீவப் பேர் மேவிய போல வாகும்.**

**பொழிப்புரை:** *உண்மை, பெரியதிலும் பெரியது, சொரூபம், உயர்ந்தது முதலாகக் கூறுவதற்காக வேண்டி இத்தகைய பெயர்கள் மகான்களால் சூட்டப்பெற்ற இந்த பிரம்மம் விசித்திரமாக அன்னியமானது போல் தோற்றம் அளித்து, தேகம் முதலிய அபிமானம் கொண்டதாய் சீவன் என்னும் பெயரினை அடைந்தது போலவாகும்.* **(3.1.7)**

**சீவ(ன்)என் கின்ற சொல்லும் பொருளுமாய்ச் செறிந்த ஆன்மா**
**பாவனை மனனத் தாலே பருத்தெழு மனம்அ(து) ஆகும்**
**மேவரும் பிரமம் தன்னில் வேலையில் அலைபோல் வந்து**
**தாவுறு உள்ளம் தானே நினைந்தவா சகம்கற் பிக்கும்.**

**பொழிப்புரை:** *சீவன் என்ற சப்தம் குறிக்கின்ற சொல்லும் அதற்குரிய பொருளுமாகப் பொருந்திய ஆன்மாவானது, சங்கற்பம் விகற்பம் முதலான சிந்தனையினால் பருத்த மனம் எனப்படும். அடைதற்கு அரிய பிரம்மம் தன்னில் கடலில் அலைபோலக் கிளம்பி, விடயங்களில் தாவுகின்ற மனமானது தான் நினைத்தபடி இந்த உலகத்தைக் கற்பனை செய்யும்.* **(3.1.8)**

**உன்னுறு மனத்தி னாலே உலகமாம் இந்திர ஜாலம்**
**துன்னுறும் பணிகள் என்னும் சொற்பொருள் பொன்னை அன்றி**
**அன்னியம் இல்லை பொன்னால் பணிஎன அறைய வேண்டா**
**பன்னிய உலகாம் சொற்குப் பரம்அன்றிப் பொருள்வே(று) இல்லை.**

**பொழிப்புரை:** *வாசனைகள் நிறைந்த மனத்தினாலே உலகமாகிய இந்திர ஜாலம் விரிந்து நெருங்கித் தோன்றும். ஆபரணம் என்னும் சப்தம் உடைய சொல்லின் அர்த்தம் பொன்னைக் காட்டிலும் வேறில்லை. பொன்னால் ஆனதை ஆபரணம் என்று கூற வேண்டாம். (அதைப்போல) உரைத்த இந்த உலகம் என்னும் சொல்லுக்குப் பரமாத்மா என்பதைத் தவிர வேறு அர்த்தம் இல்லை.* **(3.1.9)**

**செல்லுறும் கானல் ஆற்றில் தோன்றிடும் திரைகள் போல**
**இல்லையாம் மனத்தில் உண்டு போல்எழும் இந்த ஞாலம்**
**அல்லல்செய் மோகம் பந்தம் தமம்மலம் அவித்தை மாயை**
**புல்லுசம் சாரம் என்றே ஞானிகள் புகலப் பட்ட.**

**பொழிப்புரை:** *செல்வது போலத் தோற்றம் அளிக்கின்ற கானல் நதியில் தோன்றும் அலைகள் போல, எப்பொழுதும் இல்லாததாகவே இருந்தும், மனத்தில் இந்த உலகமாகிய இந்திர ஜாலம் சத்தியம் போல விரிந்து எழுந்து நிற்கும், மிகத் துன்புறுத்தும் பொருட்டு, அறியாமல் பொருந்தி நிற்கின்ற அதற்கு மோகம், பந்தம், தமம், மலம், அவித்தை, மாயை, சம்சாரம் என்ற பெயர்கள் பேர்அறிவு கொண்டவர்களால் சொல்லப்பட்டன.* **(3.1.10)**

**பந்தத்(து) உருவம் கேட்(டு)உணரில் பரவீட்(டு) உணர்வு மேல்வெளியாம்**
**இந்தச் சகம்நீ நான்முதலாம் இவைமெய் என்றல் பந்தமதாம்**
**அந்தக் கருத்து நிற்பளவும் அரிதாம் முத்தி வித்தினிடைத்**
**தொந்தத் தருப்போல் காண்பவன்பால் தோன்றா(து) உறையும் காண்பவெல்லாம்.**

**பொழிப்புரை: பொழிப்புரை:** *பந்தத்தின் உருவத்தைக் கேட்டு உணர்ந்து கொண்டு விட்டால், பின்பு மேலான மோட்சத்தின் வடிவத்தை உணர்ந்துகொள்ளலாம். காணப்படும் இந்த உலகம், நீ, நான் முதலான எல்லாம் சத்தியமானது என்று எண்ணுவது பந்தம் ஆகும். அந்த எண்ணம் இருக்கின்ற வரையில் மோட்சம் கிட்டாதாம்;. விதையின் இடத்தில் செடி, கொடி, மரம் அனைத்தும் சம்பந்தப்பட்டு இருப்பது போல, காணப்படும் அனைத்தும் காண்பவன் இடத்தில் அடங்கியிருக்கும்.* **(3.1.11)**

**பிறிவாம் பொருளின் மரத்(து)இருந்த பேதப் படியே உதரத்தில்**
**செறிவாம் சிருட்டி சமத்காரம் சிதை(வு)அற்(று) உண்டாய்ச் செறிவதுபோல்**
**அறிவாம் சரீரி எனும்பொருளின் அகன்ற உதரத்(து) அங்குரமாய்**
**நெறியார் சகத்தின் வடிவமெலாம் நீங்கா இயல்பாய் நிறைந்திருக்கும்.**

**பொழிப்புரை:** *மரத்தின் (வேர், கிளை, இலை, பூ, கனி முதலான) பேதப்படியே இருந்தது போல் காரணமாகிய விதையில் இருந்தது போல், பொருந்தி நின்ற சிருட்டியின் சாமர்த்தியம் கெடாமல் உண்டாகி அடைவது போல், அவித்தையாம் தேகத்தைக் கொண்ட சித்து வடிவ ஆன்ம வஸ்துவின் உதரத்தில் முளையாய் அனேக மார்க்கங்கள் பொருந்திய சடம் அசடங்களைக் கிளப்பும் உலக வடிவம் எல்லாம் மாறாமல் நிறைந்திருக்கும்.* **(3.1.12)**

**பருவங் களிலே விதைமுளைக்கும் படிபோல் காணப் படும்அவற்றில்**
**கருதும் கருத்தும் உடல்எடுக்கும் ககனத்(து) உதித்தோன் கதையாலே**
**இருளும் சகத்தின் உற்பத்தி எளிதாய் விளங்கும் இதுகேட்பாய்**
**பெருகும் ககனம் பிறப்பிடமாய்ப் பிறந்தான் மறையோர் பெருங்குலத்தோன்.**

**பொழிப்புரை:** *(காணப்படும் அனைத்தும் இருதயத்தின் கண்ணே இருக்குமாயின் எவராலும் அதனை அனுபவிக்கப்பட முடியாதது ஏன் எனில்) எப்படிப் பருவம் வந்த போது முளைக்கின்ற விதை போல் காண்பவன் இடத்தில் இருக்கும் காண்கின்ற பிரகாரம் வாசனைகளினால் எண்ணுகின்ற எண்ணமும் காணப்படுகின்றதாய் உள்ள தேகம் முதலியவற்றை எடுக்கும். ஆகாயத்தின்கண் உதித்தவன் கதையாலே மோகமயமான சம்சார சகத்தின் உற்பத்தி விதம் எளிதாக விளங்கும். இதனைக் கேட்பாயாக. பரம தார்மீக புருசோத்தமன் ஒருவன் ஆகாயத்தையே பிறப்பிடமாகக் கொண்டு உதித்தான்.* **(3.1.13)**

**ஒழி(வு)இல் தியானம் உயிர்க்(கு)இதம்வீ(று) உடையோன் நெடுநாள் உய்ந்(து)இருப்ப**
**இழியும் உலகை விழுங்குறும்நாம் இவனை விழுங்கா(து) இருந்தமைஎன்**
**அழிவு செய்யும் எனதுவலி அழுந்தும் கல்லின் வாள்முனைபோல்**
**கழிய மழுங்கிற்(று) எனஎண்ணிக் காலன் அவன்ஊர் கடி(து)அணைந்தான்.**

**பொழிப்புரை:** *எப்போதும் தியானத்தில் இருப்பவனாயும், உயிர்களுக்கு இதம் (கருணை) உடையவனாயும், பராக்கிரம் உடையவனாயும் ஆன விண்மகன் எனப்படும் தருமவான் நெடுநாள் உயிர் வாழ்ந்து வந்தான். அற்பமான இந்த உலகத்தில் உள்ளவர்களை விழுங்கும் நாம் இவனை ஏன் விழுங்கவில்லை? எல்லோரையும் விழுங்கும் எனது சாமர்த்தியம் கடினமான கல் பாறையில் குத்திய வாள் முனை மழுங்குவது போல், இவனிடத்தில் மழுங்கி விட்டதோ என்று எண்ணிய மரண(கால) தேவன் உடனடியாகப் புறப்பட்டு அவனுடைய ஊர் வந்து சேர்ந்தான்.* **(3.1.14)**

**வினையின் முயல்வார் தம்கருமம் விடுவ(து) உண்டோ எனமறையோன்**
**மனையின் வாயில் புகும்அளவில் மண்டு மூழிக் கடுங்கனல்போல்**
**கனையும் கடும்தீ எரித்திடவும் கடிது புகுந்து கண்(டு)அவனைப்**
**பனைசெய் கரம்ஆ யிரத்தாலும் பற்றி இழுத்துப் பயன்அற்றான்.**

**பொழிப்புரை:** *ஒரு காரியத்தில் தீவிரமாக முயற்சி செய்பவர் அந்தக் காரியத்தை முடிக்காமல் விடுவார்களோ என்று அந்த விண்மகன் வீட்டின் வாயிலில் புகும் பொழுது, (பாதுகாப்புக்காக காவலாக இருந்த அக்கினியானது) விரிந்து பிரளய கால நெருப்புப் போல் சப்தத்தோடு பெருந்தணலால் தகிக்கவும், அதன் ஊடே வேகத்துடன் காலன் உள்ளே புகுந்து அவனைக் கண்டு, பனைமரம் போன்ற ஆயிரம் கரங்களாலும் அவனைப் பற்றி இழுத்தும் பயன் இல்லாமல் போயிற்று.* **(3.1.15)**

**அவன்சங் கற்ப புருடனைப்போல் அசை(வு)அற்(று) இருப்ப அடர்ப்பரிதாய்**
**இவன்அங்(கு) அகன்று நமன்பால்போய் இவ்வா(று) உரைப்ப யமன்உரைப்பான்**
**புவனம் கருமத் தால்அன்றிப் பொன்றா(து) உதவிப் பொருள்அவையே**
**தவறும் படிசெய் கருமங்கள் சகாய மாகச் செல்எனன்றான்.**

**பொழிப்புரை:** *அந்த விண்மகன் மனோராச்சிய புருடனைப் போல் அசைவற்று இருப்ப கெடுக்க முடியாது போகவே, காலதேவன் அங்கிருந்து வெளியேறி, எமதர்மனிடம் சென்று நடந்ததைக் கூற, அதற்குப் பதிலாக எமதர்மன் (பின்வருமாறு) கூறுவான். பூமியில் உள்ளவர்கள் கருமம் இல்லாமல் இறக்கமாட்டார்கள். (கர்மத்தினால் தோன்றிய உடல் கர்மம் இன்றி மரணம் அடையாது.) சகாயமான வஸ்துக்கள் கருமமே ஆகும். தவறும்படியான அதாவது மரணிப்பதற்கு உதவக் கூடிய அவன் முன் செய்த கருமங்களை உதவியாகக் கொண்டு நீ செல்வாய் என்றான்.* **(3.1.16)**

**காலன் இதுகேட்(டு) அவன்செய்த கருமம் தேடி நதிஓடை**
**ஞாலம் திசைகள் எலாம்உழன்று நண்ணா தாக மீண்(டு)எய்திச்**
**சீல நமனுக்(கு) உரைசெய்யச் சிந்தித்(து) அவனும் உரைசெய்வான்**
**மூல விசும்பில் பிறத்தலினால் முடிவில் அவனும் விசும்(பு)அன்றோ.**

**பொழிப்புரை:** *இவ்வாறு சொன்னதைக் கேட்ட கால தேவன், அவன் செய்த கருமத்தைத் தேடி நதிகள், ஓடைகள், உலகத்தின் திசைகள் என எங்கு தேடியும் கிடைக்காத காரணத்தால் மறுபடியும் ஓடி எமதர்மனிடம் உரைத்தான். எம தர்மனும் சிந்தித்து பின்பு "அவன் மூல விசும்பில் பிறந்ததால் (சஞ்சித வினையால் பிறவி எடுக்காமல் ஞானம் காரணமாக உதித்ததால் பூர்வ கர்மம் அகப்படவில்லை ஆதலால்) முடிவில்லாத அவனும் அந்த ஆகாயம் தான்" என்று கூறினான்.* **(3.1.17)**

**விண்ணில் பிறந்தோன் காரணத்தை மேவா மையினால் கருமங்கள்**
**பண்ணிற் றிலன்கா ரணம்இலதேல் பண்ணும் கருமம் உளதாமோ**
**எண்ணற்(கு) உரிய சகாய(ம்)உனக்(கு) இலதாம் என்று யமன்கூற**
**நண்ணற்(கு) அரி(து)என்(று) உயர்காலன் நடந்தான் மனையின் நனிவியந்து.**

**பொழிப்புரை:** *சிதாகாசத்தில் பிறந்தவன் கர்த்தா தன்மை முதலான காரணங்கள் உடையவனாக இல்லாமையினால் கருமங்கள் செய்தவன் ஆகான். காரணம் இல்லை எனில் செய்கின்ற கருமம் நிற்குமோ? நீ செய்ய எண்ணியதற்குத் தகுந்த காரணம் உனக்கு இல்லை என்று எமதர்மன் கூற, இனி அவனைப் பிடிக்க முடியாது என்று உயர்ந்த கால தேவன் தன்னுடைய இல்லத்தை நோக்கி ஆச்சரியப்பட்டு நடந்தான்.* **(3.1.18)**

**என்னா உரைத்த முனிமுகம்பார்த்(து) இராமன் உரைப்பான் நீஇசைத்த**
**அன்னான் சுயம்பு விஞ்ஞானம் அங்கம் ஆனோன் ஒன்றாகத்**
**துன்னா நின்றோன் பிரம(ம்)எனத் துணிந்தேன் எனலும் தூயமுனி**
**முன்நாம் உரைத்த(து) அயன்தனையே மொழிந்த கதையின் முறைகேளாய்.**

**பொழிப்புரை:** *என இவ்வாறு உரைத்த வசிட்ட முனிவரின் திருமுகத்தைப் பார்த்து, இராம பிரான் கூறுவதாவது... தேவரீர் உரைத்த அன்னவன் சுயம்புவாக (தானே) உண்டானவன். பேரறிவே வடிவம் ஆனோன். ஒரே வடிவமாக விளங்குபவன், சீவ சமட்டி வடிவமாய் இருக்கும் பிதாமகனாகிய பிரமனைத் தான் என்று நிச்சயித்தேன் என்று கூறலும், பரிசுத்தமான வசிட்ட முனிவர் "முன்பு நாம் உரைத்தது அந்த அயன் தனையே. சொல்லப்பட்ட இந்தக் கதையின் கிரமத்தைக் கேட்பாயாக" என்றார்.* **(3.1.19)**

**செயல்செய் காலன் எமனுடனே செப்பும் வழக்குத் தாம்உணர்ந்தேம்**
**உயரு மனுவின் அந்தத்;தில் உலகம் எல்லாம் உண்(டு)எழுந்த**
**அயர்(வு)இல் காலன் அயன்தனையும் அடர்ப்ப முயன்ற அப்போதில்**
**துயரில் காலன் முகம்நோக்கித் துங்க யமன்ஆங்(கு) இவைசொன்னான்.**

**பொழிப்புரை:** *எல்லோரையும் தொலைக்கும் கால தேவன் எமதர்ம ராஜாவுடன் உரையாடிய விவாதத்தை உணர்ந்திருக்கிறோம். உயர்ந்த மனு ஆட்சிபுரியும் கால கட்டத்தில் உலகத்தவர் அனைவரையும் விழுங்கி எழுந்த சோர்வு இல்லாத கால தேவன் அயன் தன்னையும் தாக்குவதற்கு முயற்சி செய்த பொழுது, துயர் அடைந்த கால தேவன் முகத்தைப் பார்த்து சிறந்த எமதர்மன் அந்த இடத்தில் இந்த உபதேசம் செய்தான்* **(3.1.20)**

நிகரில் பரம ஆகாய நிமல வடிவாய் நிற்கின்ற
இகல்இல் அயனை அடர்த்தற்(கு)என்(று) எண்ணும் எண்ணம் எளிதாமோ
திகழும் வெளியே வடிவாகிச் செறிந்த பூத வடி(வு)இலனாய்ப்
புகல்சங் கற்ப புருடனைப்போல் பொன்றா(து) அயனும் பொலிந்திடுமால்.

**பொழிப்புரை:** *நிகரில்லாத மேலான சிதாகாச நிர்மல வடிவமாகத் திகழ்கின்ற பகையில்லாத அயனைக் கொன்றுவிட வேண்டும் என்று எண்ணுகின்ற எண்ணம் எளிதானதா? விளங்குகின்ற அறிவு ஆகாயமே வடிவமாகி (பொருள் இல்லாமல் சொல் மட்டும் இருக்கின்ற) சங்கற்ப புருடனைப் போல், ஒன்றோடு ஒன்று உறைகின்ற பஞ்ச பூத சம்பந்தம் இல்லாதவனாம் அயனும் கொல்லப்படாதவனாய் விளங்கிக் கொண்டிருப்பான்.* **(3.1.21)**

ஞான விண்ணாய்க் கேவலமாய் நடுவு முடிவு முதல்இல்லா
தான சுயம்பு வாம்பிரமம் அடுத்த தனது மனவசத்தால்
மான உருவம் உடையதுபோல் மன்னு புமான்போல் வயங்கிடுமால்
ஈனா மலடி மகன்போல இதுமெய்ம் மையினால் வடி(வு)இலதாம்.

**பொழிப்புரை:** *சிதாகாசமாய் தனித்ததாய் முதல் இடை கடைசி என்று இல்லாது சுயம்புவான பிரம்மம், அடுத்திருக்கின்ற தனது மன சங்கற்ப வசத்தினால் புகழும் உருவம் உடையது போல, நிலைபெற்ற புருடனைப் போலவும் விளங்கிடும். ஆனால் பெற்றெடுக்காத மலடி மகன்போல, வாஸ்தவமாக (உண்மையாக) இதற்கு வடிவம் இல்லை.* **(3.1.22)**

என்று காலன் தனக்(கு)இயமன் இசைத்தான் என்றோன் முகநோக்கி
நின்ற ஆதி வாகியமாய் நிகழ்ந்த ஆதி பௌதிகமாய்
ஒன்றும் உடலம் உயிர்க்(கு)எல்லாம் உபய விதமாம் பிரமனுக்குத்
துன்றும் ஆதி வாகியமாம் சூக்க உடல்ஒன்(று) ஆய(து)என.

**பொழிப்புரை:** *என்று கால தேவனுக்கு எமதர்மன் உரைத்தான் என்று கூறிய வசிட்ட முனிவர் திருமுகம் நோக்கி, இராம பிரான் "(வாசனா வசத்தினால் நிலைபெற்ற) சூக்கும உடலும் (ஆதி வாகியமாய்) வந்து போகின்ற ஆதி பௌதிக உடல் ஒன்றும் ஆக இரண்டு விதமாக எல்லா உயிர்களுக்கும் இருக்கின்றது. ஆனால் அயனுக்கு நெருங்கிய சூக்கும உடல் ஒன்று மட்டும் இருப்பது என்ன காரணம்?" என்று கேட்டார்.* **(3.1.23)**

பிரம ஒளியால் பிறந்தசகம் பிறக்கும் உயிர்க்குக் காரணமாய்
விரவும் அதனால் உயிர்க்(கு)எல்லாம் மேவும் உடலம் இரண்டாகும்
பரம பிரமத் தினைஒழியப் பயில்கா ரணம்வே(று) இலாமையினால்
வர(வு)இல் அயனுக்(கு) ஓர்உடலாய் மருவும் ஆதி வாகியமே.

**பொழிப்புரை:** *பிரம்மத்தின் பிரகாசத்தினால் உண்டான உலகம் பிறக்கின்ற உயிர்களுக்கு எல்லாம் காரணமாய் கலந்து கொண்டிருக்கும் அந்தக்காரணத்தால் பொருந்துகின்ற உடல் இரண்டாகும். (பிரம்மத்தின் அம்சமாக சூக்கும உடலும், பஞ்ச பூத உலகத்தால் தூல உடலும் என உயிர்களுக்கு காரணம் ஆவதால் இரண்டு உடல்கள்*

*அமைகின்றன). மேலான பிரம்ம சொரூபத்தினைத் தவிர்த்து வேறு உபாதான காரணம் இல்லாமையால், போக்கு வரவு இல்லாத அயனுக்கு சூக்கும உடல் ஒன்றுமட்டும் பொருந்தும்.* **(3.1.24)**

**சகக்கா ரணமாம் அயனுக்குத் தானே தோன்றும் மனவடிவாய்**
**மிகத்தாம் சகத்து விரிந்திடலால் விரிந்த எல்லாம் மனவடி(வு)என்(று)**
**உகப்பால் உரைத்த வசிட்டனைப்பார்த்(து) உலக மாயை தனைவிரித்த**
**மகத்தா மனத்தின் வடிவுதனை வகுத்(து)ஓ(து) என்ன முனிசொல்வான்.**

**பொழிப்புரை:** *மூவுலகிற்கும் காரணமான அயனுக்குத் தானே (சுயமாக) மனமாத்திரமாகத் தோன்றும் தன்மை இருந்ததினால், சகமானது விரிந்து காணப்படுகின்றது. விரிந்து காணப்படும் எல்லாம் மனவடிவம் என்று சந்தோஷத்தோடு உரைத்த வசிட்டரைப் பார்த்து, உலக மாயை தனை விரியுமாறு செய்த மகத்தான மனதின் வடிவினைப் பிரித்து தெளிவாகத் தெரிவிக்குமாறு இராம பிரான் கேட்க, முனிவர் கூறுவான்.* **(3.1.25)**

**சடசூ னியமாய் எங்கணும்சேர் தனிநெஞ் சுக்குப் பேர்ஒழிய**
**உடனாம் ககனம் தனைப்போல உள்ளும் புறமும் உரு(வு)இலதாம்**
**படர்தீர் மெய்பொய் எனும்பொருளில் பயில்தோற் றரவே மனமாகும்**
**தொடர்சங் கற்பம் எங்குளதாம் தோன்று மனமும் அங்குளதே.**

**பொழிப்புரை:** *சடம், சூனியமாய் எல்லாவிடத்திலும் சேர்கின்ற தனித்த மனதிற்குப் பெயர்தான் இருக்கிறதே ஒழிய, ஆகாயத்தைப் போல உட்புறத்தும் வெளிப்புறத்தும் உருவம் இல்லை. எல்லாவிடத்தும் காணப்படுகின்ற உண்மை-பொய் என்னும் பொருள்களில் அந்த பொருள்களை அடைந்து புலப்படுவதே மனம் ஆகும். தொடர்ந்து வரும் சங்கற்பம் எங்கெங்கு இருக்கின்றதோ புலப்படும் மனமும் அங்கங்கு இருக்கின்றது.* **(3.1.26)**

**மனத்தின் வடிவு சங்கற்பம் மற்(று)இவ் விரண்டும் ஒன்றாகும்**
**அனர்த்தம் மோகம் மலம்பந்தம் அவித்தை மாயை தமம்முதலாம்**
**இனத்த பெயர்சங் கற்பத்துக்(கு) ஏற்ற பெயராம் இதுநழுவில்**
**கனத்த சகக்காட் சியும்போகும் கதிர்விட்(டு) எறிக்கும் பரவடிவம்.**

**பொழிப்புரை:** *மனதின் வடிவம் சங்கற்பம் ஆகும். மனம், சங்கற்பம் என்னும் இந்த இரண்டும் ஒன்றே தான். சம்சாரம், மோகம், மலம், பந்தம், அவித்தை, மாயை, தமம் முதலான இத்தகைய பெயர்கள் சங்கற்பத்துக்கு (மனோ விகாரத்துக்கு) ஏற்ற பெயர்கள் ஆகும். இது நழுவி விட்டால் திடமாகக் காட்சி அளிக்கும் சகம் முதலானவை தொலைந்து போகும். மேலான சுயம்பிரகாச சைதன்னியம் பிரகாசித்துக் கொண்டிருக்கும்.* **(3.1.27)**

நிற்ப நடப்ப எனும்அனைத்தின் நிழல்ஆ டாது வெறி(து)இருக்கும்
தற்ப ணம்தான் எப்படியோ தானே விளங்கும் அப்படியே
கற்பம் உறுநீ நான்முதலாம் காட்சி விகற்பம் எலாம்அடங்கி
அற்பம் எனினும் காட்சிஅறில் அதுவே தனிக்கே வலநிலைமை.

**பொழிப்புரை:** *நிற்பது, நடப்பது என்னும் எல்லாவற்றின் பிரதி பிம்பமும் தோன்றாது சும்மா இருக்கும் கண்ணாடி எப்படி விளங்குமோ, அப்படியே தான் மாத்திரமாய்த் தெளிவாய் விளங்கும், ஆயிரம் கோடி கற்பனை செய்து கொண்டிருக்கும் நீ, நான், மூவுலகம் முதலாகக் காணப்படும் விபரீதம் எல்லாம் அடங்கி, ஒரு சிறிது அளவும் காணப்படுபவை தோன்றாது அழியுமாயின் அதுவே ஒப்பற்ற சொரூப நிலையாகும்.* **(3.1.28)**

### (எண்சீர் ஆசிரிய விருத்தம்)

காண்பரிய மனக்காட்சிப் பொருளை எல்லாம்
கனவுதரு கனவுபோல் காட்டா நிற்கும்
பூண்ப(து)இலா மனம்சலன சத்தி யாலே
பொலியு(ம்)அசை யும்தியங்கும் போகும் மீளும்
வீண்பயிலும் செருக்குமிகும் அகங்க ரிக்கும்
வேற்(று)உருவாம் பெருங்கற்ப மேவும் போதில்
சேண்படஎல் லாப்பொருளும் தீர மாய்ந்து
செறியு(ம்)உப சாந்தமே சேடம் ஆகும்.

**பொழிப்புரை:** *எக்காலத்தும் இல்லாததாயும், அசத்து ஆயினும் இருப்பது போல் தோற்றும் பொருள்களை எல்லாம், கனவானது மற்றொரு கனவை உண்டாக்குவது போல் வாசனை மயமாகக் காட்டும். ஒரு இடத்தில் நிற்காமல், மனமானது அசைகின்ற தன்மையாலே விளங்கும், சஞ்சலிக்கும், மயங்கும், போகும், மீண்டும் வரும், உயர்வை விட்டு தாழ்வை அடையும். பிரளயம் வந்த போது ஆகாயம் உண்ட எல்லாப் பொருளும் முழுவதுமாக லயம் ஆகி முடிவில் உபசாந்தமே எஞ்சி நிற்கும்.* **(3.1.29)**

### (அறுசீர் ஆசிரிய விருத்தம்)

அத்தமி யாத சோதி அருக்கனாய் அளவி லாதாய்
மெத்திய பிணிஇ லாதாய் மேவரும் பிறப்(பு)இ லாதாய்
எத்தலங் களினும் என்றும் யாவுமாய் யாவும் செய்து
முத்தியும் ஆகி ஓங்கு முதல்பரம் பொருள்ஒன்(று) உண்டு.

**பொழிப்புரை:** *அத்தமிக்காத சோதியாகிய சூரியனாய், அளவில்லாததாய், நோய்கள் இல்லாததாய், அடைகின்ற பிறப்பும் இல்லாததாய், எல்லா இடங்களிலும் என்றும் எல்லாம் ஆகி, எல்லாவற்றையும் செய்வதாகி, எல்லாவற்றிலும் விடுபட்ட முத்தியும் ஆகி, திகழ்கின்ற இரண்டற்ற பரம்பொருள் ஒன்று இருக்கிறது.* **(3.1.30)**

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

பகர்வரிதாய் முத்தரால் பயில்வது) ஆகிப்
பரமுதலாம் புதிதான பலபேர் பெற்று
மிகஉணர்சாங் கியர்புருடன் என்றும் சுத்த
வேதாந்தம் விளங்கினோர் பிரமம் என்றும்
துகள்அறுவிஞ் ஞானிகள்விஞ் ஞானம் என்றும்
சூனியர்சூ னியம்என்றும் சொல்லப் பட்டும்
திகழ்இரவி தேசுக்கும் தேசாய் நின்று
தே(சு)அளித்துத் திகழ்வித்துத் திகழா நிற்கும்.

**பொழிப்புரை:** *சொல்வதற்கு அரிதாய், சீவன் முத்தர்களால் அடையத் தக்கதாய், உபதேசிக்கும் பொருட்டாக பரமாத்மா முதலாகப் புதியதான பல பெயர்களைப் பெற்று, சாங்கியர் புருடன் என்றும், சுத்த வேதாந்திகள் பிரம்மம் என்றும், குற்றம் அற்ற யோகசாரர், பௌத்தர்கள் சணிக விஞ்ஞானம் எனவும், மாத்திய மிக பௌத்தர்களாகிய சூனியவாதிகள் சூனியம் எனவும் பல பெயர்களால் சொல்லப்பட்டு, சுயம் சோதியாய், சூரியன் முதலான ஒளிகளுக்கும் ஒளிதருவதாய், பிரகாசிக்கச் செய்து திகழ்கின்றது.* **(3.1.31)**

உரைபகர்வோன் உசாவிடுவோன் கேட்போன் காண்போன்
உண்பவன்சிந் திப்பவனாய் உலகில் மெய்யில்
திரம்உறமே வியும்மேவாப் பொருளி னின்றும்
தினகரன்தே(சு) எனச்சித்தின் திகழ்ச்சி உண்டாம்
விரைமனம்வேர் கரணமலர் அண்டம் காயாய்
விண்ணெழும்மா யைக்கொடியை விதிர்க்கும் காற்றாம்
புரைசெ(ய்)உடல் செப்பனைத்துள் மணியாய் நிற்கும்
புணர்புரியட் டகஉடலைப் போய்மீள் விக்கும்.

**பொழிப்புரை:** *விளக்கம் சொல்பவன், விசாரம் செய்பவன், கேட்பவன், காண்பவன், உண்பவன், சிந்திப்பவன் ஆகி உலகிலும், தேகத்திலும் எல்லாவற்றுக்கும் அதிஷ்டான (ஆதார) வடிவமாய் இருத்தலால் திடமாகப் பொருந்தியும், எல்லாவற்றுக்கும் வேறாவதால் பொருந்தாமலும், தோற்றத்திற்குப் புலப்படாத பரமான்மாவிலிருந்து சூரிய ஒளியைப் போல சித் (அறிவு) பிரகாசமானது பரவி நிற்கும். அதற்கு வேகமாய்ச் செல்லும் மனமானது வேர் ஆகவும், புலன்கள் கரணங்கள் மலராகவும், பிரம்மாண்டம் காய் பழம் ஆகவும், ஆகாயத்தில் விரிந்து எழுந்த மாயை என்ற கொடியை ஆட்டுவிக்கும் காற்றாகும். ஒன்பது துவாரங்கள் உள்ள தேகத்தில் செப்பு (சிமிழ்) அதனுள் மணிபோல் இருக்கும் சூக்கும தேகத்தை இங்கும் அங்கும் அலைவிக்கும்.(அதுவே பரமான்மா)* **(3.1.32)**

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

சுத்தஅறி(வு) ஆதலால் ஆகாய பாவனையால் சூழ்விண் ணாகும்
அத்திறனே எப்பொருளும் பாவித்த போ(து)உள்ள(து) அதுவாம் அந்தச்
சித்திடையே மூவுலகும் திடர்கானல் எனத்தோன்றிச் சிதையும் பல்கால்
இத்தனையும் செய்யவும்தான் இத்தனையும் செய்யாமல் இருக்கும் அன்றே,

**பொழிப்புரை:** *பிரம்மம் தூய அறிவு மயமாவது. ஆதலால் ஆகாயத்தின் பாவனையால் ஆகாயம் ஆகும். அம்முறையாகவே எல்லாப் பொருள்களையும் பாவனை செய்கின்ற போது அந்தப் பொருள்களாம். அந்த அறிவு ஆன்மாவில் மூன்று உலகமும் பாலை நிலைத்தில் கானல் நீர் தோற்றம் அளிப்பது போல அனேக முறைகள் தோன்றி மறையும். மாயை மாயா காரியங்களின் கூட்டத்தைத் தோற்றி வைத்து விளையாடின போதிலும், நிர்விகாரமாக இருப்பதால் எதையும் எப்போதும் செய்யாமல் இருக்கும்.* **(3.1.33)**

**நிருவிகற்ப ஆன்மாவில் சகத்தோற்றம் ஒடுக்க(ம்)இவை நேராய் இல்லை**
**மருவிகற்பப் பேதமுறாப் பராபரமாம் அப்பொருளை வயங்கக் கண்டால்**
**பெருமனக்கட்(டு) அறும்ஜயம் அறும்கருமம் அறும்என்றான் பெரியோன் வள்ளல்**
**ஒருகடுகில் பொன்மேரு புகில்அன்றோ பிரமாண்டம் ஒடுங்கும் என்றான்.**

**பொழிப்புரை:** *நிருவிகற்ப ஆன்மாவில் சகமானது உதயமாவது, நிலைபெறுவது, ஒடுங்குவது ஆகியவை உண்மையில் இல்லை. விகற்பத்தால் வரும் பேதம் இல்லாத பரமான்மாவைச் சந்தேக மயக்கம் இன்றிக் கண்டால், பெரிய மனதின் கட்டு (அகங்கார முடிச்சு) அற்றுப் போகும். சந்தேகம் எல்லாம் அற்றுப் போகும். கருமங்கள் அற்றுப் போகும் என்று வசிட்டர் கூறியதும், வள்ளல் ஆகிய இராம பிரான் சிறியதான கடுகில் மேருமலை புகுந்தால் தானே அண்டங்கள் எல்லாம் ஒடுங்கும் என்று சந்தேகத்தைக் கேட்டார்.*

*(எந்த அளவைகளைக்-பிரமாணங்களைக் கொண்டு எந்தப் பொருள் அறியப்படுகின்றதோ அது அவ்வாறே இருக்குமே தவிர வேறு பொருளாக ஆகமாட்டாது. பிரம்மம் அறியப்படுவதில்லை, அதனைச் சத்துரூபம் என்று நிச்சயிப்பது எப்படி? உலகமோ அறியப்படுவதாய் இருப்பதால் அதனை அசத்து என்று கூறுவது எப்படி? இவ்விரண்டு கேள்விகளில் முதல் கேள்விக்குச் சமாதானம் (பதில்) கூறிக் கொண்டு வந்து, காணப்படும் பொருள்கள் மித்தை என்று அறிந்தால் ஒழிய பிரம்ம தத்துவத்தை எக்காலத்தும் அறிய முடியாது என்பது திண்ணம் என்பது இங்கே உட்பொருள். மற்றும் அதிசூக்கும பிரம்மம் அறிவு வடிவமாய் இருப்பது உண்மை என்றால், விரிந்து பரந்திருக்கிற சடமான அண்டங்கள் எல்லாம் அதில் அத்தியஸ்தம் ஒடுங்குவது எவ்வாறு என்பதே சந்தேகம்.)* **(3.1.34)**

**அருந்தவன்சொல் வான்நூலால் நல்லோரால் திங்களால் அன்றி நாளால்**
**தெரிந்துவிடும் பன்னூலின் சித்தாந்தம் இதுவிதனைச் சிந்தை செய்யில்**
**புரிந்தபுவி இராநிற்கப் போய்ஒளிக்கும் நிட்டையுடன் போத ஞானம்**
**விரிந்(து)உணர்வோர்க்(கு) உயர்சீவன் முத்திபெற லாம்இதுவே விதேக முத்தி.**

**பொழிப்புரை:** *அரிய தவத்தினை உடைய வசிட்ட முனிவர் சொல்வதாவது... வேதாந்த நூல்களாலும், சாதுசங்கத்தினாலும் மாதக் கணக்கு இன்றி நாட்கணக்கில் இந்த பர போதத்தை அடைந்துவிடலாம். பல நூல்களின் கருத்து இதுவே ஆகும். இதனைத் தொடர்ந்து விசாரித்துக் கொண்டிருந்தால் மனக் கற்பனை புரிந்ததினால் தோற்றம் அளிக்கின்ற காணப்படும் இந்த உலகமானது அஸ்தமிக்கும் (அதாவது தெரியாமல் போகும்). ஞான நிட்டையுடன் கருமத்தைத் தியாகம் செய்து ஞானத்தை*

*விசாரிப்பவர்களாய் இருக்கும் உணர்வுடையவர்களுக்கு உயர்ந்த நிலையான சீவன் முத்தி அடையலாம். இதுவே தேகத்தை விட்ட பின்பு விதேக முத்தியாக அமையும்.* **(3.1.35)**

**என்பதுசொல் லியமுனியை உடல்இறந்த வீடு(ம்)உடல் இருந்த வீடும்**
**நன்பழநூல் வழிஇயற்ற நவில்(க)என்ற இராமனுக்கு நல்லோன் சொல்வான்**
**வன்பலசெய் கையில்பயின்று முன்தோன்றும் விண்தோன்றா வகைமை உற்றோர்**
**இன்பமுற வரும்சீவன் முத்திபதம் பெற்றுயர்ந்த இயல்பி னோரே.**

**பொழிப்புரை:** *இவ்வாறு கூறிய வசிட்ட முனிவரை நோக்கி, "உடல் இறந்த வீடு (விதேக முத்தி), உடல் இருந்த வீடு (சீவன் முத்தி) இவ்விரண்டினையும் பழைய நல்ல நூல்களின் வழியிலே பயிற்சி செய்யும் பொருட்டு அவற்றை அடைந்தவர் இலக்கணத்தை கூறி அருள வேண்டும்" என்று இராம பிரான் கேட்க, உத்தமராகிய வசிட்ட முனிவர் கூறுகின்றார். பலவிதமான கஷ்ட நஷ்ட இலாபத் தொழில்களோடு கூடி விவகாரம் செய்தும், முன் தோன்றும் ஆகாயம் முதலியவை தோன்றாமல் அவற்றிற்கு வேறாகவே பரமாத்மா தோன்றும் தன்மையை அடைந்தோர் பேரின்பம் மேலிட்டு வர சீவன் முத்தி பதத்தைப் பெற்று உயர்வடைந்த சுபாவத்தினர் ஆவர்.* **(3.1.36)**

**மிகவருகா மாதிகளாம் விகார(ம்)அடைந் தும்விண்போல் மிகநொய் தானோர்**
**அகம்எனல்இன் றிச்செயல்கள் செய்தாலும் தவிர்ந்தாலும் அழுத்தம் அற்றோர்**
**சகநெறிகள் செய்திடினும் அன்னியர்போல் கண்டுகுளிர் தன்மை சான்றோர்**
**திகழ்மனமும் நினைவு(ம்)இருந் தும்சிறிதும் இல்லாதோர் சீவன் முத்தர்.**

**பொழிப்புரை:** *பிராரப்த வினையின் காரணமாக மிகுந்து வந்த அந்தக்கரணத்தின் பரிணாமமாகிய விருப்பு வெறுப்பு என்ற விகாரம் அடைந்த போதிலும் ஆகாயம் போல் மிகவும் தெளிந்து பற்று அற்றவராக இருப்பர் சீவன் முத்தர். அகங்காரப் பாவனை இன்றி நித்திய கரும அனுட்டானங்களைச் செய்த போதிலும், செய்யாத போதிலும் திடவாசனையைப் பொருந்தாதவர் சீவன் முத்தர். உலகப் பொருள்களில் விவகாரம் செய்தாலும் மற்றவர்கள் விவகாரம் செய்வது போலவே மனம் விகாரப்படாமல் குளிர்ந்து இருப்பவர் சீவன் முத்தர். சம்சார சம்பந்தமான எண்ணங்கள் வரப்பெற்றாலும் கொஞ்சமும் உள்ளுக்குள் இல்லாதவர் (பற்றாதவர்) சீவன் முத்தர் (வாழும் போதே விடுபட்டவர்) ஆவர்.* **(3.1.37)**

**துக்கசுங் களில்அமிழ்ந்தி மிதவாத புந்திநிலை சுபாவம் ஆனோர்**
**புக்கசுழுத் தியில்நனவாய் நனவின்றி வாதனைதீர் போதம் உற்றோர்**
**மிக்கசம மாய்உலகால் வெருளாமல் உலகினையும் வெருட்டா மேலோர்**
**சிக்கறநல் நினை(வு)இருந்தும் நினைவிலா தவர்இவரே சீவன் முத்தர்.**

**பொழிப்புரை:** *சுக துக்கங்களில் மூழ்கியும் அதனுடன் சேராத புத்தியை உடைய இயல்புடையவர். மனம் முதலியவை ஒடுங்கிய ஆழ்துயிலில் (சுழுத்தியில்) சொரூப விழிப்பாய் (உடல் உறங்கினாலும் உணர்வு உறங்காமல் இருந்து), வெளி உலக நனவு நிலை இன்றி, வாசனைகள் நாசமான ஞானம் அடைந்தவரே சீவன் முத்தர். முற்றிலும்*

*சமமான பார்வையை அடைந்து உலகத்தவரால் பயம் அடையாமல், உலகத்தவரைப் பயப்படச் செய்யாத மேன்மை மிகுந்தவர் சீவன் முத்தர். உலக பந்தம் அற ஆத்மாகார நினைவு இருந்தும், அனாத்மா நினைவு இல்லாதவர் சீவன் முத்தர்.* **(3.1.38)**

**நிலையான இச்சீவன் முத்தியைவிட்டு உடல்இறந்தால் நிறைந்த வாயு**
**அலையாமல் நிற்பதுபோல் உடல்இல்லா முத்திபெறும் அதனின் தன்மை**
**தொலையாது மறையாது தோன்றாது நணித்தல்ல தூரத் தல்ல**
**உலையாது முடியாது நான்அல்ல பிறன்அல்ல ஓன்றும் அல்ல.**

**பொழிப்புரை:** *பிராரப்த வினை இருக்கும் அளவும் இருக்கின்ற சீவன் முத்தி நிலை விடுபட்டு, தேகமானது இறந்து வீழ்ந்தால் சூழ்ந்துள்ள காற்றானது சலனப்படாமல் இருப்பது போல் தேகம் இல்லாத விதேக முத்தி தன்மையை அடையும். அதன் நிலை யாதெனில் உதயமும் அத்தமனமும் லயமும் (ஒடுக்கமும்) ஆகாது, சமீபத்தில் உள்ளவன் அல்லன், தூரத்தில் உள்ளவன் அல்லன், சத்தும் அல்ல, அசத்தும் அல்ல, மற்றவனாகவும் ஆகான். ஒரு பொருளாகவும் ஆகான்.* **(3.1.39)**

**இருள்அன்றி ஒளிஅன்றி அளவன்றி அலை(வு)அன்றி இயல்(பு)ஒன்(று) இன்றிப்**
**பொருகின்ற பூதங்கள் பலபொருள்கள் அன்றிநிறை புரணம் ஆகி**
**உருவன்றி அருவன்றி உள(து)அன்றி உண்(டு)இல்லை அன்றி ஒன்றாய்**
**வருகின்ற திரிபுடியின் நடுத்தோன்றும் மறவாது மதித்துக் கொள்வாய்.**

**பொழிப்புரை:** *இருள் இன்றி, ஒளியும் இன்றி, அளவு என்பதும் இன்றி, அசையாததாய், இது இயல்பு என்ற ஒன்றும் இன்றி (இயல்பு இது என்று குறிப்பிட முடியாததாய்), ஒன்றுக்கொன்று முரண்படுகின்ற பொருள் கூட்டங்களில் பார்வை இன்றி, நிறைந்த பூரணமாகி, உருவம் இன்றி, அருவம் இன்றி, சத்து அசத்தாக இல்லாது இரண்டற்ற ஒன்றாகி, மாறி மாறி வருகின்ற காண்பான்-காட்சி-காணப்படு பொருள் என்ற மூன்றின் நடுவில் தோன்றும் ஒன்றினை மறவாமல் எப்பொழுதும் கண்டு நினது வடிவமாயும், விதேக முத்தியாகவும் அறிவாய்.* **(3.1.40)**

**அவ்வகையாம் பரவடிவை அறிவுநிறை வுறவிரிவாய் அருள்வாய் என்ற**
**செவ்வியவள் ளலுக்குமுனி செப்புவான் பெரும்கற்பம் சேர்ந்த போதில்**
**எவ்வகைமூ லங்களுக்கும் மூலமாம் பிரமமே இலங்கா நிற்கும்**
**வவ்வுமனத் தொழில்மாற்றித் தனைமாய்த்தால் பெயர்இறந்த வஸ்து வாகும்.**

**பொழிப்புரை:** *அந்த ஆனந்தமாகிய பரமார்த்த வடிவைப் பூரண போதம் நிறைவாகும் பொருட்டு விரிவாக அருளிச் செய்வீர் என்று கேட்ட சிறந்த குணங்களை உடைய வள்ளலாகிய இராம பிரானுக்கு வசிட்ட முனிவர் கூறுவதாவது... மகா பிரளயம் வரும் போது, எல்லாக் காரணங்களுக்கும் மூலமான பிரம்மமே எஞ்சி இலங்கும். விஷய வாசனைகளால் தாவி ஓடுகின்ற மனோ விருத்திகளை நாசம் செய்து, தன் மனதையும் லயமாக்கித் தன்னை இழந்தால் பெயர் இல்லாத சத்து உருவம் அந்த வஸ்துவின் வடிவமாகும்.* **(3.1.41)**

**தெரித்(து)அறியும் பொருள்நோக்காச் சீவஅறி(வு) அதுவாகச் செப்ப லாகும்**
**விரித்தபுலன் அனுபவித்தும் அனுபவியா மனம்அதுவாய் விளம்ப லாகும்**
**புரித்தஉணர்(வு) ஒளிநெஞ்சம் உல(கு)இவற்றின் அறிவதுவாய்ப் புகலல் ஆகும்.**
**பருத்ததொழில் செய்யினும்கல் போல்இருக்கும் நிலைஅதுவாய்ப் பகர லாகும்.**

**பொழிப்புரை:** *சுட்டி காட்டப்படுவதால் அறிகின்ற பொருளாக ஆகாத கூடத்தன் தத் பதத்தின் லட்சியார்த்தமான வஸ்து என்று சொல்லப்படும். புலன்கள் சப்தம், பரிசம் முதலான விஷயங்களை அனுபவித்தும், அனுபவிக்காத மனம் தத் பத லட்சியார்த்தமான பிரம்மம் என்று சொல்லப்படும். வெளிப்புற உணர்வு, தோற்றம், மனம், அஞ்ஞானம் இவற்றை அறிகின்ற சாட்சியே அந்தப் பரமான்மாவின் வடிவமாகச் சொல்லப்படும். மிகுந்த விவகாரத்தோடு கூடிய கருமம் செய்தாலும் கல் போல் அசையாமல் இருக்கும் நிலையே அந்த பரமான்ம வடிவமாய்க் கூறப்படும்.* **(3.1.42)**

**முடிவுகன(வு) அஞ்ஞானம் இல்லாநீள் துயில்அதுவாம் மும்மை யாகி**
**அடர்தருஞா துருஞானம் ஞேயம்எழுந்(து) ஒடுங்கு(ம்)இடம் அதுவே ஆகும்**
**திடவிசும்(பு)அன் றாயிருந்தும் விசும்பான நிலைஅதுவாம் சித்தம் புந்தி**
**படர்மனம்போய்த் தாவரம்போல் பெறும்உ(ள்)அறி(வு) ஒப்பாம்அப் பரம ரூபம்.**

**பொழிப்புரை:** *நனவு கனவு அஞ்ஞானம் இல்லாத ஆழ்துயில் இருக்கும் இயற்கை அறிவான அதுவே அந்தப் பரமாத்மாவின் வடிவமாகும். மூன்றாக விவகாரம் செய்யும் அறிபவன்-அறிவு-அறியப்படும் பொருள் ஆகியவை எழுந்து ஒடுங்குகின்ற இடமான அதுவே அந்தப் பரமாத்மா ஆகும். லௌகீக உலகில் திடமான ஆகாசமாக இல்லாமல் சிதாகாசமாக இருக்கின்ற அதுவே பரமான்ம வடிவாம். சிந்திக்கின்ற சித்தம், நிச்சயிக்கின்ற புத்தி, விஷயங்களில் செல்கின்ற மனம் இவை ஒழிந்து சாந்தியாகி தாவரம் போல உள் உணர்வு மாத்திரமாய் நிற்கும் அந்த நிலையே பரமான்ம வடிவம்.* **(3.1.43)**

**அயனொடுமால் சங்கரனும் சதாசிவனும் இந்திரனும் அருக்கன் தானும்**
**வியனி(ல்)உப சாந்தராம் வேலையினில் உபாதியெலாம் விட்டு நீங்கிப்**
**பயனில்சகம் என்கின்ற பற்(று)அகன்று சின்மயமாம் பரம ரூபம்**
**உயர்விகற்பம் இலாவடிவாம் எங்குநிறை சிவமாகி ஒன்றாய் நிற்கும்.**

**பொழிப்புரை:** *அயன், அரி, அரன், சதாசிவன், இந்திரன், சூரிய சந்திரர்களும் பெருமையான உபசாந்த நிலையைப் பெறும் போது, அந்தந்த அதிகாரத்துக்கான வேடங்களை நீங்கி, அதனால் எந்த ஒரு பயனும் இல்லாமல் உலகம் என்று சொல் மாத்திரமாக உள்ள பற்றினையும் தொலைத்து, சின்மாத்திரமாய் பரமாத்மா, எல்லா விகற்பங்களும் இல்லாத வடிவமாம் நிர்விகற்பமாய் எங்கும் நிறைவாகி மங்கல வடிவமாய் இரண்டற்ற ஒன்றாய் நின்று இலங்கும்.* **(3.1.44)**

**(உற்பத்திப் பிரகரணத்தில் ஞான விண்மகன் கதை முற்றும்)**

# (ii) லீலை கதை

*முன் ஞான விண்மகன் கதையில் சின்மாத்திர வடிவமாய பரமான்மாவிற்கு மாயையே மனமாகி உலகத்தைப் படைப்பதாகக் கூறப்பட்டது. இப்போது லீலை கதையில் சகம் மாயாமயம் என்பதை வெளிப்படையாக்க மாயையின் மகா துர்க்கட காரணத்தன்மை கூறப்படுகின்றது.*

இந்தப்பொருள் ஐயம்(ம்)அறுத்(து) இளைப்பாறு மாறு(று)ஓர்
முந்தக்கதை கேள்குணம் முற்றிவி வேகம்(ம்)உற்றோன்
விந்தைப்புயத் தோன்பது மப்பெயர் வேந்தன் மண்மேல்
சிந்தைக்(கு)இனி தாம்குண லீலைஅச் செம்ம(ல்)தேவி.

**பொழிப்புரை:** *மேற்கூறிய அர்த்தம் சந்தேகம் இல்லாமல் சித்தத்தில் அமைதியுறும் வண்ணம் முதன்மையானதும் பழமையானதும் ஆன ஒரு கதையைக் கூறுகிறேன். கேட்பாய். நல்ல குணங்களுக்கு இருப்பிடமாயும், மரியாதை செலுத்துவதில் உயர்ந்த விவேகம் உள்ளவனாயும், பகையை விரட்டக் கூடிய தோள் வலிமை உடையவனாயும், பத்மராஜா என்ற பெயர்கொண்ட அரசன் இப்பூமியில் இருந்தான். அவனுக்கு மனம் மகிழ நடந்து கொள்வதில் கல்யாண குணங்களை உடையவளாய் லீலா தேவி என்ற பட்டத்து ராணி இருந்தாள்.* **(3.2.1)**

அன்னான்நிழல் போல்மனம் போல்அயல் அற்றஅன்னாள்
நன்நாயகன் மூப்(பு)இறப்(பு) இன்றிநற் காளையாகி
எந்நாளும்ஒத்(து) இன்புற என்கொல்உ பாய(ம்)என்னத்
தொன்நான்மறை யோர்க்(கு)உரைத் தாள்அவர் சொல்லலுற்றார்.

**பொழிப்புரை:** *அந்த அரசனுடைய நிழல் போல, மனம் போல, வேறாக இல்லாத லீலா தேவி தன்னுடைய நல்ல நாயகன் எப்பொழுதும் மூப்பு இறப்பு எய்தாமல் காளைபோல் இளமையுடன் இருந்து இன்பம் துய்க்க என்ன உபாயம் என்று பழமையான நான்கு வேதங்களை ஓதி உணர்ந்த வேதியர்களிடம் கேட்டாள். அவர்கள் அதற்கு பதில் சொல்லத் தொடங்கினர்.* **(3.2.2)**

செபமும் தவமும் முதல்யாவையும் சித்தி நல்கும்
புவனங் களில்பொன் றுதல்போக்(கு) அரிது யார்க்கும் என்ன
இவள்சிந்தை செய்வாள் இறைவற்கு முன்யாம் இறந்தால்
கவலொன்(று)அறத் தற்பத வாழ்வு கைகூடல் ஆகும்.

**பொழிப்புரை:** *செபம், தவம் முதலான யாவற்றையும் செய்தால் அட்டமா சித்திகள் முதலான வற்றைத் தரும். உலகங்களில் எந்த இடத்தில் இருந்தாலும் யார்க்கும்*

*மரணத்தைத் தவிர்த்தல் என்பது முடியாத காரியம் ஆகும் என்று வேதியர்கள் சொல்ல. லீலையானவள் தன் சிந்தையில் யோசிக்கலானாள். நாயகனாகிய அரசனுக்கு முன்பு யாம் தெய்வத்தின் அருளினால் இறந்து போனால் கவலை இல்லாத தத் பதமாகிய மோட்ச வாழ்வை அடைந்து பரமானந்தம் அடையலாம்.* **(3.2.3)**

**இறைவன் முதல்சாகில் அச்சீவனை இந்த வீட்டில்**
**உறையும் படிசெய்(து) அதுஎன்னை உவந்து காண்க**
**நிறைஇன்பம் எய்தி இருப்பேன் இதுநேரு மாறு**
**மறைதந்த வாணிபதம் ஏத்துவன் வாழ்த்தி என்றே.**

**பொழிப்புரை:** *நாயகன் தனக்கு முன்பு இறந்துவிட்டால் அந்தச் சீவனை இந்த சுத்தாந்த மண்டபத்தில் இருக்குமாறு செய்து அது என்னை மகிழ்ந்து கண்டுகொண்டிருக்க பூரணமான இன்பத்தை அடைந்திருப்பேன். இது நிகழும் வண்ணம் வேதங்களைத் தந்த சரசுவதி தேவி பதங்களை வாழ்த்தி வணங்குவேன்.* **(3.2.4)**

**மன்னற்(கு)உரை யாதுநன் மந்திரம் கற்பம் வல்லோர்**
**சொன்னத்தில் நின்றுசுரர் பூசுரர் பூசை பண்ணி**
**அன்னத்தை நாள்நான்கி னுக்(கு)ஓர் பகல்அற்ப மாய்உண்(டு)**
**இன்நிட்டை யாலே மதிபத்து நடந்த எல்லை.**

**பொழிப்புரை:** *மன்னவனுக்குச் சொல்லாமல், நல்ல மந்திரம் கற்ப சாத்திரம் அறிந்தவர்கள் உரைத்தபடி தேவ பிராமண குரு பிராஞ்ஞ வித்வான்களை முறைப்படி பூசை செய்து, அன்னத்தை நான்கு நாட்களுக்கு தினம் ஒரு பகல் மாத்திரம் கொஞ் சமாய் உண்டு, இனிமையுடன் நிட்டை செய்து பத்து மாதங்கள் கழிந்த போது.*
**(3.2.5)**

**வானார்மதி போல்நிற வாணி மகிழ்ந்து தோன்றி**
**நீநாடிய(து) என்னென நீள்பவ மாம்நெருப்புக்(கு)**
**ஆனா அமுதக் கதிரேஅகத் துன்பமென்னும்**
**பாநாள்அ கற்றும் கதிரேஎனப் பாதம் ஏத்தி.**

**பொழிப்புரை:** *வானில் திகழ்கின்ற பூரண சந்திரனைப் போன்ற குளிர்ச்சியும் நிறமும் உடைய சரசுவதிதேவி (லீலையின் பூசைக்கு) மகிழ்ந்து தோன்றி, நீ நாடியது என்ன என்று கேட்க, எழுவகைப் பிறவிகளாகிய நெருப்பினைச் சாந்தி செய்வதற்கு ஒழியாத அமுத கிரணங்களை வீசும் சந்திரக் கதிரே! உள் மனத் துன்பமாகிய இதய அந்தகாரக் கூட்டத்தை நிவாரணம் செய்யும் சூரியக் கதிரே! என்று மலர்ப்பாதங்களை வணங்கித் துதித்து.* **(3.2.6)**

**என்நாயகன் துஞ்சில்அச் சீவன்இவ் இல்லில் நிற்க**
**முன்னாகஉன் னைநினை போதி(ல்)என் முன்பு தோன்ற**
**அன்னாய்அ(வ்) வரங்கள் இரண்டும் அளித்தி என்ன**
**நன்னாமகள் அன்பொடு நல்கி நயந்து போனாள்.**

**பொழிப்புரை:** *என்னுடைய நாயகன் இறந்து விட்டால் அந்த உயிர் இந்த அந்தப்புர மண்டபத்தை விட்டு நீங்கிப் போகாமல் நிற்கவும், எப்பொழுது எல்லாம் உன்னை*

*நினைத்து வணங்குவேனோ அப்பொழுது எல்லாம் என் முன்பு தோன்றவும் ஆகிய இந்த இரண்டு வரங்களை அளிக்க வேண்டும் அன்னையே! என்று வேண்ட, வாணி தேவி மகிழ்ந்து அன்புடன் அந்த வரங்களைத் தந்தருளி மறைந்தாள்.* **(3.2.7)**

**பக்கத்தொடு திங்கள்உறும் பருவங்கள் தேர்க்கால்**
**தொக்கிச்செறி நாள்அதில் கூம்பு தொடர்ந்த ஆண்டு**
**புக்குற்ற தோர்அச்சு இமைப்போது அதில்நாபி யாதி**
**மிக்குத்திரி காலவன் தேர்விரைந்(து) ஓடலோடும்.**

**பொழிப்புரை:** *(காலத்தின் அதிபதியாகிய காலதேவன் தேர் வர்ணனை செய்யப்படுகிறது) சுக்கில பட்சம், கிருஷ்ண பட்சம், மாதம் இரண்டு இரண்டாகப் பொருந்திய ருது ஆக நான்கும் தேர்க்கால் அதனைத் தொடர்ந்து பொருந்திய தினம் அதன் அராவாம் (சக்கரத்தில் உள்ள குறுக்குக் கட்டைகள்) ஆறு ருதுக்கள் பொருந்திய வருடம் இடையில் பொருந்திய அச்சு நொடிப்போது அத்தேரின் நாபியாம் இவை முதலியவற்றோடு கூடிய வேகமாய்ச் செல்லும் கால பகவானது தேர் விரைந்து ஓடிக்கொண்டிருக்க.* **(3.2.8)**

**இன்பம்கரை அற்றிட லீலை இருந்த எல்லை**
**அன்பன் சிலநாளில் இறந்தனன் அன்னம்அன்னாள்**
**துன்பம் சுடும் வெம்மை பொறா(து)உயிர் துஞ்சுமுன்னே**
**முன்(பு)இன்றி விண்ணின்று சொன்ன மாதுஇவள் மோகமாற்றி.**

**பொழிப்புரை:** *அளவற்ற ஆனந்தம் அடைந்து லீலை வாழ்ந்து வந்த போது, அவளது கணவன் சில நாட்களில் மரணம் அடைந்தான். அன்னத்தைப் போன்றவள் துன்பம் சுட்டு தகித்து உயிர் பிரியும் முன்பு, முன்னால் தோன்றாமல் ஆகாயத்தில் இருந்தவாறே சரசுவதி தேவி இவளுடைய சோக மயக்கத்தை மாற்றி.* **(3.2.9)**

**மாய்வுற்றவேந் தைமல ரால்மறை வித்து வைப்பாய்**
**ஏய்வுற்ற பூஉல ராமெய் அழியாது சீவன்**
**பாய்வுற்(று)அக லாது பொன் மண்டபம் பற்றி நிற்கும்**
**தோய்வுற்(று)இவன் தோள்விரை வில்துயர் தீர்தி என்றாள்.**

**பொழிப்புரை:** *குழந்தாய்! உயிர் பிரிந்த மன்னவன் உடலைப் பூக்குவியலால் மறைத்து வைப்பாய். பூக்கள் உலராத வண்ணம் தேகம் அழியாதவாறு உயிர் பாய்ந்து வேறிடம் செல்லாது இந்த பொன்மண்டபத்தைச் சார்ந்து நிற்கும். சீக்கிரம் உனது கணவனின் தோள்களைத் தழுவி, துக்கம் தீர்ந்து சுகமாக வாழ்வாய் என்று அனுக்கிரகம் செய்தாள்.* **(3.2.10)**

**வாடாஅச ரீரிதன் சொற்படி மன்னை வைத்தாள்**
**ஓடாதஆ விஉடை யாள்உளத்(து) உன்ன வாணி**
**நீடாதுவந் தாள்எனது) அன்பனை நீங்கி வாழ்தல்**
**கூடா(து)அவன் சேர்வுழி கூட்டுதி வல்லை என்றாள்.**

**பொழிப்புரை:** *பொய்க்காத வாணி தேவியின் சொல் படி, மன்னவனை பூக்குவியல் இட்டு வைத்தாள். தனது உடலில் இருந்து ஆவி நீங்காது மிகுந்த துயரினால் மரணிக்கும் சமயத்தில் இருந்த லீலை அவளது உள்ளத்தில் எண்ணித் துதிக்க வாணி தேவி உடனடியாக வந்து தரிசனம் தந்தாள். (லீலையானவள் கூறுவதாவது) என்னுடைய கணவனைப் பிரிந்து வாழ்வது முடியாததாகும். ஆதலால் அவன் எந்த இடத்தில் சேர்ந்தானோ அந்த இடத்தில் என்னையும் சேர்த்துவிடுவாய், அந்த இடத்தை அறியும் திறம் உடைய வாணியே!" என்றாள்.* **(3.2.11)**

**மனவானமும் வானமும் மாசறு ஞான வானும்**
**எனவானம் மூன்றின்மு தல்வானம் இரண்டும் இன்றிக்**
**கனஞானவான் எய்துதல் கண்டதை விட்டுப் போத**
**நனவா(ய்)அயல் ஒன்றையுற் றால்நடு ஞான வானாம்.**

**பொழிப்புரை:** *வாசனா மயமான சித்த ஆகாயம், வெளியில் உள்ள ஆகாயம், குற்றமிலாத சிதாகாயம் என்று சொல்லப்பட்ட மூன்று ஆகாயங்களில், முதலில் கூறிய உள் ஆகாயம், வெளி ஆகாயம் இரண்டினையும் ஒழித்து, அகண்டாகாரமான சிதாகாச சொரூபத்தை அடைய வேண்டும். உற்று நோக்கினால், மனோ விருத்தியானது முன் பற்றிய திருசியத்தை (காணப்படும் பொருளை) விட்டு அன்னிய (வேறொரு) விஷயத்தைக் கவரப் புகுந்தால் இவ்விரண்டிற்கும் மத்தியில் விளங்கும் இதனை சிதாகாசமாக அறியலாம்.* **(3.2.12)**

**சங்கற்பசா லம்தவிர்ந் தால்உப சாந்த மாகித்**
**துங்கப்புவி யாவையும் ஆகிய சோதி தோன்றும்**
**இங்(கு)அற்பமும் காண்பன இல்லைவெ றும்பொய் என்றால்**
**அங்(கு)அப்பொழு(து) அவ்வறி வால்அது சேர்தல் ஆகும்.**

**பொழிப்புரை:** *எல்லா எண்ணங்களையும் அடியோடு விட்டு விடுவாய் ஆயின் பரம சாந்தமாகி. பரிசுத்தமாய், சர்வ ஆன்மகமாய் இருக்கின்ற சொப்பிரகாசம் உனது வடிவமாய்த் திகழும். இவ்விடத்தில் தோற்றுகின்ற ஒரு சிறிதும் கிடையவே கிடையாது, அடியோடு மித்தை என்ற துணிவு வந்தால், அந்த இடத்திலேயே அக் காலத்திலேயே அகண்டாகாரப் பிரம்மாகார விருத்தியினால் அந்தப் பரம்பொருளானது சொரூபமாகவே அடைதல் கூடும்.* **(3.2.13)**

**நம்மா(ல்)அது சேர்(க)என நாமகள் நல்கி ஏக**
**இம்மாதுவி கற்ப(ம்) இறந்த சமாதி எய்தித்**
**தம்மால்உறை கூ(டு)அகல் புள்ளெனத் தாவு நெஞ்சம்**
**மைம்மால்உறு கூட்டினை மாற்றினள் அக்க ணத்தில்.**

**பொழிப்புரை:** *நமது அருளினால் அதனைச் சேர்வாய் என்று அருளிச் செய்து சரசுவதி தேவி தனது இருப்பிடம் சென்று அடைய, லீலையானவள் நிருவிகற்ப சமாதியை எளிதில் அடைந்து தாமாகவே இருக்கும் கூட்டிலிருந்து சென்று சுதந்திரமாக விளையாடும் பறவையைப் போல விஷய ஆகாரமாய் சலிக்கும் மனமயக்கத்தை வேறுபடுத்தி மயக்கத்திற்குக் காரணமான தூல தேகமாம் கூட்டினை அப்பொழுதே விட்டு அகன்று சுதந்திரமாக ஆனாள்.* **(3.2.14)**

**மங்காத ஞான விசும்(பு)ஊடு ஒருமா நகர்க்கே**
**வெங்கா தலன்எட்(டு) இரண்(டு) ஆண்டுள வீரன் ஆகிச்**
**சிங்காதன மேல்செறி வேந்தரும் சேனை நாலும்**
**பொங்(கு)ஆதர மாதரும் போற்றஇ ருத்த லோடும்.**

**பொழிப்புரை:** *கெடாத சிதாகாசத்தில் இருப்பவளாய், அந்த ஆகாய ஆலயத்தில் வெளிப்பட்ட வாசனா கரும வடிவமாகத் தோற்றும் தேகம் முதலியவற்றுடன் இருக்கும் ஒப்பற்ற பெரிய தேசத்திற்கு விருப்பம் பொருந்திய நாயகன் பதினாறு ஆண்டு வயதுடைய வீரம் மிக்கவனாகி சிங்காசனத்தில் வேந்தனாய், நெருங்கிய மன்னவரும், நால்வகைச் சேனை களும், மிகுந்த ஆதரவோடு கூடிய மாதர்களும் போற்ற இருப்பதைக் கண்டு.* **(3.2.15)**

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

**தன்னுயிர்க்கேள் வனைஅந்த லீலை நோக்கி**
**சபைபுகுந்தாள் மிகவியந்தாள் சபையைச் சூழ்ந்த**
**மன்னவரும் முனிவரரும் மறைவல் லோரும்**
**மங்கையரும் நாற்படையும் மற்று ளோரும்**
**நன்னிலமும் குன்றுகளும் ஊரும் நாடும்**
**நதித்திரளும் பலபொருளும் நண்ணி நோக்கி**
**மின்அணையாள் மீண்டுதன(து) இடத்தில் மேவி**
**வெண்ணிறவா ணியைநினைத்தாள் விருப்பி னோடும்.**

**பொழிப்புரை:** *தனது பிராண நாயகனை அந்த லீலா தேவி பார்த்து சபைக்குச் சென்றாள். மிகவும் ஆச்சரியம் அடைந்தாள். அந்த சபையில் நெருங்கிக் கூடி மேற்கு வாசலில் இருக்கும் அரசர்களையும், கிழக்கு வாசலில் குவிந்திருக்கும் முனிவர்கள் வேதம் அறிந்தவர்களையும், தெற்கு வாசலில் நிற்கின்ற மாதர்களையும், வடக்கு வாசலில் தயார் நிலையில் இருக்கும் நால்வகைச் சேனைகளையும், மற்றும் உள்ள நாட்டு மக்களையும், உயர்ந்த தேசங்களையும், மலைகளையும், ஊர்களையும், நாடுகளையும், நதிக்கூட்டங் களையும் மற்றும் பல பொருள்களையும் உற்றுப் பார்த்த அந்த லீலா தேவி மறுபடியும் தனது அரண்மனைக்கு வந்து சந்தேகத்தைப் போக்கிக் கொள்ள வெண்ணிற சரசுவதி தேவியை விருப்பமுடன் தியானித்தாள்.* **(3.2.16)**

**வந்(து)உயர்ஆ தனத்(து)இருந்த வாணி தன்னை**
**வணங்கிஎன(து) அன்பனுக்கு மரித்த பின்பு**
**பந்தமுறு மயக்கமே வடிவாய் நிற்கப்**
**பழையபடி பிறப்(பு)உற்ற படியி(து) என்ன**
**இந்தஉல(கு) உறுமயக்கம் போகச் சொல்வாய்**
**எனலீலை கேட்டலுமே இறைவி சொல்வாள்**
**உந்துசிருட் டியின்முன்பு மயக்க மட்டே**
**உருவா(ம்)இச் சிருட்டிவே(று) உதித்த தாகும்.**

**பொழிப்புரை:** *எழுந்தருளி வந்து, உயர்ந்த ஆசனத்தில் வீற்றிருந்த சரசுவதி தேவியை வணங்கி, எனது நாயகனுக்கு மரணத்தின் பின்பு, பந்தமுறும் மயக்கமே வடிவமாய் நிற்க மீண்டும் வேறு பிறப்பு வந்த வகை இது என்ன அற்புதம். இந்த சகம் தோற்றமோ மாற்றமோ என்னும் பிராந்தி நீங்கும் படி உபதேசிப்பாய் என்று லீலை கேட்டதும், வாணி தேவி கூறுவதாவது... பூர்வ சன்மங்களில் உண்டான பிராந்தி மாத்திர வடிவமாய இந்த சன்மம் எப்படி வேறு உதித்தது ஆகுமோ?* **(3.2.17)**

அப்படியே உன்கணவற்(கு) இரண்டாம் சன்மம்
ஆயினதால் ஈ(து)உரைப்ப அறிந்து கேட்பாய்
மைப்படி(வு)இ லாவிமல ஞான விண்ணில்
மற்றொருபால் மாயாமண் டபம்ஒன்(று) உண்டாம்
செப்பரிய விசும்(பு)என்னும் மயூரப் பீலித்
திரையாலே மறைத்திருக்கும் செம்பொன் குன்றாம்
கப்(பு)உறுபொன் தூணி(ல்)உறை உலக பாலர்
காரிகையார் எனும்பொறிகள் கலந்து நிற்கும்.

**பொழிப்புரை:** *அவ்வாறே உனது நாயகனுக்கு இரண்டாவது பிறவி உண்டாகி இருக்கிறது, பூர்வ சன்ம சம்ஸ்காரமே காரணம். இதனை நாம் உரைக்கின்றோம், உணர்வுடன் கேட்பாய். எந்தவொரு களங்கமும் உண்மையில் இல்லாத நிர்மல சிதாகாசத்தில் இன்னொரு பக்கத்தில் மாயா மயமான சம்சார மண்டபம் இருக்கின்றது. சொல்வதற்கு அரிதான விண் என்னும் மயிலின் தோகையாகிய திரையால் மறைத்திருக்கும் பொன்னால் ஆன மலையில் கவர்ச்சி தரக்கூடியவாறு அமைந்துள்ள பொன் தூணில் இந்திரன் முதலான தேவர்களும், அவர்களது பத்தினிகளும் ஆன பதுமைகள் (பொம்மைகள்) நிற்கும்.* **(3.2.18)**

ஒருகோணம் தனில்பூதப் புற்றும் ஆங்கே
உறைகின்ற மலைக(ள்)என்னும் ஓடும் உண்டாம்
வருகாதல் புத்திரர்சூழ் விருத்த வால
மறையவன்ஆங்(கு) ஒருவ(ன்)உறை மனைய தாகும்
குருவான வாயுவின்மார்க் கத்(து)உ லாவும்
கோலவிமா னப்புழுவின் குழுவை மேவும்
அருகான விண்ணி(ல்)உறை சித்தர் கூட்டம்
ஆனகொது(கு) இரைகின்ற அரவம் நண்ணும்.

**பொழிப்புரை:** *(மாயா மண்டபத்தின் வர்ணனை) ஒருபுறத்தில் சீவர்கள் வாழும் பூமிகளும், மலைகளாகிய மண்மேடுகளும் இருக்கின்றன. அன்புடைய புலத்தியர் முதலான புத்திரர்கள் சூழ பேரறிவு உடைய பிரஜாபதி (அயன்) உறைகின்ற இல்லம் ஒன்று உண்டு. கனமான காற்று செல்லும் வழியான ஆகாயத்தில் அங்கும் இங்கும் திரிகின்ற தேவ கூட்டங்கள் ஆகிய புழுக்கள் கூட்டம் இருக்கும். அதற்கு அருகாமையில் ஆகாயத்தில் உறைகின்ற சித்தர் கூட்டமாகிய கொசுக்களின் சப்தமும் இருக்கும்.* **(3.2.19)**

வானவர்தா னவர்என்னும் தீய மக்கள்
　　மதர்த்தவிளை யாட்டு)ஓசை மாறா தாகும்
ஆனதொரு மாமாய மண்ட பத்தில்
　　ஆங்(கு)ஒருபால் ஒருகோணத்(து) அகத்தின் உள்ளே
மானமிகு மலைஎன்னும் ஓட்டில் ஒன்றில்
　　மலைகளினால் ஆறுகளால் வனங்கள் தம்மால்
மேல்நலமார் நகர்ஒன்(று)உண்(டு) அதனில் வாழ்வோன்
　　வெங்கனலோன் வேதியரின் மிகவும் மிக்கோன்.

**பொழிப்புரை:** *தேவர் அசுரர் என்னும் தீய மக்கள் ஒருவருக்கு ஒருவர் கலகம் செய்து விளையாடும் ஓசை எப்பொழுதும் உளதாகும். இவ்வாறான பெரிய மாயா மயமான மண்டபத்தில் ஒரு பக்கத்தில் ஒரு மூலையில் சிறந்ததான மலையாகிய மேடு ஒன்றில் மலைகளால், ஆறுகளால், காடுகளால் சூழ்ந்து வளமையாகத் திகழும் நகரம் ஒன்று இருந்தது. அந்த நகரில் அக்கினி ஹோத்திரம் செய்பவனாய், வேதம் ஓதுபவர்களில் மிகவும் சிறந்தவனாய் ஒரு பிராமணன் வாழ்ந்து வந்தான்.* **(3.2.20)**

வடிவுபொருள் வய(து)ஒடுக்கம் சேட்டை விஞ்சை
　　வசிட்டனுக்(கு)ஒப் போன்அந்த வசிட்டன் என்றே
படியு(ம்)உணர் வினன்அல்லன் பெயரால் இந்தப்
　　பனவனையும் வசிட்ட(ன்)எனப் பகர லாகும்
அடிபரவும் அருந்ததியை ஒப்பாள் அந்த
　　அருந்ததியின் உணர்வினள்அன்று அமைந்த பேரால்
நெடியஅருந் ததியாகும் இவற்குத் தேவி
　　நிலத்தி(ல்)இவள் விண்ணி(ல்)அவள் நிகர்வே றில்லை.

**பொழிப்புரை:** *அழகு, செல்வம், வயது, அடக்கம், செயல், சாத்திர ஞானத்தால் அந்த வசிட்ட முனிவருக்கு ஒப்பானவன், ஆனால் அந்த வசிட்ட முனிவன் அல்ல. ஆழ்ந்த அறிவினன் அல்லன். பெயரினால் இந்த மறையவனையும் வசிட்டன் எனச் சொல்வர். வசிட்ட முனிவரின் பாதங்களுக்குப் பணிவிடை செய்யும் அருந்ததியை ஒப்பான ஒருத்தி இந்த மறையவனின் மனைவி. ஆனால் வசிட்ட முனிவரின் மனைவி அருந்ததி போல் உணர்வு உடையவள் அல்ல. பெயர் அருந்ததி என்று அமைந்து விட்டதால் அப்பெயர் உடையவள் ஆனாள். அந்த அருந்ததி ஆகாயத்தில் திகழ்கின்றாள். இந்த அருந்ததி மண்ணில் இருக்கின்றாள். வேறு ஒன்றும் இணையாகச் சொல்வதற்கு இல்லை.* **(3.2.21)**

இந்தஅருந் ததிகணவன் என்று சொன்ன
　　இவ்வசிட்டன் அம்மலையின் இலங்கு சாரல்
முந்திஒரு நாள்இருப்ப வேட்டைக்(கு) ஆங்(கு)ஓர்
　　முடிநிருபன் சேனையொடு முன்வந்(து) எய்த
வந்தநிரு பனைநோக்கி வசிட்டன் தேர்வான்
　　அகோஅகோ மன்னர்வாழ்(வு) அறவும் நன்றாம்
சுந்தரமாம் புவிக்(கு)அரசாய்ச் சேனை சூழத்
　　துணைக்கவரி பரிமாறச் சுகிப்பம் எந்நாள்.

**பொழிப்புரை:** *இந்தப் பூலோக அருந்ததியின் கணவன் என்று சொல்லப்பட்ட இந்த வசிட்டப் பிராமணன் அந்த மலையில் விளங்கும் சோலையில் பாறை ஒன்றில் அமர்ந்திருக்கும் பொழுது அந்தப் பக்கமாக வேட்டையாட வந்த முடிசூடிய மன்னன் ஒருவன் சேனைகளுடன் செல்ல, அந்த மன்னவனை நோக்கிய பிராமணன் சிந்திப்பதாவது... ஆச்சரியம், ஆச்சரியம். மன்னவருடைய வாழ்வும் அரசாட்சி செய்வதும் நன்றாக உள்ளது. அழகான பூமியை ஆள்வது, சேனைகள் சூழவும், கவரி இருபுறமும் வீசவும் ஆனந்தமாக வாழும் காலம் எந்த நாளோ?* **(3.2.22)**

**கொடிகுடையின் நிழல்நெருங்க வாழ்ந்து மாதர்**
**குங்குமக்கொங் கையில்மூழ்கிக் குளிப்போம் எந்நாள்**
**முடி(வு)அறும்இப் பயன்என்று பெறுவம் என்றே**
**மொய்காதல் அன்றுமுதல் முளைத்த நெஞ்சன்**
**மடியறுதன் கருமத்தில் நின்றான் மூப்பு**
**வனசம்சேர் பனியின்வர மனைவி நின்போல்**
**அடிபரவி எனைவேட்டும் வரமும் ஈந்தேன்**
**அந்தணனும் இறப்புற்றான் ஆசை யோடும்.**

**பொழிப்புரை:** *கொடி, குடை இவற்றின் நிழலாகிய அரசாட்சியில் நெருங்கி வாழ்ந்து, குங்குமப் பூ தோய்ந்த அழகிய மாதர்களின் தனங்களில் மூழ்கி இன்பக் கடலில் குளிப்பது எந்நாளோ? முடிவில்லாத இந்தப் பயனை என்று அடைவோம்? என்று அந்தப் பிராமணன் அன்று முதற்கொண்டு ஆசையுடைய நெஞ்சம் உடையவன் ஆனான். சோம்பல் இன்றித் தன்னுடைய கருமத்திலும் ஈடுபட்டு வந்தான். தாமரையில் பனித்துளி சேர்ந்தது போல் அவனுக்கு முதுமை வரப்பெற்றது. அவனுடைய மனைவியும் (கதையைக் கேட்டுக் கொண்டிருக்கின்ற லீலையாகிய) உன்னைப் போல் (கதையைச் சொல்லிக்கொண்டிருக்கும் வாணி தேவியின்) பாதங்களை வணங்கி என்னிடம் (மரணம் என்பது தவிர்க்க முடியாது என்பதை அறிந்து கணவனது உயிர் அங்கேயே சுற்றித் திகழ) வேண்டிய வரத்தையும் தந்தேன். அந்தணனும் மனதில்கொண்ட ஆசையோடு மரணம் அடைந்தான்.* **(3.2.23)**

**அவன்மனைஆ காசத்தில் சீவா காசா**
**மாய்நின்றான் ஆகாச வடி(வு)ஆ னோனே**
**கவருறுமுன் னாள்அழுந்து சங்கற் பத்தால்**
**காவலன்தா னேஆகிக் கலந்து நின்றான்**
**தவமறையோன் சவமாக மனைவி சோர்ந்து**
**தன்இதயத்(து) இரண்டாகிச் சரீரம் தன்னை**
**உவமையுறு கணவனுடன் சவமாய்ப் போக்கி**
**உயர்சூக்க உடலொ(டு)அவன் உடன்போய் உற்றாள்.**

**பொழிப்புரை:** *அந்த அந்தணன் அதே இல்லத்தின் ஆகாசத்தில் சீவ ஆகாச வடிவமாய் நின்றான். ஆகாச வடிவம் ஆன அந்தணன் பூர்வ காலத்தில் பற்றிய திடமான மனோ ராச்சியத்தினால் சுயமாகவே சத்திகளைப் பெற்று அரசன் தானாகி*

*நின்றான். (மண்ணில்) அந்த அந்தணன் தூல தேகத்தை விட்டுப் பிணமாக ஆனதால் அதனைக் கண்ட மனைவி மிகவும் துயரம் அடைந்து இதயம் இரண்டாகப் பிளப்பது போல் வருந்தி, அவள் தன்னுடைய தூல தேகத்தைக் கணவனின் உடலுடன் சவமாக விட்டுவிட்டு, சூக்கும உடலுடன் கணவனுடன் போய்ச் சேர்ந்தாள்.* **(3.2.24)**

**ஆயமறை யோன்மக்கள் மனையும் பூமி**
**அடவிதாவ ரங்க(ள்)எல்லாம் அங்கே உண்டாய்**
**மேயஉயிர் போய்அவற்கு நாள்எட் டாகும்**
**விண்வடிவாம் சீவனும்அவ் வீட்டில் நிற்கும்**
**போயபவத்(து) உனக்(கு)அன்பன் ஆன அந்தப்**
**பூசுரன்பூ பதியாகிப் புணர்ந்தான் அன்று**
**தூயஅருந் ததிப்பெயர்கொள் பனவி யாகித்**
**துணைவியாம் அந்தமடத் தோகை நீயே.**

**பொழிப்புரை:** *இவ்வாறாய அந்தணன், புதல்வர்களும், வீடும், நிலமும், காடும், தாவரங்களும் ஆகிய எல்லாம் அவ்விடத்திலேயே அப்படியே இருக்க, அவன் உயிர் துறந்து எட்டு நாட்கள் ஆனது. அவனோ சீவ ஆகாசமாய் அந்த இல்லத்திலே நிற்கின்றான். (லீலையாகிய உன்னுடைய) கடந்து போன முன் பிறவியில் உனக்கு நாயகன் ஆன அந்த அந்தணன் (இந்தப் பிறவியில்) பத்மராசன் என்ற பெயரில் அரசனாகப் பிறந்து உன்னை அடைந்தான். அப்போது (அந்த முன்பிறவியில்) அருந்ததி என்ற பெயர் கொண்ட பிராமணப் பெண்ணாக இருந்து அந்தணனுக்குத் துணைவியாக இருந்தவள் நீயே.* **(3.2.25)**

**புதியனசக் கரவாகம் துணைய(து) என்னப்**
**பூதலம்சேர் உமையொடுபு ராரி என்ன**
**அதிகநலத் துணைவராம் இருவ ராய்இங்(கு)**
**அரசுசெயும் நீர்அவரே ஆத லாலே**
**மதிநுதலாய் முதல்பிறப்பின் மயக்கம் சொன்னோம்**
**மற்றிதுதான் மயக்கமாத் திர(ம்)அ(து) ஆகும்**
**உதிதமுறும் ஆகாயம் உடலாம் சென்மம்**
**ஒளிபெறத்தோன் றிய(து)என்றாள் உலகில் அன்னை.**

**பொழிப்புரை:** *அற்புதமான சக்கரவாகப் பறவை போலும், பூமியில் வந்து உமையவளோடு எழுந்தருளி இருக்கும் திரிபுரம் எரித்த சிவன் போலவும், நிறைந்த நலம் மிக்கவராய் இருவராக இங்கு அரசாட்சி செய்கின்ற நீங்கள் அந்த அந்தணத் தம்பதியினரே ஆவீர். ஆதலால் பிறைச்சந்திரனைப் போன்ற நெற்றியை உடையவளே! முந்தையப் பிறவியின் மயக்கத்தைக் கூறினோம். கேவலத் தோற்றம் பிராந்தி மாத்திரமே ஆகும். பிராந்தி மாத்திரத்தால் உதித்த ஆகாயம் தான் தூல தேகம் ஆகி சீவ வடிவத்தை அடைந்து சத்தியம் போல ஆடுகின்றது. பின் பின் மயல்களுக்கு முன் முன் மயலே காரணம் ஆகும் என்று அருளிச் செய்தாள் அன்னை வாணிதேவி.* **(3.2.26)**

இந்தஉரை கேட்டலுமே லீலை சொல்வாள்
இறைவிபொய்யே இயம்பினைஃது) எங்ஙன் கூடும்
அந்தணன்வீட்(டு) உறைசீவன் அதுவெங் கேயோ
அன்னியமாய் இருந்தயாம் அடைந்த(து) எங்கே
முந்துறும்அவ் வேற்(று)உலகத்(து) இருப்பார் அந்த
மொய்கிரிகள் தசதிசைகள் முற்றும் சேர
வந்(து)இனிது யாங்க(ள்)உறை மனையின் ஊடே
மருவு(ம்)அடை(வு) எப்படியோ மருவி லாளே.

**பொழிப்புரை:** *இவ்வாறு வாணிதேவி கூறியதைக் கேட்டதும், லீலை கூறுகின்றாள். இறைவியே! பொய் தான் உரைத்தாய். இது எவ்வாறு நடக்கும்? அந்தணன் வீட்டில் உறைகின்ற சீவன் அது எங்கேயோ இருக்கின்றது. அந்த இடத்திலிருந்து இங்கு வேறாக இருக்கின்ற எங்களை வந்து அது அடைந்தது எப்படி? காணாத வேறு லோகத்தில் இருப்பவர்கள், மலைகள் சூழ பத்து திசைகள் முழுதும் கூடி வந்து இனிமையாக நாங்கள் வாழ்கின்ற இல்லத்தில் வந்து சேர்வது எப்படியோ? இயல்பிலேயே குற்றம் அற்றவளே!* **(3.2.27)**

மத்தஅயி ராவதம்ஓர் கடுகின் ஓர்பால்
மறிபடுமோ வடமேரு வந்(து)ஓர் கஞ்ச
வித்தினிடைப் புகுந்(து)இருந்(து)ஓர் வண்டின் குஞ்சால்
மிகநெரியு மோகொதுகு வெகுண்டு மோதி
யுத்த(ம்)இயற் றிடச்சிங்கம் அனேகம் அத்தோ(டு)
ஓர்அணுவின் இடைப்புகுமோ உரைத்த நின்சொல்
இத்திறமே ஒன்றுக்கும் இசையா தாகும்
எனலீலை சொல்லுதலும் இறைவி சொல்வாள்.

**பொழிப்புரை:** *மதம் பொருந்த ஐராவதம் என்ற யானை ஒரு கடுகின் ஒரு பாகத்தில் கட்டுப் படுமோ? வட மேரு மலை வந்து ஒரு தாமரை விதையில் (கொட்டையில்) புகுந்து இருந்து அற்ப வண்டின் குஞ்சினால் தூள் தூளாகுமோ? கொசு கோபம் அடைந்து மோதி சண்டை செய்திடச் சிங்கக் கூட்டங்கள் எல்லாம் அதனுடன் சண்டை செய்து ஒரு அணுவின் பொந்தில் புகுந்து கொள்ளுமோ? இவ்வாறே தாங்கள் உரைத்தவை எல்லாம் ஒன்றுக்கும் பொருத்தம் இல்லாததே ஆகும் என்று லீலை கூறியதும் தேவி சொல்கின்றாள்.* **(3.2.28)**

பொய்யாக உரைத்திலேம்யாம் இதனின் உண்மை
புகலக்கேள் எமைப்போல்வார் புத்தேள் நீதி
மெய்யாகக் கொள்வதலால் பேதி யார்கள்
வேதியன்தன் சீவ(ன்)அவன் ஊரில் வீட்டில்
எய்யாமை உறைகின்ற(து) இந்த நாடும்
இவ்வரசும் விண்வடிவே இவற்றை எல்லாம்
மையாரும் விழிமடவாய் அந்த விண்ணே
வடிவான அவன்தானே மகிழ்ந்து பார்க்கும்.

**பொழிப்புரை:** *யாம் பொய்யாகக் கூறவில்லை. இதனுடைய உண்மையைக் கூறுகின்றேன். கேட்பாய். எம்மைப் போன்ற கடவுளர் நியதியை உண்மையாகக் கொள்வதைத் தவிர்த்து வேறுபடுத்த மாட்டார்கள். அந்தப் பிராமண சீவான்மா அந்த மலை கிராமத்தில் உள்ள அவனது வீட்டில் கெடாமல் விண்ணின் கண்ணே அரச வாசனையுடன் கூடிய சிதாகாச வடிவமாக இருந்து காண்கின்றது. இந்த நாடும், இந்த அரசும் சிதாகாச வடிவமே ஆகும். இந்த காணப்படும் செல்வத்தை எல்லாம் அஞ்சனம் தீட்டிய கண்களை உடையவளே! அந்த ஆகாய வடிவமாய் இருக்கின்ற அந்த அந்தணன் தானே மகிழ்ந்து பார்க்கும்.* **(3.2.29)**

**தொன்மையாம் அந்தநினை(வு) உங்க ளுக்குத்**
**தோன்றாது வேறாகித் தோன்றும் கண்டாய்**
**பன்மையாம் நனாநினைவு கனவில் தோன்றாப்**
**பரி(சு)எனஅம் மரணத்தின் பான்மை தோன்றாத்**
**தன்மயமாம் சத்(து)அதினால் விளங்கும் அந்தத்**
**தடஞான விசும்பிடைஓர் தனிமூ லைக்கே**
**வன்மையாம் இப்பூமி தோன்றி நிற்கும்**
**மனநினைவில் கண்ணடியில் வயங்கு மாபோல்.**

**பொழிப்புரை:** *பழமையான அந்த நினைவுகள் உங்களுக்குத் தோன்றாமல் மறைந்து போய் வேறாகத் தோன்றித் தெரியும். அனேக விதமான நனவில் உள்ள நினைவுகள் கனவில் தோன்றாத தன்மை போல, அந்த மரணத்தின் தன்மையும் தோன்றாது (தெரியாது). தன் மயமாகிய உண்மையினாலே விளங்குகின்ற அந்த அகண்ட சிதாகாசத்தில் மிகவும் சிறியதான அற்ப கோணத்திலேயே உள்ளத்தின் நினைவால் கண்ணாடியில் பிரதிபிம்பம் போல, கடினமான இந்தப் பூமியானது தோன்றி நிற்கும்.* **(3.2.30)**

**தெளிபரம அணுவாம்சிற் சொரூபத்(து) ஒன்றும்**
**செகமெலாம் ஒளியுருவாய்ச் செறிந்தி ருக்கும்**
**ஒளிபெறஉள் ளேஉள்ளே ஆத லால்முன்**
**உரைசெய்ய பூமியும்சித்(து) உள்ளே தோன்றும்**
**வெளிபெறஈ(து) அறிஎன்று வாணி கூற**
**வேதியன்எட் டாம்பகலில் வீந்தாய் என்றாய்**
**எளிதில்(ல்)எமக்(கு) அனேகவரு டங்கள் போன(து)**
**என்னெனலீ லைக்குமீண்(டு) இறைவி சொல்வாள்.**

**பொழிப்புரை:** *நிர்மலமான பரம அணு எனப்படும் அறிவு உருவத்தின்கண் உள்ளே உள்ளே இருக்கின்ற காணப்படும் பொருள்களாகிய கூட்டம் யாவும் தோற்ற மாத்திர வடிவமாகப் பொருந்தியிருக்கும். முன்பு கூறிய பூமி முதலியவை அறிவு வடிவ ஆன்மாவில் தோற்றமாக இருக்கும். சந்தேகம் அற இதனைத் தெரிந்து உய்வாய் என்று வாணிதேவி கூற, அந்த அந்தணன் எட்டாம் நாளில் இறந்தனன் என்று சொன்னாய், எங்களுக்கோ சுலபமாக அனேக வருடங்கள் கழிந்த காரணம் என்ன என்று கேட்ட லீலைக்கு சுரசுவதி தேவி எடுத்துரைக்கின்றாள்.* **(3.2.31)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

தேய நீடியில் லாமைபோல் காலமும் சிறிதுநீ ளியதல்ல
மாய பேதமில் சிற்சுடர் தோன்றிடும் மாத்திரம் ஒழிந்தில்லை
மேய பொய்மர ணத்தினால் ஒருகணம் மெய்மறந் திடச்சீவன்
போயது) அன்னபா வனைமறந்(து) இப்பவம் பொருந்துபா வனைஎய்தும்.

**பொழிப்புரை:** *தேசம் விஸ்தரித்து இல்லாமை போல, காலமும் சற்றேனும் விஸ்தாரத் தன்மை இல்லாதது ஆகும். பிராந்தியால் ஆன துவைதம் அற்ற சிற் பிரகாசத்தின் விவர்த்த வடிவமே ஆகி வெறும்தோற்ற மாத்திரமே அல்லாமல் ஒரு சிறிதும் இல்லை. பொய்யாகப் பொருந்திய மரண மூர்ச்சையினால் ஒரு கணப்போது உண்மை நினைவு இல்லாமல் உயிரானது முன் பிறவி சம்ஸ்காரம் மறந்து இந்தப் பிறவியில் செறிகின்ற அன்னிய பிறவியை அடையும்.* **(3.2.32)**

**தாங்கு கின்றது)ஈங்(கு) இதுஇத னால்மிகத் தாங்கிடப் படுவோம்நாம்**
**வீங்கு கின்றநம் மெய்இது பிதாஇவன் வீந்தது)இத் தனைஆண்(டு)இங்(கு)**
**ஓங்கு கின்றநம் சுற்றம்)(ஈ(து) இன்பமாம் உறைவிடம் இதுவென்றே**
**தேங்கு கின்றபொய் மரணமூர்ச் சைத்திறம் தெளிந்தபின் சிந்திக்கும்.**

**பொழிப்புரை:** *இந்த இடத்தில் இந்த சம்சாரத்தை யாம் மிகத் தாங்குகின்றோம். இந்த மனைவி, பிள்ளைகளால் யாம் தாங்கப்படுகின்றோம். பருத்திருக்கின்ற தேகம் இது, இவன் தந்தை, எனக்கு இத்தனை வயது ஆயிற்று. இவ்விடத்தில் பலகிளைகளாகப் பரவும் நம் உறவினர் இவர்கள். இன்பமாக வசிப்பது இந்த இல்லம், இப்படி விவகரிக்கின்ற கரணங்கள் எல்லாம் விடுதலை அடைகின்ற மித்தையால் மரண ரூப மூர்ச்சை தீர்ந்து தெளிவடைந்த பின்னர் பிராந்தியினாலே சிந்தனை செய்யும். (உயிர் நொடியில் பொய் மயமாய மரண ரூப மூர்ச்சையை அனுபவித்து பழைய பாவனையை மறந்து, தேகாந்தரத்தையும் அச்சம்பந்தமான பிதா முதலியவற்றையும் நான் எனது என்று அபிமானிக்கும் என்பது தாற்பரிய அர்த்தம்.)* **(3.2.33)**

ஆத லால்முதல் பவம்மறைந்(து) இப்பவம் அறியலா யினது)என்னப்
போத மாம்விழி நீர்தர அகோஅகோ புரணமாய்த் தெளிவுற்றேன்
காதல் தீர்வுற அனையவர் உறைவிடம் காட்(டு)என இவள்ஓத
வேத நாயகி உரைசெய்வாள் அதற்(கு)இந்த வினைஉடல் விலங்காகும்.

**பொழிப்புரை:** *ஆகையால் முன் பிறவி வாசனை மறைந்து இந்தப் பிறவி அறிய வந்தது என்று வாணி தேவி உரைக்க, ஞானக்கண்களை தாங்கள் அருள, ஆச்சரியம்! ஆச்சரியம்! வெளிப்படையாகத் தெளிவு அடைந்தேன். அவர்களைக் காணவேண்டும் என்கின்ற ஆசை தீர, அந்த அந்தணர் இருக்கும் இடத்தைக் காட்ட வேண்டும் என்று லீலை பிரார்த்திக்க, வேதங்களுக்குத் தலைவியாகிய வாணி "அவ்வாறு காண்பதற்கு கருமத்தால் ஆன இந்த உடல் தடையாகும்" என்று கூறினாள்.* **(3.2.34)**

**இந்த யாக்கையை மறந்துவேறு) அறிவது)அற்று) இலங்குசிற் சுடர்மெய்யாம்**
**அந்த நல்லறி வேவடி வாய்மலம் அறுத்தியேல் அதுகூடும்**
**தந்த மக்(கு)ஒரு வடிவிலா உலகங்கள் தமனியம் பணியாகி**
**வந்த வாறென உங்கள்மோ கத்தினால் மதித்திடப் படும்அன்றே.**

**பொழிப்புரை:** *இந்த தேகத்தில் அபிமானத்தை விடுத்து, வேறொரு திருசியத்தையும் (காணப்படுவது எதையும்) நாடாது, சுயம் பிரகாசமாக விளங்கும் அறிவு சொரூபமாக இருந்து, மலம் அற்றவளாக ஆயின், அந்த மலை கிராமங்களைச் சென்று பார்க்க முடியும். தமக்கு என்று வடிவங்கள் இல்லாத இந்த உலகங்கள், உங்கள் அறிவின்மையாலே பொன்னானது ஆபரணங்கள் ஆகி சொல்லப்படுவது போல, கருதப் படும், உண்மையில் அறிவைத் தவிர இவை அல்லவே அல்லவாம்.* **(3.2.35)**

**தத்து வம்பயில் வாதனை அன்றியே சகங்கள்தன் மயம்ஆகா**
**மெத்து செய்தொழில் விட்டிலை ஆதலால் மேவுதற்(கு) அரி(து)உன்னால்**
**சுத்த தற்பதம் எம்மனோர் நிற்பது தொடர்மன வடிவாக**
**வைத்த சூக்கமெய் தீர்க்கபா வனையினால் வளர்ந்துபேர் உடலாகும்.**

**பொழிப்புரை:** *பிரம்ம தத்துவத்தை அப்பியாசம் செய்யும் சுத்த வாசனை இல்லாமல் ஒருக்காலும் உலகங்கள் தனது அறிவுருவம் ஆகமாட்டாது. கர்த்தா (செய்பவன்), போக்தா (அனுபவிப்பவன்) என்று கருதி செய்கின்ற கர்மங்களை விட்டுத் தொலைத்தாய் இல்லை. ஆதலால் சென்று காண்பதற்கு உன்னால் முடியாது. தூய பரமாத்ம பதமே எம் போன்றவர்கள் நிலையாகும். வாசனை தொடர்ந்த மனத்தின் ரூபமாக இருக்கும் சூக்கும தேகமே விருத்தியாகி (வளர்ந்து) பௌதிகமாம் தூல தேகம் ஆகும்.* **(3.2.36)**

**கட்டி யாம்பனி வெம்மையால் கரைந்துபோம் கணக்கென மெய்ஞ்ஞானம்**
**சுட்டி நோக்கலும் வாதனை விடுதலும் தூலமாம் உடல் விட்டுத்**
**திட்ட மாகிய சூக்கமெய் நிலைபெறும் சீவன்முத் தியும்ஆகும்**
**முட்ட ஞானமே நிறையுமுன் இவ்வுடல் நிறுத்திமுன் பவம்காண்பாய்.**

**பொழிப்புரை:** *பனிக்கட்டியானது வெப்பம் படப்பட கரைந்து போவது போல சுத்த சத்திய ஞானானந்த வடிவத்தை நிரந்தரம் (பிரம்மத்தின் ஞான) அப்பியாசம் செய்வதாலும், வாசனைகளை விடுவதாலும், தூல தேகத்தை மறந்து சூக்கும தேகம் மீண்டு நிலைபெறும், சீவன் முத்தியையும் அடைவாய். ஞானம் பூரணம் ஆவதற்கு முன்னரே இந்த தூல தேகத்தை இங்கு வைத்து, முன்சென்ம உலகம் சென்று காண்பாய்.* **(3.2.37)**

**என்ற வாணியை அத்திறம் இயற்றுமாறு) என்னென இவள்கேட்கத்**
**துன்று சிந்தையும் வசனமும் உசாவு(ம்)அத் தொல்பொருள் பொருட்டாகி**
**நின்ற இன்பமும் உதாரமும் விராகமும் நிறைந்துநீள் சகம்என்றும்**
**ஒன்றும்; இல்லெனக் கலைவழி யூகமாய் உணர்வர்சா தகர்ஆனோர்.**

**பொழிப்புரை:** *என்று கூறி அனுக்கிரகம் செய்த வாணி தேவியை நோக்கி, அந்தப் பேரறிவை அடைவதற்குச் சாதகமாக என்ன அப்பியாசம் செய்ய வேண்டும் என்று*

*லீலை கேட்க, (வாணி கூறுவதாவது) நிரந்தரம் அபேத சிந்தனையும், அதனையே பேசுதலும், ஒருவருக்கு ஒருவர் விசாரம் செய்து தெளிவாக்குதலும், அந்தப் பழம் பொருளின் சம்பந்தம் உடையதாக ஆகி, நிறைந்த இன்பமும், தயையும், வைராக்கியமும் நிரம்பி வழிய, எல்லாத் திருசியங்களும் (காணப்படுபவை) முக்காலத்திலும் இல்லவே இல்லை என்று சாத்திரம் யுக்தி வழியாக அப்பியாசம் செய்பவர்கள் உணர்வுடன் முயற்சி செய்வர்.* **(3.2.38)**

**அகம்இ தங்கள்இச் சிருட்டியின் முன்வரும் அபாவ(ம்)ஆ தலின்என்றும்**
**மிகவும் இல்லெனத் தெளிதரு போதமும் வேறுகாண் பனஅற்று**
**நிகழு ஞானத்தால் காமமே முதல்பகை நீங்கிட வந்(து)எய்தும்**
**சுகமும் என்(று)இவை சாதக மாகவே தொடர்வர்சா தகர்ஆனோர்.**

**பொழிப்புரை:** *நான் (மற்றும்) இந்த காணப்படும் பொருள்கள் ஆகியவை படைப்புக்கு முன்பு இல்லை. ஆதலால் எப்பொழுதும் இல்லாததே ஆகும் என்ற தெளிவினால் ஆராய்ந்து அறிதல் ஞான அப்பியாசம் எனவும், அன்னியமான (வேறாக) காணப்படும் எதனையும் கருதாமல், தனித்து விளங்கும் ஞானத்தால், விருப்பு வெறுப்பு முதலியவை நீங்கிடத் தானே வந்து அடையும் ஆனந்த மேலீட்ட பயிற்சியும் என்ற இவற்றைச் சாதகமாகவே பயிற்சி செய்பவர்கள் பின்பற்றுவார்கள்.* **(3.2.39)**

**ஞேயம் இன்றிய ஞானமே ஞானமும் நினைத்துமேல் பெறும்பேறும்**
**ஆய அந்நிலை பரிசய முத்திஎன்(று) அதில்பரி சயம்பண்ணல்**
**தூய தோற்றர(வு) என்(று)அந்த இரவிலே சொன்னவர் இருவோரும்**
**காய வாதனை அற(வு)அறச் சமாதியைக் கலந்(து)அசை(வு) அறநின்றார்.**

**பொழிப்புரை:** *காணப்படும் பொருள் இல்லாமல் (அதாவது காண்பதெல்லாம் மித்தை என்று தெளிந்து காண்பதில் கருத்து அல்லது பதிவு எழாமல்) இருக்கின்ற அறிவே ஞானமாகும் அதனைச் சிந்தித்து மேற்கொண்டு அடையத்தக்க பெரும் பயனும் அதுவே ஆகும். கூறியவண்ணம் அந்த நிலையில் நின்று அப்பியாசம் செய்தலே முத்தியைத் தரும் என்பதை நன்கு உணர்ந்து அதில் அப்பியாசம் செய்தல் பிரம்மானந்தத்தை அடைகின்ற பயிற்சி ஆகும் என்று அந்த இரவில் உரையாடிய லீலையும், வாணி தேவியும் முன் சரீர வாசனை உணர்வு அற்றுப் போக சமாதியில் கலந்து அசைவற நின்றனர்.* **(3.2.40)**

**அங்கு லங்கள்பத் தளவென அறிவினால் ஆகிய வடிவுற்ற**
**மங்கை தன்னொடு முன்னுள ஞானத்தால் வயங்கிய கலைமாதும்**
**துங்க விண்ணிடை எழுந்தனர் அளவறு தூர(ம்)நீங் கிடஏகிப்**
**பொங்கும் ஊழியின் நெடும்கடல் அனையவான் புகுந்த(து)இவை இவைகண்டார்.**

**பொழிப்புரை:** *ஞானத்தினால் ஒரு ஓட்டையளவாக உண்டாகிய தேகாந்தரத்தை அடைந்த லீலையோடும் இயற்கையாய உள்ள உணர்வால் விளங்கிய கலைமகளும், பரிசுத்தமான ஆகாயத்தில் எழுந்தனர். (சிற்பிரதான மானச கற்பனா விருத்தியினாலே) அளவில்லாத நெடும்தூரம் கடந்துசென்று, பொங்கி எழும் பிரளய கால நீண்ட கடல் போன்ற ஆகாயத்தில் புகுந்து இன்னின்னவற்றைக் கண்டார்.* **(3.2.41)**

**மட்டி லாததாய்த் தெளிந்துகோ மளமதாய் மந்தமா ருதத்(து)இன்பம்**
**முட்டி லாததாம் விசும்பிடை மனத்தினும் முடுகுசித் தர்கள்துன்றி**
**அட்டம் எங்கணும் அரக்கரும் பிசாசரும் அளவின்றி நாய்காகம்**
**ஒட்ட கம்கரம் போல்முக யோகினி ஒழுங்குவிண் உழல்வுற்று.**

**பொழிப்புரை:** *அளவற்று கம்பீரமாய்த் தெளிந்து அதிமிருதுவாய் தென்றல் காற்றினால் உண்டான சுகம் தடையின்றித் தருவதான ஆகாயத்தின்கண் மன வேகத்தினும் மிகுந்த வேகம் கொண்ட சித்தர்களால் வெற்றிகொள்ளப்பட்ட ஆகாயத்தில் நடத்தலாகி மேலிடங்கள் எங்கும் அரக்கரும் பேய்களும் அளவின்றித் திரிந்தன. நாய், காகம், ஒட்டகம், கழுதை போன்ற முகம் உடைய யோகினிகளின் கூட்டங்களும் ஆகாயத்தில் திரிந்தனர்.* **(3.2.42)**

**களிகொள் நாடகத்(து) இடாகினித் திரள்களும் காற்றினால் திரிகின்ற**
**வெளிறு கங்கையும் சுவரிலா மனையிடை மேவிவீ ணையின்பாட**
**தெளியு நாரதர் தும்புரு கானமும் சித்திரத் தினில்கோட்டும்**
**துளிகொள் கற்பத்தின் முகில்களும் மாதர்தம் தொகுதியும் உளதாகி.**

**பொழிப்புரை:** *மகிழ்ச்சியுடன் நடனம் செய்யும் டாகினிக் கூட்டங்களும், காற்றினால் விளையாடும் வெண்மையான கங்கை நீரும், சுவர் இல்லாத வீட்டில் அடைந்து வீணை வாசிக்கும் நாரதர் தும்புரு இவர்களின் கானமும், சித்திரத்தில் தீட்டியதைப் போல நீர் நிறைந்த மேகங்களும், மாதர் மண்டலங்களும் அங்கங்கே விளங்கிக் கொண்டிருந்தன.* **(3.2.43)**

**எல்லை இன்றிய யோசனை தூரங்கள் யார்க்கு(ம்)எய்(து) அரிதாகிக்**
**கல்லை ஒத்(து)அற இறுகுறத் திரண்டநீள் கார்இருள் உடைத்தாகி**
**ஒல்லை யோடுதேர் இரவியும் கனலுமே ஒப்பதாம் ஒளியுண்டாய்ச்**
**சொல்லும் இத்திரள் யாவையும் பற்பல இடந்தொறும் தொடர்வுற்று.**

**பொழிப்புரை:** *அளவற்ற யோசனை தொலைவு எவர்க்கும் அடைய அரிதாகி, கல்லினைப் போன்று இறுகித் திரண்ட பேர் இருள் உடையதாகி, வேகமாகச் செல்லும் தேரினை உடைய சூரியனும், அக்கினியும் பிரகாசிக்கும் ஒளியைப் போன்ற பிரகாசம் உண்டாகி மேற்சொன்ன கூட்டங்கள் யாவும் பலப்பல இடங்களில் தொடர்ந்து இருந்தன.* **(3.2.44)**

**கொதுகின் நீள்திரள் அத்தியின் காயிடைக் குமுறுவ(து) எனஎங்கும்**
**சதுமு கன்தரும் உயிரெலாம் அணைவுறும் தன்மைமூன்(று) உலகுண்டாம்**
**அதுல வானகம் கடந்தனர் மீட்டு(ம்)ஓர் அவனியின் வரஎண்ணிப்**
**பதும அண்டத்தை நீக்கிவே(று) அண்டத்தில் பருப்பத நகர்புக்கார்.**

**பொழிப்புரை:** *கொசுக்களின் கூட்டங்கள் அத்திக் காயில் சப்தம் செய்வது போல, எங்கும் நான்முகன் படைத்த உயிர்கள் எல்லாம் பொருந்தியிருக்கும் மூவித உலகங்கள் உண்டாம். இவ்வாறான உவமை இல்லாத ஆகாயத்தை இருவரும் கடந்து, மீளவும் ஒரு பூமியை அடைய விரும்பி, பத்மாண்டத்தைக் கடந்து அந்த அந்தணன் இருந்த மண்டலத்தில் அந்த மலைக்கிராமத்தை அடைந்தனர்.* **(3.2.45)**

**வினையர் சுற்றமும் தனையரும் துக்கமாய் வெதும்பும்**
**அனைய வேதியன் மனைபுகுந் தார்கண்ணில் அணுகார்**
**இனைய போதில்மெய் சங்கற்பம் எய்திய லீலை**
**மனையு ளோர்எமைக் காண்கெனச் சங்கற்பம் வகுத்தாள்.**

**பொழிப்புரை:** *வேலைசெய்பவர்களும், உறவினரும், பிள்ளைகளும், துக்கம் கொண்டு மனம் வெதும்பித் துயர் அடைந்திருக்கும் அந்த அந்தணன் இல்லத்தில் அவர்கள் கண்களுக்குத் தெரியாமல் புகுந்து நின்றனர். அந்த நேரத்தில் சத்திய சங்கற்பத்தை எய்திய லீலை, இந்த வீட்டில் உள்ளோர் எங்களைக் காணட்டும் என்று மன சங்கற்பம் செய்தாள்.* **(3.2.46)**

**பூமகளும் மலைமகளும் போல்வாரை வனதெய்வம் போலும் என்றே**
**தாம்அவர்கண்(டு) அருச்சித்தார் தலைமகன்பார்த்(து) எம(து)அன்னை தந்தை மாய**
**யாம்அணுகும் துயர்ஒழிப்பீர் உயர்ந்தோரை எதிர்ந்தோருக்(கு) எய்தா(து) உண்டோ**
**மாமதியி னீர்என்னத் தலைதடவி துயர்ஒழித்தாள் வயங்கு லீலை.**

**பொழிப்புரை:** *பூமகளும் மலைமகளும் போன்ற இருவரையும் வன தெய்வம் என்றே அவர்களைக் கண்டு பூசை செய்தனர். மூத்தமகன் அவர்களைப் பார்த்து "எங்களுடைய அன்னையும் பிதாவும் மாண்டு போனதால் நாங்கள் அடைந்த துன்பத்தைப் போக்குவீர். மேன்மை மிக்கவர்களை அடைந்வர்களுக்குக் கிடைக்காதது ஒன்று உண்டோ? பெரும் மதியை உடையவர்களே!" என்று வேண்ட, கலைமகள் அருள் பெற்ற லீலை அவனது தலையைத் தடவித் துயரத்தினைப் போக்கினாள்.* **(3.2.47)**

**இருவரும்அவ் வயின்மறைந்தார் உலகத்தின் சற்பாவம் இவ்வா(று) ஆகும்**
**கருதியது முடித்தனமேற் கருத்(து)என்கொல் என்றுகலைக் கன்னி கேட்ப**
**மருவுசமா தியில்கண்ட மன்னவையோர் எனைக்காணா வகையும் இந்தத்**
**திருமனையோர் கண்டமையும் என்கொ(ல்)எனச் செப்(பு)என்றாள் தெய்வம் அன்னாள்.**

**பொழிப்புரை:** *இருவரும் அந்த இடத்தில் உருவம் மறைந்தனர். உலகத்தின் உண்மைத் தன்மை இவ்வாறாகும். நீ எண்ணியது முடிந்தது, இனிமேல் வேறு என்ன வேண்டும் என்று வாணிதேவி கேட்க, "சமாதியில் பொருந்தியபோது கண்ட மன்னவன் அவையில் உள்ளவர் என்னைக் காணாதபடியும், இந்த வீட்டில் உள்ளோர் என்னைக் காணும்படியும் செய்தது என்ன காரணம்? சொல்லவேண்டும்" என்று தெய்வத்தன்மை வாய்ந்த லீலை கேட்டாள்.* **(3.2.48)**

**சாதகத்தால் அன்றிஇரண்(டு) ஒன்(று)ஆகா(து) அகம்பாவம் தனைநீங் காமல்**
**போத(ம்)அடைந் தனைஅதனால் சத்தியமாம் சங்கற்பம் பொருந்திற்(று) இல்லை**
**ஆதலினால் அவர்காணார் அகம்பாவம் அற்றஅறி(வு) அறித லாலே**
**பேதமற நீவிதிக்க இவர்கண்டார் எனவாணி  பேச லோடும்.**

**பொழிப்புரை:** *ஞான அப்பியாசம் இல்லாமல் உன்னுடைய துவைத நிச்சயம் மிச்சம் இல்லாமல் ஒழியாது. லீலை என்பவள் யான் என்னும் பாவனை நீங்காமையாலே அதிட (திடமில்லாத) ஞானம் அடைந்தாய். ஆகையால் சத்திய சங்கற்பம் உனக்கு*

*உண்டாகவில்லை. அதனால் அந்தச் சபையில் உள்ளோர் உன்னைக் காணவில்லை. பயிற்சியின் முதிர்ச்சியாலே அகங்காரம் அற்ற அறிவை அறிந்து கொண்டமையால் துவைதம் ஒழியவே, சத்திய சங்கற்பம் உண்டாகி, புத்திரர் மற்றும் வீட்டில் உள்ளவர்கள் காண்க என்று சங்கற்பிக்க அவர்கள் உன்னைக் கண்டனர் என்று வாணி தேவி கூறலோடும்.* **(3.2.49)**

**பெருவெளியாய் உன்னருளால் முழு(து)உணர்ந்தேன் முக்குணத்தின் பிறப்பும் அற்றேன்**
**இருவடிவாய்ப் பிரமத்தில் அகன்(று)எண்ணூற்(று) உடல்பலவாய் எடுத்தேன் முன்னம்**
**ஒருதனிமா யாவிகற்பத்(து) ஓர்உலகாம் தாமரைமேல் உறைவண் டாக**
**மருவியவிஞ் சையர்மகளாய் வாதனைதீ தானமனித வடிவும் ஆனேன்.**

**பொழிப்புரை:** *பெருவெளியாக (சிதாகாசமாக) இருக்கின்ற தேவியே! இந்த சகத்து விஷயம் எல்லாம் தங்கள் அருளால் முழுதும் அறிந்தேன். சாத்வீகம், இராஜசம், தாமசம் என்னும் முக்குணங் களால் உண்டான பிறவிகள் ஒழிந்தேன். பிரம்மத்திலிருந்து பிரிந்து அந்தக்கரண உபாதியை அடைந்த யான் வேறு வடிவாய் எண்ணூறு உடல்கள் பலவாக அடைந்தேன். முன்பு ஒப்பற்ற மகா மாயாவி சம்சார மண்டலத்தில் தாமரையில் உலவும் வண்டினைப் போல வித்தியாதர மகளாய் இருந்தேன். துர்வாசனையினால் இன்னொரு சன்மத்தில் மானுடப் பெண்ணாகப் பிறந்தேன்.* **(3.2.50)**

**வேறொருமா யாவிகற்பத்(து) அரமகளாய்த் தழைஉடுக்கும் வேடப் பெண்ணாய்ச்**
**சூறைவலைப் புள்ளரசாய்க் கொதுகுமுதல் பலபிறப்பில் சுழன்று சோர்ந்து**
**சீறுகடல் திரையி(ல்)அசை திரணம்போல் மாயையிலே தியங்கி னேனை**
**ஏறுவித்தாய் கரையென்ன இவள்சொன்னாள் இருவரும்விண் எழுந்து போனார்.**

**பொழிப்புரை:** *வேறு சம்சார மண்டலத்தில் நாக கன்னிகையாய், தழைகளை உடுக்கின்ற வேடர் குல மாதராய், வலையில் அகப்படுகின்ற பறவைகளின் அரசனாய், கொசு முதல் பல பிறவிகளில் சுழன்று சுழன்று சோர்ந்து சப்தம் இடும் கடலின் அலைகளில் ஆட்டம் காண்கின்ற துரும்பு போல, மாயையாகிய சம்சாரத்தில் மயங்கிக் கலங்கிக் கொண்டிருந்த என்னை முத்திக் கரையில் சேர்ப்பித்தாய் என்று லீலை சொன்னாள். ஆகாயத்தில் இருவரும் எழுந்து சென்றனர்.* **(3.2.51)**

**யோகநெறி யால்விண்போய்ப் பதுமனிடம் சேர்ந்துசவ உடல்கண்(டு) அப்பால்**
**ஏகிஇவன் மறுபிறப்பாம் வேந்தனைஎய் தலும்அவன்மேல் எதிர்ந்து வந்து**
**வேகவினை யாகிஒரு வேல்வேந்தன் அமர்தொடங்கி மிகவும் மோத**
**மாகமயில் அனையார்கண் நோக்கினார் இருபடையும் மலைந்த அன்றே.**

**பொழிப்புரை:** *யோகத்தால் ஆகாய வழி சென்று பத்மராஜனின் இறந்த உடலைக் கண்டு அப்பால் விடூரத அண்டத்திற்குச் சென்று பத்மராசனின் மறு பிறப்பாகிய விடூரத மன்னனை அடைந்தனர். (அந்த நேரத்தில்) அந்த அரசன் மீது, வலிமை வாய்ந்த வெற்றி வேலினைத் தரித்த அரசன் ஒருவன் வேகமாக வந்து சண்டையிடத் தொடங்கினான். மயில் போன்ற இருவரும் அதனைக் கண்டனர். இரண்டு அரசர் தம் படைகளும் யுத்தம் செய்யத் தொடங்கின.* **(3.2.52)**

**மட்டிலா இருபடையும் மறலிநடுக்(கு) உறவெம்போர் மலைக்கும் காலை**
**எட்டி(ல்)ஓர் கூறாக எதிர்த்தவனால் இவன்சேனை இறத்த லோடும்**
**பட்டுளோர் பிணக்குன்றால் மறைந்தனனோ சமர்கண்டு பயப்பட் டானோ**
**தட்டிலா வெய்யவன்போய் இருள்நிறைந்த(து) இருபடையும் தணந்து போன.**

**பொழிப்புரை:** *அளவில்லாத இரு சேனைகளும் யமனும் அஞ்சும்படியாகக் கொடிய யுத்தம் செய்யும் போது, எதிர்த்து வந்தவனால் இவனது சேனை எட்டில் ஓர்பங்கு மிஞ்சும்படியாக யாவரும் மடிந்து போக, அந்தப் பிணக்குவியல்களில் மறைந்தானோ அல்லது இந்தப் போரினைக் கண்டு பயந்தானோ என்று சொல்லும்படியாக சூரியன் போய் மறைந்தான், இருள் வந்தது, இரு சேனைகளும் அவரவர் இடத்திற்குச் சென்றன.* **(3.2.53)**

**பகைவேந்தன் படைவாங்கப் படாதசிறு படையோடும் பரிந்து மீண்டு**
**தலைவேந்தன் அரமியத்தில் துயிலுதலும் இவர்களு(ம்)அத் தலத்தில் எய்த**
**நகையார்ந்த நில(வு)அனைய இவர்ஒளியால் இளைப்பாறி நயனக் கஞ்ச**
**முகைதோன்ற விழித்(து)எழுந்து புகழ்ந்(து)இறைஞ்சி அருச்சித்தான் முன்நின் றோரை.**

**பொழிப்புரை:** *பகை மன்னவன் சேனையால் நாசமானது போக சிறிதளவு எஞ்சி நிற்கும் சேனையோடும், சற்றுக் கவலை தோய்ந்தது போன்ற மனத்தினோடும் திரும்பி நகரம் வந்து அரண்மனை மேல்மாடி வெளியில் உறங்கவும், அந்த இடத்திற்கு இருவரும் போய்ச் சேர்ந்தனர். பிரகாசமான சந்திரனைப் போன்ற இவ்விரு தேவிகளின் குளிர்ச்சியான ஒளியால் இளைப்பாறி தாமரை அரும்பு விரிந்தது போல் கண்விழித்து எழுந்து முன்னால் நின்ற தேவிமார்களைப் புகழ்ந்து வணங்கிப் பூசை செய்தான்.* **(3.2.54)**

**இவனதுநற் குலப்பழமை லீலைக்கு விளம்புவிப்ப எண்ணி வாணி**
**அவன்அருகில் துயில்அமைச்சன் விழிக்கஎன எண்ணுதலும் அவன்அப் போதே**
**கவர்துயில்விட்(டு) எழுந்(து)இறைஞ்சக் கண்டகலை மகள்அவனைக் கருணை கூர்ந்து**
**புவனபதி குலத்தொன்மை புகல்என்றாள் அமைச்ச(ன்)இவை புகல லுற்றான்.**

**பொழிப்புரை:** *இந்த மன்னவனின் பழமையான குலப்பெருமையை லீலை தெரிந்துகொள்ள வேண்டும் என்று கருதிய வாணி தேவி, அவன் அருகில் துயின்று கொண்டிருந்த அமைச்சன் கண்விழிக்க வேண்டும் என்று எண்ணியதும், அமைச்சன் கண் விழித்து எழுந்து வணங்கியதைக் கண்ட கலைமகள் அவன்பால் கருணைகொண்டு, இந்த அரசனின் குல பரம்பரையைச் சொல்வாய் என்றாள். உடனே அமைச்சன் கூறத்தொடங்கினான்.* **(3.2.55)**

**மன்னவன்எண் மனுகுலத்தின் மன்னவனாம் கும்பரதன் மன்னர் மன்னன்**
**அன்னவன்பத் திராதனை அளித்தான்மற்(று) அவன்அகில ரதனைத் தந்தான்**
**இன்னவன்போர் இரதனைத்தான் ஈன்றான்இங்(கு) இவன்சிந்து ரதனைப் பெற்றான்**
**சொன்னவன்சேய் சைலரதன் அவனுக்குக் காமரதன் தோன்ற லானான்.**

**பொழிப்புரை:** *அரசர்கள் யாவரும் மதிக்கத் தக்க இட்சுவாகு வம்சத்தில் அரசனாகி வந்த இராஜாதி ராஜன் கும்பரதன். இவன் பத்திர ரதனைப் பெற்றெடுத்தான். அவன்*

*அகில ரதனைத் தந்தான். அவன் சிந்துரதனைப் பெற்றான். கூறிய இவனுக்கு சைலதரன் புத்திரன் ஆனான். இவனுக்குக் காமரதன் புத்திரனாகத் தோன்றினான்.* **(3.2.56)**

**இனையவன்சேய் மகாரதன்மற்(று) இவன்சிறுவன் விண்டுரதன் இவன்கு மாரன்**
**விநயமிகு மனோரதன்இங்(கு) இவன்அளித்த விடூரதன்இவ் வேந்தர் வேந்தன்**
**அனைஇவற்குச் சுமித்திரையாம் ஐயிரண்டு வயதி(ல்)இவற்(கு) அரசு நல்கி**
**நினை(வு)ஒடுங்கும் பிதாவனமே நீங்கினான் இவன்செங்கோல் நெறியில் நின்றான்.**

**பொழிப்புரை:** *இந்தக் காமரதன் புத்திரன் மகாரதன். இவனுடைய புத்திரன் விண்டுரதன். இவன் குமாரன் கல்வி ஒழுக்கம் அறிவு மிக்க மனோரதன். இவன் பெற்ற (இங்கே இருக்கின்ற) இந்த இராஜாதி ராசன். இவனுடைய தாய் சுமித்திரை ஆவள். இந்த அரசனுடைய பத்து வயதில் அவனது தந்தை அரசினைக் கொடுத்து விட்டு, மனம் ஒடுங்கும் தவம் செய்ய காட்டிற்குச் சென்று விட்டான். இந்த மன்னவன் அதுமுதல் தரும ஒழுக்க நெறியில் நின்று அரசாட்சி செய்து வருகின்றான்.* **(3.2.57)**

**என்பளவில் வேந்தனைநின் முதல்பிறவி ஞானத்தால் எளிது காண்கென்(று)**
**அன்பினோடு கையினால் அவன்முடியை நாமகள்தொட்(டு) அருள லோடும்**
**தன்பகையாம் மனஇருள்போய் லீலையுடன் வாழ்பதுமன் தானாய்க் கண்டான்**
**இன்பமுற வியப்(பு)உற்றான் மாமாயை இருந்தபடி என்னே என்றான்.**

**பொழிப்புரை:** *இவ்வாறு அமைச்சன் கூறி முடித்த அளவில், வேந்தனை உன்னுடைய முன் பிறவியை விவேகத்தால் எளிதாகக் காண்பாய் என்று வாணிதேவி அரசனின் சிரத்தை (தலையை)த் தொட்டு அருளிச் செய்யவும், தன்னுடைய விவேகத் தடையாகிய இருதய அந்தகார மாயை நீங்கி லீலையோடு கூடிவாழும் பதுமராஜா தானாகவே கண்டான். இன்பம் வர, ஆச்சரியம் அடைந்தான். பெரிய மாயையானது இந்த சம்சாரத்தைத் தோற்றி வைக்கும் விதம் எவ்வளவு விசித்திரமாய் இருக்கிறது என்றான்.* **(3.2.58)**

**தாய(ர்)இவ ரால்தெளிந்தேன் எனநாடி அவர்சரணம் தலைமேல் சூடிப்**
**போயபவத்(து) உடல்நீங்கி நாள்ஒன்றாம் இவ்வுடலில் புக்க பின்னைச்**
**சேயஎழு பதுவருடம் சென்றதால் செய்த(து)எலாம் தெளியா நின்றேன்**
**மாயமிது வென்கொல்என மன்னவன்கேட் டலும்கருணை வாணி சொல்வாள்.**

**பொழிப்புரை:** *தாய்மார்களாகிய இவர்களால் தெளிவை அடைந்தேன் என்று மனம் உவந்து அவர்களுடைய திருவடிகளைத் தலைமேல் கொண்டு, சென்ற பிறவி உடல் போய் ஒரு நாளில் இந்த தேகத்தை அடைந்த பின்னர் நீண்ட எழுபது ஆண்டுகள் கழிந்தது. செய்த கருமங்களை (சிறு வயதையும், வாலிப வயதையும், நண்பர்களையும், உறவினர்களையும்) எல்லாம் எண்ணிப்பாரக்கின்றேன். மாயம் என்ன என்று மன்னவன் கேட்கவும் கருணை வடிவான வாணி தேவி சொல்வாள்.* **(3.2.59)**

**இறப்(பு)என்னும் மாமூர்ச்சை எய்தியபின் அப்பொழு(து)அவ் இடத்தில் தானே**
**பிறப்(பு)என்னும் மாமோகம் பெரி(து)உண்டாம் விண்போலப் பிறங்கித் தூய்தாம்**
**சிறப்புள்ள உன்மனதில் செய்தொழிலாம் மயக்கமே தெரியா நின்ற(து)**
**உறத்துன்னும் எழுப(து)ஆண்(டு) உனக்(கு)அகன்ற(து) என்பதனை உணர்ந்து நோக்காய்.**

**பொழிப்புரை:** *மரணமாகிய மகா மோக மூர்ச்சை அடைந்த பின்னர் அப்பொழுதே அந்த இடத்திலேயே (அந்த உலகத்திலேயே) சன்மம் என்னும் மகா மயக்கம் மிகமிக உண்டாம். ஆகாயம் போல் நிர்மலமாக விளங்கும் உன்னுடைய சிறந்த சித்தத்தில் பிராந்தி மாத்திரமே வியவகார வித்தாரம் தோற்றுகின்றது. அனேக வித திட விவகாரத்துடன் மிருதியுடன் (நினைவுகளுடன்) உனக்கு எழுபது வருடம் கழிந்தது அன்றோ என்னும் இதனை ஆராய்ந்து நோக்குவாய்.* **(3.2.60)**

**கடிகைஇரண் டினில்நெடிய காலம்(ம்)உறும் கன(வு)ஒக்கும் கழிந்த வாழ்நாள்**
**படியுறுமா யாவிகற்ப நனவிலே வெகுவிதமாய்ப் பரந்து தோன்றும்**
**நெடியபிறப்(பு) இறப்(பு)என்று நினக்(கு)இல்லை மெய்ஞ்ஞானம் நினக்கு ரூபம்**
**முடிவில்பதத்(து) இருக்கின்றாய் சகம்எல்லாம் கண்டிருந்தும் முழுதும் காணாய்.**

**பொழிப்புரை:** *இரண்டு நாழிகையில் நூறு வருடம் உற்பத்தியான மாயா ஆடம்பரம் உளதாகும் கனவுக்குச் சமானம் ஆகும். சென்றுவிட்ட உனது வாழ்நாள் பூமியில் உண்டாகும் எல்லாத் தோற்றங்களுக்கும் காரணமான மாயா விலாசம். நனவில் அனேக விதமாக (கனவில் விவகாரத்துக்குப் பொருந்தாத தன் தலையை வெட்டித் தன் கைகளால் கொண்டு செல்வது போன்ற) விரிவாக விளங்கும் மித்தையாகத் தோற்றும் மகா மயக்கம் இதுவே ஆகும். ஆயின் பரமார்த்த சத்தியமாக இருப்பது எதுவெனின், உனக்கு உண்மையாகவோ பிறப்பும் இறப்பும் கிடையவே கிடையாது. சத்திய ஞானாந்தமே உனது உண்மையான வடிவம் ஆகும். அனந்த வடிவ ஆன்மாவில் நிலைபெற்றிருக்கிறாய். அத்தியஸ்த பொருட்களுக்குச் சத்துத்தன்மை இல்லாமையினால் பிரபஞ்சம் யாவையும் பார்த்தும் பார்க்காதவனாக இருக்கிறாய்.* **(3.2.61)**

**எல்லாமாம் இயல்பினால் உன்னால்உன் இடத்திலிருந்(து) இலங்கா நின்றாய்**
**சொல்லாமைந் தரைப்பிடித்த தொட்டிலில்பேய் சுடலையில்போம் தொன்மை போலப்**
**பொல்லாத மூகர்க்குப் புவிஉறுதி யாய்த்தோன்றும் பொன்கா ணாதோர்**
**அல்லாது பணிஎன்பர் தத்பதத்தைக் காணாதோர் அகிலம் என்பர்.**

**பொழிப்புரை:** *சர்வ ஆன்மகத் தன்மையால் நீ உனது ஆன்மாவின் இடத்தில் நித்தியம் விளங்கு கின்றாய். ஊமைப் பிள்ளையைப் பிடித்த பேயானது தொட்டில் கால முதலாக மயானம் போகின்ற காலம் வரை தொடர்ந்து துயரம் தருவதே போல், தீய வாசனை உடைய மூடருக்கு அசத்தாகிய உலகம் சத்தே போலத் தோன்றும். பொன்னைக் காரணமாக அறியாதவர் பொன்னைக் காண்பதை விட்டு ஆபரணம் எனக் கூறுவார் அது போல, அதிஷ்டான பரமாத்மாவாகிய தன்னை உள்ளபடி கண்டு அறியாதவர் உலகத்தை (காணப்படும் பெயர் வடிவக் கூட்டங்கள்) சத்தியம் என்று திகைப்பர்.*
**(3.2.62)**

**தனைமுதலாய்க் காண்கின்ற சகம்எல்லாம் நீள்கனவாம் சகத்தில் தோன்றும்**
**இனையபொருள் களும்கனவில் காண்கின்ற பொருள்களாம் என்று தேர்வாய்**
**அனையபொருள் களும்காணா அறிவுமாத்தி ரம்வடிவாய் அனைத்து மேவி**
**வினைஇல்செறி வாய்க்கனமாய்ச் சுத்தமா கிப்பிரம விண்ணே உண்டாம்.**

**பொழிப்புரை:** *அகங்காரம் முதலியவற்றால் பார்க்கப்படுகின்ற பெயர் வடிவக் கூட்டம் அனைத்தும் நீண்ட கனவாகும். நனவில் காணப்படும் பொருள்களும் கனவில்*

*காணப்படும் பொருள்களுக்குச் சமானமாம் என்று எண்ணுவாய். (கனவில் தோற்றம் தரும் மனிதர்கள், பொருள்கள் யாவும் உனக்கு அன்னியமாகத் தோற்றுவதைப் போலவே நனவில் தோன்றும் பொருள்களும் உனக்கு வேறாகத் தோற்றுகின்றன என்பதை உணர்வாய்). அத்தகைய பொருள்களும் காணாத சின்மாத்திர வடிவமாய் எல்லாவிடத்தும் இருந்து (செயல் இன்றி) சாந்தமாய், பரமார்த்தமாய், ஏகரசமாய், சுசியாய் இலங்கும் வியாபக பரம ஆகாசமே உளதாம்.* **(3.2.63)**

**முழுதுமாய் முழுதுடைத் தாய்ச்சத்தி முழுது(ம்)உள்ள மூர்த்தி தானே**
**பழுதிலா(து)எவ் விடத்(து)எப் படித்தோன்றும் அவ்விடத்(து)அப் படியே தோன்றும்**
**வழுவிலா மெய்ஞ்ஞான நிலைலீலை பொருட்டால்நாம் வழங்கப் பெற்றாய்**
**நழுவிலா உண்மையொடும் தெளிந்தனையாம் போது(ம்)என நவில லோடும்.**

**பொழிப்புரை:** *எல்லாமாகவும் எல்லாவற்றையும் உடையதாய் சர்வ சக்தி உடையதாய் இருக்கும் பரமேசுவரர் தானாக குற்றமிலாது எங்கெங்கு எப்படி எப்படித் தோன்றுமோ அங்கங்கு அப்படி அப்படி தோன்றும். கெடாத உண்மை உணர்வின் நிலையை உன்னுடைய நாயகி லீலையின் பொருட்டு யாம் அனுக்கிரகிக்க நீ பெற்றாய். கெடுதல் இல்லாமல் பிரபஞ்ச மித்தியா நிச்சயத்தோடு யதார்த்த சொரூபத்தை அறிந்தனை. யாம் போவோம் என்று சொல்லவும்.* **(3.2.64)**

**இதுபுகலக் கேட்(டு)அரசன் எனைஅடைந்தோர் களும்வேண்டிற்(று) எய்தா நிற்பர்**
**புதுமணிநேர் உமைப்பணிந்து புகழ்ந்தேன்வேண் டியது)எய்தல் புதுமைத்(து) ஆமோ**
**பதுமஉடல் நான்அடைவ(து) என்(று)என்ன இப்போரில் படுவை பட்டால்**
**அதுபுகுவை எனக்கலைமா(து) அளித்தலும்மேல் தலத்(து)ஒருவன் அறைவ(து) ஆனான்.**

**பொழிப்புரை:** *இவ்வாறு வாணி தேவி கூறியதைக் கேட்ட விடூரத மன்னன் என்னை அடைந்தவர் களும் வேண்டியதைப் பெறுவர் என்றால் புதிய சிந்தாமணியைப் போன்ற உம்மைப் பணிந்து புகழ்ந்தேன். யான் வேண்டியது பெறலாம் என்பதில் அற்புதம் உள்ளதோ? பதும ராஜன் உடலை அடைவது எப்போது என்று கேட்க, இந்தப் போரில் நீ இறப்பாய், இறந்த உடனே அந்தப் பதும ராஜ உடலில் புகுவாய் என்று கலைமகள் கூறவும், மேல் மாடித் தளத்தில் ஒரு வீரன் கூறலானான்.* **(3.2.65)**

**அப்புமழை சொரிந்துவரும் அடர்சேனைக் கடல்எங்கும் அடர்ந்து நிற்க**
**வெப்புடைய கனல்கொழுந்தால் இந்நகரம் சாம்பராய் வேகா நின்ற(து)**
**இப்புதுமை கண்டிலைகொல் இகல்வேந்தே என்பளவில் இறைஞ்சார் சேனை**
**முப்புவனங் களும்நடுங்க மோகரிக்கும் ஓசைசெவி முடுகக் கேட்டான்.**

**பொழிப்புரை:** *அம்புகளை மழையாகப் பொழிந்து வருகின்ற நெருக்கமான சேனா சமுத்திரம் எங்கும் சூழ்ந்து நிற்க, வெப்பத்தை வீசும் நெருப்பின் தீச்சுவாலையால் இந்த நகரம் சாம்பலாய்ப் போக எரிந்து கொண்டிருக்கின்றது. இந்த அற்புதத்தைக் காண்பீர் வலிமை உடைய அரசனே! என்று கூறியதும், பகைவர்களின் படையானது மூன்று உலகங்களும் நடுங்கும் வகையில் கோலாகலம் செய்கின்ற ஓசை காதில் விழக்கேட்டான்.* **(3.2.66)**

**ஒட்டலர்சே னையின்முழக்கும் உலந்(து)அலறும் நகர்ஒலியும் உருமேற்(று) என்ன**
**முட்டிஎழ வடஅனல்போல் முழங்(கு)அனலின் புகையெங்கும் மூடிக் கொள்ள**
**கெட்டனகண் களும்செவியும் கிளர்நகரம் அழிந்ததுவிக் கேடு யாவும்**
**திட்டமுற லீலையும்வா ணியும்வேந்து மந்திரியும் தெரியக் கண்டார்.**

**பொழிப்புரை:** *பகைவரின் படைகளின் கர்ச்சனையும், அதனால் துயர் அடைந்து அலறும் நகர மக்களின் கூச்சலும், பெரும் சப்தமிடும் இடியைப் போல முட்டி எழும் வடவா முக அக்கினி போல் எரிகின்ற நெருப்பின் புகை எங்கும் மூடிக் கொள்ள. கண்கள் குருடாயின, செவிகள் செவிடாயின, நகரமானது வளமை அழிந்தது. இந்தக் கேடு எல்லாவற்றையும் நன்றாக லீலையும் வாணிதேவியும், வேந்தனும் கண்டனர்.*
**(3.2.67)**

**செருவிறல் வேந்தன் தேவி தெருமந்து நடுங்கி வந்தாள்**
**வரும்இவள் பாங்கி மன்னா மாளிகை மகளிர் யாரும்**
**பெருகிய நிதியும் கொண்டார் பேணலார் என்னக் கேட்டான்**
**அரு(கு)உறு தேவி உங்கள் அடைக்கலம் என்று போனான்.**

**பொழிப்புரை:** *போர்க்களத்தில் திறமுடன் போரிடும் விடூரத வேந்தனுடைய தேவி பயந்து நடுநடுங்கி வந்தாள். உடன் வந்த தேவியின் பாங்கி (தோழி) மாளிகையில் உள்ள பெண்களையும், திரண்ட செல்வத்தையும் கைக்கொண்டனர் பகைவர் என்று சொல்லக் கேட்டான். அருகில் வந்த புதிய லீலை ஆகிய மனைவியை உங்கள் அடைக்கலம் என்று கூறிவிட்டுப் போருக்குச் சென்றான்.* **(3.2.68)**

**எதிர்நிழல் போல வந்த லீலையை இந்த லீலை**
**அதிசயம் எய்தி நோக்கி அருங்கலை மாதை நோக்கி**
**புதிதுநான் இங்கு வந்த பொருள்என்கொல் என்ற லோடும்**
**மதிநிற வாணி அந்த மயக்கம்தீர்த்(து) உரைப்ப தானாள்.**

**பொழிப்புரை:** *எதிரே தோற்றும் தனது பிரதிபிம்பம் போன்ற புதிய லீலையை ஆச்சரியத்துடன் பார்த்த பழைய லீலை, அரிய வாணி தேவியை நோக்கி "நான் இவ்விடத்தில் சூக்கும தேகத்தோடு இருக்க புதிதாக வந்த வகை யாது?" என்று கேட்க, நிலவினைப் போன்ற நிறமுடைய வாணி தேவி அவள் மயக்கம் தீர உரைக்கத் தொடங்கினாள்.* **(3.2.69)**

**நின்னைநீங் காது வாழ நினைத்தனன் மரண காலத்(து)**
**அன்ன(து)அவ் விடத்தே பெற்றான் அன்பினால் உனது காந்தன்**
**இன்னல்கூர் மரணம் தன்னில் எண்ணிய(து) எய்தும் யார்க்கும்**
**தன்னெதிர் உற்ற(து) அன்றித் தோன்றுமோ தருப்ப ணத்தில்.**

**பொழிப்புரை:** *உனது நாயகன் "லீலையின் கணவன் நான்" என்ற விருப்பத்துடன் மரண காலத்தில் உன்னைப் பிரியாது வாழ்வதற்கு பாவித்து அந்த பாவனையுடன் இறந்ததால் அதனையே அந்த இடத்தில் அடைந்தான். துயர் மிக்க மரண காலத்தில் சிந்தித்தது எதுவோ அது யாவர்க்கும் அடையப்படும். தனக்கு எதிரே வந்த பொருளைத் தான் கண்ணாடியானது பிரதிபிம்பமாகக் காட்டும், எதிரே இல்லாத வேறொரு பொருளைக் காட்டுவதாமோ?*
**(3.2.70)**

**நாசம்(ம்)உற் பத்தி மூர்ச்சை நனாக்கனா சுழுத்தி எல்லாம்**
**ஏசுற ஒன்றின் உள்ளொன்(று) இல்லையால் இல(து)உண் டென்ன**
**மாசுறு மயக்க மட்டே மட்டற வளரா நின்ற(து)**
**ஆசறு அனுப வங்கள் இருவகை அவற்றைக் கேட்பாய்.**

**பொழிப்புரை:** *நாசம், சன்மம், மூர்ச்சை, நனவு, கனவு, ஆழ்துயில் (சுழுத்தி) இவை எல்லாம் குற்றமுற ஒன்றினுள் ஒன்று இல்லை. (அதாவது நனவில் கனவு அசத்து, கனவில் சுழுத்தி அசத்து, மரணத்தில் சன்மம் அசத்து அதாவது இல்லாதது, பிறவியில் மரணம் அசத்து இப்படியாக) இல்லை என்பதும் உண்டு என்பதும் குற்றமற்ற பிராந்தி மாத்திரமே ஆகும். மயலே அளவின்றி விருத்தியாகின்றது. குற்றமில்லாத அனுபவங்கள் இரண்டு வகையாகும். அவற்றைக் கூறக் கேட்பாய்.* **(3.2.71)**

**முன்னனு பவத்துக் கேற்ற முறைமையாய்ச் சிலவை தோன்றும்**
**பின்னுறு புதுமைத் தாகிப் பேதமாய்ச் சிலவை தோன்றும்**
**நின்னுடல் நின்னா சாரம் நின்குலம் நின்னொ ழுக்கம்**
**என்னவே(று) அன்றி நின்றாள் எதிர்நிழல் போல லீலை.**

**பொழிப்புரை:** *முந்தைய அனுபவத்துக்கு ஏற்றவாறு அதன் சம்ஸ்காரத்தின் (பதிவுகளின்) மூலமாகத் தோன்றுபவை சில. இந்த எல்லா அவத்தைகளிலும் வளர்கின்ற சம்ஸ்காரத்தின் மூலமாக முந்தைய அனுபவத்தைச் சாராமலே தோன்றுபவை சில. உனது உடல், உனது ஆசாரம், உனது குலம், உனது ஒழுக்கம் என்பதாகத் தானே அபேதமாய் லீலையானவள் பிரதி பிம்பம்; போல நிலைபெற்றாள்.* **(3.2.72)**

**புரவலன் நினைவால் உன்னைப் போல்இவள் தோன்றி நின்றாள்**
**விரவு(ம்)இப் போரில் பட்டு விடூரதன் பதுமன் என்னும்**
**நரபதி யாகும் என்ற நாமகள் வசனம் கேட்டுப்**
**பரவின புதிய லீலை பணிந்(து)இது பகர்வ தானாள்.**

**பொழிப்புரை:** *மன்னவனின் திட சங்கற்பத்தாலே உன்னைப் போலவே இந்த லீலை புலப்பட்டு நிற்கின்றாள். நடைபெறும் இந்த யுத்தத்தில் விடூரத மன்னன் மாண்டு, பத்ம ராஜா என்று பிரசித்த அரசன் ஆவான் என்று வாணி தேவி திருவாய் மலர்ந்து அருளியதைக் கேட்டு, புதிய லீலை பணிந்து தொழுது பிரார்த்திக்கத் தொடங்கினாள்.* **(3.2.73)**

**பண்டுநான் பூசை செய்த பாமகள் போலும் நீயே**
**விண்டவ ரால்என் காந்தன் வீடினால் உறைவ(து) எங்கே**
**கண்டுநான் அங்கே இந்தக் காயத்தோ(டு) எய்தி வாழத்**
**தண்ட(ல்)இல் வரநல் கென்னத் தந்தனம் என்ற லோடும்.**

**பொழிப்புரை:** *முன்பு நான் பூசை செய்து வந்த சரசுவதி தேவி தேவரீரே (தாங்களே) போலும். எனது நாயகன் பகைவரால் மாண்டு போனால், எவ்விடத்தில் சென்றிருப்பதாமோ நான் அவ்விடத்தைத் தெரிந்து கொண்டு இத்தேகத்தோடு அடைந்து வாழும்படியாகத் தடை இல்லாமல் வரம் தரவேண்டும் என்று வேண்ட, தந்து அருளினோம் அவ்வாறே என்று வாணி தேவி கூறினாள்.* **(3.2.74)**

புகன்றநா மகளை நோக்கிப் புராதன லீலை சொல்வாள்
நிகழ்ந்தஎன் உடலோ(டு) அன்றி நின்றவேற்(று) உடலை மேவி
உகந்தலோ காந்த ரத்தும் உயர்கிரி நகரின் ஊடும்
அகன்றவா(று) என்கொல் என்ன ஆரணத்(து) அன்னை சொல்வாள்.

**பொழிப்புரை:** *உரைத்தவாறு வரம் தந்த வாணி தேவியை நோக்கி பழைய லீலை கூறுவதாவது-போகத்துக்கு இடமாக விளங்கிய என் தூல தேகத்தோடு அல்லாமல் யோகாப்பியாசத்தால் கிடைத்து நின்ற அங்குலங்கள் பத்து அளவாம் தேகத்தை அடைந்து, செல்ல வேண்டும் என்று விரும்பி வேறு லோகங்களும், வளமையான மலைகிராமத்திலும் சென்று சேர்ந்த விதமும், (இந்தப் புதிய லீலை மாத்திரம் தூல தேகத்தோடு நாயகன் லோகத்தை அடைதலும் உண்டாவதான சிறப்பு) என்னவென்று பிரார்த்திக்க, வேத நாயகியாம் அன்னை சொல்வாள்.* **(3.2.75)**

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

ஒருவ ருக்குநாம் ஒன்றும் நல்கலம் உணர்வின் வண்ணமே உயிர்கள் எய்துமால்
கருதி முந்திநீ கதிவி ரும்பினாய் காத லித்தசிற் கண்ண ளித்தனம்
பெருகு காத லால்இந்த வண்ண(ம்)இப் பேதை வேண்டஇப் பேறு நல்கினம்
இருத யத்திலே நினைந்த(து) எய்திடும் எமது பார்வையால் யார்க்கும் என்றனள்.

**பொழிப்புரை:** *யாம் எவர் ஒருவருக்கும் பாரபட்சமாக ஒரு சிறிதும் கொடுப்பதில்லை. திட வாசனைப் படியே சீவர்கள் எல்லாவற்றையும் அடையப் பெறுகிறார்கள். முன்பு நீ என்னை நன்றாக ஆராதனை செய்து மோட்சம் அடைய வேண்டும் என்று எண்ணினாய். நீ விரும்பிய ஞான திருஷ்டியைத் தந்தோம். பேராசையால் நீ செவியுற்ற வண்ணம் இந்த மடந்தை விரும்ப இத்தேகத்தோடு கூடியே கணவன் அருகே செல்ல வேண்டும் என்னும் இதனையும் தந்தோம். மனதில் எண்ணியது யாவர்க்கும் எம்முடைய கருணைக் கண் பார்வையால் அடையப் பெறலாம் என்று வாணி தேவி அனுக்கிரகம் செய்தாள்.* **(3.2.76)**

திறல்வி டூரதன் சினமி குத்தனன் தேரில் ஏறினன் சேனை யொடும்போய்
மறலி யூர்புகும் வழிநெ ருக்கமாய் மருவ லார்எலாம் மடிய மோதினான்
இறல்உ றும்கொ(ல்)என்று) எண்ணி அன்(பு)அறாலீலை வாணிதாள்ஏத்தி அன்னையே
விறல்மி குந்துநின் கருணை மேவியும் வினையின் மாளுமோ வேந்தன் என்னவே.

**பொழிப்புரை:** *திறமை மிக்க விடூரத மன்னன் அரண்மனையிலிருந்து புறப்பட்டுத் தேரில் ஏறி, கூட்டமாய் சண்டையிடும் வீரர்களைக் கண்டு சினம் மிகுந்திட, தனது சேனைகளுடன் சென்று பகைவர்கள் எமன் உலகம் செல்லும் படியாக அனேகப் பகை வீரர்கள் இறக்கும் படியாகப் போர்புரிந்தான். தன் கணவன் இறந்து விட நேரிடுமோ என்று அன்பு மிகுந்த லீலையானவள் கருதி, வாணி தேவியின் தாள்களைப் பணிந்து ஏத்தி, "அன்னையே! ஆற்றல் படைத்திருந்தும், நின்னுடைய கருணைக்குப் பாத்திரமாய் இருந்தும் எனது நாயகன் ஆகிய மன்னவன் மாண்டு விடுவாரோ" என்று கேட்டாள்.* **(3.2.77)**

கதிவி ரும்பலால் கலைவி டூரதன் கப்பி லாப்பதம் கலப்பு(து) ஆயினான்
எதிரி யானஇச் சிந்து வென்பவன் இகலில் வெல்லஎன்(று) எனைஇ றைஞ்சலால்
விதியில் வென்றவன் வேந்த னாம்என விளம்பு போதிலே விடியல் தோன்றலும்
அதிரமோதிமேல் அடர்ந்த வெங்களத்(து)அனீகம் ஒன்றும்)அற்(று)அழிந்துபோனதே.

**பொழிப்புரை:** *மோட்சத்தை விரும்பி என்னை வழிபட்டிருந்ததால் சாத்திரம் அறிந்த விடூரதன் இரண்டற்ற பதத்தில் கலக்கத் தகுதி உடையவன் ஆகின்றான். அவனுடைய எதிரியான சிந்துரதன் என்ற மன்னன் போரில் வெற்றி பெற வேண்டும் என்று என்னை வேண்டிக் கொண்டதால் விதிப்படி அவன் ஜெயித்து மன்னவனாக ஆவன் என்று வாணி தேவி சொல்லும் போதில், பொழுது விடிந்திட, யாவரும் அதிரும் வண்ணம் போர் துவங்க இரு தரப்பிலும் போர்க்களத்தில் சேனைகள் மீதியாக ஒன்றும் இல்லை என்பதாக அழிந்து போயின.* **(3.2.78)**

சிந்து நாமனும் திறல்வி டூரதச் செல்வ வேந்தனும் சிலைகள் ஏந்தினார்
இந்து பானுவும் திசைகள் வானமும் எய்யும் வாளியால் எங்கும் மூடினார்
முந்து வெங்கணைத் திரள்எ ரிந்துதீ முடுகி ஊழியின் முடிவை ஒத்தலும்
உந்து பாகனும் தேரும் வில்லு(ம்)அற்(று) உயர்வி டூரதன் ஒருவன் ஆயினான்.

**பொழிப்புரை:** *சிந்துரத அரசனும் வலிமையாகிய செல்வம் மிக்க விடூரத வேந்தனும் வில்லினை வளைத்து அம்புகளைத் தொடுத்தனர். அவர்கள் தொடுத்த அம்புகளால் சந்திர சூரியன் திசைகள் வானம் எதுவும் தெரியாத வண்ணம் மறைத்தனர். வேகமாகச் செல்லும் அம்புக் கூட்டங்களிலிருந்து நெருப்பானது எழுந்து பரவி பிரளய காலத்தைப் போல ஆனதும், செலுத்தும் பாகனும், செல்லும் தேரும், வில்லும் இல்லாமல் விடூரத மன்னன் தனி ஒருவனாக நிற்பதானான்.* **(3.2.79)**

பிறைநெ டுஞ்சரம் கவசம் வீழ்வுறப் பிரித்து மெய்யெலாம் பிளந்து சிந்தலும்
பொறைஅ ழிந்துவீழ்ந் தவனை நோக்கிவெண் புண்டரீகையைப் புதியலீலைபார்த்(து)
இறைவன் ஆவிபோம் எல்லை ஆயினான் இவனை நண்ணநான் ஏக நல்கெனா
அறைத லோடும்அவ் வன்னை நல்கினாள் அவளும் விண்ணி(ல்)நொய்தாகிஏகினாள்.

**பொழிப்புரை:** *பிறைபோன்ற வலிமையான அம்புகளால் விடூரதன் கவசத்தைப் பிரித்து எடுத்து, அவனது உடம்பெலாம் துளைபட்டு உறுப்புகள் வீழும்படி செய்யவும், பிரக்ஞை இன்றி விழுந்த கணவனாகிய விடூரதனைக் கண்டு, வெண் தாமரை தேவியைப் புதிய லீலை நோக்கி, "எனது நாயகன் ஆவி பிரிகின்ற நிலையில் இருக்கின்றான். இந்த நாயகனுடைய திருவடியைச் சேர்வதற்கு அருள் புரிய வேண்டும்" என்று விண்ணப்பிக்க, அன்னை வாணி தேவி அருள்செய்ய, புதிய லீலையும் ஆகாயத்தில் சூக்குமம் ஆகிச்சென்றாள்.* **(3.2.80)**

கருமு கில்தடம் கடந்து வாயுவின் கதிக டந்துவெம் கதிரின் எல்லைவிட்(டு)
அருகு தாரகர் பதம்அ கன்றுமேல் அயனை ஆதியாம் அமரர் நாடுஒரீஇ
மருவும் இந்தஅண் டம்பி ளந்துபோய் வாரி ஆதியாய் வளைந்த யாவையும்
உருவி எல்லையும் முடிவும் அற்றதாம் உண்மை ஞானவிண் ஒல்லை எய்தினாள்.

**பொழிப்புரை:** *கரிய மேக மண்டலத்தைக் கடந்து, வாயுவின் வேகத்தையும் தாண்டி, வெப்பமான சூரிய மண்டலத்தின் எல்லையும் விடுத்து எழுந்து, அருகில் வரும் நட்சத்திரக் கூட்டங்களையும் கடந்து அதற்கு மேலாக அயன் முதலான தேவர்கள் நாட்டினையும் கடந்து, இந்த அண்டத்தையும் பிளந்து சென்று, சமுத்திரம் முதலாகச் சூழ்ந்த எல்லா வற்றையும் தாண்டி, எல்லையும் முடிவும் இல்லாத மாயையோடு கூடிய சத்திய சிதாகாசத்தை விரைவில் அடைந்தாள்.* **(3.2.81)**

**கற்ப கோடிவெங் கருடன் ஓடினும் கடக்கொ ணாஅத்திக் காடு காய்த்தபோல்**
**உற்ப வங்களாம் அண்ட கோடிஒன்(று) ஒன்றை நோக்குறாது) உளஅ வற்றினுள்**
**அற்பம் இன்றிஆ வரண பேதமே அயல்வ ளைப்புறு அண்டம் ஒன்றனுள்**
**தற்ப தம்கடந்(து) எய்தி அம்புயச் சவம்கி டந்தமண் டபம்அ டைந்தனள்.**

**பொழிப்புரை:** *கற்ப கோடி காலங்களாக அதிவேகமாக கருடன் பறந்து சென்றாலும் தாண்ட முடியாத படி அத்தி காடுகளாகக் காய்த்திருப்பது போல, உண்டாகி உள்ள அண்டங்கள் கோடியும் ஒன்றை ஒன்று மோதிக் கொள்ளாமல் இருக்கின்றன. அவை சிறிதாக இல்லாமல் பரந்ததாய் ஆவரண பேதமே அதாவது நீர், அக்கினி, வாயு, ஆகாயம், அகங்காரம், மகதத்துவம், பிரகிருதி முதலிய ஏழு வகையான வேற்றுமைகள் உள்ள அதன் அருகில் வளைந்து கொண்டிருக்கும் ஒரு அண்டத்தில் பிளந்து புகுந்து அங்கு பதும தேகம் இருந்த பதும மண்டபத்தை அடைந்தாள்.* **(3.2.82)**

**தமர வண்டுசூழ் மலரில் மூடும்இச் சவச ரீரமாம் தரணி பாலனே**
**எமது நாயகன் கருணை வாணியால் என்கொல் முன்ன(ம்)இங்(கு) எய்தி னோம்எனா**
**அமர எண்ணிவெண் கவரி வீசிஅங்(கு) அன்பன் ஓர்புறத்(து) அவள்இ ருந்தபின்**
**விமல ஞானியாம் விறல்வி டூரதன் மேவு சீவன்விண் மீது போயதே.**

**பொழிப்புரை:** *ரீங்காரம் செய்கின்ற வண்டினங்கள் சூழ்ந்த மலர்களால் மூடி மறைத்து வைக்கப்பட்ட இந்த உயரில்லாத தேகமாம் பூபாலனே என்னுடைய நாயகன், என்ன ஆச்சரியம் கருணை வடிவான வாணி தேவி அருளால் முன்னரே இங்கு வந்து சேர்ந்தோம் என்று பொறுமையாகச் சிந்தித்து, வெண் சாமரத்தை எடுத்து வீசி, நாயகனின் ஒரு பக்கத்தில் அவள் இருந்த பின்னர் மலம் (அழுக்கு) இல்லாத அறிஞனான திறம்பொருந்திய விடூரதனின் உடலில் இருந்த சீவன் (சூக்கும பிராணனோடு சேர்ந்து வாசனையின் வாயிலாக) ஆகாயத்தில் கிளம்பிச் சென்றது. (அந்த சீவனைத் திவ்ய திருஷ்டிகளோடு கூடிய தேவிமார்கள் இருவரும் கண்டு அதனைத் தொடர்ந்தனர்.)* **(3.2.83)**

**ஞான நோக்கினால் அவனை நோக்கிவிண் நடந்து பின்வரும் நங்கை மார்தமை**
**தா(ன்)அ றிந்திடா(து) அகன்ற சீவன்போய்ச் சவம்இ ருந்தமண் டபம்அ டைந்திடப்**
**போன மாதரும் புதிய லீலையைப் புரிந்து நோக்கினார் பொன்செய் மண்டபத்**
**தான சீவனைத் தகைந்து மீளவும் அம்பு யாசனத்(து) அவள்நி றுத்தினாள்.**

**பொழிப்புரை:** *உணர்வு வடிவ திவ்யமான திருஷ்டியினால் விடூரத சீவனைத் தொடர்ந்து ஆகாய மார்க்கத்தில் பின்சென்ற உத்தமமான தேவிமார்களைத் தான் அறியாமல் சென்ற அம் மன்னவது சீவன் போய் பத்ம தேகம் இருந்த மண்டபத்தை*

*அடைந்த பின்னர் சென்ற தேவிமார்களும் புதிய லீலையை நன்கு கண்டனர். பொன்னால் ஆன பத்ம மண்டபத்தை அடைந்த அந்தச் சீவனைத் தாமரைச் செல்வியான வாணிதேவி மீண்டும் தடுத்து நிற்குமாறு நிறுத்தினாள்.* **(3.2.84)**

**பண்டை லீலைதன் மேனி கண்டிலாள் பாம டந்தையைப் பணிந்து கேட்டலும்**
**மண்டு சிந்தைபோய் நிறைச மாதியால் மறிந்து வீழ்ந்தமெய் மாண்ட தாம்எனக்**
**கொண்(டு)அ மைச்சர்வெங் கனல்கொ ளுத்தினார் குரம்பை யோடுநீ குவலயத்துறில்**
**அண்டர் வானில்நின்(று) உடலொ(டு) ஏகினாள் அந்தலீலைஎன்(று) அதிசயிப்பரால்.**

**பொழிப்புரை:** *பழைய லீலை தனது தூல தேகத்தைப் பார்க்கவில்லை. வாணிதேவியை வணங்கிப் பிரார்த்தித்துக் கேட்ட போது, "வாசனை பொருந்திய துயரங்கள் ஒழிந்து பூரணமான சமாதியினாலே சாய்ந்து கீழே விழுந்த தேகத்தை இறந்து போனது என்று கருதி அமைச்சர் பெருமக்கள் கொண்டு போய் மயானத்தில் தீயில் கொளுத்திவிட்டனர். எல்லோரும் லீலை மேல் உலகம் சென்றனள் என்று எண்ணிக்கொண்டிருக்கின்றனர். இப்போது நீ உடம்புடன் பூவுலக்குச் சென்றால் உன்னைப் பார்த்து பரலோகத்திலிருந்து தேகத்தோடு அந்த லீலை வந்தனள் என்று அதிசயம் கொள்வர்"* **(3.2.85)**

**சூக்க மெய்யினோ(டு) இருந்து வாதனைத் தோற்றம் மாற்றலால் தூல காயம்நீ**
**போக்க லாய(து)என்(று) இவளுக்(கு) ஓதிஅப் புதிய லீலைஇப் போது காண்கெனா**
**வாக்கின் செல்விஉள் நினைந்த எல்லையில் மறைந்து நின்றவர் நிறைந்து தோன்றலும்**
**பாக்கி யங்கள்போல் கண்ட லீலைஅப் பாவை மார்பதம் பணிந்(து) இறைஞ்சுவாள்.**

**பொழிப்புரை:** *"தூல தேகம் சூக்கும தேகத்தோடு இருந்து வாசனைகள் எழாத வண்ணம் தீர்த்து விட்டதால் உன்னால் தூல தேகம் போக்கப்பட்டது" என்று கூறிய வாணி தேவி இப்போது புதிய லீலை எதிர்வந்து காணும்படியாக நிற்க என்று திருவுள்ளத்தில் கருதிய உடனே கண்ணுக்குத் தெரியாது மறைந்து நின்றவர் பூரணமாகத் தோன்றலும் பாக்கியம் வந்து அடைந்தது போலத் தேவிமார்களின் பாதம் பணிந்து பிரார்த்தித்தாள். (அதிதிடமான குறியாக நல்லுணர்வினால் அதாவது கனவு தேகம் போலும் கருத்தினாலும் அயலாய தூல தேகம் இல்லையாம் என்னும் திட ஞானத்தாலே தூலதேகம் சாந்தியை அடையும். அதனாலே சீவன்முக்தன் தேகம் பிராதிபாசிகமாகத் திகழும் என்பர் பெரியோர்)* **(3.2.86)**

**போத வாணியும் பழைய லீலையும் புதிய லீலையும் புணர்ந்து) இருந்துழி**
**சாதி மென்மலர் வாசம் விட்டெனச் சலச மா(து)உயிர்த் தடைவி டுத்தலும்**
**வாத ரூபமாய் நாசி ஊடுபோய் வறந்த மெய்யெலாம் நிறைந்(து)உ லாவிடச்**
**சீத மாகிநெய்த் துளிப ரந்துகண் திறந்(து)எ ழுந்தனன் செத்த மன்னவன்.**

**பொழிப்புரை:** *ஞானமயமாய வாணி தேவியும், பழைய லீலை புதிய லீலை இருவரும் சேர்ந்து உரையாடிக் கொண்டிருந்த போது, முன்பு உயிர் துறந்து சென்ற அரசன் மலரானது வாசனையை விட்டது போல், வாணி தேவி சீவத் தடையை விட்டதும், காற்று வடிவமாய் நாசிக்குள் சென்று காய்ந்த தேகம் எல்லாம் ரசம் நிறைந்ததாகிப் பூரணமாய்க் குளிர்ந்து கண் விழித்து எழுந்தனன்.* **(3.2.87)**

**இங்கு நின்(று)உளார் எவர்கொல்என்றுவான் இடிமுழக்க(ம்)ஒத்(து) இவன்உரைத்தலும்**
**அங்கு நின்றுளாள் வணங்கி இப்பவத்(து) அடுத்த தேவிநான் அருகு தாழ்ந்தஇம்**
**மங்கை யார்என என்னை ஒப்பநீ மனத்தில் எண்ணலால் மகிழ வந்துளாள்**
**துங்க வாணிஇங்(கு) இருந்து ளாள்எனத் தொல்லை லீலையே தோன்ற ஓதினாள்.**

**பொழிப்புரை:** *இங்கு இருப்பவர்கள் யார் என்று ஆகாயத்து இடி முழக்கம் போல் கம்பீரமான குரலில் பதும மன்னன் கேட்டதும், அங்கு நின்றிருந்த பழை லீலை வணங்கி, இந்தப் பிறவியில் உனக்கு அமைந்த தேவி யான், அருகில் வணங்கி நிற்கும் இந்த மங்கை தாங்கள் மனதில் என்னைப் போன்று சிந்தித்தலால் சந்தோஷத்தைத் தரவந்த மங்கை ஆவாள். இங்கிருக்கும் ஆசனத்தில் எழுந்தருளி இருப்பவள் உயர்ந்த வாணிதேவி ஆவள் என்று பழைய லீலையே தெரியும்படி கூறினாள்.* **(3.2.88)**

**பகரும் எல்லையில் பதம்இ றைஞ்சு(ம்)இப் பதும வேந்தனைப் பாம டந்தைதன்**
**திகழும் அங்கையால் சென்னி தீண்டிநீ தேவி மாரொடும் சிறந்து வாழ்வுறப்**
**புகழும் செல்வமும் பெருக வையகம் பொலிக தீதெலாம் போக எங்கணும்**
**நிகழும் மேன்மையோர் நிறைக நீ(டு)எனா நிமல வாணிதன் நிலயம் மேவினாள்.**

**பொழிப்புரை:** *இவ்வாறு பழைய லீலை கூறவும், பாதங்களில் விழுந்து வணங்கும் பதும வேந்தன் சிரத்தில் வாணி தேவி தன் திருக்கரத்தை வைத்து, நீ தேவிமார்களுடன் சிறந்த வாழ்வு பெற்று, புகழும் செல்வமும் நாடும் பொலிந்து விளங்க, தீமை அகன்று எங்கும் மேன்மை உடையோர் நிறைந்து திகழ நீண்ட நாட்கள் வாழ்வாயாக என்று வாணி தேவி அனுக்கிரகம் செய்து தன் இருப்பிடம் செல்ல மறைந்தனள்.* **(3.2.89)**

**வாழி வாணிநா மங்கை வாழிசொல் மாது வாழிஎன்(று) இனிது வாழ்த்தியே**
**ஆழி மன்னனும் தேவி மார்களும் அயுதம் எட்டியாண்(டு) அரசு செய்தபின்**
**ஏழ்(ழ்)இ ரும்பவம் துடைந்து வாணிமுன் இயம்பு சீவன்முத் தியில்இ ருந்துபேர்**
**ஊழி பேரினும் சிறிது பேர்விலா உடல்இ றந்தவீ(டு) ஒன்றி மேவினார்.**

**பொழிப்புரை:** *வாணி தேவி வாழ்க! பிரம்ம தேவன் நாவில் வசிக்கும் சரசுவதி தேவி வாழ்க! கலைகளுக்கு தேவியான சொல் வளம் மிக்க தேவி வாழ்க! என்று அன்புடன் வாயார வாழ்த்தி, சக்கர ஆயுதம் உடைய அரசனும் தேவிமார்களும் எண்பதினாயிரம் ஆண்டுகள் அரசு செய்து ஏழ் பிறப்பில் இருந்தும் நீங்கி, வாணி தேவி முன்பு கூறிய சீவன் முத்தியில் இருந்து மகாப் பிரளயம் மாறி மாறி வந்த போதிலும் அணுவும் குறைவிலாது விதேக முத்தியை அடைந்து பேரானந்தமாய் இருந்தனர்.* **(3.2.90)**

**(உற்பத்திப் பிரகரணத்தில் லீலை கதை முற்றும்)**

# (iii) கற்கடி (சூசி) கதை

*ஞான விண்மகன் கதை, லீலை கதைகளினால் விரிவாகச் சொல்லப்பட்ட அர்த்தத்தைச் சுகமாய்த் தெளிதல் பொருட்டு கற்கடி கதையைக் கூறத் தொடங்குகின்றார். லீலை கதையில் பிரபஞ்ச திருஷ்டிக்கு நாசம் வர மாயையால் உண்டாக்கப்பட்ட தன்மை குறித்து விரிவாகச் சொல்லப்பட்டது. இனி கற்கடி கதையில் பிரம்ம திருஷ்டியைத் திடம் செய்வதற்காக அந்தப் பிரம்மத்திற்கே பாரமார்த்திகம் சொல்லப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

காட்சி என்னும் குற்ற(ம்)அறக் கதித லீலை கதையாலே
ஆட்சி யான சகம்என்னும் அதிபா ரத்தை அறவிடுவாய்
சூட்சி யான உலகமெனும் தோற்றம் உடைத்தாய்ப் பேத(ம்)அற
மாட்சி ஞான சுகவடிவாய் வயங்கும் பிரம மேஉளதே.

**பொழிப்புரை:** *திருசியமே (காணப்படுபவை) சத்தியமாய்த் தோன்றுகின்ற படியால், அந்தக் குற்றம் நீங்கும் பொருட்டு, முன்பு லீலை கதையினால், விவகார யோக்கிய சத்தியமாய் உலகம் உளது என்னும் பெரும்கனவாகிய புத்தியை முற்றிலும் விட்டுத் தொலைப்பாயாக. அசத்தாக இருக்கின்ற உலகம் என்கின்ற வெறும் தோற்றம் உண்டாவதற்கு அதிஷ்டானமாய் ஒரு சிறிதும் பேதமே இல்லாமல் மகிமை வாய்ந்த ஞான, ஆனந்த மயமாய் விளங்கும் பிரம்மமே இருக்கின்றது.* **(3.3.1)**

அதனுக்(கு) இணையாய்ப்புக(ல்)அரிதாய் அகன்று நிறைந்(து)ஆழ்ந் அமலமதாய்ச்
சத(ம்)அ(து) அறிந்தோர் களும்இயல்பு சாற்றற்(கு) அரிதாய் சாந்தமதாய்த்
தித(ம்)உற்(று) அசையாக் கடல்என்னத் தீபம் என்னத் திகழ்கின்ற
முதன்மைப் பிரமத்(து) ஒளிதானே முடிவில் பரமா கியசீவன்.

**பொழிப்புரை:** *அதற்குச் சமமாகச் சொல்ல முடியாததாய், பரந்து நிறைந்து ஆழ்ந்து நிர்மலமாய் பிரம்மத்தை அறிந்தவர்களும் இது, இன்னது என்று குறிப்பிட்டுக் கூற முடியாததாய், சாந்தமாய், காற்றினால் அசைக்கப்படாத கடல் போல், காற்றினால் அலையாத தீபம் போல் திகழ்கின்ற அனாதியான பிரம்மத்தின் பிரகாசமாம் இயக்கமே சிறிது அளவான உயர்ந்த சீவன் ஆவன்.* **(3.3.2)**

தனைஉண் டாக்கும் நீள்விறகால் சற்றாம் நெருப்பு தடிப்பதுபோல்
இனைய சீவன் கனஅறிவால் யான்என்(று) உணர்ந்து சங்கற்ப
நினைவி னாலே அகங்கரிக்கும் நிறைந்த சீவன் காரணமாய்
வனையும் சித்தம் மனம்பகுதி மாயை எனும்பேர் வகுத்(து)உரைப்ப.

**பொழிப்புரை:** *அற்பமான அக்கினியின் சூக்கும அணுப் பகுதியே தன்னை அதிகப்படுத்தும் விறகினால் விருத்தியாதலே (வளர்வதைப்) போல, (பிரம்ம ஸ்புரண)*

*சீவன் கனமான உணர்ச்சியினால் 'நான்' என்று வெளிமுகமாக அறிந்து சங்கற்பித்தலால் அகங்காரம் என்றாகும். வியாபித்த சீவனைக் காரணமாய்க் கொண்டு (அகங்கார அத்தியாச மூலமாய்க் கொண்டு) உதிக்கும் அதற்கே சிந்திக்கும் சித்தம், மனம், பிரகிருதி, மாயை என்னும் பெயர்களால் விரித்துக் கூறப்படும்.* **(3.3.3)**

**இனத்தால் படரும் மனம்பரமன் ஏது வாய்இப் படித்தோன்றும்**
**மனத்தால் விரிந்த சகம்எல்லாம் மனன வடிவே மற்(று)இல்லை**
**கனத்தால் கரைதீர் பலஅறிவாம் கல்லோ லச்சிற் கடல்பொங்கும்**
**தினத்தால் நீண்ட கன(வு)ஒப்பச் சித்த வசத்தால் சகம்திரமாம்.**

**பொழிப்புரை:** *திருசியத் தொடர்பு வாசனையினால் விரிந்து செல்கின்ற மனம் பரம காரணமாகிய பிரம்மத்திலிருந்தும் இவ்வாறு கூறிய முறையினால் முதலில் உண்டாகும். மனதின் சங்கற்பத்தால் பரந்து விரிந்த பிரபஞ்சம் எல்லாம் மனதின் வடிவமே தவிர வேறொன்று இல்லை. திடத்தால் எல்லையற்ற பல விருத்திகள் என்னும் அலைகளோடு சின்மயமாக விளங்கும் சமுத்திரமானது உலக வடிவமாகப் பொங்கும். அனேக நாட்களை உள்ளடக்கித் தோன்றும் நீண்ட கனவுக்குச் சமமாய் நாட்பட நாட்பட சிந்தனையின் ஆதிக்க வசத்தால் மித்தையான உலகம் சத்தியமாகத் தோன்றும்.* **(3.3.4)**

**தெரியாத் தறியால் கள்வ(ன்)எனத் தெளியா மையினால் உல(கு)உண்டாம்**
**மரியாப் பிரமத் தொடுசீவன் மறந்தும் பேதம் இலாததுபோல்**
**பிரியாச் சீவ சித்தங்கள் பேதம் இல்லை இதுபோலத்**
**தரியாச் சித்தம் சகங்களுக்குச் சற்றும் பேதம் உள(து)ஆகா.**

**பொழிப்புரை:** *உள்ளபடி அறியாததினால் கட்டையில் திருடன் என்ற உணர்வு எழுவது போல, தனது சொரூபத்தை ஆராய்ந்து பார்க்காத காரணத்தினால் உலகமானது சத்தியமாகத் தோன்றுவதாகும். நித்தியமான பிரம்மத்துடன் சீவனுக்கு (கூடத்தனுக்கு) மறந்தும் பேதம் இல்லாதது போல, பிரம்மத்தை விட்டு வேறாகாத சீவ மனங்களாகிய காரண காரியங் களுக்குப் பேதம் இல்லை. இதைப்போல நிலையில்லா சித்தம் பிரபஞ் சத்திற்கு ஒரு சிறிதும் பேதம் உண்டாக்கமாட்டாதாம்.* **(3.3.5)**

**இதுகா ரணமாம் ஒருகதைபண்(டு) இகலார் அரக்கி இயம்பியது**
**முதுவாம் வினாவால் அறிபொருள்கள் முழுதும் தெளியத் தெளிவிப்ப(து)**
**அதுநீ கேட்பாய் இமவானுக்(கு) அயல்உத் தரபால் அமர்கிற்பாள்**
**விதுவாம் எயிற்றுக் கற்கடிப்பேர் பேழ்வாய் அரக்கி மின்கண்ணாள்.**

**பொழிப்புரை:** *கூறிய விஷயம் நன்கு உணருமாறு ஒரு புராதனக் கதை சொல்வார். வல்லமை உடைய அரக்கி கூறியது. ஆழ்ந்த கருத்துடைய கேள்விகளால் தெரிய வேண்டிய வஸ்துக்கள் யாவற்றையும் நன்றாகத் தெரிந்து கொள்ளுமாறு தெளிவிக்கச் செய்யும் அந்தக் கதையை இராகவனே! நீ கேட்பாய். இமாசலத்துக்கு வடக்குப் பக்கத்தில் வசித்துக் கொண்டிருப்பவள். பிறை போன்ற வளைந்த கோரப் பற்களையும் அகன்று பெருத்த வாயினையும் மின்னல் போன்ற கண்களையும் உடைய கற்கடி என்ற பெயர் உடைய அரக்கி ஆவள்.* **(3.3.6)**

**கருமே ருவைப்பெண் வடிவாகக் கைகால் வகுத்த(து) எனத்திரிவாள்**
**உரு(ம்)ஏ(று) அனைய சிறுநகையாள் ஓடா மீன்போல் உழல்கண்ணாள்**
**பெருமே னியைத்தாங்(கு) இருகுறங்கும் பேரீச் சென்னப் பெரிதுடையாள்**
**வருமே கத்தைப் பிளக்கு(ம்)நகம் வயிடூ ரியத்தின் சுள(கு)ஒப்பாள்.**

**பொழிப்புரை:** *கரிய மேரு மலையே கை கால்களாக வகுத்தது போல் பெண் வடிவில் திரிந்து கொண்டிருப்பாள். பெரும் இடியைப் போல் சிறு சிரிப்புச் செய்வாள். நிலையில்லாத மின்னலைப் போன்ற கண்களை உடையவள். பெரிய உடலைத் தாங்கும் பேரீச்சம் மரத்தைப் போன்ற இரண்டு தொடைகளும் உடையாள். மேகத்தையே பிளக்கக் கூடிய நகம் கொண்டவள். வயிடூரியத்தினால் செய்யப்பட்ட முறத்திற்கு ஒப்பானவள்.* **(3.3.7)**

**பாழிப் புவிமேல் உயிரையெலாம் பகலும் இரவும் சொரிந்திடவும்**
**ஊழிக் கனலால் அவியாத உதரக் கனலால் உள்ளழிந்து**
**காழிக் கிளர்நா வலன்தீவில் காணப் படும்மன் உயிர்எல்லாம்**
**ஆழிக் கிடைவீழ் நதித்திரள்போல் அருந்தில் சிறி(து)ஆ ருயிர்நிற்கும்.**

**பொழிப்புரை:** *அகன்ற உலகத்தில் உள்ள சீவர்களுடைய தேகத்தை எல்லாம் பகலும் இரவும் வாரி வாரிக் கொட்டிக் கொண்டே இருந்தாலும், திருப்தியாகாத பிரளய கால அக்கினி போல் வயிற்றில் உள்ள ஜாடராக்கினியால் பசி தீராமல் அலைந்து துயர் அடைந்து, உறுதி மிக்க கூம்புத் தீவில் காணப்படும் உயிர்களை எல்லாம் கடலில் போய் விழுகின்ற நதிக் கூட்டங்களைப் போல் புசித்தால் சிறிது பசி தணிந்து அவள் உயிர் வாழும்.* **(3.3.8)**

**மழையால் அவியும் கானலென வயிற்றில் எரியும் சிறி(து)அவியும்**
**பிழையா(து) இதனைத் தவம்புரிந்து பிரமன் அருளால் பெறுதுமெனா**
**முழையார் இமய கிரிமேவி மூழ்கி ஒருகால் உறநின்று**
**புழையார் விழியால் நடுவானில் பொலியும் கதிரை எதிர்நோக்கி.**

**பொழிப்புரை:** *மழையினால் தணிகின்ற அக்கினி போல, எல்லாவற்றையும் விழுங்கினால் வயிற்றில் எரியும் அக்கினியும் சற்றுத் தணியும். இந்தப் பசியினைப் பிரம்ம தேவனை நோக்கித் தவம்புரிந்து தவறாமல் பெறுவேன் என்று குகைகள் நிறைந்த இமய மலைக்குச் சென்று, தீர்த்தங்களில் முழுகி, ஒரு காலில் நின்று, பொந்து போன்ற கண்களால் நடு வானில் பிரகாசிக்கின்ற சூரியனை நேராகப் பார்த்து.* **(3.3.9)**

**வருந்தி நின்று வுயர்தவத்தில் வருடம் ஓரா யிரம்செலுத்தத்**
**திருந்து கமலத்(து) அயன்வந்தான் தீயோர் எனினும் அருந்தவத்தால்**
**பொருந்து றாத பொருள்உண்டோ புண்ட ரீகன் போதவுமுன்**
**இருந்த படியே இருந்(து)அரக்கி இதயத்(து) இறைஞ்சி இதுநினைந்தாள்.**

**பொழிப்புரை:** *மிகவும் கஷ்டப்பட்டு மேலான தவத்தில் ஓர் ஆயிரம் வருடம் கழிக்க, தாமரையில் வீற்றிருக்கும் நான்முகன் வந்து தரிசனம் தந்தான். தீயவர்களாக இருந்தாலும் அரிய தவம் செய்தால் கிடைக்காத பொருள் உண்டோ? தாமரையில்*

*வீற்றிருக்கும் நான்முகன் தரிசனம் தந்தும், அரக்கியான கற்கடி முன்பு இருந்த தவ நிலையிலேயே இருந்து கொண்டு மனதில் இவ்வாறு நினைத்தாள்.* **(3.3.10)**

**தாவும் உதரக் கனல்தணியச் சற்றாம் இரும்பால் சமைந்தஒரு**
**சீவ ஊசி வடிவானால் செகத்தோர் உடலங் களில்புகுந்து**
**மேவும் இரைகள் வேண்டியது விழுங்க லாம்என்(று) உணர்வாளை**
**யாவ(து) எண்ணம் உனக்(கு)என்ன இசைத்த அயனுக்(கு) இவள்இசைப்பாள்.**

**பொழிப்புரை:** *மேன்மேலும் எரிகின்ற வயிற்றின் அக்கினியைத் தணியச் செய்ய இரும்பினால் செய்த சிறியதாக (சூட்சுமமாக) சீவ ஊசி ஒன்றின் வடிவம் ஆனால் உலகத்தோர் உடல்களில் புகுந்து தேவையான அளவுக்கு ஆகாரத்தை விழுங்கலாம் என்று சிந்திப்பவளை நோக்கி உன்னுடைய எண்ணம் என்ன? எதைக்கருதி இத்தவம் செய்தாய்? என்று கேட்ட நான்முகனிடத்தில் கற்கடி சொல்வாள்.* **(3.3.11)**

**துதிப்பார் துணையே நான்சீவ சூசி யாக வேண்டுமென**
**விதிப்பான் விகார பூருவமான விடூசி யாக மெய்க்கொண்டு**
**குதிப்பாய் துர்ச்சேட் டையர்மூர்க்கர் கொடியோர் கொடிய தலத்(து)உறைவோர்**
**கதிப்பால் விரும்பா உண(வு)உண்போர் கருத்தில் சுவாசத் துடன்கலந்து.**

**பொழிப்புரை:** *துதிப்பவர்களுக்குத் துணையாக நிற்பவரே! "நான் சீவ (உயிருள்ள) ஊசியாக மாற வேண்டும்" என்று வேண்டவும், படைக்கும் நான்முகன் "தீய சேட்டை உடையவர் மூர்க்கர், துட்டர், கொடிய இடத்தில் வசிப்பவர், நற்கதிக்கு உதவாத உணவை உண்பவர் ஆகியோர் பிராணனுடன் கலந்து இதயத்தில் நுழைந்து உண்பாய்.* **(3.3.12)**

**நல்லார் இடத்தில் நீஎய்தில் நாமே விதித்த மந்திரத்தால்**
**கொல்லா(து) ஒழிவாய் தீயோரைக் கொன்று தின்பாய் எனமலரோன்**
**சொல்லா முன்னம் மலைபோல்வாள் சூசி உருவாய்ச் சீவனுமாய்ப்**
**பொல்லா தவர்அஞ் சினத்தடித்தோர் பொன்றும் படிஉள் ளூறப்புகுந்தாள்.**

**பொழிப்புரை:** *நல்லவர்களிடத்தை நீ அடைவாய் ஆயின், நாம் விதித்த மந்திரத்தால் அவர்களைக் கொல்லாது நீங்குவாய். தீயவர்களைக் கொன்று தின்பாய் என்று நான்முகன் கூறிய அக்கணமே மலைபோன்ற உருவம் உடையவள் ஊசி வடிவமாக உயிராகிப் பொல்லாதவர், பயப்பட்டவர்களை அழித்தவர் இத்தகையோர் அழியும்படி அந்த உடல்களில் உட்புகுந்தாள்.* **(3.3.13)**

வாயு வடிவாய் உட்புகுந்து மண்ணில் விண்ணில் பல்லுயிர்கள்
ஆயு வெல்லாம் இருவடிவாம் அனேக காலம் அருந்தியபின்
ஓயும் மனத்தா ளாய்அவமே உழன்று வருந்தி ஊசியுமாய்த்
தேயும் படியே கெடுத்த(து)எமை சீசீ ஆசை எனத்திகைத்தாள்.

**பொழிப்புரை:** *இந்த பூமியில் ஊசி வடிவமாகவும், ஆகாயத்தில் பெரிய அரக்கி வடிவமாகவும் புகுந்து பிராணன்களை (உயிர்களை) எல்லாம் இரண்டு வடிவமாக*

*இருந்து அனேக காலம் புசித்த பின்னர் ஆசை ஒய்ந்த மனதை உடையவளாய், வீணாகவே அலைந்து துயரம் அடைந்து அற்ப ஊசியும் ஆகி தேய்கின்ற படி எனைக் கெடுத்தது இந்த ஆசை சீ! சீ! என்று வாடினாள்.* **(3.3.14)**

தீயம னத்தொடு யாம்(ம்)அவ மேபல சீவ(ன்)அ ருந்தினமால்
ஏயது விட்டனம் என்(று)இம வானிடை எய்தரி தானதவம்
மேயினள் ஒன்றுநி னைப்பிலள் சஞ்சலம் விட்(டு)உண(வு) அற்(று)ஒருமித்(து)
ஆயிர மாவரு டங்கள்செ லுத்தலும் அற்றது வல்வினையே.

**பொழிப்புரை:** *இரக்கம் இன்றி தீய மனத்துடன் அளவற்ற பிராணிகளை யாம் கொன்று தின்றோம். இத்தொழிலை விட்டோம் என்று இமாசல மலையில் அடைதற்கு அரிய தவத்தினைச் செய்யத் தொடங்கினாள். யாதொன்றையும் நினைக்காமல், சஞ் சலம் விட்டு, உணவினையும் தவிர்த்து, மன ஒருமைப்பாட்டுடன் ஆயிரம் வருடங்கள் தவம் செய்ததும் கொடும்பாவங்கள் எல்லாம் போயின.* **(3.3.15)**

பாவ(ம்)அ கன்றும னம்தெளி யப்பர பாவனை தன்வயமே
மேவலும் இவ்வுல கத்தைஇ கழ்ந்துவி ருப்புவெ றுப்(பு)இலளாய்
மாவரு டங்கள்ஓ ராயிரம் நின்றபின் மன்னுணர்(வு) உற்றதெனாக்
கேவலம் வந்(து)இவ ளுக்(கு)ஒரு வாய்மைகி ளர்த்தினன் மாமலரோன்.

**பொழிப்புரை:** *தீய வினைகளினால் ஆன பாவங்கள் எல்லாம் கழிந்து போய், பிரம்மாகார பாவனை சுயமாகவே உண்டாகவும், இந்த உலகம் அதிலுள்ள காணப்படும் பொருள்கள் அனைத்தும் அனித்தியம் என்று விருப்பு வெறுப்பு அற்றவளாய் ஓர் ஆயிரம் வருடங்கள் தவம் செய்தபின்பு பிரம்மத்தை உணர்ந்தனள் என்று நான்முகன் வந்து இவளுக்கு ஒரு உண்மையை அருளினார்.* **(3.3.16)**

சீவனின் முத்திஅ டைந்தனை சிந்தைதெ ளிந்தனை தொல்வடிவாய்ப்
பூவல யத்(து)அறி வில்லவர் தீயவர் பூரியர் மெய்இரையாய்
ஆவிவ ளர்த்(து)உறை கென்(று)அயன் ஏகலும் அத்துவி தப்பரமே
பாவனை உற்(று)ஒரு செய்தொழில் அற்றப தத்தில்இ ருந்தனளால்.

**பொழிப்புரை:** *நீ சீவன் முத்தியை அடைந்தாய், மனம் தெளிந்தாய். பழைய வடிவத்துடன் பூவுலகில் உள்ள ஞானம் இல்லாத மூடர், தீயவர், ஆசாரம் இல்லாதவர்கள் ஆகியோர்களின் உடல்களை இரையாக உண்டு உன்னுடைய உயிர் வளர்த்து வாழ்வாயாக என்று கூறி நான்முகன் சென்றதும், அவள் அத்துவிதப் பரத்தின் பாவனையிலேயே இருந்து கொண்டு ஒரு தொழிலும் செய்யாமல் அந்த நிலையிலேயே இருந்தாள்.* **(3.3.17)**

விகற்பம்இ றந்தச மாதி நெடும்பகல் மேவினள் மீளவிடா
உகப்பொடு நெஞ்சொடு கூடினள் தொல்பசி உன்னினள் நான்எனுமா(று)
இகத்துள மட்டு(ம்) உடற்(கு)உள தான இயற்கை விடாததனால்
சகத்தில் அரக்கர் குலத்தொழி லான தசைப்பலி கொள்வன்எனா.

**பொழிப்புரை:** *நிருவிகற்ப சமாதியில் நெடுங்காலம் மனஅமைதியுடன் இருந்தாள். மீண்டு விட முடியாத சந்தோஷம் அடைந்த மனத்தொடு கூடினாள். பழைய பசியை எண்ணினாள். நான் என்னும் அபிமானத்துடன் இந்த உலகில் வாழும் காலம் வரையில் தேகத்திற்கு உண்டான சுபாவம் விட்டு நீங்காத அக்காரணத்தால் இவ்வுலகத்தில் அரக்கர் வம்சப் பழக்கமான தொழிலாகிய மாமிச பட்சணம் கொள்வேன் என்று சிந்தித்து.* **(3.3.18)**

**அயன்உரை செய்ததும் அப்படி ஆதலில் அந்த உரைப்படியே**
**கயவ(ர்) உடல்பலி கொள்ளுவன் என்று களித்(து)இம வான்அயல்போய்**
**வயமிகு வேடுவர் மண்டலம் மேவி வனத்தில் உறைந்திடுநாள்**
**நயமுறு மந்திரி தன்னொடு(ம்) அங்(கு)ஒரு நரபதி நண்ணினனால்.**

**பொழிப்புரை:** *நான்முகன் அருளிச் செய்ததும் அவ்வாறே ஆவதால், அந்தச் சொற்படியே தீயவர்களின் உடலைப் பலி கொள்வன் என்று மகிழ்ந்து, இமய மலையிலிருந்து அப்பால் சென்று, வளமை நிறைந்த வேடுவர் வசிக்கும் மண்டலம் அடைந்து அந்தக் காட்டில் வசித்திருக்கும் நாளில், நயம்பட உரைக்கும் மந்திரியுடன் அரசன் ஒருவன் அந்த இடத்திற்கு வந்தான்.* **(3.3.19)**

**முச்சுடர் வந்துறி னும்கரு கத்தகும் முற்(று)இருள் மூ(டு)இர(வு)ஊ(டு)**
**அச்சம் உறார்அவர் சோதனை செய்தலும் அங்(கு)அவள் கண்டளவே**
**பச்சி ரையாம்இவர் மெய்யறி வில்லவர் பாமரர் ஆகியுளார்**
**இச்சகம் மேல்உயிர் வாழில் இகம்பரம் எங்கும் இடும்பையெனா.**

**பொழிப்புரை:** *சந்திரன் சூரியன் அக்கினி என்னும் மூன்று சுடர்களும் வந்தாலும் பிரகாசம் இன்றி முழுதும் இருண்டு விடத் தகுதியான இருள் முழுவதும் வியாபித்த இரவில் பயம் கொள்ளாமல் பரிசோதனை செய்துகொண்டு வரவும், அதனை அங்கு அவள் கண்ட மாத்திரம், இவர்கள் ரசம் பொருந்திய இரைக்கு ஆவர். உண்மை அறிவு அற்றவர், மூடர்களாக ஆகியுள்ளனர். இவர்கள் இந்த உலகில் உயிர் வாழ்ந்திருந்தால் இம்மை மறுமை இரண்டுமே துயர் ஆகும் என்று எண்ணினாள்.* **(3.3.20)**

**மீளவும் நின்(று)உணர் வாள்அயன் முன்னம் விதித்ததும் இப்படியே**
**கோளற வந்த பயன்கவ ராதவர் கொச்சை மனத்தினரே**
**நீள நினைந்(து)உணர் புந்தியும் நற்குண நீர்மையும் எய்தியுளார்**
**மாள வதம்செய் நெஞ்(சு)எழு மோஇவர் வன்துயர் மேவுவரோ.**

**பொழிப்புரை:** *மீண்டும் நிதானமாகச் சிந்தனை செய்கின்றாள். நான்முகன் முன்பு அருளியதும் இப்படியே தான். குற்றம் இன்றி வந்த பொருளை அடையாதவர் தாழ்ந்த மனம்உடையவர் ஆவர். ஆழமாக ஆலோசித்து உணரும் மதியும், நல்ல குணங்களும் அடைந்து இருப்பவர்களாக இருப்பின் அவர்களைக் கொல்வதற்கு மனம் வருமோ? இவர்கள் மிகுந்த துன்பத்தை அடைவார்களோ? (அடையார்)* **(3.3.21)**

**வஞ்ச(ம்)இல்)நீள் புகழ்வாழ்நாள் வகுப்பரிய சுகம்அமர்ந்தோர் வணங்க லாவார்**
**எஞ்ச(ல்)இலா ஆவியினும் இனியவர்ஆ தலின்அவருக்(கு) இடரே வந்தால்**
**அஞ்ச(ல்)என உயிர்கொடுத்தும் அளித்திடவேண் டினராவர் அன்பா னோர்க்குத்**
**தஞ்சமுறக் காலனையும் உறவாக்கும் தன்மையினர் தக்க சான்றோர்.**

**பொழிப்புரை:** *பரந்த கீர்த்தியும் நீண்ட வாழ்நாளும் வஞ்சிக்கப்படாத தன்மையும், அளவற்ற ஆனந்தமும் வேண்டும் என்று விருப்பம் கொண்டவர்கள், குணங்களுடைய தக்க சான்றோர்களை வணங்குதல் வேண்டும். குறையாத பிராணனைக் காட்டிலும் இனிமையைச் செய்யும் சாதுக்களுக்குத் துயரம் வந்தால் அஞ்சாதீர் என்று உயிரைக் கொடுத்தும் காக்க வேண்டியவர் ஆவர். அந்த அன்புடைய குணவான்களைத் தஞ்சம் அடைந்தால் அவர்கள் எமனையும் உறவாக ஆக்கும் தன்மை கொண்டவர்கள். (சாதுக்கள் தான் வாழ்வதைக் காட்டிலும் சித்தங்களைச் சுகப்படுத்துகின்றார்கள். உயிரைக் கொடுத்தேனும் அவர்களைக் காக்க வேண்டும் என்பது பொருள்.)* **(3.3.22)**

**அரக்கியெனும் யாம்முதலாய் உயர்ந்தோரை ஆதரிக்கும் அன்பு கண்டால்**
**இரக்கமுறப் பொன்போல யாவரேவி ரும்பாதார் இகலோ கத்தில்**
**புரக்கவரு நிறைமதிபோல் புணர்ந்தோரைக் குளிர்விப்பார் புணரா தோரே**
**பரக்கழியா இறந்தோராம் புணர்ந்தோரே முத்திமுதல் பயன்பெற் றோரே.**

**பொழிப்புரை:** *அரக்கியான எம்மவர்கள் முதலாக உயர்ந்த குணம் உடையவர்களை ஆதரிக்கும் அன்பு கொண்டால், இரக்கமுடன் பொன்நகையைப் போல் யார் தான் விரும்பமாட்டார்? இந்த உலகில் காக்க வரும் முழு நிலவினைப் போல, தன்னை (குணம் உடையாரை) அடைந்தவரைக் குளிர வைப்பார், அடையாதவர்கள் பரம்பொருளை அடைவதை இழந்து இறந்தவர்கள் ஆவர். அவர்களை அடைந்தவர்களோ முத்தி முதலாக அனைத்துப் பயன்களையும் பெற்றவர்கள் ஆவர்.* **(3.3.23)**

**ஆதலினால் இவர்தம்மை அறிஞரோ அறிவிலரோ யார்கொல் என்னச்**
**சோதனையாம் வினாஉரைகள் சொல்வோம்என்று) உருமேறும் துணுக்(கு)என்(று) அஞ்ச**
**மீதுறநின்(று) ஆர்ப்பரித்து வெவ்விடிக்குப் பின்ஆலி வீழ்க்கும்; கார்போல்**
**ஓதரிய கொடியவன விசும்புக்கு மதிஇரவி ஒப்பீர் என்னா.**

**பொழிப்புரை:** *ஆதலால் இந்த இருவரும் விவேகம் உள்ளவர்களா அல்லது விவேகம் இல்லாத வர்களா என்பதை அறிய கேள்விகள் கேட்போம் என்று பேரிடியும் திடுக்கென்று அஞ்சும் படியாகக் கம்பீரமாகச் சப்தம் செய்து, பேரிடிக்குப் பின்பு ஆலங்கட்டி வீழ வைக்கும் கரிய மேகம்போல், சொல்வதற்கு அரிதான காட்டின் ஆகாயத்தில் சந்திர சூரியர் ஒளிபோல் கர்ஜித்து,* **(3.3.24)**

**மீட்(டு)உரைப்பாள் மாயைஎனும் வெவ்விருள்பா றையின்கீழே மிளிர்ந்து மாயும்**
**ஈட்டமுறும் புழுப்போல்வீர் எனக்(கு)இரையாய் இக்கணத்தே இறக்க வந்தீர்**
**சேட்டமுளார் போல்இருந்தீர் தீயவர்போன் றீர்எவர்நீர் செப்பும் என்னக்**
**கேட்டளவே கொலைஅரக்கி கேள்என்னத் திறல்வேந்தன் கிளத்தல் உற்றான்.**

**பொழிப்புரை:** *மீண்டும் சொல்வாள் "மாயை என்னும் கொடிய இருள் அடர்ந்த மலைப் பாறையின் பொந்தில் தோன்றி ஒடுங்கும் கூட்டமான புழுக்களைப் போல்வீர் எனக்கு இரையாக இக்கணத்தில் மரணம் அடைய வந்துள்ளீர். மேன்மையுடைய மகான்கள் போலவும் தெரிகின்றீர். (அதே சமயம்) துர்ப்புத்தி உடையவர் போலவும் இருக்கின்றீர். நீங்கள் யார் என்பதைச் சொல்லும்" என்று அரக்கி கேட்கவும், "பிராணிகளைக் கொலை செய்கின்ற அரக்கியே! கேட்பாய்" என்று பராக்கிரமம் உடைய அரசன் சொல்கின்றான்.* **(3.3.25)**

**எவ்வுழிநின் றனைநீஇங்(கு) இசைத்தவெலாம் இளவண்டின் இரைச்சல் போலச்**
**செவ்விதுகேட் டனம்என்ன அரக்கியும்நன்(று) என்(று)எதிரே சிரித்த லோடும்**
**வெவ்வியபல் ஒளியாலே வெளியாகக் கண்(டு)இறையும் வெருவல் அன்றி**
**மைவரைபோல் வாய்திறந்து வாளாநீ வருந்த(ல்)எனா மன்னன் சொல்வான்.**

**பொழிப்புரை:** *"நீ எங்கிருக்கிறாய்? நீ கூறியவை எல்லாம் இள வண்டின் அற்ப சப்தம் போல் இனிமையாகக் கேட்டோம்" என்று அரசன் சொல்ல, அரக்கியும் நல்லது என்று எதிரே வந்து கர்ஜித்து சிரித்திடவும், கோரமான பற்களின் ஒளியால் அவளை நேராகக் கண்டும் சற்றும் அச்சம் இன்றி மலைபோல வாயைப் பிளந்து வீணாக நீ வருந்துவது எதற்கு என்று கூறி மன்னவன் மேலும் தொடர்ந்தான்.* **(3.3.26)**

**எய்தாநின் றுளபயனுக்(கு) இயற்றாதார் இல்லையாம் என்ற போது**
**நொய்தான கருமத்தில் நொய்தானோர் விரைந்திடுவர் நொய்மை தோன்ற**
**ஐதான புந்தியினால் ஆறுதலால் அறிவுடையோர் அனைத்தும் செய்வர்**
**வெய்தாஉன் போல்வாரைக் கொது(கு)எனவீ சிடும்எங்கள் வீரக் காற்று.**

**பொழிப்புரை:** *இப்பொழுது அடைகின்ற பிரயோசனத்துக்கு முயற்சி செய்யாதவர் யார் உளர் என்ற போதிலும் அற்பமான கருமத்தினால் அற்ப மதியுடையவர் தமது அற்பத் தன்மை வெளிப் படும்படி அவசரப்பட்டு செய்வர். பொறுமையுடன் கூடி தெளிந்த புத்தியினால் விவேகம் உள்ளவர் அனைத்தையும் செய்து முடிப்பர். கொடிய அரக்கியான உன்னைப் போன்றவர்களை எங்களுடைய தைரியம் என்னும் வீரக் காற்றானது கொசுக்களைப் போல் தொலை தூரத்தில் எறிந்து விடும்.* **(3.3.27)**

**ஆதலால் விரைவொழி உன்கருத்தை உரைஎங்கள் அருகு வந்தோர்**
**காதலால் இரந்தபொருள் கனவிலும்நல் குவம்என்று கழற லோடும்**
**போதமும்கல் வியும்வலியும் பொறையும்(ம்)அள விலர்என்றே புந்தி செய்தாள்**
**மேதகமாம் அவர்உரையை மிகவியந்தாள் இழிவிலா மெய்ம்மை கண்டாள்.**

**பொழிப்புரை:** *ஆதலால் உன்னுடைய அவசரத்தையும் ஆத்திரத்தையும் விடுவாய். உன்னுடைய கருத்தினைத் தெரிவிப்பாய். எங்களை அணுகியோர் விரும்பிக் கேட்ட பொருள் எதுவாயினும் கனவிலும் தருவோம் என்று கூறியதோடும், அவர்கள் இருவரும் ஞானமும் சாத்திரத் திறமையும், வலிமையும், பொறுமையும் அதிக அளவில் உடையவர் என்று எண்ணினாள். மேன்மைமிக்க அவர்களின் வாக்கியங்களைக் கேட்டு மிகவும் ஆச்சரியப் பட்டாள். குற்றம் இல்லாத உண்மையைக் கண்டாள்.* **(3.3.28)**

வாக்குமுகம் கண்களால் மாறுபடாது) உயர்ந்தோர்தம் மறுவில் சித்தம்
மேக்குயரும் இவற்றாலே உள்நினைவால் அறியலாம் மேலோர் தாமே
பாக்கியம்போல் வந்(து)எய்தில் சந்தேகம் தெளியாதார் பதகர் ஆகும்
தாக்கு(ம்)உரை யால்இவரை அறிது(ம்)எனா யாவர்நீர் சாற்றும் என்றாள்.

**பொழிப்புரை:** *பெரியோர்களுடைய குற்றமில்லாத சித்தமானது வாக்கு-முகம்-கண்களால் ஒன்றுக்கொன்று முரண்படாது. மேன்மை மிக்க இவற்றாலே உட்கருத்தையும் அறியலாம். உயர்ந்தவர்கள் தாமாகவே வந்து செல்வம் வந்தது போல் தரிசனம் தந்தால் சந்தேகத்தைத் தெளிந்து கொள்ளாதவர் அதமர் ஆகும். ஆழமான கேள்விகளால் இவர்களை அறிந்து கொள்வோம் என்று எண்ணி, "தாங்கள் யார் என்பதைச் சொல்வீர்" என்றாள்.* **(3.3.29)**

வினய(ம்)உற அரக்கிஇது விளம்பிடமந் திரிவிளம்பும் வேடர்க்(கு) எல்லாம்
இனையவன்மன் னவன்அமைச்சன் நான்ஆகும் இருள்போதில் எங்கு நாடி
உனைநிகர்வா ரைச்சோதித்(து) ஒறுகஉயிர் ஒடுக்கஉயிர் நிறுத்த வந்தோம்
நினை(வு)இதுவந் ததற்(கு)என்னா இவன்கூற மீண்(டு)அந்த நிருதி கூறும்.

**பொழிப்புரை:** *பணிவுடன் அரக்கி இவ்வாறு கேட்கவும், மந்திரி சொல்வதாவது: வேடர்களுக்கு எல்லாம் இவர் மன்னவன். இவருடைய அமைச்சன் நான். இருளான பொழுதில் எல்லா இடங்களிலும் சுற்றிப் பார்த்து, உன்னைப் போன்றவர்களைச் சோதனை செய்து அடக்கவும், மீறினால் உயிரைப் போக்கவும், நல்லவரைப் பாதுகாக்கவும் வந்தோம். இங்கு வந்ததன் கருத்து இதுவே" என்று மந்திரி கூறவும், மீண்டும் அரக்கி கூறுவாள்.* **(3.3.30)**

தீயவனாம் மந்திரியால் நல்வேந்தும் தீவேந்தாம் தீமை இல்லாத்
தூயவனாம் மந்திரியால் தீவேந்து நல்வேந்தாம் தொடர்ச்சி போல
ஆயநெறி மன்னவராம் அமைச்சரும்அப் படிஆகும் ஆத லாலே
நேயவிவே கத்(து)அமைச்சன் உண்டாகில் எப்பயனும் நிருபர்க்(கு) உண்டாம்.

**பொழிப்புரை:** *தீய எண்ணமுள்ள மந்திரியால் நல்ல அரசனும் தீய குணம் உள்ளவன் ஆவான். கெட்ட ஆலோசனை கூறாத பரிசுத்த மந்திரியால் கொடுங்கோல் மன்னவனும் நல்ல அரசாட்சி புரியும் அரசன் ஆவான். இந்த முறைப்படி மனுநூல் சாத்திரப்படி அரசு புரியும் அரசனால் அமைச்சர்களும் அப்படி ஆகுவர். ஆதலாலே அறிவும் சாமர்த்தியமும் அன்பும் உடைய அமைச்சர் இருப்பின் அரசர்களுக்கு எல்லாவிதப் பயன்களும் உண்டாகும்.* **(3.3.31)**

மன்னவன்எப் படிஉலகில் மன்னுயிரும் அப்படியாம் மகிமை தானும்
நல்நடுவு நிலைமையும்மெய்ஞ் ஞானநூல்தெ ளிந்தவர்க்கே நண்ணா நிற்கும்
அன்னதுகற் றிலர்என்னில் அரச(ர்)அமைச் சர்க(ள்)என்போர் அபத்த ராகும்
இன்னகலை இலதாகில் எனக்(கு)இரையாய் இளமைநலம் இழந்தீர் அன்றே.

**பொழிப்புரை:** *மன்னன் எப்படியோ நாட்டு மக்களும் அப்படியே ஆவர். தலைமைப் பண்பும், நடுநிலையில் நோக்கும் பார்வையும், மெய்ஞ்ஞான நூல்களைக் கற்றுத்*

*தெளிந்தவர்களுக்கே உண்டாகும். அவ்வாறு கற்றுத் தெளியவில்லை என்றால் அரசர், அமைச்சர் என்பவர்கள் பொய் வேடம் உடையவர்களே ஆவர். இவ்விதக் கலைகளை அறியாதவர் ஆகில், எனக்கு உணவாகி இளமை முதலானவற்றை இழந்தவர் ஆவீர்.*
**(3.3.32)**

**சிங்கம்(ம்)எனும் உங்களையான் செப்புகின்ற வினாக்கூட்டில் சிறைசெய் கின்றேன்**
**உங்கள்மதி யால்திறந்தால் உயிர்வாழ்வீர் எனவகுத்தென் உரைசெய்(கு) என்னாத்**
**துங்கநர பதிஉரைக்கத் தொல்அரக்கி நல்லமுதத் துளிகள் போல**
**அங்(கு)அவருக்(கு) உரைத்தவெலாம் இராகவகேள் எனவசிட்டன் அருளல் உற்றான்.**

**பொழிப்புரை:** *"சிங்கம் போன்ற உங்களை நான் கேட்கின்ற கேள்விகள் என்னும் கூட்டினில் அடைக்கப் போகின்றேன். உங்களுடைய விசார புத்தியினால் கூட்டினைத் திறந்துவிட்டால் உயிர்பிழைப்பீர்" என்று சொல்ல, கேட்க வேண்டியதை எல்லாம் பிரித்துப் பிரித்து உரைப்பாய் என்று உயர்ந்த அரசன் கூறவும், தவம் செய்தவளான அரக்கி உயர்ந்த அமுதத் துளிகளைப் போல அவ்விடத்தில் அவர்களுக்குக் கூறியதை எல்லாம் இராகவனே! கேட்பாயாக என்று வசிட்டர் தெரிவித்துக் கூறத் தொடங்கினார்.*
**(3.3.33)**

**அண்டநிலை பலகோடி பலவாயும் ஒன்றாம்எவ் அணுவின் உள்ளே**
**விண்டகடல் குமிழிகள்போல் விரிந்(து)ஒடுங்கும் விண்ணாயும் விண்அன்(று) ஏது**
**தண்டறஉண் டாய்இருந்தும் இலாத(து)எது சரித்தாயும் சரியா(து) ஏது**
**கண்டிடநில் லாதாயும் நிற்ப(து)எது சித்தாயும் கல்லாம் ஏது.**

**பொழிப்புரை:** *(வினா-1) அனேகமாயும் ஏகமாயும் இருக்கும் எந்த அணுவின் உள்ளே பலகோடி அண்ட வரிசைகள் கடலில் தோன்றும் நீர்க்குமிழிகள் போல் விவர்த்தமாகத் தோற்றி லயம் அடையும்? (வினா-2) ஆகாயமாகவும் அனாகாயமாகவும் (ஆகாயம் இல்லாததாகவும்) இருப்பது எது? (வினா-3) தடையறச் சிறிது இல்லாததாய் இருந்தும் சிறிது இருப்பது யாது? (இல்லாதிருந்தும் இருப்பது யாது?) (வினா-4) நடந்தும் நடவாது இருப்பது யாது? (அசத்தாய் இருந்தும் சத்தாய் இருப்பது யாது?) (வினா-5) காணும்படியாக நில்லாததாய் இருப்பினும் நிற்பது எது? (வினா-6) சேதனமாய் ஆயினும் (அசேதனமான) கல் ஆவது எது?* **(3.3.34)**

**வானிடைஓ வியம்எழுது கின்ற(து)எது வித்திடையில் மரங்கள் போல**
**ஈனமிலா எவ்வணுவில் உலகமெலாம் இருக்கின்ற(து) யாதில் நின்றும்**
**ஆனகடல் திரைநுரைபோல் ஒருபொருளும் பிரிவாகாது அமைந்த நீரும்**
**ஈனமறு நெகிழ்ச்சியும்போ லேதோன்றி இருமையும்எங்(கு) ஒருமை ஆகும்.**

**பொழிப்புரை:** *(வினா-7) சிதாகாயத்தில் சித்திரம் எழுதுவது எது? (வினா-8) விதையில் மரங்களின் வடிவம் இருப்பது போல, எந்த அணுவில் பிரபஞ்சம் அனைத்தும் இருக்கின்றன? (வினா-9) கடலில் தோன்றும் அலை, நுரை, குமிழி முதலானவை கடல் நீரினைக் காட்டிலும் வேற்றுமையாகாதது போல எவ்வஸ்துவும் எதிலிருந்தும் வேற்றுமை அடையாது? (வினா-10) தண்ணீரும் அதில் கெடாத திரவத் தன்மையும் போல, தோன்றும் துவைதமும் எதிலிருந்து வேற்றுமைத் தன்மையை அடையாது?*
**(3.3.35)**

**இந்தவினா வின்பயனை நும்உணர்வா லேதோன்ற இயம்பு வீரேல்**
**கந்தமுற என்குழல்மேல் எப்போதும் இருக்கின்ற கமழ்போது் ஆவீர்**
**மந்தமுறு புந்தியினால் வகுத்(து)உரைக்க மாட்டாது மயங்கு வீரேல்**
**வெந்தவயிற்(று) எரிகனற்கு விற(கு)ஆவீர் என்(று)அரக்கி விளம்ப லோடும்.**

**பொழிப்புரை:** *இந்த கேள்விகளுக்கு உங்களுடைய விசார ஞானத்தினால் உரிய பதிலைக் கூறினால், மணம் கமழ எனது கூந்தலில் எப்போதும் இருக்கின்ற வாசனை உடைய மலராக ஆவீர். மந்தமான புத்தியினால் பிரித்துப் பார்த்து பதில் உரைக்க முடியாமல் மயங்கினால் பசியினால் வெந்துபோன எனது வயிற்றில் எரிகின்ற அக்கினிக்கு இரையாக விறகு போல் ஆவீர் என்று அரக்கி கூறவும்.* **(3.3.36)**

**மந்திரிமுன் உரைசெய்வான் மாசிலாப் பரம்பொருளை வகுத்துச் சொன்னாய்**
**சிந்தைமுத லாம்பொறிகள் ஆறாலும் எட்டரிதாம் திறத்தி னாலே**
**அந்தமில்சின் மாத்திரமாய் விண்ணிலும்நொய் தாம்பரம அணுவே ஆகும்**
**முந்துபிர மாண்ட(ம்)எலாம் அவ்வணுவி லேதோன்றி முதிர்ந்து மாயும்.**

**பொழிப்புரை:** *(1-வது வினாவுக்கு விடை) மந்திரி முதலில் விடை கூறுகின்றான். குற்றமில்லாத பரமாத்ம வஸ்துவையே விரித்துக் கூறினாய். மனம் முதலாக (செவி, கண் முதலான புலன்கள் ஐந்து ஆக) ஆறு பொறிகளாலும் எட்டுவதற்கு அரிதாகிய தன்மையினால், இடம் காலம் பொருள் மூன்றினாலும் எல்லைக்கு உட்படாததாய் முடிவற்றதாய் அறிவு மாத்திரமாய் ஆகாயத்தினும் அதிசூக்குமம் ஆகும் பரமாத்மா அணு வடிவமே ஆகும். (8-வது வினாவுக்கு விடை) அந்த சித்தாகிய அணுவில் பிரமாண்டங்கள் அனைத்தும் விவர்த்தமாகத் தோன்றி நிலை பெற்று நாசத்தை அடையும்.* **(3.3.37)**

**தடமான அதன்புறம்இல் லாமையினால் விண்ணாகும் தனிப்போ தத்தால்**
**இடமான விண்அன்றாம் இன்னதெனத் தெரிவரிய இயல்பி னாலே**
**திடமாக இலதாகும் சற்பாவத் தால்உளதாய்ச் செப்ப லாகும்**
**புடமாக விளங்குதலால் சித்தாகும் அறிவ(து)இலாப் பொருட்டால் கல்லாம்.**

**பொழிப்புரை:** *(2-வது வினாவுக்கு விடை) விசாலமானதால் அதன் வெளிப்புறம் இல்லாமையினால் அதாவது வாயு முதலிய பூதங்களையும் அடக்கியிருப்பதால் ஆகாயம் ஆகும். (3-வது வினாவுக்கு விடை) இப்படிப் பட்டதாக இருக்கின்றது என்று அறிய முடியாத தன்மையினால் இல்லாதது ஆகும் அதாவது எக்காரணத்தால் பிரம்மம் குறிக்கப்படாததாக இருக்குமோ அக்காரணத்தால் இல்லாததாகும். பரமார்த்த சத்து வடிவமாக இருப்பதால் சூக்குமமாய் இருக்கின்றது என்று கூறமுடியும். (6-வது வினாவுக்கு விடை) பிரகாச வடிவமாக வெளியாய் விளங்குதலால் சேதனம் ஆகும். தனக்கு வேறாக அறியத் தகுந்த அறிவு அது இல்லாமையால் கல்லுக்கு நிகராம்.* **(3.3.38)**

**தானாகும் மிகநொய்தாம் ஆகா யத்தில்**
**சகத்திரளாம் சித்திரத்தைத் தானே கோட்டும்**
**ஆனாத உலகமெலாம் தனது சோதி**
**ஆதலினால் அதற்குவே(று) அயல்ஒன் றில்லை**

நீநானாம் சகபேத வடிவம் தானும்
நிற்கின்ற அதன்வடிவாய் நீங்கா(து) என்றும்
நானாவாம் பொருள்புணர்வால் அடைந்த தாகும்
நடக்கஇடம் இலாமையினால் நடவா தாகும்.

**பொழிப்புரை:** *(7-வது வினாவுக்கு விடை) தனது சொரூபமாகும் மிகத் தெளிவான சிதாகாசத்தில் உலகக் கூட்டங்களாகிய ஓவியத்தைச் சுயமாகவே வரையும். (9-வது வினாவுக்கு விடை) ஞானத்தால் அன்றிக் கெடாத பிரபஞ்சம் யாவும் தன் அறிவு வடிவமே ஆதலால் அயலாக அன்னியம் ஒன்றும் இல்லை. (10-வது வினாவுக்கு விடை) நீ நான் என்பதாகத் தோற்றும் உலக பேத வடிவமும் அதன் பிரகாசமாய் அயலாக ஆகாமல் பொருந்தும் என்றும், (4-வது வினாவுக்கு விடை) பற்பல பொருள்களின் தொடர்பால் எங்கும் சென்றதாகும். வியாபகம் ஆவதாலும், சூக்குமமாக ஆவதாலும் செல்வதற்கு இடம் இல்லாமையால் செல்லாதது ஆகும்.* **(3.3.39)**

அடைவதற்(கு)ஒன்(று) இலாமையினால் இல்லை யாகும்
அனவரதம் சத்தையி(ல்)உண் டாகும் என்று
புடைபெயர்நன் மதிஅமைச்சன் புகலக் கேட்டுப்
போதவியந்(து) அதன்பின்பு பூப னேஉன்
உடையஉணர்(வு) உரைஎன்ன அவனும் சொல்வான்
உலகத்தில் உறுதியிலா உறுதி தானே
தடையறுசிற் பரம்பொருளின் உறுதி ஆகும்
தற்பதத்தின் இயல்(பு)இன்னம் சாற்றக் கேளாய்.

**பொழிப்புரை:** *(5-வது வினாவுக்கு விடை) சார்ந்திருப்பதற்கு இடம் ஒன்றும் இல்லாமையால் இது நாஸ்தியாம் அதாவது இல்லாததாகும். எப்பொழுதும் பிரகாச வடிவ மயமாம் தன்மையால் இது இருப்பதாகும் என்று அரசனது பக்கமாக நிற்கின்ற நல்ல புத்தியை உடைய மந்திரி கூறவும் கேட்டு மிகவும் வியந்து பின்பு அரசனே! உன்னுடைய ஞானத்தைக் கூறுவாய் என்று கற்கடி கேட்கவும் அரசனும் கூறலுற்றான். பிரபஞ்ச ஞானம் இல்லா ஞானம் தானே தடையில்லா சின்மயப் பரமாத்ம வஸ்துவின் ஞானம் ஆகும். அந்தப் பிரம்மத்தின் சுபாவத்தை இன்னமும் கூறக் கேட்பாய்.* **(3.3.40)**

கருத்ததனால் சங்கற்ப விகற்பம் எல்லாம்
கைவிடுதல் கைக்கொள்ளப் படுவ தாகும்
திருத்தமுறு தன்விரிவும் குவிவு தானும்
சிருட்டியாகும் கற்பமாகும் திரள்வே தாந்தத்(து)
அருத்தமுறு வாக்கியத்தின் நிட்டை யாகும்
அவ்வேத வாக்கியத்துக்(கு) அயலும் ஆகும்
உருத்திகழும் உள்ள(து)இல(து) இரண்டி னுக்கும்
உள்ளாகும் அவைஇரண்டின் உருவம் ஆகும்.

**பொழிப்புரை:** *சிந்தையினால் எழும் எல்லா சங்கற்ப விகற்பங்களையும் கைவிடுவதனால் அந்தப் பரமான்ம வஸ்து அடையத்தக்கதாகும். நிர்மலமான அதனது*

*விரிதலும் குவிதலும் தான் சிருட்டியும், பிரளயமும் ஆகும். வேதாந்த சாத்திரங்களாகிய உபநிடதம் முதலானவை கூறுகின்ற வாக்கியங்களின் உள்ளார்ந்த அர்த்தம் இதுவே ஆகும். அந்த வேத வாக்கியங்களுக்கு (மேலோட்டமான சக்தி விருத்திக்கு) புலப்படாதது ஆகும். வடிவத்தோடு விளங்குகின்ற 'இருப்பது' 'இல்லாதது' இந்த இரண்டுக்கும் உள்ளாக இருப்பது, பிரம்மம் சர்வப் பிரபஞ்ச அதிஷ்டானம் ஆவதால் அவ்விரு வடிவமும் ஆகும்.* **(3.3.41)**

சராசரமாம் உல(கு)அனைத்தும் மனரூ பத்தால்
தான்செய்யும் விளையாட்டாம் சகமாய் நின்றும்
புராதனமாம் ஒருமையினில் பிரியா தாகும்
பூரணசின் மாத்திரமாம் பொருளே சொன்னாய்
நிராசைஉளத்(து) அவர்அறியும் பொருள்ஈ(து) என்று
நிருப(ன்)உரைத் திடநிருதி நெஞ்சுள் கொண்டு
விராஅமுத மழைசொரியக் குளிர்ந்த வாபோல்
மிகக்குளிர்ந்தாள் சாந்தமுற விளம்ப லுற்றாள்.

**பொழிப்புரை:** *அசையும் அசையாப் பொருள்களின் வடிவமாகிய உலகம் அனைத்தும் மன வடிவ உபாதியினால் தான் செய்கின்ற விளையாட்டு ஆகும். விவர்த்தமாக உலகமாய்த் தோன்றினும், மாயா மயமானாலும் வாஸ்தவத் தன்மையான ஏகத் தன்மை கெடாததாகும். பூரணமான சச்சிதானந்த வடிவத்தையே நீ கூறினாய். நிராசை கொண்ட உள்ளத்தை உடையவர் அறிந்து கொள்ளத் தக்க பரம்பொருள் இது என்று அரசன் கூறவும், கற்கடி அதை மனதில் கொண்டு, அமுத மழை பொழிய மயில்கள் பூக்கள் குளிர்ந்தது போல மிகவும் குளிர்ந்து சாந்தமுடன் கூறத் தொடங்கினாள்.* **(3.3.42)**

அற்புதமாய் அமுதமாய் அறிவே ஆகி
அத்தமனம் உதய(ம்)இலா அருக்கன் போலாய்;ப்
பொற்புமிகும் புந்தியுள உம்மைப் போல்வார்
பொன்னடியை முடியாகப் புனைந்தார் அன்றோ
தற்பரமாம் உலகாளும் வேந்தர் ஆவோர்
தமைஉணர்ந்தோ ரைச்சேர்ந்தால் தளர்(வு)உண் டாமோ
நற்பயன்போல் வரும்உமக்(கு)இங்(கு) அரி(து)இன் றேனும்
நான்செய்யும் கைம்மாறு நவிலும் என்றாள்.

**பொழிப்புரை:** *அற்புதமாக அமுதத்தைப் போல அறிவாகி அத்தமனம் உதயம் இல்லாத சூரியனால் பிரகாசிக்கப்பட்ட மகிமை உடைய புத்தியை உடைய உம்மைப் போன்றவர்களின் அழகிய திருவடிகளைத் தலைமேல் கொண்டவர் தானே இந்த உலகத்தை ஆளும் வேந்தர் ஆவர். பிரம்ம வடிவம் ஆனவர் தம்மைச் சேவித்துக் கொண்டிருந்தால் துயரம் உண்டாகுமோ? இந்த வனத்தின் தவப்பயன் போல வந்த உங்களுக்கு கிடைக்காதது ஒன்றும் இல்லை என்ற போதிலும் நான் தங்களுக்கு என்ன கைம்மாறு செய்ய வேண்டும் என்பதைக் கூறவேண்டும் என்றாள்.* **(3.3.43)**

சிலைஅரக்கர் குலம்என்னும் எட்டிக் காட்டில்
செறிகனித்தே மாஅனையாய் சகத்தில் ஒன்றும்
கொலைபுரியாது) ஒழிஎன்று வேந்தன் கூறக்
கொலைஒழிந்தேன் என்(று)அரக்கி கூற லோடும்
தொலைவரும்ஊன் உணவாநீ செய்யும் ஆ(று)என்
சொல்லெனமன் னவன்கேட்பத் தொல்லை நாளில்
அலைவில்சமா தியில்இருந்து பசியை வென்றேன்
அவ்வகையே இன்று(ம்)இருந்(து) ஆற்ற லுற்றேன்.

**பொழிப்புரை:** *வில்லினைக் கைக்கொண்ட அரக்கர் குலம் என்கின்ற விஷக் காட்டில் பழங்கள் நிறைந்த மாமரம் போன்றவளே! இந்த உலகத்தில் எதையும் கொலைசெய்யாது விட்டு விடுவாயாக என்று அரசன் கூறவும், கொலை செய்வதை இப்போதே விட்டு விட்டேன் என்று அரக்கி பதில் சொல்லவும், அதிகமாகப் பிராணிகளை உண்ணும் நீ உணவுக்கு என்ன செய்வாய், சொல் என மன்னவன் கேட்க, முன்பு அனேக காலம் மனம் அலையாமல் இருந்து சமாதியில் நின்று பசியை வென்றிருக்கிறேன். அந்த வழியையே இப்பொழுதும் பின்பற்றிப் பசியை வெல்வேன் என்றாள்.* **(3.3.44)**

தெள்ளமுத தாரணையால் வேண்டும் காலம்
தேகமுடன் இருந்(து)அப்பால் தேகம் தீர்வேன்
உள்ளநிறை உணர்வுடையேன் ஒன்றும் கொல்லேன்
உண்மைஎன உரைத்(து)ஏக உன்னு வாளைக்
கொள்ளரிய நட்(பு)எளிதில் கொண்டேம் நீஎம்
குலமகளாய் எம்பதிக்குக் கூட ஏகில்
கள்ள(ர்)உடல் இரைதருதும் உடல்போ மட்டும்
கருது(ம்)உடல் வாதனைகள் கழலா காண்பாய்.

**பொழிப்புரை:** *சமாதியில் அமுத தாரணையால் விருப்பம் உள்ள அளவும் தேகமுடன் இருந்து பின்பு இந்த தேகத்தை விட்டு விடுவேன். உள்ளத்தில் நிறைந்த உணர்வு உடையவளாக இருக்கின்றேன். எதையும் கொல்ல மாட்டேன். இது உண்மை என்று கூறி புறப்பட்டுச் செல்ல முயன்ற கற்கடியை நோக்கி அரசன் சொல்வதாவது: "அடைதற்கு அரிதான நட்பினை அடைந்தோம். நீ எம்முடைய குல மகளாய் (அழகிய பெண்ணாக) எமது இருப் பிடத்திற்கு வருவாய் ஆகில், தீயவர்களுடைய உடலை இரையாகத் தருவோம். உடல் இருக்கின்ற வரையில் எண்ணும் தேகவாசனைகள் நீங்காது என்பதை அறிவாய்"* **(3.3.45)**

ஆதலினால் பதக(ர்)உடல் இரையைக் கைக்கொண்(டு)
அரும்பசிபோய் சமாதிதனை அடைஇவ் வாறு
காதலுடன் பலகாலும் செய்தி என்று
காவலன்கூ றவும்அரக்கி களிகூர்ந்(து) ஏகப்
போதக(ம்)அன் னார்தமது நகரம் மேவிப்
பொன்மனைபுக் கார்இரவி பொலிய வந்தான்
பாதகர்மூ வாயிரரை ஆறு நாளில்
பார்த்திப(ன்)ஈந் தான்அரக்கி பற்றிக் கொண்டாள்.

**பொழிப்புரை:** *ஆதலால் பாதகருடைய உடலை இரையாகக் கொண்ட கொடிய பசியைத் தீர்த்துக் கொண்டு சமாதியில் இருப்பாய். (சமாதி கலைந்ததும் வருவாய். வந்து யாம் தரும் தீயவர் உடலை உணவாகக் கொண்டு மீண்டும் சமாதி நிலைக்கு செல்வாய்) இவ்வாறு விருப்பமுடன் பல காலங்கள் செய்து மகிழ்வாய் என்று அரசன் கூறவும், அரக்கி மனம் மகிழ்ந்து அவர்களுடன் சென்றாள். யானைகளைப் போன்ற அவர்கள் அழகிய அரண்மனையை வந்து அடையவும், சூரியன் உதித்தான். ஆறு நாட்களில் பாதகர்கள் மூவாயிரம் பேர்களை (தனக்கு உட்பட்ட தேசங்களில் இருந்து கொணர்ந்து) அரசன் இரையாகக் கொடுக்க அரக்கி அவர்களைக் கவர்ந்து கொண்டாள்.* **(3.3.46)**

**பூமகள்போல் அங்கிருந்த வடிவைக் கங்குல்**
**போதி(ல்)ஒழித்(து) அரக்கர்குலப் பூவை யாகிப்**
**பாமரராம் பாதகரைத் தோள்மேல் கொண்டு**
**பார்த்திபனோ(டு) அமைச்சனுக்கும் பண்பு கூறி**
**ஏமமுறு இமகிரியில் சமாதி மேவ**
**ஏகினாள் இன்றளவும் இந்த வாறே**
**கோமகனும் அரக்கியும்நட்(பு) ஆனார் என்று**
**குரிசிலுக்கு வசிட்டமுனி கூறி னானால்.**

**பொழிப்புரை:** *பூமகள் போன்று அரண்மனையில் இருந்த அழகிய வடிவத்தை இரவு வந்ததும் நீக்கி அரக்கர் குலப் பெண் வடிவமாகிப் பாமரராய் தீயவை செய்யும் பாதகர்களைத் தோள் மேல் சுமந்து கொண்டு, அரசனுக்கும் மந்திரிக்கும் இனிய வசனங்களைக் கூறி, இமய மலைக்குச் சென்று புசித்து விட்டு சமாதி நிலை அடையச் சென்றாள். இன்று வரையில் இவ்வாறு அரசனும் அரக்கியும் நட்பு கொண்டவர்கள் ஆனார் என்று இராம பிரானுக்கு வசிட்ட முனிவர் கூறினார்.* **(3.3.47)**

**(உற்பத்திப் பிரகரணத்தில் கற்கடி கதை முற்றும்)**

# (iv) ஐந்தவர் கதை

*தொடங்கியதன் அனுவாத பூர்வகம் சகத்தின் மனோ விலாசத் தன்மையின் பொருட்டு மற்றொரு கதையை வர்ணிக்கின்றார். முன் கற்கடி கதையில் பிரம்மமே ஈது அனைத்தும் என்று பிரம்ம திருஷ்டி சொல்லப்பட்டது. இந்த ஐந்தவர் கதையில் அந்த அர்த்தத்தையே தெளிவதன் பொருட்டு விசுவ திருஷ்டிக்கு மனோமயத்துவம் சொல்லப் படுகின்றது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**உரைசெய் ஊசி கதையாலே உண்மை யாகிப் பரமான**
**கரைஇல் பிரம மேஉளதாம் காணப் படுவ(து) ஒன்றில்லை**
**வரைஇல் சிருட்டி களின்முதலாய் மனமே விளங்கும் இதுபொருட்டோர்**
**புரைஇல் கதைகேள் எனவசிட்டன் புயல்மே னியற்குப் புகல்கின்றான்.**

**பொழிப்புரை:** *முன்பு கூறிய கற்கடி கதையினால் சத்தியமான மேலான எல்லையற்ற பிரம்மம் ஒன்றே இருக்கிறது, காணப்படும் சம்சார உலகம் முதலானவை எதுவும் இல்லை. அளவற்ற சிருட்டிகளுக்கு முதலாக சித்தமே திகழும். இதனை நன்கு தெளிதல் பொருட்டு குற்றமில்லாத கதை ஒன்றைக் கேள் என்று வசிட்ட முனிவர் மேக நிற மேனியன் இராம பிரானுக்குக் கூறுகின்றார்.* **(3.4.1)**

**மேவு கதையால் சிற்சத்தி விரிவே உல(கு)என்(று) அறுதிவரும்**
**வாவு மனமாம் சிறுமகவு மடமை யாலே வெறும்பொய்யே**
**தாவு சகப்பேய் வரக்காணும் தனைப்போ திக்கில் அறிந்(து)இடர்போம்**
**பாவும் விகாரம் பலசேரில் பவமாம் அவற்றை விடல்வீடாம்.**

**பொழிப்புரை:** *சொல்லப்படும் கதையால் சிற்சக்தியின் உல்லாசமாகிய விரிவே உலகம் என்ற நிச்சயம் உண்டாகும். பார்ப்பதைப் பற்றிக்கொள்ளும் மனம் என்னும் சிறு குழந்தை அறியாமையால் எப்பொழுதும் மித்தையாகவே தோற்றம் அளிக்கின்ற உலகம் என்னும் பேய் உண்மையாக இருப்பதாகக் காண்பன். தனது உண்மையைப் போதித்தால் அதனை உணர்ந்து துயர்நீங்கி ஆனந்தம் கொள்வன். பாவிக்கும் விகாரம் அதாவது விருப்பு வெறுப்பு முதலானவை அனேகம் சேர்ந்தால் அதுவே சம்சாரம் - பிறவியாம். அவற்றை விட்டு விடுதலே முத்தியாம்.* **(3.4.2)**

**ஒருகால் விரிஞ்சன் சிருட்டியெலாம் ஒடுக்கி இரவில் உறங்கியபின்**
**வருகா லையில்மீண்(டு) உல(கு)அளிப்பான் வான்நோக் குதலும் மனத்தாலே**
**பெருகா நின்ற விண்ணிடையே பேத மான பலசிருட்டி**
**அருகா நின்ற படிகண்டான் ஆர்செய் தனர்என்(று) அதிசயித்தான்.**

**பொழிப்புரை:** *ஒரு சமயத்தில் நான்முகன் சிருட்டி செய்தவை எல்லாம் (நைமித்திக பிரளயத்தில்) ஒடுக்கி, இரவில் உறங்கி அதன் பின்னர் காலையில் எழுந்து மீண்டும் உலகங்களைச் சிருட்டிக்க மனதால் நோக்கிய போது, பரந்த ஆகாயத்தில் வேறு வேறான பற்பல சிருட்டிகள் நெருக்கமாக இருந்ததைக் கண்டான். யார் சிருட்டி செய்திருப்பார் என்று அதிசயம் கொண்டான்.* **(3.4.3)**

**அதில்ஓர் இரவி வருகென்னா யாரே அளித்தார் எனக்கேட்ப**
**கதிரோன் வணங்கி உரைசெய்வான் கரைதீர் உலகின் காரணமாம்**
**விதியா நீஈ(து) அறிந்திலையேல் விளம்பக் கேட்பாய் வெண்கயிலைப்**
**பதியா கியநா வலம்தீவில் பரப்பாம் இடத்தோர் பக்கத்தில்.**

**பொழிப்புரை:** *அந்த புவனங்களில் வலம் வரும் ஒரு சூரியனை அழைத்து இவற்றை யார் சிருட்டி செய்தார் என்று நான்முகன் கேட்கவும், அந்த சூரியன் வணங்கிச் சொல்வான் "எல்லையற்ற உலகங்களுக்குக் காரணமாகிய பிரம்ம தேவராகிய தேவரீர் இது தெரியாவிடில் சொல்கின்றேன் கேட்பீர். கயிலை மலையில் உள்ளடங்கிய நாவலம் தீவில் சமமான பரப்பு உள்ள ஓர் இடத்தில்.* **(3.4.4)**

**சிறக்கும் சுவர்ண சடம்என்னும் தேசம் ஒன்(று)உன் மைந்தர்களால்**
**நிறக்கும் சிருட்டி படைத்(து)அதில் நெடும்கா சிபன்தன் குலத்திடையே**
**பிறக்கும் மறையோன் இந்துவெனும் பெரியோர் மக்கள் பேரின்றிப்**
**பறக்கும் கருத்தால் தேவியொடும் பரமன் கயிலைப் பதிமேவி.**

**பொழிப்புரை:** *வளங்கள் நிறைந்த சுவர்ண சடம் என்கின்ற தேசம் ஒன்று இருந்தது. அதில் தங்களுடைய மைந்தர்களாகிய மரீசி முதலானவர்களால் விரிவாக அழகாகக் கற்பிக்கப் பட்ட மண்டலத்தில் பெரும் தவம் உடைய காசிப முனிவர் குலத்தில் பிறந்த 'இந்து' என்ற பெயருடைய உத்தமன் பிள்ளைகள் இன்றி துன்பம் அடைந்து மனைவியொடும் பரமேசுவரன் திகழும் கயிலாய மலையை அடைந்து.* **(3.4.5)**

**தவமேற் கொண்டு பாதவம்போல் சலமே அருந்தி வருந்திடுநாள்**
**சிவன்உள் மகிழ்ந்து வேண்டிய(து)என் செப்பும் என்னச் சிரம்பணிந்து**
**கவலை தீர ஈரைவர் கலைதேர் புதல்வர் வேண்டு(ம்)என**
**அவ(ன்)அங்(கு) அளிப்ப இவர்களிப்போ(டு) அகன்றார் புதல்வர் அவதரித்தார்.**

**பொழிப்புரை:** *மரத்தைப் போல் தண்ணீர் மட்டும் அருந்திக் கொண்டு மிகவும் வருந்தி தவத்தை மேற்கொண்ட நாளில், சிவன் உள்ளம் மகிழ்ந்து தரிசனம் தந்து வேண்டியது என்ன சொல்வாய் என்று கூறவும், தலைதாழ்த்தி வணங்கி, "மைந்தர் இல்லாத கவலை தீரும்படியாக கலைகளில் தேர்ச்சி பெற்றவராக பத்து புதல்வர்களை அளிக்க வேண்டும்" என்று வரம் கேட்கவும், சிவன் அவ்வரத்தை அளிக்கவும் தம்பதிகள் இருவரும் மகிழ்வு கொண்டு சொந்த இடத்திற்குத் திரும்பினர். புதல்வர்களும் பிறந்தனர்.* **(3.4.6)**

**மைந்தர் ஒருபது) உளராகி மறைநூல் நிறைந்து வளர்ந்ததன்பின்**
**தந்தை தாயர் இறந்(து)ஏகத் தனயர் கயிலைத் தலம்எய்திச்**
**சிந்தை செய்வார் நல்குரவு தீர உயர்வன் னியர்ஆவோம்**
**அந்த நிலைசற்று) ஆதலினால் அதிக நிலைமன் னவர்ஆவோம்.**

**பொழிப்புரை:** *நல்லதோர் காலத்தில் பிராமணப் பெண்ணான மனைவி பத்துப் புதல்வர்களைப் பெற்றெடுத்தாள். அந்தப் புதல்வர்கள் மறை, சாத்திரங்கள் கற்று நிறைவாகி வளர்ந்தனர். அதன் பின்பு, தந்தை தாய் இருவரும் மோட்சம் அடைய, புதல்வர்கள் கயிலை மலையை அடைந்து சிந்திக்கத் தொடங்கினார்கள். துயரம் தீர்ந்து*

*மேலான சுகத்தை அடைய உயர்ந்த சிற்றரசர்கள் ஆவோம். அந்த நிலையும் அற்பமாம் என்பதால் அதனைக் காட்டிலும் அதிக செல்வம் திகழ் மன்னவர் ஆவோம்.* **(3.4.7)**

**அதுவும் சிறிதாம் புவியனைத்துக்(கு) அரசர் ஆவோம் அதுசற்றாம்**
**நிதிதுன் னியஇந் திரர்ஆவோம் நிகழ்த்தும் அதுவும் நெடி(து)அல்ல**
**பதுமம் செறியும் அயன்ஆதல் பழு(து)இல் பதவி எனத்துணிந்தார்**
**உதித மனத்துப் பதின்மரும்ஒத்(து) உயரும் பதுமா தனத்திருந்து.**

**பொழிப்புரை:** *அந்த நிலையும் சிறியதாம். ஆதலால் பூமண்டலம் அனைத்துக்கும் அதிபதியான சக்கரவர்த்தி ஆவோம். அதுவும் சிறியதே. அதனால் செல்வம் பெருகி நிற்கும் தேவேந்திரன் ஆவோம். அந்த நிலையும் பெரியதல்ல. ஆகவே தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவன் ஆவோம். அதுவே குற்றமில்லாத நிறைந்த பதவி என்ற முடிவுக்கு வந்தனர். தமையன் முடிவுக்கு ஒத்துப் போய் பத்துப் பேரும் ஒற்றுமையாக உயர்ந்த பத்மாசனத்தில் இருந்து.* **(3.4.8)**

**பிரமன் நாமே சிருட்டியெலாம் பிறப்ப(து) எம்பால் என்(று)உள்ளே**
**திரம தான மனத்தாலே சிந்தித்(து) உடலில் சிந்தையற**
**மர(ம்)அ(து) என்ன இருத்தலுமே வருநாள் பலபோய் மனோபாவம்**
**உரம தாகி அயன்ஆனார் ஒருப(து) உலகம் உளதான.**

**பொழிப்புரை:** *நான்முகப் பிரம்ம தேவன் நாமே எல்லா சிருட்டிகளும் எம்மிடம் இருந்தே உண்டாகின்றன என்று உள்ளுக்குள் திடமான மனத்தால் சிந்தித்து சிந்தித்து உடலில் உணர்ச்சி அற்று, மரங்கள் போல் தவம் புரிந்து அனேக காலம் கழிந்த பின்பு, மனோ பாவம் அதி திடமாகி பிரம்ம தேவன் ஆயினர். அதனால் இந்தப் பத்து அண்டங்களும் உண்டாயின.* **(3.4.9)**

**மனவா னகத்தில் இவர்பத்து வகையில் சிருட்டி தந்தனரால்**
**இனமாம் அவற்றில் ஓர்இரவி யானும் என்னா ஏகின(ன்)ஆல்**
**கனமா மனத்தின் விரிவாலே காணும் சகங்கள் உளவாம்என்(று)**
**அனவா கனத்தோன் மனத்தாலே அளித்தான் இராமற்(கு) அருள்செய்தான்.**

**பொழிப்புரை:** *மன வானில் இந்தப் பத்து பிரம தேவர்களும் பத்து விதமாக அண்டங்களைச் சிருட்டித்துத் தந்தனர். அந்தப் பத்து அண்டங்களில் ஒரு சூரியன் யான் என்று கூறி சென்றனன். திடபாவனையோடு கூடிய மனதின் விசாலத்தால் தோற்றும் உலகங்கள் இருக்கின்றனவாம் என்று அன்னப் பறவை வாகனத்தை உடைய நான்முகனின் மானச* **(***மனதில் தோன்றிய***)** *புதல்வரான வசிட்ட முனிவர் இராம பிரானுக்கு அருளினார்.* **(3.4.10)**

**(உற்பத்திப் பிரகரணத்தில் ஐந்தவர் கதை முற்றும்)**

# (v) வஞ்ச இந்திரன் கதை

*முன்பு சூரியனால் ஐந்தவர் கதையைக் கேட்ட நான்முகன் இனி நான் படைக்க வேண்டிய அவசியம் ஒன்றையும் காணோமே என்று கூற, அதற்குச் சூரியன் வினோத மாத்திரமாகச் சிருட்டி செய்யலாம். பற்றில்லாத மனதால் செய்வது பந்தம் ஆகாது. மனம் தானே பந்த மோட்ச காரணம். இதற்கு உதாரணமாக இந்தக் கதை சொல்லப்படுகிறது. முன்பு ஐந்தவர் கதையில் பிரபஞ்சத்திற்கு மனோமயத்துவம் சொல்லப் பட்டது. இப்போது இந்தக் கதையில் வாகியேந்திரிய வியாபாரத்தைக் குறித்து மனோ வியாபாரத்திற்கே பிரபலத்தன்மை சொல்லப்படுகிறது.*

பொருவில் சகத்தை அளிப்போனும் புருடன் தானும் புகல்மனமே
கருது மனத்தின் செயல்செயலாம் காயச் செயல்கள் செயல்அன்றாம்
பருதி உரைசெய் புதுமறையோர் பதுமா தனராய்ப் பார்படைத்தார்
பெருமா மனத்தின் உயர்சத்தி பிறரால் அறிதற்(கு) எளிதாமோ.

**பொழிப்புரை:** *விசித்திரமான இந்த சகத்தைச் செய்தவனும், பரபுருடனும் கூறிய மனமே ஆகும். எண்ணுகின்ற மனம் செய்ததே செயல்கள் ஆம். உடல் செய்தவை செயல்கள் ஆகாது. சூரியன் உரைத்த அற்புதமாகிய அந்தணர்கள் மனோ பாவனையின் வலிமையாலே தாமரையில் இருக்கும் பிரம்ம தேவராகி அண்டங்களைப் படைத்தனர். பெரிய மாட்சிமை பொருந்திய மனதின் மேலான ஆற்றல் சாமானியர்களால் அறிவதற்கு எளிதாமோ?* **(3.5.1)**

உள்ளம் உடலைப் பாவிக்க உடலாய் அதனால் உள்ளயரும்
வெள்ள ஞானத் தவர்உள்ளே மேவா நின்ற பாவனையால்
பொள்ள உடலில் நலம்தீது புந்தி செய்யார் புராதனநாள்
கள்ள வினைசெய் அகலிகையும் கரஇந் திரனும் இதற்(கு)ஒப்பாம்.

**பொழிப்புரை:** *மனமானது உடலைப் பாவித்தலும் உடலாக ஆகித் துயரத்தால் அயர்ந்து போகும். பூரண ஞானம் அடைந்தவர் உள்ளுக்குள் அதி திடபாவனையினால் அனித்தியமான இந்த உடலில் நன்மை தீமை என்பதை எண்ணமாட்டார். முன்பு ஒரு நாள் கூடா ஒழுக்கத்தால் அகலிகையும் வஞ்சக இந்திரனும் (செய்த செயல்) இதற்கு நிகராகும். (தேக பாவனை இருக்கின்ற வரையில் தான் மானம் அவமானம் தெரியும். தேக பாவனையை விட்டவன் தேகத்தின் இயல்புகளான குளிர் உஷ்ணம் மானம் அவமானம் இவற்றால் பாதிக்கப்பட மாட்டான் என்பது பொருள்)* **(3.5.2)**

என்ன இவர்கள் ஆர்என்னா இராமன் கேட்ப முனிசொல்வான்
முன்னர் மகத நாட்டு)உடையோன் மொழிஇந் திரத்துய் மனன்என்(று)ஓர்
மன்னன் அவனுக்(கு) உயிர்போல மகிழும் தேவி அகலிகையாம்
சொன்ன நகரில் ஒருவ(ன்)உளன் தூர்த்தன் அவன்பேர் இந்திரனாம்.

**பொழிப்புரை:** *என்று கூறவும், இவர்கள் யார் என்று இராமபிரான் கேட்க, வசிட்ட முனி சொல்கிறார். முன்னாளில் மகத நாடு என்ற நாட்டில் இந்திரத்துய்மனன் என்ற புகழ்பெற்ற மன்னவன் ஒருவன் இருந்தான். அவனது உயிரைப் போல மகிழ்ச்சி உடைய மனைவி அகலிகை என்பவள் இருந்தாள். அதே நகரில் தீயவன் ஒருவன் இருந்தான். அவனது பெயர் இந்திரன் ஆகும்.* **(3.5.3)**

**அன்னாள் அந்த அகலிகையும் அவ்விந் திரனும் செறிகதைகேட்டு**
**இன்னாள் இந்த அகலிகையும் இவ்விந் திரனை இனி(து)அணைந்தாள்**
**தொன்னாள் பிரிந்தோர் கூட்டமெனத் தூர்த்த சூடா மணியுடனே**
**சின்னாள் மகிழ்ந்(து)ஒன் றாம்அளவில் செங்கோல் அரசன் செவிப்படுத்தார்.**

**பொழிப்புரை:** *முன்பு ஒரு காலத்தில் கௌதமர் மனைவி அகலிகையும் தேவேந்திரனும் கூடிய சரித்திரத்தைக் கேள்வியுற்று, இந்த நாளில் இந்த அகலிகையும், இந்த இந்திரனும் கூடி சுகம் அனுபவித்தனர். நீண்ட காலம் பிரிந்திருந்தவர் போல சில காலம் கூடி மகிழ அந்தத் தீயவனுடன் கூடி மகிழ்ந்தாள். அந்த அளவில் இந்த தகவலை அரசன் காதுக்கு எட்டும்படி தெரியப்படுத்தினர்.* **(3.5.4)**

**கேட்ட வேந்தன் மிகமுனிந்து கிளரு நீரில் அமிழ்வித்தும்**
**கோட்டு மதமா எதிரிட்டும் கொடும்தீக் கொழுந்தில் குளிப்பித்தும்**
**வாட்டும் கசையால் மோதுவித்தும் வருத்தம் செய்ய வருந்தாமல்**
**நாட்டம் எதிர்பார்த்(து) உளம்ஒன்றி நகைசெய் திருந்தார் நலிஉணரார்.**

**பொழிப்புரை:** *கேள்வியுற்ற அரசன் மிகவும் கோபம் அடைந்து, (தண்டனை தர) ஆழமான மடு நீரில் மூழ்கடித்தும், கொம்புகளை உடைய யானைகளைக் கொண்டு மிதிக்குமாறு செய்தும், கொடிய தீச்சுவாலையில் வாட்டியும், துன்புறுத்தும் கசையால் அடித்தும், அனேகத் துன்பங்களைச் செய்தும் அவர்கள் வருந்தாமல் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு மனம் ஒன்றிச் சிரித்துக் கொண்டிருந்தார்களே அன்றி துன்பத்தை உணரவில்லை.*
**(3.5.5)**

**அரசன் நோக்கி மிகவியப்புற்(று) அறவும் வருத்த வருந்தாவா(று)**
**உரைசெய் திடுமின் என்றலுமே உள்ளம் களிப்பார் உரைசெய்வார்**
**வரைசெய் புயத்தாய் எங்கள்முக மதியின் அமுதம் விழிஅருந்தக்**
**கரைசெய் அரிய களிப்பான்மெய் காணேம் வருத்தம் காண்பேமோ.**

**பொழிப்புரை:** *அரசன் பார்த்து மிகவும் ஆச்சரியம் அடைந்து, முழுமையாகத் துன்புறுத்தியும் வருந்தாமல் இருக்கின்றது எப்படி என்று சொல்வீர் என்று கேட்டலும், மனதின் மகிழ்ச்சியில் மூழ்கிக் கிடக்கும் அவர்கள் சொல்கின்றார்கள். "மலைபோன்ற தோள்களை உடையவனே! எங்களுடைய முகத்தின் அமுத கிரணத்தைக் கண்கள் அருந்த (அதாவது அந்த ஒளி முகத்தை நினைந்து நினைந்து) அபரிமிதமான ஆனந்த மிகுதியால் (பரஸ்பரம் - ஒருவருக்கு ஒருவர் திட பாவனையினால்) உடலையும் நினைக்கவில்லை. அதனால் வரும் துயரத்தை எப்படி அடைவோம்?" (அடையவில்லை) (எங்களுடைய உடல் பாவனை இல்லாது போனதால் மனம் உடலில் லயிக்கவில்லை ஆதலால் உடலுக்கு வரும் துன்பம் தெரியாமல் மகிழ்ந்திருக்கிறோம்.)* **(3.5.6)**

**அரிந்த பொழுதும் உடல்துன்பம் அறியேம் ஒன்றில் அன்பாகிப்**
**புரிந்து பற்று மனத்தி(ன்)உடல் பொன்ற வரினும் துயர்தோன்றாத்**
**தெரிந்த பொருளில் மனம்அழுந்தில் தேகத் தொழில்வே(று) எவர்காண்பார்**
**விரிந்த முனிவர் சாபமும்பல் வினையும் அதனை மீட்பரிதாம்.**

**பொழிப்புரை:** *எங்களுடைய உடல் உறுப்புகளை அறுத்த போதும் தேக துக்கத்தை உணரவில்லை. ஒரு பொருளின் மீது மிகுந்த பிரியமாகி அழுத்தமாகப் பற்று கொள்ளும் மனதின்பால் தேகம் கெடும்படியான துன்பங்கள் வந்த போதினும் அத்துன்பங்கள் தோன்றாவாம் (உணரப்படாது). பிரியமாகத் தேர்ந்தெடுத்த பொருளில் மனமானது அழுத்தமாக-திடமாக மூழ்கிடுமாயின் தேகம் வருத்தம் அடைவது முதலானவற்றை வேறு யார் காண்பார்? (மனம் தான் தேகத்தின் மீது இல்லை என்பதால் தேக வலி அல்லது உணர்வைக் காண்பது யார்என்பது பொருள்) பெருந்தவத்தினை உடைய முனிவர்களின் சாபமும், மற்ற எந்தத் தொழிலும் கூட (மனம் ஒரு காரியத்தில் தீவிர வேகத்தோடு கூடியிருப்பின்) அதனை மீளச் செய்வது கூடாத காரியமாம்.* **(3.5.7)**

**மாண்டு வாளா போனவுடல் மட்டொன் றில்லை அவையெல்லாம்**
**தாண்டு மனத்தால் உண்டாகும் சலத்தால் அன்றிக் கா(டு)உண்டோ**
**தூண்டு மனமே முதல்வடிவாய்த் தூல உடலம் போனாலும்**
**வேண்டும் உடல்கள் விரைந்(து)எடுக்கும் விரியும் கனவில் செயல்போல.**

**பொழிப்புரை:** *வீணாக இறந்துபோன தேகங்களுக்குக் கணக்கே கிடையாது. அந்த தேகங்கள் யாவும் ஒன்றை விட்டு மற்றொன்றில் தாவிக்கொண்டே இருக்கும் மனத்தினால் உண்டாகும். தண்ணீர் இல்லாமல் காடு இருக்குமோ? விஷயங்களை உளதாக்கும் மனமே முக்கிய உடலாய் தூல தேகங்கள் தொலைந்து போனாலும் வேண்டிய தேகங்களைச் சீக்கிரத்தில் எடுத்துக் கொள்ளும். விரிந்த கனவில் மாறி மாறிச் செய்யும் செயல்கள் போலவாம். (தேகம் நாசம் அடைந்தாலும் மீண்டும் மீண்டும் உடல் உற்பத்தியாகும். சித்தம் நாசம் ஆயினால் முத்தியே, மீண்டும் பிறவி-தேகம் உண்டாகாது என்பது தெரிந்ததே)* **(3.5.8)**

**இந்த மனமே ஒடுங்கி(ல்)உடல் ஏதும் அறியா(து) எனக்கேட்ட**
**அந்த நிருபன் பரத(ன்)எனும் அருகில் முனியை முகநோக்கிச்**
**சிந்தை மயலுற்(று) இருந்து(ம்)இவர் சிற்பா வனைசெப் பினர்என்னா**
**புந்தி மகிழ்ந்து புறநாட்டில் போம்என்(று) அவரைப் போக்கினன்ஆல்.**

**பொழிப்புரை:** *இந்த மனமானது புருஷனின் முயற்சியால் அதிஷ்டானமான தனது சொரூபத்தில் ஒடுங்கிடில் தேகம் முதலான எதையுமே அறியாது என்று கூறியதைக் கேட்ட அந்த மன்னவன் பக்கத்தில் இருந்த பரதன் என்னும் முனிவரை நோக்கி, "மனோ மயக்கத்தை அடைந்திருந்தும் இவர் பரமார்த்த சம்பந்தத்திற்குச் சமானமான மொழிகளைக் கூறினர்" என்று (கூறி), புத்தியில் மகிழ்ந்து வேறு தேசத்திற்கு ஓடிப் போவீர் என்று அவர்களைத் துரத்தி விட்டனன்.* **(3.5.9)**

**(உற்பத்திப் பிரகரணத்தில் வஞ்ச இந்திரன் கதை முற்றும்)**

# (vi) மனத்தின் கதை

*முந்தைய வஞ்ச இந்திரன் கதையில் மனோவியாபாரத்திற்கே முக்கியத்துவம். அதுவே சுக துக்கங்களை அனுபவிக்க முக்கிய இடமாக இருப்பதால் முக்கியமான தேகம் என்று சொல்லப்பட்டது. இப்போது மீண்டும் அதன் சொரூபத்தை நிரூபிக்க மனத்தின் கதை ஆரம்பிக்கப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

இந்தக் கதையை விளையாட்(டு) என்ன இசைத்தோம் எவர்க்கும்
அந்தத் தமதாம் உடல்ஒன்(று) அயலாம் உடல்ஒன்(று) அவற்றில்
சிந்தை சரீரம் விரைவில் செயல்கள் எல்லாம் செய்து
தொந்தித்(து) அலையும் மற்ற தூல உடல்ஒன்(று) அறியா.

**பொழிப்புரை:** *இந்த வஞ்ச இந்திரன் கதையை விளையாட்டாக-வினோதமாகக் கூறினோம். எல்லோர்க்கும் உள்ளிருக்கும் தேகம் ஒன்று, அயலாக-வெளியில் தேகம் ஒன்று. அவற்றில் மனோ தேகம் சீக்கிரத்தில் தொழில்கள் எல்லாவற்றையும் தொடங்கி சம்பந்தம் உண்டாக்கிக் கொண்டு சுற்றிக்கொண்டே திரியும். அயலான இந்த தூல தேகம் யாதொன்றையும் தெரிந்து கொள்ளமாட்டாது.* **(3.6.1)**

என்றான் வசிட்டன் அவனை இந்தச் சடமா மனத்துக்(கு)
ஒன்றாம் வடிவம் இலதாம் உள்ள வடிவை விரித்து
நன்றாய் உரைப்பாய் என்று ஞானக் குரிசில் கேட்ப
பொன்றா விதிசொற் படியே போத முனிவன் புகல்வான்.

**பொழிப்புரை:** *என்று வசிட்டர் கூறவும், அந்த ஆசாரியரை (நோக்கி) சடமாகவும், சடம் இல்லாத தாகவும், வடிவம் இல்லாததாகவும், இருக்கின்ற இந்த மனதினுக்கு உள்ள சங்கற்ப ரூபத்தை விரிவாக மனதில் படும்படி உரைக்க வேண்டும் என்று ஞான மயமான இராம பிரான் கேட்கவும், கெடாத பிரம்ம தேவர் தமக்கு அருளிச் செய்த படியே ஞானவானாகிய வசிட்ட முனிவர் கூறத் தொடங்கினார்.* **(3.6.2)**

அகில சத்தி உடைத்தாய் அனந்த மான பரமம்
புகல்சங் கற்பத் தோடே பொருந்தும் வடிவே மனமாம்
இகலும் சத்தோ(டு) அசத்தாய் இரண்டின் உள்ளும் தோன்றிப்
பகரும் தொழில்க ளோடே பயில்பா வனையும் அஃதே.

**பொழிப்புரை:** *சொல்லப்படும் சர்வ சக்திகளும் உடையதாய் நாசமற்றதான ஆன்ம தத்துவம் சங்கற்ப சக்தியுடன் கூடும் எந்த வடிவம் உள்ளதோ அது மனம் எனப்படும். முரண்பாடாகச் சொல்லப்பட்ட ஆன்மா அனான்மா என்ற இரண்டின் மத்தியில் இருப்பதாய் சங்கற்ப முகமாய்ச் சலிக்குமோ அந்த பாவனையும் மனம் ஆகும்.* **(3.6.3)**

எங்கே எனினும் தோன்றும் இந்த மனத்தை முத்திச்
சங்கே தத்தால் ஊகம் தன்னில் கூட்டில் நன்றாம்
பங்கே ருகன்ஓ தியதோர் பழைய கதைநீ கேட்பாய்
வெங்கே தமும்அச் சமுமாய் வெறும்பொய் யாம்ஓர் மனமே.

**பொழிப்புரை:** *ஆராயாமல் இரமணீயம் (இனிமையானது) என்ன நாடும் காரணத்தால் உண்டாகும் இந்த மனதை மோட்ச சாதனங்களில் முக்திக்கான யுக்திகளில் சேர்ப்பது நலம் தரும். பிரம்ம தேவர் கூறிய பழைய கதை ஒன்றை நீ கேட்பாயாக. மிகுந்த துக்கமும் பயமுமாய் எப்பொழுதும் சூனியமாய் ஒரு காடு இருந்தது.* **(3.6.4)**

அதினோர் கோடி நீளம் அனந்த கோடி காதம்
இதிலோர் புருடன் கண்கை எண்ணி லாதது உடையோன்
சிதறா நின்ற நினைவோன் சேணா அகன்ற வடிவோன்
பதறா நின்ற கணையம் பலவும் கரத்தால் பற்றி.

**பொழிப்புரை:** *அந்தக் காட்டின் ஒரு மூலை (ஒரு கோணம்) மட்டும் வெகுகோடி யோசனை தூரம் பரந்திருக்கிறது. இதில் (சம்சாரமாகிய காட்டில்) ஒரு புருடன் கண்கள் கைகள் எண்ணிலாதவை கொண்டவன். சித்தம் சிதறி ஓடுகின்ற தன்மையுடையது. ஆகாயம் போன்று அகன்ற வடிவம் உடையவன். பதறுகின்ற பல தடிகளை ஆயிரக்கணக்கான கைகளால் பற்றி.* **(3.6.5)**

தனைத்தான் சிதற மோதித் தகர்ந்தே உலறி அலறி
அனைத்தாம் திசையும் ஓடி அவச மாகி அடிபட்டு
எனைத்தாம் உறுப்பும் தூளாய் இருளாய் நடுக்க மிகுந்த
வினைத்தாழ் உறுபாழ் கிணற்றில் வீழ்ந்து நெடுநாள் மெலியும்.

**பொழிப்புரை:** *கட்டுப்பாடின்றித் தாறுமாறாக ஓடி மோதி நொறுங்கி வெகுண்டு 'ஓ' வென்று அலறி எல்லாத் திசைகளிலும் ஓடி ஓடி பரவசமாய்த் தன்னைத் தானே அடித்துக் கொண்டு, எல்லா உறுப்புகளும் பொடியாகி, இருள் சூழ்ந்த நடுக்கம் தரக்கூடிய தீவினையால் மேலே ஏறமுடியாத ஆழமான பாழும் கிணற்றில் வீழ்ந்து பலகாலம் மெலிந்து துன்புற்றான்.* **(3.6.6)**

மீட்டும் எழுந்து வந்து மெய்யில் மோதிக் கதறி
ஓட்டம் தனிலே சுழலும் உயர்முள் நிறைந்த கருவேற்
காட்டில் முறிய விழுந்து கனலில் புழுப்போல் பதைக்கும்
வாட்டம் தவிர்ந்து கதலி வனத்தில் மகிழ்வுற்று இருக்கும்.

**பொழிப்புரை:** *அந்தக் கிணற்றில் இருந்து வெளியே எழுந்து வந்து தன் தேகத்தைத் தானே அடித்துக் கொண்டு அழுது பல இடங்களுக்கு ஓடிச் சென்று சுற்றுவான். மிகக் கூர்மையான முட்கள் நிறைந்த கருவேல மரக் காட்டில் சப்தம் ஒலிக்க விழுந்து நெருப்பில் அகப்பட்ட புழுவினைப் போலப் பதைப்பான். தளர்வு தீர்ந்து வாழைத் தோட்டத்தில் சென்று மகிழ்ச்சி அடைந்திருப்பான்.* **(3.6.7)**

**கதலி வனத்தை விட்டுக் கருவேல் வனத்தில் சுழலும்**
**பதறிக் கிணற்றில் வீழும் பலகால் உழலக் கண்டு**
**விதறா வகையாம் பற்றி வீணே வருந்தும் நீயார்**
**எதுசெய் கின்றாய் நினை(வு)என் என்ன அவன்ஈ(து) இசைத்தான்.**

**பொழிப்புரை:** *வாழைத் தோப்பிலிருந்தும் நீங்கிக் கருவேலம் காட்டில் திரியும், பதறிப்போய் கிணற்றில் வீழும் இப்படிப் பலமுறைகள் அவதிப்படுவதைக் கண்டு, தப்பி ஓடாத வண்ணம் பிடித்து "வீணாக வருந்துகின்ற நீ யார்? என்ன செய்கின்றாய்? உன் நினைவு தான் என்ன?" என்று கேட்க அவன் இதனைத் தெரிவித்தான்.* **(3.6.8)**

**யா(ன்)என்(று) ஒருவன் இல்லை இங்(கு)ஓர் செயலும் காணேன்**
**நீநின்(று) உரைக்க நினைந்து நின்னால் தளரா நின்றேன்**
**ஊ(ன்)ஒன் றியவெம் பகைநீ உன்னால் இன்ப துன்ப**
**நா(ன்)இன்(று) அறிந்தேன் என்று நல்கும் தன்னை நோக்கி.**

**பொழிப்புரை:** *யான் என்று ஒருவனும் இல்லை. இங்கு ஒரு செயலையும் நான் கண்டிலேன். நீ தடுத்து நின்று உபதேசிக்க அவ்வாறு எண்ணி உம்மால் துயர் அடைகின்றேன். தோஷம் உள்ள இந்த தேகத்திற்குக் கொடிய பகைவன் நீர். உம்மால் சுகம் துக்கம் இவற்றை நான் இன்று அறிந்தேன் என்று நலியும் தனது உடல்உறுப்புகளைப் பார்த்து,* **(3.6.9)**

**இடிக்கு முகிலின் மழைபோல் இரங்கிக் கதறி அழுதான்**
**நொடிக்குள் அழுகை விட்டு நுணுக்கம் தன்னை நோக்கி**
**வெடிக்க நகைத்தான் நெடிதாம் மீள எமது முன்னே**
**தடிக்கும் அங்கம் அனைத்தும் தானே அடைவே தவிர்ந்தான்.**

**பொழிப்புரை:** *இடிக்கின்ற மேகம் பொழியும் மழைபோல் இரக்கமுற்றுக் கதறி அழுதான். கண நேர நொடிக்குள் அழுவதை நிறுத்தி, சிதறிய தனது அங்கங்களைப் பார்த்து வயிறு வெடிக்கச் சிரித்தான். மீண்டும் எம் முன்பு தடிக்கும் அங்கங்கள் அனைத்தையும் (பல பிறவி உடல்களைத்) தானே முறையாகத் தொலைத்தான்.*
**(3.6.10)**

**விதியின் வசத்தால் இவன்ஓர் இடமே மேவ லுற்றான்**
**எதிர்வந்(து) ஒருவன் அயலே இவன்போல் அடிஉண்(டு) ஏக**
**முதல்வந் தவனைப் போல்நாம் மொய்ம்பாய் உணர்த்த அந்தப்**
**பதிகன் தானும் போனான் பழைய வடிவம் ஒழிய.**

**பொழிப்புரை:** *புண்ணியம் மிகுந்த ஊழ் வசத்தால் இவன் ஓர் இடம் (சீவன் முத்திப்பதம்) சென்று அடைந்தான். மற்றொருவன் எதிரில் வந்து முன்னவனைப் போல அடித்துக் கொண்டு துயரத்துடன் போவதைப் பார்த்து, முதலில் வந்தவனுக்கு அனுக்கிரகம் செய்தது போல இவனுக்கும் சாமர்த்தியமாக உணர்த்த அந்த வழிப்போக்கனும் பழைய (பிறவி) உடல்கள் ஒழிந்துவிட்டுச் சென்றான்.* **(3.6.11)**

பிறிதும் ஒருவன் வந்(து)அப் பெரிய கிணற்றில் விழுந்தான்
சிறி(து)அல் லாத காலம் திரும்பி ஏறக் காணேம்
வெறிதுன் றியஅவ் வனத்தில் வேறும் ஒருவன் வரலும்
அறிதும் என்னத் தகைத்தே ஆன(து) எல்லாம் உரைத்தேன்.

**பொழிப்புரை:** *மற்றொருவன் ஓடி வந்து அந்தப் பெரிய கிணற்றில் விழுந்தான். வெகு காலம் ஆகியும் அதிலிருந்து திரும்பி ஏறி வரக் காணேன். வாசனைப் பைத்தியம் உடைய வேறு ஒருவன் எதிர் வரவும் அறிந்து கொள்ளட்டும் என்று அவனை வலுவில் தடுத்து நிறுத்தி என்னால் முடிந்த வரையில் எல்லா வழிகளிலும் உபதேசித்தேன்.* **(3.6.12)**

ஓதிற்(று) ஒன்றும் கேளா(து) உரப்பி இகழ்ந்து மேன்மேல்
மோதிக் கொண்டு போனான் மூர்க்கர் அவனைப் போல்வார்
வாதிப் புறுவார் நிறைந்து வயிர முள்ளால் செறிந்து
பீதிக்(கு) இடமாய் இருள்சூழ் பெரும்கா(டு) இன்றும் உளதால்.

**பொழிப்புரை:** *உபதேசித்த ஒன்றையும் கேட்டுக்கொள்ளாமல் அதட்டி இகழ்ந்து பேசி மேன்மேலும் அடித்துக் கொண்டு அழுது கொண்டு போனான். அவனைப் போன்று அனேக துன்பங்களுக்கு உட்பட்டு சுழன்று கொண்டு திரியும் மூர்க்கர் வயிரம் போன்ற முட்களால் நிறைந்த பயத்துக்கு இடமாக இருள்சூழ்ந்த கோரமான காடு இன்றும் உள்ளது.* **(3.6.13)**

அறவே கொடிதாய் வெந்த அடவி எனினும் அறியார்
நறவே கமழ்ந்து குளிர்ந்த நந்த வனம்போல் மகிழ்வார்
மறவேல் அரசே என்ற வசிட்ட முனியை நோக்கித்
துறவே புரிவாய் இவற்றைத் தோன்றச் செய்வாய் என்றான்.

**பொழிப்புரை:** *மிகவும் கோரமாய் நெருப்புப்போல் தகிக்கின்ற காடு என்ற போதிலும், தேனும் வாசனையும் கூடி குளிர்ச்சி பொருந்தும் நந்தவனம் போல் மூடர்கள் மகிழ்ச்சி அடைவர். பகைவரை வெற்றிகொள்ளும் வேல் தாங்கிய இராமா! என்று கூறிய வசிட்ட முனிவரை நோக்கி "சந்தேகத்தைத் தீர்ப்பவரே! கூறிய இவற்றை மனம் தெளிவுற உணரும்படி திருவாய் மலர்ந்து அருள வேண்டும்" என்று இராம பிரான் கேட்டுக் கொண்டார்.* **(3.6.14)**

கேட்ட குரிசில் அறியக் கிளர்மா முனிவன் உரைப்பான்
நாட்ட அடியும் முடியும் நடுவும் இன்றிப் பொய்யாம்
கூட்டம் ஆகி ஆழ்ந்து கொடிதாய் விகற்ப நெடிதாம்
ஈட்ட உலகத்(து) இயல்பே யாம்முன் சொன்ன வனமே.

**பொழிப்புரை:** *கேட்டுக்கொண்ட இராம பிரான் அறியும் படி நற்குணங்கள் நிறைந்த வசிட்ட முனிவர் கூறுவதாவது... நிர்ணயம் செய்வதற்கு முதலும் நடுவும் முடிவும் இல்லாமல் எப்பொழுதும் அசத்து விகார அனேக விகற்பங்களோடு கூடியதான சமுதாய பிரபஞ்சத்தின் இயல்பே யாம் முன்பு சொன்ன காடு ஆகும்.* **(3.6.15)**

**புகையார் வனத்தில் புருடன் புலம்பிச் சுழலும் மனமே**
**தகையா நின்ற நாமும் தனிவி வேகம் தானே**
**பகையாம் இதனால் உள்ளம் பரத்தை அறிந்(து)ஆ றினதால்**
**மிகையார் மனங்கள் இகழ்ந்து வேட்கை வசத்(து)ஓ டினவால்.**

**பொழிப்புரை:** *விருப்பு வெறுப்புகளாகிய புகை கொண்ட சம்சாரக் காட்டில் புலம்பித் திரியும் புருடன் என்பது மனமே ஆகும். தடுத்துக் கூறிய நாம் என்றது ஒப்பற்ற விவேகத்தையே. பகைவனாம் இந்த விவேகத்தால் நல்ல மனம் பரிபூரண பிரம்மத்தை அறிந்து அமைதி அடைந்தது. அடங்காத மற்ற மனங்கள் இகழ்ந்து விட்டு ஆசையின் வசத்தால் ஓடி மாய்ந்தன.* **(3.6.16)**

**விதறி ஓடு மனங்கள் மேவு நரகம் கிணறு**
**கதலி வனம்விண் ணுலகாம் கருவேல் வனம்மண் ணுலகாம்**
**சிதறி விழுந்த கிணற்றில் திரும்பி ஏறா(து) ஒழிந்தோன்**
**பதறி நரகம் புகுந்து பாவம் தொலையா ததுவாம்.**

**பொழிப்புரை:** *கட்டுக்கடங்காது ஓடுகின்ற மனங்கள் அடைகின்ற நரகம் தான் கிணறு ஆகும். வாழைத் தோட்டம் என்றது சொர்க்க லோகம். கருவேல வனம் என்றது மண்ணுலகம் ஆகும். பெரும் துயரங்களுடன் கிணற்றில் விழுந்து திரும்பி மேலே ஏறி வராதவன் என்றது கொடிய வினைகள் புரிந்து நரகம் அடைந்து பாவம் தொலையாது இருப்பதாகும்.* **(3.6.17)**

**முனையார் முள்ளென் றதுதான் மோக மனிதர்**
**நினையா இன்ப துன்பம் நின்னால் அடைந்தேன் நீயே**
**வினையாம் என்ற(து) உணர்வால் வீயு மனம்நொந்(து) உரைத்த(து)**
**அனையார் அழுத(து) என்ற(து) ஆசை அறுக்கும் அலக்கண்.**

**பொழிப்புரை:** *மோகத்தை உடையவராய் மனைவி மக்கள் குடும்பங்களில் ஆசாபாசத்தால் அபிமானம் கொள்வதால் மனைவி மக்களையே கூர்மை வாய்ந்த முட்கள் என்று சொல்லப்பட்டதாகும். எண்ணிப் பார்க்காத இன்ப துன்பம் நின்னால் அடைந்தேன் நீயே பகை ஆகும் என்று கூறியது தத்துவ விசாரத்தால் உண்டாகும் விவேகத்தினால் நாசமாகின்ற மனம் கூறியதாகும். அவர்கள் அழுதனர் என்று சொன்னதாவது போக ஜாலங்களை விடுகின்ற மனங்கள் புலம்பியதாகும்.* **(3.6.18)**

**போதம் பாதி யாகிப் புரண மாகா மனம்தான்**
**காதல் விடில்நொந்(து) அயர்தல் கதறி அழுத(து) அதுவாம்**
**சீத மாக மகிழ்ந்து சிரித்து நின்ற(து) என்ற(து)**
**ஏதம் இல்லா ஞானத்(து) ஏக மான மகிழ்ச்சி.**

**பொழிப்புரை:** *பாதி அளவு விவேகத்தை அடைந்து பரிபூரணத்தை அடையாத மனதானது போக ஆசையை விடும் போது பரிதாபப்பட்டு கதறி அழுதது என்று கூறிய அதுவாம். குளிர்ந்து மகிழ்ந்து சிரித்து நின்று உலாவியது என்று சொன்னது குற்றமில்லாத பூரண ஞானத்தை அடைந்ததில் மனம் சந்தோஷப்பட்டதே ஆகும்.* **(3.6.19)**

முடிவில் ஞானத் தாலே மோகம் விட்ட மனம்தான்
வடிவை மாய்க்கும் பொழுது மகிழும் அதுவே மகிழ்வாம்
நெடிய மொய்ம்பி னாலே நிறுத்தி கேட்டேம் என்ற(து)
ஒடி(வு)இல் ஞான வலியால் உள்ளம் ஒருப்பட் டதுவே.

**பொழிப்புரை:** *முடிவற்ற பரிபூரண ஞானத்தை அடைந்ததாலே சம்சாரத்திலிருந்து விடுபட்ட மனம் தான் சங்கற்ப விகற்ப வடிவத்தை விடும்பொழுது சந்தோஷிப்பதே ஆனந்தம் ஆகும். மிகுந்த பலத்தினாலே தடுத்து நிறுத்தி கேட்டோம் என்று சொன்னது அளவில்லாத விவேக வலிமையால் மனமானது தன்வயம் ஆனது அதாவது அடங்கியது ஆகும்.* **(3.6.20)**

அங்கத்(து) அறைந்து கொண்ட(து) அடர்கற் பனைக ளாலே
பங்கப் படுவன் துயராம் பரந்(து)ஓ டின(து)என் றதுதான்
மங்கத் தகுவா தனையால் மருண்டு சுழல்வ தாகும்
சங்கற் பமும்வா தனையும் தனைத்தான் வலைபோல் தளைக்கும்.

**பொழிப்புரை:** *தானே தனது தேகத்தில் அடித்துக் கொண்டான் என்று சொன்னது நெருங்கிய கற்பனா ஜாலங்களினாலே பங்கப்படுவான் என்பதாகும். துயரத்தால் அடித்துக் கொண்டு ஓடினான் என்று கூறியது மலின வாதனையால் மயங்கிச் சுற்றித் திரிவதாகும். திருசிய (காணப்படும் பொருள்களில்)சங்கற்பமும் வாசனையும் வலைபோல் கட்டுப்படுத்தும் என்பது தானே வலையில் கட்டுப்படுவது போலாகும்.* **(3.6.21)**

கோச காரப் புழுப்போல் கொடும்கற் பனைவா தனையால்
பாசம் அடைவர் யாரும் பகர்ந்த மனத்தின் கதையை
மாசி லாத மனத்தால் மதித்து மனத்தை மாய்ப்பாய்
தேசம் உடையாய் என்று தெளிந்த வசிட்டன் உரைத்தான்.

**பொழிப்புரை:** *கோச காரப் புழுவானது மரங்களில் தன்னைச் சுற்றிக் கூடு கட்டுவதைச் செய்து வெளியே வரும் வாயிலையும் அடைத்து விடுவது போல, மனோ லீலா மய வாசனை களினால் எவரும் தாமாகவே பந்தத்தை அடைவர். கூறிய மனதின் கதையைக் குற்றமற்ற மனதால் சிந்தித்துப் பார்த்து மனதை ஒழிப்பாய் தேசங்களுக்கு நாயகனே! என்று தெளிவுடைய வசிட்ட முனிவர் கூறி அருளினார்.* **(3.6.22)**

**(உற்பத்திப் பிரகரணத்தில் மனத்தின் கதை முற்றும்)**

# (vii) பாலன் கதை

*முந்தைய கதையில் கோச காரப் புழுப்போல் மனமானது வாசனைகளில் சுயமாகவே பந்தம் அடைகின்றது என்று உதாரணம் காட்டி, மனதைத் தியாகம் செய்தல் வேண்டும் என்று கூறப்பட்டது. அசத்தைத் தியாகம் செய்வது முடியாதது என்பதால் விசார புத்தி இல்லாதவர்களுக்கு உலகமும் மனமும் உண்மையாகவே தெரியும் என்பதைக் காட்டுவதற்காக இந்தப் பாலன் கதை துவக்கப்படுகிறது.*

**(எழுசீர் ஆசிரிய விருத்தம்)**

**முழுதுசத் தியுமாய்ப் புரணமாய் என்றும் முடிவறு பிரமமா வதுதான்**
**பழுதில்ஞா னிகள்தம் மன(ம்)அலா(து)இல்லை பரமமாம் இதி(ல்)இலா(து) இல்லை**
**எழுதரும் சத்தி யாவுமாய் இலங்கும் இவைக(ள்)ஓர் கால(ம்)ஒன்(று) உளதாம்**
**வழுவிலாப் பிரமம் உடையசிற் சத்தி மறிதரும் உடல்களில் தோன்றும்.**

**பொழிப்புரை:** *சர்வ சக்தியுடையதாய் பூரணமாய் நித்தியமாய் முடிவில்லாததாய் விளங்கும் பிரம்மம், காமம் கோபம் முதலான குற்றங்கள் இல்லாத ஞானிகள் தம்முடைய மனமாகும். அதைத் தவிர வேறொன்று இல்லை. உயர்ந்ததாகிய இதனிடத்தில் இல்லாதது இல்லை. கணக்கற்ற சக்தி உடையதாய் எல்லாமாய் விளங்கும் இச்சக்திகள் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொரு சக்தியாய் தோன்றும். கெடாத பிரம்மத்தின் தொடர்புடைய சிற் சத்தி சென்று திரும்பும் உடல்களில் தோன்றும்.* **(3.7.1)**

**காற்றிலே அசைவும் கல்லிலே திடமும் கனலிலே சூடும்வான் தனிலே**
**தோற்றலா மையு(ம்)நன் நீரிலே நெகிழ்வும் தொலைவுறு மாய்விலே மாய்வும்**
**ஊற்றமாம் விதையின் மரங்களும் போல உள்ளுறை பிரமசத் திகள்தாம்**
**ஆற்றல்சால் கால தேசசித் திரத்தால் அவனியில் சாலிபோல் தோன்றும்.**

**பொழிப்புரை:** *காற்றில் சலன சக்தியும், கல்லில் கடின சக்தியும், அக்கினியில் சூடும் வானத்தில் சூனிய சக்தியும், நல்ல தண்ணீரில் திரவத் தன்மையும், நாசமாகக் கூடிய பொருள்களில் நாச சக்தியும், விதையில் உள்ளீடாய் இருக்கும் மரத்தின் வடிவம் போல பிரம்மத்தைச் சார்ந்திருக்கின்ற சக்திகள் எக்காலத்தில் எந்த இடத்தில் எப்பொருள் வெளிப்படுமோ அந்தக் காலத்தில் அந்த இடத்தில் அப்பொருள்கள் பூமியில் நெற்களைப் போல் உண்டாகும்.* **(3.7.2)**

**பரமமே எங்கும் என்று(ம்)உண் டாகும் பயில்மன னத்தினால் மனமாம்**
**தரமறு பந்த முத்திபேர் உலகாம் சத்திகள் அனைத்துமாய் நிற்கும்**
**திரமறு தனயர்க்(கு) அன்னைசொல் கதைபோல் செப்பிய இவையெலாம் திரமாம்**
**கரமலர் முகிலே என்றலும் அந்தக் கதையினை இராகவன் வினவ.**

**பொழிப்புரை:** *ஆன்மாவே எவ்விடத்திலும் எப்பொழுதும் இருப்பதாகும். மனனம் செய்தலைக் கொண்டு மனன சக்தி அடைதலின் மேன்மையில்லாத பந்தம், மோட்சம்,*

*பிரபஞ்சம் ஆகிய எல்லாமாய் இச்சக்திகள் நிற்கும். திடபுத்தி இல்லாத பிள்ளைகளுக்கு தாயார் சொன்ன கதையைப் போல, கூறிய இவை அனைத்தும் திடமாகத் தோன்றும், மலர்க்கரமும் மேகத்தைப் போன்ற நிறமும் உடைய இராமா! என்று வசிட்ட முனிவர் கூறவும், அந்தக் கதையைச் சொல்லுமாறு இராமபிரான் கேட்டார். (விவர்த்தமான மனனத்தால் சக்தி அவச்சின்னம் ஆகுமோ (எல்லைக்கு உட்பட்டதாக ஆகுமோ) அப்பொழுது அது மனம் எனச் சொல்லப்படும். ஆதியில் மனம், அதன் பின்னர் பந்த மோட்ச திருஷ்டி, பின்னர்ப் பிரபஞ்ச ரசனை, உட்பட்ட உலகம் என்ற பெயர்களில் உள்ளடங்கியவை. மேலும் அவிசார (விசார புத்தி யில்லாத) காரணத்தாலே திட சத்திய புத்தி விஷயத் தன்மையை அடைந்துள்ளதாம்.)* **(3.7.3)**

**சித்தவஞ் சனையின் மூலமாம் கதையைச் செல்வனுக்(கு) அருந்தவன் உரைப்பான்**
**மெய்த்தக(வு) இலதோர் சிறுவன்நீ அன்னை விரும்பிழோர் கதைவிளம்(பு) என்னச்**
**சத்தியம் போல வெறும்பொய்யே உரைப்பாள் தரணிபன் குமர(ர்)ஓர் மூவர்**
**சுத்தவீ ரமும்நல் குணங்களும் சிறந்(து)ஓர் சூனிய நகரிலே உறைவோர்.**

**பொழிப்புரை:** *மனத்தினை வஞ்சித்தற்குக் காரணமான கதையினை வசிட்ட முனிவர் இராம பிரானுக்குச் சொல்கின்றார். மூட மதியுடைய ஒரு பாலகன் அன்னையாகிய தாத்திரியிடம் "தாயே! நீ விரும்பி ஒரு கதையைச் சொல்வாய்" என்று கேட்க, சத்தியமானது போல வெறும் மித்தையான ஒன்றை அந்தத் தாய் கூறுகின்றாள். அரசன் ஒருவனுக்கு மூன்று புதல்வர்கள் இருந்தனர். வீரமும் நல்ல குணங்களும் சிறந்திருந்தனர். எப்பொழுதும் இல்லாத ஒரு நகரிலே (சூனிய நகரில்) வாழ்ந்து வந்தனர்.* **(3.7.4)**

**மூவரில் இருவர் பிறந்திலர் ஒருவன் மூலமாம் கருவினும் இல்லை**
**யாவது கருதித் திரிபவர் விண்ணில் அளவறு பழமரச் சோலை**
**மேவலும் அதனில் செழுங்கனி துய்த்து வெம்பசி தணிந்துமேல் சென்றார்**
**காஅரு காக மூன்றுநல் நதிகள் கரைபொரு திரையொடும் கண்டார்.**

**பொழிப்புரை:** *அந்த மூன்று பேர்களில் இருவர் பிறக்கவே இல்லை. ஒருவன் கர்ப்பத்திலும் இல்லை. எல்லா லாபங்களையும் கருதி திரிபவராகி ஆகாயத்தில் சென்று அளவில்லாத பழ மரங்கள் நிறைந்த சோலையை அடைந்து அதிலிருந்து செழிப்பான கனிகளைப் புசித்து கொடிய பசியைத் தணித்துக் கொண்டு மேற்கொண்டு சென்றனர். சோலையின் அருகே மூன்று சிறந்த நதிகள் அவற்றுடன் கரைபுரண்டு ஓடுவதைக் கண்டனர்.* **(3.7.5)**

**ஓடுநன் நதியில் இரண்டுநீர் இல்லை ஒன்றுவெண் மணல்அதாம் இதனில்**
**ஆடிநீர் துளைந்து பருகினார் அந்தி யாகிமேல் வருநகர் அடைந்தார்**
**வீடுமூன்(று) எதிர்ந்தார் அதில்இரண்(டு) இல்லை மேல்மரம் சுவர்இலா(து) ஒன்று**
**கூடிய அவற்றில் சுவர்இலா வீட்டில் குடிபுகுந்(து) இருந்தனர் குமரர்.**

**பொழிப்புரை:** *பெருக்கெடுத்து ஓடுகின்ற அந்த நல்ல நதிகள் இரண்டில் தண்ணீர் இல்லை. ஒன்றில் வெள்ளை மணல் இருந்தது. அந்த நதி நீரில் மூழ்கி விளையாடி நீரைக் குடித்தனர். மாலைப் பொழுது வரவே இனி உண்டாகப் போகும் நகரினை*

*அடைந்தனர். அங்கு மூன்று வீடுகள் எதிர்ப்படக் கண்டனர். அந்த மூன்றில் இரண்டு வீடுகள் மேற்கூரை இல்லை. ஒன்றில் சுவர்கள் இல்லாமல் இருந்தது. இத்தகைய வீடுகளில் சுவர் இல்லாத வீட்டில் குடிபுகுந்து வசிக்கலானர் அந்தக் குமரர்கள்.*

**(3.7.6)**

**ஒருவரும் காணா நகரிலே வெளிவீட்(டு) உறைபவர் கனகபாத் திரம்மூன்(று)**
**அருகுறக் கண்டார் அதில்இரண்(டு) ஓடாம் அறவிலும் தூளியாம் ஒன்று**
**சொரூபம்(ம்)இல் கடத்தில் துரோணம்(ம்)மூன்(று) அதனி(ல்) துரோணம்(ம்)மூன்(று)**
**அகன்றுமிக்(கு) இருந்த**
**பருஅரி சியைத்தாம் சமைத்து வாயிலாப் பனவ(ர்)எண் ணிலர்க்குமுன் படைத்தார்.**

**பொழிப்புரை:** *எவரும் காணாத பட்டணத்தில் வெட்ட வெளியாகிய வீட்டில் இருப்பவர் பொன்னால் ஆகிய பாத்திரம் மூன்று அருகில் இருப்பதைக் கண்டனர். அந்த மூன்றினுள் இரண்டு ஓடுகளாம். மற்றொன்று முழுவதும் பொடியாக உள்ளதாம். வடிவம் இல்லாத பானையில் துரோணம் (மரக்கால் இரண்டு) பதக்கு மூன்று மரக்காலில் கழிந்தது போக மீதம் இருந்த பருத்து நீண்டிருந்த அரிசியைப் பக்குவப்படுத்தி வயிறும் வாயும் இல்லாத அந்தணர்கள் அளவில்லாத பேர்களுக்கு விருந்து வைத்தனர்.*

**(3.7.7)**

**அவரெலாம் நிரம்ப உண்டபின் மிகுந்த(து) அருந்தினர் வேட்டைகள் ஆடி**
**இவர்கள்மூ வரும்அங்(கு) இருந்தனர் என்ன இளமையால் நம்பினன் சிறுவன்**
**புவனமும் இவ்வா(று) அறிவிலோர் காண்பர் புகல்மனம் விரிந்தசங் கற்பம்**
**விவரமாம் இதனால் உலகமாம் இதனை விடுநிரு விகற்பமா யிடுநீ.**

**பொழிப்புரை:** *அந்தணர்கள் அனைவரும் முழுமையாக உண்ட பின்னர் மீதம் இருந்ததை அந்த குமாரர்கள் அருந்தினர். பின்பு வேட்டை ஆடி இவ்வாறாக அந்த அரச குமாரர்கள் மூவரும் அந்த நகரில் வாழ்ந்து இருந்தனர் என்று தாயாகிய தாத்திரி கூறவும், விசாரம் இல்லாத புத்தியினால் அந்தப் பாலகன் அதனை நம்பினான். இவ்வாறு விசாரம் இல்லாத சித்தம் உடையவர்கள் சம்சார ரசனையைத் திடமாகக் காண்பார்கள். கூறப்படும் மனதின் விரிவே சங்கற்ப வகைகள் ஆகும். ஆதலால் விதையாக இருக்கும் சங்கற்ப மாத்திரம் நீ விட்டு ஒழித்து நிர்விகற்பத்தைப் பற்றி நிச்சயமாக சாந்தியை அடைந்து மகிழ்வாய். (சங்கற்ப ஜால கற்பனையே அதாவது மனவிரிவே சங்கற்பம், இதனாலேயே சகல பிரபஞ்சமும் உண்டாயின. விருப்பு வெறுப்பு விருத்திகள் அதன் விசேடங்கள் இவையும் சங்கற்பமே என்று உணர்வாய். சங்கற்பத்தை விட்டொழித்தல் எனப்படும் சங்கற்ப தியாகத்தினால் நிருவிகற்ப ஆத்ம நிச்சயமே காரணமாதலால் நிருவிகற்பத்தை நன்கு பற்றிக்கொண்டு நிட்டை பெற்றால் சாந்தியும் தானே வரும்.)*

**(3.7.8)**

**(உற்பத்திப் பிரகரணத்தில் பாலன் கதை முற்றும்)**

# (viii) சித்தன் (சாம்பரிகன்) கதை

*முந்தைய பாலன் கதையில் பிரபஞ்சம் மித்தையே ஆயினும் விசாரம் இல்லாத காலத்தில் பாரமார்த்தம் போல் சத்தியமாகத் தோற்றும் எனச் சொல்லப்பட்டது. இப்போது இந்த சித்தன் கதையில் கேவலம் தோற்றம் மாத்திரம் அன்று சுக துக்க அனுபவங்களும் உண்டாவதால் அர்த்தமுள்ள செயல்களும் உள்ளன என்றாலும் மனதின் விரிவு மாத்திரம் பிரபஞ்சம் எனப்படுகின்றது. விசாரத்தால் சம்சாரம் நிவிருத்தியாகும் என்பதால் விசாரம் உபதேசிக்கப்படுகிறது.*

**(எழுசீர் ஆசிரிய விருத்தம்)**

**தங்கள்சங் கற்பத் தால்அறி வில்லோர் சாலமோ கிப்பர்நல் அறிஞர்**
**பொங்குநல் விசார மதியினால் மயங்கார் புந்தியால் பொய்ம்மையை ஒழித்துத்**
**துங்கமெய் உணர்வாய் பந்த(ம்)அற்(று) இருந்தும் தொடர்புறுபந்த(ம்)உண்(டு) என்று**
**பங்க(ம்)உற்(று) அயரேல் அமலமாய் அழியாப் பரம்பொருள் பந்த(ம்)உற் றிடுமோ.**

**பொழிப்புரை:** *விவேகம் இல்லாத மூடர் தம்முடைய சிந்தனை வசத்தால் மிகவும் மயக்கத்தை அடைவர். நல்லறிஞர் ஆராய்ச்சி மிகுந்த மோகம் அற்ற விசார புத்தியினால் மயக்கத்தை அடையார். தெளிந்த மதியினால் அசத்தியமான திருசியத்தை (காணப்படும் பொருட்களை) ஒழித்து, சத்து வடிவமான பிரம்மத்தை விசாரித்து உணர்வாய். பந்தம் இல்லாதவனாய் இருந்தும், அனாதியாகத் தொடர்ந்து வரும் பந்தம் இருக்கிறது என்று துயரப்பட்டு வீணாக அயர்வு கொள்ள வேண்டாம். நிர்மலமான அழியாத ஆன்மா எப்பொழுது எதனால் எப்படி பந்தத்தை அடையும்?* **(3.8.1)**

**அந்த(ம்)அற்(று)ஒன்றாய் விகற்ப(ம்)அற்(று) அறிவாய்அழிவிலாப்பரம்பொருள் இருக்க**
**பந்த(ம்)உற் றவர்ஆர் முத்திபெற் றவர்ஆர் பாவனை விகற்பமே அனைத்தும்**
**சிந்தனை விரிவு பந்தமாம் அதனைத் தீர்ந்திடல் முத்தியாம் மனத்தின்**
**சொந்தலீ லையினால் தூரமாம் அணித்தும் தூரமும் அண்ணிதாய்த் தோன்றும்.**

**பொழிப்புரை:** *முடிவில்லாததாய், இரண்டற்று ஒன்றாய், விகற்பம் இல்லாது நிருவிகற்பமாய், அறிவாய் அழிவிலாத ஆன்மா இருக்க, பந்தம் அடைந்தவர் யார்? முத்தி பெற்றவர் யார்? அனைத்தும் மனதின் பாவனைகளே (எண்ணங்களே). மனதின் விரிவே பந்தமாம். அதனை ஒழித்திடில் முத்தியாகும். மனமானது தனது சொந்த விளையாட்டினால் தன்னுடைய யதார்த்த வடிவம் சமீபத்தில் இருந்தும் தொலைவில் உள்ளதாகத் தோன்றுகின்றன. காணப்படும் பொருள்கள் (திருசியங்கள்) தொலைவில் இருந்தும் சமீபத்தல் உள்ளதாகத் தோன்றுகின்றன.* **(3.8.2)**

**கருத்தின்வல் லமையால் கற்ப(ம்)ஓர் கணமாம் கணம்ஒரு கற்பமாம் இவற்றைத்**
**திருத்தமாய் உணர்த்தும் ஒருகதை அதனால் செகம்எனும் இந்திர ஜாலம்**
**குருத்துவ மான மனத்தினுள் இருக்கும் கொள்கைதோற் றிடும்என உரைப்பான்**
**ஒருத்த(ன்)இங்(கு) அரிச்சந் திரகுலத்(து) உள்ளான் உத்தர பாண்டவ நாட்டோன்.**

**பொழிப்புரை:** *சித்த சங்கற்ப சக்தியினாலே செய்ய முடியாததையும் செய்ய வைக்கும் சாமர்த்தியத் தினாலே கற்ப காலமும் ஒரு கணம்போல அற்பமாகும். கணமும் ஒரு கற்ப காலம் போல் நீண்டதாகும். இவற்றைத் தெளிவாகத் தெரிவிக்கும் நடந்த கதை ஒன்று உண்டு. அதனால் பிரபஞ்சத் தொடர்பான இந்திர ஜாலம் வாசனையினால் மிகக் கடினமாக ஆன மனத்திற்குள் எப்படி நிலைபெற்றிருக்கிறது என்பதை விளக்கிடச் செய்யும் என்று கூறத் தொடங்குகின்றார். இவ்வுலகில் ஒருவன் அரிச்சந்திர குலத்தில் உதித்தவனாய் உத்தர பாண்டவ நாடு என்னும் தேசத்தை அரசாண்டவன் இருந்தான்.* **(3.8.3)**

**செந்திரு வாணி புகழ்மகன் விந்தை செறிபுயன் லவணனாம் பெயரோன்**
**மந்திரம் நிறைந்த அமைச்சர்தற் சூழ மணிகொள்சிங் காதனத்(து) இருப்ப**
**இந்திர சால வல்லவன் ஒருவன் எய்தினன் இறைஞ்சிநின்(று) ஏத்திச்**
**சந்திரன் அனைய பீலிகை ஏந்தித் தராபதி காண்கெனச் சுழற்ற.**

**பொழிப்புரை:** *மகாலட்சுமியும் வாணி தேவியும் பெருமைப்படும் அளவுக்குச் செல்வமும் கல்வியும் கொண்ட, அற்புதமான திண் தோள் இலவணன் என்னும் பெயருடைய அரசன், ஆலோசனைகள் கூறத்தக்க மந்திரிகள் சூழ மணிகளால் அலங்கரிக்கப்பட்ட சிம்மா சனத்தில் இருக்கின்ற பொழுது, இந்திர ஜாலத்தில் தேர்ச்சி பெற்ற ஒருவன் வந்து அரசனை வணங்கிப் புகழ்ந்து, "சந்திரனைப் போன்ற மன்னவனே! இந்த விசித்திரத்தைப் பார்ப்பீர்" என்று மயில் பீலியைக் கையில் எடுத்துச் சுழற்ற,* **(3.8.4)**

**சுத்தமாம் பரத்தால் பலவித சிருட்டி தோற்றிட மாயைதோற் றுதல்போல்**
**சித்தனால் காட்டிச் சுழற்றுறு பீலித் திகிரியை மன்னவன் பார்த்தான்**
**அத்தலம் தனிலே சைந்தவ தேசத்(து) அதிபதி விடுத்தஓர் தூதன்**
**தத்துறு புரவி ஒன்றுகொண்(டு) எய்திச் சதமகன் பரிக்குநேர் என்று.**

**பொழிப்புரை:** *சுத்த பரமான்மாவினால் பலவிதமான சிருட்டிகள் விவர்த்தமாகத் தோன்றிட, அவற்றிற்கு விதையான மாயை தோற்றிடுவது போல, இந்திர ஜாலக்காரனாகிய சித்தன் சக்கர வடிவமாகச் சுழற்றிய மயில் பீலியை மன்னவன் பார்த்தான். அவ்விடத்தில் சைந்தவ நாட்டின் அரசன் அனுப்பிய ஒரு தூதன் வந்து தாவிச்செல்லும் குதிரை ஒன்றினைக் காட்டி இது தேவேந்திரனின் உச்சைசிரவசம் என்ற குதிரைக்கு நிகரானது என்று.* **(3.8.5)**

**மன்னவ உனக்(கு)என்(று) எங்கள்கோன் விடுத்த வயப்பரி என்றலும் சித்தன்**
**இன்னது போல்வ(து) இல்லைநீ இதனில் ஏறுவாய் என்றனன் இனையோன்**
**சொன்னவை கேட்டு சித்திரம் போலத் துரகமே நாட்டமாய் வேந்தன்**
**கன்னல்ஈ ரிரண்(டு)அங்(கு) இருந்தனன் அறிஞர் கவலைதீர் சமாதிஉற் றென்ன.**

**பொழிப்புரை:** *மன்னவனே! தங்களுக்குக் கொடுக்கும்படியாக எங்கள் அரசன் கொடுத்து அனுப்பியது இந்த வெற்றி வேகம் பொருந்திய குதிரை என்று கூறவும், இந்திர ஜாலக் காரன் "இத்தகைய குதிரை கிடைப்பது அரிது. தாங்கள் இதன்மீது ஏறுவீர்" என்று சொல்லவும், மன்னவனோ சொன்னதை எல்லாம் கேட்டு சித்திரம்*

*போல் குதிரையின் மீது நாட்டம் கொண்டவனாய் மகான்கள் மனத்துயர் அழிந்து சமாதி நிலையை அடைந்தது போல, நான்கு நாழிகை (இரண்டு முகூர்த்தம்) காலம் அப்படியே இருந்தனன்.* **(3.8.6)**

**வேத்தவை இருந்தோர் ஐயமும் வியப்பும் மிகுந்தனர் அரும்பிய கமலப்**
**பூத்திரள் ஓடை போல்குவிந்(து) இருந்தார் போத(ம்)ஓர் உபாதியோ(டு) அலைந்து**
**மூர்த்த(ம்)ஓர் இரண்டு சென்றபின் தவிசில் முன்னுற வீழ்வுறா நின்ற**
**பார்த்திபன்தன்னைஅயல்உளோர்தாங்கப்பரந்(து)உழல்மனம்தெளிந்(து)உணர்ந்தான்.**

**பொழிப்புரை:** *அரச சபையில் இருந்தவர்கள் சந்தேகத்தையும் ஆச்சரியத்தையும் அடைந்தனர். தாமரை மலர்கள் பூத்த ஓடைபோல் அமைதியாகக் குவிந்திருந்தனர். மனதானது மோக வயத்தால் உபாதியுடன் திரிந்து நான்கு நாழிகை காலம் சென்ற பின்பு, சிங்காசனத்தில் இருந்து முன்புறமாக விழப் போன மன்னவனைப் பக்கத்தில் இருந்தோர் தாங்கிப் பிடிக்க பரந்து உழன்ற மனம் தெளிவடைந்து உணர்ந்தான்.* **(3.8.7)**

**அனையவன் தன்னை அமலநெஞ் சினைநீ அயர்(வு)உற வந்த(து)என் என்ன**
**வினையமந் திரியர் வினவலும் வேந்தன் விழித்(து)இது கேளு(ம்)என்(று) உரைப்பான்**
**துனையுறப் பீலி சுழற்றிஇச் சித்தன் சொல்லிட மயங்கிஇப் பரிமேல்**
**நினைவுற ஏறி வேட்டையின் பொருட்டால் நீள்நெறி கடிதுறச் சென்றேன்.**

**பொழிப்புரை:** *அந்த அரசனைக் கவனமுடைய அமைச்சர் "தெளிந்த மதி உடையீர்! தாங்கள் பிரமையில் மூழ்கி அயர்ச்சி அடைய நேர்ந்தது என்ன?" என்று கேட்கவும், மன்னவன் ஆச்சரியத்துடன் விழித்து கேட்பீர் என்று சொல்லத் தொடங்கினான். இந்தச் சித்தன் வேகமாக மயில் பீலியைச் சுழற்றி நல்ல குதிரை ஏறலாம் என்று சொன்னதைக் கேட்டு மயங்கி பிராந்தி உடைய மனத்தனாய் குதிரை மீது ஏறி வேட்டையாட நீண்ட தூரம் வேகமாகச் சென்றேன்.* **(3.8.8)**

**அறி(வு)அறு மனத்தால் அயர்வுறு போகத்(து) அறிவிலார் மருண்டுபோ வதுபோல்**
**செறிநெடும் தூரம் பரியினால் சென்று தீயினால் யாவையும் வெந்து**
**பொறிஎழும் பாலை வனத்திலே புகுந்து புரவியும் யானும்மெய் வருந்தி**
**எறிசுடர் மேற்பால் எய்துறும் அளவும் இடருற மயங்கிநெஞ்(சு) இளைத்தேன்.**

**பொழிப்புரை:** *விவேகம் இல்லாத மனத்தினால் மோகத்தைத் தரும் போகத்தில் அறிவில்லார் (மூடர்) மயங்கி அவதிப்படுவது போல், நெடுந்தூரம் குதிரையில் சென்று, வெப்பத்தி னால் எல்லாம் வெந்து போக, அனல் பறக்கும் பாலைவனத்தில் புகுந்து குதிரையும் யானும் உடல் வருத்தம் அடைந்து, சூரியன் மேற்கு திசையைச் சேர்கின்ற வரையில் துன்பம் அடைந்து மயங்கி சிந்தையும் தளர்வடைந்தேன்.* **(3.8.9)**

**குடும்பபா ரத்தை விவேகிகள் கடக்கும் கொள்கைபோல் பாலையைக் கடந்து**
**நெடும்பணை நாவல் கடம்(பு)எலு மிச்சம் நிறைந்துபுள் குரலினால் நிரம்பி**
**இடும்பைதீர் சோலை எய்தலும் ஆங்(கு)ஓர் இளங்கொடி பிணித்த(து)என் கழுத்தில்**
**கடும்பரி எனைவிட்(டு) அகன்றது கங்கை கலந்தவர் பாவமே என்ன.**

**பொழிப்புரை:** *சம்சார பாரத்தை விவேக புத்தியுள்ளவர்கள் கடந்து செல்கின்ற தன்மை போல, பாலை வனத்தைக் கடந்து, நீண்ட கிளைகளை உடைய நாவல், கடம்பு, எலுமிச்சம் நிறைந்து பறவைகள் ஒலிகளால் நிரம்பி, துன்பத்தைப் போக்கும் சோலை ஒன்றினை அடைந்ததும், அங்கு பசும் கொடி ஒன்று என் கழுத்தைச் சுற்றிக் கொண்டது. கங்கையில் மூழ்கியவர் பாவம் அகல்வது போல, வேகமான குதிரை என்னைவிட்டு அகன்றது.* **(3.8.10)**

**கழுத்துறு கொடியால் ஊசல்போல் தூங்கிக் காவுறை தென்றலால் குளிர்ந்து**
**முழுத்திற மோகத்(து) அழுந்துநெஞ்(சு) அயர்ந்தேன் முழுக்குநற் பூசனை நியமம்**
**விழுத்தகு நல்ஊன் இன்றியே நிசியாம் வீண்பொழு(து) அணையஅப் பொழுதில்**
**பழுத்தவல் இருளும் துன்பமும் குளிரும் பல்லறை ஓசையும் துணையாய்.**

**பொழிப்புரை:** *கழுத்தில் சுற்றிக் கொண்ட கொடியால் ஊஞ்சல் போல் தொங்கி அந்த பூஞ் சோலையின் தென்றல் காற்றால் குளிர்ச்சி அடைந்து முழுக்க பெரும் மோக மயக்கத்தில் அழுந்தி சிந்தை மழுங்கினேன். குளித்தல், பூசை செய்தல் முதலான நியமங்கள், சிறந்த நல்ல உணவும் இன்றி வீணாக இரவுப் பொழுதும் வந்தது. அந்தப்பொழுதில் மிகுந்த பேரிருளும், துன்பமும், குளிரும், பலவிதமான ஓசைகளும் துணையாக இருந்தேன்.* **(3.8.11)**

**மனத்(து)இருள் அகற்றும் அறிவுபோல் அந்த வல்இருள் இரவிவந்(து) அகற்றப்**
**புனைத்துறுகொடியைஅறுத்(து)அவண் இறங்கிப்பொழில்புகுந்(து) ஒருவரைக் காணேன்**
**கனத்ததோர் பகலில் எட்டி(ல்)ஒன் றான கடிகைஅங்(கு) அகன்றதன் பின்னர்**
**இனத்தலாள் ஒருத்தி தன்னைமுன் எதிர்ந்தேன் இரவினை மதிஎதிர்ந்(து) அன்ன.**

**பொழிப்புரை:** *மனத்தின் இருளை அகற்றும் அறிவு போல, அந்தக் கொடிய இருளை அகற்ற சூரியன் வந்தது. கழுத்தைச் சுற்றிய அந்தக் கொடியை அறுத்து, அங்கு இறங்கிச் சோலையில் சென்றும் ஒருவரையும் காணவில்லை. இப்படியாக வெளிச்சம் மிகுந்த பகலில் எட்டில் ஒருபங்கு நாழிகை காலம் (மூன்றே முக்கால் நாழிகை) கழிந்த பின்னர், சந்திரன் இரவுப்பொழுதை எதிர்கொண்டது போல், தாழ்ந்த குலப் பெண் ஒருத்தி எதிரில் வரக் கண்டேன்.* **(3.8.12)**

**கருகிய நிறமும் கருநிறத் துகிலும் கைத்தலத்(து) அன்னமும் ஆகி**
**அருகுவந் துறலும் பசிப்பிணி ஆற்றா(து) அவளைநான் அன்னமே அன்னம்**
**தருதிஎன்(று) இரந்தேன் பசியினால் எவர்க்கும் தாழ்வுவந் துறும்எனக் கண்டேன்**
**வருதவம்செயாதோர் விரும்பிய பொருள்போல் மற்(று)அவள் அளித்திலள் அன்னம்.**

**பொழிப்புரை:** *கருப்பு நிறமும், கரிய சேலையும் உடையவளாய் கைகளில் உணவினைக் கொண்டவளாய் அருகில் வந்திடவும், பசிப் பிணி தாங்க முடியாமல் நான் அவளை நோக்கி அன்னப் பறவை போன்றவளே! உணவினைத் தருவாய் என்று யாசித்தேன். பசியினால் எவர்க்கும் கஷ்டம் வந்தடையும் என்பதைக் கண்கூடாகக் கண்டேன். தவம் செய்யாதவர் விரும்பிய பொருளைப் போல, அந்தப் பெண் உணவைத் தரவில்லை.* **(3.8.13)**

**சோலைதோறு(ு) உழலும் அவள்பிற(கு) ஏகிச் சோரு(ம்)என் பசித்துயர் சொல்ல**
**நீலைநின்(று) உரைப்பாள் நீசர் கன்னிகை நினக்(கு)என(து) அன்னம்ஆம் எனின்**
**மாலையிட்(டு) எங்கள் சேரியில் பிதாமுன் வந்(து)எனைப் புணர்தியேல் இந்த**
**வேலையில்அளிப்பேன்என்றலும் இயைந்தேன் விருப்பமொ(டு)அளித்தனள் அன்னம்.**

**பொழிப்புரை:** *சோலை முழுக்கச் சுற்றித் திரியும் அவள் பின்னாலேயே சென்று வாட்டும் என்னுடைய பசித் துயரத்தைச் சொல்ல, அந்தக் கரிய பெண் சற்று நின்று சொல்வாள் "புலையர் தம் குலத்தைச் சேர்ந்த கன்னி நான். உனக்கு என்னுடைய உணவு உண்ணலாம் எனில், எங்களுடைய சேரியில் வந்து என்னுடைய தந்தை உத்தரவுக்குப் பின் என்னை மணந்து என்னுடன் வாழ விரும்புவாயேல், இந்த நேரத்தில் உணவினை அளிப்பேன்" என்று கூறவும் சம்மதித்தேன். விருப்பமுடன் உணவு அளித்தாள்.* **(3.8.14)**

**நல்கிய பாதி அன்னமும் அருந்தி நாவலின் கனிச்சுவை பருகி**
**ஒல்கிய துயர்போய் இருத்தலும் புறத்தில் உலாவுநல் உயிர்என என்னைப்**
**புல்கிய கரத்தால் பற்றினள் பிதாமுன் போயினள் யாதனா சரீரம்**
**மல்கிய பயம்செய் நரகிலே கொடுபோய் மறுக்கமே செய்யுமா(று) என்ன.**

**பொழிப்புரை:** *அளித்த பாதி அன்னத்தைப் புசித்து, நாவல் பழச் சுவை பருகி அடைந்த துயரம் போய் இளைப்பாறவும் வெளியில் சுற்றித் திரிகின்ற நல்ல உயிர் என்று என்னை ஆசாரம் இல்லாத கரத்தால் பற்றி, தந்தை முன் கொண்டு சென்று நிறுத்தினாள். வேதனை மிகுந்த யாதனா தேகத்தைக் கொடுத்து நரகத்திற்குக் கொண்டு சென்று பெரும் துயரம் தந்து அனுபவிக்கச் செய்வதைப் போல இருந்தது.* **(3.8.15)**

**நண்புறும் இவன்என் நாயகன் ஆக நல்கெனத் தாதையும் பொருந்திப்**
**பண்புற இருவர் தமையும்வே தாள பந்தன வனத்தி(ல்)நின்(று) அகன்று**
**கண்புகத் தோன்றும் காலதூ தரைப்போல் கருநிறத் தவன்கொடு போகி**
**உண்புலால் வீசும் சேரியில் அடைந்தான் ஒருப்பபடு மணம்செய்வான் உன்னி.**

**பொழிப்புரை:** *நேசம் மிக்க இந்த மன்னவன் எனது கணவன் ஆக மணம்புரியச் செய்வீர் என்று அந்தக் கரிய பெண் வேண்ட, தந்தையும் ஒப்புக்கொண்டு, அழகுற இருவரையும் வேதாள பந்தனம் என்ற காட்டிலிருந்து புறப்பட்டு, மரண காலத்தில் கண்கூடாகத் தோற்றம் அளிக்கும் யம கிங்கரரைப் போல கருநிறம் உடைய அவன் புலால் நாற்றம் வீசும் சேரியில் அவர்களைக் கொண்டு போய்ச் சேர்ந்தான். ஒருமைப் பாட்டுடன் மணம் செய்விக்க அந்தத் தந்தை எண்ணி.* **(3.8.16)**

**வானரம் புரவி குக்குடம் காகம் வராக(ம்)என் பனவரிந்(து) எடுப்ப**
**ஊன்நரம்(பு) உணங்கப் பறவைவீழ்ந்(து) அலைப்ப உலவிய சிறுவர்கைத் தசையில்**
**ஈனஈ இரைப்ப உதிரமும் என்பும் எல்லையில் சேரியில் எய்திக்**
**கான்அரம் பைகளே நாட்டிய குடிலில் கடிமணம் தொடங்கினர் களிப்பால்.**

**பொழிப்புரை:** *குரங்கு, குதிரை, கோழி, காகம், பன்றி என்னும் ஐந்து பிராணிகளின் தசையைப் பிரித்து ஒருபுறம் எடுப்ப, மீதி மாமிசத்தை உலரும்படி கட்டிய நரம்புகளில்*

*கோர்த்து அமைத்துள்ள தோரணங்களில் பருந்து முதலிய பறவைகள் அடித்து அலைப்ப, விளையாடித் திரியும் குழந்தைகளின் கையில் உள்ள மாமிசத் துண்டுகளில் தாழ்ந்த ஈக்கள் மொய்த்து சப்தம் இட, அளவற்ற எலும்புகளும் கிடக்கின்ற அந்த சேரியை அடைந்து, காட்டு வாழைகள் நாட்டிய குடிசையில் சந்தோஷத்துடன் மணம்செய்யத் துவங்கினர்.* **(3.8.17)**

**மலினஊன் துன்னும் சிறுகணால் நோக்கி மருக(ன்)நல் லவன்என மகிழ்ந்தாள்**
**கலியினும் கறுத்த கூன்கிழ மாமி கடையர்மற் றியாவரும் கூடி**
**ஒலிபடு பறைகள் முழக்கினர் மதுவும் ஊன்களும் சமைத்தனர் அவளை**
**நலிதரு பாவம் யாதனா சரீரம் நல்குமா(று) எனஅவன் அளித்தான்.**

**பொழிப்புரை:** *மலின மாமிசம் நெருங்கி உள்ள சிறு கண்களால் நோக்கி மருமகன் நல்லவன் என்று கலி புருடனைக் காட்டிலும் மிகவும் கருப்பான கூன் கிழ மாமியார் மகிழ்ந்தாள். உறவினர்களாகிய நீசர்கள் யாவரும் கூடி சப்தம் உண்டாகும்படி பறைகளைக் கொட்டினர். மது, மாமிசம் இவற்றைச் சமைத்தனர். துயரம் தரும் அதர்மம் அதற்கான யாதனா தேகத்தைத் தருவது போல, தந்தை அந்தப் பெண்ணை மணம்செய்வித்தான்.* **(3.8.18)**

**கடியபா தகங்கள் உருவுகொண்(டு) அனைய கடையர்கல் யாணநாள் ஏழில்**
**முடிதலும் அவளோ(டு) எண்மதி கழித்தேன் முகிழ்முலை பூத்தவள் வாழ்நாள்**
**கொடியதோர் விபத்து தரும்துயர் போல்ஓர் குழந்தையை அளிக்கஅக் குழந்தை**
**வடிவற வெந்த கட்டைபோல் நிறத்து வளர்ந்தது மூர்க்கர்தம் மனம்போல்.**

**பொழிப்புரை:** *கொடிய மகா பாதகங்கள் மானிட உருவு கொண்டு வந்ததைப் போல நீசர் தம் கல்யாண விழா ஏழ் நாட்கள் நடந்து முடிந்ததும், அவளுடன் எட்டு மாதங்கள் கூடிக் கழித்தேன். குவிந்த தனங்களை உடைய பருவம் அடைந்த அந்தக் குமரியுடன் வாழ்கின்ற போது, கொடிய ஒரு விபத்து தரும் துயரம் போல, ஒரு பெண் குழந்தையைப் பெற்றாள். அந்தக் குழந்தை அழகு இல்லாமல் தீயில் வெந்து போன கட்டை போல் கரிய நிறம் உடையதாய் மூர்க்கர் தம்முடைய மனம்போல வளர்ந்தது.* **(3.8.19)**

**பின்னர்மூ வாண்டில் பேதைமை அளிக்கும் பிறப்பென ஒருமகப் பெற்றாள்**
**அன்னவள் மீட்டும் ஆசையில் தோன்றும் அனர்த்தமே என்னவோர் குழவி**
**தன்னையும் அளித்தாள் இவரொடு நெடுநாள் தங்கினன் குடும்பபா ரத்தில்**
**இன்னலால் அவர்தாபத்தினால் வருந்தும் இடும்பையால் சரைத்த(து)என் யாக்கை.**

**பொழிப்புரை:** *மூன்று ஆண்டு கழிந்த பின்னர், அறியாமை தரும் பிறவி என்ன ஒரு ஆண் குழந்தையைப் பெற்றாள். அவள் மறுபடியும் ஆசாபாசத்தினால் தோன்றும் துன்பமே போல் ஒரு குழந்தையையும் பெற்றாள். இக்குடும்பத்தோடு அனேக காலம் வாழ்ந்தேன். சம்சார சுமையினால் மனைவி பிள்ளைகள் படும் துயரைக் கண்டு வருத்தம் அடைந்ததினால் என்னுடைய உடலானது மூப்பினை அடைந்தது.* **(3.8.20)**

**வெம்புறு மூப்பால் மெலியும் நாள்அந்த விந்தவெற்(பு) அருகுறு சாரல்**
**பைம்புயல் மறுத்து மண்ணி(ல்)நீர் சுண்டிப் பசியினால் உயிரெலாம் பதைப்பக்**
**கொம்பொடு கொடியும் புல்லும்வெந்(து) எங்கும் கோடையால் பொடிபட வரலும்**
**எம்புதுக் கிளைஞர் இறந்தவர் அனேகர் எங்கணும் ஏகினர் அனேகர்.**

**பொழிப்புரை:** *துன்பத்தால் தபிக்கும் முதுமையினால் மெலிவடையும் நாளில் அந்த விந்திய மலையின் அருகில் உள்ள பொழில்கள் கார்மேகங்கள் மழையைப் பொழியாமல் பொய்த்தமையால் பூமியில் கொஞ்சமும் தண்ணீர் இல்லாமல் சுண்டிப் போக, உயிரினங்கள் பசியினால் பதைப்பக் கிளைகளுடன் கொடிகளும் புல்லும் வெப்பத்தினால் வெந்து கருகிப் பஞ்சம் வரவும் எம்முடைய புதிய உறவினர்கள் அனேகர் இறந்து போயினர். அனேகர் எங்கோயோ ஓடிப் போயினர்.* **(3.8.21)**

**தனையரில் இருவர் தோள்களில் இருப்பத் தலையின்மீ(து) ஒருவனைத் தாங்கி**
**மனைவியோ(டு) ஏகி மெய்யெரி கொளுத்த மாய்வுறா(து) அந்தநா(டு) அகன்றார்**
**பனையடி நிழலில் மைந்தரை இறக்கிப் பதைப்பொரு சிறி(து)ஒழிந்(து) இருந்தேன்**
**வினைநர(கு) ஏறிப் பழவினை யோடே மேவிய இன்ப(ம்)அ(து) என்ன.**

**பொழிப்புரை:** *யானோ குழந்தைகளில் இருவரைத் தோள்களில் இருத்தி, ஒருவனைத் தலைமீது தாங்கி மனைவியோடு சென்று கொளுத்துகின்ற வெய்யிலில் மரணம் அடையாமல் அந்த நாட்டினை விட்டு அகன்று, பனைமரத்தடி நிழலில் பிள்ளைகளை இறக்கி விட்டு, பழைய பாவ வினைகளால் நரகத்தைச் சேர்ந்து துயரம் அடைந்து அந்த நரகத்திலிருந்து வெளியேறி எஞ்சிய பழைய பாவ வினைகளுடன் மறுபிறவி எடுத்து அடைந்துள்ள சுகம் போல, சிறிது நேரம் பதைபதைப்பு இன்றி இளைப்பாறி இருந்தேன்.* **(3.8.22)**

**வளைதரு மூப்பால் வழிதரும் துயரால் மைந்தர்கள் இருவரை அணைக்கக்**
**களைகொலோ துயிலோசாய்ந்தனள் மனைவி கண்(டு)உளம் கரைந்துநான் இருந்தேன்**
**இளையவன் துயிலா(து) என்மடி ஏறி இருந்துநீர் சொரிதர அழுது**
**விளைபசி ஆற்றேன் உதிரமும் ஊனும் வேண்டு(ம்)இப் போதுதா என்ன.**

**பொழிப்புரை:** *வளைத்துக் கொண்ட முதுமையால் வெகுதூரம் நடந்து வந்த துயரத்தால் பிள்ளைகள் இருவரை அணைத்துக் கொள்ள, களைப்போ உறக்கமோ மனைவி படுத்தனள். அதைக் கண்டு மனம் உருகி இருந்தேன். இளைய குழந்தை உறங்காமல் என் மடிமீது ஏறி அமர்ந்து கண்ணில் நீர்வர அழுது, உண்டான பசி தாங்க முடியவில்லை, எனக்கு இரத்தமும் மாமிசமும் வேண்டும், இப்பொழுது கொடு என்று கேட்க,* **(3.8.23)**

**இட்டமாம் இளவல் என்எதிர் பதைப்ப என்செயல் ஏதுமற்(று) உயிர்போய்க்**
**கட்டைபோல்இருந்தேன் விடா(து)அவன் அழுத கண்ணில்நீர் கண்(டு)அறக் கரைந்து**
**மட்டிவன் வாரான் என்(று)உயிர் விடுவான் வனக்கனல் வளர்த்(து)அதில் வீழக்**
**கிட்டிநின்(று) உகைத்தேன் இந்தஆ சனத்தின் கீழ்வுற வீழ்வுறும் அளவில்.**

**பொழிப்புரை:** *மிகவும் பிரியமான கடைசிப் பிள்ளை என் எதிரில் பதைபதைக்க, அவன் பசியை ஆற்ற ஏதும் செய்ய முடியாமல் உயிர் போய்விட்டதைப் போலக் கட்டை போல இருந்தேன். அவன் விடாமல் கண்ணில்நீர் சொரிய அழுததைக் கண்டு 'இவன் அடங்கமாட்டான்' என்று உயிரை மாய்த்துக் கொள்ளும் பொருட்டு காட்டுத்தீயை வளர்த்து அதில் வீழ்வதற்காக அருகில் சென்று குதிக்க முயற்சித்தேன். இந்த சிங்காசனத்திலிருந்து கீழே விழப்போனேன் அப்போது,* **(3.8.24)**

**தாங்கினீர் பலரும் சயசய என்னத் தாக்குறு பல்லியம் முழக்க**
**வீங்(கு)உணர்(வு) உற்றேன் நீச(ன்)அன்(று) ஆகி லவணனாம் மன்னவன் ஆனேன்**
**தீங்குறு சித்தன் செயலில்மோ கித்தேன் சீவனுக்(கு) அவத்தைகள் அனேகம்**
**பாங்குற உளவென்(று) அறிந்தனன் என்று பகர்வுழி ஒளித்தனன் சித்தன்.**

**பொழிப்புரை:** *பலரும் என்னைத் தாங்கிப் பிடித்தீர். ஜயஜய என்று சப்தம் இட்டதாலும், தூரி முதலான வாத்தியங்களை முழக்கியதாலும் இவ்விடத்தில் பிரக்ஞை வரப்பெற்றேன். நீசன் அல்லாமல் லவண அரசனாக ஆனேன். தீயதைத் தோற்றுவிக்கும் இந்த சாம்பரிகன் என்ற சித்தன் செய்கையால் மோகத்தை அடைந்தேன். சீவனுக்கு வாசனையால் அவத்தைகள் அளவில்லாது, ஒழுங்காக அஞ்ஞானத்தினால் திடமாக உள்ளன என்று அறிந்தேன் என்று கூறியபோது சித்தன் மறைந்துவிட்டான்.* **(3.8.25)**

**இருந்தமந் திரிகள் சித்த(ன்)அன்(று) இவ(ன்)ஒன்(று) ஏற்றிலன்**
**இமைப்பின்உள் மறைந்தான்**
**பொருந்திய உலக மனவிரி(வு) என்றே புலப்படக் காட்டுவான் விடுத்த**
**திருந்திய தெய்வ மாயைஈ(து) ஆகும் செப்பு(ம்)இச் செயலினால் தீரப்**
**பெருந்தகை பரத்தின் விகாரமே மனமாம் பேர்உல(கு) என்றனர் என்றான்.**

**பொழிப்புரை:** *சபையில் இருந்த அமைச்சர்கள் இவன் சித்தன் இல்லை, யாதொன்றையும் வேண்டவில்லை, நொடிப்பொழுதில் மறைந்து விட்டான். தோற்றிக் கொண்டிருக்கும் இந்தப் பிரபஞ்சம் மனதின் விரிவு மாத்திரமே என்று தெளிவாக உணரும்படி காட்டுவதற்காக அனுப்பிய எல்லா வல்லமையுள்ள தெய்வ சம்பந்தமான மகா மாயையே இது ஆகும். கூறும் இந்தச் செய்கையினால் சர்வ சக்தியுடைய முடிவற்ற பிரம்மத்தின் விரிவே (விகாரமே) மனம், மனோ விருத்தியே பெரிய உலகம் என்று கூறினர் என வசிட்டர் இராம பிரானுக்கு எடுத்துரைத்தார்.* **(3.8.26)**

**(உற்பத்திப் பிரகரணத்தில் சித்தன் கதை முற்றும்)**

# உற்பத்திப் பிரகரண இதோபதேசம்

*இவ்வாறு பல கதைகளால் மாயா சமுதாயம் பொய், அதன் அதிஷ்டான பிரம்ம ஆத்ம தத்துவமே மெய் என்று சொல்லப்பட்டது. இருப்பினும் பிரம்மாத்ம தத்துவம் மனதின் ஒருமைப்பாடு இல்லாமையால் அனுபவத்தை அடைய முடியாதது ஆகும். ஆதலால் சித்த ஒருமை உண்டாகும் பொருட்டு அதனது வெளிப்புற விருத்தி நிறுத்தப்பட வேண்டும் என்பதாக அங்கங்கே கூறப்பட்டிருந்த போதிலும், இங்கு சிறப்பாகத் தெரிவிக்கும் பொருட்டு இந்த உபதேசம் தொடங்கப்படுகின்றது.*

*முந்தைய சித்தன் கதையில் தன் சங்கற்பத்தால் அற்ப காலத்தில் அனேக வருடம் மனதிற்குச் சம்சார வாழ்க்கை சொல்லப்பட்டது. அது எப்படி நிகழும் என்று கருதும் பட்சத்தில் அதனைச் சாதிக்கும் நிமித்தம் மன சாமர்த்தியம் இதில் சொல்லப்படுகின்றது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

ஆய மனத்தின் செயல்செயலாம் அதனால் ஒழிந்த(து) ஒழிந்துளதாம்
மேய மனத்தின் அலை(வு)ஒழித்தோர் மிகவும் நல்ல தியானத்தோர்
தூய மனமா யிடில்வெற்பால் சுழலாக் கடல்போல் பிறப்(பு)இறப்பாம்
மாயை மயக்கம் கெடும்என்னா வசிட்டன் மீண்டும் உரைசெய்வான்.

**பொழிப்புரை:** *மனதில் உதயமாகிய செயலே செயல்கள் ஆகும். மனதினாலே எது விடப்பட்டதோ அதுவே விடப்பட்டதாம். வாசனையால் அறியப்படும் மனதின் சஞ் சலத்தை ஒழித்தவர் மிகவும் உத்தமமான தியானத்தை உடையவர். சஞ்சலம் நீங்கி தூய மனமாயின் மந்தர மலையால் சுழலாத (அசையாத) பாற்கடல் போல் பிறப்பு இறப்பு என்கிற சம்சாரப் பிராந்தி ஒழிந்து சாந்தி உண்டாகும் என்று கூறி வசிட்ட முனிவர் மறுபடியும் தொடர்ந்து உரைக்கின்றார்.* **(3.இ.1)**

தளையா நிற்கும் பலபோகச் சங்கற் பம்சேர் மனவிருத்தி
முளையால் வளரும் மாமாயை மோகம் என்னும் நச்சுமரம்
விளையா நின்ற மனநோய்க்கு மேலோர் விதித்த பரிகாரம்
இளையா(து) எளிதா யதுதனாலே இயற்ற லாகும் இதுகேட்பாய்.

**பொழிப்புரை:** *தன்னைப் பிணிக்கும் சப்தம், பரிசம் முதலான ஐந்து விஷயங்களால் பல போக சங்கற்ப மனோ விருத்திகள் என்கின்ற முளையால் வளர்ந்து ஓங்கும் சம்சாரம் என்னும் விஷ மரத்தால் உண்டாகின்ற மன நோயான துன்பத்தை நிவிருத்தி செய்ய மகான்கள் அருளிய அருமையான மருந்து (பரிகாரம்) வருந்தாது சுலபமாக மற்றொருவர் உதவியின்றி தனது முயற்சியினாலேயே செய்துகொள்ள முடியும். இதனைக் கேட்பாய்.* **(3.இ.2)**

மிகமால் உறுபல் பொருள்களையும் மேவா(து) ஒழித்தோர் மனம்வென்றோர்
சுகமாய் எளிதாய்த் தனக்(கு)உரித்தாம் துயர்தீர் நிராசை அறிவரியோர்
சகமார் மனிதப் புழுஒப்பார் சான்றோர் உரைத்த நூல்பழகி
அகமா நினைவு தீர்மனத்தால் அயரும் மனதைத் திருப்பிடலாம்.

**பொழிப்புரை:** *மிகவும் விரும்புகின்ற அதாவது பேராசைக்கு விஷயமான பல பொருள்களையும் பற்றாது விட்டவர் மனதை வென்றவர் ஆவர். சுகமாய் எளிதாய் தனக்கு உரியதான துன்பத்தைத் தீர்க்கும் அசங்கற்பமாய் (சங்கற்பம் இன்றி) வைராக்கியமாய் நிராசையை அடைதற்கு முடியாதோர் உலகத்தில் உள்ள மனிதப் புழு போன்றவர் ஆவர். பெரியோர் உரைத்த சாத்திரம், சத்சங்கம் இவற்றுடன் பழகி நான் என்று எழும் எண்ணம் தீர்ந்த (துன்பம் நீங்கிய) மனத்தால் விஷயங்களில் சென்று மயங்கி அயர்வு அடையும் மனதைத் திருப்பிடலாம், அதாவது வசப்படுத்தலாம்.*

**(3.இ.3)**

**இரும்பால் இரும்பு திருந்துவபோல் இயற்று மனத்தால் மனம்திருந்தும்**
**திரும்பா நிராசை வடிவாகிச் செறியும் தன்னால் இயற்றுவதாய்**
**விரும்பா நின்றோர்க்(கு) எளிதான வெய்ய மனத்தின் உபசாந்தி**
**பெரும்பா ரம்தீர் நற்கதியாம் பிறிதோர் கதியும் நன்(று)ஆகா.**

**பொழிப்புரை:** *சம்மட்டியாம் இரும்பால் அக்கினியில் காய வைத்த இரும்பினைச் சரிசெய்வதுபோல், அவிவேக மனத்தைச் சத்துவ மனத்தால் திருத்தலாம். மாறாத வைராக்கிய வடிவமாகி முயற்சி செய்கின்ற தன்னாலேயே சாதிக்கத் தகுந்த பேரானந்தத்தை விரும்புகின்ற (அல்லது எதனையும் விரும்பாதவர்களுக்கு) சுலபமான மலின வாசனையுடைய மனத்தின் பரம சாந்தியானது பெரிய சம்சார பாரத்தைத் தீர்க்கும் நல்ல வழியாம். மற்று எந்த வழியும் நலம் உடையது ஆகாது.* **(3.இ.4)**

**வாவு மனத்தை அசங்கற்ப வாளால் அறுக்கில் நிறைந்தெங்கும்**
**யாவும் அதுவாம் பொருள்தோன்றும் இந்த வழிநின்(று) அறிவாலே**
**மேவு மனதை விழுங்கிஅதின் மேலாம் மாயா விகற்பமெலாம்**
**ஓவு மதியால் அறிவுகடந்(து) உளத்தை விழுங்கும் பொருள்உணர்வாய்.**

**பொழிப்புரை:** *விஷயங்களைப் பற்றுகின்ற மனத்தை அசங்கற்பத்தால் (சங்கற்பம் உதயமாகாத) வாளினால் அறுத்தால், எல்லாவிடத்தும் நிறைந்து எங்குமாய் யாவுமாய் சாந்தமாய் விளங்கும் பொருளான பிரம்மம் தோன்றும். இந்த வழியில் நின்று வாசனா வசத்தால் பொருந்துகின்ற மனதை உட்படுத்தி அதற்கு மேலான பொருள் ஆவாய். பவ (பிறவி) பாவனையில் இருந்தும் விடுபட்டு எண்ணங்கள் தீர்ந்து மனதையும் கடந்த அந்தப் பரமான்மாவை உணர்வாய்.* **(3.இ.5)**

**வருந்தி முயன்று மனம்தன்னை மாற்றி இல்லை உண்(டு)என்னா(து)**
**இருந்த பதத்தில் இருந்திடுவாய் இடர்தீர் செல்வம் இடர்இன்றிப்**
**பொருந்த வேண்டும் மனம்வென்றால் புவன மூன்றும் துரும்பாகும்**
**திருந்த இனி(து)என் றனவெல்லாம் தீதாய்த் தோன்றின் மனம்மாளும்.**

**பொழிப்புரை:** *எப்பாடு பட்டாவது முயற்சி செய்து மனத்தைச் சங்கற்பம் (எண்ணம்) இல்லாததாக ஆக்கி, இல்லை-உண்டு (பேதம் அபேதம் இரண்டும்) இல்லாத அந்த மகா சத்தினைச் சேர்ந்திடுவாய். கலங்காது இருத்தல் என்கின்ற செல்வமான துக்கத்தில் இருந்து விடுதலை, பரமானந்தம் சேர்தல் என்ற பிரம்மத்தைப் பொருந்த வேண்டும். மனதை வென்றுவிட்டால் மூன்று உலகங்களும் துரும்பாகத் தெரியும் (அவற்றிலிருந்து*

*கவர்ச்சி தோன்றாது) விவேக புத்தியால் இனிமை என்று தோற்றம் அளிப்பதெல்லாம் தீதாய் முடியும் என்று தோன்றுமாயின் இந்த மனமானது ஒழிந்துவிடும்.* **(3.இ.6)**

**சித்த விண்ணில் திகழ்அறிவாம் தியானத் தாலே அறிவென்னும்**
**ஒத்த படையால் ஐய(ம்)அற உளத்தை அறுப்பாய் அறுத்ததன்பின்**
**மெத்து துயர்போம் அவன்இவன்நான் மேவும் என்ன(து) அதுவிதுவாய்**
**வைத்த அவையே மனம்இதனை மறப்பாம் வாளால் அறுத்திடுவாய்.**

**பொழிப்புரை:** *இருதய ஆகாயத்தில் (சிதாகாசத்தில்) விளங்கும் ஆத்ம தியானத்தினால் அறிவு என்கின்ற சக்கர ஆயுதத்தால் சந்தேகம் இன்றி மனதை அறுப்பாய். அறுத்துவிட்ட பின்பு தொல்லை கொடுக்கும் துன்பங்கள் போய்விடும். அவன், இவன், நான், என்னுடையது, அது, இது என்பதான எண்ணங்களை அடைந்து கொண்டிருப்பதே மனம் ஆகும். இதனை அகந்தை மமதைகளின் அபாவனை என்னும் வாளால் அறுப்பாய். (நான்-எனது என்ற பாவனையை நீக்குதல் மூலம் மனதை மாய்க்கலாம்.)* **(3.இ.7)**

**பெருகத் திரண்ட முகில்எல்லாம் பெருங்காற் றாலே ஒருவுதல்போல்**
**வருகற் பனைநா சத்தாலே மனம்போய் இறக்கும் மனம்இறந்தால்**
**பொருகற் பாந்த மாருதமும் பொங்கு கடலும் புவியனைத்தும்**
**உருகச் சுடுபன் னிருகதிரும் ஒருகால் வரினும் இடர்உண்டோ.**

**பொழிப்புரை:** *பரந்து சூழ்ந்து இருக்கும் மேகங்கள் எல்லாம் மிகப்பெரும் காற்று வீசும்பொழுது சிதறி ஓடி விடுவது போல, வாசனையின் வசமாக எழுந்து வரும் சங்கற்ப நாசத்தாலே மனமானது திரும்பி வராமல் அழிந்து போகும். மனம் அழிந்தால் பிரளய காலத்தின் பிரசண்ட வாயுவும், பிரளய காலத்தில் பொங்குகின்ற கடல்களும், எல்லா உலகங்களும் உருகிப் போகும் வகையில் சுடுகின்ற பன்னிரண்டு சூரியன்கள் ஒருசேர வந்தாலும் துயரம் வருவது உண்டோ?* **(3.இ.8)**

**தன்னைக் கொண்டே தனைஅறுக்கில் தானாய் சகல பூமிக்கும்**
**முன்னைத் தலைமை போல்இன்ப முதிர நிறைந்(து) அகற்பனைக்கே**
**துன்னித் திகழ்தற் பதம்பற்றிச் சுகத்தை அடைவாய் பலவாக**
**உன்னிப் படர்கற் பனைச்செல்வம் உடைய மனமே உயிர்ப்பகையாம்.**

**பொழிப்புரை:** *அசங்கற்ப வடிவத்தைக் கொண்டு தன் முயற்சியினாலேயே (பிறர் உதவியின்றி) வாசனை பொருந்திய சங்கற்பத்தை அழிக்கில், சகல பூமிக்கும் ஏகச் சக்கரவர்த்தியைப் போல, சங்கற்பங்களின் அபாவமான (இல்லாமையான) நிர்மனம் என்னும் சகல விதமான சித்தியும் தருகின்ற நெருங்கி இலங்கும் உன்னுடைய சொரூபமாகிய பிரம்மானந்தத்தை அடைவாய். பிறவிதோறும் தொடரும் வாசனைகள் பலவாறாக விரிந்து செய்யும் சங்கற்ப மாகிய செல்வத்தை அடைந்துள்ள மனமே சீவனது (ஜென்மப்) பகைவனாம்.* **(3.இ.9)**

**உள்ளப் பகைவன் பலவிதமாய் உறுகாட் சிகளால் வெல்லாமல்**
**தெள்ளத் தகுசந் தோட(ம்)எனும் செல்வம் உடைய நிராசையினால்**
**கள்ளத் தனிநெஞ் சினைவெல்வாய் கற்றோர்க்(கு) அன்பாய் நின்மலமாய்க்**
**குள்ளக் குளிர்ந்(து)ஆங் காரத்தால் கூறா காது சமபாவம்.**

**பொழிப்புரை:** *மனம் என்னும் காமம் குரோதம் முதலிய பகைவர், பல்வேறு விதமான காட்சிகளைக் கொண்டு வந்து காட்டி உன்னை வென்று விடாமல், எப்போதும் தெள்ளத் தெளிவாய் விளங்கும் சந்தோஷம் என்னும் செல்வத்தை உடைய நிராசையால், தன்னைச் சார்ந்தவர்களைத் துன்புறச் செய்வதில் நிகரற்ற மனதினை வெற்றி கொள்வாய். தத்துவம் அறிந்தவர்களுக்குச் சம்மதமான, நின்மலமான, மிகவும் குளிர்ந்ததான பரமாத்ம பதமானது அகங்காரத்தால் கூறுபோட முடியாதது ஆகும். (சம பாவம் என்பதை சம பாவனை என்று எடுத்துக் கொண்டாலும் இந்த நிலை துவந்துவம் அதாவது இருமைகளுக்கு மத்தியில் ஈர்த்தலோ விலக்குதலோ அற்ற நடுப் புள்ளியில் நிற்கின்ற நிலை. அந்த இடத்தில் அகங்காரம் செயல்படாது என்றும் உணரலாம்.)* **(3.இ.10)**

**தாழ்வும் உயர்வும் இல்லாத சமபா வனையால் பிறப்பில்லா**
**வாழ்வு நல்கும் பரமபதம் மாறாப் பதமாம் அலைவாலே**
**வீழ்வு றாத மனம்அரிதாம் வெம்மை கனலை விடாததுபோல்**
**ஆழ்வு செய்யும் அலைவுமனம் அகலா அறிவின் அலைவுமனம்.**

**பொழிப்புரை:** *உயர்வும் தாழ்வும் (முதலான இருமைகளில்) சிக்காமல் (அதன் நடுப் புள்ளியில் நிற்கும்) சம பாவனையால் பிறப்பு இல்லாத பேரானந்த வாழ்வினைத் தரக்கூடிய பரமாத்ம பதமானது மாறாத தன்மையுடைதாம். சஞ்சலத்தால் வீழ்ச்சி அடையாத மனம் கிடைப்பது அரிதிலும் அரிதாம். உஷ்ணமானது அக்கினியை விட்டு விலகாதது போல, விஷயங்களில் மூழ்கச் செய்யும் சஞ்சலத் தன்மை மனதின் தருமம் (இயல்பு) ஆவதால் மனதை விட்டுப் பிரியாது. சித்தின் (அறிவின்) சலன சக்தியே மனம் ஆகும்.* **(3.இ.11)**

**அலையும் அந்த மனம்உலகாம் அலைவு போகில் மனம்கெடும்இந்**
**நிலையே தவமும் நூல்கருத்தும் நிமல வீடும் துணிபொருளும்**
**தொலை(வு)இல் அலைவு மனம்மாயை தொடர்வா தனையும் அதன்பெயராம்**
**அலையும் மனமும் அதுவதனை மாறா விசாரத் தால்மாய்ப்பாய்.**

**பொழிப்புரை:** *அலைகின்ற அந்த மனமே உலகாகும். அலைவது போய்விட்டால் மனம் கெட்டுப்போகும். இந்த நிலையே தவமும் எல்லா நூல்களின் கருத்தும், மோட்ச வீடும், அடையத்தக்க பொருளும் ஆகும். தொலையாத சஞ்சலத்திற்கே மாயை (அவித்தை) என்றும், வெகு காலமாகத் தொடர்ந்து வரும் வாசனை என்ற பெயர்கள் உண்டு. மற்றும் அலைகின்ற மனமும் அதுவே. அந்த சஞ்சலத்தை நிரந்தரமான விசாரத்தினால் தொலைப்பாய். (வாசனையோடு அவித்தியா நிவர்த்தியானது மோட்ச வடிவம் ஆகும். மனதின் சஞ்சலத் தன்மையே அவித்தை அதுவே வாசனையும் ஆவதால் அதன் நிவர்த்தி அதாவது மனோ நிவர்த்தி மோட்ச வடிவத் தன்மை என்பது கருத்தாம்)* **(3.இ.12)**

**மெத்து கின்ற வாதனையை விட்டால் மேலாம் நலம்உளதாம்**
**சத்தின் அசத்தின் இடைநின்று சைதன்னி யத்தில் சாட்டியத்தில்**
**ஒத்து நடுநின்(று) அலைவதுவே உள்ளம் ஆகும் இவ்வுள்ளம்**
**சித்தின் முயல்வால் சித்தாகும் சடத்தின் முயல்வால் சடமாகும்.**

**பொழிப்புரை:** *அவித்தையின் மயமாய்க் கிடக்கும் துட்ட வாசனையை விட்டுத் தொலைத்தால் உயர்ந்த நிலை கிட்டும். சத்து அசத்து இவற்றுக்கு நடுவில் இருந்து கொண்டு, சேதனம் அசேதனம் இவற்றுடன் சேர்ந்து நடுநின்று ஊசல் ஆடுவதே மனம் ஆகும். இந்த மனம் சித்தினைப் (அறிவினைப்) பின்பற்றுவதால் அறிவாகும். சடத்தினைப் பின்பற்றுவதால் சடப் பொருள்களுக்கு நிகரான சடப்புத்தி ஆகும்.*

**(3.இ.13)**

**ஊக்கம் உளதாய் மனம்ஒன்றில் உறைக்கில் அதுவாம் ஆதலினால்**
**தாக்கு மனத்தை மனத்தாலே தள்ளி ஏறித் தளர்வின்றி**
**ஆக்கம் அழி(வு)இல் பதம்விரைவில் அடைவாய் மனத்தை மனத்தாலே**
**நீக்க வலதாம் தகைமைத்தாம் நிருபன் நிறுத்து நெறிபோல.**

**பொழிப்புரை:** *புருஷனின் முயற்சியால், மனமானது ஒன்றில் ஊன்றி நிற்குமாயின் அதுவாகவே ஆகும். ஆதலால் அசுத்த மனதைச் சுத்த மனதால் அகற்றி, அதிலிருந்து மேலேறி, தளர்வு அடையாமல், உண்டாவதும் அழிவதும் இல்லாத பதத்தைச் சீக்கிரத்தில் அடைவாய். மனதைத் திடப்படுத்துவதில் அந்த மனமே வல்லமை உடையதாகும்.*

*(அதாவது மனதைச் சரிசெய்ய மனமே எப்படிப் பயன்படும் எனில்) அரசனைத் தடுத்து நிறுத்த அரசன் அல்லாத மற்றவர்களால் முடியாதது போல. (அசுத்த மனதைச் சுத்தமனதால் அகற்றி அதிலிருந்து மேலேறி - என்பதற்கு கடைசியில் சுத்த மனதையும் கடந்து விட வேண்டும் என்பதாகப் பொருள் கொள்ளலாம்)* **(3.இ.14)**

**பிறவிக் கடலில் காத(ல்)எனும் பெருவாய் முதலை பிடித்(து)ஈர்க்க**
**இறவுச் சுழியால் சுழலு(ம்)அவர்க்(கு) இதய நாவாய் எட்டாவா**
**மறமுற்(று) உளத்தை உளத்தாலே மாய்த்துப் பிறப்பில் வருந்தாமல்**
**உற(வு)உற்(று) உனைநீ உய்விப்பாய் உயிர்க்குப் பிறரால் உய்வுண்டோ.**

**பொழிப்புரை:** *பிறவியாகிய சம்சாரக் கடலில் பேராசை எனும் பெரிய வாயை உடைய முதலையானது பிடித்து இழுக்க, மனைவி புத்திரர் முதலான அபிமானம் என்னும் சுழலில் மூழ்குபவர் கரைசேர எட்டாத தொலைவில் சுழல்பவர்க்குத் தன் மனமே மரக்கலமாம் (ஓடமாம்). திடமாகப் பற்றியுள்ள பாச மனதைச் சத்துவ மனதாலே மாய்த்து சம்சாரத்தில் வருந்தாமல் தன்னைக் காப்பதில் நீயே உனக்குத் துணையாக் கொண்டு கரை சேர்வாய். ஆத்மாவுக்கு மற்றவரால் உய்வு கிடையாது. (இந்த ஆத்மா அன்னியத்தால் அடையப் பெறாதது. இந்த ஆத்மா இதனால் விடுபடாவிடின் மற்று எதனாலும் விடுபட முடியாது என்பதாம். தனக்குத் தானே சுற்றமும் என்பது பொருள்.)*

**(3.இ.15)**

**எந்த எந்த வாதனைகள் இதயத்(து) எழுந்த அவையெல்லாம்**
**அந்த அந்த இடத்(து)அழிக்கில் அதுவே மாயை(க்)கு அழிவாகும்**
**முந்து போக பேதமென மொழிந்த இருவா தனைவிட்டு**
**வந்த பா(வ)அ பாவங்கள் மாற்றி விகற்பம் அறமகிழ்வாய்.**

**பொழிப்புரை:** *எந்த எந்த வாசனைகள் எப்போது எப்போது மன விருத்தி வடிவமாய் எழுகின்றனவோ அவை எல்லாம் அந்த அந்த இடத்தில் (அவை மித்தை என்பதைத்*

*திடமாக்கி) அழித்து விட்டால் அந்த முயற்சியே அவித்தையைக் கெடுக்கும் வழியாகும். முன்பு, முன் பின் ஆலோசனை இல்லாமல் திடீரென்று கிளம்பி வரும் போகத்தில் உள்ள வாசனைகள், பேதத்தில் உள்ள வாசனைகள் என்று கூறிய இரண்டு வாசனைகளையும் விடுத்து, வரும் பாவ அபாவ வாசனைகளையும் அகற்றி நிருவிகற்பமாய் சுகமாக இருந்து ஆனந்தம் அடைவாய்.*

*(நஷ்டமான விருத்திகளால் அந்தக்கரணத்தில் சம்ஸ்காரமானது உண்டாகிறது என்பது வேதாந்திகள் கருத்து. பிராஞ்ஞன் பரிகரித்த பின் (நிராகரித்த பின்பு) அவித்தை நாசத்தை அடையும். விறகு தீர்ந்தவுடன் அக்கினி எரியாமல் சாந்தமாவது போல், வாசனை நாசமாக அதன் வழி மனதுடன் அவித்தை நாசமாகும் என்பது கருத்தாம்.*

**வாசனா நாசத்தில் வழி முறை கூறல்:** *போகக் கூட்ட வாதனைகளை விடல் வேண்டும். பின்னர் பேத வாதனையையும் விடல் வேண்டும். பேத புத்தி தியாகத்தின் பின்னர், பாவ அபாவ பேதங்களை, அதன் விடய விகற்பங்களை, சித்த சேத்தியங்களை விட்டு, கற்பனை மறுமுறை கழற்றி எறிந்து நிருவிகற்பமாகி சுகம் அடைதல்.)* **(3.இ.16)**

**(எழுசீர் ஆசிரிய விருத்தம்)**

அறிபவற்(று) ஆசை அறில்அது தானே அவித்தையும் மனமு(ம்)மாண் டதுவாம்
பொறிபயில் ஆசை துன்பமாம் நிராசை புகலரும் முத்தியாம் இன்பம்
பிறிவறு தனது முயற்சியால் உண்டாம் பேதையர் உண்டெனும் அவித்தை
செறிதரு பொய்யாய் நாமமாத் திரமாய்ச் சித்தெனத் தேர்ந்திடில் இலதாம்.

**பொழிப்புரை:** *காணப்படும் அறியப்படும் பொருள்களில் ஆசை நீங்கினால் அதுவே அவித்தியா நாசமும், மனோ நாசமும் ஆகும். விஷயங்களில் உழலும் ஆசையே துன்பத்துக்குக் காரணம். அந்த ஆசை இல்லாமையே சொல்வதற்கு அரிதான மோட்ச இன்பம் ஆகும். விவேக ஞானம் இல்லாத சூனியர்களிடத்தில் பாரமார்த்திக சத்தியம் (எப்போதும் உண்மையாக இருப்பதைப்) போல விளங்குகின்ற அவித்தை, எப்பொழுதும் மித்தையாய், பெயர் மாத்திரமாக (மலடி மகன் வார்த்தை போல) அறிவு மாத்திரமே அனைத்தும் என்று தெளிந்த ஆராய்ச்சியில் இடைவிடாத பிரக்ஞை உள்ளவரிடத்தில் எவ்வாறு இருக்கும்? (விசாரம் இல்லாதவர்களிடத்தில் உண்மையாக இருப்பதைப் போல் தோற்றும் அவித்தை தெளிந்த ஞானிகளிடத்தில் பெயர் மாத்திரமாக இருக்கும். அதாவது அவித்தை என்ற பெயர் இருக்கும். அவர்களிடத்தில் அவித்தையின் காரியங்கள் இருக்காது)* **(3.இ.17)**

என்றலும் இராமன் அவித்தையின் செல்வத்(து)
எழுந்(து)அற நெருங்கு(ம்)இவ் விருள்தான்
ஒன்று(ம்)இங்கு இன்றி எவ்வகை நீங்கும்
உரைத்(து)அருள் இன்னம்நீ என்ன
வந்தவன் உரைப்பான் வன்துயர் முட்சேர்
வன்பவக் குழியில்மன் னுயிரை
ஒன்றவீழ்த்(து) அதனோ(டு) ஒக்கவீழ் மாயை
உண்(டு)எனின் உண்மைநோக் கில்லை.

**பொழிப்புரை:** *இவ்வாறு கூறவும், இராம பிரான் "அவித்தையாகிய செல்வத்தில் எழுந்து கிளம்பி விவேகிகளையும் மறைக்கும் இந்த இருள் ஒரு சிறிதும் இல்லாமல் எந்த வகையில் அழியும் என்று தேவரீர் இன்னமும் உரைத்திட வேண்டும்" என்று கேட்க, பெரும் தவத்தை உடைய வசிட்டர் கூறுவதாவது: கொடிய துயரமாகிய முட்கள் நிரம்பிய ஏறமுடியாத சம்சாரப் படு குழியில் தேக அபிமானம் கொண்ட சீவனைத் துயரத்தையே அனுபவிக்கும் படியாகத் தள்ளி, அந்தச் சீவனோடு சேர்ந்து வீழும். அவித்தை (மாயை) இருக்கின்றது என்று உழலும் வரை யதார்த்த சொரூபமான ஆன்ம தரிசனம் கிட்டாது. (ஆன்மாவைக் காணும் இச்சை எதுவரையில் உண்டாகாமல் இருக்கின்றதோ அது வரையில் அவித்தை சீவனைப் பிணித்துத் துன்பம் தந்து கொண்டே இருக்கும்.)* **(3.இ.18)**

**பிறப்பெனும் மாயை கரையதாய் எங்கும் பிறிவறு பெரும்பொருள் தோன்றி**
**இறப்புறு மாயைக்(கு) இச்சையே வடிவாம் இதனுடை நாசமே வீடு**
**சிறப்(பு)இல்சங் கற்பம் சிதைந்திடில் இதுதான் தேய்ந்திடும் சித்தெனும் கதிரோன்**
**புறப்படில் இதய விசும்பில்வா தனையால் பொங்(கு)இருள் போம்எனப் புகல.**

**பொழிப்புரை:** *பிறப்பு இறப்பு என்ற சம்சாரத்தின் கரையாய், எவ்விடத்தும் நிறைந்து பேதம் அற்று விளங்கும் பிரம்மம் அனுபவப் பூர்வமாக அறியப்பட்டால், நாசமாகக் கூடிய மாயைக்கு இச்சையே வடிவம் ஆகும். இந்த இச்சையின் நாசமே மோட்சமாம். சிறந்ததைத் தராத சங்கற்பம் எல்லாம் தொலைந்து போனால் இந்த இச்சை தான் தேய்ந்து போகும். ஞானம் ஆகிய சூரியன் மனமாகிய ஆகாயத்தில் உதயமானால் வாசனை என்னும் இருள் போய் விடும் என்று கூற.* **(3.இ.19)**

**கண்டன அனைத்தும் மாயையே என்றாய் கண்ணெனும் தத்துவத் தாலே**
**தண்டற அதுதான் கரைந்துபோம் என்றாய் தத்துவம் ஆவ(து)ஏ(து) என்ன**
**எண்தவன்உரைப்பான் காண்பவற்(று) இடைசென்(று) எய்திடா(து) எங்கணும் சமமாய்**
**உண்டெனல் ஆகி நாமம்(ம்)அற்(று) உயர்ந்த உணர்வுதற் பரமமாம் உணர்வே.**

**பொழிப்புரை:** *திருசியங்கள் (காணப்படும்) எல்லாம் அவித்தையே என்று அருளிச் செய்தீர். திருக்கு (அறிவு-சித்து) வடிவம் என்ற ஆன்ம பாவனையினால் எஞ்சுவது இன்றிக் காண்பவை அனைத்தும் இல்லாமல் போகும் என்றும் அருளிச் செய்தீர். இந்த ஆன்ம தத்துவம் எத்தகையது என்று இராம பிரான் கேட்கவும், மதிக்கத் தக்க தவமுடைய வசிட்ட முனிவர் கூறுகிறார். மனமானது இந்திரியத்தின் வழியாகக் காணப்படும் பொருள்களைச் சென்று அடையாமல் (அதாவது திருசிய சம்பந்தம் இன்றியதாய்) அறிவு மாத்திரத்தால் எவ்விடத்தும் பரிபூரணமாய், சத்து வடிவமாய், இன்ன பெயர் முதலான எவ்விதத்தாலும் கூற முடியாததாய் அறிவுக்கும் அறிவான பிரத்யக் சைதன்யமே ஆன்மாவாம். (சம திருட்டியான ஞானமே காண்பவற்றை-திரிசயத்தை அழிக்கும் என்பதாம்)* **(3.இ.20)**

**இவையெனும் அனைத்தும் சிற்கனம் ஆகி இறப்பிலாப் பிரமமே என்றும்**
**நவையுறு மனமாம் கற்பனை இல்லை நாசமும் பிறவியும் என்னும்**
**அவையெலாம் புவனம் மூன்றினும் இல்லை அறுவகை விகாரமும் இல்லை**
**கவையறு சமமாம் குறிபெறும் அறிவு மாத்திரம் காணநின்(று) உளதால்.**

**பொழிப்புரை:** *தோற்றம் தருகின்ற காணப்படும்-அறியப்படும் அனைத்தும் அறிவின் மயமாகி, முடிவற்ற பிரம்மமே நித்தியமாய் இருப்பது ஆகும். சங்கற்பத்தால் குற்றத்தையே கொள்ளும் மனம் என்னும் கற்பனை ஒருகாலத்திலும் இல்லை. தோற்றங்களான பிறப்பு இறப்பு என்னும் அவை எல்லாம் மூன்று உலகங்களிலும் ஒரு சிறிதும் உண்டாவதும் இல்லை, ஒழிவதும் இல்லை. ஆறு வகை விகாரங்களும் இல்லை. துவைதம் அற்ற எல்லாவற்றிலும் இருக்கின்ற சத்து வடிவ இலக்கணம் உடைய சின் மாத்திரமே (அறிவு-சித்து) பிரத்தியட்சமாய் இருக்கின்றது.* **(3.இ.21)**

**கேவலம் ஆகிக் கேவல ஒளியாய்க் கேடறு சுத்தமாய் விரிவாய்**
**ஓவலில் அறிவு மாத்திரம் ஆகி உறுதுயர் ஒன்று(ம்)அற்(று) ஆறி**
**மேவரும் இரத அனைத்தினுக்(கு) ஒத்து விகார(ம்)அற் றுளபொரு ளிடத்தே**
**தாவரும் தனது நினைவையே விரும்பித் தன்வயத்(து) எழுந்ததோர் அறிவு.**

**பொழிப்புரை:** *ஒன்றே ஆகி, அஷ்டப் பிரகாசங்களின் உதவியின்றித் தானே சுயம்பிரகாசமாய், அழியாத நித்தியமாய், வியாபகமாய், ஓயாத ஒளிச் சின்மாத்திரம் (அறிவு) ஆகி, சம்சாரத் துன்பம் ஒன்றும் இல்லாததாய், சாந்தமாய், வேறுபாடு அற்ற பரிபூரணமாய் ஏகமாய் நிர் விகாரமாய் உள்ள ஆத்மாவில் (பிரம்மத்தில்) தனது சத்து சித்து முதலான இயற்கைக்கு மாறான திருசியத்தை (காணப்படும் ஒன்றை) இச்சித்து சுயமாகவே ஓர் உணர்வு எழுந்தது (சங்கற்பம் ஆனது).* **(3.இ.22)**

**செப்பிய அறிவு முடி(வு)இல்சங் கற்பம் செய்வதில் சென்றிடும் இதுதான்**
**இப்பிர மத்தின் மனமதாம் இதனுக்(கு) எண்ணில்சத் திகள்உள வாகும்**
**கப்பிலா(து) எங்கும் நிரந்தரம் செய்யும் கடுமையாம் இம்மனம் தனிலே**
**அப்பிலே தோன்றும் திரைகள்போல் பேதம் ஆகிய வல்லபம் தோன்றும்.**

**பொழிப்புரை:** *முன் கூறிய சைதன்யம் (பிரம்மம்) அளவில்லாத எண்ணங்கள் ஆற்றி, அந்த எண்ணங்களின் வழியே ஓடித் திரியும். இதற்குத் தான் மனோ விசிட்ட சைதன்யம் என்று பெயர். (அதாவது பிரம்மத்தின் மனம் எனப்படும்). இதற்கு எண்ணிலாத சத்திகள் உள்ளன. பேதம் இல்லாது எங்கும் நிறைந்து திருசியத்தை-காண்பவற்றைச் செய்யும் இந்த மனத்தில் நீரிலே தோன்றும் அலைகள், குமிழிகள், நுரைகள் போல பேத கற்பனை சத்தியானது எழும்பும்.* **(3.இ.23)**

**உள்ளூறு சங்கற் பத்தினால் தோன்றும் உள்ள(ம்)மற்(று) அதனினால் ஒடுங்கும்**
**தள்ளூறு காற்றால் எழுந்ததீக் கொழுந்து சமிப்பதும் காற்றினால் போல**
**நள்ளூறு பிரமம் அன்றுநான் என்று நாடுதல் மனத்துறு பந்தம்**
**எள்ளூறும் இடமும் பிரிவிலாப் பொருளே யாம்எனும் அழுத்தமே வீடாம்.**

**பொழிப்புரை:** *உள்ளே காணப்படுகின்ற திருசிய எண்ணத்தாலே மனம் தோற்றம் ஆகும். அனைத்தும் பிரம்மம் என்னும் சங்கற்பத்தினால் (எண்ணத்தினால்) மனம் நாசமாகும். மோதுகின்ற காற்றினால் ஓங்கி எரியும் அக்கினிக் கொழுந்து (சுவாலை) ஒடுங்குவதும் அந்தக் காற்றினாலே. அதைப் போல, நான் வியாபகமாகிய பிரம்மம் அல்லன் என்று நாடுதல் மனத்தில் எழும் பந்தம். அணுவினிடத்திலும் நீக்கமற நிறைகின்ற பரப்பிரம்மமே நான் என்னும் திட ஞானமே மோட்சமாம்.* **(3.இ.24)**

**மடமையும் துயரும் அவயவம் நிறைந்த வடிவமும் உடையன்நான் என்றே**
**படர்தரும் அவற்றிற்(கு) ஏற்றபல் நடையால் பாசமும் பந்தமும் உளதாம்**
**சடமுறும் இவற்றில் ஏது(ம்)ஒன்(று) அல்லேன் தசைநரம்(பு) என்புநீர் அல்லேன்**
**உடலின்மேலான பரமம்நான் என்னும் உறுதியோர் மாயைசெற்(று) உணர்ந்தோர்.**

**பொழிப்புரை:** *நான் அஞ்ஞானி, நான் கவலை உள்ளவன், கை கால் முதலான உறுப்புகள் நன்றாக அமைந்த அழகிய வடிவம் உடையவன் நான் என்று பரவும் பல விவகாரங்களால் பாசமும் பந்தமும் உண்டாகும். சடமாகிய தசை, நரம்பு, எலும்பு, உதிரம், சிறுநீர் இவை முதலானவற்றில் எதுவும் நான் அல்லன். உடலைக் காட்டிலும் மேலான பிரம்மம் நான் என்ற உறுதி உடையவர் மாயை வென்று அறிந்தவர்கள் ஆவர்.* **(3.இ.25)**

**தா(ன்)அலா தான உடல்முதல் பொருளில் தான்எனும் பாவனை யாய**
**ஊனமா மாயை உணர்விலோர் விதிக்க உள்ளதாம் உணர்வுளோர்க்(கு) இலதாம்**
**மானதம்நினைத்த(து) ஐம்பொறிஇயற்றும் மன்னவர்க்(கு) அமைச்சர்போல் விரைவில்**
**ஆனநல் மதியால் முயற்சியால் போகத்(து) ஆசைவா தனையைவேர் அறுப்பாய்.**

**பொழிப்புரை:** *தான் (ஆத்மா) அல்லாத உடல் முதலாக பொருள்களில் நான் என்னும் கீழ்த்தரமான பாவனையாகிய மாயை விவேகம் இல்லாதவர்களிடம் எண்ண இருப்பதாகும். விவேகம் உடையவர்களுக்கு இல்லாதது ஆகும். மன்னவன் இட்ட ஏவலை அமைச்சர்கள் போல் மனம் நினைத்ததை ஐம்பொறிகளும் விரைவில் செய்து முடிக்கும். மேலான புத்தியாலும், முயற்சியாலும் போகத்து ஆசையின் பாவனைகளைச் சிறிதும் மூலம் (வேர் அல்லது விதை) இல்லாதபடி நாசம் செய்து ஒழிப்பாய்.*
**(3.இ.26)**

**என்னுடை மைந்தர் என்னுடை நிதிநான் இவன்அவன் இதுவது என்னும்**
**மின்னுடை நிலைமை இந்த்ரசா லத்தால் வீங்கிய வாதனை ஓங்கும்**
**நன்னுடை நிலைஅஞ் ஞானமாம் நிலைபோய் நாசமா யையில்கருத்(து) ஒழிவாய்**
**நின்னுடை வடி(வு)இல் அவற்றைநீ என்றே நினைவிலார் போல்வருந் துவ(து)என்.**

**பொழிப்புரை:** *என்னுடைய புத்திரர், என்னுடைய செல்வம், நான், இவன், அவன், இது, அது என்னும் மின்னலைப் போல் இந்திர சாலத்தால் நாளுக்கு நாள் வாசனை பருத்து அதிகமாகும். அஞ்ஞானி போன்ற நிலை போக, ஞானியாய், நாசமாகக் கூடிய மாயை ஆகிய சம்சார பாவனையை விட்டொழிவாய். விவேக புத்தியில்லாதவர் போல் உனது ஆத்மாவாக இல்லாத அவற்றை நினைந்து வருந்துவது என்ன?* **(3.இ.27)**

**மூகமாய்ச் சடமாய்ச் சு(க)அசுகங் களிலே மூழ்கியோர் பயன்அற வருந்தும்**
**தேக(ம்)ஆர் நீயார் அகோஅகோ ஈ(து)ஓர் சித்திரம் இருந்தவா காணாய்**
**ஏகமாய் மெய்யாய் இலங்கிய பிரமம் எங்குமாய் இருக்கவும் தோன்றாச்**
**சோகமாய்ப் பொய்யாய் விளங்குறா மாயை தோன்றுறா(து) இருக்கவும் தோன்றும்.**

**பொழிப்புரை:** *அறிவற்றதாய், ஒன்றும் தெரியாததாய், இன்ப துன்பங்களிலே மூழ்கி எந்தவொரு பிரயோசனமும் இல்லாமல் துன்புறும் தேகம் யார்? நீ யார்? ஆச்சரியம்!*

*ஆச்சரியம்! இங்கே ஒரு அற்புத சித்திரம் இருப்பதைக் காண்பாய். ஏகமாய் சத்தியமாய் விளங்கும் பிரம்மம் எல்லாவிடத்தும் இருந்து கொண்டிருந்தும் சற்றும் விளங்கவில்லை. துன்பத்தைத் தரக்கூடியதாய், மித்தையாய் இருக்கும் மாயை தோற்றத்திற்கு வாராதிருந்தும், அதன் காரியமான சம்சாரம் தோன்றிக் கொண்டிருக்கிறது. (சத்தியமாய் எங்கும் விளங்குகின்ற பிரம்மம் தெரியாமல் இருக்கிறது. மாயை அசத்தியமாய் வெளிப்படத் தோன்றாதிருந்தும் அதன் காரியங்களைத் தோற்றத்திற்குக் கொண்டு வந்து மயக்கி விடுகிறது.)* **(3.இ.28)**

**படிகநன் மணிகள் பற்றியபாய் நிறங்கள் பற்றறப் பற்றுறும் படிபோல்**
**முடிவறு தொழிலில் பின்விருப்(பு) இன்றி முடித்திஎன்(று) அருந்தவ வசிட்டன்**
**நெடி(து)உரைத் தலுமே பரத்துவ கேளாய் நிறைகுணத்(து) இராகவன் கேட்டு**
**மடியறு இதய பங்கயம் மலர்ந்து வசிட்டனை நோக்கிஈ(து) உரைத்தான்.**

**பொழிப்புரை:** *சிறந்த படிக வெண்மணிகள் பிரதிபிம்பித்த நிறங்களில் சம்பந்தம் இல்லாதிருந்தும் சம்பந்தம் இருப்பதாகக் காட்டுவதைப் போல, அளவில்லாத இன்றி யமையாத தொழில்களில் பின்னால் வரும் பயனை விரும்பாது நிராசையினால் செய்வாயாக என்று அரிய தவத்தை உடைய வசிட்டன் விரிவாக எடுத்துரைக்கவும், பரத்துவாச! கேட்பாய். நிறைந்த கல்யாண குணங்களை உடைய இராம பிரான் அதைக் கேட்டு, சோம்பல் இல்லாத (விஷயங்கள் பற்றும், அறுபகையும் இல்லாத) இதயத் தாமரை மலர, வசிட்ட முனிவரை நோக்கிக் கூறத் தொடங்கினார்.* **(3.இ.29)**

**அற்புதம் ஈ(து)ஒன்(று) இருந்தவா(று) என்னே அம்புய ஞாள நூலாலே**
**வெற்பினம் பிணிப்புண்(டு) அறநெரிவதுபோல் வெறும்பொய்யாம் மாயையால் உலகம்**
**பற்பல துயரம் பயில்வதாம் திரணம் பருவயி ரத்தின்வன்(பு) உறல்போல்**
**உற்பவம் இலங்கும் அதனினால் ஏற்கும் உறுதியை என்றுமீட்(டு) உரைப்பான்.**

**பொழிப்புரை:** *இவ்வாறாக இங்கே ஒரு அற்புதம் இருந்தது என்னே ஆச்சரியம். தாமரைத் தண்டாகிய நூலால் மலைகள் அனைத்தும் கட்டுப்பட்டு முழுவதுமாக நொறுங்குவது போல, எப்பொழுதும் இல்லாததான மாயையினால் இந்த உலகச் சீவர்கள் பலப்பல துயரங்களை அனுபவிக்கின்றனர். துரும்பானது வைரத்தைப் போல் கடினமான தன்மையை அடைதல் போலவும், பிறப்பு இறப்பு சம்சாரம் காணப்பட்டு இருப்பது போலச் சத்தியமாகத் தோற்றம் தருகிறது. இது என்னே ஆச்சரியம் என்று கூறி மீளவும் இராம பிரான் தொடர்ந்து சொல்கின்றார்.* **(3.இ.30)**

**ஈதுமோர் ஐயம் என்மனத்(து) உளதாம் இயம்பிய லவணனாம் மன்னன்**
**மாதுயர் அடைந்த(து) என்னெனக் கேட்ப வசிட்டமா முனிஅதற்(கு) உரைப்பான்**
**தீ(து)அகல் மனத்தால் இயற்றலால் அந்தச் செயல்பயன் உடல்புசித் திலதால்**
**ஓதுறும் அந்த மன்ன(ன்)ஓர் நாளில் உபவனத்(து) ஒருவனாய் இருந்து.**

**பொழிப்புரை:** *இந்த ஒரு சந்தேகம் என் மனத்தில் இருக்கிறது. முன் கூறிய லவண மன்னவன் பெரும் துயரத்தை அடைந்தது எதனால் என்று இராம பிரான் கேட்க, வசிட்ட முனிவர் அதற்கு பதில் உரைக்கின்றார். குற்றமற்ற மனத்தினால் செய்ததாலே*

*அந்தச் செயலின் பயனை அவனது தேகம் அனுபவிக்கவில்லை. கூறிய அந்த லவண மன்னன் ஒரு நாள் பூங்காவில் ஒரு ஆசனத்தில் தனியாக அமர்ந்திருந்து. (மனோ மயத் தன்மையாலே சண்டாளத் தன்மையை அடைந்தான் லவண அரசன் என்பது முன்பு படித்தது. மனம் செய்த சுப கர்ம பலனாக இருந்தாலும், அசுப கர்ம பலனாக இருந்தாலும் மனமே புசிக்கும் அன்றிச் சரீரம் புசிக்காது. அதாவது ஆபாச சகித மனமே கருத்தா அதுவே செயலின் பலனைப் புசிக்கும். தேகம் புசிக்கமாட்டாது. இனி வரும் கதையில் இவை தெளிவாக உணர்த்தப்படுகிறது)* **(3.இ.31)**

**இருதயத்(து) உணர்வான் பிதாமகன் குருவாம் இராசசூ யம்செய்வோம் என்னா**
**கருதிய மனத்தால் மகத்தினுக்(கு) உரிய கலப்பைகள் அனைத்து(ம்)உண் டாக்கிச்**
**சுருதிநூல் வழியே சாலையில் புகுந்து துறவரை வரித்(து)அருச் சித்து**
**வருதிர்என்(று)இமையோர் களைமறைமொழியால் வரவழைத்(து)ஆர்அழல் கிளப்பி.**

**பொழிப்புரை:** *இருதயத்தில் இவ்வாறு சிந்திக்கத் தொடங்கினான். எனது பாட்டனார் மிகப் பெரிய மகானாய் இருந்தார். அவர் செய்த இராச சூய வேள்வியை மனத்தால் செய்யலாம் என்று எண்ணினான். அவ்வாறு எண்ணிய எண்ணத்தால் வேள்விக்கு உரிய கலப்பைகள், சமித்துகள் முதலான அனைத்தையும் கொண்டு வந்து சேர்ந்து, சாத்திரத்தில் விதித்துள்ள படி யாகசாலையில் புகுந்து, யாகம் நடத்தித் தரும் ரித்விக்குகளை வரவழைத்து அவர்களை வணங்கிப் பூசை செய்து, தேவர்களை வந்தருள்வீர்களாக என்று வேத மந்திரங்களால் ஆவாகனம் செய்து, வேள்வித் தீ எரியும்படி செய்து,* **(3.இ.32)**

**கடவுளர் முனிவர் மறையவர் பூசை கடைப்பிடித் தார்ஒரு வருடம்**
**தொடர்புற நடத்தி தன்பொருள் முழுதும் தொலைவுறத் தானமா வழங்கித்**
**திடமுறு மனத்தால் முடித்தபின் பகலும் சென்றது விழித்தனன் இதனால்**
**இடவிய மனமே துன்பஇன் பங்கள் எய்துறப் புசிப்ப(து)என்(று) உணர்வாய்,**

**பொழிப்புரை:** *தெய்வம், முனிவர், அந்தணர் ஆகியோருக்கு உரிய பூசையை முறைப்படி கடைப்பிடித்து தொடர்ந்து இடைவிடாமல் ஒருவருட காலம் வேள்வியை நடத்தி, தன்னுடைய செல்வத்தை எல்லாம் தானமாகக் கொடுத்து திடமான மனத்தால் வேள்வியை முடித்ததும் அந்த தினத்தின் பகல்வேளை முடிந்தது. அவன் வெளிநாட்டம் உடையவனாய் விழித்தான். இந்தக் காரணத்தினால் விரிந்த மனமே துக்க சுகங்கள் அடைவுற அனுபவிப்பது என்று அறிவாய். (யாகத்தைச் செய்வதாக மனதில் எண்ணிய படியால் சுக துக்கங்களின் போக்தா சித்தமயம் என்பதை உணர்வாய்.)* **(3.இ.33)**

**சித்தன(து) இயல்பு செப்பிடக் கேண்மோ திருந்திய லவணன்முன் எய்தி**
**வித்தையால் மயக்கம் செய்துள சித்தன் மீண்டுபோய் ஒளித்தன் ஆங்கே**
**இத்தனை செயலும் கண்(டு)உடன் இருந்த எம்மையீ(து) என்னென வினவ**
**அத்திறல்வேந்தும் யாவரும் கேட்ப அகத்(து)உணர்ந்(து)உரைத்தனன் அனைத்தும்.**

**பொழிப்புரை:** *இந்திர ஜாலக்காரன் நடத்தையைக் கூறக் கேட்பாய். நீதி தவறாது ஆட்சி புரியும் லவண மன்னவன் முன்பாக வந்து நின்று இந்திர ஜாலத்தைக் காட்டி மயக்கத்தை அடையுமாறு செய்து அதனால் லவண மன்னன் துயர் அடையும் படி*

*செய்த சித்தன் மறுபடியும் போய் மறைந்து விட்டான். அந்த சபையினருடன் (யானும்) இருந்து விவகாரங்கள் அனைத்தையும் கண்டு கொண்டிருந்த எம்மை (வசிட்டரைப்) பார்த்து இது என்ன கதை என்று கேட்க, பராக்கிரமம் பொருந்திய மன்னவனும், சபையில் இருந்த மற்றவர்களும் அறிந்து கொள்ளுமாறு, என் மனத்தில் யோக பலத்தால் அனைத்தையும் உணர்ந்து எல்லாவற்றையும் எடுத்து உரைத்தேன்.* **(3.இ.34)**

**ஈங்(கு)இது புகல இராகவ கேட்டி இராசசூ யத்திலே லவணன்**
**பாங்குறு மனத்தால் தொகுத்தவா யாரும் பன்னிரு வருடம்வன் துயரில்**
**தீங்குறு வருத்தம் உறுதலால் மகவான் சேணி(ன்)நின்(று) ஒருவனை ஏவ**
**ஆங்கவன் சித்தன் ஆகியே லவணற்(கு) அருந்துயர் அளித்துமீண்(டு) அகன்றான்.**

**பொழிப்புரை:** *இராகவா! சித்தனது செயலைக் கூறக் கேட்பாயாக. இராசசூய யாகத்திற்குக் கர்த்தாவாக இருந்து லவண மன்னவன் ஏகாக்கிர மனத்தால் தடையின்றிச் செய்து முடித்தவாறு எவர்களும் அந்த இராசசூய யாகத்தை வெளியில் செய்து முடித்தவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் கடுமையான துயரத்தில் பலவிதமான துயரங்களை அடைவதால் இந்திரன் சுவர்க்கத்திலிருந்து ஒரு தேவதூதனை அனுப்ப, அந்தத் தேவதூதனே சித்தன் உருவமாகி லவண மன்னவனுக்குப் பெருந்துயரத்தைக் கொடுத்து மறுபடியும் மறைந்து இருப்பிடம் சென்று விட்டான். (இராசசூய வேள்வி செய்தவர்கள் பன்னிரு வருடங்கள் பெருந்துயரத்தை அடைவர் என்பதற்கு அரிச்சந்திரன், தரும புத்திரர் கதைகளிலிருந்து அறியலாம்)* **(3.இ.35)**

*அந்த லவண மன்னனின் மகா ஆபத்து வடிவமான அந்த மனவிரிவையே பூமிகைகளாகத் தொகுத்து இனி தெரிவிக்கின்றார்...*

**மற்று(ம்)ஒன்(று) உரைக்க வள்ளலே கேட்பாய் மடமையாம் பூமிஏழ் பதமாம்**
**முற்றுள ஞான பூமிஏழ் பதமாம் மொழிந்தஇப் பதங்கள்தம் மில்தாம்**
**பற்றுள வாகும் ஒன்றொ(டு)ஒன்(று) அளாவிப் பயில்வன பதங்கள்மட் டிலவாம்**
**அற்றமில் சொரூப நிலைபெறல் வீடாம் அதில்நழு வுறுதல்நான் எனலே.**

**பொழிப்புரை:** *முற்கூறிய அனைத்தையும் உணர்த்தி பூமிகளின் கிரமங்களைக் கூற வள்ளலாகிய இராகவனே! கேட்பாய். அஞ்ஞான பூமிகள் ஏழ் பதங்களாம். ஆனந்தம் முழுவதும் அடைவதற்கு உரிய ஞான பூமிகள் ஏழ் பதங்களாம். கூறிய இப்பதங்கள் ஒன்றுக்கொன்று பற்றுடையன ஆகும். ஒன்றோடு ஒன்று கலந்து விவகாரம் செய்யும் சந்தேகம் அற்றவை. களங்கம் இல்லாத தனது சொரூப நிலையே முத்தியாம். அதிலிருந்து நழுவுதல் நான் என்ற அகந்தை வடிவமாம்.* **(3.இ.36)**

**அடக்கமாய் உரைத்தேம் அஃ(து)அறிந் தவர்க்கும் அறிகிலா தவர்க்கும்நற் குறிகள்**
**தொடக்கமில் சன்மாத் திரமதாம் அறிவின் சொரூபநின்(று) அசைவிலா தவரே**
**விடற்(கு)அரும் காமம் முதல்பகை கடந்தோர் மெய்யறி விலார்கடப் பரியோர்**
**நுடக்குறு காட்சி விதத்தில்வீழ் அறிவே நோக்கரும் சொரூபத்தின் நழுவல்.**

**பொழிப்புரை:** *தனது ஆத்ம சொரூபத்தை உணர்ந்தவர்க்கும் உணராதவர்க்கும் சிறந்த இலக்கணத்தைச் சுருக்கமாகக் கூறினோம். ஆதியற்ற கூட்டற்ற சத் மாத்திரமான சொரூபத்திலிருந்து மனம் அசையாதவரே விட்டு விடுவதற்குக் கடினமான காமம் முதலான பகையை வென்றவர் ஆவர். உண்மை ஞானம் இல்லாதவர் கடக்க முடியாதவர் ஆவர். அற்பமான விசித்திரக் காட்சிகளில் மூழ்குதலே கருதுவதற்கு அரிதான சொரூபத்திலிருந்து நழுவுதல் ஆகும். (அது மகா மோகம்)* **(3.இ.37)**

**சொரூபம்விட்டு அகலல் மோகமாம் வேறு சொல்லிட முன்புபின்(பு) இல்லை**
**ஒருபொருள் நினைவை ஒழித்துமேல் அப்பால் ஒருபொருள் நினைவுறில் அந்த**
**இருபொருள் நடுவுள் நினைவற இருக்கும் இதுசொரூ பத்(து)இயல்(பு) இதுதான்**
**மருவுகற் பனைமாண்(டு) அசைவில்கல் போலாய் வருநனாச் சுழுத்திதீர் வடிவாம்.**

**பொழிப்புரை:** *தனது சொரூபத்தை விட்டிருத்தல் பெரும் மயக்கமாகும். இதனைக் காட்டிலும் வேறான ஒரு ஆபத்து முன்பும் இல்லை, பின்பும் இல்லை. (சென்ற காலத்திலோ வரும் காலத்திலோ இல்லை) சித்தமானது ஒரு விஷயத்திலிருந்து மற்றொரு விஷயத்திற்குத் தாவும் பொழுது, அந்த இரு விஷயங்களின் இடையில் (சந்தியில்) நிருவிகற்பமாய் இருக்கும் இதுவே சொரூப நிலையாம். இந்த சொரூப நிலையானது சங்கற்பங்கள் அனைத்தும் ஒழிந்து நன்கு சாந்தமாகி சலனமில்லாத கற்சிலை போல, நனவு-ஆழ்துயில் (சுழுத்தி) அவத்தைகளைக் கடந்த நிலையாகும்.* **(3.இ.38)**

**நான்எனும் பிரிவும் பேதமும் அற்று நல்லறி வாய்அசை யாத**
**மானத நிலையே சொரூபமாம் முன்சொல் மடமையாம் புவிபதம் கேட்பாய்**
**ஈனமாம் விந்து நனவும்மேல் நனவும் இயன்றமா நனவும்அந் நனவில்**
**ஆனதோர் கனவும் கனவும்இக் கனவில் அடர்நனா வும்சுழுத் தியுமே.**

**பொழிப்புரை:** *நான் என்று பிரித்துக் காண்கின்ற பேதம் அற்றுப் போய், சித்து வடிவமாய், சலனம் இல்லாத மனோ நிலையே சொரூப நிலையாம். முன்பு கூறிய அஞ்ஞான பூமியின் ஏழ் பதங்களைக் கேட்பாய். தாழ்வாம் பீஜ சாக்கிரம், சாக்கிரம், பொருந்திய மகா சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சொப்பனம், சொப்பன சாக்கிரம், சுழுத்தி என்பனவாம்.* **(3.இ.39)**

**இத்திறம் ஏழும் மோகமாய் நெருக்குற்(று) இவைபல பெயர்களை எய்தும்**
**சித்திலே நின்(று)ஓர் அறிவுபேர் இன்றிச் செறிமலம் இன்றிமேல் வந்து**
**வத்தியா நிற்கும் சித்தசீ வாதி வருபெயர் செயல்களுக்(கு) இடமாய்**
**வித்துரூ பமதாய் நின்றிடும் அதனால் விதைநன வாம்முதல் பதமே.**

**பொழிப்புரை:** இவ்வகையாக ஏழு பூமிகளும் (எழு வகை மோகங்களும்) *தொடர்புடையதாய் நெருங்கியிருந்து பல பெயர்களைப் பெறும். சேதன (ஆத்ம) வஸ்துவிலிருந்து சங்கற்ப வடிவமாய் மாயா சபல அறிவு பெயர் அற்றதாய் மலம் அற்றதாய் வெளி வந்து இனிமேல் சித்தம் சீவன் போன்ற பெயர்களுடன் சப்தம் பரிசம் முதலான விஷயங்கள் செயல்படுவதற்கு இடமாய் வித்து (விதை-பீஜம்) வடிவமாய் நிலைபெற்றிடும் அதனால் அந்த முதல் பூமி பீஜ சாக்கிரம் எனப்படும்.* **(3.இ.40)**

**இதுஅறி வுக்கு முதல்அவத் தையதாம் இதத்துறப் பிறந்தபின் இவன்நான்**
**இதுவெனது) எனப்பண்டு) இலாமையால் நொய்தாய் எழுந்துள உறுதியே நனவாம்**
**இதுதனை ஒழிய இவன்அவன் நானே இதுவது என்னது)என்(று) எண்ணும்**
**இதுமுதல் பிறப்பில் தொடர்ச்சியாய்ப் பருக்கும் இந்தநிச் சயம்பெரு நனாவாம்.**

**பொழிப்புரை:** *இது அறிவுக்கு முதல் அவத்தை எனப்படும். பரத்திலிருந்தும் புதியதாய் உண்டான பின்னர், இவன் நான் இது எனது என்பதாக முன்னில்லாமல் சூக்குமமாய் உதித்துள்ள நிச்சயமே நனவு (சாக்கிரம்) எனப்படும். இதனைத் தவிர்த்து, இவன், அவன், நானே இது, அது என்னுடையது என்பதாக எண்ணும் பிறவிகளின் தொடர்ச்சியால் வருகின்ற இந்த நிச்சயம் பெரு நனவாகும் (மகா சாக்கிரம்).*

**(3.இ.41)**

**அறிந்துள(து) எனினும் அறிகிலா(து) எனினும் அழுந்துறத் தான்அது வாகிச்**
**செறிந்துள நனவில் சித்தராச் சியமே செய்வது நனாக்கன(வு) ஆகும்**
**எறிந்தகா னலில்நீர் சுத்திகை வெள்ளி இருமதி இவைமுதல் பலவாய்ப்**
**பிறிந்தபே தங்கள் நனவிலே பழகும் பெற்றியால் கனவுபல விதமாம்.**

**பொழிப்புரை:** *வாசனா வசத்தால் அறிந்துள்ளதைக் குறித்தாவது வாசனை திடம் இல்லாமையால் அறியாததைக் குறித்தாவது மிகவும் அழுத்தமாகித் தான் அதன் மயமாகி பாவிக்கும் விஷயங்களோடு ஒன்றிப்போவது சாக்கிரத்தில் மனோராச்சியம் செய்வது நனாக் கனவு (சாக்கிர சொப்பனம்) எனப்படும். தோற்றம் மாத்திரமான கானல்நீர், கிளிஞ்சல் வெள்ளி, இரட்டைச்சந்திரன் இவை முதலாகப் பலவாகப் பிரிந்து தோற்றும் வேற்றுமையால் நனவில் பழகும் விதத்தைப் பொருத்து கனவு பல விதங்கள் ஆகும்.*

**(3.இ.42)**

**அற்பகா லத்தில் அனேகமாம் செயல்கண்(டு) அறிந்தனம் எனும்கன(வு) அழிந்து**
**முற்படு செயலை நினைவது கனவாம் முந்துகண் டதனைநாள் அகன்று**
**பிற்படக் காணும் பொருள்களை மறந்து பெரும்பொழு(து) உணர்வுற நோக்கும்**
**சொற்பன நனவு போல்நன வுக்கே தோன்று(ம்)இச் செயல்கனா நனவே.**

**பொழிப்புரை:** *சிறிது காலத்தில் பலப்பலவாகிய செயல்களைப் பார்த்து அறிந்தோம் என்னும் கனவு கண்டு விழித்தவனுக்குக் கனவு தீர்ந்து முன் கண்ட செயலை எண்ணுவது, கண்ட புருடனுக்கும் கால வேறுபாட்டின் அனுசந்தானம் உதியாமல் கேவலம் பரமார்த்தம் (உண்மை) என்று எண்ணுவது கனவாகும். முன் கனவில் கண்ட தூல பதார்த்தங்களை மறந்து சில தினம் கழித்து நீண்ட காலம் நல்ல தரிசனம் இல்லாமையால் பின்காணும் பொருள்களை வெகுகாலம் தொடர்வுற்றதாய் நோக்கும் சொப்பனம் சாக்கிரத்தைப் போல் தோற்றுவதாய் நனவில் அதாவது சாக்கிரத்தில் பெரிதும் விளங்கும் இவ்விவகாரம் சொப்பன சாக்கிரம் என்று சொல்லப்படும்.* **(3.இ.43)**

**அறுவகை அவத்தை அகற்றிய சீவன் அடைந்துள அவத்தையின் இயற்கை**
**உறுசட மாகி மேல்வரும் துயர்கூர் உணர்வுள தாம்இது சுழுத்தி**
**துறுபுவ னங்கள் இதனிடை இருளில் தொலைவுறும் இப்பதம் ஏழும்**
**பெறுவன பேதம் ஒன்றுநூ றாகும் பேதைமை அவத்தைஇவ் வேழும்.**

**பொழிப்புரை:** *இந்த ஆறு வகை அவத்தைகளையும் விடுத்த சீவன் அடைந்திருக்கும் அவத்தை இயற்கையுடன் கூடி சடமாகி இனி வரும் துயர போகத்திற்கு காரணமான உணர்வுடைய சுழுத்தி (ஆழ்துயில்) எனப்படும். ஒன்றோடு ஒன்று விரவிய உலகங்கள் இந்த அவத்தையின் அந்த தமசில் லயமாகும். இந்த அஞ்ஞான பூமிகள் ஏழும் ஒன்று நூறு பேதங்களாய் அடையும். இந்த ஏழு அவத்தைகளே ஏழு அஞ்ஞான பூமிகள் ஆகும்.*
**(3.இ.44)**

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

ஞானபூமி யைமுடிவில் பேத மாக
நவிலுவர்வா தியர்அவற்றில் நமக்கு நல்ல
தானது)இவை இவைஅறிதல் ஞானம் ஆகும்
அறிந்தஇவற்று) அந்தமே அழி(வு)இல் வீடாம்
மானமுறு சுபம்விரும்பல் விசாரம் எய்தல்
மனம்சிறுகல் உண்மையிலே மன்னி நிற்றல்
ஈனம்)அறு சங்கற்பம் அறல்ப தார்த்த
எண்ண(ம்)அறுத் திடல்துரியம் இவைஏழ் ஆகும்.

**பொழிப்புரை:** *சாங்கியர், யோகியர் முதலான வாதியர் இந்த ஞான பூமிகள் ஏழினையும் பல்வேறு விதமாக (வேறுபட்டு) சொல்கின்றனர். அவற்றில் நமக்கு சுகத்துக்குக் காரணமானவை இவையே. இவற்றை அறிவது ஞானம் ஆகும். உணர்ந்த இந்த ஏழு பூமிகளின் முடிவில் உள்ள துரியமே நித்திய முத்தியாம். புகழத் தக்க சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, ஈனம் இல்லாத அசம்சத்தி, பதார்த்தாபாவனை, துரியம் இவையே ஏழு ஞான பூமிகள் ஆகும்.* **(3.இ.45)**

இவைஅறிந்தோர் மோகமெனும் அளற்றில் வீழார்
இவற்றியலா முத்திவரில் இடர்மீண்(டு) இல்லை
நவையுறுமோ கத்தொடுநாம் அடைவது) என்னே
நல்லோரால் நன்னூலால் நன்றா ஞானச்
சுவைபெறுது நிராசையினால் என்று நாடல்
சுபம்விரும்பல் ஆகு(ம்)இந்தச் சுபேச்சை முற்றிக்
கவையறுநல் லோர்இயற்கை ஆசா ரங்கள்
கைவருதல் விசாரமாக் கருதல் வேண்டும்.

**பொழிப்புரை:** *இந்த ஞான பூமிகளை அறிந்தோர் சம்சார மயக்கமாகிய சேற்றில் மூழ்க மாட்டார்கள். இவற்றின் அப்பியாசத்தால் சுபாவசித்தமாக (இயல்பாக) மோட்சம் வரும். வந்தால் துயரமானது மீண்டும் வராது. குற்றமுடைய மயக்கத்தைக் கொண்டு அடையப் போவது என்ன? சம்சாரமாகிய மோகத்தில் விழுந்து துயரப்படுவது எதற்காக? என்று எண்ணிப் பார்த்து, நல்லவர்கள் தொடர்பினாலும், ஆன்மீக சாத்திரங்களாலும், வைராக்கியத்தினாலும் உயர்ந்த ஞானத்தை அறிவோம் என்று விரும்புவது சுபேச்சை என்ற முதல் பூமியாகும். இந்த முதல்பூமி திடப்பட்டு குற்றமற்ற சாதுக்களின் தொடர்பு, சாத்திர வைராக்கியப் பயிற்சியும் கைவருதல் விசாரணை எனக்கொள்ளல் வேண்டும்.*
**(3.இ.46)**

இனையசுபம் விரும்பலொடு விசாரம் என்ற
இரண்டுநிறை தலும்விடயத்(து) இச்சை மாற்றி
நினைவுகுவி வதுசித்தம் சிறுகல் ஆகும்
நிகழ்த்தியஇம் மூன்றாலும் நெஞ்சம் தன்னில்
வனைதரும்அவ் விரத்தியினால் உண்மை போதம்
மன்னுதலே உண்மைநிலை மருவல் ஆகும்
அனையனஇந் நான்காலும் உண்மை போதத்(து)
அழுந்திஅயல் சங்க(ம்)அறல் அசங்கம் ஆகும்.

**பொழிப்புரை:** *இத்தகைய சுபேச்சையுடன் விசாரணை என்ற இரண்டாவது பூமியும் சேர்ந்து பூரணமாகி வலுவுடையதாகி விஷயங்களின் இச்சைகளில் தோஷ திருஷ்டியால் விரக்தி உண்டாகி மனம் சுருங்குதல் தனுமானசி ஆகும். கூறிய இந்த மூன்றின் அப்பியாச வலிமையால் மனத்தில் தோன்றுகின்ற முன்மொழிந்த வைராக்கியத்தினால் சுத்த நித்திய சத்திய ஆன்மாவில் சித்தமானது நிலைபெறுதல் சத்துவாபத்தி ஆகும். இந்த நான்கு பூமிகளில் அப்பியாச வலிமையால் ஆன்மானந்த அனுபவத்தில் திடமாகி விஷயத் தொடர்பில் இருந்து நிவர்த்தி பலமான பூமி அசம்சத்தி ஆகும்.* **(3.இ.47)**

அறைந்தபதம் ஐந்தாலும் தானாம் போதத்(து)
அழுந்தியஇன் பத்(து)அமைவால் புறனும் உள்ளும்
உறைந்தபதார்த் தங்கள்மறந்(து) அயலோர் வன்பால்
உணர்வதுவே பதார்த்தநினை(வு) ஒழிதல் ஆகும்
நிறைந்தஇவை ஆறாலும் பேதம் போக்கி
நிலைபெறுதல் சுபாவத்தே நிற்றல் தானே
மறைந்தபொருள் வெளியாக்கும் துரியம் ஆகும்
மாசறுசீ வனின்முத்தர் வழிஈ(து) ஆகும்.

**பொழிப்புரை:** *சொல்லப்பட்ட ஐந்து பூமிகளின் அப்பியாச வலிமையால் சுயமாக சொரூப ஞானத்தில் அழுந்தி அந்த நிகரற்ற ஆனந்தத்தில் லயித்துக் கிடந்தமையால் வெளிப்புறத்தும் உட்புறத்தும் காணப்படும் பதார்த்தங்களின் பாவனை இன்றிப் பிறருடைய முயற்சியால் பல காலத்திற்குப் பிறகு வெளிப்படுதல் (சமாதியிலிருந்தும் எழுதல்) பதார்த்தபாவனை என்ற ஆறாம் பூமியாகும். நிறைந்த ஆறு பூமிகளின் அப்பியாச வலிமையால் வேற்றுமை தோற்றாமல் மாற்றி, உபாதியால் மறைபட்ட பதார்த்தத்தை வெளிப் படுத்தும் நிலைபெற்ற தனது சுபாவத்தில் நிற்றல் துரிய பூமியாம். இதுவே களங்கம் அற்ற சீவன் முத்தர்களிடத்தில் இருப்பதாகும். (அவர்தம் வழியாகும்)*

**(3.இ.48)**

சொன்னதன்மேல் உடல்இறந்த முத்தர் மேவும்
துரியாதீ தப்பதமாம் துரியச் செல்வம்
தன்னுணர்வால் தனைஅறிந்த பெருமை சான்ற
தலைவனால் எய்தலுறும் தன்மை யாகும்
மன்னியஇப் பதம்அடைந்த சீவன் முத்தர்
மகிழ்ச்சிமறுக் கத்(து)அழுந்தா மரபி னாலே
அன்னியர்சொல் வழிதுயில்விட்(டு) எழுந்தார் போல
அடுத்தனசெய் குவர்செய்யார் ஆகி வாழ்வர்.

**பொழிப்புரை:** *ஏழு பூமிகளாகக் கூறப்பட்டனவாம். அவற்றுள் மேலாகிய விதேக முத்தர் அடைவது துரியாதீதம் என்னும் ஏழாம் பூமியாம். அந்த துரிய ரூப ஆத்ம ஞானத்தால் ஆத்மாவை அறிந்து ஆனந்தம் உறும். மகாத்மாவாகிய மகாபாக்கியவானால் அடையப் பெறும் தன்மை உடையதாம். நிலைபெற்ற இந்தப் பதத்தை அடைந்த சீவன் முத்தர் மகிழ்ச்சி வாட்டங்களில் மூழ்கமாட்டார். அதனால் பக்கத்தில் இருப்பவர் கூறிய நெறியில் உறக்கத்திலிருந்து எழுந்தவர் போல, வருணாச்சிரமத்துக்கு உரிய செயல்களைச் செய்வர், (தனக்கு என்று வாய்த்ததைச் செய்வர்) செய்யாமலும் இருப்பர். இத்தகைய நடை உடையவராகி ஆனந்தமுற்று வாழ்வர்.* **(3.இ.49)**

**இஞ்ஞான பதம்ஏழும் மிகவும் புந்தி**
**எய்தினர்க்(கு)அல் லதுதோன்றா இவற்றை எய்தில்**
**அஞ்ஞான மிலேச்சனே எனினும் தேகி**
**அதேகிஎனி னும்முத்தன் ஐயம் இல்லை**
**மெய்ஞ்ஞானம் என்பதுதான் மனத்தின் கட்டு**
**விடுதல்(ல்)இது பெறில்இதுவே வீடு பேறாம்**
**பொய்ஞ்ஞானக் கானல்நீர் முதலா மோகம்**
**பொய்யெனப்போம் மடமையும்பொய் என்னில் போகும்.**

**பொழிப்புரை:** *இந்த ஞான பூமிகள் ஏழும் சாதன சதுட்டயம் முதலியவற்றுடன் பெரும் அறிவுடையவர்க்கே அடையப்பெறும். ஏனையோர்க்கு அடையப் பெறாதது. இவற்றை அடையப் பெற்றால் கீழ்த்தரப்பட்ட சாதியினர் ஆயினும் தேகத்தோடு கூடியிருந்தாலும், தேகத்தோடு கூடியில்லாமல் இருந்தாலும் முத்தர் என்பதில் சந்தேகம் இல்லை. மெய்ஞ் ஞானம் என்று சொல்லப்படுவது மனதின் அகங்காரம் முதலான கட்டுகள் விடுதலே ஆகும். கட்டு நீங்கப் பெற்றால் மோட்சமாகும். மித்தியா ஞானமாகிய கானல்நீர் முதலான மயக்கங்கள் மித்தை என்று பார்த்த மாத்திரத்தில் ஓடிப்போகும். அறியாமையும் மித்தை என்று அறியும் மாத்திரத்தில் போய்விடும்.* **(3.இ.50)**

**தனைஅறியும் நிட்டையுளோர்க்(கு) எய்த லாகும்**
**தத்துவபூ மிகள்அறிந்த தலைமை மேலோர்**
**நினையவும்தா ழவும்உரியார் பொறிகள் என்னும்**
**நெடும்பகைவென் றோர்அழியா நிலையில் நின்றோர்**
**துனைதருபல் உயிர்இறைஞ்ச மேலாய் வாழும்**
**சுரேந்திரரும் நரேந்திரரும் துரும்பாய்த் தோன்றும்**
**அனையபெரும் பதம்பெற்றோர் அவரே ஆகும்**
**அல்லாதோர் பவக்கடலில் அமிழ்ந்தா நிற்போர்.**

**பொழிப்புரை:** *தமது சொரூபத்திலே நிலைபெற்றவர்களுக்கு முயற்சிக்குத் தக்கபடி அடையத் தக்கனவாம் கூறிய ஞானபூமிகள். இந்த பூமிகளில் வாழும் மகாத்மாக்கள் தியானிக்கவும் வணங்கவும் தக்கவர் ஆவார்கள். இந்திரியங்களாகிய நீண்ட பகையை வென்றவர்களுக்கு அழியா நிலையில் நின்றவர்களுக்குத் தம்மைச் சூழ்ந்த மக்கள் போற்றித்*

*துதிக்க மேலாக வாழும் வானுலக அரசனும், மண்ணுலக அரசனும் (நிலையில்லாமையால்) துரும்பாகத் தோற்றம் அளிப்பர். இத்தகைய பதத்தினைப் பெற்றவர்கள் அந்த மகா பாக்கியவான்களே ஆவர். அடையாதவர்கள் பிறவிக் கடலில் மூழ்கி நிற்பவர்கள்* **(3.இ.51)**

உள(ம்)ஒடுங்கும் உபாயமே யோகம் ஆகும்
உணர்வுறுபூ மிகள்இந்த உபாயம் ஆகும்
வளமிகும்இப் பூமிகளால் அன்றி இந்த
மாதேவ பெரியபதம் மருவ லாகா
அளவறநீ நான்தான்வே(று) ஒன்றும் இன்றி
அபேதமாய் அநாமயமாய் அமூல மாகி
கிளர்சுகமாய்ச் சாந்தமாய் அறிவாய் ஒன்றாய்க்
கேடின்றிப் பெயர்இன்றிக் கீழ்மேல் இன்றி.

**பொழிப்புரை:** *மனம் ஒடுங்கும் உபாயமே யோகம் ஆகும். அந்த உபாயமே கூறிய ஞான பூமிகள் ஆகும். பயிற்சிக்கு முன்னும் பின்னும் இன்பமே தரும் இந்த பூமிகள் இல்லாமல் இந்தப் பெரிய பிரம்ம பதமானது அடைய முடியாது. அளவின்றி நீ, நான், தான், வேறு ஒன்று என்பதாக எதுவும் இல்லாமல், அபேதமாய் (பேதம் இன்றியதாய்), நோயின்றி, காரணம் இன்றி, பேரானந்தமாய், சாந்தமாய், ஞான மயமாய், ஏகமாய், கேடின்றி, பெயர்கள் இன்றி, உயர்வு தாழ்வுகள் இன்றி.* **(3.இ.52)**

பாவனையும் அபாவனையும் முதலும் ஈறும்
பற்றுமுள தும்மிலதும் பலவும் தேசும்
மேவறிவும் மடமையும்என்(று) இவைகள் இன்றி
விண்ணிலே இருப்பதாய் விசால மாகி
யாவதுமாய் அன்றாகி மனத்தால் வாக்கால்
எட்டரிதாய் இன்பத்தில் இன்ப மாகி
ஓவரிய நிறைவி(ல்)நிறை வாகி ஆசை
ஒழிவிடமாய்த் தன்னாற்றான் உணரும் ஒன்று.

**பொழிப்புரை:** *பாவ எண்ணமும் அபாவ நிச்சயமும், ஆதியும் அந்தமும், பற்றும், சத்தும் அசத்தும், (அல்லது காரணமும் காரியமும்) பலவாகவும், ஒளியும், பொருந்தும் அறிவும், அஞ்ஞானமும் என்ற இவை யாதொன்றும் இன்றி, விண்ணிலே இருப்பதாய், விரிந்திருப்பதாகி, (அனைத்துக்கும் அதிஷ்டானம் ஆவதால்) எல்லாமும் ஆகி, (கற்பிதப் பெயர் வடிவ பிரபஞ்சத்திற்கு வேறானதாக ஆவதால்) அல்லாததும் ஆகி, மனம் வாக்குக்கு எட்டாததாய், நிகரற்ற இன்ப வெள்ளமாகி, சூனியமான ஆகாயத்தினும் எப்பொழுதும் சூனியமாய் (அல்லது வியாபகத்தினும் வியாபகமாய்) (பிரம்மத்தைக் காட்டிலும் வேறு ஒன்று அடைய விரும்பத் தகுந்ததாய் இல்லாமையால்) சகல மனோ ரதங்களின் நிவர்த்தியின் இருப்பிடமாய் சுயம் பிரகாசமாய் ஒளிரும் வஸ்து ஒன்று (உள்ளதாம்).* **(3.இ.53)**

### (அறுசீர் ஆசிரிய விருத்தம்)

**எழுவகையாம் பூமியினால் பெறும்பிரமம் இதுமாயை ஏற்றம் கேண்மோ**
**விழுமம்(ம்)உறு லவணன்தான் மெய்மறந்து முன்கண்ட விந்தச் சாரல்**
**பழுவமனக் கண்ணாடி பயில்கின்ற உடலொடும்போய்ப் பார்க்கில் கண்ணில்**
**தழுவுறும்கொல் எனஅமைச்சர் உடன்எண்ணித் தானையுடன் சமைந்து போனான்.**

**பொழிப்புரை:** *ஏழு வகையான ஞான பூமிகளால் அடையத் தகுந்த பிரம்மம் இதுவரை சொல்லப் பட்டது. இனி மாயையின் பெருமையைக் கூறக் கேட்பாயாக. பெரும் மேதாவியான லவண மன்னவன் தன்னுடைய தேகத்தை மறந்து பிராந்தியினால் முன்பு பார்த்த விந்திய மலைச் சாரலின் காடானது, மனமாகிய கண்ணாடியில் தெரிந்தது. ஒருகால் நேரில் தேகத்தோடும் போய்ப் பார்த்தால் கண்ணாரக் காணலாமோ என்று அமைச்சர்களுடன் ஆலோசனை செய்து (அடுத்த நாளில்) சேனைகளுடன் ஆயத்தமாகிச் சென்றான்.*
**(3.இ.54)**

**தென்திசைசென் றனன்மீட்டும் திக்குவிச யம்செய்யச் செல்வான் போல**
**முன்திகழும் விந்தகிரி முற்பட்டான் வடக்(கு)ஒழிந்த மூன்று திக்கில்**
**துன்றிவளர் வனம்எல்லாம் சுற்றினான் நனிநொந்தான் சூழல் ஒன்றில்**
**அன்றுகரு தியகருத்து வடிவெடுத்த(து) எனப்பழைய அடவி கண்டான்.**

**பொழிப்புரை:** *தெற்கு திசைநோக்கிச் சென்றான். மறுபடியும் திக்கு விசயம் செய்வதற்காகச் செல்வது போலச் சென்றான். முன்பு தோன்றிய விந்திய மலையை அடைந்தான். வடக்கு தவிர கிழக்கு, மேற்கு, தெற்கு திசைகளில் நெருங்கி வளர்ந்துள்ள காடுகள் எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்தான். மிகவும் வருந்தினான். ஓரிடத்தில், முன்பு சிந்தையில் சிந்தித்த எண்ணமே வடிவம் எடுத்து வந்ததைப் போல பழைய காட்டினைக் கண்டான்.*
**(3.இ.55)**

**கால(ன்)நகர் நிகராம்அக் கடியவனத்(து) உலாவுதலும் கடையர் செய்கை**
**போ(ல்)அவன்முன் சஞ்சரித்த தலங்களும்அச் சேரிகளும் பொருந்தக் கண்டான்**
**சாலவியந் தான்அந்தக் கடையர்கடைச் சியர்குடில்கள் தப்பா வண்ணம்**
**ஞாலநர பதிநோக்கி வியப்பினால் மனமயக்கம் நண்ணி நின்றான்.**

**பொழிப்புரை:** *எமன் நகருக்கு நிகரான அந்தக் கடுமையான வனத்தில் சுற்றிச் சுற்றிப் பார்த்தலும், நீசர்கள் செய்கை போல, அந்த அரசன் நீசனாக இருந்த போது உலாவிய அந்த இடங்களையும், பழைய சேரிகளும் முன்கண்ட படியே கண்டான். மிகவும் வியந்து போனான். அந்தப் புலையர், புலைச்சியர் குடிசைகள் எல்லாம் ஒன்றுவிடாமல் பூமியை ஆளும் அந்த மன்னவன் பார்த்து ஆச்சரியத்தினால் மனமயக்கத்தை அடைந்து பிரமித்து நின்றான்.*
**(3.இ.56)**

**கருத்(து)அயரும் துயர்கரைப்பக் கண்கரைந்து மெய்கரைந்து கதறா நின்ற**
**விருத்தையர்தம் கூட்டத்தில் மிகமெலிவால் வாய்விட்டு விம்மி விம்மி**
**ஒருத்திமுதல் நாள்இறந்த தன்கிளைஞர் பெயர்எல்லாம் உரையா நின்று**
**பெருத்தநெடும் குரலாலே இவ்வாறு புலம்பினாள் பேத மாக.**

**பொழிப்புரை:** *மனம்சோரும் துன்பம் வருத்த கண்களில் கண்ணீர் சொரிய தேகம் தளர்வடைய ஓலமிட்டு கதறுகின்ற கிழவிகளின் கூட்டத்தில் அதிக மெலிவினால் வாய்விட்டு துன்பம் தாங்காமல் தேம்பித் தேம்பி ஒரு கிழவி முந்தைய நாளில் இறந்து போன தன்னுடைய சுற்றத்தினர் பெயர்களை எல்லாம் கூறிப் பெரிய குரலால் இவ்வாறு புலம்பினாள் வேற்றுமையாக.* **(3.இ.57)**

**மாறான விதியால்என் மடிவிட்டு மடிந்துபோம் மைந்தர் காளோ**
**வேறாகி எத்தூரம் ஏகினீர் யார்முகத்தே விழிக்கின் றீரோ**
**கூறான செங்குன்றின் மணிமாலை தோளாலே குளிரப் புல்லி**
**ஆறாத என்நெருப்பை ஆற்றுவா யோமகளே அந்தோ அந்தோ.**

**பொழிப்புரை:** *வாழ்வுக்கு எதிர்வினையான தீவினையால் என்னை விட்டு மடிந்து போகின்ற பிள்ளைகளே! முன்னால் நிற்பதற்கு வேறாகி எவ்வளவு தொலைவில் சென்றீரோ? யாருடைய முகத்தில் விழிக்கின்றீரோ? கொத்தான சிவந்த குன்றி மணிமாலை அணியும் தோள்களாலே குளிர்ச்சியாகும் படி ஆரத் தழுவி என் மனதிலுள்ள நெருப்பினைத் தணிக்க மாட்டாயோ? மகளே! ஐயகோ என்செய்வேன்? ஐயகோ என்செய்வேன்?* **(3.இ.58)**

**முன்னம்செய் தவத்தினால் தேடாத மாநிதிபோல் முன்வந்(து) எய்திப்**
**பொன்னனார் நின்குலத்தோர் அவர்மயல்விட்(டு) என்மகளைப் புணர்ந்து வாழ்ந்த**
**மன்னனாம் மருமகனே மறந்தனையோ மதிமுகத்தை வந்து காட்டாய்**
**பின்னைநா யகஉனக்(கு)என் பேதைசெயும் சிறுபிழையால் பேதித் தாயோ.**

**பொழிப்புரை:** *முன்பு செய்த தவத்தினால் தேடாமலே கிடைத்த பெரும் புதையலைப் போல, இங்கு வந்து சேர்ந்து, அழகுடைய நின்குலத்தின் மகளிர்கள் மீது மோகத்தை விட்டு. அழகற்ற என்னுடைய மகளை மணம்புரிந்த ராஜனாம் மருமகனே! மறந்து விட்டாயோ? உன்னுடைய நிலவு முகத்தைக் காட்டி தரிசனம் தருவாய். செல்வத்துக்கு அதிபதியே! உனக்கு என்னுடைய பேதைப் பெண் செய்த சிறு குற்றத்தால் மனம் மாறிவிட்டாயோ?}* **(3.இ.59)**

**வன்பிறவிப் பேராற்றில் வல்வினையா கும்திரைகள் வந்து கூடித்**
**தன்பிறவி அர(சு)இயற்கை தவிர்ந்(து)எமது தையலுக்குத் தலைவன் ஆகிப்**
**புன்பிறவிப் புலையரைப்போல் பூதலத்துப் புரந்தரனும் புன்மை பூண்டான்**
**மின்பிறவி நிற்கரிது மிகக்கொடிது மிகக்கொடிது விதியே என்றாள்.**

**பொழிப்புரை:** *கொடிய சம்சாரம் என்னும் பெரிய ஆற்றில், கொடும் தீவினைகள் என்னும் அலைகள் வந்து சேர்ந்து, தான் பிறந்த சத்திரிய வம்சத்திலிருந்தும் நழுவி எம்முடைய பெண்ணுக்குக் கணவன் ஆகி, நீச சண்டாளரைப் போல பூமியை ஆள்கின்ற மன்னவனும் கீழான தன்மையை அடைந்தான். மின்னலைப் போன்று பிறவியும் நிலையற்றது. மிகவும் கொடியது, மிகவும் கொடியது, எல்லாம் தலைவிதியே எனப் புலம்பினாள்.* **(3.இ.60)**

**என்(று)அழுத அவள்புலம்பி இசைத்தவெலாம் நனிகேட்ட லவணன் ஆங்கே**
**நின்றுளதன் சேடியரால் அவள்துயரம் தனைஆற்றி நேயத் தோடும்**
**கன்றியநின் இடர்ஏது நீயார்நின் மகள்ஆர்நின் காத லோர்ஆர்**
**ஒன்றுமொழி அறமொழிஎன்(று) இவன்வினவப் புலைக்கிழத்தி உரைப்ப தானாள்.**

**பொழிப்புரை:** *என்று சொல்லி அழுதுகொண்டிருந்த அந்தப் புலைச்சி புலம்பிய அனைத்தையும் நன்றாகக் கேட்ட லவண மன்னவன் அங்கே நின்று கொண்டிருந்த பணிப்பெண்களைக் கொண்டு அந்தக் கிழவியின் துயரத்தைத் தணித்து, அன்புடனும் உன்னுடைய சித்தம் வருந்தும்படி வந்துற்ற துன்பம் என்ன? நீ யார்? உனது மகள் யார்? உன்னுடைய புத்திரர்கள் யார்? ஒன்றையும் விடாமல் கூறுவாய் என்று கேட்க, அந்தப் புலைச்சி கிழவியானவள் கூறத் தொடங்கினாள்.* **(3.இ.61)**

**ஈதுபுலைச் சேரிஇதில் ஒருபுலையன் என்கணவன் இவனுக்(கு) இங்(கு)ஓர்**
**மாதுபிறந் தனள்அவளை இந்திரன்போல் ஒருமன்னன் வந்து சேர்ந்தான்**
**போதுநெடும் புணர்வித்த விதியாலே அவள்மூன்று புதல்வர் பெற்றாள்**
**ஏதுறுநல் வினைபோலத் தீவினைவந்(து) என்கிளைஞர் இறந்து போனார்.**

**பொழிப்புரை:** *இது புக்க சபோஷம் என்ற பெயருடைய கிராமம். இங்கு ஒரு புலையன் என் கணவனாக இருந்தான். அவனுக்கு இங்கே ஒரு பெண் பிறந்தாள். அவளை இந்திரன் போன்ற ஒரு மன்னவன் வந்து அணைந்தான். நீண்ட காலம் சேர்த்து வைத்த வினைப் பயனாலே அவள் மூன்று புத்திரர்களைப் பெற்றெடுத்தாள். நல்வினையால் உண்டாகும் நற் பயன் போல, தீவினையால் உண்டான தீய பலன் முன் வந்து அடைய எனது உறவினர்கள் மாண்டு போயினர்.* **(3.இ.62)**

**நெடுங்காலம் வாழ்ந்ததன்பின் நிலைமுகில் துளிவறண்டு நிலம்நீர் சுண்டிக்**
**கடுங்காலன் நிகர்கலியால் திசைதிசைபோய்க் கடைய(ர்)எலாம் கழிந்து போனார்**
**நடுங்காநின் றனதுயரும் தனிமையுமே துணையானேம் நாங்கள் என்ன**
**அடுங்கால வேல்வேந்தன் அமைச்சரைப்பார்த்(து) அதிசயித்தான் அவச னாகி.**

**பொழிப்புரை:** *நீண்ட காலம் கூடி வாழ்ந்ததன் பின்னர், கருமேகம் மழை பொழியாமல் போனதால், நிலத்து நீர் வற்ற, குளம் குட்டைகள் காய்ந்து போக, கடுமையான எமனுக்கு நிகரான துன்பத்தால் பல திசைகளிலும் ஓடிப் போய் புலையர்கள் எல்லாம் அழிந்து போயினர். நடுக்கத்தைத் தரும் துயரத்தையும், காப்பதற்கு யாரும் இன்றி தனிமையையும் துணையாகக் கொண்டு நாங்கள் வாழ்கின்றோம் என்று அந்தக் கிழவி கூற, யாவரையும் கொல்லும் வேலாயுதத்தை உடைய லவண மன்னவன் அமைச்சர்களைப் பார்த்து பரவசன் ஆகி மிகவும் ஆச்சரியத்தை அடைந்தான்.* **(3.இ.63)**

**வேண்டுவன கொடுத்(து)இவளை வெந்துயர்தீர்த்(து) அந்நகரில் மீண்டு மேவி**
**நீண்டஉல கத்(து)இயல்பு மாயையின் வல்லபமும் நெடிது கண்டான்**
**காண்டகையபரம்பொருளும் நாம்உரைப்ப அறிந்(து)அமைந்தான் கருணை வள்ளால்**
**ஈண;டியஇம் மாமாயை கடப்பரிய வன்மோகம் இயற்றும் கண்டாய்.**

**பொழிப்புரை:** *வேண்டியதெல்லாம் கொடுத்து அவளுடைய கொடிய துயரத்தைப் போக்கி அந்த விந்திய மலைச் சாரலில் இருந்து திரும்பி தனது நகரை அடைந்து, நீண்ட உலகத்தின் இயல்பையும், மாயையின் வல்லமையையும் நன்றாக உணர்ந்தான் அந்த மன்னன், காணத் தக்கதான பரமான்ம வஸ்துவையும் எம்மைக் கேட்டுக் கொண்டதால் யாம் உபதேசிக்க நன்றாக உணர்ந்து அமைதி அடைந்தான். கருணைக் கடலே! இவ்வாறாக இந்த மகா மாயையானது கடக்க அரிதான மோகத்தைத் தரும் என்று அறிவாய்.* **(3.இ.64)**

**இல(து)உளதாம் உள(து)இலதாம் இம்மாயை வல்லபத்தால் என்ன லோடும்**
**கலனமுறு சொப்பனத்தில் கண்டதெல்லாம் சாக்கிரத்தில் கண்ட(து) என்னே**
**குலமுனிவ எனக்கேட்ட வள்ளலுக்கு முனிஉரைப்பான் கொடிய மாயை**
**அலகறுமோ கம்புரியும் காதிகதை யால்இதுமேல் அறிய லாகும்.**

**பொழிப்புரை:** *இல்லாதது உள்ளதாகும், உள்ளது இல்லாதது ஆகும் இந்த மகா மாயையின் (அவித்தையின்) சாமர்த்தியத்தால் என்று வசிட்ட முனிவர் கூறவும், நிலையற்ற கனவில் கண்டவை எல்லாம் நனவில் கண்டதன் காரணம் என்ன? எங்களுடைய குலத்துக்கு ஆசாரியரே! என்று கேட்ட வள்ளல் இராம பிரானுக்கு வசிட்ட முனிவர் கூறுவதாவது... (கனவில் தன் மரணத்தைப் பார்ப்பதும், ஆகாயத்தில் பறப்பதைப் பார்ப்பதும் ஆகக் காட்டும் இவ்விதமாக) துன்பத்தைத் தரும் கொடிய மாயை அளவற்ற மயக்கத்தைச் செய்யும். இதன் விவரத்தைக் காதி கதையினால் இனிமேல் தெளிவாக அறியலாம்.* **(3.இ.65)**

**காகதா லீயம்போல் வாதனையின் வசத்தி(ல்)உளம் கலந்து நிற்கும்**
**ஏகமுறத் தம்மில்தாம் என்(று)உணர்வின் நிலைநின்றோர் இயம்பா நிற்பர்**
**ஆகலினால் முன்னாளில் சித்தனால் புலைச்சேரி யாகக் கண்ட**
**மோகமதே பின்னாளும் கண்டதுவே(று) அன்றுநாம் மொழிந்த வேந்தன்.**

**பொழிப்புரை:** *(காகம் உட்கார பனம்பழம் விழுந்தது என்று சொல்லப்படும்) காகதாலீயம் என்ற நியாயம் போல, சித்தத்தின் வாதனையின் (சம்ஸ்காரத்தின்) வசத்தினால் தானாகவே பரஸ்பரம் பெருத்த விவகாரங்கள் பலருக்கும் விரவி உண்டாகும் என்று அறிவின் நிலையில் நின்றவர்கள் கூறுவார்கள். யாம் கூறிய லவண மன்னவன் முன்னாளில் சித்தனால் புலைச் சேரியாகக் கண்ட மயக்கம் தானே பின்னாளிலும் கண்டது வேறு அன்று.* **(3.இ.66)**

**மன்னவன்கண் டுளகனவின் மதிமயக்கம் தன்னையே மலையின் சாரல்**
**அன்னவரும் நல்நினைவால் அறிவுற்றார் லவணனாம் அறிவின் தேற்றம்**
**துன்னிவரு கடையர்மனங் களில்தோற்றக் கடைய(ர்)எனத் தோன்றும் போதம்**
**இன்னநர பதிமனத்தில் தோன்றியதால் மாமாயை ஏது செய்ய.**

**பொழிப்புரை:** *லவண மன்னவன் கண்டதான கனவின் புத்தி மயக்கம் தனையே விந்திய மலையில் வாழ்ந்த அக்கடையரும் திண்ண எண்ணத்தால் தெரிவுற்றார். லவண மன்னனின் அறிவின் தோற்றம், அந்தச் சேரியில் நெருங்கியிருந்த நீசர் உள்ளங்களில் எண்ணமாகப் பதிவேற, விந்திய மலைக் கிராமத் தொடர்பான போதம் இந்த லவணனின்*

*சித்தத்தில் தோற்றியது இந்தக் காரணத்தைக் கொண்டு அணுகினால் மகா மாயை எக்காரியத்தைத் தான் செய்ய மாட்டாது? (எதையுமே செய்யும்). (ஒருவனது கனவு மற்றொருவனுக்கு நனவு ஆகவும், ஒருவன் நனவு மற்றொருவனுக்குக் கனவு ஆகவும் ஆவது போல, அரசனது மனோ ராச்சியம் முன்னுள்ள சண்டாளருக்கு யதார்த்தமாகவும், சண்டாளர்களின் சாக்கிரம் மன்னவனுக்குச் சாக்கிர சொப்பனமாகவும் தோற்றுவித்தது மாயா விசித்திரம் அன்றி வேறு அன்று என்பது பொருள்.)* **(3.இ.67)**

**தோன்றியவை விளக்கத்தால் உண்மையாம் ஐம்பொறிக்கும் தொடர்பாய் நிற்கும்**
**ஆன்றபதார்த் தங்க(ள்)எலாம் அறிவினால் ஒழிந்(து)உண்மை ஆக மாட்டா**
**ஏன்(று)அறிவான் அறிபொருளாம் இரண்டினிடை அறிவானுக்(கு) இயைந்த ரூபம்**
**ஊன்றிஅறி பொருள்அறிவான் அறி(வு)இவையில் உற்றிடுவது உயர்ந்த வீடு.**

**பொழிப்புரை:** *தோன்றுகின்ற மாயைப் பொருள்களானவை ஞான (அறிவு) விளக்கத்தால் உள்ளன வாகும். ஐம்புலன்களுக்கும் தொடர்பாய் நிற்கும் ஆன்ற பொருள்கள் எல்லாம் ஞானத்தினால் அல்லாமல் உள்ளவை ஆக மாட்டாது. அறிவான் (ஞாதா), அறிபொருள் (ஞேயம்) இவ்விரண்டின் இடையில் அறிவானுக்கு (ஞான ஆத்மாவுக்கு) இசைந்த வடிவம் (நிலை) உள்ளது. ஆகவே, அறிபொருள், அவற்றை அறிவான், அறிவு ஆகிய மூன்றும் இல்லாததாகியும் இவற்றில் பொருந்துவதாகியும் இருப்பதுவே மோட்சம் ஆகும்.* **(3.இ.68)**

**ஓரிடம்விட்(டு) ஓரிடத்தே உள்ள(ம்)உறில் அவற்றி(ல்)நடு உண்மை யாகிப்**
**பேரிலதாய் உணர்விலதாய்ச் சடமிலதாய் அதுநீயாய்ப் பிரியேல் என்றும்**
**கூரியபுந் தியினாலே ஊகித்துக் குடும்பிஎனும் குறிப்பை மாற்றித்**
**தூரியதாம் படிமனத்தின் துவக்கறுத்தே இருந்தபடி துணிந்து நிற்பாய்.**

**பொழிப்புரை:** *(அறிபவன் -அறிபொருள்-அறிவு இந்தத் திரிபுடி இல்லாத இடம் எது என்று கூற வேண்டுமாயின்) ஒரு விடயத்தை விட்டு மற்றொரு விடயத்தில் புகும்போது அவற்றின் மத்தியில் இருப்பதாகி (சத்து சொரூபமாகி), பெயர் அற்றதாய், அறிவு அற்றதாய், சடம் அற்றதாய் ஆகிய மூன்றும் இல்லாததாம் அதுவே ஆன்மாவின் சொரூபம் என்று எப்போதும் பாவிப்பாய். அதி சூக்கும மதியினால் ஊகித்து அபிமான அழுக்கினைத் தவிர்த்து (பிறப்பு இறப்பு சம்சார குடும்பி என்ற பாவனையில் இருந்து விடுபட்டு) எந்தத் தன்மையனாய் இருந்தாயோ அதுவாகவே நிலையாக-திடமாக இலங்குவாய்.* **(3.இ.69)**

**பிறப்(பு)இறப்பாம் பூட்டைதனைப் பிணித்(து)உழற்றும் வாதனையாம் பெரிய பாசம்**
**அறப்பெரிய முயற்சியினால் அறுத்திடுவாய் பரமமாம் அறிவின் முன்னே**
**புறப்படும்பொய் யாம்உள்ளம் புவனவிகற் பங்களெனும் பொய்யைக் காட்டும்**
**சிறப்புளவிண் ணிலதாயும் இலதான நீலநிறம் செறிவ தேபோல்.**

**பொழிப்புரை:** *பிறப்பு இறப்பு என்ற சம்சாரமாகிய கடிய யந்திரத்தைப் (சுழலும் சக்கரத்தைப்) பிணித்து மேலும் கீழும் சுழற்றும் வாசனையாகிய பெரிய வடத்தை (கயிற்றை) எவ்வாறாவது பாடுபட்டு அறுத்திடுவாய். பரமான்ம தத்துவத்தில் இருந்தும் முன்பு மித்தையாம் மனம் உண்டானது அநிர்வசனீயமாம். அதனது விகற்ப ஜாலங்களாலே*

*இந்தச் சகம் (பிரபஞ்சம்) விகற்பங்கள் என்னும் பொய்யினை (மித்தையை) உண்டாக்கும். ஆகாயம் சூனியமாயினும், இல்லாததான சிறப்பான நீலநிறம் (மற்றும் கொப்பரையைக் கவிழ்த்துளதான உருவம்) தோற்றுவதற்கு அதிஷ்டானமாக இருப்பதே போலும்.* **(3.இ.70)**

**சோகமுறு சங்கற்ப நாசத்தால் மனம்மாளில் தொன்று தொட்ட**
**மோகமெனும் மூடுபனி விட்டகலும் சரற்காலம் முதிர வந்தால்**
**மாகம்விளங் குவதென்ன நல்லறிவு மாத்திரமாய் மாயா தாகி**
**ஏகமாய் வடிவின்றிப் பிறப்(பு)இறப்பி லாப்பிரமம் இலங்கு நொய்தாய்.**

**பொழிப்புரை:** *துயரை விளைவிக்கும் சங்கற்ப நாசத்தால் மனம் மாளும். மனம் மாண்டால் தொன்று தொட்டுப் பீடித்திருக்கும் சம்சார மோக மூடு பனியானது விட்டு நீங்கும். சர ருதுக் காலமானது வளர்ந்து வந்தால் ஆகாயம் தெளிவாக விளங்குவதே போல, அறிவு மாத்திரமாய், அழிவற்றதாய், ஏகமாய், உருவம் இன்றியதாய், பிறப்பு இறப்பு இல்லாதாய் விளங்கும் பிரம்மம் சூக்குமமாய் இருதயத்தில் தானே இலங்கும்.* **(3.இ.71)**

**(உற்பத்திப் பிரகரண இதோபதேசம் முற்றும்)**

# 4. திதிப் பிரகரணம்

## (i) சுக்கிரன் (பார்க்கவன்) கதை

*முன் பிரகரணத்தில் பிரபஞ்சம் மன விரிவினால் உற்பத்தியானது, அதுவும் யோகத்தால் மனம் அழியுமாயின் பிரபஞ்சமும் அழியும் என்று சொல்லப்பட்டது. இந்தப் பிரகரணத்தில் மனதிலிருந்தும் உற்பத்தியான பிரபஞ்சம் மனதின்கண்ணே இருக்கின்றது என்றும் சொல்லப்படுகின்றது. அவற்றில் மனோமயமான திருசியம் மனதோடு ஆன்மாவின் கண் இருத்தலால் ஆதாரமாக ஆன்மாவைத் தெரிவித்தற்கு ஆதேயமான திருசியத்தைக் கூறல்:-*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

எழுது வோனும் எழுதிடமும் எதிர்காண் பொருளும் இலதாகி
வழுவி லாத விண்ணிடையே வந்து தோன்றும் ஓவியம்தான்
பழு(து)இல் மேவும் தனைத்தானே பாரா நிற்கும் பலபொறியும்
நழுவு துயிலி னால்அன்றி நனவால் மேவும் கன(வு)ஒக்கும்.

**பொழிப்புரை:** *(செயல் அற்றதனால் ஓவியம் வரைகின்ற) கர்த்தாவும் (வரைவதற்கான துணி முதலான) திடத்தன்மைப் பொருள்களும் வர்ணங்களும் இல்லாமல் களங்கமற்ற சிதாகாசத்தில் சித்திரங்கள் உதித்து எழுந்து இலங்கும். பழுதில்லாது பொருந்தும் சித்திரம் தனக்குக் காண்பவன் வேறாக இருப்பதைப் போல், இங்கே அவ்வாறு இன்றி காண்பவன்-காணப்படும் பொருள்களுக்கு இடையே பேதம் இல்லாமையால் சுயமாக தன்னைத் தானே அனுபவிக்கும். இது எல்லா இந்திரியங்களும் நழுவிய (செயல்படாத) உறக்கத்தில் அல்லாமல் நனவில் தோன்றும் (கானல் நீர் முதலான) கனவைப் போன்றதாம்.*

**(4.1.1)**

கரியாய்ச் சமமாய் நொய்தாகிக் கலந்த விகற்பம் தீர்அறிவில்
பரியா நின்ற உலகமெல்லாம் பற்றி பாய்தல் கண்ணடியில்
தெரியா நின்ற பொருள்போலாம் செறிகா ரணகா ரியம்இன்றிப்
புரியா நின்ற உலகெல்லாம் பொலிந்து பிரமத் திடைஇருக்கும்.

**பொழிப்புரை:** *சாட்சியாய், எங்கும் சமமாய், அதிசூக்குமமாய், பேதம் அற்ற சிதான்மாவில் துன்பத்தைத் தருகின்ற பிரபஞ்சம் அனைத்தும் கண்ணாடியில் தோன்றும் பிரதி பிம்பம் போல் வாசனைப்படி மனதில் புலப்படுவதாய் உண்மையான காரண-காரியத் தன்மையை அடையாமலே கற்பனையாகத் தோற்றுகின்ற பிரபஞ்சம் எல்லாம் பிரம்மத்தில் பிராதிபாசிகமாய் (கானலில் நீர் தோற்றுவதைப் போல்) இருக்கும்.*

**(4.1.2)**

**சொன்ன உலகங் களுக்(கு)உருவம் தோன்றா நின்ற மாத்திரமாம்**
**பின்னம் இன்றி யாவையுமாய்ப் பேரா அறிவாய்ப் பெருவிண்ணாய்**
**மன்னு பிரமம் ஒன்(று)என்றே வருந்தி முயன்று பாவிப்பாய்**
**அன்ன நிலையே கைவந்தால் அலை(வு)அற்(று) உள்ளம் அறி(வு)உருவாம்.**

**பொழிப்புரை:** *பிரம்மத்தில் ஆரோபிதமாக (கற்பிதமாக) இருக்கும் என்று கூறிய பிரபஞ்சத்திற்கு வடிவம் தோற்றம் மாத்திரமே ஆகும். அதிஷ்டானத்தினும் வேறு சத்து இல்லாமையால் பின்னம் இன்றி, எல்லாமாய், சிற்சொரூபமாய் இருக்கின்ற பிரம்ம சொரூபம் ஏகம் (ஒன்று) என்பதாகவே மிகவும் கஷ்டப்பட்டு, மிகவும் முயற்சி செய்து தன்மய சிந்தனை செய்வாய். அத்தகைய நிலை கைவரப்பெற்றால் சித்தமானது அலைவதை விடுத்து சின்மாத்திர (அறிவு) வடிவம் ஆகும்.* **(4.1.3)**

**கீற்றுப் பலசேர் ஒருகல்போல் கிளரும் சகங்கள் செறிபிரமம்**
**தோற்றப் படுமால் இரண்டென்னத் தொடர்கா ரணம்வே(று) இலாமையினால்**
**ஆற்றச் சகம்என்(று) ஒன்(று)இலதாம் அறிவே உளதாம் அனைத்(து)உலகும்**
**தேற்றப் பிரமத்(து) இருக்கு(ம்)இவை தெளிய வெள்ளி கதைகேட்பாய்.**

**பொழிப்புரை:** *பல ரேகைகள் சேர்ந்த ஒரே கல்லானது சிலை வடிவ பேத வடிவமாய் தோற்றம் அளிப்பது போல, பரிபூரணப் பிரம்மம் பெயர் உருவங்களால் பிரபஞ்சத் தோற்றமாக நிச்சயிக்கப்படும். இரண்டாவதாக ஒரு காரணம் இல்லாமையால் இந்த உலகம் உண்டானதும் அல்ல, ஒழிவதும் அல்ல, வருவனவும் அல்ல, சச்சிதானந்த பிரம்மமே இருப்பதால். அனைத்துப் பிரபஞ்சமும் பிரம்மத்தில் ஆரோபமாக இருக்கும். இவற்றைத் தெளிந்து கொள்ள சுக்கிரன் கதையைக் கேட்பாய்.* **(4.1.4)**

**முன்னும் ஒருநாள் பிருகுமுனி முதுமந் தரமால் வரைச்சாரல்**
**மன்னு தவம்செய் யுழிஅவன்தன் மைந்தன் மதிமான் மதிஅனையோன்**
**தன்ன தாதை கழல்பிரியான் தனிமெய்ஞ் ஞான அஞ்ஞானம்**
**என்னும் இருபார் வையின்நடுவே இயங்கா நின்ற பெரும்பதத்தோன்.**

**பொழிப்புரை:** *முன்னொரு காலத்தில் பிருகு முனிவர் வளமை நிறைந்து நீண்டு உயர்ந்த மந்தர மலைச் சாரலில் கடுமையான தவம் செய்து கொண்டிருந்த போது, அந்த முனிவரின் குமாரன் மகா மதி உடையவனாய்ச் சந்திரனைப் போன்றவனாய், தன்னுடைய தந்தையின் திருவடிகளைப் பூசித்துக் கொண்டே இருப்பவன். ஒப்பற்ற மெய்ஞ்ஞானம் அஞ்ஞானம் ஆகிய இரண்டு பார்வைக்கோணத்தின் நடுவே இருந்து செயல் இன்றிய பெருமை வாய்ந்த நிலையை உடையவன்.* **(4.1.5)**

**செறிஅந் தரத்தே நிற்கின்ற திரிசங் குவைப்போல் சுக்கிரனும்**
**அறிவோ(டு) அறியா மையின்நடுவே அமரும் நாளில் அவன்தாதை**
**பிறிவில் சமாதி உறநிற்பப் பிரியா வெள்ளி தனியிருந்து**
**வெறிய விசும்பை நோக்குதலும் விண்மா(து) ஒருத்தி வரக்கண்டான்.**

**பொழிப்புரை:** *பூலோகமும் இல்லாமல், சுவர்க்க லோகமும் இல்லாமல் மத்தியில் உள்ள லோகத்தில் நிற்கும் திரிசங்குவைப் போல, சுக்கிரனும் ஞான அஞ்ஞான இவற்றின்*

*மத்தியில் அப்பியாசம் செய்து கொண்டிருக்கையில், அவனுடைய தந்தை நிருவிகற்ப சமாதியில் திடமாக இருக்க, தந்தையை விட்டுப் பிரிய மனமில்லாத சுக்கிரன் தனியாக இருந்து ஆகாயத்தை வெறிதாக நோக்கும் போது, தேவ மாது ஒருத்தி ஆகாயத்தில் வருவதைப் பார்த்தான்.* **(4.1.6)**

**மந்தா நிலத்தால் அசைகின்ற மந்தா ரம்சூழ் மலர்க்குழலாள்**
**தந்தா வளத்தின் பிடிபோலத் தனியே வரலும் எதிர்நோக்கிச்**
**சிந்தா வசனாய் அவள்வடிவைத் தியானித்(து) இருகண் முகிழ்த்திருந்து**
**முந்தா நின்ற வேட்கையினால் முடிவில் மனோராச் சியம்முயன்றான்.**

**பொழிப்புரை:** *தென்றல் காற்றினால் அசைகின்ற மந்தார மலர்மாலை அணிந்த கூந்தலை உடையவள் பெண் யானை போலத் தனியாக வரவும் எதிர் கண்டு, சிந்தனை வசமுற்று, அவளுடைய வடிவைத் தியானம் செய்து கொஞ்சநேரம் இருகண்களை மூடியிருந்து, மேல்மேல் முந்துகின்ற ஆசையினால் முடிவில்லாத மனோராச்சியம் செய்யத் தொடங்கினான்.* **(4.1.7)**

**பொன்நாட்(டு) அணங்கே இவள்அந்தப் பொன்நாட்(டு) யானும் போய்ப்புகுந்தேன்**
**இன்னாட்(டு) அமரர் இவர்போற்ற எழில்கூர் சிங்கா தனத்தி(ல்)இவன்**
**மின்னால் செறியும் முகில்என்ன வேந்தாம் இவனைச் சூழ்ந்துமதன்**
**தன்னால் களிக்கும் அரம்பையர்தம் சமூகம் இவைஎன்(று) உளத்(து)உணர்ந்து.**

**பொழிப்புரை:** *இந்த மங்கை சுவர்க்க லோகத்தில் உள்ள தேவ மாதே என்று யானும் அந்த சுவர்க்க லோகம் போய்ச் சேர்ந்தேன். இந்த சுவர்க்கத்தில் இருக்கும் தேவர்கள் போற்ற அழகான சிம்மாசனத்தில் மின்னல் அணைத்த மேகம் போல் இந்திரன் ஆகிய அரசன் இருக்க, இவனைச் சூழ்ந்து மன்மத வேட்கையால் களிக்கின்ற அரம்பையர் கூட்டம் இவைஎன்று (சுக்கிரன்) உள்ளத்தில் சிந்தனை செய்து.* **(4.1.8)**

**இமையோர் இறையை இவன்வணங்க இவனை அவனும் இறைஞ்சியபின்**
**அமையா இன்ப விண்ணாட்டில் அகலா(து) உலவும் அவ்வளவில்**
**சுமைவார் கொங்கை அரம்பையருள் சொன்ன அவள்முன் தோன்றுதலும்**
**கமையா அன்பால் கண்களிப்பக் கண்டான் அவளும் கண்ணுற்றாள்.**

**பொழிப்புரை:** *தேவர்களின் அரசனாகிய இந்திரனைச் சுக்கிரன் நமஸ்கரிக்க, இந்திரனும் சுக்கிரனை வணங்கினான். அதன்பின், அடங்காத ஆனந்தம் உடைய விண்ணாட்டில் நீங்காது உலவி வரும் அந்த அளவில், கனத்த கச்சு அணிந்த கொங்கை உடைய அரம்பையர் கூட்டத்தில் முன்பு சொன்ன அந்த மங்கை முன் வந்து தோன்றவும், அடக்க முடியாத ஆவலோடு கண்குளிரக் கண்டான். அவளும் கண்டாள்.* **(4.1.9)**

**இருவர் விழியும் நினைவுகளும் ஏக மாக உறப்பற்றி**
**உருகும் அளவில் சங்கற்பத்(து) ஒன்றும் பிழையா உயர்வெள்ளி**
**கருகும் இருள்மூ டுகவென்று கற்பித் திடலும் கற்பாந்தப்**
**பருவம் போல இருள்சூழப் பலரும் அகன்றார் பலதிசையும்.**

**பொழிப்புரை:** *இருவருடைய கண்களும் நினைவுகளும் ஒன்றாக அழுந்தி மூழ்கிக் கசிந்து உருகிய போது, சங்கற்பத்தோடு கூடிய தவம் மிகுந்த சுக்கிரன் 'மறைக்கின்ற பேரிருள் பரவட்டும்' என்று சங்கற்பித்தவுடன் பிரளய காலம் போல் பேரிருள் சூழ்ந்திட, அங்கிருந்த பலரும் பல திசைககளில் சென்றனர்.* **(4.1.10)**

**அன்னாள் இவனை வந்(து)அணைய அழகார் தருநீ ழலில்ஒருபால்**
**துன்னா முயங்கி ஓர்உயிராய்;த் துன்பம் இல்லா இன்பத்தில்**
**நன்னா ளாகச் சதுர்யுகம் நாலு நாலு நடந்ததற்பின்**
**முன்நாம் புரிந்த தரும(ம்)எலாம் முடியும் முடியும் எனும்கருத்தால்.**

**பொழிப்புரை:** *அந்த விச்சுவாசி என்ற தேவ மாது வந்து இவனை அணைந்துகொள்ள, அழகான மரத்தின் நிழலின் ஒருபக்கத்தில் இறுகத் தழுவி ஈருடல் ஆயினும் ஒருமனம் உடையவராய்ச் சிறிதும் துயர் இல்லா சிற்றின்பத்தில் ஆனந்த நாட்களாக சதுர்யுகம் நான்கு நான்கு கழிந்த பின்னர் முன்பு நாம் செய்த அறம் எல்லாம் மிச்சமின்றி முடிந்தது என்னும் எண்ணத்தால்.* **(4.1.11)**

**விழுந்தான் புவன மண்டலத்தில் மெய்யை மறந்தான் இவன்சீவன்**
**கொழுந்தார் மதியின் கலைசேர்ந்து குளிர்ந்த பனியாய் நெல்லாகிச்**
**செழுந்தாள் நெல்லைத் தேசார்ண தேச மறையோன் சமைத்(து)அருந்த**
**எழுந்தா துவுமாய்ச் சுக்கிரன்வந்(து) இவன்பா ரியையின் மகவானான்.**

**பொழிப்புரை:** *பூமண்டலத்தில் வந்து விழுந்தான். தேகத்தை மறந்தான். இவனது உயிர் பிரகாசம் மிக்க சந்திரனுடைய சோதியை அடைந்து குளிர்ந்த பனியாய் நெல்லாகிட, அந்த அரிசியை தேசார்ண நாட்டின் அந்தணன் சமைத்து அருந்த, சாரமாய் உற்ற சுக்கிலமாய்ப் பார்க்கவன் (சுக்கிரன்) கருப்பத்தை அடைந்து இந்தப் பிராமணனின் மனைவியின் இடத்தில் புத்திரனாக ஆனான்.* **(4.1.12)**

**அன்னான் முனிவர் தொடர்ச்சியினால் அரிய தவமோர் மனுக்காலம்**
**பொன்னார் வரைசூழ் வனத்திடையே புரிந்தான் அவன்அங்(கு) ஒருபெடைமான்**
**தன்னால் ஒருசேய் நரவடிவாய்ச் சாத(ன்) ஆனான் அவன்அன்பால்**
**பின்னா நின்ற பேதைமையால் பேரா உண்மை நிலைபெயர்ந்தான்.**

**பொழிப்புரை:** *மைந்தனாய் வந்த அவன் முனிவர் தம் தொடர்பினால் பொன்மயமான மேரு மலையைச் சுற்றியுள்ள காடுகளில் ஒரு மன்வந்தர காலம் வரை தவம் புரிந்தான். அந்த அந்தணன் மைந்தனுக்கு அவ்விடத்தில் பெண் மான் ஒன்றின் மூலம் ஒரு குழந்தை மனித வடிவில் உண்டாயிற்று. அவன் அந்த குழந்தையின் பேரில் கொண்ட அன்பினால் அந்தக் குழந்தைக்கு தனம் ஆயுள் முதலியவை வேண்டும் என்ற மோகத்தினால் சத்தியமான நிலைமையைக் கைவிட்டான்.* **(4.1.13)**

**மற்றும் அள(வு)இல் பிறவிகளில் மருள்வா தனையால் பிறந்(து)இறந்து**
**முற்றும் உயர்கங் கையின்தடத்தோர் முனிவன் மகவாய் முனியானான்**
**பற்றும் உயிர்போய் முதல்காயம் பவன னாலும் வெயிலாலும்**
**பெற்று வளர்த்த பிருகுவின்பால் பெரிதும் உணங்கி என்பாகி.**

**பொழிப்புரை:** *பிறவும் மயக்கம் மிகுந்த எண்ணிலாத பிறவிகளில் பிறந்து இறந்து தெய்வ கதியால் முழுதும் மகிமைவாய்ந்த கங்கையின் கரையில் ஒரு முனிவரின் மகனாய்ப் பிறந்து சிறந்த முனிவர் ஆனான். பற்றியிருந்த உயிர் போய்விட, முதலாவதான உடல் காற்றினாலும் வெயிலினாலும், பெற்று வளர்த்த பிருகு முனிவரின் முன்பு மிகவும் வறண்டு எலும்பாகி.* **(4.1.14)**

**பிருகு முனிவன் பெருமையினால் பிணங்கும் மிருகம் புள்ளினங்கள்**
**அருகும் அணுகல் அறமண்மேல் அங்கம் முழுதும் கெடாதிருப்பத்**
**திருகு மனம்தீர் சமாதியிலே தெய்வ வருடம் ஆயிரம்போய்**
**இருகண் மலரத் தவமுனிவன் இட்ட மகவை எதிர்நோக்கி.**

**பொழிப்புரை:** *பிருகு முனிவரின் மகிமையால் அங்கே உலாவுகின்ற மிருகங்களும், பறவைகளும் அருகில் வராமலிருக்க மண்ணின் மேல் அந்த சுக்கிரனின் முதலாவதான உடல் முழுதும் கெடாது இருப்ப, (பிருகு முனிவர்) மனம் இல்லா நிருவிகற்ப சமாதியில் தேவ வருடம் ஆயிரம் கழிந்த பின், வெளிமுகமாக இரு கண்களும் விழித்தார். எதிரே பிரியமான மகனை நோக்கி.* **(4.1.15)**

**அறத்தின் வடிவாய் அஞ்சலசெய்(து) அருகே இருக்கும் மகற்காணான்**
**வறக்கும் உடலின் கங்காளம் வறுமை வடிவாய் எழுந்ததென**
**நிறக்கும் நிர்ப்பாக் கியம்வடிவாய் நிற்ப(து) என்ன எதிர்கிடப்பத்**
**துறக்கும் மனத்தால் பிருகுவெனும் துய்ய தவத்தோன் தனிநோக்கி.**

**பொழிப்புரை:** *தருமத்தின் வடிவமாய் நமஸ்காரம் செய்து அருகே இருக்கும் மகனைக் காணவில்லை. பசையின்றிக் காய்ந்த உடலின் எலும்பு தரித்திரம் வந்தது போலவும், அபாக்கியம் உடலாக இருப்பது போலவும் (சுக்கிரனின் உடல்) எதிரே வீழ்ந்து கிடக்க. வாசனைகள் சற்றும் இல்லாத பிருகு முனிவர் என்னும் பரிசுத்த தவத்தை உடையவன் கூர்ந்து நோக்கி.* **(4.1.16)**

**மென்தோல் போர்த்த எலுப்புமனை வெளிகள் தோறும் தித்திரிப்புள்**
**சென்(று)ஓ டுவதும் உதரகுகை செறியும் மண்டு கத்திரள்கள்**
**ஒன்றோ(டு) ஒன்று பாய்வதும்கண்(டு) உற்ற வா(று)என் எனஅறிவால்**
**நின்(று)ஓர் கிலன்துஞ் சினன்என்றே நேய மைந்தன் தனைநினைந்தான்.**

**பொழிப்புரை:** *மெல்லிய தோலினால் மூடப்பெற்ற எலும்புக் கூட்டில் இடமுள்ள பாகங்களில் தித்திரி என்னும் பறவை புகுந்து பாய்வதையும், உதரமாகிய குகையின் நிழலில் இளைப்பாறி இருந்த தவளைக் கூட்டங்கள் ஒன்றோடு ஒன்று பாய்ந்து குதித்து விளையாடுவதையும் கண்ட பிருகு முனிவன் நிகழ்ந்த காரணம் என்ன என்று நுட்ப (விவேக) புத்தியால் ஆராயாமல் பிரியமான மைந்தன் இறந்துவிட்டான் என்று எண்ணினான்.* **(4.1.17)**

**அடைத்த காலத்(து) அன்றிஎன(து) அரிய மகவை அகாலத்தில்**
**துடைத்த காலன் தனைக்கணத்தில் துடைப்பன் என்னா விடைப்பாகன்**
**விடைத்த வாபோல் பிருகுமுனி வெகுண்டு சாபம் இடநினைப்பக்**
**கிடைத்த காலன் நடுநடுங்கிக் கிளர்ஜம் பூத வடிவெடுத்து.**

**பொழிப்புரை:** *ஈசுவரன் நியமனம் செய்த காலத்தில் அல்லாமல் (இத்தனை ஆண்டுகள் வாழ வேண்டும் என்று நியமித்த காலத்தைக் கருத்தில் கொள்ளாமல்) எனது சிறந்த மைந்தனை அகாலத்தில் உயிர் பறித்த காலனைக் கணப்பொழுதில் சங்காரம் செய்வேன் என்று விடையேறும் சிவன் மார்க்கண்டனுக்காக எழுந்தது போல, பிருகு முனிவன் சாபம் கொடுக்க நினைத்த போது, அதனை அறிந்த காலன் நடுக்கம் அடைந்து ஐம்பூதங்களில் காணும்படியான பூத உடலை எடுத்து.* **(4.1.18)**

**வதனம் ஆறும் கரம்ஆறும் வாளும் கயிறும் குண்டலமும்**
**பதன கவசத் துடன்மேவிப் பரந்த சேனை புடைசூழ**
**விதன முனியை வந்(து)அணுகி வேண்டிக் கொள்வான் மெத்தென்ன**
**நிதன மூலம் எனும்காலன் நிமல முனிவற்(கு) இவைஉரைத்தான்.**

**பொழிப்புரை:** *ஆறுமுகமும் (இருதுக்கள் ஆறும்) கரங்கள் ஆறும், வாளும், பாசக் கயிறும், குண்டலமும், கவசமும் தாங்கி கிங்கரர் சேனை சூழத் துயரமுற்றிருக்கும் முனிவரை வந்து அணுகிப் பலவிதமாகப் பிரார்த்தனை செய்து சங்காரம் செய்கின்ற காரணன் ஆகிய எமன் மலமற்ற பிருகு முனிவரைப் பார்த்து இவ்வாறு சொல்லத் தொடங்கினான்.* **(4.1.19)**

**ஈன்ற நியதி பாலிக்கும் யாங்கள் நின்னை ஈறில்லா**
**ஆன்ற தவத்தால் துதித்திடுதும் அல்லா(து) இல்லை ஆதலினால்**
**சான்ற தவத்தை வெங்கோபத் தழலால் சுடுதல் தகவன்றால்**
**தோன்றும் ஊழிக் கனலு(ம்)எமைச் சுடாது நின்சொல் சுடவற்றோ.**

**பொழிப்புரை:** *பரமேசுவரனால் ஏற்படுத்தப்பட்ட நியமங்களைத் தவறாமல் பின்பற்றுகின்ற எம் போன்றோர் முடிவில்லாத பெருந்தவ மகிமைக்காக உம்மைப் போற்றுகின்றோம். அந்தக் காரணம் அன்றி வேறொன்றில்லை. எத்தனையோ கஷ்டப்பட்டு அடைந்த பெருந்தவ வலிமையை அற்பமாகிய கொடிய கோபத்தினால் அழித்துக் கொள்வது தகுதியானது அல்ல. பிரளய கால அக்கினியும் எம்மைச் சுடாது என்ற போதில் உம்முடைய சாபமானது எம்மைச் சுடுவதற்கு உரியதோ?* **(4.1.20)**

**குடும்ப வலையில் பிணிப்புண்ட கோடா கோடி உருத்திரரும்**
**நெடும்பங் கயக்கண் மாதவரும் நிலையாம் என்னால் தொலைவுற்றார்**
**இடும்பை உலகில் எனைக்கடந்தார் இல்லை யாரும் எனக்(கு)இரையாம்**
**படும்பல் உயிரும் யாம்படுத்தல் பகுதி யாய பழநியதி.**

**பொழிப்புரை:** *சம்சார வலையில் அகப்பட்டு உழலும் கோடானு கோடி உருத்திர கணங்களும், நீண்ட செந்தாமரை இதழ்போன்ற விஷ்ணு கணங்களும் (தவம் அடைந்தவர்களும்) நீடித்த ஆயுளை உடைய என்னால் மாய்ந்துள்ளனர். துயர் மயமான இந்த உலகத்தில் என்னைக் கடந்து சென்றவர் எவரும் இல்லை. அனைவரும் எனக்கு உணவாக ஆவர். தோன்றும் பல உயிரினங்களையும் சங்காரம் செய்வது இயல்பான பழைய நியதியே.* **(4.1.21)**

எமது விதிஅன்(று) இந்நியதி என்றும் உள்ள படியாகும்
அமல விழியில் செய்வோனும் அருந்து வோனும் இலவாகும்
விமலம் அல்லா விழிக்(கு)இவர்கள் மிகவும் உளவாம் விதிவயத்தால்
தமது நினைவால் பல்லுயிரும் சனிக்கும் கற்ப முடிவில்போம்.

**பொழிப்புரை:** *இந்த நியமம் என்னுடைய நியமம் அன்று. பரம்பொருள் விதித்த என்றும் உள்ள நியதியாகும். களங்கம் அற்ற பார்வையால் காணும்பொழுது செய்வோனும் (கர்த்தாவும்), அருந்துவோனும் (அனுபவிப்பனும் - போக்தாவும்) இல்லை. அசுத்த வாசனைகளுடன் கூடிய மனதிற்கே கர்த்தாவும் அனுபவிப்பனும் உள்ளதாகும். விதியின் வசத்தால் தத்தமது வாசனைகளில் எழுந்த எண்ணத்தால் பல உயிர்களும் பிறக்கின்றன, பிரளய காலத்தில் முடிந்து போகின்றன.* **(4.1.22)**

கற்ப தான மறைதருசிற் கண்ண(து) எங்கே சிரத்தையதாய்
நிற்ப(து) எங்கே உயர்(வு)எங்கே நெடியோர் விளங்கும் இந்நெறிக்கே
அற்ப ரான குருட(ர்)என அயர்வ(து) என்னத் தம்வினையால்
உற்ப விக்கும் செயல்பாராது உருத்துச் சபிக்க உரியாயோ.

**பொழிப்புரை:** *அத்தியயனம் செய்யும் வேதம் உபநிடதங்களினால் உண்டாகும் ஞானப் பார்வையானது எந்த இடம், எங்கே சிரத்தையுடன் நிலை பெறுவது, எங்கே உயர்வு உண்டாவது, எங்கே மகான்களிடம் விளங்கும் அங்கே அந்த நெறிமார்க்கத்தை உடையவரான தாங்களும் அற்பரான கண்ணிலாதவர் போல் மோகம் அடைவது என்ன காரணம்? தத்தமது கர்ம வினையால் இறந்து பிறக்கும் செயலை நோக்காது, கோபம் கொண்டு என்னை சாபம் இடுவதற்கு உரியவர் ஆவீரோ?* **(4.1.23)**

மனமே புருடன் மற்றில்லை மனத்தின் செயலே செயலாகும்
கனசீ வனத்தால் சீவனுமாம் கவர்நிச் சயத்தால் புந்தியுமாம்
சினவும் அபிமா னத்தாலே தீய அகங்கா ரமும்ஆகும்
தனது விகற்ப சாலத்தால் தானே சகமாம் தனிமனமே.

**பொழிப்புரை:** *மனமே சீவன் ஆகும். மற்றொன்று இல்லை. மனம் செய்ததே செய்ததாகும். நீண்ட நாள் வாழ்வினை அடைந்திருப்பதாலே சீவனாம் கிரகிக்கும் நிச்சயத்தால் புத்தியும் ஆகும். வருத்துகின்ற அபிமானத்தாலே தீய அகங்காரமும் ஆகும். தனது விகற்பக் கூட்டங்களால் துயரைத் தருகின்ற ஒப்பற்ற மனமே உலகமாகும்.* **(4.1.24)**

ஆத லால்உன் புதல்வனும்நீ அலை(வு)இல் சமாதி அமர்போதில்
காத லாலே சுக்கிரனாம் காயம் தன்னை இவண்இருத்தி
மீதில் விச்சு வாசிஎனும் விண்ணாட்(டு) அணங்கை மேவியபின்
ஓது புவியில் தேசார்ண ஒருவே தியன்பால் உற்பவித்து.

**பொழிப்புரை:** *மனமோ எல்லாவற்றையும் இயற்றும் ஆதலால், நீவீர் நிர்விகற்ப சமாதியில் இருந்த போது, காமத்தினால் சுக்கிரன் தன்னுடைய தேகத்தை இங்கேயே விடுத்து, மனோரதமாக சுவர்க்கத்தில் உள்ள விச்சுவாசி என்னும் தேவ மங்கையை அடைந்து ஆனந்தம் அடைந்த பின்பு, பூமண்டலத்தில் புகழ்பெற்ற தேசார்ண தேசத்தில் ஒரு அந்தணனுக்கு மைந்தனாகப் பிறந்து,* **(4.1.25)**

**கோசல தேசம் தன்னில் கொற்றவ னாகத் தோன்றி**
**வீசலர் வனத்தி னூடே வேடனாய் உதித்துக் கங்கை**
**மாசல மருவு பாரில் மராளமாய்ப் பௌண்ட ரத்தில்**
**பேசரு நிருபன் ஆனான் பெருங்கதிர்க் குலத்து வந்து.**

**பொழிப்புரை:** *அந்த சுக்கிரன் கோசல நாட்டில் சிற்றரசனாகப் பிறந்து, பின் வாசனை நிரம்பிய காட்டில் வேடனாய்ப் பிறந்து மகிமை வாய்ந்த கங்கை நதி தீரத்தில் அன்னப்பட்சியாகி, பௌண்டரம் என்னும் தேசத்தில் சொல்லுதற்கு அரிய சூரிய வம்சத்தில் பிறந்து சிறந்த அரசன் ஆனான்.* **(4.1.26)**

**சாலுவ நாட்டில் பானு மந்திரத் தலைவன் ஆனான்**
**மேலுயர் கற்ப காலம் விஞ்சையர் வேந்தன் ஆனான்**
**வாலுணர்(வு) உளதாய் அங்கோர் மாதவன் மதலை ஆனான்**
**சேலுகள் சவ்வீ ரத்தில் சேர்ந்தசா மந்தன் ஆனான்.**

**பொழிப்புரை:** *பின்பு சாலுவ நாட்டில் பிறர்க்கு உபதேசிக்கும் சௌர ஆச்சாரியன் ஆனான். பின் கற்ப காலம் வித்யாதரன் ஆனான். அதன்பின் மகாபுத்தி யுள்ளவனாய் அவ்விடத்து மகா தபசியின் மைந்தனாய்ப் பிறந்தான். பின்பு மீன்கள் துள்ளித் திரியும் வயல் நிறைந்த சவ்வீரத்தில் மண்டலாதிபதி ஆனான்.* **(4.1.27)**

**திரிகத்த தேசம் தன்னில் தேசிகச் சைவன் ஆனான்**
**முருகர்சூழ் வேடர் ஊரில் மூங்கில்ஆ ரணியம் ஆனான்**
**அரிணத்தோர் பிறப்பாய்ச் சீர்ண சாங்கலத்(து) அமர லுற்றான்**
**விரிவில்சூழ் பனையின் காட்டில் வெஞ்சினப் பாந்தள் ஆனான்.**

**பொழிப்புரை:** *திரிகத்தம் என்னும் தேசத்தில் சைவ தேசிகன் ஆனான். பின்பு வாசனை நிறைந்த மரங்கள் அடர்ந்த காட்டில் கிராதர் வசிக்கும் கிராமத்தில் மூங்கில் புதர் ஆனான். பின்பு ஓர் பிறப்பில் மானாய் வறண்ட காட்டில் உழன்று திரிந்தான். பின்பு பனைமரங்கள் அடர்ந்த காட்டில் கொடும் கோபம் கொண்ட பாம்பாக ஆனான்.* **(4.1.28)**

**இவ்வண்ணம் அனந்த யோனி இழிவுயர் வாக எய்தி**
**மைவண்ண மனத்தி னாலே வாதனை வயத்தி னின்று**
**மெய்வண்ணக் கங்கை மாட்டோர் மெய்ம்முனிக் குமரன் ஆகிப்**
**பொய்வண்ணப் பொறிகள் என்னும் புன்பகை அறுத்து வென்று.**

**பொழிப்புரை:** *இவ்வாறாகச் செய்த கர்ம வினைகளுக்கு ஏற்ப இழிந்ததும் உயர்ந்ததுமான கணக்கற்ற பிறவிகளை அடைந்து, வாசனை வசமாகக் கட்டுண்டு கலக்கம் பொருந்திய மனதினாலே இப்போது உண்மையான பயனைக் கொடுப்பதான கங்கை நதி தீரத்தில் ஒப்பற்ற உண்மையான முனிவரின் புதல்வனாகப் பிறந்து மித்தையான சப்தம், பரிசம் முதலான விஷயங்களில் செல்லும் ஐம்புலன்களை வென்று.* **(4.1.29)**

வரிசடை பலவும் கட்டி வாசுதே வப்பேர் மேவிப்
புரிதவத்(து) எண்ணூற்(று) ஆண்டு பொருந்தினன் நினது மைந்தன்
திரிதரு கனவை ஒத்த சித்தத்தின் மயக்கம் தன்னைப்
பரிவுறக் காண்டி என்னில் சிற்கணால் பார்த்தி என்றான்.

**பொழிப்புரை:** *பல சடைகளையும் ஒன்றாகச் சேர்த்து சடாமுடி தரித்து வாசுதேவன் என்னும் பெயர் பூண்டு, உனது மைந்தன் எண்ணூறு ஆண்டுகள் தவம் செய்து கொண்டிருக் கின்றான். நிலையில்லாத கனவைப் போல மனதின் மயக்கத்தினை ஆர்வமுடன் காண வேண்டின் ஞானக் கண்ணால் காண்பீராக என்று எமன் கூறினான்.* **(4.1.30)**

காலன்(ன்)ஈ(து) உரைப்பக் கேட்ட கலைமுனி ஞானக் கண்ணால்
பாலகன் செய்கை எல்லாம் பார்த்தனன் கணத்தின் எல்லை
மேலதாம் ஒளியால் தோற்ற மாத்திரம் விளங்கி நல்ல
சீலமார் புந்தி என்னும் தெளிந்தகண் ணடியில் பாய்ந்த.

**பொழிப்புரை:** *எமன் இவ்வாறு கூறியதைக் கேட்ட சகல சாத்திரங்களையும் அறிந்த பிருகு முனிவர் ஞானக் கண்ணால் முகூர்த்த கால அளவில் உயர்ந்த பிரகாச வயமாகத் தோற்றம் மாத்திரமாகச் சிறந்த புத்தி என்னும் கண்ணாடியில் பிரதிபிம்பித்த மைந்தனின் செய்கை அனைத்தையும் கண்டான்.* **(4.1.31)**

வா(ன்)நதிக் கரையி னின்று மந்தரச் சார லில்தன்
மேனியில் வந்து சார்ந்த மெய்ம்முனி வியந்து சால
ஊன(ம்)இல் காலன் தன்னை ஒன்றலா வேண்டு கோளால்
ஆனதோர் காதல் இல்லா அருமுனி பகர்வ(து) ஆனான்.

**பொழிப்புரை:** *பெருமை வாய்ந்த கங்கை நதிக் கரையில் இருந்து மந்தர மலைச் சாரலில் திரும்பி வந்தடைந்த எண்ணத்தை உடையவராய் உண்மையை உணர்ந்த முனிவர் ஆச்சரியம் அடைந்து குற்றம் இல்லாத எமதர்மனைப் பலவாறாகப் பிரார்த்தித்து எந்தவொரு ஆசையும் இல்லாத அரிய தவத்தை உடைய முனிவன் கூறத் தொடங்கினான்.* **(4.1.32)**

முழு(து)உணர் தரும நீதி முதல்வநீ காலம் மூன்றும்
பழு(து)அறத் தெரிதி நீயே பாலராய்ப் பரம ஞானம்
எழுதலில் இளைஞர் ஆகும் எம்மனோர் என்ற லோடும்
கெழுதகை உலகை நக்கும் கேடறு நிலைமைக் காலன்.

**பொழிப்புரை:** *தரும நீதி முழுதும் உணர்ந்துள்ள முதல்வன் நீயே. காலம் மூன்றும் குறையறத் தெரிந்துள்ளீர் நீயே. அறியாதவராய்ப் பேருணர்வு வரப்பெறுதலில் எம்போன்றோர் சிறியவர் ஆவோம் என்று கூறவும், எப்பொழுதும் பிறந்து கொண்டே இருக்கும் உலகத்தை சங்காரம் செய்யும் நிலைபெற்ற எமதர்மன்.* **(4.1.33)**

**மாதவன் கையைப் பற்றி மந்தரக் கந்த ரத்தின்**
**மீது)அகன்று) அமரர் ஆற்றை மேவினன் இவரில் ஆங்கே**
**பேதமாம் வாசு தேவப் பெயரொடும் இருந்த சேயைக்**
**காதலால் முனிவன் கண்டான் காலனும் இதனைச் செய்தான்.**

**பொழிப்புரை:** *பெரும் தவம் உடையவரான பிருகு முனிவரின் கரத்தைப் பற்றிக் கொண்டு மந்தர மலையின் குகையிலிருந்தும் மேலே எழும்பி தேவ நதியாகிய கங்கையின் தீரத்தை அடைந்தனர். வந்துள்ள இருவரில் அங்கே சுக்கிரனினும் வேறான வாசுதேவ பெயர் கொண்டு தவம் செய்துகொண்டிருந்த புதல்வனை அன்புடன் பிருகு முனிவர் கண்டான். எமதர்மனும் கண்டான்.* **(4.1.34)**

**இங்குற்ற சமாதி நீங்கி இவன்எமைக் காண்க என்று**
**சங்கற்பம் செய்த லோடும் சமாதிவிட்டு) இவரை நோக்கி**
**வெங்குற்றம் இல்லா மைந்தன் பணிதலும் விரும்பி யாரும்**
**துங்கத்தோர் ஒருகல் மீது மூவரும் சூழ்ந்தி ருந்தார்.**

**பொழிப்புரை:** *இவ்விடத்தில் சமாதியில் இருக்கும் பிருகு மைந்தன் சமாதி நீங்கி எம்மைக் காண்க என்று எமதர்மன் எண்ணவும். சமாதியிலிருந்து வெளிவந்து குற்றம் இல்லாத மைந்தன் வணங்கிடவும், ஒருவருக்கு ஒருவர் பரிமாறிக் கொள்ளவும், பரிசுத்தம் உடைய மூவரும் ஒரு கல்லின் மீது அமர்ந்திருந்தனர்.* **(4.1.35)**

**வாசுதே வப்பேர் மைந்தன் மற்றிவர் தம்மை நோக்கித்**
**தேசுடை உமது நல்ல தெரிசனப் பேற்றி னாலே**
**மாசறு தவத்தால் நூலால் மகங்களால் தனத்தால் போகா**
**ஏசுறு மோகம் தீர்ந்தேன் இதில்அமுது) இன்பம் செய்யா.**

**பொழிப்புரை:** *வாசு தேவன் என்னும் பெயர்கொண்ட அந்த முனிவன் இருவரையும் நோக்கி, "ஒளி பொருந்திய உங்களுடைய அருமையான தரிசனத்தை அடையப் பெற்றதாலே குற்றமில்லாத தவத்தினாலும், சாத்திரங்களாலும், யாகங்களாலும், செல்வங்களாலும் போகாத இழிவான மோகம் தீரப்பெற்றேன். இதனைக் காட்டிலும் அமிழ்தம் இன்பத்தைத் தராது."* **(4.1.36)**

**என்று)உரை செய்தோன் தன்னை இயன்முனி இனிது நோக்கி**
**நன்று)உயர் ஞானம் சேர்க நவைதரும் மடமை தீர்க**
**உன்தனக்(கு) என்ற லோடும் ஊனக்கண் இரண்டும் மூடிப்**
**பொன்றலில் ஞானக் கண்ணால் புராதனம் எல்லாம் கண்டான்.**

**பொழிப்புரை:** *என்று இவ்வாறு வேண்டிக் கொண்ட மைந்தனை முனிவர் கருணையோடு நோக்கி உனக்கு உயர்ந்த நல்ல ஞானம் அடைவதாகுக, குற்றத்தை விளைவிக்கும் அறியாமை தீர்ந்து போவதாகுக என்று ஆசீர்வாதம் செய்திடவும், அந்த மைந்தன் ஊனக் கண்கள் இரண்டினையும் மூடி அழியாத ஞானக் கண்ணினால் பழமையான சரித்திரம் அனைத்தையும் கண்டான்.* **(4.1.37)**

நீத்தன பிறவி எல்லாம் நிமிடத்தில் ஞானக் கண்ணால்
பார்த்தபின் வியந்து சொல்வான் பகுதியாம் மிகுதி மோகம்
கோத்தஞா லங்கள் ஆகிக் கோரஎன் மனத்தின் ஊடே
ஆத்தமாய் வளரா நின்ற(து) அகோஅகோ ஈ(து)ஒன்(று) என்னே.

**பொழிப்புரை:** *கடந்து போன பிறவிகள் அனைத்தையும் நிமிடத்தில் ஞானக் கண்ணால் பார்த்த பின்பு ஆச்சரியப்பட்டுச் சொல்வான். மகா மாயையால் உண்டான மயக்கத்தால் அடுக்கடுக்காய் செறிந்த சகத் ஜாலங்களாய் வெளிப்படுமாறு இரஜோ குணமயமான எனது மனதில் உண்மையைப் போல் திடமாய் ஒன்றும் விடாமல் வளர்ந்து நின்றது. இது ஒன்று என்னே ஆச்சரியம் அந்தோ.* **(4.1.38)**

கற்பன அனைத்தும் கண்டேன் காண்பன அனைத்தும் கண்டேன்
உற்பவத்(து) அனேக காலம் உழன்றவெந் துயரும் தீர்ந்தேன்
நற்பயன் அறிவைப் பெற்றேன் நாம்இனி ஐய ஏகி
எற்(பு)அடர் மந்த ரத்தில் இருக்கின்ற உடலைக் காண்பேம்.

**பொழிப்புரை:** *அறிய வேண்டிய அனைத்தையும் அறிந்தேன். காண வேண்டிய அனைத்தையும் கண்டேன். இந்த சம்சாரத்தில் அனேக காலம் பிறந்து இறந்து அலைந்த கொடிய துயரங்களும் நீங்கப்பெற்றேன். நல்ல பயனைத் தரக்கூடிய ஞானத்தையும் அடைந்தேன். எனது தந்தையே! நாம் இனிச் சென்று மந்தர மலையில் எலும்பாக இருக்கும் உடலைக் காண்போம்.* **(4.1.39)**

கருமமே ஏது வாகும் காயகங் காளம் தன்னை
இருகணால் நோக்கி இன்பம் எய்துவான் நினைந்தேன் யாதும்
ஒருசெயல் வேட்கை இல்லை ஒழிப்புறு செயலும் இல்லை
வருதி(ற்)ஆல் என்ன அன்னார் மந்தரம் கணத்தில் சேர்ந்தார்.

**பொழிப்புரை:** *நியதியின் இரசனையால் உண்டாகி இருக்கும் அந்த எலும்பு உடலை இரண்டு கண்களால் கண்டு இன்பம் அடைவதற்காக நினைந்தேன். இவ்வுலகத்தில் எந்தவொரு செயலும் செய்வதில் விருப்பமும் இல்லை, இஷ்டம் இன்றி தள்ளத்தக்க செயலும் இல்லை. (அதி திடமான தத்துவ ஞானத்தினால் மித்தை என்று பாதிக்கப்பட்ட பின்பும் பழைய பிராரப்தத் தொடர்ச்சியினால் காண வேண்டும் என்று எண்ணினேன்) என்று கூறவும், அவர்கள் கணப்பொழுதில் மந்தர மலையை அடைந்தனர்.* **(4.1.40)**

முந்துறு சகத்தின் எல்லை தெளிதரு மூவர் தாமும்
வந்துழி முன்னைச் சென்மம் மருவிய உடலை மைந்தன்
அந்தமில் மகிழ்வால் நோக்கி அருந்தவப் பிதாவை நோக்கி
இந்தவன் கங்கா ளம்கொல் ஈன்றுநீ வளர்த்த(து) என்றான்.

**பொழிப்புரை:** *ஆதி காலம் தொட்டு இந்த சகத்தின் கதியைத் தெளிந்து தத்துவம் அறிந்த அந்த மூவர்களும் ஆசிரமத்தை அடைந்த போது, முந்தைய பிறவியில் அடைந்த உடலை மைந்தன் அளவற்ற மகிழ்ச்சியால் நோக்கி, அரிய தவ மகிமையை உடைய தந்தையைப் பார்த்து, இந்த வலிமையான எலும்புக் கூட்டினையா தாங்கள் பெற்று வளர்த்தது என்று புன்னகையுடன் கேட்டான்.* **(4.1.41)**

**பின்னரும் உரைப்பான் ஐய பெறலரும் சுகங்க ளாலே**
**முன்னநீ வளர்த்த காயம் மொய்துயர் அனைத்தும் மாறி**
**இன்னல்கூர் காதல் ஐயம் இதாகிதம் எல்லாம் இன்றி**
**மன்னிய சுக(ம்)அ(து) ஆகி மனம்இறந்(து) இருந்த(து) அன்றே.**

**பொழிப்புரை:** *பின்னரும் தொடர்ந்து கூறுவான். தந்தையே கிடைத்தற்கு அரிய அனேக சுக சாதனங்களினால் முன்பு தாங்கள் வளர்த்த இந்த உடலானது துயரத்தைத் தரக்கூடிய ஆசை, சந்தேகம், அனுகூலம், பிரதிகூலம் எதுவும் இல்லாமல் நிறைந்த ஆனந்தத்தை அடைந்து மனம் ஒழிந்து கிடக்கின்றது.* **(4.1.42)**

**மனமிலா நிலையின் அன்றி மன்னுயிர்க்(கு) இன்பம் உண்டோ**
**கனமுறு சுகசம் போகக் கடலிலே திளைக்க லாகும்**
**அனகபோ் அறிவு சாந்தம் அறிவுளோர் தாபம் நீங்கித்**
**தன(து)உயர் நிலையாம் இந்தத் தனியுடல் வாழ்ந்த(து) அன்றே.**

**பொழிப்புரை:** *மனம் இல்லாத நிலையைத் தவிர, இந்த சம்சாரத்தில் உழலும் சீவர்களுக்கு ஆனந்தம் சற்றும் உண்டாகுமோ? மனமற்ற தன்மையராய், திடமான புத்தி உடையவராய் சொரூபத்தை உணர்ந்தவர் பேரானந்த போகக் கடலில் மூழ்குவர். எல்லாத் துயரங்களும் நீங்கித் தன்னுடைய உயர்ந்த நிலையாம் சீவன் முத்தரைப் போல் இந்தத் தனி உடலானது வாழ்ந்து கொண்டிருக்கின்றது அன்றோ.* **(4.1.43)**

**அருந்தவப் பயனால் இந்த அற்புதம் கண்டேன் என்ன**
**இருந்தஅக் காலன் நோக்கி இவ்வுரை இகந்து மாற்றிப்**
**பொருந்திய உடலில் மன்னர் புரிபுக்கும் அதுபோல் புக்குத்**
**திருந்திய அசுரர்க்(கு) எல்லாம் தேசிகச் செய்கை செய்வாய்.**

**பொழிப்புரை:** *செய்தற்கு அரிய தவத்தின் பயனால் ஆச்சரியமான இந்த மனமற்ற தேகத்தைக் கண்டேன் என்று கூறவும், உடன் இருந்த அந்த எமதர்மன் அவனைப் பார்த்து நீர் கூறியது நல்லதல்ல என்று மறுத்து, வெளியே சென்ற மன்னர் நகரினை வந்து அடைவது போல, (வாசுதேவன் என்னும் பெயரினை விடுத்து) திரும்பவும் இந்த தேகத்தில் சேர்ந்து (முன் கற்பத்தில் செய்த தவப்பயன் காரணமாக நவக்கிரகங்களில் ஒன்றாகவும், அசுரர்களுக்குக் குருவாகவும் இருக்கும் அமைப்பு இருப்பதனால்) பாக்கியம் பெற்ற அசுரர்கள் அனைவருக்கும் குருவாக இருந்து செயலாற்றுவாய்.* **(4.1.44)**

**என்றுசுக் கிரனை ஏவி இவர்இரு வரையும் வாழ்த்தி**
**நின்றுழி மறைந்தான் காலன் நீத்தவர் மறுகி நின்றார்**
**பின்றைய வாசு தேவப் பேருறு கருத்தை நீக்கி**
**வன்தகை வெள்ளி முன்னம் மருவிய உடலில் புக்கான்.**

**பொழிப்புரை:** *என்று கூறி பார்க்கவனை (சுக்கிரனை) ஆதியில் இருந்த தேகத்தில் புகுமாறு கட்டளையிட்டு, இருவரையும் வாழ்த்தி நின்றிருந்தபடியே எமதர்மன் மறைந்தான். தரிசன பாக்கியம் மறைந்ததால் இருவரும் கண்ணீர் விட்டு நின்றனர். பின்னால் அடைந்த வாசுதேவப் பெயரில் உள்ள அபிமானத்தை நீக்கி, வலிமையும் தகைமையும் வாய்ந்த சுக்கிரன் முந்தைய உடலில் புகுந்தான்.* **(4.1.45)**

**வினையது வயத்தி னாலே வெள்ளிசேர் உடலம் தன்னைத்**
**தனைநிகர் பிருகு வேத மந்திர சலத்தால் ஆட்ட**
**நனைதலும் நாடி யெல்லாம் நயம்பெறப் பிராணன் தாங்கி**
**அனையவன் எழுந்து தாதை அடிபணிந்(து) அருகு நின்றான்.**

**பொழிப்புரை:** *கர்ம வினையின் வசத்தினால் சுக்கிரன் அந்தப் பழைய உடலில் சேரவும், தனக்குத் தானே நிகரான பிருகு முனிவர் வேத மந்திரங்களால் மந்திரித்து கமண்டல நீரினால் நீராட்ட, மக்கின அந்த தேகத்தின் நரம்புகள் பசை (ஈரம்) பற்றியவுடன் ஆரோக்கியமாக மாறி பிராணன் சஞ்சரிக்க, அந்தப் பழைய சுக்கிரன் எழுந்து வந்து, தந்தையின் திருவடிகளைப் பணிந்து அருகில் நின்றான்.* **(4.1.46)**

**பிருகுவும் மைந்தன் தானும் பிறங்குமந் தரத்தில் கானில்**
**திருகிய சித்தம் என்னும் தீப்பகை தீர மாற்றி**
**வருதிரை யிலாத நீர்போல் மாசறு நிலையில் வாழ்ந்தார்**
**கருணைமா முகிலே என்று கற்றுணர் வசிட்டன் சொன்னான்.**

**பொழிப்புரை:** *பிருகு முனிவரும் பார்க்கவ முனிவரும் (சுக்கிரனும்) தவம் செய்வதற்குத் தகுதியாய் விளங்கும் மந்தர மலையின் காடுகளில் யதார்த்தத்திலிருந்தும் மாறுபட்ட மனம் என்னும் கொடிய பகைவனை முழுதும் அழித்து, அலைகள் இல்லாத கடல்போல, சீவன் முத்தி நிலையில் ஆனந்தமாய் இருந்தனர். கருணை மேகமே! என்று இவ்வாறு சகலமும் கற்று உணர்ந்த வசிட்ட முனிவர் இராம பிரானுக்குக் கூறினார்.* **(4.1.47)**

**(திதிப் பிரகரணத்தில் சுக்கிரன் கதை முற்றும்)**

# (ii) தாம வியாள கடர் கதை

*முந்தைய சுக்கிரன் கதையில் சித்த மயமாதலே சம்சாரம் என்று சொல்லப்பட்டது. இந்தக் கதையில் சித்த மயமான சம்சாரம் விவேகத்தால் சித்தம் சாந்தி அடைந்தால் அழியும் என்றும், விவேகம் இல்லை என்றால் சம்சாரம் விருத்தியாகும் (வளர்ச்சி அடையும்) என்றும் சொல்லப்படுகின்றது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**மீண்(டு)உரை செய்வான் முற்றும் விசாரத்தோர் தொழில்தீர் நெஞ்சோர்**
**நீண்டதோர் மனனம் விட்டோர் நிகழ்சுக அறிவை உள்ளோர்**
**பூண்டுள காட்சி தன்னில் போவபோய்க் கொள்வ கொண்டோர்**
**காண்தகு தன்னைக் கண்டோர் காணோதோர் தனைக்கா ணாதோர்.**

**பொழிப்புரை:** *மறுபடியும் வசிட்ட முனிவர் அருளிச் செய்வதாவது... நிரந்தரமான விசாரம் உடையவர், மனதின் தொழில்களை விட்டவர், முன்பு அனுபவித்தவை எவற்றையும் எப்போதுமே எண்ணாதவர், விளங்குகின்ற ஆன்ம சிற்சொரூபத்தில் அமைதி உற்றவர், இருப்பது போல் தோற்றும் திருசியத்தை (காணப்படும் பொருள்களை) மீண்டும் அணுகாது விட்டவராய், தன்னை அறிந்து தன்னில் நிற்பவராய், ஆத்மாவைக் கண்டு உணர்ந்தவர், ஏனைய அனாத்ம விஷயங்களைக் காணாதவர் இவரே பெரியவர்.* **(4.2.1)**

**சீவனாய் இருந்து காணும் சிற்பர தத்து வத்தே**
**மேவிய நனவை உற்றோர் வேம்பவ மோக மார்க்கத்(து)**
**ஓவலில் சுழுத்தி உற்றோர் ஓர்முதிர் நிராசை யாலே**
**பாவனை நலனில் தீங்கில் பயிலும்வா தனையை மாய்த்தோர்.**

**பொழிப்புரை:** *சீவன் முத்தியோடு கூடி வாழ்பவராய் இருந்து சுய வடிவமாகக் காணத் தகுந்த சின்மய மேலான தத்துவத்தில் பொருந்திய சாக்கிரத்தை (விழிப்பினை) உடையவர். கொடிய அஞ்ஞான விகாரமாகிய சம்சாரத்தில் நீங்காத ஆழ்துயில் (நித்திரை) உடையவர். முதிர்வடைந்த தீவிர வைராக்கியத்தினாலே பாவனை வடிவமான சுக போக பரலோக விஷயங்களிலும், சொற்ப சுகபோகமான இகலோக விஷயங்களிலும் சிந்தித்து உழலும் வாசனையை அடியோடு ஒழித்தவர் பெரியவர்.* **(4.2.2)**

**வாதனை வலையைச் செற்று மனப்பந்தம் மாற்றி விட்டால்**
**காதல்செய் தேற்றின் வித்தின் கலங்குநீர் தெளிவ(து) என்ன**
**மேதகு விஞ்ஞா னத்தால் மெய்ம்மையாம் சுபாவம் தானே**
**ஏதம்(ம்)அற்(று) ஒளிரும் முன்னம் இயம்பிய இயல்பி னோர்க்கே.**

**பொழிப்புரை:** *முன்பு கூறிய பெரியவர்களுக்கு, வாசனைகளின் வலையை வைராக்கியத்தினால் அறுத்து, மனதிலுள்ள பந்தத்தை (இருதயக் கிரந்தியை-அகங்கார*

*முடிச்சினை) ஒழித்து விட்டால், தெளிவடைவதற்குச் சாதகமாகக் கலங்கிய நீரினைத் தேற்றாம் பொடி தெளிய வைப்பது போல, அஞ்ஞானத்தை அழிக்கும் அபரோட்ச ஞானத்தினாலே உண்மையான தன்னுடைய சுபாவம் (நிரதிசய ஆனந்தமாக) துன்பம் அற்று ஒளிரும் (காணப்படும்). (மனோ நாசமும் வாசனை ஒழிவும் வந்த அனுபவத்தினால் சுயசொரூபம் விளங்கும் என்பது பொருள்)* **(4.2.3)**

**சங்கம்செய் மயல்போய்த் தொந்தம் தவிர்ந்(து)ஒன்றைச் சார்வ(து) இன்றிச்**
**சிங்கிசெய் கூட்டி னின்றும் சேணுறச் செல்லும் புள்போல்**
**துங்கமோ கத்தி னின்றும் தூய்மனம் வெளியில் போந்து**
**பங்கமாம் ஐயம் தீரப் பற்றெனும் அனைத்தும் தீரும்.**

**பொழிப்புரை:** *விருப்பு வெறுப்பு முதலியவற்றினால் ஏற்படும் மயக்கமும், அந்த விஷயங்களின் பற்றும் ஒழிந்து, சுக துக்கம் முதலான துவந்துவம் (இருமைகள்) அகன்று, யாதொன்றையும் சார்ந்திருக்காமல், பந்தப்படுத்திக் கொண்டிருந்த கூட்டிலிருந்து புறப்பட்டு ஆகாயத்தில் விருப்பப்படி செல்லும் பறவை போல, உன்னதமான மோகத்திலிருந்தும் பரிசுத்தமான மனம் வெளியில் புறப்பட்டு, துன்புறுத்திய சந்தேகம் அனைத்தும் தீர்ந்து, பிராந்திகள் யாவும் ஒழிந்து சுகம்பெறும்.* **(4.2.4)**

**ஆன்றஅம் மனம்பூர் ணத்தை அடைந்துபூ ரணவெண் திங்கள்**
**போன்றுற விளங்கும் இந்த நிலையிலே பொலிவுற் றோர்கள்**
**மூன்றுமூர்த் திகளாம் தேவ முதல்வர்க்கும் கருணை செய்வர்**
**ஊன்றிய விசாரத் தாலே உயர்பொருள் எய்தல் வேண்டும்.**

**பொழிப்புரை:** *மாட்சிமை உடைய அந்த மனமானது உள்ளும் புறமும் அறிவாகவே செறிந்து, வெண்ணிற முழு நிலவினைப் போல விளங்கும். இந்த நிலையிலேயே நிற்பவர்கள் மும்மூர்த்திகளாம் முதல்வர்களுக்கும் கருணை செய்வர். ஆர்வமுடன் நிரந்தரம் செய்யும் தத்துவ ஆராய்ச்சியினால் உயர்ந்த பரமான்ம வஸ்துவை அடைதல் வேண்டும்.* **(4.2.5)**

**உல(கு)எது நாம்ஆர் என்ன உற்றுநின்(று) உணரும் மட்டும்**
**கலகமார் பிறவி மோகம் கங்குல்போல் மூடி நிற்கும்**
**அலகறு உலகும் தாமும் அழி(வு)இல்சித் சோதி என்றே**
**சலனமில் கண்ணால் கண்டோர் தத்துவ நிலைமை கண்டோர்.**

**பொழிப்புரை:** *இந்தப் பிரபஞ்சத் தோற்றம் எவ்வாறு உண்டாயிற்று? நாம் யார்? என்பதனை அழுத்தமாக ஊன்றி ஆராய்ச்சி செய்து உணர்கின்ற வரையில், விருப்பு வெறுப்புகளால் துயரத்தைத் தருகின்ற பிறவியாகிய மயக்கம் இரவு போல மூடிக் கொண்டிருக்கும். எண்ணற்ற அண்டங்களும் இந்த உலகும், சீவர்களாகிய நாமும் அழிவில்லாத சித்சோதி என்று சலனம் இல்லாத விவேகமாம் கண்ணால் கண்டு சுய வடிவத்தை உணர்ந்தவரே தத்துவத்தின் நிலைமையை அறிந்தவர் ஆவர்.* **(4.2.6)**

அகிலசத் தியுமாய் ஒன்றாய் அனந்தமாம் அறிவு தானே
சகலபா வனைக்கும் உள்ளாம் எனக்கண்டோர் தம்மைக் கண்டோர்
பகர்வுறு நானும் இல்லை பிறி(து)இலை பரமே உண்(டு)என்(று)
இகமுற உள்ள(து) இல்ல(து) இடையுறக் கண்டோர் கண்டோர்.

**பொழிப்புரை:** *சகல சத்திகளையும் உள்ளடக்கியதாய், பேதமற்று ஒன்றாய், எல்லையற்றதாய் விளங்கும் சித்து (அறிவு) ஒன்றே பாவனா விஷயமான அனைத்திற்கும் உள்ளாக இருப்பது என்று தெளிந்து உணர்ந்தவர் தம்முடைய யதார்த்த வடிவத்தைக் கண்டவர். சொல்லப்படும் அகங்காரம் உடைய 'நான் என்பதும் இல்லை, பிறவும் இல்லை, மாறுபாடற்ற பிரம்மம் ஒன்றே உண்டு' என்று இவ்வுலகத்தில் உள்ள சத்து அசத்துகளின் மத்தியமாய்த் தம்மைக் கண்டவரே தமது உண்மை வடிவினைக் கண்டவர் ஆவர்.* **(4.2.7)**

முயல்(வு)அறத் தாமே தோன்றும் மொய்திசைப் பொருள்கள் தம்மில்
மயல்அறச் செல்லும் கண்போல் மாசறு தீரர் புந்தி
செயல்களில் செல்லும் அன்றே தெளிந்துபல் போகம் துய்த்தால்
துயர்செயா(து) அறிந்து சேர்ந்தால் சோரரும் தோழர் ஆவர்.

**பொழிப்புரை:** *முயற்சி இன்றியே எல்லா திசைகளிலும் தாமே தோன்றக்கூடிய பொருள்களிடத்து விருப்பு வெறுப்பு இன்றிச் செல்லும் கண்போல், காமம் முதலான குற்றங்கள் இல்லாத அறிஞனாகிய தீரனது புத்தி, செய்ய வேண்டிய செயல்களில் விருப்பு வெறுப்பு இன்றிச் செல்லும். நன்கு தெளிந்து உணர்ந்து பல போகங்களை அனுபவித்தாலும் அது துயர் தருவதற்குக் காரணம் ஆகாது. அறிந்து பழகினால் திருடரும் நண்பரே ஆவர்.* **(4.2.8)**

நெறியிடை வந்தோர் கூட்டம் நெறிசெல்வோர் காணும் நேர்போல்
செறிதரு போகம் எல்லாம் சேதனர் காண்பர் அன்றே
அறிவினால் மனதை வென்றோர் அற்பமே பெரிதாய்க் காண்பர்
பிற(கு)அது துயராம் என்றே பெரியன போகம் வேண்டார்.

**பொழிப்புரை:** *செல்லுகின்ற வழியில் தானாக வந்த ஜனக்கூட்டத்தை அவ்வழியில் செல்பவர் எந்தவொரு பற்றும் இன்றிக் காண்பது போல, வினை வசத்தால் தானே வந்து அமைந்த போகங்கள் அனைத்தையும் உணர்வு வடிவமாக நின்ற அறிஞர் பற்றில்லாமல் காண்பர். எல்லாம் பிரம்ம வடிவமே என்று அறிவினால் மனதை வென்றவர்கள் சிறிது கிடைத்தாலும் அதைப் பெரியதாய்க் கொள்வர். பெரியதான போகங்கள் பின்னால் துயரத்துக்கு இடமாகும் என்று அவற்றை வேண்டமாட்டார்கள்.* **(4.2.9)**

நலங்கிய சிறைதீர் மன்னன் நகர்மட்டும் மகிழ்வு கூரும்
அலங்கல்வேல் வெற்றி வேந்தன் அவனியும் சிறி(து)என்(று) எண்ணும்
கலங்குறு மனதை வெல்வோர் கைகையால் கால்கள் காலால்
இலங்குபல் பல்லால் அங்கம் யாவும்இப் படிமுன் சேர்க்க.

**பொழிப்புரை:** *துன்பத்தை அடைந்து சிறையில் இருந்த சிற்றரசன் விடுதலை அடைந்து சிறிய கிராமம் கிடைத்தாலும் மகிழ்வான். மாலை அணிந்த வேலினை உடைய வெற்றியே பொருந்திய மன்னவன் பெரிதான பூமண்டலமே கிடைத்தாலும் சிறிது என்று எண்ணுவான். விஷயங்களால் கலங்கும் மனதை வெற்றி கொள்ள முயற்சி செய்பவர் கரத்தைக் கரத்தாலும் (பிசைந்து கொண்டாயினும்), கால்களைக் காலாலும் (உதைத்துக் கொண்டாயினும்) பற்களைப் பற்களாலும் (கடித்துக் கொண்டாயினும்) இப்படி உடல் முழுவதும் ஒன்றாகச் சேர்த்து வருத்தியாவது மனதை வெற்றி கொள்ள வேண்டும்.* **(4.2.10)**

**பகைமனம் வெற்றி அல்லால் பவக்கடல் வங்கம் இல்லை**
**வகைபடும் உலகில் செல்வர் வரிசையோர் மறுவி லாதோர்**
**மிகையுயர் புருடர் கீர்த்தி மிக்கவர் என்போர் உள்ளக்**
**குகையிடைத் தொழில்கள் நஞ்சார் கொடுமனப் பாம்பைக் கொன்றோர்.**

**பொழிப்புரை:** *பகையாகிய மனதை வெற்றி கொள்வதைத் தவிர பிறவிக் கடலைக் கடக்கும் கப்பல் வேறு ஒன்றில்லை. பலவிதமாகத் தோற்றும் உலகில் செல்வந்தர், மதிக்கத் தக்கவர், களங்கம் அற்றவர், உயர்மேன்மை அடைந்தவர், புகழ்மிக்கவர் என்பவர்கள், உள்ளமாகிய குகையில் விருத்திகள் என்ற விஷத்தை உடைய கொடிய மனமாகிய பாம்பினைக் கொன்றவர்கள் ஆவர்.* **(4.2.11)**

**மனம்எனும் வினையை வென்றோர் மலர்அடி முடிமேல் கொள்வாம்**
**இனநர கங்கள் என்னும் இராச்சியத்(து) இருந்து வாழ்ந்த**
**முனம்உறு பாவம் என்னும் மும்மதக் களிற்றி னாலும்**
**கனமயல் படைக ளாலும் கரணமாம் பகையை வெல்வாய்.**

**பொழிப்புரை:** *மனமாகிய பாம்பினை வெற்றி கொண்டவர்களின் மலர்ப் பாதங்களைத் தலைமேல் கொள்வாம். துயரம் தருகின்ற நரகங்கள் என்னும் இராச்சியத்தில் இருந்து வாழ்ந்து வந்த, வெகுகாலம் தொடர்ந்து வரும் பாவம் என்கின்ற மூவாசைகள் என்னும் யானைகளாலும், கனமான மயக்கம் (பிராந்தி) என்கின்ற சேனைகளாலும் சூழ்ந்த இந்திரியங்களாம் பகைவனை எப்பாடுபட்டாவது வெற்றிகொள்வாய்.* **(4.2.12)**

**துனிமனச் செருக்கு மாய்த்துத் தொடர்பொறிப் பகையை வெல்லில்**
**பனிபடு பதுமக் கான்போல் படர்ந்தவா தனைகள் மாளும்**
**தனிஅறி(வு) ஒன்று என்றே சாதித்(து)இம் மனம்வெல் மட்டும்**
**கனிஇருள் செறியும் பேய்போல் கருத்தில்வா தனைவந்(து) எய்தும்.**

**பொழிப்புரை:** *துன்பத்தைத் தரக்கூடிய மனதின் அகங்காரத்தை நாசம் செய்து, அதனோடு தொடர்ந்து (சேர்ந்து) ஆட்டம் போடும் இந்திரியங்களாகிய பகையை வெற்றி கொண்டால், பனி தோய்ந்த தாமரைக் காடு நாசமாவது போல, நெருங்கிப் படர்ந்த போக வாசனைகள் மாய்ந்து போகும். எதனோடும் கூட்டு இல்லாத சித்து வடிவம் ஒன்றே என்ற திட அப்பியாசத்தால் எதுவரையில் மனம் வெல்லப்படவில்லையோ அதுவரையில் பேரிருளில் உலவும் பேய்கள் போல், இருதயத்தில் வாசனைகள் சுழன்று திரியும்.* **(4.2.13)**

மந்திரி எனலாம் உண்மை மருவுறு விசாரத் தாலே
இந்திரி யங்கள் என்னும் இடர்ப்பகை அறுத்த லாலே
தந்திரி எனலாம் இட்டம் சமைத்தலால் ஏவ லாளாம்
நொந்(து)இரி கிலாத உள்ளம் நோக்கிய விவேகத் தோர்க்கே.

**பொழிப்புரை:** *நைந்து கெடாத சத்துவ மனத்தினால் தனது சொரூபத்தை அறிந்த மகான்களுக்கு மனதினை மெய்ப்பொருளை அடைய வைக்கும் ஆராய்ச்சியாலே மந்திரி என்று சொல்லலாம். துயரத்தைத் தரக்கூடிய இந்திரியங்கள் என்னும் பகைவர்களை வெற்றி கொண்டதால் சேனாதிபதி என்று கூறலாம். வேண்டிய காரியத்தைச் சம்பாதித்துத் தருவதால் வேலைக்காரன் என்று கூறலாம்.* **(4.2.14)**

ஆலிக்கும் இன்பத் தாலே அன்புறு மனைவி ஆகும்
பாலிக்கும் இயல்பி னாலே பாவனத் தந்தை யாகும்
சீலிக்கும் உறுதி யாலே தேடரும் நட்பும் ஆகும்
தூலிக்கும் வினைகள் இல்லாத் தூய்மனம் விவேகத் தோர்க்கே.

**பொழிப்புரை:** *விஷயங்களால் திடப்பட்டு 'நான்' 'எனது' என்னும் வாசனைகள் (அபிமானம்) இல்லாத பரிசுத்த மனமானது மகான்களுக்கு, தழுவி சுகம் தரக்கூடிய அன்புடைய மனைவி போல்வதாகும். காப்பாற்றும் தன்மையினால் பவித்திரமான தந்தை என்னலாகும். மிகுந்த சீலம் பொருந்திய விசுவாசத்தாலே தேடற்கு அரிதான நண்பர் போல்வதாகும்.* **(4.2.15)**

நல்லன நூல்க ளாலே நல்லன நெறியை நோக்கி
நல்லன தியானம் செய்து நல்லனு பவத்தை நண்ணி
நல்லன சித்தி நல்கும் நல்லதாய்த் தன்னை மாய்த்து
நல்லதோர் தாதை யாகி நல்லவர்க்(கு) உள்ளம் தானே.

**பொழிப்புரை:** *விவேக புத்தி உடையவர்களுக்கு, விசாரத்தினால் ஞானத்தைத் தரக்கூடிய சாத்திரங்களாலே நல்ல மார்க்கத்தை நோக்கிச் செல்ல வழியமைத்து, நல்லதோர் முடிவைத் தந்து, சுயஅனுபூதி அடையச் செய்து, தன்னை முற்றிலும் அழித்து ஆனந்த மோட்சத்தை அடைவிக்கும் மனமானது தந்தையைப் போன்றதாம்.*

**(4.2.16)**

துணிவுறு திடமாய்ச் சாலத் துகள்அற நோக்கி யாதும்
பிணியறக் கண்டு ஞானப் பேருணர்(வு) உணர்த்தப் பட்டால்
பணிவுறும் இதயம் தன்னில் பழு(து)இல்தன் குணத்தி னாலே
மணியென விளங்கா நிற்கும் மாசறு உள்ளம் தானே.

**பொழிப்புரை:** *விஷயங்களாகிய களங்கம் அற்ற மனமானது சற்றும் சந்தேகம் இன்றி மிகவும் ஆராய்ச்சி செய்து மிகமிகத் திடமாய் அதனாலே எந்தவொரு குற்றமும் இன்றித் தெளிந்து 'அனைத்தும் சின்மயம் அதுவே நீ' என்ற பேருணர்வு உணர்த்தப் பட்டால், பணிவுடைய இதயமாகி, பழுதில்லாத சமம் முதலிய குணங்களினாலே வஜ்ஜிர மணி போலப் பொலிந்து நிற்கும்.* **(4.2.17)**

**மனமணி பேதச் சேற்றில் மறைந்(து)ஒரு வருக்கும் தோன்றாக்
கனமுறு விவேக நீரால் கழுவினால் சித்தி காட்டும்
வினவுறு விவேக வன்பால் மெய்ம்மையை மதியால் கண்டு
சினமுறு பொறியை வென்று தீர்(வு)அரும் பிறவி தீர்வாய்.**

**பொழிப்புரை:** *மனமாகிய வஜ்ஜிர மணி மலின வாசனை என்னும் துவைதச் சேற்றில் களங்கத்தை அடைந்து ஒருவருக்கும் புலப்படாது, ஆழமாக நிரந்தரம் செய்யும் திட விசாரத்தால் வரும் விவேகம் என்னும் நீரினால் கழுவினால் மோட்சத்தைத் தரும். தத்துவ ஆராய்ச்சியால் உண்டாகும் விவேக புத்தியால் உண்மையைக் கண்டு, பகையாகிய இந்திரியங்களை வென்று தொலைப்பதற்கு அரிதான பிறவியைத் தீர்ப்பாய்.* **(4.2.18)**

**இத்திறத்(து) இவன்நான் என்றே இறுகிய அறுதி வீணாம்
அத்திறம் புந்தி யாலே அழுத்தமாய் அகற்றி மற்ற
மெய்த்திறம் பற்றி நீயாம் அதினின்று விழைந்த செய்வாய்
பொய்த்திற மனத்தி னோடே புசித்தவை பந்தம் ஆகா.**

**பொழிப்புரை:** *இந்தத் தூல தேகம் முதலியவைகளிடத்தில் 'நான்' என்றே திடமாகி உள்ள முடிவானது வீணானது (பயன் இல்லாதது). அந்த தேகான்ம புத்தியை விவேக புத்தியாலே மீண்டும் வராதபடி திடமாக அகற்றி, சச்சிதானந்த பரமான்ம வடிவத்தைப் பற்றி, சாட்சி வடிவமான உன்னுடைய நிலையில் இருந்து கொண்டு, விடயங்கள் மித்தை என்று கொண்டு வினை வசத்தால் வரப்பெற்றதை விடயங்களோடு சேராத மனத்தினால் அனுபவித்தவை எல்லாம் பந்தத்தைத் தராது. (கட்டுப்படுத்தாது)* **(4.2.19)**

**(வேறு)**

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

**தாம னோடுவி யாளக(ட்) அசுரர் சாரு நீதியை நீயணு கா(து)ஒழி
வீம பாசதி(ட்) அசுரர் நீதியை மேவி வேதனை தீர்கென ஓதலும்
நாம மேபகர் தானவர் ஆர்எனா ஞான வீரன் வினாவிட மாமுனி
யாம்அ(து) ஓதிட ஆதர மாகிய(து) ஏது நீஅதில் மேவென ஓதுவான்.**

**பொழிப்புரை:** *தாமன் (கயிறு), வியாளம் (பாம்பு), கடர் (பாய்) என்னும் பெயர்கொண்ட அசுரர்கள் சார்ந்த நியாயத்தை இராகவனே! நீ பொருந்தாமல் ஒதுக்கிவிடுவாய். வீமன் (கம்பீர சொரூப நிஷ்டன்), பாசன் (எப்பொழுதும் சொரூபமாகவே இருப்பவன்), திடன் (திடப் பிரஞ்ஞன்) இவர்களுடைய வழிமுறையைச் சார்ந்து துன்பம் தொலைத்து ஆனந்தம் அடைவாயாக என்று கூறவும், இராம பிரான் "தேவரீர் கூறிய பெயர்கொண்ட அந்த அசுரர்கள் யார்?" என்று கேட்கவும், மகா தவசியான வசிட்ட முனிவர் "யாம் அதனைத் தெரிவிக்கிறோம். உனக்கு விருப்ப மானது எதுவோ அதில் பொருந்துவாய்" என்று சொல்லத் தொடங்கினார்.* **(4.2.20)**

**சஞ்ச ரித்துயர் பாதலம் மேவிய சம்ப ரப்பெய ரான்ஒரு தானவன்
வஞ்ச முற்றிய மாயையில் வாழ்பவன் வன்ப டைக்கட லாம்அம ரேசனை
எஞ்ச லித்திட வானவர் தாமுமே இவன்சு முத்தியில் ஆகிய போதினும்
விஞ்ச அம்பரம் மேவிய போதினும் வெம்பி எற்றினர் தானவர் மாளவே.**

**பொழிப்புரை:** *எல்லா உலகங்களிலும் உலவி வந்து, வளம் நிறைந்த பாதாள லோகத்தில் வாழும் சம்பரன் என்ற பெயர்கொண்ட அசுரன் ஒருவன் இருந்தான். வஞ்சனை நிறைந்து மாயா காரியங்கள் செய்து கொண்டு காலம் கழிப்பவன். கடல்போன்ற சேனைகளைக் கொண்டு இந்திரனைத் துன்புறுத்திக் கொண்டிருக்க, இந்த அசுரன் உறக்கத்தில் இருந்தபோதும், மற்ற தேசங்களுக்குச் சென்றிருந்தபோதும், தேவர்கள் இவனது சேனைகளை அடித்து அழியும்படியாகத் துரத்தி விட்டனர்.* **(4.2.21)**

**ஆய வன்பைஅ றிந்(து)உயர் சம்பரன் ஆகு வன்துரு மன்திறல் முண்டிகன்**
**ஏய இங்(கு)இவர் தம்படை முன்செல ஏவி னன்பெரி(து) அங்(கு)எவ ரும்பட**
**மேய அண்டர்(ர்)அ டர்ந்தனர் என்றலும் வேக மிஞ்சிய சம்பரன் வந்திட**
**மாயை விஞ்சைநி றைந்தவன் என்(று)எதிர் மாகர் நின்றிட அஞ்சிஒ துங்கினார்.**

**பொழிப்புரை:** *இவ்வாறு தேவர்கள் செய்த கொடுமையை அறிந்து, மாயா காரியங்களில் சிறந்த சம்பரன் என்ற அந்த அசுரன், அங்கன், துருமன், ஆற்றல் உடைய முண்டிகன் இவர்கள் தலைமை ஏற்று நடத்த தமது படைகளை ஏவினான். இந்தப் போரில் எவரும் மாளும் வண்ணம் தேவர்கள் மோதி வென்றனர் என்று கேட்டலும், அதி வேகம் உடைய சம்பரன் தேவர்களைத் தேடி வந்திட, இவன் மாயையில் வல்லவன் என்று தேவர்கள் அவன் எதிரில் நிற்க அஞ்சி ஒதுங்கினர்.* **(4.2.22)**

**மேரு கந்தரம் உம்ப(ர்)அ டைந்தனர் வீதி எங்கு(ம்)அ ரம்பையர் நின்(று)அழ**
**யாரும் இன்றிய இந்திரன் தன்பதி ஈசன் வென்றபு ரங்க(ள்)எ னும்படி**
**நேரும் அங்கிசொ ரிந்துதி ரும்பினன் நீ(டு)அ கன்(று)உள அந்தணர் பின்றையும்**
**ஊருள் வந்தனர் என்றுபெ ரும்படை ஓய்வி லன்பெரி(து) உந்தினன் விஞ்சையால்.**

**பொழிப்புரை:** *தேவர்கள் மேருமலைக் குகைகளில் சென்று ஒளிந்து கொண்டனர். தெருக்களில் எல்லாம் அரம்பையர், மேனகை முதலான தேவ மாதர்கள் நின்று கொண்டு அழுது கொண்டிருக்க, இந்திரனுடைய பட்டணம் யாரும் இல்லாமல், ஈசன் சிரித்து அழித்த முப்புரங்கள் என்று சொல்லும்படி, சம்பரன் அந்த நகரைத் தீயிட்டுக் கொளுத்தி திரும்பித் தன்னிடத்திற்கு வந்தான். வெகுதூரம் சென்ற தேவர்கள் பின்பு நகருக்குள் வந்தனர் என்று கேட்டு, மாயையில் வல்லவர்களுடன் பெரிய படைகளைத் தொடர்ந்து ஏவினான்.* **(4.2.23)**

**ஆவ தாகிய தானவர் பற்றற ஆதி தேவர்கள் மோதினர் மற்றது**
**தாப மாயசு ரேசன்வி தித்துள தாம னோடுவி யாளக டப்பெயர்**
**மூவர் மாயையி னால்வர லுற்றவர் மூரி மேருஉ லாவுவ(து) ஒப்பவர்**
**பாவ னாவச வாதனை அற்றவர் பாச மாம்அபி மானநி னைப்பிலர்.**

**பொழிப்புரை:** *சம்பரன் என்ற அசுரன் மாயையால் சிருட்டி செய்து அனுப்பிய வீரர்கள் எல்லாம் அடியோடு நாசமாக இந்திரன் உள்ளிட்ட தேவர்கள் போர்செய்து விரட்டினர். மடிந்து போனதைக் கேட்டுக் கோபத்தை அடைந்த சம்பரன், மாயா வித்தையால் சிருட்டித்த தாமன், வியாளன், கடன் என்ற பெயர்கள் கொண்ட மூவர் வெளிவந்தனர். மேரு மலையே உலாவுவது போல்வர். பாவனை செய்யச் செய்ய வாசனைகளே இல்லாதவர். தேகம் முதலியவற்றில் யான் எனது என்னும் அபிமானமே இல்லாதவர்.* **(4.2.24)**

சாதல் வாழ்தல்க ளிப்புறல் சோர்வுறல் தாம வாகைகொள் வெற்றிகள் தோல்விகள்
போதல் மீடல்அ னைத்தையும் நாடலர் போர்செய் வோரைமு ருக்குவர் கேவலம்
ஆத லால்இவர் பற்றலர் சேனையை ஆசு கங்கொடு(டு)அ ழிப்பர்அ ழிப்புறார்
பாத லாசுரன் வெற்பினர் வேலையர் பாரு ளார்இவர் பின்செல ஏவினான்.

**பொழிப்புரை:** *இறப்பது, வாழ்வது, மகிழ்வது, வாடுவது, வெற்றி மாலை சூடும் வெற்றி, தோல்வி, முன்னால் போவது, பின்னால் போவது எதனையும் நினையாதவர். போர் செய்பவர்களை மாத்திரம் துரத்தி அடிப்பவர். ஆதலால் இம்மூவர் பகைவரின் சேனைகளை நாசம் செய்வர். ஆனால் பகைவர்களால் இவர்கள் நாசம் ஆகார் என்று எண்ணிய சம்பரன், மலைகளில் வாசம் செய்வோர், கடலில் இருப்பவர்கள், பூமியில் பல இடங்களில் இருப்பவர் என்று எல்லா அசுரர்களையும் திரட்டி ஆயுதம் அளித்து இந்த மூவரின் பின்னால் போருக்குச் செல்லுமாறு ஏவினான்.* **(4.2.25)**

தான(வ) அதிபன் விட்டநெ டும்படை தாள்க ளோடுகி ரித்திரள் வந்தென
மீன வேலைப ரப்பில்வி ரிந்தென மேவி னார்கள்சி ருட்டிமு டிந்தென
வான நாடரும் அப்படி வந்தனர் வாயு வோடுநெ ருப்பும லைந்தென
வான சேனைகள் முட்டிஉ டன்றன ஆத லால்மறு கற்பம்வி ளைந்ததே.

**பொழிப்புரை:** *அசுரர்களின் அதிபனாகிய சம்பரன் அனுப்பிய பெரும்படை மலைக் கூட்டங்கள் பாதம் முளைத்து வந்தது போலவும், மீன்கள் நிறைந்த கடல் விரிந்து பரந்ததைப் போலவும் வந்தது. பிரளயம் வந்துவிட்டது என்பதைப் போல தேவர்களும் அசுரர்களைப் போல வந்தனர். காற்றும் நெருப்பும் மோதியது போல், தேவர்கள் சேனைகள் முட்டி மோதிப் போர் புரிந்தன. ஆதலால் மற்றொரு கற்பம் உண்டானது.* **(4.2.26)**

ஆயு தங்கள்எ ரிந்துநெ ருங்கிட ஆகம் எங்கும்வி ழுந்தன வெற்பென
மாயும் அங்கம்உ மிழ்குரு திக்கடல் மாதி ரங்கள்த தும்பிஅ லைந்தன
காயும் வஞ்சர்அ டர்ந்துமு டுக்கினர் காதும் உம்பர்த ளர்ந்(து)ஓட உற்றனர்
சாயும் அண்டர்கள் பின்தொடர் உற்றனர் தாம னும்பிற ரும்திசை முற்றுமே.

**பொழிப்புரை:** *ஆயுதங்கள் எரிந்து அடர்ந்திட, உடல்கள் மலைபோல எல்லாவிடத்தும் விழுந்தன. மாண்டு விழுகின்ற உடல்களில் இருந்து ரத்தமானது கடல்போல் பெருக, மலைகள் அதில் தத்தளித்தன. கோபம் மிகுந்த அரக்கர் நெருங்கித் துரத்தினர். வருத்தம் அடைந்த தேவர்கள் தளர்ந்து ஓடலாயினர். தோல்வியுற்று ஓடும் தேவர்களைப் பின்தொடர்ந்து தாமன் வியாள கடனும் மற்ற சேனைகளும் எல்லாத் திக்குகளிலும் ஓடினர்.* **(4.2.27)**

உம்பர் ஓடிம றைந்தமை கண்டிலர் உந்து மூவரும் நின்றுதி ரும்பினர்
சம்ப ராசுரன் முன்புற வந்தனர் சங்க வானவர் என்செயல் என்றுகொ(டு)
அம்பு யாசனன் முன்புந டந்தனர் அன்பி னோடுப ணிந்துபுகன்றனர்
வெம்பு தீநிகர் சம்பரன் வஞ்சமும் வெங்கண் மூவர் துரந்துதொடர்ந்ததும்.

**பொழிப்புரை:** *தேவர்கள் ஓடிச் சென்று ஒளிந்து கொண்டதைக் காணாதவர்களாய்ப் பின்தொடர்ந்து சென்ற மூவரும் முயன்று தேடிப் பார்த்து விட்டு சற்றுத் தாமதித்து திரும்பினர். சம்பரன் முன்பு வந்தனர். ஓடிய தேவர்கள் ஒன்றுகூடி என்செய்வது என்று ஆலோசித்துக் கொண்டே தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகன் முன்பு வந்து அன்புடன் பணிந்து, சுவாலை விட்டு எரியும் அக்கினிக்கு நிகரான சம்பரனாகிய அரக்கனின் வஞ்சனையும், வெம்மையான சிவந்த கண்களை உடைய மூன்று அரக்கர்கள் தொடர்ந்து துரத்தியதையும் எடுத்துக் கூறினர்.* **(4.2.28)**

**(வேறு)**

**கேட்ட நான்முகன் அஞ்ச(ல்)என்(று) இவ்வுரை கிளத்தான்**
**நீட்ட மாகிய வருடம்ஓர் ஆயிரம் இறந்தால்**
**வாட்டு சம்பரன் போரிலே அரியினால் மடிவான்**
**வீட்டும்அவ் வளவும் செயத்தக்கது விதிப்பான்.**

**பொழிப்புரை:** *தேவர்கள் கூறியதைக் கேட்ட நான்முகன் அஞ்சாதீர்கள் என்று இவ்வாக்கியங்களைக் கூறத் தொடங்கினார். நெடு நாட்களாகிய ஓர் ஆயிரம் வருடம் கழிந்தால், உங்களைத் துன்புறுத்தும் சம்பரன் போரில் மகாவிஷ்ணுவால் வதம் செய்யப்படுவான். அவன் அழியும் அளவும் செய்யவேண்டியதைக் கூறுவாம்.* **(4.2.29)**

**என்ற தாமனும் வியாளனும் கடனும்என் பவரைச்**
**சென்(று)அழைத்(து) அமர்செய்வது திரும்புவதாகத்**
**தொன்று தொட்டுநீர் தொந்திக்கின் வாதனை தொடர்ந்து**
**நின்ற கண்ணடி நிழலென மனத்திலே நிற்கும்.**

**பொழிப்புரை:** *துரத்தி வந்தனர் என்று நீங்கள் கூறிய தாமன் வியாளன் கடன் என்பவர்களைச் சென்று போருக்கு அழைத்து போர் புரிவதும் திரும்புவதுமாக நீண்ட நாட்களாக நீங்கள் மாறி மாறிச் செய்யும் யுத்தத்தில் (திடீரென்று ஒருநாள் நீங்கள் ஓடிப்போய் விட்டால்) வாசனைகள் அவர் மனத்தைப் பற்றி, கண்ணாடியில் பதிந்த பிரதிபிம்பம் போல உள்ளத்திலே இறுகும்.* **(4.2.30)**

**நிலைபெறும்படி நான்எனும் வாதனை நின்றால்**
**வலைபுகுந்த புள்ளாம்என மூவரும் மடிவர்**
**கொலைசெயற்(கு) எளி(து)ஆசை யேஉயிர்க்கெலாம் கூற்றாய்த்**
**தொலை(வு)இல் துன்பமாம் நிராசையே துன்ப(ம்)இல் இன்பம்.**

**பொழிப்புரை:** *அதி திடமாக யான் என்னும் வாசனை பற்றிக் கொண்டால், வலையில் அகப்பட்ட பறவை போல, அந்த மூவரும் எளிதில் வெல்லவும் உரியவர் ஆவர், நாசமும் அடைவர். ஆசையே எல்லா உயிர்களுக்கும் யமனாகித் தொலையாத துன்பத்தைத் தரக்கூடியது. நிராசையே துன்பம் இல்லாத இன்பத்தைத் தரக்கூடியதாகும். (ஆகவே அசத்து பொருள்களிடத்தில் யாவரும் ஆசையை விட்டு ஒழிப்பதே நலம் தரும்)* **(4.2.31)**

### (வேறு)

வாதனைப் பாசத் தாலே மன்னுயிர் எல்லாம் கட்டுண்(டு)
ஏதமாம் அந்தப் பாசம் இறுகுமேல் இடரைச் செய்யும்
வேதனை இலதாம் தீர நழுவுமேல் வேட்கை யாலே
தீதிலோர் அனேகம் கற்றோர் தீரர்என் னினும்கட் டுண்பார்.

**பொழிப்புரை:** *வாசனை என்னும் பாசத்தாலே (நூலினாலே) அனைத்து உயிர்களும் பந்தப்பட்டுத் துன்பத்தை அடையும். அந்த வாசனை வளர்ந்து கொண்டே போனால் அதிக துக்கத்தை உண்டாக்கும். அடியோடு அழியுமாயின் வேதனைகள் இல்லாமல் போகும் (இன்பம் வரும்). தீமை செய்யாதவர், அனேகம் (மிகவும்) படித்தவர், தீரர் என்ற போதிலும் ஆசையினால் பந்தப்படுவர்.* **(4.2.32)**

### (அறுசீர் ஆசிரிய விருத்தம்)

விலங்குறு சிங்கம் போல வேட்கையால் உயர்ந்தோர் தாழ்வர்
கலங்கன்மின் என்று வேதா கண்டுழி மறைந்த பின்னர்
புலன்கொள அனைத்தும் கேட்ட புங்கவர் பொன்நாட்(டு) எய்தி
நிலம்கிழிந்(து) அண்டம் பீற நெடியதுந் துமியோ(டு) ஆர்த்தார்.

**பொழிப்புரை:** *உயர்ந்தவர்களும் ஆசையினால் சங்கிலியால் கட்டுண்ட சிங்கம் போலத் தாழ்வினை அடைந்து துன்புறுவர். கலக்கம் அடையாதீர் என்று நான்முகன் கூறி, பார்த்துக் கொண்டிருக்கும் போதே மறைந்தார். பின்பு புத்தியில் படும்படியாகக் கேட்டுக் கொண்ட தேவர்கள் சொர்க்கலோகம் சென்று, நிலம் பிளவுபட்டு அண்டம் வெடித்துச் சிதறியது போல நீண்ட கர்ஜனையைப் போல் சப்தம் செய்யும் போர்ப் பறை - இரண பேரி அடித்து ஆர்ப்பரித்தனர்.* **(4.2.33)**

ஆர்த்தன கேட்ட அந்த அசுரர்பா தலத்தி னின்றும்
வேர்த்தனர் பொங்கி வந்து வெம்படை அமரர் மீது
தூர்த்தனர் காலம் போக்கும் சுரர்பொரு துடைந்து போகி
பேர்த்தும்வந்(து) அமர்செய்(து) ஓடிப் பின்னும்வந்(து) அதனைச் செய்தார்.

**பொழிப்புரை:** *ஆர்ப்பரித்த சப்தம் கேட்ட அந்த அசுரர்கள் பாதாள லோகத்திலிருந்தும் வேர்த்து விறுவிறுக்கப் பொங்கி எழுந்து வந்து, கொடிய அம்புகளைத் தேவர் படைமீது பிரயோகம் செய்தனர். காலத்தைப் போக்குவதற்காக வந்த தேவர்கள் சிறிது போர்புரிந்து ஓடிப் போய், மீண்டும் வந்து போர் செய்து ஓடிப் போய், மறுபடியும் மறுபடியும் வந்து இவ்வாறே செய்து கொண்டிருந்தனர்.* **(4.2.34)**

இவ்வகை பலஉ பாயம் இறந்தநீள் காலம் செய்ய
நைவரும் திடம தான நான்எனும் பழக்கத் தாலே
மெய்வர நான்என்(று) உன்னும் வேட்கையை விருப்பம் உற்றார்
அவ்வகை யாலே உள்ளம் அகப்பட்டு நின்ற(து) அன்றே.

**பொழிப்புரை:** *இந்த வழியில் பலவித உபாயங்களை நீண்ட காலம் செய்ய, ஊன்றி ஊன்றி வளரும் அதி திடமான நான் என்னும் அகங்காரத்தின் பழக்கத்தினால் தேகத்தில் தோன்ற நான் என்னும் ஆசையை ஆற்ற அதிக முயற்சி கொண்டார். அவ்வாறு தேகத்தைக் காக்க முயன்றதால் மனமானது பந்திக்கப்பட்டு நின்றது.* **(4.2.35)**

**பயம்வந்து பிடித்துக் கொள்ளப் படர்தரு மோகம் கட்ட**
**அயர்வுறும் ஆசா பாசத்(து) அழுந்திஎன் செய்தும் என்னா**
**துயருற விளைத்தும் காயம் துஞ்சுறா(து) இருக்கு மாறு**
**மயலுறு தனத்தால் இன்பம் வருவதும் எவ்வா(று) என்றார்.**

**பொழிப்புரை:** *வாசனையினால் பயம் நன்றாகப் பற்றிக்கொள்ளத் துன்பத்தைத் தரும் மயலானது பந்தப்படுத்தி தளர்ச்சியைத் தரும் ஆசாபாசத்தினால் அழுத்தமாய்க் கட்டுப்பட்டு இனி யாம் செய்வது யாது என்று எண்ணித் துன்பம் உண்டாக, தேகம் இளைத்து மெலிந்து நாசம் அடையாதிருக்கும் பொருட்டு மயக்கத்தைத் தரக்கூடிய பொருளினால் அதனால் உண்டாகும் இன்பமும் எந்த வழியினால் என்று கவலையுடன் சிந்திக்கத் தொடங்கினர்.* **(4.2.36)**

**சந்ததம் இவ்வா(று) எண்ணத் தளைப்புண்ட மனத்த ராகி**
**அந்த(ம்)இல் தீரம் இன்றி அமர்என்றால் அறவும் அஞ்சிப்**
**புந்திநொந்(து) இறப்போம் என்றும் புகலிடம் எமக்(கு)ஏ(து) என்றும்**
**சிந்தனை யாலே கெட்ட சித்தத்தால் தியங்கிச் சோர்ந்தார்.**

**பொழிப்புரை:** *எப்போதும் இவ்வாறு சிந்திக்க, கட்டுப்பட்ட கருத்தினை உடையவராய், கெடாத தைரியம் முழுவதும் கெட்டுப்போக, போர் என்றாலே முழுவதும் அஞ்சி, புத்தி நொந்து, இறந்து போவோம் என்றும், சரண் அடையத் தகுந்த இடம் எமக்கு எது என்றும் ஓயாமல் எண்ணுவதாலே கெட்டுப்போன மனதினாலே மயங்கி வாடினார்.* **(4.2.37)**

**வலியெலாம் இழந்து முன்னே வந்தொரு பெயர்நின் றாலும்**
**நலிவுற மாட்டா ராகி நடுங்கினர் விறகு மாண்டால்**
**பலிதரும் அவியை அங்கி பருகிட வல்ல(து) உண்டோ**
**ஒலிதர உரைத்தென் அஞ்சி ஓடினர் பொன்றி போனார்.**

**பொழிப்புரை:** *பலம் முழுவதும் இழந்து, முன்னால் ஒருவன் வந்து நின்றாலும் கொல்வதற்கும் வலிமை இல்லாதவராய் நடுங்கினர். விறகு இல்லாமல் போனால், வேள்வியில் தேவதைகளுக்குக் கொடுக்கும் ஆகுதியை அக்கினியானது உண்ண ஆற்றல் உடையது ஆமோ? இவ்வாறு பலவாறாகக் கூறுவதால் என்ன பயன்? மரண பயத்தால் அஞ்சி அஞ்சி மடிந்து போனார்.* **(4.2.38)**

**தாமனும் வியாளன் தானும் கடனும்முன் சரித்த மார்க்கம்**
**தோமுறும் உணர்(வு)உண் டாகச் சொல்லினம் விநோதத் தாலே**
**மாமனம் அவிவே கத்தை வரம்பறப் பழகி விட்டால்**
**பாமரப் பிறவித் துன்பம் பற்(று)அறா(து) இந்த வண்ணம்.**

**பொழிப்புரை:** *தாமன், வியாளன், கடன் மூவரும் பற்றிய நெறியானது, குற்றமற்ற உணர்வு உனக்குப் பற்றாது இருக்க விநோதமாகச் சொன்னோம். வாசனைகளை உடைய மனமானது அவிவேகத்தை எல்லையற்று அதிக அளவில் பழகி விட்டால் அறியாமை கொண்ட மக்களால் அனுபவிக்கப்படும் பிறவித் துன்பம் அறாமல் தொடர்ந்து நிற்கும்.* **(4.2.39)**

**இனையவர் நியாயம் நீஇங்(கு) எய்தலை என்ற லோடும்**
**அனையவர் பரத்தி னின்றும் உதித்தவா(று) அறிய வேண்டும்**
**முனைவகூ(று) என்(று)இ ராமன் மொழிதலும் முனிவன் சொல்வான்**
**துனையுறு தாமன் முன்னோர் தோற்றமாத் திரமெய் யானோர்.**

**பொழிப்புரை:** *இந்த தாமன் முதலியோரது நெறியை நீ அடைய வேண்டாம் (அல்லது நீ அடைய வில்லை) என்று வசிட்ட முனிவர் கூறவும், "அந்த தாமன் முதலியோர் பரமாத்மாவிலிருந்து உதித்த வகையை அறியும் படி கூற வேண்டும், முனிவர்களில் சிறந்தவரே!" என்று இராம பிரான் கேட்கவும், முனிவர் சொல்வதாவது.... துன்பம்அடைந்த தாமன் முதலானோர் தோற்ற மாத்திரமே அதாவது பிராதிபாசிகமாக தேகத்தை உடையவர்கள் ஆவர்.* **(4.2.40)**

**எதிருறு தோற்ற மெய்யாய் இவர்கள்போல் இங்கு யாமும்**
**விதியதாய்ப் புறத்தில் ஒன்று மேவலம் வீர னேநின்**
**மதியில்(ல்)நான் எனலும் பொய்யே மதியில்(ல்)நீ எனலும் பொய்யே**
**அதிர்குரல் தாமன் முன்னாம் அவர்கள்உண்(டு) எனலும் பொய்யே.**

**பொழிப்புரை:** *எதிரே தோன்றும் தோற்ற மாத்திரமே உடல் உடைய இவர்களைப் போலவே இவ்வுலகில் உள்ள நாமும் யாவரும் முறைப்படி விசாரிக்கில், பாவமாய் இருப்பதற்கு வெளிப்புறத்தில் ஒன்றையும் அடைந்திருக்கவில்லை. (அதாவது ஆன்மாவுக்கு வேறாக எதையும் அடைந்திருக்கவில்லை) வீரனாகிய இராகவனே! நினது புத்தியில் யான் என்பதும் மித்தையே. என் புத்தியில் நீ என்பதும் மித்தையே. பெரும் கர்ஜனை புரிந்த தாமன் முதலானோர் இருந்தார்கள் என்பதும் மித்தையே.*

**(4.2.41)**

**பரத்தின(து) ஒளியே மெய்யாய்ப் பாரித்தோர் சீவ சத்தி**
**திரத்துறு சம்ப ரன்தன் தியானத்தால் அசைந்து மூன்றாய்**
**உரத்தஉல் லாசம் மேவிற்(று) உரைத்தஇத் திறத்தி னாலே**
**வரத்துறும் அவரும் நானும் வாய்மையே எங்கும் இல்லை.**

**பொழிப்புரை:** *வியாபகமாய்ப் பரமாத்மாவிலிருந்தும் ஒளியே சொரூபமாகிய ஓர் சீவ சத்தியானது அதி சமர்த்தனான சம்பரனின் தியானத்தால் அசைந்து (சலனமுற்று) மூவகையான திட உல்லாசத்தைப் பொருந்தியது. கூறிய இந்தத் தன்மையினாலே பிராதிபாசிக மாத்திரமாய் சம்பரன் மாயையினால் வந்த தாமன் முதலானோரும் இந்த யாமும் எவ்விடத்திலும் சத்தியமாக இல்லை.* **(4.2.42)**

அறிவதாய் அறிவே மெய்யாய் அமலமாய் அனைத்தாய் ஆறிப்
பிறிவுறு வரவு போக்கில் பிரமமே உளதாம் அந்தச்
செறிபொருள் சத்தி தோற்ற மாத்திரம் சகமாய் நிற்கும்
பொறிகள்பல் காட்சி பொய்யே பொருள்மெய்யே என்று வாழ்வாய்.

**பொழிப்புரை:** *அறிவதாயும், அறிவே சொரூபமாகவும், அமலமாகவும், எல்லாமாகவும், சாந்த மாகவும், பேதமும் போக்கும் வரவும் இல்லாததாகவும் பிரம்மமே இருப்பதாகும்.* *அந்தப் பூரண பிரம்ம சத்தியின் உல்லாச மாத்திரம் (தோற்ற மாத்திரமாய்) வியவகாரிகப் பார்வையில் நிலைபெற்றுள்ளது. பாரமார்த்திகப் பார்வையில் இந்திரியம் முதலான திருசியங்கள் அனைத்தும் மித்தையே.* *பரமான்மாவே சத்தியம் என்று துணிந்து அதுவே தானாய் மகிழ்ந்து வாழ்வாய்.* **(4.2.43)**

**(திதிப் பிரகரணத்தில் தாம வியாள கடர் கதை முற்றும்)**

# (iii) வீம பாச திடர் கதை

*முந்தைய தாம வியாள கடர் கதையில் 'யான், எனது' என்ற அபிமானங்களால் சம்சாரம் வளரும் என்று சொல்லப்பட்டது. இப்போது வீம பாச திடர் கதையில் தேகம் முதலியவற்றில் அகங்காரம் இல்லாமையே புருடார்த்தத்தைக் கொடுப்பதற்குச் சாமர்த்தியம் உள்ளது என்று கூறப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**இதுநமக்(கு) இதுநமக்(கு) என்று இரங்குறு பொல்லா வாழ்வால்**
**உதவிஓர் சாம்ப ரேனும் உறப்பெறா(து) உதார மிக்குச்**
**சுதமுறும் உலகம் எல்லாம் துரும்புபோல் காண்பார் தம்பால்**
**விதனங்கள் அனைத்தும் வாரா மிருகங்கள் உலர்புல் தீண்டா.**

**பொழிப்புரை:** *இது நமக்கு வேண்டும், இது நமக்கு வேண்டும் என்று ஏங்குகின்ற பொல்லாத வாழ்வினால் சாதகமாக அற்பமான சாம்பல் தூள் கூட கிடைக்க மாட்டாது. உதாரம் மிகுந்து துயரத்தையே தரும் உலகங்களை எல்லாம் துரும்பு போலக் காண்பவரிடத்தில் மான் போன்ற விலங்குகள் காய்ந்து போன புல்லைத் தீண்டாதது போல, கவலைகள் அனைத்தும் வராது.* **(4.3.1)**

**உளத்துறச் சமத்கா ரம்சேர் உண்மையை உணர்வோர் தம்மை**
**அளக்கரும் பிரமாண் டம்போல் அட்டதிக் காளர் காப்பர்**
**கிளப்பரும் குணத்தில் அன்பாய்க் கேள்வியில் விருப்பாய் உண்மை**
**விளக்குறு வருத்தம் மிக்கோர் நரர்நின்றோர் மிருகம் தானே.**

**பொழிப்புரை:** *அந்தக்கரணத்தில் அதி திடமான பிரம்மத்தின் நினைவு உண்டாகி சத்திய வஸ்துவை அடைந்த மகான்களை எட்டு திக்குகளையும் காப்பவர்கள் பாதுகாப்பர். சம்பாதிப்பதற்கு அருமையான நல்ல குணங்களை அடைவதில் சந்தோஷம் மிக்கவராய், சிரவணத்தில் விருப்பம் உடையவராய், சத்திய வஸ்துவை அறிந்து அடைய வேண்டும் என்று வருந்தி மிகவும் முயற்சி செய்பவராய் இருப்பவரே புருஷர் ஆகும், மானிட வாழ்க்கையின் பயனை அடைந்தவர். மற்றவர்கள் விலங்கு போன்றவர்களே.* **(4.3.2)**

**செயலரும் துயர்உற் றாலும் செயத்தகாச் செயல்கள் ஆகா**
**இயல்(பு)அலா வழியால் உண்ண இராகுவை அமுதம் கொன்ற(து)**
**அயலெலாம் வசமாய் ஆபத்(து) அனைத்தும்போம் என்றும் நன்(று)ஆம்**
**முயலுநற் குணங்க ளாலே மொய்புகழ் எய்தி னோர்க்கே.**

**பொழிப்புரை:** *சகித்துக் கொள்வதற்கு அரிதான துன்பங்கள் ஊழ்வினையால் வந்த போதிலும் சாத்திரங்களுக்கு விரோதமான அக்கிரமச் செயல்களில் செல்லல் ஆகாது. தேவர் கூட்டத்தோடு சேர்ந்து சிரமம் இல்லாத நெறியில் அமுதத்தைப் பருக வந்த இராகுவை அமுதமே கொன்றது. முயற்சி செய்தால் சாத்தியமாகக் கூடிய சமம் தமம் முதலியவற்றால் நிறைந்து, புகழ்பெற்ற மகான்களுக்கு அவசியமானவை எல்லாம் வசமாகி, அனைத்து ஆபத்துகளும் போய் என்றும் உயர்ந்த சிறப்பு உண்டாகும்.* **(4.3.3)**

ஒழிவறு முயற்சி தன்னால் ஊகத்தால் உயர்ந்த நூலால்
இழிவற இயற்று வோர்கட்(கு) எப்பயன் எளிதின் எய்தா
வழிபடு நன்னூ லாளர் வருபயன் கருத்தாச் செய்யில்
அழிவற முற்றும் முற்றி அளவறு பயனை நல்கும்.

**பொழிப்புரை:** *இடைவிடாமல் செய்யும் முயற்சியால் நல்ல சாத்திரங்களின் ஆராய்ச்சியால் தைரியத்தோடு காரியங்களில் ஈடுபடுவோர்களுக்கு எந்தப் பயன் தான் எளிதில் கிட்டாது? எல்லோராலும் வணங்கத் தக்க சாத்திரம் அறிந்தவர்கள் பயன் உண்டாகும் வரையில் ஊக்கமாக அவசரப்படாமல் செய்து வந்தால் கேடின்றி சித்திக்கும் அந்த பரிபக்குவ சித்தி பூரண பலத்தைத் தருவதாகும்.* **(4.3.4)**

வருத்த(ம்)அற்(று) அச்சம் சோகம் மத(ம்)இன்றி நன்னூல் பின்போய்
ஒருத்தரால் ஏவல் இன்றி உலாவுக நசிக்க வேண்டாம்
அருத்தங்கள் அனர்த்தம் ஆகும் அளவில்போ கங்கள் நோயாம்
பெருத்தஆ பத்தாம் செல்வம் பேரின்ப நிராசை தானே.

**பொழிப்புரை:** *ஆயாசம் (தளர்வு) இன்றி, அச்சம், சோகம், கர்வம் இன்றி, நல்ல சாத்திரங்களில் சொல்லியுள்ளவாறு, மற்றொருவரின் கட்டாயம் இன்றி, விவகாரம் செய்வாய். அழிவை அடைய வேண்டாம். பொருள்கள் (செல்வம்) மற்றும் அவை சம்பந்தமானவை அனைத்தும் துயரத்தைத் தருவதாம். அளவில்லாத போகம் நோயைத் தரும் (பிறவிப் பிணியையும் தரும்). செல்வம் அதிக ஆபத்தானவை. நிராசையே பேரின்பம் தரும்.* **(4.3.5)**

இடும்பைகூர் சங்கம் இன்றி இயற்கைஆ சாரம் எய்திக்
குடும்பமாம் துயர்சிற் றின்பம் குறித்திடாப் பெருமை யோர்க்கு
நெடும்புகழ் வாழ்நாள் செல்வம் நிறைகுணம் அனைத்தும் உண்டாய்ப்
படும்பலன் வசந்த காலக் கொடிகள்போல் பலிக்கும் அன்றே.

**பொழிப்புரை:** *துன்பத்தைத் தரக்கூடிய கூட்டத்தோடு நட்பு இன்றி, இயற்கையாய் (வருணாச்சிரமத்தில்) அமைந்த ஆசாரத்தைக் கொண்டு, குடும்பம் என்னும் துயராகிய சிற்றின்பத்தை விரும்பாத பெருமை உடையோர்க்கு, நீண்ட புகழ், வாழ்நாள், செல்வம், நிறைந்த நற்குணம் அனைத்தும் உண்டாகி, அவற்றால் கிடைக்கும் நற்பயன்கள் வசந்த காலக் கொடிகளைப் போல் சிறப்பாக உண்டாகும்.* **(4.3.6)**

தவங்களால் தெய்வ நீரால் சாத்திரங் களினால் போகாப்
பவங்களை உயர்ந்தோர் பாதம் பணிந்துபற்(று) அறுக்க வேண்டும்
அவங்களாம் காமம் கோபம் அறவும்தேய்ந்(து) இயற்கை யான
சுவங்களில் நடந்து நன்னூல் துறைநின்றோர் உயர்ந்த மேலோர்.

**பொழிப்புரை:** *தவங்களினால், கங்கை முதலிய புனித தீர்த்தங்களினால், சாத்திரங்களினால் கடக்க முடியாத பிறவிக் கடலை சற்புருடரான மகான்களின் பாதம் பணிந்து அவர்தம் அனுக்கிரகத்தால் பற்று அறுக்க வேண்டும். பயனில்லாத காமம்,*

*கோபம் முதலானவை முழுவதும் அழிந்து போக, இயற்கையான வருணாச்சிரம சுப கருமங்களில் ஒழுகி, நல்ல சாத்திர முறைப்படி நிலைபெற்றவர் உயர்ந்த மேலோர் ஆவர்.* **(4.3.7)**

**நான்எனும் பொருள்கா ணாதோர் ஞானஆ காயம் காணார்**
**நான்எனும் பொருளைக் கண்டோர் ஞானஆ காயம் ஆவர்**
**நான்எனும் அகங்கா ரக்கார் ஞானவிண் மதியை மூடின்**
**நான்எனாப் பரம ஆம்பல் நன்மலர் விரியா(து) அன்றே.**

**பொழிப்புரை:** *நான் என்பதின் உண்மையான (இலட்சியார்த்த) அர்த்தத்தை அறியாதவர் சிதாகாசத்தை அறியாதவர். நான் என்பதின் உண்மையான (இலட்சியார்த்த) அர்த்தத்தை அறிந்தவர் சிதாகாசமாகவே இருப்பர். நான் என்னும் அகங்காரமாகிய மேகம் சிதாகாசம் என்ற சந்திரனை மூடி மறைத்தால், அகங்காரம் இல்லாத கைவல்யம் (முத்தி) என்னும் ஆம்பல் மலர் விரிந்து மலராது.* **(4.3.8)**

**மடிவறு பிறவி என்னும் மரத்திரள் என(து)ஈ(து) என்னும்**
**நெடியபல் பணைகள் நீட்டி நிரயமாம் காய்கள் காய்க்கும்**
**முடிவறு துயர்ஆங் கார முளையாக விளையா நிற்கும்**
**மிடியிலா ஞானத் தீயால் வேறொடும் வெந்து போமே.**

**பொழிப்புரை:** *முடிவற்ற அகங்காரத்தையே வித்தாகக் கொண்டு மீண்டும் மீண்டும் தோன்றுகின்ற பிறவி என்னும் மரக் கூட்டம், 'எனது ஈது' என்கின்ற பல நீண்ட கிளைகளைப் பரப்பி, நரகங்களான பக்குவம் அற்ற காய்களைக் காய்க்கும். சந்தேக விபரீத ஆவரணம் இல்லாத ஞானமாகிய தீயினால் காரணத்தோடு கருகி நீறாகிப் போகும்.* **(4.3.9)**

**என்றலும் இவ்வாங் காரம் எவ்வுரு உடைத்(து)எவ் வாறு**
**வென்றிடல் ஆகும் தேகம் மேவியும் மேவா தாயும்**
**நின்(று)ஒரு காலம் வென்றால் நேருறு பயன்ஏ(து) என்னா**
**நன்றுணர் வள்ளல் கேட்ப ஞானமார் வசிட்டன் சொல்வான்.**

**பொழிப்புரை:** *இவ்வாறு அகங்காரத்தின் கொடுமையை எடுத்துரைத்ததும், இந்த அகங்காரம் எந்த உருவம் உடையது? எவ்வாறு இதனை வெல்வது? நனவில் தூல தேகத்தோடு கூடியும், கனவில் தூல தேகத்தோடு கூடாமல் இருந்து மனோ மாத்திரமாய் இருக்கும் இதனை முயற்சி செய்து ஒரு காலத்தில் வென்றால் உண்டாகும் பயன் என்னவாக இருக்கும் என்று நல்லதை உணரும் விருப்புடைய இராமபிரான் கேட்க, ஞானம் மிக்க வசிட்ட முனிவர் கூறுகின்றார்.* **(4.3.10)**

**மூவகை உலகில் இந்த அகங்கரம் மும்மை என்று**
**மேவரும் இரண்டு நன்றாம் மிகவு(ம்)ஒன்(று) ஈனம் ஆகும்**
**யாவதும் பரமும் நாமே ஈறிலம் எமைஅ லாதோர்**
**பாவனை இல(து)என்(று) ஒரும் போதமே பரமாங் காரம்.**

**பொழிப்புரை:** *மூன்று உலகங்களிலும் இந்த அகங்காரம் மூன்று வகையாகும். அந்த மூன்றில் அடைதற்கு அருமையான இரண்டும் மிகவும் மேன்மை உடையதாகும். மற்றதோ எப்பொழுதும் விடத்தக்கதாய் கீழ்மையானது ஆகும். பிரபஞ்சம் அனைத்தும் அதற்கு அதிஷ்டானமாகிய பரமாத்மாவும் நாமே ஆவோம். நாம் நித்தியமானவர்கள். நம்மைத் தவிர எந்தவொரு பொருளும் கிடையாது என்று எண்ணும் சிந்தனையே பரம அகங்காரம் (தன்மய திருஷ்டி) ஆகும்.* **(4.3.11)**

**செந்நெல்வா லினும்சற் றாகிச் செகங்களுக்(கு) அயலாய் என்று**
**மன்னுதும் எனக்கொள் போதம் மற்றைஆங் காரம் ஆகும்**
**இந்நிலை இரண்டும் சீவன் முத்தர்பால் இருந்(து)ஈ டேற்றித்**
**துன்னரு முத்தி நல்கும் சுழல்வுறு பந்தம் நல்கா.**

**பொழிப்புரை:** *செந்நெல் வால் நுனியினும் சூக்குமம் ஆகி, எப்போதும் பிரபஞ் சத்திற்கு அயலாக இருக்கின்றோம் என்று உண்டாகின்ற உணர்ச்சியானது சுப அகங்காரம் அதாவது சூக்கும அகங்காரம் (மித்தியா திருஷ்டி). இத்தன்மையதான இரண்டு அகங்காரங்களும் சீவன் முத்தர்களிடத்தில் இருந்து, அவர்களுக்கு அனுகூலம் செய்து அடைதற்கு அரிதான மோட்சத்தைத் தரும். சுழல வைத்து மூழ்கச் செய்யும் பந்தத்தைத் தராது.* **(4.3.12)**

**கரசரண் ஆதி மட்டாம் நான்இது என்று காணும்**
**திரமது தானே மூன்றாம் அகங்கரம் செகத்தோர்க்(கு) எல்லாம்**
**உரியதாம் மிகவும் பொல்லா(து) உற்பவம் என்னும் நச்சு**
**மரம்எழு மூலம் ஆகும் வருந்தியும் ஒறுக்க வேண்டும்.**

**பொழிப்புரை:** *கை, கால் அளவு மட்டும் ஆகிய தேகத்தை இவன் நான் என்று உணரும் நிச்சய வடிவ மித்தை அபிமானமே மூன்றாவதான அகங்காரத்தின் சொரூபம் ஆகும். சீவன் முத்தர்களைத் தவிர ஏனைய உலக மக்களுக்கு எல்லாம் இருப்பதாகும். இது மிகவும் பொல்லாதது. பிறப்பு இறப்பு என்னும் சம்சார மரம் வளர்வதற்கு மூலம் (விதை) ஆகும். மிகுந்த பிரயாசைப்பட்டு முயற்சி செய்தாவது அழிக்க வேண்டும்.* **(4.3.13)**

**கொடி(து)இது கொடிது சாலக் கொடி(து)இதன் கொடுமை யாலே**
**முடிவறும் உயிர்கள் எல்லாம் மோக(ம்)உற்(று) அறிவு கெட்டார்**
**கடிதில்அவ் விரண்டி னாலும் கடிந்(து)இ(து)எவ் வளவு விட்டாய்**
**படிவு(று)அவ் வளவே எய்தும் பரமமாம் தற்ப தார்த்தம்.**

**பொழிப்புரை:** *மிக மிகத் தொல்லைகளையே கொடுக்கும் இந்த அகங்காரம் கொடியது, மிகக் கொடியது ஆகும். இதன் கொடுமையாலே முடிவில்லாத பிராணிகள் எல்லாம் மயக்கம் அடைந்து உணர்வினை இழந்தார். விரைவில் முன் கூறிய தூய அகங்காரம் (பரம அகங்காரம்), சூக்கும அகங்காரம் ஆகிய இந்த இரண்டினாலும் (மூன்றாவதான இந்த அகங்காரத்தைத்) தண்டித்து, இந்த மூன்றாவது அகங்காரத்தை எந்த அளவுக்கு விட்டு விட்டாயோ, அந்த அளவே மேலாகிய தத் பதத்தின் இலட்சியார்த்தப் பொருளாம் பிரம்மம் கிட்டும்.* **(4.3.14)**

**ஏற்றமாம் அகங்கா ரங்கள் இரண்டினால் பரமம் எய்தி**
**ஊற்றமாம் அவற்றை நீக்கி ஓர்அகங் கரமும் இன்றி**
**ஆற்றலால் நிற்றி என்னில் அறஉயர் பதம்(ம்)அது ஆகும்**
**தோற்(று)உடல் நான்ள னாமை சுருதிகள் சொல்லும் உத்தி.**

**பொழிப்புரை:** *உயர்ந்தனவாக முன்பு கூறப்பட்ட பரம, சூக்கும அகங்காரம் இரண்டினால் தத் பதத்தின் லட்சியார்த்தம் ஆகிய பிரம்மத்தை அடைந்து, அதை அடைவதற்குக் காரணமாய் இருந்த அந்த அகங்காரம் இரண்டினையும் அகற்றி (விட்டு விட்டு), திட மனதுடன் நிலை பெறுவாயேல், அதி உயர்ந்த பதத்தையே அடைவாய். (அதாவது அவ்வாறு திடமாக நிற்கின்ற அதுவே உயர்ந்த பதமாகும்) வினைவயத்தால் உண்டாகின்ற தேகத்தில் நான் என்ற அபிமானம் (தேகாத்ம பாவனை) கொள்ளாததே வேத உபநிடதங்கள் சொல்லும் முத்தி ஆகும். (சொல்லுமுத்தி = சொல்லும் உத்தி என்று கொண்டாலும் தேக அபிமானம் விடுவதே பிரம்மத்தை அடைவதற்கு வேத உபநிடதங்கள் சொல்கின்ற உத்தி எனவும் பொருள் சொல்லலாம்)* **(4.3.15)**

**இதன்இயல்(பு) உரைக்கக் கேள்முன் இசைத்துள தாமன் முன்னோர்**
**அதமுற மடிந்த பின்னர் அனையசம் பரன்வே கித்து**
**மதமுறு இமையோர் சேனை வதம்செய்வான் உபாயம் தன்னை**
**விதமுற இனைய வாறு நினைந்தனன் விஞ்சை வல்லான்.**

**பொழிப்புரை:** *இந்த அகங்காரத்தின் தன்மையைச் சொல்லக் கேட்பாய். முன்பு கூறிய தாமன் முதலான மூவரும் தாழ்மை அடைந்து மடிந்த பின்னர், மாயா வித்தையில் வல்லவனான சம்பரன் என்ற அசுரன் மிகவும் கோபம் கொண்டு, வெற்றிக் களிப்பினால் மதம்கொண்ட தேவர்களின் சேனையை வதம் செய்ய என்ன உபாயம் உள்ளது என்று பலவிதமாக இவ்வாறு சிந்திக்கத் தொடங்கினான்.* **(4.3.16)**

**தானவர் எனமுன் நாம்செய் தாமனை முதலா மூவர்**
**ஞான(ம்)இல் லாமை யாலே நான்என(து) என்று பொய்யாய்**
**வானவர் போரில் மாண்டார் மற்றினி ஞான நன்னூல்**
**போனவர் விவேகத் தோராய்ப் புணர்ந்தமா யத்தால் செய்வேன்.**

**பொழிப்புரை:** *அசுர சேனை வீரர்களாக முன்பு யாம் சிருஷ்டித்த தாமன் வியாளன் கடர் என்னும் மூவரும் பிரம்ம வித்தை இல்லாத படியால் வெறும் பொய்யாம் நான் எனது என்னும் மூர்க்கத் தனமான அகங்காரத்தைக் கொண்டு தேவர்களோடு எதிர்த்துப் புரிந்த போரில் மடிந்தனர். இனி அவ்வண்ணம் நிகழாமல், ஆத்ம சாத்திரம் உணர்ந்தவராய், ஆத்ம அனாத்ம விவேக புத்தி உடையவராய் என்னிடத்தில் இருக்கும் மாயா சத்தியால் உண்டாக்குவேன்.* **(4.3.17)**

**மெய்யுணர்(வு) உறுத லாலே வெறும்பொய்யாம் அகங்கா ரத்தில்**
**நையுறார் விண்ணோர் சேனை நலிவுற வெல்வர் என்னா**
**மையுறா மனத்தின் எண்ணி மாயையால் அவரைச் செய்தான்**
**மொய்யுறு வேலை தந்த மொக்குள்போல் மூவர் வந்தார்.**

**பொழிப்புரை:** *தத்துவ ஞானத்தினாலே வெறும் மித்தையான அகங்காரத்தில் மூழ்கி அழியார், தேவர்கள் சேனை நலிந்து பின்வாங்கி ஓடும்படி செய்வர் என்று தெளிந்த மனத்தில் எண்ணி மாயையினால் அத்தன்மை உடையவர்களைச் செய்தான். அலைகள் நிறைந்து சப்தம் செய்யும் கடலில் இருந்து நீர்க்குமிழி போல் மூன்று பேர்கள் வந்தனர்.* **(4.3.18)**

அனைத்தையும் அறிந்தோர் தம்மை அறிவென அறிவால் கண்டோர்
வினைத்தொடர் இலாதோர் ஒன்றின் விருப்பமும் வெறுப்பும் இல்லோர்
நினைத்துள நிகழ்கா லத்தில் எய்திய நிலையில் நிற்போர்
தினைத்துணை எனினும் ஐயம் இலாதவர் தெளிவு சான்றோர்.

**பொழிப்புரை:** *முற்றும் உணர்ந்தவர், தம்முடைய சொரூபத்தைச் சித்து வடிவமாக விவேக திருஷ்டியால் கண்டவர், தொடர்கின்ற வினை சம்பந்தம் இல்லாதவர், எந்த ஒன்றிலும் விருப்பும் வெறுப்பும் இல்லாதவர், நினைக்கின்ற நிகழ்காலத்தில் இருந்தபடியே விவகாரம் செய்பவர், அணுவளவும் சந்தேகம் இல்லாதவர், ஆன்மாவை அறிந்தவர்.* **(4.3.19)**

பேரினால் வீமன் பாசன் திடன்எனப் பிரிக்கப் பட்டோர்
சீரினால் உலகை எல்லாம் திருணமாய்த் தேரும் சுத்தர்
போரிலே போமின் என்று சம்பரன் புகலப் போகி
நேரிலா அமர ரோடு நெடும்சமர் புரிய லுற்றார்.

**பொழிப்புரை:** *பெயரினால் வீமன், பாசன், திடன் என்று குறிப்பிடப்பட்டவர். பிரம்ம வித்தையால் உலகம் அனைத்தையும் துரும்புக்குச் சமமாகக் காணும் பாவனை உடைய பரிசுத்தர். போருக்குச் சென்று தேவர்களை வெல்வீர் என்று சம்பரன் சொல்லவும், ஒப்பில்லாத தேவர்களுடன் நீண்ட போரினைப் புரியத் தொடங்கினர்.* **(4.3.20)**

எண்ணிலா வருடம் வெம்போர் இயற்றினர் இவர்கள் நெஞ்சில்
துண்ணென எனது யானாம் தோற்றர(வு) உதித்த போது
நுண்ணறி வாலே யாம்ஆர் என்றுற நோக்க லோடும்
புண்ணியம் இலாதோர் வாழ்வு போல்அது பொய்யாய்ப் போகும்.

**பொழிப்புரை:** *அனேக ஆண்டுகள் தேவர்களுடன் கொடும்போர் புரிந்தனர். இவர்களுடைய மனதில் திடுக்கென்று எனது யான் என்ற வாசனை எழும்பிய போது, நுட்பமான அறிவினால் யாம் யார் என்று விசாரம் செய்திடவும், புண்ணியம் இல்லாதவர் வாழ்வு போல் அது மித்தையாய் ஓடிப் போகும்.* **(4.3.21)**

பன்மையாம் விசாரத் தாலே படர்அகங் காரம் அற்றோர்
சன்மமே மரண மேஎன்(று) அஞ்சுறு சலிப்(பு)இ லாதோர்
நின்மலர் எளிதின்; வந்த பொருள்கொள்வோர் நிகழ்ந்த எல்லாம்
தொன்மையாம் நவமாம் கண்ணால் துகள்அறச் சமமாய்க் காண்போர்.

**பொழிப்புரை:** *பலவிதமான விசாரத்தால் படர்கின்ற அகங்காரம் இல்லாதவர். பிறப்பு முதுமை மரணம் என்று அஞ்சுகின்ற சலிப்பு இல்லாதவர், சித்தம் அழுக்கில்லாதவர். கிடைத்த பொருள்களைக் கொண்டே விவகாரம் செய்பவர். நிகழ்காலத்தை மட்டும் அனுசரித்து நடப்பவர். தொன்மையானதாய் அற்புதமாய் ஞானக் கண்ணால் குற்றம் இன்றிச் சமமாகக் காண்பவர் அந்த மூவர்.* **(4.3.22)**

ஆதலால் வீரர் ஆன அவர்களால் அமரர் சேனை
காதலால் புசித்து மாய்க்கும் காமுகர் செல்வம் போலப்
போதலே புரிந்து திக்கில் போய்ஒளித்(து) உலகம் உண்ட
மாதவா சரணம் என்றே மாயனைச் சேர்ந்த(து) அன்றே.

**பொழிப்புரை:** *ஞான குணம் சம்பந்தப்பட்ட அந்த அதிசூர வீரர் மூவர்களால் தேவர்களுடைய சேனையானது, பேராசையினால் அளவுக்கு அதிகமாக போகம் அனுபவித்து கெடுத்துக் கொள்ளும் காமுகர்களின் செல்வம் போலத் தேவர்கள் பின்வாங்கி பல திக்குகளிலும் ஓடி ஒளிந்து, உலகத்தை உண்ட (திருவாயில் காட்டி அருளிய) மாதவனே! சரணம் என்று விஷ்ணுவைச் சேர்ந்தனர்.* **(4.3.23)**

அடைக்கலம் புகுந்த வானோர்க்(கு) அஞ்ச(ல்)என்று) அபயம் நல்கி
விடைத்துவந்(து) அமரில் மோதும் விண்டுவோ(டு) அரும்போர் செய்து
படைக்கல நேமி ஏவப் பாய்கனல் தீய்க்கத் தீய்ந்து
தொடைத்துழாய் மார்பன் வாழும் தூயவை குந்தம் புக்கார்.

**பொழிப்புரை:** *சரணாகதி அடைந்த தேவர்களுக்கு அஞ்சாதீர் என்று அபயம் அளித்து, கோபம் கொண்டு எழுந்து போர் செய்யவும், மகாவிஷ்ணுவுடன் மூவரும், சம்பராசுரனும் அரும்போர் செய்து, சக்கராயுதத்தை விடுக்க எழும்பிய அக்கினிச் சுவாலையால் பஸ்பம் ஆகி, நறுமணம் கமழ் துளசி மாலை அணிந்த மார்பன் உறைகின்ற வைகுந்தம் சேர்ந்தனர். வீம பாச திடர் மூவர் விதேக கைவல்யத்தையும் அடைந்தனர். (சம்பரன் வைகுண்டத்தையும் அடைந்தான்.)* **(4.3.24)**

மற்றினி இந்த வாற்றால் வாதனை யாலே பந்தம்
பற்றுறும் அதனை நீங்கில் பந்தம்போம் விவேகத் தாலே
உற்(று)அறி(வு) உண்மை சேரில் உளத்தில்வா தனைபோம் போனால்
அற்ற(ம்)இல் சித்தம் நெய்தீர் தீபம்போல் ஆகும் அன்றே.

**பொழிப்புரை:** *இப்பொழுது கூறிய முறையால் தேக அபிமானம், பிரபஞ்சம் சத்தியம் என்னும் வாசனையால் பந்தமாம். பற்றினை உண்டாக்கக் கூடிய வாசனை நீங்கிடில் பந்தம் (கட்டு-முடிச்சு) அகலும். நிரந்தரம் செய்யும் விசாரத்தாலே ஞானத்தை அடைந்து சத்தியத்தைச் சார்ந்துவிடில் மனதில் சேரும் வாசனைகள் போய்விடும். வாசனை போனால் குற்றம் இல்லாத சித்தமானது எண்ணெய் தீர்ந்த தீபம் போல் சாந்தம் ஆகும்.* **(4.3.25)**

**(திதிப் பிரகரணத்தில் வீம பாச திடர் கதை முற்றும்)**

# (vi) தாசூரன் கதை

*மனதின் நாசமே முக்கிய உபாயம். மற்றைய போகம் இச்சை இவற்றைத் தியாகம் செய்தல், சத்சங்கம், விவேகம், ஆத்ம போத சமாதியில் பயிற்சி முதலானவை அதன் காரணமாகவே செய்யப்படுவன என்னும் கருத்தினைக் கொண்டு, முதலில் அவித்தையின் ஆற்றல் வாய்ந்த உல்லாசங்களால் விஷய உள்முகமான மனதை நன்றாக வென்றவர் எவரோ அவரே மகாசூரர் சாதுக்கள் எல்லாவற்றையும் வெற்றிகொண்டு விளங்குபவர் ஆவர் என்பதால், மாயா பதத்தை ஒழிக்கும் மனோ நாச வழியைக் கூறப்படுகிறது.*

*முந்தைய வீம பாச திடர் கதையில் அகங்காரத்தைத் தியாகம் செய்வது புருஷார்த்தத்தைக் கொடுக்கும் சாமர்த்தியம் உடையது எனச் சொல்லப்பட்டது. இக்கதையில் அதனை நிலைநிறுத்துவதற்காக சகத்தின் மாயாமயத்துவம் தெளிவாகச் சொல்லப்படுகிறது. அதில் இப்போது உபாயம் உபதேசிக்கப்படுகிறது.*

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

ஒழியாத துயர்மாயை எனும்ஆ பத்தை
  ஒழிக்கமன நாசம்ஓர் உபாயம் ஆகும்
இழியாத மெய்ஞ்ஞானப் பொருளை எல்லாம்
  இயம்பக்கேட்(டு) அயராமல் இதயம் கொள்வாய்
பழியான போகத்தின் இச்சை தானே
  பந்தமாம் அதுவிடலே பரமம் ஆகும்
வழியான பன்னூலால் பயன்கொல் என்ன
  வருந்தாமல் இவ்வழியே வருதல் வேண்டும்.

**பொழிப்புரை:** *எப்பொழுதும் துன்பத்தையே தந்து கொண்டிருக்கும் பொய்யான சம்சார ஆபத்தை ஒழிக்க மனநாசம் ஒன்றே உபாயமாக உள்ளது. பயனில் குறையாத மெய்ஞ்ஞானப் பொருளை எல்லாம் உபதேசிக்கக் கேட்டு, தளர்வு அடையாமல் (சந்தேகத்தினால் மயங்காமல்) உனது இதயத்தில் கொள்வாய். கண்டிக்கத் தக்க போகத்தின் இச்சை (விருப்பம்) தான் பந்தம் ஆகும். அதனை விட்டு விடுவதே மோட்சத்திற்கு வழியாகும். பல வழிகளான அனேக மற்றும் அன்னிய சாத்திரப் பயிற்சியினால் என்ன பிரயோசனம் என்று வருந்தாமல் இந்த மனோ லயத்தையே பின்பற்ற வேண்டும். (மனோ நாசத்திற்கான வழிகளில் போகத்தின் இச்சையை விடுதலே முக்கிய உபாயம்)* **(4.4.1)**

இன்பம்(ம்)இதாம் இன்பம்(ம்)இதாம் என்ற வெல்லாம்
  எரியெனநஞ்(சு) எனநினைக ஏற்றத் தாழ்வாய்த்
துன்புறுபோ கம்பலகால் தேர்ந்து நெஞ்சில்
  தோயாமல் எளி(து)அருந்தில் சுகமே ஆகும்
வன்புபயில் மனத்தோற்றம் நாசம் ஆகும்
  மனத்தினது நாசமே மகத்தாம் தோற்றம்
நன்பரம ஞானிகள்நெஞ்(சு) இறந்து போகும்
  நடைவிலங்காம் அறிவிலர்க்கு நவைகூர் நெஞ்சம்.

**பொழிப்புரை:** *இன்பம் இது, இன்பம் இது என்று கருதுகின்ற அனைத்தும் (பின்னால்) தகிக்கின்ற நெருப்பு என்பதாகவும், துயர்தரும் விஷம் என்பதாகவும் நினைக்கும் எண்ணம் வரவேண்டும். உயர்வு தாழ்வான துயர்மயமான விஷய போகங்களை நன்கு விசாரித்து துன்பத்திற்குக் காரணமாம் என்று உணர்ந்து மனதில் பதியாமல் அநாயாசமாக (முணுமுணுப்பின்றி வந்ததைக் கிடைத்ததைப்) புசித்தால் சுகத்தையே அளிப்பதாகும். இதனால் வலிமை பொருந்திய விஷய போகங்களில் மறுபடியும் மறுபடியும் ஈடுபடும் மனதின் தோற்றம் கேடு அடையும். மன நாசமே மகத்தானது. உயர்ந்த சீவன் முத்தர்களிடத்தில் மனமானது நாசம் அடைந்திருக்கும். அஞ்ஞானிகளிடத்தில் மலின வாசனா மனம் கால்களில் பூட்டிய விலங்கினைப் போன்றதாம்.* **(4.4.2)**

**ஆனந்தம் நிரானந்தம் இரண்டும் இல்லை**
**அசைவு(ம்)அசை(வு) இன்மையுமாம் அவையும் இல்லை**
**ஈனம்தீர் சத்(து)அசத்(து)அன்(று) இவற்றுக்(கு) எல்லாம்**
**இடையல்ல ஞானிமனம் என்ற லோடும்**
**தா(ன்)அந்தம் இலாஅறிவாய் உலகின் மேலாம்**
**தத்துவத்தில் உல(கு)இருக்கும் தன்மை தன்னை**
**ஞானம்தான் வளர்பொருட்டாய் உரைப்பாய் என்று**
**நாத(ன்)இயம் பிடவசிட்டன் நவில்வ(து) ஆனான்.**

**பொழிப்புரை:** *ஞானிகளின் மனம் வாசனை இல்லாததாலும், விவகாரத்திற்குக் காரணம் ஆவதாலும் நிரூபிக்க அரிதானது. (மனம்) சடம் ஆவதால் ஆனந்தம் அன்று (அதே சமயம்) ஆனந்த அனுபவத்திற்குக் காரணம் ஆவதால் நிரானந்தம் (ஆனந்தம் இல்லாமை) அன்று. ஆன்மாவிலேயே லயித்திருப்பதால் அசைவும் அன்று. வெளியிலும் விளங்குவதால் அசைவு இல்லாமையும் அன்று. சங்கற்பம் முதலிய காரியங்கள் இல்லாததால் சத்தும் அன்று, இந்திரியங்கள் விஷயங்களில் ஈடுபட வருவதால் அசத்தும் அன்று. ஒன்றுக்கொன்று விரோதி ஆவதால் எந்த ஒரு பக்கமும் உதயமாகாததால் ஆனந்தம் நிரானந்தம் (ஆனந்தம் இன்மை) முதலியவற்றின் மத்தியில் உள்ளதும் அல்ல (ஞானியின் மனம் அனிர்வசனீயம் என்றும் இந்த தேகத்திலேயே பரப்பிரம்மத்தைக் காண்பதாகும் என்று அறிக) என்று கூறியதும், இராம பிரான் "தன் வடிவாய் முடிவற்றதாய் அறிவாய் உலகிற்கும் மேலானதாம் தத்துவத்தில் (ஆன்மாவில்) இந்த உலகம் நிலைபெறும் தன்மையை ஞானம் விருத்தியாவதற்கு (வளர்வதற்கு) மீண்டும் உரைத்தல் வேண்டும்" என்று கேட்டுக் கொள்ள வசிட்ட முனிவர் சொல்லத் தொடங்கினார்.* **(4.4.3)**

**வேறிலா(து) எவ்விடத்தும் மேவி நின்றும்**
**மேவாமல் நுண்மையினால் வேறாம் விண்போல்**
**கூறிலாச் சிற்பாவம் எங்கும் நின்றும்**
**கூறுபடும் அவற்றொன்றாம் கூடிப் பற்றாப்**
**பேறிலாச் சங்கற்பம் அனைத்தும் இன்றிப்**
**பேரின்றி அழிவின்றி பேதம் இன்றி**
**ஊறிலா ஆகாயம் கோடி கூறா**
**உரித்(து)அவற்றில் ஒருகூற்றை ஒப்ப நொய்தாம்.**

**பொழிப்புரை:** *அயலாக இல்லாமல் எல்லா இடத்திலும் இருந்து கொண்டிருந்தும், சூக்குமத் தன்மையாலே சம்பந்தம் இல்லாமல் இருக்கின்ற ஆகாயம் போல, பிளவுபடாத சித் பாவம் எவ்விடத்திலும் நிறைந்திருந்து, பிளவுபடும் பொருள்களுடன் கூடியும் பற்றை அடையாது, பயன் அற்ற எண்ணங்கள் (சங்கற்பம்) எல்லாம் இன்றி, எந்தவொரு பெயரும் இல்லாததாய், அழவில்லாததாய், பேதம் இல்லாததாய், வாயு முதலிய பூதங்களின் பரிசம் இன்றி (தொடாததாய்-சம்பந்தம் இன்றியதாய்) விளங்கும் ஆகாயத்தைக் கோடி கூறுகள் ஆக்கினால் அவற்றில் ஒரு கூறுக்குச் சமானமாக சூக்குமம் ஆம்.* **(4.4.4)**

**நன்றிதரும் உண்மைமுதல் பெயர்கள் பெற்று**
**ஞானிகள்பால் நிமலமா ஞானம் ஆகி**
**ஒன்றுமல உருவான குடும்ப ரூபம்**
**ஒன்றாகித் தனைத்தெரிவித்(து) உணர்வே மெய்யாய்த்**
**தன்துணைச்சின் மாத்திரத்துக்(கு) அயல்அற்(று) இந்தத்**
**தொத்தாமத் தாமயமாம் சகங்கள் எல்லாம்**
**துன்றுதிரை முதலாகப் பிறந்த எல்லாம்**
**சூழ்கடலில் வேறாகாத் தொடர்ச்சி போலாம்.**

**பொழிப்புரை:** *நன்மையை அளிக்கும் சத்தியம் ஞானம் அனந்தம் ஆனந்தம் முதலான பெயர்களை அடைந்து, ஞானிகளிடத்தில் நிமல (மலமில்லாத) ஞானமாகி, அறிவிலாதவர் இடத்தில் களங்கம் உடைய அஞ்ஞானம், அதன் காரியமான குடும்ப வடிவம் அடைந்து இலங்கும் தன்மை உடைய ஆன்மாவைத் தரிசிக்க வைத்து, அறிவு சொரூபமே உண்மையாய், தனக்குத் தானே சமானமான சின்மாத்திரத்துக்கு வேறாக இல்லாமல் தோற்றம் அளிக்கின்ற நீ உனது என்னும் தன்மை, யான் எனது என்னும் தன்மை மயமான பலவித உலகங்கள் யாவும் எது போலத் தோற்றம் தரும் எனில் நெருங்கி எழுந்த அலை, நுரை, நீர்க்குமிழி முதலாக எழுந்த அனைத்தும் நிறைந்த கடலில் (கடலைக் காட்டிலும்) வேறாகாது தோற்றும் உதாரணம் போல்வதாம்.* **(4.4.5)**

**துனைதருபல் பிறப்பாகிக் கொடிதாய்ப் பொல்லாச்**
**சுபாவமாம் தனைஅறியாச் சுமடர்க்(கு) என்றும்**
**தனைஅறிந்தோர்க்(கு) ஒளியுருவாய் எல்லாம் ஒன்றாய்த்**
**தானாக அனுபவிக்கும் தன்மை யாலே**
**நினைவொடுசெய் வோன்செய்கை செயல்இம் மூன்று**
**நிகழ்விக்கும் பாவித்த நினைவுக்(கு) எல்லாம்**
**அனையசுவை யாய்நிற்கும் பிறவிப் போகம்**
**அருந்துவோர்க்(கு) அப்போகம் ஆகி நிற்கும்.**

**பொழிப்புரை:** *தனது சொரூபத்தை உணராத அஞ்ஞானிகளுக்கு எப்போதும் விரைந்து பல பிறவிகள் கொடுத்து கொடிய பொல்லாத சுபாவம் ஆகும். தனது சொரூபத்தைப் பிரம்மம் என உணர்ந்த அறிஞர்களுக்கு பிரகாச வடிவமாய் சகலத்திலும் ஒன்றாய் ஆத்மாவாய் அனுபவிக்கும் தன்மையாலே எண்ணிச் செய்யும் செய்வோன்*

*(கர்த்தா), செய்கை (கர்மம்), செயல் (கிரியை) இந்த மூன்றினையும் பிரகாசிக்க வைக்கும். எண்ணிய எல்லா எண்ணங்களுக்கும் ஏற்றபடி சுவையாய் நிற்கும். பிறவிப் போகத்தை அனுபவிக்கும் சம்சாரிகளுக்கு அந்தப் போகமாகி நிற்கும் அந்த சித்து.* **(4.4.6)**

**அத்தமனம் உதயம்(ம்)இல்லை எழுதல் நிற்றல்**
**அயல்போதல் வருதல்(ல்)எனும் அனைத்தும் இல்லை**
**இத்தலத்தில் இல்லைஇலா(து) இருக்க வில்லை**
**இத்திறமாம் சித்துமலம் இல்லா மெய்யாய்ச்**
**சுத்தமுறு தானேதன் னிடத்தில் நிற்கும்**
**சொன்னநெறி யேசகமாய்ச் சொல்பே ராலே**
**மெத்தவெகு ரூபமாம் தற்சு பாவம்**
**விரிந்தெங்கும் சிற்பெயரால் விளங்கி நிற்கும்.**

**பொழிப்புரை:** *அஸ்தமனத்தை அடைவதில்லை, உதயத்தையும் அடைவதில்லை. எழுவது, நிற்பது, வேறிடத்திற்குச் செல்வது, வருவது முதலான எவையும் இல்லை. இங்கு இருப்பது இல்லை, இல்லாமலும் இல்லை. இத்தகைய சித்தானது மலம் இல்லாததாய், தூய்மையதாய் தன்பால் தானே நிலைபெறும். கூறிய முறையே, உலகம் என்னும் பெயரினால் பிரபஞ்சமாக விரியும். இயற்கையாக தன் சுயமாக விரிந்து எங்கும் சித்து என்னும் பெயரால் விளங்கி நிற்கும்.* **(4.4.7)**

**இன்னசுபா வம்தானே ஒளியாய் நிற்கும்**
**இருளாகும் ஒன்றாகும் ஈறில் கூறாம்**
**தன்னுடைய தொழிலாலே தானே பூர்ண**
**தத்துவம்விட்(டு) இவன்அவன்நான் என்னும் தன்மை**
**உன்னியபா வனையாலே மெள்ள சீவன்**
**உருவாகிக் குடும்பமெனும் ஊகத் தாலே**
**பன்னியநா நாத்துவத்தில் அழுந்திப் பாவ**
**அபாவம்பற் றுதல்விடலாம் பதத்தில் நிற்கும்.**

**பொழிப்புரை:** *இத்தன்மைய ஆத்ம சொரூபமே, பரமார்த்தமாகப் பிரகாசமாய், வியவகாரிகத் தன்மையால் இருளாய் விளங்கும் ஏகமாகித் தானே முடிவில்லாத கூறு இல்லாததாகவும், கூறு உடையதாகவும், தன்னுடைய சங்கற்ப வசத்தினாலே சுயமாக பரிபூரணத்துவத்தை விட்டு, இவன் அவன் நான் என்னும் முன்னிலை படர்க்கைத் தன்மையைக் கருதிய சிந்தனையாலே மெதுவாக சீவனாம் பதத்தை அடைந்து, சம்சாரம் என்னும் பலவகையான தன்மைகளில் அழுந்தி, பாவ (உள்ளது) அபாவம் (இல்லாமை), வேண்டும்-வேண்டாமை என்னும் பேத வடிவமான நிலைகளில் நிலைபெறும்.* **(4.4.8)**

**அப்பதத்தில் நின்றுபுரி அட்ட கத்தை**
**அளவி(ல்)அசை வால்அமைக்கும் அமைத்தி டாதாம்**
**இப்பரிசில் நின்(று)உரவே வடிவ மான**
**எழுபிறவி வகைமாலை இயற்றும் எங்கும்**

ஒப்பரிய தற்பிரம சுபாவத் தாலே
உரைத்ததெலாம் எழும்மீண்டும் ஒடுங்கிப் போகும்
மெய்ப்படிவம் இல்லாத விண்ணில் கானல்
விரிவதுபோல் சிதி(ல்)நினைவு விரிந்து தோன்றும்.

**பொழிப்புரை:** *மேற்கூறிய நிலையில் நிலைபெற்றிருந்து சூக்கும தேகத்தை அனந்த விகற்பங்களால் விதிக்கும், உண்மையில் அமைக்காதாம் (செய்யாதாம்). இவ்வாறு திட வடிவமான எழுவகைப் பிறவிகளைச் செய்யும். ஒப்பில்லாத பிரம்ம சுபாவத்தாலே கூறிய யாவும் மீளவும் வருவனவும் போவனவும் ஆகும். உண்மை வடிவம் இல்லாத ஆகாயத்தில் கானல் (வெப்பத்திற்குப் பிறகு நீர் துளி) காணப்படுவது போல, களங்கம் இல்லாத சித்து தத்துவத்தில் சிருட்டி வடிவமான திருஷ்டி (நினைவு) விரிந்து தோன்றும்.* **(4.4.9)**

படர்மதத்தால் தனைப்பிறர்போல் தோன்று மாபோல்
பகுத்த(ல்)இலா அந்தச்சிற் பாவம் தானே
அடர்பொய்போல் தோன்றியதால் சத்தம் ஆதி
ஐம்புலனும் ஏதொன்றால் அறியா நின்றாய்
தொடர்கின்ற அதுஇந்த ஆன்மா ஆகும்
தோற்றமெலாம் தானாகித் துன்னி நின்ற
இடமுடைய பரப்பிரமம் இதுவே ஈ(து)இங்(கு)
இருப்பதுவும் பெயர்மலமாம் இதின்வே(று) இல்லை.

**பொழிப்புரை:** *ஆணவம் போன்றவற்றால் வெறிபிடித்த புருடன் அன்னியமான தன்னை அன்னியமாகக் காண்பது போல், பிரிவில்லாத* (*அன்னியமாக இல்லாத*) *அந்த அறிவு இயற்கையே தான் அவித்தையினால் நெருங்கிய அசத்துப் போலத் தோற்றும். சப்தம், பரிசம், உருவம், சுவை, வாசனை என்னும் ஐந்து விடயங்களையும் எந்த அறிவால் உணர்கின்றனையோ, காணப்படும் எல்லாவற்றுள்ளும் சத்து தன்மையாய் உள்ளீடாய் இருக்கும் அதுவே ஆன்மா ஆகும். இந்த ஆன்மாவே காணப்படும் அனைத்தும் ஆரோபம் ஆவதால் எல்லாமாய், எல்லையற்ற வியாபகமாய் விளங்கும் மேலான பரப் பிரம்மமே ஆகும். பிரம்மத்தினும் வேறாகாத ஆன்மாவே விவர்த்த வடிவமாக ஆகாயம் முதலான பெயர்களால் பிரபஞ்ச வடிவமாக நிலைபெறுகிறது. ஆன்மாவைக் காட்டிலும் எதிரிடையாக அவித்தியா காரிய ரூபம் சற்றும் இல்லை.* **(4.4.10)**

பொருகடலில் திரைமுதலாய்ப் பிறந்த வெல்லாம்
புனலாகி விளங்காமல் புழுதி ஆமோ
ஒருபொருளாம் பிரமமாத் திரமே அல்லால்
உபய(ம்)எனும் கற்பனைப்பேர் ஒன்றும் இல்லை
எரியிடத்தில் சூடுமாத் திரமே அல்லால்
இரண்(டு)உண்டோ அவ்வகைபோல் என்றும் ஒன்றாம்
சரியைகிரி யாயோகப் பதத்தின் முற்றிச்
சாதனங்கள் நிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும்.

**பொழிப்புரை:** *சமுத்திரத்தில் மோதுகின்ற அலை முதலான அனைத்தும் தண்ணீரே அல்லாமல் புழுதி (வேறொன்றாக தூசு) ஆகுமோ? அத்வைத வஸ்துவாகிய பிரம்மம் மாத்திரமே இருப்பது அல்லாமல் இரண்டாவதாக கற்பனைப் பெயர் ஒன்றும் இல்லை. அக்கினியின் இடத்தில் உஷ்ணம் மாத்திரமே உள்ளது. அன்றி இரண்டாவது ஒன்று உண்டோ? அதனைப் போல எப்போதும் ஒரு பொருளே உளதாம். சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்று பதங்கள் கைவரப்பெற்றவராய் மோட்ச சாதனங்கள் நிறைந்தவர்க்கே உபதேசிக்க வேண்டும்.* **(4.4.11)**

**இயற்கைகுணம் சோதித்து முன்னே பின்னே**
**யாவையுமாம் பிரமம்நீ என்னல் வேண்டும்**
**வியப்புறஆ சையில்உழல்வார்க்(கு) இவ்வா(று) ஓதில்**
**மீளாத தீநரகில் வீழ்த்த தாகும்**
**தியக்குறுபோ கத்(து)ஆசை தீர்ந்து புந்தி**
**தெளிந்தமகத்(து) ஆவார்க்கே திகழத் தோன்றும்**
**மயக்கமற உணர்த்தவல்ல குருவைக் கிட்டா**
**வருந்தியும்தன் பிறப்(பு)அறுக்கும் மகனும் ஆங்கே.**

**பொழிப்புரை:** *முதலில் சீடன் சமம் தமம் முதலிய குணங்களை உடையவனா அல்லது விஷயங்களில் பற்றுடையவனா என்று பரிசோதித்துப் பார்த்து, சமம் தமம் முதலியவை உடையவன் எனில் பிரம்மம் நீ என்று உபதேசித்தல் வேண்டும். விஷயங்களில் ஆச்சரியப் பட்டு மோகம் உடையவர்களுக்கு இவ்வாறு உபதேசித்தால் மீளாத கொடிய நரகில் தள்ளியதாகும். மயக்கத்தைத் தரும் போகங்களில் ஆசை இல்லாது புத்தி தெளிந்த மகாத்மாக்களுக்கே உபதேசித்தல் தகுதியானதாம். மயக்கம் போகுமாறு உணர்த்தும் திறன்மிக்க குரு கிடைப்பதும் அரிதாகும். அதுபோல, சிரமம் எடுத்துக்கொண்டு தனது பிறப்பு இறப்பினைத் தீர்த்துக் கொள்ளும் சீடன் கிடைப்பதும் அரிதாகும்.* **(4.4.12)**

**விளக்கு(ம்)இர வியும்மலரும் உண்டாய் உண்டாம்**
**வீ(சு)ஒளியும் பகல்பொழுதும் விரையும் போலத்**
**துளக்க(ம்)இல் சித்(து)உண்டாகில் உண்டாம் ஞாலம்**
**தோற்றரவு மாத்திரமே சொரூபம் ஆகும்**
**கிளத்தபர மார்த்தத்தால் இல்லை என்னக்**
**கேட்டலுமே பாற்கடல்போல் கம்பீ ரத்தால்**
**அளக்கரிதாய்ச் சீதளமாய் அமல மாகி**
**அற்புதமாம் நின்மொழிஎன்(று) அண்ணல் சொல்வான்.**

**பொழிப்புரை:** *தீபமும், சூரியனும், பூக்களும் இருக்குமாயின் முறையே பிரகாசமும், பகல்பொழுதும், வாசனையும் இருக்கும். சலனம் களங்கம் இல்லாத சித்து மாத்திர வஸ்து இருக்கின் பிரபஞ்சம் கயிற்றில் பாம்பு போலப் பிராதிபாசிக வடிவமாக (விவர்த்தமாக) இருக்கும். ஆராய்ச்சியில் தோன்றும் உண்மை ஞானத்தில் (பாரமார்த்திகத்தில்) உலகம் இல்லவே இல்லை என்று வசிட்டர் சொல்லக் கேட்டதும், பாற்கடல் போல் கம்பீரமாய், மதிப்பிடுவதற்கு அரிதாய், குளிர்ச்சியாய், நிர்மலமாய், அற்புதமாய் உள்ளது தேவரீர் வாக்கியம் என்று இராம பிரான் கூறுவார்.* **(4.4.13)**

இம்மொழிக ளால்இமைப்போது) இருளாம் மீள
　　இமைப்போதோ ஒளியாகும் இவ்வா றாகி
மைம்முகிலால் அற்பமாய் வெய்யில் சீதம்
　　வந்துவந்து போகின்ற மழைநாள் ஒத்தேன்
மெய்ம்முனியே அனந்தமாய்ப் பலவாய் ஒன்றாய்
　　வீயாதாய் அளக்கரிதாய் விளக்கம் எய்திச்
செம்முறையாம் ஆத்துமதத் துவத்துக்(கு) இந்தச்
　　செய்தொழில்கள் வந்தவா செப்பு(க) என்றான்.

**பொழிப்புரை:** *தேவரீர் உபதேசித்த வாக்கியங்களால் கணப்பொழுதில் இருளை (மயக்கத்தை) அடைகின்றேன். மீள கணப்பொழுதில் பிரகாசத்தை அடைகின்றேன். இவ்வாறு மாறி மாறி அடைந்தவனாகி, கார்கால மேகத்தால் கொஞ்சமாக வெய்யில் மறுபடியும் குளிர்ச்சி வந்து வந்து போகின்ற மழைக்கால நாட்களைப் போன்று ஆனேன். சத்தியம் உணர்ந்த முனிவரே! முடிவற்றதாய் வியவகாரத்தில் அனேகமாய், பாரமார்த்திகத்தில் ஏகமாய், அழியாததாய், அளவிட்டுச் சொல்வதற்கு அரிதாய், நித்தியப் பிரகாசமாய் விளங்கும் ஆத்ம தத்துவத்தில் விவகாரங்கள் வந்தவாறு எப்படி என்பதை அருளிச் செயல் வேண்டும் என்று கேட்டுக் கொண்டார் இராம பிரான்.* **(4.4.14)**

மெய்யான பொருளுடைய வாக்கி யத்தின்
　　மெய்ப்பொருளாய் முன்னொடுபின் விரோதம் இன்றிக்
கையாரு நெல்லினக் காட்ட வல்ல
　　கட்டுரையே யாம்இங்கு கழறிற்(று) எல்லாம்
மெய்யான ஞானவிழி வெளியாய்ப் போதம்
　　விரியஉதித் தால்என்சொல் மன்னும் வித்தை
கையார வலி(து)எளிது என்(று)உள்ள வாறு
　　கலக்க(ம்)அற நிலைநின்று காண்டி அன்றே.

**பொழிப்புரை:** *(உனக்கு இந்த மோகம் என்னுடைய வாக்கிய தோஷத்தாலே வந்தது அல்ல. மற்று ஆழ்ந்த கவனம் இல்லாமை என்ற தோஷத்தாலே வந்ததாகும் என்று வசிட்டர் சமாதானம் செய்கின்றார்.) யாம் இவ்விடத்து உமக்கு உபதேசித்த வாக்கியங்கள் எல்லாம் உள்ளபடியே உள்ள உண்மைப் பொருளே முன் பின் தொடர்ச்சியில் விரோதம் இல்லாமல் உள்ளங்கை நெல்லிக் கனி போலக் காட்டக் கூடிய உண்மை வாக்கியமே. இருந்தும் எதனால் அவ்வாறு தோன்றவில்லை எனில் உண்மையான ஞான திருஷ்டி இல்லாமையால் தோன்ற (விளங்க)வில்லை. ஞான திருஷ்டி விரிவாக உதயமானால் எனது வாக்கியம் என்னும் உபதேசத்தையும், அந்த உபதேசத்திற்குக் காரணமான ஞானத்தையும் அத்தாட்சி இல்லாதது, அத்தாட்சி உள்ளது (கூறியது விரோதம் உள்ளதா, விரோதம் இல்லாததா) என்பதாக உள்ளபடியே கலக்கம் அறக் காண்பாய்.* **(4.4.15)**

தன்னுருவம் மாய்வதற்கே முயல்வ தாய்உத்
　　தமமான அவித்தையினால் சகல மான
இன்னலுறு குற்றமிலா வித்தை எய்தும்
　　எய்கணைகள் கணையாலே நஞ்சை நஞ்சால்

துன்னுபகை பகையாலே தீது தீதால்
துடைப்பதுபோல் அவித்தைதனைத் துடைத்தல் வேண்டும்
உன்னியுறப் பார்த்தலுமே இதன்சு பாவம்
ஒழிந்துபோய்த் தன்மாய்வால் உதவும் இன்பம்.

**பொழிப்புரை:** *தனது சீவத்துவத்தைக் கெடுப்பதற்காக முயற்சி செய்வதாகிப் பரிபக்குவம் அடைந்த சாட்சாத்கார வித்தையும் அவித்தையின் பரிணாமம் ஆவதால் அவித்தையால் சகல துக்கம் தரும் குற்றம் இல்லாத வித்தை அடையப் பெறும். (அதாவது சுத்த மாயையினால் அசுத்த மாயையினைக் கெடுக்க வேண்டும்) ஏவுகின்ற அம்பினை அம்பினால், நஞ்சினை நஞ்சினால், நெருங்கிய பகையைப் பகையினால், அழுக்கினை அழுக்கால் துடைப்பது போல (சுத்த) மாயையால் (அசுத்த) மாயையினைப் போக்க வேண்டும். ஆழமாக விசாரித்துப் பார்த்தால் இந்த அவித்தையின் சுபாவம் அழிந்து அவித்தை அழிவதால் பிரம்மானந்தத்தை அளிக்கும்.* **(4.4.16)**

நனிமெய்யாய் மாயைஇல(து) என்(று)இவ் வாறு
நாடுவாய் ஞானியாய் ஞேயம் பெற்றால்
துனிசெயு(ம்)ஈ(து) உளமாயை அறிதி அன்றே
துகள்இலா நற்போதம் தோன்று மட்டும்
பனிமாயை இல்லைஎன என்சொல் லாலே
பழுதில்லா அறுதியுறப் பற்றி நிற்பாய்
புனிதமுறு பிரமமே எல்லாம் என்று
புந்தியில்கண் டோர்முத்தி பொருந்தி னோரே.

**பொழிப்புரை:** *உண்மையாக மாயையானது எப்போதும் இல்லவே இல்லை என்று இவ்வாறு சிந்திப்பாய். ஞானம் அடைந்து அறிய வேண்டியதை அறிந்து, அடைய வேண்டியதை அடைந்த ஞானியாய்த் துன்பம் செய்யும் இந்த அவித்தையின் தன்மையை உண்மையாய் உணர்ந்து, சந்தேக விபரீதம் இல்லாத உண்மை ஞானம் உதயமாகும் பொழுது பனிபோல மூடிக்கொள்ளும் ஆவரணமாகிய அவித்தை நாசமாகும் எனப் பழுதில்லாத எனது வாக்கியத்தாலே நிச்சயம் உடையவனாக ஆவாய். பவித்திரமான பிரம்மமே சர்வமும் என்று புத்தியில் உணர்ந்தவரே முத்தி கூடியவர் ஆவர்.* **(4.4.17)**

பேதமுறு புந்தியே மாயை ஆகும்
பெரிதுவருந் தியும்இதனைப் போக்கல் வேண்டும்
போதமுறு பேற்றினால் அன்றி மாயை
பொருநதியின் கரைதோன்றாப் பொருந்தத் தோன்றில்
ஏதமறும் அப்பதமே இறவா வீடாம்
இம்மாயை பிறப்பிட(ம்)ஏ(து) என்ன வேண்டாம்
சேதமுறக் கொல்வழிஏ(து) என்று தேர்வாய்
சிதைவுற்றால் இதன்இயல்பு தெரியும் அன்றே.

**பொழிப்புரை:** *பேத புத்தியே மாயை ஆகும். மிக மிக வருத்தப்பட்டு முயற்சி செய்து இந்த மாயையினைப் போக்கிட வேண்டும். தனது சொரூபத்தை அறிந்தால்*

*அன்றி மாயை என்ற நதியின் கரையை அடைய முடியாது. திடமாக ஆன்ம ஞானம் வரப்பெறின் அதுவே அழியாத மோட்ச வீடாம். இந்த மாயையின் பிறப்பிடம் எது (எவ்வாறு உண்டானது) என்ற விசாரம் வேண்டாம். நாசம் அடையும் வண்ணம் இந்த மாயையினைக் கொல்லும் வழி எது என்று விசாரத்தால் தேடுவாய். மாயை நாசமாகும் பட்சத்தில் இதன் இயல்பு தெளிவாகத் தெரிந்துவிடும்.* **(4.4.18)**

**யாதினில்தோன் றியது(என்றும் யாது(ஈது) என்றும்**
**இறந்தநெறி யாதென்றும் இறந்தால் தோன்றும்**
**ஆதலினால் வன்துயரின் சாலை யான**
**அவித்தையெனும் நோய்க்குமருந்(து) அருந்தச் செய்தால்**
**தீதுபயில் பிறப்(பு)என்னும் கடலில் மூழ்காய்**
**செறிகாற்று தன்னுருவாம் சேணில் தன்னால்**
**சாதமுறத் திரிவதுபோல் தன்பால் தோன்றும்**
**சத்தியினால் ஆத்துமதத் துவநின்(று) ஒல்கும்.**

**பொழிப்புரை:** *இந்த மாயை எதிலிருந்து உண்டானது என்றும், எத்தகையது என்றும், இதனை நாசமாக்கும் வழி எது என்றும் இந்த மாயை அழிந்தால் எல்லாம் புலப்படும். ஆதலால் கொடிய துயரின் இருப்பிடமாகிய அவித்தை என்ற நோய்க்கு (ஞானமாகிய) மருந்தினை அருந்தினால் துயர் தரும் பிறப்பு இறப்பு என்கின்ற கடலில் மூழ்கமாட்டாய். காற்றானது தன்னுடைய ஆதார வடிவமான ஆகாயத்தில் காரணம் ஏதுமின்றி உலாவித் திரிவது போல, ஆன்மாவில் அயலாக இல்லாத சித் சத்தியாலே சகம் முதலிய தன்மையை அடைந்து நிற்கும்.* **(4.4.19)**

**நொய்யநெடும் சிற்கடல்தன் இடத்தே அற்ப**
**நுடக்கத்தால் கணம்விளங்கும் நுண்மை நோக்கால்**
**ஐய(ம்)அறத் தற்பதம்ஒன்(று) அகண்டம் என்றே**
**அழுந்துவாய் அக்கடலில் அசைந்து சற்றே**
**மொய்யறிவாம் சிற்சத்தி கணகா லத்தில்**
**முழுதுறுசத் தியினாலும் முழங்கத் தோன்றித்**
**துய்யஇடம் காலமொடு தொழில்கள் மூன்று**
**தூயனசத் திகள்தம்மைத் துணையாய்ச் சேர்க்கும்.**

**பொழிப்புரை:** *சூக்குமமாய் விசாலமாய் உள்ள சித்தாகிய கடல் அற்ப அசைவினால் சீவ ஈசுவர சகம் என்ற சொரூப விட்சேபங்களால் கண நேரத்தில் பிரகாசிக்கும். சூக்கும திருஷ்டியால் சந்தேகம் இன்றி பிரம்ம பதமானது ஏகமாய் அகண்டமுமாய் விளங்கும் என்பதாக திடதரமாகப் பாவிப்பாய். அந்த சித்து வடிவக் கடலில் அவித்தியா வடிவ சிற்சத்தி சற்று சலன ரூபமாய் கண நேரத்தில் அப்படி (அதாவது சித்து வடிவமாகவே அவ்விடத்தில் தானே கடலில் அலை போல) பிரகாசிப்பதாய், அது அறிவின் திரிபாகிய இடம் காலம் தொழில்கள் என்னும் மூன்று சத்திகள் தம்மைத் (சிருட்டி காரணமாக) துணையாகக் கொள்ளும்.* **(4.4.20)**

தனதுசுபா வத்தைஅறிந்(து) அனந்த மான
தற்பதத்தில் இருந்தும்சிற் சத்தி தானே
என(து)உருஇவ் வள(வு)என்றே அறி(வு)அற் றால்போல்
எண்ணுறும்இப் படிஉருவை இதுபா விக்கில்
அனுகதமாய் அப்பொழுதே பெயர்கள் எண்ணே
ஆதியாம் பார்வைகள்வந்(து) அடையா நிற்கும்
கனவிகற்பம் தருவடிவாய்ச் சித்து ரூபம்
கவரிடம்கா லம்தொழிற்குக் கலந்த பற்றாம்.

**பொழிப்புரை:** *தனது இயல்பினை அறிந்து முடிவில்லாத (எல்லையற்ற) பிரம்ம பதத்திலிருந்து சித் சத்தியானது தானே (விசாரம் இன்றி எல்லைக்கு உட்பட்டதாய்) எனது உருவம் இவ்வளவு உடையது என்று பாவிக்கும். இவ்வாறு அந்த சித் சத்தி பாவனை செய்திட, தொடர்பாய் அப்பொழுதே பெயர்கள் எண்ணிக்கை முதலான பேத திருஷ்டிகள் வந்து பொருந்தும். வாசனா திடத்தால் மிகுந்த விகற்பங்களைத் தரும் வடிவமாகச் சித் வடிவமானது கிரகிக்கும் இடத்துக்கும், காலத்துக்கும், தொழிற்கும் சேர்ந்த பந்தம் ஆகிறது.* **(4.4.21)**

ஈங்(கு)உரைசெய் சித்தினுடை உருவம் தன்னை
யாவரும்சேத் திரக்கியன்என்(று) இயம்பா நிற்பர்
ஆங்(கு)அதுவும் வாதனையைச் செய்யா நின்றே
அகங்கார பாவனையை அடையா நிற்கும்
வாங்கரும்ஆங் காரமும்நிச் சயிப்ப தாகி
மலினமுறு புந்தியாம் மலம்சேர் புந்தி
வீங்கியகற் பனைவடிவாய் மனன நெஞ்சாம்
விகற்பமிகு மனம்பொறியாம் மெல்ல வந்தே.

**பொழிப்புரை:** *இவ்விடத்தில் மேலே கூறிய சித் சத்தியை யாவரும் சீவன் (சேத்ரக்ஞன்) என்று கூறுவர். அந்த சீவனும் வாதனையைச் செய்து கொண்டு அகங்கார பாவனை அடைந்திருக்கும். கெடுத்தற்கு அரிய (கொல்லுதற்கு அரிய) அந்த அகங்காரம் நிச்சயிக்கும் தொழிலை உடையதாகி களங்கம் உள்ள புத்தியாகும். களங்கம் சேர்ந்த புத்தி அனேக கற்பனை வடிவாய் நினைப்புள்ள மனம் ஆகும். விகற்பம் மிகுந்த மனமானது மெல்ல வந்து இந்திரியங்கள் ஆகும்.* **(4.4.22)**

கரசரண மயஉடல்ஐம் பொறிகள் என்பர்
கவல்வுறஇப் படிஅன்றோ கலந்து சீவன்
விரவியசங் கற்ப(ம்)எனும் பாசத் தாலே
வீக்குண்டு துன்பவலை வீசப் பட்டுத்
தரமறஈ னதைஅடைவே அடையா நிற்கும்
சத்திமய மாம்மனம்இத் தன்மை யாகிப்
பொரஅகங்கா ரதைமேவிக் கோச காரப்
புழுப்போல்தன் இச்சையினால் பூணும் பந்தம்.

**பொழிப்புரை:** *ஐம்பொறிகளே கை கால் முதலியவற்றை உடைய தூல தேகம் என்பர். வருந்துமாறு இப்படி அல்லவா உலகத்தோடு கலந்த சீவன் ஆனவன் விவகாரம் செய்து சங்கற்ப வாசனை என்னும் கயிற்றினால் கட்டுப்பட்டவனாய், வீசப்படும் துன்பம் என்னும் வலையில் அகப்பட்டு, தரம் இன்றி இழிவை அடைகிறது. விருப்பு வெறுப்பு என்னும் சக்தி மயமான மனம் இவ்வாறு ஆகி வருத்தும் அகங்காரத்தை அடைந்து கோச காரப் புழுவைப் போலத் தனது இச்சையினாலேயே பந்தத்தை அடையும்.*
**(4.4.23)**

**தானேசங் கற்பித்துத்தன் மாத்தி ரத்தால்**
**தனிவலையாம் உள்தொழில்கள் தன்னைக் கட்ட**
**கானேறு சிங்கம்விலங்(கு) உற்ற(து) என்னக்**
**கவலையினால் மிகவுமனம் கரைந்து சோரும்**
**ஆனாத மனம்புந்தி ஞானம் செய்கை**
**அகங்கரம்வா தனைஉடலம் பகுதி மாயை**
**ஊனான மலம்கருமம் பந்தம் சித்தம்**
**ஓ(து)அவித்தை இச்சைஎன உரைப்பர் அன்றே.**

**பொழிப்புரை:** *காட்டில் திரியும் சிங்கம் விலங்கினால் கட்டுப்பட்டது போல, தானாகவே சங்கற்பம் செய்துகொண்டு சப்தம் பரிசம் முதலான விஷயங்களில் இச்சை அடையும் ஒப்பற்ற வலையாம் உள் (மனத்) தொழில்களால் சீவனாகிய தன்னைத் தானே அகப்பட வைத்துக் கொண்டு கவலையினால் மனம் மிகவும் அயர்ந்து சோர்வு அடையும். விசாரத்தால் அன்றிக் கெடாத மனம், புத்தி, ஞானம், செய்கை, அகங்காரம், வாதனை உடல் (சூக்கும தேகம்), பிரகிருதி, மாயை, குற்றமுடைய மலம், கருமம், பந்தம், சித்தம், சொல்கின்ற அவித்தை, இச்சை என அந்த ஒன்றையே பெரியோர்கள் சொல்வர்.(ஆத்மா தன் சங்கற்ப சக்தியால் ஐம்பூத பௌதிகமாய் அதனால் தான் மறைபட்டது போலத் தோற்றும் என்பதாம்)* **(4.4.24)**

**அப்பரி(சு)ஓ ரோர்இடத்தில் ஓரொன் றாக**
**ஆசாபா சத்தினால் அமைத்துச் சொன்ன**
**ஒப்பரிய சகவிரிவாம் இவற்றை எல்லாம்**
**உட்கொள்ளும் பலம்இதனில் ஒன்றும் இல்லை**
**கப்புடைய நெடுவடத்தின் வடத்தின் வித்துக்**
**கரந்(து)இருப்ப(து) ஒக்கு(ம்)இடர்க் கவலைத் தீயின்**
**வெப்பமிகக் கோபப்பாம்(பு) எடுத்து நுங்க**
**வேட்கையெனும் கடல்திரையால் மெலியும் உள்ளம்.**

**பொழிப்புரை:** *(பலவித சக்திகளை உடைய சைதன்னியமே மனம் புத்தி முதலிய வடிவத்தாலே பலவிதத் தன்மைகளை அடைவதனால்) ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொரு பெயர் வடிவம் உடையதாக ஆசாபாசத்தினால் அமைத்துச் சொன்ன ஒப்பிலாத சகத்தின் விரிவாகும். இவற்றை எல்லாம் உள்ளே தாங்கியிருப்பதாம். இதனால் சற்றும் பலன் இல்லையாம். கிளைகளை உடைய பெரிய ஆல மரத்தினை, அந்த ஆலமர விதை அடக்கிக் கொண்டு இருப்பது போல்வதாம். கவலையாகிய அக்கினி*

*தகிக்க, கோபமாகிய பாம்பு விழுங்க, ஆசை என்னும் கடல் அலைகளால் அடித்துச் செல்லப்பட்டு மனம்வாடும்.* **(4.4.25)**

பெருகியஇத் துயர்களால் அவச மாய்த்தன்
பிதாமகனை மறந்துமிகப் பீடை உற்றுக்
கருகியஇம் மனம்தன்னை அளற்றில் ஆனைக்
கரையேற்றி விடுவதுபோல் கரையில் ஏற்றாய்
வெருவுசரா மரண(ம்)எனும் விடத்தால் வெந்து
மிகுநலம்தீங்(கு) எனும்பகையால் மெலியும் நெஞ்சுக்(கு)
அருள்புரியா நரர்மனித வடிவ மான
அரக்கரே அருள்வடிவ மான வள்ளால்.

**பொழிப்புரை:** *அருள் வடிவமான வள்ளல் இராகவா! விஷய ஆசையால் மிகுந்த இந்தத் துயரங்களால் பரவசப்பட்டு, பிரம்மத்தை மறந்து பெரும் துன்பங்களை அடைந்து கருகிப் போன இந்த மனத்தைச் சேற்றில் சிக்கிய யானையைக் கரை ஏற்றுவது போல, மாயையில் இருந்தும் கரை ஏற்றுவாய். யாவரும் அஞ்சுகின்ற மூப்பு, மரணம் என்னும் விஷத்தினால் வெந்து, நன்மை தீமை என்னும் பகையால் வாடும் நெஞ்சுக்கு அருள் புரியாத (அந்த மனதைக் கரையேற்றாத) மனிதர் மானிட வடிவத்தில் உள்ள அரக்கரே.* **(4.4.26)**

இவ்வகையே சிற்பாவ சீவ பேதம்
இயல்வடிவாம் பிரமத்தின் இடையே நின்று
வவ்வியபா வனையாலே வந்த கோடி
வாராநின் றனகோடி வருவ கோடி
தெய்வவரை அருவிநீர்த் துளிபோல் வந்தோர்
சிலர்பிறவி ஒன்றிரண்டு மூன்று சேர்ந்தோர்
நைவருசென் மங்கள்சிலர் நூற்றின் மிக்கோர்
நாடரிய பவம்சிலர்கள் நண்ணி நின்றோர்.

**பொழிப்புரை:** *கூறியவண்ணம் உபாதிகளினால் வேறு வேறுபட்ட அறிவின் வடிவ சீவர்கள் பிரம்ம சொரூபத்திலிருந்தும் பிறவிப் பாவனையாலே ஏவப்பட்டவர்களாய் உபாதி விவர்த்த கற்பிதமாய் வந்தவர்கள் கோடிக் கணக்கானோர். வந்து கொண்டிருப்ப வர்கள் கோடிக் கணக்கானோர். இனி வரப்போகிறவர்கள் கோடிக் கணக்கானோர். மேரு மலையின் அருவியின் நீர்த்துளிகள் போல் வந்தவர்களில் சிலர் தத்தமது வாசனா வசத்தாலே ஒன்று இரண்டு மூன்று பிறவிகள் எடுத்தவர் ஆவர்.சிலர் துன்புறுத்தும் பிறவிகள் நூற்றுக்கும் அதிகமாக எடுத்தவர்கள் ஆவர். சிலர் கணக்கில் அடங்காப் பிறவிகளை அடைந்து நின்றவர் ஆவர்.* **(4.4.27)**

சிலர்சிலர்கள் கின்னரர்கந் திருவர் ஆனோர்
சிலர்விச்சா தரர்உரகர் திரளாய் நின்றோர்
சிலர்அருக்கர் இமகிரணன் வருணன் ஆனோர்
சிலர்பிரமன் திருநெடுமால் சிவனாய் நின்றோர்

சிலர்மறையோர் சிலர்அரசர் ஆகி நின்றோர்
 சிலர்வணிகர் வேளாண்மை செயலில் நின்றோர்
சிலர்விலங்கு பறவைகள்ஊர் வனவாய் வந்தோர்
 சிலர்இலைகாய் பழமூலம் திரணம் ஆனோர்.

**பொழிப்புரை:** *சிற்சிலர் வாசனைகளின்படி கின்னரர் கந்தருவர் ஆயினர். சிலர் வித்யாதரர் ஆயினர். ஆதிசேஷன் முதலிய சர்ப்பங்களாக ஆயினர். சிலர் சூரியன், சந்திரன், வருணன் முதலான தேவர்கள் ஆயினர். சிலர் புண்ணியர் அயன், அரி, ருத்திரன் ஆயினர். சிலர் அந்தணர், சிலர் மன்னர் ஆயினர். சிலர் வணிகர், விவசாயத் தொழில் செய்பவர் ஆயினர். சிலர் விலங்குகளாகவும், பறவைகளாகவும், ஊர்வனவாகவும் ஆயினர். சிலர் இலை, காய், பழம், கிழங்கு, புல் முதலியவை ஆயினர்.* **(4.4.28)**

சிலர்மயேந் திரசைலம் சைய மேரு
 தென்மலய மந்தரமாய் சிறந்து நின்றோர்
சிலர்கடம்பம் செம்பீரம் தாலம் சாலம்
 சிறந்ததமா லங்களாய்ச் செறிந்து நின்றோர்
சிலர்உவரி தயிர்நெய்பால் கருப்பம் சாறு
 தேனொடு பெருங்கடலாய்ச் சேர்ந்து நின்றோர்
சிலர்திசைகள் சிலர்நதிகள் ஆகி நின்றோர்
 சிலர்மேலோர் சிலர்கீழோர் சீவர் ஆனோர்.

**பொழிப்புரை:** *சிற்சிலர் மகேந்திர மலை, சகூய பர்வதம், மேரு மலை, பொதியமலை, மந்தர மலை ஆக விசேடம் பெற்று வாழ்வர். சிலர் கடம்ப மரம், எலுமிச்சை, பனைமரம், ஆச்சாமரம், பச்சிலைக் கொடிகளாக நெருக்கமாக நின்றனர். சிலர் உப்புக்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், பாற்கடல், கருப்பச்சாறு கடல், தேன் கடல், நீர்ப் பெருங்கடல் ஆக சேர்ந்து நின்றனர். சிலர் திசைகள் ஆயினர். சிலர் நதிகள் ஆயினர். சிலர் சீவன் முத்தராக உயர்ந்தவர் ஆயினர். சிலர் கீழ்த் தரப்பட்ட சீவராக ஆயினர்.* **(4.4.29)**

கையினால் அறைஉண்ணும் பந்து போலக்
 காலனால் அறைஉண்டு கணக்கி லாத
மெய்யிலே புகுந்(து)அலுத்தும் விவேகம் பெற்றும்
 விரகிலார் சிலர்பிறப்பில் மீண்டும் வீழ்ந்தார்
மையினால் மூன்(று)உலகாம் பணதி செய்து
 வரும்நிற்கும் போமாகி வளர்ந்து வாளாப்
பொய்யினால் மிகவிரியும் வேலை யூடே
 பொருதிரைபோல் பரபதத்தே புரிந்த மாயை.

**பொழிப்புரை:** *கைகளால் அடிக்கப்பட்டு மேலும் கீழும் உழலும் பந்து போல, காலனால் அடிக்கடி வதம் செய்யப்பட்டுக் கணக்கிலாத யோனி பேதங்களில் ஒரு தேகத்தை விடுத்து மற்றொரு தேகத்தில் புகுந்து அலுத்தும், கடைத்தேறும் படியான விவேகம் அடைந்தும் சாமர்த்தியமாய் முயற்சி செய்யாதவர் சிலர் பிறவிகளில் மீண்டும் வீழ்ந்து வருந்தினர். வீணாக மயல் செய்யும் மாயை தமோகுணப் பிரதானத்தால்*

*சொர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் மூன்று உலகமாகிய ஆபரணத்தை உற்பத்தி, நிலைநிறுத்தல், ஒடுக்குதல் அடையச் செய்து, மித்தையினால் மிகவும் விரிகின்ற கடலில் சப்தமிடும் அலைகள் போல பிரம்மத்தில் விவர்த்த வடிவத்தால் தோன்றி நிலைபெற்று நாசத்தை அடையச் செய்யும்.* **(4.4.30)**

**தெரிந்(து)உணர்ந் தோன்இவ்வாறு செப்ப லோடும்**
**சீவன்தான் மனப்பதத்தைச் சேர்ந்து நின்றும்**
**விரிஞ்ச(ன்)எனும் பெயர்பெற்ற(து) எவ்வா(று) என்று**
**வித்தரத்தால் உள்ளபடி விளம்பு(க) என்னா**
**அரிந்தமன்கேட் டலும்வசிட்டன் உரைப்பான் வள்ளால்**
**அந்தநெறி கேட்டலுமே அகில ஞாலம்**
**புரிந்தநெறி அறிதிஇதன் தன்மை எல்லாம்**
**புந்தியுறக் கேட்(டு)உணர்வு பொருந்து வாயே.**

**பொழிப்புரை:** *அறிய வேண்டியதை அறிந்து உணர்ந்த வசிட்டர் மனோ மாத்திரம் உலகம் எனவும், சங்கற்பமே நான்முகன் எனவும் இவ்வாறு அருளிச் செய்ததும், சீவன் மனத்தினைச் சேர்ந்து நின்றும், நான்முகன் எனப் பெயர் பெற்றது எவ்வாறு என்று விரிவாய்த் தெரிந்துகொள்ள உள்ளபடி அருள் செய்தல் வேண்டும் என்று பகைவர்களை வெல்லும் இராம பிரான் கேட்கவும், வசிட்ட முனிவர் கூறுவதாவது... வள்ளலே! அந்த மார்க்கத்தைக் கேட்டதும், பிரபஞ்சம் எல்லாம் நிலைபெற்றிருக்கும் தன்மையை அறிவாய். நான்முகன் சம்பந்தப்பட்ட தேக கிரமத்தினையும் புத்தி தெளியும் படி உபதேசிப்பதைக் கேட்டு ஞானத்தை அடைவாயாக.* **(4.4.31)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**திசைகாலம் ஆதிகளால் தன்னுடைய சத்தியினால் திரியாச் சீவன்**
**பசையான லீலையினால் திசைகாலம் ஆதிகளால் பயின்ற மேனி**
**இசையாநின் றுளபோதே சீவனுக்குப் பரியாயம் என்னப் பட்ட**
**வசையான வாதனையின் வசத்தாலே உலையுமனம் வந்து தோன்றும்.**

**பொழிப்புரை:** *திசைகள் காலங்கள் முதலியவற்றால் எல்லைக்கு உட்படாத ஆன்மாவானது தன்னுடைய சிற்சத்தியால் இச்சா விளையாட்டாக திசைகள் காலங்கள் முதலியவற்றுடன் கூடியதாக (உடலாக) இசைந்து நின்றிருக்கும் பொழுதே சீவன் என்ற சொல்லின் சப்தத்திற்கு இணையான குற்றமுடைய வாசனை வசத்தால் சஞ்சலம் அடையும் மனம் வந்து தோன்றும். (சீவன், வாசனை இரண்டும் ஒரே பொருளுடையது என்பது இங்கே குறிப்பிடப்படுகிறது, வாசனை இல்லாது சீவன் இல்லை என்பதால்.)* **(4.4.32)**

**செயல்செய(ல்)இன் மைகள்இரண்டும் சேர்ந்(து)எழுந்த மனச்சத்தி செயலை மேவி**
**இயல்பில்முதல் நொய்தாகிச் சத்தவிதை இரதத்தில் எழுவ தான**
**உயர்தருவிண் பாவனையைப் பாவிக்கும் கணத்திலே உடனே அந்த**
**வியன்அலைவின் தன்னெறியால் அந்தமனம் கனதையினை மேவும் அன்றே.**

**பொழிப்புரை:** *செயல், செயல்இன்மை இரண்டும் கூடி உண்டான மன ஆற்றலானது சங்கற்ப வியாபாரத்தோடு சேர்ந்து இயல்பாக ஆதியில் சூக்குமம் ஆகி, சப்த தன்மாத்திரையான சூக்கும ஆகாயத்தைப் பாவித்து. அந்தப் பாவனையிலிருந்தும் எழுவதான வியாபாகமான தூல ஆகாயத்தைப் பாவித்து கணத்தில் தூல ஆகாய போதம் உண்டாம். மிகுந்த சலன மார்க்கத்தால் அந்த மனம் தூலத் தன்மையைப் பொருந்தும்.* **(4.4.33)**

**பரிசவிதை இரதத்தில் எழுவதாம் காற்(று)அசைவைப் பாவித் துன்னும்**
**விரிதருவின் காற்(று)இரண்டின் மெய்ந்நெருக்கி லேநின்றும் வெந்தீத் தோன்றி**
**இருதிறச்சத் தப்பரிசம் திடமாகப் பழக்கமுறும் இயல்பி னாலே**
**உருவதன்மாத் திரைமேவும் இம்மூன்றின் உடன்மேவும் உள்ளம் தானே.**

**பொழிப்புரை:** *சூக்குமமான பரிச தன்மாத்திரையைப் பாவித்து ஆகாய சேதனத்திலிருந்தும் உண்டாவதான சூக்கும வாயு, அதிலிருந்து தூல வாயுவைப் பாவித்து தூல வாயு போதம் உண்டாகும். வியாபாக ஆகாயம், வாயு இரண்டு சேதனங்களில் இருந்தும் இருவிதமான சப்தம், பரிசம் திடமாகிய சுபாவத்தாலே உஷ்ணம் உடைய ரூப (வடிவ) சூக்கும தன்மாத்திரையைப் பாவித்து சூக்கும ரூப தன்மாத்திரையாகும். அந்த அக்கினியால் தூல அக்கினியைப் பாவித்து தூல அக்கினி போதம் உண்டாகும். கூறிய மூன்றினோடும் மனமானது கூடும்.* **(4.4.34)**

**கணத்தி(ல்)இர தத்(து)இயல்பைப் பாவிக்க நீர்அறிவு கருத்தில் உண்டாம்**
**குணத்தினைஅத் திறங்களொடும் கூடுமனம் கணத்திலே குறித்து நாடி**
**மணத்தினைப்பா வித்தலும்தன் மாத்திரத்தால் பார்அறிவு வரும்இவ் வாறே**
**தணத்தபூதத் தன்மாத்தி ரம்வளைத்து வளைத்(து)உருவாய்ச் சகமாய்த் தோன்றும்.**

**பொழிப்புரை:** *கணத்தில் (சப்தம்-பரிசம்-ரூபம் ஆகிய சேதனங்களிலிருந்து உண்டாவதாய) சுவை (ரசம்) தன்மாத்திரையைப் பாவிக்கும். பாவித்து சுவை தன்மாத்திரையான அந்தப் பூதம் மனத்தில் உண்டாம். தூல அந்த பூதத்தைப் பாவிக்க தூல நீர் உண்டாகும். மேலே சொல்லிய குணங்களோடு கூடிய மனம் வாசனை (மணம்-கந்தம்) குணத்தினைக் குறித்து நாடி (சப்தம்-பரிசம்-ரூபம்-சுவை ஆகிய சேதனங்களிலிருந்தும் உண்டாவதாய வாசனை சூக்கும குணத்தினைப் பாவித்து வாசனை சூக்கும குணம் உண்டாம். அதிலிருந்து) சூக்கும மண் பூதம் உண்டாம். அதிலிருந்து தூல மண் பூதத்தைப் பாவிக்க தூல மண் (பிருதிவி) போதம் உண்டாம். இவ்வாறே தன்மாத்திரை பூதங்கள் ஐந்தாலும் சூழ்ந்து சுற்றிச் சுற்றிச் சேர்ந்ததாலும் பிரபஞ்சம் தோற்றமாகும்.* **(4.4.35)**

**திகழ்ந்தஅனல் பொறியென்னத் திகழ்வடிவை விண்ணிலே தெரியக் காணும்**
**அகங்கரமாம் தொழில்மேவிப் புந்தியுடன் விதையோடும் அணுகி அந்தப்**
**புகன்றதெலாம் சேர்ந்துபுரி யட்டகமாய் உயிர்கள்உளப் பூவில் வண்டாம்**
**மிகுந்தகடும் கூட்டரவால் பாவிக்கும் மிகவிளங்கும் மேனி தன்னை.**

**பொழிப்புரை:** *ஆகாயத்திலே விளங்குகின்ற அக்கினி பொறி என்ன, சூக்கும தேகத் தோற்றத்தைப் பாவிக்கும். அகங்காரத்தின் உறுப்புகளான ஞானேந்திரியங்கள்,*

*கர்மேந்திரியங்கள், அந்தக்கரணங்கள், பிராணாதி வாயுக்கள், சூக்கும பூதங்கள், அவித்தை, காமம், கர்மம் ஆகிய இவற்றுடன் பொருந்திப் புரியட்டக தேகம் என்று சொல்லப்படும். இவை சீவர்களின் இதய தாமரையில் இருக்கும் வண்டாம். தீவிர வாசனா வேகத்தால் தூல தேகத்தைப் பாவிக்கும். (தூல தேகமாக விளங்கும்)* **(4.4.36)**

**பாவனைமுற் றிடத்தூல மேனியாய் வில்வத்தின் பழம்போல் சித்தம்**
**மேவுகரு வில்பாய்ந்த பொன்னிறம்போல் மிகவிளங்கி விமல விண்ணில்**
**தாவரம்(ம்)உண் டாய்நிற்கும் அந்தஒளி தன்னுடைய சுபாவம் தன்னால்**
**கேவலம்மேல் தலைகீழ்கால் பக்கம்கை நடுவயிறாக் கிளர்ந்தோன் ஆகும்.**

**பொழிப்புரை:** *பாவனையானது முதிர்ந்த போது தூல தேகமாய் வில்வப் பழம்போல் ஆகும். பின்பு சித்தமானது மூசையில் (பொம்மைகளைச் செய்கின்ற அச்சு வார்க்கும் பாத்திரம் போன்ற ஒன்றில்) ஊற்றிய பொன்னானது பொலிவது போல, புரியட்டக வடிவமானது தன்னுடைய சுபாவத்திலேயே தூல தேகமாக மேலே தலை, கீழே பாதம், பக்கங்களில் கைகள், மத்தியில் வயிறும் உடையவனாக விளங்குவன்.* **(4.4.37)**

**முந்தியகா லத்தினால் வெளியாகி நின்மலமாம் மூர்த்தி யாகிப்**
**புந்தியொடு சத்துவமொய்ம்(பு) உச்சாகம் விஞ்ஞானம் பொறியும் மேவும்**
**அந்தஅவ னேஅகில பிதாமகனாய் முழு(து)உணர்ந்த அயனாம் அன்னான்**
**சுந்தரமாய் உத்தமமாய்த் திகழ்கின்ற தன்வடிவைத் தோன்ற நோக்கி.**

**பொழிப்புரை:** *கால பரிபக்குவத்தினால் வெளியாகி நின்மல மூர்த்தியாகி, புத்தி, சத்துவம், பல உற்சாக விஞ்ஞான ஐஸ்வரியங்களோடு கூடியவன் ஆகி இருக்கும் அத்தகைய அவனே எல்லா உலகங்களுக்கும் பிதாமகன் என்று சொல்லப்பெற்று, அனைத்தும் உணர்ந்த பகவானாம் பிரம தேவனாம் (நான்முகன் ஆம்). அந்த பிரம தேவன் மிக அழகுற உத்தமமாகத் திகழும் தன்னுடைய வடிவினைத் தானே நோக்கி. (மனமானது விராட் புருவ வடிவமாகத்தடித்து தனக்கு ஆதாரமாய் இருக்கின்ற சிதாகாயத்தைப் பார்த்தது)* **(4.4.38)**

**குன்றாத அறுகுணத்தோன் மூன்றுகால மும்வெளியாக் குறிக்கும் வேதா**
**ஒன்றாகிச் சின்மயமே உருவமாய்க் கரைகாணா உயர்வா னத்தின்**
**முன்தான்உண் டாகிய(து)என் எனநினைந்தான் அழுக்கிலா முழுஞா னக்கண்**
**நன்றாம்அப் போ(து)உதித்தோன் பலகோடி சிருட்டிமுதல் நடத்தக் கண்டான்.**

**பொழிப்புரை:** *குறையாத ஆறு குணங்களை உடைய பகவான் பிரம தேவன் மூன்று காலங்களையும் நன்றாகப் பார்த்து ஏகமாய் சின்மயமாய் கரைகாணா உயர்ந்த வானத்தில் முன்பு தான் உண்டாகியது என்ன என்று சிந்தித்தான். களங்கம் அற்ற பூரண ஞான திருஷ்டி உடையவனாய் நன்மையாக அப்போது உதயமான பிரமன் பல கோடி சிருட்டிகளை முன்பு (தான்) செய்திருந்ததைப் பார்த்தான்.* **(4.4.39)**

**சாதிகுலம் தருமமெலாம் உணர்ந்(து)அவற்றை லீலையினால் தான்கற் பித்தான்**
**ஓதரிய லீலையினால் சங்கற்பத் தால்பிறக்கும் உயிரை எல்லாம்**
**ஏதமுறு கந்தர்ப்ப நகரம்போல் அறம்பொருள்வீ(டு) இன்பம் எய்த**
**மேதகைய பலகோடி சாத்திரங்கள் அவர்க்காக விதித்தான் வேதா.**

**பொழிப்புரை:** *சாதி குலம் தருமம் என்பனவற்றின் முறையாவையும் உணர்ந்து அவற்றை விளையாட்டாகக் கற்பனை செய்தான். சொல்வதற்கு அரிய லீலையினால், சங்கற்பத்தால் கந்தர்ப்ப நகருக்கு இணையாக உண்டாகும் (அவித்தியா கர்ம வாசனா தோஷம் பொருந்தி) சீவர்கள் எல்லாம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருடார்த்தத்தை அடைய அளவில்லாத அற்புதமான மேன்மைமிக்க சாத்திரங்களை அவர்களுக்குப் பிரம தேவன் செய்து வைத்தான். (சங்கற்ப வடிவமாய் உள்ள சீவர்கள் அனைவரும் சங்கற்பம் நீக்கி ஆன்ம சொரூபம் அடைவதற்காக வேத ஆகமங்கள் விதித்தான்)* **(4.4.40)**

**விரிஞ்ச(ன்)உரு வாமனத்தால் இச்சிருட்டி யில்சிருட்டி மேவி நின்றும்**
**புரிந்(து)அலரும் மலர்எல்லாம் வசந்தகா லத்தினால் பூப்ப(து) ஒக்கும்**
**பிரிந்தசுரர் நரர்முதலோர் தத்தம்சங் கற்பத்தால் பிறவி உற்றார்**
**தெரிந்தனைய சங்கற்பம் அறில்பிறவார் நெய்மாண்ட தீபம் போல.**

**பொழிப்புரை:** *பிரம்ம தேவனின் உருவுடைய மனத்தினால் இந்த சிருட்டிகள் (பிரபஞ்சம் அனைத்தும்) படைக்கப்பட்டு நிலைபெற்று ஒளிரும். வசந்த காலத்தில் பூக்கின்ற பூக்களைப் போல்வதாகும். வேறு வேறாக விளங்கும் தேவர் அசுரர் மானுடர் முதலானோர் தங்கள் தங்களது பாவனையாலே பிறவியை அடைந்தனர். சங்கற்பத்தாலே (எண்ணத்தாலே) பிறவி வரப்பெறுகின்றது என்று உணர்ந்து செய்து கொண்டிருந்த கற்பனைகளைத் (சங்கற்பத்தை) தொலைத்தால் எண்ணெய் தீர்ந்த தீபம் போல் பிறக்கமாட்டார்.* **(4.4.41)**

**வானநிக ராம்அனைத்தும் கற்பனைமாத் திரம்வாளா வளரா நிற்கும்**
**ஆனசகம் நனவுதனில் கனவுபோல்இ ராகவனே அறிதி அன்றே**
**ஈனமுறப் பிறப்பில்லை இறப்பில்லை எவ்விடத்தும் ஒன்றும் என்றும்**
**ஞானபர மார்த்தத்தால் இவையெல்லாம் பொய்யாக நண்ணும் அன்றே.**

**பொழிப்புரை:** *பெயர் வடிவமான பிரபஞ்சம் அனைத்தும் ஆகாயம் போலச் சூன்ய ரூபமாம் (சங்கற்ப மாத்திரமாய்) பாவனா மாத்திரமாய் வீணாகவே விருத்தி அடைந்து (வளர்ந்து) நிற்கும். பாவனையினால் தோற்றுவதான உலகம், நனவில் கனவின் பொருள்கள் பொய்யாகப் போவது போல் பொய்யே ஆகும் என்று இராகவனே! அறிவாய். நீசமுறும் பிறப்பும் இல்லை இறப்பும் இல்லை. எவ்விடத்தும் எக்காலத்தும் பாரமார்த்த ஞானத்தால் (உண்மையான திருஷ்டியால்) இவை எல்லாம் மித்தையாகும் (பொய்யாகும்).* **(4.4.42)**

**வெங்காதல் பெரும்பாம்பு நெளிபுற்று)ஆம் குடும்பபரம் வெறும்பொய் அன்றே**
**இங்(கு)ஆசை அறநீக்கி எல்லையிலாப் பரமபதத்(து) இருந்து வாழ்வாய்**
**சிங்காரக் கந்தர்ப்ப நகர்இருந்(து)என் சிதைவுற்(று)என் தீதோ நன்றோ**
**பங்கான மனைமக்கள் வாழ்ந்தால்என் கெட்டால்என் பாச மாயை.**

**பொழிப்புரை:** *கொடிய காதல் பேராசை என்னும் பெரிய பாம்புகள் நெளிகின்ற புற்றாகிய சம்சார ஆடம்பரம் எப்பொழுதும் மித்தை ஆகும். இவ்விடத்து பொருள்களில்*

*எழுகின்ற ஆசையை அகற்றி, எல்லையில்லாப் பிரம்ம சொரூபத்தில் நிலைபெற்று சுகம் அடைவாய். விசித்திர கந்தர்ப்ப நகரம் இருந்து என்ன? அல்லது அழிந்து போனால் என்ன? அதனால் தீமையோ, நன்மையோ? பிணிக்கும் அவித்தையின் அம்சமான, சம்பாதனைக்கு மட்டும் பங்காளிகளான மனைவி மக்கள் வாழ்ந்தால் என்ன? தாழ்ந்தால் என்ன?* **(4.4.43)**

**தாரதனம் மிகும்என்னில் தளையாகும் அப்பாசம் தளைத்துக் கொண்டால்**
**ஆற்)அதனை அறுத்தலும் விரகுடையார் அறிவில்லார் ஆசை விஞ்சிக்**
**கூரிதையாம் அப்போகத்(து) உழன்(று)உழக்கும் கொடுந்துயரைக் குறித்த போதே**
**தீரதையாம் அறிஞர்க்கு விரத்தியுள தாய்ச்சித்தம் தெளியும் அன்றே.**

**பொழிப்புரை:** *மனைவி, புத்திரன் விருத்தியாயின் விலங்கு (சங்கிலி) ஆகும். தொல்லை தரும் அந்த விலங்கினால் கட்டுப்பட்டால் அந்த ஆசாபாச விலங்கிளை அறுத்துச் செல்லும் ஆற்றல் உடையவர் யார் உளர்? அறிவில்லாதவர் ஆசை மிகுந்து பிறப்புக்குக் காரணமான அந்த போகங்களில் உழன்று வருந்தும் கொடிய துக்கத்தை அடைவதைக் கருதிய போதே தைரியம் உடைய விவேகிகளுக்கு வைராக்கியம் உண்டாகி மனம் தெளியும்.* **(4.4.44)**

**ஆனதிறத் தால்குடும்ப பாரவியா பாரத்தில் அணுகும் போது**
**போனபொருட்(கு) இரங்காமல் பொருந்துபொருள் மாத்திரமே புசித்து வாழ்வாய்**
**தீனமுற வருபொருளைச் சிந்தியார் வந்தபொருள் தீ(து)அன்(று) எண்ணார்**
**ஞானபரர் ஆனோர்க்குச் சுபாவமாம் குணம்இதுவே நளினக் கண்ணாய்.**

**பொழிப்புரை:** *முன்பு கூறிய தன்மையால் குடும்ப பார விவகாரத்தில் ஈடுபடும் பொழுது கைவிட்டுப் போன பொருளுக்காக வருந்தாமல், கிடைத்த பொருளை மட்டுமே கொண்டு சுகம் அடைவாய். எந்தப் பொருள் கிடைக்கப்பெறுமோ என்று கீழ்த்தரமாக சிந்திக்க மாட்டார். வந்த பொருளை (அநித்தியம் என்பதால்) தீயது என்று எண்ண மாட்டார். இதுவே ஞானம் அடைந்தவர் சுபாவமாம், இலக்கணமாம், தாமரைக்கண்ணாய்,* **(4.4.45)**

**கண்டனஎல் லாம்பொய்என்(று) உள்ளத்தில் அனைத்தினும்வெங் காதல் நீத்த**
**பண்டிதராம் முழு(து)உணர்ந்த பெரியோரை ஈராது பாச மாயை**
**உண்(டு)இலைஎன் பவற்(று)இடையின் சுத்தமாம் பதம்புந்தி ஊன்றப் பற்றி**
**விண்டஉடற்(கு) உட்புறம்பாம் உலகைநீ பற்றுதலும் விடலும் வேண்டா.**

**பொழிப்புரை:** *பார்க்கப்பட்ட பொருள்கள் எல்லாம் மித்தை என்று மனத்தில் அவற்றின் மீதான விஷய சுகக் கொடிய ஆசையை நீக்கி முழுதும் உணர்ந்த பண்டிதராம் பெரியோர்களை, யாவரையும் பிணிக்கும் மாயையானது இழுக்காது. சத்து அசத்துகளின் மத்தியில் இருப்பதாம், தூய்மையானதாம் பதத்தைப் புத்தி அழுத்தமாகப் பற்றிட, அசுத்தம், துக்கம், அநித்தியம் என்று கூறுகின்ற யான் அல்ல என்று விட்டுத் தொலைத்த தேகத்திற்கு உள்ளும் புறமும் இருக்கின்ற உலகினை நீ பற்றவும் வேண்டா, விடுதலும் வேண்டா.* **(4.4.46)**

**எக்கருமத் திலும்இச்சை அனிச்சைஅற நின்(று)உணர்வை எய்தி னோர்க்கே**
**அக்கருமங் களில்அறிவு பற்றாதா மரையிலைசேர் அம்பு போலத்**
**தொக்கபொறி விடயநலம் சுவையறநின் மனமாரத் தோன்றில் வீரா**
**தக்கஉணர்(வு) உணர்ந்தோனாய்ப் பவக்கடல்கள் கடந்தன்றே சனனம் தீர்ந்தாய்.**

**பொழிப்புரை:** *எந்தக் கருமத்திலும் இச்சையும், இச்சை இல்லாமையும் இன்றி ஈடுபடும் அறிவை அடைந்தவர்களுக்கே, தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாதது போல அந்தக் கருமங்களில் பிரஞ்ஞை (உணர்வு)சம்பந்தம் அடையாது. மித்தை என உணர்ந்த பின்பும் தொடரும் புலன்களின் விஷயங்களில் நல்லது, சுவை உள்ளது என்பது அற்றுப் போனது என்று உனது மனதில் புலப்பட்டால் வீரனே! அறியத் தகுந்த சின் மாத்திர வஸ்துவை அறிந்து பிறப்பு இறப்பாகிய சமுத்திரத்தைக் கடந்தவன் ஆவாய்.* **(4.4.47)**

**உச்சமுறும் பதம்வேண்டி அனைத்துவாத னையிலும்நின்(று) உள்ளம் தன்னை**
**நிச்சயமாம் உணர்வாலே நீக்குவாய் மலரின்மணம் நீங்கு மாபோல்**
**துச்சமுறு வாதனையாம் தரங்கநீர் பவக்கடலில் துளைவார்க்(கு) எல்லாம்**
**அச்சமற நல்லறிவு மரக்கலமாய்க் கரையேற்றும் அயல்ஒன்(று) உண்டோ.**

**பொழிப்புரை:** *மேலான அதிஉயர்ந்த பதத்தை விரும்பினால், அனைத்து வாசனைக் கூட்டங்களில் இருந்தும் உள்ளத்தை மேலான பிரஞ்ஞையினாலே மலரிலிருந்து மணம் நீங்குவது போல நீக்குவாய். தள்ளத் தக்கதாகிய வாசனைகள் என்னும் அலைகள் உடைய தண்ணீர் நிறைந்த பிறவிக் கடலில் மூழ்குவார்க்கு எல்லாம் பயம் நீங்கும் படியாகப் பெரும் பிரஞ்ஞையானது மரக்கலமாய் (படகாய்) இருந்து மோட்சமாகிய கரையைச் சேர்ப்பிக்கும். இதைத் தவிர மற்றையவை இவ்வாறு ஒன்று உண்டோ? (இல்லை).* **(4.4.48)**

**பராபரம்கண் டோர்அனைத்தும் பின்செல்வர் உல(கு)இயல்பு பற்றார் நீங்கார்**
**சுராலயநந் தனவனத்தும் பற்றார்கள் சூனியத்தும் துயரம் எய்தார்**
**விராவுநிய தியும்தள்ளார் வெய்யவன்போல் அனுசரிப்பர் மேன்மை சான்றோர்**
**இராகவனே இவ்வாறு நடத்திஎன வசிட்டமுனி இயம்ப லோடும்.**

**பொழிப்புரை:** *சம்சாரத்திற்குக் காரணமான அவித்தை அது பாரம், அதிலிருந்து கரையேற்றும் வித்தை அபாரம் இரண்டினையும் அறிந்தவர் விவகாரங்களைத் துறக்க மாட்டார், விவகாரங்களில் பின்தொடர்ந்து விவகாரம் செய்வர். ஆனால் உலகின் இயல்பினைப் பற்றிக் கொள்ளமாட்டார். தேவலோக நந்தவனத்திலும் பற்றினை அடையார். சூனியத்திலும் (விஷயம் இல்லாத இடத்திலும்) துயரத்தை அடையமாட்டார். ஏற்படுத்தப்பட்ட நியதியையும் கடந்து போகாமல் பரிபாலிப்பார். சூரியனைப் போல அனுசரிப்பார் மேன்மை மிக்க சான்றோர் இராகவனே! இவ்வாறு நீயும் ஒழுகுவாய் என்று வசிட்டமுனிவர் கூறவும்.* **(4.4.49)**

பரத்துவகேள் இவ்வாறு பரமமுனி பரமபதம் பகரக் கேட்டுத்
திரத்துவமா நிறைந்தான்போல் சீராமன் அமலமாய்த் தீர்ந்து சித்தம்
தரத்(து)உவமை இல்லாத மெய்ஞ்ஞான நல்லமுதால் ததும்பித் தண்ணென்(று)
துரத்துவளர் சந்திரன்போல் நிறைவுற்றான் வசிட்டனும்மீண்(டு)உரைப்பத(து)ஆனான்.

**பொழிப்புரை:** (*வால்மீகி கூறுகின்றார்*) *பரத்துவாச! கேட்பாய். இவ்வாறு மோட்ச சாதனங்களைக் கூறியதைக் கேட்ட சீராம பிரான் மனம் பூர்ணமாய் நிர்மலமாய் திருப்தி அடைந்தால் போல் உயர்வு ஒப்பிலாத உண்மையான ஞான அமிர்தத்தால் நிரம்பித் ததும்பி, குளிர்ச்சி அடைந்து வளர்கின்ற சந்திரனைப் போல, ஆராய்ந்து அதி திடமான பரம சாந்தத்தால் பூரண பாவத்தை அடைந்தார். வசிட்ட முனிவரும் மீண்டும் கூறத்தொடங்கினார்.* **(4.4.50)**

**ஒருகாலம் அரன்படைப்பன் ஒருகாலம் அயன்படைப்பன் உலகம் எல்லாம்**
**ஒருகாலம் அரிபடைப்பன் ஒருகாலம் முனிவர்படைப்(பு) உள்ள(து) ஆகும்**
**ஒருகா(ல்)அம் புயத்(து)உதிப்பன் ஒருகால்வா ரியின்உதிப்பன் உயர்ந்த வேதா**
**ஒருகா(ல்)அண் டத்(து)உதிப்பன் ஒருகால்விண் ணகத்திலே உதிப்பன் அன்றே.**

**பொழிப்புரை:** *உலகம் அனைத்தையும் ஒரு காலத்தில் ருத்ரன் படைத்தல் செய்வான். ஒரு காலத்தில் அயன் படைத்தல் செய்வான். ஒரு காலத்தில் அரி படைத்தல் செய்வான். ஒரு காலம் முனிவர்கள் படைப்பு உள்ளதாகும். உயர்ந்த நான்முகன் ஒரு காலத்தில் தாமரையில் உதிப்பான். ஒரு காலத்தில் கடலில் உதிப்பான். ஒரு காலத்தில் அண்டத்தில் உதிப்பான். ஒரு காலத்தில் விண்ணில் உதிப்பான்.* **(4.4.51)**

**வன்மரங்க ளேநெருங்கும் ஒருபடைப்பில் ஒருபடைப்பில் மனிதர் துன்னும்**
**பன்மலைக ளேநெருங்கும் ஒருபடைப்பில் ஒருபடைப்பில் படர்மண் ஆகும்**
**கல்மயமாம் ஒருபடைப்பில் ஒருபடைப்பில் தசைமயமாய்க் காணல் ஆகும்**
**பொன்மயமாம் ஒருபடைப்பில் இப்படியே பலவிதமாம் பூமி தானே,**

**பொழிப்புரை:** *ஒரு படைப்பில் (சிருட்டியில்) பூமியில் மரங்களே நெருங்கி இருக்கும். ஒரு படைப்பில் மனிதர்களே நிறைந்திருப்பர். ஒரு படைப்பில் மலைகளே நெருங்கி இருக்கும். ஒரு படைப்பில் மண்ணே வியாபித்து இருக்கும். ஒரு படைப்பில் எங்கும் கற்களே காணப்படும். ஒரு படைப்பில் மாமிச மயமாகக் காணப்படும். ஒரு படைப்பில் பொன் மயமாகக் காணப்படும். இப்படிப் பல படைப்புகளில் பலவிதமாக பூமி ஆகும்.* **(4.4.52)**

**வான்முதலாம் மண்முதலாம் நீர்முதலாம் தீமுதலாம் மற்றை வாயு**
**தான்முதலாம் இப்படியே சிருட்டிதொறும் ஓர்ஒன்று தலைமை ஆகும்**
**யான்முதலோர் அயன்சிருட்டி தரிசனமா உனக்(கு)உரைத்தேன் இந்த ஆற்றால்**
**மேன்முதலா நியம(ம்)இதற்(கு) ஒன்றாக இலதுபல விதமாய்த் தோன்றும்.**

**பொழிப்புரை:** *ஒரு படைப்பில் ஆகாயம் முதன்மையாக உதிக்கும். ஒரு படைப்பில் மண் முதலில் தோன்றும். ஒரு படைப்பில் தண்ணீர் முதன்மையாகத் தோன்றும். ஒரு படைப்பில் அக்கினி முதலாகத் தோன்றும். ஒரு படைப்பில் வாயு முதன்மையாகத் தோன்றும். இப்படி ஒவ்வொரு சிருட்டியிலும் ஒவ்வொரு பூதம் தலைமையாக நிற்கும். பிராஜாபதி என்னும் ஒரு பிரம்ம தேவனின் படைப்பினை உதாரணமாக யாம் உனக்கு எடுத்துக் கூறினோம். இந்த முறையால், மேலாக முதலாகிய நியமம் இதற்கு ஒரு முறையாக இல்லையாம். பற்பல வகையாகத் தோன்றும்.* **(4.4.53)**

**கிருதமுதல் உகநாலும் மீண்டுமீண்(டு) உற்பவிக்கும் கிளத்து ஞாலத்(து)**
**ஒருபொருளும் வளைத்துவளைத்(து) அனந்தமடங்(கு) உற்பவமாய்உழலா(து) இல்லை**
**இருள்பெருகு மாமாயை வன்னனைக்கு முன்னிலையாம் யாம்இங்(கு) ஓத**
**அருமறைதேர் தாசூரன் கதைகேட்டி இராமஎன அறைவ தானான்.**

**பொழிப்புரை:** *கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கு யுகங்களும் மாறி மாறி மீண்டும் மீண்டும் உற்பத்தி ஆகும். கூறுகின்ற இந்தப் பிரபஞ்சத்தில் எந்தப் பொருளும் மீள மீள அளவில்லாத முறைகள் உண்டாகி உழலாதது இல்லை. இருள் மயமாய் யாவரையும் மயக்குகின்ற மிகப் பெரிய மாயையின் வர்ணனைக்கு உதாரணமாக யாம் இங்கு கூறப் போகும் அரிய வேதங்கள் கற்றுணர்ந்த தாசூர முனிவரது கதையைக் கேட்பாய் இராகவ! என்று வசிட்டர் சொல்லத் தொடங்கினார்.* **(4.4.54)**

**இந்தப் புவனத்(து) ஊடே எழிலார் மலரின் பொழில்வாய்**
**மந்தக் குளிர்கால் கமழும் மகத தேசம் தன்னில்**
**கந்தக் கதலி கடம்பு கன்னி காரம் செறிந்து**
**சிந்தைக்(கு) இனிதா கிய(து)ஓர் சிறப்பாம் மலையின் இடத்தே.**

**பொழிப்புரை:** *இந்தப் புவனத்தில் அழகான பூஞ்சோலைகள் நிறைந்து குளிர்ச்சியான மணம் கமழும் மகத நாட்டில் மணக்கும் மலைவாழை, கடம்பு, கோங்குகளும் நெருங்கி வளர்ந்து மனதிற்கு இனியதான ஒரு மலையில்.* **(4.4.55)**

**பரலோ கம்சேர் தவமே பண்ணி அயன்போல் உயர்ந்த**
**சரலோ மாவின் மைந்தன் தாசூ ரப்பெயர் முனிவன்**
**சுரலோ கத்தின் குருவின் தோன்றல் கசனை ஒப்பான்**
**நரலோ கத்தின் மேலான் நவைதீர் தவத்தால் பெரியோன்.**

**பொழிப்புரை:** *பரலோகத்தை அடைகின்ற அளவுக்கு மகா தவத்தைச் செய்து பிரம்ம தேவனைப் போல் சிறந்து உயர்ந்த தர்ப்பையைப் போன்ற முடியுடைய சரலோமா முனிவன் ஒருவன் இருந்தான். அவனுடைய புத்திரன் தாசூரன் என்ற பெயர் உடையவன். தேவலோகத்தின் ஆசானாக விளங்கும் குருவின் மகன் கசனுக்கு நிகரானவன். பூவுலகில் குற்றமற்ற தவத்தினால் மேலான பெரியவன்.* **(4.4.56)**

**தனையன் ஒருவ னோடும் சரலோ மாவா முனிவன்**
**அனைய கிரியின் வனத்தில் அனேக யுகம்சென் றதன்பின்**
**புனையும் கூடு கிழிந்து புள்போ வதுபோல் போகி**
**வினைசெய் உடலை விட்டு விண்ணோர் வடிவை எடுத்தான்.**

**பொழிப்புரை:** *அந்த ஒரு புத்திரனுடன் சரலோமா முனிவன் அந்த மலையின் காட்டில் அனேக யுகம் வசித்திருந்தான். அதன் பின் கட்டுப்பட்டிருந்த கூட்டினை விடுத்து, பறவை வெளியே போவது போல கர்மத்தினால் வந்த இந்த தேகத்தை விடுத்து தேவர் வடிவத்தை அடைந்தான்.* **(4.4.57)**

**தனியே அந்த வனத்தே தாசூ ரப்பேர் முனிவன்**
**இனிய தாதை இறவுக்(கு) இரங்கி உதகத்(து) இயற்றும்**
**புனித மான பிரம பூசை முழுதும் புரியான்**
**கனியும் நெஞ்சன் அன்றில் கதறு மாபோல் கதறி.**

**பொழிப்புரை:** *தனியாக அந்தக் காட்டில் இருந்து தாசூரன் என்ற பேர் கொண்ட அந்த முனிவன் பிரியமான தந்தை சென்று விட்டதற்கு இரங்கி, தண்ணீரில் செய்யக்கூடிய புனிதமான பிரம பூசை எல்லாம் செய்யாதவன் ஆனான். உருகும் நெஞ்சினன் ஆகி அன்றில் என்னும் பறவை கதறுவது போல் கதறி அழுது.* **(4.4.58)**

**தந்தை அன்னை பிரிவால் சால வெம்பித் தளர்ந்த**
**மைந்தன் தன்னை அருளால் வனதே வதைகண்(டு) அருளி**
**முந்து றாமல் நின்று முனிமா மகவா முனிவா**
**சிந்தை தெளிந்தோய் தெளியாச் சிறியோர் எனநொந்(து) அயரேல்.**

**பொழிப்புரை:** *தந்தை தாயரைப் பிரிந்த பிரிவினால் மிகவும் சோகம் அடைந்து மெலிவுற்ற மைந்தனை (தாசூரனை)க் கருணையுடன் கண்ட வன தேவதை, முன்னால் வராமல் மறைந்து இருந்து முனிவரின் மைந்தனே! முனிவனே! சித்தம் தெளிந்தவனே! தெளிவு அடையாத சிறியவர் போல மனம் நொந்து தளர்வு அடையாதே.* **(4.4.59)**

**அனித்த மான குடும்பத்(து) அபத்தம் உணர்கின் றிலைஎன்**
**சனித்த பொழுதே மரித்தல் சற்றும் தப்பா கண்டாய்**
**பனித்த விழியோ(டு) அயர்வாய் பகலோன் உதயம் செய்தான்**
**இனித்தன் னிலைஅத் தமனம் எய்தான் என்பார் உளரோ.**

**பொழிப்புரை:** *மித்தையான சம்சார வாழ்வின் பொய்வடிவத்தை எந்தக் காரணத்தினால் தெரியாமல் இருக்கின்றாய்? பிறந்த பொழுதே இறப்பும் ஒரு சிறிதும் தப்பாது என்பதை அறிவாய். கண்ணும் கண்ணீருமாய் அழுது கொண்டு திரியும் குழந்தாய்! சூரியன் உதித்தான், இனிமேல் தனது நிலையாகிய அத்தமனத்தை அடையமாட்டான் என்று சொல்பவர்களும் உள்ளாரோ?* **(4.4.60)**

**வாளா அயரேல் என்று மறைந்து தெய்வம் உரைப்பக்**
**கேளா உணர்ந்து தளரும் கேதம் ஒழித்து நிலையாய்**
**நீ(ள்)ஆ ரணத்தின் படியே நீரில் கடன்கள் முடித்து**
**மீளா நெறிசேர் தவத்தில் மிகவும் விருப்பம் ஆனான்.**

**பொழிப்புரை:** *வீணாகத் துன்புற்று அயர்வு அடைய வேண்டாம் என்று அசரீரியாக அந்த வன தேவதை உரைக்கவும், அதனைக் கேட்டு உணர்ந்து தளரும் வாட்டம் ஒழித்து மனதைக் கட்டுப்பாட்டில் கொண்டு வந்து, அனாதி வேதங்கள் கூறியுள்ள படி நீரில் பிதுர்க்கடன்கள் முடித்து, திரும்பாத பதத்தை அடைவதற்கு உரிய தவத்தின் மீது எப்பொழுதும் பிரியம் உடையவன் ஆனான்.* **(4.4.61)**

தக்க பிரம கருமம் தன்னால் தவமே செய்வான்
தொக்க சங்கற் பத்தால் சுத்(து)ஆ சாரம் மிகுந்தான்
மிக்க ஞானம் இல்லான் விசுத்த மான புவியில்
புக்க இடங்கள் எல்லாம் புனிதம் அன்(று)அன்(று) என்னா.

**பொழிப்புரை:** *தகுதியாய பிராமணர்களுக்கு உரிய கருமங்களாலே தவம் புரிய எண்ணிய அவன் தொடர்ந்த அளவற்ற சங்கற்பத்தால் தூய ஆசாரம் உடையவன் ஆனான். அறிய வேண்டியதை அறியாத மனத்தினன். பரிசுத்த பூமியில் சென்ற இடங்கள் எல்லாம் புனிதம் அல்ல அல்ல என்று எண்ணினான்.* **(4.4.62)**

வையம் சுத்தம் அல்ல மரத்தின் நுனியே புனிதம்
ஐய புள்போல் ஆங்கே அமர்தற் கான தவமே
செய்ய கிற்போம் என்னாச் சிந்தை யார நினைந்து
வெய்ய கனலை மூட்டி விண்ணோர் குழுவை நினைந்து.

**பொழிப்புரை:** *இந்த உலகம் புனிதம் அல்ல, மரத்தின் நுனியே புனிதமானது அதனால் அழகிய மரங்களில் பறவை போல் அமர்வதற்கான தவம் செய்ய முயல்வோம் என்று சிந்தையில் நினைந்து, உஷ்ணத்தைத் தரக்கூடிய அக்கினியை மூட்டி, தேவ கணங்களைச் சிந்தித்து,* **(4.4.63)**

உடலை அரிந்து வாங்கி ஓமம் செய்ய லோடும்
கடவுள் அவர்க்(கு)என் முகத்தால் கலைவே தியன்மெய்த் தசைகள்
மிடறும் புயமும் முதல வேவ தென்னே என்னா
சுடரும் கனலோன் நினைந்து சுருதி முனிமுன் தோன்றி.

**பொழிப்புரை:** *தேகத்தை அரிந்து அதனைக் கொண்டு ஆகுதியைச் செய்யவும், தேவதை களுக்கு என் மூலமாக சாத்திரங்கள் கற்றுணர்ந்த வேதியனின் உடலின் தசைகள் கண்டம், புயங்கள் முதலானவை அக்கினியில் வேக வேண்டாம் என்று கருதிய ஒளி தரும் அக்கினி தேவன் நினைத்து வேதம் கற்ற முனிவர் முன் தோன்றி.* **(4.4.64)**

கருதிற்(று) என்ன என்னக் கைகள் முகிழ்த்து துதித்துப்
பரிசுத் தமதாம் இடம்இப் பாரில் காணேன் அதனால்
தருவில் தலையில் தளிர்மேல் தலம்தந்(து) அருள்வாய் என்ன
வரமுற்(று) உதவிக் கனலோன் வாரித் திரைபோல் மறைந்தான்.

**பொழிப்புரை:** *விரும்பியது யாது என்று அக்கினி தேவன் கேட்க, கைகளைக் குவித்து துதி செய்து, பரிசுத்தமான இடம் ஒன்றினை இந்தப் பூமியில் அடைந்திலேன். அதனால் மரத்தின் நுனியில் உள்ள இலைமேல் எனக்கு இடம் தந்து அருள்வாய் என்று வேண்டவும், அந்த வரத்தைத் தந்து விட்டு, அக்கினி தேவன் கடல் அலைபோல மறைந்தான்.* **(4.4.65)**

கானத்து) இடைஓர் கடப்பம் காரின் பதத்தைக் கடந்து
வானத்து) உயர்ந்தது) அதன்மேல் வருபல் லவமென் தவசின்
தானத்து) ஐயம் இன்றித் தாசூ ரன்தான் இருந்து
மேல்நல் தவமே செய்வான் மிகவும் விரும்பு மனத்தான்.

**பொழிப்புரை:** *காட்டின் மத்தியில் ஓர் கடம்ப மரம் இருந்தது. அது மேகத்தைத் தாண்டி வானத்தில் உயர்ந்து வளர்ந்து இருந்தது. அந்த மரத்தின் நுனியில் மென்மையான தளிர் (இலை) ஒன்றினை ஆசனமாகக் கொண்டு சந்தேகம் இன்றி தாசூரன் இருந்து மேலான நல்ல தவத்தைச் செய்ய மிகவும் மனம் விரும்பினான்.* **(4.4.66)**

**(எழுசீர் ஆசிரிய விருத்தம்)**

ஒருகணம் திசைகள் அனைத்தையும் நோக்கி உறைத்தபத் மாதனத்து) இருந்தான்
பெருகிய திசைகள் முழுதினும் திரும்பிப் பிரமபா வனைஅறி வரிதாய்
கருமமாத் திரத்தில் நிற்பதாய்ப் பலமாம் கற்கசம் விரும்புற மனத்தால்
வருடம்ஐந்து) இரண்டு மகங்களே நடத்தி வானவர்க்கு) அவிஉணவு) அளித்தான்.

**பொழிப்புரை:** *ஒரு கண நேரம் எல்லாத் திசைகளையும் நோக்கி, பத்மாசனத்தில் இருந்தான். திசைகளிலிருந்து முழுதும் திரும்பி பரமார்த்தம் (உண்மை அறிவினை) அறியாமையால் கரும மாத்திரமாய் நிலைபெற்று பலமான உலோபம் (மற்றும் வன்னெஞ்சம்) விரும்பாத மனத்தினால், பத்து வருடங்கள் மனதினால் வேள்வி செய்து தேவர்களுக்கு அவர்க்கான உணவினை மனதால் அளித்தான்.* **(4.4.67)**

கோத்திரள் புரவி மனிதரால் இயற்றும் கோ(து)அறு வேள்விகள் முற்றும்
சாத்திர விதியால் இயற்றிநீள் காலம் தவ(று)அற நடந்தமை யாலே
மாத்திர மான மனம்மிகத் தெளிந்து வரம்(பு)இல தாதலும் ஆங்கே
நேத்திர மான ஞானம்வந்து) எய்தி நிறைந்தனன் வலிதில்நல் நெஞ்சம்.

**பொழிப்புரை:** *பசுக்கூட்டம், குதிரை, மனிதர்களுடன் தட்சணை முறைப்படி அளித்து நடத்தப் பெறும் வேள்விகள் முழுவதும் சாத்திர விதிப்படி செய்து நீண்ட காலம் தவறு ஏதும் இல்லாமல் (நிஷ்காமமாக) நடத்தியதாலே, தோஷமின்றிய மனம் மிகவும் தெளிந்து, மலமில்லாதது ஆகி எல்லையற்றதாகவும் அங்கே கண் போன்ற ஞானம் நல்ல நெஞ்சில் தானே வந்து அடைந்து நிறைந்தது.* **(4.4.68)**

பிறவிஆ வரணம் கழிந்துவா தனைகள் பேர்அற மாண்(டு)உள பெரியோன்
நிறவிய தளிர்மேல் இருத்தலும் ஒருநாள் நிமலமாம் விழிகளுக்(கு) எதிரே
உறவிரி மலரின் மேகலை உடுத்த உயர்வன தேவதை தோன்ற
அறிவனும் நோக்கி யார்கொல்நீ என்ன அழகிய அணங்(கு)உரை செய்வாள்.

**பொழிப்புரை:** *பிறவிக்குக் காரணமான அஞ்ஞான ஆவரணம் ஒழிந்து போக, அதன் பயிற்சியால் வாசனைகள் முழுதும் பெயர் கூட இல்லாமல் அழிந்து போய்த் திகழ்கின்ற பெரியோன், படர்ந்த தளிர்மீது வீற்றிருந்த ஒரு நாள் நிர்மலமான கண்களுக்கு*

*முன்பு மிகவும் விரிந்த மலர்களை மேகலையாகப் பூண்டிருந்த உயர்ந்த வன தேவதை தோன்றினாள். உணர்வு மயமான தாசூரனும் பார்த்து, நீ யார் என்று கேட்க, அழகிய வனதேவதை கூறத் தொடங்கினாள்.* **(4.4.69)**

**பெரியவர் தம்பால் பெறல்அரு நேயம் பெற்றவர் விரும்பிய எல்லாம்**
**அரியன எனினும் இமைப்பினில் எளிதில் அணுகு(ம்)என்(று) ஐய(ம்)அற்(று) அறிந்தேன்**
**தெரிஅருள் முனிவ நீஉறை வனத்தில் செறிவன தேவதை இங்ஙன்**
**விரியலர் கொடியாம் வினோதவீட்(டு) இடையே விருப்பொடும் இருப்பவள் நானே.**

**பொழிப்புரை:** *மகான்களிடத்தில் பெறுதற்கு அரிய கருணையை அடைந்தவர் விரும்பிய எல்லாம் கிடைத்தற்கு அரியன என்றாலும் நொடிப்பொழுதில் எளிதில் கிடைக்கும் என்று சந்தேகம் இன்றி அறிந்தேன். அருள்புரியும் முனிவரே! தேவரீர் தவம்புரியும் இந்த வனத்தில் வனதேவதையாக இவ்வாறு விரிந்த பூக்கள் நிறைந்த கொடிகளின் விசித்திர வீட்டினில் விருப்பமொடு வசிப்பவள் நான்.* **(4.4.70)**

**மேடமா தத்தில் பிறைபதின் மூன்று கலையுறு மேவிய நாளில்**
**நாடரு மதனன் உயர்திரு நாளில் நந்தன வனத்திலே வந்து**
**கூடிய வனதே வதைகணம் தன்னைக் குறுகினேன் பாங்கியர் முழுதும்**
**தேடரும் மைந்த ருடன்மகிழ்ந்(து) இருந்தார் சிறுவன்இல் லாதயான் தளர்ந்தேன்.**

**பொழிப்புரை:** *சித்திரை மாதத்தில் வளர்பிறை திரயோதசி நாளில் நாடுதற்கு அரிய மதனன் பண்டிகையாம் திருநாளில் நந்தவனத்தில் வந்து கூடிய வன தேவதைகளின் கூட்டத்தை அணுகினேன். தோழியர் அனைவரும் தேடுதற்கு அரிய மைந்தருடன் மகிழ்ந்து இருந்தனர். குழந்தை இல்லாத யானோ தளர்ந்தேன்.* **(4.4.71)**

**காதலித் தவர்க்குக் கருதிய(து) அளிக்கும் கற்பகம் அனையநீ இருப்ப**
**நாதனே நாதர் இல்லவர் போல நான்மகற்(கு) இரங்குதல் நலனோ**
**நீதரல் வேண்டும் புதல்வனை அன்றி நின்னருள் என்பொருட்(டு) இலதேல்**
**தீதறு மதலை இலதெனும் துன்பம் செந்தழல் மூழ்கியே தீர்ப்பன்.**

**பொழிப்புரை:** *விரும்பியவர்க்கு விரும்பியதை எல்லாம் தரக்கூடிய கற்பக மரம் என தேவரீர் இருக்க, தலைவனே! ஆதரவு இல்லாதவர் போல அடியேன் பிள்ளைக்கு இரங்குதல் நன்றோ? தாங்கள் மைந்தனைத் தரல் வேண்டும். அவ்வாறு இல்லாது, தங்களுடைய அருள் எனக்காக இல்லை எனில், குற்றமில்லாத குழந்தை இல்லை என்ற துன்பத்தைச் சிவந்த அக்கினியில் குளித்து தீர்த்துக்கொள்வன்.* **(4.4.72)**

**என்னலும் முனிவன் நகைத்(து)ஒரு மலரை ஈந்(து)ஒரு மதியிலே எளிதாய்**
**அன்னமே மகவைப் பெறுதியால் நீமுன் அரும்கனல் மூழ்குவேன் என்னா**
**இன்னலால் வலித்து மகவுவேண் டுதலால் இனிதுநீ ஈன்றிடும் மகவும்**
**பின்னுறு வருத்த நெறியினால் ஞானம் பெறும்எனப் பேசினன் பெரியோன்.**

**பொழிப்புரை:** *என்று வனதேவதை கூறவும், தாசூர முனிவன் சிரித்துவிட்டு, மலர் ஒன்றினை அளித்து, அன்னம் போன்றவளே! ஒரு மாதத்தில் சுலபமாக ஒரு*

*குழந்தையைப் பெறுவாய். நீ முன்பு சுவாலை தகிக்கும் நெருப்பில் மூழ்குவேன் என்று கூறி, பலாத்காரப்படுத்தி குழந்தையை வேண்டியதால், இனிதாக நீ பெற்றெடுக்கும் குழந்தையும் பின்னாளில் வருத்தம் அடைந்து அதனால் ஞானம் பெறுவன் என்று உரைத்தான் பெரியோன்.* **(4.4.73)**

**கேட்டவள் மகவு கிடைத்ததே என்று கிளர்முக மதிநிலாக் குலாவ**
**மீட்டு(ம்)அம் முனியை நோக்கிநின் ஏவல் விரும்பிஈண;(டு) உறைகுவன் என்ன**
**வாட்ட(ம்)இல் முனிவன் இயைந்திலன் விடுப்ப வந்தனள் அணங்குதன் இடத்தில்**
**சேட்டமா மகளை அளித்தனள் கலையால் செறிதரு மதியென வளர்த்தாள்.**

**பொழிப்புரை:** *முனிவன் கூறியதைக் கேட்ட வனதேவதை குழந்தை பாக்கியம் கிடைத்ததே என்று திகழ்கின்ற சந்திரனைப் போன்ற முகம் மலர்ந்து பொலிய, மறுபடியும் அந்த முனிவனைப் பார்த்து தங்கள் கட்டளையை நிறைவேற்ற இவ்விடத்தில் தங்குவேன் என்று சொல்லவும், காணும் பொருள்களில் வாடுதல் இல்லாத முனிவன் அதற்கு உடன்படவில்லை, இங்கிருந்து போகலாம் என்று கூறவும், அந்த வனதேவதை தன்னுடைய இடத்திற்கு வந்து சேர்ந்தாள். சிறப்பு வாய்ந்த ஒரு குழந்தையைப் பெற்றாள். கலைகளால் நாளும் வளரும் நிலவைப் போல் வளர்த்தாள்.* **(4.4.74)**

**இருதுவே ஆண்டே எனும்குறி களினால் இறந்தன ஆ(று)இரண்(டு) ஆண்டு**
**திருமுனி பாதம் மகவொடும் அடைந்து சென்னிதாழ்ந்(து) எதிருற நின்று**
**பெருமைகண்(டு) அருள்வாய் நீதர யானே பெற்றஇப் பெருங்குணக் குமரன்**
**அருமறை நூல்கள் அனைத்தையும் நானே அளித்திட அறிவினால் அறிந்தான்.**

**பொழிப்புரை:** *இரண்டு மாதம் ஒரு ருது, பன்னிரண்டு மாதம் ஒரு ஆண்டு என்ற முறைகளினால் பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தன. மைந்தனுடன் முனிவனின் பாதத்தை அடைந்த வன தேவதை, தலை தாழ்ந்து வணங்கி, எதிரில் நின்று, "பெருமையைக் கண்டு அருள்வாய். தாங்கள் தந்த வரத்தால் யான் பெற்றெடுத்த பெருமை வாய்ந்த குணங்களை உடைய மைந்தன் இவன். அரிய வேத சாத்திரங்கள் அனைத்தையும் நானே போதிக்க சூக்கும அறிவினால் அறிந்துள்ளான்."* **(4.4.75)**

**கலையெலாம் உணர்ந்தும் பிறப்பிலா ஞானம் கண்டிலன் கடல்பவத் துயரால்**
**அலைவுறா நின்றான் தனைஉணர் ஞானம்  அளித்திஎன்(று) அணங்(கு)உரை செய்ய**
**நிலைகொள்மா ணாக்கன் நமக்(கு)இவன் ஆக்கி நீஅகல்(க) எனஅவள் அகன்றாள்**
**தலைமைசேர் முனிவன் தாளினை விடாது சற்குண மதலையும் நின்றான்.**

**பொழிப்புரை:** *"சாத்திரக் கலைகளை எல்லாம் அறிந்திருந்தும், பிறப்பு இறப்பு இல்லாமல் செய்யக் கூடிய பிரம்ம ஞானத்தை அடைந்திலன். பிறவிக் கடலில் அலைகின்றான். தன்னை உணர்கின்ற ஞானத்தை இவனுக்கு அளித்திடல் வேண்டும்" என்று வன தேவதை வேண்டிக் கொள்ள, "நிலையாக இந்த மைந்தனை என்னிடத்தில் இருக்குமாறு செய்து நீ செல்க" என்று முனிவன் கூறவும், வன தேவதை அவ்விடம் விட்டு அகன்றாள். தலைமைப் பண்புகள் நிறைந்த முனிவன் பாதங்களை விட்டு அகலாது, நல்ல குணங்களை உடைய மைந்தனும் சேவை செய்து இருந்தான்.* **(4.4.76)**

**வருந்திமெய்ஞ் ஞானம் பெறத்தகு மகவை மாதவன் அருளினான் மெல்லத்**
**திருந்திய கதைகள் அளவைகள் இதிகா சத்திலே செப்பிய திறங்கள்**
**பெருந்துணை மறையின் முடிவிலே துணிந்து பேசிய பழம்பொருள் மற்றும்**
**பொருந்திய நெறிகள் அனேகமாய் விரித்துப் பூரண போதமே புகன்றான்.**

**பொழிப்புரை:** *கஷ்டப்பட்டுத் தத்துவ அபரோட்ச ஞானத்தை (அனுபவ அறிவை) அடையத் தக்க குழந்தையைப் பெருந் தவத்தை உடைய தாசூர முனிவன் கருணையினால் நிதானமாகத் திருத்தமான கதைகள், உதாரணங்கள், இதிகாசங்களில் சொல்லியுள்ள தன்மைகள், மோட்சம் அடைய முயற்சி செய்பவர்களுக்கு பெரும் துணை புரியும் வேதங்களின் இறுதியில் திகழ்கின்ற உபநிடதங்கள் துணிந்து உரைத்த பழமை வாய்ந்த அர்த்தங்கள் மற்றும் பொருத்தமான நெறிமுறைகள் அனேக விதமாய் விரிவாக எடுத்துரைத்து, பூரண ஞான உணர்வை உரைத்தான்.* **(4.4.77)**

**வா(ன்)நதி மூழ்க அதுநெறி யாக வானிலே மறைந்துபோய் ஒருநாள்**
**ஆனஏழ் முனிவர் பதவிநின்(று) அணுகி அனையதா சூரன்வாழ் கடம்பின்**
**தானமே மேவி இருள்பொழு(து) இருந்து தாபதன் தனயனுக்(கு) உரைத்த**
**ஞானநல் பொருள்கள் கேட்டனம் அதனை நாம்உனக்(கு) உள்ளவா(று) உரைப்பாம்.**

**பொழிப்புரை:** *கங்கை நதியில் மூழ்குவதற்காக அந்த மார்க்கமாய் வானத்தில் மறைந்து போய் ஒரு நாள் சப்தமுனிவர் மண்டலத்திலிருந்தும் சென்று முன்பு சொல்லிய தாசூரன் வசிக்கும் கடம்ப மரத்தின் இடத்தை அடைந்து இரவுப் பொழுது தங்கி இருந்து, முனிவன் மைந்தனுக்கு உபதேசித்த நல்ல ஞான அர்த்தங்களை யாம் கேட்டோம். அதனை உள்ளபடி உனக்குக் கூறுவேன்.* **(4.4.78)**

**பிறப்பிலாப் பிரமம் இதுவென அறுதி பிறப்பதோர் கதையிது கேளாய்**
**சிறப்பதோர் அரசன் வீரமும் புகழும் சிறந்தவன் தெளிஞனாம் பெயரோன்**
**இறப்புறும் உலக பாலராய் உள்ளார் அவனுடை ஏவலை முடிமேல்**
**நிறப்புறு மணிபோல் தாங்குவர் எவர்க்கும் நிலைபெற நிறுத்தொணா நெடியோன்.**

**பொழிப்புரை:** *பிறப்பில்லாத பிரம்மம் இது என்று நிச்சயம் உண்டாவதற்கான ஒப்பற்ற கதை இது கேட்பாய். சிறந்த ஓர் அரசன் வீரமும் புகழும் மிக்கவன், சுகோத்தன் என்னும் பெயர் உடையவன். அநித்தியமான உலகில் உள்ளவர் அந்த அரசனுடைய கட்டளையைத் தலைமேல் சூடாமணி போன்று தரிப்பர். எவராலும் மூலகத்திலும் அந்த மகாத்மா (அரசன்) வசீகரிக்க முடியாதவன்.* **(4.4.79)**

**சாகசம் ஒன்றும் விரும்புவோன் பலவாச் சாலவும் வியப்புறு தொழிலோன்**
**சோகமும் மகிழ்வும் தருவதாய் முயலும் தொழில்களின் தொகுதியை எண்ணில்**
**மாகடல் அலைகள் எண்ணினும் தொலையா வாட்படை வாயுவன் னிகளில்**
**ஏகமும் இவனை அடர்வுறா(து) ஆகும் இருகையால் விண்ணைஎன் செயலாம்.**

**பொழிப்புரை:** *சாகசம் (பிடிவாதம்) கருதிய விஷயத்தை எப்படியாவது நிலை நிறுத்துவது பிடிவாதம் ஒன்றிலேயே விருப்பம் கொள்பவன். எப்பொழுதும் ஆச்சிரியமான விவகாரத்தை உடையவன். துக்க சுகங்களைத் தரக்கூடிய தொழில்*

*கூட்டத்தினை அளவிடில் (கணக்கிடப் போனால்), பெரிய சமுத்திரத்தின் அலைகளைக் கணக்கிட்டாலும் எண்ணி முடிக்க முடியாது. அஸ்திரம், காற்று, நெருப்பு இவைகளில் எதுவும் இவனை எதிர்த்துப் போராட முடியாது. இரு கைகளால் ஆகாயத்தை என்ன செய்ய முடியும்?* **(4.4.80)**

**வரம்பறு விரிந்து லீலையால் புரியும் மட்டறு முயற்சிகள் அனைத்தும்**
**திரம்பெறு தேவர் மூவரால் எனினும் சிறிதுபின் செல்லவும் அரிதாம்**
**பரம்பிய இவனுக்(கு) உடலமாய் எல்லாம் பரிப்பவர் மூவர்(ர்)உண்(டு) அனையர்**
**உரம்பயில் உலகை அடர்ந்துநிற் பவர்கள் உத்தமன் மத்திமன் அதமன்.**

**பொழிப்புரை:** *எல்லையின்றி விரிந்து விநோதமாகச் செய்யும் அளவில்லா ஆடம்பரம் அனைத்தின் பின்னால் நிலைபெற்ற இந்திரன் முதலான தேவர்களாலும், பிரம்ம தேவன் முதலான மூவர்களாலும் சற்றும் பின் தொடர்ந்து செல்ல முடியாதது. விரிந்து விளையாடும் இவனுக்குத் தேகங்களாய் எல்லாவற்றையும் ஆக்கித் தாங்குபவர் மூன்று பேர்கள் இருக்கின்றனர். அந்த மூவரும் அதி திடமான இந்தப் பிரபஞ்சத்தை அடர்ந்து நிற்பவர்கள். உத்தமன், மத்திமன், அதமன் ஆவர். (அதாவது அவனுக்கு சத்துவ, இராசத, தாமச குணங்களை உடைய மூன்று தேகங்கள் என்பதாம்.)*
**(4.4.81)**

**முடிவிலா விசும்பில் தோன்றிஆங்(கு) உறைவோன் மூவகை உடலுடை முதல்வன்**
**நெடியஅவ் விசும்பில் அவன்தரு நகரம் நீண்டவீ திகள்பதி னாலாம்**
**ஒடிவறும் பகுதி மூன்றினால் எழிலார் உபவனம் வனங்கள்செய் குன்றம்**
**கொடிநிகர் முத்த மாலைஏழ் வாவி குளிர்கொதிப்(பு) உளஇரு தீபம்.**

**பொழிப்புரை:** *முடிவில்லாத ஆகாயத்தில் உதித்து அங்கு இருப்பவன். மூன்று பிரகாரமாய்த் தேகம் சார்ந்த கருப்பன். பரந்துள்ள ஆகாயத்தில் பிரமாண்டமாக ஒரு நகரை உண்டாக்கினன். பதினான்கு வீதிகள். கெடாத மூன்று பகுதிகள் நந்தவனம், உபவனம், மலைகள், கொடியைப் போன்ற முத்து மாலைகள் அணிந்தது என்ன ஏழு கடல்கள், குளிர்ச்சி, உஷ்ணம் உள்ள இரு தீபங்கள்.* **(4.4.82)**

**என்பன நிறைந்த இந்நக ரத்தில் இவன்தரும் அபவர(கு) இனங்கள்**
**முன்புறு கீழ்மேல் நடுவெனும் பதங்கள் முழுதினும் உழல்வுற விதித்த**
**வன்புறு தூண்கள் மூன்றுள எலுப்பு மரங்களால் செறிந்தன புண்ணீர்**
**மென்படல் தோலால் நெய்த்(து)இனி தான விரிமயிர் கற்றையால் மேய்ந்த.**

**பொழிப்புரை:** *இவை எல்லாம் நிறைந்திருக்கின்ற இந்த நகரத்தில் இவனால் உண்டாக்கப் பட்ட கூடாரங்கள் தாழ்ந்து உயர்ந்து இடைப்பட்டது (தேவ மானுடன் முதலான தேகங்களே கூடங்கள்) என்ற இடம் எல்லாம் சுழலும்படி உருவாக்கப்பட்டன. அவற்றுக்கு வலிமை பொருந்திய (வாத பித்த கபம் என்னும்) தூண்கள் மூன்று. எலும்பு, உதிரம், சுக்கிலம் ஆகியவற்றால் பொருந்திய மென்மையான பசையுள்ள தோலினால் அழகாய் விரிந்துள்ள மயிர்க் கற்றையால் மூடப்பட்டனவாம்.* **(4.4.83)**

**மந்தமா ருதம்சூழ் சாலகம் ஒன்பான் மருவின ஐம்பொறி என்னும்**
**சுந்தர விளக்கால் விளங்குவ இரண்டு தோள்எனும் தோற்றமும் உடைய**
**அந்த(ம்)இல் பரம பாவனைக்(கு) அஞ்சும் அகங்கரப் பேய்கள்காத்(து) அளிப்பச்**
**சந்ததம் இலாத மாயையால் அந்தத் தரணிபன் சமைத்தபா வறைகள்.**

**பொழிப்புரை:** *இளம் தென்றல் காற்று வீசும் காதுகள், நாசிகள் முதலான ஒன்பது சன்னல்கள், ஐம்புலன்கள் என்னும் அழகிய விளக்குகள், இரண்டு மார்க்கள் என்னும் தோள்கள் உடையன. முடிவற்ற பரம பாவனைக்கு பயப்படும் அகங்காரப் பேய்கள் பாதுகாத்து இருக்க, எப்பொழுதும் இல்லாததான மாயையினால் அந்த சுதோகத்தன் என்ற அரசன் உண்டாக்கிய வீடுகள் இருந்தன.* **(4.4.84)**

**அசைதரும் இனிய பாவறைத் திரளில் அகங்கரப் பேய்களோ(டு) உலாவிக்**
**குசைதரு விநோதம் விவிதமாய் இயற்றிக் கூடுறை புள்ளென உறைந்து**
**விசையினால் அவற்றை விட்(டு)அகன்(று) அயலே மேல்வரு பாவறை விதித்து**
**நசையுற மேவிப் பூதஆ வேசம் நண்ணினர் போல்அவன் நடிக்கும்.**

**பொழிப்புரை:** *சஞ்சரிக்கின்ற இனிதாகிய கூடங்களில் அகங்காரப் பேய்களுடன் விளையாடி சந்தோஷம் தரும் விளையாட்டுகளைப் பலவிதமாக நடத்தித் தர்ப்பைப் புல்லினால் ஆன கூட்டில் வசிக்கின்ற பறவையைப் போல் இருந்து, வேகத்தினால் அந்தக் கூடத்தை விட்டு அகன்று தனியாக மேல் ஒரு கூடத்தை உருவாக்கி ஆசையுடன் பூத ஆவேசம் அடைந்ததைப் போல் அந்த அரசன் (சீவன்) நடனம் ஆடுவன்.* **(4.4.85)**

**இவற்றைவிட்(டு) அவற்றை எய்துவம் என்றே எண்ணுற அப்படி எய்தும்**
**அவற்றினின்(று) இறப்போம் என்(று)எணும் நினைவால் அப்படி இறந்துபோம் சித்தம்**
**கவற்றியால் அலையப் பிறந்(து)இறந்(து) உழலும் ககனமே இவற்றினுக்(கு) இடமாம்**
**தவற்றினை எய்தி மீளவும் தோன்றும் தவழ்திரை நீரிலே வரல்போல்.**

**பொழிப்புரை:** *இந்தக் கூடங்களை விடுத்து அந்தக் கூடங்களை அடைவோம் என்பதாகச் சிந்திக்க அவ்வாறே அடையும். அந்தக் கூடங்களிலிருந்தும் இறப்போம் என்பதாகக் கருதும் சங்கற்பத்தால் அவ்வாறு இறந்து போகும். மன வருத்தத்தால் சஞ் சலப்பட பிறந்து இறந்து அவதிப்படும் சிதாகாசமே இவை அனைத்துக்கும் ஆதாரமாம். நாசத்தினை அடைந்து மீண்டும் பிறந்திடும். அலைகின்ற அலை கடலிலே வருவதே போல்வதாகும்.* **(4.4.86)**

**மேனிமூன்(று) உடையோன் சிறந்தகந் தர்ப்ப விதித்தஊர் அனையதற் புரத்தில்**
**தா(ன்)இனி(து) இருந்து தொலைவற மேன்மேல் தழைப்புறு காரிய வசனாய்**
**ஈனமாம் ஒருகால் நன்மையாம் ஒருகால் என்செய்வோம் என்றிடும் ஒருகால்**
**மானமாம் ஒருகால் மயக்குறும் தெளியும் வருந்துறும் மகிழ்வுறும் பலகால்.**

**பொழிப்புரை:** *தூல, சூக்கும, காரணமாகிய மூன்று தேகங்களை உடையவன் சிறந்த கந்தர்வர்களால் உருவாக்கப்பட்ட நகரத்தைப் போன்ற தனது நகரத்தில் தான் சுகமாக இருந்து ஒழிவின்றி மேன்மேலும் விருத்தியாகும் தொழில் பரவசனாய் (காரியங்களின்*

*வசமாய்) ஒருபோது கெடுதலை அடைவன். ஒரு போது நல்லதை அடைவன். ஒருபோது என் செய்வது என்று கருதுவன். ஒரு போது அபிமானத்தை அடைவன். ஒருபோது மயக்கத்தை அடைந்து திரிவன். ஒருபோது தெளிவுற்று வாழ்வன். பலபொழுது துக்கம் அடைவன், மகிழ்வன்.* **(4.4.87)**

**தளர்ந்தனன் என்னும் தடித்தனன் என்னும் தாழ்ந்தனன் உயர்ந்தனன் என்னும்**
**வளர்ந்தனன் என்னும் குறைந்தனன் என்னும் மாருதம் மோதுறு கடல்போல்**
**உளந்தனால் அந்த மன்னவன் சுழல்வ(து) உரைப்ப(து)என் என்றலும் மைந்தன்**
**கிளந்ததா தையைநீ தெளிஞ(ன்)என்(று) உரைத்த கீர்த்தியோன் ஆர்எனக் கேட்டான்.**

**பொழிப்புரை:** *இளைத்திருக்கின்றேன் என்பான். பருத்து இருக்கின்றேன் என்பான். தாழ்ந்தவன் ஆனேன் என்பான். உயர்ந்தவன் ஆனேன் என்பான். வளர்ந்து விட்டேன் என்பான். குறைந்து விட்டேன் என்பான். பெரும் காற்று மோதுவதால் சிதறும் கடல்போல, அந்த அரசன் அலைந்து சுழல்வது என்னே என்று தந்தை போன்ற ஆசாரியர் கூறவும், இவ்வாறு அருளிச் செய்த தந்தையாகிய ஆசாரியரை (தாசூரனை) மைந்தன் நோக்கி "நீர் தெளிஞன் (சுகோத்தன்) என்ற கீர்த்தி மிக்கவன் யார்?" என்று கேட்டான்.* **(4.4.88)**

**வண்மையால் அந்த மன்னனை உரைத்தால் வரும்பிறப்(பு) இறப்(பு)எனும் பொய்யின்**
**உண்மைநன்(கு) உணர்தி என்றுதா சூரன் உத்தம மைந்தனுக்(கு) உரைப்பான்**
**எண்மயம் ஆகிப் பொய்யெனத் தோன்றி இடமுற விரிமுயற்சி யதாய்க்**
**கண்மய லான பிறவியின் நிலையைக் கட்டுரை யாகமுன் உரைத்தோம்.**

**பொழிப்புரை:** *உள்ளபடி அந்த அரசன் யார் எனத் தெரிவித்தால் கர்மங்களால் வரும் பிறப்பு இறப்பு என்னும் மித்தியா தன்மையைத் தெரிந்து கொள்வாய் என்பதாக தாசூர முனிவன் உத்தமமான மைந்தனுக்கு உரைக்கத் தொடங்கினார். சங்கற்ப மாத்திர உருவுடையதாய் அசத்து என எழுந்ததாய் விரிவாய் விபரீத திருஷ்டியால் ஆன இந்த சம்சாரம் பிரபஞ்சம் யாவும் பொய்யாக முன்பு கூறினோம்.* **(4.4.89)**

**தற்பர விசும்பில் உதித்தசங் கற்பம் சாற்றிய தெளிஞனாம் மன்னன்**
**பற்பல காலம் தோன்றியும் மறையும் பரம்பிய உல(கு)அதன் வடிவாம்**
**அற்பசங் கற்பம் உள(து)எனில் உல(கு)உண்(டு) அதுவில(து) எனில்உல(கு) இலதாம்**
**முற்படு மூவர் முதலிய தேவர் மொய்த்தமெய் அவயவம் அதற்கே.**

**பொழிப்புரை:** *தற்பத இலட்சியார்த்தமான சிதாகாசத்தில் உதயமான எண்ணமே உனக்கு உரைத்த அந்த சுகோத்தன் என்ற மன்னவன். பற்பல காலம் தானாகவே புலப்படும், தானாகவே இலயமாகும். விரிவான இந்தப் பிரபஞ்சம் முழுவதும் அந்த சங்கற்ப வடிவமே ஆகும். தோற்ற அரவு மாத்திரமாகிய (கயிற்றில் பாம்பின் தோற்றம் போல்வதாகிய) அந்த சங்கற்பம் (நினைவு-எண்ணம்) இருக்குமாயின் இந்தப் பிரபஞ்சம் உள்ளதாகும். அந்த சங்கற்பம் இல்லை எனில் இந்தப் பிரபஞ்சம் இல்லாதது ஆகும். முன்னே சொன்ன முதன்மை வாய்ந்த மும்மூர்த்திகள் முதலிய தேவர்கள் நெருங்கிய அதனது தேக உறுப்புகளே ஆகும்.* **(4.4.90)**

**மேயதன் பத்திப் பாச்சல்மாத் திரத்தால் விரிஞ்சனாம் பாவனை மேவி**
**ஆயசங் கற்பம் வடிவிலா விண்ணில் அமைத்தது முப்புவி நகர**
**நாயகர் ஈரேழ் ஆகிடும் ஈரேழ் ஞாலமே நகர்உறு தெருக்கள்**
**தூயஞா லங்கள் செறிபொழில் திரள்கள் சொல்லிய வனம்(ம்)உப வனமே.**

**பொழிப்புரை:** *கற்பனையாகப் பொருந்திய தனது பிரதிபாசத் தன்மையாலே படைக்கும் இறைவனான அயனாம் தன்மையை அடையக் காரணமான அந்த சங்கற்பம் உருவம் இல்லாத ஆகாயத்தில் சொர்க்க, மத்திய, பாதாள லோகங்களை நிர்மாணம் செய்தது. லோக பாலகர் பதினான்காய் உள்ள பதினான்கு புவனங்களே அந்த நகரத்து வீதிகள். நெருங்கிய பூந்தோட்டங்களும், சொல்லப்பட்ட ஊர்சூழ்ந்த சோலைகளும் நந்தவனங்களும் தூய பூமியாம்.* **(4.4.91)**

**மேருமந் தரமே முதலஅந் நகரின் மேவிய விநோதவெற்(பு) இனமாம்**
**சூரியன் திங்கள் காற்றினால் அசையாச் சுடர்களாம் நித்தில மாலை**
**நீருயர் நதியின் திரள்களாம் வாவி நிகழ்த்திய ஏழ்எனும் அவைதாம்**
**பேரியல் வடவை கமலமாய்ப் பூத்த பெருங்கடல் ஏழுமே பெரியோய்.**

**பொழிப்புரை:** *மேரு, மந்தரம் முதலிய மலைகள் அந்நகரில் அமைந்த விளையாட்டு மலைகளின் கூட்டங்கள். பெருமை பொருந்தியோய் சூரிய சந்திரர்கள் காற்றினால் அசையாத் தீபங்கள் ஆம். நீர் நிறைந்த நதிக் கூட்டங்களே முத்துமாலை என்று சொல்லப்பட்டவை. பெரிய வடவா முக அக்கினியைத் தாமரையாய்ப் பூத்திருக்கின்ற கடல் ஏழும் தடாகங்கள் ஏழு என்று சொல்லப்பட்டன.* **(4.4.92)**

**இனையமா நகராம் சகத்திடை முன்னம் இயம்புசங் கற்பமன் னவனால்**
**வினையினால் வந்த உடல்கள்பா வறையாம் மேற்பதத்(து) இமையவர் என்றும்**
**வனையகீழ் பதத்;தில் நாகரே என்றும் மனிதரே நடுப்பதத்(து) என்றும்**
**துனைதரு வாத எந்திர விசையால் சுழல்வன தசைச்சுவ ரகங்கள்.**

**பொழிப்புரை:** *இத்தகைய மகிமை வாய்ந்த பட்டணமாம் இந்த உலகத்தில் முன்பு சொல்லிய சங்கற்ப அரசனால் கரும வசத்தால் வந்த உடல்கள் கூடங்களாம். தேவர்களை மேலான பதம் என்றும், நாகர்களைக் கீழான பதமாகிய பாதாள லோகம் எனவும், நடுப் பதத்தில் (மத்திய லோகத்தில்) மனிதரே என்றும், வேகமுடைய வாயுவாம் எந்திர விசையினால் மாமிச மண் சுவராம் வீடு சலித்து உழல்வனவாம்.* **(4.4.93)**

**பல்வகை தானே இயங்குறும் உடலாம் பாவறை தோறு(ம்)அவ் வேந்தன்**
**நல்வழி உணர்வை நோக்குற நடுங்கும் நலம்இலா அகங்கரம் என்னும்**
**வல்லஇப் பேய்கள் பொய்களாய் இருந்தும் வந்துமெய் போல்எழும் அவற்றோ(டு)**
**ஒல்வதாம் விநோதம் புரிதரும் கணத்தில் உண்டுமாம் இல்லையும் ஆகும்.**

**பொழிப்புரை:** *வாசனைத் திரவியங்கள் மற்றும் பலவகையால் விளங்குகின்ற உடல்களாம் கூடங்கள் தோறும், நிஷ்காமிய கருமத்தால் மனத்தூய்மை மூலமாகச் சிரவணம் முதலியவற்றால் அடையப்பெறும் பரம ஞானத்தைக் காணும் பொழுதே*

*அச்சத்தை அடையும் நலம் தராத அந்த மன்னவனின் அகங்காரம் என்னும் வலிமையான பேய்கள் மாயாமயங்களாக (பொய்களாக) இருந்தும், அந்த சங்கற்ப மன்னவனால் உண்டாக்கப்பெற்ற சத்தியம் போல சர்வ அங்கம் உடையதாம். அவற்றோடு விளையாடும் கணத்தில் உள்ளதாகியும், இல்லாததாகியும் இருக்கும்.* **(4.4.94)**

**காயம்(ம்)என்(று) உரைத்த பாவறை தோறும் கடலிடை அலைகள்போல் தோன்றி**
**மாயுமேல் இயற்று மனைகளில் விடாமல் வரும்இவன் இயற்றிய எல்லாம்**
**மேயதோர் கணத்தில் வீண்களாய் நசிக்கும் வீணிலே திரிதரும் இவன்தான்**
**ஆயதன் சங்கற் பத்தினால் இருக்கும் அவ்வள(வு) அருந்துயர் உழக்கும்.**

**பொழிப்புரை:** *தேகம் எனக் கூறிய கூடங்கள் சமுத்திரத்தில் உண்டாகும் அலைகள் (கடைசியில்) அந்தக் கடல் தண்ணீராகவே ஆவது போல் அழியும். இனிமேல் கற்பிக்கின்ற புரங்களில் அந்த மன்னவன் கற்பித்தவை எல்லாம் இடைவிடாமல் வந்து சேரும். அற்பமான கண நேரத்தில் விரைவாக வீணாக அழியும். இவன் ஒரு பொழுதும் இன்பமே என்பது இல்லாமல் உழலும் உண்டாய தன் சங்கற்பத்தால் பாலனுக்குப் பேய் போல எவ்வளவு காலம் இருக்குமோ அவ்வளவு காலம் சகிப்பதற்கு அரிய துயரை அடைந்து வருந்துவன்.* **(4.4.95)**

**இறையு(ம்)ஓர் சுகம்அற்(று) இரங்குவோன் தான்உண்(டு) என்பதோர் பாவனை யாலே**
**நிறைசகம் இயற்றும் தான்இல(து) என்றே நினைத்திடில் அக்கணத்(து) இறந்து**
**குறைவறு கதிர்முன் இருள்எனப் போகும் குறித்தசிற் றின்ப(ம்)உற்(று) அமிழும்**
**உறைவறு இவனுக்(கு) உடல்கள்மூன்(று) உளவா உத்தமம் மத்திமம் அதமம்.**

**பொழிப்புரை:** *அற்பமும் எந்தவொரு இன்பமும் இல்லாமல் ஏங்கியிருப்போன், யான் இருக்கின்றேன் என்ற பாவனையினால் விசாலமான பிரபஞ்சத்தை உண்டாக்குவன். தான் இல்லை என்னும் பாவனையால் அக்கணத்தில் நாசமாகும். வெளிப்புறப் பொருள்களில் இருந்து திருப்பி வாசனையோடு அஞ்ஞானத்தை ஒழித்து விட்டால் சூரியன் முன்பு இருள் ஒழிவது போல இந்த சுதோத்தன் அழிவன். சுகம் என்று கருதிய அற்ப சுகம் கிடைத்த மாத்திரத்தில் அதில் அமிழ்ந்து மகிழும் இவனுக்கு உத்தமம், மத்திமம், அதமம் என்று மூன்று தேகங்கள் உளவாம்.* **(4.4.96)**

**முக்குணம் தானே மூன்(று)உடல் ஆகி மூலமாம் மூன்(று)உல கிற்கு**
**அக்குணம் தன்னில் தமங்கொள்சங் கற்பம் ஆவது பகுதியின் செயலால்**
**துக்கமாய் வருந்திப் பாதலப் புழுவாம் தூயசத் துவம்கொள்சங் கற்பம்**
**மிக்கநல் தரும ஞானம்வீ(டு) உளதாய் வேந்தர்வேந்(து) எனமிக விளங்கும்.**

**பொழிப்புரை:** *சத்துவம், இராசதம், தாமசம் என்ற முக்குணங்களே மூன்று தேகங்களாகி மூன்று சகம் நிலைபெறுவதற்குக் காரணமாம். அந்த மூன்று குணங்களில் தமோ குண வடிவ சங்கற்பமானது பிரகிருதியின் செயலால் துக்க வடிவமாய் உழன்று புழுக்கள் தன்மையை அடையும். தூயதான சத்துவ குண வடிவ சங்கற்பமானது நிஷ்காமிய கர்ம வசத்தால் புண்ணியம் மேலிடச் செய்து சிரவணம் முதலியவற்றை அடைந்து சக்கரவர்த்தி போல விளங்கும்.* **(4.4.97)**

**இராசத குணசங் கற்பம்(ம்)இவ் வுலகில் இயல்புறு குடும்பியாய் இயங்கும்**
**விராவிய இந்த மூன்றையும் விட்டு மெய்ம்மையாய்த் தான்இல(து) என்னில்**
**நிராகுல மாக அனையசங் கற்பம் நிமலமாம் பரபதம் அடையும்**
**துராசையாம் பார்வை அனைத்தையும் நீக்கித் துகள்மனம் மனத்தினால் நிறுத்தி.**

**பொழிப்புரை:** *இராசத குண வடிவ சங்கற்பமானது இந்த உலகில் சம்சாரியாய் மனைவி பிள்ளைகளிடத்தில் ஆசை உண்டாக விவகாரம் செய்யும். விகாரமான இந்த முக் குணங்களையும் விட்டு, உண்மையாகச் சங்கற்பம் இல்லாது போனால், துன்பம் இல்லாமல் அந்த சங்கற்பமானது நின்மலமாகிய பரம பதத்தை அடையும். (சங்கற்ப நாசத்துக்கு உபாயம் என்னவெனில்) முடிவு பெறாத ஆசை வடிவங்களாகிய அனைத்து திருஷ்டிகளையும் (பார்வைகளையும்) நன்றாக அகற்றி, குற்றம் உடைய (தீய) மனதைக் குற்றம் இல்லாத (நல்ல) மனதினால் நிலைப்படுத்தி.* **(4.4.98)**

**உள்ளினும் புறத்தும் எழுந்தசங் கற்பம் ஒருக்கிட ஒருப்பட நினைவாய்**
**எள்ளரும் தவங்கள் கற்பகோ டிகள்நீ இயற்றினும் பாதலம் பூமி**
**தள்ளரும் துறக்கம் மேவினும் உனக்குச் சாற்றுசங் கற்பமாய்(வு) அல்லால்**
**தெள்ளிய பரம பதத்தினை மேவத் தியக்க(ம்)இல் உபாயம்வே(று) இல்லை.**

**பொழிப்புரை:** *உள்ளும் புறமும் எழுந்த சங்கற்பங்களை (எண்ணங்களை) ஒழிக்கவும், மனதை ஒருமுகப்படுத்தவும் முயற்சி செய்வாய். இகழ முடியாத தவங்கள் கற்ப கோடி காலம் நீ செய்தாலும், பாதலம்-பூமி-யாவரும் தள்ளுவதற்கு அரிதான சுவர்க்கம் என்னும் மூன்று லோகங்களை அடைந்தாலும், உனக்குச் சொல்லிய சங்கற்பம் நாசம் அன்றி, தெளிந்த பரம பதத்தை அடைய மயக்கம் அற்ற உபாயம் மற்றொன்று கிடையாது.* **(4.4.99)**

**துயரங்களும் விகாரங் களும்இலாப் பிரம சுகம்செய்சங் கற்பநா சத்தை**
**முயலுதி நனிசங் கற்பமாம் கயிற்றில் முடிவறு பாவனை எல்லாம்**
**இயல்புறு கோவை யால்எழும் அந்தக் கயிற்றினை எளிதினில் அறுத்தால்**
**மயல்கொள்பா வனைகள் எங்ஙனே தூளாய் மடியுமோ அறிகிலம் மைந்தா.**

**பொழிப்புரை:** *சம்சாரத் துயர்களும், விருப்பு வெறுப்பு முதலான விகாரங்களும் இல்லாத பிரம்மானந்தம் அளிக்கும் சங்கற்ப நாசத்தின் பொருட்டு மிகவும் நிரந்தரம் முயற்சி செய்து தேடுவாய். சங்கற்பம் என்ற கயிற்றில் எண்ண முடியாத சகல பாவனைகளும் இயல்பாகப் பொருந்தும் நிரை நிரை (வரிசையாக அடுத்தடுத்து) கோர்த்தலினால் விளங்கும். அந்த சங்கற்பம் என்ற கயிற்றினை எளிதாக அறுத்தால் பிராந்தியினால் கொண்ட அந்தப் பாவனைகள் மைந்தனே! எவ்வாறு பொடிப் பொடியாகி எங்குதான் பறந்து ஓடி விடுமோ யாம் அறியவில்லை.* **(4.4.100)**

**துனிசெய்சங் கற்பம் இன்றிமுன் வந்து தோன்றிய தொழில்வழி நிற்பாய்**
**பனிசெய்சங் கற்பம் மாண்டிடில் அறிவு பார்வைகள் அனைத்தினும் பற்றா**
**தனிஉயர் பிரம பதம்அடைந்(து) அகில விகற்பமாம் தளைஎலாம் தள்ளி**
**இனியனாய் ஏகத் துவத்திலே சுழுத்தி இதய(ம்)உற்(று) இன்பமே பெறுவாய்.**

**பொழிப்புரை:** *துயரம் தரும் சங்கற்பம் ஒய்ந்தவன் ஆகி, வினை வசத்தால் வந்து அமைந்த (நேர்ந்த) செயல்களில் விவகாரம் புரிவாய். பனியைப் போல் தன்னை மறைக்கின்ற சங்கற்பம் நாசமாகி விட்டால் அறிவானது பார்வைகள் அனைத்திலும் (பார்க்கப்படும் அனைத்திலும்) பற்றாது. ஒப்பிலாத மேலான பிரம்ம பதத்தை அடைந்து, சகல விகற்பங்களாகிய தடைகளை நீக்கி, அத்வைத (இரண்டற்ற) நிலையில் சுகமுடன் நின்று, நனவில் சுழுத்தியாகி இன்பத்தை அடைவாய்.*

- *(கிடைத்ததில் மகிழ்தல், நேரிட்ட செயல்களை முணுமுணுப்பின்றி விருப்பு வெறுப்பு இல்லாது செய்தல் என்பது பொருள்.*
- *நனவில் சுழுத்தி என்பது அந்தக்கரணம் தத்தம் காரணத்தில் லயம் ஆகாமலும், தத்தம் வியாபாரம் செய்யாமலும் உள்ள காலம். அதாவது அந்தக் கரணம் இல்லாமல் ஒடுங்கிவிடுவது அல்ல. மனம் புத்தி என்ற அந்தக்கரணம் இருக்க, அவை அதன் வேலையைச் செய்யாமல் இருப்பதாகும்.)* **(4.4.101)**

**என்னலும் உயர்சங் கற்பம்()ஏ(து) என்ன எழுந்ததும் வளர்ந்ததும் மாய்ந்து**
**சன்னமா கியதும் எங்ஙனம் என்று தவம்செய்தா சூரனை மைந்தன்**
**பன்னியே கேட்ப அதற்(கு)அவன் உரைப்பான் பரமமாம் உண்டெனல் வடிவாம்**
**மின்னிய சமமாம் அறிவுகாண் பவற்றில் மேவுற எழுதல்சங் கற்பம்.**

**பொழிப்புரை:** *என்று கூறவும், மேலான சங்கற்பம் எத்தகையது, இதனது உற்பத்தியும், வளர்ச்சியும், நாசமும் எவ்வாறு என்று தவம் செய்கின்ற தாசூரனை மைந்தன் அழுத்தமாகக் கேட்க, அதற்கு தாசூரன் உரைப்பதாவது... எல்லாவற்றுக்கும் மேலானதாய் எங்கும் வியாபித்து இருப்பதாய் சத்து வடிவமாகத் திகழ்வதாய் விளங்க வைக்கும் அறிவானது (சித்தானது) காண்பவற்றில் அதனை அடைந்து வெளிமுகமாக எழுவதே சங்கற்பம்.* **(4.4.102)**

**அற்பமாய் எழுந்து தான்உள தாகி அடைவிலே பையப்பையப் பருத்துத்**
**தற்பர மனமாம் வெளியினை மூடிச் சடத்துவம் திடத்தில் உண்டாக**
**உற்பவ முகில்போல் வளர்வுறும் மைந்தா உணர்வுகாண் பவற்றினை உன்னி**
**நிற்பதாம் தனக்கு வேறுபோல் கண்டு நிகழ்த்துசங் கற்பமாய் நிகழும்.**

**பொழிப்புரை:** *(முதலில் சூக்குமம் ஆகிப் பின்பு) அற்பமாய் (கொஞ்சமாக) முளைவிட்டு (சத்துத் தன்மை வெளிப்பட) மெள்ள மெள்ளக் கிரமமாக கனத் (திடத்) தன்மையை அடைந்து, உண்மையில் பரம்பொருள் வடிவமே ஆன மனம் என்னும் ஆகாயத்தை நன்கு வியாபித்து, திடமான சடத்துவம் உண்டாவதன் பொருட்டு, ஆகாயத்தில் தோன்றிய மேகமானது ஆகாயத்தையே மறைப்பது போல வளர்ச்சியை அடையும் மைந்தனே! அறிவானது காண்பவற்றைச் சிந்தித்து, நிலையான ஆன்மாவிற்கு அன்னியம் (வேறானது) போலப் பாவித்து, சொல்கின்ற சங்கற்பத் தன்மையை அடைந்து நிற்கும்.* **(4.4.103)**

**அறிவெனும் விதைசங் கற்பமாம் முளையாம் அனையசங் கற்பமாம் தன்னைப்
பிரிவுறத் தானே செய்துதான் பிறக்கும் பெரிதுற வளர்ந்திடும் தானே
செறிதுயர் ஒழிய இன்பம்(ம்)ஒன்(று) இல்லை ஆதலால் செப்புசங் கற்பம்
நெறியுற நினையேல் நிற்புறு நிலையில் நிமிடமும் பாவனை நினையேல்.**

**பொழிப்புரை:** *அறிவாகிய விதையானது சங்கற்பம் என்னும் முளையாகும். அத்தகைய சங்கற்பமாகிய தன்னை பேதத்தைச் செய்து சுயமாக உண்டாகும். மிகவும் விரைவில் வளர்ந்திடும். சங்கற்பத்தால் பொருந்துகின்ற இந்தப் பிரபஞ்சம் துயரத்தைத் தவிர இன்பம் சற்றும் இல்லை. ஆதலால் சொல்லிய சங்கற்ப மார்க்கத்தைச் சற்றும் நினையாதே. முன் அனுபவித்த சுக துக்கம் முதலியவற்றை இப்போதுள்ள நிலையில் கணப்பொழுதும் எண்ண வேண்டாம்.* **(4.4.104)**

**இவ்வள வான பாவனை யாலே இன்பமாம் இனையசங் கற்பம்
தவ்வுறப் பெரிய முயற்சிகள் வேண்டாம் தாக்குபா வனையெலாம் ஒழித்த
அவ்வகை யாலே இறந்துபோம் தன்நெஞ்(சு) அலர்வுறு பூவினைக் கசக்கில்
கைவரு வருத்தம் ஒன்றுஉள தாகும் கழறிய இதற்(கு)அது வேண்டா.**

**பொழிப்புரை:** *இத்தன்மையதான நிர்சங்கற்பத்தாலே (சங்கற்பம் இல்லாமையால்) பரமானந்தம் உடையவன் ஆவாய். இந்த சங்கற்பம் உன்னை விட்டு அகலுவதற்கு மிகப் பெரிய அளவிலான முயற்சிகள் ஏதும் வேண்டாம். தாக்குகின்ற பாவனை (எழுகின்ற சங்கற்பங்கள்) எல்லாவற்றையும் ஒழித்த அளவிலே (எண்ணங்கள் எழவொட்டாமல் கவனித்தாலே) சுயமாகவே தனது சங்கற்பம் நாசமாகி விடும். மலர்ந்த பூவினைக் கசக்குவதில் கைகளுக்குக் கஷ்டம் ஒன்று இருக்கும். சொல்லிய இந்த சங்கற்பம் அழிவதற்கு அந்த கஷ்டமும் தேவைப்படாது.* **(4.4.105)**

**எழுந்தசங் கற்ப பாவனை விட்டால் இறந்துபோம் இதனைஇங்(கு) இதனால்
அழுந்துற மாய்த்து மனத்தினால் மனத்தை அறுத்துநின் அறிவில்நீ நிற்பாய்
உழுந்(து)உருள் பொழுதில் முடியு(ம்)ஈ(து) அரிதோ உலகமும் வானமும் ஒக்கும்
முழுந்திய பொய்யாய்ப் போம்விகற் பத்தால் முளைத்தவை அன்றிமுன் இலதால்.**

**பொழிப்புரை:** *காணப்படும் பொருள்களில் தோற்றுகின்ற சங்கற்ப பாவனையை விட்டு விடுதல் மாத்திரத்தாலே இறந்து போவதான இந்த சங்கற்பத்தை உள்முக நாட்டமாகிய சங்கற்ப முயற்சியினால் மறுபடியும் அணுகாது நன்றாகக் கெடுத்து, விசாரத்தோடு கூடிய சத்துவ சித்தத்தால் விஷயங்களில் ஆசை அற்ற மனதால் சிதைத்து உனது சித் சொரூபத்தில் நிலைத்திருப்பாய். தலைகீழாகக் கவிழ்த்து வைக்கப்பட்ட பானையின் மீது வைக்கப்பட்ட உளுந்து உருளும் காலத்து ஒரு கண நேரத்தில் முற்றுப் பெறும். இது கடினமானதோ? சகமும் ஆகாயமும் சூனியத் தன்மையாலே சமம் ஆகும். எப்பொழுதும் அசத்து மயமாகிய விகற்பத்தாலே எழுந்ததே அல்லாமல் முன்பு இல்லாத தன்மை உடையதே ஆகும்.* **(4.4.106)**

**தண்டுலத் தோலும் செம்பினில் களிம்பும் சம்பந்தம் தொழில்விசே டத்தால்
விண்டுபோம் அதுபோல் புருடனும் மலத்தை மேவியே போக்குதல் இயலும்
கொண்டசந் தேகம் ஒழித்துநீ முயல்வாய் குருவின்வல் லபவிளக் கம்தாம்
கண்டனம் எனல்வீ ணாகும்நீ தானும் கண்டன பரம்பொருள் பொலிவே.**

**பொழிப்புரை:** *அரிசியின் மேல் உள்ள உமியும், செம்புப் பாத்திரத்தில் உள்ள களிம்பும் சககூமாக இருப்பதாகும். குத்துதல், தேய்த்தல் என்னும் செயல்களின் சிறப்பாலே உமியும் களிம்பும் நீங்கிப் போகும். அதைப் போல, புருடனும் மலம் சகஜம் ஆயினும் அஞ்ஞான வடிவமான அந்த மலத்தைப் பிராந்தியினால் அடைந்துள்ளதால் சிரவணம் முதலிய முயற்சிகளால் நீக்கக்கூடும். ஆதலால் வந்த சந்தேக விபரீதங்களை குரு மற்றும் ஞான பூமிகளை அடைவதனால் ஒழித்து நீ அதனை அடைய முயற்சி செய்பவனாக ஆவாய். சம்சார சுபாவத்தை உடையதாக விளங்கும் இந்தப் போகங்கள் வியர்த்தம் (வீண்) ஆகும். நீயும் காணப்படும் அனைத்தும் பிரம்மத்திற்கு வேறாக இல்லவே இல்லை. பிரம்மம் (ஆத்மா) மட்டுமே விளங்குவதாய் இருக்கின்றது.*
**(4.4.107)**

**எனஅவர் உரைத்த யாவையும் கேட்(டு)அவ் இரவி(ல்)அங்(கு) அவரைநான் எய்த
மனமகிழ்ந்(து) அருச்சித்(து) என்னொ(டு)அத் தளிர்மேல் வதிந்தனர் இருவரும்
மெய்ம்மைக்
கனகதை களினால் காதலுற் றவர்போல் கங்குலைக் கணம்எனக் கழித்(து)அவ்
அனகனை நீங்கிக் கங்கைஉற் றனன்நான் அவன்கதை போலு(ம்)இச் சகமே.**

**பொழிப்புரை:** *என்று அந்த தாசூரன், மைந்தனுக்கு உபதேசித்த யாவற்றையும் கேட்டு அந்த இரவில் அந்த மரத்தில் இருந்த அவர்களை நான் அடையவும், மனம் மகிழ்ந்து பூசை செய்து வரவேற்றனர். என்னுடன் அவர்கள் அந்த மரத்தின் இலையின் மீது இருந்தனர். நாங்கள் இருவரும் தத்துவக் கதைகளினால் ஒருவருக்கு ஒருவர் ஆசை மிகுந்து அந்த இரவுப் பொழுதினைக் கணநேரமாகக் கழித்து, அந்தப் புண்ணிய முனிவனை விட்டு நீங்கி நான் கங்கைக் கரையை அடைந்தேன். அந்த தாசூரன் கதைபோல இந்த உலகம் ஆகும்.* **(4.4.108)**

**(திதிப் பிரகரணத்தில் தாசூரன் கதை முற்றும்)**

# (v) கசன் கதை

*முந்தைய கதையில் சித்து விலாசனமான சங்கற்பமே சீவ ஈசுவர சகமாக விளங்குவதை நிரூபித்துக் காட்டி, இவை சித்தே ஆகும் என்று அனுபவமாய் அறிவிக்கும் பொருட்டு இக்கதை சொல்லப்படுகிறது. தாசூரன் கதையில் சகத்தின் நிலைபெறுதலுக்கு மாயைத்தன்மை சொல்லப்பட்டது. இப்போது திதிப் பிரகரண தாற்பரியம் தொகுத்துச் சொல்லப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

முடிவறு காலம் தன்னில் மொழிதரு ஆண்டு நூறு
நொடிஅள(வு) எனினும் பற்றா(து) இதனையே நெடிதாய் நோக்கி
ஒடிவறு பார வேட்கை உறுவ(து)என் பொருள்கள் உன்னிப்
படர்வதாம் உள்ளத்(து) ஆசை பற்றற ஒருக்கி நிற்பாய்.

**பொழிப்புரை:** *இவ்வளவு என்று சொல்வதற்கு இயலாத முடிவே இல்லாத காலத்தை நோக்குமிடத்து, பூரண ஆயுளாகக் கூறப்படும் நூறு ஆண்டுகள் என்பது நொடி அளவினை விட அற்பமாம். அற்பத்தினும் அற்பமான இதனை நீண்ட ஆயுள் காலமாகக் கருதி, கெடுக்க முடியாத படியான ஆசையை அடைவது என்னே அது வேண்டும், இது வேண்டும் என்று படர்கின்ற உள்ளத்தின் ஆசையை அடியோடு நீங்கும்படி செய்து சுகம் பெறுவாய்.* **(4.5.1)**

மாலற எங்ஙன் நின்றாய் அங்ஙனே வாழ்வாய் பாரில்
கோலநன் மணிகள் வேண்டா(து) இருக்கவும் குறுகிப் பாயும்
தூலநன் நிழல்போல் உண்டா மாத்திரம் தோற்ற மான
ஞாலமும் பரமம் தன்னில் நலம்பெறத் தோன்றும் அன்றே.

**பொழிப்புரை:** *ஆசை அனைத்தும் அற்ற முறையில் எவ்வாறு இருப்பாயோ (எஞ்சி நிற்பாயோ) அவ்வாறே சத்து சித்து ஆனந்தமுடன் உலகில் விவகாரம் செய்வாய். அழகிய நல்ல ரத்தினங்கள் இச்சையின்றி இருந்த போதிலும், அவற்றிலிருந்து நெருங்கி வெளிவரும் ஒளியினைப் போல, பரமாத்மா இச்சையின்றி இருப்பினும் அவன் முன்பு சத்து மாத்திரமாகத் தோற்றமான இந்த உலகமும் நன்மையைத் தருவன போலத் தோற்றம் அளிக்கும்.* **(4.5.2)**

ஆதலால் பரமம் தன்பால் அகர்த்தனே கர்த்த னேஎன்(று)
ஓதுபா வனைகள் உண்டாம் உற்றபற்(று) இலாமை யாலே
சாத(ம்)இல் அகர்த்தன் ஆகும் சந்நிதி மாத்தி ரத்தால்
மேதகு கத்த னாம்இவ் விரண்(டு)அலால் வேறு மேவா.

**பொழிப்புரை:** *ஆதலால் பிரம்மத்தைக் காட்டிலும் வேறாகாத ஆத்மாவில் இச்சையில்லாத தன்மையால் அகர்த்தாவாம். இதன் சந்நிதி (முன்னிலை) மாத்திரம் கர்த்தாவாம். (அகர்த்தன், கர்த்தா, போக்தா என்று) நிர்வாணத்துக்கு ஏதுவாகக் கூறும் பாவனைகள் உண்டாம். இதயத்தில் பொருந்திய இச்சை இல்லாமையால்*

*உற்பத்தி இன்றிய அகர்த்தனாம். தமது சந்நிதி (முன்னிலை) மாத்திரத்தால் சர்வ இந்திரியங்களையும் தொழிலில் ஈடுபடச் செய்வதாலும் (உலகத் தோற்றத்திற்குக் காரணம் ஆவதாலும்) மேன்மை உடைய கர்த்தன் ஆகும். இவ்விரண்டும் ஆத்மாவில் இருக்கின்றன அன்றி வேறு அல்ல.* **(4.5.3)**

**அகத்தனில் கத்தன் தன்னில் அமைந்த(து)ஏ(து) அதனில் நிற்பாய்**
**முகத்தமாம் இரண்டும் இன்றி முளைத்தெழு மனதை நுங்கி**
**மிகத்தனி திரமாய் நிற்றி அகத்தனா விளம்பு நேரில்**
**சுகத்தனாய் நிற்றி யேனும் நன்றிது துயர்ஒன் றில்லை.**

**பொழிப்புரை:** *அகர்த்தா தன்மை, கர்த்தா தன்மை இவற்றில் உனக்கு விருப்பமானது எது? அதனையே பற்றித் திடம் உடையவனாக ஆவாய். முன்மொழிந்த அகர்த்தா, கர்த்தா இரண்டும் இன்றி, வாசனா வசமாய் முளைத்து எழுகின்ற மனதை லயம் செய்து, எப்பொழுதும் கேவலமாய் எஞ்சியிருக்கும் நிலையில் திடமாய் நிற்பாய். (இங்கு யான் ஒரு சிறிதும் செய்கின்றேன் இல்லை என்னும்) அகர்த்தனாய்க் கூறிய முறையில் நிற்பாய். அல்லது (அனைத்துமாய் இருப்பவன் யானே, அனைத்தும் செய்பவன் யானே என்னும்) மாகர்த்தா பாவனை உடையவனாய் நிற்பாய். அதனால் இம்முறையில் யாதொரு பாதகமும் (துக்கமும்) இல்லை. (கடைசியில் மனதை அழித்தலால் பரமானந்த வடிவமான சமத்துவமே மிஞ்சும்.)* **(4.5.4)**

**முன்னிஅ கத்த னாகி யான்சகம் முறைசெய் கின்றேன்**
**அன்னிய நினைவி லாமை யால்அதில் விகாரம் இல்லை**
**என்னது நீநான் செய்தேன் செய்திலேன் என்னும் பார்வை**
**உன்னிய பொழுதே துன்பம் உடலைநான் என்பார் உண்டோ.**

**பொழிப்புரை:** *கருதும் அகர்த்தனாகிய யான் சகத்தின் ஒழுங்கு முறையின் படி செய்கின்றேன். அன்னிய நினைவு இல்லாமையால் விகாரம் இல்லை. என்னது என்றும், நீ என்றும், நான் என்றும், செய்தேன் என்றும், செய்யவில்லை என்றும் கருதுகின்ற பொழுதே துன்பம் உண்டாகின்றது. இத்தகைய தேகத்தை நான் என்று கருதுபவர் உண்டோ?* **(4.5.5)**

**மொய்யுடல் நானே என்னில் மூவேழு நரகம் அஃதே**
**வெய்யவன் துயரா மேனும் மெய்யையான் என்ன வேண்டா**
**ஐய(ம்)இல் கேள்வி நல்லோர் நினைவரோ அனைத்தாம் ஊனும்**
**கையுறத் தின்ப ரேனும் நாய்ப்பிணம் கவரார் நீசர்.**

**பொழிப்புரை:** *உறுப்புகள் கூட்டமாகப் பொருந்திய தேகத்தை நான் என்று அபிமானித்தால், அந்த அபிமானமே இருபத்தியொரு வகையான நரகமாகும். கொடிய வலிமை மிக்க துயர் வந்து அடைந்தாலும், உடலை நான் என்று அபிமானிக்க வேண்டாம். சந்தேகம் விபரீதம் இன்றிச் சிரவணம் முதலியவை செய்த உயர்ந்தோர் அவ்வாறு அபிமானம் கொள்வரோ? நீசர் மாமிசத்தைக் கைநிறைய வாரி வாரித் தின்றாலும் நாய் மாமிசத்தைப் பார்த்து கவர்ச்சி அடையார்.* **(4.5.6)**

நாம்உடல் என்னும் மாசால் ஞானக்கண் குருடாய்ப் போகும்
தோமுறும் அதனைத் தூரத் தூர்ப்பரேல் சோதி ஞானம்
மாமுகில் இலாநி லாப்போல் வயங்கிடும் இனைய கண்ணால்
ஏமுறு பிறவி வேலை இருங்கரை எளிது தோன்றும்.

**பொழிப்புரை:** *நாம் உடல் என்ற பாவனையால் உணர்வு விழி குருடாகிப் போகும். குற்றமுடைய அந்தத் தேகம் நான் என்று கருதும் புத்தியை வெகு தூரத்திற்குத் துரத்திவிட்டால், உயர்ந்த சொரூப ஞானமானது மேகங்களால் மறைக்கப்படாத நிலவினைப் போல விளங்கும். இத்தகைய பார்வையினால் மயக்கத்தால் பொருந்திய சம்சாரக் கடலின் கரையாகிய முத்தியானது எளிதில் தோன்றும்.* **(4.5.7)**

அனைத்தினும் கத்தன் அல்லேன் அவன்இவன் அல்லேன் என்ன
நினைத்(து)உளத்(து) உறுதி யாகி நிற்றியால் அஃ(து)இன்(று) என்னில்
அனைத்தினும் கத்தன் நானே அள(வு)அறும் அதுநான் என்ன
நினைத்(து)அசை(வு) ஒன்றும் இன்றி நிச்சயம் ஆகி நிற்பாய்.

**பொழிப்புரை:** *(1) எல்லாவற்றிலும் கருத்தா நான் ஆகவில்லை, அவனும் இவனும் நான் ஆகமாட்டேன் என்பதாக உணர்ந்து மனதில் மாறாத நிச்சயம் உடைவனாய் நிலையாக நிற்பாய்.(இது ஒரு பாவனை) (2) அவ்வாறு நிலைபெற்று வாழச் சம்மதம் இல்லை எனின், எல்லாவற்றிலும் இருப்பவன் (சர்வ ஆன்மகனும்) யான், அனைத்தையும் செய்பவன் (சர்வ கர்த்தாவும்) யான் என்பதாக உணர்ந்து (இது இரண்டாவது பாவனை) எந்தவொரு சலனமும் இல்லாமல் நிச்சயம் உடையவனாக நிலை நிற்பாய்.* **(4.5.8)**

அன்றெனில் ஒன்றும் அல்ல ஒன்றுநான் ஆகும் என்றே
நின்றஇப் பதத்தில் நன்றாம் நின்பதம் தனில்நீ நிற்பாய்
ஒன்றெனும் பதத்தைக் கண்ட உத்தமர் தம்பால் நிற்பர்
துன்றுவா தனையே பந்தம் தொல்லைவீ(டு) அதனைத் தீர்தல்.

**பொழிப்புரை:** *அவ்வாறு (மேற்சொன்ன இரண்டிலும்) இருக்க அதாவது வெளியாய்க் காணப்படும் வடிவமாக ஒரு சிறிதும் யான் அல்லன், மாகர்த்தனும் யான் அல்லன், அகர்த்தனும் யான் அல்லன் என்று இருக்கச் சம்மதம் இல்லை எனில், (3) எல்லா விகற்பங்களையும் கடந்ததாக எந்தவொரு வஸ்து இருக்கிறதோ அதுவே எனது சொரூபம் என்பதாக (இது மூன்றாவது பாவனை) இந்த நிலையில் நீ நிற்பாய். இந்த (மூன்று) பதங்களில் எந்தப் பதம் உனக்குச் சிறந்ததாக ஆகுமோ அந்தப் பதத்தில் நிலை நிற்பாய். ஏகம் (ஒன்று) என்பதாகத் தமது சொரூபத்தை உணர்ந்த ஞானிகள் தமது ஆனந்த பதத்திலேயே இருந்து வாழ்வர். அடர்ந்த வாசனையே பந்தம் ஆகித் துன்புறுத்தும். வாசனையின் ஒழிவே முத்தியாகும்.* **(4.5.9)**

புலன்களில் பழகி சித்தம் பூண்டவா தனைகள் முன்னே
அலம்பெற மாற்றி வீட்டிற்(கு) அடுத்தவா தனையும் தீர்வாய்
நலம்திகழ் அருள்சந் தோடம் நட்(பு)உதா சினம்இந் நாலும்
மலம்தவிர் குணங்க ளாக மனத்(து)அழுந் தாது செய்வாய்.

**பொழிப்புரை:** *மனமானது இந்திரியங்களுடன் கூடி விஷயங்களில் பழகி, சேர்த்துக் கொண்ட வாசனைகளை முன்னதாக வருத்தப்பட்டாயினும் விடுத்து திருப்தி அடைந்தவனாய், மோட்சத்திற்கான எண்ணத்தையும் விட்டு விடுவாய். (அதாவது உலகத்தைக் குறித்த எண்ணங்களோ, மோட்சத்தைக் குறித்த எண்ணங்களோ இரண்டினையும் விடுதல் வேண்டும். மனதில் எந்த எண்ணங்களும் விருப்பங்களும் இல்லாதிருக்கும் நிலையே இறுதி நிலை) 1.துக்கப்படும் உயிரினங்களைக் கண்டதும் இரக்கம் (கருணை) கொள்வது 2.புண்ணிய புருஷரைக் கண்டவுடன் அவரிடத்தில் விருப்பம் உண்டாவது (முதிதை) 3.சத் புருஷரோடு நட்பு கொள்வது (மைத்திரி) 4.தீய காரியங்களைச் செய்யும் பாவிகளை விருப்பும் வெறுப்பும் இன்றி விட்டு நீங்குவதே உபேட்சை (உதாசீனம்) ஆக இந்த நான்கினையும் மலங்களைத் தவிர்க்கும் குணங்களாக (அதே சமயத்தில்) சுத்த வாசனையாகப் பற்றாமல் செய்வாய்.* **(4.5.10)**

**உள்ளுறு தொழில்கள் முற்றும் ஒருக்கிஓர் உணர்வைப் பற்றி**
**மெள்ளவாங்(கு) அதுவும் அந்தக் கரணங்க ளுடனே விட்டுத்**
**தள்ளுவ எல்லாம் எத்தால் தள்ளினாய் அதுவும் தள்ளித்**
**தெள்ளுணர் உள்ளம் செய்கை தே(சு)இருள் அனைத்தும் தீர்ந்து.**

**பொழிப்புரை:** *கருணை, நட்பு முதலியவற்றுடன் விவகாரம் செய்த போதிலும் உள்ளே அவை அனைத்தையும் விடுத்து எந்த விருப்பமும் இன்றியவனாய், சின்மாத்திர வாசனையை அடைந்து, மனம் புத்தியோடு கூடிய அந்த சின்மாத்திர வாசனையையும் மெள்ள விட்டு, எந்தவொரு வாசனைகளும் இல்லாது சித்து வடிவத்தில் திடமாக நிற்பவனாய்த் தள்ள வேண்டியதை எல்லாம் எந்த முயற்சியால் தள்ளினாயோ அந்த முயற்சியையும் விட்டு, தெளிவான அறிவும் மனமும் தொழிலும் ஞானப் பிரகாசமும் அஞ்ஞான இருளும் அனைத்தும் நீங்கி,* **(4.5.11)**

**வாதனை வடிவ மான இவைகளும் மற்றி வற்றைப்**
**பேதமாய்ப் பழகு வோனும் பிராணனில் இயக்கம் தானும்**
**யாதுமூ லத்தோ(டு) ஈர்த்து விண்ணகம் என்ன நின்றால்**
**யாதுதீர் சாந்த னாய்என் னாயினை அதுநீ மெய்யால்.**

**பொழிப்புரை:** *வாசனை உருவமான இவற்றினையும், கூறிய இவற்றைப் பேதமாகப் பழகுகின்ற சிதாபாசனும், பிராணனின் சலனமும், மற்று எவற்றையும் காரணத்துடன் (மூலத்தோடு) களைந்து, வானம் போல நிர்மலமாக நின்றால் எல்லா விட்சேபங்களும் நீங்கிய பரம சாந்தனாய் எந்தச் சத்து வடிவமாக எஞ்சி இருக்கிறாயோ அப்பொருளே நீ என்பது உண்மையாம். (விருத்தி ஞானத்தில் உள்ள அசுத்த வாசனையும், சமாதி ஞானத்தல் உள்ள சுத்த வாசனையும் ஒழிந்தால் கூடத்த பிரம்ம ஐக்கியமான அத்துவிதம் விளங்கும்.* **(4.5.12)**

**உளத்தினில் அனைத்தும் மாற்றி உலகி(ல்)ஓர் பற்ற(கு) இன்றி**
**துளக்கிலா நிலையில் நின்றோன் துகளறு முத்தன் ஆவான்**
**அளக்கரும் ஈசன் ஆவான் அவன்மிகு சமாதி தானும்**
**கொளத்தகு கருமம் தானும் கூடினும் விடினும் முத்தன்.**

**பொழிப்புரை:** *உள்ளத்தில் இருந்து எல்லாவற்றையும் நன்றாகத் தியாகம் செய்து, உலகப் பொருள்களில் சற்றும் வாசனை இன்றி, விட்சேபம் அற்ற நிலையில் நின்றவன் குற்றமில்லாத சீவன் முத்தன் ஆவான். எண்ணிலாத மகிமை வாய்ந்த ஈசுவரனும் ஆவான். அத்தகையவன் சமாதியை ஆவது, வருணாசிரமத்திற்கு உரிய தொழில்களை ஆவது செய்தாலும், செய்யாமல் விட்டாலும் முத்தனே.* **(4.5.13)**

**இருதயத்(து) ஆசை ஒன்றும் இலாமையால் எண்ணப் பட்ட**
**கருமங்கள் செய்தும் தீர்ந்தும் கையுறு பயன்ஒன் றில்லை**
**ஒருவழிப் படநீள் காலம் உளம்ஒருப் படுத லாலே**
**பெருகுவா தனைதீர் நெஞ்சில் பேசுநூல் அனைத்தும் வேண்டா.**

**பொழிப்புரை:** *மனதில் எந்தவிதப் பற்றும் இல்லாமையால் (நிர்வாசனையாக இருப்பதால்) இந்தப் பலனுக்கு இந்தக் கருமம் என்று கருதப்பட்ட தொழில்களை எல்லாம் செய்தாலும், செய்யாமல் விட்டாலும் கைவசம் பயன் ஒன்றுமில்லை. மனம் ஒருமைப்பட நீண்ட காலம் செய்யும் முயற்சியால் மனம் ஒருமைப்படுவதால் வளரும் வாசனை நீங்கிய மனத்தில் சாத்திரங்களின் அறிவும் வேண்டாம்.* **(4.5.14)**

**மறுகுவா தனைகள் தீர்ந்த மவுனத்தை ஒழிய வேறோர்**
**உறுகதி நல்ல(து) இல்லை உணர்வன உணர்ந்த தாகும்**
**துறுதிசை பத்தும் சுற்றி மீண்டதாம் தொல்லை ஞாலத்(து)**
**அறுதியாய் உண்மை கண்டோர் சிலர்நின்றோர் அவத்தின் மாய்வோர்.**

**பொழிப்புரை:** *சுழலும் வாசனைகள் நீங்கிய மௌனத்தைக் காட்டிலும் பொருந்துவதற்கு உரிய வேறு ஒரு கதி நன்மையானது இல்லை. அறியத்தக்கதை அறிந்ததாகியும், திசைகள் பத்தும் சுழன்று திரும்பினதாகியும் பழமையான சகத்தின் அறுதியான உண்மையைக் கண்டவர் சிலரே. மீதம் உள்ளவர்கள் அவலமான காரியங்களைச் செய்து இறப்பவர்களே.* **(4.5.15)**

**தேகத்தை நோக்கி அன்றோ செகமெலாம் திரிவ(து) அல்லால்**
**ஏகத்தை நோக்கி அன்றே எங்கணும் பஞ்ச பூதம்**
**நாகத்தை மண்ணைக் கீழை நாடினும் ஆறு காணோம்**
**மோகத்தை விடுதும் என்றே திடமுற்றார் முழுதும் பற்றார்.**

**பொழிப்புரை:** *(வீடு மாட மாளிகை முதலான விஷயங்கள் எல்லாம்) உடலை நோக்கி அல்லவா சகத்தில் உள்ள யாவரும் திரிவது. அதுவன்றி ஏகமான ஆன்மாவின் பொருட்டாக இல்லை. எவ்விடத்திலும் பஞ்ச பூத சம்பந்தமே உள்ளது. சுவர்க்கம், பூதலம், பாதாளம் எங்கு சென்றாலும் ஆறாவது ஒரு பூதம் காணப்படவில்லை. மோகத்தை விட்டு ஒழிப்போம் என்பதாகத் திடமுற்றவர்கள் எதையும் பற்ற மாட்டார்கள். (பூதங்களும், உலகங்களும் கூடமாவதால் விவேகிகள் புத்தியில் எவ்விடத்திலும் அவற்றில் பற்றுக் கொள்ளார், அவற்றினால் சாந்தி அடையார் என்பது பொருள்.)* **(4.5.16)**

**ஊக(ம்)இல் மூகர்க்(கு) எல்லாம் ஊழிவெங் கடலாம் சென்மம்**
**மோக(ம்)இல் ஊகத் தார்க்கு முன்னுறு கோவின் தாளாம்**
**சோக(ம்)இல் ஞானி நெஞ்சில் தொடர்ந்தசிற் றின்பம் பற்றாப்**
**போக(ம்)இல் சிற்றூர் புன்பெண் பொலிநகர் விடலைக்(கு) என்னாம்.**

**பொழிப்புரை:** *யுக்தி இல்லாத மூடர்களுக்கு பிறப்பு இறப்பாகிய சம்சாரம் பிரளய காலக் கடல் போன்றதாம். மோகமும் குதர்க்கமும் இன்றி யுக்தியோடு ஆராயும் அறிஞனுக்கு எதிரில் அற்பமாய்த் தோன்றும் சம்சாரமானது பசுவின் குளப்படி நீருக்கு சமானமாம். மற்றவர் யாவரும் பின்பற்றி மயங்கும் உலக இன்பங்கள் சோக மோகம் ஒழியப்பெற்ற தத்துவ ஞானியின் மனதில் பற்றாது. போகத்துக்குத் தகுதி இல்லாத குக்கிராமத்தில் வசிக்கும் அவலட்சணமான அற்பச் சிறுமி, நாகரீகமான பட்டணத்தில் ஆடம்பரமாக வாழும் மன்மதன் போன்ற காளையை மயக்குவதற்கு எவ்வகையில் ஆவாள்? (மயக்குவதற்குத் தகுதியுடையவள் அல்லள்) (அதுபோல ஏனையோரைப் பற்றி சக பாவனைகள் அற்பமும் (கொஞ்சமும்) விவேகியைப் பற்றாது.)* **(4.5.17)**

**பிரமமாம் சுத்த வேலை நுரைகளாம் பிறங்கல் எல்லாம்**
**பரமஆ தித்தன் முன்னர்க் கானலாம் பரவை ஞாலம்**
**திரமதாம் இதனை முன்னே செப்பினன் வியாழன் தந்த**
**வரமகன் கசனாம் பேரோன் மற்(று)அது வள்ளல் கேட்பாய்.**

**பொழிப்புரை:** *பரிசுத்தமாகிய பிரம்மம் என்ற சமுத்திரத்தில் மலைகள் யாவும் நுரைகள் போன்றதாகும். கடல் உலகம் என்று பெயர் வடிவம் கொண்ட பிரபஞ்சம் பரம ஆதித்தன் போன்ற பரிபூரண பரமாத்மாவின் சன்னிதியில் கானல் நீர் போலத் தோற்றம் மாத்திரமே ஆகும். அதி திடமாக இத்தகைய பார்வையை உடைய தேவகுரு பிரகஸ்பதி ஈன்ற மேன்மையுடைய புத்திரன் கசன் என்னும் பெயர் கொண்டவன் முன்பு கூறினான். அதனை வள்ளலே! கேட்பாய்.* **(4.5.18)**

**கசன்உயர் சமாதி நீங்கி ஒருபகல் களிக்கு நெஞ்சன்**
**வசமறத் தழுத முத்த வசனத்தன் யாது செய்கேன்**
**திசையுற எங்கு செல்கேன் தீர்ப்ப(து)என் கொள்வ(து) என்னா**
**மிசையுயர் கற்ப நீர்போல் மேதினி எங்கும் நானே.**

**பொழிப்புரை:** *கசன் உயர்ந்த சமாதியிலிருந்தும் எழுந்து, ஒரு பகலில் மகிழ்ச்சி நிறைந்த மனத்தனாய் ஆனந்த மேலீட்டால் பரவசனாய் தழுதழுத்த குரலால் (சொல்வது) (செய்ய வேண்டியதைச் செய்து முடித்தவன் (கிருத கிருத்தியன்) ஆவதால்) எதைச் செய்வேன்? (எங்கும் நிறைந்தவன்-சர்வான்மகம் ஆவதால்) எதைக் கொள்வேன்? எதைத் துறப்பேன்? (பரிபூரணன் ஆவதால்) எத்திசையை நோக்கி எங்கு செல்வேன்? பிரளய காலக் கடல்நீர்போல் பிரபஞ்சம் முழுவதும் யானே வியாபித்துள்ளேன்.* **(4.5.19)**

**மேனியில் புறத்தில் உள்ளில் மேலொடு கீழில் திக்கில்**
**வானில்வை யகத்தில் எங்கும் நான்அன்றி மற்றொன்(று) இல்லை**
**யான்இலா இடமும் இல்லை என(து)இடத்(து) இலாதும் இல்லை**
**தான்நிகழ் பொருள்வே றில்லை சச்சிதா னந்தம் என்றான்.**

**பொழிப்புரை:** *தேகத்தில் வெளியிலும் உள்ளும், மேலும் கீழும், திசைகள் எட்டிலும், சுவர்க்க லோகத்திலும், பூவுலகத்திலும், எல்லாவிடத்தும் ஆத்மா (நான்) இன்றி மற்றொன்று இல்லை. யான் (ஆத்மா) இல்லாத இடமும் இல்லை. என்னிடத்து எல்லாம் தோற்றுதலால் இல்லாதது ஒன்றும் இல்லை. தனக்கு அன்னியமாக விளங்கத்தக்க பொருள் வேறில்லை. சச்சிதானந்த சொரூபமே இருக்கின்றது என்று தனது அனுபவத்தை உரைத்தான்.* **(4.5.20)**

**(திதிப் பிரகரணத்தில் கசன் கதை முற்றும்)**

# 4. திதிப் பிரகரணம்

*சமம் தமம் முதலிய எல்லா குணங்களின் தொடர்பினால் ஆத்ம விசாரத்திற்குத் தகுதி உடையவரும், சமாதியில் பிராரப்த வினையின் தடையால் கொஞ்சம் இரஜோ குணம் கலந்த சாத்வீகமே பெறுவாரே தவிர சுத்த சாத்வீகம் அடையார். அத்தகைய முத்திக்கு யோக்கியதை (தகுதி) உடையவரே புகழப் பெறுவார் எனின் சுத்த சாத்வீக சமாதியில் இருப்பவரைப் பற்றிச் சொல்வதற்கு என்ன உளது என்னும் கருத்தினால், அந்த சற்று இராஜசம் கலந்த சாத்வீகரைப் புகழ்ந்து, அவர் தமக்கு விவேகம் வைராக்கியம் அதிகமாகும் வண்ணம் உபதேசிக்கப்படுகிறது.*

**(ஆசிரிய விருத்தம்)**

பெறற்கொ ணாதசத் துவகுணப் பிறப்பினர் புவிமேல்
நிறத்து வாழ்வது வான்திகழ் நிறைமதி நிகராம்
வறக்கும் துன்பத்தில் வாடலர் இரவுதான் வரினும்
சிறக்கும் பொன்கம லத்(து)அலர் குவியுமோ சிறிதும்.

**பொழிப்புரை:** *கிடைத்தற்கு மிக மிக அரிதாகச் சிறிது இரஜோகுணம் கலந்த சத்துவ குணத்துடன் பிறந்தவர் இவ்வுலகத்தில் நிறைந்து மகிமையுடன் வாழ்வது, வானத்தில் திகழ்கின்ற நிறைந்த ஒளிக்கிரணங்களை உடைய சந்திரனுக்கு ஒப்பாவர். தேகத்தை அடைந்து வாட்டும் துன்பத்தில் வாடாதவர். இரவு வந்த போதிலும், பொன்னால் சிறப்பாக செய்யப்பட்ட தாமரை மலர் சற்றும் குவியுமோ?* **(4.1)**

பகுதம் அன்றியே மற்றுள தொழில்களில் பற்றார்
தகுதி யாகிய மேலவர் நெறியிலே சரிப்பர்
மிகுதி யால்நிறைந்(து) அசைவறும் உளத்தினால் மிகுவர்
தொகுதி யானநட்(பு) அருள்முதல் குணங்களால் சுடர்வார்.

**பொழிப்புரை:** *இயற்கையாகவே ஏற்பட்டுள்ளவை தவிர வேறாக உள்ள (சாத்திரத்துக்கு மாறான) ஏனையத் தொழில்களில் (கர்மங்களில்) ஈடுபடமாட்டார். ஞானம் அடைந்த உயர்ந்தவர்களின் நெறியிலேயே நடப்பார். பூரணத் தன்மையை அடைந்து சஞ்சலம் அற்ற உள்ளத்தால் தெளிந்து விளங்குவார். கூட்டமான நட்பு, கருணை முதலிய குணங்களால் பிரகாசிப்பார்.* **(4.2)**

இயற்கை யாகிய குணத்தினர் இழி(வு)உயர்(வு) இரண்டும்
நயக்க லாதவர் சமம்உளோர் நன்னெறி நடப்போர்
வியக்கு மாறுதன் கரைகடா வேலையை ஒப்போர்
மயக்கி லாதவர் இரவிபோல் நியதியை வழாதோர்.

**பொழிப்புரை:** *மாறுபடாத நல்ல குணத்தினை உடையவர். புகழ்ச்சி-இகழ்ச்சி இரண்டினையும் விரும்பாதவர். சுக துக்கங்களில் சமமான நோக்குடையவர். நல்ல நெறியில் நடப்பவர். ஆச்சரியப்படும் படியாகத் தன்னுடைய கரையினைக் கடந்து செல்லாத கடலை ஒத்து நடப்பவர். மோகம் இல்லாதவர். சூரியனைப் போல நியதியை (முறைகளைத்) தவறாது செய்பவர். (நியதியில் வழுவாதவர்)* **(4.3)**

கொள்ளற் பாலது துயரிலா தவர்நிலை குறுகத்
தள்ளற் பாலது தீயவர் நெறியெனும் சழக்கே
எள்ளற் பாலதாம் உலகம்)ஏது) யாம்எவன் என்றே
தெள்ளற் பாலது குரவரால் அறிவினால் தீர.

**பொழிப்புரை:** *கைக்கொள்ளத் தக்கது யாதெனில் துக்கம் இல்லாதவர் நிலையாம். எப்பொழுதும் தள்ளத் தக்கது யாதெனில் கொடியவர் மார்க்கம் என்னும் ஆபத்து. பெரியோர்களால் இகழத் தக்கதான இந்தப் பிரபஞ்சம் எத்தகையது? நான் யார்? என்றே ஆசாரியராலும், அறிவினாலும் சிந்தித்து அஞ்ஞானம் முதலியவை தீரத் தெளிதல் தக்கது.* **(4.4)**

வருந்து கிற்பது தனைஅறி நெறியிலே மனத் தால்
திருந்து கிற்பது கருமத்தில் அழுந்திலாச் செய்கை
பொருந்து கிற்பது தீயவர் அல்லவர் புணர்ச்சி
அருந்து கிற்பது நான்என்பது) ஆக்குகிற் பதுவே.

**பொழிப்புரை:** *பிரயாசை (வருத்தப்பட்டு முயற்சி) எடுத்துக் கொள்ள வேண்டியது ஆன்மாவை அறியும் சிரவணம் முதலான மார்க்கத்தில். திருந்தச் செய்ய வேண்டியது கர்மங்களில் மூழ்காது மனத்தால் பயனை விரும்பாத செயல்கள். பொருந்தி நிற்க வேண்டியது தீயவர் அல்லாத சத் சங்க சாதுக்களின் நட்பு. ஞானத்தால் புசிக்க வேண்டியது நான் என்று எழும் அகங்கார மமகாரத்தை.* **(4.5)**

தீர்க்கத் தக்கது நரம்(பு)எலும்(பு) எனும்உடல் தியக்கம்
பார்க்கத் தக்கது முழு(து)உயிர்க்(கு) உள்ளுறை பரமம்
ஈர்க்கத் தக்கதேர் இரவியின் இடத்திலும் பாரில்
நீக்கத் தக்கிலாப் புழுவினும் சித்தொன்றே நிற்கும்.

**பொழிப்புரை:** *தீர்க்கத் தக்கது நரம்பு, எலும்பு (ரத்தம், தோல், மயிர், மலம்) மயமான உடலில் யான் என்னும் மயக்கமே. பார்க்கத் தக்கது எல்லா உயிர்களின் உள்ளும் சாட்சியாய் உறைகின்ற பரமாத்மாவே. ஏழு குதிரைகளால் இழுக்கத் தக்கதான தேரில் சஞ்சரிக்கும் சூரியனின் இடத்திலும், உலகில் தள்ளக்கூடாத புழுவின் இடத்திலும் சித்து ஒன்றே நின்று நிலவும்.* **(4.6)**

தாம தத்துடன் இராசதம் சாத்திகம் என்னும்
நாம முக்குணப் பிறவியும் முயற்சியால் நண்ணும்
சேம முத்தியைச் செய்திடும் சாத்திகச் செய்கை
ராம உத்தம ராகவ என்றுமீட்(டு) உரைப்பான்.

**பொழிப்புரை:** *தமோ குணம், இரஜோ குணம், சத்துவ குணம் என்னும் பெயர்களை உடைய முக்குணங்களால் ஆகிய (தேவ-மானுட-பசு பட்சி) பிறவியும் கரும வசத்தால் அடைவர் சீவர்கள். எல்லாத் துயரங்களையும் நீக்கிய வடிவமான முத்தியானது சாத்வீக செயல்களால் விவேக முயற்சியின் முதிர்ச்சியால் உண்டாகும். ராம! உத்தமனே! ராகவனே! என்று கூறி மீளவும் சொல்கின்றார்.* **(4.7)**

**(திதிப் பிரகரணம் முற்றும்)**

# 5. உபசாந்திப் (உபசமப்) பிரகரணம்

## (i) சனகராசன் கதை

*உற்பத்திப் பிரகரணத்தில் பிரபஞ்ச உற்பத்தி, திதிப் பிரகரணத்தில் சகத்து நிலைபெறுதல் இவற்றுக்கு மனதே காரணம் என்று சொல்லப்பட்டது. இப்போது அந்த மனம் உபசமத் தன்மையாலே சர்வ பிரபஞ்ச உபசமத்தால் சொரூபப் பிரதிஷ்டையில் தாற்பரியம் ஆம் என்று இந்தப் பிரகரணம் தொடங்கப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**சுரர்குருவின் மகன்உரைத்த படியேஇவ் வுலகெல்லாம் சொரூபம் ஆகும்**
**விரவியநீள் பிறப்(பு)இறப்பாம் இம்மாயை ராசததா மதத்தை மேவும்**
**புருடர்தரித் திடவற்றாய்த் தூண்சுமக்கும் மண்டபமே போல நிற்கும்**
**திரமுளசத் துவகுணத்(து)உன் போல்வார்கள் சனனபயம் தீர்ந்து நிற்பர்.**

**பொழிப்புரை:** *தேவகுரு பிரகஸ்பதி புதல்வன் கசன் சமாதியிலிருந்து வெளிவந்து தனது அனுபவத்தைக் கூறிய முறையே இந்தப் பிரபஞ்சம் முழுவதும் தன்மயமே ஆகும். அநாதியாகவும், பலவாகவும் உள்ள பிறப்பு இறப்பு வடிவ இந்த மாயை இரஜோ குண, தமோ குணத்தை அடைந்திருக்கும் புருடர்களால் தரிக்கத் தக்கதாய், நல்ல கம்பங்களாலே தாங்கப்பெற்ற மண்டபம் போல நிலைபெற்று நிற்கும். தைரியம் மிகுந்து சத்துவ குணத்தை அடைந்துள்ள உன்னைப் போன்றவர்கள் பிறப்பு இறப்பின் பயத்திலிருந்து நீங்கி இருப்பார்கள்.* **(5.1.1)**

**வழுவறுசத் துவகுணத்தோர் தோலுரிக்கும் அர(வு)என்ன மாயா பாசம்**
**நழுவுவர்எல் லாம்பிரமம் நாம்அதுவே என்று)எண்ணி நாமும் வேறே**
**முழு(து)உலகம் வே(று)என்னும் மோக(ம்)ஒழிப் பாய்பிரம மூலச் சித்தில்**
**எழுவனகற் பனைஎல்லாம் கடலி(ல்)அலை போலமெய்யாய் இல்லை அன்றே.**

**பொழிப்புரை:** *(முன்பு கூறிய இராசதம் சற்று கலந்த) சத்துவ குணத்தை உடையவர் அனைத்தும் பிரம்மமே நாமும் பிரம்மமே என்று சிந்தித்துத் தோலினை உரிக்கும் பாம்பினைப் போல மாய பாசத்திலிருந்து நழுவி வெளியேறி விடுவர். நாம் வேறு, இந்த முழு உலகமும் வேறு என்னும் பிராந்தியை ஒழிப்பாய். காரணமான (மூல) பிரம்மத்தின் சித்தில் உதித்த கற்பனை (ஆரோபம்) அனைத்தும் கடலில் எழுகின்ற அலைகளைப் போன்றதாம். உண்மையில் இல்லை. (தோற்றினும் அதிட்டானத்தைத் தவிர இல்லை என்பதால் அவை சித்து மயம் அல்லவாம்)* **(5.1.2)**

**சோகமிலை மோகமிலை பிறப்பில்லை பிறப்(பு)இறப்பில் சுழல்வார் இல்லை**
**ஏகமென இங்(கு)என்றும் உள்ளபொரு ளேஉள்ள(து) இரங்க வேண்டாம்**
**ஊகமுற வருவனபோ வனநினையேல் தொந்தனைகள் ஒன்றும் இல்லா**
**மாகனசத் துவகுணத்தோ(டு) ஒருவனாய் இடர்எல்லாம் மாற்றி நிற்பாய்.**

**பொழிப்புரை:** *சோகமும் இல்லை, மோகமும் இல்லை, பிறப்பும் இல்லை, பிறப்பு இறப்பில் சுழல்பவரும் இல்லை, ஒன்றே என்று இங்கு எப்பொழுதும் இருக்கின்றதே இருக்கின்றது என்று எண்ணிக் கலக்கம் இல்லாதவனாக ஆவாய். ஊகத்தோடு வருவதையும் போவதையும் குறித்துக் கவலை கொள்ள வேண்டாம். குளிர்-வெப்பம், சுகம்-துக்கம் முதலான துவந்துவம் (இரட்டைகள்) இல்லாதவனாகி, நீங்காத சத்துவ குணத்தோடு ஏகனாய், துன்பமெல்லாம் அகற்றிச் சுகம்பெறுவாய்.* **(5.1.3)**

**சமமாகிச் சொரூபத்தே நிலையாகி திரமதியாய்ச் சாந்தன் ஆகி**
**அமர்மனன மவுனியாய் நன்மணிபோல் தெளிந்துதுயர் அனைத்தும் தீர்வாய்**
**நிமலமுற நிகழ்காலத் தொழில்செய்தி யாவையினும் நேயம் இன்றி**
**நம(து)எனக்கொள் ளுதல்விடுதல் இரண்டு(ம்)அறத் துன்பமெலாம் நாசம் செய்வாய்.**

**பொழிப்புரை:** *சமமான பார்வை உடையவனாய், தன்னிலே (சொரூபத்தில்-ஆத்மாவில்) நிலைபெற்றவனாய், திடப் பிரக்ஞையோடு சாந்தம் உடையவனாய், மனனத்தோடு கூடிய மௌனியாகி, உயர்ந்த இரத்தினம் போல் தெளிந்து துயர் அனைத்தும் இல்லாதவனாக ஆகுக. நின்மலனாய் (மலம் இல்லாதவனாய்) இருந்து கொண்டு, பிராரப்தத்தால் வந்தமைந்த விவகாரங்களை நிகழ்கால நினைவோடு (விழிப்புணர்வோடு) செய்து வருவாய். எதிலும் பற்றின்றி, எமது என்று கொள்ளுதலும் எமது இல்லை என்று விடுதலும் ஆகிய இரண்டினையும் அடியோடு இல்லாமல், சகல துன்பங்களையும் நாசம் செய்வாய்.* **(5.1.4)**

**இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞானம் எளிதில் உண்டாம்**
**பனிச்சுடர்வெண் நித்திலங்கள் உத்தமமாம் மூங்கி(ல்)அல்லால் படுவ(து) உண்டோ**
**செனித்தவரில் மேலோராய் நல்லோராய் மித்திரராய்த் தெளிந்தோர் ஆகி**
**அனித்தமறு முத்தராய் ஞானிகளாம் குணமெல்லாம் அவரைச் சேரும்.**

**பொழிப்புரை:** *இனிமேற் கொண்டு பிறவி வராத கடைசிப் பிறவியில் மெய்ஞ்ஞானம் அதி சுலபமாக வந்து அடையும். குளிர்ச்சியும், பிரகாசமும் மிகுந்த வெண் முத்துகள் உத்தமமான மூங்கில் அல்லாமல் உண்டாவது உண்டோ? பிறந்தவருள் சதா ஒழுக்கம் உடையவராய், சர்வ சம்மதம் (வருவதை ஏற்றுக் கொள்ளும் தன்மை) உடையவராய், கருணை, நட்பு உடையவராய், தெளிந்தவராய் நித்திய முத்தராய் ஞானிகளாய் விளங்கும் கடைசிப் பிறவியை உடைய அவரைக் கருணை முதலிய குணங்கள் எல்லாம் வந்து அடையும்.* **(5.1.5)**

**மெத்தென்ற சரித்திரத்தின் அவர்தம்மை உலகெலாம் விரும்பும் தன்மை**
**கொத்தொன்று வனமூங்கில் குழல்இசையால் மகிழ்விலங்கின் கூட்டம் போலும்**
**இத்தன்மை யாவருக்கும் பொதுமையினால் இயம்பியதாம் இதனில் வேறாய்ச்**
**சத்தென்ற வழிஇரண்(டு)ஏழ் பவம்தீர்ப்ப வர்க்(கு)அவற்றைச் சாற்றக் கேண்மோ.**

**பொழிப்புரை:** *மிருதுவான நடையை உடைய அவர்களை உலகினர் விரும்புகின்ற தன்மையானது, வனத்தில் நெருங்கி வளர்ந்துள்ள மூங்கில்களின் இசையால் மகிழ்கின்ற வன விலங்குகளின் கூட்டம் போன்றதாகும். இந்த மார்க்கம் எல்லாருக்கும் சாமானியமாக உபதேசித்தது ஆகும். இதனினும் வேறாக எழுவகை தோற்றமான சம்சாரப் பிரிவை ஒழித்து மோட்சம் அடைபவர்க்கு உத்தமமான இரண்டு வழிகள் உள்ளன. அவற்றைக் கூறக் கேட்பாயாக.* **(5.1.6)**

**தேசிகன்சொல் பிழையாமல் அனுட்டிக்கில் பையப்பையத் தியக்கம் நீங்கிப்**
**பேசியசன் மத்(து)ஆதல் அடுத்தசில பிறப்பினால் ஆதல் பேறாம்**
**மாசறுவிற் பத்திசிறிது உண்டாகும் மனத்தால்தன் மனனத் தாலே**
**ஏசறு(ம்)ஆ காசபலம் வீழ்வதுபோல் மெய்ஞ்ஞானம் எளிதில் உண்டாம்.**

**பொழிப்புரை:** *(முதலாவது வழி) ஞானாசிரியர் உபதேசித்த நெறியில் தவறாமல் கடைப்பிடித்து வந்தால் மெள்ள மெள்ள மயக்கம் நீங்கப்பெற்று, இந்தப் பிறவியிலாவது அல்லது அடுத்த சில பிறவிகளில் ஆவது முயற்சிக்குத் தக்கபடி பயன் உண்டாகும். (இரண்டாவது வழி) குற்றமற்ற சிரவணம் சொற்பம் கிடைக்கும் மனத்தால் தனது யுக்தி விசாரத்தினாலே களங்கம் இல்லாத ஆகாயக் கனி வீழ்வது போல மெய்ஞ்ஞானம் சுலபமாக உதயமாகும்.* **(5.1.7)**

**இவ்விரண்டில் ஆகாச பலம்போல மெய்ஞ்ஞானம் இயைந்த தன்மை**
**செவ்வியவள் ளால்முன்னோர் கதையாலே யான்செப்பத் திருந்தக் கேட்பாய்**
**தெவ்வுலகில் ஆபத்(து)என்(று) ஒன்று(ம்)இலோன் விதரணத்தோன் செல்வம் மிக்கோன்**
**அவ்விய(ம்)இல் விதேகநா(டு) அரசாள்வோன் சனக(ன்)எனும் அரசர் கோமான்.**

**பொழிப்புரை:** *(மேலே கூறிய இரண்டு நெறிகள் பீபிலிகா (எறும்பு) மார்க்கம், விகங்க (பட்சி) மார்க்கம்) இவ்விரண்டில் ஆகாசக் கனி வீழ்வதற்கு ஒப்பாக மெய்ஞ் ஞானம் அடைந்த தன்மையை சிறந்த வள்ளலே! முன்பு ஒரு கதையாலே யாம் கூற மன ஒருமையுடன் கேட்பாயாக. உலகில் பகை என்ற ஆபத்து ஒன்றும் இல்லாதவன், இடம் பொருளுக்கு ஏற்பக் காரியங்களை ஆராய்ந்து செய்பவன், பொறாமை இல்லாதவன் விதேக நாட்டினை ஆட்சி செய்பவன் சனகன் என்னும் பெயர் கொண்ட அரசன் இருந்தான்.* **(5.1.8)**

**சற்குணத்தால் கடல்அனையான் சக்கரத்தான் எனஉலகம் தாங்கும் நீரால்**
**நற்குணம்செய் வசந்தநாள் நறுமலர்சூழ் நந்தனத்தில் நயந்து மேவி**
**தற்குரிய தந்திரர்கள் புறநிற்பத் தனியனாய்ச் சரிக்கும் வேலை**
**சிற்குரிய மனமுடைய சித்தர்கணம் பாடுவபண் செவியில் கேட்டான்.**

**பொழிப்புரை:** *நல்ல கல்யாண குணங்களால் நிறைந்த கடலைப் போன்றவன் ஆவான். சக்கரத்தைத் தாங்கிய மகாவிஷ்ணு போல உலகத்தை ரட்சிக்கும் தன்மையான். நல்ல ஆனந்தம் அளிக்கும் வசந்த காலத்தில் வாசனை மலர்கள் நிறைந்த நந்த வனத்தில் உலாவுதற்காக அடைந்து, தனக்கு வேண்டியதைச் செய்யும் பணியாட்கள் தொலைவில் நிற்கத் தான் தனியாக உலாவும் பொழுது, சித்து ஒன்றிலேயே மனம் லயித்த சித்தர் கூட்டம் பாடுகின்ற கீதம் காதினில் கேட்டான்.* **(5.1.9)**

**வெறியாரும் பொருப்(பு)உறைவோர் விழிப்புலத்தின் மேவாதோர் விளம்பு கீதம்**
**நெறியார்மன் னவன்கேட்ட படிஉரைப்ப நெடியவனே நினைவில் கொள்வாய்**
**அறிவானும் அறிபொருளும் கூடியகூட்(டு) அரவில்(ல்)எழும் அறிவா னந்தம்**
**பிறியாத ஆன்மதத் துவத்(து)எழுந்த தாம்அதனைப் பேணல் செய்வாம்.**

**பொழிப்புரை:** *மணம் கமழும் சோலைகள் சூழ்ந்த மலைகளில் சஞ்சரிப்பவர்கள் கண்ணுக்குப் புலப்படாத சித்தர்கள் தாமே தமக்காகவே பாடுகின்ற கீதங்களை நிஷ்காமிய கருமம் விவேகம் முதலிய சாதனங்கள் முற்றும் கைவரப்பெற்ற சனக மன்னன் கேட்ட பிரகாரம் யாம் கூற, நீண்ட புகழுடைய இராகவனே! கருத்தில் கொள்வாய். (முதல் சித்தர்) அறிபவன் (திருஷ்டா), அறியப்படும் பொருள் (திருசியம்) இவற்றின் சேர்க்கையில் புத்தியில் தோன்றும் விஷயானந்தம் அபேதமாம் தனது ஆன்ம தத்துவத்தில் உண்டாயதாம். அதனையே நிச்சலமாகப் பாவனை செய்வாய்.* **(5.1.10)**

**காண்பானும் காண்பனவும் காட்சியும்வா தனையுடனே கழல விட்டுச்**
**சேண்பாவும் காட்சிக்கு முதல்ஒளியாம் அச்சொரூபம் சிந்தை செய்வாம்**
**ஏண்பாலாம் உள்ள(து)இல(து) எனும்இரண்டின் இடைஎய்தி இறவி லாதாய்**
**மாண்பான ஒளிக்கெல்லாம் ஒளியாம்அச் சொரூபத்தை மதித்தல் செய்வாம்.**

**பொழிப்புரை:** *(இரண்டாவது சித்தர்) காண்பான், காணப்படுபவை, காட்சி என்ற திரிபுடியை வாசனையோடு கூடவே மீளவும் அணுகாதவாறு தியாகம் செய்து, விரிந்த காட்சிக்கு அதாவது விருத்தி ஞானத்திற்கு முதல் பிரகாசமாம் (ஒளியாம்) அந்த ஆன்ம சொரூபத்தைச் சிந்தை செய்வாம். (மூன்றாம் சித்தர்) முரண்பாடு இல்லாது நிலைத்தற்கு உரிய உள்ளது இல்லது என்னும் இரண்டின் மத்தியில் நாசம் அற்றதாய் மாட்சிமை பொருந்திய உள், வெளி, அஷ்டப் பிரகாசங்களுக்கு ஒளியைக் கொடுத்துக் கொண்டு, சுயம் பிரகாசமான அந்த சொரூபத்தை உபாசித்தல் செய்வாம்.* **(5.1.11)**

**அகம்அகம்என்(று) அனைத்(து)உயிரின் இடத்திருந்தும் அனவரதம் உரைப்ப தாகி**
**நிகழ்ஒளியாய் ஆன்மதத் துவமான சொரூபத்தை நினைதல் செய்வாம்**
**திகழ்இதய குகைஉறையும் தேவதையை விட்(டு)அயலே தெய்வம் தேடல்**
**மிகஅரிய கவுத்துவத்தை எறிந்துசிறு மணிதேடும் வேட்கை போலாம்.**

**பொழிப்புரை:** *(நான்காவது சித்தர்) நான் நான் என்பதாக அனைத்து உயிர்களிடத்தும் எப்பொழுதும் சொல்லப்படுவதாகி, விளங்குகின்ற பிரகாச மயமாம் ஆன்ம தத்துவமான சொரூபத்தை நன்றாகச் சிந்திப்பாம். இரண்ய மயமாய் திகழ்கின்ற இருதயக் குகையில் உறைகின்ற தெய்வத்தை விட்டுவிட்டு வெளியில் மற்றொரு தெய்வத்தைத் தேடுவது மிகவும் கிடைத்தற்கு அரிதான கௌஸ்துபத்தை எறிந்து விட்டு, அற்பமாகிய மணியைத் தேடும் ஆசை போல்வதாம்.* **(5.1.12)**

**மாளாத காதலெனும் வற்சநா பிக்கொடியின் வனத்தைச் சுட்டு**
**நீளாசை அனைத்து(ம்)அறுத் தவர்க்(கு)அன்றோ இப்பயன்தான் நேரா நிற்கும்**
**கோளான பொருள்அனைத்தின் முன்பொடுபின்(பு) இனிமையிலாக் குற்றம் கண்டு**
**மீளாத பாவனையால் கட்டுண்பார் வேசரியே வேறொன்று) அன்றால்.**

**பொழிப்புரை:** *(ஐந்தாவது சித்தர்) விவேகம் வைராக்கியத்தால் அன்றி அழியாத இகபர ஆசை என்னும் விஷவல்லிக் கொடியின் காட்டினை எரித்துச் சாம்பல் ஆக்கி, நீண்டு கொண்டே போகும் சகல ஆசைகளையும் அவற்றின் மூலமான அஞ்ஞான பரம்பரை வாசனைகளையும் அறுத்த முமுட்சுக்களுக்கே இந்தப் பிரயோசனம் கிட்டும். (ஆறாவது சித்தர்) குற்றம் உடையதான (சாரம் இல்லாததான) எல்லாப் பொருள்களிலும் முன்பும் பின்பும் இனிமை இல்லாத தோஷத்தைக் கண்டும், நீங்காத பாவனை மாத்திரத்தால் பந்தப்படுவார் கழுதையே அன்றி மனிதர் அல்லர்.* **(5.1.13)**

**எழுந்(து)எழுந்து சீறுகின்ற இந்திரியப் பாம்புகளை இதயம் தன்னில்**
**அழுந்துவிவே கத்தடியால் வச்சிரம்கொண்(டு) இந்திரன்வெற்(பு) அடர்வ(து) என்ன**
**விழுந்திடமோ துறவேண்டும் சாந்தியினால் சமமேவி இடர்தீர் நெஞ்சம்**
**முழுந்துசுக வடிவாம்தற் பதநிலையைப் பெறும்இதுவே முத்தி என்ன.**

**பொழிப்புரை:** *(ஏழாவது சித்தர்) வாசனா வேகத்தால் எழுந்து எழுந்து சீறுகின்ற புலன்களாகிய பாம்புகளை இதயத்தில் திடமான விவேகத் தடியால் வச்சிராயுதம் கொண்டு இந்திரன் மலைகளைப் பொடியாக்குவது போல் தத்தம் இடங்களில் அடக்குதல் வேண்டும். (எட்டாவது சித்தர்) வெளி உள் இந்திரிய வியாபார ஓய்வாகிய சமத் தன்மையால் சாந்தியை அடைந்து, சகல துயர்களும் ஒழிந்த மனமானது முழுக்க பேரானந்த வடிவமான ஆன்ம சொரூபத்தை அடையும். இதுவே முத்தி என்பர்.* **(5.1.14)**

**தெளிவுடைய சித்தர்கணம் திகழ்வுறப்பா டியகீதம் தெளியக் கேட்டுக்**
**களிதருவெஞ் சினக்கருடன் ஒலிகேட்ட பாம்(பு)என்னக் கலங்கி மன்னன்**
**குளிர்பொழில்நின்(று) அகம்அடைந்தான் அனைவரையும் விடைகொடுத்துக்கோவில் புக்கான்**
**நளிர்சுதைசெய் மேனிலத்தில் ஒருவனேஇ ருந்துநனி நாட லுற்றான்.**

**பொழிப்புரை:** *தெளிவுடைய சித்தர்கூட்டம் விளங்கும்படியாகப் பாடிய கீதத்தைத் தெளிவாகக் கேட்டு, செருக்குடைய கடும்கோபம் கொண்ட கருடனின் ஒலியைக் கேட்ட பாம்பு நடுங்கிக் கலங்குவது போல, கலங்கிய மன்னன் குளிர்ச்சியான அந்த நந்தவனத்தில் இருந்து அரண்மனையை அடைந்தான். பரிவாரங்கள் அனைவருக்கும் விடை கொடுத்து அனுப்பி விட்டு, அரண்மனையுள் புகுந்தான். குளிர்ச்சியான மேல்மாடியில் தனி ஒருவனாக இருந்து நன்றாக ஆராய்ந்தான்.* **(5.1.15)**

**பறக்கின்ற பறவைகளின் சிற(கு)என்ன அனவரதம் பதைத்(து)உ லாவி**
**இறக்கின்ற உலகநடை நோக்கிவாய் விட்(டு)இரங்கி இயம்பல் உற்றான்**
**அறக்கன்றி அவத்தி(ல்)உழன்(று) அலமரும்இவ் வுலகிடையான் அந்தோ அந்தோ**
**நிறக்கின்ற மயக்கத்தால் கல்லிடைகல் போல்உருண்டு நெரிந்தேன் அந்தோ.**

**பொழிப்புரை:** *பறக்கின்ற பறவைகளின் சிறகுகளைப் போல எப்பொழுதும் துடிப்புற்றுச் சுழன்று இறந்து போகின்ற உலக விவகாரத்தைப் பார்த்து இரக்கம் அடைந்து வாய்விட்டு கூறத் தொடங்கினான். முற்றிலும் நைந்து போய் வீணாகவே சுழன்று திரிந்து துயரம் அடைந்து மயங்கும் இந்த உலக விவகாரத்தின் இடையில்,*

*அந்தோ! அந்தோ! யான் பூரணமான மோகத்தால் கல்லிடையில் கல் போல் புரண்டு உருண்டு நொறுங்கினேன். அந்தோ!* **(5.1.16)**

**காலம்(ம்)ஒரு கால்முடியா(து) இதனிடைஎன் நூற்(று)ஆண்(டு)ஓர் கணமும் இல்லை**
**சாலஇது தனைமதித்து வன்காத லிடைவீழ்ந்து தளர்வ(து) ஏன்நான்**
**தூலமதி யால்கெட்ட எனைப்போல ஈன(ர்)ஆர் சொல்லல் பாற்றோ**
**சீலமறு வாழ்நாளைப் பெரிதாக நினைவதே சீசீ அந்தோ.**

**பொழிப்புரை:** *காலத்திற்கு ஒரு முடிவு (எல்லை) கிடையாது. இதனிடையில் என்னுடைய வாழ்க்கையாகிய நூறு ஆண்டுகளை ஒரு நொடிப்பொழுது என்பதாகவும் எண்ண முடியாது. இந்த அற்ப ஆயுளைப் பெரிதாக எண்ணி யான் பேராசையில் அழுந்தி வருந்துவது ஏன்? அற்பப் புத்தியால் கெட்டுப் போன என்னைப் போன்ற நீசர் யார் உளர் என்று சொல்ல முடியுமோ? அற்ப வாழ்நாளைப் பெரிதாக நினைப்பது என்னே! சீ! சீ! அந்தோ!* **(5.1.17)**

**எல்லையிலா அண்டத்தில் யான்ஆளும் புவிநோக்கி இறையும் இல்லை**
**அல்ல(ல்)உறும் இதுபெரிதா ஆதரித்து நிற்பதே அந்தோ அந்தோ**
**புல்லிமையற்(று) இனிதாகி உதாரமாச் செயப்படாப் பொருள்ஈ(து) என்ன**
**தொல்லுலகில் ஒருபொருளும் காணேன்இத் தொடர்ச்சிநிலை என்னே என்னே.**

**பொழிப்புரை:** *எல்லையிலாத அண்டகோடிகளுக்குள் யான் ஆளும் இராச்சியத்தைப் பார்த்தால் அணு எனவும் சொல்ல முடியாது. துன்பங்கள் நிறைந்திருக்கும் இந்தத் தேசத்தைப் பெரிதாகக் கருதி பற்று அடைந்து நிற்பது அந்தோ! அந்தோ! அற்பத் தன்மையின்றி இனிதாக தயையுடன் ஒருவராலும் ஆக்கப்படாத பொருள் இது என்று சொல்லும்படியாகப் பழமையான இவ்வுலகில் எப்பொருளையும் கண்டிலேன். அவ்வாறு இருந்தும் எனது புத்தியின் பற்று அடையும் நிலையை என்னவென்பது?* **(5.1.18)**

**தலைவர்தலை மேல்உறைவோர் நாட்களினால் தாழ்ந்தோர்க்கும் தாழ வீழ்வர்**
**நிலைஇல்பெரு மையைஉறுதி நினைக்கின்ற நெஞ்சேஇந் நினை(வு)ஈ(து) என்னே**
**தொலை(வு)இல்பெரும் போகங்கள் பெரியோர்கள் கிளையோடும் தோன்றித் தோன்றி**
**உலைவுறமாண் டார்முன்னாள் இந்நாள்இங்(கு) அனைஅனைத்தில் உறுதி என்னே.**

**பொழிப்புரை:** *தலைமைப் பொறுப்பில் உள்ளவர்கள், தலைபோல் உயர்ந்த இடத்தில் இருப்பவர்கள் சில தினங்களில் தாழ்ந்தவர்க்கும் கீழாக வீழ்ந்து போவர். நிலையில்லாத பெருமையை உடைய இதனை நிலையுடையதாக நினைக்கின்ற மனமே! இந்த நினைவு தான் ஈது என்னே! அனுபவித்துத் தொலைக்க முடியாத பெரும் போகங்களும். பெரியோர்கள் உறவினர்களுடன் முன்னாளில் பிறந்து பிறந்து நிலைகுலைந்து மாண்டு போனார்கள். இந்நாளில் இங்கு அனைத்திலும் நிலையானவை எது இருக்கிறது?* **(5.1.19)**

**மண்ணாடும் மன்னவரும் அவர்தனமும் மாண்டனநுண் மணலை ஒக்கும்**
**விண்ணாடும் இந்திரரும் அவர்வாழ்வும் போயினவிண் மீனை ஒக்கும்**
**எண்ணாடும் பிரமரும்அண் டமும்பூதங் களும்இறந்த எல்லை இல்லை**
**கண்ணாடும் அவைஎங்கே நின்வாழ்க்கை நிலையென்னே கவலு நெஞ்சே.**

**பொழிப்புரை:** *பூவுலகமும் மன்னவர்களும் அவர் வைத்திருந்த செல்வமும் அழிந்தன. எண்ணிப் பார்த்தால் நுண் மணலை ஒக்கும். விண்ணாடும் இந்திரன் முதலிய தேவர்களும், அவர்கள் வாழ்ந்த வாழ்வும் போயின, எண்ணிப் பார்த்தால் நட்சத் திரங்களை ஒக்கும். எண்ணக்கூடிய பிரம தேவர்களும், அண்டங்களும், பஞ்ச பூதங்களும் அழிந்தன, அளவே கிடையாது. கண்ணால் கண்டு அனுபவித்த அவை யாவும் எங்கே சென்றன? உன்னுடைய வாழ்க்கை மாத்திரம் நிலை உடையதோ? ஆசையுற்று உழலும் மனமே!* **(5.1.20)**

**செல்லாத மாயைஇருள் இரவிலே தேகமயத் தியக்க மான**
**பொல்லாத நீள்கனவாம் சூனியத்தில் இச்சைஇறை பூண்டேன் என்னில்**
**கல்லாத புல்லியனேன் சீசீநான் அனவரதம் காணும் நாட்கள்**
**எல்லாம்போ யினபோமால் இறவா(து)ஒன் றாய்நன்றாம் எழில்நாள் காணேன்.**

**பொழிப்புரை:** *தத்துவ ஞானத்தால் அன்றிக் கெடாத மாயையின் கனமான இருளில் (கும்மிருட்டில்) தேக மயக்கமான அகந்தை, மமதை, விவகாரம் அனைத்தும் நீண்ட கனவாம். ஒரு பயனும் இல்லாத சூனியத்தில் அற்பமாக ஆசை கொண்டேன் என்றால் ஒன்றும் உணராத அற்பன் ஆனேன். சீ! சீ! நான் தினமும் விவகாரம் காணும் நாட்கள் எல்லாம் போயின, போய்க்கொண்டிருக்கின்றன. நாசம் ஆகாத ஏகமான சத்து வத்துவைக் கண்ட சிறந்த நாள் ஒன்றைக் கண்டிலேன்.* **(5.1.21)**

**நடுவில்முடி வினில்அடியில் நன்றான பொருள்ஒன்றும் ஞாலத்(து) இல்லை**
**படுபொருள்எல் லாம்இறப்பா மலத்தினா லேபூசப் பட்ட தன்றோ**
**கடுவினைகள் நாடோறும் காய்துயரம் நாடோறும் கரைஒன்(று) இல்லாக்**
**கொடுமைகளே நாடோறும் செய்கின்றார் அறிவில்லார் குரம்பைக் கூத்தால்.**

**பொழிப்புரை:** *உலகத்தில் ஆதியில் மத்தியில் கடைசியில் மனதுக்கு இனியதான ஒரு பொருள் இல்லை. தோற்றப்படும் பொருள்கள் யாவும் நாசமாகக் கூடிய மலத்தினாலே சூழப்பட்டது அல்லவோ! பாவ வினைகளே நாள்தோறும், தொல்லை தரும் துயரத்தையே நாள்தோறும், எல்லையில்லாத கொடுமைகளே நாள்தோறும் தேகம் நான் என்ற அபிமானத்தால் அறிவில்லாதவர் செய்கின்றார்கள்.* **(5.1.22)**

**பாலகனாய் அஞ்ஞானத்(து) அழுந்துவன்நற் காளையாய்ப் பாவை மாரால்**
**சாலவருந் துவன்விருத்தன் தானாகிக் குடும்பத்தால் தளர்ந்து சாவன்**
**ஏவஇவன் எக்காலத்(து) என்செய்வான் மாயக்கூத்(து) இருந்த வாறே**
**ஞாலமெலாம் ஆடரங்காய்ப் பொறிமேள மாய்மனப்பேய் நடிக்கும் அன்றே.**

**பொழிப்புரை:** *பொருளின் இயல்பு தெரியாத பால்யத்தில் அறியாமையால் வருந்துவான். நல்ல காளையாகிய வாலிபப் பருவத்தில் பெண்களிடத்தில் மன்மத விகாரத்தால் மிகவும் மோகம்கொண்டு வாடுவான். முதுமை அடைந்தவனாகி மனைவி மக்கள் சிந்தனையால் வாட்டம் அடைந்து இறப்பான். இவன் எந்தப் பருவத்தில் நன்மையைச் செய்து சுகம் அடைந்திருப்பான்? மாயையின் நடனம் இருந்தவாறு என்னே! சாரம் இல்லாத சம்சார வாழ்வு நாட்டிய அரங்கமாய், புலன்களே வாத்திய மேளமாய், மனம் என்னும் பேய் கூத்தாடும் அன்றே.* **(5.1.23)**

**உள்ளத்தின் முடிமேலே இல்லாமை வீற்றிருக்கும் உலகில் என்றும்**
**தெள்ளுற்ற நல்லறத்தின் சிரத்திலே எப்பொழுதும் தீமை வாழும்**
**எள்ளற்ற இன்பத்தின் தலைமேலே துன்பங்கள் இருக்கும் என்றால்**
**கொள்ளத்தக் கனவான குற்றமிலாப் பொருள்ஏது குறிப்பு ளேற்கே.**

**பொழிப்புரை:** *உள்ளம் நாடக்கூடிய பொருள்களின் தலைமீது நாசமானது என்றும் அமர்ந்திருக்கும். உலகத்தில் நல்ல வழியுடைய சுதர்மத்தின் தலைமீது எப்பொழுதும் தாமத தீமைகள் வாழ்ந்து கொண்டிருக்கும். இகழத்தகாத இன்பங்களின் தலைமீது துன்பங்கள் இருக்கும் என்றால், ஆராய்ச்சி உடைய எனக்குக் கொள்ளத் தக்கதான குற்றமில்லாத பொருள் எது உளது? (மூடர்க்குத் தக்கது என்றாலும் ஆராய்ச்சி மனப்பான்மையுடைய எனக்குத் தகாது)* **(5.1.24)**

**விழிப்பதுவும் இமைப்பதுவும் சகத்தோற்றம் ஒடுக்கமாம் மேலோர் உண்டால்**
**பழிப்பரிய அன்னார்முன் என்போல்வார் என்னென்று பகர லாவர்**
**இழிப்பரிய விசித்திரமாம் சம்பத்தும் ஆபத்தாம் இதயம் காயில்**
**ஒழிப்பரிய விசித்திரமாம் ஆபத்தும் சம்பத்தாம் உள்ளம் வேண்டில்.**

**பொழிப்புரை:** *கண்விழித்த மாத்திரத்தில் பிரபஞ்சம் உதயமாகும். கண் இமை மூடின மாத்திரத்தில் பிரபஞ்சம் ஒடுக்கம் ஆகும். அதைச் செய்தவராகிய மேலோர் உண்டாயின், பூசை செய்வதற்குரிய அவர்கள் முன் என்னைப் போல்வார்களை என்னென்று சொல்வர்? மனமானது வெறுப்புற்றால் இகழத்தகாத பல விசித்திரமான செல்வங்களும் ஆபத்தாம். மனம் விரும்பி வேண்டினால் ஒழிக்க முடியாத பல விசித்திரமான ஆபத்துகளும் செல்வங்களாம்.* **(5.1.25)**

**வெம்மாய வாழ்வன்றோ துயர்க்கெல்லாம் பிறப்பிடமாய் விளம்பு கின்ற(து)**
**அம்மாஇங்(கு) இதனிடையே அழுந்து(ம்)அவர்க்(கு) இன்ப(ம்)உள(து) ஆவ(து) எங்ஙன்**
**மைம்மாயை என்னுமரம் பணைஇலைபூ காய்பழத்தால் வரம்பு)அற்(று) ஓங்க**
**இம்மால்செய் மனம்வேராம் இம்மனம்தான் சங்கற்பம் என்ப தாகும்.**

**பொழிப்புரை:** *கொடிய சம்சார வாழ்வே துன்பங்களுக்கு எல்லாம் பிறப்பிடமாய்ச் சொல்லப் படுகின்றது. அந்தோ! இங்கு இதனிடையில் அழுந்தி மூழ்கிக் கிடப்பவர்க்கு இன்பம் உளதாக ஆவது எங்ஙன்? மயலுற்ற சம்சார மரமானது கிளை. இலை. பூ, காய், பழங்களால் எல்லையில்லாமல் ஓங்கி வளர்வதற்கு, இந்த மயக்கத்தை இயற்றும் மனமே வேர் ஆகும். இந்த மனமே சங்கற்பம் எனப்படும்.* **(5.1.26)**

**சங்கற்ப நாசத்தால் எளிதாக மனநாசம் தானே எய்தும்**
**அங்குற்ற மனம்இறக்கில் சனனமர ணங்க(ள்)எனும் மரமும் மாயும்**
**இங்(கு)இப்பால் எனைத்திருடும் கள்ளனைக்கண் டேன்கண்டேன் இவன்பேர் நெஞ்சம்**
**பொங்குற்ற நெஞ்சத்தால் நெடுநாள்நொந் தேன்இன்று பொன்று விப்பேன்.**

**பொழிப்புரை:** *சங்கற்பத்தைச் செய்யாமையாலே மனதின் நாசமானது தானாக எளிதில் உண்டாகும். திருசியத்தைக் (காணப்படும் பொருளைக்) கவராது (கவர்ச்சி அடையாது) மனம் இறக்குமாயின் பிறப்பு இறப்பு வடிவ சம்சார மரம் அழியும். இங்கு*

*உணர்ந்து கொண்டேன். ஆத்மாவைத் திருடும் திருடனைக் கண்டு கொண்டேன், கண்டு கொண்டேன். இந்தத் திருடன் பெயர் மனம் ஆகும். எண்ணாத எண்ணமெலாம் எண்ணி எண்ணி ஏங்கும் மனப் புண்ணால் வெகுகாலம் சிரமப்பட்டேன். இன்று அதனைக் கொன்றுவிடுவேன்.* **(5.1.27)**

**இத்தனைநாள் மனமுத்தைத் துளைத்திலேன் இன்றுதுளைத்(து) இயைந்த நூலால்**
**சித்திரமாய்க் கோத்(து)அணிவன் முழு(து)உணர்ந்த தேசிகரால் தெளிந்தேன் எல்லாம்**
**சுத்தபர மானந்தம் தோற்றுவிக்கும் நல்லறிவாம் சோதி பெற்றேன்**
**மெத்தஇவன் நான்என(து)இங்(கு) இவைஎனும்பொய் உள்ளொழித்தேன் மீண்டும் நாடேன்.**

**பொழிப்புரை:** *இவ்வளவு காலமாக மனமாகிய முத்தினைத் துவாரம் செய்யவில்லை. விவேக ஊசியால் இன்று துவாரம் இட்டு, சமம் தமம் முதலிய நூலினால் அலங்காரத்தோடு கோர்த்து அணிந்து கொள்வேன். முற்றும் உணர்ந்த ஆசிரியரால் அனைத்தும் நன்றாகத் தெளிந்தேன். தூய பிரம்மானந்தத்தை வெளிப்படுத்தும் சாதனமாகிய சச்சிதானந்த சொரூபத்தை (ஞானத்தை) அடைந்தேன். எப்பொழுதும் மித்தை என்று சொல்லத் தக்க இவன், நான், எனது, இங்கு, இவை என்பவற்றை உள்ளே ஒழித்து விட்டேன். மறுபடியும் அவற்றைச் சிந்திக்க மாட்டேன்.* **(5.1.28)**

**பேதிக்கும் மனம்என்னும் பெரும்பகையை முழுவலியால் பிளந்து வென்றேன்**
**வாதித்த துயர்எல்லாம் மாற்றினேன் உபசாந்த வாழ்வு பெற்றேன்**
**சாதித்த விவேகமே உனைவணங்கி னேன்என்று சனகர் கோமான்**
**சேதித்த மனைவலைஎல் லாம்ஒழித்துத் தானேசித் திரம்போல் நின்றான்.**

**பொழிப்புரை:** *உள்ளே இருந்து துன்புறுத்தும் மனம்என்று சொல்லப்பட்ட பெரும் பகைவனை அனைத்தும் பிரம்ம மயம் என்னும் பெரும் பலத்தால் சொரூப நாசம் செய்து வென்றேன். தொல்லை கொடுத்த துன்பங்களை எல்லாம் பாழாக்கினேன். பரம சாந்தமாகிய பதத்தை அடைந்தேன். இதனைப் பெறுவதற்கு உதவிய விவேக புத்தியே உன்னைப் பணிந்தேன் என்று சனக மாமன்னன், கெடுத்த மன சஞ்சலம் ஒழியப் பெற்றுச் சித்திரம் போல நிருவிகற்ப சமாதியில் இருந்து சுயமாக ஆனந்தம் அடைந்தான்.* **(5.1.29)**

**வாளாசித் திரம்போல நெடி(து)இருந்து சனகர்பிரான் மாய்த்து நெஞ்சை**
**மீளாநல் உபசாந்த நிறைநெஞ்சால் உல(கு)இயல்பை மேவிப் பார்த்தான்**
**தாளாண்மை யால்இயற்றும் பொருள்ஏது கைக்கொள்ளத் தக்க(து) ஏது**
**கோளான கற்பனைஎன் சுபாவஅறி வாம்எனக்குக் குறிக்கும் காலே.**

**பொழிப்புரை:** *சனக மன்னன் சித்திரம் போல நீண்ட பொழுது இருந்து மனதின் சொரூபத்தை நாசம் செய்து, மீண்டும் சமாதியிலிருந்து வெளிப்பட்டுப் பரம சாந்தம் நிறைந்த நெஞ்சினால் பிரபஞ்சத்தின் இயல்பினைச் சிந்தித்துப் பார்த்தான். தாமதிக்காத முயற்சியினால் சாதிக்கத் தக்க பொருள் என்ன இருக்கிறது? கைக் கொள்ளத் தக்கது எது? இயற்கையாகவே சித்தாய் இருக்கும் எனக்கு உத்தேசிக்கும் போது குற்றம் உடைய கற்பனை யாது? (களங்கம் அற்ற சித்து வடிவமாய் இருக்கும் எனக்கு என்ன கற்பனை இருக்கிறது? என்பது பொருள்)* **(5.1.30)**

**சுத்தமாய்ச் சொரூபமாம் என்னுருவ லால்வேறு தோன்றக் காணேன்**
**வத்தியான் வாராத பொருள்நயவேன் வந்தபொருள் அனைத்தும் தள்ளேன்**
**நித்தமாய்த் தன்னிலையில் நிற்கு(ம்)எனது) அறிவுருவில் நிலையாய் நிற்பேன்**
**உத்தவா(று) ஏதுவரும் அதுவருக என்(று)அழுந்தி ஒருமை ஆனான்.**

**பொழிப்புரை:** *தூய சித்து வடிவமாம் என் உருவத்தைத் தவிர வேறு ஒன்றும் தோன்றக் கண்டிலேன். கிடைக்காத பொருளின் மீது வாடி யான் ஆசை வைக்க மாட்டேன். வந்த பொருள் எதுவாயினும் ஏற்றுக் கொள்வேன். அழியாததாய் எனது இயல்பு நிலையில் நிற்கும் எனது சித்து சொரூபத்தில் நிலைபெறுவேன். எது கிடைக்கப் பெறுமோ அது கிடைக்கட்டும் என்று அழுத்தமாய் ஏகம் ஆனான்.* **(5.1.31)**

**வா(ன்)ஏகு கதிர்இரவி நாள்இயற்றும் வாறென்ன வந்து வந்து**
**தானேதோன் றியதொழிலைப் பற்றின்றி செய்து(ம்)எனச் சனகன் எண்ணித்**
**தீனேய வருகாலம் செல்காலம் இமையளவும் சிந்தை செய்யான்**
**ஊனேறு நிகழ்காலத்(து) ஓர்இமைப்பின் நகைதலோ(டு) உலாவ லுற்றான்.**

**பொழிப்புரை:** *வானில் பரவிய ஒளிக்கிரணங்கள் உடைய சூரியன் விருப்பு வெறுப்பு இன்றித் தினமும் செய்யும் முறையினைப் போல, வினை வசத்தால் தானே வந்து வந்து பொருந்தும் தொழில்களைப் பற்று இன்றிச் செய்வோம் என்று சனக மன்னன் சிந்தித்து, அனுபவிக்கும்படியாக வரும்காலம், கடந்த காலம் இமைக்கின்ற பொழுது கூடச் சிந்திக்காமல், தேக சம்பந்தமான நிகழ்கால கணத்தில் புன்னைகையோடு செய்வான் ஆயினான். (வருவதை எண்ணுவதும் இல்லை, சென்றதைச் சிந்திப்பதும் இல்லை, நிகழ்கால கணத்தில் தானே வந்த செயலைச் செய்தான்)* **(5.1.32)**

**பேசியதன் விசாரத்தால் சனகர்பிரான் பெரும்பேறு பெற்ற(து) அல்லால்**
**வாசியுள மற்றொன்றால் வந்த(து)அல்ல வாரீச மலர்க்கண் மாலே**
**ஆ(சு)இலதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தால் அடைவ(து) அல்லால்**
**தேசிக(ர்)இல் லாவீணர் செய்தொழிலால் பெறலாமோ சிற்சொ ரூபம்.**

**பொழிப்புரை:** *கூறிய தனது விசாரத்தால் சனக மன்னன் மிகப்பெரிய பலன் அடைந்ததே அன்றி நன்மையைத் தரக்கூடிய மற்றொன்றினால் அடைந்தது அல்ல. தாமரை இதழ் போன்ற கண்களை உடைய இராகவ! குற்றம் அற்றதாய் சிறப்புற்றதாய் தன்னுடையதான விசாரத்தால் அடையப் பெறுமே அன்றி ஆசிரியர் இல்லாத நீசர் செய்யும் செயல்களினால் சித் சொரூபம் அடையப் பெறுமோ?* **(5.1.33)**



*(பிரக்ஞையினால் அடைய வேண்டியதாய் பிரம்ம பதம் அடையப் பெறுவதற் காக தொடக்கத்தில்இருந்தே அந்தப் பிரக்ஞையை வளர்க்கவே பிற முயற்சி களையும் உபயோகிக்க வேண்டும் என்று கூறுகின்றார்.)*

**புறப்பேறு களைவேண்டி இயற்றுகின்ற புண்ணியத்தைப் புவியில் உள்ளோர்**
**சிறப்பான நல்லறிவு மிகவேண்டும் என்றுமுதல் செய்யில் பேறாம்**
**இறப்பான ஆபத்து விளைநிலமாய் இருந்துதுயர் வேலை யாகிப்**
**பிறப்பான நச்சுமர வித்தாகும் பேதைமையைப் பிளக்க வேண்டும்.**

**பொழிப்புரை:** *மக்களால் வெளியில் உள்ள பொருள் தேடுவதில் எத்துணை முயற்சி செய்யப் படுகின்றதோ அந்த முயற்சி முமுட்சுகளால் ஆதிகாலம் தொட்டே சிறப்பான மிக நல்ல பிரக்ஞை உண்டாகி வளர வேண்டும் என்று செய்தால் நல்ல பிரயோசனம் உண்டாகும். பெரும் துன்பத்தைத் தருகின்ற ஆபத்துகள் எல்லாம் உண்டாகும் பூமியாகத் திடமுடன் நிலைத்துத் துயரம் என்னும் கடலாகி சம்சாரம் என்னும் விஷ மரத்திற்கு விதையாகும் அந்த அஞ்ஞானத்தை நாசம் செய்ய வேண்டும்.* **(5.1.34)**

**இலங்கியசிந் தாமணியாம் இதய(ம்)எனும் சரக்(கு)அறையில் இருக்கும் போதம்**
**கலங்க(ல்)இலா விவேகியர்க்குக் கருதுபொருள் கற்பகம்போல் கணத்தில் நல்கும்**
**துலங்குவிசா ரம்படைத்துப் பேதைமைபோய் நல்லறிவு தோன்றி னோரை**
**விலங்குகவ சத்தோரை அம்புகள்போல் காமாதி விகற்பம் தாக்கா.**

**பொழிப்புரை:** *சிறப்புற்று விளங்குகின்ற சிந்தாமணியாகிய இருதயம் என்னும் அறையில் இருக்கும் பிரக்ஞையானது விட்சேபங்கள் இல்லாத விவேகியர்களுக்கு சிந்தித்த பலத்தைக் கொடுக்கும் கற்பக மரம் போல் கணப்பொழுதில் அளிக்கும். விளங்குகின்ற விசாரம் மேம்பட்டு, அஞ்ஞானம் அகன்று, உயர் ஞானம் அடைந்தவரை, காக்கின்ற கவசம் உடையவரை அம்புகள் தாக்காதது போலக் காமம் முதலிய விகற்பங்கள் தாக்காது.* **(5.1.35)**

**பரமாதித் தனைமறைத்துக் கறுத்(து)அறிவற் றுக்களித்துப் படர்ந்து மீண்டு**
**திரமான அகங்கார முகில்விவேகக் காற்றால் சிதறிப் போகும்**
**வரமான பதம்வேண்டில் தன்மனத்தில் ஆசைமுதல் மாற்ற வேண்டும்**
**உரமான புவியைமுதல் உழுதன்றோ விளைபயன்கள் உறுகின் றாரே.**

**பொழிப்புரை:** *பரமான்ம வடிவ சூரியனை மறைத்து, இருண்டு, சடமாய், களித்து, படர்ந்து, மீண்டு பழகப் பழகத் திடப்பட்டுக் கொண்டே வருகின்ற அகங்கார மேகம் (பிரக்ஞை வடிவ) விவேகம் என்னும் காற்றினால் சிதறிப் போகும். மேலான பரமான்ம பதத்தை அடைய விரும்பினால் தன் மனதில் உள்ள ஆசையை முதலில் மீண்டும் வராத படி நீக்க வேண்டும். கடினமான நிலத்தினை முதலில் உழுது அதனால் அல்லவோ பயிர்விளைகின்ற பயன்களைப் பெறுகின்றார்.* **(5.1.36)**

**(உபசாந்திப் பிரகரணத்தில் சனகர் கதை முற்றும்)**

# (ii) புண்ணிய பாவனர் கதை

*முன்பு ஆகாச கனி வீழ்வது போல தெய்வ கதியால் பெற்ற சித்தர் பாடலின் சிரவணத்தினால் சனக மன்னனுக்கு சித்த உபசாந்தி சொல்லப்பட்டது. இப்போது புண்ணிய பாவனர் கதையால் பரமாத்மாவைச் சுயம் பார்த்த போதே எல்லா துக்க திருஷ்டிகளும் அழிந்து போம் என்று சொல்லப்படுகிறது. மேலும் முன்பு சென்ற அனேக பிறவிகளின் சிந்தனை வசத்தால் சித்திக்கும் ஆன்ம ஞானத்தினால் சித்தத்தின் உபசமம் இக்கதையில் சொல்லப்படுகிறது. முதலில் சித்த உபசம உபாயங்களை உபதேசிக்கிறார்.*

**(விருத்தப்பா)**

**மோக வற்சநா பிக்கொடி முளைத்(து)எழு மூலம்**
**சோக மாசுணம் இருந்(து)அர(சு) ஆள்வதோர் சூழல்**
**ஆக மேமுதல் யான்எனக் காணு(ம்)அஞ் ஞானம்**
**ஏகம் ஆகிய பராபரம் தோன்றினால் இறக்கும்.**

**பொழிப்புரை:** *தேகம் முதலியவற்றையும் நான் எனக் காணும் அஞ்ஞானமானது மோகம் என்ற விஷ வல்லிக் கொடி உண்டாகி வளர்வதற்குக் காரணமாகவும், சோகமாகிய பாம்பானது இருந்து அரசாள்வதான ஒப்பற்ற புதராகிய சிம்மாசனமும் ஆகும். அத்வைதமாகிய பராபர வஸ்துவின் நேரடி தரிசனம் உண்டானால் இதயத்தில் உள்ள கிரந்திகள் (அகந்தை மமதை முதலான முடிச்சுகள்), அனைத்து சந்தேகங்கள், அனைத்துக் கருமங்களும் நாசமாகும்.* **(5.2.1)**

**அநித்தம் இச்சகம் என்பதை நாள்தொறும் அகத்தில்**
**நுனித்து நோக்கினர் சனகனைப் போலநுண் அறிவால்**
**தனித்த மெய்ப்பொருள் பக்குவத்(து) அறிகுவர் தனத்தால்**
**மனித்த ரால்கரு மத்தினால் தேவரால் வாரா.**

**பொழிப்புரை:** *சனக மன்னனைப் போல பெயர், வடிவ மயமான இந்தப் பிரபஞ்சம் அநித்தியம் (நிரந்தரம் ஆனதல்ல) என்பதை நாள்தோறும் உள்ளத்தில் சூக்குமமாக ஆராய்ந்து பார்த்தவர் கேவலமாயும் சத்தியமாயும் உள்ள ஆத்மாவை நிரந்தரம் ஆராய்ச்சி செய்யும் பக்குவத்தால் அறிவர். பொருள்களாலும், மனிதர்களாலும், கருமங்களாலும், தேவர்களாலும் ஆன்ம ஞானம் பெற வராது.* **(5.2.2)**

**சனனம் அஞ்சினர்க்(கு) அவருடை முயற்சியே சரணாம்**
**தினமும் இங்(கு)இவன் நான்எனும் சிறுமைதான் சிதையில்**
**அனக மாய்உல(கு) எங்குமாம் விசால(ம்)உண் டாகும்**
**மனனு றத்தன(து) உயர்ச்சிதான் காண்புற வருமால்.**

**பொழிப்புரை:** *பிறப்பு இறப்புக்கு அஞ்சியவர்களுக்கு அவருடைய முயற்சியே அடைக்கலமாம். தினமும் இவ்விடத்தில் இவன் நான் எனும் அகங்காரம் நாசமானால், பவித்திரமாய் உலகம் முழுதும் வியாபித்திருக்கின்ற விசாலமான ஞானம் உண்டாம். உள்ளத்தில் பொருந்தும் உயர்வானது காணும் படியாகத் தோற்றும்.* **(5.2.3)**

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

**பற்றுவீ(டு) என்(று)இ ரண்டில் பற்றலும் விடுதல் தானும்**
**உற்றவை மனத்து ரூபம் உயர்பந்தம் அதுவே றில்லை**
**முற்றுறு பற்று வீட்டின் மோகமும் துயரும் விட்டுத்**
**துற்றுள பற்று வீடு துடைத்(து)அசை யாது நிற்பாய்.**

**பொழிப்புரை:** *கொள்ளத்தக்கது, தள்ளத் தக்கது என்ற இரண்டில், அவிவேகத்தால் (மோகத்தால்) நல்லது என்று கொள்ளுதலும், தீயது என்று தள்ளுதலும் பொருந்தியவை மனதின் வடிவமாம். பற்றுதல் தள்ளுதல் வடிவ மனமே பெரிய பந்தமாம். (பந்தத்தைத் தருவது) அயலாக ஒன்று இல்லை. வாசனை அதிகரிக்கச் செய்யும் கொள்ளுதல் தள்ளுதல் இவற்றின் மோகமும் அதனால் ஆன துன்பத்தையும் ஓடச் செய்து, உள்ளத்தில் பொருந்தியுள்ள கொள்ளத்தக்க தள்ளத்தக்க பொருளின் வாசனையையும் போக்கி எஞ்சி நிற்கும் தனது சொரூபத்தில் சம திருஷ்டியோடு அசையாமல் நிற்பாய்.* **(5.2.4)**

**மயல்இன்மை அநித்தம் இன்மை மடம்இன்மை வருத்தம் இன்மை**
**செயல்இன்மை கருமம் இன்மை தியக்(கு)இன்மை விகற்பம் இன்மை**
**பயம்இன்மை துவட்சி இன்மை பகைஇன்மை குறைஒன்(று) இன்மை**
**கயம்இன்மை கடினம் இன்மை கடினமாய்க் கழறல் இன்மை.**

**பொழிப்புரை:** *இது எனக்கு வரவேண்டும் என்ற விஷயத்தில் மயல் இல்லாமை (விஷய நிவர்த்தி), அனித்தமாக இல்லாத ஆன்ம பாவமும், பரிபூரண ஞான திருஷ்டி நிட்டையும், துயர் இல்லாமையும் (மகிழ்ச்சியும்), பற்றுதலுக்கு உரியதில் ஈடுபாடு இல்லாமை, பலன் நோக்கும் கருமம் செய்யாமை, சஞ்சலத் தன்மை இல்லாமை, மன ஒருமைப்பாடு, பிராணிகளிடமிருந்து பயம் இல்லாமை, பிறர்களோடு வாதிடாத தன்மை, பிறரிடத்து நட்பாய் இருத்தல், கிடைத்ததில் திருப்தி, கீழ்த்தரமாக இல்லாமை, மிருதுத் தன்மை, பிரியமாகப் பேசுதல். (ஆக 15)* **(5.2.5)**

**வீடுபற்(று) இரண்டும் நீத்த மேலவர் இடத்து மேவி**
**நீடுவா தனைகள் இன்றி நிகழ்த்திய குணங்கள் நிற்கும்**
**பீடுறு நினைவாம் நூலால் பிணிப்(பு)உற்றுப் பிறவி வேலை**
**ஊடுற மயல்மீன் வாரும் உயர்ந்தவா தனையாம் சாலம்.**

**பொழிப்புரை:** *மேலே கூறப்பட்ட குணங்கள் தள்ளத் தக்க, கொள்ளத் தக்க பொருள்களின் ஆசையை ஒழித்த சமமான பார்வை உடையவரிடம் பொருந்தி வாசனை, வாசனையின் விதையாகிய அறியாமையும் அழிந்து போனதால் நிலையாக இருக்கும். வாசனை என்பது தன்னைப் பெருமையாகக் கருதும் எண்ணங்களாகிய நூலினால் பிணிக்கப்பட்டுப் பிறவிக் கடலில் பொருந்த மயக்கம் என்னும் மீன்களைப் பிடிக்கின்ற பெரியதாகிய வலையாகும்.* **(5.2.6)**

**வாதனை என்னும் இந்த வலைபுந்தி வாளால் ஈர்ந்து**
**மோதுசூ றைக்கால் சிந்து முகில்எனச் சிந்தி நிற்பாய்**
**பாதவம் குடாரத் தாலே படுப்பபோல் நெஞ்சை நெஞ்சால்**
**தீதற மாய்த்து மேலாம் பதத்திலே திரமாய் நிற்பாய்.**

**பொழிப்புரை:** *வாசனை என்று சொல்லப்பட்ட இந்த வலையைப் புத்தி என்ற வாளினால் அறுத்து, மோதி அடிக்கின்ற பெரும் காற்று சிதறடிக்கும் மேகம் என்னச் சின்னா பின்னப்படுத்தி விடுவாய். மரமானது (மரக்கட்டை பொருத்தப்பட்ட) கோடரியால் வெட்டப்படுவது போல மனதை மனதால் களங்கம் அறக் கெடுத்து மேலான பதத்தில் அதிதிடமாய் நிலைத்து நிற்பாய்.* **(5.2.7)**

**ஏகுதல் வருதல் துஞ்சல் விழித்திடல் இருத்தல் நிற்றல்**
**ஆகிய எல்லாம் பொய்யென்(று) அழுந்திஉள் ஆசை தீர்வாய்**
**சேகுற அலையும் சித்தம் பகுதியால் சித்தின் பின்னே**
**போக(ல்)ஊன் மணத்தால் சிங்கம் தனைத்தொடர் பூசை போலாம்.**

**பொழிப்புரை:** *செல்வதும், திரும்பி வருவதும், உறங்குவதும், விழிப்பதும், இருப்பதும், எழுந்து நிற்பதும் ஆகிய எல்லாம் ஆன்மாவிற்கு அன்னியமானதால் மித்தை என்று அழுத்தமாக உணர்ந்து உள்ளே ஆசை தீர்வாய். மிகவும் சஞ்சலமாகி அலைகின்ற சித்தமானது பிரகிருதியால் கூடத் தன்மையால் சிற்சொரூபத்தைத் தொடர்ந்து விஷயங்களில் செல்லுதல், மாமிச வாசனையால் சிங்கத்தைப் பின் தொடர்ந்து செல்கின்ற பூனை போன்றதாம்.* **(5.2.8)**

**மடங்கல்வீ ரியத்தால் பெற்ற தசைதின்னும் மார்ச்சா லம்போல்**
**தொடர்ந்துசெல் மனனும் சித்தால் தோன்றிய பொருளைப் பற்றும்**
**படர்ந்துகாண் பவற்றைப் பற்றில் மனம்கெடாப் பந்தம் போகாத்**
**திடங்கொள்காண் பவற்றை நீக்கில் சித்தம்போய் முத்தி ஆகும்.**

**பொழிப்புரை:** *சிங்கத்தின் பலத்தால் கிடைத்த மாமிசத்தை உண்ணும் பூனை போல, அறிவைப் பின்பற்றும் மனமும் அறிவால் விளக்கமுறும் தன்னையும் (தேகத்தையும்) விஷயங்களையும் பற்றும். பெயர் உருவமாக விரிந்து தோன்றும் காண்கின்ற விஷயங்களைப் பாவித்து அவற்றைச் சார்ந்து விடும் மனமானது இறந்து போகாது. பந்தமும் போகாது. திடமாக இருந்து காண்பவற்றில் இருந்து மனதை நீக்கினால், மனம் இறந்து முத்தி உண்டாகும். (பற்றப் பற்றப் பந்தமே ஆம். விட்டுத் தொலைத்தால் வீடே விளையும்.)* **(5.2.9)**

**யான்இவை இரண்டும் இல்லென்று எண்ணிமே ருவைப்போல் நிற்பாய்**
**ஊன்நிறம் இல்லா விண்போல் உளத்தனாய் நல்லு ளத்தே**
**தானும்வை யமுமாய்க் காண்பான் காண்பன தம்மின் ஊடே**
**மேல்நிகழ் காட்சி என்னும் நின்னைநீ விடாது தேர்வாய்.**

**பொழிப்புரை:** *யான் (உள்பார்வை) இவை (வெளிப்பார்வை) என்னும் இரண்டும் இல்லை என்று சிந்தித்து மேரு மலையைப் போல் அசையாது நிற்பாய். உருவமும் நிறமும் இல்லாத ஆகாயம் போல உள்ளம் உடையவனாய், நல்ல உள்ளத்தே ஆன்மாவுக்கும் சகத்துக்கும் மத்தியமாய், காண்பான் காணப்படும் பொருள் இவற்றின் ஊடே அதிட்டானமாக விளங்கும் காட்சி என்னும் நின்வடிவமாம் ஆன்மாவை எப்போதும் பாவித்துச் சுகமாவாய்.* **(5.2.10)**

இனியன இனிமை கொள்வான் இரண்டுவிட்(டு) இவற்றின் ஊடே
தனிநிகழ் இனிமை நாடித் தற்பர மயமாய் நிற்பாய்
நனிபல துய்ப்பான் துய்ப்ப(து) இரண்டுக்கும் நடுவே தானே
அனிசம்பற்(று) இன்றி நிற்கும் அதுபற்றி அதனுள் நிற்பாய்.

**பொழிப்புரை:** *சுவை தரும் பொருள்களும், சுவையைக் கொள்பவனும் ஆகிய இவற்றின் மத்தியில் இருப்பதாய், அந்தக் கர்த்தா கருமங்களோடு கூடாததாய், கேவலம் அனுபவ ரூபமாய் விளங்கும் பொருளை நாடிப் பரமான்ம மயமாய் நிற்பாய். அனுபவிப்பவனும், அனுபவித்தற்கு உரிய பொருள்களும் ஆகிய இரண்டுக்கும் நடுவில் சுயமாய் எப்பொழுதும் பற்றின்றி இருக்கும் அனுபவ ரூபத்தைப் பற்றி அதன் மத்தியில் நிற்பாய்.* **(5.2.11)**

காதலால் கட்டில் உய்யார் கயிற்றினால் கட்டில் உய்வர்
ஆதலால் ஆசைக் கட்டை அசங்கற்பத்(து) அறுப்பாய் நான்என்(று)
ஓதுபா வனையை நான்என் னாததோர் வாளால் வீட்டி
ஏத(ம்)இல் சுபாவம் பாவித்(து) எழுபவம் இலாவீ(டு) எய்தி.

**பொழிப்புரை:** *ஆசை என்னும் கட்டில் கட்டுப்படுபவர் (பந்தம் அடைபவர்) விடுபடார். கயிற்றினால் கட்டுப்படுபவர் விடுபடுவர். ஆதலால் ஆசையாகிய கட்டினைச் சங்கற்பம் இல்லாமையாலே அறுப்பாய். நான் என்று சொல்லப்பட்ட பாவனையை நான் இல்லாத ஒரு வாளால் வீழ்த்தி, குற்றமில்லாத உன்னுடைய சுபாவத்தை* (*இயல்பான வடிவத்தை*)*ப் பாவித்து பிறவியில்லாத முத்தி அடைவாய்.* **(5.2.12)**

அனைத்(து)உயிர்க்(கு) அச்சம் இல்லா நிலைநிற்பாய் அதுல வென்ன
வினைத்தொடர் அகம்பா வத்தின் வேட்கைதீர் என்ற நின்சொல்
நினைத்திடில் மிகவும் ஆழம் நீ(டு)அகங் கார நாசம்
தனைச்செயில் உடலம் என்னும் ஏதுவைத் தவிர்க்கின் றேனால்.

**பொழிப்புரை:** *ஒப்பற்ற இராகவ! கருணை உடைய நீ எந்தப் பிராணிக்கும் பயத்தை உண்டாக்காமலும், எந்தப் பிராணிக்கும் பயப்படாமலும் உனது இயல்பு நிலையில் நிற்பாய் என்று அருளிச் செய்த போது, (இராம பிரான்) "கருமங்களில் சம்பந்தப் படுத்தும் அகங்காரத்தினால் ஆன ஆசையைக் கவராதே என்று உபதேசித்த தேவரீர் வசனம் சிந்தித்து நோக்கினால், மிகவும் ஆழம் உடையதாக இருக்கிறது. நீண்ட அகங்காரத்தை நாசம் செய்தால் தேகத்தைத் தியாகம் செய்தவன் ஆகிறேன்." (தேக பந்தத்துக்கு அகங்காரமே மூலம். அதனால் அகங்காரத்தைத் தியாகம் செய்தால் தேகத் தியாகமே ஆகும் என்பது பொருள்)* **(5.2.13)**

அகமென ஒழிக்கில் தானே அங்கமும் அடியில் ஈர்ந்த
நகமென இறக்கும் அன்றே என்(று)உயர் நாதன் கூற
மகமுனி உரைப்பான் வள்ளால் வாதனை மாற்றும் ஆறு
நிகழ்வுறு தேய ஞேயம் இரண்டென நினைப்பர் கற்றோர்.

**பொழிப்புரை:** "*அகம்பாவத்தை அகற்றி விட்டால் தானாகவே, மூலத்தில் வெட்டப்பட்ட மரமானது கெட்டுப் போகும் அல்லவா!*" *என்று உயர்வுடைய இராம*

*பிரான் கூறவும், பல யாகங்களைச் செய்தவரான வசிட்ட முனி கூறுவதாவது-வள்ளலே! வாசனையை மாற்றுகின்ற வழியாக தேயத் (தியேயத்) தியாகம், ஞேயத் தியாகம் என இரண்டு உளது என்று கருதுவர் கற்ற பெரியோர்.* **(5.2.14)**



*வாசனா தியாகம் ஞேயம், தேயம் (தியேயம்) என்று இரண்டு வகை எனக் கூறியதில் இப்போது தேயம் குறித்து விளக்கப்படுகிறது...*

**இந்தநம் பொருட்கு வாழ்நாள் யாம்இவை எமக்கு வாழ்நாள்**
**நந்துறும் இவற்றால் அன்றி நாம்இல்லை நம்மால் அன்றி**
**வந்தஇப் பொருள்கள் இல்லை எனும்மனத்(து) உறுதி மாற்றிப்**
**புந்தியால் உசாவி யாமும் பொருள்களும் வெவ்வே(று) என்றே.**

**பொழிப்புரை:** *(ஆன்மாவுக்கு அன்னியமாக பிரத்தியட்சமாய் உள்ள) இந்த பொருள்களின் (மனைவி, புத்திரர் உள்பட) வாழ்வுக்கு யாம், இந்த பொருள்கள் நம்முடைய வாழ்வுக்கு என்பதால் ஒன்றுக்கு ஒன்று வளர்ச்சி அடையும் இவை இல்லாமல் நாம் இல்லை, நாம் இல்லாமல் வந்த இந்தப் பொருள்கள் இல்லை என்பதான மனதின் உறுதியை மாற்றி விவேக புத்தியால் விசாரித்து நாமும் இந்தப் பொருள்களும் வேறு வேறு என்றே.* **(5.2.15)**

**பொருளினோம் அல்ல நாமும் நம(து)அல்ல பொருளும் என்றே**
**தெரு(ள்)உற்(று)உள் குளிர்ந்து யாவும் விநோதமாய்ச் செய்யும் நெஞ்சால்**
**மரு(ள்)அறு நிச்ச யத்தால் வாதனை விடுதல் தானே**
**அருள்பொழி மேகம் ஒப்பாய் தேய(ம்)என்(று) அறிவாய் அன்றே.**

**பொழிப்புரை:** *யாமும் பொருள் மயம் அல்ல, இந்தப் பொருள்களும் எமது அல்ல (அதாவது பொருளுக்காக யாம் இல்லை, பொருள்களும் நமக்காக இல்லை, நம்முடையதும் இல்லை) என்பதாக உள்ளே குளிர்ந்து, பாதிக்கப்பட்ட பின்பும் தொடர்கின்ற (பாதிதாநு = பாதித அநு) விருத்தியாலே தோற்றுகின்ற மேற்கூறிய எல்லாக் காரியங்களையும் விளையாட்டாகச் (லீலையாகச்) செய்யும் மனத்தினாலே சந்தேகம் மயக்கம் அற்று திட நிச்சயத்தால் வாசனையைத் தியாகம் செய்தலே கருணை மழையைப் பொழிகின்ற மேகம் போன்ற இராகவ! தேயத் தியாகம் என்று அறிந்து கொள்வாய்.* **(5.2.16)**



*இனி ஞேய வாசனாத் தியாக இலக்கணம் கூறப்படுகிறது...*

**தனதுவா தனைமாண்(டு) எல்லாம் சமமதாம் நெஞ்சால் பண்ணி**
**என(து)எனா(து) உடலை நீக்கின் இந்தவா சனைநா சம்தான்**
**அனகமா ஞேயம் ஆகும் அகங்கர மயம தான**
**வினவுவா தனையை முற்றும் விநோதமாய் விட்டோர் மேலோர்.**

**பொழிப்புரை:** *தன்னுடைய வாசனையை அழித்து, எல்லாவற்றையும் சமமாக உணர்ந்து, (மூன்று) தேகத்தையும் என்னுடையது என்று எண்ணுவதை அகற்றினால் இந்த வாசனை நாசம் தான் பாவமற்ற பரிசுத்த இராகவ! பெரிய ஞேயம் ஆகும். அகங்கார மயமான, விசாரித்துத் தள்ளத் தக்கதாய வாசனையை முழுவதுமாக (அடியோடும்) லீலையினாலேயே விடுத்தவர் சீவன் முத்தர் ஆவர்.* **(5.2.17)**



*கூறிய தியாகம் இரண்டினையும் சீவன் முத்தர் விதேக முத்தர் இடத்தில் பொருத்துகின்றார்...*

**தீரராம் அவரே தேயத் தியாகம்செய் சீவன் முத்தர்**
**வேற்)அறத் தொழில்க ளோடே வாதனை விட்டு)உள் ளாறித்**
**தூரமா ஞேயம் விட்டோர் துகள்அறு முத்த ராகும்**
**வீரனே இவைஇ ரண்டின் விடுதியும் தம்மில் ஒக்கும்.**

**பொழிப்புரை:** *அகங்காரத்தை ஒழித்த தீரரே தேயத் தியாகம் செய்த சீவன் முத்தர். மிச்சம் இன்றி நிர்மூலமாகத் தொழில்களுடன் வாசனையையும் விட்டு உள்ளே சாந்தி (சமம்) அடைந்தவரே ஞேயத்தை வெகுதூரத்தில் விட்டவரே குற்றமற்ற விதேக முத்தர் ஆகும். வீரத்தை உடையவனே! இந்த தேய-ஞேய தியாகங்கள் இரண்டுமே ஒன்றோடு ஒன்று ஒப்பானதே. (இரண்டும் சம அந்தஸ்து உடையதே)* **(5.2.18)**

**(வேறு)**

**தேய ஞேயத்தின் தியாகங்கள் முத்தர்பால் செறிவ**
**தேய ஞேயத்தின் தியாகங்கள் பிரமத்தைச் சேர்ந்த**
**தேய ஞேயத்தின் தியாகங்கள் இடர்எலாம் தீர்ந்த**
**தேய ஞேயத்தின் தியாகங்கள் தேடரும் செல்வம்.**

**பொழிப்புரை:** *தேய ஞேயத் தியாகங்கள் இரண்டும் முத்தர்களிடத்தில் இருப்பனவாம். தேய ஞேயத் தியாகங்கள் இரண்டும் பிரம்மத் தன்மையைச் சேர்ந்தனவாம். தேய ஞேயத் தியாகங்கள் இரண்டும் சகல துக்கங்களும் தீர்ந்தனவாம். தேய ஞேயத் தியாகங்கள் இரண்டும் தேடிக் கிடைத்தற்கரிய செல்வமாம்.* **(5.2.19)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**சூழுறும் இன்ப துன்பம் தொடர்வுறில் ஒருகா லத்தும்**
**ஆழுதல் மிதத்தல் இல்லா அவர்களே சீவன் முத்தர்**
**கேழ்உயர் மகிழ்ச்சி அச்சம் சினம்இன்மை பொறாமை கேதம்**
**ஊழ்உறும் இவற்றை நோக்கா உளத்தினர் சீவன் முத்தர்.**

**பொழிப்புரை:** *(சீவன் முத்தர் இலக்கணம் கூறல்) நுகர்கின்ற வினை வசத்தால் ஒன்றன் பின் ஒன்றாய்ச் சூழ்ந்த சுக துக்கங்கள் வந்து கொண்டே இருப்பினும் எப்போதும் வாட்டம், மகிழ்ச்சி அடையாத அவர்களே சிறப்பான குணங்களை உடைய சீவன்*

*முத்தர். பிராரப்தத்தால் வந்தடைந்த மிகுதியான மகிழ்ச்சி, பயம், சினம் இல்லாமை, பொறாமை, துயரம் இவற்றுக்கு முக்கியத்துவம் தராத (கண்டு கொள்ளாத) உள்ளத்தை உடையவர் சீவன் முத்தர்.* **(5.2.20)**

**சுழுத்திபோல் ஆறி நின்ற பாவனைத் தொழிலி னாலே**
**பழுத்தநெஞ்(சு) அதனால் நீங்காச் சாக்கிரம் பயில்வோர் நாளும்**
**விழுத்தகு கலைகள் சூழ்ந்த மதியென மேலோர் மேவ**
**முழுத்தமும் பிரிவி லோரே முத்த(ர்)என்(று) உரைக்கத் தக்கோர்.**

**பொழிப்புரை:** *சாக்கிர (விழிப்பு) அவத்தையில் சுழுத்தி (ஆழ்துயில்) அவத்தையில் இருப்பவன் (நனவில் சுழுத்தி) போல் சந்தோஷ துயரம் முதலியவற்றிலிருந்து நிவர்த்தியாகி இருக்கும் பாவ விருத்தியால் பரிபக்குவ மனத்தோடு கூடினவராய் விவகாரம் செய்பவர் இயற்கையாய மகிழ்ச்சியினால் பூரண கலைகளை உடைய சந்திரனைப் போல சேவிக்கப் பெறுபவர், ஒவ்வொரு கணமும் பிரிவுபடாதவர் அவரே சீவன் முத்தர் என்று சொல்வதற்குத் தகுதி வாய்ந்தவர்.* **(5.2.21)**

**புறப்பொருள் விட்டால் உள்ளே பூண்டமால் என்று சொல்வர்**
**மறப்பற அனைத்தும் விட்டால் மாண்டமால் என்று சொல்வர்**
**திறப்பட எனக்(கு)ஈ(து) ஆக என்(று)எழும் சிந்தை ஆசை**
**துறப்(பு)இல்பொன் விலங்காம் இத்தைத் துவக்கறத் துடைத்தல் வேண்டும்.**

**பொழிப்புரை:** *வெளிப்பொருள்களில் உள்ள வாசனை மாத்திரம் விட்டால் உள்ளே பற்றிய ஆசை என்பர். மறக்காமல் எல்லாவற்றையும் விட்டால் இறந்த இச்சை (மோட்சத்திற்கான இச்சை) என்று சொல்வர். திடமாக எனக்கு இவ்விதமாக இது உண்டாகுக என்று எழும்பும் பாவனையாகிய ஆசையே விட முடியாத தங்கத்தினால் செய்யப்பட்ட விலங்காம். இதனை அடியோடு கெடுத்தல் வேண்டும்.* **(5.2.22)**

**சத்(து)அசத்(து) என்னப் பட்ட சகலபா வனையில் என்றும்**
**கொத்தற ஆசை மாற்றிக் குறை(வு)இல்பேர் உளத்தன் ஆகிச்**
**சுத்தநல் உதார மான சொரூபத்தில் நிற்பாய் பெத்த**
**முத்தமாம் ஆசை இன்ப துன்பங்கள் முழுதும் நீக்கி.**

**பொழிப்புரை:** *உள்ளது இல்லது என்று சொல்லப்பட்ட எல்லாப் பாவனைகளில் இருந்தும் உள்ள அளவற்ற ஆசைகளை அடியோடு கெடுத்து, குறைவது இல்லாத மேன்மை உடைய மனம் உடையவனாகி, தூய பரமானந்தம் அளிக்கின்ற பெருமை உடைய நின்னுடைய சொரூபத்தில் (வடிவத்தில்) நிலைத்து நிற்பாய். பந்த-மோட்ச இச்சை, இன்பம்-துன்பம் எல்லாவற்றையும் விடுத்து நிற்பாய்.* **(5.2.23)**

**பேனமும் திரையும் இல்லாப் பெருங்கடல் போல நிற்பாய்**
**மானவ கேள்மற் றொன்று மாசிலா விசாரம் உள்ளோர்க்(கு)**
**ஆனநிச் சயம்நா லுண்டாம் அடிதலை மட்டும் நானே**
**ஈனலுற் றவர்தாய் தந்தை என்பதோர் அறுதி தானே.**

**பொழிப்புரை:** *அலையும் நுரையும் இல்லாத பெரிய கடல் போல அமர்ந்திருப்பாய். பெருமையுடைய இராகவ! மற்றொன்று சொல்லக் கேட்பாய். குற்றம் இல்லாத விசாரம் உள்ளவர்களுக்கு உண்டாகும் நிச்சயங்கள் நான்கு உள்ளனவாம். பாதம் முதல் தலை வரை மட்டுமே நான், என்னைப் பெற்றெடுத்தவர் தாய் தந்தையும் ஆவர் என்னும் ஒரு நிச்சயம் அனேக பிறவிப் பழக்கத்தால் தானாகவே உண்டாவது ஆகும்.* **(5.2.24)**

**கன்றிய பந்த மாகும் இதுமெய்ம்மை கருதா வற்றால்**
**நின்றன அனைத்தின் மேலோன் நெல்லின்வா லினும்சற் றேநான்**
**என்(று)இரண் டாவ தான நிச்சயம் எய்தும் என்னில்**
**ஒன்றிய முத்தி உண்டாம் உத்தமர்க்(கு) உடைமை யாகும்.**

**பொழிப்புரை:** *(முன் கூறிய) தேகம் நான் என்ற அகங்காரம் யதார்த்தத்தை அறியாத படியால் துன்புறுத்துகின்ற பந்தம் ஆகும். பெயர் வடிவமாக விரிந்து நின்ற அனைத்தையும் கடந்தவனான நான், நெல் வாலின் நுனியைக் காட்டிலும் சூக்குமம் உடையவன் என்னும் இரண்டாவது நிச்சயம் உண்டாகுமாயின் ஆனந்தம் நிறைந்த மோட்சம் உண்டாம். இது சத்புருடர்க்குப் பாக்கியமாம். (அனைத்தையும் கடந்த பரம சூக்குமன் யான் என்பது இரண்டாவது நிச்சயம்)* **(5.2.25)**

**புவியெலாம் எனது ரூபம் பொன்றுதல் இலன்நான் என்று**
**குவி(வு)அறக் காண்டல் மூன்றாம் நிச்சயம் குறை(வு)இல் வீடாம்**
**அவியுறும் உலகும் நானும் அனைத்தும்பொய் விண்போல் என்றும்**
**தவிர்கிலம் என்றல் நாலாம் நிச்சயம் தனிவீ டாகும்.**

**பொழிப்புரை:** *பிரபஞ்சம் எல்லாம் எனது வடிவம் நாசம் இல்லாதவன் யான் என்று எல்லை இன்றிப் பரிபூரணமாக நோக்குதல் மூன்றாவது நிச்சயமாம் பரிபூரண மோட்சத்தைத் தரவல்லதாம். (தன்மய திருஷ்டி). நாசம் அடையும் பிரபஞ்சமும், நானும், அனைத்தும் மித்தை. ஆகாயத்தைப் போல எப்பொழுதும் நாசமற்றவன் என்று இருத்தல் நான்காவது நிச்சயமாம். கேவலம் மோட்சமே பலமாக உடையதாம் (மித்தியா திருஷ்டி).* **(5.2.26)**

**பெத்தஆ சையதாம் முன்னே பேசும்நிச் சய(ம்)அ(து) ஒன்றும்**
**சுத்தஆ சைகளாம் மூன்றும் நொய்யவாய்த் துகள்இல் சீவன்**
**முத்தர்பால் விளங்கும் இந்த மூன்றினுள் எல்லாம் நான்என்(று)**
**ஒத்ததோர் நிச்ச யத்தை உறில்பின்னை உள்ளம் சோரா.**

**பொழிப்புரை:** *முதலில் உரைத்த தேகான்ம நிச்சயம் ஒன்று பந்தத்திற்குத் தகுதியான ஆசையாம். (பின்னால் உரைத்த) சுத்த ஆசைகளாம் மூன்றும் அதிசூக்குமம் உடையதாய் குற்றம் இல்லாத சீவன் முத்தரிடம் விளங்கும். இந்த மூன்றினுள் எல்லா வடிவமாய் இருப்பவன் யானே என்னும் சமமான பார்வை வடிவமான நிச்சயத்தை அடையப் பெற்றால் மறுபடியும் மனதில் வாட்டம் சேராது.* **(5.2.27)**

**சூனியம் பகுதி மாயை பிரமம்சிற் சோதி ஞானம்**
**ஈனமில் புருடன் ஆன்மா ஈசானன் சிவமே நித்தம்**
**ஆனவை என்ன லாம்ஒன்(று) இரண்(டு)எனும் அகல்பே தத்தால்**
**வானுயர் சகம்ப டைக்கும் வினோதத்தால் வளரும் அன்றே.**

**பொழிப்புரை:** *நிராகாரம் ஆவதால் சூனியம், உபாதான காரணம் ஆவதால் பகுதி, விட்சேபத்திற்குக் காரணமாவதால் மாயை. பெரிதுக்கு எல்லாம் பெரியதாய் இருப்பதால் பிரம்மம், சுத்தஞானமாய் இருப்பதால் சித்சோதி, விஞ்ஞானமாய் இருப்பதால் ஞானம், உயர்வுடையதாய் பூரித்தலால் புருடன், தனது சொரூபம் ஆவதால் ஆன்மா, எல்லாவற்றையும் இயக்குவதால் ஈசானன், மங்களமாக இருத்தலால் சிவம், நான்கு அபாவங்கள் (முன்னின்மை, பின்னின்மை, ஒன்று ஒன்றாகாமை, என்றும் இன்மை ஆகிய நான்கு அபாவங்கள் - இன்மைகள்) விடுபட்டு இருத்தலால் நித்தம் ஆகிய இவை யாவும் மதவாதங்களால் நிகழ்த்தப் பெறுவதாம்.*

*துவைத அத்வைதம் என்னும் வேற்றுமையாலே மேலான அத்வைதப் பிரம்மமே விவர்த்த ரூபத்தால் ஆகாயம் முதலான பிரபஞ்சத்தை லீலையாக எழுந்து படைத்து நிலைபெறச் செய்து வளர்வதாகும்.* **(5.2.28)**

**ஒன்றெனும் பரம ரூபத்(து) ஒருசத்தி ஒருமை யாலே**
**நின்(று)எழு கின்ற(து) அன்றே நின்னது பிறர(து) என்றும்**
**பொன்றிய(து) இருந்த(து) என்றும் பொருள்களில் கருமம் தன்னில்**
**என்று(ம்)இன் பத்துன் பங்கள் இதயத்தில் ஊன்ற வேண்டாம்.**

**பொழிப்புரை:** *அத்வைத பிரம்மத்தில் அறியாதவர் பொருட்டு ஒப்பற்ற தெய்வாம்ச சத்தி துவைத அத்வைத பேதங்களாய் இருந்து சிற்சொரூபத்திற்கு வேறாக ஆகாததாகவே எழுகின்றது அல்லவோ! (ஆகட்டும் இதனால் என்னவெனின்) (மனைவி மைந்தர் முதலியவர்) தன்னது எனவும், இவை பிறருடையது எனவும், நாசம் அடைந்தது எனவும், வாழ்ந்தது எனவும். பொருள்களிலும் கருமங்களிலும் எப்பொழுதும் இன்ப துன்பங்களை அழுத்தமாகப் பற்ற வேண்டாம்.* **(5.2.29)**

**யாதினும் உயர்ந்து மாளாப் பதம்பற்றி இதயம் என்றும்**
**சீதமாய் இன்ப துன்பம் சேர்கிலார் பிறப்பில் சேரார்**
**சாதுகொள் பகைகொள் ஒத்தல் தஞ்சம்வல் லபங்கள் உள்ளோர்**
**ஓதிய நெறியில் செல்லும் உத்தமர் பிறப்பில் சேரார்.**

**பொழிப்புரை:** *எல்லாவற்றினும் உயர்ந்ததான நித்தியமான பதத்தைப் பற்றி இதயம் என்றும் குளிர்ச்சியாய், இன்ப துன்பங்களில் மகிழ்ச்சி வாட்டம் அடையாதவர் மறுபிறப்புக்கான தளைகளில் சிக்கிக் கொள்ளமாட்டார். பகைவர்களிடத்தும் நண்பர்களிடத்தும் சமமான பார்வை உடையவராய், தயை இரக்கம் உடையவராய் சாத்திரங்கள் கூறும் நெறியில் செல்லும் மேன்மை உடையவர் மறு பிறப்பினை அடையமாட்டார்.* **(5.2.30)**

இழி(வு)உயர்(வு) இரண்டும் எண்ணார் இச்சைகோ பங்கள் எய்தார்
தொழில்தொழில் இலாமை விட்டோர் துன்னிய பிறப்பில் சேரார்
எழில்பெற விளங்கி யார்க்கும் இனியன இனிதில் சொல்வோர்
அழிபொருள் அனைத்தின் சால்பை அறிந்துளோர் பிறப்பில் சேரார்.

**பொழிப்புரை:** *உயர்வு, தாழ்வு இரண்டினையும் எண்ணாதவர், இச்சை கோபங்களில் மூழ்காதவர், தொழில் செய்தல், தொழில் செய்யாமை இரண்டினையும் விட்டவர் (சமமான பார்வை உள்ளவர்) நெருங்கிய பிறவிகளில் சேரார். தெய்வீகமாக (சிறந்த குண ஒழுக்கத்துடன்) விளங்கி, யாவர்க்கும் இதமானதையே இனிய சொற்களால் சொல்பவர், அழிகின்ற பொருள்களின் தன்மையை அறிந்துள்ளவர் பிறவிப் பிணியை அடைய மாட்டார்* **(5.2.31)**

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

தேயவா தனைநீங்கிப் பூர்ண மாகித் தெளிந்தவிழி இமையாமல் சீவன் முத்தி
ஆயபா வனையாலே சொரூபம் மேவி அனவரதம் உலகில்விளை யாடு வீரா
மாயஆ சையைநீக்கிப் பற்(று)அ றுத்து வாதனைபோய் உள்வெளியாய் வாகி யத்தே
மேயஆ சாரமெலாம் இயற்றி என்றும் வேண்டியவா(று) உலகில்விளை யாடு வீரா.

**பொழிப்புரை:** *தேய வாதனையைத் தியாகம் செய்வதனாய் தெளிந்த பூரணமாக நிச்சயித்த திருஷ்டி அகலாமல் சீவன் முத்தத் தன்மையால் சொரூபத்தை அடைந்தவனாய் எப்பொழுதும் உலகத்தில் விவகாரம் செய்து விளையாடுவாய் வீரனே! இராகவனே! மாயாமய சம்சாரத்தில் எல்லா ஆசைகளையும் ஒழித்து, இராகம் (விருப்பம்) இல்லாதவனாய், வாசனைகள் அற்றவனாய், உள்ளே சிதாகாச மனத்தில் இருப்பவனாய், வெளியில் வர்ணாசிரம தருமம் முதலான யாவற்றையும் நன்கு கடைப்பிடித்து, இந்த உலகில் என்றும் விரும்பியபடி இன்பமுடன் விளையாடிக் கொண்டிருப்பாய் வீரம் உடைய இராகவனே!* **(5.2.32)**

சகத்திலே புறத்தொழிலில் ஆரம் பித்துத்
தனிஇதயத்(து) ஆரம்பம் சற்றும் இன்றி
அகத்திலே செயாதோனாய்ப் புறத்தே செய்வோன்
ஆகியே உலகில்விளை யாடு வீரா
வகுத்தஅகங் காரம்போய்ச் சித்தம் தேறி
வானம்போல் நொய்தாகி மா(சு)ஒன்று) அற்று
வெகுத்துவமாம் அடையாளம் அனைத்தும் இன்றி
வேண்டியவா(று) உலகில்விளை யாடு வீரா.

**பொழிப்புரை:** *உலகத்தில் தொழில் செய்யும் காலத்து வெளியே தொழிலில் தொடக்கம் உடையவனாய், சொரூபத்தில் இளைப்பாறும் இதயத்தில் தொடக்கம் சற்றும் இல்லாதவனாய், உள்ளே அகர்த்தாவாய், வெளியில் கர்த்தாவாய் (அதாவது அகர்மத்தில் கர்மம் செய்பவனாய்) உலகில் விவகாரம் செய்து விளையாடுவாய் வீரனே! இராகவனே! பலவாறாக விரிந்த அகங்காரத்தைத் தொலைத்து, சித்தம்*

*தெளிந்தவனாய், ஆகாயத்தைப் போல அதிசூக்குமமாய், பலவிதமான அடையாளம் எதுவும் இல்லாது, விருப்பப்படி உலகில் விவகாரம் செய்து விளையாடுவாய் வீரம் உடைய இராகவனே!* **(5.2.33)**

**இதமான உதாரியாய்க் கடி(ன)ஆ சாரம்**
**இன்றிஆ சாரங்கட்(கு) எளிது பின்போய்**
**விதமான அனைத்துக்கும் சார்மை நோக்கி**
**வேண்டியவா(று) உலகில்விளை யாடு வீரா**
**புதனாகி நிராசைதனை உள்ளே தேக்கிப்**
**புறத்தேஆ சையில்தொழில்கள் பூண்டான் போலாய்**
**அதனால்உள் சீதளமாய்ப் புறம்வெய் தாகி**
**அனவரதம் உலகில்விளை யாடு வீரா.**

**பொழிப்புரை:** *இதமான உதாரம் உடையவனாய், கடினமான ஆசாரம் இல்லாமல், அனைத்து ஆசாரங்களையும் எளிதாகப் பின்பற்றுபவனாய், பலவிதமான எல்லா வற்றுக்கும் சார்புத் தன்மை நோக்கி உள்ளே எதனையும் பற்றாது, விரும்பியவாறு உலகில் விவகாரம் செய்து விளையாடுவாய் வீரனே! இராகவனே! அறிவுடையவனாய் நிராசையை உள்ளத்தே உடையவனாய் புறத்தில் தொழில்களில் ஆசை உடையவன் போலக் காரியங்கள் செய்பவனாய், அதனால் உள்ளே குளிர்ந்தும்* (*அமைதியாகி*)*, வெளியே வெப்பம் (சுறுசுறுப்பு) உடையவன் போல் எப்பொழுதும் உலகத்தில் விவகாரம் செய்து விளையாடுவாய் வீரம் உடைய இராகவனே!* **(5.2.34)**

**இவன்சுற்றன் இவன்பகைவன் இவன்நான் என்னும்**
**இவ்வெறும்பொய் இராமநீ இறையும் எண்ணேல்**
**அவம்பற்றும் நொய்யமனத்(து) அவர்க்(கு)இவ் வாறாம்**
**அறிந்தோர்க்குச் சகமுழுதும் அகலாச் சுற்றம்**
**நிவந்துற்ற பலகோடி பவமோ கத்தால்**
**நீபகைநீ உற(வு)என்பர் நிமிடந் தோறும்**
**உவந்துற்ற மயக்(கு)இதுவாம் பரமார்த் தத்தால்**
**உலகெல்லாம் பகையாகும் உறவும் ஆகும்.**

**பொழிப்புரை:** *இவன் உறவினன், இவன் பகைவன் இத்தகையன் யான் என்பதான இவை எப்பொழுதும் மித்தையே. இராகவனே! நீ அணுவளவும் இதனைச் சிந்திக்காதே. அதர்மத்தில் ஈடுபாடுடைய அற்ப மனதை உடையவர்களுக்கு இந்தத் தன்மை உளதாம். மித்தை என்று உணர்ந்தவர்களுக்கு உலகம் முழுவதும் நீங்காத சுற்றம் ஆகும். தேவர் மனிதர் பசு பட்சி முதலாக எழுந்த பலகோடி பிறவிகளின் மோகத்தால் நீ பகை, நீ உறவு எனக் கற்பிப்பர். கணந்தோறும் அன்பு மிகுந்து பழகிய பிராந்தி இதுவாகும். உண்மையாக நோக்கும் போது பிரபஞ்சம் எல்லாம் சுற்றமும் இல்லை. வியவகாரத்தில் சுற்றமும் ஆகும்.* **(5.2.35)**

இதுபொருட்டால் இதிகாசம் ஒன்று கேள்பண்(டு)
இயைந்ததுகங் கையின்கரையின் இருடி மைந்தர்
அதுலமயேந் திரகிரியி(ன்) அயலே வாழ்வோர்
அருந்தவத்தோர் தீர்க்கதவன் அளிக்க வந்தோர்
சதுர்மறைதேர் புண்ணியபா வனர்என்(று) உள்ளார்
தந்தையொடு கங்கையின்பால் தவம்செய் நாளில்
பொதுவுறச்செய் தவப்பயனால் கால முற்றிப்
புண்ணியனாம் புண்ணியவான் போதம் பெற்றான்.

**பொழிப்புரை:** *இது விளங்கித் தோன்றும் பொருட்டு முன்பு நடந்ததான ஒரு கதையைக் கூறக் கேட்பாயாக. ஒப்பில்லாத கங்கை நதி தீரத்தின் பக்கத்தே மயேந்திர மலையின் சோலையில் வசிப்பவர் ரிஷி புத்திரர்கள் அரிய பெருந்தவத்தை உடையோர். தீர்க்க தவரிஷியின் மைந்தர்கள். நான்கு வேதங்களும் தேர்ந்த புண்ணியர் பாவனர் என்னும் பெயர் பெற்றவர். தந்தையுடன் கங்கை நதியின் கரையில் தவம்செய்யும் காலத்தில் நிஷ்காமிய தவத்தின் பயனாகப் பக்குவ காலத்தில் புண்ணியவான் ஆகிய புண்ணியன் என்னும் குணத்தில் மிக்கோன் ஞானம் பூரணமாக வரப்பெற்றவன் ஆனான்.* **(5.2.36)**

அங்(கு)அவன்பின் னவனான பாவ னன்பால்
அறிவுடைமை பாதிஅள(வு) ஆத லாலே
செங்கதிரோன் உதிப்பதன்முன் அருணன் தோன்றச்
செங்கமலம் கிண்கிணிவாய்ச் செய்வ(து) ஒத்துத்
துங்கஅறி யாமையும்மெய் வீடும் இன்றித்
தோளாளந் திரம்போலத் துவண்டு நின்றான்
பொங்குதவத் தீர்க்கதவன் என்னும் தந்தை
போகத்தில் இச்சையெலாம் புந்தி தீர்ந்தான்.

**பொழிப்புரை:** *அவ்விடத்தில் புண்ணியன் என்பவன் தம்பியான பாவனன் பாதி அளவு ஞானம் உடையவன் ஆனதால், சிவந்த சூரியன் உதிக்கும் முன்பாக அருணன் தோன்றத் தாமரை மலரானது சலங்கை வாய் போன்று சிறிது விரிந்தும் விரியாமலும் இருப்பது போல, முழுவதும் அஞ்ஞானமும், முழுவதும் முதிர்ந்த மெய்ஞ்ஞானமும் (பிரம்ம நிட்டையும்) இல்லாமல் ஊஞ்சல் போலச் சலனப்பட்டுத் துவண்டு நின்றான். மிகுந்த தவத்தை உடைய தீர்க்கதவன் என்னும் (அவ்விரண்டு மைந்தர்களின்) தந்தையானவர் போகத்தில் உள்ள ஆசைகள் அனைத்திலும் எண்ணம் அற்றவர் ஆனார்.* **(5.2.37)**

காலமே காரணமாய்க் குடும்ப வாழ்வில்
காத(ல்)ஒழித்(து) அறச்செறிந்த காயம் தன்னைச்
சாலமிகு தொழில்பறவைக்(கு) இடமாம் கூட்டைச்
சானவியின் கரைவரையில் தானே தீர்ந்தான்
கோலியொரு சுமைசுமப்பான் குறித்த எல்லை
கொண்டுபோய் போடுவபோல் குரம்பை போட்டு
மாலுறுபற்(று) ஒன்(று)இன்றிப் பூவின் நாற்றம்
வானுறல்போல் பரமபத வாழ்வு பெற்றான்.

**பொழிப்புரை:** *பிராரப்த நாசத்தையே காரணமாகக் கொண்டு சம்சார வாழ்க்கையில் முதுமையால் மிகவும் தளர்ந்த தேகத்தைத் துக்கம் மிகுந்த தொழில்களைச் செய்யும் அகங்காரம் என்னும் பறவைக்கு இருப்பிடமாகிய கூட்டினை (தேகத்தை) கங்கைக் கரையின் அருகில் உள்ள மயேந்திர மலையில் (தீர்க்கதவ ரிஷி என்பவன்) சுயமாக ஒழித்து விட்டான். சும்மாடு வளைத்து எஜமானனின் சுமையைச் சுமப்பவன் நியமித்த இடத்தில் சுமையைப் போடுவது போல, நுகர் வினை தீர்ந்ததும் தேகத்தை விடுத்து மயக்கத்தைத் தரும் விருப்பம் ஒன்றும் இன்றிப் பூவின் மணமானது வானத்தை அடைவது போல பரமபத வாழ்வாகிய விதேக முத்தியை அடைந்தான்.* **(5.2.38)**

**தொழி(ல்)இன்றிக் காட்சியெனும் துன்பம் இன்றித்**
**தொல்லறிவு தோன்(று)இடமாம் சொரூபம் பெற்ற**
**அழி(வு)இல்முனி இறத்தலுமே அவன்தன் பன்னி**
**அம்புயம்நின்(று) அகல்அளிபோல் அங்கம் விட்டாள்**
**விழிக(ள்)நிகர் தாய்தந்தை இறப்பக் கண்டு**
**மேற்செயவேண் டியகிரியை விதியில் செய்வான்**
**வழிபடுபுண் ணியன்முயன்றான் பாவன் தானும்**
**வருத்தமெனும் கடல்புகுந்து மயங்க லுற்றான்.**

**பொழிப்புரை:** *செய்ய வேண்டியதைச் செய்து முடித்த கிருத கிருத்தியனாய்க் காண்பதனால் உண்டாகும் துன்பம் இன்றி, அனைத்துக் கற்பிதங்களுக்கும் அதிட்டானமான சொரூபத்தைப் பெற்ற அழிவில்லாத தீர்க்கதவன் முனி தேகத்தை விடுதலும், அவனுடைய பத்தினியும் தாமரையிலிருந்து நீங்கும் வண்டு போலத் தன்னுடைய தேகத்தை விட்டாள். இரண்டு கண்களுக்கு நிகரான தாய்தந்தையர் தேகம் விட்டதைக் கண்டு, மேற்கொண்டு செய்ய வேண்டிய காரியங்களைச் சாத்திர விதிப்படி செய்வதற்காகத் தாய்தந்தையைத் தெய்வமாக வழிபடும் புண்ணியன் முயற்சி செய்த போது, பாவனன் துக்கம் என்ற கடலில் மூழ்கி மயல் கொண்டு அழத் தொடங்கினான்.* **(5.2.39)**

**அன்னேஅன் னே என்னும் என்னை ஈன்ற**
**ஐயாஐ யாஎன்னும் அந்தோ அந்தோ**
**என்னேஎன் னேஎன்னும் ஆற்றான் ஆகி**
**எரிமிதித்தால் போல்கானம் எங்கும் ஓடும்**
**தன்நேர்இல் முன்னவனை நோக்கித் தேறான்**
**தம்பிமிகத் தளர்வுற்றான் தளரா முன்னோன்**
**மின்னேரும் உடற்(கு)இறத்தல் இயல்பே என்று**
**வேறொன்றும் நினையாமல் விதியே செய்தான்.**

**பொழிப்புரை:** *என்னைப் பெற்ற அம்மா அம்மா என்று அழுவான். என்னைப் பெற்ற அப்பா அப்பா என்று அழுவான். எங்களைப் பரிதவிக்க விட்டுப் போனீர்களே என்னே என்னே என்று அழுவான். பிரிவைச் சகிக்க முடியாதவன் ஆகி, நெருப்பை மிதித்தவன் போல் சோலை எங்கும் ஓடினான். தனக்கு ஒப்பற்ற சோகம் அடையாத*

*அண்ணன் புண்ணியனைப் பார்த்து ஆறுதல் அடையான். தம்பியாகிய பாவனன் மிகவும் தளர்வினை அடைந்தான். தளராத முன்னவனாகிய புண்ணியன் மின்னலைப் போல் நிலையில்லாத தேகம் இறப்பது இயல்பு தான் என்று வேறு ஒன்றும் நினைக்காமல் விதிப்படி காரியங்களைச் செய்தான்.* **(5.2.40)**

மறைநெறிகள் முடித்ததன்பின் சோகத் தாலே
வாய்மூடா இளவல்தனை வந்து சார்ந்து
நிறைஅறிவாம் புண்ணியன்பா வனனை நோக்கி
நெஞ்(சு)அழிக்கும் துயரமைந்தா நீத்தல் என்னே
பொறைமிகுநின் பிதாநின்ன(து) அன்னை யோடும்
பொருந்திஇருந்(து) உளபதத்தின் பொலிவைக் கேளாய்
குறைவுநிறை(வு) இல(து)என்றும் தனதாய்த் தானாய்க்
கோ(து)இலதாம் வீடெனும்பேர் கூற வற்றாம்.

**பொழிப்புரை:** *சாத்திர முறைப்படி செய்ய வேண்டிய காரியங்களைச் செய்து முடித்து அதன் பின்பு சோகத்தால் அழுது கொண்டே திரிந்து கொண்டிருக்கும் தம்பியிடம் வந்த நிறைந்த அறிவுடைய புண்ணியன், தம்பி பாவனனை நோக்கி, நெஞ்சினை அழிக்கும் இந்தத் துயரத்தை விடாமல் இருக்கின்றாயே குழந்தாய்! என்னே! பரம சாந்தம் அடைந்த உனது தந்தை உன்னுடைய தாயுடன் அடைந்து இருக்கின்ற இடத்தின் பெருமையைக் கூறக் கேட்பாய். குறைதல் நிறைதல் என்ற தன்மை இல்லாததாய், எப்பொழுதும் தன்னுடையதாய், ஆத்மாவாய், குற்றமாகிய மாயை இல்லாததால் மோட்சம் என்ற பெயர் சொல்லப்படுவதாம்.* **(5.2.41)**

அனைவருக்கும் மேவு(ம்)இடம் அதுவே ஆகும்
அறிஞருக்கும் மெய்உருவம் அதுவே ஆகும்
தனைஅகலா அப்பதத்தில் வாழும் தாதை
தனைநோக்கித் தளரு(ம்)அது தகவோ தம்பி
துனைபுனலின் ஓட்டத்துக்(கு) எய்தும் பள்ளத்
தொகுதிபோல் பிறவிதொறும் தொடர்பாய்ப் போன
வனையுறுநின் தாய்தந்தைக்(கு) இலக்கம் உண்டோ
மனைமக்கள் சுற்ற(ம்)ஒரு மட்(டு)உண் டாமோ.

**பொழிப்புரை:** *(அந்த இடமே) அனைவருக்கும் அடையத்தக்க இடமாகும். தன்னை (ஆத்மாவை) அறிந்த ஞானிகளுக்கு அதுவே வடிவமாம். ஆத்ம சொரூபத்தை விட்டு அகலாத அந்தப் பிரம்மானந்த பதத்தில் ஆனந்தமாக வாழ்கின்ற தாய் தந்தையரை நினைந்து அழுது தளர்வது தகுதியோ தம்பியே நெருங்கிய தண்ணீரின் ஓட்டத்திற்கு நேர்கின்ற மடு, ஏரி போன்ற பள்ளம் போல, பிறவிகள் தோறும் தொடர்ந்து கொண்டே சென்ற நீ வருந்தும் தாய் தந்தையர்க்குக் கணக்கு உண்டோ? மனைவி மக்கள் சுற்றத்தினர் ஒரு கோடிக் கணக்கில் அடங்குமோ?* **(5.2.42)**

பருவங்கள் தொறும்பெரிய வனத்தில் காய்க்கும்
பழங்கள்போல் பவங்க(ள்)தொறும் பரந்த சுற்றம்
கருதும்கால் இறந்தஅவர்க்(கு) இரங்க வேண்டில்
கற்ப(ம்)அளவும் அலறினும்ஓர் கரைஉண் டாமோ
சொருபமிலா அஞ்ஞானக் கானல் மேட்டில்
தொடர்ந்தவா தனைகோடைச் சுழல்வெங் கானல்
பெருகுநீர் சு(க)அசுகமாம் திரைகள் மோதிப்
பேதமொரு கரையின்றிப் பிறழும் அன்றே.

**பொழிப்புரை:** *பருவங்கள் தோறும் பெரிய வனத்தில் காய்க்கின்ற பழங்கள் போல, பிறவிகள் தோறும் விரிந்த உறவுகளை நினைக்கும்பொழுது இறந்து விட்ட அவர்களுக்கு அழுவதானால் கற்ப கால அளவு அழுதாலும் ஒரு எல்லையைக் காண முடியுமோ? தனக்கென சொரூபம் இல்லாத அஞ்ஞானமாகிய பாலை நிலத்தில் அனாதியாகத் தொடர்ந்து வரும் வாசனை மிகுந்த வெப்பத்தில் சுழல்கின்ற சம்சாரமாகிய கானலில் பெருகி வரும் தண்ணீரானது இன்ப துன்பங்கள் எனும் அலைகள் மோதிப் பேதங்கள் ஒரு எல்லை இன்றித் துள்ளித் திகழ்கின்றது.* **(5.2.43)**

இல்லுறவு பகைநேயம் கோபம் ஆசை
இழி(வு)உயர்(வு)ஆ திகள்வடிவாய் எழுந்த ஞாலம்
புல்லுறுதன் நாமமாத் திரத்தி னாலே
பொலிந்துவிரி கின்ற(து)அல்லால் புறனில் உண்டோ
நல்லுறவாய் நினைத்திடில்நல் உறவே ஆவர்
நண்ணாராய்ப் பாவிக்கில் நண்ணார் ஆவர்
கொல்லுறுநஞ்(சு) அமு(து)இரண்டின் குணங்கள் போலும்
குறித்திடுபா வனைகட்டுக் குலைந்தால் உண்டோ.

**பொழிப்புரை:** *மனைவி, சுற்றம், பகை, நட்பு, கோபம், ஆசை, இழிவு, உயர்வு முதலிய வடிவங்களாய் இது எனத் தோற்றும் பிரபஞ்சம் இழிவாகப் பொருந்திய பெயர் மாத்திரத்தால் தான் விளங்கி விரிகின்றதே தவிர (மனதுக்குப் புறம்பாக) வெளியில் உள்ளதாமோ? நல்ல சுற்றமாக நினைக்கில் நல்ல உறவினர் ஆவர். பகைவராய்ப் பார்க்கில் பகைவர் ஆவர். கொல்லுகின்ற விஷம், அமிர்தம் இரண்டின் தன்மை போலும் பாவித்திடும் பாவனையால் ஆக்கப்பட்ட நிலை சிதைந்து போனால் இவை உளதாமோ? (பகைவராய்ப் பார்த்தல் விஷத்தின் நிலை. நல்ல உறவாய்ப் பார்த்தல் அமிழ்தின் நிலை. இரண்டுமே பாவனையால் கட்டுற்றதாம்)* **(5.2.44)**

ஒன்றிலே தோன்றிஅனைத்(து) உருவ மான
உணர்வுக்குப் பகைஉற(வு)என்(று) உரைப்ப(து) எங்ஙன்
இன்றிஒழி தசைபுண்ணீர் தோல்கள் மேய்ந்த
எலுப்புபஞ் சரம்தன்னில் யாம்ஆர் என்று

நின்(று)இவண்நீ நின்மனத்தால் நினைந்து நோக்காய்
நிமலமாம் பரமவிழி நெறியால் நோக்கில்
பொன்றுதுயர் நீஇல்லை நானும் இல்லை
புண்ணியபா வனன்எனல்பொய் போதம் தோன்றும்.

**பொழிப்புரை:** *அத்வைதமாக விளங்கும் ஒன்றிலிருந்து தோன்றி எல்லா உருவமும் ஆன உணர்வுக்குப் பகை என்றும் உறவு என்றும் கூறுவது எப்படி சாத்தியமாகும்? சில நாட்களில் இல்லாமல் போகும் மாமிசம் ரத்தம் தோல் போர்த்திய எலும்புக் கூட்டில் யாம் என்பது யார் என்பதை இவ்விடத்தில் நின் மனதை ஒருநிலைப்படுத்தி உனது சித்தத்தால் சிந்தித்துப் பார்ப்பாய். விசாரத்தால் நிர்மலமான உண்மையான பார்வைக் கோணத்தில் பார்த்தால், வருந்தித் துன்பப்படும் நீயும் இல்லை. உனக்கு இதம் உரைக்கும் நானும் இல்லை. புண்ணிய பாவனன் என்று தோற்றம் அளிப்பது மித்தியா ஞானமேஆகும். (இவ்வாறு பிதுராதி சரீரமும் மயலே என்று அறிவாய்)*
**(5.2.45)**

ஏகியதீ வுகள்தோறும் பிறந்த சென்மம்
எண்ணவொண்ணா இந்நாவல் பெருந்தீ வத்தில்
கோகிலமாய் முன்பிறந்தாய் விலங்கு மேகம்
குன்றுமரம் ஊர்வனபுள் குலங்கள் தம்மில்
போகியசென் மத்தொகுதி புகல வொண்ணாப்
பொருந்து(ம்)அவற்(று) உன்கிளையாய்ப் போனார்க்(கு) எல்லாம்
ஆகுலம்உற் றிலைஎன்நீ அவற்றின் மட்டோ
அனந்ததே சப்பிறவி அறையக் கேளாய்.

**பொழிப்புரை:** *நீ சென்ற தீவுகளில் எல்லாம் எடுத்த பிறவிகளை எண்ணி அளவிட முடியாது. பெரியதான இந்த நாவல் தீவில் முன்பு குயிலாய்ப் பிறந்தாய். விலங்கு, மேகம், மலை, ஊர்வன, பறவை முதலான குலங்களில் பிறந்த உனது பிறப்பின் கூட்டம் சொல்லிமுடியாது. அவற்றில் உனது சுற்றமாகச் சென்றவைகளுக்கு எல்லாம் வருத்தப்பட்டாய் இல்லை, என்னே! நீ. அவ்வளவு தானா பிறவி எடுத்தது? அளவற்ற தேசங்களில் பிறவி எடுத்ததைக் கூறக் கேட்பாய்.* **(5.2.46)**

கோசலத்தும் தெசார்ணவத்தும் பௌண்ட ரத்தும்
குச்சரத்தும் துழாரத்தும் கோக னத்தும்
போசலத்தும் ஏகையத்தும் சாளு வத்தும்
பூபதியாய் வானரமாய்ப் புழுவாய்ப் புல்வாய்
மாசலத்தில் கரண்டமாய்ப் பதங்க மாகி
மாசுணமாய் வேசரியாய் மட்டில் சென்மம்
நீசகல வாதனையால் பிறந்த போது
நின்கிளைஞர்க்(கு) இரங்காத நீதி என்னே.

**பொழிப்புரை:** *கோசல தேசத்திலும், தெசார்ண தேசத்திலும், பொண்டர தேசத்திலும், குச்சர தேசத்திலும், துழாரத் தேசத்திலும், கோகனத் தேசத்திலும், போசல*

*தேசத்திலும் ஏகையத் தேசத்திலும் சாளுவ தேசத்திலும் அரசனாய், குரங்காய், புழுவாய், மானாய், நீர் நிறைந்த பெரிய தடாகத்தில் நீர்க்காக்கையாய், விட்டிலாய், பாம்பாய், கழுதையாய் அளவற்ற பிறப்புகளில் நீ சகல வாசனைகளால் பிறந்த காலத்தில் இருந்த உனது உறவினர்களுக்கு வருந்தாத நியாயம் என்ன?* **(5.2.47)**

**அளவிறந்த பிறவிதொறும் பிறந்தோர்க்(கு) எல்லாம்**
**அன்னைதா தையைஎண்ணில் அகன்ற கானில்**
**கிளர்மரங்கள் தரும்சருகை எண்ண வற்றாம்**
**கேதமுறக் கணக்கில்லை கேளாய் மைந்தா**
**தளர்வின்றிப் பா(வ)அபா வனைகள் இன்றிச்**
**சராமரணம் அற்றஉனைச் சங்கி யாதே**
**உளமுறநோக் காய்துயர்விட்(டு) அஞ்ஞா னத்தை**
**ஒழித்(து)உணரில் உள்ளபடி உன்னைக் காண்டி.**

**பொழிப்புரை:** *அளவற்ற பிறவிகளில் பிறந்தவர்க்கு எல்லாம் தாய் தந்தையை எண்ணிக் கணக்கிடுவது, பரந்துள்ள காட்டில் புதியதாய் புதியதாய் வளர்கின்ற மரங்களில் இருந்து வீழும் சருகுகளை எண்ணுவது போன்றதாகும். ஆதலால் துன்பம் கொள்வதில் அளவும் இல்லை, நியாயமும் இல்லை. மைந்தனே! கேட்பாய். தளர்வு அடையாத அமைதியான வடிவமாகி பாவ அபாவம் (உள்ளது இல்லாதது) என்பதைக் கருதாமல் முதுமை மரணம் இல்லாத ஆன்ம சொரூபத்தை இருக்கின்றேனா இல்லையா என்று சந்தேகப்படாதே. சித்தத்தில் ஊன்றிப் பார்ப்பாய். துயரத்தை விட்டு, தடைகள் அகற்றி, அஞ்ஞானத்தை ஒழித்து உணர்வாய் ஆயின் யதார்த்தமான உனது சொரூபத்தைக் காண்பாய்.* **(5.2.48)**

**உன்னுருவை நீகாணும் ஞானக் கண்ணில்**
**ஒன்றலா ஆசையெனும் காசம் ஊறும்**
**அன்னதுதீர்த்(து) உளக்கமலத்(து) உள்ளே நொய்ய**
**அறிவுடைய உன்மனத்தால் உன்னால் உன்னை**
**இன்னபடி எனநோக்கி மயக்கம் எல்லாம்**
**இறையு(ம்)அற ஒழித்(து)இன்பம் எய்தி நிற்பாய்**
**பின்னவனே எனமுன்னோன் உரைத்தான் என்று**
**பெருந்தகைக்கு வசிட்டமுனி பேசி னானே.**

**பொழிப்புரை:** *உன்னுடைய சொரூபத்தை நீ தரிசிக்கும் ஞான திருஷ்டியைப் புத்திரர் உறவு நட்பு மனைவி முதலியவர்களிடத்தில் உண்டாகும் அனேக ஆசைகள் என்னும் காச படலம் மறைக்கும். அத்தகைய இடையூறுகளை நீக்கி, இதயத் தாமரை மத்தியில் சூக்கும உணர்வுடைய உனது சத்துவ மனத்தால் முயற்சி உடைய உன்னால் உனது மெய் வடிவைச் சச்சிதானந்தமாக இருக்கின்றேன் என்று சுய அனுபவமாகக் கண்டு, சம்சாரப் பிராந்தியை மிச்சம் இல்லாமல் நாசம் செய்து, பரம சந்தோஷ உள்ளம் உடையவனாய் வாழ்வாய் இளையவனே! என்று தமையனாகிய புண்ணியன் கூறினான் என்று பெருந்தகையாகிய இராமபிரானுக்கு வசிட்ட முனிவர் உரைத்தார்.* **(5.2.49)**

**(உபசாந்திப் பிரகரணத்தில் புண்ணிய பாவனர் கதை முற்றும்)**

# (iii) மாவலி கதை

*பார்க்கப்படும் பொருள்களில் இருந்து மனதை மீட்டுக் கொள்வதால், காண்பவன் தன் உண்மையை அதாவது எல்லாம் தன்மயமாய் விளங்கும் அனுபவத்தை கூறி நிஷ்காம கர்மத்தால் விஷயானந்தம் (பொருள் நுகர் இன்பம்) பிரம்மானந்தத்திற்கு வழியாகிறது என்பதை அறிவிப்பதற்காக மாவலி கதை கூறப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

புண்ணியன் உரைத்த ஞானம் பொலிந்தபா வனன்தன் உள்ளம்
நண்ணிய விடியல் கண்ட ஞாலம்போல் விளங்கித் தோன்ற
திண்ணிய இருவர் தாமும் சித்தராய் விவேக ஞானத்(து)
எண்ணிய கரையை எய்தி இயம்பிய வனத்(து)இ ருந்தார்.

**பொழிப்புரை:** *புண்ணியன் உபதேசித்த பிரம்ம வித்தையானது பரிபக்குவப்பட்ட இளைய வனாகிய பாவனன் தன் உள்ளத்தில் அணுகிய சூரிய உதயத்தைக் கண்ட உலகம் போல. சந்தேகம் இன்றித் தன் வடிவமாகவே தோன்ற, திடமுடைய இருவரும் எல்லாம் அடைந்தவராய், விவேக ஞானத்தில் கருதிய எல்லையை அடைந்து கூறிய வனத்தில் வாழ்ந்து வந்தனர்.* **(5.3.1)**

வேண்டிய காலம் எல்லாம் விநோதமாம் விளையாட்(டு) எய்தி
ஈண்டிய காலம் செல்ல யாக்கைதீர் வீட்டில் எய்தித்
தூண்டிடு திரிநெய் யில்லாச் சுடர்கள்போல் சாந்தம் உற்றார்
மாண்டிடும் உயிர்கட்(கு) எல்லாம் மர(பு)இந்த மரபு போலாம்.

**பொழிப்புரை:** *வேண்டிய கால அளவு அதை நினைத்தும் அதை உரைத்தும் அதன் மயமே ஆகி என்றும் லீலையாகச் செய்து, நியமித்த காலமானது கழிந்து விட, தேகம் இல்லா விதேக முத்தியை அடைந்து, தூண்டக்கூடிய திரியும் எண்ணெயும் இல்லாத தீபங்கள் போலப் பரம உபசாந்தியை அடைந்தனர். இறந்திடும் சீவர்கள் எவர்க்கும் வம்சம் இத்தன்மையதே ஆம். (சுகர், வாமதேவர் முதலான சீவன் முத்தர்களுக்கு எல்லாம் வம்சமும் இந்த முறை போலாம்.)* **(5.3.2)**

அனந்தமாம் பிறப்புற் றாருக்(கு) அகிலமும் அயல்அன் றாகில்
சினந்திடல் நயத்தல் வேண்டா ஆதலால் செறிந்த ஆசைக்
கனந்தனை விடுவ(து) அல்லால் கதித்துற வளர்க்க லாகா
மனந்தனில் வளர்க்கில் சிந்தை வன்னிக்கு விறகாம் அன்றே.

**பொழிப்புரை:** *அளவற்ற பிறப்புகளை அடைந்தவர்களுக்கு சர்வ உலகமும் அயலாக (வேறாக) இல்லை என்பதாக ஆயின், மக்கள் கூட்டமே உறவானால் வெறுத்துத் தள்ளத் தக்கது எது? விரும்பிக் கொள்ளத் தக்கது எது? (வெறுத்தலும் விரும்புதலும் வேண்டப்படாது) ஆதலால் விடயங்கள் தோறும் சேர்ந்துள்ள ஆசைக் கூட்டத்தை விட்டுத்*

*தொலைக்க வேண்டுவதே அல்லாமல் வளரும் படி போற்றிக் கொண்டே இருத்தல் கூடாது. உள்ளத்தில் ஆசையை வளர்ப்பது மனமாகிய நெருப்பு எரிவதற்கான விறகு போல்வதாம்.* **(5.3.3)**

**இச்சையாம் விறகு மாண்டால் எண்ணமாம் வன்னி மாளும்**
**நிச்சய மாகும் தேயத் தியாகமாம் நெடுந்தேர் ஏறி**
**மெச்சிய உதாரக் கண்ணால் வேட்கையால் மிகவும் வாடும்**
**கொச்சைஞா லத்தை நோக்கிக் குறைவற இருப்பாய் தீரா.**

**பொழிப்புரை:** *ஆசையாகிய விறகு தீர்ந்து போனால் சிந்தையாகிய அக்கினி அணைந்து போகும். நிச்சயமான தேயத் தியாகம் என்கின்ற பெரிய தேர் மீது ஏறி புகழும் உதார கருணைக் கண்ணால். ஆசையால் முழுதும் வாட்டத்தை அடையும் தீனத்தன்மை உடைய உலகத்தைப் பார்த்து பரிபூரண ஆனந்தம் உடையவனாகி வாழ்வாய் தைரியம் உடைய இராகவனே!* **(5.3.4)**

**(விருத்தப்பா-வேறு)**

**நொய்ய தாய்ஒரு மயல்இன்றி நோயெலாம் நீங்கி**
**மெய்ய தாகிய பிரமமாம் நிலையிது வீரா**
**ஐயம் இன்றிஇந் நிலைஉறில் அறிவில ரேனும்**
**மையல் மேவலர் இராமநீ இவ்வகை வாழ்வாய்.**

**பொழிப்புரை:** *அதிசூக்குமமாய், நிட்காமமாய், மல அழுக்கு நீங்கியதாய், சத்தியமாகிய பிரம்மத்தின் நிலை இதுவாம். சந்தேகம் இன்றி இந்த நிலையை அடைந்தால் அறியாதவராய் ஆயினும் மோகத்தை (மயலினை) அடையார், இராம! நீ இந்தப் பிரகாரம் வாழ்வாய். (விடய இச்சையின் நீக்கத்தில் பிரம்ம நிச்சயம் உதிக்கும் என்பதாம்)* **(5.3.5)**

**நல்ல புந்தியும் விவேகமும் எனஇரு நண்பால்**
**அல்லல் தீர்ந்திடும் ஒருவரை என்னினும் அணுகில்**
**சொல்லு பல்பொருள் சுற்றங்கள் துடக்கறத் தீர்ந்து**
**புல்லு திண்மையி னால்அன்றித் துயரெலாம் போகா.**

**பொழிப்புரை:** *திடமான வைராக்கியம், விவேகம் என்ற இரண்டு நட்பினால் துன்பங்கள் தீர்ந்திடும். இதில் ஒருவரையாவது அடைந்தாலும், சொல்லக்கூடிய பல பொருள்கள், உறவுகள் சம்பந்தம் இன்றி விடுத்து, பொருந்துகின்ற தைரியம் இல்லாமல் துயர் எல்லாம் போகாது. (எல்லாப் பொருள்களையும் முழுதும் விடுதல், உள்ளே பற்று இல்லாமையால் கையினால் மாட்டினை அதட்டி ஓட்டுதல் போல உறவுகளைக் கைவிடுதல் இவற்றைச் செய்தாலும், விவேக வைராக்கியத்தால் உண்டாகும் தனது தைரியம் இன்றி சங்கடங்கள் போகாது. அதனால் தனது தைரியமே சம்சாரக் கரையேற்றும் என்பது தெளியப்பட்டது.)* **(5.3.6)**

*தைரியம் சம்பாதிக்கும் முறைமையைக் கூறல்...*

மயல்இ லாமையால் நூல்களால் மகத்துவம் முதலாம்
உயர்கு ணங்களால் வருந்தியும் மனத்தினை உய்க்கில்
துயர்கள் நீங்கும்மூ வுலகுறு செல்வமும் தொக்கும்
பயன்அ ளிக்கினும் உயர்வுறும் மனம்எனப் பயிலா.

**பொழிப்புரை:** *வைராக்கியத்தால், சாத்திரத்தால், பெருந்தன்மை முதலான உயர் குணங்களால் எப்பாடு பட்டாவது மனத்தினை பிரம்மத்தில் நிலைநிறுத்தச் செய்தால் துயர்கள் நீங்கும். மூவுலகில் உள்ள செல்வங்களும், இரத்தினங்கள் நிரம்பிய தேகமும் பிரயோசனமாகக் கிடைக்கப் பெற்றாலும் மகத்துவத்தால் நிரம்பிய மனதைப் போல சுகம் தராது. (வைராக்கியம் முதலான சாதனங்களால் மனதைத் தைரியம் உடையதாக ஆக்க வேண்டும் என்பது பொருள். மகத்துவம் வாய்ந்த உயர் குணங்களால் நிறைந்து தைரியமான சித்தத்தால் மகா பலமான மோட்சத்தை அடையலாம். அந்தப் பயன் மூவுலகச் செல்வத்தாலும் அடையப்பெறா.)* **(5.3.7)**

மனம்நி றைந்திடில் அமுதமாய் நிறைந்திடும் வையம்
தனது தாள்செருப்(பு) உலகெலாம் தோல்முச்சும் தரம்போல்
கனநி ராசையால் நிறையுநெஞ்(சு) ஆசையில் கவிழா
தினமும் ஆசையால் நிறைமனம் குறைவென்றும் தீரா.

**பொழிப்புரை:** *மனம் பூரணமாயின், உலகமெல்லாம் அமிழ்தம் நிரம்பியவாறு ஆனந்த பூர்ணமாக விளங்கும். கால்களில் மிருதுவான செருப்பு (காலணி) அணிந்தவனுக்கு பூமிமுழுதும் தோல் பரப்பியது (அதனால் பூமி மிருதுவாய் இருப்பது) போல்வதாம். அதிதிடமான நிராசையால் (வைராக்கியத்தால்) நிறைந்த மனமானது ஆசைகளில் கவிழ்ந்து விடாது. எப்போதும் ஆசைகளால் நிறைந்த மனமானது ஒருபொழுதும் குறை தீராததாய் இருக்கும். (பராசரர் வாக்கியம்: காமிகளுடைய காமமானது மிகு போகங்களால் ஒருபோதும் ஒழியாது, நெய் ஊற்றிய அக்கினி கொழுந்து விட்டு எரிவது போல மீண்டும் மீண்டும் வளர்வதாகும் என்பது.)* **(5.3.8)**

அகத்தி யன்கவர் கடலென நன்னெஞ்சை அழிக்கும்
மிகுத்த மால்இலா மனம்என நிறைமதி விளங்கா
பகுத்த பாற்கடல் நிறைவுறா பரிமள கோக
னகத்தின் நாயகி திருமுகம் நலம்பெறத் தோன்றா.

**பொழிப்புரை:** *பேராசையானது அகத்தியன் குடித்த சமுத்திரம் வறண்டு போனது போல நல்ல மனதையும் நாசமாக்கும். அந்தப் பேராசை யில்லாத மனம் போலப் பூரண சந்திரனும் பிரகாசம் அளிக்காது. பாற்கடலும் பூரணத்தை அடைந்திருக்க மாட்டாது. வாசனையுடைய தாமரையில் வீற்றிருக்கும் இலக்குமியின் திருமுகமும் அழகு வாய்ந்ததாகத் தோன்றாது.* **(5.3.9)**

**மதியை மேகம்போல் வெண்தலச் சுதையினை மைபோல்**
**அதிக நன்னெஞ்சை ஆசையாம் பேய்அழ(கு) அழிக்கும்**
**பொதியும் மால்எலாம் நீக்கிவன் பவப்பயம் போக்கி**
**முதிர்ம னத்தின்மால் பிணிப்பறல் முத்திவேறு) உளதோ.**

**பொழிப்புரை:** *சந்திரனை மேகம் போலவும், வெள்ளை நிறப் பின்னணியில் வரைந்த ஓவியத்தை மை நீர் போலவும், உத்தமமான மனதை ஆசையாகிய பேயானது அழகு பெறாமல் கெடுக்கும். மனைவி மக்கள் முதலியவற்றில் ஆசைகள் நிரம்பி யுள்ள சித்த மயல் எல்லாம் நீக்கி. கொடும் சம்சாரப் பந்தத்தை விட்டு, பக்குவமான மனதில் ஆசைக்கட்டு அற்றுப் போனால் அதனை விட முத்தி வேறு ஒன்று உண்டோ?*
**(5.3.10)**

**இன்ன(து) அன்(று)எனில் இராகவ மாபலி என்ன**
**நன்ன தாகிய புந்தியால் ஞானமே நேர்வாய்**
**அன்ன தேநலன் என்றலும் அனைய(து)ஏ(து) என்று**
**சொன்ன மாமுனி தன்னையே இராமனும் சொன்னான்.**

**பொழிப்புரை:** *வைராக்கியம் (ஆசை நிவர்த்தி) இல்லை எனில், இராகவனே! மகாபலிச் சக்கரவர்த்தியைப் போல, நல்லதாகிய விவேக புத்தியால் ஞானத்தையே அடைவாய், அதுவே நல்லது என்று வசிட்ட முனிவர் கூறவும், அத்தகையது யாது என்று கூறிய முனிவரையே இராமனும் வினவினார்.* **(5.3.11)**

**வினாய வள்ளலுக்(கு) அருந்தவன் உத்தரம் விளம்பும்**
**தனாது தோள்களால் உலகெலாம் அஞ்சுறச் சயித்தோன்**
**பினாகி சார்ங்கியை முதலினர் தாழ்வுறப் பெரியோன்**
**அனாதி யாம்எனப் பாதலத்(து) அரசுசெய் அதுலன்.**

**பொழிப்புரை:** *கேள்வி கேட்ட இராம பிரானுக்கு அரிய தவத்தை உடைய வசிட்டர் பதில் சொல்வதாவது... தன்னுடைய தோள் வலிமையால் சகல அண்டங்களையும் பயப் படும்படியாக வெற்றி கொண்டவன். பினாகம் என்ற வில்லினைத் தரித்த சிவனும், சார்ங்கம் என்ற வில்லினைத் தரித்த விஷ்ணுவும், பிரம தேவனும் முதலானோர்களைத் தம் வழிபாட்டினால் வசம் செய்தவன். வெகு காலமாகப் பாதலத்தை அசுர சேனைகளுடன் அரசாட்சி செய்பவன்.* **(5.3.12)**

**மாவ லிப்பெய ரான்உயர் விரோசனன் மைந்தன்**
**ஆவ லிப்புறு கோடிபத்(து) ஆண்(டு)அர சானோன்**
**காவ லில்திகழ் மேருவின் சிரமணி கதுவு**
**மேவ லில்பொல் சாளரம் மேல்நிலம் மேவி.**

**பொழிப்புரை:** *மகாபலி என்னும் பெயர் வாய்ந்தவன். உயர்ந்த விரோசனன் புதல்வன். ஆச்சரியப்படும் படியாகப் பத்துக் கோடி ஆண்டுகள் அரசாண்டு வருபவன். சிறந்த மதில்கள் உடைய மேரு மலையின் சிகரத்தில் இரத்தினங்கள் பதித்த சாளரம் (சன்னல்) அமைந்த உயர்ந்த இடத்தில் இருந்து.* **(5.3.13)**

**ஒருப கல்தனி இருந்தனன் இவைஇவை உணர்ந்தான்**
**பெருகு போகங்கள் முனிந்தனன் பிறவியை நினைந்தான்**
**பொருு(வு)இல் மூவுல கங்களில் போகங்கள் நெடுநாள்**
**பருக நல்குநம் பேர்அர சால்என்கொல் பயனே.**

**பொழிப்புரை:** *ஒருநாள் தனியாக இருந்து இவை இவற்றைச் சிந்தித்தான், பெருகிவரும் போகங்களை வெறுத்தான். பிறவியினால் வரும் துயரத்தை நினைத்துப் பார்த்தான். ஒப்பற்ற மூன்று லோகங்களிலும் உள்ள போகங்களை நீண்ட நாட்களாக அனுபவிக்கத் தருகின்ற நம்முடைய பெரிய இராச்சியத்தால் என்ன பயன்?* **(5.3.14)**

**எய்து போதினில் இனியவாய் எங்ஙனே எனினும்**
**நொய்தில் நீங்கு(ம்)இப் போகத்தில் இன்பமே நுவலின்**
**நெய்தல் நோக்கியர் இன்பமும் நெருநல்போல் இன்றும்**
**செய்த செய்வதே அல்லது கண்டிலம் செயல்கள்.**

**பொழிப்புரை:** *கிடைக்கும் காலத்தில் போகங்களின் சுகம் அனுபவிக்கும் போது இனிமையாக இருப்பினும் எந்த வகையிலாவது அதி விரைவில் அது நீங்கி விடுகிறது. சொல்லப்போனால் இந்தப் போகங்களின் சுகம் இவ்வளவு தான். கருங்குவளை மலர் போன்ற மாதர் இன்பமும் நேற்றைய சுகம் போலவே தான் இன்றும் உள்ளது. செய்த செயல்களையே செய்வதைத் தவிர புதியதாக வேறொரு செயலைச் செய்யக் காணோம்.* **(5.3.15)**

**உண்ட இன்பமே மீளவும் உண்கின்ற(து) ஒருநாள்**
**கண்ட காட்சியே மீளவும் காண்கின்ற(து) உவந்து**
**கொண்ட கோலமே மீளவும் கொள்கின்ற(து) என்றால்**
**விண்ட மேலவர் நாணுறா(து) ஒழிவரோ வெறுத்து.**

**பொழிப்புரை:** *அனுபவித்த சுக போகத்தையே மீண்டும் அனுபவிப்பது, ஒரு நாள் கண்ட காட்சியையே மீண்டும் காண்பது, மகிழ்ச்சியாக அலங்கரித்த ஆடை ஆபரணங்களையே மீண்டும் அலங்கரித்துக் கொள்வது என்றால், ஆசையை விட்டு அனைத்தையும் தியாகம் செய்த மேலோர் வெட்கம் அடையாமல் விஷயத்தில் மூழ்கியிருக்கும் என்னை வெறுத்து ஒதுக்கி விடுவரோ?* **(5.3.16)**

**அருந்து மட்(டு)இனி(து) என்றதே மீண்டுமீண்(டு) அருந்தித்**
**திருந்தி டாதபுன் சிறுவர்போல் செயல்அறி யாது**
**வருந்து கின்றனன் நாள்பக்கம் மாத(ம்)ஆண்(டு) உகங்கள்**
**பொருந்தி வந்ததே அல்லது புதி(து)ஒன்றும் வாரா.**

**பொழிப்புரை:** *அனுபவிக்கும் வரை இனிமையாக இருக்கின்றது என்று மீண்டும் மீண்டும் அனுபவித்துப் பொருள்களின் இயற்கை அறிந்து தெளிந்திடாத அற்பச் சிறுவனைப் போலக் காரியங்களைப் பகுத்தறியாது வருத்தத்தையே அடைந்து நிற்கின்றேன். நாள், பட்சம், மாதம், ஆண்டு, யுகங்கள் அடுத்து வந்ததே அன்றிப் புதியதாக நாள், மாதம் முதலானவை ஒன்றும் வரவில்லை.* **(5.3.17)**

**செய்யத் தக்கன யாவையும் செய்து(ம்)இச் செயலால்**
**உய்யப் பெற்ற(து)என் செயல்மறித் திலாத(து)ஒன்(று) உலகில்**
**ஐயப் பாடற யாதினால் எய்து(ம்)அப் பொருள்தான்**
**மையப் போகத்தால் ஒழிந்து மேல்வரு நெறியாதே.**

**பொழிப்புரை:** *செய்ய வேண்டிய அனைத்தையும் செய்த போதிலும், இந்தச் செயல்களால் அடையப் பெற்றது என்ன? மீளவும் செய்ய வேண்டுவது இல்லாதது ஒன்றினை இவ்வுலகில் சந்தேக விபரீதம் இல்லாமல் எதனால் அடையலாம்? அந்தப் பொருளானது மயக்கத்தைத் தரக்கூடிய போகத்தால் அன்றி வருகின்ற (அடைகின்ற) உயர்ந்த மார்க்கம் (நெறிமுறை) எது?* **(5.3.18)**

**அழிவி லாததாய் அன்னிய மாகிய அதுசேர்**
**வழிய(து) ஏதெனச் சிந்திப்பான் மனத்(து)ஒன்றை நினைந்து**
**மொழிய லுற்றனன் அறிந்தனன் என்(று)ஒரு நொடியில்**
**விழிபெ ருத்திடப் புருவமேல் ஏற்றினன் வியந்தான்.**

**பொழிப்புரை:** *அழிவிலாததாய், விஷய சுகத்திற்கு அன்னியமாய் விளங்கும் வஸ்துவை அடையும் வழி ஏது எனச் சிந்திப்பான். மனதில் (முன்பு கேட்டதனால் பிதா உரைத்த) ஒன்றை நினைந்து ஒரு கணப் பொழுதில் அறிந்துகொண்டேன் என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டனன். விழி அகன்று விரிந்திட, புருவங்கள் மேல் உயர்ந்திட ஆச்சரியப்பட்டான்.* **(5.3.19)**

**தன்ன(து) உள்ளுற நினைத்தது விளம்பினன் தானே**
**முன்னம் இங்குயான் கேட்டனன் முழு(து)உணர் முதன்மை**
**என்னரும் பிதாவிரோ சனன்தன்னை இப்படியே**
**அன்ன வன்புகன் றனன்என இவையெலாம் அறைவான்.**

**பொழிப்புரை:** *தனக்குள்ளேயே எண்ணியதைத் தானே சொல்லிக்கொண்டான். முன்பு இங்கு சகலமும் உணர்ந்த, ஆத்ம தத்துவத்தில் முதன்மையான எனது அரிய பிதா விரோசனன் தன்னை யான் கேட்டுக் கொண்டதற்கு, அந்த தந்தை இப்படியே உபதேசித்தான் என்று இவற்றை (பின்வருவதை)க் கூறலாயினன்.* **(5.3.20)**

**ஐய துன்பமும் இன்பமும் என்பன அனைத்தின்**
**மையல் யாவையும் மடிந்ததோர் இடம்எது மனத்தின்**
**வெய்ய மோகம்தீர் இடம்எது வேட்கைகள் எல்லாம்**
**கைய றப்பட்ட இடம்எது கருணையால் உரையாய்.**

**பொழிப்புரை:** *(மாபலி கேட்டல்) அருமைத் தந்தையே! விஷயங்களினால் உண்டாகும் சகல இன்பமும் துன்பமும் ஆகியவற்றின் விவகாரப் பிராந்தியும் நாசமான இடம் எது? மனதின் கொடிய மோகங்கள் தீர்ந்த இடம் எது? சம்சாரத்தின் சகல ஆசைகளும் அடியோடு விடுபட்ட இடம் எது? கருணையால் உரைத்து அருள்வீர்.* **(5.3.21)**

நிராசை யாகியே இளைப்பெலாம் நீங்(கு)இடம் ஏது
விரவு பேரின்பத்(து) அழகிதாய் விரிஇடம் ஏது
பராப ரம்தெளிந்(து) உணர்ந்தநீ பகர்திஎன் நெஞ்சை
அராவு துன்பம்விட்(டு) இளைப்பெலாம் ஆறுதற்(கு) என்றேன்.

**பொழிப்புரை:** *சகல ஆசைகளும் தீர்ந்து சாந்தமாக இளைப்பாறும் இடம் எது? பேரின்பமானது நிறைந்து அழகென விளங்கும் இடம் எது? பராபர வத்துவை ஆராய்ந்து உணர்ந்த நீர் எனக்கு உபதேசிப்பாய். எனது மனதை அறுக்கின்ற துன்பத்தை விட்டு இளைப்பாறுவதற்காகக் கேட்டேன்.* **(5.3.22)**

எந்தை அப்பொழு(து) உரைசெய்வான் மைந்தகேள் இயம்ப
அந்த(ம்) அற்(று)அற விசாலமாய் அளவற அகன்று
சுந்த ரத்ததாம் தேச(ம்)உண்(டு) அண்டத்தின் தொகுதி
வந்(து)உ தித்(து)இருந்(து) இறப்பதற்(கு) இடமதாய் வயங்கும்.

**பொழிப்புரை:** *எனது பிதாவிடம் அந்தக் கேள்விகள் கேட்ட பொழுது தந்தை உரைத்தான் மைந்தனே! சொல்லக் கேட்பாய். முடிவில்லாதாய் பரிபூரணமாய் பிரமாணங்களைக் கடந்து அழகு வாய்ந்ததாய் ஒரு தேசம் உள்ளது. அந்தத் தேசமானது (இடமானது) அண்டக் கூட்டம் ஆயிரம் வந்து தோன்றி நிலைபெற்று ஒடுங்கும் விவகாரத்திற்கு உரிய இடமாக விளங்கும்.* **(5.3.23)**

ஆய தேயத்தில் ஐம்பெரும் பூதமும் இல்லை
சேய குன்றில்லை வனம்இல்லை தீர்த்தங்கள் இல்லை
தூய தேவரே முதலிய தொல்லுயிர் இல்லை
நாய கன்பெரும் சுடர்எனும் ஒருவனே நண்ணும்.

**பொழிப்புரை:** *விசாலமான அந்த தேசத்தில் பஞ்ச பூதங்கள் இல்லை. மலைகள் இல்லை, காடுகள் இல்லை, நதிகள் இல்லை. தூய தேவர் முதலான பழமையான உயிர்களும் இல்லை. ஒளிப்பிழம்பு வடிவமான தலைவன் ஒருவனே இருப்பான்.* **(5.3.24)**

முழுதும் காண்பவன் முழுதினும் செறிபவன் முதல்வன்
பழு(து)இல் சாந்தனாய் நிறைந்துவா ளாவுறை பண்போன்
வழுவி லாஇவன் ஆக்கிய மந்திரி வசத்தால்
தழுவு செய்கைகள் யாவையும் நடத்திடும் தானே.

**பொழிப்புரை:** *அனைத்தையும் அறிபவன், அனைத்திலும் இருப்பவன், அனைத்துமாக இருப்பவன் குற்றமில்லாத சாந்தம் உடையவனாய் பூரணமாய் யாதொரு செயலும் இன்றி இருக்கும் தன்மையன். நித்தியனான இவன் சங்கற்பித்த மந்திரி மூலமாக வந்தமைந்த காரியங்கள் எல்லாவற்றையும் தானே செய்வித்திடும்.* **(5.3.25)**

**இல்லகு) உள்ளதாம் உள்ளதும் இல்லதாம் இமைப்பில்**
**புல்லு மந்திரி நினைத்திடில் இவன்ஒன்றும் புசிக்க**
**வல்லது) இல்லைஒன்று) அறிகிலன் மன்னனை விடாது**
**செல்லும் தன்மையால் கேவலம் அனைத்தையும் செய்யும்.**

**பொழிப்புரை:** *மன்னவன் சந்நிதியில் பொருந்தி இருக்கின்ற மந்திரி நினைத்திடில். கணப்பொழுதில் முடியாதது முடியும், கூடுவது கூடாதாம். இந்த மந்திரி ஒன்றையும் புசிக்கும் ஆற்றல் இல்லாதவன். ஒன்றையும் அறிந்திலன். எப்போதும் சந்நிதியிலேயே இருப்பதனால் அறியாதவன் ஆயினும் மன்னவன் பொருட்டே அனைத்தையும் செய்து முடிப்பவன்.* **(5.3.26)**

**இந்த மந்திரி தன்னெதிர் யாவையும் இயற்ற**
**அந்த மன்னவன் என்றும்)ஏ காந்தத்தன் ஆகும்**
**மைந்த என்று)உரைத்து) அருளிய பிதாவைநான் மகிழ்ந்து**
**புந்தி யால்அந்த வகையெலாம் வினவினேன் புகழ்ந்து.**

**பொழிப்புரை:** *கூறிய மந்திரி தனது சந்நிதானத்தில் எல்லாவற்றையும் செய்ய. அந்த மன்னவன் எப்பொழுதும் ஏகாந்த வாசத்தில் இருப்பன், மைந்த! என்று உரைத்த தந்தையை நோக்கி மனம் மகிழ்ந்து துதி செய்து புத்தியால் அந்த வகையை எல்லாம் விவரமாகக் கேட்டேன்.* **(5.3.27)**

**அறவி லாசமாய் ஆதியும் வியாதியும் இன்றி**
**நிறைவி தானஅத் தேசம்)ஏது) அதுதனை நேரும்**
**திறவி யாது)அது யாதினால் எய்தும்)அத் தேசத்து)**
**இறவி லாதஅம் மன்னன்)ஆர் மந்திரி யாவன்.**

**பொழிப்புரை:** *முழுதும் விசாலமாய், சூக்கும தேகத்தில் விருப்பமும், தூல தேகத்தில் வியாதியும் இன்றி நிறைந்திருப்பதான அந்தத் தேசம் எது? அதனை அடையும் வழி யாது? அது எதனால் அடையக்கூடும்? அந்தத் தேசத்து இறப்பில்லாத மன்னன் யார்? மந்திரி யார்?* **(5.3.28)**

**புவனம் யாவையும் விநோதத்தால் அடர்த்தஎன் புயத்தால்**
**அவன்அம் மந்திரி யுடன்அடர்ப்பு) உறாவலி அமர்ந்தது)**
**எவன்)அ றைந்தருள்(க) என்றலும் என்பிதா இசைப்பான்**
**கவன நீள்வலி மந்திரி வேகம்)ஆர் கடப்பார்.**

**பொழிப்புரை:** *சகல லோகங்களையும் விளையாட்டாக வெற்றிகொண்ட வலிமையுடைய என் தோள்களால்அந்த மன்னவன், அந்த மந்திரியுடன் வெற்றி பெற முடியாத வலிமையுடன் கூடியிருப்பது எப்படி? கூறி அருள வேண்டும் என்று கேட்டலும், எனது தந்தை கூறியதாவது... எல்லோரையும் கலங்கச் செய்யும் வலிமை படைத்த அந்த மந்திரியின் வேகத்தைக் கடந்து செல்பவர் யார் உளர்?*

**(5.3.29)**

தேவர் தானவர் எண்ணறு கோடிகள் திரண்டு
மேவ வென்றிலர் சூலநே மிகள்முதல் என்ற
மேவ ரும்படைக் கலமெலாம் அவன்மிசை விட்டால்
மாவ ரும்கல்லில் அறைந்தபூ எனமுனை மடியும்.

**பொழிப்புரை:** *தேவர், அசுரர் எண்ணற்ற கோடியாகத் திரண்டு எதிர்த்துப் போராடியும் வெற்றி கொள்ள முடியவில்லை. சூலம், சக்கரம், வச்சிரம் முதலான பிரசித்தி பெற்ற ஆயுதங்கள் எல்லாவற்றையும் அந்த மந்திரி மீது ஏவினால் வலிமையுடைய பெரும் பாறைக்கல்லில் மோதிய பூப்போல முனை மழுங்கும்.* **(5.3.30)**

விளிவ ரும்திறல் அந்தமந் திரிஅந்த வேந்தால்
எளிது வென்றிடில் வணங்குறும் இவ்வகை இன்றேல்
அளிய மேருவை அசைப்பினும் அசைப்பரிது ஆகும்
ஒளிகொள் ஊகபுந் தியின்அலால் வெலப்படான் ஒருங்கே.

**பொழிப்புரை:** *கெடாத வலிமையுடைய அந்த மந்திரி, அந்த மன்னவனால் சுலபமாக வெற்றி கொண்டால் கீழ்ப்படிந்து நிற்கும். அவ்வாறு செய்யவில்லை எனில், என் கருணைக்குப் பாத்திரமான மைந்தனே! மேரு மலையைக் கூட அசைக்கலாம், இந்த மந்திரியை அசைப்பது அரிதாகும். ஒளி பொருந்திய ஊக புத்தியினால் அன்றி அந்த மந்திரியை முழுதும் வெற்றி கொள்ள முடியாது.* **(5.3.31)**

ஊக புந்தியால் அல்ல(து)அவ் வமைச்சனை உற்றால்
வேக நாகம்போல் எரித்திடும் வேந்தனோ(டு) அமைச்சன்
ஏக ராச்சியம் செய்யு(ம்)அத் தேசமும் யாவும்
சோகம் அற்றிடக் கேள்என விரித்(து)இது சொன்னான்.

**பொழிப்புரை:** *(வைராக்கியம், விவேகம் ஆகிய) ஊக புத்தியினால் அந்த மந்திரியை வெல்ல வேண்டும். அந்த மந்திரியை நெருங்கி எதிர்த்தால் சீற்றம் உடைய நாகத்தைப் போல எரித்துச் சாம்பல் ஆக்குவன், அந்த மன்னவனோடு கூடி அந்த மந்திரி ஏகமாக அரசாட்சி செய்யும் அந்த தேசத்தையும், பிறவற்றையும் கலக்கம் அடையாது கேட்பாய் என விரிவாக இதனை(பின்வருவதை)ச் சொன்னான்.* **(5.3.32)**

முன்னம் நாம்சொன்ன தேச(ம்)ஓர் முடிவிலா முத்தி
மன்னன் என்றது மாசிலா மணியென வயங்கும்
தன்னில் வே(று)அலா ஆத்தும தத்துவம் தானே
அன்ன வேந்தனால் அமைத்தமந் திரிமனம் ஆகும்.

**பொழிப்புரை:** *முன்பு நாம் கூறிய தேசம் என்பது சகல துக்கமும் தீர்ந்த நித்தியமான முத்தி ஆகும். மன்னன் என்று சொன்னது குற்றம் இல்லாத மணியைப் போல விளங்கும் தன்னைக் காட்டிலும் வேறாகாத தன் வடிவமே ஆன ஆன்ம தத்துவமே ஆகும். அந்த மன்னவனால் அமைக்கப்பட்ட மந்திரி என்பது மனமே ஆகும்.* **(5.3.33)**

**விடயம் யாவையும் ஒருப்பட ஒருக்கிநல் விராகம்**
**உடைமை யாவது பரமமாம் ஊக(ம்)என்(று) உரைத்தேம்**
**தடையி லாமனம் விராகத்தால் வெலப்பட்ட தன்மை**
**படைசெய் மத்தமா தொழுவத்துள் அகப்பட்ட பண்பே.**

**பொழிப்புரை:** *சகல விடயங்களையும் எல்லா வகையாலுமே ஒடுக்கி ஆசையின்றி திட வைராக்கியம் அடைந்திருத்தலே மேலான யுக்தி என்று கூறினோம். விடயங்களில் தடையின்றிச் செல்லும் மனமானது வைராக்கியத்தால் வெற்றி கொள்ளப்பட்ட தன்மை யுத்தம் செய்கின்ற யானை குழியில் அகப்பட்ட தன்மை போன்றதாம்.* **(5.3.34)**

**கற்(று)அ றிந்திலார் மனத்தைநாற் கூ(று)எனக் கற்பித்(து)**
**உற்ற போகத்தில் உபயமும் நூல்வழி ஒன்றும்**
**பெற்ற தேசிகன் பூசையில் ஒன்றுமாய்ப் பேணில்**
**துற்ற கங்குல்போய் விவேகமாம் சுடர்வந்து தோன்றும்.**

**பொழிப்புரை:** *(மனதை ஜெயிக்கின்ற முறையை அதிகாரி பேதத்தால் மூன்று கவிகளில் கூறல்) கல்வி கேள்விகளில் சிறந்து விளங்காதவர் மனதினை நான்கு கூறுகளாய்க் கற்பனை செய்து கொண்டு, நுகர்கின்ற வினை வசத்தால் வந்த போகங்களுக்கு இரு பங்கும், சாத்திர வழிகளில் ஒரு பங்கும், சரணாகதி அடைந்து ஞானாசிரியர் பணிவிடையில் ஒரு பங்கும் ஆக இந்த முறையைப் பின்பற்றி வந்தால் நெருங்கிய அஞ்ஞானம் எனும் இரவு போய் பிரகாசமான ஒளி வந்தடையும். (தூய மனம் உடையவனே அதிகாரி ஆவன்)* **(5.3.35)**

**சிறி(து)அ றிந்தவர் மனத்தைநாற் கூ(று)எனச் செய்து**
**பொறிவ சத்(து)ஒன்றும் தேசிகர் பூசையில் இரண்டும்**
**அறியும் நூல்பொருள் மனனத்(து)ஓர் கூறுமே ஆக்கி**
**நெறிவி வேகத்தால் ஒன்றுணர் ஞானமே நிரம்பும்.**

**பொழிப்புரை:** *கொஞ்சம் கற்று அறிந்தவர் மனதினை நான்கு பாகங்களாகச் செய்து கொண்டு, புலன்களால் தோன்றும் போகங்களுக்கு ஒரு பாகமும், ஞானாசிரியர் பணிவிடையில் இரண்டு பாகங்களும், அறிந்து கொள்ள வேண்டிய சாத்திரங்களின் அர்த்தத்தைச் சிந்திப்பதில் ஒரு பாகமும் ஆக்கி, பின்பற்றும் இம்முறையால் வரும் விவேகத்தால் அத்வைத பிரம்ம ஞானம் பூரணமாக உண்டாகும்.* **(5.3.36)**

**ஞானம் உற்றவர் மனத்தைநாற் கூ(று)என நாட்டி**
**ஆன நூலினும் விராகத்தும் அனுபவம் தனிலும்**
**ஆன நற்குரு பூசையின் வழியினும் செலுத்தில்**
**ஈனம் அற்றநல் முத்திவந்(து) எய்திடும் எளிதின்.**

**பொழிப்புரை:** *தத்துவம் துணிந்து திடமாக உடையவர் மனதினை நான்கு கூறுகளாகச் செய்து,* **(**பிரமாணகத**)** *சந்தேகம் தீர்வதற்காக சாத்திரங்களிலும், வைராக்கியத்திலும்,* **(**பிரமேயகத சந்தேகம் தீர்வதற்கான நிட்டை ஆகிய**)** *சுய அனுபவத்திலும், நல்ல ஞானாசிரியர் பணிவிடைகளிலும் தலா ஒரு பாகம் செலுத்திப் பின்பற்றினால் சர்வ*

*துக்கமும் விடுபட்ட பரமானந்த வடிவ மோட்சம் சுலபமாக வந்து அடைந்திடும். (மனதை நான்கு கூறு என்றது அதனுடைய விருத்தியை-வேலையை என்பதாகப் பொருள் கொள்ள வேண்டும்)* **(5.3.37)**

*(பிரமாணகத சந்தேகம்: வேதம் கர்மத்தைச் சொல்லுகின்றதா அல்லது ஏகாத்ம பிரம்மத்தைப் பற்றிச்சொல்லுகின்றதா என்று வருகின்ற சித்த விருத்தி.*

*பிரமேயகத சந்தேகம்: பிரம்மமே ஜகத் காரணமோ அல்லது மாயை முதலானவை ஜகத் காரணமோ என்று வருகிற சித்த விருத்தி)*



**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**மிக்க அறிவால் விசாரத்தால் மெய்ம்மை உணர்வும் நிராசையும்நீ**
**ஒக்க என்றும் கைக்கொள்வாய் ஊற்ற மான நிராசையினால்**
**தக்க விசாரம் விசாரத்தால் தவிரா நிராசை தம்மாற்றாம்**
**தொக்கு நிரம்பும் வாரிதியும் தொடர்மே கமும்துன் னுதல்போலாம்.**

**பொழிப்புரை:** *திடப் பிரஞ்ஞையினாலும், விசாரத்தினாலும் ஆன்ம உணர்வையும் நிராசையும் சமமாக நீ எப்பொழுதும் கைக்கொள்வாய். அதி திடதரமான வைராக்கியத்தினால் விசாரமும், விசாரத்தால் தவிர்க்க முடியாத நிராசையும் ஒன்றுக்கு ஒன்று உதவியாய் பூரணமாகும். கடலும் அதனைத் தொடர்ந்த மேகமும் ஒன்றுக்கு ஒன்று நிரப்பிக் கொள்வது போல்வதாம். (கடலில் இருந்து சூரிய ஒளிக்கதிர் மூலமாக மேகம் நிரம்புகிறது. அந்த மேகமானது பொழிகின்ற மழையினால் கடல் நிரம்புகின்றது. அதைப் போன்றது என்பது பொருள்)* **(5.3.38)**

**நாட்டின் இயல்பு வழுவாமல் நட்டோர்க்(கு) இதமாம் நற்பொருள்கள்**
**ஈட்டி முன்னம் அதனாலே இனிய குணத்தில் உயர்ந்தோரைக்**
**கூட்டி அவரால் நிராசையினைக் கூட்டி அதனால் விசாரத்தைத்**
**தீட்டி அதனால் மெய்ஞ்ஞானம் தெளிந்தால் முத்தி சித்திக்கும்.**

**பொழிப்புரை:** *முதலில் உலகத்தோடு ஒத்து வாழ்ந்து முறை தவறாமல், மனைவி மக்கள் சுற்றத்தினர்க்குத் தருமம் தனம் முதலிய நல்ல பொருள்களைச் சம்பாதித்து, அதனால் இனிய குணங்கள் நிறைந்த உயர்ந்தவரைச் சேர்த்துக் கொண்டு அவர்களால் நிராசையினை அடைந்து, அதனால் விசாரத்தை அதிகரிக்கச் செய்து, அதனால் மெய்ஞ் ஞானம் தெளிந்தால் மோட்சமானது உண்டாகும்.* **(5.3.39)**

**என்று முன்னம் என்தந்தை இசைத்தான் தெய்வ சகாயத்தால்**
**ஒன்றும் ஒழியாது இன்(று)உணர்ந்தேன் உணர்வு பெற்றேன் போகத்தில்**
**நின்ற ஆசை இன்(று)ஒழித்து நிராசை என்னும் நிதியாலே**
**துன்றி நொய்தாய் உபசாந்தச் சுதையில் குளிர்ந்த சுகம்பெற்றேன்.**

**பொழிப்புரை:** *என்று இவ்வண்ணம் எனது தந்தை உபதேசித்தான். தெய்வ சகாயத்தினால் ஒன்றையும் விடாமல் இன்று உணர்ந்தேன். விவேகத்தை அடைந்தேன். போகங்களில் கொண்டிருந்த ஆசை எலாம் இன்று ஒழித்து, நிராசை என்ற செல்வத்தாலே நிரம்பி, விரைவாக உபசாந்தம் (அமைதி) ஆகிய அமிழ்தத்தில் குளிர்ந்து சுகம்பெற்றேன்.* **(5.3.40)**

அந்தோ அந்தோ இதுநெடுநாள் அறிந்தி லேன்இன்(று) அறிவுற்ற
சந்தோ டத்தை என்சொல்வேன் சகல நினைவும் சமித்தாறி
நொந்தோர் இன்ப துன்பத்தால் நோவா(து) இருக்கும் இடம்இதுவே
உய்ந்தோர் உறையும் பதம்இதுவே உபசாந் தத்தின் உயர்(வு)இதுவே.

**பொழிப்புரை:** *அந்தோ! அந்தோ! இதனை வெகு காலமாக அறியாமல் இருந்தேன். இன்று அறிந்து கொண்ட சந்தோஷத்தை என்னவென்று சொல்வேன். எல்லா எண்ணங்களும் ஒழிந்து சாந்தமாய், இன்ப துன்பங்களால் நொந்தவர்கள் நோவாது இருக்கும் இடம் இதுவே. அவித்தையைக் கடந்தவர் வாழ்கின்ற பதம் இதுவே. பரம உபசாந்தியின் (அமைதியின்) உயர்வும் இதுவே.* **(5.3.41)**

என்ன உரைத்து நான்ஆர்என் உருவம் ஏ(து)என்(று) யான்விளங்கத்
தன்னை அறியும் சுக்கிரனைத் தாழ்ந்து வினவித் தத்துவத்தை
உன்னும் பொழுதே அஞ்ஞானம் ஓடும் என்ன உசனாவை
முன்னம் வேண்டும் எனக்கண்கள் முகிழ்த்து நினைந்தான் முழு(து)அன்பால்.

**பொழிப்புரை:** *இவ்வாறு தனக்குள்ளேயே பேசிக்கொண்டு, நான் யார்? என்னுடைய வடிவம் எது? என்பதை யான் விளங்கிக் கொள்ளத் தன்னை அறியும் சுக்கிர ஆசாரியரை வணங்கிக் கேட்டு தத்துவத்தை சிந்திக்கும் பொழுதே அஞ்ஞானம் ஓடிப் போகும் என்று சுக்கிரனைத் தன்முன்பு வர வேண்டும் என்று கண்களை மூடி முழுமையான அன்பு நிறைந்து வேண்டினான்.* **(5.3.42)**

மெய்யா கியசச் சிதானந்த வெளியே வடிவா கியவெள்ளி
உய்யா நின்ற மாவலிமுன் உதிப்ப அவனும் உவந்(து)இறைஞ்சிக்
கையார் மணியால் உயர்மலரால் காலில் அருச்சித்(து) உரைசெய்வான்
ஐயா நின்அன்(பு) எனைஎழுப்ப அடியேன் உரைப்ப(து) அறிந்(து)அருள்வாய்.

**பொழிப்புரை:** *சத்தியமாகிய சச்சிதானந்த வெளியே வடிவமான சுக்கிரன் ஆன்ம வாழ்வை அடையாத மகாபலி முன் தோன்ற, அவனும் மகிழ்ந்து வேண்டி, கைகளில் நிறைந்த இரத்தின மணிகளையும், சிறந்த பூக்களைக் கொண்டும் அவரின் பாதங்களைப் பூசித்து சொல்வான்... ஐயா! நின்னுடைய அருளானது என்னைத் தூண்ட அடியேன் சொல்வதைக் கேட்டு அறிந்து அருள் செய்வீர்.* **(5.3.43)**

என்இங்(கு) உள்ள(து) அப்பால்என் எல்லை சொல்லப் பட்(டு)உள(து)என்
துன்னும் எல்லை இல்லா(து)என் சொல்லும் நான்ஆர் நீயார்இம்
மன்னும் உலகம் ஏ(து)என்று மயக்கம் தீர அருள்என்ன
அன்ன(து) எல்லாம் தெரியவிரித்(து) அவனுக்(கு) இவன்நன்(று) அறிவித்தான்.

**பொழிப்புரை:** *இவ்விடத்து இருப்பது யாது? அங்கு இருப்பது யாது? எல்லை கூறப்பெற்றுள்ளது எது? எல்லை இல்லாதது எது? இவ்வாறு கேட்கும் நான் யார்? விடை கூறும் தாங்கள் யார்? நெருங்கிப் பொருந்திய இந்தப் பிரபஞ்சம் எது? என்று மோகம் தீர அருள்வீர் என்று வேண்டிய மகாபலிக்கு சுக்கிராச்சாரியார் விரித்து பகுத்து சந்தேகம் இன்றித் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் வகையில் நன்றாக உபதேசித்தான்.*
**(5.3.44)**

**வரும்கற் பகவின் விரைந்(து)ஏக வந்தேன் பலசொல் லியும்பயன்என்**
**சுருங்கச் சொல்லும் பயன்கேளாய் தோன்ற இங்(கு)உள் ளதுவுஞ்சித்(து)**
**ஒருங்கப் புறத்தும் சித்(து)எல்லை உள்ள தும்சித்(து) எல்லையற**
**நெருங்குற் றதும்சித்(து) யான்சித்து நீசித்(து) உலகம் நிறைசித்தே.**

**பொழிப்புரை:** *வேள்வி, புண்ணியச் செயல்களால் அடையப் பெறும் கற்பகம் மரம் நிறைந்த சுவர்க்க லோகம் செல்ல எண்ணியிருந்தேன். நீ அழைத்ததால் இங்கு வந்தேன். பலவாறாகச் சொல்லியும் பயன் தான் என்ன? சுருக்கமாகச் சொல்வதைக் கேட்டுப் பயன் அடைவாய். பிரத்தியட்சமாகக் காணப்படுகின்ற இங்கு உள்ளவையும் சித்து. இதற்கு அப்பால் உள்ளவையும் சித்து. எல்லைக்கு உட்பட்டதும் சித்து. எல்லைக்கு உட்படாது (எல்லை அற்றதாய்) விளங்குவதும் சித்து. யானும் சித்து வடிவமே. நீயும் சித்து வடிவமே. பிரபஞ்சமும் சித்து வடிவமே.* **(5.3.45)**

**இதுவே சுருக்கம் இவ்வறுதி இதயம் கொண்(டு)இவ் வகைக்(கு)ஏற்ற**
**மதியால் நின்னை நினைநீயே மாறா(து) உணர்ந்து நோக்குதியேல்**
**அதனால் அனந்த மாம்பதத்தை அடைதி ஓர்ஏழ் அருந்தவரும்**
**புதிதோர் தெய்வ காரியத்தில் புகுந்தார் யாமும் போகுதுமால்.**

**பொழிப்புரை:** *இப்போது உபதேசித்ததே சுருக்கமாம். இந்த நிச்சயத்தை இதயத்தில் நிறுத்தி இதற்கு ஏற்றவாறு புத்தியால் உன்னை நீயே சுயமாக எண்ணுவாய். இடை விடாது அறிந்து காண்பாயேல் அதனால் முடிவற்ற மோட்ச பதத்தை அடைவாய். ஒப்பற்ற சப்த ரிஷிகளும் புதியதாக ஒரு தெய்வ காரியத்தைச் செய்யத் தொடங்கியுள்ளனர். யாமும் அதற்காகப் போகின்றோம். (திருசிய பாவனையோடு கூடிய சித்தே பந்தமாம். அது விடுபட்ட சித்து முத்தி எனப்படும். திருசிய பாவனையோடு சம்பந்தம் அற்ற சித்தே ஆன்மாவாம்.)*
**(5.3.46)**

**என்னா வெள்ளி ஏகியபின் எல்லாம் அறிவாம் உலகினைப்பார்த்(து)**
**உன்னா ஒக்கும் ஒக்கு(ம்)எனக்(கு) உசனா உரைத்த(து) உண்மையதே**
**முன்னாம் அவனி சித்(து)உலகு மூன்றும் சித்து நான்சித்து**
**நன்னா லான திசைசித்து நாட்டு கின்ற(து) எலாம்சித்தே.**

**பொழிப்புரை:** *என்று இவ்வாறு உபதேசித்து சுக்கிரன் சென்ற பின்பு, சகல லோகங்களையும் சித்தாகவே பார்த்து, சிந்தித்து, பொருந்தும் பொருந்தும் எனக்கு சுக்கிராச்சாரியார் உரைத்தது உண்மையானதே. முன்னால் தெரியும் உலகம் சித்து. மூன்று லோகங்களும் சித்து. நான் சித்து வடிவம். எட்டுத் திசைகளும் சித்து. எல்லாப் பொருள்களும் சித்தே ஆகும்.* **(5.3.47)**

தெரிக்கும் பொருளும் தரிசனமும் தீர்ந்து வெறும்நின் மலவடிவாய்ப்
புரிக்கும் உதயம் விடாது)என்றும் பொலியும் பரமப் பொருள்ஆனேன்
வரிக்கும் காட்சி இலாஅறிவே வடிவாய் ஒருகா லேஎங்கும்
விரிக்கும் நிறைவாய் உபசாந்த வெளியாய் அறிவாய் மிகுபொருள்நான்.

**பொழிப்புரை:** *(இவ்வாறாக நான் யார் என்ற கேள்விக்குப் பின்னர் சுயமாகவே தன்னால் உணரப்பெற்றதைக் கூறல்) புலன்களுக்கு விஷயமாகும் திருசியப் பொருள்களும், காட்சியும் விடுபட்டுக் கேவலம் நின்மல வடிவமாய் எப்பொழுதும் உதயமாகி விளங்கும் நித்தியப் பிரகாசமான வஸ்துவாக ஆனேன். வாசனையினால் பிணிக்கும் காட்சி இல்லாத அறிவே வடிவமாய், ஒன்றேயான ஒரு சித்தே எவ்விடத்திலும் நிறைந்து விளங்குகிறது. பூரணமாய் பரம சாந்தமான வெட்ட வெளியாய்* (சிதா காசமாய்) *விளங்கும் சச்சிதானந்த வஸ்து நானே.* **(5.3.48)**

ஓங்கும் சின்மாத் திரப்பொருளாம் ஓங்கா ரத்தை உள்நினைந்து
தூங்கும் தியான பரனாகித் தொடர்சங் கற்பம் எல்லாம்போய்
வாங்கும் தொழில்ஏ டணைஐயம் மனனம் ஞானம் ஞேய(ம்)இவை
தாங்கும் ஞாதா அனைத்து(ம்)அறத் தனிச்சித் திரம்போல் நெடி(து)இருந்தான்.

**பொழிப்புரை:** *எல்லாவற்றுக்கும் மேலான சின்மாத்திரத்தைப் பொருளாக உடைய ஓங்காரத்தை உள்ளே தியானித்து, யோக நித்திரையில் தான் தானாய். தொடர்கின்ற சங்கற்பம் அனைத்தையும் ஒழித்து, வெளியில் இழுக்கும் தொழிலான மூவாசை, சந்தேகம், மனனம், தியானம், தியானிக்கப்படும் பொருள், இவற்றைத் தாங்குகின்ற தியான கர்த்தா (திரிபுடிகள்) அனைத்தும் விடுபட்டுத் தனியாக வரைந்த ஓவியம் போல நீண்ட காலம் நிருவிகற்ப சமாதியில் இருந்தான்.* **(5.3.49)**

காற்றி லாத விளக்(கு)ஒளிபோல் கலங்கா(து) இருந்த மாவலிதான்
சீற்ற மயல்தீர்ந்(து) அறநினைந்து சிந்தை என்னும் மா(சு)இன்றித்
தோற்றும் சத்தா மாத்திரத்தால் சுடர்விட்(டு) எறித்த படிசொல்லில்
ஆற்றல் முகில்தீர் சரற்காலத்(து) அறவே தெளிந்த விண்போலும்.

**பொழிப்புரை:** *(நிருவிகற்ப சமாதியை வர்ணித்தல்) காற்று அசையாத இடத்தில் இருந்த விளக்கின் ஒளிபோல விட்சேபம் இல்லாது இருந்த மகாபலி, கோபம், மோகம் தீர்ந்து, முழுதும் பூரணமாகி, மனம் என்னும் அழுக்கு இன்றி (மனம் இல்லாமல்) தோற்றத்தில் சத்து மாத்திரமாகப் பிரம்ம ஒளிமயமாக இருக்கும் தன்மையை எடுத்துக் கூறின், மழை பெய்யும் திறன் இல்லாத மேகம் விலகித் தெளிந்த ஆகாயம் போல சிதாகாசமாய் ஆனான்.* **(5.3.50)**

ஆங்(கு)அப் படியே அவன்இருப்ப அவன(து) ஏவல் புரிஅசுரர்
ஓங்கல் கோயில் மேல்நிலத்தை உற்றார் உயர்மா வலிதானும்
நீங்கற்(கு) அரிய நிருவிகற்ப நிலைகூர் சமாதி நெடும்போது
தேங்குற்(று) அதன்பின் விழித்(து)உணர்ந்து மமதை தீர்ந்த சிந்தையனாய்.

**பொழிப்புரை:** *அவ்விடத்தில் அப்படியே மகாபலி இருக்க, அவனுடைய பணிவிடைகள் செய்யும் அசுரர்கள் ஓங்கிய அரண்மனை மேல்தளத்தை அடைந்தனர். உயர்ந்த மகாபலியும் நீங்குதற்கு அரிதான நிருவிகற்ப சமாதியில் நெடும்காலம் இருந்து அமைதி அடைந்து அதன் பின் விழித்து உணர்ந்து, அகந்தை இல்லாத சித்தத்தை உடையவன் ஆனான்.* **(5.3.51)**

**பற்றி லாத மனத்தாலே பயின்(று)இ ராச காரியங்கள்**
**முற்றும் இயற்றி ஆபத்தும் முதிர்சம் பத்தும் சமமாகக்**
**குற்றம் இல்லாக் குறிப்பாலே குறிப்(பு)உற்(று) இன்ப துன்பத்தில்**
**சற்றும் மிதவா(து) அமிழாது சமபா வனையில் தான்ஆனான்.**

**பொழிப்புரை:** *பற்று இல்லாத மனத்தினாலே விவகாரம் செய்து, அரச காரியங்கள் அனைத்தும் ஒழுங்காகச் செய்து, ஆபத்தையும், பெரும் செல்வத்தையும் சமமாக நுட்பமாகக் காணும் பார்வையால், இன்ப துன்பங்களில் கொஞ்சமும் மகிழாது, வாடாது சமபாவனையில் அறிவு வடிவமாய் ஆனான்.* **(5.3.52)**

**ஓவா(து) அவன்தன் உள்ளெழுந்த ஊ(க) அபோகம் பலகோடி**
**பா(வ)அ பாவம் பலகோடி பரந்த(து) எல்லாம் இளைப்பாறி**
**மேவா நின்றான் எவ்விடத்(து)என் விண்ணில் மண்ணில் வேட்கைகளில்**
**தாவா நின்ற மனம்தன்னைத் தன்ன(து) இதயத் துள்வைப்பாய்.**

**பொழிப்புரை:** *இடைவிடாமல் அவனுடைய உள்ளத்தில் கொள்ளுவதும் தள்ளுவதும் ஆகி* **(***இஷ்ட சாதன பாவனை ஊகம், அனிஷ்ட சாதன பாவனை அபோகம்***)** *முளைத்தவை அனேகம் கோடி. பாவ அபாவங்கள்* **(***உள்ளதும் இல்லாததும்***)** *பல கோடி. இவ்வாறு விரிந்த எல்லாவற்றிலிருந்தும் ஆறுதலை அடைந்து, எந்த விஷயத்தைத் தான் பொருந்தி நின்றான்? ஒரு விஷயத்தையும் பொருந்தி நிற்கவில்லை. விண்ணாசை மண்ணாசைகளில் தாவுகின்ற மனத்தை உனது இருதயக் குகைக்குள் நிறுத்தி வைப்பாய்.***(***இராகவனே!***)**. **(5.3.53)**

**எங்கே எங்கே மனம்ஓடி இளையோர் என்ன வீழ்ந்(து)அழுந்தும்**
**அங்கே அங்கே நின்(று)எழுப்பி அகண்ட அறிவில் அடைவிப்பாய்**
**சங்கே தமதாய் இவ்வாறு சாதித்(து) உளமா மதகரியை**
**வெங்கே த(ம்)அறத் தளைத்(து)எல்லாம் விசாரத் தாலும் வீ(டு)அணைவாம்.**

**பொழிப்புரை:** *எந்தெந்த இடங்களில் மனமானது ஓடி, சிறுவர் போல வீழ்ந்து மூழ்குமோ அந்தந்த இடங்களில் இருந்து திருப்பி, அகண்டமான அறிவு சொரூபத்தில் சேர்ப்பாய். முறையாக இவ்வாறு பயிற்சி செய்து சாதித்து, மனமாகிய பெரிய யானையை சகல கொடூரத் துயரங்களும் ஒழியக் கட்டுவித்து, அனைத்து விசாரத்தால் மோட்ச வீட்டினை அடைவாய்.* **(5.3.54)**

**(உபசாந்திப் பிரகரணத்தில் மாவலி கதை முற்றும்)**

# (iv) பிரகலாதன் கதை

*இவ்வாறு காகதாலீய நியாயத்தாலும் (காகம் அமரப் பழம் விழுந்த கதை) தனது விசாரத்தாலும் ஆசாரியர் உபதேசத்தாலும் ஞானம் உதயமாகும் முறை சொல்லப்பட்டது. ஈசுர அனுக்கிரகம் உண்டாகி விசாரத்தாலே ஞானம் உதயமாகும் முறையைக் கூறுவதற்காக இக்கதை சொல்லப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**பின்னும் ஈ(து)ஓர் கதைகேட்பாய் பிரக லாதப் பெயரோனும்**
**தன்ன(து) உணர்வான் மெய்ஞ்ஞான தத்து வத்தைச் சாதித்தான்**
**அன்ன(து) உரைப்பாம் இரணியனாம் அசுர வேந்தன் இறந்தளவே**
**இன்னல் கூரும் அவன்மைந்தன் இதயம் நடுங்கி இவைஉணர்ந்தான்.**

**பொழிப்புரை:** *மறுபடியும் மற்றொரு கதை கேட்பாய். பிரகாலாதன் என்னும் பெயர் உடையோனும், தன்னுடைய விசாரத்தால் மெய்ஞ்ஞான தத்துவமான சச்சிதானந்த பிரம்மத்தை உணர்ந்தவனும் ஆன அவனது கதையைச் சொல்வாம். இரணியன் என்ற அசுரர்களின் அரசன் இறந்த போது, துயரத்தை அடைந்த அவனது மைந்தன் பிரகலாதன் மனம் நடுங்கி இவ்வாறு சிந்தித்தான்.* **(5.4.1)**

**எனது தாதை முதல்அசுரர் எனது குலத்தோர் எண்ணிறந்தோர்**
**கனக மேரு அணுவென்னக் காய நிலைமை பெரி(து)உடையோர்**
**வனச யோனி அதிகாரம் மாற்ற வல்லோர் தரவல்லோர்**
**புனைவண் துளவோன் எனும்கனலில் பூளை வீபோல் போய்ஒழிந்தார்.**

**பொழிப்புரை:** *என்னுடைய தந்தையே முதல் அசுரர். என்னுடைய குலத்தவர் அளவற்றவர்கள். மேரு மலையே அற்பம் என்னும் அளவுக்குத் தேக இயற்கை வன்மையும், திண்மையும் பெரிதாக உடையவர்கள். தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம தேவனின் படைப்பு அதிகாரத்தையே இஷ்டப் படாவிட்டால் கெடுக்க வல்லவர். இஷ்டப்பட்டால் கொடுக்க வல்லவர். வளமையான துளசி மாலையை அணிந்த மகாவிஷ்ணு என்னும் அக்கினியில் பூளைப் பூப்போல எதிர்த்து மடிந்து போய் ஒழிந்து விட்டனர்.* **(5.4.2)**

**அன்னார் ஒக்கும் பேர்அசுரர் அழியும் ஊழிப் பெருங்காற்றால்**
**சின்னா கங்கள் போல்மடிந்தார் செறிநுண் மணலின் பலகோடி**
**இன்னாள் அவனுக்(கு) அஞ்சாதார் யாரும் இல்லை எம்பகையாம்**
**மின்னார் நேமிப் படையோனை வெல்வான் உபாயம் ஈ(து)ஒன்றே.**

**பொழிப்புரை:** *அத்தகையவர்களுக்கு இணையான பெரும் அசுரர்கள் பிரளய காலப் பெரும் காற்றினால் சிறு சிறு குன்றுகள் போல் மடிந்தவர்கள் (எண்ணிப் பார்க்கில்) நுண் மணலைக் காட்டிலும் பல கோடிப் பேர்கள். இந்த நாளில் அந்த மகாவிஷ்ணுவுக்கு அஞ்சாத அசுரர் எவரும் இல்லை. எம்முடைய குலப் பகையாகிய ஒளி பொருந்திய சக்கர ஆயுதத்தைத் தாங்கும் பகவானை வெல்வதற்கான உபாயம் இது ஒன்றே.* **(5.4.3)**

**எத்தன் மையினால் எண்ணுகினும் இதில்வேறு) உயர்ந்த நெறியில்லை**
**தத்தும் திரைப்பாற் கடல்உறைவோன் சரணம் அன்றிச் சரண்இல்லை**
**சித்தம் இந்தக் கணம்தொடங்கிச் சேர்க நாரா யணன்சரணம்**
**பத்தன் ஆகி நான்அவனாய்ப் பகிரா(து) ஒழிக பாவனையே.**

**பொழிப்புரை:** *எந்த வகையால் சிந்தித்துப் பார்த்தாலும் இதனைக் காட்டிலும் உயர்ந்த மேலான மார்க்கம் கிடையாது. ததும்புகின்ற அலைகள் உடைய பாற்கடலில் திகழ்பவன் திருவடிகள் அன்றி வேறு சரணாகதி இல்லை. மனமானது இந்த நொடி முதல் தொடங்கித் தியானிக்கட்டும். நாராயணனின் திருவடிகளை அனன்னிய பக்தி உடையவன் ஆகி நானே அவன் என்பதாகிப் பேத பாவனை ஒழியட்டும்.* **(5.4.4)**

**நயந்த(து) எல்லாம் எளி(து)அருளும் நாரா யணாய நமஎன்னும்**
**உயர்ந்த திருமந் திரம்என்றன் உளத்தில் விண்ணில் மாருதம்போல்**
**பெயர்ந்து நீங்கா(து) உள்ளுறைக பேணி அரியைப் பூசிப்போர்**
**இயைந்த அரிதாம் அப்பூசை இயற்றில் பலனாம் அல(து)இல்லை.**

**பொழிப்புரை:** *விரும்பியவற்றை எல்லாம் சுலபமாக அருளிச் செய்யும் நாராயணாய நம என்னும் உயர்ந்த திருமந்திரம் என்னுடைய உள்ளத்தில் ஆகாயத்தில் காற்றினைப் போல அசைந்து அகலாமல் உள்ளே நிலவுக. அன்போடு நாராயணனைப் பூசை செய்வோர், அந்த நாராயணனே தாமாகி அந்தப் பூசையைச் செய்தால் பலன் உண்டு. (அவ்வாறு பூசை) செய்யவில்லை எனில் பலன் இல்லை. (அதாவது அனன்னிய பக்திக்கே பலன் உண்டு என்பதாகும்)* **(5.4.5)**

**அந்த நெறியால் அரிஉருநான் ஆகி அரியைப் பூசிப்பன்**
**இந்த உடல்மா தவன்வடிவாம் இதனில் வாயு வடிவமாகிப்**
**பந்தம் உறுவோன் பராபரனாம் இவனே பிராண பவனத்தின்**
**முந்து ஓட்டத் தால்இரண்டாம் முகுந்தன் ஆகிப் புறத்(து)உறைவோன்.**

**பொழிப்புரை:** *கூறிய முறையால் நாராயணன் வடிவமே நானாகி, நாராயணனைப் பூசிப்பேன். இந்த உடல் நாராயணன் வடிவம் ஆகும். இதில் பிராண வாயு வடிவமாகிப் பந்தப்படுபவன் பர, அபர வடிவ விஷ்ணுவே ஆம். முதன்மையான இந்த விஷ்ணுவே பிராண வாயுவின் ஒட்டத்தால் இரண்டாவது (அபர) விஷ்ணுவாகி வெளியில் இருப்பவன்.* **(5.4.6)**

**அவ்வா றான இவ்வரியை அகில உபசா ரங்களையும்**
**தவ்வா மனத்தால் உளதாக்கிச் சதாபூ சனையே சமைப்ப(ன்)எனா**
**இவ்வா(று) எண்ணிப் பாரமெலாம் எடுத்துச் சுமக்கும் மனத்தாலே**
**செவ்வான் மணிப்பாத் திரதூப தீபம் கந்தம் எலாம்செறித்து.**

**பொழிப்புரை:** *'சொல்லிய வண்ணம்' எனது வடிவமான இந்த விஷ்ணுவைப் பூசிப்பதற்குச் சகல சாமக்கிரியைகளையும் (பூசைக்குரிய பொருட்களையும்) சலனம் இல்லாத மனத்தால் இருப்பனவாகப் பாவித்து. எப்போதும் பூசையைச் செய்வேன் என்று இப்படியாகச் சிந்தித்து, சம்சாரம் மற்றும் லோக விவகாரங்களை எல்லாம்*

*தூக்கிச் சுமந்து சுமை தாங்கி போலச் சுமந்து கொண்டாடும் சித்தத்தினாலே சிவந்த வானம் போன்ற இரத்தின பாத்திரம், தூபம், தீபம், வாசனைப் பொருட்கள் எல்லாம் அர்ப்பித்து.* **(5.4.7)**

**மணிப்பூண் களும்பீ தாம்பரமும் வாடா மலரும் நல்லமுதும்**
**கணிப்பி லாத பொருள்எல்லாம் கருத்தால் பாவித்(து) அருச்சித்து**
**தணிப்பி லாத அன்பால்முன் தந்(து)அப் புறத்தின் பொருள்திரலால்**
**பணிப்பாய் அவனை உள்போலப் பரிந்து புறத்தும் பூசித்தான்.**

**பொழிப்புரை:** *பலவிதமான இரத்தின ஆபரணங்களும், பீதாம்பரமும், வாடாத மலர்களும், சுவையான அமுதும், இத்தனை என்று எண்ணிக்கையிட்டுக் கூற முடியாத பிற பொருட்களும் மனத்தால் பாவித்து அர்ச்சனை செய்து, அளவு கடந்து தீராத பக்தியினால் எதிரில் சமர்ப்பித்து, அப்படி வெளியில் சமர்ப்பித்த பொருள்கூட்டத் தினால் ஆதிசேடன் மீது பள்ளி கொண்டுள்ள திருமாலை உள்ளே இருப்பது போல அன்பு மிகுந்து வெளியிலும் பூசை செய்தான்.* **(5.4.8)**

**ஆய வா(று)அக் கணம்தொடங்கி அகண்ட வடிவப் பரம்பொருளாம்**
**மாயன் அடிகள் அருச்சித்தான் அவனைப் போல வாள்அசுரர்**
**தீய குணம்விட்(டு) எல்லோரும் திருமாற்(கு) அடிமைத் திறம்பூண்டார்**
**மேய மன்னன் குணம்அன்றோ விரிந்த உயிரின் குணம்தானே.**

**பொழிப்புரை:** *கூறிய முறைப்படி அந்தக் கணம் முதல் அகண்ட வடிவமான பரம்பொருளாம் திருமாலின் திருவடிகளை அர்ச்சனை செய்து பூசை செய்தான். அந்தப் பிரகலாதனைப் போல அரசாங்கத்தில் இருக்கும் வாள் தரித்த அசுரர் எல்லோரும் தீய குணங்களை விடுத்து, திருமாலுக்கு அடிமையானார்கள். ஒரு தேசத்தில் மன்னவனின் ஆசாரம் அல்லவோ அந்த தேசத்து வாழும் மக்களின் ஆசாரமாக விளங்கும்.* **(5.4.9)**

**திதிகா தலரும் அவர்க்(கு)அரசும் செங்கண் மால்மேல் சினம்தீர்ந்து**
**புதிதா கியபத் தியில்அடிமை புக்கார் என்று புரந்தரனும்**
**துதிவா னவரும் கேட்டலுமே துணுக்க மோடு வியப்(பு)எய்தி**
**அதிபா தகர்கள் எம்பெருமாற்(கு) அன்பா கிய(து)என் எனஅயிர்த்தார்.**

**பொழிப்புரை:** *திதியின் மைந்தர்களாகிய அசுரர்களும், அவர்களது அரசனும், திருமாலின் மீது கோபம் தீர்ந்து, புதியதாகப் பக்தியில் அடிமைகொண்டு தொண்டர் ஆயினர் என்று தேவேந்திரனும், அவனைத் துதிக்கின்ற தேவர்களும் கேள்விப் பட்டதும், திடுக்கிட்டு ஆச்சரியம் அடைந்து, மகா பாதகர்களாகிய அசுரர்கள் பகவான் மீது அன்பு பூண்டது இது என்னே என்று மயங்கினர்.* **(5.4.10)**

**திருப்பாற் கடலில் கண்வளரும் திருமால் முன்பு சென்(று)அணுகி**
**விருப்பால் துதித்(து)இந் திரன்முதலோர் மேக மேனி யனைநோக்கி**
**நெருப்பாம் தன்மை அசுர(ர்)எலாம் நினைப்பா வித்து நின்வடிவாய்**
**இருப்பா ரானால் மாயைஎன எண்ணி னோம்ஈ(து) என்என்னா.**

**பொழிப்புரை:** *திருப்பாற் கடலில் அறிதுயில் கொண்டிருக்கும் திருமாலின் முன்பு சென்று, பகவானை அன்புடன் துதிசெய்து, இந்திரன் முதலான தேவர்கள் மேக வண்ண பகவானை நோக்கி நெருப்பினைப் போன்ற அசுரர்கள் எல்லாம் தங்களைப் பாவனை செய்து தங்களின் வடிவமே ஆகிக் கவலையற்று இருப்பார்கள் என்றால் மாயையின் விசித்திரம் என்று நினைத்தோம். இது என்ன ஆச்சரியம்?* **(5.4.11)**

**கொடிய கொலைசெய் வல்லசுரர் குணங்கள் எங்கே பெறவரிய**
**முடிவ தான பிறப்(பு)எங்கே முகுந்தன் பத்திப் பேறு)எங்கே**
**கடிய தீயோர் நற்குணங்கள் கலந்தார் என்று கதையல்லால்**
**நெடிய மாலே நின்பத்தி நீசர்க்(கு) எல்லாம் நேருமதோ.**

**பொழிப்புரை:** *கொடூரமான கொலைசெய்வதில் வல்லமை படைத்த அசுரர்களின் குணங்கள் எங்கே? பெறுவதற்கு அரிதான இனிப் பிறவாத பிறப்பு எங்கே? பகவான் முகுந்தன் மீது பக்தி கொள்வதன் பிரயோசனம் எங்கே? கடுமையான தீயவர்கள் நல்ல குணங்களை அடைந்தார் என்பது கதையே அன்றி உண்மை அல்ல. எங்கும் வியாபித்திருக்கும் திருமாலே! தேவரீருடைய பத்தி தாழ்ந்தவர்க்கு எல்லாம் கிடைக்குமோ?* **(5.4.12)**

**என்ற விண்ணோர்க்(கு) எம்பெருமான் இமையோர் அஞ்சா(து) ஒழிமின்கள்**
**வென்றி பயிலும் பிரகலாதன் மீண்டும் பிறவாப் பிறப்(பு)உற்றான்**
**கன்று துயர்போய் மெய்ஞ்ஞானக் கண்ணால் வீடு காண்குவனால்**
**ஒன்றும் இதனில் கைதவம்என்(று) உணரற் பால(து) இலதாகும்.**

**பொழிப்புரை:** *எனத் தெரிவித்த தேவர்களுக்கு பகவான் தேவர்களே! அச்சத்தை ஒழிப்பீர்கள். வெற்றியை மேற்கொண்ட பிரகலாதன் இனிமேல் பிறவாத கடைசிப் பிறவியை அடைந்தான். தொல்லை தரக்கூடிய துயர்கள் நீங்கி, மெய்ஞ்ஞானக் கண்ணால் மோட்ச வீட்டினைக் காண்பான். இதில் யாதொன்றும் வஞ்சகம் என்று அறியத் தக்கது இல்லையாம்.* **(5.4.13)**

**நல்லோர் தீமை உறில்கேடாம் தீயோர் நன்மை உறில்நன்றாம்**
**எல்லோ ரும்போம் எனஅருளி எம்மான் ஆங்கே மறைதலுமே**
**கல்லோ லம்சூழ் கடல்நின்றும் ககனா லயம்சேர்ந்(து) அமர(ர்)எல்லாம்**
**புல்லார் என்ற அசுரருடன் புரையி லாத தமர்ஆனார்.**

**பொழிப்புரை:** *நல்லவர்கள் தீமையை அடைந்தால் கெடுதலாம். தீயவர்கள் நல்லவராக-நல்ல தன்மையை அடைந்தால் நன்றாகும். எல்லோரும் உங்களுடைய இருப்பிடம் சேர்வீர் என்று அருளிச்செய்து, மகாவிஷ்ணு அங்கே மறைந்ததும், அலைகள் சூழ் கடலில் இருந்து, தேவ லோகம் சேர்ந்து தேவர்கள் அனைவரும் பகைவர் என்றிருந்த அசுரர்களுடன் வஞ்சகம் இல்லாத நேயம் ஆனார்.* **(5.4.14)**

**என்பு குளிரும் பத்தியினால் இமைப்போ(து) ஒழியா(து) எப்போதும்**
**அன்பு கூர நெடுமாலை அசுரர் வேந்தன் அருச்சித்தான்**
**வன்பு பயிலும் முக்கரணம் வழுவாப் பூசா பலத்தாலே**
**முன்பு விவேகம் ஆனந்த முதிர்வும் விராகம் முளைத்(து)எழுந்த.**

**பொழிப்புரை:** *எலும்பும் நெகிழ்வுற்றுக் குளிரும்படியாகக் கணப்பொழுதும் இடைவிடாது எப்பொழுதும் பக்தி பெருக மகாவிஷ்ணுவை அசுரர் வேந்தன் பூசை செய்தான். துயரப்படுத்தும் முக்கரணமும் மாறுபாடு இன்றி, செய்த பூசையின் பலத்தினால் முதலில் விவேகமும் ஆனந்த முதிர்ச்சியும் வைராக்கியமும் உண்டாயின.* **(5.4.15)**

**சாத னங்கள் முதற்குணங்கள் சால உண்டாய் இவன்நெஞ்சம்**
**காத லான போகத்தில் கவலும் பற்றுக் கழன்றனவால்**
**சீத முத்து முத்துடனே சேர்ந்தால் பற்று சேர்வுறுமோ**
**ஆத லாலே போகத்தில் அழுந்தா(து) உள்ளம் மாறினதே.**

**பொழிப்புரை:** *நித்திய அனித்திய வஸ்து விவேகம் முதலான சாதன சதுட்டயம் மிகவும் உண்டாகி, பிரகலாதன் நெஞ்சம் ஆசை கொள்ளத் தக்க போகங்களில் விருப்பம் கொள்ளும் பற்று ஒழிந்தது. குளிர்ச்சியான முத்து முத்துடன் கலந்தால் பற்றுதல் உண்டாகுமோ? ஆதலால் விஷய போகத்தில் அழுந்தாத மனமானது சாந்தியையே அடைந்தது.* **(5.4.16)**

**பூன்ற வடிவும் காணாமல் போகத்(து) உள்ளும் அழுந்தாமல்**
**நான்ற ஊசல் ஆடுவபோல் நல்லோன் உள்ளம் திரிவதனை**
**மூன்று சகத்தின் சான்றான முகுந்தன் திருவுள் ளத்(து)உணர்ந்து**
**சான்ற குணத்தோன் பூசிக்கும் தனிமா மனையில் தான்அடைந்தான்.**

**பொழிப்புரை:** *பூரண வடிவத்தையும் தரிசிக்காமல், போகங்களிலும் அழுந்தாமல் தொங்குகின்ற ஊஞ்சல் ஆடுகின்றதைப் போல நல்லவனாகிய பிரகலாதன் உள்ளம் ஆடுவதை, மூன்று லோகங்களுக்கும் சாட்சியாக விளங்கும் திருமால் தமது திருவுள்ளத்தில் உணர்ந்து, ஒப்பற்ற குணங்களை உடைய பிரகலாதன் பூசை செய்யும் அரண்மனையில் தானாக வந்து அடைந்தார்.* **(5.4.17)**

**மூவர் ஆகி நின்றமுதல் மூலம் அடைந்த படிஅறிந்து**
**தேவ தேவன் தனைமுன்னர்ச் செயலின் இரட்டிப் பூசனைசெய்(து)**
**யாவ ராலும் காண்பரிய எம்மான் அம்மா எதிர்ந்தனன்என்(று)**
**ஆவ தான படிஅன்பால் அவனைத் துதித்தான் அசுரேசன்.**

**பொழிப்புரை:** *மும்மூர்த்திகளாகி விளையாடும் ஆதி காரணன் ஆகிய திருமால் (காரணப் பிரம்மம்) எழுந்தருளியதை அறிந்து, தேவர்களுக்கு எல்லாம் தேவனாகிய பகவானை முன்பு செய்ததைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகமாகப் பூசித்து, அன்பில்லாத எவராலும் காண்பதற்கு அரிய எம்பெருமான் என்னே ஆச்சரியம் முன்னே வந்து பிரசன்னம் ஆகி உள்ளார் என்று அசுரர்களின் அரசன் பிரகலாதன் மிக்க அன்பினால்; எழுந்த பக்தியினால் பகவானைத் துதித்தான்.* **(5.4.18)**

**அண்டம் என்னும் ஒருவீட்டில் அரிய பொருள்சேர் சரக்கறையே**
**சண்ட பானு எனும்உத(ய்)அத் தமு(ம்)அற்(று) ஒளிரும் தற்பரமே**
**கண்ட உயிர்கள் அனைத்திற்கும் களைகண் ஆன வான்துணையே**
**புண்ட ரீகை நாயகமே போற்றி போற்றி மிகப்போற்றி.**

**பொழிப்புரை:** *பிரமாண்டம் என்னும் பெரிய வீட்டில் கிடைத்தற்கு அரிதான போக மோட்சங்கள் பொருந்திய உக்கிராணம் (பொருள்கள் வைக்கும் அறை) போன்றவரே! (அதாவது சகல சீவர்களுக்கும் வாழ்வாதாரமாக விளங்குபவரே!) உச்சிக் கால அதிகப் பிரகாசம் உடைய சூரியன் என்ன உதயமும் அஸ்தமனமும் இல்லாது ஒளிர்கின்ற பரமப் பிரகாசமே! தோன்றிய அனைத்து உயிர்களுக்கும் பற்றுக் கோடான (புகலிடமான) உயர்ந்த துணையே! தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமி தேவியின் மணாளரே! போற்றி! போற்றி! மிக போற்றி!* **(5.4.19)**

**மேலோன் ஆகிச் சகம்படைக்கும் விளையாட்(டு) உடைய வித்தகனே**
**நாலோ(டு) ஒருப(து) எனும்உலகில் நண்ணா உயர்ந்த நற்பொருளே**
**ஆலோ னாகிக் கண்வளர்ந்த ஐயா மெய்யா அருள்மூர்த்தி**
**பூலோ கத்தின் நாயகமே போற்றி போற்றி மிகப்போற்றி.**

**பொழிப்புரை:** *உயர்ந்தோன் ஆகிப் பதினான்கு உலகங்களையும் படைக்கின்ற லீலை உடைய சர்வமும் அறிபவரே! பதினான்கு உலகங்களிலும் கிடைத்தற்கு அரிய உயர்ந்த நற்பொருளே! ஆலிலையில் துயில்கொண்டு அருளும் இறைவனே! சத்திய வடிவினரே! கருணைக் கடலாய் அருள்பவரே! பூலோகத்தின் நாயகமே! போற்றி! போற்றி! மிகவும் போற்றி!* **(5.4.20)**

**கேத மிகுந்த அசுர(ர்)எனும் கிளைத்தா மரைக்கு நெடும்பனியே**
**வேத நெறிசெல் அமர(ர்)எனும் விரிதா மரைக்கு வெய்யோனே**
**பேதம் அறுத்தோர் உள்ள(ம்)எனும் பெருந்தா மரையில் பிரமரமே**
**பூதம் அனைத்தின் நாயகமே போற்றி போற்றி மிகப்போற்றி.**

**பொழிப்புரை:** *அன்னியர்களுக்கு மிகுந்த குற்றங்களை விளைவிக்கும் அசுரர்கள் என்னும் கிளைத் தாமரைக் கூட்டங்களுக்குப் பெரிய பனியே! வேத மார்க்கத்தில் செல்லும் தேவர்கள் என்னும் தாமரை விரிவதற்கான சூரியனே! பேதம் இல்லாத திருஷ்டியை (பார்வையை) உடையவர் மனம் என்னும் பெரும் தாமரைக்கு வண்டே! எல்லா உயிர்களின் தலைவனே! போற்றி! போற்றி! மிகவும் போற்றி!* **(5.4.21)**

**என்ப தான துதிபலவும் இசைப்ப இதயம் குளிர்ந்(து)அருளி**
**அன்ப மறுத்துப் பிறவாஆ றாய வரம்கேள் எனக்கருணை**
**முன்பன் உரைப்ப அனைத்(து)இதய முளரி யினும்சேர் முதற்பொருளே**
**துன்பம் இல்லா உயர்பதம்ஏ(து) அதுவே அருள்வாய் எனச்சொன்னான்.**

**பொழிப்புரை:** *இவ்வண்ணம் பலவாறாகத் துதிக்க, இதயம் குளிர்ந்து, அன்பனே! மீண்டும் பிறவாத வழிக்கான வரத்தைக் கேட்பாய் என்று தயாநிதியாகிய பகவான் அருள, அனைத்துச் சீவர்களின் அந்தக்கரணங்களில் உறைகின்ற முதற்பொருளே! துன்பம் சற்றும் அணுகாத உயர்ந்த பதம் எதுவோ அதனை அருள்செய்வாய் என்று பிரார்த்தனை செய்துகொண்டான்.* **(5.4.22)**

சித்தம் பிரமம் எல்லாம்போய்த் தெளிந்த பரம சுகம்பெற்றுச்
சுத்தப் பிரமத்(து) இளைப்பாற முடிவாம் விசாரம் தோன்றுகஎன்(று)
அத்தப் பதுமம் அமைத்(து)அருளி அமலன் ஏக அவன்துதியால்
மெத்தப் பரவி மலர்தூவித் தொழுதான் விவேகி களின்மிக்கோன்.

**பொழிப்புரை:** *“சித்தத்தில் உள்ள பிராந்தி எல்லாம் போய், தெளிந்த உயர் இன்பம் அடைந்து, சுத்தப் பிரம்மத்தில் கலந்து அமைதி அடைய, வேண்டிய அளவு விசாரம் உனது மனதில் தோன்றுவதாக” என்று திருக்கரத்தை அவன் தலையில் வைத்து அருளிச் செய்து பகவான் பாற்கடலுக்குச் சென்றுவிட, மகா விஷ்ணுவைத் துதியால் மிகவும் புகழ்ந்து, மலர்கள் தூவித் தொழுதான் விவேக உள்ளம் படைத்தவர்களில் சிறந்தவனான பிரகலாதன்.* **(5.4.23)**

பனிவார் கடலில் திரைஎன்னப் பரம புருடன் மறைந்ததன்பின்
இனிதாம் பதுமா தனத்தி(ல்)இருந்(து) இறைவன் துதிகள் ஏத்தியபின்
சனியா விசாரம் தந்(து)அளித்தான் சனனம் அறுக்கும் தனிமூர்த்தி
நனிநாம் நம்மை யார்என்று நாடு வோம்உள் எனநினைந்தான்.

**பொழிப்புரை:** *குளிர்ந்த நீர் நிறைந்த கடலில் அலைகள் வந்து போவது போல உன்னதமான புருடோத்தமன் மறைந்ததன் பின்பு, அனுகூலமான பத்மாசனத்தில் அமர்ந்து, பரமாத்மாவைத் துதிசெய்து, பிறவாத விசாரத்தைத் தந்து அருள் செய்தான் பிறப்பு இறப்பினை அறுக்கும் ஒப்பற்ற இறைவன் என்று சிந்தித்து நன்றாக நாம் யார், எத்தகையவன் என்று ஆராய்ந்து பார்ப்போம் உள்ளே என்பதாக எண்ணினான்.* **(5.4.24)**

யானார் முன்னம் எவன்ஆனேன் இந்தப் புவிஆ டம்பரத்தில்
ஆனா(து) இருந்து நின்(று)ஓடி அழுது சிரித்து மகிழ்ந்(து)அயர்ந்தேன்
நானா வான சகம்அல்லேன் நகம்கல் புல்லு மண்மரங்கள்
தானாய்ப் புறம்பாய் அசேதனமாம் சகம்நான் என்னத் தக்கதுவோ.

**பொழிப்புரை:** *நான் யார்? இந்த விசாரத்திற்கு முன்பு எவனாக ஆகியிருந்தேன்? இந்த உலக ஆடம்பரத்தில் கெடாது இருந்து நின்று, ஓடி, அழுது, சிரித்து, மகிழ்ந்து அயர்ச்சி அடைந்திருக்கிறேன். பலவிதமான சகங்கள் நான் அல்லன். மலை, கல், புல், மண், மரங்கள் வடிவமாய், வெளியில் உள்ளதாய், கூடமாம் உலகம் நான் என்று சொல்லத் தகுதி உடையதோ?* **(5.4.25)**

இல்லா இடத்(து)உண் டாய்மூகம் எனலாய்க் காற்றில் இயங்குவதாய்ச்
செல்லா நின்ற சிலநாளில் சிதைந்து சடமாம் உடல்நானோ
நில்லா தாய்ப்பொய்க் கேதோன்றி நிராகா ரமதாய் அறி(வு)இன்றிப்
புல்லா அறிவில் செவிக்(கு)உணவாய்ப் பொன்றும் சத்தம் நான்ஆமோ.

**பொழிப்புரை:** *அசத்தாக இருந்தும் சத்துப் போலத் தோற்றம் அளிப்பதாய், பேசுவது இல்லாததாய், பிராண ஓட்டத்தால் இயங்குவதாய், கழிகின்ற சில நாட்களில் கெட்டுப் போவதான சடமாகிய உடல் நானோ? நிரந்தரம் இல்லாததாய் மித்தையாகத்*

*தோன்றுவதாய் சூனியமாய் சடமாய் விவேகம் இல்லாத பொழுது செவிகளுக்கு விஷயமாகின்ற அழிவுபடும் சப்தம் நான் ஆமோ?* **(5.4.26)**

**தோலில் அன்றி அறிவரிதாய்த் தோற்றம் இன்றிக் கணத்(து)இறந்து**
**கோலும் அறிவால் அறிந்(து)அறிவு கூடாப் பரிசம் நான்அல்ல**
**காலில் அசைந்து அசித்(து)உருவாய்க் காதல் மிக்குக் கணத்(து)இறக்கும்**
**தாலு உணவாய்த் திரவியத்தில் சனித்து சடமாம் சுவைநானோ.**

**பொழிப்புரை:** *தோல் என்ற இந்திரியத்தால் அன்றி மற்ற இந்திரியங்களால் அறிய முடியாததாய் பிரத்தியட்ச தோற்றம் இன்றியதாய் கணத்தில் நாசமாகக் கூடியதாய் சித்தினால் (அறிவினால்) அறிந்து கொள்ளக் கூடியதாய் சடமான பரிசம் நான் அல்ல. காற்றினைப் போலச் சொற்பமாய் அசைவு உடையதாய் சகத்தின் விஷயங்களில் கண நேரத்தில் நாசமாவதாய் நாக்கு என்ற இந்திரியத்திற்கு விஷயமாய் பொருள்களில் உண்டாவதான சடமாகிய சுவை நானோ?* **(5.4.27)**

**கணத்தில் இறக்கும் காண்பவற்றில் காட்சி தன்னில் பற்றாகிப்**
**புணர்ப்பில் காண்பான் இடத்(து)இறக்கும் போதம் இல்லா ஒளிநானோ**
**குணக்கு மூக்காம் அசேதனத்தால் குறிப்ப தாகிச் சடமாகி**
**மணக்கும் நொய்ம்மை நியமங்கள் மருவு கந்தம் நான்ஆமோ.**

**பொழிப்புரை:** *கணப்பொழுதில் நாசமாகின்ற காண்பவற்றில் காட்சிகளில் பற்று உண்டாகி காண்பவன் இடத்தில் வந்து சேர்ந்து அழிந்துவிடும் சித்து இல்லா (அசேதனமான) ஒளி நானோ? வளைந்திருப்பதான மூக்கு அறிவில்லாமையால் குறிப்பதாகி சடமாகி வாசனையில் அற்ப முறைமைகளைப் பொருந்தினதாயும் (முறையற்று மணத்தைக் கிரகிக்கும்) சடமான வாசனை (மணம்-கந்தம்) நான் ஆவேனோ?* **(5.4.28)**

**என(து)அற்(று) எண்ணம் எல்லாம்போய் இளைப்(பு)அற்(று) ஐந்து பொறிமயல்போய்**
**அனக அறிவாய்த் தொழில்இன்றி அறியும் பொருள்தீர் அறிவேயாய்க்**
**கனமாய் உள்ளும் புறம்பினும்நிட் களமாய் உண்டா மாத்திரமாய்ச்**
**சனன மரணம் இலாஎன்னைத் தயங்கக் கண்டேன் சத்தியமே.**

**பொழிப்புரை:** *எனது என்ற மமதை அற்று, எண்ணங்கள் எல்லாம் (மனோ வியாபாரம்) ஒழிந்து, சாந்தமாய், புலன்கள் ஐந்தினால் வரும் மயல் போய், (சீவ பாவத்தையும் ஒழித்து) சுத்த சேதனமாய், கிரியை (செயல்இன்றி), திருசிய (காண்பதின்) சம்பந்தம் அற்ற சின் மாத்திரமாய் (சித்து வடிவமாகி), உள்ளும் புறமும் வியாபாகமாய், உறுப்புகள் அற்றவனாய், சத்து மாத்திரமாக, பிறப்பு இறப்பு இல்லாதிருக்கும் யான் எஞ்சி நிற்கக் கண்டேன் சத்தியமே.* **(5.4.29)**

**ஆஆ இப்போ(து) உள்ளபடி அறியும் நெறியில் எனைஅறிந்தேன்**
**ஓவா விகற்பம் அற்(று)அறி(வு)உள் ஒளியாம் சீவன் உரு(வு)இதுவோ**
**தாவா(து) எங்கும் உளநானாம் தத்து வத்தில் சகம்எல்லாம்**
**மேவா நின்ற இரவிமுதல் கடம்ஈ றாக விளங்கியதால்.**

**பொழிப்புரை:** *ஆஹா! வேதம் சாத்திரம் ஆன்றோர்கள் எம்முறையில் அறிந்தார்களோ அந்த முறையில் எனது சொரூபத்தை இப்போது உள்ளபடி அறிந்தேன். இடைவிடாது சலிக்கும் சலனம் ஒழிந்து, ஞான ஒளிவடிவ உள்ளுறை சோதியாம் ஆன்ம வடிவம் இதுவே ஆம். குறைவின்றி எவ்விடத்திலும் இருக்கும் யானாம் உண்மையான வத்துவில் சூரியன் முதலாகக் குடம் வரையில் நிறையும் உலகம் யாவும் விளங்குகின்றது,* **(5.4.30)**

**உள்ளில் ஒளியால் கனல்பொறிகள் ஒளிர்வ(து) என்ன ஐம்பொறியும்**
**தெள்ளி அறியும் என்னாலே செறிசித் திரமாய்த் திகழ்ந்தனவால்**
**தள்ளில் அயனோ(டு) உட்பட்ட தனிக்கற் பாந்தத்(து) உயிர்அனைத்தும்**
**வெள்ள வெளியாம் அப்போது மீளா(து) ஒளிரும் என்வடிவே.**

**பொழிப்புரை:** *உள்ளே ஒளிர்கின்ற அக்கினி பொறிகள் விளங்குவது போல விசித்திரமான ஐம்பொறிகளின் விருத்திகள் தெளிவாய் அறிகின்றன, என்னாலே விளங்குகின்றன. அகற்ற முடியாமல் (தவிர்க்க முடியாமல்) பிரளய கால முடிவில் பிரம தேவனோடும் உயிர்கள் அனைத்தும் மறைகின்ற அப்பொழுதும் அகலாது என்னுடைய வடிவம் பிரகாசித்துக் கொண்டிருக்கும்.* **(5.4.31)**

**இவன்நான் என்(று)உள் ளேபற்றும் எண்ணம் எங்கே எல்லையறப்**
**புவனம் எல்லாம் நிறைந்(து)ஒளிரும் போத வடிவாம் என்தனக்குக்**
**கவரும் மனப்பா வனைதானே கருதில் உண்டோ முடிவில்சுகத்(து)**
**உவமை இல்லா உபசாந்த உணர்வாம் கண்ணே உல(கு)எங்கும்.**

**பொழிப்புரை:** *காலம், இடம் முதலான எல்லைகளுக்கு உட்படாததாய் எல்லா உலகங்களிலும் நிறைந்து இலங்கும் ஞான சொரூபமாம் எனக்கு, இவன் நான் என்று உள்ளே தோன்றிப் பற்றும் எண்ணம் (பற்றுக் கோடு) எங்கு உள்ளதாம்? (எங்கும் நிறைந்துள்ளதால் ஆராய்ந்து பார்க்கில்) கிரகிக்கும் சித்தத்தின் சிந்தனை தான் உண்டோ? முடிவில்லாத ஆனந்தம் உவமானம் சொல்ல முடியாததான சமமான திருஷ்டியே (அந்த உணர்வே) உலகத்தில் எங்கும் காணப்படுகின்றது.* **(5.4.32)**

**நோக்கப் பட்ட நோக்கெல்லாம் நுண்மை அறிவாம் நோக்(கு)ஒன்றே**
**ஆக்கப் பட்ட உயிர்அனைத்தின் அகத்தாய் அறிவ(து) இலாஅறிவாய்த்**
**தாக்கப் பட்ட(து) ஒன்றில்லாத் தனித்தத் துவமாய்த் தனைஅன்றிப்**
**போக்கப் பட்ட(து) இல்லாஎம் பொருட்டு வணங்கிப் புகழுமால்.**

**பொழிப்புரை:** *சின்மய திருஷ்டி (சித்து) ஒன்றே சகல அனாத்ம விஷயங்களை அறியும் திருஷ்டிகளுக்கு (அறிவுக்கு) எல்லாம் சூக்குமம் ஆகும். படைக்கப்பட்ட உயிர்கள் அனைத்துக்கும் உள்ளாக இருப்பதாய் திருசியத் (காண்கின்ற) தன்மை விடுபட்ட சித்தாய் சம்பந்தம் கொள்ளத் தக்க காணப்படுபவை யாதொன்றும் இல்லாத உண்மை வத்துவாய் பிரத்தியக் ஆத்மாவாகிய தன்னைத் தவிர அன்னியம் இல்லாத தன் பொருட்டு வணங்கிப் புகழ்வாம்.* **(5.4.33)**

அறவு நொய்தாய்ச் சமமாகி அவிகா ரமதாய் அதீதமதாய்
இறவு நிகழ்வோடு எதிர்(வு)என்ன எண்ணும் காலம் மூன்று)இலதாய்ப்
பிறவு நினைக்கும் நினை(வு)இன்றிப் பேதம் அற்ற அறிவாலே
நிறைவி தான சத்தியெலாம் நேரே செய்யப் பட்டனவே.

**பொழிப்புரை:** *முழுதும் சூக்குமமாய், சமமாகி, விகாரம் அற்றதாய், சகலமும் கடந்ததாய், இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று சொல்கின்ற காலம் மூன்றும் கடந்ததாய், எண்ணும் எண்ணங்களும் எண்ணப்பட்ட விஷயங்களும் இல்லாததாய், பேதம் இல்லாத அறிவினாலே விசித்திரமான சத்திகள் யாவும் சந்நிதி (முன்னிலையால்) மாத்திரமே இயற்றப் (கற்பிக்கப்) பெற்றனவாம்.* **(5.4.34)**

தாக்(கு)அற்(று) ஒன்றில் அறிவுக்குச் சமமே ஒழிந்து கண்டதிலை
வாக்குக்(கு) எட்டா மையினாலே வசனங் களினால் சமம்தோன்றா
நோக்கற்(கு) அரிதாம் பொய்ப்பொருள்போல் நொய்தாய் அழியா நிராசைதனைத்
தேக்கில் சமபா வனைதானே திரைதீர் கடல்போல் சேடிக்கும்.

**பொழிப்புரை:** *ஒரு பொருளிலும் சம்பந்தம் இல்லாத சிதாத்ம வத்துவிற்கு சமத் தன்மையே இயற்கையே அல்லாமல் அயலாக மற்றொன்று கண்டது இல்லை. வசனத்தினால் சொல்லப்பட முடியாமையால் சொல்கின்ற வசனங்களினால் சமத் தன்மை தோன்றாது. காண்பதற்கு அரிதாகிய சூனிய வத்துவைப் போல அதிசூக்குமமாய், சாசுவதமாய் (நிரந்தரமாய்) நிராசை தனைத் தேக்கி அதிகரிக்கச் செய்தால் தானாகவே சம திருஷ்டியானது (சமத் தன்மை) அலைகள் தீர்ந்த கடல் போல் எஞ்சி நிற்கும்.* **(5.4.35)**

செயலும் செயல்இ லாமையுமாய்த் தியங்கும் செயலில் சேர்அறிவு
பயிலும் வலையில் புள்போலப் பந்தம் அடையும் ஆதலினால்
மயல்வெங் கோபம் இரண்டாலும் வரும்தொந் தனையாம் மயக்காலே
உயிர்கள் எல்லாம் நிலப்புழுப்போல் ஒன்றும் அகலா(து) ஆகுவதாம்.

**பொழிப்புரை:** *உபாதி வசத்தால் செயல் உடையதாயும், நிருபாதி (நிர்+உபாதி) தன்மையால் செயல் இல்லாததாயும், பொருந்திக் கலங்கும் அந்த சித்து வலையில் அகப்பட்ட பறவை போலப் பந்தத்தை அடையும். ஆதலால் மயல் (ஆசை), கொடும் கோபம் ஆகிய இரண்டினாலும் எழுந்த துவந்துவ (இரட்டைகள்--மான அவமானம்) மயக்கத்தாலே சுகம் துக்கம், குளிர்ச்சி வெப்பம், போதல் வருதல் முதலான மோகத்தாலே உயிர்கள் அனைத்தும் நிலத்தின் பொந்திற்குள் கிடக்கும் புழுக்களைப் போல அமிழ்ந்து கிடந்து ஒன்றும் நீங்காமல் உழலும்.* **(5.4.36)**

நீடத் தகுமன் னுயிர்க்(கு)எல்லாம் நெஞ்சத்(து) உறைவாய் நெடுநாளாக்
கூடப் பெற்றேன் உனைஇந்தக் குறை(வு)இல் பேற்றை யார்பெற்றார்
தேடப் பட்டாய் பெறப்பெற்றாய் தெரிய நின்றாய் விகற்பம்)எலாம்
வீடப் பட்டாய் எதுவானாய் அதுவாய் நின்றாய் மிகத்துதிப்பாம்.

**பொழிப்புரை:** *எங்கும் விரிந்து பரந்துள்ள உயிர்கள் எல்லாவற்றின் உள்ளத்தில் இருப்பதான உன்னை வெகு காலம் கழித்து ஆன்றோர் வசனத்தாலும் வேதத்தாலும் அறிந்து சேர்ந்தேன். இந்தக் குறைவில்லாத பயனை யார் அடைந்தார்? நன்றாக விசாரிக்கப்பட்டாய், அதனால் பரமார்த்த வடிவத் தன்மையாலே விகற்பம் எல்லாம் விடுபட்டாய். அதனால் சத்திய ஞானானந்த வடிவமாய் பிரத்தியட்சமாகத் தெரிய நின்றாய், அதனால் அகம் பிரம்மம் என்று அனுபவிக்கப்பட்டாய். முன்னர் எதுவாய் இருந்தனையோ இப்போது அதுவாய் நின்றாய். மிகவும் துதிப்பாம்.* **(5.4.37)**

**நானே நீயாய் நீநானாய் ஞான வடிவாய் முடிவின்றித்**
**தானே ஆகி அண்டத்தின் தலையாய்ப் பரம தத்துவமாம்**
**கோனே உன்னைத் தொழுகின்றேன் கொண்டல் மறையா நிறைமதிபோல்**
**ஊனேர் நினைவு களின்மறையா ஒளியாம் உருவே உனைப்பணிகேன்.**

**பொழிப்புரை:** *(மகா வாக்கிய விசார பூர்வமாகத் தன்னைத் தொழுதல்) நானே நீயாய், நீயே நானாய், அறிவு சொரூபமாய், முடிவில்லாததாய், சுயமாகி, அண்டத்தின் தலைவனாய், பரம தத்துவமாம் பரமாத்மாவே உன்னைத் தொழுகின்றேன். மேகங்கள் மறைக்காத பூரணச்சந்திரன் போல, தேக அபிமானம் மறைக்காத ஒளிமயமான சித்து வடிவே உன்னைப் பணிகின்றேன்.* **(5.4.38)**

**உன்னல் என்னும் ஆவரணம் ஒன்றும் இல்லா வெளியாகித்**
**தன்ன தான சுகவடிவில் தானே விளங்கித் தன்வசமாம்**
**என்னது உருவை யான்பணிகேன் இருந்து நடந்தும் சாந்த(ம்)உற்றும்**
**அன்னது அன்னது இலதாகும் அனைத்தும் செய்தும் பற்றிலதாம்.**

**பொழிப்புரை:** *அபிமான வடிவ நினைப்புகள் ஆகிய ஆவரணம் (மறைப்பு) யாதொன்றும் இன்றி வெட்ட வெளியாகித் தன்னுடையதே ஆன ஆனந்த வடிவத்தில் தானே விளங்கி தனது வசமாம் எனது வடிவத்தை யான் பணிகின்றேன். இருப்பதாயும், நடப்பதாயும், சாந்தம் உடையதாயும், இவ்வாறு யாவற்றையும் விவகரித்தாலும் (செய்தாலும்) அவைகளில் (ஆன்மா) பற்றில்லாதது ஆகும்.* **(5.4.39)**

**பல்ல வங்கள் தமைஅசைக்கும் பவனன் போல மனமுதலாய்ச்**
**செல்லும் கரணங் களைஇந்த சித்தாம் புருடன் அசைத்திடுமால்**
**வல்ல பாகர் நடத்துகின்ற வாசித் திரள்போல் தனதான**
**வல்லன் மேவப் பொறியெல்லாம் அவனே பரிக்கும் அனவரதம்.**

**பொழிப்புரை:** *இலைகளை அசைக்கின்ற காற்றினைப் போல, மனதை முதலாக வைத்து விஷயங்களில் செல்கின்ற உட்புறக் கரணங்களைச் சித்தாகிய* (*அறிவு உருவாகிய*) *புருடன் நடத்திடும். சாமர்த்தியம் உடைய சாரதிகள் நடத்துகின்ற குதிரைக் கூட்டங்களைப் போலத் தன்னுடையதான விஷயங்களில் சுழன்று அலைந்திடப் புலன்கள் அனைத்தையும் அந்த ஆன்மாவே எப்போதும் நடத்தும்.* **(5.4.40)**

இவனே தேடப் படுகிற்போன் இவனே துதிக்கப் படுகிற்போன்
இவனே தியானிக் கப்படுவோன் இவனால் மரண மயக்(கு)ஒழிந்த(து)
இவனே எளிதில் எய்திடுவோன் இவனே நன்றாய் அறிகிற்போன்
இவனே எல்லார் மனக்கமலத்(து) இடையில் இருக்கும் இசைவண்டே.

**பொழிப்புரை:** *இந்த ஆத்ம தேவனே விசாரணையால் தேடத் தக்கவன். இவனே துதிக்கத் தக்கவன். இவனே தியானிப்பதற்கு உரியவன். இவனால் மரண மயக்கம் ஒழிந்ததால் சம்சார மோகமும் ஒழிந்தது. அதனால் இவன் எளிதில் அகப்படுபவன். இவனே நன்றாக அறியத் தக்கவன். இவனே அனைவரின் மனமாகிய தாமரையில் இருக்கின்ற ரீங்காரம் செய் வண்டு ஆவன்.* **(5.4.41)**

மேவல் உற்ற போகத்தில் விருப்பு வெறுப்பும் எனக்(கு)இல்லை
யாவ(து) எய்தும் அதுவருக யாது போகும் அதுபோக
பாவம் மிகு(ம்)இவ் அஞ்ஞானப் பகைவ னாலே விவேக(ம்)எனும்
ஏவம் இல்லாப் பொருள்எல்லாம் இழந்தேன் உணர்வால் அவைபெற்றேன்.

**பொழிப்புரை:** *கரும வசத்தால் அடையப் பெற்ற விஷயங்களில் விருப்பும் வெறுப்பும் எனக்கு இல்லை. நுகர் வினை வசத்தால் எது அடையப் பெறுமோ அது வரட்டும். எது விட்டுப் போகுமோ அது போகட்டும். பாவத்தின் காரியம் துன்பம், அந்தத் துன்பத்தைத் தரும் இந்த அறியாமையாகிய (அஞ்ஞானமாகிய) பகைவனால் விவேகம் என்கின்ற குற்றமில்லாத செல்வத்தை எல்லாம் இழந்தேன். ஞானத்தால் அவற்றை அடைந்தேன்.* **(5.4.42)**

துனையும் மனத்தால் மனம்அறுத்துத் துயர்செய் அகங்கா ரம்தீர்ந்து
நினைவால் நினைவு போய்அசையா நிலைக்கே தனிக்கே வலம்நின்றேன்.
வினையாம் நினை(வு)அற்(று) அகங்கரம்போய் மேவு மனம்போய்த் தொழில்இன்றித்
தனையே நிகர்கே வலத்தொடர்ச்சித் தத்து வத்(து)என் வடி(வு)இருக்கும்.

**பொழிப்புரை:** *துரிதமாய்ப் பழகும் சுத்த வாசனை கூடிய மனத்தினால் மலின வாசனை கூடிய மனத்தினைக் கெடுத்து, துன்புறுத்தும் அகந்தை ஒழிந்து, திருக்கு (காண்பான்) என்ற பாவனையினாலே திருசிய (காணப்படுபவை) பாவனை ஒழிந்து ஒப்பற்ற தான் மாத்திரமாய் திரமான வடிவமாய் இருக்கின்றேன். பகையாக இருந்து துன்பம் செய்யும் மன சிந்தனை அகங்காரம் ஒழிந்து, இச்சைக்குக் காரணமான மனம் போய், ஒரு செய்கையும் இன்றி, தனக்கே ஒப்பான எல்லாவற்றிலும் பொருந்தியிருக்கும் தத்சொரூபத்தில் எனது சொரூபம் இருக்கும்.* **(5.4.43)**

காதல் என்னும் கட்(டு)அறுத்துக் காயம் என்னும் கூ(டு)அகன்று
சாதல் மேவும் அகங்கரமாம் தனிப்புள் எங்கே பறந்துளதோ
ஏதம் அறுநீ நானாம்நீ என்னும் ஒருமை இருமையதாம்
ஓதும் விதியால் மீண்(டு)ஒன்றி உயர்நீ நானாம் நீயானேம்.

**பொழிப்புரை:** *விஷயங்களில் எழும் ஆசை என்னும் கட்டினை அறுத்து, உடல் என்ற குகையிலிருந்து நீங்கித் தத்துவ ஞானத்தால் நாசமாகும் அகங்காரம் என்னும்*

*பறவையானது எங்கே பறந்து ஓடிப் போனதோ? குற்றமற்ற நீயே நான், நான் நீ என்னும் அபேத பாவனையானது அஞ்ஞானத்தால் இருமை ஆகும். வேதம் கூறும் தெய்வ கதியால் அறியாமை நீங்கப் பெற்று மீளவும் பொருந்தி பரிபூரணமாகிய நீயே நான் கூடத்தனாகிய நானே நீயாய் இருக்கின்றோம்.* **(5.4.44)**

**ஒழி(வு)இல் உலகின் சீரெல்லாம் உண்டாய் இருந்தும் நீயிலையேல்**
**விழிஇல் அவர்க்குப் பேர்எழில்கூர் மின்னா ரைப்போல் விளங்காதால்**
**வழு(வு)இல் தேவே சயசாந்தி மன்னும் இடமே சயவேத**
**முழுதுக்(கு) அயலே சயவேதம் முளைத்த இடமே சயஎன்னா.**

**பொழிப்புரை:** *இலௌகீக சிறப்புகள் எல்லாம் இருந்தாலும் நீக்கமின்றிப் பூரண வடிவமான பரமான்வாகிய நீர் இல்லாவிடில், கண்பார்வை இல்லாதவர்க்கு மிக்க அழகுடைய மங்கையரைப் போல விளங்காது. குற்றமில்லாத தேவ தேவனே வெல்க. (வெற்றி உண்டாகட்டும்). சாந்தம் தவழும் இடம் வெல்க. வேதப் பிரமாணங்களுக்கு எட்டாதவனே வெல்க. வேத வாக்கியத்தால் அறிபவனே வெல்க.* **(5.4.45)**

**பிறக்கும் முதலே சயஎன்றும் பிறவா முதலே சயநாளும்**
**இறக்கும் முதலே சயஎன்றும் இறவா முதலே சயஎன்று**
**சிறக்கும் மனத்தால் சிந்தித்துச் செம்பொன் பெயரோன் திருமதலை**
**பறக்கும் விகற்பம் இல்லாத பரம சமாதிச் சுகம்உற்றான்.**

**பொழிப்புரை:** *அனைத்துக்கும் அதிட்டான (ஆதார)மாக இருப்பவரே வெற்றி உண்டாகட்டும். பிறவாத பொருளே வெற்றி உண்டாகட்டும். அனைத்தும் ஒடுங்கும் இடமான பொருளே வெற்றி உண்டாகட்டும். அழிவில்லாத பொருளே வெற்றி உண்டாகட்டும் என்பதாகச் சிறந்த குணங்களை உடைய மனதால் சிந்தித்து, இரணியனின் தவப்புதல்வனாகிய பிரகலாதன் துடிப்புடைய சலனம் இல்லாத அசம் பிரஞ்ஞாத (நிருவிகற்ப)சமாதியில் நிலைத்து ஆனந்தம் அடைந்தான்.* **(5.4.46)**

**நிருவி கற்ப சமாதியிலே நிகழ்சித் திரம்போல் நிலைபெற்று**
**வருடம் ஐயா யிரம்செல்ல மாறா ஒருபார் வையில்நிற்ப**
**அருண மணிசூழ் பாதலத்தில் அரசி லாமல் அசுர(ர்)எலாம்**
**கருடன் முதல்புள் ளினம்கவரக் கலங்கு குளமீன் இனம்ஒத்தார்.**

**பொழிப்புரை:** *நிருவிகற்ப சமாதியில் வரைந்த சித்திரம் போல் அசையாமல் நிலையாக இருந்து ஐந்தாயிரம் வருடங்கள் கழிந்தும் மாறுபடாத ஒரு பார்வையில் நிற்க, பிரகாசம் பொருந்திய ரத்தினங்கள் விளங்கும் பாதாள லோகத்தில் அரசன் இல்லாமல் அசுரர்கள் எல்லாம் கருடன் முதலான பறவைகள் கவர்வதால் கலங்குகின்ற குளத்து மீன் கூட்டம் போன்று கலங்குவர் ஆயினர்.* **(5.4.47)**

**ஆவ தாய காலத்தில் அனைத்தாம் உலகின் நெறிஅனைத்தும்**
**காவல் புரியும் திருநெடுமால் கடல்வாய் விழித்துக் கண்வளர்வான்**
**தூவல் வருடக் கார்நாளில் துயிலைத் தவிர்ந்து ஒருகாலை**
**சேவல் கூரும் திருவுளத்தில் செகத்தின் நெறியைச் சிந்தித்தான்.**

**பொழிப்புரை:** *முன்னர் கூறியதைப் போல நிகழும் காலத்தில், சகல லோகங்களின் மார்க்கங்கள் அனைத்தையும் காப்பாற்றி அருளும் நாராயணர் பாற்கடலில் அறிதுயிலில் வீற்றிருந்தவர் கார்கால மழைநாளில் துயிலில் இருந்து எழுந்து, ஒரு பொழுது யாவரையும் காக்க வேண்டும் என்று திருவுள்ளத்தில் உலகத்தின் நெறி முறைகளைச் சிந்தித்தார்.* **(5.4.48)**

**பேதம் இல்லா சாந்திபதம் பிரக லாதன் பெற்றிருப்ப**
**வேதன் சிருட்டி அழிந்துளவால் வெவ்வாள் அசுரர் இலாமையினால்**
**ஏத அசுரர் இல்லைஎனில் இகல்அற்(று) இமையோர் எல்லோரும்**
**போத உபசாந் தியராகிப் பொருவில் வீடு பொருந்துவரால்.**

**பொழிப்புரை:** *அபேதமான பரம சாந்தியை பிரகலாதன் பெற்றிருப்பதால் கொடிய வாள் ஆயுதத்தை உடைய அசுரர்கள் இல்லாமையால் நான்முகன் படைப்பு கெட்டுளது. துன்புறுத்தும் அசுரர்கள் இல்லை என்றால் பகையில்லாமல் தேவர்கள் யாவரும் சித் சொரூபத்தில் உபசாந்தியை அடைந்து இரட்டைகள் (துவந்துவம்) இல்லாத மோட்ச வீட்டினை அடைவார்கள்.* **(5.4.49)**

**தேவர் உபசாந் தியைஅடையில் செந்தீ வேள்வி தவம்எல்லாம்**
**போவ தாகிப் பயன்எல்லாம் பொருந்தா(து) எவையும் பொன்றிடுமால்**
**ஓவ லுற்ற கிரியைஎலாம் ஒழிந்தால் பூமி ஒடுங்கிடுமால்**
**கேவ லத்தில் புவிஒடுங்கில் கிளரும் சிருட்டி அற்றிடுமால்.**

**பொழிப்புரை:** *தேவர்கள் உபசாந்தத்தை அடைந்து விட்டால் சிவந்த அக்கினியில் செய்யப் படுகின்ற யாகம், தவம் பிறவும் செய்யாமல் போக, பயன்கள் இல்லாதவையாகி அனைத்தும் நாசமாகிவிடும். சிரத்தையுடன் செய்யப்படும் வைதீக கருமங்கள் செய்யாமல் ஒழிந்தால் பூலோகம் ஒடுங்கிடும். பிரம்மத்தில் உலகம் ஒடுங்கினால், குணங்கள் நிறைந்த நான்முகன் சிருட்டி ஒழிந்துவிடும்.* **(5.4.50)**

**இன்ன சிருட்டி சூனியமாய் இரவி மதியோ(டு) எலாம்இறக்கில்**
**பின்னர் யாமும் வடி(வு)ஒழித்துப் பேதம் இல்லாப் பதம்அடைவோம்**
**சொன்ன காலத்(து) அலா(து)இடையே தொல்லை ஞாலம் எலாம்இறக்கில்**
**உன்ன நலம்காண் கிலம்இதனுக்(கு) உறுதி உபாயம் உணர்ந்தனமால்.**

**பொழிப்புரை:** *இவ்வாறு இந்தப் படைப்பு சூனியமானால் (இல்லாது போனால்) சூரியன் சந்திரன் முதலான அனைத்தும் இல்லாமல் போக, பின்பு யாமும் எனது இந்த வடிவத்தை விட்டு, பேதம் இல்லாத பிரம்மத்தில் கலந்து விடுவோம். (இத்தனை காலம் பிரபஞ்சம் இயங்க வேண்டும் என்று) நியமிக்கப்பட்ட காலத்தில் அல்லாமல் மத்தியில் (இடைப்பட்ட காலத்தில்) பழமையான உலகம் அனைத்தும் ஒடுங்கி விடுமானால், ஆராய்ந்து பார்க்கில் யாதொரு சிறப்பும் காணப்படவில்லை. இதற்குச் சிறந்த ஒரு உபாயம் கண்டு கொண்டோம்.* **(5.4.51)**

**(வேறு)**

**தானவர் உய்க உய்ந்தால் சமர்உண்டாம் சமரும் உண்டேல்**
**வானவர் உண்டாம் உண்டேல் மகம்தவம் உண்டாம் உண்டேல்**
**ஆனதோர் சிருட்டி உண்டாம் அன்று)எனில் சிருட்டி மாளும்**
**ஊனம்()இல் அசுரர் கோன்இவ் உடலொடும் ஊழி வாழ்க.**

**பொழிப்புரை:** *(ஒப்பற்ற ஆனந்த வடிவான சிறப்பினை அடைவது எவர்க்குமே முடியாது ஆதலால் மூல அஞ்ஞானமாம் விதை நீங்காமல் இருக்கும். அதனால் பிரபஞ் சத்தின் லாபத்திற்காக) அசுரர் வாழ்க, அசுரர் வாழ்ந்தால் யுத்தம் உண்டாம். யுத்தம் உண்டாயின் தேவர்கள் இருக்க நேரிடும். தேவர்கள் இருப்பின் யாகம், தவம் மற்றும் உள்ள கருமங்கள் இருக்கும். அவைகள் இருப்பின் படைப்பும் இருக்கும். இல்லையெனில் படைப்பு இல்லாமல் போகும். குற்றம் இல்லாத அசுரர்களின் அரசன் பிரகலாதன் உடலொடும் ஊழிக்காலம் வாழ்க.* **(5.4.52)**

**பரமாம் ஈச னாலே பாலிக்கும் கடவுள் நீதி**
**திரமுற இவ்வாறு) என்று சிந்தித்த செங்கண் மாயன்**
**அரவணைப் பாயல் நீங்கி அசுரர்கோன் அருகு சேர்ந்தான்**
**பிரமலோ கத்தை ஒக்கும் பெரியபா தலந கர்க்கே.**

**பொழிப்புரை:** *பரமேசுவரனால் நியமிக்கப்பெற்ற தெய்வ நியதியானது திடமாக இத்தன்மை உடையது என்று சிந்தித்த செங்கண் மாயன் (நாராயணர்) பாம்பணைப் படுக்கையில் இருந்து அகன்று, பிரம தேவனின் லோகத்தைப் போன்று விரிந்து விளங்கும் பாதாள லோகத்தில் அசுரர்களின் அரசன் அருகில் வந்தருளினார்.* **(5.4.53)**

**(வேறு)**

**கருட வாகனத்(து) உறைபவன் கவரிசேர் செங்கைத்**
**திரும டந்தைவாழ் வலத்தினன் ஐம்படை செறியும்**
**இருபு றத்தினன் தேவரும் முனிவரும் இறைஞ்ச**
**அருளும் நாயகன் அசுரனை உணர்திஎன்(று) அருளி.**

**பொழிப்புரை:** *கருட வாகனத்தில் வீற்றிருப்பவன், சாமரம் பொருந்திய செந்தாமரை மலரில் வாழ்கின்ற இலக்குமி தேவி உறைகின்ற திருமார்பினன், சங்கு, சக்கரம், வில், கதை, தண்டு என்னும் ஐந்து ஆயுதங்களைத் தரித்திருக்கும் இரு பாகத்தினன், தேவர்களும் முனிவர்களும் துதித்து வணங்க அருள் செய்யும் நாராயணன் பிரகலாதனை நோக்கி "நீ சமாதியிலிருந்து எழுந்திரு" என்று கூறியருளி.* **(5.4.54)**

**வலம்பு ரித்தொனி கிளப்பினன் மாதிரம் பிளப்ப**
**நிலம்பி ளப்புற நெடும்திசை பிளப்புற நிமிர்ந்த**
**அலம்பும் ஓதையால் மெல்லென மெல்லென அறிந்தான்**
**நலம்ப யப்புறு தற்பதத்(து) ஒன்றிய நல்லோன்.**

**பொழிப்புரை:** *பாஞ்சசன்யம் என்ற சங்கின் நாதத்தினை வெளிப்படுத்த, மண்ணுலகையும் விண்ணுலகையும் திசைகளையும் பிளந்து வியாபித்து ஓங்கிய அந்த சப்தத்தினால் மெதுவாக மெதுவாக உணர்வுக்கு வந்தான் நலத்தைத் தந்தருளும் தத் பதத்தில் (பிரம்மத்தில்) ஒன்றியிருந்த நல்லவன் பிரகலாதன்.* **(5.4.55)**

பிராண சத்திதான் பிரமரந் திரம்நின்று பெயர்ந்து
புராத னப்படி நாடிக ளால்எங்கும் பொருந்தி
விராவ லுற்றன ஒன்பது துவாரத்து மேவப்
பராப ரத்தினை அறிந்துளோன் அறிவுசம் பவித்த.

**பொழிப்புரை:** *சமாதியில் அடங்கியிருந்த பிராண வாயு உச்சியில் இருந்தும் எழுந்து பழைய படி நாடிகளின் மூலமாக எல்லா இடங்களுக்கும் சேர்ந்தன. கலந்த அவை ஒன்பது துவாரங்களிலும் பொருந்திட, பிரம்மத்தை உணர்ந்த பிரகாலதனின் அறிவானது திருசிய (காணப்படும்) பொருள்களில் சேர்ந்தது.* **(5.4.56)**

அறிவு தோன்றிஉள் பிராணதர்ப் பணநிழல் ஆகி
அறிவ தாம்பொருள் நோக்குற்றது) அன்னதாம் அறிவு
பிறிவ தாம்அறி பொருளிலே மனத்தன்மை பெற்ற
பிறிவ லாமுகம் தர்ப்பணத்(து) இருமைபெற் றதுபோல்.

**பொழிப்புரை:** *பிரக்ஞை வெளிப்பட்டு, விஷய முன்னிலையாகி, அந்தக்கரணப் பிராணனாம் கண்ணாடியில் பிரதிபலித்து பிம்பமாகி விஷயத்தை நாடுவதாக ஆனது. அத் தன்மையை அடைந்த சித்தானது (அறிவானது) பேதம் அடைந்ததைப் போல திருசியம் (காணப்படுவது) ஆகி. பேதம் இல்லாத முகம் கண்ணாடியில் இரண்டாவது முகம் உண்டானதைப்போல மனம் என்ற தன்மை பெற்றது.* **(5.4.57)**

அற்பம் உள்ள(ம்)அங் குரித்தலும் அரும்(பு)அவிழ் வுற்ற
உற்ப லங்கள்போல் மெல்லென மலர்வுற்ற ஒண்கண்
நிற்ப தாய்நரம்(பு) உறுபொறி அறிவுகள் நிறைய
நற்பி ராணனும் அபானனும் எங்கணும் நடந்த.

**பொழிப்புரை:** *மனம் சிறிது முளைத்தலும் அழகிய நேத்திரங்கள் மொட்டு அலர்ந்த பூவினைப் போல மெதுவாக விரிந்தன. பொருந்திய நாடிகளின் வாயிலாக விஷயங்களில் விருத்தி ஞானம் நிரம்பும்படி சாதகமாக உயர்ந்த பிராணனும் அபானனும் தேகம் முழுவதும் சஞ்சரித்தன.* **(5.4.58)**

அமைவில் காற்றுற்ற பதுமம்போல் அசைவினை அடைந்தான்
இமைக ளுக்(கு)இடை அளவிலே மனம்தடித்(து) எழுந்த
சமைவு றத்தெரி கண்மனம் பிராணன்மெய் தயங்கக்
கமையில் மிக்கவன் விளங்கினன் கருணைமால் காண.

**பொழிப்புரை:** *சலன சுபாவம் கொண்ட காற்றினால் அசைக்கப்பட்ட தாமரை போலப் பிரகலாதன் தனது தேகத்தில் அற்ப சலனத்தை அடைந்தான். நொடிப்பொழுதில்*

*மனமானது பருமையை அடைந்து நின்றது. விஷயங்களை அறியும் படியான கண், மனம், பிராணன் இவை பொருந்தி தேகத்தோடு விளங்க பொறுமை மிகுந்து நற்குணங்கள் வாய்த்த பிரகலாதன் கருணா மூர்த்தியாகிய மகாவிஷ்ணு பார்த்து அருளும் வண்ணம் அழகுடன் திகழ்ந்தான்.* **(5.4.59)**

**பரந்து நாட்டங்கள் நோக்கின மனனமும் பருமை**
**நிரந்த ரித்தன அவ்வயின் அவன்தனை நெடுமால்**
**சுரந்த அன்புடன் நோக்கியே அருள்செய்வான் தூயோய்**
**புரந்த ரன்புகழ் உனதுசீர் நோக்குவாய் புரிந்து.**

**பொழிப்புரை:** *கண்கள் மலர்ந்து நோக்கின. மனதில் புதிய எண்ணங்களும் உதயமாயின. அப்பொழுது அந்தப் பிரகலாதனை மகாவிஷ்ணு கருணையுடன் நோக்கி அருள் செய்து திருவாய் மலர்ந்தருளுகின்றார் "தூயவனே! இந்திரனும் புகழ்கின்ற உன்னுடைய ஐஸ்வரியத்தை-பெருமையை ஆராய்ந்து நோக்குவாய்"* **(5.4.60)**

**உடலை நோக்குதி அகாலத்தில் உன்னுடை உடலை**
**விடநி னைப்பது)என் பற்றுதல் விடுதல்சங் கற்பம்**
**படர்கி லாஉனக்(கு) அபாவமும் பாவமும் உடலில்**
**தொடரில் சேத(ம்)என் எழுதியால் இருத்தியால் தூயோய்.**

**பொழிப்புரை:** *"உன்னுடைய தேகத்தை உற்றுப் பார்ப்பாயாக. காலம் அல்லாத காலத்தில் உனது திடமான உடலைத் தியாகம் செய்ய (விட்டுவிடுவதற்கு) நினைப்பது என்ன? கொள்ளுவதும் தள்ளுவதும் ஆகிய இருவித சங்கற்பமும் இதயத்தில் பொருந்தாத உனக்குத் தேகத்தில் சாதகமான, பாதகமான கேடு வந்தாலும் என்ன பயன்? (ஒன்றும் பாதிப்பு இல்லை) ஆதலால் எழுந்திருப்பாய். உன்னுடைய விவகாரத்தைச் செய்து கொண்டிருப்பாய். தூயவனே!."* **(5.4.61)**

**சீவன் முத்தனாய் நீஇந்த உடலொடும் செங்கோல்**
**காவ லாளனாய்ச் சுமையறக் கற்பமட்(டு) இருப்பாய்**
**பாவ கன்சுடப் பன்னிரு கதிர்சுட உலகம்**
**யாவ தும்கெடா(து) இருப்பநீ இறப்ப(து)என் வாளா.**

**பொழிப்புரை:** *சீவன் முத்தனாய் (வாழும் போதே முத்தனாய்) நீ இந்த உடலுடன் அரசினை ஆண்டு, சுமையாகக் கருதாமல் பிரளய காலம் வரையில் இருப்பாய். அக்கினி எரிக்க, பன்னிரண்டு சூரியர்கள் தகிப்ப (சுட), பிரபஞ்சம் முழுதும் கெடாமல் இருக்க நீ மட்டும் வீணாக இறக்க நினைப்பது என்ன?* **(5.4.62)**

**ஓங்கும் ஆசையாம் பாசத்தால் உறப்பிணிப்(பு) உண்டு**
**வீங்கும் உள்ளுணர்(வு) அதன்வழி ஓடியே மெலிந்து**
**தாங்கு செய்கையால் மனம்மிகச் சலிப்பவர்க்(கு) அன்றோ**
**தீங்கு மேவிய மரணம்தான் சிறப்பது சகத்தில்.**

**பொழிப்புரை:** *மேன்மேலும் வளர்கின்ற ஆசாபாசங்களில் முழுதும் கட்டுண்டு வீங்கி ஏங்கித் தவிக்கின்ற உள்ளுணர்வின் வழியாக ஓடித் திரிந்து மெலிந்து அதன் காரணமாகச் செயல்களைச் செய்து மனம் மிகவும் சலிப்பு அடைந்தவர்களுக்குத் தான் துன்புறுத்தும் மரணம் சிறப்பானது இந்த உலகில். (அத்தகையவர்கள் தான் மரணத்தை வரவேற்பார்கள்,)* **(5.4.63)**

**அகங்க ரத்தினை அகற்றிஓர் பற்றின்றி அனைத்தும்**
**சுகந்த ரும்சமம் ஆனவர் ஆயுவே சுகமாம்**
**உகந்த ஆசையும் சினமு(ம்)அற்(று) உள்குளிர் மதியால்**
**செகங்க ளின்கரி யானவர் ஆயுவே சிறக்கும்.**

**பொழிப்புரை:** *தேகம் முதலியவற்றில் யான் என்னும் எழுச்சியை (அகங்காரத்தை) ஒழித்து, விஷயங்களில் சற்றும் பற்று இன்றி அனைவருக்கும் இன்பத்தைத் தரக்கூடிய சம பாவனை உடைய பெரியோர்களது ஆயுளே இன்ப வாழ்வாம். விருப்பமான விஷயத்தில் பற்றும், விருப்பம் இல்லாத விஷயத்தில் வெறுப்பும் ஒழிந்து, உள்ளே குளிர்ந்த புத்தியால் எல்லா லோகங்களுக்கும் சாட்சியே தான் என்று உணர்ந்து நிற்கின்ற பெரியோர்களது ஆயுளே சிறந்து விளங்கும்.* **(5.4.64)**

பற்று வான்பற்று பொருள்இரண் டும்பயில் பந்தம்
அற்ற போ(து)உப சாந்திதோன் றிடும்அது நிலைமை
பெற்ற போதுவீ(டு) எனும்பெயர் அந்நிலை பெறுமால்
வெற்றி வீரசிங் காதனத்(து) இருத்தியால் விளங்க.

**பொழிப்புரை:** *பற்றுக் கொள்பவன், பற்று கொள்ளப்படும் பொருள் இரண்டும் சேர்ந்து விவகரிக்கும் சம்பந்தமே பந்தம் ஆகும். அது ஒழிந்த போது உபசாந்தி நிலை உண்டாகும். அந்த உபசாந்தி திடமாக நிலைபெற்ற போது மோட்சம் என்னும் பெயரினை அடையும். வெற்றி வீரனே! யாவரும் போற்றும் படியாக சிங்காசனத்தில் வீற்றிருப்பாய்.* **(5.4.65)**

**குரைசெய் சங்கின(து) ஓசையால் குமுறுற வந்த**
**புரைஇல் வானவர் மங்கலப் பணிசெய்து புகழ**
**விரைவில் இன்(று)உனை மாமுடி மிலைச்சுவன் நானே**
**அரசு செய்கநீ ஊழியின் அள(வு)என அருளி.**

**பொழிப்புரை:** *முழக்கிய பாஞ்சசன்ய சங்கின் நாதத்தால்* **(***ஒலியால்***)** *உற்சாகத்தோடு ஆரவாரம் கொண்டு வந்த குற்றமில்லாத தேவர்கள் பூக்கள் முதலானவற்றைக் கொண்டு மங்கள வாழ்த்துகள் கூறிப் புகழ்ந்திட, விரைவில் இன்று உனக்கு முடி சூட்டுவேன் நானே, பிரளய காலம் வரையில் பாதாள லோகத்தை நீ அரசாட்சி செய்வாயாக என்று அருளிச் செய்து,* **(5.4.66)**

**மங்க லப்புனல் கொணர்(க)என மஞ்சனம் ஆட்டிச்**
**சங்கு சக்கரம் தரித்தன கைகளால் தானே**
**புங்க வத்திரள் போற்றிடப் பொன்முடி சூட்டி**
**அங்கண் அச்சுதன் அசுரர்கோ னுக்(கு)இவை அறைந்தான்.**

**பொழிப்புரை:** *கங்கை முதலான நதிகளின் நீரைக் கொண்டு வரும்படி கூறி, புண்ணிய தீர்த்தம் வந்தபின்பு அபிஷேகம் செய்து, சங்கு சக்கரம் தாங்கிய தனது கைகளால் முனிவர் கூட்டங்கள் போற்றிட, பொன் முடியைச் சூட்டி, அழகிய செந்தாமரை போன்ற கண்களை உடைய மகாவிஷ்ணு அசுரர்களின் அரசனுக்குப் பின்வருமாறு அருளிச் செய்வார் ஆயினார்.* **(5.4.67)**

**தள்ளில் மேருவும் புவனமும் அருக்கனும் சசியும்**
**உள்ள நாள்எலாம் அரசுசெய்(து) உயர்(க)என அருளிக்**
**கள்ள மாயையின் சிருட்டிஒன்(று) ஒளித்தல்போல் கணத்தில்**
**வெள்ள வானவர் குழாத்தொடு மறைந்தனன் விண்டு.**

**பொழிப்புரை:** *பிரளய காலத்தால் அன்றி அழியாத மேரு மலையும், பதினான்கு லோகங்களும், சூரியனும், சந்திரனும் இருக்கின்ற காலம் எல்லாம் அரசாட்சி செய்து மேன்மை அடைக என்று அனுக்கிரகம் செய்து, வஞ்சகமான மாயையின் படைப்பு ஒன்று உருவாகி ஒடுங்கியது போல, கணப்பொழுதில் தேவர்கள் கூட்டத்தோடு மகாவிஷ்ணு மறைந்தார்.* **(5.4.68)**

**என்ன ஓதிய வசிட்டனை இராகவன் நோக்கி**
**அன்ன தானவர்க்(கு) அரசனாய் வீடு(டு)ற்ற அறிஞன்**
**தன்ன(து) உள்ளமெய்ப் பரத்திலே தன்மய மான**
**பின்னர் மால்சங்கின் ஓசையால் பிறந்த(து)எப் பரிசோ.**

**பொழிப்புரை:** *என்று இவ்வாறு அருளிச்செய்த வசிட்ட முனியை இராம பிரான் நோக்கி, "அசுரர்களுக்கு அரசனாய் மோட்சத்தை அடைந்த பிரகலாதனின் உள்ளம் அந்தப் பரம பதத்தில் அதன் மயமாகி ஒன்றிய பின்பு பாஞ்சசன்ய சங்கின் நாதத்தினால் வெளிப்புறமாக வெளிப்பட்டது எவ்வாறு? (மனமானது பிரம்மத்தில் லயித்த பிறகு பாஞ்சசன்ய நாதமும் கேட்பது மிகவும் அரிது என்பது பொருள்)* **(5.4.69)**

**எனவி னாவலும் இராமனுக்(கு) அருந்தவன் உரைப்பான்**
**அனல்ப யின்றவித் தாம்என அமலவா தனைதான்**
**கனம்இல் சீவன்முத் தருக்(கு)எலாம் இதயத்தின் கண்ணே**
**சனன அங்குரம் மீண்டில(து) ஆகியே சாரும்.**

**பொழிப்புரை:** *என்று கேட்ட இராம பிரானுக்கு அரிய தவத்தை உடைய வசிட்ட முனிவர் அருளிச் செய்வதாவது... அக்கினியில் வறுக்கப்பட்ட விதையைப் போலச் சுத்த வாசனையானது தேக அபிமானம் இல்லாத உணர்வு வடிவாய் சீவன் முத்தருக்கு எல்லாம் மீண்டும் பிறப்புக்குக் காரணமான விதையாக இல்லாமல் மனதில் பொருந்தியிருக்கும்.* **(5.4.70)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

சுத்தமாய்ப் பரம மாகித் தோற்றம்சால் உதார மாகிச்
சுத்தமாம் சாத்தி கத்தைத் துன்றியே விடாமல் ஒன்றிச்
சுத்தஆத் துமத்தி யான மயமதாய்த் துவக்(கு)ஒன்(று) இல்லாச்
சுத்தவா தனைகள் நித்தம் சுழுத்திவா தனைபோல் நிற்கும்.

**பொழிப்புரை:** *சுத்த வாசனையானது தூயதாய் மேன்மை உடையதாய் விளக்கம் மிக்கதாய் பேரானந்தத்தை எல்லையில்லாமல் தருவதாய், எப்பொழுதும் சுத்த சாத்துவிகத்தை விடாமல் கொண்டிருந்து, பரிசுத்த பரமான்ம வடிவ தியானம் உடையதாய், மலின வாசனைகள் சம்பந்தம் இல்லாத தூய்மையானதாய் சுப வாசனைகள் இடைவிடாமல் சகஜமாகவே சுழுத்தி (ஆழ்துயில்) வாசனைகள் போல சீவன் முத்தருடைய இதயத்தில் அடக்கமாய் நிற்கும்.* **(5.4.71)**

ஆயிரம் வருடம் சென்றும் அங்கமே இருக்கில் உள்ளே
மேயதாம் அவ்அ வத்தை மெல்லென ஒருபால் நின்றும்
தேயல தாகித் தோன்றும் செறியும்அவ் அவத்தை யாலே
தூயநற் சீவன் முத்தர் உணர்ச்சியைத் தொடர்வர் என்றான்,

**பொழிப்புரை:** *ஆயிரம் வருடங்கள் சென்ற போதிலும், பிரராப்தம் மிச்சம் இருத்தலால் தேகமானது இருந்தால் உள்ளே பொருந்திய சுத்த வாசனை உடைய பிரக்ஞை அழியாமல் இருந்து மெதுவாக வெளியே வரும். அவ்வாறு வெளியே வந்த அந்த அவத்தையாலே (சுப வாசனையால்) பரிசுத்த சீவன் முத்தர் வெளிநாட்டத்தில் பொருந்துவர் (என்று அருளிச் செய்தார்.)* **(5.4.72)**

**(உபசாந்திப் பிரகரணத்தில் பிரகலாதன் கதை முற்றும்)**

# (v) காதி கதை

*மனதில் ஆசையின்மை நன்றாக உண்டாகும் பொருட்டு காணப்படும் யாவும் துக்க வடிவம் எனவும், முழுதும் மித்தை எனவும் தோற்றுவிக்க காதி கதை சொல்லப்படுகிறது. முன்பு ஈசுவர அனுக்கிரகத்தால் உதித்த ஆன்ம தத்துவ ஞானத்தால் சம்சார உபசாந்தி சொல்லப்பட்டது. இப்போது மனதின் வெற்றி தவிர பிரபஞ்ச மயமான மாயை உபசாந்தி ஆகாது என்று அறிவிப்பதற்காக மாயா வைசித்திரியத்தைச் சொல்வதற்கு இலவணன் கதையைப் போலக் காதி கதையும் கூறப்படுகிறது,*

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

பிறப்(பு)இறப்பாம் பெயருடைய இந்த மாயை
பெருமையினை முடிவுபெறப் பேச வொண்ணா
அறப்பெரிய தன்மனத்தை வென்றால் மாளும்
அல்ல(து)ஒரு வகையாலும் அகற்ற லாகாச்
சிறப்புடைய வன்மாயை விரிவில் உள்ள
சித்திரம்தோன் றிடஉனக்குச் செப்பும் காதை
மறப்பறுசிந் தையன்ஆகிக் கேட்டி என்னா
மனுகுலநா யகனுக்கு வசிட்டன் சொல்வான்.

**பொழிப்புரை:** *பிறப்பு இறப்பு என்ற சம்சாரப் பெயரினை உடைய இந்த மாயையின் பெருமையினை முழுவதுமாக இவ்வளவுதான் என்று கூறுவதற்கு முடியாது. மிகவும் பருத்துப் பெரியதான தனது மனதை வென்றால் மட்டுமே மாயை நாசம் அடையும். வேறு வழிகளால் இது நாசம் ஆகாது. பல விசேடங்கள் கொண்ட கொடிய மாயையின் அதிசயம் தோன்றும்படி உனக்குச் சொல்லப்போகின்ற கதையினை ஒருமுகச் சிந்தனையுடன் கேட்பாய் என்று மனுகுல நாயகனாகிய இராம பிரானுக்கு வசிட்ட முனிவர் கூறத் தொடங்குகிறார்.* **(5.5.1)**

மண்ணுலகில் கோசலமா மண்ட லத்தில்
மறையவர்கோன் காதிஎன வழங்கும் பேரோன்
உள்நினைந்(து)ஓர் கருமத்தைக் கிளையை நீங்கி
ஒருவனம்புக்(கு) ஒருவாவி உதகத்(து) ஊடே
நண்ணிஅணி கழுத்(து)அளவாய் அமிழ நின்று
நல்தவம்செய் எண்திங்கள் நடந்த எல்லை
கண்ணருளால் மாயவன்வந்(து) அவன்முன் தோன்றிக்
கருத்(து)என்கொல் அளித்து(ம்)எனக் கழற லோடும்.

**பொழிப்புரை:** *மண்ணுலகில் கோசலம் என்ற பெயருடைய தேசத்தில் பிராமணர்களில் சிறந்தவன் காதி என்ற பெயர் கொண்டவன் ஒரு காரியத்தை மனதில் நினைத்து, சுற்றத்தாரை விட்டு நீங்கி, ஒரு காட்டில் புகுந்து ஒப்பற்ற தடாக நீரில்*

*இறங்கி, கழுத்து அளவு மூழ்கும்படி நின்று, நல்ல தவத்தினைச் செய்து எட்டு மாதங்கள் கடந்த நிலையில் மிகுந்த பேரருளால் பகவான் நாராயணர் அவன் முன்பு தோன்றி எண்ணியது என்ன, தருகிறோம் என்று கூறவும்,* **(5.5.2)**

**சலம்நின்றும் கரையேறிக் காதி என்னும்**
**தவமறையோன் கைதொழுது சகம்அண் டத்தில்**
**அலகி(ல்)உயிர் மனக்கமலத்(து) அகலா வண்டே**
**அச்சுதனே அனந்தாஎன்(று) அன்பால் போற்றிச்**
**சலன(ம்)அறு தற்பரத்தில் சம்பந் தித்து**
**சனனமர ணத்(து)உருவால் சகங்கள் ஆகி**
**அலமரும்நீ(டு) ஆச்சரியம் செய்வ தாய்நீ**
**அளித்தமா யையைக்காண அருள்தி என்றான்.**

**பொழிப்புரை:** *தடாக நீரிலிருந்து கரையேறி வந்து காதி என்னும் தவம் செய்கின்ற அந்தணன், கைதொழுது "இந்த பூமியில் உள்ள சகல அண்டங்களிலும் உள்ள உயிர்களின் மனமாகிய தாமரையில் திகழும் வண்டே! அச்சுதனே! அனந்தா!" என்று பக்தியோடு துதித்து, "சலனம் இல்லாத பரம பதத்தில் ஆரோபித சம்பந்த ஒற்றுமையால் பற்றுக் கோடு உடையதாய் பிறப்பு இறப்பு வடிவத்தால் உலகங்கள் ஆகி பிரமிக்கும்படி வெகு அற்புதங்கள் இயற்றுவதாய் தேவரீர் உண்டாக்கிய மாயா சத்தியை யான் காணும்பொருட்டு அருள்செய்வீர்" என்றான்.* **(5.5.3)**

**அந்தணன்வேண் டலும்மாயை காண்டி கண்டால்**
**அகற்றுதியேல் அகற்று(க)என அருளி மாயன்**
**கந்தருவ நகரம்போல் மறைத லோடும்**
**கருணைமூர்த் தியைக்கண்ட களிப்பி னாலே**
**சந்தத(ம்)உள் குளிர்காதி அந்தக் கானில்**
**தவத்தொடுசின் நாள்இருந்து தானே ஓர்நாள்**
**சிந்தனையில் அரிஉரைத்த உரையை நாடித்**
**தேமலர்ஓ டையில்மூழ்கச் சென்றான் அன்றே.**

**பொழிப்புரை:** *அந்தணன் வேண்டவும் மாயை தனைக் காண்பாய், கண்டால் அகற்ற முடியுமாயின் அகற்றிக் கொள்வாய் என்று அருளிச் செய்து பகவான் நாராயணர் கந்தர்வ நகரம் போல் மறைந்திடவும், கருணா மூர்த்தியைத் தரிசித்த மகிழ்ச்சியினால் எப்பொழுதும் உள்ளே குளிர்ச்சியாகத் திகழும் காதி அந்தக் காட்டில் சில நாட்கள் தவம் செய்திருந்து, ஒரு நாள் மனதில் பகவான் நாராயணர் உரைத்ததை எண்ணி தேன் நிரம்பிய மலர்கள் நிறைந்த ஓடையில் குளிக்கச் சென்றான்.* **(5.5.4)**

**வனம்படிந்(து)அங்(கு) அதனுள்செய் விதிக்கே வேத**
**மந்திரமும் தியானமும்தான் மறந்து காதி**
**இனம்பயில்தன் மனைக்கேதான் தன்னை நோயால்**
**இறந்தவனா கக்கண்டான் இனத்தோர் எல்லாம்**

கனம்படமொய்த்(து) இருபுறத்தும் அலறத் தேவி
கால்கடைக்கே வீழ்ந்(து)அலறக் காதல் மாதா
தனம்பருகத் தருவனபோல் அணைத்துக் கொண்டு
தழல்மிதித்தாள் போல்பதைத்துத் தளரக் கண்டான்.

**பொழிப்புரை:** *காட்டில் அந்தத் தடாக நீரில் குளிக்கும் அந்த நேரத்தில் அதனுள் செய்ய வேண்டிய விதிப்படி வேத மந்திரங்களும் தியானமும் மறந்து போக, காதி தனது உறவினர் வாழும் தனது வீட்டிலேயே நோயினால் தன்னை இறந்தவனாகப் பார்த்தான். தனது உறவினர்கள் எல்லாம் கூட்டமாகக் கூடி இரண்டு பக்கங்களிலும் அலறிடவும், மனைவி கால் புறத்தே வீழ்ந்து அலறவும், அன்புடைய தாய் தனங்களில் பால் குடிக்கத் தருவது போல் அணைத்துக் கொண்டு நெருப்பை மிதித்தவள் போல் பதைத்துத் தளர்ந்து போவதைக் கண்டான்.* **(5.5.5)**

ஆம்அளவில் அடுத்தனசெய்(து) அழும்சுற் றத்தார்
அனல்கொளுத்தச் சாம்பராய் அங்கம் எல்லாம்
ஈம(ம்)உறக் கண்டான்அச் சலத்தின் ஊடே
இருக்கின்ற காதிதன(து) இதயத்(து) உள்ளே
தோமுறும்ஆ குலம்மிகுந்த புந்தி யாலே
துகள்அறத்தன் பால்தன்னால் தோன்றக் கண்ட
வேமுறுசெய் கைகள்மேலும் உள்ள எல்லாம்
இராகவகேள் எனமுனிவன் இசைப்ப தானான்.

**பொழிப்புரை:** *அவ்வண்ணம் நிகழ்ந்த அளவில் அழுகின்ற சுற்றத்தார் சவத்தை எடுப்பதற்கான சடங்குகளைச் செய்து, அக்கினியில் தகனம் செய்யத் தேகம் முழுதும் சாம்பலாய்ச் சுடுகாட்டில் இருப்பதைக் கண்டான். தடாக நீரின் உள்ளே மூழ்கி இருக்கின்ற காதி தன்னுடைய இதயத்தில் குற்றமுற்றுக் கவலை அதிகரித்த புத்தியால் தன்னிடத்தில் தடையின்றித் தன்னாலே தோற்றமாகக் கண்ட மயக்கம் பொருந்திய செய்கைகள், பின்னர் நடந்த செய்கைகள் ஆகிய எல்லாவற்றையும் இராகவனே! கேட்பாயாக என்று வசிட்ட முனிவர் கூறலானார்.* **(5.5.6)**

இப்பாரில் ஊணநாட்(டு)ஓர் ஊரின் எல்லை
இருக்கின்ற நீசநாய்க் கறிப்போர் தங்கள்
மைப்பாவை ஒருத்திவயிற்(று) ஒருசூல் ஆகி
வருந்திவளர்ந்(து) உறுகாலம் வந்த எல்லை
கைப்பால னாய்ப்பிறந்து வளர்ந்து வெந்த
கரிக்கட்டை போல்நிறத்துக் காளை யாகி
ஒப்பாகி நாய்க்கறிப்போர் குலத்தில் வந்த
ஒருகடைச்சி தனைமணம்செய்(து) ஒருமை ஆனான்.

**பொழிப்புரை:** *இந்தப் பூவுலகில் ஊண நாட்டின் ஒரு ஊரின் கோடியில் வசிக்கின்ற நாய் மாமிசம் புசிக்கும் நீசர்களாகிய கடையர் தங்களின் கரிய பெண்ணொருத்தி வயிற்றில் கருவாகி துக்கத்தோடும் வளர்ந்து உரிய காலத்தில் பிறந்து கைக்குழந்தையாகி*

*வளர்ந்து அக்கினியில் வெந்து போன கரிக்கட்டை போன்று கரு நிறத்தை உடைய இளைஞன் ஆகி, நாய்க் கறி புசிக்கும் அதே கடையர் குலத்தில் ஒரு நீசப் பெண்ணை மணந்து மனம் ஒத்து வாழ்ந்தான்.* **(5.5.7)**

**வரைகளினும் வனங்களினும் முதலாய் எங்கும்**
**மனமு(ம்)உயி ரும்போல வாழும் நாளில்**
**தரைமிசைதன் குலம்விளங்க மைந்தர் தம்மைச்**
**சனிப்பித்தான் சிலநாளில் சரைவந்(து) எய்தி**
**நரைபெருக வருதலுமே தழையால் செய்யும்**
**நன்மனைதூ ரத்(து)இயற்றி நண்ண லுற்றான்**
**புரையறுமா தவர்போல்அங்(கு) உறையும் நாளில்**
**புத்திரர்க்கும் சரைவந்து புகுந்த(து) அன்றே.**

**பொழிப்புரை:** *மலைகள், காடுகள் முதலாக எல்லா இடங்களிலும் மனமும் சீவனும் போல ஒன்றுபட்டு வாழும் நாளில், உலகில் தனது குலம் விளங்குவதற்காகப் புத்திரர்களை உண்டாக்கினான். சில நாட்களில் முதுமை வந்து அடைய, நரை முடி அதிகரித்துப் பெருகவும் சருகுகளால் தழைகளால் நல்ல குடிசை ஒன்றினை அமைத்து அதில் வாழ்ந்து வந்தான். குற்றம் இல்லாத தபசிகள் போல அந்தக் குடிசையில் வசித்து வரும் நாளில் அவனது புத்திரர்களுக்கும் முதுமை வந்து விட்டது.* **(5.5.8)**

**மனையவட்கும் புத்திரர்க்கும் தனக்கும் சேர**
**வார்த்திகம்வந் ததுநோக்கி வருந்தும் நாளில்**
**தனைஒழிய அனைவரையும் காலன் மாய்ப்பச்**
**சந்ததம்வாய் விட்(டு)அலறித் தனிஆற் றாது**
**நினை(வு)அழிந்(து)ஓர் ஆசையும்அற்(று) அனேக தேசம்**
**நெடி(து)உழல்வான் கீர(ம்)எனும் நீதி நாட்டில்**
**புனைமுடிமன் னவன்நகரில் புகுந்து வானில்**
**பொன்தெருபோல் ஒருதெருவில் போகும் போதில்.**

**பொழிப்புரை:** *மனைவிக்கும், புத்திரர்க்கும், தனக்கும் ஒருசேரக் கிழப்பருவம் வந்ததை எண்ணி வருந்துகின்ற நாளில், தன்னைத் தவிர மற்ற அனைவரையும் காலன் வந்து கொண்டு செல்ல, எப்பொழுதும் வாய்விட்டு அலறி, தனி ஒருவனாக இருக்க முடியாமல், நினைவு அழிந்து ஒரு ஆசையும் இல்லாமல் பலப்பல தேசங்கள் நீண்ட காலம் சுற்றித் திரிந்தவன், கீரம் என்னும் ஒழுக்கம் நிறைந்த நாட்டில் மகுடம் புனைந்த அரசனின் பட்டணத்தில் நுழைந்து, சொர்க்க லோகத்தில் உள்ள பொன்மயமான ஒரு தெருவினைப் போன்ற ஒரு தெருவில் போகும்போது.* **(5.5.9)**

**இறையவன்மாண் டனன்உலகம் காக்க வேறோர்**
**இறைவனைக்கொண்(டு) ஏகுதிஎன்(று) ஏவிச் செம்பொன்**
**நிறைமணியால் அலங்கரித்து விடுத்த தந்தி**
**நிருபதியார் எனத்தேடி நேரே போதக்**

**கறைவடிவோ(டு) இவன்கண்டான் இவனை அந்தக்**
**கறையடிகா ணலும்கரத்தால் கழுத்தில் ஏற்ற**
**உறைதருபா னுவினுடன்செல் உதய நாகம்**
**ஒத்ததுபல் லியம்சூழ்ந்த(து) உவரி ஒத்த.**

**பொழிப்புரை:** *அந்த நகரின் அரசன் மாண்டு விட்டதால் அரசினைக் காப்பதற்காக வேறொரு அரசனைக் கொணர்க என்று செம்பொன் மணி ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு ஏவி விட்ட பட்டத்து யானை அரசன் யார் என்று தேடிக் கொண்டு நேராக வந்து சேர, அழுக்கு வடிவமாகிய இவன் யானையைக் கண்டான். யானையும் இவனைக் கண்டது. கண்டதும் துதிக்கையால் அவனைத் தன்னுடைய மத்தகத்தில் ஏற்றி அமர வைத்தது. அது சூரியன் மலையுடன் செல்வது போல் இருந்தது. கடல் ஓசையைப் போல வாத்தியங்கள் முழங்கின.* **(5.5.10)**

**எண்திசையும் சயசயஎன்(று) இறைஞ்ச வந்தான்**
**இவன்இறைஎன்(று) அலங்கரித்தார் எழில்கொள் மானார்**
**பண்டைஅமைச் சரும்சேனைத் தலைவர் தாமும்**
**பணிதலைக்கொண் டார்தரணி பாலன் ஆகி**
**மண்டல(ம்)எங் கணும்செங்கோல் முறையின் ஓச்சி**
**மரபினால் கவல(ன்)எனும் வண்பேர் பெற்றுத்**
**தொண்டைஇத ழார்விரும்பக் கீர நாட்டில்**
**சுடர்மணிச்சிங் காதனமேல் தோற்றம் மிக்கான்.**

**பொழிப்புரை:** *எட்டுத் திசைகளிலும் ஜயம் ஜயம் என்று போற்றி வணங்க வந்தான். இவனே அரசன் என்று அழகுடைய மாதர்கள் இவனை அலங்கரித்தனர். முந்தைய அமைச்சரும், படைத் தளபதியும் இவனுடைய ஆணையைச் சிரமேல் கொண்டனர். நாட்டினைக் காப்பவன் ஆகி, ராச்சியத்தை முறைப்படி நீதி தவறாமல் ஆட்சி புரிந்து வர, மரபுப்படி கவலன் என்ற வளமையான பெயர் பெற்று, கோவைக்கனி போன்ற இதழ் உடைய மாதர்கள் விரும்ப, கீர நாட்டில் பொன் மணிகளால் அலங்கரிக்கப்பட்ட சிம்மாசனத்தில் வீற்றிருந்தான்.* **(5.5.11)**

**நாலிரண்டு வருட(ம்)உயர் கவலன் என்னும்**
**நாய்க்கறிக்கும் கடைய(ன்)நர பதியாய் வாழ்ந்து**
**மே(ல்)அதன்பின் ஒருநாளில் தனிய னாகி**
**மெய்அலங்கா ரங்க(ள்)எல்லாம் விட்டுத் தானே**
**காலி(ல்)நடந்(து) உயர்மனையின் புறமுற் றத்தில்**
**கடைவேடத் துடன்உலவும் காலை ஆங்கே**
**நீலிமையாம் நிறத்தோர்நாய்க் கறிக்கும் நீசர்**
**நேர்வந்தார் வீணைஇசை நிரப்பும் கையார்.**

**பொழிப்புரை:** *நாய் மாமிசம் புசிக்கும் நீசன் மேன்மையான கவலன் என்ற பெயரில் எட்டு ஆண்டுகள் அரசனாக மேலான வாழ்வில் வாழ்ந்து, அதன் பின்பு ஒரு நாள் தனியாக அரச அலங்காரம் எல்லாம் களைந்து விட்டுக் காலினால் நடந்து உயர்ந்த*

*அரண்மனையின் வெளி முற்றத்தில் நாய்க்கறி புசிக்கும் கடையர் வேடத்தில் உலாவிக் கொண்டிருந்த போது, அங்கே கருத்த நிறமுடைய நாய்க்கறி புசிக்கும் நீசர் வீணையின் இசையை மீட்டும் கரத்தை உடைய கடையர் வந்தனர்.* **(5.5.12)**

யாமுடைய காளைக்குள் மேலாம் மற்றோர்
இருண்டநிறச் சிவந்தவிழி விருத்தன் எய்திக்
காமுடைய நற்கீர மகிபன் தன்னைக்
காண்டலுமே காதலுடன் கடைஞ்சன் என்னும்
ஊழுறுதொல் பெயர்வினவி நெடுங்கா லத்தின்
உறவாம்நீ எங்(கு)அகன்றாய் உறைவ(து) எங்ஙன்
சூழுறுநல் விதியாலே கண்டேன் என்னாத்
தொடர்பெல்லாம் உள்ளபடி தோன்றச் சொன்னான்.

**பொழிப்புரை:** *வீணை உடைய கடையர் கூட்டத்தில் தலைவனாக விளங்கும் மற்றொரு கருத்த நிறமும் சிவந்த விழியும் உடைய கிழவன் கீர நாட்டின் ஒளியுடைய அரசனாகிய தன்னைக் கண்டதும், அன்புடன் ஊழ் வசத்தால் கடைஞ்சன் என்னும் பழைய பெயரினைக் கூறி, நீண்ட கால உறவாகிய நீ எங்கு சென்றாய்? எங்கு இருக்கின்றாய்? நல்ல விதி வசத்தாலே உன்னைக் கண்டேன் என்று பழைய சம்பந்தம் அனைத்தையும் உள்ளவாறு சொன்னான்.* **(5.5.13)**

அதுபுகன்ற அவன்தன்னைக் கவலன் ஆன
அரச(ன்)அதிர்ந்(து) உரப்பி அவண்நின்(று) ஆங்கே
கதுமெனஉள் ஏகுதலும் இவற்றை எல்லாம்
கனம்குழையார் சாளரத்தில் கண்ணில் கண்டார்
புதுமையினால் நின்றார்நின் றுழியே கண்டு
பூபதியாம் இவன்கடைஞ்சப் புலையன் ஆமேல்
எதுசெயப்பாற்(று) இனிஎன்று துணுக்குற்(று) ஏங்கி
இடர்உற்றார் இவன்கலங்கா(து) இதயத்(து) எண்ணி.

**பொழிப்புரை:** *அவ்வாறு கூறிய கிழவனைக் கவலன் ஆகிய அரசன் அதிர்ந்து போய் அவனை அதட்டி அந்த இடத்தல் இருந்து சட்டென்று உள்ளே போகவும், நிகழ்ந்தவற்றை எல்லாம் குழை அணிந்த அந்தப்புர மகளிர் நேரடியாகக் கண்டனர், ஆச்சரியத்தால் நின்றனர். நின்ற இடத்திலேயே ஆலோசித்து மன்னவன் ஆகிய இவன் கடைஞ்சன் என்னும் நீசன் ஆவான் எனில் என்ன செய்ய முடியும் இனிமேல் என்று திடுக்கிட்டு கவலை கொண்டு துயரம் அடைந்தனர். இவன் சஞ்சலம் அடையாமல் மனதில் திடம் அடைந்து.* **(5.5.14)**

அறியான்போல் அவற்றைஎல்லாம் மறைத்து முன்போல்
ஆதனத்தில் இருக்கவு(ம்)அங்(கு) அவனை முன்னம்
செறிவான வஞ்சியர்மந் திரியர் யாரும்
தீண்டாத சவத்தைப்போல் தெரிசி யாராய்ப்

பிறியாது நின்றனர்(ர்)அச் சனத்துள் சேர்ந்தும்
பேதமாய் இவன்தனித்த பெற்றி கூறில்
பொறியாரும் கல்விதனம் யாதும் இன்றிப்
புறநாட்டில் உறும்பதிகன் போலும் அன்றே.

**பொழிப்புரை:** *இவற்றை எல்லாம் அறியாதவன் போல மறைத்து முன்பு போலவே சிம்மா சனத்தில் வீற்றிருக்கவும், அங்கு முன்னாளில் கூடியிருந்த மாதர்கள், அமைச்சர்கள், சேனாதிபதிகள் யாவரும் தீண்டத் தகாத பிணத்தைப் போலக் கண்டு கொள்ளாமல் (அதே சமயத்தில்) பக்கத்திலும் இருந்தனர். அவர்களுடன் இருந்தும் வேறுபட்டு இவன் தனியாக நிற்கின்ற தன்மை எவ்வாறு எனக் கூற வேண்டுமானால் புலன்களின் விவேகமும், வித்தையும், செல்வமும் ஆகிய எவையும் இன்றி வெளி தேசத்தில் சென்று அடைந்த வழிப்போக்கனைப் போன்று ஆனான்.* **(5.5.15)**

ஆயிழையா வரும்புலைநாய்க் கறிப்போ னாலே
அனேகநாள் பாதகமே அடைதல் ஆனோம்
போ(ய்)இனிஓர் சாந்தியினும் உய்ய மாட்டோம்
புனிதமாம் படிதீயில் புகுதும் என்னாத்
தீயில்விழ நிச்சயித்(து)அந் நகரோர் எல்லாம்
சிசுக்கள்முதல் விருத்தர்கடை சேரக் கூடி
வீயிலுறை வண்டுகள்போல் எரியில் வீழ்ந்தார்
வேந்தனாம் புலைக்கடைஞ்சன் மிகவும் நொந்தான்.

**பொழிப்புரை:** *மங்கையர் முதலிய யாவரும் நாய்க்கறி புசிப்பவனால் அனேக நாட்கள் பாவமே அடைந்தோம். இனிச் சென்று எந்தவொரு பரிகாரம் செய்தாலும் கடைத்தேற மாட்டோம். புனிதமாகும்படி தீயில் விழுந்து விடுவோம் என்று அக்கினியில் விழலாம் என்று நிச்சயம் செய்து, அந்த நகரத்தில் வசிக்கின்ற குழந்தைகள் முதல் முதியவர்கள் வரையில் ஒன்று சேர்ந்து, பூவில் விழும் வண்டுகள் போலத் தீயில் விழுந்தனர். அரசனாகிய புலைக் கடைஞ்சன் மிகவும் துயர் அடைந்தான்.* **(5.5.16)**

நல்லினம்சேர் தலில்சித்தம் தெளிந்து நன்றாம்
நாய்க்கறிக்கும் புலைநிருபன் நாடு கிற்பான்
புல்லியநம் தொடர்பால்இத் தேசத்(து) உள்ளோர்
பூரியராய் அனல்புகுந்து பொன்றிப் போனார்
அல்லலுடன் இனிஅமையும் என்ன நாடி
ஆவிவிடத் துணிந்(து)அனலில் வீழும் போதில்
பல்லவம்போல் எரிகடைஞ்சன் உடலில் தாக்கப்
படிபுனலுள் காதிஉடல் பதைத்த(து) அன்றே.

**பொழிப்புரை:** *இதுகாறும் நல்லதோர் இன மக்களைச் சார்ந்து வாழ்ந்ததால் மனம் தெளிந்து நற்குணம் வாய்ந்த நாய்க்கறி புசிக்கும் கடையனான அரசன் இவ்வாறு சிந்திப்பான். இழிவான நம்முடைய சம்பந்தத்தாலே இந்த நாட்டில் உள்ளவர்கள்*

*பாவியராகி நெருப்பில் புகுந்து அழிந்து போனார்கள். இனி துன்பத்துடன் தான் வாழ்வு அமையும் என்று கருதி உயிரை விடத் துணிந்து தீயில் விழப்போகும் நேரத்தில், உலர்ந்த சருகு போன்று தீயானது கடைஞ்சன் உடலில் தாக்க, தண்ணீரில் மூழ்கிய அந்த மறையவனாம் காதியின் உடல் துடிதுடித்தது.* **(5.5.17)**

**மாமாயை நின்(று)அகன்று தெளிந்த காதி**
**வருமுகூர்த்தம் ஓர்இரண்டில் மயக்கம் நீங்கி**
**யாம்(ம்)ஆ(ர்)என் காண்கின்றோம் என்செய் தோம்என்(று)**
**எல்லாம்உள் நினைந்துசலத் திடைநின்(று) ஏறி**
**ஆ(ம்)ஆ(ம்)இப் படியன்றோ உயிர்கள் எல்லாம்**
**அரணியத்துள் சினப்புலிபோல் அவாவி ஓடித்**
**தோமாரும் நெடுமயக்கில் மனம்மோ கித்துத்**
**துவள்கின்றார் எனக்கருதித் துயரம் தீர்ந்தான்.**

**பொழிப்புரை:** *மிகப் பெரியதான மாயையில் இருந்து வெளி வந்து தெளிவடைந்த அந்தணன் ஆகிய காதி வரும் இரண்டு முகூர்த்த காலத்தில் மயக்கம் நீங்கி, நான் யார்? எதைக் காண்கின்றேன்? என்ன செய்கின்றேன்? என்று எல்லாவற்றையும் உள்ளத்தில் நினைத்துத் தண்ணீரிலிருந்து கரை ஏறி, ஆம் ஆம் இப்படித்தான் உயிர்கள் எல்லாம் காட்டில் சினம்கொண்ட புலியைப் போல, குற்றமுடைய நீண்ட மயக்கத்தில் (பிராந்தியில்) மனமானது மோகம் அடைந்து துவண்டு போகின்றனர் என்று எண்ணிப் பார்த்துத் துயரத்தை ஒழித்தான்.* **(5.5.18)**

**அக்கருத்தி னுடன்சிலநாள் அகற்றி நின்றான்**
**ஆசிரமத்(து) அவ்வயின்ஓர் அதிதி எய்த**
**மிக்கமகிழ் வுடன்தேன்காய் விரும்பி ஊட்டி**
**வெய்யவன்போம் சந்தியில்தம் விதிகள் செய்து**
**தக்கசய னங்கள்பயின்(று) இருவர் தாமும்**
**தத்துவநூல் கதைகள்மொழி சமயம் தன்னில்**
**ஒக்கவுறை அதிதிதனைக் காதி நோக்கி**
**உத்தமநின் உடல்உணங்கி ஓய்ந்த(து) என்னோ.**

**பொழிப்புரை:** *அந்தக் கருத்துடன் ஆசிரமத்தில் சிலநாட்கள் கழித்தான். அப்பொழுது அதிதி ஒருவன் ஆசிரமத்துக்கு வரவும், மிகுந்த மகிழ்ச்சியுடன் தேனும், கனிகளும் விருப்பமுடன் அளித்து உண்ணச் செய்து, சூரியன் மறைகின்ற மாலை சந்தி வேளையில் முறைப்படி செய்ய வேண்டிய சந்தியா வந்தனம் முதலியவற்றைச் செய்து, தகுந்த படுக்கை தயார் செய்து, இருவரும் தத்துவ நூல்களில் சொல்லப்பட்டவற்றை ஒருவருக்கு ஒருவர் கூறி உரையாடிக் கொண்டிருந்த பொழுது, தன்னுடன் அமர்ந்திருக்கும் அந்த அதிதியைக் காதி நோக்கி, "உத்தமனே! உனது உடல் இளைத்துக் களைப்படைந்து காணப்படுவது ஏனோ?"* **(5.5.19)**

கூறுவாய் எனும்காதிக்(கு) அதிதி சொல்வான்
குவலயத்(து)உத் தரதிசையில் குலவு செல்வம்
தேறுபுகழ் கீரம்(ம்)என்னும் தேசம் தன்னில்
யான்மாதம் ஒன்(று)இருந்தேன் இனியோர் வேண்ட
ஆறுறயான் உறைநகரில் ஒருவன் என்பால்
அணுகிஉரைப் பான்இந்நாட்(டு) அரசாய் இவ்வூர்
மாறுபடா(து) எட்(டு)ஆண்(டு)இங்(கு) ஒருவன் வாழ்ந்து
மற்(று)அவன்நாய்க் கறிப்பவனாம் மரபு தோன்ற.

**பொழிப்புரை:** *சொல்வாய் என்ற காதிக்கு அதிதி கூறுகின்றான் "பூமியில் வடதிசையில் செல்வமும் புகழும் வாய்ந்த கீரம் என்னும் நாட்டில் அன்புடையவர்கள் வேண்டுதலுக்கு இணங்கி ஒரு மாத காலம் நான் தங்கியிருந்தேன். அமைதியாக இருந்த காலத்தில் அந்நகரில் வசிக்கும் ஒருவன் என்னிடம் வந்து கூறினான், இந்த நாட்டு அரசனாய், இந்த ஊரில் வேறுபாடு இன்றி எட்டு ஆண்டுகள் ஒருவன் வாழ்ந்தான், அவன் நாய்க்கறி புசிக்கின்ற நீசனாம் மரபில் வந்தவன்.* **(5.5.20)**

**(எழுசீர் ஆசிரிய விருத்தம்)**

அனையவன் கனல்புக்(கு) இறந்தனன் ஆங்கே
அந்தணர் அனல்புகுந்(து) அவிந்தார்
எனையர்(ஏ)என்(று) இசைக்கேன் என்றலும் அதுகேட்(டு)
இயம்பிய தேசம்விட்(டு) ஏகிக்
கனதிரைக் கடவுள் புனல்பிர யாகைக்
கரையில்(ல்)அப் பாதகம் கழிப்பான்
தனைநிகர் மறையால் சாந்திகள் செய்து
சாந்தரா யணம்சரித்(து) இளைத்தேன்.

**பொழிப்புரை:** *அந்த நீச மரபில் வந்த அரசன் நெருப்பில் வீழ்ந்து இறந்து போனான். அங்கு வசித்த அந்தணர்களும், மக்களும் அக்கினியில் பிரவேசம் செய்து* **(புகுந்து)** *மாண்டனர். எத்தனை பேர்கள் என்று கூற முடியாது என்பதைக் கேள்விப்பட்டு, கூறிய அந்த நாட்டினை விட்டு, புறப்பட்டு, பெரிய அலைகள் நிறைந்த தெய்வ கங்கையில்* **(***பிரயாகை தீரத்தில்***)** *அந்த நீச சம்பந்தமான பாவத்தை அகற்றும் பொருட்டு, தனக்குத் தானே நிகரான சாத்திரங்களின்படி பிராயச்சித்தம் செய்து, சாந்தராயண விரதம் அனுசரித்து இளைத்துப் போனேன்.* **(5.5.21)**

என்றுகொண்(டு) அதிதி இயம்பலும் காதி என்னுடைச் சரிதைஈ(து) என்னாத்
தன்தனி உளத்தில் அதிசயம் மிக்குத் தன்னுடைப் புலைச்சரித் திரமாய்
முன்திகழ் இயற்கை காண்பது விரும்பி முந்துள நாடுகள் அகன்று
சென்றுபுக்(கு) ஊண மண்டலம் தனில்தான் செனித்(து)உறை இடமெலாம் கண்டான்.

**பொழிப்புரை:** *என்று இவ்வாறாக வந்த அதிதி கூறவும், இது என்னுடைய சரித்திரம் அல்லவோ என்று காதி தன் உள்ளத்தில் தானே மிகுந்த ஆச்சரியம் அடைந்து,*

*தன்னுடைய நீச சரித்திரமாக முன்பு விளங்கிய அந்த சுபாவத்தைப் பார்க்க விரும்பி, எதிர்ப்பட்ட நாடுகளைக் கடந்து சென்று ஊண மண்டலம் வந்து அடைந்து, அங்கு தான் பிறந்து ஆடிய இடங்களை எல்லாம் கண்டான்.* **(5.5.22)**

**முந்துதான் கண்ட படியெலாம் கண்டு மொய்சடை முடிமிகத் துளக்கிச்**
**சிந்தையில் வியந்து நான்முகன் விவிதச் செய்கையை நோக்கிமேல் சென்றான்**
**அந்தநல் ஊண மண்டலம் நீங்கி அணிதிகழ் கீரநாட்(டு) அணுகி**
**வந்துதான் முன்னம் செய்தன எல்லாம் வழுவறக் கண்டுகேட்(டு) அறிந்தான்.**

**பொழிப்புரை:** *முன்பு தான் பார்த்தபடி எல்லாவற்றையும் கண்டு, நிறைந்த சடாமுடியை அசைத்து, மனதில் ஆச்சரியம் அடைந்து, நான்முகன் பலவிதமாகச் செய்திருப்பதை நோக்கி, மேற்கொண்டு சென்றான். அந்த அழகான ஊண மண்டலத்தில் இருந்து புறப்பட்டு, அலங்காரம் மிக்க கீர நாட்டினைச் சேர்ந்து, முன்பு தான் செய்தவற்றை எல்லாம் குறைவறக் கண்டும் கேட்டும் அறிந்தான்.* **(5.5.23)**

**இதுகொலோ முன்னம் இயம்பிய மாயோன் எனக்(கு)அறி வித்தமா மாயை**
**புதுமையாம் இதனை நன்குற அறிந்தேன் புந்தியால் என்பது கருதிக்**
**கதுமென அந்தத் தேச(ம்)நின்(று) அகன்று கனவரைச் சாரலின் அணுகி**
**அதுலமா தவன்ஓர் அங்கைநீர் உணவாய் அரிமகிழ் அருந்தவம் புரிந்தான்.**

**பொழிப்புரை:** *இது தானோ முன்பு தரிசனம் அளித்த மாயோன் எனக்கு அறிவித்த மிகப் பெரியதாய் இருக்கின்ற மாயை, இதனுடைய அற்புதங்களைப் புத்தியால் நன்றாக அறிந்தேன் என்று எண்ணி, சட்டென்று அந்தத் தேசத்தை விட்டு நீங்கி, உயர்ந்த மலையின் அடிவாரத்தை அணுகி, ஒப்பற்ற மாதவன் ஆகிய காதி அந்தணன் உள்ளங்கைத் தண்ணீர் மட்டும் உணவாக அருந்தி நாராயணர் மகிழும் படியாக அரிய தவத்தைச் செய்தான்.* **(5.5.24)**

**ஆண்டுசென் றளவே அம்மலைச் சாரல் அருந்தவன் ஆச்சிர மத்தில்**
**நீண்டமால் நீல முகில்எனத் தோன்றி நிறைதவக் காதியை நோக்கி**
**ஈண்டிய எமது மாயையின் பெருமை இயல்புறக் காண்டனை இனிமேல்**
**வேண்டிய(து) என்னை கிரித்தடத்(து) இயற்றும் மெய்த்தவம் எதுபொருட்(டு) என்ன.**

**பொழிப்புரை:** *ஓர் ஆண்டு கழிந்தபோது, அந்த மலைச் சாரலில் அரிய தவம் செய்யும் காதி ஆசிரமத்தில் நெடுமால் நாராயணர் நீலவண்ண மேகம் போல் தோன்றி தவம் நிறைந்த காதியை நோக்கி, "இங்கு எமது மாயையின் பெருமையை உள்ளபடி கண்டாய். இனிமேல் உனக்கு வேண்டியது என்ன? இந்த மலைச் சாரலில் உண்மையாகத் தவம் எதன் பொருட்டுச் செய்கிறாய்?" என்று கேட்டருள.* **(5.5.25)**

**துதித்தனன் இறைஞ்சித் தொழுதனன் கரிய துங்கமா முகிலினைக் கண்டு**
**கதித்தசா தகம்போல் களிப்புறு காதி கருணையங் கண்ணனை நோக்கி**
**விதித்துநீ காட்டும் வினைஇருள் மாயை விளங்குற இதுவெனக் கண்டேன்**
**மதித்தஅம் மாயை மருமம்நான் அறியேன் மயக்கம்மெய் யான(து)என் என்றான்.**

**பொழிப்புரை:** *மேகத்தைக் கண்டு சந்தோஷம் அடையும் சாதகப் பறவையைப் போல, நீல மேகம் போன்ற மாட்சிமை பொருந்திய நாராயண பகவானைத் தரிசித்து, சந்தோஷம் அடைந்து, வாக்கினால் துதித்து, மனதால் தியானித்து, தேகத்தால் தொழுதான். கருணை விழிகள் கொண்ட பகவானை நோக்கி, "தாங்கள் நியமித்து விட்சேபம் மற்றும் ஆவரணத்தைச் செய்கின்ற மாயையினைத் தெரியும் படியாகக் கண்டேன். நிச்சயித்த அந்த மாயையின் மர்மத்தை (இரகசியத்தை) நான் அறிய வில்லை. பிராந்தி(மயக்கம்) உண்மையானது எப்படி?" என்று கேட்டான்.* **(5.5.26)**

**மால்)அதற்(கு) உரைப்பான் அந்தணா இந்த மண்முதல் யாவையும் மனத்தின்**
**பால்உற இருப்பது) அன்றியே புறத்தில் பயில்வதோர் காலமும் இலதாம்**
**மூ}லம்)இல் கனவு மயக்கமும் மதமும் முதலிய நெறிகளில் யாரும்**
**சீலமாய் நோக்கி அனுபவிக் கின்றார் சிந்தையுள் சகம்இருப் பதுவே.**

**பொழிப்புரை:** *நாராயணர் அதற்கு அருளிச் செய்கின்றார்... அந்தணனே! இந்த பூமி முதல் யாவையும் மனதில் வாசனை மாத்திரமாகப் பதிந்து இருப்பவையே தவிர ஒரு சிறிதும் வெளிப்புறத்தில் மனதுக்குப் பின்னமாக (வேறாக)ப் பொருந்துவது எக்காலத்திலும் தோற்றுவதே கிடையாது. வாசனையினால் அன்றி உண்மையில் இல்லாத கனவில் தோன்றும் பொருள்கள், மயக்கம், மதம் பொருந்திய இடத்திலும் எவரும் மனதில் உலகம் இருப்பதாகவே பாவித்து சுபாவமாகவே நாடி அனுபவிக்கின்றார்கள்.* **(5.5.27)**

**அனந்தமாய் விரிந்த சகத்திரள் எல்லாம் அயர்(வு)அற அமர்வதற்(கு) இடமாம்**
**மனம்தனால் இந்த நாய்ப்புலைத் தன்மை வெளிசெயின் மற்றிதில் வியப்(பு)என்**
**கனம்தரு பத்திப் பாச்சலின் வயத்தால் கடைப்புலை திறம்தெரிந்(து) உளதாம்**
**முனம்தொடர் அதிதி தானு(ம்)அப் படியே மோகங்கள் முழுவதும் கண்டான்.**

**பொழிப்புரை:** *அனேக விதமான விசித்திரங்களாக விரிந்துள்ள இந்த சகக் கூட்டமானது எந்தவொரு தடையும் இன்றி இஷ்டப்படி நிலைத்து இருப்பதற்கான இடமாகிய மனதினால் பார்க்கப்பட்ட நாய்ப் புலை தன்மை வெளிப்படுவதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? கனமான பிராந்தி வசத்தினால் இழிவான புலைத்தன்மை அறியப்பட்டது. முன்பு சந்தித்த அதிதியும் இவ்வாறே தான் வந்ததாகவும், கதை கூறியதாகவும் மயக்கம் எல்லாவற்றையும் கண்டான்.* **(5.5.28)**

**கண்டஅப் படியே நாய்ப்புலைத் தன்மை காகதா லீயயோ கத்தால்**
**வண்(டு)உறை ஊண கீரமண் டலத்தோர் மனத்தினும் பத்திபாய்ந்(து) உளதாம்**
**எண்டரும் பத்திப் பாய்ச்ச(ல்)ஒன்(று) ஒருகால் எண்ணறு பெயர்க்குமுன் தோன்றும்**
**விண்டநெஞ்(சு) இயற்கை காகதா லீய நிலைமைபோல் விசித்திர கதியாம்.**

**பொழிப்புரை:** *இந்தப்படி பார்த்த அவ்வாறே நாய் மாமிசம் புசிக்கும் நீசத் தன்மை காக தாலீய நியாயத்தால் (காகம் உட்கார பனம்பழம் விழுந்த கதையாக) வண்டுகள் இருந்து ரீங்காரம் செய்யும் ஊண மண்டலம், கீர மண்டலங்களில் வசிப்பவர் மனத்திலும் பிரதிபிம்பித்து உள்ளதாம். கருதுகின்ற பிராந்தி வசமாகிய பிரதிபிம்பம் ஒன்றே ஒரு*

*வேளையில் அனேகம் பேர்களுக்கும் பிரத்தியட்சமாய் (கண்கூடாக) விரித்த மனத்தின் சுபாவமானது காகதாலீய நிலையை அனுசரித்துப் பலவிதமான விசித்திர நடையை உடையதாம்.* **(5.5.29)**

**அப்படி அன்றோ சொப்பனம் ஒன்றை அனேகமா னிடர்தனி காண்பர்**
**கைப்படு விநோதம் ஒன்றிலே மகிழ்வர் காதலர் அனேகமா னவர்கள்**
**செப்பிய கடைஞ்சன் ஆனஅப் புலையன் திருமனை ஊணமண் டலத்தே**
**தப்பற அந்தக் குறியினால் முன்னே சனித்துளன் அப்படித் தானே.**

**பொழிப்புரை:** *அவ்வாறு அல்லவோ கனவு ஒன்றினை அனேக மானிடர்கள் தனித்தனியாகக் காண்பார்கள். அனேகம் சிறுவர்கள் கூட்டப்பட்ட வினோத விளையாட்டு ஒன்றிலே மகிழ்வார்கள். கூறிய கடைஞ்சன் என்ற நீசனது அழகிய வீடு ஊண மண்டலத்தில் முன்பு நீ பார்த்த படியே தவறு இன்றி அந்த அடையாளம் உளது. அவ்விதமாகவே கடைஞ்சன் பிறந்திருந்தான்.* **(5.5.30)**

**அத்திறம் தானே தமர்எலாம் இறப்ப அன்னிய தேசத்தை அடைந்தான்**
**சத்திரம் நிழற்றக் கீர தேசத்தில் தலைவனாய்ப் பின்கனல் புக்கான்**
**உத்தம மாம்நின் உளத்திலே வெறிதே உன்னுசம் பந்தமாய் அதனால்**
**பத்திபாய்ந்(து) உளதால் அப்படி யாகப் பகர்புலைக் கடைஞ்சன(து) இயற்கை.**

**பொழிப்புரை:** *நீ கண்ட அந்த வகையாலே உறவினர் எல்லாம் இறந்து போக பிழைக்கும் பொருட்டு வேறு தேசத்திற்குச் சென்றான். வெண் கொற்றக் குடை நிழலின் கீழ் மன்னவனாய் இருந்து பின்பு அக்கினியில் புகுந்தான். அதனால் நீ பார்த்த படியே சொல்லப்பட்ட கடஞ்ச நீசனது ஆசார நிலைப்பாடு மேன்மை வாய்ந்த உன்னுடைய மனத்திலே பயன் இன்றியே எண்ணம் கொள்ளுமாறு சம்பந்தம் உண்டானதால் பிரதிபலித்துள்ளது.* **(5.5.31)**

**இவன்அவன் நான்ஈ(து) அதுவென(து) என்றே இடரில்மூழ் குவர்அறி வில்லார்**
**அவனியாம் முழுதும் நாம்எனும் உண்மை அறிந்தவர் அழுங்கிநின்(று) அயரார்**
**பவனமார் பொருளில் பகிர்வுறும் அனர்த்த பாவனை புந்தியில் பொருந்திக்**
**கவருறார் அதனில் இவர்கள்மோ கத்தில் கவல்வுறார் தத்துவம் கண்டோர்.**

**பொழிப்புரை:** *இவன் அவன், நான், இது, அது, எனது என்றே அறிவில்லாதவர் துயரத்தில் மூழ்குவர். (பிரம்மத்தில் விவர்த்தம் ஆதலின் ஆரோபம் அனைத்தும் அதிட்டானப் பிரம்மமே ஆதலால்) சகம் முழுவதும் பிரம்மமே அதுவே நாம் என்ற உண்மையை அறிந்தவர் முன்கூறியவற்றில் (இவன் அவன் இது அது என்பதில்) அழுந்தித் துயரம் அடையார். பிரம்மத்தைத் தானே என்று கண்டவர் உலக விஷயங்களில் துன்ப மயமான பேத பாவனையைப் புத்தியில் கொண்டு இன்பம் அளிக்கும் என்று பற்றிக் கொள்ள மாட்டார். அதனால் மோகத்தில் மூழ்கி வருத்தம் அடையார்.* **(5.5.32)**

**ஞானபூ ரணம்எய் தாமையால் மனத்தில் நண்ணிய மோகத்தை நாடி**
**ஈனம்(ம்)என்(று) அகற்ற அறிகிலை அதனால்இந்தமோ கத்திலே கணத்தில்**
**நீநனி அமிழல் உற்றனை இந்த நெடியமோ கத்திகி ரிக்கு**
**மானதம் தானே அச்(சு)அதாம் அதனை வலிந்(து)அடர் வுறில்அது நலியா.**

**பொழிப்புரை:** *பரிபூரண ஞானத்தைத் திடமாக அறியாததால் மனதில் உண்டான மயக்கத்தை ஆராய்ந்து துச்சம் என்று அகற்ற அறியவில்லை. இதனால் இந்த மயக்கத்தில் கணத்தில் பிராந்தியினால் எங்கும் சுழன்று கொண்டிருக்கும் மாயா சக்கரத்தில் மூழ்கி (அகப்பட்டு) வருந்தினாய். பெரிதான இந்த மாயா சக்கரத்திற்கு (சம்சார சக்கரத்திற்கு) மனமே அச்சு ஆகும். அந்த அச்சினை மிகவும் முயன்று அதை அசையாமல் செய்யில் அது சிறிதும் பாதிக்கமாட்டாது.* **(5.5.33)**

**எழுதிநீ கிரியின் முழையிடை வருடம் ஈரைந்து தவம்நனி இயற்றின்**
**முழுதுமாய் முடி(வு)ஒன் றிலாதமெய்ஞ் ஞானம் முற்றுதி என்றுபின் முகுந்தன்**
**தொழுதகு தோற்றம் எழுந்துழி மறையத் துயருறு மோகங்கள் நீங்கிப்**
**பழுதறு காதி கற்பனை எல்லாம் பற்(று)அறுத்(து) அருந்தவம் புரிந்தான்.**

**பொழிப்புரை:** *எழுந்திருப்பாய் நீ, இந்த மலையின் குகையில் பத்து வருட காலம் நன்றாகத் தவம் செய்வாயாகில் முழுவதுமான முடிவு ஒன்று இல்லாத மெய்ஞ்ஞானத்தை அடைவாய் என்று அருளிச் செய்து, பகவான் நாராயணர் தொழுவதற்கு உரிய தோற்றம் தரிசனம் அந்த இடத்திலேயே மறைய, துயரத்தைத் தருகின்ற மயக்கம் நீங்கி, பகவான் தரிசனத்தால் குற்றங்கள் அழிந்த காதி பிராமணன் சகல சங்கற்பங்களையும், வாசனைகளையும் அகற்றி அரிய தவத்தைச் செய்தான்.* **(5.5.34)**

**வருடமோர் பத்தில் ஞானபூ ரணனாய் வாழ்ந்தனன் பின்னரே தனதாம்**
**பொரு(வு)இல்சற் பாவம் அடைந்(து)உயர்ந் தோனாய்ப் பொருந்திய பயம்துயர் நழுவிப்**
**பருகுறு போகத்(து) இச்சைஅற்(று) உள்ள படியிலே சந்ததம் சுகமே**
**உருவமாம் சீவன் முத்தனாய் ஆறி உவாமதி எனஉளம் நிறைந்தான்.**

**பொழிப்புரை:** *பத்து வருடங்களில் உண்மையான பூரண ஞானம் பெற்றவனாய் வாழ்ந்தனன். அதன்பின் ஒப்பற்ற தன்னுடைய சத்து மாத்திரமான சொரூபத்தினை அடைந்து மகாத்மாவாய் முன்பு மனதில் பொருந்திய பயம், துயரம் எல்லாம் நீங்கி, அனுபவிக்கத்தக்க விஷயங்களில் ஆசை இன்றி யதார்த்த (உள்ளபடி) நிலையில் எப்பொழுதும் ஆனந்த வடிவமாம் சீவன் முத்தனாய் சாந்தம் உடையவனாய் பூரண சந்திரனைப் போல மனம் பூரணம் ஆயினான்.* **(5.5.35)**

**(உபசாந்திப் பிரகரணத்தில் காதி கதை முற்றும்)**

# (vi) உத்தாலகன் கதை

*முன்பு சித்த உபசாந்தி நிமித்தம் மாயா வைசித்திரியம் சொல்லப்பட்டது. இப்போது திடபூமி யோகாப்பியாசத்தினால் சித்த சஞ்சலம் ஆயினும் உபசாந்தியாகும் என்று இந்தக் கதையால் நிரூபிக்கப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**இவ்வகையே இம்மாயை அறநெடிதாய் வெலற்(கு)அரிதாய் ஏறித் தாழ்ந்து**
**வெவ்வியமா மோகங்கள் விளைவித்து பரமத்தில் மேவி நிற்கும்**
**அவ்வகையால் உரைக்கின்றேன் அனவரதம் சொரூபத்தை அடையா தாரைப்**
**பவ்வமென வருந்துயரில் மூழ்குவிக்கும் இம்மாயை பண்பு தானே.**

**பொழிப்புரை:** *கூறிய முறைப்படி இந்த மாயையானது பெரிய அளவில் விரிந்ததாய் வெற்றி கொள்ள முடியாததாய், உயர்தலும் தாழ்தலும் உடையதாய், கொடிய மயக்கங்களை உண்டாக்கிக் கொண்டு பரமாத்மாவைச் சார்ந்து விஷயம் செய்து கொண்டிருக்கும். அதனால் கூறுகின்றேன். உண்மையான தனது சொரூபத்தை உணராதவரை எப்போதும் கடல் போலப் பெரிய துயரத்தில் மூழ்க வைக்கும். இது மாயையின் இயற்கையான குணம் ஆகும்.* **(5.6.1)**

**சித்தசய மாத்திரமாம் தெய்வமருந் தால்அன்றிச் சென்ம வெந்நோய்**
**சத்தியமே பிறமுயற்சி யாவையினும் தீராது தகைமை மிக்கோய்**
**வைத்தநிகழ் காலத்துக் கணத்தில்வரும் இயல்புறவா கியத்தால் பற்றி**
**ஒத்துவரும் எதிர்காலம் இறந்தகா லம்கருதார் உளம்இ லாதார்.**

**பொழிப்புரை:** *மனதை வெல்வது மாத்திரம் தெய்வ மருந்தால் (அருளால்) அன்றிப் பிறவியாகிய கொடிய நோய் உண்மையாகவே மற்ற எந்த முயற்சியாலும் தீராது. மனதை அடக்குவதில் வல்ல இராகவனே! நிகழ்காலத்தில் வினை வசத்தால் கணத்தில் வருவதை வெளிப்புற மதியால் இயல்பாக அனுபவித்து, நிகழ்காலத்தைப் போலவே போகத்தைக் கொடுக்க வரும் எதிர் காலத்தையும், இறந்த காலத்தையும் எண்ணிப் பார்க்காதவரே மனம் இல்லாதவர் ஆவர்.* **(5.6.2)**

**சங்கற்பம் வேட்கைஅனு சந்தானம் கணம்தோறும் தவிர்த்தி என்னில்**
**மங்குற்ற மனோலயம்தான் அதுவாகும் மனோலயத்தை மருவு போதம்**
**பங்கற்ற பிரத்தியக்சே தனமாகும் அதற்குமனோ பாவம் என்பஃது**
**அங்குத்தான் இலாஇயல்பாம் ஆதலினால் மனோவிகற்பம் இன்றிப் போமே.**

**பொழிப்புரை:** *சங்கற்பம் (எண்ணம்), இச்சைகளைச் சிந்திப்பதை ஒவ்வொரு கணமும் தவிர்த்து விட்டால் அடங்கி வரும் மனதின் இலயமானது (ஒடுக்கமானது) அதுவே ஆகும். மனம் அற்ற சேதனமே சேதனமாகும் தனது வடிவு அறிவு என்பதாகும். பிரம்மத்தோடு பிரிவற்ற அதற்கு மனம் என்ற தன்மை இயல்பாகவே இல்லாததாம். ஆதலால் அவ்விடத்தில் தான் மனவிகற்பம் இல்லாமல் போகும்.* **(5.6.3)**

**அற்றம்(ம்)அறு சத்தியமும் உயர்சிவமும் தற்பரம அவத்தை தானும்**
**முற்(று)அறிவும் நிறைசுகமும் மலம்அறலும் மனப்பந்தம் முழுதும் தீர்தல்**
**உற்றஅவி வேகத்தை ஒழித்(து)உறுதி யூகத்தால் உறுதி யாகக்**
**குற்றம்(ம்)அறு சற்புருடர் கோதறுநூல் களில்மனத்தைக் கூட்டி என்றும்.**

**பொழிப்புரை:** *மனக்கட்டுகள் முற்றிலும் ஒழிந்து மனது நஷ்டமான நிலை எதுவோ அதுவே அழிவில்லாத சத்தியமும் (சீவன் முத்தியும்), விதேக முத்தியும், ஆனந்த வடிவமும், மலம் அற்றுப் போவதும் ஆகும். (ஆன்ம அனான்ம விவேக பிரமாண தர்க்கங்களால்) திடமான நிச்சயத்தால் (நான் என்னும் தேகாபிமானம் ஆகிய) அவிவேகத்தை ஒழித்து, முயற்சி கொண்டு குற்றம் இல்லாத நடையுடைய மகான்களுடனும், சகல தோஷங்களையும் அகற்றும் ஆத்ம சம்பந்தமான சாத்திரங்களிலும் சித்தத்தை எப்போதும் சேர்த்து வைத்து வாழ்க.* **(5.6.4)**

**அனவரதம் உரைத்தல்விடல் பற்ற(ல்)இமைப் புறல்விழித்தல் அனைத்தும் செய்து**
**மனனம்(ம்)அறு சுகவானாய்ச் சற்சின்மாத் திரபரனாய் வாழ்தி மைந்தா**
**கனமலமாம் காண்பவைதீர்ந்(து) உள்ளத்தின் மலம்அறுத்துக் காதல் பாசம்**
**எனஉயர்கோ ரையைஅறுத்து நின்அறிவில் தற்பரனாய் இருத்தி அன்றே.**

**பொழிப்புரை:** *எப்போதும் வசனித்தல் (பேசுதல்), மலசலம் கழித்தல், அன்னம், தண்ணீர் முதலியவை பருகுதல், கண் திறத்தல் மூடுதல் முதலிய எல்லாம் செய்து, இவை பற்றி முன் பின் எண்ணாதவனாய் ஆனந்தமாய் மெய்யறிவு மாத்திர வடிவம் உடையவனாய் வாழ்வாய் மைந்தனே! திட அசுத்த வாசனையால் பொருந்திய காண்பவை எல்லாம் ஒழித்து, உள்ளத்தில் மலம் நீங்கி, ஆசாபாசம் என்னும் நீண்ட கோரையை அறுத்து உனது அறிவு வடிவத்தில் நிர்விகற்பமாய் இருந்து வாழ்வாய்.* **(5.6.5)**

**நலன்இழிவாம் சங்கேதத்(து) ஆசைஎனும் விடூசிகையை நண்ணாய் ஆகிச்**
**சலனம்(ம்)உறு விருப்புவெறுப்(பு) அறஉணர்வின் சாரபரம் தானாய் வாழ்வாய்**
**அல(கு)அறநான் இவன்அவன்ஈ(து) அதுஎனதாம் வாதனைகள் அறுத்(து)ஒன்(று) என்றே**
**நிலவியநிட் டையில்ஆறிச் சற்சின்மாத் திரபரனாய் நின்று வாழ்வாய்.**

**பொழிப்புரை:** *(இதில்) சுபம் (உள்ளது), (இதில்) அசுபம் (உள்ளது) என்னும் சங்கேத குறியில் ஆசை என்கின்ற விஷ வியாதியைப் பொருத்திப் பார்க்காமல், சித்தம் சலனப்படுவதற்குக் காரணமான விருப்பு வெறுப்பு நீங்க, உணர்வில் ஆத்மாவே தானாய் வாழ்வாய். அவித்தையாகிய இருள் நீங்குமாறு நான், இவன், அவன், இது, அது என்னும் வாசனைகளை அறுத்து, அறிவு வடிவம் ஒன்று என்றே சத்சித் ஆனந்தமாய் நிலைபெற்று வாழ்வாய்.* **(5.6.6)**

**எனதுபிற ரதுவென்னும் எண்ணம்(ம்)அறச் சகநிலையில் இரண்டற்(று) ஒன்றாய்க்**
**கனவயிரத் தம்ப(ம்)என உணர்(வு)உருவைப் பற்றிநிலை கண்டு நிற்பாய்**
**அனகமுடன் அமலமாய் அகண்டமாம் தன்அறிவில் அமை(வு)என்(று) உண்டாம்**
**சனனமயக் கத்துக்குக் காரணமாம் பிரி(வு)அன்று தவிர்ந்து போமே.**

**பொழிப்புரை:** *பிரபஞ்சத்தின் நிலையில் தன்னுடையது, பிறருடையது என்ற எண்ணத்தை நீக்கி, இரண்டின்றி, ஒன்றாய், பலமான வச்சிரக் கம்பம் போன்று அறிவு உருவினைப் பற்றி அதி திடமான நிலையில் நிற்பாய். தோஷம் இல்லாததாய், நின்மலமாய், அகண்டமான உனது ஆத்ம சொரூபத்தில் எப்போது நிலைபெற்று நிற்பது உண்டாகுமோ அப்போது பிறவிச் சம்சார மயக்கத்திற்குக் காரணமான மோகம் விடுபட்டுப் போகும்.* **(5.6.7)**

**பேரானந் தத்(து)இன்ப நிலையி(ன்)இயல் பினைநோக்காய் பின்னை நிற்கும்**
**வாராத நல்லமுதம் வந்தாலும் உயிர்தொலைக்க வரும்நஞ்(சு) ஒக்கும்**
**சோராமெய் உணர்வுடைமை தூரிதாம் மனம்தடித்துத் துன்று மாகில்**
**காரான முகில்சூழ மறைத்தால்உண் டோமதியம் கண்ணின் காட்சி.**

**பொழிப்புரை:** *பிரம்மானந்த நிலையினை நாடிக் காண்பாய். இலக்குமி தேவி எழுந்தருளி இருக்கும் பாற்கடலில் வந்த கிடைத்தற்கரிய உயர்ந்த அமுதம் கிடைத்தாலும் உயிரைத் தொலைக்க வரும் விஷத்திற்கு ஒப்பாகும். கெடாத தத்துவ ஞானத் தன்மையானது தொலைவில் சென்றுவிடும். மனமானது பருமையானதாக (சூக்குமமே எனினும் அதில் அதிக அடர்த்தி கொண்டதாக) வளர்ந்து வந்தால், நீர் குடித்துச் சூல் கொண்ட கருத்த மேகமானது மறைத்தால் சந்திரனின் காட்சி தெரியுமோ? (சித்தத்தில் தூலத்தன்மை மிகவும் உண்டாகி விட்டால், ஆத்ம உணர்வு சிறிது சம்பாதித்து இருந்தாலும் வெகுதூரத்தில் ஓடிப்போகும்)* **(5.6.8)**

**சரீரமாத் திரத்(து)ஆசை புந்தியால் தான்அல்லா தனதான் என்றே**
**பரிவுறலால் மக்கள்மனை குடும்ப(ம்)எனும் பாவனையால் பருக்கும் உள்ளம்**
**விரியு(ம்)அகங் காரவிகா ரத்தினால் மமதைமல விநோதம் தன்னால்**
**உரியஎன(து) இதுவென்னும் பாவனையால் மிகப்பருக்கும் உள்ளம் தானே.**

**பொழிப்புரை:** *தேக மட்டில் ஆசையை உடைய புத்தியால் ஆத்மா அல்லாத அனாத்ம பொருட்களை ஆத்மா என்றே பாவனை செய்வதால், பிள்ளைகள், மனைவி, குடும்பம் மனமானது தூலத் தன்மை அடையும். விரிகின்ற அகங்காரத்தின் வகையால் எனது என்னும் அசுத்த விளையாட்டினால் சொந்தமான இது என்னுடையது என்று எண்ணுவதால் தானாகவே உள்ளம் தூலமாகும்.* **(5.6.9)**

**ஆதிவியா தியின்விரிவால் அவைமாறித் தேறுதலால் அகற்றல் பற்றல்**
**ஊதியமாம் முயற்சியினால் பிறவிதொறும் மிகப்பருக்கும் உள்ளம் மைந்தா**
**மாதர்மணி தனம்முதலாம் நேயத்தால் இலாபத்தால் வருலோ பத்தால்**
**போதுபொழு(து) இவைநன்றாம் நலத்தினால் பருத்(து)உள்ளம் பூரிப்(பு) ஆமே.**

**பொழிப்புரை:** *விருப்பு வெறுப்பு முதலான வியாதிகளின் விரிவால் உண்டாகிப் பின்பு அவை ஒழிந்து மனம் மீள்வதாலும் தள்ளுவது கொள்ளுவது என்ற ஊக்கமுடைய முயற்சியினால் பிறவிதோறும் மைந்தனே! மனமானது அதிக அடர்த்தி மிக்கதாய் மாறும். மாதர், இரத்தினம், செல்வம் முதலியவற்றின் சேர்க்கையாலும், அவை மேன்மேலும் அதிகமாக அடைய வேண்டும் என்னும் பேராசையாலும், கிடைத்தற்கு அரிதானவை கிடைத்த போதில் உண்டாகும் இனிமையாலும் மனமானது பருத்துப் பூரிப்பினை அடையும்.* **(5.6.10)**

**துராசையெனும் பால்பருகித் தொல்போகம் எனும்காற்றால் தொடர்மொய்ம்(பு) உண்டாய்**
**இராக(ம்)உறு வழியுலவி மனப்பாம்பு மிகப்பருக்கும் இராம கேளாய்**
**புராதனஉத் தாலகன்போல் ஐம்பூதத் தையும்பொடியாப் போகப் பண்ணி**
**நிராகுலமாம் புந்தியினால் இதயத்தே நினைத்தியென நிகழ்த்த லோடும்.**

**பொழிப்புரை:** *சித்தமாகிய பாம்பானது கெட்ட ஆசைகள் என்னும் பாலினைக் குடித்து, வெகுகாலமாய் அனுபவிக்கும் போக விஷயம் என்னும் காற்றினையும் புசித்து அதனால் மிகவும் தூலத் தன்மையை அடையும். இராகவ! (அதனைத் தடுக்கும் உபாயத்தைக்) கேட்பாய். முன்னொரு காலம் உத்தாலக முனிவனைப் போல, (தேகம் முதலியவற்றின் ஆரம்பமும், வெளிப்புறப் பிரபஞ்சம் ஆரம்பமும் ஆகிய) பஞ்ச பூதங்களை (பிறவி லாப திருஷ்டியால்) தூள் தூளாகப் போகப் பண்ணி (நேதி செய்து) கவலையற்ற புத்தியினால் இதயத்தில் சொரூபத்தை விசாரம் செய் என்று உபதேசித்த போது,* **(5.6.11)**

**அருளியஉத் தாலகனால் எந்நெறியால் ஐம்பூதம் அறுத்துத் தன்னுள்**
**கருதியது)என் என்(று)இரா கவன்கேட்ப வசிட்டமுனி கருணை வள்ளால்**
**பெருகியஐம் பூதத்தை விசாரத்தால் பேதித்துப் பிரமம் எய்தி**
**ஒருமைபெறு நிலையுடைய உத்தால கன்கதையாம் உரைப்பக் கேட்பாய்.**

**பொழிப்புரை:** *"தேவரீர் திருவாய் மலர்ந்து அருளிய உத்தாலக முனிவரால் எந்தக் கிரமத்தால் பஞ்ச பூதங்களை நேதித்து தமது அந்தக்கரணத்தில் ஆராயப் பெற்றது" என்று இராம பிரான் கேட்கவும், வசிட்ட முனிவர் கூறுவதாவது... கருணை வள்ளலே! பலவிதமாக விரிந்துள்ள பஞ்ச பூதங்களை ஆராய்ச்சியினால் இல்லை என்று போகும்படி செய்து பிரம்ம திருஷ்டியை அடைந்து நிருவிகற்ப சமாதியில் சுகம் அடைந்திருந்த உத்தாலகன் கதையைக் கூறக்கேட்பாய்.* **(5.6.12)**

**கந்தமா தனம்என்னும் கனவரையில் கற்பூரம் கமழா நின்ற**
**கொந்தலர்சோ லைச்சாரல் உறைபவன்உத் தாலகப்பேர் கோதி லாதோன்**
**அந்தமுனி வரன்முன்னே சிற்றறிவன் விசாரத்தோன் அகண்ட வாழ்வில்**
**சிந்தையிடர் தீரஇளைப் பாறாதோன் புந்திநலம் திருந்தப் பெற்றோன்.**

**பொழிப்புரை:** *கந்த மாதனம் என்று சொல்லப்பட்ட பெரியதான மலையில் கற்பூர மணம் கமழ்கின்ற மலர்கள் மலர்ந்த சோலையின் சாரலில் தவம் புரிபவன் உத்தாலகன் என்ற பேர் கொண்டவன், குற்றம் அற்றவன். அந்த முனிவன் முன்னாளில் சிற்றறிவு உடையவன், விசாரம் செய்பவன், நீண்ட வாழ்வில் மனம் கவலை தீர அமைதியை அடையாதவன், நற்கருத்து உடையவன்.* **(5.6.13)**

**பூதநெறி யால்தவத்தால் நூல்பொருளால் யமநியமம் பொருந்து நீரால்**
**தீ(து)அறுநல் விவேகம்தான் சேர்தலுமே அவன்இனைய சிந்தை செய்தான்**
**கேதமற இளைப்பாறும் பதம்ஏது மறுபிறவிக் கேடி லாத**
**மேதகைய பதம்ஏ(து)இங்(கு) இதுவன்றோ முதல்விரைவில் மேவல் பாற்றே.**

**பொழிப்புரை:** *படிப்படியான கிரமத்தால் மனம் புலன்களை ஒருமைப்படுத்தும் தவத்தால் சாத்திர விசாரத்தால் இயமம் நியமம் கைவரப் பெற்ற தன்மையால் களங்கம் நீங்கிய விவேகம் தோன்றியதும் அவன் இவ்வாறு மனதில் எண்ணினான். சகல துயரங்களும் நீங்கி அமைதி அடைந்து இளைப்பாறும் இடம் எது? எந்தப் பதத்தை அடைந்தால் மறுபிறவி இல்லாமல் போகுமோ அந்தப் பதம் எது? அந்தப் பதத்தை அல்லவா முதலில் விரைந்து நாடுதல் வேண்டும்.* **(5.6.14)**

**உளநினை(வு)இ லாவிமல பரபதத்தே நெடுங்காலம் ஒன்றி ஒன்றாய்க்**
**கிளர்கனக வரைச்சிகரத்(து) உறைமுகில்போல் இளைப்பாறக் கிடைப்ப(து) எந்நாள்**
**தளர்(வு)அறாஃ(து) இயற்றினமேல் எவைஇயற்றத் தக்கவெனச் சலித்துச் செல்லும்**
**அளவறுபோ கச்செல்வம் என(து)உளம்நின்(று) எக்காலம் அவிழ்ந்து போமே.**

**பொழிப்புரை:** *மனம் விடுபட்டு மலம் இல்லாத பதத்தில் வெகுகாலம் ஒன்றாய் ஒன்றி இருந்து, பிரகாசமான மேரு மலையின் உச்சியில் அமைதி அடைந்திருக்கும் மேகம் போல, அமைதியாக இளைப்பாறும் நாள் எந்த நாளோ? கவலை அற்றுப் போக, இவற்றைச் செய்தோம், இனி எதனைச் செய்ய வேண்டும் என்று சலித்து விவகாரம் செய்கின்ற அளவற்ற போக விஷய சம்பந்தமான எண்ணங்களாகிய செல்வமானது எனது மனதிலிருந்து விட்டு எக்காலத்தில் தொலைந்து போமோ?* **(5.6.15)**

**மனன(ம்)எனும் திரைமோதி மதத்(து)எழுந்த பேராசை வாரி தன்னில்**
**புனிதமுறும் புந்தியினால் அழுந்தாமல் கரையேறிப் போவ(து) எந்நாள்**
**அனவரதம் தொழில்தொழில்இ லாமைகள்போய்ப் பற்றுவீ(டு) இன்றி உள்ளே**
**தன(து)ஒளியாம் பதம்மேவி எக்காலம் மகிழ்வுறுவேன் தளரா நின்றேன்.**

**பொழிப்புரை:** *மனம் என்னும் அலைகள் அடித்துக் கம்பீரமாக எழுகின்ற பேராசை என்னும் கடலில் புனிதமான விசார திருஷ்டியினால் அழுந்தி மூழ்கி விடாமல் முத்தி எனும் கரை ஏறி உய்வது எந்நாளோ? எப்பொழுதும் கர்மம் செய்தல், கர்மம் செய்யாமை, பற்றிக் கொள்வது, விட்டு விடுவது இவை இல்லாமல் உள்ளே பிரகாசிக்கும் தன்னுடைய பதத்தை அடைந்து தளர்கின்ற சம்சார வாழ்வில் விடுபட்டுச் சந்தோஷம் அடைவது எக்காலமோ?* **(5.6.16)**

**கருதுநினை(வு) ஒழித்(து)ஒடுங்கிக் கார்வரையின் முழையிடத்தில் கருங்கல் போல**
**நிருவிகற்ப சமாதியினால் எக்காலம் அசைவற்ற நிலையில் நிற்பேன்**
**ஒருமைபெறும் தியானத்தால் இளைப்பாறும் என்னுடைய உச்சி மீதே**
**குருவியினம் கூ(டு)அமைத்துக் குடியிருப்ப(து) எக்காலம் குஞ்சி யாலே.**

**பொழிப்புரை:** *சிந்திக்கின்ற சிந்தனைகள் எல்லாவற்றையும் ஒழித்து, யானும் அடங்கி, மேகம் சூழ்ந்த மலைக் குகையினுள் கருங்கல் போல அசைவற்று நிருவிகற்ப சமாதியில் நிற்பது எக்காலமோ? ஒருமைப்பட்ட தியானத்தால் சமாதியில் இருந்து இளைப்பாறும் என்னுடைய தலை மேலே குருவிகள் தலைமுடியால் கூடு அமைத்துக் குடியிருப்பது எந்தக் காலமோ?* **(5.6.17)**

(வேறு)

ஊகத்(து) இவ்வா(று) உன்னிமிக உத்தா லகன்உள் பரவசனாய்
ஏகத் தியானம் சாதிப்பான் இருந்த இருந்த இடந்தோறும்
வேகத் துகளும் மனக்குரங்கு விடயக் கொம்பு களில்பாயச்
சோகத் திறம்தீர் மகிழ்ச்சிபெறும் சொரூப சமாதி பெற்றிலனால்.

**பொழிப்புரை:** *ஊகத்தால் மேலே கூறியபடி மிகவும் சிந்தனை செய்து உத்தாலக முனிவன் உள்ளே பரவசனாய் ஒருமைப்பாட்டுடன் தியானம் செய்வதற்கு முயன்ற முயன்ற இடங்களில் எல்லாம் வேகமாக ஓடும் மனமாகிய குரங்கு சப்தம் முதலிய விஷயங் களாகிய மரக்கிளைகளில் தாவி ஓடிட, சோகம் தீர்ந்து ஆனந்தம் அடைகின்ற சொரூப மயமான சமாதியை அடைந்திலன்.* **(5.6.18)**

நிறனார் கானில் இவ்வகையே நிலையற்(று) அலைவோன் பின்னொருகால்
புறனார் காட்சி ஒழிந்திடலால் பொல்லா மனமாம் வன்குரங்கு
திறனார் இருள்மூ டிய(து)என்னத் தியானங் களிலே உள்ளழியா
அறனார் கிரியில் அலைந்(து)உழல்வுற்(று) அறவே வாடி அலமந்தான்.

**பொழிப்புரை:** *நிறம், குணம் பொருந்திய அந்தக் காட்டில் நிலையில்லாமல் அலைந்து கொண்டிருந்த அந்த முனிவன் பின்பு ஒருவேளையில் புறப் பொருள்களின் காட்சியில் பற்று ஒழிந்தமையால் பொல்லாத மனமாகிய கொடிய குரங்கு பேரிருள் தியானத்தில் மூடுவதும், ஒளியாகத் தோற்றுவதுமாக இருப்பதை நீக்க வேண்டும் என்று மிகவும் வாடித் துயரம் அடைந்து, தருமம் நிறைந்த அந்த மலைச் சாரலில் அலைந்து உழன்று கொண்டிருந்தான்.* **(5.6.19)**

யாரும் இன்றி யாராலும் எய்தற்(கு) அரிதா கியமுழைதான்
சாரும் முத்திப் பதம்எனலாம் தன்னில் ஒருகால் தனிமேவி
ஆரு மலைக்குன் றியின்தழைமேல் அருணச் சருமம் விரித்(து)அதன்மேல்
ஓரும் மனத்தின் செயல்குறுக்கி உணர்வான் புத்தன் போல்ஆகி.

**பொழிப்புரை:** *மக்கள் நடமாட்டம் இல்லாததாய் எந்த உயிரினமும் அடைதற்கு அரிதாகிய குகை தான் முத்திப் பதம் சார்வதற்கு உகந்தது என்று சொல்லக்கூடிய அதில் ஒருபோது தனியாக இருந்து அந்த மலைக்குகையில் தழைகளைப் பரப்பி, மான் தோல் விரித்து அதன் மேல் அமர்ந்து, பலவற்றை நினைக்கும் மனதின் செயலைக் குறுக்கி* **(***ஒடுக்கி***)** *புத்தனைப் போல சிந்திக்கலாயினான்.* **(5.6.20)**

புண்ட ரீக ஆதனத்தில் புத்தன் போல்உத் தரமுகனாய்
அண்டம் இரண்டும் இருகுதிமேல் ஆக்கிப் பிரமாஞ் சலிபண்ணி
மண்டு கின்ற வாதனையில் மருளும் மனத்தை மீள்வித்துத்
தண்டல் இல்லா நிருவிகற்ப சமாதிப் பொருட்(டு)இவ் வகைநினைந்தான்.

**பொழிப்புரை:** *புத்தனைப் போல வடக்குத் திசை நோக்கியவாறு பத்மாசனத்தில் இருந்து, தொடைகள் இரண்டும் இரு குதி மேல் இருக்க அமர்ந்து, பிரம்மத்தை*

*வணங்கி, பிறவிதோறும் வந்து குவிகின்ற வாசனைகளில் மருண்டு மயக்கம் அடையும் மனதை அவற்றிலிருந்து திருப்பி, எந்தவொரு தடையும் இல்லாத நிருவிகற்ப சமாதியில் நிலைக்கும் பொருட்டு இவ்வாறு நினைக்கலாயினான்.* **(5.6.21)**

**வாராய் மூட மனமேநின் மாய வாழ்க்கை களில்பயன்என்**
**தீரா இடரே முடிவில்வரும் செயலில் பெரியோர் சேருவரோ**
**ஆரா அமுதாம் சாந்தியைவிட்டு அழியும் போகம் ஆதரிப்போர்**
**ஏரார் மலர்க்கற் பகக்கான்விட்டு எரிகூர் விடவெங் கான்உறுவார்.**

**பொழிப்புரை:** *வாராய் மூட மனமே! உன்னுடைய மாய வாழ்க்கையாகிய சம்சாரத்தில் என்ன பயன் உளது? முடிவில்லாத துயரமே முடிவில் அடையப்பெறும் செயல்களில் பெரியோர்கள் சேர்வாரோ? (அத்தகைய செயல்களைச் செய்யார்) தெவிட்டாத அமுதமாகிய அமைதியை விடுத்து அழிகின்ற போகத்தை நாடுவோர் அழகான மலர்கள் உடைய கற்பகக் காட்டினை விடுத்துச் சுடுகின்ற விஷம் மிகுந்த காட்டினை அடைபவர் ஆவர்.* **(5.6.22)**

**அயன்நாடு உற்றாய் பாதலத்தில் அணுகி னாய்ஆ கிலும்சாந்தி**
**வியனார் அமுதை ஒழிந்(து)அந்த மிக்க நிருவா ணம்பயிலாய்**
**பயன்ஆ யதுபோல் விசித்திரமாய்ப் பா(வ)அ பாவ மயவடிவே**
**இயல்பாம் இந்தச் செயல்கள்பெரி(து) இடராம் என்று இனிதாகா.**

**பொழிப்புரை:** *பிரம தேவனின் லோகத்துக்குச் சென்றாலும், பாதாள லோகத்திற்குச் சென்றாலும் சாந்தியாகும் அமுதம் அன்றி மேன்மையான ஆனந்தத்தை அடைய மாட்டாய். புருஷார்த்தப் பிரயோசனம் ஆனது போல், விசித்திரமாகப் பலவிதமான விஷயங்கள் உள்ளது இல்லாதது என்ற வடிவ மயமான இயல்பில் உள்ளனவாம். (விரும்பியதைச் சம்பாதித்தல், விருப்பம் இல்லாதவற்றிலிருந்து விடுபடுவது என்ற இரண்டுமே பாவ அபாவ வடிவங்கள் இதனால் உண்டாகும்) இந்தச் செயல்கள் பெரியதான துயருக்கு உரியதாம். இவை இன்பத்தைத் தராது.* **(5.6.23)**

**சத்தா திகளாம் இத்தொழில்கள் தம்மால் மண்டூ கம்போலப்**
**பித்தாய் மூர்க்க மனமேஏன் பிரமிக் கின்றாய் விடா(து)அவமே**
**எத்தால் சிறிது தனைஅடைந்தால் எதிலே இன்பம் உறுகின்றாய்**
**நித்தார் அமுதாய்ச் சமமாகும் அதில்நீ நிலைசே ராநெறிஏன்.**

**பொழிப்புரை:** *சப்தம் முதலிய விஷயங்களில் பின்தொடர்ந்து செல்கின்ற இந்த விருத்திகளால் மழைக்காலத் தவளை போல் பித்தாகி வெறிபிடித்த மூர்க்க மனமே அதனை விடாமல் வீணாக ஏன் பிரமிப்பினை (மயக்கம்) அடைகின்றாய். எந்தச் சாந்தியினால் பிரயோசனமான முத்தியை அடைவாயோ. எந்தச் சாந்தி வந்தால் சொரூப சுகத்தைப் பெறுவாயோ. அந்த சமமாகும் அதில் நீ நிலைபெறாதது நீ ஏனோ?*

**(5.6.24)**

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

படர்மூர்க்க மாமனமே வீணாய்த் தோன்றிப்
பருக்கின்ற செவித்தொழில்கள் பயின்று சத்தம்
தொடர்கின்ற புந்தியினால் மிருக மேபோல்
துஞ்சுறவேண் டாதோலின் தொழிலை மேவி
அடர்பரி(சு)உன் முகமாகும் அதனால் துன்ப
அடியாகப் பிடிக்(கு)அன்பாம் யானை போல
மடமைமிகு மூர்க்கமா மனமே என்று
மாறாத ஆபத்தை மருவ வேண்டாம்.

**பொழிப்புரை:** *வீணாக வெளிமுகத் தன்மை எழுச்சியாலே வளர்ந்து அதிகரிக்கும் விருத்தியாலே மூர்க்க மனமே செவி சம்பந்த சப்த விஷயங்களைத் தொடரும் புத்தியால் மான் போலக் கெட்டுப் போக வேண்டாம். தோல் இந்திரியத்துடன் கூடி நெருங்கிய பரிசம், அது சார்ந்துள்ள பொருள் இவற்றைத் தொடர்வதால் துன்பமே, பெண் யானையிடம் காதலுற்று ஆண் யானை கெடுவது போல் அறியாமை மிகுவதனால் மிக்க மூர்க்கத்தன்மை அடைந்த மனமே எப்போதும் தீராத ஆபத்தைச் சேர வேண்டாம்.* **(5.6.25)**

ஒளியுருவத் திரள்நோக்கு விழியின் செய்கை
உற்றுநீ வெவ்விளக்கை உணரா தாகி
விளிதலுறும் விட்டில்போல் வேக வேண்டாம்
வெய்யமன மேநாவின் விருத்தி மேவி
எளி(து)அருந்து உணவுகளின் இரதத் தாலே
இரைத்தூண்டில் கவர்மீன்போல் இறக்க வேண்டாம்
நளினஇத யத்து(ள்)உயிர் நெறிபோய்க் கந்த
நாட்டத்தால் கட்டுண்ணேல் நனைவண் டேபோல்.

**பொழிப்புரை:** *கொடிய மனமே நீ ஒளி, ஒளி சார்ந்த பொருள் இவற்றைத் தொடரும் விருத்தியோடு கூடிய புத்தியாலே கண் என்ற இந்திரியத்துடன் கூடி உஷ்ணமான தீபத்தைச் சேர்ந்து சுடும் என்று உணராமல் நாசமாகும் விட்டில் பூச்சி போல் நாசமாக வேண்டாம். நாக்கு என்ற இந்திரியத்துடன் கூடி சுவை, சுவையுடைய பொருள் இவை தொடரும் விருத்தியோடு கூடிய புத்தியால் தூண்டிலில் வைக்கப்பட்டுள்ள இரையைக் கவரும் மீன் போல எளிதாக அருந்தி நாசமாக வேண்டாம். இதயத் தாமரையில் இருந்து எழும் பிராண வாயு சம்பந்த மூக்கு இந்திரிய சம்பந்த வாசனை, வாசனையுடைய பொருள் இவை தொடரும் விருத்தியோடு கூடிய புத்தியால் தேன் உண்ணும் நாட்டத்தால் நாசமாகும் வண்டினைப் போலப் பந்தப்பட்டு நாசமாக வேண்டாம்.* **(5.6.26)**

உரைத்தமிரு கம்களிறு விட்டில் மீன்தேன்
ஓசைஊ(று) ஒளிஇரதம் நாற்றம் என்ன
நிரைத்தஇவற்(று) ஒன்(று)ஒன்றால் மாய்ந்து போகும்
நிலைஅழிக்கும் அவைஐந்து நேரே கூடிக்

கரைத்தல்)உறு பவர்க்(கு)இன்பம் எங்கே உன்தன்
கட்டுக்கு வாதனையே கயிற்றுச் சாலம்
புரைத்தெழுநெஞ் சேஅதுவே போகு மாகில்
பொரு(வு)இல்சயம் அ’(து)உனக்குப் புகலும் காலே.

**பொழிப்புரை:** *கூறிய மான், யானை, விட்டில் பூச்சி, மீன், வண்டு என்பவை சப்தம், பரிசம், ஒளி, சுவை, வாசனை என்று வரிசைப் படுத்திய இவற்றுள் ஒன்று மற்றொன்றால் மாய்ந்து போகும். தனது வடிவத்தை அடையவொட்டாமல் கெடுக்கும் இந்த ஐந்தும் கூடித் துன்பம் அடைபவர்களுக்கு இன்பம் எங்கே? உன்னுடைய கட்டுக்கு வாசனையே கயிறு போல்வதாம். தீய வழியில் எழும் மனமே அந்த வாசனா ஜாலம் ஒழிந்து போகுமாயின் உண்மையைக் கூறுமிடத்து ஒப்பற்ற உனக்கு அந்த வாசனைகளின் அழிவே வெற்றியாம்.* **(5.6.27)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

எதுபய னாக நிற்(கு)இங்(கு) இத்தண்டம் யான்செய் கின்றேன்
முதுவிசா ரத்தின் மிக்க முதன்மையோர்க்(கு) உளம்ஒன் றில்லை
அதிகமாம் முடி(வு)இல் சித்துக்(கு) அற்பமாம் நிலைஎன் நெஞ்சில்
விதியதாய் உளதோ யானை வில்வக்காய் புகுதல் உண்டோ.

**பொழிப்புரை:** *எந்த பிரயோசனத்தைக் கருதி மனமே உனக்கு இந்த (தடுத்தல் ஆகிய) தண்டனையை நிருவிகற்ப சமாதிக்கு முயற்சி செய்யும் யான் அளிக்கின்றேன். நெடிய விசாரத்தில் சிறந்துள்ள விவேக புத்தி உள்ளவர்களுக்கு மனம் என்ற ஒன்று இல்லை. முடிவு இன்றி எங்கும் எல்லையற்றதாய்ப் பரந்து விரிந்துள்ள ஆத்ம தத்துவத்திற்கு எல்லைக்குட்பட்ட குறுகிய எனது மனதில் நிலைபெறுதல் உண்மையாய் உண்டோ? யானை வில்வக் காயில் புகுதல் உண்டோ?* **(5.6.28)**

தசைபயில் பாதம் தொட்டு தலைமட்டும் வெவ்வே(று) ஆய்ந்து
இசைவுற யான்அங்(கு) இல்லை யான்எனும் நிலைஎங்(கு) உண்டோ
திசையெலாம் விழுங்கி மேலாம் சித்ததாய்க் காண்ப(து) இன்றி
அசைவற எங்கும் தானாம் என்(று)உல(கு) அனைத்தும் காண்கேன்.

**பொழிப்புரை:** *சதையும் எலும்பும் நிறைந்த பாதம் முதல் தலை வரையில் அணுஅணுவாய்ப் பிரித்து ஆராய்ந்தாலும் கிடைக்கின்ற வகையில் யான் அங்கு இல்லை. யான் என்ற நிலை எங்கு உள்ளதோ? சகல திசைகளையும் வியாபித்து, மேலான அறிவு வடிவமாய், காண முடியாததாய், சலனம் இன்றி எல்லா இடங்களிலும் யானே இருப்பதாகச் சகம் முழுவதையும் காண்பேன்.* **(5.6.29)**

உயர்வுறும் அதற்கு நாமம் கற்பனை ஒருமை பன்மை
வியன்மகத்(து) அணுவென்(று) ஓதும் விதமுறு குறிகள் காணேன்
இயல்அறி(வு) ஆத லாலே யான்காணும் என்பால் நீயே
துயர்தரும் ஏது வாகத் தோன்றினை பேதை நெஞ்சே.

**பொழிப்புரை:** *பெருமையும் உயர்வும் உடைய அந்த யான் என்ற சப்தத்தின் உட்பொருளான ஆத்மாவிற்குப் பெயர் கற்பனையும், ஏகமானது, அனேகமானது, பெருமை, சிறுமை (பெரியது அணுபோன்றது) என்று சொல்லப்படும் பலவிதமான சின்னங்கள் (குறிகள்-அடையாளம்) ஏதும் காண்கிலேன். இயற்கையாகவே சித்து வடிவம் ஆவதால் யான் காண்கின்றேன் (உணர்கின்றேன்). அறிவாகிய என்னிடத்தில் நீ தானே அறியாமையாகிய பேதை மனமே! துயரத்தைத் தரும் காரணமாகத் தோற்றம் தருகின்றாய்.* **(5.6.30)**

**முதுவிவே கத்தால் போத மொய்ம்பினால் இந்த உன்னைக்**
**கதுமெனக் கொல்லா நின்றேன் காணுதி கவலை நெஞ்சே**
**இதுதசை இதுபுண் ணீ(ர்)ஈ(து) என்(பு)இவை உளஉ யிர்ப்பாய்ப்**
**பொதுளிய வாதம் இங்கே அகம்எனல் பொருந்திற்(று) எங்கே.**

**பொழிப்புரை:** *திடமான விசாரத்தினால் உண்டான ஞானத்தின் வலிமையினால் இவ்வாறு சேட்டை செய்யும் உன்னை விரைவாகக் கொல்கின்றேன். ஜாக்கிரதை. துன்ப மனமே நீ காண்பாய். இது தசை, இது ரத்தம், இது எலும்பு, இவை பிராணன்களாக உள்ளன என்று இது என்பதாக விஷயங்கள் பொருந்தியுள்ளது தேகமாம். இவற்றில் யான் (ஆத்மா) என்பது எங்கே பொருந்தியுள்ளது?* **(5.6.31)**

**தசைகள்வேற்(று) உதிரம் வேறு தடிஎன்பு வேறு மெய்யில்**
**அசைவுவேற்(று) அறிவு வேறு அகம்எனல் பொருந்திற்(று) எங்கே**
**விசைவிழி இதுதோல் ஈது வியன்செவி இதுமூக்(கு) ஈது**
**பசையுறு நாஇ(து) இங்கே அகம்எனல் பயின்ற(து) எங்கே.**

**பொழிப்புரை:** *தசை வேறு, ரத்தம் வேறு, பருத்த எலும்பு வேறு, பொய்யான தேகத்தில் அசைவு (கர்மேந்திரிய வியாபாரம்) வேறு, அறிவு (ஞானேந்திரிய வியாபாரம்) வேறு, இவற்றில் யான் என்ற சப்தத்திற்கு உரிய ஆத்மா எங்கே சம்பந்தம் உண்டாகி உள்ளது? வேகமாகக் காட்சியைக் காணும் கண் இது, பரிசத்தை உணர்த்தும் தோல் இது, அற்புதமான சப்தத்தைக் கேட்கும் காது இது, வாசனையை உணரும் மூக்கு இது, ஈரமுள்ள நாக்கு இது. இவற்றில் யான் என்ற சப்தத்திற்கு உரிய ஆத்மா எங்கே நின்றுள்ளது?* **(5.6.32)**

**அகம்எனல் எங்கும் ஆகும் அற்ப(ம்)இங்(கு) அகம்அன்(று) ஆகும்**
**நிகழு(ம்)இந் நல்ல நோக்கே நோக்(கு)அயல் நெறிவேற்(று) இல்லை**
**புகரில்சின் மயனாம் என்னைப் போத(ம்)இல் தூர்த்த நெஞ்சே**
**மிகவருத் தினைஆன் கன்றை வனச்செந்நாய் விரட்டு மாப்போல்.**

**பொழிப்புரை:** *யான் எனக் கூறுவது எங்கும் இருக்கின்ற வத்து ஆகும், எல்லைக்கு உட்பட்ட வத்து யான் என்ற சப்த அர்த்தம் ஆகாது. விளங்குகின்ற இந்த நல்ல பார்வையே உண்மையான பார்வையாகும். இதைத் தவிர வேறு வழி இல்லை. களங்கம் இல்லாத அறிவு மயமான என்னை அறியாமையில் பிறந்த கெட்ட மனமே! பசுக் கன்றைக் காட்டில் உள்ள செந்நாய்கள் விரட்டி அலைக்கழிப்பதைப் போல மிகவும் துயரத்திற்கு உள்ளாக்கினாய்.* **(5.6.33)**

தெய்வயோ கத்தால் இன்று தேறினேன் சொரூபச் செம்பொன்
கைவழி கவர்அஞ் ஞானக் கள்வன்மீண்(டு) இவனைச் சேரேன்
ஐவகைப் புலன்கள் ஒன்றாம் வாதனை அற்றி ருந்தும்
தைவரு புறனில் தத்தம் பொறிகளில் தாவா நின்ற.

**பொழிப்புரை:** *ஆன்ம சொரூபம் என்னும் உயர்ந்த தங்கத்தைக் கையிலிருந்து பறிக்கும் அஞ்ஞானத் திருடனைப் பல பிறவிகளில் செய்த புண்ணியத்தால் உண்டான தெய்வ அனுக்கிரகத்தால் அறிந்தேன். இனி மீண்டும் இவனுடன் சேர மாட்டேன். வாசனைகள் இல்லாதிருந்த போதிலும், புலன்கள் ஐந்தும் சுயமாகவே வெளியில் உள்ள தத்தமக்கு உரிய விஷயங்களில் தாவி விளையாடுகின்றன.* **(5.6.34)**

வாதனை புலன்கட்(கு) எல்லாம் மன்னுகா ரணம்அன்(று) ஆகும்
ஆதலால் மூர்க்க மான ஐம்புல நீவீர் நெஞ்சின்
ஏதவா தனைகள் மாற்றிக் கருமங்கள் எல்லாம் செய்வீர்
வேதனைத் துன்பம் ஒன்றும் கிஞ்சிலும் மேவா(து) என்றும்.

**பொழிப்புரை:** *இந்திரியங்கள் யாவும் விஷயங்களை அடைவதற்கு வாசனை காரணம் ஆகாதாம். ஆதலால் விஷயங்களில் முரட்டுத் தனமாகச் செல்லும் நீங்கள் குற்றம் உடைய உள்ளத்தின் வாசனைகள் ஏதும் இன்றிக் கருமங்கள் யாவற்றையும் செய்வீர். எந்தத் துயரமும் ஒரு சிறிதும் வருத்தத்தைத் தராது.* **(5.6.35)**

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

கூடுசெயும் தம்வாயின் நூலால் பொன்றும்
　　கோசகா ரக்கிருமிக் கூட்டம் போல
ஓடுபுலன் எனும்சிசுக்காள் மயலால் வீணே
　　உலர்ந்திடுவீர் புலன்எல்லாம் முறையுள் ஆன
நீடுமன னேஒடுங்கிப் புலன்க ளோடு
　　நீவே(று)அற்(று) ஆத்துமதத் துவத்தை நேரே
நாடுதிபற்(று) அற்(று)ஒன்றாய் முத்தி யான
　　ஞானவடி வினைநிலையாய் நண்ணு வாயே.

**பொழிப்புரை:** *தனது வாய் நீரில் உண்டான நூலினால் கூடுகட்டி நாசமாகும் கோசகாரக் கிருமிக் கூட்டங்கள் போல, விஷயங்களில் பரவசமாய் ஓடும் இந்திரியங்களாகிய குழந்தைகாள்! ஆசையினால் வீணாக அழிவடைவீர். இந்திரியங்களுக்கு எல்லாம் இருப்பிடமான மனமே! நீ இந்திரியங்களோடு வேறிலாமல் ஐக்கியமாகப் பொருந்தித் தன்னுடைய வடிவத்தை அசத்து வடிவம் என நன்றாய்க் கண்டு, ஆத்ம தத்துவத்தை நேராக நாடுவாய். ஏகமான நிர்வாணமாய் இலங்கும் ஞான வடிவத்தைத் திரமாய் அடைவாய்.* **(5.6.36)**

ஆ(சு)அகலா விடயவிட விடுசி யாகி
　　அனந்தமாம் நான்எனும்வா தனையைத் தீர
மா(சு)அறவிட்(டு) இச்சையெலாம் ஒழிப்ப(து) என்னும்
　　மந்திரயுத் தியினாலே மறுசென் மம்போய்த்

தேசமுறு பகவானாய் அச்சம் எல்லாம்
தீர்(வு)இடம்ஆ வாய்மனமே திரள்சங் கற்பம்
வீசுதரு மயல்கொடியாய் நீயாம் காட்டை
வெட்டிநெடும் பூமியிலே விநோதம் செய்வேன்.

**பொழிப்புரை:** *ஆசையாகிய குற்றத்திலிருந்து நீங்காத விஷயங்கள் என்னும் விஷ நோயாகி எல்லையில்லாத அகங்காரம் என்னும் வாசனையை அடியோடு யாதொரு களங்கமும் இல்லாமல் தொலைத்து நிராசை என்னும் இரகசிய ஊகத்தால் மறுபிறவி ஒழிந்து, வியாபகமாகிய பகவத் வடிவமாய் சகல பீதிகளும் தீர்ந்தவனாய் மனமே! திரளான சங்கற்பம் என்னும் விரித்த கிளைகளை உடைய மரமாகிய காட்டினை அழித்து துரிய பூமியில் விளையாடி விநோதம் செய்வேன்.* **(5.6.37)**

வேண்டியவா விளையாடி தற்ப தத்தை
மேவினன்கே வலம்ஆனேன் வெற்றி யுற்றேன்
ஈண்டுஉயர் நிருவாணம் ஆனேன் செய்வது
இலதானேன் பிறிவற்றேன் இடம்வே(று) அற்றேன்
நீண்டதெளி வுடைமைஒளி யுடைமை உண்மை
நிகழ்வுடைமை அறிவுடைமை நீங்கா மெய்ம்மை
மாண்டசுகம் உடைமைஉப சாந்த நீர்மை
மகிழ்வுடைமை நிறைவுடைமை மகிமை பான்மை

**பொழிப்புரை:** *இஷ்டப்படி விளையாடிப் பிரம்மத்தை உணர்ந்தேன். தன்னியன் ஆனேன். அகப்பகை புறப்பகைகளை வெற்றிகொண்டேன். இங்கு மேன்மையான சுக வடிவம் ஆயினேன். செய்வது ஒன்றுமிலாதவன் (கிருத கிருத்தியன்) ஆனேன். பேதம் அற்றவன் ஆனேன். இச்சை அற்றவன் ஆனேன். நல்ல தெளிவுடைமை, பிரகாசத் தன்மை, சத்தியத் தன்மை, ஞானத் தன்மை, பேரானந்தத் தன்மை, உப சாந்தத் (நிர்விகாரத்) தன்மை, சந்தோஷம் உடைமை, பூரணத் தன்மை,பெருமை,* **(5.6.38)**

ஆவரணம் இல்லாமை உதாரத் தன்மை
அழியாத தேசுடைமை அகண்ட நீர்மை
யாவதும்தா னாமுறைமை அச்சம் இன்மை
ஏகமாம் தன்மைமனம் எழுந்(து)ஓ டாமை
ஓவ(ல்)இலா(து) உடனுறைஇக் குணங்கள் என்னும்
உத்தமிகள் சுமங்கலிகள் ஒப்பி லாதோர்
பாவனைஒன் றாம்சொரூபம் அடைந்தேற்(கு) என்றும்
பன்னியராய் உளம்கவரும் பாவை மாரே.

**பொழிப்புரை:** *மறைப்பு இன்மை, லோபம் இன்மை, அழியாத பிரகாசம் உடைமை, அகண்ட தன்மை, எல்லாம் தானாய் இருக்கும் தன்மை, பயம் இல்லாமை, ஏகமாம் தன்மை, மனம் ஒருமைப்பட்ட தன்மை, மாறுபடாமல் கூடவே நிகழும் இந்தக் குணங்கள் என்கிற உத்தமிகள் சுமங்கலிகள் நிகர் இல்லாதவர்கள். பாவனை ஒன்றி சுய சொரூபத்தை அடைந்த எனக்கு என்றும் மனைவிகளாய் இதயத்தை வல்லமை ஆக்கும் மாதர்கள் ஆவர்.* **(5.6.39)**

தேங்காது தன்வசமாய் விரிந்த புந்திச்
செயலாலே இவ்வாறு திறத்தில் எண்ணிப்
பூங்காவி சிறி(து)அலர்ந்தாற் போலப் பாதிப்
புரைவிழியோன் புண்டரி(க)ஆ தனத்தில் புல்கி
ஓங்காரம் மேல்நோக்கும் தொனிய தான
உத்தமன்நீள் முழக்காலே உச்ச ரித்தான்
பாங்காக நாஅறையும் மணியின் ஊடு
பயின்றுதடை அற்(று)ஓசை படர்வ தேபோல்.

**பொழிப்புரை:** *நிலைபெறாது முன்பு இஷ்டப்படி விரிந்த புத்தியின் விருத்திகளால் இவ்வாறு திடமாக நிச்சயித்து, குவளை மலர் கொஞ்சம் விரிந்தால் போலப் பாதி திறந்த கண்களை உடையவனாய் பத்மாசனத்தில் அமர்ந்து, பிரணவத்தை மேலே செல்லும் படியாக உச்சரிக்கும் அந்த உத்தம முனிவன் உச்சத் தொனியாலே (பிரணவத்தை) உச்சரித்தது, நலம் உடையதாக நாக்கு அடிக்கும் கண்டா மணியின் சப்தமானது அதிலேயே முழங்கித் தடையின்றிப் படர்வதைப் போன்று இருந்தது.* **(5.6.40)**

சான்றபிர ணவம்ஓதும் அவன்தன் சித்து
தற்பதத்தை நோக்குதலும் தனிஓங் காரம்
ஊ}ன்(று)அறஎவ் வளவுமே லுற்று நின்ற(து)
உயர்ந்(து)அகன்று விமலமாம் உணர்வின் கண்ணே
மூன்றரைமாத் திரையுடைய பிரண வத்தின்
முற்கூறு வெளியாக முழங்கி எங்கும்
ஆன்றபிரா ணன்க(ள்)தொனி கிளப்பு மெய்யில்
அழகிதாய்க் கிளர்ந்(து)ஓங்கி அதிரும் எல்லை.

**பொழிப்புரை:** *பெருமையான தாரகமான பிரணவத்தை உச்சரிக்கும் அவனுடைய பிரம்மாகார விருத்தி பரமபத தத்துவத்தை நாடி நிற்கவும், ஒப்பற்ற பிரணவம் தடையின்றி உன்னதமாய் அகன்று நின்மலமாம் ஆத்மாவில் நிலைபெற்று மூன்றரை மாத்திரையுடன் கூடி நிகழும் ஓங்காரம், அகாரம், உகாரம், மகாரம், அர்த்த (பாதி) மாத்திரையுடன் கூடி நின்று முதலாவதான அகாரம் மூர்த்தி தியானத்தில் தெளிவாகத் தொனித்து எல்லாவிடத்தும் மேம்பட்ட பிராணன்கள் ஓசை எழுப்பும் தேகத்தில் அழகுறச் செழித்து வியாபித்து அதிரும் போதில்,* **(5.6.41)**

இன்னுயிரைப் புறத்(து)அகற்ற வல்ல தான
இரேசகப்பேர் கிரமம்தான் யாக்கை முற்றும்
கொன்னுறுபா ழாக்கினதால் நிறைந்(து)உ யர்ந்த
கும்பமுனி குரைகடலைக் குறைத்த தேபோல்
பின்ன(ம்)இல்சிற் சுவைநிறைந்த ஆகா சத்தில்
பிராண(ன்)நிறைந்(து) உளஇதயப் பெரும்தீ மண்டி
அன்னஉடல் முழுது(ம்)எரித் துள(து)ஓங் காரத்(து)
ஆதியாம் கிரமத்தில் அவத்தை ஈதே.

**பொழிப்புரை:** *இனிய பிராணனை வெளிப்புறத்தில் தள்ளும் வல்லமை உடையதான இரேசகம் என்னும் முறையானது தேகம் முழுவதையும் அஞ்சும் படி செய்தது. சகல சத்திகளும் நிறைந்து உயர்ந்த அகத்திய முனிவர் சப்தம் செய்யும் அலைகடலைக் குடித்ததே போல, பேதம் இல்லாத சித்து சுவையாகவும் பூரணமாகவும் ஆன ஆகாயத்தில் பிராணன் நிலைபெற்றது. இருதய அக்கினியானது மிகுந்த சுவாலை வீசுவதாகி அன்ன மயமான உடல் முழுவதும் தகித்தது. பிரணவத்தின் முதல் கூறு முறையில் இந்த அவத்தை இத்தகையதே ஆகும். (பிரணவத்தின் மூன்றரை மாத்திரையின் இயல்பும் அதர்வண சிகை என்னும் உபநிடதத்தில் சதுஷ்பாதிதம், அட்சரம், பரப்பிரமம் என்பன முதலியவற்றால் விரித்து உரைக்கப்பட்டிருக்கின்றது. இவையே ரேசக பூரக கும்பகம் என்று யாக்ஞவல்கிய வசனத்தினால் ரேசகம் முதலியவற்றுக்குப் பிரணவ அம்சமான அகார உகார மகார வடிவமாகச் சொல்லப்பட்டுள்ளது)* **(5.6.42)**

அவ்வவத்தை வேண்டளவு நிகழ்ந்த(து) அன்றே
அடையோகத் தால்அல்ல அடையோ கம்தான்
வெவ்விடர்நல் குவ(து)அன்றோ அதற்குப் பின்பு
வியன்ஓங்கா ரத்தினது வேற்றுக் கூறு
தவ்வலறச் சமநிலையாம் அவச ரத்தில்
சலன(ம்)இலாக் கும்பகப்பேர் தரிக்கப் பட்ட
வெவ்வ(ம்)அறு கிரம(ம்)உள தான(து) அன்றே
இயம்பியஇப் பிராணங்கள் எல்லாற் றிற்கும்.

**பொழிப்புரை:** *(கும்பகம் கூறல்)மேற்கூறிய ரேசகம் வேண்டிய அளவு உண்டானது அப்போதே ஹட யோகப் பயிற்சினால் அல்லவாம்.(பாவனையால் நிகழ்ந்ததாம்) ஹட யோகமோ குரூரமான துக்கத்தைக் கொடுப்பது அல்லவா! அதன் பின்னர் அற்புதமான பிரணவத்தின் மற்ற கூறு தாவுதல் இன்றிச் சமமாக நிலைபெறும் சமயத்தில் சலனம் இல்லாத கும்பகம் என்ற பேர் கொண்ட குற்றம் அற்ற முறையானது கூறிய பிராணன்கள் எல்லாவற்றுக்கும் உண்டானது அப்போதே.* **(5.6.43)**

புறத்(து)அகத்தும் கீழ்மேல்திக்(கு) ஆகா சத்தில்
புரிந்தசையாப் பிராணங்கள் புரண மாகித்
துறத்துருத்தி இடைதடைபட் டனபோல் நின்று
தோன்றிமுத லேஉடலைச் சுட்ட அங்கி
நிறத்தஇடி போல்கணத்தில் அவிந்த(து) அன்றே
நீகாரம் வெளி(று)எனவெண் ணீறாய் அங்கம்
உறத்தெரிந்த தால்அதற்கே உடல்என்(பு) எல்லாம்
ஒழுங்காகத் தோன்றிநரம்(பு) உடனே நின்ற.

**பொழிப்புரை:** *(கும்பகத்தின் சலனம் இன்மை கூறல்) தோல் துருத்தியில் அடைக்கப்பட்ட காற்றானது தடைபட்டு நிற்பன போல், வெளியிலும் உள்ளிலும் கீழிலும் மேலிலும் திசையிலும் வெளிப்புற ஆகாயத்தில் கும்பிக்கப்பட்டுச் சலனம் இல்லாமல் பிராணன்கள் நிரம்பி நின்று தோற்றமாய்த் தெரிந்த போதே தேகமாகிய புரத்தைத் தகித்த அக்கினியானது பேரிடி போலக் கணத்தில் உபசாந்தியை அடைந்தது.*

*அப்போது பனி வெண்மையாய் இருப்பது போலத் தேகம் வெண்ணீறு போல நன்றாகக் காணப்பட்டது. அதனால் தேகம் எலும்பு யாவும் முறையாக நரம்புடனே கூடி நின்றன.* **(5.6.44)**

சுகமாய கருப்பூரப் பாயல் தன்னில்
துயில்வதுபோல் எலும்புநிரை தோன்றிற்(று) அன்றே
மிகமோது பவனத்தால் அந்த நீறு
மிசைந்(து)எழுந்து கணப்போதில் விசும்பைச் சுற்றித்
திகழ்வான சரற்காலம் தன்னில் மேகம்
செறிபனிபோல் ஓரிடத்தில் சென்று சேர்ந்த
இகலாத இவ்வவத்தை வேண்டும் மட்டும்
இயல்ஓங்கா ரத்(து)இரண்டாம் கிரமத்(து) எய்த.

**பொழிப்புரை:** *சுகத்திற்கு ஏற்றாற் போல கருப்பூரப் பாயில் உறங்குவது போல எலும்பின் வரிசை பாவனா திருஷ்டியால் தோன்றியதாம். அதிகமாக மோதும் காற்றினால் எலும்புடன் அந்த பஸ்மம் விரைவில் மேல் கிளம்பி நொடிப் பொழுதில் ஆகாசத்தைச் சுற்றி விளங்குகின்ற சரற் கால பனி பொருந்திய மேகம் போல ஓர் மூலையில் போய் சேர்ந்தது. பயிற்சிக்கு விரோதம் இல்லாத பிரணவத்தின் மத்தியமாக சாத்திய கும்பகப் பெயருடைய இந்த அவத்தை வேண்டிய மட்டும் பிரணவத்தின் அங்கமானது இரண்டாவது கிரமத்தை அடைந்தது.* **(5.6.45)**

அவத்தைஇது நிகழ்ந்த(து)அட யோகத்(து) அன்றால்
அடயோகம் பேரிடரை அளிப்ப(து) அன்றோ
அவற்றின்பின் பிரணவத்தின் மூன்றாம் கூறாய்
அமையு(ம்)உப சாந்திதரும் அவச ரத்தில்
உவப்புறுபூ ரணத்தாலே பூர கப்பேர்
உளகிரமம் பிராணங்கட்(கு) உண்டா யிற்றாய்
உவத்திர(ம்)இ லாஅந்த அவத ரத்தில்
உயிரெல்லாம் உணர்வி(ன்)அமு தத்துள் புக்க.

**பொழிப்புரை:** *(மூன்றாவதாகிய பூரகக் கிரமத்தைக் கூறல்) இந்தக் கும்பக அவத்தையில் இவ்வாறு அப்பியாசிக்கப்பட்டது அடயோகத்தால் அல்லவாம். அடயோகம் பெரிய துக்கத்தைக் கொடுப்பது அல்லவோ. அதன்பின் சித்தத்தின் உபசாந்திக்கு ஏதுவான ஓங்காரத்தின் மூன்றாவது அம்சமான மகார வடிவ மூர்த்தி தியானத்தினால் சந்தோஷிக்கும் நிறைவினால் பூரகப் பேர் கொண்டது கிரமமாய் உள்ளதாகும். எந்தவிதத் துயரமும் இல்லாத அந்தப் பூரக அம்சத்தில் பிராணன்கள் யாவும் சேதனமாகிய ஞான அமிர்தத்துள் புகுந்தது.* **(5.6.46)**

உகுபனிதோய்ந் தால்ஒப்ப அதிசீ தத்தை
உற்றபிரா ணங்க(ள்)எலாம் ஒழுங்கி னாலே
ககனமுறு புகைதண்கார் ஆகு மாபோல்
ககனநடு வுறமதியாய்க் கலையின் கூட்டம்

மிகவு(ம்)நிறைந்(து) அந்தமதி மண்ட லத்தில்
வியன்சுதைதா ரையைஉயிர்கள் மேவப் பெற்ற
திகழ்விசும்பின் நின்(று)இழிந்த அமுத தாரை
சேடமாம் உடல்நீற்றில் சென்று வீழ்ந்த.

**பொழிப்புரை:** *கொட்டுகின்ற பனியில் மூழ்கினதைப் போல மிகுந்த குளிர்ச்சியை அடைந்த பிராண வாயுக்கள் எல்லாம் முறையாக ஆகாயத்தை அடைந்த புகையானது குளர்ச்சியான மேகமாக ஆவது போல, ஆகாயத்தின் மத்தியில் அடைய சந்திர மண்டலமாகி கலைகளின் கூட்டத்தால் பூரணமாகி அற்புதமாகிய அமுத தாரையைப் பிராணன்கள் அடையப் பெற்றன. திகழ்கின்ற ஆகாயத்தில் இருந்தும் வீழ்ந்த அமுத தாரையானது எஞ்சிய உடல் பஸ்மத்தில் வந்து வீழ்ந்தது.* **(5.6.47)**

அரன்சிர(ம்)நின்(று) இழிஅமுத கங்கை போன்ற
அமுததா ரையினாலே அமல மாகிக்
கரங்க(ள்)ஒரு நான்குடன்வெண் மதித்தே(சு) ஆகிக்
கருணைமால் வடிவென்னக் காண லாகி
உரங்கிள(ர்)உத் தாலகன்மெய் தோன்றிற்(று) அன்றே
உயர்அமுத மயமான உயிர்கள் எல்லாம்
குரம்பைஅது தனைநிரைத்துச் சூழ்ந்(து)உள் ளான
குண்டலினி தனைப்பூரை குயிற்றி நின்ற.

**பொழிப்புரை:** *சிவபெருமானின் முடியிலிருந்து பொழியும் அமுதமாகிய கங்கையைப் போல அமுத தாரையினால் நிர்மலமாகி ஒப்பற்ற நான்கு கரங்களுடன் வெண்ணிற சந்திரனைப் போல பிரகாசம் அடைந்து கருணைக் கடலான நாராயணர் உருவம் போலக் காணப்பெற்று மகா திட யோகியாகிய உத்தாலக முனிவனின் தேகம் புலப்பட்டு நின்றது. அப்போது உயர்ந்த அமுத மயமான பிராணன்கள் யாவும் அந்த தேகத்தை வியாபித்து உள்ளே உள்ள குண்டலினி பூரித்து நின்றது.* **(5.6.48)**

இத்திறத்தில் பங்கயஆ தனத்(து)இ ருந்தோன்
யாக்கைநிலை அழியாமல் இயற்றிப் பின்னர்
மத்தமுறு பிரமரம்போல் சுழலும் நெஞ்சை
அன்பினால் தகைவுற்றான் மவுனி யாகி
மெத்துபிரா (ண)அபான வேகம் நோக்கி
மெல்லெனஉண் டாக்கினன்வல் விடயம் நின்று
தத்துபுலன் களைவருந்தி வேறு செய்தான்
சற்றுமறப் புறப்பரிசம் தள்ளி னானே.

**பொழிப்புரை:** *இந்த விதமாகப் பத்மாசனத்தில் இருந்த உத்தாலக முனிவன் தேகத்தின் நிலை கெடாமல் செய்து பின்பு பூவில் உள்ள தேனை அருந்திச் சுழலும் வண்டு போல முன்பு அனுபவித்த விஷயங்களில் சென்று சுழலும் சித்தத்தை மிகுந்த முயற்சி கொண்டு தடைப்படுத்தினான். தீவிர மௌனம் உடையவன் ஆகி மிதந்து ஓடும்*

*பிராணன் அபானன்களுடைய வேகத்தைப் பார்த்து மெதுவாக அடக்கினான். சப்தம் முதலிய விஷயங்களில் தாவும் இந்திரியங்களைத் தோஷ திருஷ்டி மூலமாக முயற்சியுடன் அப்புறப்படுத்தினான். மிச்சம் இன்றி வெளிப்புற விஷயங்களை விட்டு ஒழித்தான்.* **(5.6.49)**

பற்றறுதிண் ணியமதியோன் உள்ளே தோன்றும்
பரிசம்(ம்)எலாம் தள்ளுகின்ற பார்வை யாலே
அற்றனஆக் கினன்மூல வாயில் செம்மி
அங்கத்(து)ஒன் பதுவாயில் அனிலம் எல்லாம்
குற்றம்(ம்)அற முகம்அடைத்தால் புறத்து வாரம்
கும்பத்துக்(கு) அடைபடல்போல் குறித்(து)அ டைத்தான்
உற்றலயம் எனும்குணத்தைச் சேர்ந்த நெஞ்சை
உயர்இதய ஆகாயத்(து) ஒடுக்கி னானே.

**பொழிப்புரை:** *எந்தவிதமான பற்றும் (எந்த கூட்டும்) இல்லாத திடமான புத்தியுடைய உத்தாலகன் உள்ளே தோன்றும் வாசனைகள் (மனதின் விஷயங்கள்) அனைத்தையும் அகற்றுகின்ற விருத்தி ஞானத்தோடு கூடித் தொலைத்தான். கும்பத்தினது சூக்கும துவாரங்களையும் அடைக்கின்றது போல தேகத்தின் குதத் துவாரத்தினையும் குதியினாலே அடைத்து, ஒன்பது துவாரங்கள் அனைத்தையும் குற்றம் இன்றித் தடுத்து நிறுத்தினான். லயம் ஆகிய மனதை இதய ஆகாசத்தில் ஒடுக்கினான்.* **(5.6.50)**

உரத்தமத கரியைஉபா யத்தால் விந்தத்(து)
உள்குழியில் சேர்ப்பதுபோல் ஒடுக்கி நெஞ்சை
சரற்ககனம் போல்நிமல தெளிவைச் சேர்ந்து
தள்ளினான் பற்றிபாய் தன்மை யாலே
வரத்துடைய விகற்பமெலாம் மீள மீள
வருவனவேண் டியபடியே வந்து தோன்ற
பரப்புறுதோற் றங்களைவன் நெஞ்சால் மாய்த்தான்
பகைவரைவா ளால்சூரன் படுப்ப தேபோல்.

**பொழிப்புரை:** *வலிமை வாய்ந்த மத யானையை விந்தமலையின் அருகே தோண்டிய குழியில் இலை தழைகளைப் பரப்பி, பெண் யானையைக் காட்டல் முதலிய உபாயத்தால் அடைவிப்பது போல், மனதை யூகத்தினால் லயம் செய்து சரற்கால ஆகாசம் போலத் தூய்மையை அடைந்து விகற்பத்தைத் தள்ளினான். பற்றுகின்ற தன்மையால் வாசனைகளால் வருகின்ற விகற்பம் யாவும் ஓயாமல் இடைவிட்டு இடைவிட்டு வருவதாகி இஷ்டப்படி வந்து வந்து முந்தவும் விரிவான அந்த விருத்திகளை விசார பலம் பொருந்திய மனதினாலே பகைவர்களைச் சூரன் கத்தியால் வெட்டித் தள்ளுவது போல ஒயுமாறு ஒடுக்கினான்.* **(5.6.51)**

விகற்பமெலாம் இறத்தலுமே இதய விண்ணில்
விவேகபா னுவைமறைத்து விரிந்த கங்குல்
சகத்தினி(ன்)உள் அஞ்ஞனத்தைப் பார்த்த போதே
தன்னுள்விவே கத்தாலே தவிர்த்தான் அத்தை

**அகத்(து)இருள்நன் றாய்க்கெடலும் சுடர்வந்(து) எய்த**
**அம்முனிவன் அதனையும்கண்(டு) அகற்றி மாய்த்தான்**
**நிகழ்ச்சிஒளி அகலுதலும் சுழன்று நெஞ்சம்**
**நிசியி(ன்)நடுப் போல்உறக்கம் நேர்ந்த(து) அன்றே.**

**பொழிப்புரை:** *சகல விகற்பங்களும் போனவுடனே இதயமாகிய ஆகாயத்தில் விவேகமாகிய சூரியனை மறைந்து விரிந்த இரவு போன்ற தமசினை உலகத்தில் அஞ் சன மை கருப்புப் போலப் பார்த்த அப்பொழுதே தன்னிடத்தில் உதித்த விவேகத்தால் நாசம் செய்தான். உள்ளே தோன்றிய இருள்வடிவத் தமம் நன்றாய்ப் போகவும், பிரகாசம் வந்து பொருந்த அந்த உத்தாலக முனிவன் அந்த ஒளியையும் பார்த்து விலக்கினான். விளங்கிய பிரகாசம் போய்விடவும் சுழற்சியை அடைந்து மனமானது நடு இரவினைப் போல உறக்கம் வந்து நேர்ந்தது.* **(5.6.52)**

**போகாத துயிலினையும் அறுத்தான் தூக்கம்**
**போகுதலும் ஆகாச போதம் வந்த(து)**
**ஆகாச போத(ம்)அழிந் திடலும் வல்லை**
**அவன்மனமோ கம்சேர்ந்த அந்த மோகம்**
**நோகாமல் மனத்தினைவிட்(டு) ஏகு மாறு**
**நூக்கினான் பேரிதய நோக்கு மிக்கோன்**
**ஏகாத இரவுதரும் அந்த காரம்**
**இவ்வுலகில் நின்(று)அகற்றும் இரவி போல.**

**பொழிப்புரை:** *நீக்க முடியாததான உறக்கத்தையும் நீக்கினான். உறக்கம் நீங்கிய உடனே விண் நினைவு (சூனியம்) உண்டானது. விண் நினைவு ஒழிதலுமே விரைவில் அவனது உள்ளமானது மோகத்தை அடைந்தது. (அறிவின்மை வடிவ கூடத்தன்மை அடைந்தது). அந்த மோகத்தை (அறியாமை வடிவ கூடத்தைத்) தீபம் முதலியவற்றினால் அகலாத இரவு தந்த இருட்டினை இந்த உலகிலிருந்தும் அகற்றும் சூரியனைப் போல் எளிதாக உள்முகப் பார்வையை உடைய அந்த முனிவன் மனதினை விட்டு ஓடிப் போகும் வண்ணம் விலக்கினான்.* **(5.6.53)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**அன்ன காலையில் இருள்சுடர் துயில்மயக்(கு) அனைத்தையும் அறுத்(து)ஓட்டி**
**மன்னும் ஓர்அவத் தையைஅடைந்(து) ஒருகணம் வருத்த(ம்)ஆ றிய(து)உள்ளம்**
**இன்னல் தீர்ந்(து)உட னேஅனைத்(து) உருவமாம் அறிவைஎய் திய(து)அன்றே**
**நன்நெ டும்கரை தடுக்கநின்(று) எதிர்த்துமுன் தலம்நிறைந் திடும்நீர்போல்.**

**பொழிப்புரை:** *(பாக்கியத்தாலே உத்தாலக முனிவன் சுவானுபூதி நிலைமை அடைந்ததைக் கூறல்) அப்போது தோற்றிய இருள் பிரகாசம், நித்திரை, மோகம் (அறிவின்மை வடிவ கூடம்) யாவற்றையும் இல்லாததாகவே முழுக்க நாசம் செய்து பொருந்துகின்ற நிருவிகற்ப சமாதியை அடைந்து ஒரு கண காலம் மனம் விசிராந்தி (அமைதி) அடைந்தது. துயரம் ஒழிந்த அப்போதே அனைத்து வடிவமாய் இருக்கின்ற சித்து சொரூபத்தை அடைந்தது. பெரிய அணையினால் வெள்ளம் தடைபட்டு முன் புறத்தில் எதிர்முகமாய்த் திரும்பும் தண்ணீர் போல.* **(5.6.54)**

விஞ்சு நீள்பகல் பரிசயத் தாலும்தன் மெய்யறி உணர்வாலும்
நெஞ்சு சின்மயம் அடைந்ததால் இரணியம் நிகழ்சிலம்(பு) ஆமாபோல்
வஞ்ச வன்மனத் தன்மைபோய் சின்மயம் மருவிய மனம்தீரச்
செஞ்செவ் வேவல்லை வேற்றுமை ஆனதால் சேற்றினுள் குடம்என்ன.

**பொழிப்புரை:** *நீண்ட காலம் நிரந்தரமாகச் செய்யும் அப்பியாசத்தாலும் சுய அனுபவ மெய்யறிவினாலும் பொன் சிலம்பாக ஆவது போல மனமானது சித் சொரூபம் அடைந்தது. கபடமும் வன்மையும் பொருந்திய மனத் தன்மை போய் சித்து வடிவத்தைப் பொருந்திய அந்த மனம் மிகவும் நிலைப்பட்டுத் திரும்பிய அப்போதே குடத்தினுள் தண்ணீர் காய்ந்த பின் சேறு கும்ப பாவத்தையே (குட வடிவத்தையே) அடையும் அதுபோல சித் சொரூபமே ஆனது.* **(5.6.55)**

தங்கு காட்சிவிட்(டு) அமலமாய் ஞானத்தின் சமம்அடைந் ததுபோதம்
பொங்கு வாரிதி திரைமுதல் பகிர்ச்சிபோய் புனல்சமம் அடைந்தென்ன
எங்கும் ஓர்மதி யாய்அறி வுற்(று)அவன் ஈறில்போ கத்(து)எண்ண
மங்கி ஆண்(டு)அண்டம் பரித்(து)உயர்ந்(து) அமலசின் மயவிசும்(பு) உருவானான்.

**பொழிப்புரை:** *(சித்தத்தின் சித்தபாவம் சென்ற பின் அதன் பிரதிபிம்ப சைதன்யத்துக்குப் பிம்ப சிற் சாமானிய ஐக்கியம் உண்டாயது என்பதைக் கூறல்) பிறவிதோறும் தொடர்ந்த வாதனையால் வந்திருந்த திருசியத்தை விடுத்து, நிர்மலமாய் சிற் சாமானியமாய் இருந்தது. பொங்குகின்ற கடல் நீரானது அலை முதலான பேதம் ஒழிந்து சம பாவம் அடைந்தது போல எவ்விடத்தும் ஒரே அறிவாகப் போதம் அடைந்தவன் அளவில்லாத போகங்களின் நினைவு அழிந்து அவ்விடத்து திருசியங்களின் ஆதாரமாய் மகத்தாய நிர்மல சிதாகாச வடிவமே ஆயினன்.* **(5.6.56)**

அவ்வி டத்தினில் காண்பது காட்சிஅற்(று) அனந்தமாம் நல்லின்பம்
செவ்வி யானந்தம் உற்றனன் அமுதமார் தெண்கடல் குளித்தென்ன
மெய்வி டக்கழன்(று) அதீதனாய் ஒருதலம் மேவினன் சதானந்தம்
பௌவம் ஆயினன் எங்கணும் ஒத்ததற் பாவமே வடிவானான்.

**பொழிப்புரை:** *அந்த சிதாகாசத்தில் காண்பது காட்சி எல்லாம் இல்லாததாய் அமிர்தமய தெளிந்த சமுத்திரத்தில் மூழ்கியது போல முடிவற்ற உத்தமமான பேரானந்தத்தை அடைந்தனன். தேகத்திலிருந்தும் விடுபட்டவனாய் (அதாவது தேகத்தின் கட்டுப் பாட்டிலிருந்து விடுபட்டவனாய்) ஏதோ ஓரிடத்தை அடைந்தனன், சதானந்த வடிவக் கடலாக ஆயினன். எவ்விடத்திலும் ஒரே விதமான சத்தாய் சாமானிய வடிவமாக ஆயினான்.* **(5.6.57)**

அந்த ணன்தன(து) அறிவெனும் அன்ன(ம்)ஆ னந்தமாம் நிலைஓடை
வந்(து)அ மர்ந்தது சரற்கக னத்திலே வயங்குமா மதியென்ன
உந்து காற்றிலா விளக்கென ஓவியத்(து) உருவெனத் திரையில்லாச்
சிந்து வென்னநீர் கருக்கொண்டு பொழியலாச் சேண்முகில் எனநின்றான்.

**பொழிப்புரை:** *அந்தணர்களில் உத்தமரான உத்தலாக முனிவனின் அறிவு எனும் அன்னம் ஆனந்த ஓடையில் நிலைபெற்றது. சரற்கால நிர்மல ஆகாயத்தில் திகழ்கின்ற பூரண சந்திரனைப் போலும், காற்று அசையாத இடத்திலிருக்கும் தீபம் போலவும், ஓவியத்தில் எழுதப்பட்ட உருவம் போலும், அலையில்லாத கடல் போலும், தண்ணீரைக் குடித்துக் கார் நிறம் கொண்டு பொழியாத மேகம் போலவும் நிருவிகற்பமாய் இருந்தான்.* **(5.6.58)**

**இந்த மிக்கபேர் உலகினில் தற்பதத்(து) இருக்கு(ம்)அம் முனியைக்கண்(டு)**
**அந்த ரம்செறி சித்தர்விண் ணவர்குழு அற்புதப் பலபேரும்**
**வந்து சுற்றினர் அரம்பையர் நிரம்பினர் வாசவன் தனிமூதூர்**
**தந்(து)அ ளிப்பஅ வ(ன்)அங்(கு)அவை அனைத்தையும் தள்ளினன் விருப்(பு)இன்றி.**

**பொழிப்புரை:** *இந்த அரிய பேருலகத்தில் பரம பதத்தில் வீற்றிருக்கும் அந்த உத்தாலக முனியைக் கண்டு ஆகாயத்தில் நிறைந்திருக்கும் சித்தர்கள், தேவர்கள் கூட்டம் மற்றும் அற்புதம் வாய்ந்த பலரும் வந்து முனிவரைச் சூழ்ந்தனர். தேவ மங்கையர் வந்து நிரம்பினர். இந்திரன் செல்வம் நிறைந்த சொர்க்கத்தைத் தரவும், உத்தாலக முனிவன் போகம் நிறைந்த யாவற்றையும் விருப்பம் இன்றித் தவிர்த்தான்.* **(5.6.59)**

**அலங்கல் மாத(ர்)இங் கிதங்களைச் சைசவத்(து) அறிகிலான் எனச்சற்றும்**
**கலங்க லாதகெம் பீரமா மதியினன் கடவுள்வான் பேற்(று)எண்ணம்**
**விலங்கி அன்னதன் ஆனந்த வீட்டிலே மேவினன் மதியாறு**
**துலங்கி ஓங்கிய உத்தரா யணத்திலே சுடர்விடு கதிரென்ன.**

**பொழிப்புரை:** *மாலைகள் அணிந்த மங்கையர் அபிநயங்களைக் குழந்தைப் பருவத்தில் அறியாதவன் போலச் சற்றும் கலங்காத தீர புத்தியை உடையவன் தேவ லோக போகங்களில் சிறிதும் எண்ணம் இல்லாது அவற்றை விலக்கி, முன்பு தான் இருந்த ஆனந்த வீடான தன்னிடத்தில் தானே ஆறு மாத காலம் இளைப்பாறி இருந்தான். மேகங்கள் மறைப்பில்லாத தெளிந்த உத்தராயண காலத்தில் பிரகாசிக்கின்ற சூரியனைப் போல. (இருந்தான்)* **(5.6.60)**

**மூவ ராகிய முதல்வரும் அமரரும் மொய்த்தசித் தரும்வாழும்**
**சீவன் முத்தியாம் பதம்அடைந்(து) அருந்தவன் செறியு(ம்)ஆ னந்தத்தின்**
**ஓவல் இன்றிய நிறைவினால் ஆனந்த முதிர்ச்சியாம் பதமுற்றான்**
**ஆவ தானபே ரானந்த மதுவி(ல்)அவ் வறிவினால் திகழ்வுற்றான்.**

**பொழிப்புரை:** *முதன்மையான மும்மூர்த்திகளும், தேவர்களும், சூழ்ந்த சித்தர்களும் எழுந்தருளி இருக்கும் சீவன் முத்திப் பதத்தை அடைந்து, அரிய தவத்தை உடைய உத்தாலக முனிவன் ஆனந்தத்தை அடைந்து, இடைவிடாத பூரண முதிர்ச்சியால் பேரானந்தப் பதத்தை அடைந்தான். உண்டாகின்ற இன்பமும் துன்பமும் இல்லாத அத்தகைய சுயம்பிரகாச வடிவமாக நிலைபெற்றான்.* **(5.6.61)**

**ஒருக ணம்செறி வருடநூ(று) என்னினும் உயர்ந்தஅப் பதம்உற்றோர்**
**வருப வம்தரும் ஏதுவாய்க் காண்பன மருவு(ம்)இவ் விழிமேவார்**
**பெருமை யானஇப் பதத்தி(ல்)உத் தாலகன் பிறைக(ள்)ஓர் ஆறாலே**
**அரு(கு)உ றாவகை சித்திபூ மியைக்கடிந்(து) அமைந்(து)இருந்(து) உணர்வுற்றான்.**

**பொழிப்புரை:** *ஒரு கணமாயினும் ஆயிரக் கணக்கான வருடமாயினும் உயர்ந்த அந்தப் பதத்தை அடைந்தவர் ஓயாமல் வந்து கொண்டேயிருக்கும் பிறப்பு இறப்பினைக் கொடுக்கும் காரணமாய்த் திருசியங்களைப் பொருந்தும் இந்தத் திருஷ்டியை அடைய மாட்டார். மகிமை வாய்ந்த இந்தப் பதத்தில் உத்தாலக முனிவன் ஆறு மாதம் வரை சித்தி பூமிகளின் நினைவுகள் நெருங்கி வராதபடி இளைப்பாறி நிருவிகற்பமாக அறிவுற்று இருந்தனன்.* **(5.6.62)**

**விழித்து நோக்கினர் சித்தரை அவர்களும் மிக்(கு)உயர் இவன்தன்னைப்**
**பழிச்சி அன்பொடு பகவநீ காண்டிஎம் பணிதல்பொன் னுலகத்தில்**
**இழிச்சும் இவ்விமா னத்துவந்(து) ஏறுதி இந்திர பதத்(து)இன்பம்**
**கழித்த பூமிகள் அனைத்தினும் இல்ல(து)ஓர் கற்ப(ம்)அப் பயன்துய்ப்பாய்.**

**பொழிப்புரை:** *கண் விழித்து சித்தர் முதலியவர்களைக் கண்டான். அவர்களும் தவத்தினால் மிக உயர்ந்த நிலையை அடைந்திருக்கும் இவனை மிகுந்த பக்தியுடனே பூசித்து, பகவனே! நீ எங்களுடைய நமஸ்காரத்தைக் காண்பாய். சுவர்க்க லோகத்தில் கொண்டு போய்ச் சேரும் இந்த விமானத்தில் வந்து ஏறுவாய். இந்திர பதவியின் ஆனந்தம், தள்ளத் தக்க மற்றைய உலகங்களில் கிடையாது. ஒரு கற்ப கால அளவு அந்த இன்பத்தை அனுபவிப்பாய்.* **(5.6.63)**

**பகவ செய்தன தவமெலாம் இந்திர பதமுறல் பொருட்டேஎன்(று)**
**அகம லர்ந்(து)உரை பன்னிய சித்தரை அதிதியர் எனநோக்கி**
**முகம லர்ந்துபூ சித்தனன் மயங்கலன் முந்துறு பெரும்செல்வம்**
**மிகவி ரும்பலன் வெறுக்கலன் திண்ணியோன் விபுத(ர்)ஏ குதிர்என்றான்.**

**பொழிப்புரை:** *பகவனே! உலகத்தில் செய்கின்ற தவங்கள் அனைத்தும் இந்திர பதவியையும், சொர்க்க லோக போகங்களையும் அடைவதன் பொருட்டே ஆகும் என்று உள்ளம் மலர்ந்து கூறிய சித்தர்களை அதிதிகள் என்பதாகப் பார்த்து முகம் மலர்ந்து முறைப்படி பூசை செய்தான். (ஆனால்) மயக்கம் அடையவில்லை. எதிர்ப்பட்ட பெரும் செல்வத்தைச் சற்றும் விரும்பவில்லை, வெறுக்கவும் இல்லை. மிகவும் திடமான மதி உடைய முனிவன் தேவதைகளே! செல்வீர் என்றான்.* **(5.6.64)**

**மொய்த்த கூட்டத்தை விடுத்தனன் தன்செயல் முயன்(று)இருந் தனன்போக**
**பெத்த நீங்கிய அவனைஅச் சுத்தரும் பின்புசின் னாள்பேணி**
**சித்தம் விட்டனர் தாங்களே அகன்றனர் சீவன்முத் தனும்கானில்**
**மெய்த்த மாதவர் இடங்களில் சுகத்திலே வேண்(டு)அள(வு) உலாவுற்றான்.**

**பொழிப்புரை:** *சூழ்ந்த கூட்டத்திற்கு விடை அளித்தான். சமாதியில் இருப்பதாகிய தன் செயலைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தான். போகங்களில் பற்று நீங்கிய அந்த*

*முனிவனைச் சித்தர்களும் சில நாட்கள் உபாசித்து விட்டு (அந்த முனிவன் தங்களுடன் வரமாட்டான் என்று) மனம் விட்டு, அவர்களாகவே அவ்விடத்தை விட்டுச் சென்றனர். சீவன் முத்தனாகிய அந்த முனிவன் அந்தக் காட்டில் உண்மையை உணர்ந்த மகான்களின் ஆசிரமங்களில் வேண்டும் அளவுக்கு ஆனந்தமாகச் சஞ்சாரம் செய்தான்.* **(5.6.65)**

**ஒருதி னத்(து)எல்லை ஒருமதி எல்லைமற் றோர்வரு டத்(து)எல்லை**
**பெருகும் ஆண்(டு)எல்லை எல்லைஓர் ஓர்கால் பேதமில் தியானத்தில்**
**மருவி ஒன்றிடும் விழிக்கு(ம்)அந் நாள்முதல் வருந்தொழில் களில்சேர்ந்து**
**நிருவி கற்பமே ஆயினன் ஒருமையாய் நின்றனன் சித்தோடும்.**

**பொழிப்புரை:** *ஓரோர் காலம் ஒரு தின அளவும், ஒரு மாத அளவும், ஒரு அயன அளவும், ஒரு வருட அளவும். அனேக வருட அளவும் பேதமில்லாத நிருவிகற்ப சமாதி அடைந்திடும். விழிக்கும் காலத்தில் பிராரப்த வசத்தால் செயல்களில் சார்ந்த போதிலும் நிருவிகற்ப சமாதியையே அடைந்தனன். சித்து வடிவமாகவே ஒருமையுடன் (ஏகாக்கிரத்தோடு) இருந்தான்.* **(5.6.66)**

பரந்த சித்தின(து) ஒருமையின் செறிவினைப் பழகலால் பெரும்சித்து
நிரந்த ரித்(து)எங்கும் சமமதா யினன்புவி நிறைவுறும் வெயிலென்னத்
திரந்த ரும்சித்தின் ஒருமையை நெடும்பகல் செறிபரி சயம்செய்ய
அரந்தை தீர்ந்தசற் பாவசா மானியம் அடைந்தனன் அதனாலே.

**பொழிப்புரை:** *சித்தத்துவ ஏகத்துவத்தின் திடத்துவத்தை (சித்து தன்மையின் ஒருமைப்பாட்டினை மிகத் திடமாக) நிரந்தரம் பயிற்சி செய்ததால் மகா சித்துத் தன்மையை அடைந்து அந்த முனிவன் சமமான ஒளியை உடையவன் ஆயினான். (ஐந்தாம் பூமியிலிருந்து ஆறாம் பூமி அடையப் பெற்றான்) உலகில் பூரணமாக நிரம்பும் சூரியக் கிரணம் போல எப்போதும் மாறாத சித்தின் ஒருமைப்பாட்டினை வெகுகாலம் இடைவிடாமல் அப்பியாசம் செய்ததனால் சகல துயரமும் இல்லாத சத்தா சாமானியத்தை அந்த அப்பியாசத்தினால் (ஏழாம் பூமியாகிய துரியத்தை) அடைந்தனன்.* **(5.6.67)**

தெரிவ தாம்இவற்(று) உதய(ம்)அத் தமும்உறான் சித்திர ரவிபோலப்
பெரிய தாய்ச்சம இன்பமாம் பதவியின் பேற்றினால் உபசாந்தி
புரியும் நெஞ்சினன் பிறவியும் ஐயமும் போய்ச்சரற் ககனம்போல்
விரியும் நின்மல சாந்தமெய் ஒளிநிறை வேதன வடிவானான்.

**பொழிப்புரை:** *திருசியப் (காணப்படும்) பொருட்களின் லாப நஷ்டம் இல்லாதவனாய்ச் சித்திரத்தில் வரையப்பட்ட சூரியனைப் போல எல்லையற்றதாய் அதனால் தடையற்ற பெரியதான சம பரமபத அடைவினால் உபசாந்தி பற்றிய மனத்தை உடையவன் பிறப்பு இறப்புகள் ஒழிந்து சந்தேகம் அனைத்தும் நீங்கி சரற் கால ஆகாயம் போல விரிந்த நின்மல சாந்தமான சத்தியப் பிரகாச பூரணமே தனது வடிவமாக இருந்து திகழ்ந்தான்.* **(5.6.68)**

(வேறு)

என்ற வசிட்டன் தனைவள்ளல் எதுசத் தாசா மானியம்என்(று)
அன்று வினவ அவன்உரைப்பான் அகல்சிற் சாமா னியவடிவாய்
ஒன்றும் ஒன்றா இல்லாமை உறுபா வனையின் உறைப்பாலே
தன்றன் உள்ளம் கரைந்(து)ஏகில் சத்தா சாமா னியம்அதுவே.

**பொழிப்புரை:** *இவ்வாறு அருளிச் செய்த வசிட்ட முனிவரை நோக்கி இராமபிரான் "எது சத்தா சாமானியம்?" என்பதாக அப்போது கேட்கவும், வசிட்ட முனிவர் உரைத்தது...* *விரிந்திருக்கிற சித் சாமானிய வடிவமாகி ஒரு திருசியமும் சம்பந்தப் படாத அபாவத்தின் பாவனையின் (ஆறாவது பூமியாகிய பதார்த்த அபாவனையின்) திடமான பயிற்சியாலே தன்னுடைய மனமானது நசித்துப் போகுமானால் அந்நிலையே சத்தா சாமானியம். (விட்சேப ஏதுவான சித்தம் அபாவம் ஆதலின் ஆன்மாவின் சொரூபத்தையே சேடிக்கும்)* **(5.6.69)**

தேற்ற மாம்காண் பனநீங்கிச் சித்தின் இடையே சித்(து)இறக்கில்
சாற்று முயல்கொம்(பு) எனநொய்தாம் சத்தா சாமா னியம்அதுவே
தோற்றும் புறன்உள் ளாய்ப்பலவாய்த் துவக்க மாகும் இவைஅனைத்தும்
மாற்றி அகன்று மனம்நிற்கில் அதுசத் தாசா மானியமே.

**பொழிப்புரை:** *எப்பொழுதும் திருசியங்கள் (காண்பவை) இல்லாமல் அகன்று, பிரதிபிம்ப சித்தானது பிம்ப சித்தில் முற்றிலும் ஐக்கியமாயின் சொல்லப்படும் முயல்கொம்பு என அசத்து உருவம் போல அதி சூக்குமமாகிய அதுவே சத்தா சாமானியம் ஆகும். தோற்றுகின்ற வெளிப்புறமாகவும், உட்புறமாகவும், பலவாகவும் உதயமாகும் இவை அனைத்தும் உதயம் ஆகாமல் ஒழித்து சித்தமானது நிலைபெற்றால் அந்த நிலைமையே சத்தா சாமானியம் ஆகும். (சித்தமானது ஆன்மாவில் லயிக்கும் போது அது சத்தா சாமானியம் எனப்படும்)* **(5.6.70)**

உன்னா எதிர்காண் பனஒன்றும் ஒழியா(து) ஆமை உறுப்(பு)என்னத்
தன்னால் தன்பால் இறக்கு(ம்)எனில் சத்தா சாமா னியம்அதுவே
முன்னாம் உடல்சேர் முத்த(ர்)உடல் இலதா முத்தர் இருவருக்கும்
என்னா ளினும்சேர் பெருங்கண்ணீ(து) இதன்பேர் துரியா தீதபதம்.

**பொழிப்புரை:** *திருசியங்கள் யாவற்றையும் பாவிக்காதவனாய் (காணப்படுவன அனைத்தையும் பாவனை செய்யாதவனாய்) ஆமையானது தன் உறுப்புகளை உள்ளடக்கிக் கொள்வது போல சுயமாகவே தன் ஆன்மாவில் சகஜ திருஷ்டியினால் அடங்கிடுமோ (நசிக்குமோ) அதுவே சத்தா சாமானியம் ஆகும். கண்கூடாகக் காண்கின்ற சீவன் முத்தர், விதேக முத்தர் இருவருக்கும் எப்பொழுதும் இந்தத் திருஷ்டியே சம்பவிக்கும். இதன் பெயர் துரியா தீத நிலை.* **(5.6.71)**

அறிந்து சமாதி அடைந்தோர்க்கும் அனுபூ தியி(ன்)நின்(று) எழுந்தோர்க்கும்
செறிந்து தோன்றும் மூடர்க்குத் தெரியா தாம்இப் பெருங்கண்ணும்
முறிந்து பிறவி அறும்சீவன் முத்த ரான சீவரெலாம்
பிறிந்தி டார்விண் பயில்காற்றும் பெரிதாம் மண்ணில் இரதமும்போல்.

**பொழிப்புரை:** *சச்சிதானந்த சொரூபம் தான் என்று உணர்ந்து சமாதி அடைந்தவர்க்கும், சமாதியிலிருந்து வெளிப்பட்டவர்க்கும் இந்த மகத்தான திருஷ்டியானது நேரடி அனுபவமாய் விளங்கும். மூடர்களுக்கு விளங்காது. அறியாமை ஒழிந்து பிறவிகள் அற்ற சீவன் முத்தர்கள் அனைவரும் விண்ணில் காற்று போலவும், பெரிதான மண்ணில் வாசனை போலவும் இத் திருஷ்டியைப் பிரியாது இருப்பார்கள்.* **(5.6.72)**

**மூவர் முதல்வா னவர்என்னை முதல்நா ரதனை முதல்முனிவர்**
**மேவல் உற்றது) இப்பெருங்கண் வேற்றுப் பயம்எல் லாம்நசிப்பித்து)**
**ஓவ லில்லா இப்பதத்தில் உத்தா லகன்உற் றிருந்தனனால்**
**ஆவல் தீர்வது) எவ்வள(வு)அவ் வளவும் சகமாம் அகத்திடையே.**

**பொழிப்புரை:** *மும்மூர்த்திகள், இந்திரன் முதலான தேவர்கள், நான் முதலாக நாரதர் முதலிய முனிவர்கள் அனைவருமே இந்த மகா திருஷ்டியில் இருந்து வாழ்கின்றார்கள். பேத அச்சம் எல்லாம் ஒழித்து, ஒழிவில்லாத இந்த ஆனந்த பதத்தில் ஆவல் (அவா) தீர்கின்ற காலம் எவ்வளவோ அவ்வளவு காலம் அதாவது பிராரப்தம் நாசமாகும் வரை உலகமாகிய வீட்டில் உத்தாலக முனிவன் வாழ்ந்திருந்தான்.* **(5.6.73)**

**காலம் அனேகம் சென்றதன்பின் கந்த மாத னக்கிரியில்**
**கோல முழையில் அம்முனிவன் குரம்பை விட்டுக் குரம்பையிலாச்**
**சீல முத்த னாய்இருப்பேன் தீர்(வு)என்(று) என்றே சிந்தித்துச்**
**சால நல்ல தளிர்த்தவிசில் தளைத்த பதுமா சனத்(து)இருந்தான்.**

**பொழிப்புரை:** *வெகுகாலம் கழிந்த பின் கந்தமாதன மலையில் அழகிய குகையில் அந்த உத்தாலக முனிவன் தேகத்தை விடுத்துத் தேகம் இல்லாத விதேக முத்தனாய் இருப்பேன் நிச்சயம் என்பதாகச் சிந்தித்து மெல்லிய தளிர் ஆசனத்தில் பத்மாசனம் இட்டு அமர்ந்திருந்தான்.* **(5.6.74)**

**அரைநோக் காக நோக்கியிருந்(து) அபான வாயில் அடைத்ததனால்**
**புரைஒன் பதுவாய் அடைத்(து)உளத்தால் பொறியும் புலனும் ஒன்றாக்கி**
**திரைஇல் கடல்போல் தன்சித்தின் செறிவைப் பாவித்(து) ஆருயிரின்**
**விரைவை நிறுத்தி வணங்காமல் மேல்நோக் கியகந் தரத்தினனாய்.**

**பொழிப்புரை:** *பாதி விழிப்பாகப் பார்த்திருந்து குதவாயில் அடைத்து. அதனால் ஒன்பது துவாரங்களையும் அடைத்து, மனதினால் விஷயங்களிலிருந்து புலன்களை விலக்கி ஏகமாகச் செய்து அலைகள் இல்லாத கடல் போலத் தனது சித்தின் செறிவைப் பாவனை செய்து, பிராணனின் வேகத்தை அடக்கி, உடல் வளையாமல் நேராக நிமிர்ந்த கண்டத்தினனாய்.* **(5.6.75)**

**நாவின் அடிச்சென்(று) உறச்செறிஉள் நாவின் அடியை உடையோனாய்**
**ஓவில் முகக்காந் தியன்ஆகி உள்ளில் புறனில் மேல்கீழில்**
**வாவும் விடயத் தினில்பாழில் மனமும் கண்ணும் உறானாகி**
**வீவ தான எயிற்றி(ன்)நிரை எயிற்றின் நிரையை மேவானாய்.**

**பொழிப்புரை:** *நாக்கின் அடிப்பாகத்தில் சென்று உள்நாக்கின் மூலத்தை உடையவனாய் கெடாத ஒளியுடைய முகத்தனாய் உட்புறம் வெளிப்புறம் மேல்புறம் கீழ்ப்புறம் எவ் விடத்தும் இழுக்கும் விஷயங்களில் சூனியத்தில் மனோ திருஷ்டியைச் செலுத்தாதவன் ஆகி வீழ்வதான பற்கள் பல்வரிசைகளைப் பொருந்தாதவனாய்.* **(5.6.76)**

**அங்கத்(து) உயிரின் மிகுதிதகைந்(து) அதனால் நொய்தாய் அவிர்முகத்தோன்**
**அங்கத்(து) உருஉள் ளுணர்(வு)உருவே ஆகி எழலால் புளகிப்போன்**
**அங்கத்(து) உருஉள் ளுணர்(வு)உருவே ஆகிப் பழகி அறிவொன்றாய்**
**அங்கப் பொழு(து)அப் பழக்கத்தால் அகத்(து)உத் தமமாம் சுகம்அடைந்தான்.**

**பொழிப்புரை:** *பிராணனின் வேகத்தைத் தடைசெய்து அதனால் நொய்தாக விளங்கும் முகத்தனாய் சொரூப சைதன்ய சாட்சாத்காரமாய் அந்த சொரூப சாட்சாத் காரத்தால் உண்டான சந்தோஷத்தால் புளகாங்கிதம் அடைந்தவன் ஆனான். சிற் சாமானியம் எங்கும் நிறைந்த சித்து ரூபமாய் அங்கு அப்போது அந்த சித் சாமானிய அப்பியாசத்தால் அந்தரத்தே மேலான சுகம் அடைந்தான்.* **(5.6.77)**

**ஆனந் தத்தின் பெருக்கைநுகர்ந்(து) அதனால் சிற்சா மானியம்போய்த்**
**தா(ன்)அந் த(ம்)அற வெலாம்பரிக்கும் சத்தா சாமா னியம்அடைந்தான்**
**தீனம் தவிர்ச மனாய்இருந்தான் சிந்தா குலம்எல் லாம்தீர்ந்தான்**
**மானம் தரும்ஆ னந்த(ம்)இலா மகானந் தத்தால் முகம்மலர்ந்தான்.**

**பொழிப்புரை:** *பெருகிய ஆனந்தத்தை அனுபவித்து, அதனால் சித் சாமானியம் அகன்று, தான் முடிவு ஒன்றும் இல்லாத சகலத்தையும் தாங்கும் சத்தா சாமானியத்தை அடைந்தான். இழிவினைத் தவிர்க்கும் சமானத்தை அடைந்திருந்தான். மனத்துயரம் நீங்கி பரம சாந்தியை அடைந்தான். உவமானம் சொல்ல முடியாத மிகப் பெரியதான ஆனந்தத்தால் மலர்ந்த முகம் உடையவன் ஆனான்.* **(5.6.78)**

**அனக பதமுற்(று) உடல்புளகம் மாறி நெடுநா ளில்கரைந்து**
**மனமும் பிறப்பின் மயக்கமும்போய் மகாசத் துவமாய் ஓவியம்போல்**
**கன(ம்)இல் ககனத்(து) உவாமதிபோல் கதியில் சின்னா ளினில்சுவறி**
**இனன(து) ஒளியின் மரப்பசைகள் இறப்பு போலாய் இறப்புற்றான்.**

**பொழிப்புரை:** *அமலமாகிய பதத்தை அடைந்து, புளகாங்கிதம் சாந்தமாகி, தேகம் நெடுநாளில் கரைந்து. மனதும் பிறப்பின் மயக்கமும் போய். மகத்தான சத்துவத்தை அடைந்து. ஓவியத்தைப் போல மேகம் இன்றி தெளிந்த ஆகாயத்தில் பூரண சந்திரனைப் போல விமல வடிவமாகிய தற்பதத்தில் சிலதினங்களில் உபசமம் அடைந்து சூரியனது கிரணங்களால் மரங்களின் ஈரம் காய்வது போலத் தூல தேகம் பூமியில் விழ மோட்சம் அடைந்தான்.* **(5.6.79)**

**(உபசாந்திப் பிரகரணத்தில் உத்தாலகன் கதை முற்றும்)**

# (vii) சுரகு கதை

*முன்பு யோகாப்பியாசத்தின் வலிமையால் மன அமைதியாம் அதுவே சமாதி அவத்தை என்று கூறப்பட்டது. இப்போது மாயா திமிரத்தைக் கெடுத்துத் தன்னை உணர்ந்தவன் வாசனா சயம் வந்தவனே ஆதலின் விவகார பரனாயினும் சமாதி நிலை அடைந்தவனே ஆவன் என உணர்த்தும் பொருட்டு சுரகு கதை சொல்லப் படுகின்றது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**இந்தஒழுங் கால்உணர்வை உணர்வினால் உணர்ந்(து)உலகில் இயங்கா நின்றே**
**அந்த(ம்)அறும் பெரும்பதத்தே ஆறுதியால் காண்கின்ற அனைத்தும் மாளச்**
**சந்ததம்சா தித்(து)அதனைப் பெறும்அளவும் நூல்குரவன் தனிநெஞ் சாலே**
**பந்த(ம்)அறு தத்துவத்தை விசாரித்தே பெறவேண்டும் பதுமக் கண்ணாய்.**

**பொழிப்புரை:** *இந்த முறையினால் தாமரை மலர்போன்ற கண்களை உடையவனே! (சுவ)ஆத்மாவை (விசிஷ்ட) ஆத்மாவினால் உணர்ந்து பிரபஞ்சத்தில் விசாரித்துக் கொண்டே முடிவில்லாத அகண்ட பூரண வஸ்துவில் இளைப்பாறுதலை அடைவாய். சர்வ திருசியமும் (காணும் அனைத்தும்) ஒழிந்து போக இடைவிடாமல் அந்தப் பதத்தை அடையும் வரையில் அப்பியாசம் செய்து சாத்திர அர்த்தம், ஆசாரியர் கூடிய விவேக மனத்தாலே எந்த உபாதியும் இல்லாத தத்துவத்தை ஆராய்ந்தே அறிய வேண்டும்.*
**(5.7.1)**

**மயல்இன்மை சாதனைநூல் பொருள்போதம் குருயமம்ஆம் வழிக ளாலே**
**உயர்பதவி பெறலாகும் அன்றிஉணர்(வு) ஒன்றினால் உறுதற்(கு) ஆமால்**
**இயல்உபதே சம்பெற்றுக் கூரியதாய்க் களங்க(ம்)இலா(து) இருக்கும் ஆகில்**
**வியனுறுசா தனம்முழுதும் இலதேனும் புந்தியினால் வீடு கூடும்.**

**பொழிப்புரை:** *வைராக்கியம், அப்பியாசம், சாத்திர அர்த்தம், பிரஞ்ஞை, ஞானாசிரியர், அலைகின்ற மனதைத் தடுத்தல் ஆகிய வழிகளாலே மேலான பதவியைப் பெற முடியும். அல்லது ஒரு பிரஞ்ஞையினாலே அடைதலும் முடியும். மகா வாக்கிய உபதேசம் பெற்று ஆழ்ந்த சிரத்தையுடன் மதியானது களங்கம் அற்று இருக்குமாயின் வேண்டத் தக்கதான சாதனங்கள் முழுதும் இல்லாவிடினும் மேற்சொன்ன புத்தியினால் மோட்சம் கிட்டும்.*
**(5.7.2)**

**என்றானை முகநோக்கி இகத்தொழிலோ(டு) இருந்தேயும் சமாதி எய்தி**
**ஒன்றான உணர்வுற்றான் போல்இடர்தீர்ந் தான்ஒருவன் ஒருவன் செய்கை**
**இன்றானாய்த் தனியிடத்தில் சமாதிஅடைந் தான்இவரில் மிக்கோன் ஏவன்**
**நன்றாக அருளுகென இராகவன்கேட் டலும்வசிட்டன் நவில்வ தானான்.**

**பொழிப்புரை:** *என்று அருளிய வசிட்ட முனிவரின் முகம் நோக்கி லௌகீக (உலக) விவகாரத்தோடு கூடியிருந்தும் சமாதியை அடைந்து ஏகமாகிய ஞானத்தை அடைந்தவனைப் போலத் துன்பம் தீர்ந்தான் ஒருவன். மற்றொருவன் செய்கை*

*இல்லாதவனாய் தனியிடத்தில் இருந்து சமாதியை அடைந்தான். இந்த இருவரில் எவன் சிறந்தவன் ஆவான்? சந்தேகம் தீருமாறு அருள வேண்டும் என்று இராமபிரான் கேட்கவும் வசிட்ட முனிவர் கூறத் தொடங்கினார்.* **(5.7.3)**

**ஆற்றுமதத் துவம்அன்றால் முக்குணத்தால் வரும்சகம்என்(று) அறிந்தோர்க் குள்ளே**
**தோற்றுகின்ற சீதள(ம்)ஏ(து) அதுதனையே சமாதியெனச் சொல்லும் அன்றே**
**ஊற்ற(ம்)அறக் காண்பவற்றோ(டு) உறவுநமக்(கு) இல(து)என்றே உரத்துத்**
**தண்ணென்(று)**
**ஏற்றசமா தியில்இருப்பன் ஒருவ(ன்)ஒரு வன்தொழிலோ(டு) இருப்பன் அன்றே.**

**பொழிப்புரை:** *சத்துவம், இராசதம், தாமசம் என்னும் முக்குணங்களால் உண்டான இந்தப் பிரபஞ்சம் தனது ஆத்ம சொரூபம் அல்ல என்று உணர்ந்தோருக்கு உள்ளே உண்டாகின்ற குளிர்ச்சியான உபசாந்தியையே சமாதி எனக் கூறுவர். நிலையில்லாத திருசியங்களோடு ஆசை தமக்கு இல்லை என்பதான நிச்சயம் உடையவனாய் அதி திடமாகவும் குளிர்ந்து (சாந்தி அடைந்து) சமாதியில் இருப்பான் ஒருவன். மற்றொருவன் விவகாரம் செய்பவனாக இருப்பான்.* **(5.7.4)**

**இவ்விருவர் இதயமும்தண் ணென்(று)இருக்கில் வேற்றுமைஓர் இறையும் இல்லை**
**அவ்விதய சீதளமே அனந்ததவப் பயனாம்அவ் அனுபூ திக்கே**
**கவ்வியிருப் போன்உள்ளம் காரியத்தால் அலையு(ம்)எனில் கவலை யாகும்**
**செவ்வியஅச் சமாதானம் உன்மத்த நடனம்போல் சிறப்(பு)இன் றாகும்.**

**பொழிப்புரை:** *இந்த இரண்டு ஞானிகளுடைய மனமும் குளிர்ச்சியான சமாதியில் இருப்பதால் இருவருக்கும் வேற்றுமை சற்றும் கிடையாது. இதயத்தில் உண்டான சமாதியே எண்ணற்ற பிறவிகளில் செய்த தவப் பயன் ஆகும். அந்த சமாதியையே மேலாகக் கொண்டு நிலைபெற்று இருப்பவனின் மனமானது காரியங்களில் ஈடுபட்டு விருத்திகளை அடைந்து சஞ்சலம் அடையுமானால் விட்சேபம் உண்டாகும். சிறந்த அந்த சமாதியானது பைத்தியக்காரனின் நடனம் போல் சிறப்புடையதாக ஆகாது (துக்கத்திற்குக் காரணமாகி விடும்).* **(5.7.5)**

**வருத்தமிலா உன்மத்த நடத்தினன்வா தனைமாய்ந்த மனத்தோன் ஆகில்**
**திருத்தமுற அவன்கூத்து தெளிவுற்றோன் சமாதிக்குத் தீர நேராம்**
**பெருத்ததொழில் சேர்அறிஞர் பெரியவனம் சேர்அறிஞர் பேதம் நாடில்**
**ஒருத்த(ர்)ஒருத் தரைவிஞ்சா(ர்) இருவரு(ம்)ஒத்(து) ஐய(ம்)இல்வீ(டு) உற்றார் அன்றே.**

**பொழிப்புரை:** *கஷ்டம் இல்லாத பைத்தியக்கார நடனத்தை உடையவன் வாசனைகள் அழிந்த மனம் உடையவன் ஆயின் சீர்பெற்ற அந்த மகானின் நடனம் விவேகியின் சமாதிக்கு இணையானது ஆகும். பெரிதான விவகாரத்தில் பொருந்திய ஞானிகள், பரந்த காட்டில் வசிக்கும் ஞானிகள் (இருவர் இடையே) வேற்றுமையைப் பார்த்தால் ஒருவரை ஒருவர் மிஞ்சமாட்டார். இரண்டு ஞானிகளும் சமமாகவே சந்தேகம் இல்லாத முத்தியை அடைவர்.* **(5.7.6)**

**சாலவும்வா தனைபோகில் இம்மனம்செய் தொழில்புரிந்தும் தான்செய் யாதாம்**
**சீலமனம் நெடி(து)அகலில் அருகிருந்தார் செப்புமொழி தெரியா தாப்போல்**
**தூலமனம் தொழில்விடினும் செய்ததாம் வாதனையே துன்னு மாகில்**
**கோலஉடல் அசைவறினும் கனவிலே வரைநின்றும் குழிவீழ் வார்போல்.**

**பொழிப்புரை:** *முழுவதும் வாசனைகள் அழியுமாகில் இந்த மனமானது சிந்தனை செய்தாலும் தான் ஒன்றும் செய்யாததே ஆகும். கருவியாய மனமானது அதி தூரத்தில் சென்று விட்டால் அருகில் இருப்பவர் சொல்வதையும் உணராததே போல வாசனையால் பருத்த மனமானது ஒன்றும் செய்யாமல் இருப்பினும் கர்த்தாவே ஆகும். வாசனையே பொருந்துமாயின் அழகான உடல் அசையாது இருப்பினும் கனவிலே மலையிலிருந்து படுகுழியில் வீழ்ந்து பயம் அடைவதைப் போலவாம்.* **(5.7.7)**

**தொலை(வு)இல்தொழில் செய்யு(ம்)மனம் தொழில்நீங்கில் அதுதானே சுகச மாதி**
**அலை(வு)அறுகை வல்லியமும் பரமானந் தமும்என்றே அறிவாய் நெஞ்சின்**
**உலைவுதிரம் எனும்இரண்டும் அத்தியானம் தியான(ம்)எனும் உபயத் துக்கு**
**நிலையுறுகா ரணங்களாம் ஆதலில்இம் மனம்முளைக்கும் நீர்மை தீர்ப்பாய்.**

**பொழிப்புரை:** *அளவில்லாத தொழில்களைச் செய்யும் கர்த்தா தன்மை முதலான அபிமானம் ஒழிந்து அந்த அபிமானம் ஒழிந்த அளவே இன்ப மயமான சமாதி ஆகும். சஞ்சலம் அற்ற கைவல்லியமும் (மோட்சமும்) பரமானந்தமும் என்பதாகத் தெரிந்து கொள்வாய். சித்தத்தின் சலனம், நிலைபெறுதல் (சலனம் இன்றி ஸ்திரமாக நிற்றல்) இரண்டும் தியானம் இன்மை, தியானம் என்னும் இரண்டிற்கும் திடமான காரணங்கள் ஆகும். ஆதலால் திருசிய நாட்டமாய் எழும் மனதின் விதையான வாசனையை அறவே ஒழிப்பாய்.* **(5.7.8)**

**சிந்தனைவா தனையின்றித் திரமான மனத்தினையே தியானம் என்பர்**
**அந்தஉப சாந்தமு(ம்)அக் கேவலத்தன் மையும்என்றும் அதுவே ஆகும்**
**இந்தஉயர் பதப்பொருட்டு வாதனைசா லவும்நேர்மை எய்த வேண்டும்**
**சந்ததம்வா தனையில்லா மனம்தொழில்இல் லாப்பதத்தைச் சாரும் அத்தால்.**

**பொழிப்புரை:** *எண்ணங்களை (சங்கற்பம்) எழுப்பும் வாசனை இல்லாமல் திடமுற்ற மனதையே தியானம் என்று சொல்வர். அந்த உபசாந்த தன்மையும், கேவலத் தன்மையும் எப்பொழுதும் அது தானே ஆம். இந்த உயர் பதத்தை அடையும் பொருட்டு வாசனையானது எப்பொழுதும் சுருக்கத்தை அடைதல் வேண்டும். எப்பொழுதும் வாசனைகள் அழிந்த மனமானது தொழில் இல்லாப் பதத்தை அடையும். அதனால் அகர்த்தா பதத்தை அடையும்.* **(5.7.9)**

**நெருக்கமுறு வாசனையே நெஞ்சினது தொழில்திரமாம் நீங்காத் துன்பம்**
**பெருக்கவிடும் ஆதலினால் வாதனையை மிகநேர்மை பிறக்கச் செய்வாய்**
**வருக்கமுறு பலபொருளில் நான்எனும்பா வனைமனத்தால் மாற்றி எங்ஙன்**
**இருக்குதிஅங் ஙனம்இருப்பாய் வரையிலே மனையிலே எங்கே யேனும்.**

**பொழிப்புரை:** *கனமான வாசனையே மனத்தின் கர்த்தாத் தன்மையைத் திடமாக்கி நீங்காத துன்பத்தைப் பெருக்கி விடும். ஆதலால் வாசனையை எப்பொழுதும் சுருங்கச் செய்வாய். கூட்டமாகப் பொருந்திய பல பொருள்களில் நான் எனது என்ற பாவனையை மனதிலிருந்து அகற்றி மலையிலே வீட்டிலே மற்று எவ்விடத்திலே எவ்வாறு இருப்பாயோ அவ்வாறு இருப்பாய்.* **(5.7.10)**

**இல்லுறைவோர் சமாதான இதயத்தோர் அகங்கரமாம் ஏதம் தீர்ந்தோர்**
**புல்லுமனை ஏகாந்த வனம்ஆகும் கடைவீதி புக்கிக் காண்போர்**
**செல்லவர உலாவியும்பற் றாமையினால் கடைவழிச்செல் லாதார் போல்வார்**
**நல்லறிவு நிறைந்தோர்க்கும் அப்படியே காடு)ஒக்கும் நாடு தானே.**

**பொழிப்புரை:** *வீட்டில் வசிப்பவர் உபசாந்த (சமாதி) மனம் உடையவர், அகங்காரம் என்னும் குற்றம் தீர்ந்தவர் இத்தகையோருக்கு வசிக்கின்ற வீடே தனிமையான காடு ஆகும். கடைவீதிகளில் சென்று காண்பவர், போக்குவரவாகச் சுற்றியும் பற்றாமையால் கடைவீதிகளுக்குச் செல்லாதவரே ஆவர். மெய்ஞ்ஞானம் அடைந்தவர்க்கும் அப்படியே நகரமே காடு போன்றதாகும்.* **(5.7.11)**

**துயில்விழிப்பு சொலல்செலவு தொடர்ந்தாலும் அகமுகமாம் தொடர்பால் என்றும்**
**பயில்மனைஊர் நாடெல்லாம் பழுவம்போல் காண்பரே பரம சீலர்**
**செயிரிலா அகமுகத்தால் எல்லாம்ஆ காசமாய்த் தீரும் சித்தம்**
**உயிரனையாய் சீதளம்வந்(து) உள்நிறையில் சீதளமாம் உலகம் எல்லாம்.**

**பொழிப்புரை:** *உறங்கினாலும், விழித்தாலும், பேசினாலும், நடத்தல் முதலியன தொடர்ந்தாலும் உள்முக நாட்டம் எப்போதும் இருப்பதால் வசிக்கின்ற வீடு, ஊர், நாடு அனைத்தும் காடு போல நோக்கும் பெரியோரே பெரியதான ஒழுக்கம் உடையவர். சஞ்சலம் இல்லாத உள்முகப் பார்வையால் அனைத்தும் ஆகாச சூன்யமாய் மருவும் சித்தமானது உயிரைப் போன்ற இராகவனே! குளிர்ச்சி உண்டாகி உள்ளே நிறைந்திடில் உலகம் எல்லாம் குளிர்ச்சி ஆகும்.* **(5.7.12)**

**இதயமய லால்எரியில் உலகெலாம் காட்(டு)எரிபோல் எரிந்து தோன்றும்**
**உதயமுறும் உயிர்க்கெல்லாம் உள்ளிருப்ப தேபுறத்தும் உண்டாய் நிற்கும்**
**சுதைபயில்ஊர் புவிகால்விண்(டு) ஒருவரைநீள் நதிதிக்குச் சூழ்ந்த எல்லாம்**
**புதைத(ல்)உறும் உட்கரணத் தத்துவத்தின் பங்குகளாய்ப் புறத்தில் நிற்ப.**

**பொழிப்புரை:** *மனம் விஷய ஆசையால் தகிக்கப்பட்டால் பிரபஞ்சம் முழுவதும் காட்டுத் தீ போல எரிந்து தாகமாய்ப் புலப்படும். கர்மத்தின் படி பிறவியை அடைந்த சீவர்களுக்கு எல்லாம் உள்ளிருப்பதே வெளிப்புறத்தும் உண்டாகி நிலைபெறும். சொர்க்கலோகம், பூலோகம், காற்று, ஆகாயம், மலை, நீண்ட நதி, திசைகள் யாவையுமே புதைந்து கிடக்கும் அந்தக்கரணத்தினாலேயே பொருட்களின் அம்சங்களாக வெளியில் விளங்கி நிற்கும்.* **(5.7.13)**

**உள்ளுணர்வில் இன்புறுவோன் பொறிகளால் கருமங்கள் உய்ப்போ னாயும்**
**தள்ளுசுக துக்கவசம் சாராதோன் அனவரதம் சமாதி உற்றோன்**
**உள்ளுகின்ற தனைப்போல்எவ் வுயிரு(ம்)எனப் பிறர்பொருள்கள் ஓடே என்ன**
**எள்ளுபயத் தால்அன்றி இயல்பாலே கண்டானே எல்லாம் கண்டோன்.**

**பொழிப்புரை:** *உள்ளுணர்வில் (ஆத்மாவில்) இன்புறுவோன், இந்திரியங்களால் கருமங்களைச் செய்வோன், தள்ளத் தகுந்த இன்ப துன்ப வசமாக ஆகாதோன் எப்பொழுதும் சமாதி நிலையை அடைந்தவனே ஆவன். எண்ணுகின்ற தன்னைப் போலவே எல்லா உயிரும் என்றும். பிறருடைய பொருள்கள் ஓட்டுக்குச் சமம் என்றும், மேலோர்களது பயத்தால் அல்லது நிந்திப்பார்களே என்னும் பயத்தால் அல்லாமல் இயற்கையாகவே (சுபாவமாகவே) காண்பவன் எவனோ அவனே எல்லாவற்றையும் கண்டவன் ஆவன்.* **(5.7.14)**

**இன்(று)இறவு வந்தாலும் கற்பாந்தத்(து) எய்துகினும் இலங்கு ஞானி**
**கன்றியசேற்(று) உறுபொன்போல் களங்கமுறான் எல்லாமாய்க் கண்ணா யாறிப்**
**பொன்ற(ல்)அடி முடி(வு)இன்றி ஒன்றாய்இன் பத்(து)அளவாய்ப் பொலிதே சாகித்**
**துன்றிகாட் சிகள்இல்லாக் குறியுடைத்தாம் எனச்சுருதி சொல்லும் அன்றே.**

**பொழிப்புரை:** *இன்றைக்கே மரணம் வந்தாலும், பிரளய முடிவில் வந்தாலும் ஆன்ம மயமாகத் திகழும் ஞானி, நைந்த சேற்றில் விழுந்த தங்கம் கெடாதது போல வாட்டம் மகிழ்ச்சியை அடையான். எல்லாமாய், அறிவு வடிவமாய், காண்பவனாய் (திருக்குவாகி) நித்தியமாயும், முதல்-இடை-முடிவு ஒன்றும் இல்லாது ஏகமாயும், ஆனந்தம் உடையவனாய், பொலிகின்ற பிரகாசமாய், நெருங்கிய திருசிய (காணப்படுபவற்றின்) பற்று அற்றவனாயும் ஆகிய அடையாளங்கள் இருக்கும் என்று அனாதியான வேதங்கள் சொல்கின்றன.* **(5.7.15)**

**எல்லாம்என்(று) உரைத்த(து)எலாம் அறிவித்தற் பொருட்டேயாம் இசையச் சொன்ன**
**சொல்லால்என் வீண்அன்றே ஆதலினால் ஓம்என்று  துணிக வித்தை**
**நல்லாய்இங்(கு) இதற்குமுதல் நாள்உள(து)ஓர் இதிகாசம் நவிலக் கேட்பாய்**
**புல்லார்என் வேடர்குலச் சுரகுஅப்பே ரோன்சரிதை புதுமைத்(து) அன்றே.**

**பொழிப்புரை:** *முன் (சர்வம் ஆன்ம மயம், திருக்கு முதலிய விசேஷணங்களால்) கூறிய யாவும் மந்த அதிகாரிக்கு உணர்த்தும் பொருட்டே ஆகும். பொருந்தச் சொன்ன மொழியால் என்னே வீண் அல்லவே! ஆகையால் ஓம் (ஓங்காரம்) என்று நிச்சயித்துக் கொள்க. நல்லவனே! இங்கு இதற்கு முன்பு ஒரு காலத்தில் நடந்த நிகழ்வு ஒன்று உள்ளது. சொல்லக் கேட்பாய். இழிந்த செயலை உடையவரான வேடர் குல மன்னவன் ஆன சுரகு என்பவனது சரித்திரம் அதி அற்புதமாம்.* **(5.7.16)**

**இமகிரியின் கோடான கைலைவரை யினில்ஏம சடர்கள் என்னும்**
**அமர்வரிவில் வேட(ர்)உளர் அவர்க்(கு)அரசன் சுரகுவெனும் அசையா வீரன்**
**சமநிலையால் கோமுறையால் அருள்முனிவால் உலகநெறி சமைக்கும் நாளில்**
**நமதுவலி யால்உலகை நலிகுதுமேல் அவர்சோகம் நமக்கே அன்றோ.**

**பொழிப்புரை:** *இமய மலையின் சிகரத்தில் ஒரு பகுதியான கைலாச மலையில் ஹேமசடர்கள் என்று சொல்லப்பட்ட போர்புரியும் வில்லினைக் கையில் தாங்கிய வேடர்கள் உள்ளனர். அவர்களுக்கு அரசனாக இருப்பவன் சுரகு என்னும் திடமான வீரன். அவன் சமமான நோக்கினாலும், மனு நீதியாலும், அனுக்கிரகம் செய்வது, தண்டிப்பது இவற்றாலும் அரசு செய்து வரும் நாளில், நம்முடைய வலிமையால் உலகத்தாரைத் தண்டித்தால் அந்தத் தண்டனையால் அவர் படும் துயரம் நமக்கே அல்லவோ (சேரும்).* **(5.7.17)**

**அல்லாது தண்டமுறை இயற்றோமேல் உயிர்காப்(பு)அற்(று) அவத்தின் மாயும்**
**பொல்லா(து)இவ் அர(சு)என்றே ஊசலா(டு)உ ளத்தினனாய்ப் புந்தி நைந்தான்**
**மல்லாரும் புயத்தவன்பால் மாண்டவிய முனிவரலும் வணங்கிப் போற்றி**
**நல்லாய்உன் வரவினால் மிகவாழ்ந்தேன் நல்லோரின் நாட்டப் பட்டேன்.**

**பொழிப்புரை:** *அவ்வாறு இல்லாமல் மனு நீதிப்படி தண்டனை கொடுக்காவிட்டால் ஏனைய மக்கள் காப்பாற்றப்படாமல் வீணாக அழிவை அடைவர். ஆதலால் இந்த அரசு பரிபாலனம் கொடியதே என்று ஊஞ்சல் போல் சலிக்கும் மனம் உடையவன் ஆகி புத்தியில் வேதனை அடைந்தான். வலிமை பொருந்திய தோள் உடைய அவனிடம் மாண்டவ்ய முனிவர் வருகை புரியவும், வணங்கிப் போற்றி, பரம சாந்த மூர்த்தியே! தங்களின் வருகையால் பெருவாழ்வு பெற்றேன். நல்லவர்களுள் ஒருவனாய்க் கருதப்பட்டேன்.* **(5.7.18)**

**தருமமுழு தையும்உணர்ந்த பகவநீ நெடுங்காலம் தளர்வு தீர்ந்தாய்**
**அருவினையேன் ஐயப்பா(டு) அறுத்தியால் ஐயம்போல் அரந்தை உண்டோ**
**இருநிலத்(து)என் கோல்கீழோர் என்கருணை முனிவுகளால் இன்ப துன்பம்**
**மருவுகின்ற கவலையைக்கண்(டு) அரியேற்றின் முன்கரிபோல் மறுகு கின்றேன்.**

**பொழிப்புரை:** *சகல நீதிகளையும் தருமங்களையும் உணர்ந்தவரான பகவானே! தேவரீர் நெடுங்காலம் சொரூபத்தில் அமைதி அடைந்து காணப்படுகிறீர். விவகாரம் செய்வதில் சந்தேகம் கொண்டிருக்கும் எனது சந்தேகத்தை நீக்கி அருள்வீர். சந்தேகத்தைக் காட்டிலும் துன்பம் வேறு உண்டோ? இந்தப் பெரிய பூமியில் எனது ஆட்சியின் கீழ் உள்ளோர் எனது கருணையாலும், தண்டனையாலும் இன்ப துன்பம் அடைவதைக் கண்டு ஆண் சிங்கத்தின் முன்னர் யானையைப் போல் வாட்டம் அடைந்திருக்கிறேன்.* **(5.7.19)**

**அருணன்வெயில் போல்எங்கும் நிறைசமம்என் மதியிலே அணுகு மாறு**
**கருணையினால் உணர்த்திஎனும் காவலற்கு மாண்டவியன் கழறு கிற்பான்**
**பொருவறுதன் விசாரத்தால் இமைப்போதில் மனஅழுக்குப் போகா நிற்கும்**
**வருசரற்கா லம்தோன்றும் மாத்திரத்து மூடுபனி மாய்வ தேபோல்.**

**பொழிப்புரை:** *சூரிய கிரணம் போன்று சமத்தன்மை எவ்விடத்தும் என்னுடைய புத்தியில் பொருந்தும் வண்ணம் கருணை கொண்டு அருள்செய்ய வேண்டும் என்று வேண்டிய சுரகு மன்னவனுக்கு மாண்டவிய முனிவர் சொல்லத் தொடங்கினார். உவமை*

*இல்லாத தன் விசாரத்தால் (ஆத்ம அனாத்ம ஆராய்ச்சியால்) கணப் பொழுதில் மனதில் உள்ள அஞ்ஞான சந்தேக விபரீதங்கள் தொலைந்து போகும், சரற் காலம் தோன்றிய உடனே மூடிக்கொண்டிருந்த பனியானது நீங்குவதே போல.* **(5.7.20)**

**யான்ஆர்இச் சகம்எங்ஙன் பிறப்(பு)இறப்(பு)எங் ஙனம்என்றே இதயத்(து) உள்ளே**
**ஆனாமல் இப்படியே ஆராயின் மகத்துவமே அடைதி சாலத்**
**தானான சுபாவனாய் இருந்துளநின் விசாரத்தால் தானே நெஞ்சம்**
**நீநாடும் படிதோன்றித் தன்னுருவிட்(டு) இளைப்பாறித் துன்பம் நீங்கும்.**

**பொழிப்புரை:** *நான் யார்? இந்த உலகம் எவ்வாறு உண்டானது? பிறப்பு இறப்பு எவ்வாறு உண்டாகின்றது? என்பதாக மனதினுள் இடைவிடாமல் இப்படியே நெடுங்காலம் விசாரம் செய்தால் பெருமையே அடைவாய். தன்னுடைய வடிவமாகவே (சொரூபமாகவே) இருக்கின்ற உனது விசாரத்தால் மனமானது நீ கருதியவாறே தோன்றிய தன் வடிவத்தை விட்டு இளைப்பாறித் துன்பம் இல்லாததாகும்.* **(5.7.21)**

**வெம்புதல்போய்த் தண்ணென்ற உன்மனதுக்(கு) இவ்வுலகின் வியாபா ரங்கள்**
**செம்புகர்வே ழத்தினுக்(கு)ஆன் குளப்படிபோல் தோன்றுமால் தீன நெஞ்சுக்(கு)**
**அம்புவியில் தொழில்சிறிதே ஆகினும்நீந் திடஅரிதாம் ஆவின் பாதப்**
**பைம்புனலும் கிழக்கொதுகுக்(கு) எல்லைகரை காணாத பரவை அன்றோ.**

**பொழிப்புரை:** *(துன்பம் இல்லாமல் போகுமாயின் மனதின் இருப்பே போய்விடுகின்றதா எனின் இல்லை, மனம் இருக்கவே களங்கம் மட்டும் களைதல் வேண்டும் எனக் கூறுகின்றார்) மூன்று வகைத் துன்பங்களும் நீங்கி குளிர்ச்சி பொருந்தி இருக்கின்ற உனது சத்துவ மனதுக்கு இந்த உலகில் செய்யத் தக்க காரியங்கள் சிவந்த புள்ளிகளை உடைய யானைக்குப் பசுவின் பாதத் தடம் போல் தோன்றும். தீனமான மனதுக்கு இந்த உலகில் காரியம் சிறிதே ஆகினும் கடத்தற்கு அரிதாம். பசுவின் காலடி சிறு தண்ணீரும் இறகு ஒடிந்த கிழ (வயதான) கொசுவுக்குக் கரை காணாத விரிந்த கடல் அல்லவோ!* **(5.7.22)**

**எத்தனைஎத் தனைநீத்தாய் அகிலத்தைப் பரஞ்சுடராய் எறிக்கும் சோதி**
**அத்தனைஅத் தனைதோன்றும் எந்நாள்மட்(டு) அனைத்தும்விடாய் அந்நாள் மட்டும்**
**தத்துவமாம் பொருள்எய்தா சகலமும்போ னால்சேடம் தானாம் சித்தாம்**
**தொத்தறவேற் றுமைஎல்லாம் போகாதேல் சமமான சோதி தோன்றா.**

**பொழிப்புரை:** *காண்பவற்றை (திருசியத்தை) எவ்வளவு எவ்வளவு விட்டாயோ அவ்வளவு அவ்வளவு சுயம் சோதி வடிவ பரமாத்ம சைதன்னியம் தோன்றும். எவ்வளவு காலம் வரையில் அவற்றை விடமாட்டாயோ அவ்வளவு காலம் வரையில் உண்மையான ஆத்மா தோன்றாதாம். யாவும் ஒழிந்தால் சேடித்து (எஞ்சி) நிற்பது ஆத்ம வடிவமே ஆகும். மனமானது பேத பாவனை எல்லாம் (திருசியங்களில் எல்லாம் பற்றின்றி) அகலாதேல் சம வடிவம் உணரப்பட முடியாதாம்.* **(5.7.23)**

**பேதமுறு பொருள்ஒருமை தோன்றாதேல் தன்னைத்தான் பெறுவது) எங்கே**
**ஆதலினால் தனைப்பெறுதல் பொருட்டாக அனைத்தினையும் அகற்றல் வேண்டும்**
**ஏதமற அனைத்தையும்விட் டாய்என்னில் சேடித்த(து) இறவா வீடாம்**
**மேதகைய பதம்அதுவாம் சுரகுவெனும் பெயர்கீர்த்தி வேடர் வேந்தே.**

**பொழிப்புரை:** *பேதமாக இருக்கின்ற பிறவற்றை விடாத வரையில் சாமான்யமான பொருளும் கூட அடையப் பெற இயலாது என்றால் தானாகிய ஆத்மாவைப் பெறுவது எங்கே? ஆகையால் தன்னை அடைவதற்காக (ஆன்ம லாப நிமித்தமாக) எல்லாவற்றையும் நன்கு தியாகம் செய்தல் வேண்டும். குற்றமற அனைத்தையும் விட்டு விட்டாய் எனில் எஞ்சி நிற்பது நிரந்தரமான மோட்சமாம். மேன்மை வாய்ந்த பதம் அதுவே ஆகும். சுரகு என்ற பெயர் கொண்ட புகழ்வாய்ந்த வேடர்களின் அரசனே!* **(5.7.24)**

**(வேறு)**

**சகல காரண காரிய பரம்பரை தன்மையாம் சகம்மேவி**
**மிகவ ளர்ந்தவத் துவின்மல வாதனை மனத்தினை மிகநீக்கித்**
**திகழும் அங்கமாம் அதையும்மேல் விடுதியால் தீதறு நலன்உண்டாம்**
**புகழ்ந ராதிப என்றுதன் னிடம்உறப் போயினன் தவப்பாலன்.**

**பொழிப்புரை:** *சகல காரண காரிய பரம்பரையை இயல்பாக உடைய பிரபஞ்சப் பொருள்களில் இது இன்பத்தைத் தரக்கூடியது என்று விஷயங்களில் பொருந்தி அதிகமாக விருத்தி அடைந்த அசுத்த வாசனை மனத்தினை அஞ்ஞானத்தோடு நீக்கி, விளங்குகின்ற மனோ பேதத்தையும் ஒழிப்பாய் ஆகில் துயரமற்ற பரமானந்தம் உண்டாகும். புகழ் உடைய நரேந்திரனே! என்று கூறி, தன்னுடைய இடத்திற்குச் சென்றனன் மாண்டவிய முனிவன்.* **(5.7.25)**

**முனிஅ கன்றபின் எயினர்கோன் தனியிடம் முந்திநன் மதியாலே**
**அனிசம் நான்என்பது) ஆர்என நாடினன் அடிமுதல் முடிஈறாம்**
**தனிஉ டம்பைநான் என்பது புதுமையாம் சடவுடல் காண்கேன்நான்**
**துனிசெய் இவ்வுடல் அசேதனம் தசைமுதல் துன்னு(ம்)ஆ தலி(ன்)அன்றோ.**

**பொழிப்புரை:** *மாண்டவிய முனிவர் உபதேசம் செய்துவிட்டுச் சென்ற பின்னர், வேடர் அரசன் தனி இடத்தை அடைந்து தெளிந்த ஒருநிலைப்பட்ட புத்தியாலே நிரந்தரம் நான் என்பதாகத் தோற்றுவது யார் என்று ஆராய்ந்தான். பாதம் முதல் தலை வரையில் இந்த உடலை நான் என்று சொல்வது ஆச்சிரியமானது. சடமாகிய இந்த உடலை நான் காண்கின்றேன் (உணர்கின்றேன்). தசை, இரத்தம், மாமிசம் முதலானவை நிறைந்து, துன்பம் தரும் இந்த உடல் அறிவற்றது அல்லவா.* **(5.7.26)**

**கரணம் ஈரைந்தும் அன்னியம் சடம்எனும் கணக்கினால் நான்அன்(று)இத்**
**திரள்ள னக்(கு)இல உடல்முதல் நான்அலன் சேட(ம்)ஏ(து) எனநோக்கில்**
**விரவு சீவனே சேடமாம் இன்னதும் வேறொன்றால் தெரிகின்ற(து)**
**உரவி தானவே றொன்றினால் தெரியு(ம்)ஈ(து) உயர்ந்ததத் துவம்ஆகா.**

**பொழிப்புரை:** *கர்மேந்திரியம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும் அன்னியமாக உள்ளது, சடமானது என்னும் யூகத்தால் நான் அல்ல. இக்கூட்டமும் என்னுடையது அல்ல. உடல் முதலாக நான் அல்லன். எஞ்சி நிற்பது எதுவென்று பார்க்கில் இவற்றோடு கலந்த சீவனே எஞ்சி உள்ளதாம். இந்த சீவனும் வேறொன்றினால் அறியப்படுகின்றது. ஞான வடிவமான ஆன்மாவினால் அறியப்படுகின்ற இந்த சீவன் மேலான வஸ்துவாக ஆக மாட்டான்.* **(5.7.27)**

தெரிவ தாகிய இதனையும் அகற்றுவன் தெரிபொருள் நான்ஆமோ
பெரிது சேடமாய் விகற்பம்(ம்)அற்(று) அமலமாம் பேரறி(வு) யான்ஆகும்
அரிஅ யன்சிவன் இந்திரன் அந்தகன் ஆதியாம் இடந்தோறும்
சுரிகொள் முத்தினுள் நூல்என நிற்குமால் தோன்று(ம்)இவ் உயர்போதம்.

**பொழிப்புரை:** *அறியப்படுவதாகிய இந்த சீவனையும் நான் அல்ல என்று விலக்குவேன். அறியப்பட்ட பொருள் நான் ஆவேனோ? எப்பொழுதும் எஞ்சி நிற்கும் விகற்பம் இல்லாத நிர்மல வடிவமான பெரும் சித்து வடிவம் நான் ஆவேன். விஷ்ணு, அயன், ருத்திரன், இந்திரன், யமன் முதலானவர்களின் தேகந்தோறும் துவாரம் உடைய முத்தின் உள்ளே நூலைப் போல ஊடுருவி நிற்கும் பிரகாசிக்கின்ற இந்த மேலான சேதனம்.* **(5.7.28)**

பகவன் ஆகு(ம்)இவ் ஆத்தும தத்துவம் பரமமாம் சிற்சத்தி
சகநி கழ்ச்சியாய் நோய்இன்றி வெருவுறும் தனிவடி(வு) உடைத்தாகிக்
ககுபம் முற்றையும் விழுங்கிஎப் பொருளினும் கலந்துநுண் ணியதாகி
மிகு(ம்)அ பாவபா வங்க(ள்)அற்(று) அயன்உறை வீடள(வு) உளதாகி

**பொழிப்புரை:** *பகவான் ஆகிய இந்த ஆத்ம தத்துவம் நிர்மலமாகிய சிற் சத்தியாம். திருசிய வியாதி இன்றி அதிகாரிகள் அல்லாதோர் பயப்படத்தக்க தனி வடிவம் உடையதாகி, திசைகள் முற்றும் வியாபித்து, எல்லாப் பொருள்களிலும் விரவி, சூக்குமம் ஆகி, உள்ளதும் இல்லதுமாய் நான்முகன் உலகம் வரை இருப்பதாகி* **(5.7.29)**

சத்தி யாவுக்கும் உறைவிட மாம்இது தனித்தனிச் சத்தாகிப்
பத்தி யாகிஇச் சகத்தினில் காண்பன யாவையும் பலவாகச்
சித்(து)அ சைந்துள விசாலமாம் அல்லது சிறிதும்வே(று) இலதாகும்
தொத்து பற்(று)இன்றிக் காண்பது(து)அற்(று) எழுபவம் தொடர்மயக் கமும்அற்றே.

**பொழிப்புரை:** *எல்லா சத்திகளுக்கும் இருப்பிடமாகும் இது தனித் தனியாக (வேறு வேறான) சத்தியாகி வரிசையாக இவ்வுலகத்தில் காண்பன எல்லாமாகப் பலவாக சித்தின் சலன மாத்திர விரிவே அல்லாமல் சற்றும் வேறொன்று இல்லை. வாசனைகள் இன்றி விஷயமும் இன்றி (திருசியம் இல்லாமல்) பிறவி எழுவதன் தொடர்ச்சிக்கான மயக்கமும் ஒழிந்து.* **(5.7.30)**

சுழுத்தி யில்திரம் உற்றவன் தொழில்எனத் துகள்அறு சமன்ஆகி
அழுத்த மாகிய ஆத்தும தத்துவத்(து) அமர்ந்தனன் எனத்தீர்ந்து
விழுத்த கும்பதம் எய்தினன் விவேகத்தின் மெய்ம்மைநிச் சயத்தாலே
வழுத்(து)அ ருந்தவக் கவுசிகன் விப்பிர மரபினை அடைந்தென்ன.

**பொழிப்புரை:** *திடமாகச் சுழுத்தியில் ஆழ்ந்தவன் விவகாரம் அற்று இருப்பது போல் குற்றமில்லாத சமம் உடையதாகி அதி திடமாகவே ஆத்ம தத்துவத்தில் பொருந்தி இருப்பேன் என்று நிச்சயம் செய்து, பரிபூரண ஆனந்த பதத்தை அடைந்தனன். விவேகத்தின் உண்மை நிச்சயத்தால் யாவரும் பூசிக்கும் தவத்தினை உடைய விசுவாமித்திரர் பிராமண வம்சத்தை அடைந்ததே போல.* **(5.7.31)**

**வரகு ணங்களாம் அனைத்து(ம்)இல் துயில்பவன் மனத்தொழில் நிகராகி**
**சுரகு என்பவன் அசை(வு)அறு சிகையினால் துலங்குறு சுடர்ஒத்தான்**
**விரவு நல்லருள் அருள்இன்மை விருப்பொடு வெறுப்புமச் சரம்தொறந்தம்**
**பரவு நன்மதி மூட(ம்)என்(று) இனையவும் பயில்வற நிகழ்வுற்றான்.**

**பொழிப்புரை:** *உயர்ந்த குணங்கள் யாவும் இல்லாமல் உறங்குபவன் மன விவகாரம் ஏதும் இல்லாதது போல, சுரகு என்ற அரசன் சலனம் இல்லாது சுடர் விட்டுப் பிரகாசிக்கின்ற தீபத்தைப் போல இருந்தான். இதயத்தில் பொருந்தும் தயை, தயை இல்லாமை, விருப்பு வெறுப்பு, பொறாமை, பரவுகின்ற நல்ல புத்தி, மூடம் முதலான துவந்துவம் (இருமைகள்) இல்லாமல் (தோற்றாமல்) இருந்தான்.* **(5.7.32)**

**(வேறு)**

**ஒன்றாய் உணர்ந்த சுரகுப் பெயர்உத் தமற்கும்**
**பன்னா தன்எனும் பெயர்ப்பார்த் திபமா முனிக்கும்**
**நன்றா னவன்பால் வருநன்மை நயந்து கேட்பாய்**
**குன்றார் புயத்தாய் எனமா தவன்கூறல் உற்றான்.**

**பொழிப்புரை:** *(விவகாரத்து உழலும் மனம் எவ்வகையாலே ஏக சமாதானத்தை அடையும் அதுதான் எவ்வகைத்தாம் என்று இராம பிரான் கேட்கவும் வசிட்ட முனிவர் பதில் சொல்கிறார்) அத்வைத (இரண்டற்ற) சொரூபமே தான் என்று அறிந்த சுரகு என்ற பெயருடைய உத்தமருக்கும், பர்னாதர் (பர்ன அசனம் = பர்னம் = இலை, சருகு புசித்தலால் பர்னாதர்) எனப்பெயர் உடைய ராஜ ரிஷிக்கும் சாந்தி அல்லது நன்மையை அளிக்கும் படியான பேரன்பினால் நடைபெற்ற உரையாடலை அன்புடன் கேட்பாய், மலைபோன்ற திண்ணிய தோள்களை உடைய இராகவனே! என்று வசிட்ட முனிவர் கூறத் தொடங்கினார்.* **(5.7.33)**

**பாரக்கர் குலப்பரிகப் பெயர்பாரின் வேந்தாம்**
**வீரக் கழலோன் சுரகுப் பெயர்வேந்தன் நண்பன்**
**ஈரக் கனமாரி மறுத்தலில் யாரும் துஞ்சக்**
**கோரக் கனல்மண்டுதல் கண்டு குலைந்து நொந்தான்.**

**பொழிப்புரை:** *(பன்னாத ரிஷியின் சரித்திரத்தைக் கூறல்) இவ்வுலகில் பாரசீக மக்களுக்கு அரசனாகப் பரிகன் என்னும் ஒரு மன்னவன் இருந்தான். வீரக் கழல் அணிந்தவன். சுரகு என்ற பெயருடைய முன்பு சொன்ன அந்த அரசனின் நண்பன். மேகங்கள் நீர்கொண்டு மழை பெய்யாமல் போகவே எவரும் மரணம் அடைய, கொடிய நெருப்பு நெருங்குவதைக் கண்டு சிதைந்து துன்புற்றான்.* **(5.7.34)**

இன்னாதன நாடுவிட்(டு) ஏகி வனத்தில் எய்தி
அன்(ன) ஆதரம் போய்த்தவம் செய்(து)அவிழ் பன்னம் ஊணாய்ப்
பன்னாத நாமம் படைத்துத் தவப்பான்மை யாலே
நன்னாதலும் பெற்றனன் நற்றவம் ஒப்ப(து) உண்டோ.

**பொழிப்புரை:** *துயர் மயமாகி விட்ட தனது நாட்டினை விட்டு நீங்கிக் காட்டினை அடைந்து, அன்ன ஆகாரம் விடுத்து, உதிர்ந்த சருகையே ஆகாரமாகக் கொண்டு, பர்ணாத ரிஷி என்ற காரணப்பெயர் பெற்று, அருந்தவம் புரிந்து, அத்தவத்தின் பெருமையாலே ஞானி ஆனான். நல்ல தவத்துக்கு நிகரானது ஒன்று உண்டோ?*
**(5.7.35)**

ஒருமூவுல(கு) என்னும் மடத்(து)ஒரு மித்(து) இருந்தான்
பொருள்மேவு கின்ற சுரகுப் பெயர்பூபன் தன்பால்
வருவான் எதிர்தோன்றலும் மற்றவ(ன்)அன் போ(டு) எய்தி
இருவோரும் அன்புற்(று) இருந்(து)இன்னன பேசலுற்றார்.

**பொழிப்புரை:** *ஒப்பற்ற மூவுலகம் என்னும் மடத்தில் விருப்பப்படி சஞ்சாரம் செய்து கொண்டிருந்தான். சகல செல்வங்களும் பொருந்தி நின்ற சுரகு என்னும் மன்னவன் தனது அரண்மனையை நோக்கி வருகின்ற பர்ணாத ரிஷி எதிர் வந்து நிற்கவும், சுரகு மன்னவன் எதிர்கொண்டு அழைத்து வந்து, இருவரும் ஒருவருக்கு ஒருவர் பேரன்புடன் பூசித்து ஆசனத்தில் அமர்ந்து இவ்வாறு உரையாடத் தொடங்கினர்.* **(5.7.36)**

நினைஇப் பொழுது எய்தலின் நீங்கரும் இன்பம் உற்று
வினையற்ற(து) என்ற சுரகுப் பெயர் வேந்தை நோக்கி
உனையுற்று மாண்டவ்வியன் ஓதிய ஞானம் ஒப்பத்
தனைஉய்க்கும் மெய்ம்மைப் பதம்சார்ந்தனன் யானும் என்னா.

**பொழிப்புரை:** *தங்களை இப்போது அடைந்ததால் நீங்கவொண்ணாத ஆனந்தம் அடைந்து பாவமும் அழிந்தது என்று கூறிய சுரகுப் பெயர் கொண்ட அரசனை நோக்கித் தங்களை அடைந்து மாண்டவ்ய முனிவர் உபதேசித்த ஞானத்திற்கு ஒப்ப, தன்னைக் காக்கும் உண்மையான பதத்தை யானும் அடைந்தனன் என்றான்.* **(5.7.37)**

மிகத்தெளிந்து கெம்பீரமாய் சமமதாம் விழியால்
இகத்(து) உறும்தொழில் மன்னவ இயற்றுதி கொல்லோ
பகுத்த காலத்தை அறிவுறு நினது பாவனைதான்
தொகுத்த ஆதியும் வியாதியும் தொடர்கிலை கொல்லோ.

**பொழிப்புரை:** *மிகவும் தெளிந்து, அசையாத வீரத் தன்மையுடன் சமத் தன்மை உடையதான திருஷ்டியுடன் இவ்வுலக அரச விவகாரங்களைச் சிறப்பாக அரசரே! செய்கின்றீரோ? விதித்த காலங்களில் செய்ய வேண்டிய காரியங்களில் தலைப்பட்டு நின்ற தங்களுடைய பாவனையானது அதனால் ஏற்பட்ட மனோ வியாதியையும், தூல வியாதியையும் அடையாமல் இருக்கின்றதா?* **(5.7.38)**

அடையும் போ(து)இனி தாகிய போகத்தில் அழுந்தா(து)
இடைநிலாய் கொலோ சங்கற்பம் அற்(று)இளைப் பாறித்
தடைஇல் சாந்தமாய் முத்தியாய்ச் சலனம் ஒன்றில்லா
நடைபயின்(று) உயர்சமா தியைநண்ணினை கொல்லோ.

**பொழிப்புரை:** *கிடைத்த காலத்தில் இன்ப மயமாய் அழுத்தி வைக்கும் போகங்களில் மூழ்காமல் நடுநிலையாய் சாட்சியாய் இருந்து விவகாரம் செய்கின்றீரோ? பிராரப்த வினைப்படி இவ்வுலக அரச விவகாரங்களை இன்ன காலத்தில் இப்படி இப்படிச் செய்யத் தக்கது என விதித்த காலத்தைச் சங்கற்பம் இல்லாமல் இளைப்பாறுவதற்கு இடமாயும் தடைகள் அற்ற விட்சேப துக்கங்களின் மேலான உப சமமாயும் பயிற்சியைப் பழகி மேலான சமாதி நிலையை அடைந்தீரோ?* **(5.7.39)**

வெறி(து)இருக்கினும் தொழிலினை மேவினும் விடாமல்
அறிஞன் என்றுதான் சமாதி விட்டவன் ஆகும்
செறியும் ஞானம்சேர் மனத்தினர் சகத்தொழில் செயினும்
பிறி(வு)இல் தத்துவ நிட்டராய்ச் சமாதியில் பெயரார்.

**பொழிப்புரை:** *(சுரகு கூறல்) வெறுமனே சும்மா இருந்த போதிலும், இடைவிடாமல் விவகாரத்தைச் செய்த போதிலும் சொரூபத்தை உணர்ந்தவன் எப்பொழுது தான் சமாதியை விட்டு ஒழித்தவன் ஆவான்? பரிபூரண ஞானத்தினை உடைய மனத்தோர் உலக விவகாரத்தைச் செய்தாலும், பேதம் இல்லாத தத்துவ நிட்டை உடையவர் ஆகி சமாதியிலிருந்தும் அகலார்.* **(5.7.40)**

பிரம அஞ்சலி யுடன்பது(ம) ஆதனம் பெறினும்
விர(வு)அ சாந்தர்கள் சமாதியில் மேவலர் ஆசைத்
திரண பாவகன் ஆகிய சித்(து)உணர்(வு) ஒன்றே
வரசமாதியாம் வெறி(து)இருக்கும் அ(து)அன்று வள்ளால்.

**பொழிப்புரை:** *சச்சிதானந்த வடிவ பிரம்மத்தின் வணக்கத்துடன் பத்மாசனத்தைப் பெற்றாலும் சாந்தி இல்லாதவர்கள் அமைதியை அடையமாட்டார். ஆசையாகிய துரும்பைத் தகிக்கும் அக்கினியாகிய தத்துவ போதம் (ஆன்ம ஞானம்) ஒன்றே வள்ளலே! மேலான சமாதியாம். வெறுமனே சும்மாஇருக்கும் அது அல்ல.* **(5.7.41)**

ஒருமையாய் என்றும் மனம்இறந்(து) உண்மையை உணரில்
வரசமா தியாம் சொல்லினார் மனத்தினில் நிறைந்தோர்
மருள்இல் மெய்ம்மையோர் மதிதம்மை மறக்கிலா சிறிதும்
தரும்தொழில் திறம் மறக்கிலாக் காலமே சமமாம்.

**பொழிப்புரை:** *அத்வைதமாய் என்றும் மனம் இல்லாததாய் உள்ள பொருளை உள்ளபடி உணர்ந்தால் உயர்ந்த சமாதி என்ற அர்த்தத்தால் பூரணப் பிரக்ஞை நிறைந்த பெரியோர் சொல்லியுள்ளனர். (இரண்டற்று ஏகமாய், மனம் இல்லாத நிலையில், ஆத்மாவை உணர்ந்து நிற்றலே சமாதி என்பதாம்) மயக்கம் இல்லாத உண்மை உணர்வினை உடையவர் தம் புத்தியானது ஆத்ம சொரூபத்தைச் சற்றும் மறக்காது.*

*காலமானது தான் தரும் விநாடி, நிமிடம் இவற்றை மறக்காதது போல பிரக்ஞை உடையவர் மதியும் ஆத்மாவை மறக்காது.* **(5.7.42)**

**நெறிகொள் காற்றுதன் கதியினை மறப்பிலா நெறிபோல்**
**அறிஞர் புந்தி வேறு)அறிவதில் அறிவையே அயரா**
**பிறிவில் புந்தியோர் ஒருமையோர் சமத்துவப் பெரியோர்**
**செறிதொழில் பிறி(வு)அகற்றினோர் தற்பதம் பெற்றோர்.**

**பொழிப்புரை:** *சஞ்சல கதிகொண்ட வாயுவானது தன்னுடைய வீசும் நடையை மறக்க மாட்டாதது போல பிரக்ஞை உடையவரின் புத்தியானது பேதத்தை நாடாது, சின் மாத்திரப் பொருளை மறக்கவே மாட்டாது. (சொரூபமாய் இருப்பதே அன்றி நழுவிடாது) நீக்கம் இன்றிச் சமாதி உடையோர் சமபாவனை உடைய பெரியோர் பொருந்துகின்ற காரியங்களில் பேத பாவனையை ஒழித்தோர் தற்பதத்தை அடைந்தவர் ஆவர்.* **(5.7.43)**

**ஆதலால் பன்மை ஒருமையாம் உடல்தொழில் அனைத்தில்**
**போது செய்கிலா உத்தம வாக்கினால் பொலிந்த**
**சேதனத் தவர்எங்(கு) உளர் சித்திர மாகப்**
**பேதம் அற்(று)அறி(வு) அறிந்தனை தற்பதம் பெற்றாய்.**

**பொழிப்புரை:** *ஆதலால் பலவாகவும், ஒன்றாகவும் இருக்கின்ற தேகத்தின் செயல்கள் அனைத்திலும் காலம் போக்காத உத்தம வாக்கியத்தினால் பிரகாசித்த அறிவை உடையவர்கள் எவ்விடத்தில் இருக்கின்றார்கள்? அதிசயமாகப் பேதம் இல்லாமல் அறிவை அறிந்தாய், பிரம்ம பதத்தை அடைந்தாய்.* **(5.7.44)**

**உள்ளூரக் குளிர்ந்தனை உவாமதி எனஉள்ளத்(து)**
**உள்அகங் கரத் துயர்அறத் துரிசற நிறைந்தோய்**
**தள்ளலா நிலைபெற்(று) எங்கும் விளங்குதி தானே**
**தெள்ளியோய் என்ற பரிகற்குச் சுரகு மேற் செப்பும்.**

**பொழிப்புரை:** *பூரண சந்திரனைப் போல உள்ளே குளிர்ச்சி அடைந்தாய். உள்ளத்தில் அகங்காரம் என்னும் துக்கம் கெடவும், களங்கம் அற்றுப் போகவும் பூரணம் ஆனாய். நீங்காத ஆத்ம நிச்சயத்தை அடைந்து, தானே எவ்விடத்தும் சுயமாகப் பிரகாசிக்கின்றாய். தெளிவுடைய சுரகுவே என்று பரிகர் என்பவர்க்குச் சுரகு ராசன் மேற்கொண்டு சொல்வான்.* **(5.7.45)**

**பரந்த சொற்களால் பயன்என்கொல் பயன்எலாம் பாறி**
**நிரந்தரம் சமமாய் மனம்தன்னுளே நிகழ்ந்து**
**சுரந்த இன்பமாய் நிகரிலா ஒருவிழி தோன்றித்**
**திரந்தனில் தெரிகின்றதால் என்றனன் தெளிந்தோன்.**

**பொழிப்புரை:** *பலவாக விரித்து உரைத்த வசனங்களால் பயன் என்ன? பயன்களை எல்லாம் விடுத்து, எப்போதும் சமமாக மனமானது தனக்குள் பிரகாசிக்க உண்டான பிரம்மானந்தமாய் ஒப்பற்ற ஒரு ஞான திருஷ்டி உண்டாய் திடமாக ஆத்ம ஞானம் பிரகாசிக்கின்றது என்றான் தெளிந்த சுரகு.* **(5.7.46)**

**(உபசாந்திப் பிரகரணத்தில் சுரகு கதை முற்றும்)**

# (viii) பாசவிலாசர் கதை

*முன்பு சித்த அமைதியே சீவன் முக்த நிலையின் எல்லை எனப்பட்டது. இப்போது சகல துயரங்களுக்கும் காரணம் அறியாமையுடன் வாழுதல், அந்த அறியாமை அகல்வதே பரமானந்தத்திற்குக் காரணம் ஆகும் என்று இந்தக் கதை துவக்கப்படுகிறது.*

**(எழுசீர் ஆசிரிய விருத்தம்)**

**இத்திறம் சுரகு பரிக(ன்)என்(று) இசைத்த இருவரும் சகத்(து)ஒழுங்(கு) எண்ணிப்**
**பத்திசெய்(து) ஒருவர்க்(கு) ஒருவர்பூ சித்துப் பரிந்துதம் பணிதலை நின்றார்**
**அத்தியாத் துமமே நித்தமும் வடிவாய் அகமுக மாய்மகிழ்(வு) எய்திச்**
**சித்தினை விடாமல் அனுபவிப் பவர்க்குச் சிறிது(ம்)ஓர் ஆகுலம் சேரா.**

**பொழிப்புரை:** *இவ்வண்ணம் சுரகு, பரிகன் என்று சொல்லப்பட்ட இருவரும் பிரபஞ்சத்தின் முறைமையை விசாரித்து அன்பு செய்து ஒருவருக்கு ஒருவர் பூசித்துக் கொண்டு பிரிந்து சென்று மகிழ்வுடன் தங்கள் தங்கள் கடமைகளைச் செய்தனர். எப்போதும் அத்தியாத்ம மயமாய், உள்முக நாட்டம் உடையராகி, சந்தோஷம் அடைந்து, சித்தினை விடாமல் அனுபவிப்பவர்க்கு மன சோகம் சிறிதும் அணுகாது.* **(5.8.1)**

**ஆசை வன்பாசத் திரளினால் கட்(டு)உண்(டு) அரும்பிணி ஈக்கடிக்(கு) அணுங்கி**
**ஏசுறு போகக் கதைகளால் மொத்துண்(டு) இச்சைமுள் கோலினால் உலைந்து**
**காசுறு கருமச் சேற்றிலே அழுந்திக் கடும்சகக் காட்டிலே சுழன்று**
**வீசுமா மோகத் தளிர்நிழல் துயிலும் வீரனே சீவனாம் எருது.**

**பொழிப்புரை:** *மகா வலிமையுடைய வீரனே! சீவனாகிய எருது கொடிய ஆசாபாசக் கயிற்றினால் கட்டப்பட்டு போக்குதற்கு அரிய நோய்களினால் ஈக்களின் கடிக்கு நைந்து நிந்திக்கக்கூடிய போகங்களாகிய தடிகளால் அடிபட்டு இச்சையாகிற தார்க் கம்பினால் குத்தப்பட்டு வருந்தித் தோஷம் பொருந்திய தீய கருமம், நல்ல கருமம் ஆகிய சேற்றிலே புரண்டு மூழ்கிக் கொடிய பிரபஞ்சமாகிய காட்டில் சுழன்று திரிந்து வீசுகின்ற மகா மோகமாகிய தளிரின் நிழலில் உறங்கும்.* **(5.8.2)**

**மேவுறு துன்பப் பெருஞ்சுமை சுமந்து மீட்சிபோக்(கு) இவைஉடல் புண்ணாய்**
**ஈவறு பிறவிக் குழியில்வீழ் சீவ எருதினை இக்குழி நின்றும்**
**ஓவல்இல் முயல்வால் எடுப்பதே வலியாம் உயர்ந்தஞா னிகள்உற(வு) உளதேல்**
**நாவிகர் நாவாய் தருவபோல் ஊக நல்குவர் பவக்கடல் கடக்க.**

**பொழிப்புரை:** *கருமத்தால் அடையப்பெறும் துயர் மயமான அதிக பாரத்தைச் சுமந்து நரக சொர்க்கங்களில் அலைவதாலே உடல் புண்ணாகி உதவி செய்தல் இல்லாத பிறப்பு இறப்பு என்ற சம்சாரப் படுகுழியில் இருந்தும் இடைவிடாது செய்யும் சிரவணம் முதலான முயற்சிகளால் கரை ஏற்றுவதே சாமர்த்தியமாம். மேன்மை மிக்க ஞானிகளின் நேசம் இருப்பின் சமுத்திரத்தைக் கடக்க மாலுமி ஓடத்தைக் கொடுத்து உதவிசெய்வது போல யுக்தியாகிய உபதேசத்தை நல்குவர்.* **(5.8.3)**

**எவ்விடத்(து) இல்லை நல்லஞா னிகளாம் ஈர்ங்கனி மலர்குளிர் சோலை**
**அவ்விடம் கானல் மேடதாம் ஆங்கே அமர்பவர் அறிவிலார் அன்றோ**
**கவ்விய செல்வம் நட்புநூல் சுற்றம் கருமம்(ம்)ஆ திகள்எலாம் உதவா**
**செவ்விய மனமே உதவுறல் வேண்டும் சீவனைச் செல்கதி ஏற்ற.**

**பொழிப்புரை:** *கருணை முதலிய குணங்களுடன் கூடிய ஞானிகளாகிய பலத்தோடு கூடிய வாசனை நிறைந்த தளிர் குளிர்ந்த சோலை எந்த இடத்தில் இல்லையோ அந்த இடமானது கானல் நீர் போன்றதாம். அந்த இடத்தில் வசிப்பவர் அறிவிலாதவர் (விவேகம் இலாதவர்) அல்லவா! வந்துற்ற செல்வம், நட்பு, சாத்திரம், உறவுகள், செய்கின்ற கருமம் இவை எல்லாம் உதவமாட்டாது. திருந்திய உள்ளமே சீவனை அடைய வேண்டியதில் சேர்க்க உதவி செய்தல் வேண்டும்.* **(5.8.4)**

**நெறியுற விடாமல் உடனுறை நட்பாம் நெஞ்சமாத் திரத்தினைக் கூடிச்**
**சிறிதுநா டுதலும் சீவ(ன்)உய்(வு) உறுமால் சிங்கியாம் இந்தஊன் உடலை**
**முறிதரு காட்டம் ஓட்டின்நே ராக முற்றுறும் கருத்தினால் நோக்கி**
**அறியி(ல்)இவ் வளவால் அறிந்துசேர்ந் திடலாம் அண்டரும் இறைஞ்சுபேர் அறிவை.**

**பொழிப்புரை:** *எப்போதும் கூடவே இருக்கும் நட்பாகிய நெஞ்சினை மட்டுமே கூடிச் சாத்திர வழியில் சற்றே ஆராய்ந்து பார்த்தாலும் சீவன் உய்வுபெறும். நோய்க்கு இடமாகிய இந்தத் தசை மயமான உடலைப் பட்டுப்போன மரக்கிளை (கட்டை) அல்லது துரும்பு ஓடு இவற்றிற்குச் சமமாக ஆராய்ச்சி செய்து முதிர்ந்த கருத்தினால் எண்ணிப் பார்த்து உணர்ந்தால் இந்த அளவிலே தேவர்களும் வேண்டக் கூடிய இந்தப் பேர் அறிவை அறிந்து அடைந்திடலாம்.* **(5.8.5)**

**நிறைபெரும் கடல்ஒத்(து) உரைஎலாம் கடந்து நிகர்அறப் பற்றற வெறிதாய்க்**
**குறை(வு)இல்சிற் சுடரின் கொழுந்துடன் கூடிக் கோ(து)அற அசைவறக் குலாவும்**
**மறை(வு)அறு துரிய விழிவெளிப் படுமேல் மற்(று)அ(து) அதனுடன் நிகராம்**
**முறைமையில் துயில்வோர்க்(கு) அண்ணிதாம் உவமை மொழியலாய்த்**
**தோன்றிடும் அன்றே.**

**பொழிப்புரை:** *தண்ணீரால் நிறைந்த பெருங்கடல் போன்று, வாக்கு மனதுக்குப் புலப்படாது நிகரற்று, திருசிய விஷயப் பற்று அற்ற பூரண சித்து வடிவத்துடன் கூடி, குற்றமறத் திடமாக ஆவரணம் இன்றிய துரியப் பார்வை கிடைத்திடுமாயின் அது அதற்குத் தானே சமானம் ஆகும். அதற்கு அருகாமையில் இருக்கும்படி உதாரணம் காட்ட வேண்டுமானால் விஷயங்களின் ஞானம் இல்லாமையும், குடும்ப நிவர்த்தியுமாய் உறங்குபவனைத் தான் சொல்லிக் காட்ட நேரிடும்.* **(5.8.6)**

**ஆனஅவ் அவத்தை வடிவெலாம் பரிக்கும் அம்பரம் போல்அகன்(று) உளதாம்**
**ஈனநெஞ் சுடன்சேர் அகங்கரம் இறந்தால் எப்பொரு ளினிடத்தும் மிகுக்கும்**
**தீன(ம்)இல் பரமா னந்தமாய்;த் தோன்றும் திகழ்பர மாத்தும வடிவாம்**
**தா(ன்)நனி முயலில் கிடைத்திடும் துயில்வோர் தன்மைபோல் தம்மில்நா டுவதாம்.**

**பொழிப்புரை:** *உண்டான அந்த அவத்தையானது எல்லாவற்றையும் தாங்கும் ஆகாயம் போல விரிந்து பரந்திருக்கும். கீழான மனதுடன் சேர்ந்து திரியும் அகங்காரம் அழிந்தால் எல்லாப் பொருள்களின் இடத்திலும் நிலைபெறும். பெருமையுடைய பரமானந்தமாகத் திகழும் அது பரமாத்ம வடிவமாகும். அதிகாரி நன்றாக முயன்று அப்பியாசம் செய்தால் அடையப் பெறலாம். ஆழ்துயிலில் உறங்குபவர் போலத் தமக்குத் தாமே அனுபவிக்கப்படுவது ஆகும்.* **(5.8.7)**

**உரைகளுக்(கு) எட்டா(து) உளத்(து)அனு பவிக்கில் உறுவதாம் உரைத்தஅத் துரியம்**
**கரையறும் இவைகள் முழுதும்அப் பொருளாம் கனபரி ணாமியாம் உள்ளம்**
**வரைவற ஒடுங்கில் உட்புறம் எங்கும் அன்னிய சராசர வடிவாம்**
**புரையறு தேவ தேவனாம் பரமப் பொருள்அனு பவப்படும் தானே.**

**பொழிப்புரை:** *வாக்கு மனதுக்குப் புலப்படாதது. கூறிய அந்தத் துரிய நிலை உள்ளத்துள் அனுபவம் செய்தால் தனது வடிவமாகவே வருவதாம். எல்லையில்லாத இவை யாவும் அந்த சர்வான்மக வடிவமே ஆகும். திட பரிணாமம் ஆன சித்தம் சங்கற்ப விகற்பங்களை விட்டு உள்ளே நிலைபெறில் உள்ளே வெளியே இருக்கும் சராசர வடிவமாம். நித்தியமாய் தோஷம் இல்லாததாய் வியாபகமாகிய தேவ தேவன் என்னும் பரமாத்மப் பொருள் சுயமாகவே அனுபவத்திற்கு வரும்.* **(5.8.8)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**அதன்பின் விடய வாதனைகள் அறுவ தாகும் அதன்பின்னர்**
**விதப்பி லாத பொருளினுடை விளக்கம் ஆகும் அதன்பின்னர்**
**சுதப்பண்(பு) இல்லாச் சமத்துவத்தால் சொரூபம் தன்னில் பரிணாமம்**
**இதத்தில் உளதாம் உயர்ந்தோர்க்கும் எண்ண வொண்ணா வடிவிதுவே.**

**பொழிப்புரை:** *(நான்காம் பூமியாகிய சத்துவாபத்தி அடைந்த) பின்னர் விரூய வாசனைகள் அறுவதாகிய அசம்சத்தியாம். அந்த ஐந்தாம் பூமியாகிய அசம்சத்தியின் பின்னர் ஆறாம் பூமியில் முயற்சி இல்லாமலே சுயமான பரம்பொருளின் பிரகாசமாம். அந்த ஆறாம் பூமியாம் பதார்த்தா பாவனையின் பின்னர் ஒன்றுடனும் பற்றில்லாத அந்த சமத்துவத்தால் சொரூபத்தின் பரிணாமம் எளிதாக உண்டாகும். உயர்ந்த நிலை உடையவர்களும் எண்ணிப் பார்க்க முடியாத வடிவம் இதுவே.* **(5.8.9)**

**மனத்தை மனத்தால் மாய்வித்து மாசில் பொருள்நோக் காரேல்ஓர்**
**தினத்தும் உலகின் துயர்மாயா சித்தம் இறக்கில் செறிசுகத்தால்**
**கனத்த உணர்வில் மதிநிகழும் கழறும் இதற்(கு)ஓர் இதிகாசம்**
**இனத்தில் இனியாய் கேட்டிஎன இசைத்தான் வசிட்டன் இராமனுக்கே.**

**பொழிப்புரை:** *சம்சாரப் பற்றுடைய மனதை, சாத்திரப் பதிவுகள் உடைய விவேகமுள்ள மனதால் நாசம் அடையச் செய்து, குற்றமில்லாத ஆன்மாவைத் தரிசிக்காவிடில், ஒரு பொழுதும் உலக சம்பந்தமான துயர்கள் நீங்காது. மனமானது ஒழிந்தால் நிறைகின்ற சுகத்தால் வியாபக அறிவின் ஞானமானது விளங்கும். கூறிய இதற்கு ஒரு கதையினை அதிகாரிகளுக்குள்ளும் சிறந்த அதிகாரியான இராகவ! ஒருமைப் பட்ட மனதுடன் கேட்பாய் என வசிட்ட முனிவர் கூறினார்.* **(5.8.10)**

**சையம் என்னும் நெடுங்கிரிமேல் தவஅத் திரிமா முனிஉறையுள்**
**உய்ய அதன்பால் இருமுனிவர் சூழல் ஒன்றில் உறைகிற்பார்**
**மெய்ய ராகும் அவ்விருவர்க்(கு) இருவர் பிறந்தார் வியன்புதல்வர்**
**செய்ய விலாசன் பாச(ன்)எனச் செப்பும் பெயரோர் செறிநண்போர்.**

**பொழிப்புரை:** *சஹ்யம் என்ற பெயருடைய நீண்ட மலையின் மேல் மாட்சிமை பொருந்திய அத்திரி முனிவர் என்ற பெயருடைய தவமுனி வசிக்கின்ற ஆசிரமம் ஒன்று இருந்தது. அதன் பக்கமாக ஓர் இடத்தில் இரண்டு முனிவர்கள் சம்சார சங்கடத்தில் இருந்து கரையேறத் தவம் புரிந்து வந்தனர். நல்ல விரதங்களைக் கொண்டு தவம்புரிந்த அவர்கள் இருவருக்கும் இரண்டு அற்புதப் புதல்வர்கள் உண்டானார்கள். சிறந்த விலாசன் என்றும், பாசன் என்றும் சொல்லப்பெறும் பெயர்களை உடையவர். மிகவும் நட்பு உடையவர்களாக விளங்கினர்.* **(5.8.11)**

**ஒழுங்கால் விருத்தி பெற்றிருந்தோர் ஒன்றே இரண்டா யினஎன்ன**
**அழுங்கா உளத்தோர் அவர்தந்தை அன்னை என்போர் உயிர்இறப்ப**
**விழுங்கா நின்ற பொருமலோடு மேற்செய் பிதுர்க்கள் விதிகள்முடித்;(து)**
**எழுங்கா தலினால் நொந்(து)இரங்கி இருபால் அகன்றார் இருவருமே.**

**பொழிப்புரை:** *முறையாகச் சமமான வயது அடைந்து வளர்ந்து வந்தவர்கள் உயிர் ஒன்று உடல் இரண்டு என்பதாக வாடாத மனத்தை உடைய அவர்களின் தந்தை தாயர் இறந்து போக, மேன்மேலும் தகிக்கின்ற உள்ளத்தோடு பிதுர்க்கடன்கள் விதி முறைப்படி செய்து முடித்து, அன்பினால் நொந்து இரங்கி, இருவரும் வெவ்வேறு இடத்திற்குப் பிரிந்து சென்றார்கள்.* **(5.8.12)**

**அளவில் காலம் வனத்(து)உறைந்தார் அரிய தவத்தால் உடல்வாட்டிக்**
**கிளரும் ஆசை விட்(டு)அகன்றார் கிட்டப் பெற்றார் கேண்மையினால்**
**உளமும் கண்ணும் களிப்(பு)எய்தி உயர்ந்த விலாசன் உரைசெய்வான்**
**வளரும் உலகில் நல்லுறவே மன்னும் உயிர்போல் வந்தனையால்.**

**பொழிப்புரை:** *அளவில்லாத காலம் காட்டிலேயே வசித்தார். அரிய தவத்தினால் உடல் இளைப்புற்றார். கிளம்பி வரும் ஆசைகளை அடியோடும் ஒழித்தார். ஒரு சமயம் இருவரும் சந்தித்தார்கள். நேய மிகுதியால் மனமும் கண்களும் மகிழ்ச்சி அடைய உயர்ந்த விலாசன் "வளர்ந்து வரும் உலகில் மிகச் சிறந்த உறவாகத் தேகத்தே இருக்கும் பிராணன் போல் வந்தாய்" என்று கூறினான்.* **(5.8.13)**

**இதுநீள் காலம் எங்(கு)உறைந்தாய் இதய இடர்தீர்ந் தனைகொல்லோ**
**பொதுவாய் உனைநீ அறிந்தனையோ போத விஞ்சை பலித்தனவோ**
**சதுரா நலன்உண் டாயினையோ சாற்றும் என்ற மொழிகேட்டு**
**முதுவாய் மையினால் பாச(ன்)இவை மொழிந்தான் விலாசன் முகம்நோக்கி.**

**பொழிப்புரை:** *இது வரை நீண்ட காலமாக எங்கு தவம் புரிந்து கொண்டிருந்தாய்? மனோ துக்கம் யாவும் அணுகாது அகற்றினாயா? ஞானம், ஞான சாதனங்கள் பயன்பெற வந்தனவா? சித்தம் அமைதி அடைந்தனையா? சொல்வாய் என்ற வார்த்தைகளைக்*

*கேட்டு, முதிர்ந்த உண்மை வாக்கியங்களால் விலாசனின் முகத்தை நோக்கிப் பாசன் இவற்றைக் கூறலாயினான்.* **(5.8.14)**

**உயிர்போல் உறவே விதிவயத்தால் உன்னைக் கண்டேன் உளம்குளிர்ந்தேன்**
**செயிர்சேர் பிறப்பில் உழல்வேற்குச் சிறந்த நலனாம் திறன்எங்கே**
**பயில்வது) அறிவது) அறிவளவும் பாயும் உள்ளம் கெடாதளவும்**
**வெயில்வெம் பவம்நீங் காதளவும் மிக்க நன்மைத் திறம்எங்கே.**

**பொழிப்புரை:** *உயிருக்கு இணையான அன்புடையவனே! விதி வசத்தால் உன்னைக் கண்டேன். மனம் குளிர்ந்தேன். துன்ப மயமான சம்சாரத்தில் உழன்று திரியும் எனக்குச் சிறந்ததான நன்மை அடையும் திறமை எங்கே உள்ளது? சச்சிதானந்த சொரூபத்தை விசாரம் செய்து ஆத்மாவை அறியும் வரை விஷயங்களில் தாவும் மனம் நாசம் ஆகாத அளவும், மூன்று துயர்மயமான கொடிய பிறவி நீங்காத அளவும், மிக்க நன்மை அடைகின்ற திறம் எங்கே உள்ளது?* **(5.8.15)**

**மனத்தில் முளைக்கும் ஆசையெலாம் வடித்த குடாரத் தால்மரம்போல்**
**கனத்த வேரோ(டு) அறும்அளவும் கண்ணா ஞானம் பெறும்அளவும்**
**மனத்த பேதம் போய்ச்சமமாம் அளவும் போதம் உறும்அளவும்**
**செனித்து மரிக்கும் துயர்அல்லால் சிறந்த நன்மைத் திறம்எங்கே.**

**பொழிப்புரை:** *மனதில் எழுகின்ற ஆசைகள் அனைத்தையும் கூர்மையான கோடரியால் மரத்தைப் போல் திடமான வேரொடும் வெட்டிச் சாய்க்கின்ற வரையில், அறிவு மயமாகக் காண்கின்ற பிரம்ம வித்தையைப் பெறும் வரையில், துன்பத்தையே தரும் பேதத்தை மாற்றி சமமான பார்வை வரும் வரையில், அகண்டமான ஞானம் வரும் வரையில், பிறந்து இறக்கும் துயரமே அல்லாமல் சிறந்த மன அமைதிக்கான நன்மை பெறும் திறம் எங்கே உள்ளது?* **(5.8.16)**

**மடமை நோய்க்கு மாமருந்தாய் வரும்ஆத் துமதத் துவப்பேற்றை**
**விடநின் றவர்க்கு வன்பிறப்பாம் விடூசி மேன்மேல் வந்திடுமால்**
**இடர்இன் பத்தின் இடைப்பட்டும் இறப்பு பிறப்பில் வீழ்ந்(து)அலைந்தும்**
**தடமார் உலகில் உழல்உயிர்கள் சருகின் உலர்வர் என்(று)இசைத்தான்.**

**பொழிப்புரை:** *அறியாமையாகிய வியாதிக்கு அருமருந்தாக வரும் ஆத்ம தத்துவத்தை அடையாமல் இருப்பவர்க்கு கொடிய பிறப்பு என்ற விஷ வியாதி மீண்டும் மீண்டும் வந்து கொண்டே இருக்கும். இன்ப துன்பங்களின் மத்தியில் வீழ்ந்தும், இறப்பு பிறப்பில் வீழ்ந்து அலைந்தும், விரிவான உலகில் வருந்தி உழல்கின்ற உயிர்கள் சருகு போலக் காய்ந்து உலர்ந்து போவர் என்று கூறினான்.* **(5.8.17)**

**(உபசாந்திப் பிரகரணத்தில் பாச விலாசர் கதை முற்றும்)**

# (ix) வீதகவ்வியன் கதை

*முன்பு சித்த அமைதி இல்லையெனில் வெகுவிதப் பிரயாசம் எனப்பட்டது. இப்போது சித்த அமைதிக்கான சித்தத்திற்குச் சங்கத் தியாகமும், பிராண நிரோதமும், சமாதி அப்பியாசமும் செய்ய வேண்டுமென இந்தக் கதையால் நிரூபிக்கப்படுகின்றது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**இன்னணமே நன்மைவினா தம்மில்தாம் இயம்பிஉறை இருவ ருக்கும்**
**முன்னியநற் காலத்தால் முத்திதரு மெய்ஞ்ஞானம் முந்திற்(று) அன்றே**
**அன்னதினால் உரைக்கின்றேன் வெம்பவத்தை ஞானத்தால் அன்றி மாய்க்கப்**
**பின்னையொரு நெறியில்லை பாசத்தால் பிணிப்புண்ட பிணிநெஞ் சுக்கே.**

**பொழிப்புரை:** *இங்ஙனமே ஒருவருக்கு ஒருவர் கேள்விகளைக் கேட்டும், பதில் உரைத்தும் உரையாடிக் கொண்டிருக்கும் பாச விலாசர் இருவருக்கும் முன்பு செய்த நல்வினை முதிர்ச்சியால் மோட்சத்தைத் தரக்கூடிய தத்துவ ஞானம் உண்டானது. அந்தக் காரணத்தால் கூறுகின்றேன். கொடிய பிறவியாகிய சம்சாரத்தைத் தொலைக்க தத்துவ ஞானத்தால் அல்லாமல் மற்றொரு மார்க்கம் இல்லை, பாசத்தால் கட்டுண்ட நோய் மயமான மனதுக்கே.* **(5.9.1)**

**பற்றிலதாய் நின்மலமாம் மனம்விவகா ரம்பயின்றும் பந்தம் மேவாப்**
**பற்றுளநெஞ்(சு) அளவில்தவம் படைத்தாலும் பந்தமே பயிலும் உள்ளில்**
**பற்றிலதாய் இனியதொழில் பயில்சீவன் புறத்தொழில்கள் பண்ணி னாலும்**
**பற்றறப்பண் ணாவிடினும் பண்ணுவோன் புசிப்போனாம் பான்மை மேவா.**

**பொழிப்புரை:** *பற்றில்லாததாய் மலம் இல்லாத மனமானது விவகாரம் (தொழில்) செய்தாலும் பந்தப்படாது. பற்றினை உடைய மனமானது அளவில்லாத தவம் செய்தாலும் பந்தமே அடைந்து நிற்கும். உள்ளே பற்றிலாது இனிமையான தொழில் செய்தாலும், சீவன் வெளிப்புறத் தொழில்களைச் செய்தாலும், பற்று அறச் செய்யா விடினும் கர்த்தா (செய்பவன்), அனுபவிப்பவன் (போக்தா) என்ற தன்மைகளை அடைய மாட்டான்.* **(5.9.2)**

**என்னலுமே பற்(று)ஆவ(து) எத்தன்மை எப்பற்றால் எய்தும் பந்தம்**
**துன்னரும்வீ(டு) எப்பற்றால் எய்தலாம் தொடர்பற்றைத் துடைக்கும் ஆ(று)என்**
**பன்னு(க)எனும் இராமனுக்கு முனிபகர்வான் உடல்உயிரைப் பகுப்ப(து) ஒன்றும்**
**உன்னுகிலா(து) உடலினைநம் புதல்பற்றாம் அதனாலே உளதாம் பந்தம்.**

**பொழிப்புரை:** *பற்றினாலே பந்தம் உண்டாகும் என்று கூறியதும், பற்று ஆவது எத் தன்மை உடையது? எந்தப் பற்றினால் பந்தம் வரும்? கிடைத்தற்கு அரிதான மோட்சத்தை எந்தப் பற்றினால் அடையலாகும்? தொடர்ந்து வரும் பற்றினை நீக்கும் வழி என்ன? அருளிச் செய்ய வேண்டும் என்ற இராம பிரானுக்கு வசிட்;ட முனிவர் கூறுகின்றார். தேகம், தேகி இவற்றைப் பிரித்துப் பார்த்தல் செய்யாமல், தேகத்தை நம்புதல் பற்றாகும். அதனால் பந்தம் உண்டாவதாகும்.* **(5.9.3)**

ஈ(து)அனைத்தும் சொரூபமே யான்இங்(கு) எத்தை
இச்சிப்பேன் எதைஇகழ்வேன் எனல்பற் றின்மை
மாதுயர்தீர் இதுசீவன் முத்தர் மெய்யில்
மன்னுமால் யான்இல்லை பிறரும் இல்லை
மேதகு(ம்)இன் பங்களெலாம் மேவின் மேவ
மேவாதேல் மேவாதா யிடுக என்றே
ஓதியவா(று) உள்ளேபற் றின்மை உண்டேல்
உயர்வீட்டுக்(கு) இதுநெறிஎன்(று) உணர்தி அன்றே.

**பொழிப்புரை:** *பெயர் வடிவங்கள் உடைய இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் ஆத்மாவே. (எல்லாம் ஆத்ம மயம் என்பதால்) யான் இங்கு எதனை விரும்புவேன்? எதனைத் தள்ளுவேன்? என்று உணர்வதே பற்றின்மை ஆகும். (அசங்கத் தன்மையைக் காட்டுவதாகும்) பெருந்துயரைத் தீர்க்கும் இது சீவன் முக்தரிடத்துக் காணப்படுவதாகும். நான் என்பதும் இல்லை, அன்னியர் யாரும் இல்லை. மேன்மையான இன்பங்கள் உண்டாகட்டும், வராது எனில் வராமல் போகட்டும் என்பதாகக் கூறியவண்ணம் உள்ளே பற்றின்மை உண்டானால் உயர்ந்த மோட்சத்திற்கு இதுவே நெறி என்று உணர்வாய்.*
**(5.9.4)**

கரும(ம்)இலா மையைவிரும்பார் கருமம் பற்றார்
கருதுபலன் விட்(டு)இரண்டும் கண்டால் ஒப்போர்
மருவியபற்(று) இலாதவர்என்(று) உரைப்பர் மேலோர்
வருகரும பலாதிகளைக் கருமத் தாலே
ஒருவலற மனத்தாலே நிபுண மாக
ஒருவுதல்பற் றின்மைஎன உணர்தி இத்தால்
பெருகவளர் தொழில்அனைத்தும் குற்றம் தீர்ந்து
பெறலரிய முத்தியையும் பேறா நல்கும்.

**பொழிப்புரை:** *கருமங்களின் தியாகத்தை விரும்பமாட்டார். கருமங்களில் தொடர்ந்து செல்லாதவர். விரும்பத் தக்க கருமங்களின் பலனை விட்டு, நோக்கினால் (கருமம் மற்றும் பலன் இரண்டிலும் ஒன்றை) அடைதலையும், அடையாமையையும் சமமாகக் கொள்வர். (இவரை) பொருந்திய பற்றிலாதவர் என்று மேலோர் கூறுவர். வருகின்ற கருமங்கள் பலன் முதலியவற்றைக் கருமத்தாலே அகற்றுதல் இன்றி மனத்தினாலே சாமர்த்தியமாக விலக்குதல் பற்றின்மை என உணர்வாய். இதனால் பெருகி வரும் தொழில் அனைத்தும் குற்றம் தீர்ந்து, அடைதற்கு அரிதான முத்தியையும் பெரும் பயனாக அளிக்கும்.*
**(5.9.5)**

புழுமுதலாம் பல்பிறப்பில் தோன்றிப் பல்கால்
பூதமெலாம் கடல்திரைபோல் பொன்றும் தன்மை
பழுதுதரும் பற்றினது படர்ச்சி யாகும்
பற்றுத்தான் இருவகையாம் அவற்றின் ஒன்று
நழுவுபய னிலிஒன்று வணங்கற் பாற்றாம்
நவின்றபய னிலிமூடர் நண்ணற் பாற்றாம்
வழுவறுதத் துவம்உணர்ந்தோர்க்(கு) உடைமை யாக
வணங்கற்பாற் றாம்பற்று மருவும் தானே.

**பொழிப்புரை:** *புழு முதலாகப் பல பிறப்புகளில் பிறந்து பல காலம் பிராணிகள் யாவும் கடலின் திரை கடலில் ஒடுங்குவது போல நாசமாகும் தன்மையானது கெடுதலைத் தரக்கூடிய பற்றினுடைய படர்தல் ஆகும். பற்றானது இரண்டு வகையாகும். அவற்றில் ஒன்று தள்ளத்தக்க பயன் அற்றதாம். மற்றது பூசிக்கத் தக்கதாம். கூறிய பயன் அற்றது மூடர்களிடத்தில் பொருந்துவதாம். கெடாத உண்மையாகிய பிரம்மத்தை உணர்ந்தவர்களுக்குச் சொந்தமாகப் பூசிக்கத் தக்கதாகப் பற்று பொருந்தி நிற்கும் தானாகவே.* **(5.9.6)**

**ஆத்துமதத் துவஉணர்வால் விவேகம் தன்னால்**
**அடைவாக உண்டாம்பின்(பு) அணுகாச் சென்மம்**
**ஏற்றமுள தொழுதகைய பற்(று)ஈ(து) ஆகும்**
**ஈ(து)அன்றிப் பயனிலியாம் பற்(று)ஏ(து) என்னில்**
**ஊற்றமுறும் உணர்வின்றி உடலம் முன்னாம்**
**உறுபொருளி னால்உண்டாம் உலகம் தன்னில்**
**தோற்றமுறு பிறவிமீண்(டு) உள்ள தாக்கும்**
**தோன்றலே இவைஇரண்டும் துணிந்து கொள்ளே.**

**பொழிப்புரை:** *ஆத்ம தத்துவ ஞானத்தால் விவேகத்தால் கிரமமாக உண்டாகும், பின்பு பிறவித் தொடர் தொடராது, மேன்மை மிக்க, தொழுவதற்கு உரிய பற்று இது ஆகும். இது இல்லாத பயனிலி என்ற பயன் அற்ற பற்று ஏது என்னில் ஊன்றி நின்ற விவேகம் இல்லாமல் தேகம் முதலான பொருள்களில் உண்டாகக் கூடியதாம். உலகத்தில் தோன்றுவதான பிறவிகளை மீண்டும் உருவாக்கி விடும். இராகவனே! இவ்வண்ணம் இரண்டினையும் நிச்சயம் செய்திடுவாய்.* **(5.9.7)**

**வளையாழி கதைகரத்த செங்கண் மேனி வணங்கப்பாற் றாம்பற்றின் வசத்தி னாலே**
**இளையாமல் விவிதமாம் தொழிலி னாலே எவ்வுலகும் நன்றாக இரங்கிக் காக்கும்**
**உளையாத விஞ்ஞானக் கதிசேர் சித்தர் உலகபா லகர்ஆதி உரைத்த வாறே**
**விளையாடி வணங்கப்பாற்(று) என்னும் பற்றால் விரிந்தசக மூர்த்தத்தின் மேவி நின்றார்.**

**பொழிப்புரை:** *சங்கு, சக்கரம், கதை முதலியவற்றை உடைய கரம் உடைய செந்தாமரை விழி கார்மேனி வண்ணனாகிய மகாவிஷ்ணு முதலானவர்களும் வணங்கத்தக்க பற்றின்மை என்பதன் வசத்தினால் ஓயாமல் (தளராமல்) தசாவதாரம் முதலிய பல விவகாரங்களினாலே எல்லா உலகங்களையும் தயவோடு இரட்சிக்கின்றார்கள். அழியாத சுய சொரூபத்தில் நிலை பெற்ற சித்தர் உலக பாலகர் முதலியோர்களும் கூறிய படி விளையாடிக் கொண்டு வணங்கத் தக்க பற்றினால் விரிந்து பரந்துள்ள ஜகத்தில் வாழ்ந்து வருகின்றனர்.* **(5.9.8)**

**கேடான நல்லதெனும் நினைவி னாலே கிளர்போக வசத்தாலே கிட்டி நெஞ்சம்**
**வீடாத பயனிலியாம் பற்றி னாலே வெறும்பிணத்துக் கழுகுபோல வீழும் அன்றே**
**பாடான பயனிலியாம் பற்று ளோர்க்குப் பல்நரகங் களும்வீடாய்ப் பண்ணப் பட்ட**
**வீடான பயனிலிபற் றுள்ளோர் என்னும் இளவிறகால் நரகளி எரியும் அன்றே.**

**பொழிப்புரை:** *துயர் மயமான அனுகூலம் என்னும் எண்ணத்தினாலே பார்த்தல் மாத்திரத்தாலே மயக்கம் செய்யும் போகங்களின் வசத்தில் ஈடுபட்ட மனமானது, வெறும் பிண மாமிசத்துக்காக விழுகின்ற கழுகு போல விட முடியாத பயனில்லாத பற்றினாலே வீழும். பெருந்துயரமான பயனில்லாத பற்றினை உடையவர்களுக்குப் பல நரகங்களும் வீடாக அமைக்கப்பட்டன ஆகும். தள்ளுதற்கு உரிய பயனில்லாத பற்றுடையவர் என்கிற காய்ந்த சிறு சிறு விறகுகளால் நரக அக்கினியானது சுடர்விட்டு எரியும்.* **(5.9.9)**

**விச்சையெனும் விழிநன்றாய் விளங்கப் பட்டு வெம்மாய விடயத்தின் மீட்சி எய்தி**
**இச்சையுறு பற்று)என்பது) எங்கும் இல்லா இயல்மனத்தோடு) இருப்பவரே இறவா முத்தர்**
**நிச்சயமா எப்போதும் எவற்றின் பாலும் நிற்பவனாய் அனைத்துடனும் நிற்போ னாகி**
**எச்செயலும் செய்வோனாம் சீவன் முத்தன் இயற்றியஇம் மனத்தின்தன் இயல்பு கேளாய்.**

**பொழிப்புரை:** *வித்தை என்னும் பார்வை நன்றாக விளங்க, கொடிய மாயா விடயங்களில் இருந்து மீண்டு வந்து, ஆசையுடைய பற்று என்பது எவ்விடத்தும் இல்லாமல் இயல்புடைய உள்ளத்துடன் வாழ்பவரே இறவாத முத்தர். நிச்சயமாய் எப்பொழுதும் எல்லாப் பொருள்களின் இடத்திலும் இருப்பவனாய், எல்லாவற்றோடும் கூடி நிற்பவனாய், எந்த விவகாரமும் செய்வோன் ஆகிய சீவன் முத்தன் தன் வசம் செய்த உள்ளத்தினுடைய சுபாவத்தைக் கேட்பாய்.* **(5.9.10)**

**தொழிலி(ல்)நினை வில்பொருளில் விண்ணில் மேல்கீழ்**
**சூழ்திசையில் புறப்போகத் தொகுதி தம்மில்**
**இழிதரும்ஐம் பொறிநடையில் உள்ளில் நிற்கும்**
**இன்னுயிரில் சென்னியி(ல்)ஆ னனத்தில் நாவில்**
**அழியும்விழி களில்மூக்கில் புருவம் தன்னில்**
**அகங்கரத்தில் சீவ(ன்)உள் ஆகா சத்தில்**
**விழிநனவில் சொப்பனத்தில் சுழுத்தி தன்னில்**
**வெள்ளைமுதல் நிறம்ஐந்தின் வியன்வண் ணத்தில்.**

**பொழிப்புரை:** *முடியக் கூடிய பலவிதமான காரியங்களிலும், நினைவில் உள்ள விஷயங்களிலும் சிந்தனைகளிலும், நிகழ்காலப் பொருள்களிலும், ஆகாசத்தில் மேல் கீழ் திக்குகளிலும், வெளியில் உள்ள மனைவி புத்திரர் முதலிய விஷயங்களிலும், நிந்தனை செய்யக் கூடிய ஐம்புலன்களின் விருத்திகளிலும், உள்ளே இயங்கும் பிராணனிலும், தலையிலும், முகத்திலும், நாவிலும், அழிகின்ற விழிகளிலும், மூக்கிலும், புருவங்களிலும், அகங்காரத்திலும், சீவனிடத்திலும், இதய ஆகாசத்திலும், விழிப்புடைய நனவிலும், கனவிலும், ஆழ்துயிலிலும், வெள்ளை முதலான பஞ்ச வண்ணம் கலந்தவற்றிலும்,* **(5.9.11)**

**சலனத்தில் திரத்தி(ல்)அடி நடுவில் ஈற்றில் சமீபத்தில் தூரத்தில் சரீ(ர)ஆங் கத்தில்**
**பலபண்டம் தன்னில்சே தனத்தில் சத்த பரிசாதி களின்மகிமை பயில்இன் பத்தில்**
**உலவுவரத் தில்போக்கில் காலப் பண்பில் ஒருசிறிதும் பற்றாமல் உணர்வில் ஆறி**
**நிலவியகாண் பனசிறிது பயின்றும் எங்கும் நிராசையாய் பரசுகத்தில் நிற்கும் நெஞ்சே.**

**பொழிப்புரை:** *அசைவில், அசைவு இன்மையில், ஆதியில், மத்தியில், கடைசியில், சமீபத்தில், தூரத்தில், தேக உறுப்புகளில், பல பொருள்களில், சேதனத்தில் (ஆத்மாவில்) சப்தம், பரிசம், ஒளி, சுவை, வாசனை என்பவற்றின் மகிமை வாய்ந்த இன்பத்தில், சலித்து வருகின்ற போக்கு வரவில், காலங்களில் சற்றும் பற்றாமல், சொரூபத்தில் சித்த அமைதி அடைந்து, காண்கின்ற விவகாரம் ஒரு சிறிது செய்து, எவ்விடத்திலும் நிராசையாய் வைராக்கியமாய் ஒப்பற்ற ஆனந்தத்தில் மனம் அமர்ந்திருக்கும்.* **(5.9.12)**

**செப்பியஅத் திறம்நின்ற பற்(று)ஒன்(று) இன்றிச்**
**சீவத்தன் மையைச்சேரா சீவன் முத்தர்**
**இப்புவியில் தொழில்எல்லாம் செய்க தீர்க**
**இன்பஉணர் வன்செய்கை இயற்றி னாலும்**
**தப்பறவே விட்டாலும் தொழில்கள் தம்மால்**
**தருபயன்கள் ஒருசிறிதும் தாக்க மாட்டா**
**மைப்புயல்கள் பலவிதமாய் எழுந்த போதும்**
**வானகத்தில் பற்றாத வகையே போல.**

**பொழிப்புரை:** *கூறிய அத்தன்மையுடன் இருந்து, யாதொரு பற்றும் இல்லாமல், சீவத் தன்மையைச் சேராத சீவன் முத்தர், இந்த உலகத்தில் சகல காரியங்களையும் செய்யட்டும், அல்லது செய்யாமல் போகட்டும். ஆனந்த ஞான வடிவன், காரியங்களைச் செய்த போதிலும், தப்பின்றி விட்ட போதிலும் அந்தச் செயல்கள் தருகின்ற பயன்கள் ஒரு சிறிதும் தாக்க மாட்டாது (சம்பந்தப்படுத்தாது). கார் மேகங்கள் பலவிதமாகச் சப்தம் இட்டு விரிந்து எழுந்த போதும், ஆகாயத்தில் சம்பந்தப்படாத தன்மையே போல.* **(5.9.13)**

**அன்றியே அதுதனையும் தீர நீக்கி**
**அறிபொருளின் முடிவான அறிவால் துன்னி**
**ஒன்று(ம்)உப சாந்தனாய்ப் பளிங்கு போல்உள்**
**ஒளிமேவிச் சீவ(ன்)ஒரு மித்து நிற்பன்**
**நன்(று)உணர்சிற் சுகராகிப் பெரியோர் ஆகி**
**ஞானபர ராய்ப்பரமம் நன்றாய்ப் பெற்றோர்**
**நின்(று)அசைவார் புறத்தில்மயில் பீலி போல**
**நிலைகலங்கார் மேருவைப்போல் நெஞ்சின் உள்ளே.**

**பொழிப்புரை:** *அல்லது அதனையும் அடியோடு அகற்றி, அறியப்படும் பொருளின் முடிவான சித்து வடிவமே ஆகி, பொருந்துகின்ற பரம சாந்தியை உடையவனாய், படிக மணியைப் போல உள்ளே பிரகாசம் அடைந்து, சீவன் ஒருமை பெற்று நிலைப்பன். உண்மையை உணர்ந்த ஆன்ம வடிவினராய், மகாத்மாவாய், ஞானத்தை அடைந்தவராய், பரம்பொருளைச் சந்தேகமின்றி அடைந்தவர் சொரூப நிலையில் இருந்து கொண்டே வெளிப்புறத்தில் மயிலின் தோகை போல விவகாரம் செய்வர். மனதில் மகா மேரு மலையைப் போல் தன் நிலை விட்டுச் சற்றும் சலனம் அடையார்.* **(5.9.14)**

அறிபொருளை விட்(டு)அகன்றால் அழியும் சித்தம்
அந்தநிலை வியாபாரம் அனைத்தும் இல்லா
செறிநனவில் சுழுத்தியாம் இதனை நாளும்
தீராத பரிசயமே செய்யச் செய்யப்
பிறிவில்முது துரியமாம் என்பர்; மேலோர்
பிழையிலா இதனிலே நிலைமை பெற்றுக்
குறியறும்ஆ னந்தஏ காந்த சீலக்
கொள்கையால்அ னானந்தம் கூடும் அன்றே.

**பொழிப்புரை:** *அறியப்படும் பொருளை (திருசியத்தை) விட்டு அகன்றால் மனமானது கெடும். அந்த நிலை விவகாரம் அனைத்தும் இல்லாத நனவில் சுழுத்தியாம். இதனை நாளும் இடைவிடாமல் அப்பியாசம் செய்யச் செய்ய மாறாது முதிர்ந்துள்ள துரியமாகும் என்று அறிஞர் கூறுவர். எல்லையற்ற ஆனந்த ஏகாந்த சீலத் தன்மையால் சொரூபத்தே அழியா ஆனந்த பிரம்மபதத்தை அடைவன்.* **(5.9.15)**

அந்தஅனா னந்த(ம்)ஆ னந்தம் என்னும்
அறிவி(ன்)அதீ தம்தன்னை அடைந்து ளோனைத்
தொந்த(ம்)இலா யோகியெனச் சொல்ல லாகும்
துரியாதீ தம்தனையும் துன்னி னோன்ஆம்
பந்தமுறு பவம்போய்த்தா மதத்தால் வந்த
பலஅபிமா னங்கள்போய்ப் பரம இன்பம்
நந்தலில்தன் மயமாம்சற் பாவம் தன்னில்
நல்நீரில் உப்புபோல நன்றாய் ஒன்றாம்.

**பொழிப்புரை:** *அந்த அனானந்தம் மகானந்தம் (மகா ஆனந்தம்) என்று சொல்லப்பெற்ற (அதாவது துரிய பதம் என்று சொல்லப்பட்ட) உணர்வைக் கடந்த தன்மையை அடைந்துள்ள பெரியோனைத் துவந்துவம் (இரட்டைகள்) கடந்த யோகி என்று சொல்லலாம். துரியாதீத நிலையையும் அடைந்தவன் ஆவன். பந்தம் கொடுத்த பிறவிகள் போய், தமோ மயத்திலிருந்து வந்த பலவித அபிமானங்களும் போகப் பரமானந்த தன் மயமாம் சற்பாவத்தினை நன்றாக அடைந்திடுவான். தண்ணீரில் போட்ட உப்பு கரைந்து தண்ணீர் மயமாகி இருப்பது போல.* **(5.9.16)**

சட(ம்)அசடம் எனும்நோக்கம் இரண்டி னூடே
தனியாகி நின்றபர தத்துவத்தை
இடவியபோ தாரண்ய முதலாம் வேதம்
இராமனே பலகாலும் இயம்பும் அன்றே
படருறுகாண் பனகாட்சி மேவும் போதில்
பரம்பொருளின் பற்றாகிப் பயின்ற இன்பம்
திடஅனுபூ தியின்வடிவம் ஆத லாலே
திகழ்பிரம சாரமெனச் செப்பும் தானே.

**பொழிப்புரை:** *சடம் என்னும் பார்வை (திருசிய நோக்கு), அசடம் என்னும் பார்வை (திருஷ்டா நோக்கு) இவை இரண்டின் மத்தியில் தனியாகி நிலைபெற்ற பர தத்துவத்தை ஞான தானப் பிருகதாரண்ய உபநிடதங்கள் இராகவனே! அனேக முறைகள் சொல்லியுள்ளன. விசாலமாக வருகின்ற திருசிய (காணப்படும் பொருள்களின்) காட்சி சம்பந்தப்படும் போது, பரமாத்ம வத்துவின் சம்பந்தமாகி உண்டாகிய சுகம் திடமான அனுபூதியின் மயமாவதால் தன்னுடைய சொரூபமே ஆகி இலங்குகின்ற பிரம்ம சாரம் எனக் கூறப்பெறும்.* **(5.9.17)**

**தெரிபொருளும் தரிசனமும் சேரும் போதில்**
**சேர்ந்தசுக அறிவுமிகச் சிறந்த(து) ஆகும்**
**தெரிபொருளால் வளைப்(பு)உண்டால் பந்தம் ஆகும்**
**தெரிபொருளை விட்(டு)அகன்றால் திடம்கொள் வீடாம்**
**தெரிபொருளும் தரிசனமும் சேரும் போதில்**
**சேர்ந்தஅனு பூதிஇடர் தீர்ந்த(து) ஆகும்**
**தெரிவுறஆங்(கு) அதுபற்றி நிற்பாய் நீநின்**
**திரநிலையாம் சுழுத்திதனைச் சேரு வாயே.**

**பொழிப்புரை:** *(விஷய சுகத்துக்கும் ஆன்ம சொரூபத்துவம் ஆயின் பந்த மோட்சம் என்ற பிரிவு இல்லையே என்பதற்குப் பதில்) திருசிய தரிசனம் சம்பந்தம் ஆகும் போது உண்டாகும் சுக அனுபவம் மிகச் சிறந்தது ஆகும். அந்த சுக அனுபவம் அஞ்ஞானிக்கு திருசியத்தோடு (காண்பவற்றோடு) எல்லைக்கு உட்பட்ட தன்மையால் விருப்பு வெறுப்புகளால் உண்டாவதாம். அது பந்தமாம். திருசியப் பொருள் (காண்பவை) விட்டுத் தொலைத்தால் அதி திடமான மோட்சமாம். தெரிபொருளும் தரிசனமும் சம்பந்தம் ஆகும் போதில் எழுகின்ற அனுபூதியானது அகண்ட பரிபூரணானந்த வடிவமாய் விவேகிக்கு இருத்தலால் தொல்லையில்லாத சுக மயமாம். அங்கு பரிபூரண பிரம்மத்திற்கு வேறாகாத ஆன்மாவைச் சந்தேக விபரீதம் இன்றி அதனை அபரோட்சமாக (நேரடி அனுபவமாக) உணர்ந்து நீ திடமாக நனவில் சுழுத்தியை அடைந்து விளங்குவாயாக.* **(5.9.18)**

**அதுதுரிய நிலைஅடையும் அடைந்த போதில்**
**ஆன்மாதான் தூல(ம்)அல அணுவும் அல்ல**
**திதமுறுமுன் நிலைஅல்ல படர்க்கை அல்ல**
**சித்(து)அசித்(து)உண்(டு) இல்லையெனும் திறங்கள் அல்ல**
**உதிதமுறு நான்அல்ல பிறனும் அல்ல**
**ஒருவ(ன்)அல அனேக(ன்)அல உலகம் என்றே**
**இதுவெனக்காண் பனவாகி சித்த மாதி**
**இருமூன்(று)இந் திரியத்துக்(கு) இடமாய் நிற்கும்.**

**பொழிப்புரை:** *அந்த நனவில் சுழுத்தியே துரிய நிலையை அடைந்து நிற்கும். அடைந்தபோது ஆன்மாவானது தூலமும் அல்ல, அணுவும் அல்ல, திடமான பிரத்தியட்சம் அல்ல, பிறவும் அல்ல, சேதனமும், கூடமும், உண்டு இல்லை என்பன அல்ல. நான் அல்ல, பிறனும் அல்ல, ஒருவன் அல்ல, அனேகனும் அல்ல. பிரபஞ்சம் என்ப தாகக் காணப்படுவதாகி மனமாதி ஆறு புலன்களுக்கு இடமாய் நிற்கும்.* **(5.9.19)**

ஆங்(கு)அதுவே அதீதபதம் ஆத லாலே
அதுகிஞ்சி(ல்) அன்(று)எங்கும் அதுவே ஆகும்
பாங்குறும்வீ(டு) என்(று)உம்பர் உலகில் இல்லை
பாதலத்தில் பூதலத்தில் பார்க்கில் இல்லை
வீங்கியஆ சைகள்எல்லாம் இறந்த காலை
விரிந்தமனம் இறப்பதுவே வீ(டு)என்(று) ஓதும்
ஓங்கியவீ(டு) எனக்(கு)உள(து)என்(று) உள்ளே எண்ணம்
உண்டாகில் மீண்டுமனம் உற்ப விக்கும்.

**பொழிப்புரை:** *அங்கு அப்பொருளே சகலத்தையும் கடந்த வத்து (ஆன்ம தத்துவம்). ஆதலால் அது சிறிது (அற்பம்) அல்ல, எவ்விடத்தும் அந்த வத்துவே இருக்கும். நன்மையைத் தரும் மோட்சம் என்று தேவ லோகத்தில் இல்லை, பாதாள லோகத்தில், இந்த பூவுலகத்தில் நாடிப் பார்க்கில் இல்லை. மேன்மேலும் அதிகரிக்கும் ஆசைகள் எல்லாம் ஒழிந்த போது, விடயங்களைப் பற்றி எழுந்த மனமானது லயம் ஆவதுவே மோட்சம் என்று கூறுவர். பேரானந்த மயமாகிய மோட்சம் எனக்கு உண்டாக வேண்டும் என்று உள்ளத்தே எண்ணம் உண்டாயின் மறுபடியும் மனமானது எழுவதே ஆகும் (உற்பத்தியாகி விடும்).* **(5.9.20)**

நினைப்புமிகில் இவனுக்குப் பிறப்(பு)இ றப்பு
நீங்காது வன்பந்தம் நிலைய தாகும்
அனைத்தினுக்கும் அதீதமாய் உருவம் எல்லாம்
ஆகிஅகன்(று) ஆத்துமதத் துவமே நிற்கில்
வினைத்தொடராம் பந்த(ம்)எது முத்தி யேது
வேரறச்சிந் தையைக்கெடுப்பாய் மேல தாகத்
தனைத்தெளிந்து நிறைந்(து)அமல நெஞ்சாய் நல்ல
சாந்தியைஉற் றோர்விரும்பார் சற்றும் ஒன்றும்.

**பொழிப்புரை:** *இந்த அதிகாரிக்குச் சங்கற்பங்கள் (திருசிய பாவனை) அதிகரித்தால் பிறப்பு இறப்பு நீங்கிடாது. கொடிய பந்தமானது திடமாகும். அனைத்துக்கும் அப்பாற் பட்டதாய்ச் சகலமும் ஆகி அகன்றதாகி (விரிந்ததாகி) ஆத்ம தத்துவமே நிலைத்து இருக்குமாயின் கருமத் தொடர்பினால் வரும் பந்தம் ஏது? முத்தி ஏது? வேரோடு எண்ணங்களைக் களைவாய். சர்வ சாட்சியாகத் தன்னுடைய வடிவத்தைக் கண்டு உணர்ந்து பூரணமாய், பாவன மனமாய் நல்ல பரம சாந்தத்தை அடைந்த பெரியோர் அற்பம் ஒன்றினையும் விரும்பார்.* **(5.9.21)**

வெந்(து)ஓடும் ஆபத்தாம் கருவேல் காட்டை
வெட்டுமழு பரமசுகம் மேவும் தானம்
சந்தோடம் சாந்தியெனும் மரப்பூங் கொத்து
சாற்றுறும்இந் நிராசையுறில் தளர்வு தீரும்
அந்தோபார் குளப்படியாம் முளையா மேரு
ஆசைகுரு விக்கூடாம் அவனி மூன்றும்
வந்தோர்புன் துரும்பாகும் நிராசை பூண்ட
மாறாத அலங்கார வடிவு ளோர்க்கே.

**பொழிப்புரை:** *மூன்று வகைத் துன்பங்களால் தபிக்கப்பட்டுச் சுழன்று ஓடும் ஆபத்துகளாகிய கருவேல மரங்கள் நிறைந்த காட்டினை நாசம் செய்யும் கோடரி போன்றதாம் நிராசை பேரானந்தம் அடையும் பதமாம். பெற்றதைக் கொண்டு மகிழ்ச்சியால் எழும் சந்தோஷம், உபசாந்தம் என்னும் மரங்களின் பூங்கொத்து சொல்லப்பட்ட இந்த நிராசை அடைந்தக்கால் சித்த அமைதி உண்டாகும். மாறாத இந்த நிராசையை அடைந்து அலங்காரமாக அணிந்துள்ளவர்களுக்குப் பூவுலகமும் பசுவின் குளம்படி ஆகும். ஆச்சரியம். மேரு மலையும் சிறு குருவிக் கூடாகும். மூவுலகும் சிறிய துரும்பாகும்.* **(5.9.22)**

காயத்தின் வேறாகத் தன்னைக் கண்டோன்
காயம்(ம்)ஈ ரினும்அறியான் கன்னல் கட்டி
தீயில்கா யினும்அரிந்த போதும் இன்பம்
தீராத வாறுபோல் தெளிந்த ஞானி
மாயத்தின் மோகத்தால் பேதம் ஆகான்
மணந்தபர புருடன்மேல் மனம்சேர் மங்கை
நேயத்தால் மனைத்தொழில்கள் செய்யு மாப்போல்
நிகழ்தொழில்செய் யினும்பரத்தின் நிலைமை நீங்கான்.

**பொழிப்புரை:** *மூன்று தேகங்களுக்கும் வேறான சாட்சியாகத் தன்னை அறிந்து பிரம்மத்தை உணர்ந்தவன் தேகத்தைத் துண்டு துண்டாக வெட்டப்பட்ட போதிலும் வேதனை அடையான். வெல்லத்தை அக்கினியில் பாகு போல் காய்ச்சினாலும், துண்டு துண்டாக நறுக்கினாலும் (நீரில் கரைத்தாலும்) இனிப்பு சுபாவத்தை விட்டு விடாத தன்மை போல, பிராந்திகளில் இருந்து தெளிவடைந்த ஞானி மாயையினால் உண்டாக்கப்பட்ட பொருள்களின் மோகத்தினால் மாறுபாடாக ஆகமாட்டான். அனுபவித்த கள்ளப் புருஷனின் மீது மனம் பதித்த மணமான மங்கை, தனது வீட்டில் செய்யும் தொழில்களைச் சரியாகச் செய்வதைப் போல, நுகர் வினைவசத்தால் வரப்பெற்ற தொழில்களைச் செய்த போதிலும் தனது சொரூபத்தின் நிலையிலிருந்து தவறாமல் இருப்பான்.* **(5.9.23)**

பண்டத்தில் பற்றின்மை யாலே சித்தம்
பயில்சாந்தி முத்திதரும் பகர்ந்த முத்தி
பிண்டத்தோ(டு) இருந்தாலும் இராவிட் டாலும்
பேறாகும் பற்(று)அறுத்த பெரியோர்க்(கு) என்பர்
மண்டுற்ற நேயமற வாழ்வோர் இன்பம்
வரும்சீவன் முத்தராம் வளர்நே யத்தால்
தொண்டுற்று வாழு(ம்)அவர் பந்தம் உற்றோர்
சொன்னமூன் றாம்அவனே தூய முத்தன்.

**பொழிப்புரை:** *பொருள்களில் பற்றின்மையாலே மனமானது முயன்று பரம சாந்தியையும் முத்தித் தன்மையும் அடையும். கூறிய மோட்சமானது தேகத்தோடு இருந்தாலும், இல்லாவிட்டாலும் பாவம் அற்ற மகான்களுக்குப் பிரயோசனமாகக் கிடைக்கும் என்று கூறுவர். நெருங்கிய வெளிப்புறப் பொருள்களில் பற்றாதவராய்*

*வாழும் அறிஞர் இன்ப வடிவாக இருக்கும் சீவன் முத்தர் ஆவர். மேன்மேலும் வளரும் பொருள்களின் பற்றினால் அடிமைப்பட்டு வாழுபவர் பந்தத்தில் கட்டுப்பட்டவரே ஆவர். கூறிய மூன்றாம் அவனே அதாவது பொருள்களில் பற்றில்லாமல், தேகத்தோடு கூடாமல் வாழ்பவனே தூய முத்தன் ஆவான்.* **(5.9.24)**

**வருதொழிலின் விருப்புறான் வர்த்த மான**
**வழிநிற்பன் சென்றவற்றை மனத்தில் எண்ணான்**
**கருமமுழு வதும்இயற்றும் தொடர்பந் தத்தில்**
**கலந்தவர்பால் மனம்பற்றான் கவலை கூரான்**
**மருவியவோர் பத்தர்பால் பத்த னாகும்**
**வஞ்சகர்பால் வஞ்சகனாம் வாலர் தம்பால்**
**பருவமுறா வாலனாம் விருத்தர் ஆனோர்**
**பால்விருத்த னாம்தீரர் பாலும் ஆங்கே.**

**பொழிப்புரை:** *வருகின்ற காரியங்களில் இச்சையை அடையான். நிகழ்காலத் தொழில்களின் வழியிலே நிற்பான். சென்று விட்டதை மனதில் எண்ணிப் பார்க்கமாட்டான். சகல காரியங்களையும் செய்து வருவான். தொடர்ந்து வரும் பந்தத்தில் கட்டுப்பட்டவர்களிடம் மனம் பற்றமாட்டான், அதற்காகக் கவலையும் கொள்ளான். பொருந்திய ஒப்பற்ற அன்பர்களிடத்தில் அன்பனாக இருப்பான். வஞ்சகரிடத்தில் வஞ்சகனாகவே இருப்பான். குழந்தைகளிடத்தில் குழந்தைப் பருவத்தனாகவே இருப்பான். வயதான முதியவரிடத்தில் முதியவர்போல இருப்பான். தீரரிடத்தில் தைரியவானாகத் திகழ்வான்.* **(5.9.25)**

**விடலைபால் விடலையாம் துயருற் றோர்பால்**
**வெந்துயரம் உறுநிலைமை விடாத புந்தி**
**திடமுளதாம் ஆனந்தம் நிறைந்து தோன்றும்**
**செவ்வியனாம் புண்ணியர்தம் சிறப்பே செய்யும்**
**மடமையிலா அறிஞனாம் தெளிந்தோன் ஆகும்**
**மதுர(ம்)உள னாம்தீன மனம்இல் லோனாம்**
**சுடர்குளிரில் மதிகருகி எரிகீழ் நோக்கில்**
**துளங்கிவிய வான்சீவன் முத்தன் தூயோன்.**

**பொழிப்புரை:** *இள வயது உடையவர் தம்மிடத்தில் இள வயது உடையவன் ஆகி, துயர் அடைந்திருப்பவர் தம்மிடத்தில் கொடிய துயரம் அடைந்தவன் ஆகி, தன் நிலைமை மாறாத திட புத்தி உடையவன் ஆகி, பரிபூரண ஆனந்தம் உடையவன் ஆகி, காட்சிக்கு சிறந்தவனாய், புண்ணியர் தம் செயல் செய்பவன் ஆகி, மிகுந்த பிரஞ்ஞை உடையவன் ஆகி, தெளிந்தவனாக நிற்பான். இனிமையான சுபாவம் உடையவனாகி, தீன மனம் இல்லாதவனாகி, விளங்குகின்ற பரிசுத்தமான சீவன் முத்தன் சூரியன் குளிர்ச்சியை அடைந்தாலும், சந்திரன் வெப்பம் உடையவன் ஆயினும், அக்கினி கீழ் நோக்கி எரிந்தாலும் அதிசயம் அடையான்.* **(5.9.26)**

இதுவெனத்தோன் றியஎல்லாம் சிற்சொ ரூபம்
இவ்வண்ணம் பலசத்தி இலங்கும் என்றே
புதுமைகளின் வியப்புறார் சீவன் முத்தர்
புனல்அசைவால் வேற்றுமையே போலத் தோன்றும்
முதுசுழிபோ லவும்விண்ணில் மயிலின் தோகை
முன்புகடி(து) அசைத்தலுமே முத்தின் கூட்டம்
கதுமெனமெய் போல்தோன்றல் போல வும்தான்
கனத்தசகம் மனத்(து)அசைவால் கடிது தோன்றும்.

**பொழிப்புரை:** *இது இது என்று புலப்படும் அனைத்தும் சித்து வடிவம் ஆகும். இவ்வாறு பல சத்திகள் விளங்கும் என்றே புதுமையானவற்றில் ஆச்சரியத்தை அடையார் சீவன் முத்தர். நீரின் அசைவினால் வேறானதாகத் தோன்றும் நீர்ச்சுழல் போலவும், மயிலின் தோகை விரைந்து சுற்றலும் முத்து மண்டலம் திடீரென்று உண்மை போலத் தோன்றுதல் போலவும், மனதின் சஞ்சலத்தினால் (அசைவினால்) இந்தப் பெரிய உலகமானது விரைவில் தோன்றும்.* **(5.9.27)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

என்ன ஓதலும் யாதினால் அசைந்திடும் யாதினால் அசையாது
சொன்ன நெஞ்சம் திருத்த(ல்)ஆம் நெறிஎது சொல்லெனும் இராமற்குப்
பன்னு மாதவன் உரைசெய்வான் எள்ளிலே எண்ணெயும் பனிதன்னில்
மன்னு வெண்மையும் போல்மனத்(து) அசைவுதான் மருவியே மிகத்தோன்றும்.

**பொழிப்புரை:** *என்று கூறவும், எதனால் சலித்திடும், எதனால் சலித்திடாது, கூறிய மனதினைச் சீர்படுத்தும் வழி யாது என்று வினவிய இராகவனுக்குப் பெருந்தவம் செய்திருக்கும் வசிட்டர் உபதேசிக்கின்றார். எள்ளிலே எண்ணெய் போலவும், பனியில் வெண்மை நிறத்தைப் போலவும் மனதின் அசைவினால் இந்த உலகமானது சகஜமாகப் பொருந்தியே தோற்றம் அளிக்கும்.* **(5.9.28)**



*மனம் ஜீவித்திருப்ப அதன் அசைவினை அகற்ற முடியவே முடியாதாம். அசைவின் நிரோதத்தால் உபய நாசப் பொருட்டு ஞானக்கிரமமும் சாத்திரத்தில் காண்பிக்கப் பெற்றதாம் எனக் கூறுகிறார்...*

சித்த நாசத்தின் நெறிஇரண்(டு) யோகமும் தெளிந்தஞா னமும்ஆகும்
ஒத்த யோகம்தான் மனத்துறு தொழிலினை ஒருவழிப் படமாற்றல்
சுத்த ஞானம்தான் நலம்பெறக் காண்பதாம் தொடர்மனம் ஏதென்னில்
மெத்தும் ஆகம பூடணர் உரைத்தது விசைஉயிர் அசைவாகும்.

**பொழிப்புரை:** *மனோ நாச மார்க்கம் யோகமும் தெளிந்த ஞானமும் ஆகும். ஆன்றோர்க்கும் சுருதிக்கும் பொருத்தமான யோகம் தான் சித்தத்தின் விருத்திகளை நிரோதம் (தடுத்தல்) செய்தலாம். தூய பிரம்ம ஞானம் சந்தேக விபரீதம் இன்றித்*

*தரிசித்தலாம். தொன்று தொட்டு வருகின்ற மனம் எத்தகையது என்றால், மேலான வேதாகமங்களையே ஆபரணமாகக் கொண்டவர் கூறியது விரைவான பிராணனின் சலனமாகும்.* **(5.9.29)**

**உரைசெய் ஆருயிர் தடைப்படில் உள்ளமும் ஒழியும்நெஞ்(சு) அசைவற்றால்**
**புரைசெய் சென்மம்போம் ஆதித்தன் போய்விழில் புவித்தொழில் போமாபோல்**
**வரைசெய் மார்பனே என்றலும் உடல்எனும் மனையின்விண் ணிடைநாளும்**
**விரைவில் ஓய்(வு)அற உழல்பிரா ணாதியை விலக்கு(ம்)ஆ(று) எதுவென்றான்.**

**பொழிப்புரை:** *கூறிய சலனம் உடைய பிராணன் ஒடுக்கப்பட்டால் மனமும் இலயமும் (ஒடுக்கமும்) ஆகும். மனமானது சலிக்காவிடில் (சாந்தமானால்) சூரியன் அஸ்தமனம் ஆகிவிட்டால் பூமியில் தொழில்களும் செய்ய முடியாமல் போவதுபோல் குற்றமற்ற பிறவியும் அற்றுப் போகும். மலைபோன்ற அகன்ற மார்புடையவனே! என்று வசிட்டர் கூறவும், தேகம் என்கின்ற ஆகாயத்தில் எப்போதும் வேகமாக இடைவிடாது சஞ்சரிக்கும் பிராணன் முதலியவற்றைத் தடைசெய்யும் வகை யாது என்று இராம பிரான் வினவினார்.* **(5.9.30)**

**முனிவன் ஓதுவான் நூலொடும் அறிஞரை முன்னியே விராகத்தை**
**நனிமு யன்றுகற்(று) இதனினால் குடும்பமாம் நடைவிலங்(கு) அதுவிட்டுத்**
**தனிநி ராசைதான் நிறைந்திடில் விரும்பிய தற்பொருள் தியானத்தால்**
**அனிசம் நீள்பகல் ஒருமையே விளங்கிட அடுத்தசா தனைதன்னால்.**

**பொழிப்புரை:** *வசிட்ட முனிவர் கூறுகின்றார்: அத்யாத்ம சாத்திரங்களுடன் ஆராய்ந்து சாதுக்களைச் சரண் அடைந்து வைராக்கிய அப்பியாசங்களை நன்றாக அடைந்து இவற்றால் நடை விலங்கான குடும்பப் பற்றினை ஒழித்து, ஒப்பற்ற நிராசை தான் திடப்படுமாயின், விரும்பிய மூர்த்தி தியானத்தால் நெடுங்காலம் ஏகாக்கிரமே துலங்கிடச் செய்துவரும் அப்பியாச பலத்தினால்,* **(5.9.31)**

**ஏக தத்துவக் கனபரி சயத்தினால் இவ்வுயிர் தடைஎய்தும்**
**தேக பூரகா தியில்உயிர் இளைப்(பு)அறத் திடமுறு பழக்கத்தால்**
**ஊக மாகஏ காந்த(ம்)உற்(று) உள்ளுணர் யோகபா வனைதன்னால்**
**மேக மேனியாய் பிராணனில் அசைவுதான் விலக்கிடப் படும்அன்றே.**

**பொழிப்புரை:** *பேதமில்லாத ஏகமான அத்வைத திட அப்பியாசத்தால் இந்தப் பிராணனின் அசைவானது தடைபட்டுவிடும். தேக, பூரக, ரேசக, கும்பக அப்பியாசத்தால் பிராணன் ஒடுங்கும்படி திடமாகச் செய்யில் யுக்தியுடன் ஏகாக்கிர வடிவப் பரிணாமத்தை அடைந்து உள்முகப் பார்வையோடு கூடிய தியான யோகத்தால் கார்மேக மேனியனே பிராணாயாமம் கூடும். (பிராணன் அசைவுநிற்கும்)* **(5.9.32)**

**பிரண வத்தி(ன்)உச் சாரண முடிவினில் பிறந்தசொல் லுறும்உண்மை**
**விரவு நாட்டத்தால் துயில்பவன் உணர்வுதான் வெளிப்படில் உயிர்நிற்கும்**
**பரவு தாலுமூ லஞ்செறி இதழினைப் படருநா வால்தள்ளி**
**உரவி னால்உயர் புரையிலே பிராணனை ஓட்டினால் உயிர்நிற்கும்.**

**பொழிப்புரை:** *ஓங்காரத்தின் உச்சாரண முடிவில் உண்டாம் சப்த தத்துவ அப்பியாசத்தால் தூங்குபவன் போல விருத்தி சாந்தம் அடைந்தால் பிராணன் அடங்கும். நாவின் அடிப்பாகத்தில் பொருந்தியுள்ள உள்நாக்கு (கண்டிகை) இதனை நீண்ட நாவினால் கீழே தள்ளி அதிதீவிர அப்பியாச பலத்தினால் மேலாய பிராண வாயுவை மேல் துவாரத்தில் புகுத்தினால் பிராணனின் அசைவு நிற்கும்.* **(5.9.33)**

நாடும் அங்குலி பன்னிரண்(டு) எல்லையில் நாசியின் நுனிதன்னில்
நீடு வானத்தில் அறிவுகள் இறந்திடில் நிலைபெற உயிர்நிற்கும்
தேடு சாதனை யால்உயர் புரைவழி சிங்குவை மேல்விரல்ஈரா(று)
ஊடு போய்உயிர் எல்லையில் நின்(று)உணர்(வு) ஒளிக்குமேல் உயிர்நிற்கும்.

**பொழிப்புரை:** *கருதும் பன்னிரண்டு அங்குல அளவாய் நாசியின் நுனியில் உபாதிகளுக்கு அதீதமான (உபாதிகளைக் கடந்த) ஆகாயத்தில் விருத்திகள் லயமாகில் நிலையாகப் பிராணன் அசையாமல் இருக்கும். முயலும் பிராணனது அப்பியாசத்தால் ஊர்த்வ ரந்திர மார்க்கம் நாவானது மேலே துவாத சாந்தத்துள் போய் விலயமாகி அடங்குமாகில் பிராணன் தன் அசைவு நீத்து நிற்கும்.* **(5.9.34)**

புருவ நாப்பணே கண்மணிப் பார்வைதான் பொருவில்சாந் தியில்மாய்ந்து
தெருளும் கேதன அறி(வு)அங்கு தெரி(வு)அறில் திரிவுறா(து) உயிர்நிற்கும்
கருது கின்றஇந் நெறிகளால் அனேகசங் கற்பகற் பிதபேதத்(து)
அருள்செ யும்பல தேசிகர் சொற்களால் அசைவற உயிர்நிற்கும்.

**பொழிப்புரை:** *புருவ மத்தியில் கண்விழிப் பார்வை தான் சாந்தியாகி முடிவினை அடையுமாயின், புருவ மத்தியில் சின்மாத்திர வத்துவே தன்மாத்திர தத்துவம் என உணர்ந்து கொள்ளில் அசையாமல் பிராண வாயுவானது நிற்கும். கருதுகின்ற இந்த வழிகளால் பல சங்கற்ப கற்பிதங்களால் பல தேசிகர் உபதேசங்களால் பிராணன் சலனம் இல்லாமல் அடங்கும்.* **(5.9.35)**

இந்த யோகங்களால் அறிவெலாம் இளைப்பற இயற்றுசா தனையாலே
வந்து மேற்பிற வாதவர்க்(கு) உபாயமாய் வந்துறும் பழக்கத்தால்
உந்தும் ஆருயிர் அசைவுதான் கெடும்எனில் உள்ளமும் சமித்தாறும்
சிந்தை தான்சமித் தாறுமேல் செல்கதி சேடமாய் விடும்தானே.

**பொழிப்புரை:** *இந்த யோகக் கிரமங்களால் சித்த விருத்தி அமைதி அடையச் செய்யும். செய்கின்ற அப்பியாசத்தினால் இனிமேல் வந்து பிறவி எடுக்காதவர்க்கு உபாயமாக வந்து அடைந்திடும். அப்பியாசத்தினால் மேன்மேலும் எழும் பிராண வாயுவின் சலனம் அடங்குமாயின் சித்தம் சாந்தம் உற்று அமைதி அடையும். சித்தமானது சாந்தி அடையுமாகில் அடையத் தக்க மோட்ச பதம் எஞ்சி நிற்கும்.* **(5.9.36)**

விகற்ப வாக்கெலாம் எப்பதம் நோக்கியே மீளு(ம்)அப் பதம்தானே
விகற்பம் அற்றிடில் சேடிக்கும் எனமுனி விளம்பலும் விறல்வீரன்
நிகழ்த்தி யோகத்தை உறுமனம் பொறிகளின் நெறிசெலாச் சமம்தன்னை
நிகழ்த்தி னாய்இனி உண்மைஞா னத்தையும் நிகழ்த்தென முனிசொல்வான்.

**பொழிப்புரை:** *பற்பல விதமான வாக்குகள் யாவும் எந்தப் பரம பதத்தினைப் புலப்பட வைக்க முடியாமல் திரும்பி விடுமோ அந்தப் பரம பதமே யாதொரு விகற்பமும் செய்யாவிடின் எஞ்சி நிற்கும் என்று வசிட்ட முனிவர் உரைக்கவும், வலிமையுடைய வீரனான இராம பிரான் "யோகத்தைக் கூறி அதனோடு கூடிய மனமானது இந்திரிய விஷயங்களின் வழியில் போகாத சாந்தியைக் கூறினீர். இனித் தத்துவ ஞானத்தையும் கூற வேண்டும்" என்று கேட்கவும் வசிட்டர் கூறத்தொடங்கினார்.* **(5.9.37)**

**ஆதி அந்த(ம்)இல் தோற்றமே தன்வடி வாகிய பரம்இங்கு**
**சோதி யாய்நின்றது(து) என்னு(ம்)இவ் வுறுதியே துகள்அறு மெய்ஞ்ஞானம்**
**பேதி யாநின்ற கடபட வடிவமாம் பெரும்பொருள் பலசத்தி**
**தீ(து)இல் தற்பரம் வேறில(து) என்(று)உணர் திண்மையே நற்காட்சி.**

**பொழிப்புரை:** *முதலும் முடிவும் இல்லாத தோற்றமே தனது வடிவமாகிய பரமாத்மா இவ்விடத்தில் சோதியாய் நிலைபெற்று இருக்கிறது என்னும் சிறந்த நிச்சயமே குற்றமற்ற எல்லையில்லாத மெய்ஞ்ஞானம் ஆகும். வேறு வேறாகத் தோன்றுகின்ற இந்தக் கடம், துணி வடிவங்களாகிய பெருத்த பொருள்களின் பல சத்திகள். தீது இல்லாத பரமான்மாவே அல்லாமல் வேறு அல்ல என்று அறியும் திடமான நிச்சயமே நல்ல காட்சியாம். (ஞானமாம்).* **(5.9.38)**

**செகங்கள் மூன்றினும் உண்மையாம் பொருள்அறி திறம்எது வெனச்செப்பில்**
**செகங்கள் யாவையும் தற்பொருள் வடிவெனத் திரமுறு நிறைவாகும்**
**செகங்கள் யாவையும் சொரூபமே இதில்திகழ் அபாவபா வனைஎங்கே**
**செகங்க ளில்செறி பெத்தமுத் திகள்எனத் தியங்குவேற் றுமைஎங்கே.**

**பொழிப்புரை:** *மூன்று உலகங்களினும் தத்துவ யதார்த்தத்தை உணர்கின்ற திறம் எது என்று கூறில், சகல உலகமும் சைதன்னிய பரமான்ம வடிவமே ஆகும் எனத் திடமுறு பரிபூரணமாம். உலகங்கள் யாவும் அறிவு வடிவமே என்கின்ற இதனிடத்தில் விளங்கும் இல்லாமை-இருப்பது என்ற கற்பனை எங்கு உள்ளது? உலகங்களில் பொருந்துகின்ற பந்தம்-முத்தி என்று திக்குமுக்காடும் பேத புத்தி எந்த இடத்தில் உள்ளதாகும்? (இல்லை என்பது பொருள்)* **(5.9.39)**

**பிறிது காண்பன இல்லைநெஞ் சில்லைமெய்ப் பிரமமே அவையாகிச்**
**செறியும் மால்இவை யாவு(ம்)ஒன் றாகிய சிற்பர விசும்பாகும்**
**நெறிகொள் பந்தம்வீ(டு) எங்குள இதுவென நிகழ்பெரு வடிவாகிக்**
**குறிய றும்பெரும் பிரமமே நின்றது குறைந்(து)இறந் ததுநெஞ்சே.**

**பொழிப்புரை:** *வேறாக (அன்னியமாக)க் காணப்படுபவை (திருசியம்) ஒன்றும் இல்லை. சித்தம் இல்லை. சத்திய ஞானானந்தப் பிரம்மமே யாவும் ஆகி இருக்கும். மயக்க மாத்திரமாகத் தோற்றும் இந்த காணப்படும்(திருசியம்) யாவும் ஏகமாகிய சிதாகாசப் பரம்பொருள் வடிவமே ஆகும். நெறிமுறைகளால் உண்டாகும் பந்தம்-மோட்சம் எங்கு உள்ளது? இது என்று விளங்கும் பெரிய வடிவமாகிக் குறி (சின்னம்) இல்லாததாகிய பெரியதுக்கெல்லாம் பெரிதான பிரம்மமே நிலைபெற்றிருப்பது அதில் ஒடுங்கிப் போனதே மனமாகும்.* **(5.9.40)**

**ஒருமை யாகவே உணர்வினால் உணர்தியால் உருவைநன் குறநோக்கில்**
**தருவும் கற்களும் படங்களும் முதலிய சற்றும்வேற் றுமைஇல்லை**
**மருவு சங்கற்பம் எங்குள சீவனும் வையகப் பொருள்யாவும்**
**அருகல் இன்றிய சாந்தரூ பம்பெறும் அடிமுடி உறநோக்கில்.**

**பொழிப்புரை:** *ஏகாக்கிரமாகவே அறிவினால் விசாரித்து நோக்குவாய். வடிவத்தை நன்றாக ஊன்றிப் பார்க்கில் மரங்கள், கற்கள், துணிகள் முதலானவை கொஞ்சமும் பேதமாக இல்லை. (கேவலம் காரண வடிவமாகவே இருக்கும் என்பதாக.) பொருந்திய சங்கற்ப விகற்பம் எங்கு உள்ளதாம்? முதலும் முடிவையும் உற்றுப் பார்க்கில் சீவனும் உலகப் பொருள்கள் யாவும் நாசமில்லாத சாந்த வடிவம் பெறும்.* **(5.9.41)**

**அந்த ரூபம்எப் போதும்நீ ஆகுவை அண்ணலே இரண்(டு)ஒன்(று)என்(று)**
**உந்து பேதத்தால் சரைமர ணங்க(ள்)என்(று) உன்னுறு மயக்கத்தால்**
**தொந்த உள்ளத்தால் தான்தனிப் பிரமமே தோன்றுகின் றதுதன்னால்**
**சிந்து கின்றநீள் திரையினால் பன்மையால் தெரிதரும் சலம்போல.**

**பொழிப்புரை:** *இராகவனே! அந்தப் பிரம்ம வடிவம் எக்காலத்திலும் நீ ஆவாய். துவைத அத்வைதமாக எழுந்த தோற்றங்களாலும், மூப்பு மரணங்கள் என்னும் மயக்கத்தாலும், துவந்துவம் வாய்ந்த மனத்தினாலும் ஆன்மாவாகிய கேவலம் ஒப்பற்ற பிரம்மமே தோன்றுகின்றது. தன்னால் வீசி எறிகின்ற நீண்ட அலைகள் பலவற்றால் கடல் தன்னிலேயே பலவாகத் தெரிவது போல.* **(5.9.42)**

**சுத்த மானதற் பரத்தினைத் தழுவியே தொடர்ந்தஉள் மதியாலே**
**ஒத்து நிற்பவர் தம்மைஎப் போகம்வந்(து) உறுபிணி செயவற்றா**
**மெத்து போகத்தை முதலிய பகையெலாம் விசாரமே மிகுந்தோர்தம்**
**புத்தி யைச்சிறி(து) அசைத்திடா வசந்தனால் பொருப்(பு)அசை வதும்உண்டோ.**

**பொழிப்புரை:** *தூயதான பரமான்ம வத்துவைத் தானாக அனுபவித்து உள்முக நாட்டத்துடன் கூடியிருக்கும் பார்வையொடு சமமாய் வாழும் மகானை எந்தப் போகம் தான் வந்து தன்னிடத்துள்ள துக்கமாகிய நோயினைத் தரவல்ல சாமர்த்தியம் உடையதாம்? மிகுந்து வந்தடையும் போகம் முதலிய பகையெல்லாம் திடமாக விசாரம் செய்பவருடைய புத்தியைச் சற்றும் அசைத்திடாது. தென்றல் காற்றினால் மலையானது அசைவது உண்டோ?* **(5.9.43)**

**உரைத்த பன்மைகள் நினைவிலே உள்ளவாம் உண்மையாய் இலஉள்ளே**
**நிரைத்த பல்வகை வாவியில் பிறிவிலா நிகழ்தரு நீர்போலக்**
**கரைத்தல் அன்றிஇவ் வுறுதிசேர் மதியுளோர் களங்கமில் வீடுற்றோர்**
**புரைத்தல் அன்றியே நலன்உறக் கண்டநற் பொருளு(ம்)இங்(கு) இதுதானே.**

**பொழிப்புரை:** *கூறிய பல விகற்பங்களோடு பேதங்கள் பாவனை மாத்திரமாகவே உள்ளனவாம். அகத்தில் உண்மையாக இல்லாதனவாம். அடுக்கடுக்காய்த் தோன்றுகின்ற அலைகள், நீர்க்குமிழிகள் தடாகத்தில் பேதம் ஒன்றும் இன்றி நீர் மயமாகவே விளங்குவது போலக் கெடாததான (குன்றாத) இந்தத் துணிவு உடைய புத்தி உள்ளவர் எல்லா*

*அனர்த்தங்களும் தீர்ந்த ஆனந்த மோட்சம் அடைந்தவர் ஆவர். குற்றம் இல்லாது நன்கு தரிசித்த நல்ல வத்துவும் இவ்விடத்தில் இதுவே ஆகும்.* **(5.9.44)**

**ஈது வேறு(ு)ஒன்று முத்திசென்(று) உறுநெறி இயம்புதும் கேள்வீரா**
**வீத கவ்வியன் என்(று)ஒரு பெருந்தவன் விந்தவெற் பிடைவாழ்வோன்**
**காத லால்உயர் கன்மகாண் டத்திலே காலமட் டறநின்று**
**கேத மாதியே வியாதிவன் பவம்தரு கிரியையால் மிகநொந்தான்.**

**பொழிப்புரை:** *இதற்கு வேறாக (இந்திரியங்கள் ஈன பாவம் அடைந்து சமாதியால்) மோட்சம் அடைந்து உய்வடைகின்ற நெறி ஒன்று உளது கூறுவோம், கேள் வீரனே! வீத கவ்வியன் என்று ஒரு பெரும் தவம் செய்தவன் விந்திய மலைக் குகைகளில் வசிப்பவன். அளவில்லாத காலம் மேலான கன்ம காண்டத்திலே பற்றி நின்று விருப்பொடு சிரத்தையாய் துன்பம் தருகின்ற வியாதி, கொடிய பிறவிகள் தரும் கருமங்களைச் செய்து மிகவும் நொந்து போனான்.* **(5.9.45)**

**நிருவி கற்பமாம் சமாதியின் பொருட்டுமுன் நிகழ்கிரி யைகள்எல்லாம்**
**ஒருவி விட்டனன் பன்னசா லையினிடை உற்றனன் கலைத்தோல்மேல்**
**மருவு பெத்தபங் கேரு(க)ஆ சனத்தனன் வருகுதி மிசைவைத்த**
**இருக ரத்திரள் விரலினின் இவ்வகை இருந்தனன் ஒருப்பட்டு.**

**பொழிப்புரை:** *நிருவிகற்ப சமாதியின் பொருட்டு, முன்பு செய்து வந்த அனைத்தையும் முழுவதுமாக விட்டனன். தவத்தின் பொருட்டுக் கட்டப்பட்ட பர்னக் சாலையின் உள்ளே புகுந்தனன். மான்தோல் மீது பத்மாசனம் இட்டு, பாத தல மூலங்களின் மேல் பெருத்த விரல்களை உடைய இரண்டு கைகளை உடையவன் இவ்வாறு ஏகாக்கிரமாக ஆசனத்தில் இருந்தனன்.* **(5.9.46)**

**பரந்து திக்குறு மனத்தினைப் பையப்பையப் பார்த்துமீட் டனன்உள்ளே**
**நிரந்த ரித்தனன் புறத்துள பரிசங்கள் நீத்தனன் ஒழுங்காலே**
**துரந்த சித்தத்தின் திரநிலை விரும்பினன் துகளறு மனத்தாலே**
**புரந்த நற்றவ வீதகவ் வியமுனி புலப்பட நிலைவுற்றான்.**

**பொழிப்புரை:** *பல திசைகளில் திரியும் மனதினைத் தோஷ திருஷ்டி (அனைத்தும் மித்தை என்ற கோணத்தின்) மூலமாகப் பார்த்து மெதுவாக இதயத்தில் திருப்பியவனாய் நிலைநிறுத்தினன். முறையாக வெளியில் உள்ள இந்திரிய விஷயங்களையும் அகற்றினன். குற்றமற்ற மனதினாலே ஆன்ம சிந்தனை நீங்கிய மனதின் திடநிலை பெறும் தன்மையை விரும்பினன். உயர்வான தவத்தினைக் காத்த வீத கவ்விய முனி நன்கு ஆராய்ந்தனன்.* **(5.9.47)**

**வியப்பு டைத்(து)இது மீளுவித் திருக்கவும் விசைஉயிர் அசைவுற்றுத்**
**தியக்கு நெஞ்சகம் திரநிலை அன்றியே சிறுசரு(கு) எனஓடும்**
**பயக்கும் இன்ப(ம்)இல் கடநின்று படமுறும் படநின்று கடம்எய்தும்**
**மயக்கம் மேவும்பல் பொருள்களில் போய்விழு மரங்களில் குரங்கேபோல்.**

**பொழிப்புரை:** *வெளிப்புறத்தில் செல்ல விடாமல் தடுத்திருக்கவும் பிராண சலனத்தைப் பொருந்தி மயங்கிச் சலிக்கும் மனம் சொரூபத்தில் நிலைபெறாமல் அற்ப சருகு போல ஓடும், ஆச்சிரியம் உடையது இது. சுகத்தைத் தராத கடத்திலிருந்து துணியை அடையும். துணியிலிருந்து கடத்திற்கு வரும். மயக்கம் அடைந்து காணப்படும் பல பொருள்களில் மரங்களில் குரங்கு தாவுவது போல ஓடி ஓடித் தாவி (பொருள்களின் பேரில்) விழும்.* **(5.9.48)**

விழிமு தல்புல னாய்மனத் துவாரமாய் மேதைஇந் தியம்என்றே
ஒழிவி லாஅபி தானம்செய் ஐம்புலன் உணர்ந்துகாண் புறும்நானே
கழியும் இந்தியங் காள்அவ மாகவே கலங்குகேன் அந்தோநீர்
அழி(வு)இல் சின்மயப் பகவனாய் சகலசான் றாகிநின் றனன்நானே.

**பொழிப்புரை:** *கண் முதலிய கரணங்களாய், உள்ளம் செல்ல வாயில்களாய் ஞானேந்திரியம் என இடைவிடாமல் கவனத்தைத் திருப்பும் ஐம்புலன்களையும் காண்பவனாகிய நானே நன்றாக அறிகின்றேன். கழிந்து போகும் இந்திரியங்களே! பயன் இன்றிக் கலக்கத்தை அடைந்து உழலுகின்றது ஏன்? ஐயகோ! நீங்கள் அழிவில்லாத சிற்சொரூப சேதனனாய் நானே சகல சாட்சியாகி நின்றனன்.* **(5.9.49)**

அன்ன தன்மையுற்(று) அறிவினால் மிக்கயான் அறிந்தகண் முதல்ஐந்தும்
பின்ன மாகியே வானுல கத்தினைப் பிரிந்தபா தலம்போலாம்
பன்ன கங்களும் வழிச்செலும் அவர்களும் பறையரும் மறையோரும்
என்ன அச்சமுற்(று) உயர்ந்தசின் மாத்திரம் இந்தியத்(து) அரு(கு)எய்தா.

**பொழிப்புரை:** *சர்வ சாட்சியே நான் என்ற உணர்வினால் மிகுந்த யான் அறிந்த கண் முதலான ஐந்தும் வேறாகியே சுவர்க்கத்தைப் பிரிந்து நின்ற பாதாள லோகம் போலச் சிறிதேனும் சம்பந்தம் இல்லையாம். பாம்புகளும். வழி செல்வோர்களும், நீசர்களும், அந்தணரும் போலப் பயந்து மேலான சிதாகாசமாய் உள்ள பிரத்தியக் ஆத்மாவினிடத்து இந்திரியங்கள் அருகில் செல்லாது.* **(5.9.50)**

சாறு வாகனாய்ச் சாரணன் ஆகிநால் தடந்திசை பலியேற்கப்
பாறு நெஞ்சமே வீணிலே வருந்துதல் பயனில படிமீதே
ஆறி யேவிளை யாடுநீ உனைஅறி(வு) என்னும்வா தனைபொய்யாம்
வேறு பாடுதான் மிகுந்துள மனத்தொடு மெய்யுணர்(வு) ஒன்றாகா.

**பொழிப்புரை:** *தேகாத்மவானாய்ப் பிற நாடு செல்லும் தூதனாய் நான்கு திக்குகளிலும் சென்று பிட்சை வாங்க ஓடும் மனமே! இந்த சகத்தில் வீணாகத் துன்பப்படுவது பிரயோசனம் இல்லை. சித்த அமைதி அடைந்து விளையாடுவாய். மனமாம் நீ உன்னைச் சித்து என்னும் துர்வாசனை மித்தையாம். எப்போதும் வேறாக இருக்கின்ற (பின்னங்களான) மனதோடு சித்சொரூப வத்துவுக்கு ஐக்கியம் கிடையாதாம்.* **(5.9.51)**

சுகம்இ ருக்குனன் நான்என அகங்கரத் துன்மதி இதுதீதாம்
அகம்ம திப்பினால் இவன்அவன் ஆகும்நான் என்னு(ம்)இவ் ஆரம்பம்
மிகஅ கற்றுவாய் உன்வடி(வு) எதுவெனில் விசார(ம்)இன் மையதாகும்
இகவி சாரத்தால் அழிந்திடும் பரிதியால் இருள்கழி வதுபோல.

**பொழிப்புரை:** *சுகமாய் இருக்கின்றேன் யான் என்னும் அகங்கார மய கெட்ட புத்தி இது. தன்னை நன்கு மதிக்கும் கர்வத்தால் இவன் அவன் ஆகும் நான் என்னும் அபிமான வடிவ இந்த தொடக்கத்தை எப்பொழுதும் விட்டு ஒழிப்பாய். நினது வடிவம் எதுவென்றால் விசாரம் இல்லாததே ஆகும். இங்கு ஆன்ம அனான்ம விசாரத்தால் சாந்தம் அடைந்திடுவாய் நீ. சூரியனால் இருள் அகல்வதுபோல்வதே ஆகும்.*
**(5.9.52)**

**முன்னம் தோற்றம்(ம்)அற்(று) இப்பொழு(து) உனக்கென உரு(வு)இன்(று)**
**இம்முறையாலே**
**பின்னும் தோன்றலை என்னுடை நெஞ்சமே பெரிதுநீ பெறும்நன்மை**
**இன்னல் தீர்தெய்வ சகாயத்தால் இடரிலா இன்பமுற்(று) யான்என்றும்**
**துன்னும் சாந்தனாய்த் துரியமாம் என்சொரூ பத்திலே சுகிக்கின்றேன்.**

**பொழிப்புரை:** *விசாரத்திற்கு முன்பும் இல்லை, இப்பொழுதும் கூட மனமாம் உனக்குத் தனக்கென வடிவம் இல்லாமையினால் மத்தியிலும் இல்லை, இந்தக் கிரமமாக இனிமேலும் தோன்றமாட்டாய். பெரியதாக உள்ளது நீ பெறும் தன்மை. துன்பத்தைத் தீர்க்கும் தெய்வ அருளால் துயரம் இல்லாத ஆனந்தத்தை அடைந்து யான் எப்போதும் நிறைந்த உப சாந்தனாய்த் துரியமாகிய எனது வடிவத்திலே ஆனந்தம் கொண்டிருக்கின்றேன். ஆதலால் சம்சாரத்தில் மனதின் நிலைபெறல் துரிய வடிவமாகிய என்னிடத்தில் இல்லவே இல்லையாம்.* **(5.9.53)**

**எனஒ ருப்பட்டு வாதனை தீர்முனி இந்தியம் அலைவின்றி**
**மனனை வன்பினால் நிறுத்தினன் விறகினை மாய்த்ததீச் சிகையுள்ளே**
**நனிஅ டங்கல்போல் இவன்உயிர் ஒழுங்கிலே நன்(கு)ஒடுங் கினமூக்கின்**
**நுனிநுண் பார்வையால் சிறி(து)அலர் கமலமே நோக்கங்கள் நிகரான.**

**பொழிப்புரை:** *என்று இவ்வாறு துணிந்து, வாதனையைத் தீர்த்த வீத கவ்விய முனிவன் புலன்களைத் தடுத்து மனதினையும் வலிந்து அடக்கினன். கட்டையை எரித்து நாசம் செய்த அக்கினிச் சுடர் உள்ளேயே நன்றாக (முற்றிலும்) அடங்குதல் போல இவனது பிராணன்கள் கிரமமாக உள்ளேயே ஒடுங்கின. மூக்கின் நுனியில் வைத்த நுட்பமான பார்வையால் சற்றே விரிந்த தாமரை போல விழிகள் பார்வையுற்றன.* **(5.9.54)**

**சிரம்க முத்துடன் தானங்கள் சமம்உறச் சிலையிலே வகுத்தென்ன**
**நிரந்த சித்திரம் என்னமுன் நூறுஆண்(டு) இருந்தனன் நிமிடம்போல்**
**பரந்த காருநாள் வெள்ளத்தின் எக்கரில் படிந்த(து)இங்(கு) இவன்மேனி**
**உரங்கொள் மாமுனி உணர்ந்தனன் மண்ணினுள் உடல்அசைந் தில(து)என்றே.**

**பொழிப்புரை:** *தலை கழுத்து தேகம் முதலிய இடங்கள் ஒரே சமமாக இருக்க, பாறையில் செதுக்கிய பிம்பம் போல், துணியில் மையினால் எழுதிய ஓவியம் போல் முன்னூறு ஆண்டுகள் சமாதியில் இருந்தனன், கணப்பொழுது போல. விரிந்த மழைக்காலத்து வெள்ளத்தின் சேற்றில் மூடப்பட்டிருந்தது இவன் தேகம். தவத்தின் வலிமை கொண்ட மாண்புடைய முனிவன் பூமியின் உள்ளே தேகம் அசைவற்று இருப்பதை அறிந்தனன்.*
**(5.9.55)**

**தரைம றைத்தலால் அறிவிலே தோன்றிய சரீரத்தில் உயிர்முற்றும்**
**புரைகள் யாவையும் அடைதலால் அசைந்தில போத(ம்)உற் பவித்துள்ளே**
**விரையும் தன்மன வடிவமாம் இதயத்தில் விரிந்(து)அறிந் ததுயாவும்**
**நிரைகொள் சொப்பனம் போல்அவன் அவ்வயின் நெஞ்சுற இவைகண்டான்.**

**பொழிப்புரை:** *மண் மூடியிருத்தலால் புத்தி விருத்தியினாலே தேகத்தில் பிராணன் முழுவதும் நவத் துவாரங்கள் யாவும் தூர்க்கப்பட்டிருத்தலால் சலனம் வரப்பெறவில்லை. உள்ளே உணர்ச்சி உண்டாகி விரைந்து செல்லும் தனது மன வடிவாம் இருதயத்தில் அனைத்தையும் விரிவாக நன்றாக உணர்ந்தது. அந்த வீத கவ்வியன் பல பிறவிகளையும் கனவு போல வரிசையாகக் கண்டான்.* **(5.9.56)**

**ஈசன் வெற்(பு)அயல் முனிவனாய் நூறுஆண்(டு) இருந்தது நூறாண்டு**
**கா(சு)இல் இன்பஇச் சாதரன் ஆனதும் கடவுளர் தொழவிண்ணில்**
**வாச வன்னென ஐந்(து)உகம் இருந்ததும் மதிசடை இறைவற்கு**
**நேச மாம்கண மாய்ஒரு கற்பநாள் நின்றதும் அவன்கண்டான்.**

**பொழிப்புரை:** *ஈசன் திகழ்கின்ற கயிலங்கிரி சாரலின் பக்கமாகக் காட்டில் முனிவனாகிச் சமாதி உடையவனாய் நூறு ஆண்டுகள் இருந்ததும், நூறு ஆண்டுகள் களங்கம் இல்லாத ஆனந்த வித்தியாதரனாக இருந்ததும், தேவதைகளால் வணங்க சுவர்க்கத்தில் இந்திரன் என ஐந்து யுகங்கள் இருந்ததும், சந்திரனைச் சடாமுடியில் சூடிய சிவ பெருமானுக்கு அன்புடைய சிவ கணமாய் ஒரு கற்ப தினம் இருந்ததும் அந்த வீத கவ்வியன் உணர்ந்தான்.* **(5.9.57)**

**விரவு தோற்றர வால்இவை அனைத்தையும் வீதகவ் வியன்நோக்கிப்**
**பரனுக்(கு) ஆட்செய்த பலத்தினால் இறந்தன அறிந்துகாண் வலிஉண்டாய்ப்**
**புரண மாகமுன் பவங்களில் பொன்றிமுன் போயதன் உடல்முற்றும்**
**கரவ றக்கண்டு வீதகவ் வியப்பெயர் காயமாய் வரக்கண்டான்.**

**பொழிப்புரை:** *கலந்த தோற்றத்தால் அல்லது ஞானத்தால் இந்த அனைத்தையும் வீத கவ்வியன் பார்த்து, பரம சிவனுக்குச் சிவகணமாய் சேவை செய்த பலத்தினால், சென்றவை உணர்ந்து பார்க்கும் வலிமை உண்டாகி, முந்தையப் பிறவிகளில் நசித்துப் போன தன்னுடைய முந்தைய தேகங்கள் யாவற்றையும் மறைப்பாம் கலக்கம் இன்றி விளக்கமாகப் பார்த்து, வீத கவ்வியன் என்ற பெயரோடு கூடிய தேகமாய் வந்திருப்பதையும் கண்டான்.* **(5.9.58)**

**மறையும் இவ்வுடல் எடுத்து(ம்)என்(று) எண்ணிநன் வான்கதி ரவன்பாற்போய்**
**முறைசெய் பிங்கலன் தனைக்கொணர்ந்(து) எடுப்பது முடியு(ம்)என்(று)**
**ஒருப்பட்டான் அறையும் காற்றுரு வாய்ப்புரி அட்டக அங்கமாய் கதிரோன்பால்**
**பொறைகொள் மாமுனி சேர்தலும் இதயத்தில் புகுந்தவா(று) இனன்கண்டு.**

**பொழிப்புரை:** *பூமியில் மறைந்து கிடக்கும் இந்தத் தேகத்தை எடுப்போம் என்று உத்தேசித்து நன்றாக ஆகாயத்தில் சஞ்சரிக்கும் சூரிய பகவானிடத்தில் சென்று அவருக்கு ஏவல் செய்யும் பிங்கலன் தனைச் சூரிய பகவான் ஆணையால் கொண்டு வந்து இந்த*

*தேகத்தை எடுப்பது (வெளிப்படுத்துவது) முடியும் என்று நிச்சயித்தான். வீசுகின்ற பிராண வாயு வடிவமாய், சூக்கும தேக வடிவமாய்ச் சூரியனிடத்தே பொறுமையே அணிகலனாகக் கொண்ட மாண்புடைய வீத கவ்விய முனி அடைதலும், இதயத்தில் பிரவேசித்த தன்மையைச் சூரியன் கண்டு,* **(5.9.59)**

**முன்ன நின்றபிங் கலன்தனைக் கதிரவன் முழு(து)உணர்ந்(து) உடன்ஏவ**
**அன்ன வீதகவ் வியப்பெயர் உள்ளமும் ஆதித்தன் உள்நின்று**
**தன்ன(து) ஆக்கையில் விந்தவெற்(பு) அருகுபோய்ச் சார்தரக் கதிரோனால்**
**சொன்ன பிங்கலன் வந்துகை நகத்தினால் தொல்நிலம் உறக்கீறி.**

**பொழிப்புரை:** *சூரிய பகவான் யாவற்றையும் தெரிந்து, முன்னே நின்ற பிங்கலன் தன்னை விரைந்து அனுப்ப, அந்த வீத கவ்வியன் சூக்கும தேகம் சூரிய பகவானுடைய இருதயத்திலே இருந்து (ஆசிர்வதிக்கப் பெற்ற பின்) பிங்கலன் இருதயத்திலே பிரவேசித்துப் புறப்பட்டு விந்த மலையை அடைந்து தன் தேகத்தில் அடையும் படியாகச் சூரியனது ஆணையால் வந்த பிங்கலன் தனது கை நகத்தினால் முன்பு மூடியிருந்த பூமியை நன்கு கீறி,* **(5.9.60)**

**மாநி லத்தினை அகழ்ந்துபிங் கலன்தர வரும் களேபரம் தன்னில்**
**மோன மாம்புரி யட்டகம் புகுந்தது மொழிந்தபிங் கலன்போனான்**
**ஆன மாதவன் மூழ்கினன் செபித்தனன் அருசித்தான் கதிரோனை**
**ஞான நெஞ்சினால் நிறையுடன் முன்புபோல் நலம்திகழ்ந் ததுமீண்டும்.**

**பொழிப்புரை:** *பூமியைத் தோண்டி பிங்கலன் வீத கவ்வியன் தேகத்தை எடுத்துக் கொடுக்க, கிடைத்த தேகத்தில் பிங்கலன் இதயத்திலிருந்தும் நீங்கிய வீத கவ்வியனின் மௌனமாகிய சூக்கும தேகம், அந்த வீத கவ்வியனின் தூல தேகத்துள் வந்து சேர்ந்தது. பிங்கலனும், வீத கவ்விய முனியும் ஒருவருக்கு ஒருவர் வணக்கம் செய்து கொண்டனர். பிங்கலன் சூரிய பகவானிடம் சென்றான். மாண்புடைய தவசிகளுக்குள் சிறந்த வீத கவ்விய முனிவன் தடாகம் சென்று நீராடினான், செபம் செய்தான், சூரிய பகவானை அர்ச்சித்தான். ஞானத்தால் பூரண மயமான தேகம் முன்பு போல் மறுபடியும் நலமாகத் திகழ்ந்தது.* **(5.9.61)**

**(ஐஞ்சீர் விருத்தம்)**

**சமம யித்திரி சாந்திசீர் அறி(வு)அருள் முதிதை**
**அமர்கு ணங்களாய் அனைத்தினும் நெஞ்சுபற் றின்றிக்**
**கமர்கொள் விந்தநீர்த் தடங்கரை நாள்பல கழித்து**
**நிமல நெஞ்சினால் பராபரம் உணர்முனி நினைப்பான்.**

**பொழிப்புரை:** *சித்த அமைதிக்குக் காரணமாகிய சமமாய் இருத்தல், சாதுசங்கத் தொடர்பு, நட்பு, உபசாந்தி, நல்ல பிரக்ஞை, கருணை, உபேட்சை ஆகிய குணங்களை உடையவனாய் என்றும் மனதில் யாதொரு பற்றும் இன்றி, வாசனை கமழும் விந்திய மலை நதிக் கரையில் பல நாட்கள் கழித்து, பின்னர் தெளிந்த உள்ளத்தினால் பரமாத்ம வத்துவை உணர்ந்த அந்த முனிவன் எண்ணுவான்.* **(5.9.62)**

பொறிக ளின்திரள் முன்னமே நிறுத்தினம் புரிந்து
நெறிகொள் சேடத்தைக் கூடியே மலையென நிற்போம்
அறியத் தோன்றியும் மறைந்தபோல் ஆகுதும் மறைந்தும்
செறியத் தோன்றினம் ஒத்துநிற் குதும்நொய்மை சேர்ந்து.

**பொழிப்புரை:** *கிரமமாய்த் தத்தம் விஷயங்களில் செல்கின்ற இந்திரியக் கூட்டங்களை முன்பே விரும்பி விசாரம் செய்து தடைசெய்துள்ளோம். எஞ்சிய சின்மாத்திர வத்துவைச் சேர்ந்தே மலை போல அசையாமல் நிற்போம். தெரிய விளங்கியும் நிஷ்கிரியத் தன்மையால் (கர்த்தா பாவனையுடன் செயல் இன்மையால்) தோன்றாதது (விளங்காதது போலவாகும்) இந்திரியங்களுக்குப் புலப்படாத சர்வான்மகத் தன்மையால் தெளிவாகத் தோன்றினம். சமமாய் சூக்குமத் தன்மையை அடைந்தவன் ஆகியே இருப்பேன்.* **(5.9.63)**

உணர்வு விஞ்சியும் உறங்கினன் ஒக்குதும் சுழுத்தி
தணிவ றப்பெற்றும் உணர்ந்தவன் ஒக்குதும் சமனாய்க்
கணமும் வேறறத் துரியமே பற்றிஇக் காயத்(து)
அணவி நின்று(ம்)ஓர் அசைவறு சோதிநாம் ஆவேம்.

**பொழிப்புரை:** *நனவில் இந்திரியங்களோடு இருந்தும் பிரபஞ்சத்தைக் காணாமையால் துயின்றவனுக்குச் சமானமாகவே இருக்கின்றேன். குறைவின்றி உறங்கியவன் ஆகியும் சந்தோஷமோ துக்கமோ இல்லாத சுழுத்தியை அடைந்தும் ஆத்மத் தன்மையை அடைந்ததால் நனவு உடையவனைப் போன்றவன் ஆனேன். சமமாய், கணமும் திருசிய நாட்டம் இன்றித் துரியத்தையே பற்றி இத்தேகத்தோடு கூடியிருந்த போதிலும் சலனமில்லாத பரஞ்சோதி சொரூபமே யான் ஆவேன்.* **(5.9.64)**

என்று நாடிநல் தியானத்தில் ஆறுநாள் இருந்து
சென்(று)உ ணர்ந்தனன் கண்துயில் சேர்பதி கனைப்போல்
ஒன்று சித்தனாய் வீதகவ் வியப்பெயர் உயர்ந்தோன்
துன்று சீவன்முத் தியில்அடைந்(து) அனேகநாள் சுகித்தான்.

**பொழிப்புரை:** *என்று உத்தேசித்து, நல்ல சமாதியில் ஆறு நாட்கள் இருந்து, பின் பகிர்முக (வெளிப்புற) நாட்டத்தை அடைந்தனன், நித்திரையில் இருந்த வழிப்போக்கனைப் போல. அத்வீதிய சித்தனாய் (ஏகமான உள்ளத்தனாய்) வீத கவ்வியன் என்னும் மேலான முனிவன் பொருத்தமாக அழுந்திய சீவன் முத்தத் தன்மையை அடைந்து நெடுங்காலம் ஆனந்தத்தை அடைந்தான்.* **(5.9.65)**

தீது நன்மையின் வீடுபற் றும்சிதைந்(து) ஏக
வீத கவ்வியன் விருப்பொடு வெறுப்புநெஞ்(சு) இலனாய்ப்
போதல் மீளலும் பிறவியும் கருமமும் போக்கி
ஓது தேகம்தீர் கேவல வீடுற உணர்ந்தான்.

**பொழிப்புரை:** *(பிராரப்த முடிவில் அந்த முனிவனுக்கு எவ்விதமாக மனம் இருந்தது என்று கூறுகின்றார்...)*

*(விஷயம் குற்றம் ஆதலால் விடத்தக்கதும், சிரவணாதிகள் கொள்ளத் தக்கது என்பதானதும்) தள்ளுதல், கொள்ளுதல் என்னும் இரண்டு பார்வைக் கோணமும் அழிவுறவே, வீத கவ்விய முனிவன் விருப்பு வெறுப்பும் இல்லாதவனாய்ச் செல்லுதலும், திரும்புதலும், பிறவியும், கருமமும் ஒழிந்து, சாத்திரங்களில் கூறப்பட்ட விதேக கைவல்ய பேரானந்தமாக இருக்க எண்ணினான்.* **(5.9.66)**

**சித்த னாம்முனி ஒருபகல் கிரிமுழை சேர்ந்து**
**பெத்த பங்கயா சனத்தினன் தான்தன்னில் பேசும்**
**மெத்தும் ஆசையே நிராசையை மேவுதி முனிவே**
**ஒத்(து)உள் ஆறுதி வினோதித்தேம் நெடும்பகல் உம்மால்.**

**பொழிப்புரை:** *இரண்டற்ற மனம் உடைய முனிவன் ஒரு போது மலையின் குகையில் சென்று பத்மாசனத்தில் அமர்ந்து தனக்குள் தானே சொல்லிக் கொள்வான். மிகவும் அதிகரிக்கும் ஆசையே! நீ நிராசையை (வைராக்கியத்தை) அடைவாய். கோபமே! நீ சமாதானமாக அந்தரத்திலேயே சாந்தம் அடைவாய். நீண்ட காலமாக விருப்பு வெறுப்புகளாகிய உங்களோடு சேர்ந்து விளையாடி விட்டேன்.* **(5.9.67)**

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

**போகங்காள் உமைத்தொழுதேன் நெடுநாள் உம்மால்**
**புவியில்விளை யாடியவா போதும் போதும்**
**சோகம்தீர் இவ்வீடு மறக்கச் செய்த**
**சுகங்காள்உங் களைத்தொழுதேன் துயர்காள் உம்மால்**
**ஆகந்தான் வேகலினால் அன்றோ அன்பால்**
**ஆத்துமதத் துவம்உணர்ந்தேன் ஆத லாலே**
**யோகம்சேர் முத்தியெனக்(கு) உதவி னீர்நீர்**
**உபகரித்த உமைத்தொழுதல் உரிமை அன்றோ.**

**பொழிப்புரை:** *விஷய போகங்களே! உம்மைத் தொழுதேன். நீண்ட காலம் உம்முடன் இந்த பூமியில் விளையாடி விட்டேன், போதும், போதும். துயரத்தை அழிக்கின்ற இந்த ஆனந்த வடிவ மோட்சத்தை மறக்கச் செய்த சிற்றின்பங்களே! உங்களைத் தொழுதேன். துக்கங்களே! உங்களால் தேகம் தான் வேகின்றது அல்லவா! அன்பினால் ஆன்ம தத்துவத்தை உணர்ந்தேன். ஆதலாலே ஞானத்தால் அடையத் தக்க மோட்சத்தை அருளி உதவி செய்தீர். உபகாரம் செய்த உம்மைத் தொழுதல் கடன் அன்றோ!* **(5.9.68)**

**நெடுநாளை நண்பனாம் உடலே உன்னை**
**நீக்குகின்றேன் மெய்ஞ்ஞான நிரம்பக் கற்றும்**
**கெடும்கே(டு)உன் னால்உனக்குத் தேடிக் கொண்டாய்**
**கிளர்ஆசை எனும்தாயே கேளாய் என்சொல்**
**தடுமாறி நனிவாடித் தளர வேண்டாம்**
**சாந்தனாய் யான்அகன்றேன் தரும மேநீ**
**அடும்கோர நரகம்தீர் துறக்கத் தேமுன்**
**ஆக்கினையால் வாழிஉனைத் தொழுவேன் அன்பால்.**

**பொழிப்புரை:** *நீண்ட கால நண்பனாகிய தேகமே! உன்னை விட்டு விடுகின்றேன். மெய்ஞ்ஞானம் மெத்தப் படித்தும் உன்னைக் கெடுக்கும் கெடுதலை நீயே உனக்குத் தேடிக் கொண்டாய். கிளர்ந்து எழும் ஆசை என்ற தாயே! என் வார்த்தையைக் கேட்பாய். தடுமாறி மிகவும் பதைபதைத்துத் தளர வேண்டாம். பரம சாந்தியை உடையவனாக நான் விலகுகின்றேன். தருமமே! நீ கோரமான நரகம் ஒழித்து முன்னர் சுவர்க்கத்தில் இருத்தினாய். நீ வாழக்கடவாய். அன்பினோடு உன்னைத் தொழுதேன்.* **(5.9.69)**

உடன்பிறந்த நண்பராய் உயிர்காள் உம்மை
ஒழுங்கிலே ஒழிக்கின்றேன் உய்ந்து வாழ்திர்
நடந்(து)அகல்கேன் நான்என்ன இவ்வா(று) உள்ளே
நாடுமனம் ஏடணைகள் நன்றாய் ஆறி
இடம்பெறநின்(று) ஓங்காரம் மெல்ல ஓதி
இகப்பொருள்கள் புறத்துள்ள இதயத் துள்ள
தடம்பெரிய நுண்ணியமூ வுலகில் உள்ள
சங்கற்பத்(து) அமைந்தவெலாம் தள்ளி னானே.

**பொழிப்புரை:** *சகோதரர்களாகப் பிறந்த பிராணன்களே! உங்களை யோக சாத்திரப்படி முளையாக விடுகின்றேன். நீவிர் உய்வுற்று வாழ்வீர். நான் செல்கின்றேன் என்று இவ்வாறு உள்ளே எண்ணிய மனம் மூவாசைகளும் சாந்தமாகிட, பூமியில் நன்றாக இருந்து பிரணவத்தை முறைப்படி மெல்ல ஓதி, இவ்வுலகத்தில் உள்ள பொருள்கள், வெளிப்புறத்தும், உட்புறத்தும் உள்ள பொருள்கள், தூல சூக்கும அதிசூக்குமப் பொருள்கள் மூன்று உலகிலும் உள்ள சங்கற்ப கற்பிதங்களாய் யாவற்றையும் அகற்றினான்.* **(5.9.70)**

ஓங்கார முடிவாக தீர்க்க மான
ஓசையெனும் நூலுடனே பொறிகள் உற்ற
தேங்காத புலன்எல்லாம் மணத்தைக் காற்று
தீர்வதுபோல் தீர்ந்தனன்சே ணிடையே கங்குல்
நீங்காது போல்இருள்மாத் திரம்முன் தோன்றி
நிகழ்தலும்தள் ளினன்சோதி நேர்முன் தோன்றப்
பாங்காகக் கணம்அதனைப் பார்த்துத் தீர்ந்தான்
பயில்இருள்தே(சு) இரண்டு(ம்)அறப் பாறிப் போன.

**பொழிப்புரை:** *பிரணவம் உச்சரித்தலின் முடிவாக நீண்ட சப்தம் எனும் நூலுடன் இந்திரி யங்கள் கவர்ந்த திருப்தியுறாத விஷயங்கள் யாவற்றையும், மணத்தை வாயு ஒழிப்பது போல விட்டனன். ஆகாயத்தில் இருளானது அகலாதது போலத் தம விருத்தி வடிவ அவித்தியா அந்தகாரம் (இருள்) மாத்திரம் முன்னதாகத் தோற்றம் காணப்படலும் அதையும் ஒழித்தான். பின்பு பிரகாச மயமான சத்துவ மய விருத்தி முன்னால் தோன்ற அதனையும் நன்றாகக் கணத்தில் ஆய்ந்து நோக்கி விட்டனன். தோற்றிய இருளும் பிரகாசமும் ஆகிய இரண்டும் முழுதும் காணாமல் போயின.* **(5.9.71)**

அவத்தைஇது தனைமனத்தால் பற்றி மேலோன்
அங்(கு)உதித்த மனம்திரணம் என்ன முற்றும்
தவிர்த்தனன்ஓர் இமைப்பி(ல்)அதன் பின்அப் போதே
சனித்தசிசு அறி(வு)ஒத்துச் சால நொய்தாய்
நிவக்கு(ம்)ஒளி பெறும்அறிவைப் பெற்று பாதி
நிமிடம்பாதி யில்எண்ணம் நீக்கி நின்றான்
துவக்குறுகாற்(று) அசைவுவிடல் போலச் சித்தின்
தொடர்காட்சி மாற்றினான் துகள்இ லாதோன்.

**பொழிப்புரை:** *இந்த அவத்தையை மனதினாலே அடைந்து உயர்ந்த அம்முனிவன் அங்கு உதயமான மனதைத் துரும்பு என்ன முழுதும் அகற்றினான். ஒரு கணத்தில் அதன் பின்பு அப்பொழுதே உண்டான குழந்தையின் அறிவுக்குச் சமமாய் (நிர்வாசனையாய்) மிகவும் சூக்குமமாய் உயர்ந்த சுயம்பிரகாச சோதியை அடைந்து முன்னர்த் தோற்றமான அதனையும் நன்றாகக் கணத்தில் - கால் நிமிடத்தில் அந்த எண்ணத்தையும் அகற்றி விட்டான். தோல் என்ற இந்திரியத்தால் அறியத் தக்க வாயு சலனத்தை விடுவது போல குற்றமற்ற அம்முனிவன் திருக்கின் திருசிய தசையையும் விட்டு நிருவிகற்பம் ஆயினான். (காண்பவன், காட்சி இரண்டினையும் அற்றுச் சமாதியில் லயித்தான்)* **(5.9.72)**

வருசிற்சா மானியத்தை அடைந்தான் சத்தா மாத்திரமே வடிவானான் சுழுத்தி மேவி
இருபொன்குன் றெனநின்றான் சுழுத்தி ஊற்றம் எய்தியபின் துரியவடி(வு) எளிதின் உற்றான்
அரு(கு)உற்ற நிரானந்த மாயும் மாயா ஆனந்த மாய்அசத்தா கியும்சத் தாகி
ஒருவுற்ற வசனங்கட்(கு) எட்டா தான ஒருபொருள்தா னாய்நின்றான் ஒப்பி லாதான்.

**பொழிப்புரை:** *இந்த முறையாலே சாட்சி மாத்திரமாய் எஞ்சி நிற்கக் காணும் நிலையை மூன்று அவத்தைகளுக்கும் சாட்சி வடிவ பிரத்தியக் ஆன்மாவை அடைந்தான். சத்தாக மாத்திரமே வடிவானான். நனவில் சுழுத்தி அடைந்து பெரிய மேரு மலையைப் போல் அசையாமல் - சலனம் இல்லாமல் நிருவிகற்ப சமாதியில் இருந்தான். அந்த நனவில் சுழுத்தி நிலை அதிதிடமான பின் துரிய பதத்தை எளிதாக அடைந்தான். சூக்குமமான திருசிய மனோ விருத்தியால் உண்டாகும் ஆனந்தம் அற்றதாயும், சாசுவத ஆனந்தமாயும் அசத்துப் போல் இருந்தான் ஆயினும் சத்தாகியும் ஒருமைப்பட்ட வாக்கு மனதிற்கு எட்டாததான அத்வைத வத்துவே ஒப்பற்ற வீத கவ்வியன் தனது வடிவமாய் நிலைத்தான். (நிரானந்தம் ஆயினும் சானந்தன், அசத்தாயினும் சத்தாயினன், விடயானந்த சூனியன் ஆயினும் சொரூபத்தாலே சானந்தன் ஆயினான். அன்னியமான சத்து இலன் ஆயினும் சத்து வடிவமே ஆயினன் என்பது பொருள்.)* **(5.9.73)**

சூனியம்என் பார்க்(கு)அதுவாய் பிரமம் என்று
சொல்லுவார்க்(கு) அதுவாய்விஞ் ஞானம் என்று
தான்இயம்பு வோர்க்(கு)அதுவாய்ப் புருடன் ஆகி
சாங்கியர்க்கும் யோகியர்க்(கு)ஈ சன்தா னாகி
ஈனமில்சை வாகமர்க்குச் சிவனாய்க் காலம்
என்பாருக்(கு) அதுவாய்மத் தியர்கட்(கு) எல்லாம்
மானமுறு மத்தியமாய்ச் சமமாய்க் காணும்
மனத்தினர்க்(கு)எல் லாமான பொருள்தான் ஆனான்.

**பொழிப்புரை:** *சூனியமே பொருள் என்பவர்க்குச் சூனியமாய், பிரம்மமே பரமார்த்தம் என்பவர்க்குப் பிரம்மமாய், சணிக விஞ்ஞானமே புருடார்த்தம் என்பவர்க்குச் சணிக விஞ்ஞானமாய், சாங்கியர்களுக்குப் புருட தத்துவமாய், யோகியர்களுக்கு ஈசன் தானாகி, ஈனமில்லாத சைவ சம்பந்தமானவர்களுக்குப் பரமசிவனாகி, காலம் என்பவர்க்குக் கால தத்துவமாய், மாத்யமிகர்கள் யாவருக்கும் சிரத்தையோடு கொள்ளத் தக்க மத்தியமாய், சமமாகக் காண்போர்க்கு சர்வான்மக வத்துவாக தானே ஆயினான்.* **(5.9.74)**

நூல்அனைத்தின் சித்தாந்தம் ஏது(உ)எல் லோர்க்கும்
நோக்கிய(து)ஏ(து) ஓர்ந்த(து)ஏ(து) எல்லாம் ஏது
ஞாலமெலாம் உறைவ(து)ஏ(து) அசை(வு)ஒன் றில்லா
நல்ல(து)ஏ(து) ஒளிக்கு(ம்)ஒளி தருவ(து) ஏது
பாலுறுதன் அனுபூதி ஒன்றாய்க் காணப்
பட்ட(து)ஏ(து) ஒன்றாயும் பலவாம் ஏது
சாலுகளங் கம்படைத்தும் படையா(து) ஏது
சகலமுமாய் அலாத(து)ஏ(து) அதுதான் ஆனான்.

**பொழிப்புரை:** *சகல சாத்திரங்களின் முடிவானது எதுவோ, சர்வ இருதயத்தில் இருப்பது எதுவோ, ஆராய்ந்து தெளிந்தது எதுவோ, எல்லாமாக இருப்பது எதுவோ, உலகம் எல்லாம் இருப்பது எதுவோ, சலனம் ஒன்றில்லாத நன்மை உடையது எதுவோ, ஒளிக்கும் ஒளி கொடுப்பது எதுவோ, தன்னிடத்து உண்டான அனுபூதி ஏக மாத்திரமாகவே இருப்பது எதுவோ, உண்மையில் ஒன்றாயும், மாயையினால் பலவாயும் இருப்பது எதுவோ, மிகவும் மாயையினால் களங்கத்தோடு கூடினதாயும், வேதம், ஆசாரியர் வாக்கினால் அறியத் தக்கதாய் சுயம் பிரகாசமாய் இருப்பதால் களங்கம் அற்றதாயும், சர்வமும் ஆகியும், ஒன்றும் ஆகாதது எதுவோ அதுவே தான்ஆனான்.* **(5.9.75)**

அடர்பிறப்போ(டு) இறப்(பு)இன்றி ஆதி யன்றி
ஆதியாய் ஒன்றாகி அனேக மாகித்
தொடர்சகள நிட்களமாய் விண்ணின் நொய்தாய்த்
தூய்தான நிலைஈசன் ஆகி ஒல்லை
திடமுறவே முப்பதினா யிரம்ஆண்(டு) எல்லை
செருக்குறவேண் டியபடியே சகத்(து)உ லாவிப்
படர்மனம்மீண்(டு) எழாதவகை சமித்(து)ஒன் றானான்
பகர்வீத கவ்வியனாம் பரம யோகி.

**பொழிப்புரை:** *நெருங்கி வரும் பிறப்பு இறப்பும் இன்றி, அனாதியாய், சர்வ காரணமாய், ஏகமாய், உபாதியோடு கூடிய சகலமாயும், நிஷ்களமாயும், ஆகாயத்தினும் அதி சூக்குமமாய் நிர்மலமாய், பரிசுத்தமான திரமான ஈசுவரன் ஆகி, விரைவில் விளங்கிய இவ்வண்ணம் அதி திடமாக இருந்து முப்பதினாயிரம் வருடங்கள் வரை கம்பீரமாய் இருந்து வேண்டிய படியே இவ்வுலகில் சஞ்சரித்து இதுவரையில் கூறி வந்த வீத கவ்வியனாம் பரம யோகி பிறவித் துன்பத்தை அடையும் மனமானது மறுபடியும் எழாதபடி பிரம்மமே ஆனான்.* **(5.9.76)**

**(உபசாந்திப் பிரகரணத்தில் வீத கவ்வியன் கதை முற்றும்)**

# உபசாந்திப் பிரகரணம்

*முன்பு சித்த அமைதிக்கு சங்கத் தியாகம், பிராண நிரோதம், சமாதி, அப்பியாசங்கள் சொல்லப்பட்டன. இப்போது சீவன் முத்தனுக்கு ஆகாச கமன (ஆகாயத்தில் நடத்தல்) அபாவாதி நிரூபணத்தால் சித்தத்திற்கு உபசமப் பிராப்தியைக் கூறுகின்றார்...*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**என்ன உரைத்த முனிதன்னை இராமன் நோக்கி உரைசெய்வான்**
**உன்னு சீவன் முத்தியினோர் உடல்கட்(கு) எல்லாம் ஆகாயம்**
**தன்னில் நடத்தல் முதலான சத்தி காணேம் என்னென்ன**
**அன்ன வினாவுக்(கு) உத்தரங்கள் அறிய உரைத்தான் அருள்வசிட்டன்.**

**பொழிப்புரை:** *என்று இவ்வாறாக உபதேசித்த வசிட்ட முனிவரை இராம பிரான் நோக்கி "போற்றத் தக்க சீவன் முத்த தேகங்களுக்கு எல்லாம் ஆகாயத்தில் நடப்பது முதலான சத்திகள் காணப்படவில்லையே! அது ஏன்?" என்று கேட்கவும், அந்த சந்தேகக் கேள்விக்குத் தெரியும் படியாக வசிட்ட முனிவர் பதிலளித்தார்.* **(5.1)**

**பெரிய உணர்வில் பெத்தர்களும் பேணும் மருந்தால் மந்திரத்தால்**
**கிரியை தன்னால் காலத்தால் கிளர்ந்த ஊகத் தால்இயற்றின்**
**விரியும் விண்போக்(கு) ஆதிகளை மேவா நிற்பர் மெய்யுணர்வோர்க்(கு)**
**உரிய வல்ல இவைஅவர்கள் உண்மை நோக்கே விடா(து)உறுவார்.**

**பொழிப்புரை:** *அனாத்ம பொருட்களின் உணர்வில் பந்தம் உடையவர்களும், விரும்பத் தக்க மருந்துகளால், மந்திரங்களால், விசேட செயல்களினால், கால சக்தியால் விளங்குகின்ற ஊகத்தால் செய்தால் விரிகின்ற ஆகாயத்தில் நடத்தல் முதலியவற்றை அடைந்திடுவர். இவை மெய்யுணர்வு உடையவர்க்கு உரியவை அல்ல. அவர்கள் மெய்ஞ் ஞானப் பார்வையையே விடாமல் அடைந்திடுவர்.* **(5.2)**

**அறிந்தோர் அறிவால் அறிவினிடத்(து) அமைவ(து) அல்லால் ஆசையின்பின்**
**பிறிந்(து)ஓ டார்கள் சகப்பொருளின் பேதம் எல்லாம் மாயைகளே**
**மறிந்தே மாயை கெடவென்றோர் மறித்தும் அதனில் மூழ்குவரோ**
**செறிந்தே அறிஞர் களும்விரும்பில் சித்தி யுறும்முன் பகர்ஒழுங்கால்.**

**பொழிப்புரை:** *தன்னை (ஆன்மாவை) உணர்ந்தவர்கள் மெய்யுணர்வால் சச்சிதானந்த வத்துவில் சாந்தி அடைந்திருப்பதே அல்லாமல் ஆசையின் பின்னால் தம்மை மறந்து ஓடமாட்டார்கள். சகப் பொருள்களின் பேதம் எல்லாம் மாயையின் காரியமே, மீண்டும் அடங்குமாறு மாயை நாசமாகும்படி வென்றவர்கள் அதனில் மூழ்குவரோ? சொரூபத்தை உணர்ந்தவர்களும் பிராரப்த வசத்தால் ஏதேனும் ஒரு காரணத்தால் சித்திகளை விரும்பினால் முன்னர் கூறிய முறையே சித்திகளை அடைதலும் ஆகும்.* **(5.3)**

**கேட்ட மருந்து மந்திரங்கள் கிரியை காலம் ஊகமெலாம்**
**நாட்டும் சித்தி களைநல்கும் நல்ல முத்தி தரமாட்டா**
**தேட்டம் உளதே ஒருத்தற்(கு)ஒன்(று) அதுதான் இயற்றில் சித்திக்கும்**
**பூட்டும் ஆசை வந்(து)அணுகா புரண போதம் உடையோர்க்கே.**

**பொழிப்புரை:** *சித்தி சாதனமாகக் கேள்வியுற்ற மருந்து, மந்திரங்கள், செயல்கள், பரிபக்கு காலம், ஊகம் அனைத்தும் புகழை நாட்டும் அணிமாதி அட்டமா சித்திகளைத் தரும். அனர்த்த நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ முத்தியைத் தராது. யாவர் ஒருவருக்கு ஒன்று விருப்பம் உளதேல் அப்பொருள் தான் (ஞானமோ, சித்தியோ) ஓதற்குரிய சாதனங்களைக் கொண்டு சாதிக்கில் அடைதல் கூடும். பரிபூரண ஞானம் உடையவர்க்குச் சம்சாரத்தில் பிணிக்கும் ஆசை வந்து சேராது.* **(5.4)**

**காதல் எல்லாம் இறந்(து)ஒழிந்தால் கலங்கா ஞானோ தயம்உண்டாம்**
**ஆத ரம்செய் சித்திகளின் அமிழ்வோர்க்(கு) அப்பேற்(று) அடையா(து)என்(று)**
**ஓது முனியை யோகிகள்தாம் ஊழி காலம் உயிர்வாழ்தற்(கு)**
**ஏது மூலம் எனக்கேட்டான் இராமன் மீட்டும் முனிசொல்வான்.**

**பொழிப்புரை:** *அனைத்து ஆசைகளும் ஒழியுமே ஆயின் சந்தேக விபரீதங்கள் இல்லாத பிரம்ம வித்தையின் உற்பத்தி (ஞான உதயம்) உண்டாகும். உலகத்தவர் கொண்டாடும் அட்டமா சித்திகளில் அமிழ்ந்தோர்க்கு அந்தப் பிரயோசனம் உண்டாகாது என்று கூறிய வசிட்ட முனிவரை நோக்கி, "யோகிகள் ஊழி காலம் வரையில் உயிர் வாழ்வதற்கு எது காரணம்?" என்று இராம பிரான் கேட்கவும், மறுபடியும் வசிட்ட முனிவர் பதில் கூறுவதானார்.* **(5.5)**

**பிராணன் அசையில் அசைந்திடுவர் பிராணன் அடங்கில் கல்போல்வர்**
**பிராணன் தன்னைத் தரித்தலினால் பெருநாள் நசியார் யோகிகள்தாம்**
**பிராணன் தன்னில் நெஞ்சத்தில் பிறக்கும் அசை(வு)உள் புறன்அடங்கில்**
**பிராண நாசம் மூப்(பு)இரண்டும் பெருந்தூ ரத்தில் ஏகிடுமால்.**

**பொழிப்புரை:** *பிராணன் சலனம் அடைந்தால் சலனம் அடைந்திடுவர். பிராணன் அடங்குமாகில் கல் போல் இருப்பர். பிராண வாயுவினைத் தாரணம் செய்வதால் வெகுகாலம் வரை அழியார் யோகியர். பிராண வாயுவிலும், மனதிலும் உண்டாகும் அசைவு உள்ளிலும் வெளியிலும் ஓய்ந்து போனால் பிராணனுடைய நாசமும், கிழத் தனமும் வெகு தூரத்திற்கு ஓடிவிடும்.* **(5.6)**

**உள்ளும் புறம்பும் அசைவின்றி உயிரும் மனனும் ஒடுங்கு(ம்)எனில்**
**தள்ளு றாமல் ஒருக்காலும் தாது வெல்லாம் சடத்(து)உறையும்**
**தெள்ளி அறிவ(து) அறிந்(து)ஆசை தீர்ந்து புந்தி தெளிந்(து)இதயம்**
**கொள்ளும் பந்தம் எலாம்அறுத்தோர் அன்றோ உண்மை குறித்(து)அறிந்தோர்.**

**பொழிப்புரை:** *உள்ளும் வெளியிலும் சலனம் இன்றி, பிராணனும் மனதும் அடங்குமாகில், தியாகம் செய்யாமல் ஒருக்காலும் தோல் முதலிய தாதுக்கள் எல்லாம் தேகத்தில் இருக்கும். தெளிவாகத் தெரிய வேண்டியதைத் தெரிந்து, ஆசை அற்று,*

*விருப்பு வெறுப்பு இன்றி புத்தி தெளிந்தவராய் இதயத்தில் வரக்கூடிய பந்தக் கட்டுகள் யாவும் அறுத்தவர் தானே மெய்ஞ்ஞானத்தை உணர்ந்தவர் ஆவர்.* **(5.7)**

என்ற முனியை விவேகத்தின் எழுச்சி யாலே மனம்இறக்கில்
துன்று கின்ற மயித்திரியை முதலாம் குணம்எவ் விடத்(து)ஒன்றும்
குன்றம் அனையாய் உரையென்ற இராக வற்கு முனிகூறும்
ஒன்றும் அருவும் உருவு(ம்)என உளத்தின் நாசம் ஓர்இரண்டே.

**பொழிப்புரை:** *இவ்வண்ணம் கூறிய வசிட்ட முனிவரை, "விவேகத்தின் முதிர்ச்சியாலே மனம் நாசமாகில் பொருந்திய மைத்திரி (சத் சங்கத் தொடர்பு). கருணை முதலான நற் குணங்கள் எங்கே இருக்கும்? மேரு மலையைப் போன்றவரே!" என்று கேட்ட இராம பிரானுக்கு வசிட்ட முனிவர் கூறுவார். லயமாகும் அரூபம், ரூபம் (அரூப நாசம், சொரூப நாசம்) என்று மனதின் நாசம் இரண்டு வகைப்படும்.* **(5.8)**

சீவன் முத்தி தனில்உருவ நாசம் சித்தம் தனக்(கு)உளதாம்
தாவில் உடல்தீர் முத்திதனில் சாற்றும் அருவ நாசமுறும்
மேவு சித்தம் உண்டாகில் இடராம் இறக்கில் மிகு(ம்)இன்பம்
பாவி உள்ளம் எழாதபடி பண்ணி அதைநா சம்பயில்வாய்.

**பொழிப்புரை:** *சீவன் முத்திக் காலத்தில் உருவ நாசம் மனதிற்கு உண்டாம். இனித் தேகமே வராத உடல்தீர்ந்த விதேக முத்தியில் சொல்லப்படும் அருவ நாசம் உண்டாம். விடயங்களையே சிந்திக்கும் மனம் உண்டாகி விடில் துக்கமாம். மனம் இறந்து போனால் இன்பம் மிகும். பாவ காரணமான மனது மீண்டும் எழாத படி செய்து, அந்த மனதின் அழிவையே பயிற்சி செய்வாய்.* **(5.9)**

பகுதி வழியின் குணபாரம் எனது(என்)று அபிமா னம்பண்ணல்
தகுதி உண்மை அறியாது தளர்நெஞ் சாம்சீ வனும்அதுவே
தொகுதி யான சு(க)அசுகத்தைத் தொடர்ந்து நிற்கும் சுகாதிகளின்
மிகுதி அசையா(து) இம்மனமே மிகுமா யைக்கு விளைமுளையே.

**பொழிப்புரை:** *பிரகிருதியின் (மாயையின்) காரியங்களை எனது என்று அபிமானம் கொள்ளுதல் தக்க தத்துவத்தை அறியாமல் மிகத் துயரம் அடையும் நெஞ்சாகிய சீவனும் அதுவே ஆம். கூட்டம் கூட்டமான இன்ப துன்பங்களைத் தொடர்ந்து பற்றி நிலைக்கும் மிகுந்த இன்ப முதலியவற்றில் மூழ்கி அசையாது இருக்கும் இந்த மனம் தான் பெரியதான மாயைக்கு முளை போல்வதாம்.* **(5.10)**

மனத்தின் உண்மை உரைத்தனம்மேல் மனத்தின் நாசம் சொலக்கேட்பாய்
கனத்த கிரியை உயிர்ப்(பு)அசையா வகைபோல் சமமாம் காட்சிதனில்
இனத்த இன்ப துன்பங்கள் இறையும் அசையா(து) இருப்பவர்க்கே
அனத்த மான உள்ளம்தான் அழிந்த(து) என்பர் அறிந்தோரே.

**பொழிப்புரை:** *மனதின் இருப்பைக் கூறினோம், இனிமேல் மனதின் நாசத்தைச் சொல்லக் கேட்பாய். பெரிய மலையைத் தென்றல் காற்று அசைக்க முடியாதது போல,*

*சம திருஷ்டியில் பலவகையான சுக துக்கங்கள் ஒரு சிறிதும் சலிக்காமல் இருப்பவர்க்கே துன்பத்தைப் பெரிதும் தரக்கூடிய மனமானது நாசம் ஆகி விட்டது என்று பெரியோர் சொல்வர்.* **(5.11)**

**மாவுச் சவம்ஆ பத்(து)ஊக்கம் மந்தம் கார்ப்பண் ணியம்மதங்கள்**
**மேவுற் றனபே தியா(து)எவரை அவர்க்கே உள்ளம் வீந்துளதாம்**
**தாவுற்(று) எழுந்த பேதமையே மனமாம் அதுவே தவிர்ந்(து)ஒழியில்**
**ஓவுற்(று) உள்ளம் நாசமெனும் உறுபேர் உண்மை உதித்திடுமால்.**

**பொழிப்புரை:** *ஊழினால் அடைவதாகிய பெருவிழா முதலிய மங்களம் (கல்யாணம்) ஆபத்து (புத்திராதிகள்) பெரிய கஷ்டம், உற்சாகம், மந்த பாவம், கிருபண பாவம் (லோபத் தன்மை) மதம் முதலியவைகள் எந்தத் தீர புருடரை விகாரப்படுத்தாதோ அந்த தீர புருடருக்கே மனமானது இறந்து போனதாம். ஒரு விடயத்திலிருந்து மற்றொரு விடயத்தில் தாவி உண்டாகும் அறியாமையே மனம் ஆகும். அந்த அறியாமை எப்பொழுது நசிக்குமோ அப்பொழுது மனோ நாசம் என்கின்ற தக்க பெயரைப் பெறும், சுத்த சத்துவம் உதயமாகும்.* **(5.12)**

**ஆய குணமா மைத்திரியா திகள்சேர் நல்வா தனைஅடைந்து**
**தீய மறுசென் மமும்இலதாம் சீவன் முத்தர்க்(கு) அந்தமனம்**
**ஓய மனதுக்(கு) இதுவாகும் உருவ நாசம் இதுதனிலே**
**மேய குணங்கள் வசந்தத்தின் விரிபூங் கொத்தாம் எனவிளங்கும்.**

**பொழிப்புரை:** *சம்பாதித்த மைத்திரி முதலிய கல்யாண குணங்கள் சேர்த்து உத்தம வாசனையைப் பெற்றுக் கொடிய மறுபிறப்பும் இல்லாதது ஆகும். சீவன் முத்தர்களுக்கு அந்த மனம் ஓய்வினை அடையவே மனதினுக்கு இது உருவ நாசம் (சொரூப நாசம்) எனப்படும். இதனில் பொருந்திய கல்யாண குணங்கள் வசந்த காலத்தில் விரிந்த பூங்கொத்துகள் போல் விளங்கும்.* **(5.13)**

### (எண்சீர் ஆசிரிய விருத்தம்)

**தத்துற்ற உள்ளத்தின் அருவ நாசம்**
**சரீர(ம்)இலா முத்தியின்நிட் களமாய்ச் சாரும்**
**மெத்துற்ற நற்குணங்கள் தரிக்கும் உண்மை**
**வீந்துளதாய் மேனியிலா விமல வீடாய்ச்**
**சுத்தத்தாய் உடல்தீர்ந்த முத்தர்க்(கு) எய்தும்**
**தொடர்பாய்சத் துவநாசம் சொரூபம் ஆகி**
**சித்தத்தின் அருவநா சப்பேர் பெற்ற**
**திகழ்பதத்தில் ஒன்றுமிலை செப்பு தற்கே.**

**பொழிப்புரை:** *தாவிப் பாயும் மனதின் அரூப நாசமானது விதேக முத்தனிடத்தில் நிட்கள வடிவமாய்ச் சேரும். மிக மிக மேன்மையான நல்ல குணங்களைத் தாங்கும் சத்துவ குணம் வீழவும், தேகம் இல்லாத நின்மலமான பதமாய்ப் பரம பாவனையாய் தேகத்தை விடுத்த முத்தர்கள் எய்தும் சம்பந்தமாய் சத்துவமும் நாசம் ஆகவும், மனதின் அரூப நாசம் என்ற பெயரை அடைந்து விளங்கும் நிலையில் கூறுவதற்கு ஒன்றும் இல்லை.* **(5.14)**

குணம்குணமி லாமைசீர் சீர்இ லாமை
குல(வு)உதயம் அத்தமனம் மகிழ்(வு)அ சூயை
இணங்(கு)ஒளிவல் இருள்இரவு பகல்முச் சந்தி
இயல்உண்மை இல்லாமை இடைஒன் றில்லை
புணர்ந்துளதற் பதம்அதுதான் மாயக் கூத்தும்
புந்தியும்வென்(று) அகன்றவர்க்குப் புகலே ஆகும்
மணம்கவரும் காற்றுமுதல் அனைத்தி னுக்கும்
மரு(வு)இடமாய் நிற்கின்ற வானம் போல.

**பொழிப்புரை:** *குணங்கள், தோஷங்கள், சிறப்பு (பெருமை). சிறப்பு இல்லாமை, வரும் உதயம், அத்தமனம், மகிழ்ச்சி, வாட்டம், ஒளி, காரிருள், பகல், இரவு, முச்சந்தி-திசை, சத்து, அசத்து, சதசத்து என்பதும் ஒன்றும் இல்லை. அடைந்துள்ள தற்பதம் என்னும் அதுவே சம்சாரத்தையும், சஞ்சல புத்தியையும் வென்ற மகான்களுக்குப் புகலிடம் ஆகும். நறு மணத்தைக் கவர்ந்து செல்லும் காற்று முதலான அனைத்துக்கும் புகலிடமான ஆகாயம் போல்வதாம்.* **(5.15)**

துன்பமெலாம் இறந்(து)அறிவே வடிவாய் ஏகச்
சுழுத்தியாய்த் தாமதரா சதம்தோன் றாமல்
இன்ப(ம்)மிகுந்(து) அழகாம்அப் பதத்தே விண்ணின்
யாக்கையாய்ப் பெரியோராய் இலங்கும் மேலோர்
வன்படர்நெஞ்(சு) அறஉறைவர் என்ற லோடும்
வளர்கொடிமுந் திரிகைநிகர் மாயைக்(கு) ஏது
முன்பயில்வித்(து) அதற்(கு)எதுவித்(து) அதற்(கு)என் வித்து
மொழிந்தஅதற்(கு) எதுவித்து மொழிவாய் நாலும்.

**பொழிப்புரை:** *துன்பம் எல்லாம் அழிந்து சைதன்னியமே சொரூபமாய், சித்தம் இல்லாத சுழுத்தியாய்த் தாமதம், இராசதம் நீங்கியதாய், பேரானந்தமாய் நித்தியமான அந்த விதேக முத்திப் பதத்தில் ஆகாயமே கோசமானது போன்ற தேகம் உடையவராய் (சூன்யமாய்) மகான்களாய் விளங்கும் மேலோர் தொல்லைகள் படருகின்ற மனம் இல்லாதவராக இருப்பர் என்று உரைத்தலோடும், விரிகின்ற முந்திரிக் கொடியைப் போன்ற சம்சாரத்திற்கு எது முன்னுள்ள விதை, அந்த விதைக்கு எது விதை, அதற்கு எது விதை, கூறிய இதற்கு எது விதை இந்த நான்கினையும் கூற வேண்டும்.* **(5.16)**

என்(று)இராக வன்கேட்ப வசிட்டன் சொல்வான்
எழுந்துளஆ ரம்பசு(ப)அ சுபங்கள் என்னும்
துன்றுமுளை தந்தருளும் மேனி வித்தாம்
சொன்னபெரு மாயையெனும் சூழ்கொ டிக்கு
நின்றஉடல் எனும்வித்துக்(கு) எதுவித்(து) என்னில்
நீண்டபா(வ)அ பாவங்கள் நிறைந்து நாளும்
கன்றுதுயர் எனும்மணிக்கு வைப்பாம் செப்பாம்
காதலின்பின் ஓடுகின்ற கவலை நெஞ்சே.

**பொழிப்புரை:** *என்று இவ்வாறு இராம பிரான் கேட்கவும், வசிட்ட முனிவர் கூறுவதாவது...* *நீ கேட்ட சம்சாரம் என்னும் கொடிக்கு ஊழ் வசத்தால் ஆரம்பித்த சூக்கும தேகத்தில் மறைபட்டிருக்கும் சுபம் அசுபம் என்னும் முளை தரும் போகத்துக்கு இருப்பிடமாகப் பொருந்துகின்ற தூல தேகமே விதையாகும். அந்தத் தூலதேகம் என்னும் விதைக்கு எது விதை என்றால், ஐஸ்வரியம், விருத்தி அதன் நாசம் என்பவற்றிற்குக் கோசமாகவும் (உறையாகவும்), வருந்துகின்ற துக்க இரத்தினம் வைக்கும் சம்புடமும் (சிமிழாகவும்) ஆசையின் வசமாய் அதன்பின் வேலைக்காரன் போல ஓடி அலையும் சஞ்சல மனமே ஆகும்.* **(5.17)**

இல்லது)உளது) எனும்இந்தத் திரள்நெஞ் சாலே
எல்லையறப் பிறக்குமால் இதனைத் தானே
புல்லுகின்ற கனவில்(ல்)அனு பவிப்பர் அன்றே
புவித்தொழிலாம் கொடிகளே பொருந்திச் சுற்றும்
அல்லல்மனம் எனும்மரத்துக்(கு) இரண்டு வித்தாம்
ஆவிஅசை(வு) ஒன்றாம்வா தனைஅ முத்தம்
சொல்லு(ம்)இரண் டாவதாம் என்று கொள்வாய்
சூரியன்தொல் குலம்விளங்கத் தோன்றும் தோன்றால்.

**பொழிப்புரை:** *சென்றவை, நிகழ்ந்தது அல்லது இல்லாதது, இருப்பதான இந்த தேகக் கூட்டம் மனதினாலேயே அளவின்றி உண்டாகும் இவ்விஷயத்தையே தோஷத்தோடு கூடியதான சொப்பனத்தில் அனுபவிப்பர். உலக விவகாரமாம் உழவு. வேள்வி, சிரவணம் முதலியவை போன்ற செயல்கள் என்ற கொடிகளே நெருங்கிச் சுற்றும் துன்ப மயமான மனம் என்னும் மரத்துக்கு இரண்டு விதைகள் உளவாம். அவை பிராணனின் அசைவு ஒன்றாம். கூறும் திடவாசனை இரண்டாவதாம் என்று உனது மனதில் கொள்வாய். சூரியனது தொன்மையான குலம் விளங்கத் தோன்றிய தோன்றலே!* **(5.18)**

உண்டாகி எவ்விடத்தும் உற்ற போதம்
உயிர்அசைவால் உணர்வும்அப் போதம் தன்னை
மண்டாமல் தடுக்கைபெரு நன்மை யாகும்
வளர்போதம் காண்பவற்றை மருவும் மாலால்
தண்டாத காண்பவையே மனத்துக்(கு) என்றும்
தவிராத துயராம்அத் தனிபோ தம்தான்
மிண்டாத சுழுத்தியில்போ தம்போல் நிற்கில்
வீ(டு)அதுபே(று) அதுவிமல பதம்வே றில்லை.

**பொழிப்புரை:** *(பிராணனின் சலனத்துக்கு எது விதை என்பதைக் கூறுதல்) சத்தாய் எங்கும் உள்ள பிராணனின் சலனத்தாலே திருசியப் பொருள்களினால் வரப்பெறும் போதத்தை விஷய ஆகாரமாய் வளரச் செய்யாது தடுப்பது மிக நன்மையாகும். மயக்கத்தால் வளர்கின்ற உணர்வு காண்பவற்றைப் பொருந்தும். தடையில்லாத திருசியமே (காண்பதுவே) மனதுக்கு எப்பொழுதும் ஒழியாத துன்பமாம். அந்த ஒப்பற்ற உணர்வானது மீண்டும் தொடராமல் சுழுத்தியில் விஷய ஞானம் இல்லாதது போல அபிமானம் இன்றி ஆத்மாவில் நிற்கில் அதுவே மோட்சமாம். அதுவே பிரயோசனம் ஆகும். விமல பதமும் அதுவே. வேறொன்று இல்லை.* **(5.19)**

ஆதலால் உயிர்அசைவால் வாத னைபால்
அழுத்தத்தால் அறிவைவிரி வாக்காய் என்னில்
ஓதுபிறப்(பு) அறும்அறிவின் விரிவே உள்ளம்
உள்ளத்தால் இவ்வனந்த உயிர்கள் வாழ்வாம்
சேதனயோ கிகள்எல்லாம் பிராணா யாமம்
தியானமருந்(து) ஊகத்தின் திறங்க ளாலே
பேதமனம் ஒடுங்குவது பொருட்டாய் அன்றோ
பிராணவாயு வைநிறுத்திப் பிடிக்கின் றாரே.

**பொழிப்புரை:** *ஆதலால் பிராணனின் சலனத்தால் (அசைவினால்) திட வாதனையால் அறிவினைப் பருத்தல் ஆவதைச் (உப்புதல்) செய்யாமல் விட்டு விட்டால், அப்போது எழுகின்ற பிறவிகள் அழிந்து போகும். அந்த அறிவின் விரிவு தான் உள்ளம். அந்த மனதினால் தான் அளவில்லாத உயிர்கள் வாழ்கின்றன. அறிவுடைய யோகிகள் எல்லாம் பிராணாயாமம், தியானம், மருந்து, ஊகம் (யோக சாத்திரங்களில் கூறிய முறைகள்) முதலியவற்றால் பேதப்படுத்தும் மனதை ஒடுக்குவதற்காக பிராணனின் சலனத்தைத் தடுத்து நிறுத்துகின்றனர்.* **(5.20)**

உள்ளத்தை ஒடுக்குவிக்கும் சமத்து வத்துக்(கு)
உயர்ந்தகா ரணமாகும் சுகம்உண் டாக்கும்
நள்ளுற்ற அறிவைஎழ வொட்டா தாக்கும்
நல்லுயிரின் தடையென்று நல்லோர் சொல்வர்
தெள்ளியபல் பொருள்அறிவை விளக்கு வித்துச்
சேர்ந்தவா தனையாலே செனிப்ப தாகி
விள்ளக்கண்(டு) அனுபவிப்ப தாம்நெஞ் சுக்கு
மேல்இரண்டாம் உற்பத்தி விளம்பக் கேட்பாய்.

**பொழிப்புரை:** *பிராணனைத் தடுத்தல் சித்தம் ஒடுங்கும்படியாகச் செய்யும், சம பாவனைக்கும் உயர்ந்த காரணம் ஆகும். இன்பத்தைத் தரும் திருசிய (காண்பவற்றில்) நாட்டத்தை எழும்படி செய்யாது. தெளிந்த பல பொருட்களின் உணர்வை விளங்கச் செய்து சேர்ந்த வாசனைகளினால் உதிப்பதாகி, வெளிப்படையாய்ப் பார்த்து அனுபவிப்பதாம். மனதுக்கு விதையான இரண்டாவது காரணத்தைக் கூறக் கேட்பாய்.* **(5.21)**

திடமான பாவனையால் முன்பின் எண்ணம்
தீர்ந்துபதார்த் தம்தனைச்சேர் வுறக்கைக் கொள்கை
மடமான வேதனையாம் கடுவே கத்தால்
வல்லையில்தா னேஒன்றை மதித்து நாடி
உடனேஅவ் வுருவாய்வேற்(று) எண்ணம் எல்லாம்
ஒழித்திடும்இவ் வாதனையின் வசத்தில் ஓடித்
தொடர்பான புருடனும்ஆங்(கு) அதன்மெய் யாகித்
தோன்றுபொருள் நன்(று)என்றே துவண்டு மாலாம்.

**பொழிப்புரை:** *திட பாவனையினாலே முன்பின் ஆராய்ச்சி இன்றி பொருட்களை அடையும் படி கொள்ளுதலே அறியாமை மிகுந்த வாசனையாம். மிகுந்த வேகத்தால்*

*விரைவில் தானே ஒரு பொருளைத் துணிந்து நாடி அக்கணமே அந்த வடிவமாய்ப் பிற நினைவு களையெல்லாம் அகற்றிடும். இந்த வாதனையின் வசமாகத்தானே ஓடி அதன் தொடர்பான புருடனும் அங்கு அதனது வடிவமேயாகி தோன்றுகின்ற பொருள் நல்லதே என்று துவண்டு மயக்கத்தை அடையும்.* **(5.22)**

வாதனையின் வேகத்தின் விவசத் தால்தன்
வடிவினைவிட்(டு) அனைத்தினையும் மயக்க மாகத்
தீ(து)அமைபுந் தியில்காணும் மதவ சத்தால்
தியங்குதல்போல் இம்மனத்தைத் தெரியக் கூறில்
ஏதமுறு காட்சியெது தான்அல் லாத(து)
யான்எனும்பா வனைஏது பொருள்அல் லாத(து)
ஓதுபொருள் எனும்கருத்(து)ஏ(து) அதுவே சித்தம்
உறுபிறவி சரைமரணம் உண்டாம் இத்தால்.

**பொழிப்புரை:** *வாசனா வேக பரவசத்தால் தனது வடிவத்தை மறந்து, பிராந்தியாகக் கெட்ட புத்தியில் காண்பன். மத வசத்தால் கண்டதெல்லாம் காண்பதே போல, இந்த மனதின் வடிவத்தை நன்றாக அறிந்து கொள்ளக் கூறினால், குற்றமற்ற தரிசனம் உடையது எது? அனாத்மாவில் ஆத்மா என்னும் பாவனை எது? பொருள் அல்லாதவற்றில் பொருள் என்னும் பாவனை எது? அதுவே மனமாம். வருகின்ற பிறப்பும், நரையும், மரணமும் இதனாலே உண்டாம்.* **(5.23)**

மெத்துறுவன் பரிசயத்தால் பதார்த்தம் தன்னில்
மேவு(ம்)ஒரு பாவனையால் மிகச்ச லிக்கும்
சித்த(ம்)உள தால்பிறப்பா திகளும் உண்டாம்
தீர்வதுகொள் வதுவடிவாம் திரளில்ஒன்றும்
இத்தனையும் பாவியா(து) அனைத்தும் நீங்கி
எப்போது நின்ற(து)அப்போ(து) எழாது சித்தம்
ஒத்துளவா தனைஒழிவால் நினைவு தீரில்
உயர்ந்தஉப சாந்திதரும் உளமாய் உண்டாம்.

**பொழிப்புரை:** *மிக மிக உண்டாகின்ற பழக்கத்தினால் பொருள்களில் பொருந்துகின்ற அதி பாவனையால் மிகவும் சஞ்சலிக்கும் மனமானது உண்டாம். உண்டாகவே பிறப்பு, நரை, மரணமும் உண்டாவதாம். தள்ளுவது கொள்ளுவது வடிவான திருசியக் கூட்டத்தில் யாதொன்றையும் அணுவளவேனும் நினையாமல் அனைத்தையும் நீங்கி, எப்பொழுது நிலைத்து நிற்கின்றதோ அப்பொழுது உதியாது மனம். சேர்ந்துள்ள வாசனையின் நீக்கத்தால் எண்ணம் ஒழியுமாயின் மேலான உபசாந்தி தரும் மனோ நாசம் உண்டாகும்.* **(5.24)**

சகப்பொருளில் ஓரிடத்(து)ஓர் நினைவும் இன்றேல்
தனிஇதயம் சூனியவிண் தன்னில் உள்ள
நிகழ்ச்சியுறத் தோன்றுவ(து)எப் படியே வள்ளால்
நெஞ்சுக்(கு)இம் மட்(டு)உருவம் எனநி னைப்பேன்

உகப்புறு(ம்)இன் பத்தாலும் பொருள்மெய் யாலும்
உள்ளுறுபல் பொருள்நினைவே உளத்தின் மேனி
மிகப்படர்காண் பவைதொழிற்(கு)ஆ காது)என்(று) எண்ணும்
விண்ணினும்நொய் யவர்க்(கு)எங்ஙன் விளையும் உள்ளம்.

**பொழிப்புரை:** *பிரபஞ்சப் பொருள்களில் எவ்விடத்தும் ஓர் எண்ணமும் இல்லையெனில், சூனிய இதய ஆகாயத்தில் தோன்றுவது எங்ஙனம்? வள்ளலே! மனதுக்கு இவ்வளவு மாத்திரமே வடிவம் என்று எண்ணுகின்றேம். விரும்பத் தக்க சுவை வடிவ பாவனையாலும், பொருள் வடிவத்தாலும், உள்ளே உண்டாம் பல பொருள்களின் பாவனை வடிவின் காரணமே மனதுக்கு உடலாகும். மிகவும் விரிந்து தோன்றும் திருசியாதிகள் (காணப்படுபவை) நிவர்த்தி மார்க்கத்திற்கு (விடுதலை வழிக்கு)த் தகுதி ஆகாது என்று கருதும் ஆகாயத்தினும் சூக்குமமான மனம் அவர்களுக்கு எவ்வண்ணம் உதிக்கும்?* **(5.25)**

அபாவமே பற்ற(ல்)அபா வம்பா வித்தல்
ஆய்ந்(து)உண்மைப் பொருள்காண்டல் மனமாய்(வு) என்பர்
சுபாவமாம் அனைத்தையும்உள் அகற்றிச் சீதச்
சுதைபோலும் இவ்விதயம் நடக்கும் என்னில்
தவாத்தொழில் உற்றாலும் அந்தச் சித்தம்
தன்வடி(வு)இ லாத(து)எனச் சாற்றும் கண்டாய்
குவால்மறுசன் மம்தருவா தனைதுன் னாதோர்
குலாலவட்டம் போல்திரிவர் குறை(வு)இல் முத்தர்.

**பொழிப்புரை:** *திருசியங்களில் (காண்பவற்றில்) சத்தியம் என்னும் எண்ணம் இல்லாமையைக் கைக்கொள்ளுதலும், திருசியங்களில் முக்காலத்திலும் என்றும் இல்லாமையைக் கொள்ளுதலும் மனோ நாசம் என்று சொல்வர். இயல்பாகவே எல்லா திருசியப் பொருள்கள் அனைத்தையும் உள்ளத்தே அகற்றி, விருப்பு வெறுப்பு நீங்கியதால் குளிர்ச்சியான அமுதம் போல இந்த மனம் விவகாரம் செய்யுமாயின் இடைவிடாத காரியங்களை இயற்றிய கோர மூட வடிவ மனம் இல்லாதது என்று சொல்லப்படும். மறு பிறவிக்குக் காரணமான கனமான வாசனை இல்லாதோர் சீவன் முத்தர் குயவனது குடம் செய்கின்ற தொழில் முடிவுற்ற போதிலும், சிறிது காலம் சுழலுகின்ற சக்கரம் போலக் குறைவு இல்லாதவராக இருப்பர்.* **(5.26)**

வறுத்தவிதை ஒப்பாகி இன்பம் இன்றி
மறுசனனம் அற்றவா தனைசேர்ந் துள்ளோர்
ஒறுத்தஇடர் தீர்சீவன் முத்தர் ஆகும்
உண்மைஉரு(வு) அடைந்தமனம் உடையோர் அன்னார்
நிறுத்(து)உணர்ஞா னக்கரைஉற் றவரும் அன்னார்
நெஞ்ச(ம்)இலா தவர்அன்னார் நிமல மாகப்
பொறுத்தஉடல் நீங்கி(ல்)ஆ காசம் ரூபம்
பொருந்தினர்அன் னார்என்று புகல்வர் அன்றே.

**பொழிப்புரை:** *(உணவுக்காக மட்டும் உதவுவதாய், மீண்டும் பயிர்செய்ய உதவாததாய்) வறுக்கப்பட்ட விதை போல விஷய இன்பம் இல்லாமல் மறு பிறப்பினை அளிக்காத சுத்த வாசனை சேர்ந்துள்ளோர் வருத்திய துன்பங்கள் நீங்கிய சீவன் முத்தர் ஆகும். சச்சிதானந்த மனதை அடைந்த அன்னார், புலன்கள் அந்தக்கரணங்களை ஒடுக்கி ஞானத்தை அடைந்த அன்னார், மனம் இல்லாதவர் ஆவர். நிர்மலமாகப் பொருந்திய தேகத்தின் முடிவில் ஆகாய வடிவமாகவும் (சிதாகாசமாக) இருப்பவர் என்றும் சொல்லப்படுவார்.* **(5.27)**

**உயிரி(ன்)அசை(வு) ஒன்றுவா தனைஒன் றாக**
**உபயமாம் மனத்தின்விதை இவற்றின் ஒன்று**
**பயில்வுறமாய்ந் தால்இரண்டும் உடனே மாயும்**
**பகர்உறுவா தனைவசத்தால் பிராணன் ஓட்டம்**
**உயிர்அசைவால் வாதனையும் உண்டாம் அத்தால்**
**உள்ளமெனும் விதைக்குவிதை முளைஒ முங்காம்**
**பயில்வுறுவா தனைஉயிரின் அசை(வு)இ ரண்டும்**
**பலவிதம்காண் பவைவித்தாய்ப் படரும் அன்றே.**

**பொழிப்புரை:** *மனதுக்கு விதையானது பிராணனின் அசைவு (சலனம்) ஒன்று, மற்றொன்று திட வாசனை ஆக இரண்டு ஆகும். இவற்றுள் ஒன்றின் அப்பியாசத்தின் வலிமையால் இரண்டும் விரைவில் நாசமாகும். கூறப்பட்ட வாசனை வசத்தால் பிராண சலனமும், பிராணனின் சலனத்தால் வாசனையும் உளதாகும். அதனால் மனம் என்னும் விதைக்கு விதை முளை கிரமமாம். பழகி வந்த வாசனை, பிராணனின் சலனம் இரண்டும் பலவித காண்பவற்றால் படர்ந்து விரிவாகும். (அதாவது திருசியங்களால் ஈடுபாட்டினை வெளியே இழுக்கும்)* **(5.28)**

**ஆதலினால் காண்பவற்றை விடுத லாலே**
**ஆருயிரின் அசைவுவா தனைஇ ரண்டும்**
**பாதவம்வேர் அற்றாற்போல் வேர்அற்(று) ஏகும்**
**படர்அறிவே காண்பவற்றின் பயில்வித் தாகும்**
**சேதனம்தோன் றா(து)எனில்காண் பனவும் இல்லை**
**செறிதைலம் இல்லாமல் திலம்உண் டாமோ**
**பேதமுற உள்புறம்காண் பனஒன் றில்லை**
**பிறம்போல்சங் கற்பிக்கும் பிறக்கும் போதம்.**

**பொழிப்புரை:** *காண்பதுவே விதையாவதால் திருசியத்தைக் (காண்பவற்றை) கவரும் ஆசையை விட்டு ஒழித்தலால் பிராண சலனம், திட வாசனை இரண்டும் மரம் வேர் அற்றது போல ஆகும். உணர்ச்சி கிளம்பாது என்ற போதில் காண்பனவும்* **(***திருசியமும்***)** *இல்லை***.** *காரணமாகப் பொருந்திய எள் இல்லாமல் எண்ணெய் எப்படி உண்டாகும்? அறிவுக்கு அயலாக உள்ளேயும், வெளியேயும் ஒருபொருளும் இல்லாதது ஆகும்***.** *அன்னியமாய் இருப்பது போல உண்டாம் அறிவு சங்கற்பிக்கும்***.** **(5.29)**

சங்கற்பத்து) அறிபொருளை அறிவு தன்பால்
தானேநோக் கடும்கனவில் தனது சாவும்
அங்குத்தே சாந்தரமும் தன்வ சத்தால்
அடைவதுபோல் அறிபொருளை அறிவு காணும்
பங்கிட்டு முன்அறிந்த(து) அறியா தேனும்
பகர்அறிவுக்(கு) எதுபத்தி பாய்ந்த(து) அத்தைத்
துங்கத்தம் வருத்தத்தால் விசாரம் உள்ளோர்
துடைப்பதுவே வெம்மாயை துடைப்ப தாகும்.

**பொழிப்புரை:** *அறியப்படும் பொருளை (திருசியத்தை) அறிவானது தனது சங்கற்பத்தால் தானாகவே காண்கின்றது. கனவு அவத்தையில் மரணத்தையும், வேறு தேசத்தில் வாழ்வதையும் சுயமாகவே காண்பது போல நனவில் திருசியத்தைத் தனது வாசனையாலே அறிவு அறியும். பகுத்துப் பார்த்தலால் முன்பு தெரிந்ததே ஆயினும், தெரியாததே ஆயினும் கூறிய உணர்வுக்கு எது எது பிரதிபலித்துத் தோற்றுமோ அவை எல்லாவற்றையும் நன்றான தனது முயற்சியினாலே விசாரம் உடையவர் துடைப்பதுவே கொடிய மாயையினை அகற்றியதாம்.* **(5.30)**

அதுதுடையா மாத்திரமே மாமோ கத்தை
அடைந்ததாம் அதுதுடைத்த மாத்தி ரம்தான்
முதுகதிஎன்(று) உரைப்ப(ர்)அறி கின்ற தன்றோ
முடிவில்பிறப்(பு) அரந்தைதான் முளரிக் கண்ணா
கதுவுறுசாட் டியம்இல்லா அறிவி லாமை
கடும்பவம்இல் லாதசுகம் காட்டும் அன்றே
சதுரனாய் அசடனாய் ஆனந் தத்தைத்
தவிர்ந்(து)ஒன்றும் அறிவ(து)அறச் சலனம் தீர்வாய்.

**பொழிப்புரை:** *அந்தத் திருசியத்தை அகற்றாத மாத்திரத்தால் மகா மோகத்தை (மயக்கத்தை) பற்றிக் கொண்டதாகும். அது அகற்றப்பட்ட மாத்திரத்தில் மோட்ச கதி என்று சொல்வர். திருசிய போதம் (காண்பவற்றின் அறிவு) அன்றோ முடிவில்லாத பிறவித் துன்பம் ஆகும். தாமரை மலர்க்கண்ணா! பற்றுகின்ற திருசியம் சம்பந்தம் இல்லாததால் கடுமையான பிறவி இல்லாத சுகத்தைத் தரும். சாமர்த்தியம் உடையவனாய், மூடத் தன்மை இல்லாதவனாய் (திருசியம் தொடர்பு இல்லாதவனாய்) சுகத்தைத் தவிர்த்து, யாதொன்றையும் உணர்வது இன்றிச் சலனம் தீர்ந்து உய்வாய்.* **(5.31)**

அறிபொருளை அறியாத அறிவே மெய்யாம்
அவன்நீசத் தியமாம்என்(று) அறைத லோடும்
செறிசடம்அற்(று) அறிவின்மை எங்ஙன் உண்டாம்
சித்தின்மை சடமாவ(து) எங்ஙன் தீரும்
நெறியி(ல்)உரை என்றஇரா மனுக்கு மீட்டும்
நிறைதவன்சொல் வான்எங்கு நிகழ்பற்(று) இன்றி
வெறிதொ(ர்)இடத்(து) ஆறுதல்ஒன்(று) அறிதல் இல்லா
வியன்சீவன் சடமிலா அறிவி லாமை.

**பொழிப்புரை:** *திருசியத்தை (காண்பவற்றில்) அறியாத சச்சிதானந்த சொரூபமே சத்தியமாம். அந்த வடிவமே நீ என்று கூறியதும், இராம பிரான் "திருசியத்தை அறியாத அறிவே சடத் தன்மையை எவ்வாறு உளதாகும்? அறிவில்லாமை என்பது சடத் தன்மையை எவ்வாறு விட்டிருக்கும்? முறையாக அருளிச் செய்வீர்" என்று கேட்கவும், மறுபடியும் நிறைந்த தவம் உடைய வசிட்ட முனிவர் கூறுவதாவது... எவ்விடத்திலும் விளங்கும் விஷயப் பற்று இன்றி வீணாக ஒரு திருசியத்திலும் ஒரு பக்கம் இளைப்பாறுதல் இல்லாத அற்புத சீவன் சடமற்ற அறிவின்மையாம்.* **(5.32)**

அறிபொருளைப் பற்றாத அறிவு பெற்றால்
ஆயிரம்கா ரியம்செயினும் சடமி லாத
அறிவிலாமை அதுவாகும் அறிப வற்றை
அற்பமும்உள் ஆகாசம் அணுகா(து) எண்ணில்
அறிஞ(ன்)அவன் அசடமாம் அறிவி லாமை
அவன்சீவன் முத்த(ன்)அ வனாகும் தன்பால்
அறிதருவா சனைஒழிவால் ஒன்று முன்னா(து)
அருங்குழவி ஊமன்அறி(வு) ஒத்து நிற்கும்.

**பொழிப்புரை:** *திருசியத்தைப் பற்றாத (அசம்வித்து உணர்வு) அசடன் இயல்பைப் பெற்றால் ஆயிரக் கணக்கான காரியங்கள் செய்த போதிலும் சடத்தன்மை இல்லாத அறிவிலாமை அதுவே ஆகும். திருசியத்தை அணுவளவு கூட இதய ஆகாசம் அடையாது என்றால் அவன் விவேகியாம். அவன் சீவன் முத்தன் ஆவன். தன்னிடத்தில் விஷயங்களை அறியும் வாசனை இல்லாமையால் ஒரு பொருளையும் கருதாத அரிய குழந்தை, ஊமை இவர்களின் அறிவுக்கு ஒப்பானதாக இருக்கும் (அதாவது திரம் பெறும் என்பது பொருள்)* **(5.33)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

அன்று சடபா வனைநீங்கி அகண்ட அறிவின் மையைப்பெறலாம்
ஒன்றும் அதனால் மீளஅறி(வு) ஒன்றில் பற்றா(து) ஒருவகையாய்
நின்ற பலவா தனைநீங்கி நிருவி கற்ப சமாதியினால்
துன்று விண்ணில் கருநிறம்போல் தொடர்ஆ னந்தம் துன்னுறுமால்.

**பொழிப்புரை:** *திருசியத்தை (காண்பவைகளில்) பற்றாத அப்போது சட பாவனை நீங்கி, (அறிவாய்) அகண்ட அறிவின்மையைப் பெறலாம். அவ்வாறு அடையப் பெறுவதால் மறுபடியும் உணர்வு ஒரு பொருளிலும் சம்பந்தப்படாது. சகல வாசனைகளும் ஒழிந்து ஒரே பிரகாரமாய் நின்ற நிருவிகற்ப சமாதியினால், ஆகாயத்தில் பொய்யாகப் பொருந்தும் நீல நிறம் போலத் தொடர்ந்து வரும் ஆனந்தம் நெருங்கி நிற்கப் பெறும். (அடையப் பெறும்)* **(5.34)**

நன்மை யான அதில்பற்றி நாடா அறிவாம் யோகிக்குத்
தன்ம யம்தான் ஆதலினால் தனிஆ னந்தம் அதனுடன்போம்
துன்னு நிலைபோக்(கு) ஒலிபரிசம் தொடர்ந்தும் அவற்றில் பற்றாதோன்
வன்மைச் சடன்அன்(று) ஆனந்தம் இலன்ஒன்(று) அறியான் மகாசுகத்தன்.

**பொழிப்புரை:** *நலம் மிகுந்ததான அந்த சமாதியில் பற்றுதலை அடைந்து, திருசியத்தில் மனம் செல்லாத உணர்வாம் யோகிக்குத் தன்மயத் தன்மையினால் ஒப்பற்ற ஆனந்தம் அதனுடன் போகும். பொருந்தியே நிற்பது, நடத்தல், ஓடுதல், கேட்பது, தொடுவது முதலியவற்றைச் செய்த போதிலும் அவற்றில் பற்றினை அடையான். வலிமை மிக்க சடன் அல்லன், ஆனந்தம் இல்லாதவன், ஒன்றையும் அறியாதவன், பேரானந்த வடிவினன்.* **(5.35)**

**இந்த நோக்கம் தனைப்பற்றி ஈனத் தொழிலோடு இசைந்தாலும்**
**வெந்த துயரின் கரையேறி விஞ்சு குணத்தின் கடல்ஆவாய்**
**அந்த உயர்சன் மாத்திரம்இவ் அறிவின் வித்தாம் அவ்வறிவு**
**முந்து சன்மாத் திரம்நின்று முளைக்கும் தேசில் ஒளிபோல.**

**பொழிப்புரை:** *இந்த மேலான திருஷ்டியை உடையவன் ஆகி, கீழான காரியங்களோடு கூடினாலும் இது வரை தபித்துக் கொண்டிருந்த துக்கத்தின் கரை ஏறி. எஞ்சி நிற்கும் குணங்களின் கடலாக ஆகலாம். அந்த மேலான சன்மாத்திர வத்து இந்த உணர்வின் விதையாம். அந்த உணர்வானது முன்னுள்ள சன்மாத்திரத்தில் இருந்து உண்டாகும் ஒளியில் ஒளியின் பிரபை போலவாம்.* **(5.36)**

**இடமார் சத்துக்(கு) இருவடிவாம் ஏகம் நாநா விதவடிவாம்**
**தடமார் ஏகம் ஒருவடிவாம் சாற்றும் இவற்றைப் பிரித்திடக்கேள்**
**கடமே படமே உள்ளதெனக் கதுவக் காணும் பாவனைகள்**
**படரும் சத்தாம் ரூபத்தின் பிரிவால் பலவாம் அதுவொன்றே.**

**பொழிப்புரை:** *விசாலமாகிய சத்துக்கு இரண்டு வடிவங்கள் உண்டு. அவற்றுள் ஒன்று பல வடிவமாம். வியாபகமான மற்றொன்று ஏக வடிவமாம். கூறிய இவ்விரண்டினையும் பிரித்திடக் கேட்பாய். கடம் இருக்கின்றது, துணி இருக்கின்றது என்று பொருந்தக் காணும் பாவனைகள் விரவிய சத்தாம் வடிவத்தின் பிரிவால் பல வடிவமாம். அது ஒரு பிரிவென உணர்க.* **(5.37)**

**சற்றும் விசேடம் அறவிட்டுச் சன்மாத் திரமாய்ப் பற்றின்றி**
**ஒற்றை வடிவாம் மகாவடிவாம் அதுவே சத்தைக்(கு) உறும்பதமாம்**
**மற்றும் கால சத்தைகலா சத்தை வத்து சத்தையென**
**உற்ற சத்தை மூன்று(ம்)ஒழித்(து) ஒன்றாம் சன்மாத் திரத்(து)உறுவாய்.**

**பொழிப்புரை:** *ஒரு சிறிதும் பெயர், சாதி, வடிவம் முதலிய பேதத்தை விடுத்து, சத்தா மாத்திரமாய், பற்றின்றி இருக்கும் ஏக வடிவமே மகாவடிவம். அதுவே சத்துக்கு உரிய நிலை ஆகும். காலத்தால் இயற்றப்பட்ட சென்ற காலம், வரும்காலம் முதலிய பேத பின்னமான சத்து, அவயவங்களே அதாவது பரமாணுக்களே ஜகத் சத்து என்பர். சொரூப சம்பந்தத்தால் இயற்றப்பட்ட கடம், துணி முதலிய வடிவமான சத்து, இந்த மூன்று சத்துகளின் பேத பாவனையை ஒழித்து, ஏகமாகிய சத்தா மாத்திரத்தில் இருப்பாய்.* **(5.38)**

**கால சத்தை தன்சத்தை வேறாய்க் கருதும் தொழில்விடின்ஓர்**
**சீலம் நன்றா கியசத்து ரூபி எனினும் பொருள்சேரா**
**கோல விவிதப் பதநல்கும் கொள்கை பலபா வனைஉண்டோ**
**மூலங் கண்ட(து) அனேகத்துக்(கு) அதுநன் றாகும் முறைஎங்கே.**

**பொழிப்புரை:** *கால சத்து, தன் சத்து இவற்றைப் பேதமாகக் கருதும் விகற்பத்தை விட்டாலும், உத்தம சத்து வடிவமே என்ற போதிலும் உபாதியோடு இருப்பதால் யதார்த்த ஏக சத்து ஆகா. விசித்திர பலவித சொரூப பேதம் செய்யும் கொள்கையால் பலவித பாவனைகள் உண்டாம். பலவிதமான தன்மைக்குக் காரணம் ஆகிக் காரணம் கண்ட அதற்கு ஏக சத்து தன்மையைப் பொருந்துவது எங்கே?* **(5.39)**

சத்தா சாமா னியம்ஒன்றும் தனிப்பா வித்துப் பரிபூர்ணச்
சுத்தா னந்த னாய்த்திசைகள் எல்லாம் துன்னி நின்றிடுவாய்
சத்தா சாமா னியம்மட்டின் கோடி ஏ(து)அங்(கு) அதுதானே
சுத்தா காரம் இதன்வித்தாம் அதில்நின்(று) இதுதான் தோன்றிடுமே.

**பொழிப்புரை:** *சகல வடிவமுமாய் இருக்கின்ற சத்தா சாமானியம் ஒன்றினையே (ஏக சத்தினையே) நன்றாகப் பாவனை செய்து எல்லாத் திசைகளிலும் நிறைந்தவனாய் (எல்லாப் பொருள்களிலும் நிறைந்தவனாய் சகலமும் அதுவாய் இருத்தலின் அதுவே நீயாய் இருத்தலின் பரிபூரண ஆனந்தனாய்) வாழ்ந்திடுவாய். சத்தா சாமானிய மாத்திரத்தின் எல்லை எதுவோ அதுவே தூய வடிவமாய் பவித்திரமான சொரூபம். இதுவே வித்தாம். இதிலிருந்தும் அறிவு தோன்றிடும், அறிவிலிருந்து திருசியம் தோன்றிடும், திருசியத்திலிருந்து பிராண சலன வாசனைகள், அவற்றில் சித்தம், அதனால் தேகம், அதனால் சம்சாரம் தோன்றிடும்.* **(5.40)**

மொழிசத் தாசா மானியத்தின் முடிவில் எண்ணம் எல்லாம்போய்
ஒழிவ(து) ஏ(து)அங்(கு) அதுதான்நல் உணர்வின் பதமாம் முதல்அதுவாம்
அழி(வு)இல் அதற்கு வித்தில்லை ஆங்கே இறந்து விகார(ம்)அறத்
தழிய உணர்வு நிலைபெறும்அப் பதம்சார்ந் தவர்மீண்(டு) இடர்சாரார்.

**பொழிப்புரை:** *கூறிய சத்தா சாமானியத்தின் முடிவில் எண்ணம் எல்லாம் தீர்ந்து போய் லயமாவது எது, அது தான் சச்சிதானந்த வடிவமாம். எல்லாவற்றுக்கும் அதிட்டானமாம். அழிவில்லாத சத்தா சாமானியத்திற்கு வித்தில்லை. அங்கு லயித்து நிர்விகாரமாய்த் தழுவிய அறிவு நிலைத்து நிற்கும். அந்தப் பதத்தை அடைந்தவர் மறுபடியும் துயரத்தை அடையார்.* **(5.41)**

அதுவே ஏது அனைத்திற்கும் ஏது அதனுக்(கு) ஏதுவிலை
அதுவே சாரம் அனைத்திற்கும் சாரம் அதனில் சாரமிலை
அதுவாம் பெரிய தர்ப்பணத்தில் அனைத்துப் பொருளின் பார்வைகளாய்
அதுஃ(து) என்ப தெலாம்தோன்றும் அருகில் மரங்கள் வாவியில்போல்.

**பொழிப்புரை:** *சத்தா சாமானியமாம் அதுவே காரணம். அனைத்துக்கும் காரணமாம். அதற்குஒருகாரணம்இல்லை. அதுவேசாரம். அனைத்துக்கும்சாரம்ஆகும். அதனைக்காட்டிலும் வேறு ஒரு சாரம் இல்லை. அதுவாகிய பெரிய கண்ணாடியில் எல்லாப் பொருள் எண்ணங் களாய அது இது என்பவை எல்லாம் பிரதிபிம்பிக் கின்றனவாம். தண்ணீரில் குளத்தின் கரையில் இருக்கும் மரங்கள் பிரதிபிம்பித்துத் தோற்றுவது போல்வதாகும்.* **(5.42)**

அதுவே அமலம் சரைஅற்ற(து) அ'(து)ஆத் துமத் துவம்அதுவே
சதுரா வதுவந் துறில்உள்ளம் சாற்றும் உபசாந் தியைஅடையும்
திதமாய் அறிந்(து)அவ் வடி(வு)ஆவாய் சென்மம் அற்ற பதம்பெறுதி
முதல்வா என்ன இராமனும்அம் முனியை நோக்கி மொழிகின்றான்.

**பொழிப்புரை:** *சத்தா சாமானியமே நிர்மல வடிவம். முதுமை அடையாதது. அதுவே ஆத்ம தத்துவம் ஆகும். அற்புதமாகிய அதனை நன்கு உணர்ந்திடில் மனமானது உபசாந்தியை அடையும். அதி திடமாக அதனை நின்மயமாய் அறிந்து சேதன வடிவமாய் இருப்பாய். பிறப்பற்ற பதத்தை அடைவாய். முதல்வனாகிய இராகவனே! என்று கூறவும், இராமபிரானும் வசிட்ட முனியை நோக்கிச் சொல்லலானார்.* **(5.43)**

**அன்ன விதைகள் இன்னதென அனைத்தும் உரைத்தாய் அனந்த(ம்)எனச்**
**சொன்ன பதம்எம் முயற்சியினால் துன்ன லாகும் விரைவி(ல்)என்ன**
**மன்னு முனிசொல் வான்துன்ப விதையாம் இவற்றின் வகைமேன்மேல்**
**என்னென்(று) உரைத்தேன் அவற்றவற்றின் முயல்வால் விரைவில் பதம்எய்தும்.**

**பொழிப்புரை:** *அவ்விதம் கேட்ட சம்சாரக் கொடியின் தேகம் முதலிய விதைகள் இன்னது இன்னது என்பதாக எல்லாவற்றையும் கூறி அருளினீர். அனந்தம் எனக் கூறிய அந்தப் பதம் எந்த முயற்சியால் சீக்கிரத்தில் அடைய முடியும்? என்று இராம பிரான் கேட்கவும் தவம்பொருந்திய வசிட்ட முனிவர் கூறுவதாவது... இந்த சம்சாரத்திற்கு விதைகளான விவரத்தை ஒன்றுக்குப் பின் எது அதற்குப் பின்னால் இருப்பது என்பதைக் கூறினோம். அதன் அதன் பாவனையால் சீக்கிரத்தில் தனது யதார்த்த சொரூபத்தை அறிந்து அழியாத சொரூபத்தில் நிலைபெற்று அப்பதம் அடைவாய்.* **(5.44)**

சத்தா சாமா னியக்கோடி பதத்தே சார்வுற்(று) ஒருக்காலே
கொத்தா கியவா தனைபுருட வருத்தத் தால்கோள் அறவிட்டு
சொத்தா கியதத் துவம்உணர்ந்து தொலையா வடிவம் நிலைஅமிழ்ந்த
உற்றாய் கணப்போ(து) என்னினும்அக் கணத்தே உறும்அப் பதம்அடைவாய்.

**பொழிப்புரை:** *சத்தா சாமானிய கோடி பதத்தில் அடைவுற்று விரைவிலேயே கூட்டமாகிய வாசனைகளைப் புருட முயற்சியினால் வலிதில் நன்றாகத் தியாகம் செய்து, தன்னுடையதாகிய உண்மை வடிவத்தை உணர்ந்து, கெடாத வடிவமாம் நிலைமையில் மூழ்கலானாய். ஒரு கணமாக இருந்தாலும் அந்தக் கணத்திலேயே அந்தப் பதத்தை அடைவாய்.* **(5.45)**

நிகழ்சத் தாசா மானியத்தின் உருவாம் நிலயம் நேர்தியெனில்
பகரும் அதனில் சற்(று)அதிக வருத்தத் தால்அப் பதம்பெறுதி
திகழும் சித்தத் துவத்தி(ல்)உறு தியானம் செய்யில் அதற்(கு)அதிக
மிகவும் வருத்தம் உறுதலினால் அந்தப் பதத்தை மேவுதியால்.

**பொழிப்புரை:** *சாரம் அனைத்துக்கும் சாரமாய் விளங்கும் வடிவமாம் நிலையை அடைவாய் எனில் கூறிய பாவனா மயமாம் அதிலிருந்தும் சிறிது அதிக முயற்சியாகத் திடம் பொருந்திய முயற்சியால் தத் பத இலட்சியார்த்தத்தை அடைவாய். தத் பத இலட்சி யார்த்தத்தை துவம்பத இலட்சியார்த்தமாய் விளங்குகின்ற சாட்சியாம்*

*அந்தராத்மாவில் பொருந்தி அழுத்தமாகத் தியானம் செய்யில் அதனைக் காட்டிலும் அதிகமாக, திடம் பொருந்திய முயற்சியால் தத்பத இலட்சியார்த்தத்தை அடைவாய். (சத்தா சாமானிய நிட்டையிலோ அதனினும் பிரயத்தன விசேடம் செய்ய வேண்டும் என்பது பொருள். சித்தத்துவ சமாதியிலாயின் அதனினும் அதிகமாக முயற்சியாக விசேடம் செய்ய வேண்டும் என்பது பொருள்.)* **(5.46)**

**முந்து வெறிதே அறிபொருளில் தியானம் தோன்றா முகில்வண்ணா**
**இந்த அறிவின் சம்பவத்தால் என்றும் எங்கும் எய்தாதால்**
**தொந்த மான வாதனையை வருந்தித் துடைத்தாய் எனில்அதனால்**
**வெந்த ஆதி வியாதியெலாம் விரைவில் துகளாய் அகன்றிடுமே.**

**பொழிப்புரை:** *நீல மேக வண்ணனாகிய இராகவ! முன்னர் திருசியத்தில் (காணப்படும் அறியப்படும் பொருள்களில்) தியானம் செய்யில் சித்திக்க மாட்டாது. (அதாவது தியானம் கூடாது) எந்தக் காலத்தும், எந்த இடத்தும், இந்த அறிவு இருப்பதால் கிடைக்க மாட்டாது. (அதாவது திருசியம் என்கின்ற காணப்படும் பொருள்களின் முன் காண்பவனாகிய திருக்கு இருப்பதால் திருசியம் என்கின்ற காண்பவை கிடைக்காது) துவந்துவமான வாசனையை முயற்சி செய்து அகற்றுவதிலும், மனோ நாசத்தினாலும் முயற்சி செய்வாய் ஆயின் உளத்தைத் தகிக்கின்ற உள்நோய், வெளிநோய் யாவும் சீக்கிரத்தில் பொடிப் பொடியாய்ப் போகும்.* **(5.47)**

**முன்னம் சொன்ன வருத்தங்கள் முழுதும் செயினும் வேரோடே**
**சொன்ன மலையைப் பிடிங்கிடினும் தொடர்வா தனையை விடல்அரிதால்**
**உன்னு மனம்எம் மட்(டு)ஒழியா(து) உறுவா தனைஅம் மட்(டு)அழியா(து)**
**அன்ன படிவா தனைஎம்மட்(டு) அழியா(து) உளம்அம் மட்(டு)ஒழியா.**

**பொழிப்புரை:** *முன்பு கூறிய முயற்சி கஷ்டங்கள் முழுவதுமாகச் செய்தாலும் வேரோடு மேரு மலையைப் பிடிங்கினாலும், பல பிறப்புகளில் சம்பாதித்த வாசனையை விடுவது முடியாத காரியமாம். எண்ணாத எண்ணமெலாம் எண்ணும் மனம் (காண்பவற்றில்) எந்த அளவுக்கு அகலாதோ பொருந்திய வாசனை அந்த அளவுக்கு அகலாது. அவ்வாறு வாசனையானது எந்த அளவுக்கு அகலாதோ அந்த அளவுக்கு உள்ளமானது அழியமாட்டாது.* **(5.48)**

**உண்மை ஞானம் எம்மட்டும் வாரா(து) அம்மட்(டு) உளம்அழியா**
**திண்மை உளம்எம் மட்(டு)அழியா திகழ்தத் துவம்அம் மட்(டு)எய்தா(து)**
**அண்மை யுறுவா தனைஎம்மட்(டு) அழியா(து) அம்மட்(டு) உணர்(வு)அணுகா**
**வண்மை உணர்(வு)எம் மட்(டு)அணுகா வருவா தனைஅம் மட்(டு)அழியா.**

**பொழிப்புரை:** *தத்துவ ஞானம் எந்த அளவுக்கு வராதோ அந்த அளவுக்கு மனம் அழியாது. திடமான மனம் எதுவரையில் அழியாதோ அதுவரையில் விளங்குகின்ற ஆன்ம வத்து அடைய முடியாததாம். அருகில் வந்தடைந்த வாசனை எது வரையில் அழியாதோ அதுவரையில் ஆன்ம ஞானம் உண்டாகாது. ஆனந்தத்தைத் தரும் ஞானம் எதுவரையில் உண்டாகாதோ மனமானதும் அதுவரையில் அழியாது.* **(5.49)**

செறிவா ஞானம் மனம்மாய்வு திரள்வா தனைமாய்(வு) இம்மூன்றும்
பிறிதாம் கார ணங்க(ள்)தமைப் பெறுசா தித்தற்(கு) அரிதாகும்
நெறியாம் அதனால் விவேகிகளாம் நிலைகூர் புருட வருத்தத்தால்
பொறியார் போக மயல்தூரப் போக்கில் இவைதாம் பொருந்துவதாம்.

**பொழிப்புரை:** *தத்துவ ஞானம், மனோநாசம், திரண்ட வாசனைகளின் நாசம் இந்த மூன்றும் ஒன்றுக்கு ஒன்று காரணத் தன்மையைப் பெற்று சாதிப்பதற்கு அரிதாக உள்ளது. இந்த முறைமையால் விவேக புத்தியுடன் விசாரம் செய்பவர்கள் ஒரே முகமாய்ச் செய்யும் மாறாத புருட முயற்சியினால் போக்கியங்களை அனுபவிக்கும் போக இச்சையை வெகு தூரத்தில் விட்டு விட்டால் இந்த மூன்றும் கிடைப்பதாம்.* **(5.50)**

இனைய மூன்றும் சமமாக இயற்றார் எம்மட்(டு) அம்மட்டும்
அனைய பதம்எய் தாவருடம் ஆயி ரங்கள் சென்றாலும்
வினைஇல் காலம் சமமாக மிகுநாள் இயற்றில் மிகப்பலிக்கும்
நினைவில் ஒன்(று)ஒன் றாஇயற்றில் நிலைகூ டாநிட் பலமாகும்.

**பொழிப்புரை:** *இந்த மூன்றையும் எந்த அளவுக்குச் சமமாகச் செய்யாதார் ஆயின் அந்த அளவுக்கு அந்தப் பதம் அடையமாட்டாது. ஆயிரம் வருடங்கள் கடந்த போதிலும், யாதொரு தடையும் இல்லாமல் நீண்டகாலம் சமமாக பயிற்சி செய்து வந்தால் பெரும் பிரயோசனத்தைக் கொடுக்கும். மிகுந்த சிரத்தையோடும் ஒவ்வொன்றாக வெகுகாலம் பயிற்சி செய்தாலும் சொரூப நிலையைக் கூட்டி வைக்காது, பிரயோசனம் இல்லாமலே போய்விடும்.* **(5.51)**

ஒக்க இயற்றல் இம்மூன்றும் உளத்தின் கட்டெல் லாம்ஒழிக்கும்
சிக்க லாது தாமரைநூல் வளையம் சிதையில் சிதையாதோ
தொக்க பிறவித் திரள்க(ள்)தொறும் தொடர்ந்து வந்த வாதனைதான்
மிக்க கால யோகத்தின் பழக்கத்(து) அல்லால் விடா(து)எங்கும்.

**பொழிப்புரை:** *இந்த மூன்றினையும் சமமாகப் பயிற்சி செய்து வரின் மனதின் கட்டு அனைத்தையும் ஒழித்திடும். தாமரைத் தண்டு கெட்டால் தடையின்றி நூல் கெடாதிருக்குமோ? பல பிறவிகளின் கூடவே தொடர்ந்து வரும் வாசனைகள் நீண்ட காலப் பயிற்சியினால் அன்றி எவ்விடத்திலும் நாசமாகாது.* **(5.52)**

பிறவா தனையை விடல்ஒக்கும் பிராண வாயுத் தடையென்று
திறமாய் அறிஞர் இயம்புவரால் திடமாய் அதுவும் செயவேண்டும்
உறுவா தனையை விடில்உள்ளம் உள்ளம் அல்லா மையைஅடையும்
நிறைஆர் உயிரைத் தடுக்கிலும்ஆம் நினக்(கு)ஏ(து) இச்சை அதுசெய்வாய்.

**பொழிப்புரை:** *பிராணனைத் தடுத்தல் மலின வாசனையை விடுவதற்கு ஒப்பாகும் என்பதாகத் திறமான அறிஞர்கள் சொல்வர். மிகத் திடமாக அதனையும் பயிற்சி செய்ய வேண்டும். வந்தடையும் வாசனையைத் தியாகம் செய்தால் மனம் மனமில்லாத தன்மையை அடையும். தேகத்தில் நிறைந்துள்ள பிராணனைத் தடை செய்த போதிலும், பிராணனைத் தடுத்தலை வாசனா சயம் முதலிய மூன்றினோடு ஒப்பாகவே பயிற்சி*

*செய்தல் வேண்டும். மனோ நாசத்தில் வாசனா சயம் அல்லது பிராணனைத் தடுத்தல் காரணம் ஆகும். உனக்கு எது சுலபம் என்று தோன்றுகின்றதோ அதனையே பயிற்சி செய்வாய்.* **(5.53)**

**பிராணா யாம வன்பழக்கம் பேணும் குருசொல் உபாயங்கள்**
**விரா(வு)ஆ சனம்போ சனம்யோகம் விளம்பும் இவற்றால் உயிர்ஒடுங்கும்**
**இராமா சங்க விவகாரம் இன்மை பவபா வனைஇன்மை**
**ஒ(ரு)ஆகம் தீர்இ டம்நோக்க உரைத்த இவற்றால் வாதனைபோம்.**

**பொழிப்புரை:** *நீண்ட காலமாகச் செய்யும் பிராணத் தடை பயிற்சி சேவிக்கும் குரு உபதேசித்த உபாயங்கள், உடலால் செய்யும் ஆசனம், முறையான உணவு, இயமம், நியமம் என்று சொல்லப்பெற்ற இவற்றால் பிராணனின் தடையாகும். இராகவனே! வெளிமுக நாட்டம் உடையவரின் விவகாரம் இல்லாமையால் சம்சார பாவனை இல்லாமை ஒப்பற்ற தேகம் தீர்ந்த இடத்தை நோக்குதல் என்னும் இவற்றால் வாசனை நாசமாகும்.* **(5.54)**

**பகைவா தனைமாய்ந் திடில்சித்தம் தோன்றா பவனம் ஒடுங்கிவிடில்**
**தொகைதீர் துகள்அந் தரத்(து)உண்டோ சொன்ன பிராணன் அசை(வு)ஏது**
**மிகையார் உள்ளத்(து) அசை(வு)அதுவே அதனால் பிராண விசைத்தடைதான்**
**தகைசேர் மதிமான் களுக்(கு)இயல்பாய்த் தப்பா(து) இயற்றத் தக்கதுவே.**

**பொழிப்புரை:** *பகையாகிய வாசனை நாசமாகி விட்டால் மனமானது தோன்றாது. காற்று அசையாமல் இருந்துவிட்டால் அளவற்ற தூசுகள் ஆகாயத்தில் உண்டோ? கூறிய பிராணனின் அசைவு எது? அது மிகுந்த மனதின் சலனமே ஆகும். அதனால் பிராணனைத் தடுத்தல் தகுதி வாய்ந்த புத்திமான்களுக்குச் சுபாவமாய் (இயல்பாய்) விடாமல் செய்யத் தகுந்ததே ஆகும்.* **(5.55)**

**(வேறு)**

**ஊக நன்மையால் அல்லது வெலப்படா(து) உள்ளம்**
**வேக மத்தமா அங்குசத்(து) அலால்வெலப் படுமோ**
**ஏக போதத்தை அறித(ல்)நல் லவருடன் எய்தல்**
**சோக வாதனை விடல்உயிர் தோன்றுறா(து) ஒடுக்கல்.**

**பொழிப்புரை:** *(அத்தியாத்ம வித்தை, சாது சங்கம், வாசனா நாசம், பிராணனைத் தடுத்தல் ஆகிய) நல்ல ஊகத்தால் அன்றி மனதை வெற்றி கொள்ள முடியாது. உக்கிரமான மத யானையை அங்குசத்தால் அன்றி வெல்லமுடியுமோ? அத்வைத பிரம்ம சித் சொரூபத்தை அறிதலும், சாது சங்கத்தை அடைதலும், துயர்மய வாசனையைத் தியாகம் செய்தலும், பிராணனை அசையாது நிறுத்தலும்.* **(5.56)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**உரைசெய்நால் வகையும் நெஞ்சை ஒடுக்கு(ம்)ஊ கங்கள் ஆகும்**
**புரையிலா இவற்றுக்(கு) உள்ளம் ஒடுங்குதல் புயல்ம ழைக்குத்**
**தரையுறு தூளி போலாம் சாற்று(ம்)ஊ கங்கள் அன்றி**
**விரைவில்நெஞ்(சு) அடர்ப்பார் தீபம் விட்(டு)இருள் இருளால் தீர்ப்பர்.**

**பொழிப்புரை:** *(ஆக) கூறிய இந்த நான்கு முறைகளும் மனதை அடக்கும் யுக்திகளாகும். குற்றமற்ற இந்த உபாயங்களுக்கு மனம் அடங்குதல் மேகத்தின் மழையினால் பூமியில் படிந்துள்ள தூசுகள் ஒடுங்குதல் போல ஒடுங்கும். கூறப்பட்ட இந்த ஊகங்கள் அல்லாமல் வேகமாக அடத்தால் மனம் அடக்கச் செய்வர். விளக்கினை அணைத்து விட்டு இருளினை இருளால் நீக்குவதற்கு ஒப்பாவார்.* **(5.57)**

**வலியினால் விரைந்து)ஊ கங்கள் அன்றியே மனத்தை வெல்வார்**
**ஒலிமதக் களிற்றைக் கஞ்ச வளையநூல் ஒன்றால் சேர்ப்பார்**
**மெலியும்அம் மூர்க்கர் உள்ளம் வெருவிநொந்(து) அறநொய் தாகி**
**நலியு(ம்)என்(று) ஒன்றும் நம்பா நகருற்று வெருளும் மான்போல்.**

**பொழிப்புரை:** *நால்வகை ஊகத்தால் அன்றி அடத்தால் வேகமாக மனதை வெற்றி கொள்ள முயற்சி செய்பவர் பிளிறுகின்ற மதம் பொருந்திய யானையைத் தாமரைத் தண்டின் சிறிய நூலால் கட்ட முயற்சிப்பவரை ஒப்பார். அந்த மூர்க்கருடைய மனம் மெலிந்து பீதி அடைந்து வருந்தி எப்பொழுதும் இழி நிலைமையை அடைந்து ஒன்றையும் நம்பாது நகருக்குள் புகுந்த மான் பயப்படுவது போலக் கெடும் என்பர்.* **(5.58)**

**தவ(ம்)மகம் தீர்த்தம் தேவ அருச்சனை தானம் ஆதி**
**அவமயக் கத்தால் நீள்நாள் விலங்குபோல் அவத்தர் வாழ்வர்**
**பவமுறும் இவற்றை விட்டுப் பரிசுத்த பரம போதம்**
**கவரறப் பற்றி எல்லாக் காதலும் நீக்கி நிற்பாய்.**

**பொழிப்புரை:** *ஆராய்ச்சி இல்லாதவர்கள் உலக போகங்களை விரும்பி (கிருச்சிர சாந்திரயாணாதி) செய்யும் தவம், சோமம் முதலிய யாகம், கங்கை முதலான தீர்த்தம், தெய்வ அருச்சனை, தன்னுடையதைப் பிறருடையதாக ஆக்கும் தானம் முதலிய தேவையற்ற பிராந்தியால் வெகு காலம் விலங்கு போலக் கழிப்பர். பிறப்புக்குக் காரணமாகப் பொருந்தும் (மேற்சொன்ன) இவற்றைத் தியாகம் செய்து (விட்டுவிட்டு) பரிசுத்தமான உயர்ந்த சேதனத்தைத் தன் சொரூபமாகவே (பேதமின்றி) அறிந்து சகல ஆசைகளும் அகற்றி வாழ்வாய்.* **(5.59)**

**(வேறு)**

**நோக்கும் பொருள்அற்(று) அறநன்றாய் நுனிக்கும் கருத்(து)அற்றுத்**
**தாக்கும் அறிவின் பதமான ஒன்றை நாடிச் சான்றோனே**
**வீக்கும் விசாரம் அறஇதயத்(து) உறைவாய் தொழிலை மேவுகினும்**
**ஆக்கம் செய்வான் அலாதபதம் அடைதி சமமாம் சீர்விளங்க.**

**பொழிப்புரை:** *(காணப்படும்) திருசியம் இன்றி, எப்பொழுதும் உத்தமமாய், முதன்மையதாய், நிருவிகற்பமாய், அறியும் சேதன பதமாய் இலங்கும் ஏகமாய வத்துவை நாடி விவேகியான இராகவனே! வீழ்த்துகின்ற கவலை ஒன்றும் இன்றி இதயத்தில் நிலை நிறுத்தி நிற்பாய். வந்தமைகின்ற வினை வசத்தால் விவகாரம் செய்த போதிலும், கர்த்தா அல்லாத பதத்தை அடைந்து சமம் உடையவனாக விளங்குவாய்.* **(5.60)**

**தனது மனத்தை ஒருக்காலே விசாரத் தாலே சமிப்பித்த**
**அனகன் பிறவிப் பயன்பெற்றோன் அற்பம் எனினும் இதயத்தே**
**வினவு விசாரம் எழில்அதுதான் விடாது பழகும் யோகத்தால்**
**கனம தாகிப் பல்விதமாம் கப்(பு)ஆ யிரமாய்ப் பலவாகும்.**

**பொழிப்புரை:** *தன்னுடைய மனதைக் கொஞ்ச காலமேனும் விசாரத்தாலே இலயப்படுத்திய தூயவன் பிறவி எடுத்ததன் பயனை அடைந்தவன் ஆவான். சிறிதாயினும் இதயத்தில் வினவுகின்ற விசாரம் உதயமாகில் அதனை இடைவிடாமல் பயிற்சி செய்யும் யோகத்தினால் பெரியதாகிப் பலவிதமாக ஆகும். ஆயிரம் கிளைகளாக விரிந்து நிற்கும்.* **(5.61)**

**தக்க விசாரம் எனும்பூத்த தருபூ வட்டத்(து) ஒருதாளாய்த்**
**துக்க விசாரச் சூறைக்காற்(று) அசைத்தற்(கு) அரிதாய்த் துவட்சியிலா**
**மிக்க நிலையாம் நிலைபோக்கு விழித்தல் உறங்கல் உளோர்மனத்தில்**
**புக்க விசாரம் இல்லாரேல் பொன்றி னோராம் எனப்புகல்வர்.**

**பொழிப்புரை:** *தகுதியான ஆத்ம அனாத்ம விசாரம் என்னும் பூக்கள் மலர்ந்த மரமானது பூமியில் பலமான வேர்களை உடையதாய்த் துக்க வடிவ விருப்பு வெறுப்பு முதலான சூறாவளிக் காற்றால் அசைப்பதற்கு முடியாததாய் அதி திடமாக நிலை பெற்றிருக்கும். நிற்பது, போவது, வருவது, நனவு, கனவு முதலிய செய்கைகள் உள்ளவர் மனதில் எப்பொழுது விசாரம் இல்லையோ, அப்பொழுது அவன் உயிரோடு கூடியிருந்தாலும் இறந்தவன் என்றே சொல்லப்படுவான்.* **(5.62)**

**கெடாத சிற்கண் ணால்நீதான் கிளர்மே லவர்கள் உடனேதான்**
**விடா(து)இவ் வுல(கு)ஏ(து) யாம்ஆர்என்(று) உறைக்க மெல்ல விசாரிப்பாய்**
**தடா(து)உள் பொருள்தேர் வித்தைக்கு விசாரம் தானே தனிஞானம்**
**கடாவி அறியத் தக்க(து)அதில் காணும் பாலின் மதுரம்போல்.**

**பொழிப்புரை:** *மறைவுபடாத அத்யாத்ம திருஷ்டியால் நீ தனியாகவாவது அல்லது நிராசை உடைய சத் புருடர்களோடாவது இடைவிடாமல் இந்தப் பிரபஞ்சமானது எவ்வாறு உண்டானது, இந்த சகத்தில் விவகாரம் செய்து திரியும் நாம் யார் என்பதாக அழுத்தமாக நிதானமாக விசாரம் செய்வாய். தடையில்லாமல் அத்யாத்ம வித்தைக்கு விசாரம் தான் ஒப்பற்ற காரணம் ஆகும். ஆராய்ந்து எழுந்த அந்த ஞானத்தில் அறியத்தக்கதானது பாலில் உள்ள மதுரச் சுவை தெரிவது போல் தானாகவே விளங்கும்.* **(5.63)**

**நன்றாம் ஞானச் சமநோக்கால் நாடும் பொருட்குச் சமம்தானே**
**ஒன்றா தரித்தோன் தீனமுறான் உள்ளம் அஞ்சான் விவசமுறான்**
**அன்றாம் சுத்தம் அபத்தியம்நஞ்(சு) அடுத்த தேனும் அவன்அருந்தி**
**இன்றாய் இமைப்பில் இறும்நொந்த(து) இறந்த(து) அனம்கண் டதுபோலாம்.**

**பொழிப்புரை:** *நல்ல ஞானமயமான சம நோக்கினால் நாடுகின்ற பொருள்களுக்கும் சமமாக உள்ளவன். (பார்வை சமமானால் எல்லாப் பொருள்களும் சமமாகவே தோற்றும்) ஏகமாக உணர்ந்தவன் இழிவை அடையான். மனம் அஞ்சமாட்டான்.*

*பரவசம் ஆகமாட்டான். அசுத்தமானது, அபத்தியமானது, விஷம் கலந்தது என்ற போதிலும், நொந்து பழையதானதும், சுவை இல்லாமல் போனதும் ஆன அன்னத்தை அவன் அன்னத்தைக் கண்டதே போல அருந்தினால் கணப்பொழுதில் தோஷம் இல்லாததாய் நல்ல சீரணம் ஆகும்.* **(5.64)**

**கரள காளம் ஒப்பனபால் கருப்பஞ் சாறு)ஓ தனம்நுகரில்**
**விரவு புந்தி பற்றாமல் மெய்ம்மை உணர்ந்தோர் சமம்ஆவர்**
**சிரம்)அங்(கு) அரிந்தோர் சிரம்தந்தோர் செறுனர் என்னார் உற(வு)என்னார்**
**உரவு ஞானத்(து) ஒருநோக்கால் ஒக்கக் காண்பர் உள்குளிர்ந்து.**

**பொழிப்புரை:** *கொடூரமான ஆலகால விஷத்திற்குச் சமமானவை, பால் சாதம், கரும்புச் சாறினால் ஆன வெல்லம் கலந்த சாதம் புசித்தாலும், பிரம்ம சொரூபத்தில் நிலைத்த புத்தி உடையவர் விருப்பு வெறுப்புகளை அடையாமல் சமமானவர் ஆவர். தலையை அரிந்தவர், தலையைத் தந்தவர் ஆகிய இவர்களை முறையே பகையாகவும், உறவாகவும் கருதமாட்டார். திட ஞானத்தினால் உண்டான ஏகம் என்ற பார்வையால் உள்ளே குளிர்ச்சி அடைந்து சமமாகவே காண்பர்.* **(5.65)**

**மூட இந்தி யங்க(ள்)தமை மோக விடய நிலைதன்னில்**
**ஓட ஒட்டா(து) உரன(ற்)எவ்வம் ஒழிந்த புந்தி யால்தடுப்பர்**
**கேடு)இல் உண்மை அறிந்(து)இளைப்(பு)அற்(று) உணர்வாம் தன்னைக் கிட்டாரை**
**நீடு)இந் தியங்கள் கெடஅருந்தும் நிலச்சிற் றளிரை மானினம்போல்.**

**பொழிப்புரை:** *அறியாமை மிகுந்த இந்திரியங்களை மோகம் தரும் விஷயங்களில் நோக்கி ஓடவும், அவற்றில் ஒட்டாமலும், திடம் உடையவர் கவலையில்லாத புத்தியால் தடுத்திடுவர். கேடு இல்லாத தத்துவத்தை (ஆத்மாவை) உணர்ந்து சித்த அமைதி அடையாத அவர்களைத் தளிர்களை உண்கின்ற மான்கள் கூட்டம் போல, விஷயங்களில் நீண்டு செல்லும் இந்திரியங்கள் கெடுகின்றவாறு தின்றுவிடும்.* **(5.66)**

**சங்கம் அடியாப் பொருள்உண்டாம் சங்கம் அடியாம் ஆபத்தாம்**
**சங்கம் அடியா ஆசைவரும் சங்கம் அடியாப் பிறப்(பு)உண்டாம்**
**சங்கம் அறுத்தல் வீ(டு)என்பர் சங்கம் அறுத்தல் பிறப்(பு)அறுத்தல்**
**சங்கம் அறுத்துப் பொருள்களில்நீ தனிச்சீ வனின்முத் தியைப்பெறுவாய்.**

**பொழிப்புரை:** *பற்றினைக் காரணமாகக் கொண்டு பொருள்கள் உண்டாம். பற்றினைக் காரணமாகக் கொண்டு ஆபத்தாம். பற்றினைக் காரணமாகக் கொண்டு ஆசை வந்தடையும். பற்றினைக் காரணமாகக் கொண்டு பிறவிகள் உண்டாகும். பற்றினை அறுத்தலே முத்தி என்பர். பற்றினை ஒழித்தலே பிறவிகளை ஒழித்தலாகும். பொருள்களில் பற்றினை விடுத்து நீ ஒப்பற்ற சீவன் முத்தியைப் பெறுவாய்.* **(5.67)**

**என்ற முனியை அனைத்(து)ஐயம் என்னும் பனிக்குச் சரற்காலம்**
**துன்று கடும்காற்(று) ஒப்பாய்இச் சங்கம் ஏது சொல்லென்ற**
**வென்றி இராமற்(கு) அவன்உரைப்பான் மிகுபல் பொருள்பா(வ) அபாவத்(து)**
**ஒன்றும் மகிழ்வு பொறாமைகளை உறுதல் மலின வாதனையே.**

**பொழிப்புரை:** *எனக் கூறிய வசிட்ட முனிவரை, எல்லாச் சந்தேகங்கள் என்கின்ற பனிக்குச் சரற்காலத்தில் வீசும் கடும்காற்றுக்குச் சமமானவரே! பற்று எத்தகையது என்பதைச் சொல்ல வேண்டும் என்ற வெற்றி உடைய இராம பிரானுக்கு வசிட்ட முனிவர் சொல்வதாவது-திருசியங்களாம் (காண்பவைகளான) பல பொருள்களில் விருப்பம், விருப்பம் இல்லாமை, (அல்லது) சம்பந்தப்படுவது, விலகுவது இவற்றில்பொருந்தும் சந்தோஷம் பொறாமைகளை அடைதல் மலின வாசனையாம்.* **(5.68)**

**சாற்றும் மலின வாதனையே சங்க மாம்சீ வனின்முத்தி**
**தோற்றும் உடற்கு மறுபிறவி இன்றி இன்ப துன்பங்கள்**
**மாற்றி விசுத்த வாதனைதான் மருவும் சீவன் முத்த(ர்)அலால்**
**ஊற்ற மடநெஞ் சினர்பிறவி உறுவா தனையின் பெயர்சங்கம்.**

**பொழிப்புரை:** *கூறிய அசுத்த வாசனையே பற்றாம். சீவன் முத்தியானது தோற்றும் தேகத்திற்கு மறுபிறவியை உண்டாக்காமல், சுக துக்கம் விட்டு, எப்பொழுதும் சுத்த வாசனையானது பொருந்தும். சீவன் முத்தர்கள் அல்லாமல் விஷயங்களில் அழுந்தும் மூட மனதினர் பிறவிகளை அடையும் வாசனையின் பெயர் பற்று என்பதாம்.* **(5.69)**

**பிரியம் அசூயை இடர்ஆதி பீடி யாமல் நிற்றியெனில்**
**விரியும் ஆசை பயம்கோபம் இலனாய்ச் சங்கம் விட்டவன்நீ**
**கரிய துயரால் இளையாது கலந்த சுகத்தால் மகிழாது**
**புரியும் ஆசை வசம்போகா(து) இருக்கில் சங்கம் போக்கினைநீ.**

**பொழிப்புரை:** *விருப்பு வெறுப்பு இன்பம் துன்பம் முதலியவை துன்புறுத்தாமல் நிலைப்பாய் எனில் விரிகின்ற ஆசை, பயம், கோபம் இல்லாதவனாய் நீ அசங்கனே (எதனோடும் சம்பந்தப்படாதவன்) ஆவாய். தகிக்கும் துக்கத்தால் வாடாமல், வந்த இன்பத்தால் மகிழ்ச்சி அடையாது, பரவசமாக்கும் ஆசையின் வசம் போகாமல் நிலைத்து நிற்பாய் ஆயின் நீ அசங்கனே ஆவாய்.* **(5.70)**

**சம்பத்(து) ஆபத்(து) இரண்டினும்நீ சமமாய் வந்த(து) அனுசரிக்கில்**
**நம்பல் சங்கம் அகன்றவன்நீ நாளும் திரள்வத் துவில்சமமாய்**
**விம்பத்(து) இதயச் சத்துவனாய் மேவும் பகுதித் திறம்இயற்றி**
**இம்பர் சங்கம் அறுத்(து)இன்பம் இசைவாய் இராம எனச்சொன்னான்.**

**பொழிப்புரை:** *இராகவனே! நீ செல்வத்தை (அரசினை) அடைந்த போதிலும், ஆபத்தை அடைந்த போதிலும் சமமாக இருந்து விவகாரம் செய்தால் இருள் மயமான பற்று விலகினவன் என்று நம்பிக்கை கொள்ளலாம். எப்பொழுதும் எல்லாப் பொருள்களிலும் சமமாக, பிம்பத்தைப் போல இதயம் சத்துவனாய் வினை வசத்தால் வந்ததில் இயல்பாக விவகாரம் செய்தால் இங்குள்ள பற்றெல்லாம் அறுத்து இன்பம் அடைவாய் என்று உபதேசித்தார்.* **(5.71)**

**(உபசாந்திப் பிரகரணம் முற்றும்)**

# 6. நிருவாணப் பிரகரணம்

## (i) புசுண்டன் கதை

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

மீட்டும் உரைப்பான் திசைகாலம் அறலால் மறைதல் அறவிளங்கி
ஓட்டம் இறத்தல் அடிமுடி(வு)அற்(று) ஒன்றாய் அறிவு மாத்திரமா
நாட்டு பிரமம் உளவே(று)ஒன்(று) இல்லை என்(று)உள் ளேநாடிக்
காட்டு நா(ன்)என் பதுவிட்டுக் காயம் இல்லாப் பெரியோனாய்.

**பொழிப்புரை:** *மீளவும் வசிட்ட முனி கூறுவதாவது-திசைகளும் காலமும் அற்றுப் போவதால் மறைப்பு இல்லாமல் விளங்கி, வளர்வதும், குறைவதும், ஆரம்பம் முடிவும் இன்றி, ஏகமாய், சேதனம் மாத்திரமாய் சொல்லப்பட்ட பிரம்மம் ஒன்றே உள்ளது. அதைத் தவிர வேறொன்று இல்லை என்பதாக உள்ளுக்குள் நாட்டம் அடைந்து, தெரிவிக்கும் நான் என்பதனை விடுத்து, தேகம் இல்லா பெரியவனாய்,* **(6.1.1)**

ஏக உருவாய் உபசாந்த மோனம் எய்தி நின்னுணர்வில்
சோகம் அற்ற சுகியாவாய் தொடர்அஞ் ஞான நினை(வு)எம்மட்(டு)
ஆகும் பிரம பாவனைமே வா(து)அம் மட்டும் புவிவலையில்
போக மயல்எம் மட்டம்மட்(டு) உள(ம்)ஆ தியின்கற் பனைபொருந்தும்.

**பொழிப்புரை:** *ஒரே உருவமாய் மிகவும் சாந்தமாய் மௌனத்தை அடைந்து, உன்னுடைய அறிவிலே சோகம் இல்லாத ஆனந்தம் உடையவன் ஆவாய். தொடர்ந்து வருகின்ற அஞ்ஞானத்தின் நினைவு எதுவரையில் இருக்குமோ அது வரையில் பிரம்ம பாவனையானது பொருந்தாது. உலகமாகிய வலையில் போக மயக்கம் எதுவரையில் உள்ளதோ அதுவரையில் மனம் முதலியவற்றின் கற்பனை உண்டாம்.* **(6.1.2)**

சித்த மாயை மனம்சீவன் ஒன்றும் இல்லை திகழ்பிரமம்
ஒத்த ஒன்றாய்ப் பெருங்கடல்போல் உகண்டு வளரும் உத்தமனே
பொத்த உடலை நான்எனஎம் மட்டுக் காணும் இப்பொருளில்
வத்து எனும்பா வனைஎம்மட்(டு) அம்மட்(டு) உள(ம்)ஆ தியின்மயக்கம்.

**பொழிப்புரை:** *சித்தம், மாயை, மனம், சீவன் என்பவை ஒன்றுமே கிடையாது. சச்சிதானந்தமாக விளங்கும் பிரம்மம் ஏகமாய்ச் சமமாய் விகற்பம் இல்லாததாய், உத்தமத்திலும் உத்தமமான குணங்கள் நிறைந்த இராகவனே! பெருங்கடலைப் போலப் பெருகி விளங்கும் இந்தப் ,பொய்யான உடலை நான் என்று எதுவரையில் தோன்றுகிறதோ, இந்தப் பொருள்களில் சத்தியம் என்ற பாவனை எது வரையில் தோன்றுகிறதோ, அது வரையில் மனம் முதலிய மயக்கம் உளதாம்.* **(6.1.3)**

**எனது(ு)ஈ(து) என்னும் மால்எம்மட்(டு) அம்மட்(டு) உள(ம்)ஆ தியின்மயக்கம்**
**அனக உள்ளே முகமாகி அதனால் மும்மை உல(கு)என்னும்**
**கன(ம்)இல் துரும்பை அறி(வு)அனலில் ஓமம் செய்யில் கார்வண்ணா**
**மனனை முதலா மயக்கங்கள் அவனுள் என்றும் வாராதே.**

*இது என்னுடையது என்ற மயக்கம் எதுவரையில் இருக்கின்றதோ, அது வரையில் மனம் முதலிய மயக்கம் உள்ளதாகும். பாவம் அற்றவனே! உள்முக நாட்டம் உடையவனாகி, அதனால் மூன்று உலகம் என்னும் அற்பமான துரும்பினை அறிவாகிய அக்கினியில் ஆகுதி செய்தால் மேக வண்ண இராகவனே! மனம் முதலான மயக்கங்கள் அவனிடம் எப்போதும் வரவே மாட்டாது.* **(6.1.4)**

**படர்சித்(து) உருவாய்ப் பிரிவிலனாய்ப் பாரா வாராப் பற்றிலனாய்த்**
**திட(ம்)உற்(று) உனது கனவடிவை நினைசங் கற்பம் சேராதே**
**கடனா உயிர்கொல் லுறுபகைவன் கருத்தில் வஞ்சம் இலாநட்பில்**
**தொடர்பா னவனே எனக்காணும் அவனே கண்டோன் தூய்தாக.**

**பொழிப்புரை:** *வியாபகமான சித்து வடிவமாய், பிரிவற்றவனாய், முன் பின் சம்பந்தம் இல்லாதவனாய், திடமாகி உன்னுடைய ஏகமான வடிவினை நோக்குவாய், சங்கற்பத்தை அடைய வேண்டாம். மகா பாதகமாக உயிரைக் கொல்கின்ற பகைவனையே, இருதயத்தில் வஞ்சம் இல்லாத நண்பனாகக் கருதும் அந்த மேலோன் ஆத்மாவைப் பரிசுத்தமாக உணர்ந்தவன் ஆவன்.* **(6.1.5)**

**வேரி னோடு கரையில்மரம் வீழ்க்கு நதியைப் போல்நண்பும்**
**சீரி லாத மச்சரமும் சிதைத்தோர் மகிழ்வு பொறாமைகளால்**
**சாரும் ஏதம் அறுத்தவராம் தனிதத் துவநூல் உட்பாவித்(து)**
**ஒரு வார்கா தலைக்கடிதல் உதித்த கதிர்கங் குலைஒழித்தல்.**

**பொழிப்புரை:** *வேரோடு கரையில் இருக்கும் மரங்களைப் புரட்டி வீழ்த்தும் நதியைப் போல நட்பினையும், கெடுக்கின்ற பொறாமையையும் ஒழித்தவர் மகிழ்ச்சி பொறாமைகளால் வருகின்ற குற்றத்தை அறுத்தவர் ஆவர். ஒப்பற்ற அத்தியாத்ம சாத்திரத்தை உள்ளே உணர்ந்து விசாரம் செய்பவர் ஆசையினை அகற்றுவது சூரியன் உதித்து, இருளுடைய இரவினைப் போக்குவது போல்வதாகும்.* **(6.1.6)**

**பற்றத் தகுவாக் கியப்பொருளைப் பயில்தன் நெஞ்சால் பாவித்தோர்க்(கு)**
**உற்றுப் புகல்சொல் திரள்உள்ளே ஒடுங்கும் வெந்த நிலநீர்போல்**
**கற்று பரமப் பொருள்நோக்கார் கண்ணாம் அறிவைக் கண்(டு)அறியார்**
**வற்றத் திரணம் போல்வாளாத் திரிவர் மனச்செய் கையில்(ல்)எவரும்.**

*பெரியோர்கள் சொல்லும் வாக்கியத்தின் அர்த்தத்தை தனது மனதில் சிந்தனை செய்து நிச்சயிப்பவர்களுக்கு அனுபவித்துக் கூறும் உண்மையான சொற்கள் உள்ளே புகும். வெப்பம் மிகுந்த நிலத்தில் தண்ணீர் ஒடுங்குவது போல, சாத்திரங்களைக் கற்று மேலான பொருளை அறியாதார் சொரூப சைதன்னியத்தை கண்டு அறியார். காய்ந்த துரும்பு போல யாவரும் மனம் சலனமுற்று மூட புத்தியினால் வீணாகத் திரிவர்.* **(6.1.7)**

**இனைய யாரும் இந்தஅறி(வு) இறவா(து) இருக்க ஈ(து)அறிய**
**வினையம் இன்றி மிகச்சோர்ந்தார் வீணர் செருக்கு மிகுமுரப்பு**
**முனையில் வில்நாண் ஓசையைப்போல் மூடர் கேட்ப(து) இறப்பதற்கே**
**அனையர் வீண்நாள் கழிப்பதலால் அறியா அறிவை அறியாரே.**

*இத்தகைய யாவருமே இந்த அறிவு நாசமாகாது இருக்க இதனைத் தெரிந்து கொள்ள சூக்கும புத்தியில்லாமல் மிகவும் வாட்டம் அடைந்தார் மூடர் தம் கர்வமும் முறுக்கும் போர்க்களத்தில் வில்லில் பூட்டிய நாணின் சப்தத்தைப் போலவாம். மூடர் கேட்பது இறப்பதற்கே. அந்த மூடர் வீணாகக் காலம் கழிப்பதைத் தவிர அறிவதற்கு அரிதான அறிவை முயற்சி செய்து அறியமாட்டார்கள்.* **(6.1.8)**

**ஆய மூடர்க்(கு) அளித்தபொருள் அளற்றில் வீழ்ந்த பொருள்ஒக்கும்**
**தீய அவரோடு உரைத்தஉரை சேணை நோக்கி நாய்குரைத்தல்**
**மேய மட(ம்)ஆ பத்தி(ன்)இடம் மெய்ம்மை உணரார்க்(கு) எவ்ஆபத்(து)**
**ஏய அணுகா(து) இம்மாயை எழுவ(து) அறிவி லோர்க்(கு)அருளால்.**

*அத்தகைய மூடர்களுக்கு உதவிய பொருள் சேற்றில் போடப்பட்ட பொருளுக்கு ஒப்பாகும். தீயவர் அவர்களோடு பேசும் பேச்சு. ஆகாயத்தை நோக்கி நாய் குரைப்பது போன்றதாகும். பொருந்துகின்ற அஞ்ஞானம் ஆபத்துக்கு இடமாகும். மெய்ம்மையை (உண்மையை) உணராதவர்க்கு எந்த ஆபத்து தான் வந்து அணுகாது? அறிவில்லாதவர்களுக்கு அவர்களுடைய அருளாலேயே தான் இந்த சம்சாரமானது விருத்தியாகிறது.* **(6.1.9)**

**மெல்லி தாகிக் குளப்படியாம் விவேக புந்திக்(கு) ஆம்உலகம்**
**அல்லல் ஆகிக் கரைகாணா ஆழம் ஆகும் அறிவில்லோர்க்(கு)**
**எல்லை இலதாய் அறிபொருளால் எண்ணப் படாதாய்ச் சாந்தமுமாய்ச்**
**சொல்லும் எல்லா மாய்நினைவு தோன்றாச் சற்சிற் சுகம்உண்டாம்.**

*விவேக புத்தி உடையவர்க்கு இந்த உலகம் பசுவின் சிறிய குளம்பு அடிபோல் ஆகும். விவேக புத்தி இல்லாதவர்க்கு துன்பம் தருவதாகி ஆழம் காண முடியாதது ஆகும். எல்லை இன்றியதாய், விஷயத்தினால் எண்ணிப் பார்க்க முடியாததாய் (விஷய சிந்தனைக்கு அகப்படாததாய்) சாந்தமும் ஆகி,சொல்லப்படும் அனைத்தும் ஆகி, எண்ணம் எழாத சச்சிதானந்தம் ஒன்று உண்டாம்.* **(6.1.10)**

சான்ற வதினின்(று) ஓர்அறிவு தானே விகார உருவாகித்
தோன்றி நுண்மை மத்தியமே தூலம் என்றும் கற்பிக்க
மூன்று வகையாய்ச் சாத்விதரா சததா மதமுக் குணம்ஆகும்
மூன்று வகையாம் பகுதிபல உயிர்க்கும் பிறவி தரும்இதுவே.

**பொழிப்புரை:** *சாட்சி மாத்திரமாய் இருக்கும் ஒரு அறிவு தானாக சலன வடிவமாய் உதயமாகி, சூக்குமம், மத்தியம், தூலம் என்று மூவகையாகக் கற்பிக்கப்படுவதாய், சத்துவ-இராசத-தாமசம் என்னும் முக்குணமும் ஆகும். இந்த மூன்று குணமாகிய பிரகிருதி என்னும் இதுவே எல்லா சீவர்களுக்கும் பிறவியைத் தருவதாம்.* **(6.1.11)**

இதனின் முடிவே பரமபதம் இயல்முக் குணமு மும்மூன்று
விதம்(ம்)அ தாய்ஒன் பதுகூறாம் விரிந்த அவிஞ்சைக் குணவடிவே
சிதறும் இதில்சத் துவக்கூறு திரண்ட இருடி முனிசித்தர்
அதிக நாகர் விஞ்சையர்கள் அண்டர் முதலா நல்லுயிர்கள்.

**பொழிப்புரை:** *இந்த மாயையின் நிவர்த்தியே மோட்ச பதமாம். இயல்பாக இந்த மூன்று குணமும் மூன்று மூன்று வகையாகி ஒன்பது பிரிவாகும். (சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தில் இராசதம், சத்துவத்தில் தாமசம் இப்படியாக) விரிந்த அவித்தையின் குண வடிவமே ஆகும். பிரிந்த அதனுள் சத்துவப் பிரிவினால் கூட்டமான ரிஷிகள், முனிவர்கள், சித்தர்கள் ஆவர். மிகுந்த நாகர்கள், வித்தியாதரர்கள், தேவர்கள் முதலிய நல்ல உயிர்களும் ஆகும்.* **(6.1.12)**

ஓதும் இச்சாத் விகக்கூற்றின் உறுதா மதம்விஞ் சையர்நாகர்
பேதம் உறுரா சதம்ஆகும் பிறந்த முனிவர் சித்த(ர்)எலாம்
தீதி லாத சத்துவாம் தேவர் சிவனை முதலோராம்
ஈ(து)அ விஞ்சைப் பயில்கூற்றின் இடையே விஞ்சைத் திறம்அடைந்த.

**பொழிப்புரை:** *(முன்பு சத்துவப் பிரிவில் உண்டாகும் உயிரினங்கள் கூறப்பட்டது. இதில் எந்தெந்த சத்துவப் பிரிவில் தோன்றியது என்று கூறப்படுகிறது) கூறிய இந்த சத்துவத்தில் தாமசப் பிரிவில் வித்தியாதரர், நாகர் என்பவர் ஆவர். முனிவர், சித்தர்கள் எல்லாம் சத்துவத்தில் இராசதம் எனப் பேதமான பிரிவில் உற்பத்தியானவர்கள். குற்றமற்ற சத்துவத்தில் சத்துவப் பிரிவில் தேவர், சிவன், அரி முதலானோர். மாயையில் உற்ற பிரிவில் வித்தை தன்மையை உள்ளதாம்.* **(6.1.13)**

ஆ(சு)இல் சுத்த சத்துவமாம் அவிஞ்சைக் கூறு விஞ்சையெனப்
பேசும் அதுவாம் இராசதமும் பிரிதா மதமு மும்மூன்றாய்
வீசு சிருட்டி உடைத்(து)என்பர் மிகுதா மதம்சேர் புந்தியர்க்கு
நீச மாம்தா வரம்ஆதி நிறைஅஞ் ஞான உடல்பெறுமே.

**பொழிப்புரை:** *குற்றமற்ற தூய சத்துவமாம் அவித்தையின் பிரிவில் வித்தை என்று சொல்லப் பட்டதாம். இராசதமும் வேறான தாமசமும் மூன்று மூன்று விதமாய்ப் பிரிவுடைய சிருட்டிகள் ஆகும். மிகுந்த தாமசம் சேர்ந்த புத்தியினருக்கு கீழான தாவரம் முதலான அதிக அஞ்ஞானத்தோடு கூடிய உடல் அடையுமாறு நேரும்.* **(6.1.14)**

எனஓ தலும்தா வரம்ஆதி ஆக்கை மேவி அஞ்ஞானம்
கனமாய் இருப்ப(து) எங்ங(ன்)எனக் கரியோன் கேட்ப முனிசொல்வான்
மனனம் இன்மை தா(ன்)அற்று மனனம் அற்(று)உண்(டு) இல்லையென
வினவு தடத்தம் எனும்உருவை மேவி நிற்கும் இவ்வறிவே.

**பொழிப்புரை:** *என்று கூறியதும், தாவரம் முதலான உடலை அடைந்து அஞ் ஞானமானது கனமாக (அடர்த்தியாக) இருப்பது எப்படி என்று இராம பிரான் கேட்கவும், வசிட்ட முனிவர் கூறுவதாவது... (கற்கள் போல்) மனம் இல்லாததை அடையாமல், (மனம் இல்லை என்று சொல்லும் ஆழ்துயிலில் சுக துக்கத்தை அறியும்*

*சாமர்த்தியம் இல்லாத தன்மையை அடையும் மனோ லயத்தை அடையாததாய்), (மனோ வியாபாரத்திலிருந்து நழுவினதாய், நினைத்தல் முதலானவை தோன்றாத) மனம் இல்லாமையும் (ஆராய்ச்சி செய்வதற்கு உரிய சாமர்த்திய வடிவ தன்மையிலிருந்து நழுவியதாய்) இப்படி அப்படி என்று இல்லாத பொதுமை உருவத்தை அடைந்து நிற்கும் இந்த அறிவு. (சித்து)* **(6.1.15)**

**சொன்ன அறிவு தாவரத்தில் துயில்செய் புரிஅட் டகம்உளதாய்**
**இன்னல் இன்றி ஊமைகுருடு என்னல் ஆகிச் சடம்போலாய்**
**முன்னு சத்தா மாத்திரத்தின் நிற்கும் என்ற முனிவரனைப்**
**பின்னும் இராமன் அன்பினொடும் பேணி இதுதான் வினாவிடுவான்.**

**பொழிப்புரை:** *கூறிய அறிவு தாவரங்களில் துயில்கின்ற புரியட்டகம் உள்ளதாகி, துயரம் இன்றி, ஊமை, குருடு போல் ஆகி, சடம் போல எப்போதும் இருக்கும் சத்து மாத்திரமாக (வெளிப்படாமல்) நிற்கும் என்ற முனிவரைப் பின்னரும் இராம பிரான் அன்புடன் வேண்டிக் கொண்டு வினாவத் தொடங்கினார்.* **(6.1.16)**

**சத்தை ஒருமை யாய்ப்போதம் தாவ ரங்கள் தமில்நிற்கில்**
**இத்தை முத்தி எனநினைகேன் என்ன முனிவன் இதற்(கு)இசைப்பான்**
**புத்தி யாலே இதுநாடிப் பொய்யில் பொருளின் காட்சியினால்**
**ஒத்த சத்தா சாமானியத்தை உணர்தல் உறுதல் உயர்முத்தி.**

**பொழிப்புரை:** *சத்தானது அத்வைதமாய்ச் சித்தானது தாவரங்களில் நிற்குமாயின் இதனையே மோட்சம் என்பதாக எண்ணுகின்றேன் என இராம பிரான் கூறவும், வசிட்ட முனிவர் இதற்கு பதில் கூறுகிறார். புத்தி பூர்வமாக ஆராய்ந்து (விசாரம் செய்து) சத்தியப் பொருளினைக் கண்டு, அதனால் எங்கும் ஒத்துள்ள சத்து மாத்திரமாக எஞ்சி நிற்கும் போதம் எதுவோ அதுவே (மறுபிறவி அற்ற) முத்தி. (இல்லையெனில் தேகத்தின் பிறப்பிடமான மகா பாதகங்களால் தாவரத் தன்மை அடைதலால் மோட்சம் சுலபம் என்றால் மோட்ச சாத்திரங்களுக்கு விரோதம்.)* **(6.1.17)**

**கொத்தா கியவா தனைமுற்றும் குறிக்கொண்(டு) அறிந்து கைவிட்டுச்**
**சத்தா சாமா னியவடிவம் ஆனால் தனிவீ(டு) அதுவென்பர்**
**ஒத்தார் இயரோ(டு) உசாவியும்நூல் உணர்ந்தும் உணர்(வு)ஒன் றையும்பாவித்(து)**
**அத்தால் சத்தா சாமானி யம்தான் ஆகும் அதுவீடே.**

*கூட்டமாகிய வாசனைகள் அனைத்தையும் வரும் நினைவுகளைக் கொண்டு தெரிந்து. அடியோடும் விடுத்து, சத்து வடிவம் ஆயின் அதுவே ஒப்பற்ற மோட்ச பதம் என்று சொல்வர். பெரியோர்களுடன் சேர்ந்து விசாரம் செய்தும், சாத்திரங் களைத் தெரிந்தும் சைதன்னியம் ஒன்றே தனது வடிவமாகப் பாவித்து, அதனால் சத்தா சாமானியம் ஆகும். அது மோட்சமாகும்.* **(6.1.18)**

**துயிலை உள்ளே உறுமந்தம் ஆகும் விதையூ(டு) உறுமுளைபோல்**
**பயில்வா தனைகள் சுழுத்தியதாம் படரும் சென்மம் பலகொடுக்கும்**
**செயிர்செய் மனனம் உள்ளிறந்து செறிவா தனைகள் துயில்சுழுத்தி**
**குயிலும் சடமாம் திறத்தாலே கொடிய பிறவித் துயர்அளிக்கும்.**

**பொழிப்புரை:** *மந்தமாய் இருக்கும் விதைகளின் உள்ளே உற்ற முளை போல உள்ளே பழகிய வாசனைகள் நித்திரையை அடைந்திருக்கும். அது சுழுத்தி எனப்படுவதாம். தொடர்ந்து பல பிறவிகளைத் தரக் கூடியது. துயர் செய்யும் மனோ வியாபாரம் ஒழிந்து உள்ளே வாசனைகள் அடங்கும் சுழுத்தியாம். கூட இயல்பு கொண்டிருந்த போதிலும் (விருத்தி இல்லாதிருந்தாலும்) அனேக துயரங்களைத் தரும் பிறவிகளைத் தந்து கொண்டேயிருக்கும்.* **(6.1.19)**

**தாவ ரங்கள் இவைஎல்லாம் சடமாம் திறமாம் சுழுத்தியினை**
**மேவல் உற்று மேன்மேலும் பிறத்தற்(கு) உரித்தாம் விதைகளிலே**
**பூவு மண்ணி னுள்கடமும் பொருந்தும் அதுபோல் அங்(கு)அவற்றில்**
**ஓவல் இல்லா வாதனைகள் உறுதா வரங்கள் இடைநிற்கும்.**

**பொழிப்புரை:** *இந்த தாவரங்கள் யாவும் கூடமாகிய இயல்பினை உடையதாம். சுழுத்தியை அடைந்து மேன்மேலும் பிறப்பதற்கு உரியதாம். விதைகளிலே பூவும், மண்ணின உள்ளே குடமும் பொருந்தியிருப்பது போல அங்கு அவைகளில் அளவில்லாத வாசனைகள் தாவரங்களின் உள்ளே இருக்கும்.* **(6.1.20)**

**அகல்வா தனையின் வித்தான அந்தச் சுழுத்தி வீ(டு)அளியாப்**
**புகல்வித்(து) அல்லா வாதனையே துரியம் பொன்றா வீ(டு)அளிக்கும்**
**இகல்வா தனைதீ கடன்நோய்நஞ்(சு) இறைஞ்சார் கோபம் நேய(ம்)இவை**
**மிகவேண் டாம்சற்(று) ஆனாலும் மிக்க வருத்தம் செய்திடுமே.**

*அனேக வாசனைகளும், அதன் வித்தான அஞ்ஞானமும் பொருந்தியிருக்கும் அந்த சுழுத்தி முத்தியைத் தராது. கூறிய வித்தாகிய அஞ்ஞானம் இல்லாத வாசனை அது சுத்த வாசனையாவதால் அது துரிய நிலையான அழியாத வீட்டினை அளிக்கும். பகையாய வாசனை, நெருப்பு, கடன், நோய், விஷம், பகைவர், கோபம், சினேகம் இவையாவுமே எப்பொழுதும் விரும்பத்தகாதது ஆகும். கொஞ்சமாக இருந்தாலும் பெரிய துயரத்தையே செய்து கொண்டிருக்கும்.* **(6.1.21)**

**தடைவா தனையின் விதைசுட்டுச் சத்தா சாமா னியரூபம்**
**உடையோர் ஆனோர்க்(கு) உடல்இருந்தும் ஒழிந்தும் பின்னைத் துயர்அணுகா**
**அடைசிற் சத்தி வாதனைவித்(து) உருவாம் துயிலே அதற்(கு)இயல்பாம்**
**கடைஇல் அறிவைக் காணாமை அவிஞ்சை என்பர் கலைவல்லோர்.**

*தடை செய்கின்ற வாசனையையும், அதன் வித்தாகிய அஞ்ஞானத்தையும் சுட்டவராய், சத்தா சாமானிய வடிவமாக விளங்கும் மகான்களுக்குத் தேகம் இருந்தும், ஒழிந்த பின்னரும் துயரம் வந்து அணுகாது. அடைந்துள்ள சிற்சத்தி வாசனையும் அதன் வித்தான அஞ்ஞானமும் ஆகிய வடிவமாம் நித்திரையே அதற்கு இயல்பு ஆகும். உயர்வான சித் சத்தியை அறியாமையே அவித்தை என்று சாத்திரம் உணர்ந்த பெரியோர்கள் சொல்வர்.* **(6.1.22)**

அவிஞ்சை தன்னின் முதல்கூற்றால் அயல்கூற்(று) இரண்டும் ஓர்உணர்வால்
தவிர்ந்து போம்மட் டுச்சுட்டுச் சலனம் இன்றி ஒன்றாவாய்
நிவந்த பிரமம் இதுஅல்ல என்னும் அறுதி நீ(டு)அவிஞ்சை
உவந்த பிரமம் இதுஎன்னும் அறுதி அவிஞ்சை ஒழிந்ததுவே.

**பொழிப்புரை:** *(கூறிய இலக்கணம் உடைய அவித்தை முக்குணமயம் ஆதலின் அந்த குணங்களும் ஒவ்வொன்றும் மூவித பாகம் ஆதலின் ஒன்பது கூறான) அவித்தையின் முதல் பாகத்தினால் (சத்தசத்து ரூபமாகிய வித்தை என்னும் பாகத்தால்) மற்ற பாகத்தைச் சுட்டு, இந்த இரண்டு பாகங்களும் (அவித்தை ரூபமும், வித்தை ரூபமும்) பரஸ்பரம் (ஒன்றுக்கொன்று) கெடும் வரையில் சுட்டு, சலனம் இன்றி ஏகம் (அத்விதீயமாய்) ஆவாய். வியாபகமான பிரம்மம் இது (இந்த சகம்) அல்ல என்கின்ற முடிவே பெரிய அவித்தையாம். பேரானந்தத்தைத் தரவல்ல பிரம்மம் இதுவே என்ற முடிவே அவித்தை ஒழிந்து போனதாம் என்னும் நிச்சயமாம்.* **(6.1.23)**

நக்கன் முதலாம் தேவர்க்கும் நார தாதி இருடிகட்கும்
மிக்க நிமல இதயத்தின் மேவும் அறுதி உனக்(கு)உறுகத்
தக்க குமராஎனமுனியைச் சங்கர் ஆதி என்றஇவர்
துக்க மேவா நிச்சயம்என் சொல்வாய் என்ன முனிசொல்வான்.

**பொழிப்புரை:** *சிவன் முதலான தேவர்களுக்கும், நாரதர் முதலான மகரிஷிகளுக்கும் மிகுந்த நிர்மலமான இருதயத்தில் பொருந்திய நிச்சயம் உனக்கு உண்டாகுக, தகுதி வாய்ந்த குழந்தாய்! என உரைத்த வசிட்ட முனிவரை "சங்கரர் முதலான தேவர்களைத் துன்பம் அணுகாத நிச்சயம் எப்படி எனச் சொல்ல வேண்டும்" என்று இராம பிரான் கேட்கவும் வசிட்ட முனிவர் கூறுவார்.* **(6.1.24)**

கிஞ்சி லாகி விரிந்துசகத் திரளாய்க் கிளைத்த இவைஎல்லாம்
விஞ்சு பிரம மேஅறிவு பிரமம் மேதி னிபிரமம்
பஞ்ச பூதம் பிரமம்நாம் பிரமம் நமது பகைபிரமம்
தஞ்ச நட்புக் கிளைபிரமம் சங்கர் ஆதி நிச்சயமே.

**பொழிப்புரை:** *அற்பமாகி விரிந்த பிரபஞ்சக் கூட்டமாய்ப் பெருகிய இவை அனைத்தும் வியாபகமான பிரம்மமே, அறிவு (சித்து) பிரம்மம், உலகம் பிரம்மம், பஞ்ச பூதம் பிரம்மம், நாம் பிரம்மம், நமது பகைவரும் பிரம்மம், தஞ்சம் அடைந்த நண்பர், உறவுகள் பிரம்மம் என்பதே சங்கரர் முதலான தேவர்களின் நிச்சயம்.* **(6.1.25)**

அறிஞர்க்(கு) உல(கு)ஆ னந்தமயம் அறியா தவருக்(கு) இடர்மயமாம்
செறிந்த இருளாம் அந்தகர்க்குச் செங்கண் உள்ளோர்க்(கு) ஒளியாகும்
பிறிவில் பிரமம் அனைத்து(ம்)என நாடில் பிரமம் அவனேயாம்
நறிய அமு(து)உண் டவன்அமுத மயத்தை நண்ணா(து) இரான்அன்றே.

**பொழிப்புரை:** *அறிவுடையவர்க்கு உலகமானது ஆனந்தமே ஆகும். அறிவில்லாதவர்க்கு துன்ப மயமாகும். நெருங்கிய இருளாகும் குருடர்களுக்கு. நல்ல கண்களை உடையவர்களுக்கு பிரகாசம் ஆகும். பேதம் இல்லாத பிரம்மமே அனைத்தும் என்று*

*கருதினால் அவன் பிரம்ம வடிவமே ஆகும். நல்ல அமிர்தத்தை உண்டவன் அந்த அமிர்தத்தின் இயல்பினை அடையாமல் இருக்க மாட்டான்.* **(6.1.26)**

**எறிபே ரொளிமாத் திர(ம்)அமலம் எவர்க்கு(ம்) உணர்(வு)எங் கணும்உளது**
**பிறியா உபசாந் தச்சித்துப் பிரமம் என்ப(து) அனுபவமாம்**
**நெறிபோம் அறியா ஒருவனைநெஞ்(சு) அன்றி நோக்கில் எத்தோற்றம்**
**செறிவாம் அ'(து)எங் கணும்உளதாம் சித்தாம் பிரமம் ஆகின்றேம்.**

**பொழிப்புரை:** *எங்கும் ஒளிரும் பெரிய பிரகாசமானது நிர்மலமானது. யாவர்க்கும் எங்கும் அறிவு இருக்கின்றது. பிரிவு படாத உபசாந்தமாகிய அறிவு (சித்து) பிரம்மம் என்பது அனுபவத்தால் உணரப்பெறுவதாம். வழியில் செல்கின்ற தெரியாத ஒரு புருடனை மனதில்லாமல் கண்ணால் மட்டும் பார்க்கின், அவ்விடத்தில் எந்தத் தெரிவு நிறைந்திருக்கின்றதோ, அதுவே எவ்விடத்திலும் உள்ளதான ஞானமான பிரம்மம் ஆம். அது யாம் ஆகின்றோம்.* **(6.1.27)**

**சகல சங்கற் பப்பலனாய்ச் சகல ஒளிக்கும் ஒளியாகிச்**
**சகல மான கொள்கையும்தீர் தனிச்சிற் பரத்தை ஏத்துகிற்பாம்**
**சகல சங்கற் பமும்அற்றுச் சகல சந்தோ டமும்அற்றுச்**
**சகல வாரம் பமும்அற்ற தனிச்சிற் பரத்தை ஏத்துகிற்பாம்.**

**பொழிப்புரை:** *எல்லா எண்ணங்களின் பயனாய், எல்லா ஒளிக்கும் ஒளியாகி, எல்லாக் கொள்கையும் தீர்ந்த ஒப்பற்ற சிதான்மாவைத் தியானிப்பாம். சங்கற்பம் அனைத்தும் தீர்ந்து, சகல சந்தோஷமும் இன்றி சகல விட்சேபங்களும் (அனைத்து விதங்களில் வெளிவருவது) அற்ற ஒப்பற்ற சிதான்மாவைப் போற்றுவாம்.* **(6.1.28)**

**என்னும் அறுதி உடையோராய் எல்லா நினைவு களும்இன்றி**
**முன்னும் உண்மை யராய்அன்னார் முழுமெய் சாந்தம் சமம்என்னும்**
**துன்னு பதத்தே சுகித்(து)இருப்பர் சமமா நிராசை தொடர்மனத்தோர்**
**மன்னு புந்தி நிறைதீரர் வாழ்வில் சாவில் மகிழ்ந்(து)அயரார்.**

**பொழிப்புரை:** *என்னும் முடிவினை உடையோராய், எந்த சங்கற்பமும் இல்லாமல், பொருந்தும் உண்மை உடையவராய் இருக்கின்ற அந்த மேலோர் எப்பொழுதும் சத்தியமாய்ச் சமமாய் பதத்தில் சுகம் அடைந்திருப்பர். சமமாகிய நிராசையில் தொடர்ந்து மனம் உடையவர் பொருந்தும் பூரணமான புத்தியை உடையவர் வாழ்வதிலும், தாழ்வதிலும் மகிழ்ச்சியையும், வாட்டத்தையும் கொள்ளார்.* **(6.1.29)**

**என்ற முனியை மெய்ஞ்ஞான விநோதத் தாதல் இதுஅன்றி**
**நின்ற உயிரின் தடையாலே ஆதல் நிகழ்வா தனைநீங்கி**
**ஒன்று துயர்தீர்ந்(து) உயர்சீவன் முத்தர் இருந்த(து) உரைஎன்று**
**வென்றி வடிவே லவன்கேட்ப வேத வசிட்டன் விளம்புற்றான்.**

**பொழிப்புரை:** *என்று கூறிய வசிட்ட முனிவரை, இது மெய்ஞ்ஞானத்தின் மகிமையால் ஆவதாம். இது அல்லாமல் நிறுத்திய பிராணனின் தடையினால் உண்டாகின்ற*

*வாசனைகள் நீங்கி, வந்த துக்கம் நீங்கப் பெற்று, மேலான சீவன் முத்தர்கள் வாழ்ந்த தகைமையை (சித்த அமைதி வாழ்ந்த விதத்தை) அருளிச் செய்வீர் என்று வெற்றியையும், அழகான வேலாயுதத்தையும் உடைய இராம பிரான் கேட்கவும் வேதங்களை நன்கு உணர்ந்த வசிட்ட முனிவர் கூறத் தொடங்கினார்.* **(6.1.30)**

**உருகும் பிறவித் துயர்அறுக்க யோகப் பெயராம் யூகம்தான்**
**இருமை உண்டாம் மெய்ஞ்ஞானம் ஏகம் உயிரின் தடைஏகம்**
**வரு(ம்)இவ் விரண்டும் யோகப்பேர் மருவும் எனினும் உயிர்த்தடைக்கே**
**பெருக உரித்தாம் யோகப்பேர் பினாக பாணி உரைத்ததுவே.**

**பொழிப்புரை:** *உருகி வரக்கூடிய பிறவியின் துன்பம் நீக்க, யோகம் என்ற பெயருடைய யுக்தியானது (உபாயமானது) இரு வகையாம். தத்துவ ஞானம் ஒன்றாம். பிராணனைத் தடுத்தல் மற்றொன்றாம். சாதகமாகப் பயன்படும் இவ்விரண்டுக்கும் யோகம் என்ற பெயர் பொருந்தும் என்ற போதிலும், பிராணனைத் தடுத்தல் என்பதற்கே பெரும்பான்மையாக யோகப் பெயர் (உரித்தது ஆகும்) சிவபெருமான் திருவாய் மலர்ந்து அருளியதாம்.* **(6.1.31)**

**யோகம் ஒருவற்(கு) அரிதாகும் ஒருவற்(கு) உண்மை அறி(வு)அரிதாம்**
**ஆக இவற்றின் மெய்ஞ்ஞானம் அறைந்தேன் யோக அடை(வு)இனிக்கேள்**
**நாக அமுதம் நிகரு(ம்)ஒரு சரிதை உரைக்கேன் நான்ஒருகால்**
**மேக ஊர்தி அவையத்தே விண்ணோர் முனிவர் உடன்இருந்தேன்.**

*ஒருவருக்கு யோகம் அடைவது கடினமாகும். ஒருவருக்கு தத்துவ ஞானம் அடைவது கடினமாகும். இவைகளில் தத்துவ ஞானத்தைப் பற்றி உரைத்தேன். இனி யோக முறையைப் பற்றி கூறக் கேட்பாய். தேவாமிர்தம் போன்ற ஒப்பற்ற ஒரு கதையைச் சொல்கின்றேன். யான் ஒரு சமயம் தேவேந்திர சபையில் தேவர்கள் முனிவர்களுடன் இருந்தேன்.* **(6.1.32)**

**நிறக்கும் நார தாதிகளால் நெடுநாள் வாழ்வோர் கதைகேட்டேன்**
**சிறக்கு மாமே ருவின்வடகீழ்த் திக்கில் பதும ராகஒளி**
**பிறக்கும் கோட்டின் கற்பகத்தின் தென்பால் பணையில் பெருங்கூட்டில்**
**புறக்குன்(று) இருந்த(து) எனஇருந்தது புசுண்ட நாமத்(து) ஒருகாகம்.**

*எங்கும் சஞ்சாரம் செய்யும் நாரதர் முதலான முனிவர்களால் நீண்ட காலம் வாழ்ந்தவருடைய சரித்திரம் கேட்டேன். எல்லா விசேஷங்களும் பொருந்திய மகாமேரு மலையின் வடகிழக்கு திசையில் பத்மராக ஒளியைப் போல் பிரகாசிக்கும் சிகரத்தில் கற்பக விருட்சத்தின் தெற்கு நோக்கிப் போகின்ற கொம்பில் பெரிய கூட்டில் ஒரு காகமானது புசுண்ட ரிஷி என்ற பெயர் கொண்டு, ஒரு மலை வந்து இருந்ததே போன்று வீற்றிருக்கும்.* **(6.1.33)**

**விதியை நிகராய் இருந்ததுபோல் வெகுநாள் யோகில் இருந்தவர்ஆர்**
**முதிய சொர்க்க லோகத்து முன்னும் பின்னும் இலதாகும்**
**அதிக வாழ்நாள் அதுகாதல் அற்ற(து) உயர்சீர் உடையதுமா**
**மதிஉள் ஏதுசாந் திய(து)இடர்தீர் மனத்தால் கால மதித்(து)உணரும்.**

**பொழிப்புரை:** *நான்முகனுக்குச் சமானமாக இருந்தாரே அல்லாமல் இவரைப் போல நீண்ட காலம் யோகத்தில் இருந்தவர் யார்? பழைய சொர்க்க லோகத்தில் முன்பும் இப்படி ஒருவர் இருந்தது இல்லை. இனிமேலும் இப்படி ஒருவர் இருக்க உண்டாகவும் மாட்டார். வெகு காலமாக இருப்பது அந்தக் காகம். ஆசையற்றது, மேலான சிறப்புடையது, மகத்தான புத்தியை உடையது, சாந்தியை உடையது, கவலை அற்ற மனதினாலே காலம் மூன்றையும் கணித்து அறிந்து கொள்வது அது.* **(6.1.34)**

என்று தேவர் அவையத்தில் எவரும் கேட்ப இருகாலா
அன்று புசுண்டன் இயல்(பு)உண்மை யாக உரைத்த படிக்கேட்டுச்
சென்று காண்டும் எனவிரும்பி மேரு வெற்பில் சிகரத்தின்
மன்றல் கமழ்கற் பகத்(து)இருப்பக் கண்டேன் மற்றோர் கற்பகம்போல்.

**பொழிப்புரை:** *இவ்வாறு தேவர்களுடைய சபையில் எல்லோரும் கேட்டனர். அப்பொழுது அந்த புசுண்ட காகத்தின் சுபாவ சரித்திரத்தை (சத்தியமாக சாதா தபமுனிவர்) கூறியபடி, (ஒருமுறைக்கு இருமுறை வினவிக் கேட்டு) நேராகப் போய் காண வேண்டும் என்று விரும்பி, மேரு மலையின் சிகரத்தில் மணம் வீசுகின்ற கற்பக மரத்தில் (அந்த காகம்) இருக்கக் கண்டேன். வேண்டியதைத் தருகின்ற மற்றொரு கற்பக மரத்தைப் போல.* **(6.1.35)**

அங்கு மலையின் சார(ல்)தொறும் முழைகள் தோறும் அள(வு)இல்மலர்
தங்கு கொடிகள் தொறும்பணைகள் தோறும் உறையும் தடம்பறவை
திங்கள் நிறத்த வாய்விரிஞ்சன் தேர்ஓ திமத்தின் திரள்பார்ப்புத்
துங்க மறைகள் மந்திரங்கள் சுவா(க)ஆ காரம் உடன்சொல்வ.

**பொழிப்புரை:** *அங்கு மலையின் சாரல்கள் தோறும், குகைகள் தோறும், எண்ணற்ற பூக்கள் நிறைந்த கொடிகள் தோறும், கொம்புகள் (கிளைகள்)தோறும் சிறப்பான பறவைகள் சந்திரனைப் போன்ற வெண்ணிறம் உடையனவாகி, நான்முகனின் தேரினை இழுக்கும் அன்னங்கள், குஞ்சுகளின் கூட்டங்கள் சாமவேத கானத்தையும் மந்திரங்களையும் ஓதிக் கொண்டிருந்தன.* **(6.1.36)**

குயில்கள் கிளிகள் பலபுள்கள் குகன்போ தித்த சிவஞானம்
பயிலும் மயில்கள் பலகண்டேன் பார உடற்கா கத்திரளுள்
சயிலம் போலும் உயர்வடிவம் சால நிறைந்த மனமோனம்
உயிரின் இசைவு பிறவாமல் உள்நோக்(கு) ஒழியாச் சுகம்உளதாய்.

**பொழிப்புரை:** *குயில்கள், கிளிகள், பல பறவைகள் முருகக் கடவுள் உபதேசித்து அருளிய சிவஞானம் பயில்கின்ற மயில்கள் பல கண்டேன். பெரிய காகங்களின் கூட்டத்துள் மலை போலவும், உயர்ந்த வடிவத்தையும் மிகவும் பூரணமான மனமும் மௌனமும் பிராணனுடைய சலனம் உண்டாகாமல் உள்முகப் பார்வை நீங்காத ஆனந்த வடிவமாய் இருந்தன.* **(6.1.37)**

**இருந்த அதன்முன் நான்எய்த எண்ணம் அறவந்(து) எதிர்ந்(து)என்னைப்**
**பொருந்தும் அளவில் வசிட்ட(ன்)எனப் புந்தி பண்ணிப் பொருக்கென்னத்**
**திருந்த வந்த நல்வரத்து முனியே என்று தித்திக்கத்**
**தரும்சங் கற்பத் தால்முளைத்த தடக்கை யாலே மலர்தூவி**

*அவ்வாறு சாந்தமாய் இருந்த புசுண்ட முனிவர் முன் யான் அடைந்தவுடன், எண்ணமற வந்து நின்ற என்னைப் பார்த்த அளவில் வசிட்ட முனிவர் வந்துள்ளார் என்று நிச்சயித்து, திடுக்கென "வசிட்ட முனிவரே! தாங்கள் கருணையோடு வந்தது நல்வரவு ஆகுக" என்று இனிமையாக உரைத்து, எல்லாவற்றையும் அளிக்கும் சங்கற்பத்தால் முளைத்த பெரிய கைகளினால் மலர்களைத் தூவி,* **(6.1.38)**

**இருக்க என்ன ஆசனம்தந்(து) இருந்த பின்னர் இனிமையுடன்**
**அருக்கி யத்தை முதல்அனைத்தும் அளித்(து)அன் பான நல்லுரைகள்**
**பெருக்க ஓதிப் பெரியோய்நின் காட்சி அமுதப் பெருமழையால்**
**வருக்கம் உடன்நான் அகம்குளிர்ந்தேன் வழிவந்(து) உடலம் வருந்தினையே**

*(புசுண்டர் வசிட்டருக்கு) உட்கார்ந்து அருள வேண்டும் என்று ஆசனம் கொடுத்து அமர்ந்த பின்னர் இனிமையுடன் புனித நீர் முதலாக அனைத்தையும் அளித்து, அன்பாக நல்ல வசனங்கள் மிக உரைத்து, "பிரம்ம புத்திரராய்ப் பிரம்மாண்டத்தின் உயர்ந்தவரே தேவரீர் தந்த தரிசனம் என்னும் அமுதமாகிய பெரும் மழையால் சீடக் கூட்டங்களுடன் நான் உள்ளே குளிர்ந்தேன். எங்களுக்காக வந்து உடலினால் வருத்தம் அடைந்தீரே."* **(6.1.39)**

**உனது பாத தரிசனத்தால் உணர்ந்தேன் எல்லா நெடுவாழ்நாள்**
**அனகர் உடன்என் னையும்நினைத்தீர் அதுபோல் நீவந் ததும்அறிந்தேன்**
**எனினும் நின்சொல் அமு(து)உண்ண நயந்தேன் என்ன அதுகேட்டுப்**
**புனித மான நன்னெஞ்சப் புசுண்டன் தனக்(கு)இவ் வுரைபுகன்றேன்.**

*"தேவரீரின் திருவடி தரிசனத்தால் எல்லாவற்றையும் உணர்ந்தேன். நீண்ட காலம் வாழும் பெரியோர்களுடன் என்னையும் எண்ணியுள்ளீர். எண்ணியது போல தேவரீர் வந்ததையும் அறிந்தேன். என்ற போதிலும் தேவரீரின் திருமொழியாகிய அமிர்தத்தை உண்பதற்கு விரும்பினேன்" என்று கூறியதைக் கேட்டு, புனிதமான நல்ல நெஞ்சுடைய புசுண்ட முனிவருக்கு இந்த மொழிகளைக் கூறினேன்.* **(6.1.40)**

பறவை அரசே நீஉரைத்த படியே உண்மை நெடுங்காலம்
இறவி லாத உனைக்காண்பான் எய்தி னேன்நீ எக்குலத்தில்
பிறவி உற்றாய் மெய்ப்பொருளைப் பெற்றாய் எங்ஙன் எவ்வளவு
நிறைவி தான வாழ்நாள்இவ் உலகின் நெறிநீ நினைதிறன்என்.

**பொழிப்புரை:** *பறவைகளின் அரசனே! தாங்கள் கூறிய படியே நீண்ட காலம் வாழ்ந்திருக்கும் உம்மைக் காண வேண்டி இங்கு வந்தது உண்மை. நீர் பவித்திரமான எந்த குலத்தில் பிறவி எடுத்தீர்? மெய்ப்பொருளை எவ்வாறு பெற்றீர்? பூரணமாக ஆயுள் நிறைவடைந்தது எத்தனை? இந்த உலகின் நெறி தாங்கள் எண்ணுகின்ற தன்மை என்ன?* **(6.1.41)**

தீர்க்க தரிசி யாம்எவனால் நீஇவ் வுறையுள் சேர்வுற்றாய்
ஏர்க்க அனைத்தும் உரைஎன்ன இயல்பார் புசுண்டன் உரைசெய்யும்
ஆர்க்கும் உயர்ந்த சிவன்திருமுன் ஆனை ஆடு(டு)ஒட் டகம்கரடி
பார்க்கும் நிகராம் ஏனைமுகம் படைத்த கணங்கள் பலஉண்டால்.

**பொழிப்புரை:** *எல்லாம் உணர்ந்த எந்த மகானால் தாங்கள் இந்த ஆசிரமத்தை அடைந்துள்ளீர்? பொருந்துமாறு எல்லாவற்றையும் கூற வேண்டும் என்று கேட்க, இயல்பாக விளங்குகின்ற புசுண்டர் கூறுவார். சகல தேவர்களுக்கும் மேலான மகாதேவரின் சன்னிதியில் யானை, ஆடு. ஒட்டகம், கரடி, பார்ப்பதற்கு ஒப்பான அனேக முகங்கள் கொண்ட சிவகணங்கள் பல உள்ளன.* **(6.1.42)**

தலையில் குளம்பர் குளம்புற்ற தடக்கை யினர்உந் தியின்முகத்தர்
தொலைவற் றவர்பல் கணத்தோடும் சூழ்வார் அவர்போல் மாதர்கணம்
மலையில் அரன்முன் நடம்செய்வார் பூத கணங்கள் வணங்குறுவார்
சிலையின் சிகைவிண் புவிகாடு மயானம் தேயம் இடமானோர்.

**பொழிப்புரை:** *தலையில் குளம்பு உடையவர், குளம்பை உடைய பெரிய கரத்தினர். தொப்புள் முகத்தவர், எண்ண முடியாதவர். பல கணங்களோடும் சூழ்ந்து வாழ்வர் அவரைப் போலவே மாதர் கணங்களும் உள்ளனவாம். கயிலையில் மகாதேவர் முன்பாக நடனம் ஆடுவர். பூதக் கூட்டங்கள் வணங்குவர். மலை உச்சியில், ஆகாயத்தில், மண்ணில், காடுகளில், மயானத்தில், தேகங்களில் வாசம் செய்பவர்.* **(6.1.43)**

தரத்தில் உயர்ந்த சயைவிசயை சயந்தி அபரா சிதைசித்தை
இரத்தை யோடே அலம்புசைஉற் பலைஎன்(று) எண்மா மாதர்க(ள்)தாம்
புரத்தில் உறுநா யகிக(ள்)அவர் தம்முள் புகன்ற அலம்புசைக்குத்
திரத்தில் வருவா கனம்சண்டன் எனும்பேர் சேர்ந்த(து) ஒருகாகம்.

**பொழிப்புரை:** *தனது தரத்தில் உயர்ந்த கூயை, விகூயை, கூயந்தி அபராஜஜீதை சித்தை இரத்தை உடன் அலம்புசை, உற்பலை என்பதாக மாண்புடைய எட்டு மாதர்கள் தாம் கைலாசபுரத்தில் உள்ள நாயகிமார்கள் ஆவர். கூறிய அந்த எட்டு மாதர்களில் அலம்புசைக்கு வலுவுடையதாகச் சேர்ந்த வாகனம் சண்டன் என்னும் பெயர் கொண்ட ஒரு காகம்.* **(6.1.44)**

அட்ட குணச்செல் வமும்படைத்த அந்த மாதர் அனைவோரும்
இட்ட மான சிவன்ஏவ யாரும் கூடி விண்ணிடையே
முட்(டு)அ லாத உச்சவத்தை முயன்று பானங் களைஉண்டு
நட்டம் இட்டார் பாட்(டு)இசைத்தார் களித்தார் வெடிக்க நகைசெய்தார்.

**பொழிப்புரை:** *அஷ்ட ஐசுவரியம் கொண்ட அந்த தேவிமார்கள் யாவரும் தங்களுக்கு இஷ்டமான மகாதேவர் ஆணையினால் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து ஆகாய மத்தியில் தடையில்லாத உற்சவத்தைக் கொண்டாடி, பானங்களை அருந்தி, நடனம் ஆடி, பாடல்களைப் பாடினர், மகிழ்ந்தனர், பெருத்த சிரிப்பு செய்தனர்.* **(6.1.45)**

**அந்த விழாவே நடக்கின்ற காலத்(து) அவர்வா கனம்அனைத்தும்**
**இந்த மரபில் பானங்கள் மாந்திக் களித்தார் இவைசெய்தார்**
**அந்த ரத்தின் இடைஅயலே அயன்பேர் மாதின் வாகனங்கள்**
**சந்தம் உறுபெட்(டு) ஓதிமங்கள் சண்டன் எனும்கா கத்தோடும்**

**பொழிப்புரை:** *அந்த விழா நடக்கின்ற பொழுது, அவர்களுடைய வாகனங்கள் எல்லாம் இந்த மரபுக்குத் தக்கபடி பானங்களைக் குடித்து மகிழ்ந்தனர். இவற்றையும் செய்தனர். நடுவில் (மத்தியில்) பக்கத்து இடத்தில் பிராஹ்மீ தேவியின் வாகனங்களாகிய அழகு பொருந்திய பெண் அன்னங்கள் சண்டன் என்னும் காகத்தோடும்,* **(6.1.46)**

**கூடி ஆடிக் களித்(து)அந்தக் கோலக் காகத் தினைப்புணர்ந்து**
**நீடு கருவை அடைந்துமிக நெஞ்சம் களிக்கும் அக்காலை**
**நாடி முயன்ற விழாமுடித்து நக்க ருடைமா தரும்கணமும்**
**பாடல் ஆடல் ஒழிந்துமனம் மகிழ்ந்து தத்தம் பதிக்(கு)அகன்றார்.**

**பொழிப்புரை:** *ஒன்று கூடி ஆடிக் களித்து, அந்த அழகான காகத்தினைப் புணர்ந்து, பெரும் கர்ப்பத்தை அடைந்து, நெஞ்சம் மிகவும் களிக்கின்ற அந்தப் பொழுதில் உத்தேசித்து ஆரம்பித்த விழாவினை முடித்து, பரமேசுவரரின் தேவிமார்களும், கணங்களும் பாடல் ஆடல் ஆகியவைகளை நிறுத்தி, மனம் மகிழ்ந்து, அவரவர் களுடைய இடத்துக்குச் சென்றனர்.* **(6.1.47)**

**அனைய காலைக் கருவடைந்த அயன்பேர் மாதின் ஓதிமங்கள்**
**வினைஇல் தமது நாயகிக்கு விளைந்த படிமெய்ப் படஉரைப்ப**
**வினைய தாகக் கருவுற்றீர் என்தேர் ஈர்க்கும் வலியில்லீர்**
**நினைவின் படிபோய் உறையு(ம்)என்ன நிறையும் கருணை யால்உரைத்து.**

*அக்காலத்தில் கருவடைந்த பிராஹ்மீ தேவியின் அன்னங்கள் கரும சம்பந்தம் இல்லாத தம்முடைய தேவிக்கு நடந்ததை உள்ளபடியே தெரிவிக்க "கரும வசத்தினாலே கர்ப்பம் அடைந்தீர்கள். எம்முடைய தேரினை இழுக்கக் கூடிய பலம் இல்லாமல் இருக்கின்றீர். உங்கள் விருப்பப்படி போய் வாழுங்கள்" என்று பூரண கிருபையாலே கூறி,* **(6.1.48)**

**நிருவி கற்ப சமாதியிலே நின்றாள் தேவி ஓதிமங்கள்**
**கருவின் முதிர்;ந்து மானதஓ டையிலே காலங் களில்ஈன்று**
**தரும்அவ் இருபத் தொருவோரும் சண்டன் எனும்கா கப்புதல்வர்**
**அருளும் தாய ரொடும்அயன்பேர் அணங்கை நெடுநாள் அருச்சித்தேம்.**

**பொழிப்புரை:** *நிருவிகற்ப சமாதியில் இருந்தனள் தேவி. அன்னங்கள் கர்ப்பம் முதிர்ந்து மானசரசில் பரிபக்குவ காலத்தில் பிரசவித்து, வந்த இருபத்தொரு பேரும் சண்டன் என்னும் காகத்தின் மைந்தர், அனுக்கிரகம் செய்யும் மாதாவோடும் பிராஹ்மீ தேவியை வெகுகாலம் பூசை செய்தோம்.* **(6.1.49)**

**அணங்கு சமாதி நின்று(ம்)எழுந்(து) அன்பால் தானே அருள்செய்ய**
**உணங்கல் அறமுத் தியைப்பெற்றோம் உபசாந் தியினால் உளம்குளிர்ந்தேம்**
**இணங்கல் அறஏ காந்தத்தில் இருக்கும் இடம்ஏ(து) எனக்கேட்பான்**
**குணங்கொள் பிதாவை அலம்புசைபால் சென்று கூடிக் கும்பிட்டு.**

*தேவியானவள் நிருவிகற்ப சமாதியிலிருந்தும் எழுந்து மிகுந்த அன்புடன் தானே அருள் செய்ய வாட்டம் இல்லாமல் மோட்சத்தை அடைந்தோம். பரம சாந்தியினால் மனம் குளிர்ந்தோம். மற்றவர்களின் சம்பந்தம் இன்றித் தனியாக வசிக்கத் தகுந்த இடம் எது என்று கேட்பதற்காக, சகல நற்குணங்களும் கொண்ட தந்தையை அலம்புசை தேவியின் சன்னிதியில் சென்று ஒன்று கூடி வணங்கி.* **(6.1.50)**

**பிரமி என்னும் அணங்கி(ன்)அருள் பெற்றோம் முத்தி ஏகாந்தப்**
**பரம சுகத்தில் இருக்கு(ம்)இடம் பகர்வாய் என்று யாம்கேட்ப**
**விரவு தந்தை துயர்எல்லாம் மேவா இடம்இக் கற்பகநன்**
**மரம்என்(று) அருள அவற்பணிந்து வந்(து)இங்(கு) இருந்தேம் வருத்த(ம்)அற.**

*பிராஹ்மீ என்னும் மாதாவின் திருவருளை அடைந்தோம். சீவன் முத்திப் பரமானந்தத்தில் வசிக்கும் தனித்த உத்தமமான இடம் எது என்று கூறுவாய் என்று நாங்கள் வேண்ட, எங்களைத் தழுவிய தந்தை, சகல துயரங்களும் அணுகாத இடம் இந்த நல்ல கற்பக மரம் என்று அருளவும் (தெரிவிக்கவும்) தந்தையை வணங்கி எந்தவொரு துயரமும் இன்றி இங்கு வந்து வசிக்கின்றோம்.* **(6.1.51)**

**அன்று தொட்டு நான்புரிந்த அறங்கள் எல்லாம் நின்வடிவாய்**
**இன்று பலித்த(து) உயர்அறிஞர் இணக்கம் என்னும் நிறைநிலவு**
**மன்றல் அமுத மயமாக மாறாச் சுகம்யார்க்(கு) அளியாது**
**நன்(று)இ(து) என்னும் உயிர்க்(கு)உறுதி நல்லார் அருளில் பிறி(து)உண்டோ.**

**பொழிப்புரை:** *அந்தக் காலம் தொடங்கி யான் செய்த தருமங்கள் எல்லாம் தங்களது வடிவமாகி இப்போது பயன் அடைந்தது. உயர்ந்த விவேகிகள் சம்பந்தம் என்கின்ற பூரண நிலவானது மணமும் அதி மதுராமாகி மாறாத சுகத்தை யாருக்குத் தான் கொடுக்காது? நல்லது இது என்னும் ஆன்மாவிற்கு உரமானது* (உறுதியானது) *மகான்களின் அருளினும் வேறு ஒன்று உண்டோ?* **(6.1.52)**

**பரமும் உணர்ந்தேன் என்னினும்நின் பார்வை யால்என் பாவமெலாம்**
**விரைவில் அறுத்த லால்இந்தப் பிறப்பே மிக்க பயன்உடைத்தால்**
**வரத னேஎன்(று) எனைமீண்டும் பூசை செய்தான் மற்றவனை**
**உரவி தாய்உன் னுடன்பிறந்தோர் ஒழிந்த ஆ(று)என் உரைஎன்றேன்.**

*பரம்பொருளை உணர்ந்திருக்கிறேன் என்ற போதிலும், தங்களின் பார்வையால் எனது பாவமெல்லாம் சீக்கிரத்தில் அறுந்து போகும். இந்தப் பிறவியே மிகுந்த பயன் உடையது. வேண்டியதைத் தருபவரே! என்று கூறி என்னை மறுபடியும் பூசித்தான். அந்தப் புசுண்டரை "பக்க பலமாய்த் தங்களுடன் பிறந்த வர்கள் மறைந்ததற்குக் காரணம் என்ன என்று கூறவேண்டும்" என்றேன்.* **(6.1.53)**

**ஒக்க உறைந்தேம் அனைவரும்)இங்(கு) உகங்கள் பலகற் பங்கள்பல**
**தொக்கு மாய என்அனுசர் உடல்கள் திரணம் எனத்துறந்து**
**மிக்க பதத்தே உணர்ந்தோராய் வீடு பெற்றார் நெடுவாழ்நாள்**
**தக்க மகிமை வலிபடைத்தும் தம்கற் பனையால் தாம்இறந்தார்.**

**பொழிப்புரை:** *இவ்விடத்தில் பல யுகங்கள், பல கற்பங்கள் யாவரும் ஒன்றாகவே வாழ்ந்தோம். துவந்துவம் (இரட்டைகள்) தீர்ந்து போக, தேகங்கள் துரும்பெனத் துறந்து மேலான பரம பதத்தை அடைந்தார்கள். தீர்க்க ஆயுளையும், தகுந்த மகிமையையும் மிகுந்த வலிமையையும் கொண்டிருந்தும் தமது கற்பனையால் தான் இறந்தனர்.*
**(6.1.54)**

**என்ற லோடும் கற்பாந்தம் எரிநீர் வாயு எழும்போதும்**
**துன்று தபனர் சுடும்போதும் துஞ்சா(து) இருந்தாய் எங்ங(ன்)என**
**நின்ற புசுண்டன் உரைசெய்யும் நெடிய சகத்தின் விவகாரம்**
**அன்றி விடு(ம்)எப் போ(து)அப்போ(து) அகல்வன் நானும் இதுதன்னை.**

**பொழிப்புரை:** *என்று இவ்வாறு கூறவும், கற்பம் முடிகின்ற போது அக்கினி, கடல் நீர் காற்று அதிகரித்து எழும் போதும், நெருங்கிய சூரியர்கள் தகிக்கும் போதும், எவ்வாறு இறந்து போகாமல் இருந்தாய் என்று கேட்கவும், அதைக் கேட்ட புசுண்ட முனிவர் கூறுவார்: நீண்ட உலகின் விவகாரம் இல்லாமல் வீழும் அந்தக் காலத்தில் இந்தக் கூட்டினை விட்டு அகன்று விடுவேன்.* **(6.1.55)**

**தவனர் எல்லாம் சுடும்போதில் சலதா ரணையால் விண்ணுறுவேன்**
**குவடு சிதறக் கால்தெறியில் குன்றம் எனும்தா ரணையாலே**
**துவள்கி லாது விண்ணுறுவேன் தொல்லை ஞான மேருஉடல்**
**உவரி மூடின் மாருததா ரணையால் மிதப்பேன் உலைவின்றி.**

**பொழிப்புரை:** *சூரியர்கள் எல்லாம் தகிக்கும் காலத்தில் தண்ணீர்த் தாரணையாலே (கூல வடிவ வருணனாக நான் இருக்கின்றேன் என்று சித்தத்தில் நிரந்தரம் தாரணம் செய்து அதனால் தகிப்பதனதால் பாதிப்புக்கு உள்ளாகாமல்) ஆகாயத்தில் சென்றுவிடுவேன். மலைச் சிகரங்கள் பொடியாகி சிதறுமாறு வாயு வீசினால் மலை தாரணையாலே (அசையாத மலை போலத் திடமாக நான் இருக்கிறேன் என்று நிரந்தரம் தாரணம் செய்வதால்) சலனம் அடையாமல் ஆகாயத்தில் இருப்பேன். பழைய உலகம் மேரு மலையுடன் கடலால் மூடப்பட்டால் வாயு தாரணையாலே கெடுதல் இன்றி மிதந்து கொண்டிருப்பேன்.* **(6.1.56)**

**பிரள யம்தான் வந்ததெனில் பிரமாண் டத்தின் கரைஎய்தித்**
**துரிசில் தத்து வாந்த(ம்)எனும் துகள்இல் பதத்தே சுழுத்தியெனும்**
**விரவும் அவத்தை யால்நிற்பேன் மீளா வேதாப் படைப்பளவும்**
**பிரமன் படைக்கில் பிரமாண்டம் அடைவேன் பறவைப் பெருங்கூட்டில்.**

**பொழிப்புரை:** *பிரளயமானது வந்ததாயின், பிரம்மாண்டத்தின் தடத்தைப் பொருந்தி குற்றம் அற்ற தத்துவ முடிவாகிய நிர்மல பதத்தில் சுழுத்தி என்னும் லய (ஏகரச*

*நிர்விகற்ப) அவத்தையில் இருப்பேன். மறுபடியும் நான்முகன் படைக்கும் வரையில் நான்முகனின் சிருட்டியில் பிரம்மாண்டம் புகுந்து இந்த கற்பக விருட்சத்தின் பறவைக் கூட்டுக்கு வந்தடைவேன்.* **(6.1.57)**

**எனது சங்கற் பத்தாலே இந்தக் கிரியின் இக்கோட்டில்**
**கனகற் பகம்இப் படிஉண்டாம் கற்பம் கற்பந் தோறுமென**
**அனக னேதா ரணைகளில்நீ அழியாது) இருந்தாய் பலகற்பம்**
**வினவு பிறயோ கியர்எல்லாம் வீந்தது) எல்லாம் விளம்(பு)என்றே.**

**பொழிப்புரை:** *என்னுடைய சங்கற்பத்தாலே ஒவ்வொரு கற்பமும் இந்த மலையின் சிகரத்தில் கனமான கற்பக மரம் இந்தப் பிரகாரம் உண்டாகும் என்று கூறவும், (வசிட்டர்) பாவமற்ற பெரியோய்! கூறிய தாரணைகளினாலே தாங்கள் பல கற்ப காலம் அழியாது இருந்தீர்கள். பிரசித்தமான மற்ற யோகியர்கள் எல்லாம் வீழ்ந்து போனதற்குக் காரணம் எதுவென்று கூறுவீர் என்றேன்.* **(6.1.58)**

**ஆய புசுண்டன் அதற்(கு)உரைக்கும் அழிவில் பரமே சுரன்நியதி**
**ஏய இதனை யார்கடப்பார் எனக்(கு)இப் படிஅப் படிஅவர்க்கே**
**மேய வருவது) ஒழிப்(பு)அரிதால் மிகவும் ஏது)எப் படியாகும்**
**நீயது) அங்(கு)அப் படிஎன்றே நினைவாய் நியதி அறுதியிதே.**

**பொழிப்புரை:** *மகா யோகியான புசுண்ட முனிவர் அதற்குப் பதில் கூறுவதாவது: அழிவில்லாத பரமேசுவரனின் நியமமாம். பொருந்திய இதனை யாவரே கடக்கக் கூடியவர்;? எனக்கு விதித்தது இவ்வாறாம். அவர்களுக்கு விதித்தது அவ்வாறாம். பொருந்த வருவதை ஒழிப்பது (தவிர்ப்பது) அரிதாம். மிகுதியாக எது எவ்வாறு ஆகுமோ தாங்கள் அதனை அங்கு அவ்வாறே என்று கருதுவீர், நியமத்தின் முடிவு இதுவே ஆகும்.* **(6.1.59)**

**என்ற புசுண்டன் தனைஞான விஞ்ஞா னத்தை எய்தியநீ**
**துன்று யோகம் தொடர்மனத்தால் தொல்லை இந்த மூவுலகில்**
**நின்றன் உளத்தில் சித்திரங்கள் நேர்ந்தது) ஏதே அவையெல்லாம்**
**ஒன்றும் ஒழியாது) உரைஎன்ன உயர்ந்த புசுண்டன் உரைசெய்யும்.**

**பொழிப்புரை:** *என்று கூறிய புசுண்ட முனிவரைக் "கலை ஞானத்தையும், பிரம்ம ஞானத்தையும் அடைந்த தாங்கள் நெருங்கிய யோகம் பொருந்திய மனத்தினாலே பழைய இந்த மூன்று உலகத்தில் தங்களுடைய உள்ளத்தில் விசித்திரங்கள் அடைவுற்றது எது எது. அவை யாவற்றையும் ஒன்றையும் விடாமல் கூறுவீர்கள்" என்று (வசிட்டர்) கேட்கவும், உயர்ந்த புசுண்ட முனிவர் கூறுகின்றார்.* **(6.1.60)**

**கல்லால் நிறைந்த மலைமரம்புல் காணாது) இருந்தது) இப்புவனம்**
**சொல்லார் ஆண்டு பதினோரா யிரம்வெண் ணீற்றால் துன்னியது**
**நல்லாய் வேறே யுகநாலும் நண்ணும் காட்டால் நெருங்குற்றது)**
**அல்லா உகநால் இடம்இன்றி அசலத் திரளால் செறிந்ததுவே.**

**பொழிப்புரை:** *கல்லால் முழுவதுமாக நிறைந்து, மலை, மரம், புல் எதுவும் தோற்றாமல் இருந்தது இந்த பூமி. சொல்லப்படும் பதினோராயிரம் ஆண்டுகள் வெண்மை பஸ்மத்தால் நெருங்கியிருந்தது. நல்லவரே! மற்றொரு நான்கு யுகங்கள் காடுகளால் பொருந்தியிருந்தது. மற்றொரு நான்கு யுகங்கள் பிரதேசம் இன்றி மலைகளால் நிரம்பி இருந்தது.* **(6.1.61)**

*(பின்பு பிருது சக்கரவர்த்தியினால் தான் தனுஷ்கோடியால் மலைகளை விலக்கிப் பூமி சமமாக்கப் பெற்றது என்பது புராணங்களில் கூறப்பட்டுள்ளது)*

**அகத்தி யனைஅன் றியில்உகநால் அகல்விந் தத்தால் மறைந்ததுமண்**
**வகுத்த சிருட்டி ஒன்றில்மது மறையோர் விரும்பச் சூத்திரர்கள்**
**இகழ்ச்சி செய்தார் கற்புடைய மகளிர் இச்சித் தனசெய்தார்**
**மிகுத்த முனிவ இவைகண்டேன் வேறும் உள்ள விளம்புவனால்.**

**பொழிப்புரை:** *அகத்திய முனிவர் இல்லாமல் நான்கு யுகங்கள் விரிந்த விந்திய மலையினால் பூமியானது மறைந்தது. படைக்கப்பட்ட ஒரு படைப்பில் மறை ஓதுபவர்கள் மதுவினை விரும்பவும், சூத்திரர்கள் அச்செயலை இகழ்ந்தனர். கற்புடைய பெண்டிர் தாங்கள் விரும்பிதைச் செய்தனர். பெருமை மிகு முனிவரே! இவைகளைக் கண்டேன். இன்னும் கண்ட வேறு பலவற்றையும் கூறுவேன்.* **(6.1.62)**

**மதிபாற் கரனை முதலோர்கள் பிறப்பும் மகவான் உபேந்திரர்கள்**
**பதியும் பொற்கண் ணன்கவர்ந்த பாரைப் பன்றி பறிந்ததுவும்**
**பிதிர்கற் பங்கள் தொறும்வேண்டிப் பிரித்த மறையைச் செறித்ததுவும்**
**அதிரும் கடலில் மந்தரத்தால் அமுதம் அழைப்பித் தது(ம்)அறிவேன்.**

**பொழிப்புரை:** *சந்திர சூரியர்கள் முதலானோர்கள் உற்பத்தியும், இந்திரன் உபேந்திரர்களின் நிலையும், இரணியாட்சன் கவர்ந்து கொண்டு போன பூமியை வராக அவதாரம் எடுத்துக் கொண்டு வந்ததையும், கற்பங்கள் தோறும் (மனுக்களின் ஆட்சிக் காலந் தோறும்) நியமனமும், (மச்ச அவதாரத்தில்) வேதங்களைக் கொணர்ந்ததும், மந்தர மலையால் கடலை அதிர்கின்றவாறு கலக்கி அமுதத்தைக் கொண்டு வந்ததையும் அறிவேன்.* **(6.1.63)**

**மகத்தின் சகத்தின் இவையெல்லாம் வாலர் எனினும் அறிகுவரால்**
**சகத்தில் உதித்தோர் உனைமுதலோர் தவநா ரதன்பா ரத்துவசன்**
**மிகுத்த மரிசி புலத்தியன்அத் திரிவிண் ணவர்கோன் சனற்குமரன்**
**உகுத்த மதகுஞ் சரமுகன்வேள் பிருங்கி முதலோர் ஓ(து)அரியோர்.**

**பொழிப்புரை:** *பெரிய உலகத்தில் இவற்றை எல்லாம் சிறிது ஆயுள் உடையவரும் அறிவர். உலகத்தில் உதித்தவர்கள் தங்களைப் போன்றோர் தவத்தை உடைய நாரதர், பரத்துவாசன், பெருமை உடைய மரீசி, புலஸ்தியர், அத்திரி, தேவேந்திரன், சனத்குமாரர், அசுரர்களை சம்மாரம் செய்த யானை முகத்தோன், முருகக் கடவுள், பிருங்கீசர் முதலாயினோர் எண்ணிலாதவர்.* **(6.1.64)**

**அவ்வா(று) இந்நாள் சிருட்டிகளில் அடைந்தோர் களில்லூர் எண்ணுண்டோ**
**மெய்வாய் முனியே உன்பிறவி விளம்பில் எட்டா குவ(து)இதுவாம்**
**இவ்வா(று) இவ்வெட் டாம்பிறப்பில் எய்தி னோம்இங்(கு) இருவோரும்**
**உய்வாய் எனஅன்(று) உற்றதுபோல் இன்றும் என்பால் உற்றனையால்.**

*அவ்வாறு இது வரையில் சிருட்டிகளில் வந்தவர்கள் ஒரு கணக்கில் அடங்குமோ? சத்திய சொரூபமான முனிவரே! தங்களுடைய பிறவியைக் கூறுவதாயின் இது எட்டாவது ஆகும். இவ்வாறு எட்டாவது பிறப்பில் இங்கு இருவோரும் அடைந்தோம். அந்த காலத்தில் வந்து அடைந்தது போலவே இந்தக் காலத்திலும் அடியேனிடத்து எழுந்தருளினீர்.* **(6.1.65)**

**ஒருக்கால் விண்ணில் நின்(று)உதித்தாய் ஒருக்கால் நீரில் நின்(று)உதித்தாய்**
**செருக்கால் மலைநின்(று) ஒருக்கால்செந் தீநின்(று) ஒருக்கால் வந்தனைநீ**
**இருக்கா லொடுமுக் கால்படைப்பில் இம்மண் மறைந்து மீண்(டு)எடுத்த(து)**
**அருட்பால் அமுதம் பன்னிருகால் கடைந்தார் இவையும் அறிகுவனால்.**

*(வசிட்ட முனிவராகிய தாங்கள்) ஒரு சமயம் ஆகாயத்திலிருந்து உதித்தீர். ஒரு பொழுது தண்ணீரிலிருந்து வந்தீர். மற்றொரு பொழுது அதி கம்பீரமாக மலையில் இருந்து வந்தீர். சிவந்த அக்கினியில் இருந்தும் ஒருமுறை வந்தீர். ஐந்து முறை சிருட்டியில் இந்த பூமியானது காணாமல் போய், மறுபடியும் கொண்டு வந்தது அறிவேன். திருவருளால் பாற்கடலில் அமுதம் வரப் பன்னிரண்டு முறை கடைந்தது முதலிய யாவற்றையும் அறிவேன்.* **(6.1.66)**

**முக்கால் பொற்கண் ணன்கீழே மொய்மா நிலத்தைக் கொண்(டு)அகன்றான்**
**மைக்கார் நிகர்மால் இரேணுகைபால் மகவாய் வந்தான் அறுமடங்கு**
**மிக்கான் மீண்டு கலியுகங்கள் நூற்றில் புத்தன் மெய்யெடுத்தான்**
**உக்கார் புரம்மூன் றினும்உள்ளோர் ஒருக்கால் போல முப்பதின்கால்.**

*மூன்று முறை இரண்யாட்சன் பாதாள லோகத்தில் பூமியைக் கொண்டு சென்றான். கருமேகம் போன்ற விஷ்ணு இரேணுகா தேவியிடம் ஆறு முறை குழந்தையாய் வந்தார். மேன்மை மிகுந்த சூரியானவர் கலியுகங்கள் நூறில் புத்த அவதாரம் செய்தார். ஆங்காங்கு துன்பப் படுத்தி வந்த முப்புரங்களிலும் உள்ளவர்கள் ஒரு முறையே போல முப்பது முறை அழிவுற்றார்கள்.* **(6.1.67)**

**தக்கன் இருகால் மகம்அழிந்தான் சசிசே கரனால் சக்கரிக்குப்**
**புக்க தோல்வி பத்துளதாம் புராரி உடனே அருச்சுனற்கு**
**மிக்க வராகப் பொருட்டாக விளைந்த வெம்போர் எண்காலாம்**
**தொக்க யுகங்கள் தொறும்புருடர் புந்திக்(கு) ஈடாம் தொல்வேதம்.**

*தட்சன் இருமுறைகள் யாகம் அழிந்தான். சந்திரனைத் தலையில் சூடியவரால் இந்திரனுக்கு உண்டான தோல்வி பத்து முறையாம். பரமேசுவரனுடன் அர்ச்சுனனுக்கு வலுத்த பன்றியின் காரணமாக உண்டான கொடும்போர் எட்டு முறையாம். தொடர்ந்த யுகங்கள் தோறும் மானுடரின் மதியினுக்கு ஒப்பாம் பழைய வேதங்கள் (யான் அறிவேன்).* **(6.1.68)**

புத்தி வழியே மறைஏறிக் குறையும் புவிச்செய் கையும்ஆங்கே
சித்தி ரங்க ளாம்இதுபோல் புராணத் திரள்பா டம்பலவாய்
அத்தம் ஒன்றாம் உகந்தோறும் அமல ராமா யணப்பெயராய்
மெத்து புதுமை யால்இலக்கம் சுலோகத்(து) அறிவு நூல்விளம்பும்.

**பொழிப்புரை:** *யுகங்கள் தோறும் புருஷர்களின் புத்தியின் ஏற்றத்தினாலும், குறைவினாலும் வேதம் செய்கை, பாடம் ஏறிக் குறையும். உலக வழக்கும் அவ்வாறே. சித்திரங்களாம் இதைப் போல புராணங்களின் தொகுப்பு பாடம் பலவாய், அர்த்தம் ஒன்றாம். யுகங்கள் தோறும் நிர்மலமான இராமாயணப் பெயர் பெற்று பொருந்தியதால் நூறாயிரம் சுலோகம் ஆக ஞானநூல் சொல்லப்பெறும்.* **(6.1.69)**

ஞான ராமா யணம்இதனை நல்வான் மீகி நவின்றதுபோல்
ஆன பிறரும் பன்னிருகால் அமைத்தார் பலகால் அழிதலினால்
ஈனம் இல்லா இதற்(கு)இணையாய் இரண்டா வதுபா ரதம்அதனை
மான வியாதன் செய்ததுமுன் மறைய மற்றோர் களும்உரைத்தார்.

**பொழிப்புரை:** *ஞான இராமாயணமாகிய இதனை நல்ல வான்மீகி முனிவர் கூறியது போல, மற்றையவரும் பன்னிரண்டு முறை இயற்றினார்கள். அனேக முறை கெட்டுப் போதலால் குறைவில்லாத தனக்கு ஒப்பாக இரண்டாவதாகிய மகாபாரதம் தன்னை யாவரும் புகழும் வியாச முனிவர் செய்தது முன்பு மறைந்து போக மற்றவர்களும் கூறினார்கள்.* **(6.1.70)**

அரக்கர் மாளப் பதினொன்றாம் அவதா ரத்து இராம(ன்)எனப்
புரக்கு நெடுமால் இக்காலம் புவியில் தோன்றும் வசுதேவன்
பரக்கு மனையில் பதினாறாம் மடங்கிக் காலம் பயில்குவனால்
துரக்கும் இந்தச் சகமயக்கம் தோன்றா தோன்ற வரும்ஒருகால்.

**பொழிப்புரை:** *அரக்கர்கள் யாவரும் மாண்டு போக, பதினொன்றாவது அவதாரமாக இராமராக சகலத்தையும் காப்பாற்றும் மகா விஷ்ணுவானவர் இப்போது பூமியில் அவதரிப்பர். வசுதேவருடைய சகல செல்வங்களும் நிறைந்த மனையில் பதினாறாவது முறை அவதரிப்பர். எல்லோரையும் பயப்படச் செய்யும் இவ்வுலக மயக்கம் உண்மையாகப் புலப்படாது என்ற போதிலும் ஒவ்வொரு காலத்தில் புலப்படவும் செய்யும்.* **(6.1.71)**

தோற்றம் என்னும் இம்மயக்கம் துஞ்சா(து) என்னும் சிற்பரத்துள்
ஆற்ற இருந்து பிறந்(து)இறக்கும் அப்பி னுள்சேர் அலைகளைப்போல்
சாற்று திசைவெற்(பு) ஆதித்தன் சசிமீன் மேருத் தானங்கள்
வேற்று வகையாம் சிருட்டிதொறும் மேலோய் இவையும் கண்டனனால்.

*தோற்றம் தருகின்ற இந்த மயக்கமானது சித்து வஸ்துவில் (பிரம்மத்தில்) எப்பொழுதும் ஓயாது. சம்ஸ்கார வடிவமாய் இருந்து (பதிவுகளாய் இருந்து) பிறந்து மடியும். தண்ணீரில் சேர்கின்ற அலைகளைப் போல, சொல்லப்டுகின்ற திக்குகள், மலைகள், சூரியன்கள், சந்திரன்கள், நட்சத்திரங்கள், மேரு மலைகள் முதலான இடங்கள்*

*எல்லாம் மாறுபாடுற்ற வகையாம். ஒவ்வொரு சிருட்டியிலும் உத்தமமான மகரிஷியே! இவைகளை எல்லாம் பார்த்தேன்.* **(6.1.72)**

**உகங்கள் நாலும் ஒன்றுக்கொன்(று) ஆசா ரங்கள் உடன்மயக்கும்**
**மகம்செய் முனிவா என்றானை மறுத்தும் ஒன்றை நான்வினவிப்**
**புகன்றேன் விவகா ரத்துடன்இப் புவியில் சரித்து நீகூற்றை**
**அகன்ற(து) எங்ஙன் எனமீட்டும் அதற்குப் புசுண்டன் அறைவுறுமே.**

**பொழிப்புரை:** *யுகங்கள் நான்கும் ஒன்றுக்கொன்று ஆசாரங்கள் மாறுபட்டு மயக்கம் அடையும். யாகங்கள் செய் முனிவரே! என்ற புசுண்ட முனிவரை மறுபடியும் ஒன்றைக் கேட்டு கூறினேன். விவகாரத்தோடு கூடி இந்த பூமியில் சஞ்சரித்தும் தாங்கள் யமதர்மனை அடையாதது எவ்வாறு என்று கேட்கவும், மறுபடியும் அதற்குப் புசுண்ட முனிவர் கூறத் தொடங்கினார்.* **(6.1.73)**

**செறிந்த மேலோர் ஏவியது செய்வ(து) அறியார்க்(கு) உறுபயனே(து)**
**அறிந்தும் எனைநீ வினவிய(து)இங்(கு) அறைவன் கேட்டி வாதனைநூல்**
**பிறிந்தி டாத குற்றங்கள் முத்தம் என்னும் பெருமாலை**
**எறிந்து பூணா(து) இருக்கின்ற இதயத் தாரை யமன்அணுகான்.**

*சத் சங்கம், பிரம்ம வித்தை நிறைந்த பெரியோர் விதித்தது இயற்ற உணராத வர்க்கு கிடைக்கும் பயன் யாது? தெரிந்தும் அடியேனைக் கேட்டது இங்கே கூறுவேன் கேட்பீர்களாக. வாசனையாகிய நூலில் கோர்க்கப்பெற்ற தோஷங்களாகிய முத்துக்கள் நிறைந்த ஆரம் என்று சொல்லப்படும் பெரிய மாலையைத் தூரத்தில் தள்ளி அதை அணியாமல் இருக்கின்ற இதயம் உடையவரை யமதர்மன் அணுக மாட்டான்.* **(6.1.74)**

**அறுதி மரத்துக் கீ(ர்)அறிவாள் ஆக்கை வல்லிக்(கு) எரிபுழுவாம்**
**மறுகு கின்ற மனத்துன்பம் மருவா தவரை யமன்அணுகான்**
**இறுதி உடலா மரத்தினைச்சூழ்ந்(து) இரங்கு மனத்தில் தலைவைத்து**
**முறுகும் ஆசைப் பாம்(பு)அடரா முதன்மை யோரை யமன்அணுகான்.**

*தேகமாகிய மரத்தை அறுக்கக் கூடிய கூர்மை பொருந்திய வாளும், தேகமாகிய கொடியை அழிகின்ற புழுவும் ஆகிய துன்பத்தையே விளைக்கும் மனத் துயரம் பொருந்தாதவர்களை யமதர்மன் அணுகமாட்டான். தேகமாகிய மரங்களில் காணப்படும் பொந்துகளில் புகுந்து கொண்டு மனத் துயரங்களில் தலையை வைத்த படம் எடுத்து சீறுகின்ற ஆசைகளாகிய பாம்புகள் நெருங்காத பெரியவர்களை யமதர்மன் அணுகமாட்டான்.* **(6.1.75)**

**இராக வெகுளி விடம்பெருக இதயப் புற்றில் லோப(ம்)எனும்**
**அராவந்(து) அணுகி விழுங்காத அறிஞர் தம்மை யமன்அணுகான்**
**விராக விவேக நீர்சுவறி மெய்யாம் கடலில் வடஅனலாய்ப்**
**பராமல் வெகுளி வேர்அறுத்த பண்பி னோரை யமன்அணுகான்.**

**பொழிப்புரை:** *விருப்பு வெறுப்பு என்கிற விஷம் பெருகி, புற்றாகிய இதயத்தில் லோபம் என்னும் பாம்பு வந்து சேர்ந்து விழுங்காத உணர்வு உடைய அறிஞரைக் காலன் வந்து நெருங்கமாட்டான். கலந்த விவேகமாகிய தண்ணீர் வற்றிப் போக, தேகமாகிய சமுத்திரத்தில் வட முக அக்கினியைப் போல் பொங்குகின்ற கோபத்தின் வேரினை அறிந்த பண்புடையோரை யம தர்மன் அணுக மாட்டான்.* **(6.1.76)**

**கடின மான எந்திரத்தில் கலந்த திலம்பொன் றுவது(ு)என்னக்**
**கொடிய மதனால் தேய்த(ல்)உறாக் கொள்கை யோரை யமன்அணுகான்**
**முடிவி லாத நின்மலமாம் முத்திப் பதத்தே சித்தத்தின்**
**நெடிய துயர்தீர்ந்(து) இளைப்பாறும் நிலைபெற் றோரை யமன்அணுகான்.**

**பொழிப்புரை:** *கடினமான ஆலையில் போடப்பட்ட எள்ளானது அரைபடுவது போல, கொடிய மன்மதனால் சிதையாத தன்மை உடையோரை யமதர்மன் அணுக மாட்டான். முடிவு ஒன்று இல்லாத மலம் இல்லாத அந்த மோட்ச பதத்தில் மனதில் நீண்ட துயரம் யாவும் தீர்ந்து இளைப்பாறி அமைதி அடையும், அந்த நிலையை அடைந்தோரை யமதர்மன் அணுக மாட்டான்.* **(6.1.77)**

**ஓதும் இவையாம் குற்றங்கள் உழலும் பிறவிக் காரணங்கள்**
**பேதம் இன்றி ஒன்றான பெரிய மனத்தைத் துயர்செய்யா**
**ஆதி வியாதி களில்தோன்றி அகலா மயக்கால் சலிக்கு(ம்)இடர்**
**தீதில் பேதம் அறஒன்றாம் சித்தத்(து) அருகும் செல்லாதே.**

**பொழிப்புரை:** *கூறப்பட்ட இந்த குற்றங்கள் அவதிப்படும் பிறவிகளுக்குக் காரணமாம். பேதம் இல்லாமல் ஒருமுகப்பட்ட சித்தத்தைத் துன்பப்படுத்தாது. உள்ளம் தேகங்களில் தோன்றி அகலாத (மனைவி மக்கள் விஷயங்களின்) மயக்கத்தால் சலிப்படைந்த துன்பங்கள் குற்றமற்ற பேதமின்றிய ஏக மனம் உடையவர் பக்கத்திலும் செல்லாது.* **(6.1.78)**

**இதைய விண்ணை இருள்ஆக்கி இச்சை கோபத்(து) எழும்எண்ணம்**
**சிதைஇல் பேதம் அறஒன்றாம் சித்தத்(து) அருகும் செல்லாதால்**
**துதைதீப் பொருள்கள் தீச்சொற்கள் து(ர்)ஆர ம்பங்கள் தீக்குணங்கள்**
**உதைய மான சமமேவி ஒன்றா மனதை உட்புகுதா.**

**பொழிப்புரை:** *இதய ஆகாசத்தை இருளாக ஆக்கி எழுகின்ற இச்சை கோபத்தால் உண்டாகும் எண்ணங்கள் சிதையாமல் பேதம் இலாத ஏகமாய் (ஒருநிலைப்பட்ட) மனம் உடையவரின் அருகில் செல்லாது. நெருங்கி கெடுதலைத் தரும் செல்வம், தீய மொழிகள், கெட்ட ஆரம்பம், தீய குணங்கள் யாவும் சமத் தன்மையை அடைந்த மனதின் உள் நுழையாது.* **(6.1.79)**

**மயக்கம் உபாதி மலம்இன்றி வாய்மை யாகி மேல்இதமாய்த்**
**துயக்கும் தொழில்தீர் பொருள்வசத்தே தொடரா மனத்தைச் செயவேண்டும்**
**பயக்கும் நெடும்சூ னியநல்கி அசுத்தம் ஆகும் பன்மைப்பேய்**
**இயக்கம் காணாப் பொருள்வசத்தே மனதை எய்தச் செயவேண்டும்.**

**பொழிப்புரை:** *பிராந்தி, உபாதி, மலம் அகன்று, சத்தியமாகி, உயர்ந்த இதமாகி, சஞ் சலத்தைத் தரும் செயல்கள் தீர்ந்து, வஸ்துவின் வசமாக சித்தத்தைத் தொடரச் செய்ய வேண்டும். நீண்ட காலம் பயத்திற்கு ஏதுவுமாய், விரோதத்திற்கும் ஏதுவாய் அசுத்தமான பேதப் பிராந்தியால் பரிசிக்கப்படாத பொருளின்பால் மனதைப் பொருந்தச் செய்தல் வேண்டும்.* **(6.1.80)**

**தனைஉள் உணர்வால் நாடுதலே சகல இடர்க்கும் போக்கிடமாம்**
**உனைஒப் பார்கட்(கு) எளி(து)என்னை ஒப்பார்க்(கு) அரிதாம் உயர்முனிவா**
**வினைகட்(கு) எல்லாம் அப்பாலாம் மேலாம் கோடி தனைமேவும்**
**இனைய பதம்சா மானியத்தே எழும்புந் தியர்எங் ஙனம்பெறுவார்.**

**பொழிப்புரை:** *ஆன்ம சொரூபத்தை உள்முகப் பார்வையால் நோக்குதலே சகல துக்கங்களும் நீங்குவதற்கான இடமாகும். தங்களைப் போன்றவர்களுக்கு எளிதாம். என்னைப் போன்றவர்களுக்கு அரிதாம். உயர்ந்த முனிவரே! எல்லா வினை களுக்கும் அப்பாலாம். மேலான உயர்ந்த பதத்தை அடைந்துள்ள இந்த இடத்தை சாமானிய சித்தம் உடையவர் எவ்வாறு பெறுவர்?* **(6.1.81)**

**ஞான நோக்குக்(கு) ஒப்பனவாய் ஞான நோக்கில் நண்புளதாம்**
**ஆன குணங்கட்(கு) இடைஒன்றை அடைந்தேன் துன்பம் எலாம்அறுத்து**
**மான நல்வாழ் வினைவளர்த்து மாயா(து) இருக்கும் காரணமாய்**
**ஈனம் அற்ற உயிர்நோக்கம் என்னும் குணம்உற் றனன்என்றான்.**

**பொழிப்புரை:** *ஞான திருஷ்டிக்கு சமமமாய், ஞான திருஷ்டியில் நேயமாய் ஆகிய குணங்களின் மத்தியில் ஒன்றைப் பற்றித் துயரம் அனைத்தையும் அறுத்து, புகழ்கின்ற வண்ணம் நல்ல வாழ்வைப் பெருக்கி, அழியாதிருக்கும் காரணமாய், தாழ்வில்லாத உயிர் நோக்கம் (பிராண சிந்தை) என்னும் குணத்தை (அதாவது பிரளயத்திலும் அழியாத தன்மையை) அடைந்தனன் என்றான்.* **(6.1.82)**

**ஓதும் அளவில் அறிந்திருந்தும் உயிர்நோக்(கு) எனநீ உரைசெய்த(து)**
**ஏது பகர்என் றலும்புசுண்டன் இசைக்கும் நீஇங்(கு) எதிர்காணும்**
**பூத உடலாம் மனைநடுவே பொருந்தும் இதய புண்டரிகச்**
**சீத மலரின் உள்ளிரண்டு செறியும் பிராணன் அபான(ன்)என.**

**பொழிப்புரை:** *இவ்வாறு "கூறிய அளவில் அறிந்திருந்தும், பிராண சிந்தை என்று தாங்கள் கூறியது யாது கூற வேண்டும்" என்று கேட்டலும், அதற்குப் புசுண்ட முனிவர் கூறுவார். நீங்கள் இவ்விடத்தில் எதிராகக் காணும் பூத உடலாம் இந்த தேகத்தின் மத்தியில் வாய்த்த இருதய தாமரையான குளிர்ந்த பூவினுள் பிராணன், அபானன் என்கின்ற இரண்டு வாயுக்கள் பொருந்தி நிற்கும்.* **(6.1.83)**

**தோற்றம் உடைத்தாய் மேன்மையதாய்த் துன்னும் பவனம் இவ்விரண்டின்**
**ஆற்றல் உடைய கதியினைப்பின் செல்வன் அயர்(வு)அன் றியில்என்றும்**
**ஏற்ற இத(ய)அம் பரத்(து)இரவி மதியா வனவிண் ணிடைஉழல்வ**
**ஊற்ற முடனே களேபரமாம் எந்தி ரங்கொண்(டு) உலாவுவன.**

*தோற்றம் உடையதாய், மேன்மையதாய், நெருங்கிய காற்றுகளாகிய இந்த இரண்டின் சாமர்த்தியம் உடைய நடையினைத் தொடர்ந்து நடப்பவன் அயர்வு இல்லாமல் எப்போதும் உயர்வோடு கூடிய இருதய ஆகாசத்தில் சூரியன், சந்திரன் ஆகியிருப்பனவாம், ஆகாயத்தின் கண்ணே உழல்வனவாம், மிகத் திரமாக தேகமாகிய எந்திரத்தில் உலாவி நடப்பனவாம்.* **(6.1.84)**

நன்றா மேல்கீழ் ஓடுவன நனவு கனவு சுழுத்திகளில்
ஒன்றாம் சமரூ பத்தனமுன் உரைத்த பிரா(ண) அபானன்கள்
பின்றா(து) இவற்றின் கதிஎன்றும் பின்செல் வேற்குச் சுழுத்தியிலே
நின்றான் உடைய வாதனைபோல் நிகழ்வா தனைகள் நீங்கினவால்.

**பொழிப்புரை:** *(அந்த வாயுக்கள்) நன்றாக மேலும் கீழும் ஓடிக் கொண்டிருப்பனவாம். நனவு, கனவு, ஆழ்துயில் இவைகளில் ஒரே நிலையில் சம வடிவமாக நடப்பனவாம், முன்பு கூறிய பிராணன் அபானன் என்ற வாயுக்களாம். இந்த இரண்டின் நடையைப் பின் விடாமல் எப்போதும் தொடர்ந்து செல்லும் எனக்கு ஆழ்துயிலில் வாசனைகள் இல்லாதது போல், விளங்குகின்ற நிகழ்கால வாசனைகள் அகன்றன.* **(6.1.85)**

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

அரவிந்த வளையநூல் ஒன்றைக் கூ(று)ஓ(ர்)
ஆயிர(ம்)இட்(டு) அதில்ஒருகூ(று) ஒப்(பு)என் றாலும்
தர(ம்)ஒவ்வா(து) அறச்சிறிதாய் உண்டாய் நின்றும்
தாக்கியஅறி வரி(து)அவற்றின் கதியின் தன்மை
விராவிந்தப் பிராணன்விடா(து) அசைவாம் சத்தி
மேவிஒழி யா(து)உலவு மேனி யுள்ளே
திரமின்றிப் புறத்தினு(ம்)உள் ளினு(ம்)எப் போதும்
திரும்பாது மேற்போதல் செய்கை ஆகும்.

**பொழிப்புரை:** *தாமரைத் தண்டின் நூல் ஒன்றினை ஆயிரம் கூறாகப் பகுத்து, அவைகளில் ஒரு கூறு சமம் என்ற போதிலும் அத்தன்மை பொருந்தாது. முழுவதும் சூக்குமமாய் இருப்பதே ஆயினும் இன்னபடி இருக்கின்றது என்று குறித்து அறிய முடியாததாம். அந்த வாயுக்களின் நடையின் தன்மை கலந்த இந்தப் பிராண வாயுவானது அசைகின்ற சத்தியை விடாமல் பொருந்தி எப்போதும் இந்த தேகத்துக்கு உள்ளே நிலையில்லாமல் வெளியிலும் உள்ளிலும் எந்தக் காலத்தும் திரும்பாமல் மேல் போக்குடையதே செய்கை ஆகும்.* **(6.1.86)**

மற்றைஅபா னனு(ம்)அசைவாம் சத்தி மேவி
மாறாமல் உலவு(ம்)அக வாகி யத்தில்
உற்றஉட லில்கீழே ஓடா நிற்கும்
உறுநனவு கனவிலு(ம்)இவ் வுயர்பிராணன்
முற்றுறமீள் வதுநன்றாம் அறிந்தோர்க்(கு) இன்பம்
முழு(து)அளிக்கும் இதன்இயல்பை மொழியக் கேளாய்
பெற்றபுறத்(து) ஈராறு விரல்மட்(டு) ஓடும்
பிராணன்மீட்(டு) உடல்உறல்பூ ரகமாய்ப் பேசும்.

**பொழிப்புரை:** *மற்றொன்றாகிய அபான வாயுவும் அசைகின்ற சத்தி அடைந்து மாறுபாடு அடையாமல் சஞ்சரிக்கும் உள்ளும் வெளியிலும் இந்த தேகத்தில் கீழாக ஓடும். வரும் நனவு, கனவுகளில் இந்த மேலான பிராணன் அடியோடு அடங்குவதே நலம் உடையதாகும். அறிந்து கொண்டவர்களுக்கும் ஆனந்தம் முழுமையாக அளிக்கும். இதன் இயல்பைக் கூறக் கேட்பீர்களாக. உற்ற வெளிப்புறத்தில் பன்னிரண்டு அங்குலம் வரையில் செல்லும் பிராண வாயுவானது மறுபடியும் தேகத்தில் சேருதல் பூரகம் என்று சொல்லப்படும். (பூரகம் = மூச்சினை உள்ளிழுத்தல்)* **(6.1.87)**

**புறநின்று சாலவும்(ம்)உள் ளடங்க வன்பு**
**பொருந்தாமல் உடல்அபானன் புகுதல் எய்தும்**
**திற(ன்)ஒன்(று)ம் அதனையும்பூ ரகமாய்ச் செப்பும்**
**தீரஅபா னனு(ம்)ஒளித்துப் பிராணன் தானும்**
**அறவு(ம்)இத யத்(து)அசை(வு)அற்(று) இருக்கும் எம்மட்(டு)**
**அம்மட்டும் கும்பகமாம் அவத்தை ஆகும்**
**இற(வு)அறுநல் யோகிய(ர்)ஈ(து) அனுப விப்பர்**
**எக்கலையும் கற்(று)உணர்ந்த வேதத் தோனே.**

**பொழிப்புரை:** *வெளிப்புறத்தில் இருந்து முழுவதும் உள்ளடங்குவதற்காக கஷ்டப்படாமல் அபான வாயுவானது தேகத்தின் உள்ளே புகும். இத்தன்மை வாய்ந்த இதுவும் பூரகம் என்றே சொல்லப்படும். முற்றிலும் அபானன் மறைந்து பிராணனும் முழுவதும் எதுவரையில் இருதயத்தே சலனம் அற்றிருக்குமோ, அது வரையில் கும்பகம் என்னும் அவத்தை ஆகும். அழிவில்லாத நல்ல யோகியர் இதனை அனுபவிப்பர், சகல சாத்திரங்களையும்; படித்து அறிந்த வேத வடிவான பிரம்ம ரிஷியே!. (கும்பகம் = இழுத்த மூச்சினை வெளிவிடாமல் உள்ளேயே நிறுத்துதல்)* **(6.1.88)**

**மரு(வு)இதய விண்ணினும்தன் இரதத் தோடே**
**வருத்த(ம்)அறப் பிராணன்கள் புறநோக்(கு) எய்தல்**
**புரிவுறஉள் மேவு(ம்)இரே சகம்தான் ஆகும்**
**புறநோக்கம் உறுவாயு பொருந்து மூக்கில்**
**உருவியதன் நுனிஅளவாம் கதியை முன்னம்**
**உறப்புறப்பூ ரக(ம்)ஆ(ம்)என்(று) உரைப்பர் முன்னோர்**
**விரிவுறநா சியின்நுனிநின்(று) அகன்(று)ஈ ராறு**
**விரல்அளவாம் கதிப்புறப்பூ ரகமாம் வேறே.**

**பொழிப்புரை:** *பொருந்தி நிற்கும் இதய ஆகாசத்திலிருந்தும் தனது சுபாவத்துடனே கஷ்டம் இன்றி பிராண வாயுக்கள் வெளிப்புறத்தை அடைதல் வெளிநோக்கிய உள்ளேயாக்கிய ரேசகம் எனப்படும். வெளிநோக்கம் அடைந்த வாயுற்ற மூக்கில் மேவி அதன் நுனி அளவாம் நடையை முன்னர்ப் பொருந்திய வழியாகப் பொருந்திய பூரகம் என்று பெரியோர் கூறுவர். விஸ்தாரமாக மூக்கின் நுனியிலிருந்து அகன்று பன்னிரண்டு அங்குல அளவாய் நடை வேறான வெளிப்பூரகமாம்.* **(6.1.89)**

புறத்திலேபி ராண(ன்)ஒளித் திடஅ பானன்
புறப்படா(து)இ ருக்கப்பூ ரணஅ வத்தை
நிறத்தபுறக் கும்பகமாம் அபானன் தோற்ற
நிகழ்வடிவாம் வாயுவின்உள் நோக்கம் தானே
திறத்தபுற ரேசகமாம் இதுவே முத்தி
சேர்விக்கும் நித்தலும்சிந் திக்க லாகும்
மறித்த(ல்)அறப் புறன்உட்சேர் கும்ப(கு) ஆதி
வருகதிகள் விடா(து)உணர்ந்தோர் மறித்தும் வாரார்.

**பொழிப்புரை:** *வெளியில் பிராண வாயுவானது அடங்க, அபான வாயுவானது வெளிப்படாது இருக்க, பூரண அவத்தையாய் விளங்கிய புறக் கும்பகம் ஆகும். அபான உதயத்தின் பிரகாச வடிவமான வாயுவின் உள்பார்வையானது திறமான புற ரேசகம் ஆகும். இதுவே மோட்சத்தில் சேர்ப்பிக்கும். சதாகாலமும் தியானிக்கப்படும் தடையில்லாமல் புறம்பிலும் உள்ளிலும் சேர்கின்ற கும்பகம் முதலாக வருகின்ற நடைகளை தவிர்க்காமல் அறிந்தவர்கள் திரும்பவும் பிறக்காதவர்கள்.* **(6.1.90)**

*(பிராணன் அபானனை நிறுத்தும் உள்பூரகம் இரண்டும், உள்கும்பகம் ஒன்றும், உள்ரேசகம் ஒன்றும், புறப்பூரகம் இரண்டும், புறக்கும்பகம் ஒன்றும், புற ரேசகமாகிய ஒன்றும் ஆகிய எண் வகையும் சொல்லியதாம்)*

நாடுபிரா(ண) அபான இயற்கை யாக
நான்உரைத்த இக்கதிகள் நால்இ ரண்டும்
வீடுதரு வனஇரவும் பகலும் மேவ
வேண்டுவன விரை(வு)அறஇவ் வியாபா ரத்தில்
கூடினராய்ப் புறம்போகா(து) உளத்தைக் காப்போர்
குறைவில்சில நாளில்நிலை கூடா நிற்பர்
தேடு(ம்)இது பரிசயிப்போர் விடய வேட்கை
சேரார்வே தியர்நாய்த்தோல் தீண்டு வாரோ.

**பொழிப்புரை:** *நாடுகின்ற பிராணன் அபான வாயுவின் இயல்பாக யான் கூறிய இந்த எட்டு கதிகளும் வீட்டைக் கொடுப்பன, இரவும் பகலும் விரும்பத்தக்கன, வேகம் இல்லாமல் இத்தொழில்களில் கூடியவர்களாய், புறத்தில் செல்லாமல் மனதைக் காப்பவர்கள் குறையில்லாமல் சில நாட்களில் நிர்வாண நிலையைச் சேர்வார்கள். தேடுகின்ற இதை பயிற்சி செய்பவர்கள் பிராமணர்கள். நாயின் தோலைத் தீண்டுவார்களோ? (தீண்டார். அதைப்போல) விஷய இச்சைய அடையார்கள்.* **(6.1.91)**

போகினு(ம்)நிற் கினும்கனவு நன(வு)உற் றாலும்
பொருந்துநோக்(கு) இதுஆனோர் பூணார் பந்தம்
சோக(ம்)உறார் பே(று)எல்லாம் பெற்ற(து) ஆகும்
சொன்னவித அக்கமல நின்று தோன்றும்
ஏகுபிரா ணன்புறத்தே விரல்ஈ(று) ஆறின்
எல்லையிலே இறந்திடுமால் அபானன் தானும்
ஆகுபுறத் தேவிரல்ஓர் பன்னி ரண்டின்
அளவி(ல்)உதித்(து) உளக்கமலத்(து) அடங்கி மாயும்.

**பொழிப்புரை:** *சென்றாலும், நின்றாலும், கனவை அடைந்தாலும், நனவை அடைந்தாலும், பொருந்துகின்ற இந்தப் பார்வை உடையவர்கள் பந்தம் அடையார், துன்பம் அடையார். அடையத்தக்க பலன்கள் அனைத்தும் அடைந்தது ஆகும். முன் சொல்லிய இதயக் கமலத்திலிருந்து தோன்றும் செல்கின்ற பிராண வாயு வெளியில் பன்னிரண்டு அங்குலப் பிரமாணத்தில் இறந்துவிடும். அபான வாயுவும் ஆகின்ற வெளியில் பன்னிரண்டு அங்குலப் பிரமாணத்தில் உண்டாகி இதய கமலத்தில் அடங்கி இறக்கும்.* **(6.1.92)**

**விராவிவரும் புறநின்றும் அபானன் என்னும்**
**வியன்மதியம் மேனிஎல்லாம் குளிர விக்கும்**
**பிராண(ன்)என்னும் சூரியன்தான் கனலாய் உள்ளே**
**பேசியஇவ் வுடல்பாகம் பிறக்கப் பண்ணும்**
**இரா(து)உழலும் அபான(ன்)எனும் மதியின் உட்சேர்**
**இயல்கலைகள் பிராண(ன்)எனும் இரவி யாலே**
**உராவிவிழுங் கப்பட்ட(து) எங்கே அந்த**
**உயர்பத(ம்)உற் றால்பின்னை ஒருநோய் உண்டோ.**

**பொழிப்புரை:** *கலந்து வருகின்ற வெளியிலிருந்தும் அபானன் என்கிற பெருமை பொருந்திய சந்திரன் தேகம் எங்கும் குளிரச் செய்விக்கும். பிராணன் என்கிற சூரியன்; சூடாக சொல்லப்பட்ட இந்த தேகப் பக்குவம் ஆக்கிநிற்கும். நிற்காமல் சுழலுகின்ற அபானன் என்கிற சந்திரனிடத்தில் சேர்கின்ற இயல்பாகிய கலைகள் பிராணன் என்கிற சூரியனால் வலிமையாகி விழுங்கப்பட்டது எவ்விடத்திலோ அந்த மேலான பதத்தை அடைந்தால் பின்பு ஒரு துன்பமும் உண்டாகாது.* **(6.1.93)**

**அவ்வகையே பிராண(ன்)எனும் இரவி உட்சேர்**
**அணிகலைகள் அபான(ன்)எனும் இந்து வாலே**
**வவ்விவிழுங் கப்பட்ட(து) எங்கே அந்த**
**வன்பத(ம்)உற் றால்பின்னை வருமோ சென்மம்**
**கவ்வுபிரா ணனைவிழுங்க அபானன் நோக்கக்**
**கலந்தஅபா னனைவிழுங்கப் பிராணன் நோக்க**
**இவ்விரண்டின் நடுவாக நிற்போர் என்றும்**
**எழுபிறவி இடர்பின்னை எய்தார் அன்றே.**

**பொழிப்புரை:** *அந்த வகையே பிராணன் என்கிற சூரியனிடத்தில் சேர்ந்திருக்கின்ற அழகிய கலைகள் அபானன் என்கிற சந்திரனால் வாரி விழுங்கப்பட்டது எவ்விடத்திலோ அந்த வலிய பதத்தை அடைந்தால் பிறவியானது பின்பு உண்டாகுமோ? அபான வாயுவானது பொருந்திய பிராண வாயுவை விழுங்க நோக்க, பிராண வாயுவானது கலந்திருந்த அபானவாயுவை விழுங்கப் பார்க்க, இவ்விரண்டின் மத்தியில் நிற்பவர்கள் எப்பொழுதும் எழுபிறவித் துன்பத்தைப் பின்பு அடையார்கள்.* **(6.1.94)**

ஆடுகின்ற பிராணலயத்(து) அருகு மேவி
அபானலயத்(து) அரு(கு)உற்றுப் பிரா(ண)அ பான
ஊடுபயில் சிற்பரத்தை ஏத்து கின்றேன்
உற்றஅபா னன்தோற்றம் ஒழிந்து நிற்க
நீடுபிரா ணனு(ம்)இறக்க மூக்கின் உச்சி
நேர்விசும்பில் சிற்பரத்தை நீக்கம் இல்லேன்
நாடுமலம் ஒன்று(ம்)அறக் கலைகள் சூழ
நாகர்தொழும் பதம்பெற்றேன் நல்ல நோக்கால்.

**பொழிப்புரை:** *அசைகின்ற பிராணலயத்தின் அருகில் பொருந்தி, அபானவாயுவின் லயத்தின் அருகில் அடைந்து, பிராண அபானன் மத்தியில் கூடிய சிதாத்மாவைத் துதிக்கின்றேன். பொருந்திய அபான வாயுவின் பிறப்பும் ஒழிந்து நிற்க, நீண்ட பிராண வாயுவும் இறந்து நிற்க, மூக்கின் உச்சிக்கு நேராகிய ஆகாயத்தில் சிதாத்மாவை நீக்கமில்லாமல் சிந்திக்கின்றேன். நாடுகின்ற ஒரு களங்கமும் இல்லாமல் கலைகள் சூழ்ந்திருக்கின்ற நல்ல திருட்டியினால் தேவர்கள் வணங்குகின்ற பரமபதத்தை அடைந்தேன்.* **(6.1.95)**

எனதுமனம் பிராணசமா தியினால் சொன்ன
இவ்வொழுங்கால் நின்மலதத் துவத்தே என்றும்
தனிஇடர்தீர் நெறிஇதுவாம் இந்த நோக்கம்
தனைப்பற்றிச் சென்றதுமேல் வருவ(து) எண்ணேன்
நனிநிகழ்கா லத்(து)இயல்பின் நண்ணு கின்றேன்
நான்இதுபெற் றேன்பெறுவ(து) இதுஎன்(று) எண்ணேன்
முனிவரனே அதனாலே நோய்ஒன்(று) இன்றி
முடிவுறுநீ(டு) உயிர்பெற்றேன் மோகம் அற்றேன்.

**பொழிப்புரை:** *என்னுடைய மனமானது பிராண சமாதியினால் கூறிய இந்த மார்க்கத்தில் நின்மலமாகிய பரதத்துவத்தில் எப்போதும் ஒப்பற்ற துன்பம் தீர்ந்து அடைகின்ற வழி இதுவாகும். இந்த திருட்டியைப் பிடித்துக் கொண்டு இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் நினைக்கமாட்டேன். மிகவும் நிகழ்காலத்தின் தன்மையைப் பொருந்தி நிற்கின்றேன். யான் இதை அடைந்தேன். அடைய வேண்டியது இது என்று எண்ணேன். வசிட்ட முனியே! அதனால் துன்பம் ஒன்றுமில்லாமல் முடிவில்லாத வாழ்நாளை அடைந்தேன், மயக்கம் நீங்கினேன்.* **(6.1.96)**

சுகம்உற்றோர் பால்இருக்கின் சுகமே சேர்வன்
துயர்உற்றோர் பால்இருக்கின் துயரே சேர்வன்
சகம்உற்று நட்பாவேன் ஆத லாலே
தவ(று)உறுநோய் அற்(று)ஆவி தழைத்து வாழ்ந்தேன்
உகவுற்ற ஆபத்தில் அசையேன் சற்றும்
உயர்சம்பத் தில்சகத்தோர்க்(கு) உறுநட்(பு) ஆவேன்
அகம்அற்ற அதனாலே நோய்ஒன்(று) இல்லா
ஆருயிர் பெற்றிருக்கின்றேன் ஐய என்றான்.

**பொழிப்புரை:** *இன்பம் அடைந்தவர்களிடத்தில் இருந்தால் இன்பத்தையே அடைவேன். துன்பம் அடைந்தவர்களிடத்தில் இருந்தால் துன்பத்தையே அடைவேன். உலக முழுமையும் உறவாய் இருப்பேன் ஆதலினால் தவறுள்ள துன்பம் கெட்டு, உயிர் வளர்ந்து சுகம் அடைந்தேன். மிகவும் உண்டான ஆபத்திலும் சலியேன். சற்றும் மேலான சம்பத்திலும் சலியேன். உலகத்தில் உள்ளவர்களுக்குப் பொருந்திய நண்பன் ஆவேன். அகங்காரம் இல்லாதவனால் முனியரசே! துன்பம் ஒன்றுமில்லாத வாழ்நாளைப் பெற்று வாழ்கின்றேன் என்று புசுண்ட யோகி சொன்னான்.* **(6.1.97)**

**உன்னருளால் இவ்வாறு முடி(வு)இல் வாழ்நாள்**
**உற்றேன்மெய்ஞ் ஞானமும்நன்(கு) உற்றேன் என்ற**
**அன்புசுண்ட னைப்பகவ னேநீ சொன்ன**
**ஆத்துமதத் துவத்தன்மை அழ(கு)இ(து) அம்மா**
**இன்ன(து)அறப் புதிதுசெவிக்(கு) அணியாம் கேட்டால்**
**யார்வியவார் நன்னலமே பெறுதி என்று**
**மன்னுகதிர் உச்சியுறும் காலம் ஈதால்**
**வானுலகம் புகுவன்நீ வாழ்தி என்றே.**

**பொழிப்புரை:** *தங்களுடைய அருளால் இவ்வாறு முடிவு இல்லாத வாழ்நாளை அடைந்து இருக்கின்றேன். தத்துவ ஞானத்தையும் நன்றாக அடைந்தேன் எனக்கூறிய அந்தப் பெரிய புசுண்ட முனிவரை நோக்கி, பகவானே! தாங்கள் கூறிய ஆத்ம தத்துவத் தன்மை மிகவும் அழகாய் இருக்கின்றது, ஆச்சரியம். இது முழுவதும் புதியது, காதுக்கு அலங்காரமாம், கேட்டால் யார் தாம் புகழ்ந்து கொண்டாட மாட்டார்? நல்ல நலமே பெறுக என்று ஆகாயத்தில் சூரியன் உச்சியை அடையும் காலம் இது சுவர்க்க லோகம் செல்கின்றேன், சுகமாக வாழ்வீராக.* **(6.1.98)**

**விட்(டு)அவ(ண்)நின்(று) எழுந்துநான் விண்மேல் போக**
**விடாம(ல்)ஒரு யோசனைவிண் மீது வந்தான்**
**மட்டறிஞ நிற்றியெனத் தடுத்தேன் வன்பால்**
**வாலறிஞர் தமைப்பிரிதல் வருத்தம் அன்றோ**
**சிட்டனைவிட்(டு) அகன்றனன்முன் உகத்தே மீண்டும்**
**தெரிசித்தேன் இரண்டாம்பின் செறியு கத்தில்**
**கட்டவிழ்தா ரணிமார்பா பிறந்தாய் நீஇக்**
**கதைபுசுண்ட வழியெனநீ கருதிக் கொள்வாய்.**

**பொழிப்புரை:** *அவ்விடமிருந்து அவரை விட்டுக் கிளம்பி நான் ஆகாயத்தில் செல்ல, என்னை விட்டு நீங்காமல் ஒரு யோசனை தூரம் ஆகாயத்தின் மீது கூடவே வந்தார். போதும் அனைத்தும் அறிந்த சிகாமணியே! நில்லுங்கள் என்று தடுத்தேன். வலிதில் பேரறிஞர்களைப் பிரிந்து நிற்றல் வருத்தம் அல்லவா! அம்முனிவரை விடுத்து வந்தனன் முன் யுகத்தே. மறுபடியும் தரிசனம் செய்தேன் இரண்டாவது பின்பு வந்த யுகத்தில். வெற்றிமாலையைச் சூடும் மார்பனே! இக்கதைமயில் உள்ள புசுண்ட மார்க்கத்தில் அவதரித்தாய் என்று கருதிக் கொள்வாய்.* **(6.1.99)**

**(நிருவாணப் பிரகரணத்தில் புசுண்டன் கதை முற்றும்)**

# (ii) தேவ பூசை கதை

*முன்பு பிராண வாயுவை அனுசரித்தலால் வரும் சித்த அமைதியால் நிர்வாணம் கூறப்பட்டது. இப்போது அது போலவே இந்தக் கதையாலும் சித்த அமைதி லட்சணமான நிர்வாணம் உண்டாம் எனக் கூறப்படுகின்றது. அதில் தேகாபிமானம் சகல நிர்வாண உபாயத்திற்குத் தடை ஆவதால் அதன் நிவர்த்திக்காக கொஞ்சம் இதம் உபதேசிக்கப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**தோற்றரவு மாத்திரமே ஈ(து)இப்போ(து) இப்படியே தோற்று கின்ற(து)**
**ஊற்ற(ம்)உற இவன்நா(ன்)என்(று) உடலினைஉள் ளுறநினைதல் உற்ற பொய்யே**
**ஏற்றநரம்(பு) எலும்பினால் இயன்றஉட லினைநா(ன்)என்(று) எண்ணும் மோகம்**
**மாற்றுதியால் சங்கற்பத் தால்இயன்ற வடிவுக்(கு)ஓர் மட்(டு)உண் டாமோ.**

**பொழிப்புரை:** *தோற்றம் மாத்திரமே இது இப்போது இப்படியே தோன்றுகின்றது. மிகவும் அழுத்தமாக இவன் நான் என்று உடலினை உள்ளே நினைத்தல் முழுதும் மித்தையே. கருமங்களின் தொடர்பினால் ஆன நரம்பு எலும்புகள் கோர்த்துக் கட்டப்பட்ட உடலினை நான் என்று எண்ணுகின்ற மோகத்தை அகற்றுவாய். நினைவு (சங்கற்ப) மாத்திரத்தால் உண்டாய வடிவங்களுக்கு ஓர் அளவு தான் உள்ளதாக ஆமோ?* **(6.2.1)**

**கன(வு)உடலாய்த் திசைகளில்போய்ச் சுகஅணையில் கண்துயின்றும் கலக்கம் உற்றாய்**
**உன(து)எனு(ம்)அவ் வுடல்எங்கே இருக்கின்ற(து) இராமனே உணர்ந்து நோக்காய்**
**நனவில்மனோ ராச்சியத்தில் எவ்வுடலால் மேருவினும் நாகர் நாட்டும்**
**தினமுமருண்(டு) உழலுதிநீ உன(து)எனு(ம்)அவ் வுடல்எங்கே சேர்ந்த தோதான்.**

**பொழிப்புரை:** *கனவு தேகமாய் திசைகளில் சென்றும், சுகமான படுக்கையில் உறங்கிக் கொண்டிருந்த போதிலும் கலக்கம் அடைந்தாய். உனதான அந்த தேகம் எங்கே இருக்கின்றது? இராகவனே! நன்கு ஆராய்ந்து காண்பாய். நனவில் மனோ ராச்சியம் செய்யும் போது மேரு மலையிலும், சுவர்க்க லோகத்திலும் நாள்தோறும் மயக்கம் அடைந்து நீ உழலுகின்றாய். உன்னுடைய அந்த தேகம் எங்கே சேர்ந்தது?* **(6.2.2)**

**நீண்டகனா நீண்டமன இராச்சியம்தான் நீண்டமன மயக்கம் என்றே**
**ஈண்டுபவம் தனைநினைவாய் தோற்(று)அரவு மாத்திரமாம் இந்த ஞாலம்**
**காண்டகஉண்(டு) அன்றிலதும் அன்(று)என்றே வேற்(று)எண்ணம் களைதல் தானே**
**ஆண்டகையே நன்றான காட்சியென மெய்ஞ்ஞானர் அறைவர் அன்றே.**

**பொழிப்புரை:** *நீண்ட கனவு, நீண்ட மனோராச்சியம் இவைகள் தான் நீண்ட மன மயக்கம் என்பதாக இங்கே சம்சாரமாகிய பிறவியைக் கருதுவாய். இந்த பிரபஞ்சம் தோற்றம் மாத்திரமே. காணத் தகுந்ததாக சத்தும் அல்ல, அசத்தும் அல்ல என்பதாக*

*அன்னிய (வேறான) விவகாரங்களைக் களைவது (அற்றுப் போதல்) தான் (அதாவது சங்கற்பத் தியாகமே) நன்றான காட்சி என்று உண்மையை உணர்ந்தவர்கள் கூறுவர்.*
**(6.2.3)**

**தீரநாம் எப்படியும் செகக்கடவம் எனல்அறுதி தேக நாசம்**
**சாருநாள் வீணிலே பரிதவிக்கும் ஆ(று)என்னோ சகத்தில் உள்ளோர்**
**வீரனே எப்படியும் செனித்தோர்க்குச் சிறிதுசுகம் மேவ அற்றோ**
**சேருமோர் பொருள்களிலே செருக்குகின்ற செருக்(கு)என்னோ செப்பு வாயே.**

**பொழிப்புரை:** *அவசியம் நாம் எப்படியாகிலும் செத்துப் போவோம் என்பது உறுதி. இந்த தேகம் நாசம் அடையும் அந்த நாளில் வீணாகப் பரிதவிக்கும் வகை என்னவோ? உலகத்தில் உள்ளவர்கள் வீரனே! எப்படியும் பிறந்தவர்க்கு சிறிது சுகம் அடையத் தகுந்ததே ஆகும். கிடைக்கப் பெற்ற பொருள்களில் மகிழ்கின்ற செருக்கு அடைவது என்னோ! (மகிழ்வதிலோ செருக்கு அடைவதிலோ என்ன உளது என்பது பொருள்)*
**(6.2.4)**

**துன்னுபொருள் களில்வேறு கூ(று)ஒழித்துத் தோற்றரவு மாத்தி ரத்தே**
**மன்னுசம மாய்உலகைக் காண்டியால் தோற்(று)அரவு மாத்தி ரம்தான்**
**உன்னுமனக் கண்ணாடிக்(கு) அழுக்காகும் ஆதலினால் உற்ற(து) எல்லாம்**
**பின்னம்(ம்)அற வேமாற்றித் தோற்(று)அர(வு) இல்லாதவனாப் பெருமை யோனே.**

**பொழிப்புரை:** *பொருள்களே இருக்கின்ற பிரபஞ்சத்தில் பேத புத்தியை ஒழித்து, தோற்றம் மாத்திரமாகவே கருதி, சகலத்திலும் சமமாக நிறைந்திருக்கும் சித்தினைக் காண்பாய். தோற்றம் மாத்திரமே உன்னுடைய மனமாகிய கண்ணாடி அழுக்காக ஆவதற்கு காரணம். ஆதலால் வந்து அமைந்த எல்லாவற்றிலும் பேதத்தை விடுத்து, பெருமை மிகுந்தவனே! தோற்றம் இல்லாதவனாய் அதாவது நிருவிகற்பனாய் ஆவாய்.*
**(6.2.5)**

**எவனுடைய மனப்புற்றில் இராகமுனி(வு) எனும்பணிகள் இயக்கம் இல்லை**
**அவ(ன்)எனும்கற் பகதருவால் அணுகாத(து) ஒன்(று)உண்டோ அறிவின் மிக்கோய்**
**கவன(ம்)அற அறிவினால் மதத்தோராய்ப் பலகலைநூல் கல்வி மிக்குத்**
**தவ(ம்)அறுகா மம்வெகுளி நிறைந்தோரேவேசரிபோல் தள்ளத் தக்கோர்.**

**பொழிப்புரை:** *யாருடைய மனமாகிய புற்றில் விருப்பு வெறுப்புகள் என்னும் பாம்புகள் வசிப்பதில்லையோ அந்த மகான் என்ற கற்பக மரத்தினால் அடையப் பெறாதது ஒன்று உண்டோ? அறிவில் சிறந்தவனே! காரியங்களில் கவனம் இல்லாது அறிவினால் கர்வம் உடையவராய்ப் பல சாத்திரங்களும் கலைகளும் கற்று கல்வியில் மிகுந்து, தவத்தைக் கெடுக்கும் காமம், கோபம் மிகுந்திருப்பவர் கழுதை போலத் தள்ளத் தக்கவர் ஆவர்.*
**(6.2.6)**

**இப்பிறவி மயக்க(ம்)எனும் ஆழித்தேர் சங்கற்பம் என்னும் அச்சைச்**
**செப்ப(ம்)உறத் தடைசெய்தால் ஓடாது மனஅச்சு சிறி(து)அ சைந்தால்**
**துப்(பு)அறஆர் தடுத்தாலும் தடைபடா(து) அறிவுவலி சூக்கு ஊக**
**மெய்ப்புருட வருத்தங்கள் தமைக்கொண்டே தடைசெய்ய வேண்டும் அன்றே.**

**பொழிப்புரை:** *இந்தப் பிராந்தி வடிவமான சம்சாரமாகிய சுழல்கின்ற சக்கரத்தின் சங்கற்பம் என்கின்ற அச்சினை நன்றாகத் தடைசெய்து விட்டால், அந்த சக்கரம் ஓடாது. மனமாகிய அச்சு சற்று அசைந்தாலும் வலிமையுடன் யார் தடுத்தாலும் அது தடையாக மாட்டாது. அப்பியாசம், வைராக்கியம் முதலான உடல் வருத்தம் என்னும் புருடன் முயற்சியாகிய யுக்திகள் கொண்டே அதைத் தடைசெய்தல் வேண்டும்.* **(6.2.7)**

**நல்லறிவு நற்புருடர் குணநன்னூல் மேவியநல் வருத்தத் தாலே**
**புல்இல்பொருள் ஓரிடத்தும் கிடையாது மனம்என்னும் பொல்லா வன்பேய்**
**அல்லல(ல்)தரும் பயம்செய்யும் தீரதையாம் பெருஞ்செல்வம் அனைத்தும் மாய்க்கும்**
**கொல்லு(ம்)இது தனைநீக்கி யேதானாய் அ'தாகிக் குறைவு தீர்வாய்.**

**பொழிப்புரை:** *நல்ல உணர்வு, சத் புருடர் தொடர்பு, நல்ல குணம், நல்ல சாத்திரங்கள் முதலானவை பொருந்திட, நல்லதோர் மனித முயற்சியினால் அடையமுடியாத பொருள் எங்கும் கிடையாது. மனம் என்னும் பொல்லாத பேயானது துன்பத்தைத் தரும், பயத்தைத் தரும், தைரியமாகிய அனைத்து செல்வங்களையும் அழிக்கும், நாசம் செய்யும் இந்த மனப் பேயை விடுத்து, எந்தப் பொருளாய் எஞ்சி நிற்குமோ அதுவாக ஆகி செய்து முடித்தவன் ஆவாய். (மனோ விகாரம் நீங்கி விடின் சொரூபமே எஞ்சி நிற்கும் என்பது பொருள்)* **(6.2.8)**

**மனவன்பேய் உறப்பிடித்தால் சாத்திரத்தால் சுற்றத்தால் மாற்ற வொண்ணா**
**வினவுறுதே சிகராலும் மீட்(டு)அரிதாம் அந்தப்பேய் விட்டு நீங்கிச்**
**சினம்(ம்)இன்றி இருக்கு(ம்)எனின் முன்உரைத்த வகைகளால் தீர்க்க லாகும்**
**கனபங்கம் இலதாகில் சிறுகுழியில் விலங்குதனைக் கரைஉய்ப் பார்போல்.**

**பொழிப்புரை:** *மனமாகிய பேய் பலமாகப் பிடித்துக் கொண்டால், சாத்திரங்களாலும், உறவினர்களாலும் மாற்ற முடியாது. உபதேசிக்கும் ஆசாரியர்களாலும் மீட்கக் கடினமாகும். அந்த பேய் நீங்கி, சினம் இன்றி (சாந்தமாக) இருக்குமாயின் முன்பு கூறிய வழிமுறைகளால் அகற்ற முடியும். அதிக சேறு இல்லையெனில் சிறு குட்டையிலிருந்தும் விலங்குகளைக் கரையில் ஏற்றி விடுவது போல்.* **(6.2.9)**

**போகமொடு புசிப்பனதாம் புறத்(து)ஒழிய ஆரியன்தாள் பூண்டு வேண்டி**
**ஊகமுற நினைத்தொன்றாம் பெரும்பொருளாம் தன்னுருவை உணர வேண்டும்**
**ஆகலினால் இப்பரம தரிசனத்தை மாமோகம் அறுப்ப(து) ஒன்றைச்**
**சேகரசந் திரமவுலி எனக்(கு)உரைத்தான் உனக்(கு)உரைப்பத் தெளிந்து கேட்பாய்.**

**பொழிப்புரை:** *போகமும், போகத்தைத் தரும் பொருள்களையும் வெளிப்புறத்தே தள்ளி விட்டு, ஆசாரியன் பாதம் வணங்கித் தொண்டு செய்து, பிரார்த்தனை செய்து, யுக்தியோடும் ஆராய்ந்து ஏகமாகிய தனது வடிவத்தை உணர்தல் வேண்டும். ஆகையால் இந்த மேலான பரம்பொருளின் காட்சியை மகா மோகத்தைக் கெடுக்கின்ற ஒன்றைச் சந்திரனைத் தலையில் சூடிய பரமேசுவரன் எனக்கு உரைத்தார். அதனை உனக்கு உரைக்க, ஒருமையுடன் கேட்பாய்.* **(6.2.10)**

**உயர்கயிலைப் பெருங்கிரியில் உருத்திரனை அருச்சனைசெய்(து) ஒருகால் கங்கை**
**அயலுறுசா லையில்நோற்றுச் சித்தர்கணத் தொடும்பன்னூல் அருத்தம் நோக்கிப்**
**பயனுறநீள் நாள்கழித்தேன் பின்(பு)ஒருகால் ஆவணிமுன் பக்கம் தன்னில்**
**இயலுறும்அட் டமிதினத்தில் இராப்போதின் முற்பாதி இறந்த காலை.**

**பொழிப்புரை:** *உயர்ந்த கைலாசம் என்னும் பெரிய மலையில் மகாதேவரைப் பூசை செய்து கொண்டு, ஒரு சமயம் கங்கையின் கரையில் தவச் சாலையில் தவம் புரிந்து, அங்கு வந்துற்ற சித்தர் கூட்டங்களுடன் பல சாத்திரங்களின் அர்த்தங்களை ஆராய்ந்து, வாழ்நாள் பயன்பெறும் படியாக நீண்ட காலம் கழித்தேன். பின்பு ஒரு சமயம் ஆவணி மாத முற்பகுதியில் இயல்பாக வந்து அமைந்த அட்டமி திதியில் இரவுப் பொழுதின் முதல்பகுதி கடந்த போது,* **(6.2.11)**

**சிறிதாகி சமாதிதவிர் புறநோக்கில் யான்இருப்பத் திசைகள் எல்லாம்**
**வறிதாகிக் காட்சமா தியின்மவுனம் இருப்பனபோல் வழக்கம் இன்றி**
**எறிவாளால் வெட்டுதற்காம் இருள்மூடி முழைவனங்கள் எங்கும் துன்றி**
**வெறிதான அப்பொழுதில் விரைவி(ல்)எழுந்(து) ஓர்ஒளிமுன் விளங்கக் கண்டேன்.**

**பொழிப்புரை:** *சற்றே சமாதி அவத்தையைத் தவிர்த்து வெளிநோக்கில் இருக்க, திசைகள் எல்லாம் சிறிதாக ஆழ்ந்த சமாதியில் மௌனமாக இருப்பது போல் வழக்கமாக இல்லாமல் எறிகின்ற வாளினால் துண்டிக்கின்றவாறு இருள் மூடி, கொடி வீடுகள், சோலைகள், கானகங்கள் எவ்விடத்திலும் நெருங்கி வெறுமையாக இருந்த அந்தப் பொழுதில் விரைவாக ஒப்பற்ற ஒளி எழுந்து முன்பாக விளங்குவதைக் கண்டேன்.* **(6.2.12)**

**வெண்ணிறத்த முகில்கோடி வெண்திங்கள் கோடிஎன விளங்கு தேசைக்**
**கண்ணகத்தில் நோக்கலுமே நந்திமுதல் வரஉமையாள் கைமேல் கைவைத்(து)**
**எண்ணறச்சங் கரன்வரலும் மாணாக்க ருடன்விரைவில் எழுந்து பூசை**
**பண்ணுதற்கா னவைகொடுபோய்ப் பன்மலர்த்தூய்த் தூரத்தில் பணிந்து போற்றி.**

**பொழிப்புரை:** *கோடிக்கணக்கான வெண்ணிற மேகங்கள் போன்றும், கோடிக்கணக்கான வெண்ணிற சந்திரன்கள் போன்றும் எங்கும் விளங்கும் பேரொளியை விழிகளினால் கண்ட உடனேயே, நந்தி தேவர் முந்தி வர, பார்வதி தேவியாரின் திருக்கரத்தின் மேல் திருக்கரம் வைத்து, எண்ணத்திற்கு எட்டாத மகாதேவர் எழுந்தருளவும், அதி சீக்கிரமாக சீடர்களுடன் சென்று, பூசைக்கான பூக்கள் முதலானவற்றைக் கொண்டு போய், பலவிதமான மலர்களைத் தூவி தூரத்தில் இருந்து பணிந்து எழுந்து, போற்றிடவும்,* **(6.2.13)**

**திங்களினும் மிகக்குளிர்ந்து செவ்விதாய் நோய்எல்லாம் தீர்க்கப் பட்ட**
**அங்கணுற அருள்நோக்கம் செய்தானை வணக்கத்தால் அருக்கி யத்தால்**
**துங்கஉப சாரத்தால் மந்தார நன்மலரின் சோனை தன்னால்**
**சங்கரனை ஏத்தினேன் உமையையு(ம்)அப் படிஏத்தித் தாளில் வீழ்ந்தேன்.**

**பொழிப்புரை:** *சந்திரனைக் காட்டிலும் அதிகமாகக் குளிர்ந்து, சிறந்ததாய், நோய்கள் எல்லாம் தீர்க்கப்பட்ட அழகிய திருக்கண் கருணை காட்டிய மகாதேவரைப் பலவாறு*

*வணங்கி, தீர்த்தம் முதலியவற்றாலும், பரிசுத்த உபசாரத்தாலும், மந்தார மலர்களின் மழைபோன்றும் சிவபெருமானைப் பூசித்தேன். உமா தேவியையும் அப்படியே திருவடிகளில் வீழ்ந்து வணங்கினேன்.* **(6.2.14)**

**ஈச(ன்)இயல் கணங்களையும் உமைசேடித் திரள்களையும் இன்ப மாக**
**நேசமுடன் ஏத்தியபின் நிறைமதியைக் குளிர்விக்கும் நீர்மை வாக்கால்**
**தேசுடையோன் எனைநோக்கி உரைசெய்தான் சாந்தியினால் தீர வாறி**
**ஆ(சு)அறநல் லனதருநின் அறிவுகள்தற் பதத்தி(ல்)நிலை யான அன்றோ.**

**பொழிப்புரை:** *மகாதேவரின் அடியவர்களையும், உமா தேவியாரின் பக்கத்து இருக்கும் பாவைமார்களையும் மகிழ்வுடன் அன்பாக வணங்கிய பின், சந்திரனைக் காட்டிலும் குளிர்ச்சி பொருந்திய வாக்கினால் ஒளிநிறைந்த மகாதேவன் என்னைப் பார்த்து திருவாய் மலர்ந்து அருளினான். சாந்தத்தினால் சித்த அமைதி பெற்று, குற்றமில்லாத மங்களத்தைத் தரும் உன்னுடைய உணர்வுகள் தத் பதத்தில் நிலைபெற்றனவோ?* **(6.2.15)**

**தடையின்றித் தவ(ம்)உனக்கு நடந்ததோ சார்வனதாம் சார்ந்த அன்றோ**
**விடயங்கள் இறந்தனவோ என்(று)உலகின் காரணமாம் விமலன் கூற**
**விடையவனை யான்வணங்கி வேண்டுகோ ளால்உரைத்தேன் விண்ணோர் கோவே**
**அடைவுறநின் அருள்பெற்றார்க்(கு) அடை(வு)அரி(து)ஒன்(று) இலைபயங்கள் அருகும் வாரா.**

**பொழிப்புரை:** *தடையில்லாமல் உனது தவம் வளர்ந்து வந்ததா? அடையத் தக்கவை அனைத்தும் அடைந்ததாக ஆயிற்றோ? விஷய ஆசைகள் போயினவோ? (காண்பவைகள் மறக்கப் பெற்றனவோ?) என்று உலகத்திற்குக் காரணமான நின்மல இறைவன் கேட்கவும், ஈசனை வணங்கிப் பிரார்த்தனையோடும் கூறினேன். தேவர்களுக்கு எல்லாம் மகாதேவரே! பரிபூரணமாக நின்னருள் பெற்றவர்க்கு அடைவதற்கு அரிதானது ஒன்றும் இல்லை. பயம் அருகாமையிலும் வந்து அணுகாது.* **(6.2.16)**

**சகத்தி(ல்)உனைத் தாழ்ந்தோரைத் தாழாதார் இலைஉனைச் சரணம் தாழ்ந்த**
**மகத்துவர்வாழ்ந் தனர்எங்கே அதுதேசம் அதுநாடு மலைய(து) ஆகும்**
**தொகுத்துளமுன் னையில்அறத்துக்(கு) உறுபலமாம் இக்காலம் தொடர்அ றத்துக்(கு)**
**உகுத்தமழை யாம்பின்சேர் அறத்துக்கு வித்தாகும் உன்னை நாடல்.**

**பொழிப்புரை:** *உலகத்தில் உன்னைப் பூசித்தவரைப் பணியாதவர் எவரும் இல்லை. உமது பாதம் பணிந்து சரணம் அடைந்து தவம் புரிந்தவர் வாழ்கின்ற இடமே தேசமாகும், அதுவே நாடாகும், அதுவே மலையாகும். உம்மை நாடிப் பணிதலே சம்பாதித்து உள்ள முந்தைய தர்மத்தின் பயனாம், நிகழ்காலத்தில் வளரும் தர்மத்திற்கு மழையாம், எதிர்கால தர்மத்திற்கு விதையாகும்.* **(6.2.17)**

**ஞானஅமு தத்துக்(கு)ஓர் நிறைகுடமாம் தீரதையாம் நல்நி லாவுக்(கு)**
**ஊன(ம்)இலா மதியாம்மெய் வீட்டுக்கு வழியாகும் உன்னை நாடல்**
**ஆனஉனை நாட(ல்)எனும் அணிதிகழ்சிந் தாமணியை அடைவுற் றேயான்**
**தீன(ம்)உறு மனைத்தாபத் தின்தலையை மிதிக்கின்றேன் தேவர் தேவே.**

**பொழிப்புரை:** *உம்மைப் பூசித்தலானது, ஞான அமிர்தம் நிறைந்த ஒப்பற்ற ஒரு கலசமாம், தைரியமாகிய வெண்ணிலவுக்குக் குறைவில்லாத பூரண சந்திரனாம், மோட்சத்திற்கு வழியாகும். இத்தகைய தேவரீரின் தியானம் என்கின்ற அழகிய சிந்தாமணியை அடையப் பெற்ற யான், தேவர்களுக்கு எல்லாம் மகாதேவரே! ஈனம்(இழிவைத்)தரும் எல்லா ஆபத்துகளின் தலையை மிதிக்கின்றேன்,* **(6.2.18)**

**என்றுதுதித்(து) எழில்கருணை முகமலர்ந்த முதல்மூலத்(து) இறைவன் தன்னை**
**மென்துணைத்தாள் மீட்(டு)இறைஞ்சிக் கேட்ட(து)ஒரு பொருள்உரைக்க விளங்கக் கேளாய்**
**குன்றி(ல்)உறை அருட்கடலே நின்னருளால் அறிவெல்லாம் குறை(வு)அற் றேனுக்(கு)**
**ஒன்(று)உளது சந்தேகம் அதன்அறுதி அருள்வாய்என்(று) உரைக்க லுற்றேன்.**

**பொழிப்புரை:** *என்று துதித்து, கருணையால் அழகிய முகம் மலர்ந்த உலகத்துக்குக் காரணமான மகாதேவனை மறுபடியும் மென்மையான இருபதங்களைப் போற்றிக் கேட்டதாகிய ஒரு பொருளை விளங்கும் வண்ணம் உரைக்கக் கேட்பீர். கைலாச மலையில் வீற்றிருக்கும் அருட்கடலே! நின்னருளால் அறிவெல்லாம் குறைவின்றிப் பெற்ற அடியேனுக்குச் சந்தேகம் ஒன்று உள்ளது, அதன் நிச்சயத்தை அருள் செய்ய வேண்டும் என்று கூறத் தொடங்கினேன்.* **(6.2.19)**

**தீவினைஎல் லாம்அறுத்து மங்கலம்எல் லாம்உதவும் தேவ பூசை**
**ஆவ(து)எனக் கேட்டலுமே அருள்செய்வான் தெய்வம்தான் யா(து)என்(று) ஓதில்**
**கேவலமே அரிஅல்ல அரன்அல்ல பூதஉடல் கிடைத்த(து) அல்ல**
**ஓவுமனம் அன்(று)அடியும் முடிவு(ம்)இலாச் செயப்படா உணர்வே தெய்வம்.**

**பொழிப்புரை:** *தீய வினைகள் எல்லாம் அகற்றி, மங்களம் அனைத்தும் தரும் தேவ பூசை எத்தகையது எனக் கேட்டலும், திருவருள் செய்து அருள்வான். தெய்வம் தான் யாது என்று கேட்கில், கேவலம் விஷ்ணுவும் அல்ல, ருத்திரனும் அல்ல, நான்முகனும் அல்ல, தேகமும் அல்ல, சதா அசைந்து கொண்டிருக்கும் மனமும் அல்ல. ஆரம்பம் முடிவு இல்லாத சின்மாத்திரமே தெய்வம் ஆகும்.* **(6.2.20)**

**தேகமுதல் பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்களில்அத் தெய்வம் உண்டோ**
**பாக(ம்)அறப் பணதியற அடிமுடி(வு)அற்(று) உளஉணர்வே பரம போதம்**
**ஆகையினால் அதுதெய்வம் அருச்சித்தற்(கு) உரித்தாகும் அறிவி லாத**
**மூகர்க்கு வடிவமுதல் அருச்சனையே இயல்(பு)என்று மொழியும் அன்றே.**

**பொழிப்புரை:** *தேகம் முதலிய எல்லைக்கு உட்பட்ட வடிவுடைய பிரிவுகளாய் சிறியனவாம் பொருள்களில் அந்த தெய்வம் உண்டோ? பிரிவுகள் அற்று, செய்கை அற்று, ஆரம்பம் முடிவு இல்லாமல் இருக்கப்பட்ட சைதன்யமே மேலான சின்மாத்திரம். ஆகையால் அந்த தெய்வம் பூசிப்பதற்கு உரியதாகும். அறிவில்லாத மந்த புத்தி உடையவர்க்கு வடிவம் உடையதே பூசை செய்வதற்கு இயல்பானது என்று சாத்திரங்கள் கூறும்.* **(6.2.21)**

**செல்வழியோ சனைநடக்க மாட்டாதார் குரோசவழி செல்லு மாபோல்**
**பல்வடிவில் அருச்சிப்பார் அறிவில்லார் அறிவுநிலை படையார் என்று**
**சொல்வர்பரா பரம்அற்ற சிற்ககனம் எவ்விடத்தும் துன்றி நிற்கும்**
**அல்வழியாம் கற்பங்கள் அனைத்தினுமா யாது)அதனால் அதுவே தெய்வம்.**

**பொழிப்புரை:** *நடந்து செல்பவர் யோசனை தூரம் நடக்க முடியாதவர், கூப்பிடும் தூரம் நடந்து செல்வது போல, பல வடிவங்களில் பூசிப்பர். அறிவில்லாதவர் (அஞ்ஞானிகள்) ஞான நிலை அடைந்தவர் அல்லர் என்று சொல்லப்படுவர். மேல் கீழ் இல்லாத சிதாகாசம் எல்லாவிடத்திலும் நிறைந்து விளங்கும். பிரளய காலங்களிலும் அழியாமல் இருப்பதுமாம். அதனால் அந்த அறிவு சொரூபமே தெய்வமாம்.*

**(6.2.22)**

**அறிவுசம பாவனைசந் தோடம்)எனும் மலர்களால் அந்தத் தேவாம்**
**பிறிவரிய ஆத்துமதத் துவத்தைஅருச் சிப்பதே பெரிய பூசை**
**குறிவடிவில் பூசனைபூ சனைஅல்ல அகண்டம்)எனக் கூறும் தெய்வம்**
**நெறிகொள்புறத் தொழில்களால் நேராது)இங்கு) அதனாலே நிறையும் இன்பம்.**

**பொழிப்புரை:** *அறிவு, சம பாவனை, சந்தோஷம் என்னும் மலர்களால் அந்தத் தெய்வமாம் பேதமில்லாத ஆன்ம தத்துவத்தை அர்ச்சனை செய்து ஆராதிப்பதே பெரிய பூசையாம். குறித்த உருவங்களில் பூசை செய்வது பெரிய பூசையாக ஆகமாட்டாது. அகண்டம் என்று சொல்லப்பெற்ற தெய்வமானது, முறையாகவே செய்யப்பெற்ற வெளிப்புறக் காரியங்களினால் பெறமுடியாது. இங்கே ஞான அர்ச்சனையால் நிறையும் பேரின்பம்.*

**(6.2.23)**

**தெள்ளறி(வு)எல் லாக்கலைக்கும் எட்டாது)எல் லாக்கருத்தும் சேர்ந்து)உள் நிற்கும்**
**உள்ளது)இலது) இரண்டி(ன்)நடு சத்தாசா மானியமே உருவாய் நிற்கும்**
**தள்ளரிய பெருஞ்சத்தா மாத்திரமெய் யாம்தெய்வம் தானும் ஈதே**
**எள்ளரிய இதுவிகற்ப வடிவாகில் உண(ர்)உருவை இழந்து வேறாம்.**

**பொழிப்புரை:** *தெளிவுள்ள ஞானமானது எல்லா சாத்திரங்களுக்கும் எட்டாதது. சகல கருத்திலும் அடைந்து உள்ளிருக்கும் சத் அசத் இரண்டின் மத்தியில் சத்தா சாமானிய சொரூபமாக இருக்கும். நீக்குதற்கு அரிய மகா சத்தா மாத்திரமே சொரூபமாகும். தெய்வமும் இதுவே ஆகும். நிந்திக்கத்தகாத இந்த ஞானமானது விகற்ப வடிவமாயின் ஞான வடிவத்தை விட்டு வேறாகும்.* **(6.2.24)**

**சடபாவம் தனைஒழுங்கால் பாவிக்க நினைவுநிலை சாரும் பின்னை**
**இடனோடு காலமுதல் சத்திகளின் மிளிர்ச்சிசூழ்ந்து) எய்தப் பட்டு**
**மடமேவு சீவனாம் புந்தியாம் அகங்கரமாம் மனமாம் இந்த**
**நடமாடும் மனத்தன்மை அடைந்துபிறப்(பு) இறப்(பு)எல்லாம் நயந்து பற்றும்.**

**பொழிப்புரை:** *மூட பாவத்தைச் சித்தானது கிரமமாகப் பாவனை செய்ய சங்கற்ப நிலையை அடையும். பின்னர் இடம், காலம் முதலான சத்திகளின் பிரகாசம் சூழ்ந்து, அடையப்பட்டு அறியாமை பொருந்திய சீவனாகும், புத்தியாகும், அகங்காரமாகும், மனமாகும். இப்படி சஞ்சரிக்கின்ற மனதின் தன்மையைச் சேர்ந்து பிறப்பு இறப்பு அனைத்தையும் இச்சைகொண்டு பிடிக்கும்.* **(6.2.25)**

**அங்கத்தே சேர்ந்தனம்என்(று) எண்ணலால் மாமோகம் அளவற்றில் ஆழும்**
**பொங்குற்ற துன்பத்தால் துன்ப(ம்)உறக் கீழ்க்கீழே போகும் துன்பம்**
**சங்கற்ப மாத்திரத்தில் துன்ப(ம்)உறும் சங்கற்பம் தவிர்ந்த மட்டில்**
**இங்(கு)உற்ற துன்ப(ம்)அறும் சங்கற்ப மேதுன்பம் இலதேல் இன்பம்.**

**பொழிப்புரை:** *தேகத்தைச் சேர்ந்தோம் என்று எண்ணுகின்ற மகாமோகம் என்கின்ற சேற்றில் அழுந்தும். மிகுந்த துன்பத்தினால் துன்பத்தை அடைய கீழாக அதனினும் கீழாக துக்கமானது நீண்டு கொண்டே போகும். சங்கற்பம் உள்ள வரை துயரத்தை அடையும். சங்கற்பம் நீங்கிய அளவில் இங்கு வந்த துன்பம் நீங்கும். சங்கற்பமே துன்பமாகும். அந்த சங்கற்பம் இல்லாமல் இருப்பதே பேரின்பம் (பிரம்மானந்தம்) ஆகும்.* **(6.2.26)**

**தன்னுடைய விவேக(ம்)எனும் பெருங்காற்றால் சங்கற்ப முகிலைத் தள்ளி**
**மன்னுசரற் காலத்தின் வானம்போல் நின்மலத்தை மருவா நிற்கும்**
**உன்னுடைய சங்கற்பம் எனும்அழுக்கை உன்னாலே உனக்கு மாற்றித்**
**துன்னிமிகு தெளிவுற்றுப் பரமானந் தக்கடலில் துளைந்து வாழ்வாய்.**

**பொழிப்புரை:** *தனது விவேகம் என்கிற பெருங்காற்றினால் சங்கற்பம் என்னும் மேகத்தைச் சிதறடித்துப் போக்கி, நிலைபெற்ற சரத்கால ஆகாயத்தைப் போல நின்மலத்தைப் பொருந்தியிருக்கும். உனது சங்கற்பம் என்கிற களங்கத்தைக் களங்கமற்ற உனது முயற்சியினால் நிவர்த்தி செய்து, நெருங்கி மிகுந்து தெளிவடைந்து பரமானந்தக் கடலில் அழுந்தி வாழ்வாயாக.* **(6.2.27)**

**ஆற்றுமதத் துவம்சகல சத்திமா னாம்அவற்றின் நடனத் தாலே**
**தோற்றுகின்ற பந்தம்வீ(டு) எல்லாம்செய் திடும்சமமாய் தூய சித்தாய்**
**வேற்(று)உருஎல் லாம்இயற்றும் இதனுக்(கு)இச் சாசத்தை வியோம சத்தை**
**சாற்றுகின்ற காலத்தின் சத்தைநி யதிசத்தை தடமா சத்தை.**

**பொழிப்புரை:** *ஆத்ம தத்துவமானது எல்லா சத்தியையும் உடையதாம். அச்சத்திகளின் ஆட்டத்தாலே உண்டாகின்ற பந்தமும், மோட்சமும் ஆகிய எல்லாவற்றையும் செய்யும். சமமாகியும், பரிசுத்தமாகியும், விகற்ப வடிவங்கள் எல்லாம் செய்கின்ற தாயும் இருக்கின்ற இந்த ஆத்மாவுக்கு இச்சா சத்தையும், வியோம சத்தையும், சொல்கின்ற கால சத்தையும், நியதி சத்தையும், வியாபகமான மகா சத்தையும்.* **(6.2.28)**

**திடஞான சத்திதொழில் சத்திதொழில் செய்கிற்போன் செய்யா தோனாம்**
**இடமான சத்திஇவை முதல்பரம சத்திகளுக்(கு) எல்லை இல்லை**
**மடமான மிளிர்சத்தி சனனம ரணங்க(ள்)தரும் வையம் எங்கும்**
**தடமான மீட்சிஎனும் சத்தியால் பிறப்(பு)இறப்புத் தவிரும் அன்றே.**

**பொழிப்புரை:** *திடமான ஞான சத்தியும், கிரியா சத்தியும், தொழிலைச் செய்கின்ற கர்த்துரு சத்தியும், தொழிலைச் செய்யாத அகத்துரு சத்தியும், மிகுந்த சத்திகளும் ஆகிய இவைகள் முதலானவை பிரம்ம சத்திகளுக்கு அளவில்லை. அஞ்ஞானமாக மிளிர்கின்ற சத்தி பிறப்பு இறப்புகளைத் தரும். உலகம் முழுதும் தடுத்து மீளுதல் என்னும் சத்தியால் பிறப்பு இறப்பு தவிரும்.* **(6.2.29)**

**அனைத்தான பூசையினும் அங்கத்தைச் சுடுதலே அமலம் ஆகும்**
**வினைத்தேக உடலைநான் என்னு(ம்)அது விடுதலே மிகுந்த பூசை**
**இனைத்தான தியானத்தால் பூசிக்க சித்(து)உருவாய் இலக்கம் பானு**
**தினைத்தாகும் எனஒளிகட்(கு) ஒளியாம்உள் சித்சுடர்நான் என்று சேர்க.**

**பொழிப்புரை:** *எல்லாவிதமான பூசைகளிலும் பாவனையைத் தகித்தலே நின்மல பூசையாகும். செயல் வடிவான அல்லது வினையால் வரும் உடலை நான் என்று என்னும் அபிமானத்தை விடுதலே மேலான பூசையாம். இப்படிப்பட்ட தியானத்தால் பூசிப்பாய். சித்து உருவாய் இலட்சம் சூரியப் பிரகாசம் தினை அளவாகும் என பிரகாசங்களுக்கு எல்லாம் பிரகாசமாம் உள்ளே இருக்கும் ஞான பிரகாசத்தை யான் என்று சேர்க.* **(6.2.30)**

**(வேறு)**

**கரைஅறு பர(ம)ஆ காசம் கதித்(து)அறப் பெருத்த கண்டம்**
**புரைஅறும் அதன்கீழ் எல்லை அற்றவிண் பொற்றாட் கஞ்ச**
**நிரைபயில் முடி(வு)இல்) திக்கும் நீண்(டு)அற உயர்ந்த தோள்கள்**
**உரைஉயர் நாநா லோகம் ஒளிகொ(ள்)ஆ யுதங்கள் ஆமே.**

**பொழிப்புரை:** *(மேற்சொன்ன ஞான தேவனைப் புருடனாக வர்ணித்தல்) வரையற்ற மேலான ஆகாயமே எழுச்சியான பருத்த கழுத்து. குற்றமில்லாத அதன் கீழ் எல்லையற்ற ஆகாயமே பொற்பாத மலராம். வரிசையாகச் சொல்லிய முடிவற்ற திசைகள் நீண்டு மிக உயர்ந்த தோள்கள். சொல்வதற்கு உயர்ந்த பலவான உலகங்கள் ஒளிகொண்ட ஆயுதங்கள் ஆகும்.* **(6.2.31)**

**(வேறு)**

**எண்ணில் கோடி பிரம்மாண்டம் இதயத்(து) ஒருபால் இளைப்பாறும்**
**வண்ண ஒளிசேர் பரவிசும்பின் பாரா பாரா வடி(வு)இதுவாம்**
**கண்ணன் பிரமன் சிவன்மகவான் முதல்வா னவரார் கவின்பெறு(ம்)இவ்**
**அண்ணல் வடிவில் உரோமநிரை ஆகும் இந்த அனைத்(து)உயிரும்.**

**பொழிப்புரை:** *எண்ணிலாத கோடி பிரம்மாண்டங்கள் இதயத்தில் ஒருபுறம் அமைதி அடையும். அந்த வத்துவே அழகிய பிரகாசத்தையுடைய பரம ஆகாயத்தின் தொடக்கமும் முடிவும் இல்லாத வடிவம் இதுவாகும். விஷ்ணுவும், அயனும், உருத்தினும், தேவேந்திரனும் முதலான தேவர்கள் நிறைந்த அழகு பெற்றிருக் கின்ற இந்த இறைவனது வடிவத்தில் இந்த சகல உயிர்களும் உரோமம் (மயிர்) வரிசைகள் ஆகும்.* **(6.2.32)**

**விவி(து)ஆ ரம்பம் புரிவனவாய் உலகாம் பொறியின் வினைக்கயிறாய்த்**
**தவிரா இச்சை முதல்பலவாம் சத்தி அவன்மே னியில்தங்கும்**
**அவிரா நின்ற இவன்பரம தேவென்(று) அறிந்தோர் அருச்சிப்போர்**
**செவிதாம் சின்மாத் திரம்ஆனோன் அனுப வித்த திகழ்ஆன்மா.**

**பொழிப்புரை:** *பலவிதமான துவக்கங்களைச் செய்வனவாகியும், உலகமாகிய எந்திரத்துக்கு வினைக் கயிறாகியும் இருக்கின்ற ஒழியாத இச்சை முதலான பல சத்திகள் அவனது தேகத்தில் தங்கியிருக்கும். பிரகாசிக்கின்ற இவனை மேலான தெய்வம் என்று உணர்ந்த ஞானவான்கள் பூசிப்பர். சிறந்த சின்மாத்திரம் ஆனோன். அனுபவமாய் விளங்குகின்ற ஆத்ம வடிவினன்.* **(6.2.33)**

**எங்கும் உறைவோன் எவராலும் எய்தப் படுவோன் எல்லையறத்**
**தங்கு பதங்கட்(கு) ஆதாரம் ஆவோன் சத்தா மாத்திரமே**
**அங்கம் ஆவோன் சகத்திரளை அடைவில் நடத்தும் காலத்தைத்**
**துங்க வாயில் காப்பவனாய் உடையோன் சுத்த சுயம்சோதி.**

**பொழிப்புரை:** *எல்லா இடத்திலும் திகழ்பவன், எல்லோரும் ஆன்ம வடிவம் ஆவதால் அனைவராலும் அடையப்படுபவன். எல்லையற இருக்கின்ற பதங்களுக்கு ஆதாரமாக இருப்பவன். சத்து மாத்திரமே வடிவமாக ஆகி இருப்பவன்.உலக விவர்த்த உபாதனமாக உள்ளவன். உலகைக் காக்கும்போது காலம் என்கின்ற சிறந்த வாயில் காப்பவன் ஆவன். சுத்த சுயம் பிரகாச வடிவினன்.* **(6.2.34)**

**நயன மூக்குச் செவிதொக்கு நாக்கு மனமாம் சத்திகளால்**
**இயல்பில் எங்கும் விடயங்கள் அருந்து எண்ணங் களுக்(கு)எல்லாம்**
**அய(ல்)அ(து) ஆகும் எவ்விடத்தும் பரம சிவம்என்(று) அகத்(து)எண்ணி**
**உயர்தெய் வத்தை விதிநெறியே ஓங்கு பூசை செயவேண்டும்.**

**பொழிப்புரை:** *பார்த்தல், முகர்தல், கேட்டல், பரிசித்தல், சுவை உணர்தல், மனனம் செய்தல் ஆகிய சக்திகளாலே இயல்பாகவே எல்லாவிடத்தும் விஷயங்களைப் புசித்து, எண்ணங்களுக்கு எல்லாம் வேறானதாக ஆகும், எல்லா விடத்தும் பரம சிவ வடிவம் என்று உள்ளத்துள் எண்ணி, உயர்ந்த தெய்வத்தை விதி முறைப்படியே அதிக பூசை செய்ய வேண்டும்.* **(6.2.35)**

**தன்ன(து) அறிவே வடிவாகித் தயங்கு தேவின் பூசைக்கு**
**மன்னும் உபசா ரங்க(ள்)எலாம் மர(பு)அன்(று) ஆகும் எப்போதும்**
**இன்னல் அன்றிக் குளிர்ந்(து)அழி(வு)அற்(று) ஏக மாகி அமுதாகித்**
**துன்னு தன்போ தத்தாலே தூய பூசை செயல்வேண்டும்.**

**பொழிப்புரை:** *தனது சித்தே சொரூபமாகி விளங்கும் தெய்வத்தின் பூசைக்கு, பூசைக்காகப் பொருந்திய உள்-வெளியிலான உபசாரங்கள் யாவும் மரபு அல்ல (ஒழுங்கு அன்று) எப்பொழுதும் துயரம் இன்றிக் குளிர்ந்து, நாசம் இன்றி, ஒன்றே ஆகி, அமிர்தமாகப் பொருந்தும் தன்னுடைய உணர்வினாலே பரிசுத்தமான பூசையைச் செய்திடல் வேண்டும்.* **(6.2.36)**

**ஒழியா(து) உள்ளே பரிசுத்த உணர்வாம் அறி(வு)ஏ(து) அதுதானே**
**இழியா தான தியான(ம்)அது தானே இயல்பாம் அருச்சனையாம்**
**விழிதோல் செவிநா மூக்(கு)ஐந்தால் விடயம் கொள்ளில் துயில்செய்யில்**
**மொழிகூ றிடில்ஏ கிடல்உயிர்க்கில் முற்றும் உணர்வா யிடல்வேண்டும்.**

**பொழிப்புரை:** *(இப்படியாக) நீங்காது உள்ளத்தே இருக்கும் அந்த பரிசுத்த அறிவு மாத்திர ஞானம் எதுவோ அதுவே மிகவும் மேலான தியானமாம். இதுவே மேலான இயல்பான (தகுந்த) பூசையாம். கண், தோல், காது, நாக்கு, மூக்கு என்னும் ஐம்புலன்களால் சப்தம் முதலிய விஷயங்களைக் கவர்கின்ற போதும், நித்திரை கொள்கின்ற போதும், பேசுகின்ற போதும், செல்லும் போதும், மூச்சு விடுகின்ற போதும் முழுமையாக இந்த எல்லா விவகாரங்களிலும் சாட்சி மாத்திரமாகவே இருக்க வேண்டும்.* **(6.2.37)**

**திகழ்(ழ்)ஆத் துமதத் துவத்தி(ன்)உயர் தியானம் உபகா ரங்களொடு**
**நிகழ்பூ சனையாம் இவ்வழியால் அன்றிப் பிறிதோர் நெறிகளினால்**
**புகழ்மெய் உணர்வு கிடையாது புரண தியான பூசையினை**
**இகழ்மூ டர்கள்செய் யினும்பதின்மூன்(று) இமைப்பில் பசுஈந்(து) உளபே(று)ஆம்.**

**பொழிப்புரை:** *சத்து சித்து ஆனந்தமாய் விளங்குகின்ற ஆன்ம தத்துவத்தின் உயர்ந்த தியானம் சாதகத்துடன் திகழ்கின்ற பூசையாம். இந்த வழியைத் தவிர மற்ற நெறிகளினால் புகழப்படுகின்ற உண்மை ஞானம் அகப்படாது. பூரணமான இந்த பூசையினை இகழத்தக்க அறிவில்லாதவர்கள் செய்தாலும் பதின்மூன்று இமைப்பொழுது பசுவினைத் தானம் செய்த பலன் கிட்டும்.* **(6.2.38)**

**இயலார் கடவு ளாம்தன்னை இமைநூற்(று) அளவு பூசிக்கில்**
**அயமே தத்தில் ஆயிரமாம் பேறாம் அரைநா ழிகைபூசை**
**முயல்வார் இலக்கம் அயமேதப் பயனைப் பெறுவர் முறைமையினால்**
**பயனார் பூசை ஒருகடிகை பண்ணில் இராச சூயபலம்.**

**பொழிப்புரை:** *இயல்பாய் விளங்கும் பரமான்மாவை நூறு இமைப்பொழுது அளவு பூசை செய்யில், ஆயிரம் அசுவமேத யாகம் செய்த பலனாம். அரை நாழிகை தியானம் செய்பவர் இலட்சம் அசுவமேத யாகம் செய்த பலனை அடைவர். முறைப்படி ஒரு நாழிகை அளவு பூசை செய்பவர் இராஜசூய யாகம் செய்த பலன் உண்டாகும்.*
**(6.2.39)**

**பாசம் இன்றி உள்ளுணர்வைப் பதினைங் கடிகை பூசிக்கில்**
**ராச சூய இலக்கநிகர் இவ்வா(று) ஒருநாள் அருச்சிக்கில்**
**ஆ(சு)இ லாத பரஒளியில் அமர லாகும் இதுதானே**
**ஏ(சு)இல் பரம யோக(ம்)இது தானே பரம கிரியையுமே.**

**பொழிப்புரை:** *வேறொரு எண்ணம் இன்றி உள்ளிருக்கும் ஆன்மாவைப் பதினைந்து நாழிகை தியானித்திடில் இலட்சம் இராஜசூய யாக பலனுக்கு நிகராம். இப்படி ஒருநாள் முழுவதும் தியானித்திடில் குற்றமற்ற பரப்பிரம்ம பிரகாசத்தில் இருக்கலாம். இதுவே இகழ்ச்சி இல்லாத மேலான யோகமாம், இதுவே உயர்ந்த செய்கையும் ஆகும்.*
**(6.2.40)**

புறனாம் பூசை இதுவாகும் போதக் கடவுள் உட்பூசை
திறனாய்க் கேட்பாய் எப்போதும் தேகத்(து) உறையும் இத்தேவை
மறவா(து) இந்தப் பரசிவத்தை வருவோன் இருப்போன் துயின்(று)எழுவோன்
நிறனார் போக விடயங்கள் புசிப்போன் விடுவோன் எனநினைந்து.

**பொழிப்புரை:** *வெளிப்புற பூசை இதுவாகும். ஞான தெய்வத்தின் உள்முகப் பூசையை ஒருமுகமாய்க் கேட்பாய். எப்பொழுதும் இந்த தேகத்தின் உள்ளே இருக்கின்ற இந்த தெய்வத்தை மறக்காமல், இந்தப் பரசிவத்தை வருபவனாகவும், இருப்பவனாகவும், உறங்குபவனாகவும், விழித்து எழுபவனாகவும், பலவகையான போக விஷயங்களை அனுபவிப்பவனாகவும், தியாகம் செய்பவனாகவும் எப்போதும் தியானித்து* **(6.2.41)**

வெகுவாய் அடைந்த பொருள்களிலே மேவித் தனது மெய்யுணர்வாம்
தகுநீர் முழுக்கால் மலம்(ம்)அற்றுத் தப்(பு)இல் போத பூசனையால்
மிகுநற் போத இலிங்கத்தை மேவு பூசை செயல்வேண்டும்
பகுதி யில்லா இப்போதம் பயிலா(து) இருக்கும் இடம்உண்டோ.

**பொழிப்புரை:** *மிகுதியாக வரப்பெற்ற பொருள்களில் பொருந்தித் தன்னுடைய மெய்யுணர்வு என்னும் தகுந்த நீரினால் தூய்மை அடைந்து (ஸ்நானம் செய்து) அழுக்கு நீங்கி, தவறுகள் இல்லாத ஞான பூசையால் மிகுந்த நல் உணர்வாகிய ஞான இலிங்கத்தைப் பொருந்தி பூசை செய்திடல் வேண்டும். பேதமும், களங்கமும் இல்லாத இந்த ஞானமானது விளங்காது இருக்கும் இடமுண்டோ?* **(6.2.42)**

பெருகு மனத்தின் மனனத்தில் பிரா(ண)அ பானன் தன்நடுவில்
இருத யங்கந் தரம்தாலு இடையில் புருவத்(து) இடையில்மூக்(கு)
உருவின் நுனியில் முப்பத்தா(று) உற்ற பதத்தில் உள்ளத்தின்
திருகல் கடந்த மற்(று)அப்பால் செறியும் போத தேவதையே.

**பொழிப்புரை:** *விரிகின்ற மனத்தின் மனனத்தில் பிராணன் அபானன் இவைகளின் நடுவில் இருதய கண்ட நாவிடையில், புருவ மத்தியில், மூக்கின் நுனியில், முப்பத்தாறு பத கோடியில் மனத்தின் சலனம் கடந்த சமாதியிலும், அப்பால் பொருந்தி நிற்கும் ஞான தேவதையே.* **(6.2.43)**

என்ன(து) உடலில் சிற்கதிராய் இலங்கு தெய்வ நான்என்னை
உன்னு மனம்கண் வாக்குக்கள் உடைய சத்தித் திரள்எல்லாம்
பின்னம் இன்றி நாயகனைப் பிரியா மகளீர் போல்நாளும்
துன்னும் என்றே அனவரதம் தொடர்பா வனைசெய் திடல்வேண்டும்.

**பொழிப்புரை:** *எனது தேகத்தில் ஞான சூரியனாய் விளங்கும் தெய்வம் யான். மனம் கண் வாக்கு முதலான சக்திக் கூட்டங்கள் எல்லாம் என்னை உபாசிக்கும். பேதம் இல்லாமல் நாயகனைப் பிரியாத நாயகிகள் போல, எப்பொழுதும் பொருந்தும் என்றே இடைவிடாமல் தொடர் பாவனை செய்திடல் வேண்டும்.* **(6.2.44)**

சகத்தை நிவேதித் திடும்சித்தம் எனது வாயில் தனிக்காப்போன்
அகத்து வாயில் பயில்ஏவல் ஆளாம் எனக்கு நற்சிந்தை
உவப்பில் உடல்பூண் ஞானங்கள் உற்ற கரணம் ஒருபத்து
நிகழ்ச்சி உறுவா யில்க(ள்)ஆகும் என்னும் எண்ணம் நீங்காமல்.

**பொழிப்புரை:** *உலகத்தை என்னுள்ளே கொணர்ந்து அறிவிக்கும் சித்தம் எனது தலை வாயில் காப்பவனாம். வீட்டு வாசலிலே சொன்னதைக் கேட்கும் வேலைக் காரியாம் எனது சிந்தை. சந்தோஷமாக அணிந்து கொள்ளும் ஆபரணங்கள் ஞானங்களாம் பொருந்திய இந்திரியங்கள் பத்தும் விவகாரம் செய்யும் வாயில்கள் ஆகும் என்பதான சிந்தனை நீங்காமல்,* **(6.2.45)**

**அவ்வா றான இவன்அவன்நான் அந்தம் ஆகாப் பிரி(வு)அற்று**
**தவ்வாறு) எல்லாம் பரித்(து)ஒன்றாய்ச் சால நிறைந்(து)எல் லாநிறைவித்(து)**
**எவ்வா யினும்ஓர் சமனாகி இயல்ஆ சாரம் இயல்ஒளிகொண்(டு)**
**ஒவ்வா தாய்சித் தாய்நின்றேன் ஒழியேன் என்றே பூசிக்க.**

**பொழிப்புரை:** *அத்தகைய இப்பொருளே அவனும் நானும் ஆவதாம். முடிவில்லாததாய், பேதம் இல்லாததாய், நாசமாகததாய், எவற்றையும் தாங்கும் ஏக வடிவமாய் இலங்கிடும் யானே இருக்கின்றேன், மிக்க பூரணமாய் எல்லாவற்றிலும் நிறைந்து எங்கும் ஒரேவிதமாக சமமாய், ஒரே விதமாக ஆசாரமாய் (ஒழுங்காய்), ஒரே விதமான பிரகாசமாய், ஒப்பிட முடியாத சித்தாக நிற்கின்றேன், நாசம் இல்லேன் என்று பூசை செய்க.* **(6.2.46)**

**அமல மாம்பூ சையினால் அதிகத் தெளிவை எய்திடலாம்**
**சம(ம்)அ தாய்எல் லாமான தடம்புந் தியினால் உடல்அறிவு**
**சும(டு)என்(று) அப்பா லாம்சித்தைப் பெற்ற(து) ஒன்றால் தொடர்பாக**
**விமலம் ஆனோர் பூசிக்க வேண்டும் என்பர் விடா(து)என்றும்.**

**பொழிப்புரை:** *நிர்மலமான அந்த பூசையினால் அதிகமான தெளிவினை அடைந் திடலாம். சமமாகி, எல்லாமும் ஆன விசாலமான புத்தியினால் தேகமே ஆத்மா என்று கருதும் புத்தி சுமை என்று அனைத்தையும் கடந்தது சித்து ஒன்றே என்று உணர்ந்து அதனை எப்பொழுதும் விடாமல் பூசிக்க வேண்டும் என்று நிர்மலம் ஆனவர்கள் சொல்வார்கள்.* **(6.2.47)**

**எட்டா(து) ஒன்றை வேண்டு(ம்)என இதற்காய் இரங்கா(து) இச்சைவழி**
**முட்டா அறிவால் பூசித்தல் முறைமை அன்ன பானத்தால்**
**தட்டா(து) உயர்ந்த செல்வத்தால் சய(ன)ஆ சனம்வா கனங்களினால்**
**கிட்டா நின்ற சுகம்அனைத்தால் அறிந்து கிளர்பூ சனைசெய்க.**

**பொழிப்புரை:** *கிடைக்காத ஒன்று கிடைக்க வேண்டும் என்று அதற்காக இரங்கிக் கவலைப்படாமல், விரும்பியதன்படி கிடைத்த உணர்வினால் பூசை செய்தல் முறையாகும். உண்பது, குடிப்பது, தடையிலாமல் கிடைத்த செல்வம், படுக்கை, இருக்கை, நடத்தல் முதலியவற்றில் கிடைக்கப்பெற்ற சுகம் அனைத்தும் சிவ வடிவமே என்று பூசை செய்க.* **(6.2.48)**

**ஆதி வியாதி பயில்மோக ஆரம் பத்தால் அனைத்(து)இடரால்**
**நீதி பயிலும் இராச்சியத்தால் நிறையும் மிடியால் விசித்திரமாம்**
**தீ(து)இல் தொழில்க ளாம்மலரால் சித்தை அறிந்து பூசிக்கக்**
**கோ(து)இல் போகம் நவைபோகம் கொளல்நீக் குதலால் அருச்சிக்க.**

**பொழிப்புரை:** *தூல சூக்கும நோய்களைத் தருகின்ற மோகம் எழுவதால் வரும் அனைத்து துக்கம், நீதியோடு ஆள்கின்ற இராச்சிய செல்வாக்கு, முழுமையான தரித்திரம், பல வகையாம் குற்றமில்லாத செயல்களால் சித்தினை அறிந்து பூசை செய்க. குற்றமற்ற போகம், குற்றம் உடைய போகம் இவைகளைக் கொள்ளுதல், விட்டு விடுதல் இவற்றால் பூசை செய்க.* **(6.2.49)**

நிருவி கார பாவனையால் நேர்ந்த பொருளை இனி(து)அருந்தி
ஒருவி இறந்த பொருளினையே உறாமை உணர்வின் பூசனையாம்
வெருவு துன்பம் இன்பமுதல் மேவும் அனைத்தும் உணர்(வு)உருவாய்க்
கருதல் வேண்டும் அழி(வு)அறுசித் கடவுள் பூசை ஒழியாதோர்.

**பொழிப்புரை:** *விகாரம் இல்லாத பாவனையால், கிடைத்த பொருளை இன்புடன் அருந்தி, சென்ற பொருளைக் குறித்த சிந்தையை அகற்றிப் பற்று அற்று நிற்பதே ஆன்மாவின் பூசையாம். அழியாத சித்தினை விடாமல் பூசை செய்பவர்கள். பயப்படத்தக்க துக்கம், சுகம் முதலாக அடையப் பெற்ற அனைத்தும் அறிவு உருவமாய்க் கருதுதல் வேண்டும்.* **(6.2.50)**

என்றும் எல்லா வடிவாலும் எல்லா இடங்கள் தம்மாலும்
துன்றும் எல்லாம் பிரம(ம்)எனத் துணிந்து பூசை செயல்வேண்டும்
அன்(று)எ னாமல் விரும்பாமல் அடைந்த போகம் எலாம்அறிஞர்க்(கு)
ஒன்று சுபாவத் தால்புசித்தற்(கு) உரித்தாம் கடற்கு நதித்திரள்போல்.

**பொழிப்புரை:** *எப்போதும் எல்லா வடிவங்களாலும் எல்லா இடங்களாலும் பொருந்தும் அனைத்தும் பிரம்மம் என்று நிச்சயித்துப் பூசை செய்தல் வேண்டும். விருப்பு வெறுப்பு இன்றி கிடைத்த போகங்கள் யாவும் ஞானிகளுக்கு அவர்களுக்கே உரிய இயற்கையால் அனுபவித்தற்கு உரியதாம், கடலுக்கு வந்து சேர்கின்ற நதிகள் போல.* **(6.2.51)**

நீசம் உயர்வாம் நோக்கங்கள் நேர்ந்த இறையும் பற்றாமல்
தேச கால தொழிற்(கு)உரித்தாய்ச் சேரா நின்ற சு(ப்)அசுபத்தை
ஆசு விகாரம் அறக்கைக்கொண்(டு) அதனால் பூசை செயல்வேண்டும்
பேசு பரமார்ச் சனைவிதியில் பெரிதும் இவைநல் திரவியமே.

**பொழிப்புரை:** *தாழ்ந்த உயர்ந்த நோக்கங்கள் வரப்பெற்றால் கொஞ்சமும் பற்றாமல் இடம் காலம் செயலுக்குத் தக்கபடி அடையப்பெறும் நல்லது தீயவைகளை விரைவில் விகாரம் இல்லாமல் (விகாரம் அற்றுப்போக) பூசை செய்தல் வேண்டும். சொல்லப்படும் மேலான பூசை விதிகளில் இவைகளே பெரிதான பூசை பொருட்கள் ஆகும்.* **(6.2.52)**

இனைய திரவி யங்க(ள்)எலாம் இனிதாம் சாந்தி ஒன்றாலும்
நினைபா வனையில் புளிப்(பு)உறைப்பு நிறைந்த கைப்புத் துவர்ப்(பு)அனைத்தின்
தினையும் இன்றிச் சித்திரமாம் தித்திப் பாலே செறிந்தனவாய்
அனைய சாந்தி மதுரத்தால் அறவே நிறைந்த(து) அருந்தவனே.

**பொழிப்புரை:** *இத்தகைய பொருட்கள் எல்லாம் இனிமையான சமபாவனை ஒன்றினால் பாவிக்கப்பட்டனவாய், புளிப்பு, உறைப்பு, கைப்பு, துவர்ப்பு என்ற அனைத்து சுவைகளும் விட்டு இனிப்புச் சுவையாகப் பொருந்தினவாம். அத்தகைய சாந்தி (சமம்) என்ற இனிப்புச் சுவையால் பூரணமாக நிறைந்தது அரிய தவத்தை உடையவரே!* **(6.2.53)**

**தக்க சாந்தி பயில்இரத சத்தி யாலே பாவிக்கில்**
**தொக்க பொருளாய்க் காண்பது(ு)எல்லாம் சுதையாய் இமைப்பின் தூய்மதியின்**
**உக்க விரதம் போலாகும் உயர்ந்த சமமாம் சாந்தியினால்**
**மிக்க அறிவா கியும்கல்போல் விளங்கும் உணர்வால் பாவிக்க.**

**பொழிப்புரை:** *தகுந்த சமத்துவ பாவனையால் நிகழும் சுவை சக்தியாலே பாவிக்க, தொடர்புடையதாய் காணப்பெறும் பொருள்கள் யாவும் கண நேரத்தில் அமிர்தமாய் தூய்மையான சந்திரனிலிருந்து பொழிகின்ற அமிர்தம் போலவாம். உயர்ந்த சமபாவனை என்னும் சத்தியினால் ஏக வடிவ சித்த விருத்தியாய் கல்போல் அதனால் நிர்விகார வடிவமாய் விளங்கும் உணர்வினால் பாவனைசெய்.* **(6.2.54)**

**தேச காலத் தொழில்ஒழுங்கால் சேர்ந்த பொருளின் சு(கு)அசுகத்தின்**
**வீசு மயக்கங் களினாலே மெய்யில் கடவுள் அருச்சனைசெய்(து)**
**ஆசை எல்லாம் புந்தியினால் அன்றி நிற்பாய் உயர்மாயை**
**நீச மாயை தனைநீக்கும் நெடுஞ்சங் கற்ப நஞ்(சு)அறுக்கும்.**

**பொழிப்புரை:** *இடம் காலம் செயல்களின் கிரமத்தால் அடையப்பெற்ற பொருள்களின் இன்ப துன்பங்களால் உண்டாகும் மயக்கங்களினால் இந்த தேகத்தில் திகழும் ஆன்மாவை அருச்சனை செய்து, ஆசை எல்லாம் அகன்ற புத்தியினால் நிலை நிற்பாய். மேலான மாயையானது மலின வாசனை வடிவமான அவித்தையாகிய விஷத்தினைக் கெடுக்கும்.* **(6.2.55)**

**கருதி மலத்தால் மலம்அறுக்கும் காரு என்ன மாயைதனைப்**
**பெருமா யையினால் செறல்வேண்டும் பெரிய மாயை காரணமாம்**
**பொருள்அன் றாயும் குருவாக்கால் புகலும் பொருளாய்க் காரணமாய்**
**மருவும் உணர்வாம் தன்னுருவை வழுவா(து) அளிக்கும் உணர்வோர்க்கே.**

**பொழிப்புரை:** *ஆராய்ந்து அழுக்கினால் அழுக்கினை அகற்றும் வண்ணான் போல, அசுத்த மாயை தன்னை சுத்தப் பிரம்மாகார விருத்தியினால் நாசம் செய்தல் வேண்டும். பெரிதான மாயை காரணத் தன்மை உடையதாய், பொருள் அல்லாததாய், குருவின் உபதேசத்தால் சொல்லத் தக்கதாய் காரணம் இல்லை எனினும் காரணமாய் பொருந்துகின்ற அறிவாம் தனது வடிவத்தை நழுவாமல் அடைவிக்கும் அறிவுடையோர்க்கே.* **(6.2.56)**

**குரவன் உபதே சத்(து)ஒழுங்கு குறிப்பால் மகன்பால் மிகவளர்ந்து**
**விரவும் என்னில் காட்(டு)அரிதாய் வெளிநில் லாதா கிலும்தானே**
**பிரம ரூபம் வெளிநிற்கும் பன்னூல் பொருளால் குருமொழியால்**
**தரவும் அரிதாம் தன்அறிவால் தானே அறிந்து பெறவேண்டும்.**

**பொழிப்புரை:** *குருவின் உபதேச முறைமையால் குறிப்பாக சீடனிடத்தில் மிகவும் வளர்ந்து பரவும் என்றால், வெளிப்புறமாக காட்டுவதற்கு அரிதாய் இருப்பினும், சுயமாகவே பிரம்ம ரூபம் வெட்டி வெளியாய் பிரத்தியட்சமாகும். பல சாத்திரங்கள் கூறும் அர்த்தங்களினாலும், குருவின் உபதேசத்தாலும் கொடுப்பதற்கு அரியதான அதனைத் தன் பிரக்ஞையினாலே தான்தானே அறிந்து பெறவேண்டும்.* **(6.2.57)**

**ஆசான் மொழியால் நூல்பொருளால் அன்றிப் பெறவும் அரிதாகும்**
**தேசார் குருநூல் மாணாக்கன் சிறக்க இம்மூ வரும்கூடில்**
**பா(ச)அ தீதப் பரம்எய்தும் பன்னாள் நீங்கா இக்கூட்டம்**
**ஏசா உணர்வைத் தரும்பகல்போ(து) எல்லாத் தொழிலும் தருவதுபோல்.**

**பொழிப்புரை:** *குரு உபதேசம், சாத்திரங்கள் கூறும் அர்த்தங்கள் இல்லாமல் பெறுவதும் அரியதாகும். சுய அனுபவமாகிய குரு, சாத்திரங்கள், மாணாக்கன் இவை மூன்றும் ஒன்று சேர்ந்திடில் சகல பாசங்களும் கடந்த பரம் அடையப்பெறும். நீண்ட காலமாக நீங்காத இந்த கூட்டம் பகல் பொழுதானது எல்லா தொழில்களையும் செய்ய உதவுவது போல யாவரும் புகழும் ஞானத்தை அளிக்க வல்லது.* **(6.2.58)**

**சொன்ன நெறியில் அறிஞர்தினந் தோறும் தே(வ)அர்ச் சனைபுரியில்**
**என்னை முதலோர் தொண்டர்களால் ஏத்த மிக்க பதம்அடைவர்**
**உன்னு சகம்இல் லாதிருந்தும் உண்டு போல்தோற் றிடும்தோற்றம்**
**அன்ன(து) ஒழிந்து வேறில்லை அரிய தவத்தில் பெரியோனே.**

**பொழிப்புரை:** *கூறப்பட்ட இந்த வழிமுறைகளில் விவேகம் உடையவர் தினமும் பிரம்மத் தியானம் செய்தால் என் முதலாக உடைய தொண்டர்களால் போற்றத் தகுந்த மேலான பதத்தை அடைவர். நினைக்கின்ற உலகம் முழுதும் இல்லாமல் இருந்தும் இருப்பது போலத் தோற்றுகின்றது. தோற்றமாவது மட்டுமே அவ்வளவே அதனைத் தவிர்த்து வேறில்லை. அரிய தவத்தில் பெரியோனே.* **(6.2.59)**

**முந்தைப் பிரமம் முதலான மொழிகட்(கு) எல்லாம் தெரிகின்ற(து)**
**எந்தப் பொரு(ள்)ஆங்(கு) அதுசித்(து)என்(று) எண்ணு வாய்அன் னதுதோன்றித்**
**தொந்தித்(து) அறியும் பொருள்போலாய்த் தொடரும் பெயர்க்கும் உரித்தாகி**
**அந்தக் கரண பாவனையால் அகந்தை தனையும் பின்செல்லும்.**

**பொழிப்புரை:** *அனாதியான பிரம்மம் முதலான வார்த்தைகளுக்கு அர்த்தமாய் இருப்பது எந்தப் பொருள் அது அங்கு அறிவு உருவம் என்று எண்ணுவாய். அது தோற்றத்தைத் தந்து துவந்துவமாய் (இருமைகளாய்) காணப்படும் பொருள் போல ஆகி, தொடரும் பெயருக்கும் உரியதாகி அந்தக்கரணத்தின் (காணப்படும் பொருளைப் பாவிக்கின்ற) பாவனையால் அகங்காரத்தையும் பின்தொடர்ந்து செல்லும்.* **(6.2.60)**

**சேரும் இந்த அகந்தைக்குத் தேச கால பாவனையாய்ச்**
**சாரும் பாங்கித் திரளான சத்தித் திரள்உண் டாம்தானே**
**நேரும் இவைசூழ் சற்பாவ நிகழ்சீ வப்போர் பெற்றுடனே**
**கூரும் புந்தி எனலாகிக் கோளில் மூடர் இடத்(து)இருக்கும்.**

**பொழிப்புரை:** *சேர்ந்த இந்த அகங்காரத்திற்கு இடம் காலத் தன்மைகளாய்த் தொடரும் நட்புக் கூட்டங்களான ஆற்றல் தொகுப்பு உண்டாகும். தானாக நிகழும் இவைகள் சூழ்ந்த தன்மையை உடைய இருப்புத் தன்மை சீவன் எனப் பெயர் பெற்று, உடனே சூக்குமமாய் புத்தியாகி மூடர்களிடத்தில் இருக்கும்.* **(6.2.61)**

**சத்தம் கிரியை ஞானம்)எனும் சத்தித் திரள்க ளுடன்கூடி**
**ஒத்த கணந்தான் ஒருகணத்தில் உன்னல் தன்னை உண்டாக்கும்**
**மெத்த சங்கற் பத்தருவின் வித்தாம் என்ன மனம்விளையும்**
**தொத்து புரிஅட் டகவடிவாம் சொல்லுக்(கு) அதுபாத் திரம்என்பர்.**

**பொழிப்புரை:** *சப்தம் செயல் உணர்வு என்னும் ஆற்றல் கூட்டங்களுடன் கூடி ஒரு கணத்தில் நினைவுகளாம் பதிவுகளை உண்டாக்கும். மிக்க சங்கற்பங்கள் ஆகிய மரத்திற்கு விதை என்பதாக மனம் உண்டாகும். தூல தேகத்தைப் பற்றும் புரியட்டக வடிவத்திற்கு விஷயமாகும் என்பர். (மனமே புரியட்டக வடிவம் என்பது பொருள்)* **(2.6.62)**

**அன்ன மனதுக்(கு) உயர்பரம னாலே வடிவாம் சத்திகளை**
**இன்ன அள(வு)என் பதற்(கு)அரிதாம் இதுதான் விசும்பு முதலான**
**துன்னு வடிவங் களைமேவித் தொகுதத் துவங்கள் தமைச்செய்யும்**
**முன்னு பாழில் கூளிகள்போல் மொழிந்த மனவா தனைதோன்றும்.**

**பொழிப்புரை:** *அந்த மனத்திற்கு உயர்ந்த பரமனாலே உருவமாம் சத்திகளை இன்ன அளவு என்று அளவிட முடியாது. இந்த மனம் தான் ஆகாயம் முதலான வடிவங் களை அடைந்து தத்துவங்கள் தம்மை உருவாக்கும். ஒன்றுமில்லாத சூனியத்தில் வேதாளங்கள் போல் கூறிய மனதின் வாதனைகள் தோன்றும்.* **(6.2.63)**

**சகப்பேர் பெறும்இவ் வாதனைதான் தவிரில் அழியாச் சாந்திஅ(து)ஆம்**
**அகப்பா வனையில் இச்சகத்தில் அலகைத் தேராம் நீர்தன்னில்**
**உகப்பாம் அறுதி உள்ளோர்கள் உபதே சிக்க ஒண்ணாதார்**
**மிகப்பா விகளாம் சீசீஎன்(று) இகழ்வார் அவரை மெய்யுணர்ந்தோர்.**

**பொழிப்புரை:** *உலகம் என்ற பெயரைப் பெறும் இந்த வாசனையானது அழியாத சாந்தி அது (கைவல்யம்) உண்டாகும். அகப் பாவனையில் இவ்வுலகில் கானல் நீர் போன்ற இதனில் நிச்சய புத்தியுள்ளோர் பிரம்ம உபதேசத்தைப் பெறுவதற்கு தகுதி உடையவர் அல்லர். பெரும் பாவிகள் ஆவர். உண்மை உணர்ந்தோர் இவர்களைச் 'சீ சீ' என்று இகழ்வர்.* **(6.2.64)**

**பரமம் உணர்ந்தோர் விவேகியர்க்கே பரம உபதே சம்பகர்வர்**
**திர(ம்)இல் மயக்கத்(து) இழிந்தோர்க்குச் செப்ப நினையார் சொப்பனத்தில்**
**வரனை நனவில் கன்னிகைக்கு மகிணன் ஆக்கும் இயல்(பு)ஒக்கும்**
**விரத முனியே நீசொன்ன வினாவுக்(கு) உண்மை விளம்பினமால்.**

**பொழிப்புரை:** *பிரம்மத்தை உணர்ந்தவர்கள் விவேகம் உடையவர்களுக்கே மேலான உபதேசத்தை உபதேசிப்பர். திரம் இல்லாமல் பொருட்களின் மயக்கத்தில் மூழ்கும்*

*மூடர்களுக்கு உபதேசிக்க நினைக்கமாட்டார். கனவில் கண்ட மணமகனை நனவில் தனது மகளுக்குக் கணவனாக ஆக்கும் கொள்கையைப் போன்றதாம். தவ முனியே! நீர் கேட்ட கேள்விக்கு பதில் கூறினோம்.* **(6.2.65)**

**இனி(து)உண் டாக உனக்(கு)எம்பால் ஏகு வோம்நாம் என்(று)உமையும்**
**புனிதன் தானும் பரிவாரம் புறத்துச் சூழ விண்அகன்றான்**
**பனிநன் மலர்அஞ் சலிசொரிந்து பணிந்தேன் அன்று முதல்அந்தத்**
**துனியில் நெறியால் மெய்யுணர்வைத் தொடர்பால் பூசை செய்கின்றேன்.**

**பொழிப்புரை:** *உனக்கு நன்மையே உண்டாகட்டும், யாம் எம்மிடம் செல்வோம் என்று உமாதேவியும், பரமேசுவரரும் சிவகணங்கள் சூழ ஆகாயத்தில் மறைந்தனர். குளிர்ந்த நறுமண மலர்கள் சொரிந்து பணிந்தேன். அன்று முதல் அந்த துயரம் இல்லாத நெறியில் சத்திய ஞானானந்த வடிவத்தை ஆன்ம சொரூபமாகவே இடைவிடாமல் பூசை செய்கின்றேன்.* **(6.2.66)**

**இன்றும் என்றும் பதறாமல் இயற்று பூசா விதானத்தால்**
**துன்று கின்ற வாதனைகள் சுமையின் றியிலே சுமக்கின்றேன்**
**அன்று வந்த கிரியைகளோ(டு) ஆசா ரங்கள் மலராக**
**நின்ற பூசை தனில்குறைவு நிறைவு காணேன் இராப்பகலே.**

**பொழிப்புரை:** *இன்றைக்கும் என்றைக்கும் அவசரப்படாமல் செய்கின்ற பூசையின் செய்கையால் நெருங்குகின்ற வாசனைகளை விஷயங்களில் ஒட்டாமல் தரிக்கின்றேன். அன்றைக்கு வந்த செய்கைகளுடன் ஒழுக்கமே மலர்களாக இரவும் பகலும் செய்யும் பூசையில் குறைவோ நிறைவோ காணேன்.* **(6.2.67)**

**கொள்ளு வானும் கொள்பொருளும் கூடல் உயிர்க்(கு)எல் லாம்பொதுவாம்**
**நள்ளும் அந்தக் கூட்டத்தே ஞான யோகிக்(கு) அவதானம்**
**உள்ள(து) ஏ(து)அங்(கு) அதுதானே உயர்ஆன் மாவுக்(கு) அருச்சனையாம்**
**தெள்ளும் இந்நோக் கால்சங்கம் சேரா மனத்தால் சகத்(து)உறைவாய்.**

**பொழிப்புரை:** *கொள்பவனும், கொள்ளும் பொருளும் (கிரகிப்பவனும், கிரகிக்கப்படும் பொருளும்) ஆகிய இரண்டிற்கும் உள்ள தொடர்பானது பிராணிகள் அனைத்துக்கும் பொதுவாம். ஒருங்கிணைந்த அந்த கூட்டத்தில் பிரம்ம வித்துக்களுக்கு கடைப்பிடிக்க உள்ளது எதுவென்றால் அங்கு அதுவே மேலான ஆன்மாவின் பூசையாகும். தெளிந்த இந்த நாட்டத்தால் பற்றில்லாத உள்ளத்தால் இவ்வுலகில் வாழ்வாய்.* **(6.2.68)**

**இவ்வா(று) உலக(ம்) எனும்பெருங்கா(டு) எய்தி வருந்தாய் என்றலுமே**
**வெவ்வாள் இராமன் உரைசெய்வான் விட்டேன் ஐய(ம்)எ லாம்மிகவும்**
**தவ்வா(து) அறியற் பாலஎலாம் அறிந்தேன் சலியா(து) அருள்பெற்றேன்**
**கைவா ரணநே ராசைதனைக் கடிந்தேன் ஒன்றில் அசைவில்லேன்.**

**பொழிப்புரை:** *இவ்வாறு உலகம் என்கின்ற பெரிய காட்டினை அடைந்து வருந்த வேண்டாம் என்று உபதேசிக்கவும் கொடிய வாள் ஏந்திய இராமபிரான் கூறுகின்றார்...*

*சந்தேகங்களை எல்லாம் முழுவதும் தொலைத்தேன். மேன்மேலும் தாண்டி விழாமல் யாதொரு களங்கமும் இன்றி தெரியவேண்டிய யாவும் தெரிந்து கொண்டேன். சஞ் சலம் இல்லாமல் திருவருள் மகிழ்ச்சியைச் சேர்ந்தேன். மத யானைக்குச் சமானமான பேராசையினை அழித்தேன். யாதொன்றினாலும் அசையமாட்டேன்.* **(6.2.69)**

**பிறவிக் கடலில் தீரநிலை பெற்றுப் பிறழ்கற் பனைஎல்லாம்**
**அறவிட்(டு) அயர்(வு)அற்(று) அறவலிதாய் அறவே தெளிந்(து)ஆ னந்தத்தை**
**உறஉள் குளிர்ந்து நன்றானது) உள்ளம் என்று மெய்ஞ்ஞானத்**
**திறவித் தகனாம் வசிட்டனுடன் செப்பி மேலும் செப்பலுற்றான்.**

**பொழிப்புரை:** *பிறவியாக கடலில் திடமாக நிலைபெற்று, மாறி மாறி வருகின்ற சகல கற்பனைகளையும் முழுதும் விடுத்து, மயக்கம் அற்று, முற்றிலும் வலிமையாய், முழுமையாகத் தெளிந்து பிரம்மானந்தத்தைப் பெற்ற அளவில் உள்ளே குளிர்ச்சியாகி, நன்மையை அடைந்தது உள்ளம் என்று பிரம்மத்தை உணர்ந்த வித்தகராகிய வசிட்ட முனிவரிடம் கூறி, மேலும் கூறலானார்.* **(6.2.70)**

**(நிருவாணப் பிரகரணத்தில் தேவ பூசை கதை முற்றும்)**

# (iii) வில்வ பலக் கதை

### (அறுசீர் ஆசிரிய விருத்தம்)

*முன்பு நூதனமான தேவார்ச்சனையால் சித்தத்தின் அந்தர்முக பாவனையால் நிர்வாணம் எனப்பட்டது. இப்போது அத்விதீயமான பிரம்மமே உள்தோன்றும் பொருள்அனைத்துமாய் வியாபித்து இருக்கிறது என்பதை இக்கதையின் மூலம் தெரிவிக்கப்படுகிறது.*

**நின்னுரை அமுத தாரை நிறைந்து(ம்)உள் அமைவு தோன்றாப்**
**பின்னரும் பூர ணத்தைப் பே(சு)என இராமன் கேட்ப**
**மன்னுமா முனிவன் சொல்வான் வருபொருள் முதல்க ணத்தே**
**இன்னலம் ஆகும் மற்றக் கணத்(து)அவ்வா(று) இனிமை யாகா.**

**பொழிப்புரை:** *தங்களுடைய அமுத வசனங்கள் உள்ளே நிறைந்த போதிலும் திருப்தியானது உண்டாகவில்லை என்பதால் இன்னும் பரிபூரண சச்சிதானந்தம் குறித்து உபதேசித்து அருள்க என்று இராமபிரான் கேட்கவும் சிறந்த வசிட்ட முனிவர் கூறுவார்: கிடைத்த பொருளானது அந்த முதல் கணத்தில் இனிமையான நலம் தருவதாகும். அதுவே அடுத்து வரும் கணங்களில் இன்பம் தருவதாக அமைய மாட்டாது.*
**(6.3.1)**

**ஈ(து)அனு பவியா தார்ஆர் இச்சிக்க இனிதாம் வத்துக்**
**காதலி யாத போது கைப்புறம் ஆத லாலே**
**ஆதரம் மூலம் ஆகும் இனிமைக்(கு)இவ் இனிமை தானும்**
**போது(ம்)என் றிடப்போம் இச்சை போக்கினால் அனைத்தும் போமே.**

**பொழிப்புரை:** *இதனை அனுபவிக்காதவர் யார் உளர்? விரும்பிய போது இனிதாகத் தோன்றும் பொருள் விரும்பாத காலத்தே கசப்பானதாகத் தோன்றும். ஆதலால் இனிமையாகத் தோன்றுவதற்கு ஆசையே மூல காரணம். இந்த இனிமையும் போதும் என்ற மனம் வந்திடப் போகும். ஆசையை அகற்றினால் அனைத்துமே போகும் என்பது திண்ணம்.*
**(6.3.2)**

**பன்மையாம் ஆசை தீர்க பாவனை அறுக சித்தம்**
**இன்மையாய் ஒழிக சங்கம் இலாமையாய் உனக்குச் சொல்வாம்**
**புன்மைவா தனைபற் றாஉள் கரணத்தால் புரியும் செய்கை**
**வன்மையால் கலக்கம் கோடி வருகினும் வருத்தம் செய்யா.**

**பொழிப்புரை:** *விஷயங்களில் ஆசையின்றி விவகாரம் செய்வதால் பலவகையில் பெருகும் ஆசை விட்டொழிந்து போகட்டும். விஷய பாவனை (எண்ணமெலாம்) அற்றுப் போகட்டும். மனமானது கனமில்லாமல் கரைந்து போகட்டும். உனக்கு உபதேசம் செய்வோம். வாசனை இல்லாமல் மனம் முதலிய அந்தக் கரணங்களால் (மற்றும் இந்திரியங்களால்) செய்கின்ற செய்கை, பலாத்காரமாகக் கலக்கம் கோடி வந்தாலும் வருத்தத்தைத் தராது.*
**(6.3.3)**

விழிப்பினோடு இமைப்பில் சித்தம் சகத்தினை விளைத்(து)ஒ டுக்கும்
ஒழித்துவா தனைபி ராணன் ஒடுக்கத்தால் உளத்தை மாய்ப்பாய்
இழித்தபே தைமையின் தோற்றம் ஒடுக்கமாம் இரண்டி னாலும்
சுழித்திடு கருமம் எல்லாம் தோன்றிடும் ஒடுங்கும் அன்றே.

*மனமானது விரிவதால் உலகத்தை உண்டாக்கி, குவிதலால் ஒடுக்கும். வாசனையை ஒழித்தாவது, பிராணனை நிறுத்திடும் வழிமுறையிலாவது மனதை ஒடுக்குவாய். இகழத்தக்க அஞ்ஞானத்தின் தோற்றம், ஒடுக்கம் இரண்டினாலும் பிரமிக்கச் செய்யும் கருமங்கள் எல்லாம் தோன்றிடும். ஒடுங்கும்.* **(6.3.4)**

ஆதலால் குரவன் நன்னூல் அகல்கிலாச் செறிவான் வன்பில்
பேதமை உளத்தை மாய்ப்பாய் பிராணனைத் தடைசெய் தாலும்
வேதன அசைவு தீர விடுகிலும் சித்தம் போகும்
தீ(து)அறும் அதுவே மேலாம் பதம்எனச் செப்பும் அன்றே.

**பொழிப்புரை:** *ஆதலால் ஞானாசிரியர் மற்றும் நல்ல ஆத்மீக சாத்திரங்கள் இவற்றை விடாமல் பற்றிக் கொண்டு, வலிதில் அஞ்ஞானத்தோடு கூடிய உள்ளத்தை மாய்ப்பாய். பிராண வாயுவை நிறுத்தினாலும், வெளிமுகமாகச் செல்கின்ற மனதின் அசைவினை அதாவது எண்ணங்களை முழுமையாக விட்டு விடுவதாலும் மனமானது இல்லாமல் போகும். குற்றம் அற்ற அதுவே (நிர்விகற்பமே) உயர்ந்த பதம் (முத்தி) எனச் சொல்லப்படும்.* **(6.3.5)**

தெரிபொருள் தரிச னம்சேர் கூட்டத்தில் சேர்ந்த இன்பம்
விரிபர மார்த்தம் ஆகும் அதற்குமேல் இனிவே(று) இல்லை
புரிதரு பிரம நோக்கால் அதனினால் பொன்றும் சித்தம்
வரிசையாம் சித்த நாசம் வஞ்ச(ம்)இல் இன்பம் தானே.

**பொழிப்புரை:** *காணப்படும் அல்லது அறியப்படும் பொருள்களின் சம்பந்தமாக உண்டாகும் சுகம் மிகவும் யதார்த்தமாகும். அதற்கு மேல் வேறாக ஒன்றும் இல்லை. செய்கின்ற பிரம்மத்தின் திருஷ்டியால் (பிரம்ம சிந்தனையால்) மனமானது மாயும். கிரமமாக உண்டாகும் மனோ நாசமானது இயற்கையான ஆனந்தமாம்.* **(6.3.6)**

தேய்ந்திடல் வளர்தல் இல்லை தெரிவுறா மறைந்து போகா
ஆய்ந்துணர் ஞானி சித்தம் சித்த(ம்)அன்(று) அதன்பே ருண்மை
ஏய்ந்தநா நாத்து வத்தோ(டு) அன்னியம் எய்தல் சித்தம்
தோய்ந்தபோ தத்தால் செம்பு சொன்ன(ம்)ஆ வதுவே போலாம்.

**பொழிப்புரை:** *தேய்ததலும், வளர்தலும் கிடையாது, உதிக்காது, ஒடுங்காது, ஆராய்ந்து பிரம்மத்தை உணர்ந்த ஞானியரது சித்தம். அது சித்தம் என்று அறியப்படாது. அதன் பெயர் சத்துவம் (பிரம்மம்) எனப்படும். பலவகை வடிவங்களான பொருள்களுடன் வேறாக பிரம்மத்திலிருந்தும் பேதத்தை அடைதலே, பரிபூரணப் பிரம்மத்தின் போதத்தினாலே (ஞானத்தினாலே) பேதமின்றி பிரம்மத்தையே அடையும். எப்படியெனில், தாமிரமானது இரச பரிபக்குவத்தால் தங்கமாக மாறுவது போன்றதாம்.* **(6.3.7)**

சித்(து)எனும் தத்து வம்தான் சித்தமாய்ச் சகத்தில் ஓர்கால்
தொத்திய விநோதம் செய்து துரியமாம் அவத்தை மேவி
நித்தியமாம் துரியா தீத நிலைமையாம் ஆத லாலே
பித்துறும் உலகாய்ப் பன்மை யாய்நிற்கும் பிரமம் ஒன்றே.

**பொழிப்புரை:** *உலகத்தில் ஒருபொழுது அறிவாகிய (சித் எனும்) தத்துவமே மனதாய் (தொடர்புடையதாய்) விளையாட்டெல்லாம் ஆடி, துரிய அவத்தையை அடைந்து, நிரந்தரமான துரியாதீத அவத்தையையும் அடையும். ஆதலால் பிராந்தியை அடைந்த உலகமாய்ப் பலவாய் நிற்பது பிரம்மம் ஒன்றே.* **(6.3.8)**

முற்றுமாம் பிரமம் அன்றி மொய்ம்மன முதல வேறா
உற்றவை சிறிதும் இல்லை உளத்திலோர் பணதி போல
நிற்றலும் தோன்றும் அத்தை அறிகுக நிகழ்த்து கின்றேன்
கற்றவர் வியக்க நன்றாய்ப் புதுமையாம் கதைநீ கேட்பாய்.

**பொழிப்புரை:** *சகலமும் பிரம்மமே தவிர விஷயங்களைச் சேர்கின்ற மனம் முதலாக வேறானவை என்பது கொஞ்சமும் கிடையாது. சொப்பன அவத்தையில் உள்ளத்தில் தோன்றும் பொருளைப் போல எப்பொழுதும் தோற்றம் அளிக்கும். அதனை அறிந்து கொள்க. சொல்கின்றேன். படித்தவர் வியக்கும்படியான புதுமையான கதை ஒன்றை நீ கேட்பாய்.* **(6.3.9)**

கோடிமா கோடி கோடி இலக்கங்கள் கொண்ட காதம்
நீடிய அகலம் ஒவ்வா(து) அகன்றது நெடுமா கற்பம்
வீடிய நாளும் முற்றா ததுமிகப் பழைய தேனும்
பீடியல் மதிக்கொ ழுந்தில் பெரிதுமெல் லியது மாதோ.

**பொழிப்புரை:** *கோடி மகாகோடி கோடானு கோடி எண்ணிக்கை கொண்ட காத (யோஜனை) தூரம் நீண்டதும் அகன்றதும் ஒப்பிட்டுக் கூறமுடியாதது நீண்ட கற்ப காலம் (பிரளயத்திலும்) நீங்காதது மிகவும் பழையதாக இருப்பினும் பெருமையான சந்திர பிறையைக் காட்டிலும் மெல்லியது.* **(6.3.10)**

கற்பத்தில் பெருங்காற் றாலும் கலங்குறா ததுபேர் அண்டத்(து)
உற்பத்தி மூலம் ஆவ(து) ஒருவில்வப் பெருங்காய் உண்டு
சொற்பத்தும் அதன்பால் தோன்றித் தொலைவுறு பிரம்மாண் டங்கள்
அற்பத்தில் எண்ண வொண்ணா அத(ன்)இயல்(பு) இன்னம் கேளாய்.

*பிரளய காலத்தில் உண்டாகும் பெருங்காற்றாலும் அசைக்க முடியாதது, பெரிய அண்டங்களின் உற்பத்திக்கு காரணமாவது இத்தகைய தன்மையுடைய பெரியதொரு வில்வக்காய் உள்ளது. அதனிடத்து தோன்றி அழிந்து போகின்ற மிகப்பெரிய அண்டங்கள் சிறிது என்று எண்ணிவிட முடியாது. அதனுடைய தன்மையை இன்னமும் கேட்பாய்.* **(6.3.11)**

என்றும்பக் குவமாய் நின்று இறையுமூப்(பு) இடர்செ யாது
நின்றபல் கனியின் சாரம் அனைத்தையும் நிறைந்து நிற்கும்
துன்றிய அதன்பால் மச்சைக்(கு) அளவில்லை துன்னும் மச்சை
என்றது சிற்சொ ரூபத்(து) இயல்சமத் காரம் தானே.

**பொழிப்புரை:** *எப்பொழுதும் பக்குவமாய், கொஞ்சமும் முதுமை துன்பங்கள் செய்யாது, இருக்கின்ற பல கனிகளின் சாரம் அனைத்தையும் நிறைந்து நிலைக்கும். பெரிய வடிவுடைய அதனிடத்து இருக்கின்ற மச்சைக்கு (சாரத்திற்கு) அளவே கிடையாது. நெருங்கிய மச்சை என்று கூறியது சைதன்ய சொரூபத்தின் ஆற்றலே (சமத்காரமே) ஆகும்.* **(6.3.12)**

சஞ்சல ரூப மாம்சிற் சத்தியாம் சமத்கா ரத்தால்
செஞ்செவே சமமாம் தன்பால் சிற்கண்டான் விரிந்த(து) ஓதில்
விஞ்சிய வியோமம் ஈது காலத்தின் விகாரம் ஈது
துஞ்சல்இல் நியதி ஈது துவள்வுறு தொழி(ல்)ஈ(து) என்றும்.

**பொழிப்புரை:** *(தற்சொரூபத்தை விடாத) இந்த சலனவடிவாம் ஆற்றலே சித் சத்தியாம். இந்த சமத்காரத்தால் மிகவும் நன்றாக சமமாகிய தன்னிடத்தில் (அதாவது சைதன்யத்தின் சலன சுபாவமான கிரியா ரூப சத்தி) அறிவு, அறியப்படும் பொருள் (திருக்கு-திருஷ்டி) விரிந்த விதத்தை உரைத்திடில் வியாபகமாகிய ஆகாயத்தின் மீத காலம் என்பதின் விகாரம் இது. நித்திரையில்லாத (ஓய்வு என்பது இல்லாத) நியதி இது. அசைவு உடைய செயல் இது.* **(6.3.13)**

இதுபிர மாண்டம் அண்டம் ஆசையின் ஒழுங்(கு)ஈ(து) என்றும்
விதமுறு வில்வக் காயுள் வியன்சமத் கார மச்சை
அதுலனே என்ற லோடும் அண்ணலும் உரைப்பான் ஞான
முதல்வநீ வில்வக் காயாய் மொழிந்தது தெரிந்த(து) அன்றே.

**பொழிப்புரை:** *இது பிரம்மாண்டங்களின் கூட்டமாம். ஆசையின் (சங்கற்பத்தால் வந்த) கிரமம் ஆகும். பலவிதங்கள் அமைந்துள்ள வில்வக் காயினுள் அற்புதமாகிய சமத்காரம் மச்சையாம் (ஆற்றலாம்). ஒப்பிலாத இராகவனே! என்று கூறிடவும், அண்ணல் இராம பிரான் கூறுவார்: ஞான உபதேசத்தில் சிறந்த முதல்வனாகிய தேவரீர் வில்வக் காய் என்று கூறியது தெரிந்துவிட்டது" என்று.* **(6.3.14)**

வில்வக்காய் என்ற(து) ஐய பெரும்சித்தின் மிகுந்த சத்தை
புல்லுற்ற அகங்கா ராதிப் பொருள்எலாம் சித்தின் மச்சை
சொல்லுற்ற இரண்டாய் ஒன்றாய்த் தோன்றும்சிற் சொரூபத் துக்கு
மல்லல்தே சிகனே என்றும் பிரிவிலை மற்றும் கேளாய்.

**பொழிப்புரை:** *"ஐயனே! விலக்காய் என்று கூறியது பெரிய சித்தின் மகா சத்தையாம். அதனிடத்தில் ஆரோபமாகத் தோற்றுகின்ற அகங்காரம் முதலான பொருள்கள் அனைத்தும் அந்த சித்தின் மச்சையாம் (ஆற்றலாம்). சொல்லுகின்ற துவைதமாய் ஏகமாய்*

*தோன்றும் பேதமானது, சித் சொரூபத்திற்கு எப்பொழுதும் இல்லை, உபதேசிப்பதில் அதிசாமர்த்தியம் உடைய ஞானாசிரியரே!" என்றதும் இன்னமும் கேட்பாய் (என்று வசிட்டர் கூறுகின்றார்)* **(6.3.15)**

**புகல்பிரம் மாண்டம் என்னும் பூசுணிக் காயுள் மச்சை**
**அகல்வட மேரு ஆதி அகிலமும் ஆன வாபோல்**
**மிகஉயர் சித்தாம் வில்வக் காயினுள் விரிந்த மச்சை**
**பகர்பிரம் மாண்டம் ஆதி உலகங்கள் பலவும் என்றான்.**

**பொழிப்புரை:** *கூறிய பிரம்மாண்டம் என்று சொல்லப்பட்ட பூசணிக்காயினுள்ளே மச்சை என்பது விரிந்து பரந்துள்ள மேரு மலை முதலான உலகம் யாவுமாக ஆனது போல அவ்வாறு மிக உயர்ந்த சித்தும் ஆகும். வில்வக் காயினுள் விரிந்த மச்சவீ (ஆற்றல் தான்) கூறப்பட்ட பிரம்மாண்டம் முதலான உலகங்கள் எல்லாம் என்று வசிட்டர் கூறினார்.* **(6.3.16)**

**(நிருவாணப் பிரகரணத்தில் வில்வ பலக் கதை முற்றும்)**

# (iv) சிலைக் கதை

*முன்பு சர்வார்த்தத்தையும் உட்கொண்ட அத்விதீயமான சைதன்னியமே வில்வ பலமாக நிருபிக்கப்பட்டது. இப்போது விசித்திரமான சகச்சித்திரம் உடையதாயினும் சித்து அகண்டைகரசமும், நிர்விகற்ப கனமுடையதும் ஆம். அச்சித்தே மகா சிலையாக நிருபிக்கப்படுகின்றது.*

**மீண்டும் ஓர்கதை விசித்திர வியப்பது வீரநீ கேள்என்று**
**நீண்ட மாதவன் உரைசெய்வான் சிக்கென்று நெருங்கிமெல் லியதாகி**
**ஈண்(டு)அ கன்றுவித் தாரங்கள் முடிவின்றி இலங்கு(ம்)ஓர் பெருங்கல்லு**
**மாண்ட(து) உண்(டு)அதன் இடைவிரி கமலங்கள் மலர்ந்தன வரம்பில்லை.**

**பொழிப்புரை:** *மறுபடியும் ஒரு கதை விசித்திரமான ஆச்சரியத்தைத் தரக்கூடியது,. வீரனே! நீ கேட்பாய் என்று பெருந்தவத்தை உடைய வசிட்ட முனிவர் கூறத் தொடங்கியதாவது: சிக்கென்று நெருங்கி, மிருதுவாகி, இங்கும் எங்கும் வியாபித்து விரிந்ததாய் அளவின்றி விளங்குகின்ற ஒரு பெரிய சிலை (பெரிய கல்) மாண்புடையதாக இருக்கின்றது. அதன் மத்தியில் அகன்ற தாமரைகள் அளவின்றி பூத்திருந்தன.*
**(6.4.1)**

**இலைகள் தம்மில்தாம் கோத்தன நெருங்கின எதிர்சில தெரியாத**
**சிலதெ ரிந்தன மீதுதா ளாயின சிலசில கீழ்த்தாளாய்**
**நிலைகொள் மூல(ம்)இல் லாதன சிலஇவற்(று) இடைஎலா நிகழ்சங்கம்**
**பலதி ரண்டன சக்கர முடிவிலே பண்ணிய பதுமம்போல்.**

**பொழிப்புரை:** *இலைகள் ஒன்றுக்கொன்று பின்னிக்கொண்டு நெருக்கமாய் இருப்பன, எதிரே சில தெரியாதனவாம், சில தெரிந்தனவாம், மேலே மூலமாயினவாம் சில (புவனங்களுக்கு மேலாக இருந்தன), கீழே மூலமாயினவாம் சில (புவனங்களுக்குக் கீழாக இருந்தன), நிலை பெறும் படியான காரணமில்லாதன சில, இவற்றின் அருகில் எல்லாம் விளங்கும் சங்கம்; பல (நட்சத்திரக் கூட்டம் முதலியன) கிளைத்துள்ளன, அளவில்லாத சக்கரக் கூட்டங்களோ விரிந்த தாமரைகள் போல அமைந்துள்ளன.*
**(6.4.2)**

**என்ற போதுசா லக்கிரா மப்பெயர் இடத்திலே நெடுமாயன்**
**நின்ற குன்றிலே கண்டனன் அனைய(து)ஓர் நெடுஞ்சிலை எனக்கூறும்**
**வென்றி வீரனை வசிட்டனும் நோக்கியே வெற்புநீ முதல்கண்ட(து)**
**அன்று பேரண்ட நிலைமையுள் ளேஉறை அறிவையே சிலைஎன்றான்.**

**பொழிப்புரை:** *என்று இவ்வாறு (வசிட்டர்) கூறிய பொழுது, சாலக்கிராமம் என்ற பெயர் கொண்ட தலத்தில் நாராயணர் எழுந்தருளி இருக்கப்பெற்ற தாங்கள் கூறிய ஒப்பற்ற ஒரு பெரிய சிலையை (மலையை)த் தரிசித்தேன் என்று (இராமபிரான்) கூறவும், வெற்றி வீரனாகிய இராம பிரானை நோக்கி வசிட்ட முனிவரும் கூறுவதாவது: நீ முன்னர் தரிசித்தது சிலை அல்ல. பெரிய பெரிய பிரம்மாண்டங்களின் நிலையுள்ளே உள்ள சித்து உருவத்தையே சிலை என்று உரைத்தேன்.* **(6.4.3)**

**பலமும் ஒன்றுமெய் யாகிய சகங்கள்உள் பயின்றசித்(து) உயர்கல்லாம்**
**நலன்(ன்)உ றச்செறிந்(து) இறுகிஒன் றாகியே நவின்றசிற் சிலையின்பால்**
**உலக சாலங்கள் உறைந்திடும் வானிலே உறைதரு காற்றேபோல்**
**நிலன்விண் கால்கிரி திசைஎலாம் மேவியும் நெடுஞ்சிலை உரையாகா.**

**பொழிப்புரை:** *பலமும், ஏகமும், உண்மையும் ஆகி உலகங்கள் உள்ளே உள்ள சித்தானது (அறிவானது) உயர்ந்த சிலையாம் (கல்லாம்). நன்மை உடையதாகப் பொருந்தி நெருங்கி ஏகமே ஆகி இருக்கின்றது என்று கூறிய சித்து உருவச் சிலையின் இடத்தே உலக கூட்டங்கள் அமர்ந்திருக்கும் ஆகாயத்தில் இருக்கின்ற காற்றினைப் போலவாம். பூமி, ஆகாயம், காற்று, மலை, திக்கு என்னும் இவை அனைத்தும் பொருந்தியும் அந்த பெரிய சிலையானது (கல்லானது) துளை விழாது.* **(6.4.4)**

**செவ்வி தாங்கலில் வனசமும் சங்கமும் திகிரியும் எனும்கீற்று**
**வவ்வு கின்றதோர் சுழுத்தியாம் அவத்தையாய் மருவுறும் அதுபோலத்**
**தவ்வில் சித்தின்உள் உலகங்கள் முழுவதும் தங்குமால் வே(று)அன்றி**
**எவ்வி டத்தில்யா(து) எப்படி இருந்தஅவ் இடத்தி(ன்)அப் படிஎன்ப.**

**பொழிப்புரை:** *சிறந்ததான அந்த சிலையில் தாமரையும், சங்கும், சக்கரமும் என்னும் கீற்று பொருந்துகின்றதான ஒரு துயில் (சுழுத்தி) அவத்தையாய் மருவி இருக்கும். அதைப் போல கெடாத சித்தினுள் உலகங்கள் யாவும் இருக்கும் அன்னியமாக இல்லாமல் எவ்விடத்தில் எது எவ்வாறு இருக்கின்றதோ அவ்விடத்தில் அப்படி என்று கூறுவார்.* **(6.4.5)**

**நானாவாம் பணதிகள்உள் நண்ணுகினும் ஒருமையே நண்ணும்கல்போல்**
**ஆனாத சகங்களைஉள் ளடக்கினும்வேற் றுமைமேவா(து) அறி(வு)ஒன் றேயாம்**
**கானார்பங் கயம்எல்லாம் வேறன்றிக் கான்மயமாம் கணக்கே போல**
**வானாற்சிற் சொரூபத்தைப் பிரியாத தன்மயமாம் வையம் எல்லாம்.**

**பொழிப்புரை:** *பலவிதமான விசித்திரங்கள் உள்ளே பொருந்திய போதிலும் ஏகத் தன்மையே பொருந்தும் சிலைபோல, மாறாத உலகங்களை உள்ளே அடக்கிய போதிலும் பேதமாக ஆகாமல் சித்து ஏகமே ஆகும். அமைக்கப்பட்ட தாமரை முதலானவை அன்னியமாக (வேறாக) ஆகாமல் அந்தக் கல் மயமாகவே ஆவது போல், ஆகாயம் போல் பரந்து விரிந்துள்ள சித்து வடிவத்தை விட்டு நீங்காது அந்த சித்து வடிவமே ஆகும் இந்த உலகங்கள் எல்லாம்.* **(6.4.6)**

**விரிசிலையில் எழுதியபங் கயம்ஆதி உதித்(து)அத்த மித்த(து) உண்டோ**
**திரிபுவனங் களும்சித்தில் அப்படியே வில்வக்காய் செறிந்த மச்சை**
**பரிசினில்முன் உரைத்ததுபோல் முடிவில்லா விகாரத்தால் பரந்த அண்டம்**
**துரிசிலா அறிவினிடைத் துன்னுமால் வே(று)அன்று சொல்ல வொண்ணா.**

**பொழிப்புரை:** *விரிந்துள்ள கல்லில் செதுக்கப்பட்ட தாமரை மலர்ந்து வாடியது உண்டோ? அப்படியே சித்தில் மூவுலகங்களும் வில்வக்காயில் பொதிந்துள்ள மச்சை தன்மை போன்றது என்று முன்பு கூறியதைப் போல, முடிவில்லாத விகாரத்தினால்*

*விரிந்த பிரம்மாண்டம் அனைத்தும் குற்றமில்லாத சித்தினிடையே பொருந்தியிருக்கும், அன்னியம் (வேறானது) என்று சொல்வது கூடாது.* **(6.4.7)**

**பிரமத்தின் சற்பாவ வடிவான பேருலகின் பேதம் எல்லாம்**
**பரமார்த்த சுழுத்தியாய்ச் சாந்தமாய்ச் சமமாகிப் பயின்ற சித்தாய்க்**
**காமுற்ற தன்உருவாம் கண்ணாகும் கல்லிடைத்தா மரைகள் போலத்**
**திரமற்ற சிருட்டியெலாம் பயனில்லை உடல்க(ள்)எல்லாம் சேரா(து) என்றும்.**

**பொழிப்புரை:** *பிரம்மத்தின் சத்து உருவமான பெரியதான உலகங்கள் அனைத்தின் பேதம் எல்லாம் பாரமார்த்திகத்தில் (உண்மையில்) சுழுத்தியாய், சாந்தமாய், சமமாகி, விளங்கும் சித்தாய், பிரத்தியட்சமான (கண்கூடான) சுய ஆத்ம வடிவாம் திருஷ்டி (பார்வை - காண்கின்ற கோணம்) மாத்திரமே ஆகும். கல்லில் வடிக்கப்பட்ட தாமரைகள் போல திடமில்லாத சிருட்டிகள் யாவும் பயனில்லை. தேகங்கள் யாவும் வடிவத்தை உடையன ஆகாது என்றும்.* **(6.4.8)**

**(நிருவாணப் பிரகரணத்தில் சிலைக் கதை முற்றும்)**

# (v) அருச்சுனன் கதை

*முன்பு விசித்திரமாயினும் அகண்டைகரசமான சித்து சிலையாக நிரூபிக்கப் பட்டது. இப்போது சர்வமும் பிரமம் என்னும் விவேகிக்கு யுத்தாதியும் சித்த விசிராந்தியை வாதிக்காது எனத் தெரிவித்தற்கு இக்கதை கூறப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

என்னலுமே அறிவ(து)எலாம் அறிவுற்றேன் காண்பனவும் எல்லாம் கண்டேன்
உன்னருளால் என்னினும்நல் உணர்வுவளர் வுறமீட்டு ஒன்று கேட்கேன்
துன்னுலகை ஆயிரம்மட்(டு) அமைப்பதாய்க் கண்ணடிபோல் தோற்று கின்ற
முன்னுபுரி அட்டகத்தின் வடி(வு)ஏது மொழிஎன்ன முனிவன் சொல்வான்.

**பொழிப்புரை:** *என்று வசிட்ட முனிவர் கூறியதும், தேவரீரது அருளால் அறிய வேண்டிய யாவற்றையும் அறிந்தேன், காணக்கூடிய யாவற்றையும் கண்டேன் என்ற போதிலும் நல்ல ஞானமானது வளர்வதற்கு மறுபடியும் ஒன்றைக் கேட்கிறேன். விதம் விதமாகக் காட்டுவதான கண்ணாடி போல் இந்த நெருங்கிய உலகினைத் தோற்றச் செய்கின்ற புரியட்டகத்தின் வடிவம் எது என்று அருளிச் செய்ய வேண்டும் என்று இராமபிரான் கேட்கவும், வசிட்ட முனிவர் கூறுவார்.* **(6.5.1)**

ஆதிமுடி(வு) இன்றியே சகங்களின்வித் தாம்பிரமம் அடுத்த வண்ணம்
பேதமுற மேவுதலும் சீவனாம் நாம்என்று பேதித்(து) எண்ணம்
ஏதமுற நான்என்றாம் மனன(ம்)உற மனமாகும் இயைந்த போதம்
போதமுறு நிச்சயத்தால் புந்தியாம் புலன்களால் பொறிகள் ஆகும்.

**பொழிப்புரை:** *முதலும் முடிவும் இல்லாத பிரம்மம் இந்த சகத்தின் வித்தாய் தொடர்பு கொண்ட விதம் பேதம் (வேற்றுமையை) நன்கு அடைதலும், சீவனாகிய நாம் என்று பேதப்பட்டு எழுந்த எண்ணம் குற்றம் பொருந்திய நான் என்றாகும் சிந்தித்த அளவிலே மனம் எனப் பெயர்பெறும். பொருந்திய உணர்வு அறிவாகும். நிச்சயம் செய்தலால் புத்தியாம். சப்தம் முதலிய விஷயங்களைக் கவர்வதால் புலன்கள் எனப்படும்.* **(6.5.2)**

காய(ம்)எனும் நினைவாலே காயமாம் கடநினைவால் கடம(து) ஆகும்
ஏயசுபா வத்(து)இந்த வடிவுபுரி அட்டகமாம் என்பர் வீரா
தூயஅறி ஞன்செய்வோன் புசிப்பவன்சான்(று) என்றல்முதல் துரி(சு)இல் ஓடி
மேயபெயர் சீவனாம் அறிவு புரிஅட்டகமாய் விளம்பும் அன்றே.

**பொழிப்புரை:** *தேகம் என்ற எண்ணத்தாலே தேகம் ஆகும். குடம் என்ற எண்ணம் உண்டாக குடமாக ஆகும். ரகுவீரனே! பொருந்திய சுபாவத்தோடு கூடிய இந்த சொரூபமே புரியட்டகம் எனச் சொல்வர். அறிஞன் நான், செய்பவன் நான், அனுபவிப்பவன் நான், சான்று நான் என்பது முதலான அபிமானம் உடைய அறிவே சீவன் எனப்பெயர் பெறும் அந்த அறிவின் சொரூபத்தைப் புரியட்டகம் எனச் சொல்வர்.* **(6.5.3)**

**கடியபுரி அட்டகத்தின் வசத்தாலே கனவில்மேல் கனவு பற்றி**
**நெடியபல பொய்காணும் நெறிபோல இச்சகமும் நிகழும் அன்றே**
**படியளந்தோன் அருளுவது்ஓர் நெறிகேளாய் அந்நெறியைப் பார்த்தன் பற்றி**
**அடிமுடிவில் பதச்சீவன் முக்தனாய்ச் சுகசீவி ஆகும் அன்றே,**

**பொழிப்புரை:** *வலுவான புரியட்டகத்தின் வசத்தாலே கனவு அதன்மேல் கனவு என்று கனவுகளைப் பற்றிக் கொண்டு நீண்ட பல மித்தையைப் பார்க்கும் நெறிபோல, இந்த சகமும் அப்பொழுது மாத்திரம் தோற்றம் அளிக்கும். பூமியை மூவடியால் அளந்த பரந்தாமன் அருளுகின்ற ஒப்பற்ற நெறியைக் கேளாய். அந்த மார்க்கத்தை அர்ச்சுனன் பின்பற்றி, முடிவில் பதமாம் சீவன் முத்தனாய் பேரானந்த வாழ்வு அடைந்தவன் ஆவன்.* **(6.5.4)**

**வெருவாமல் அருச்சுனன்நாள் கழிப்பதுபோல் நாள்கழிப்பாய் வீர என்னப்**
**பெருமானே அருச்சுனன்எப் போது்உதிப்பன் அவனுக்குப் பின்னை காந்தன்**
**அருளால்எவ் வாறு்உபதே சிப்பது்எனக் கேட்டு்அருளும் அண்ண லுக்குத்**
**திருமால்வந்து் அருச்சுனற்கு மேல்உணர்த்து நெறிவசிட்டன் செப்ப லுற்றான்.**

**பொழிப்புரை:** *அஞ்சாமல் அர்ச்சுனன் நாட்களைக் கழிப்பது போல் நாட்களைக் கழிப்பாய் வீரனே! என்று கூறவும், பெருமானே! அர்ச்சுனன் எப்போது தோன்றுவான், அவனுக்கு இலட்சுமி நாயகன் கிருபையால் எவ்வாறு உபதேசிப்பது என்று கேட்ட அண்ணல் இராமபிரானுக்குத் திருமால் அவதாரம் செய்து அர்ச்சுனனுக்கு உபதேசம் செய்கின்ற நெறியை வசிட்ட முனிவர் உபதேசிக்கத் தொடங்கினார்.* **(6.5.5)**

**உகநாலு முடிவுதொறும் உயிர்அனைத்தும் செற்றவினை உன்னிக் கூற்றுத்**
**தகவான தவம்செய்யும் ஒருகால்எட்டு் ஆண்டுதச வருடம் ஓர்கால்**
**மிகு(ம்)ஈராறு் ஆண்டு்ஒருகால் ஐயாண்டு்ஓர் கால்ஓர்கால் மீண்டு்ஏழ்ஆண்டு**
**துகள்தீரும் பதினாறு்ஆண்டு் ஒருகால்இப் படிப்பலகால் துணிந்து நோற்கும்.**

**பொழிப்புரை:** *ஒவ்வொரு சதுர் (நான்கு) யுக முடிவிலும், உயிர்கள் அனைத்தையும் மரணிக்கச் செய்ததனால் (உயிர் பறித்ததனால்) அந்தக் கர்மம் தன்னைப் பிடித்துக் கொண்டதெனக் கருதி, யம தர்மன் தகுதியான தவத்தைச் செய்வார் ஒரு சமயம் எட்டு ஆண்டுகள், மற்றொரு சமயம் பத்து ஆண்டுகள், பின்பு ஒரு சமயம் மிகுதியான பன்னிரண்டு ஆண்டுகள், மற்றொரு சமயம் ஐந்தாண்டுகள், வேறோர் சமயம் மறுபடியும் ஏழ் ஆண்டுகள், குற்றம் இல்லாத பதினாறு ஆண்டுகள் பின்பு ஒரு சமயம் என்று இப்படி பல காலம் துணிந்து தவத்தைச் செய்வார்.* **(6.5.6)**

**இப்படியே யமன்தவம்பூண்டு் ஓர்உயிரும் கொல்லாமல் இருந்த போது**
**மொய்ப்புறுபல் உயிராலும் பெயர்(வு)அற்று் அறநெருங்கு மூரி ஞாலம்**
**அப்படியி னால்அந்த விசித்திரமாம் பலபூதம் அநேக மான**
**துப்புறும் ஊகங்களால் பூபாரம் தொலைவிக்கும் தொன்று தொட்டே.**

**பொழிப்புரை:** *இப்படியே யமதர்மன் தவத்தைச் செய்து கொண்டு, ஒரு உயிரையும் கொல்லாமல் இருந்த பொழுது, ஒன்றாகச் சேர்ந்த பல சீவர்களாலும் அசையக் கூட இடம்*

*இல்லாமல் முழுவதுமாக நெருக்கத்தை அடைந்த உலகத்தில் அப்படி பல விசித்திரமான உயிரினங்களைப் பல உத்திகளால் அழித்து காலம் காலமாக பூபாரம் தீர்த்து அருள்வர்.* **(6.5.7)**

**இவ்வகையே நாலு(உ)கமும் பல்லுயிரும் உலகமுதல் இறந்து போனன**
**அவ்வகையோர் எண்ணில்லை ஆதித்தன் தந்தநமன் அந்த வண்ணம்**
**கைவளர்பல் உயிர்கொன்று கரந்தநாள் உறுபாவம் கட்டு(டு)அ ழிப்பான்**
**எவ்வமறு தவம்பூண்டு பன்னீராண்(டு) ஏகாந்தத்(து) இருந்த எல்லை.**

**பொழிப்புரை:** *இவ்வாறே நான்கு யுகங்களும், பல உயிரினங்களும், உலக முதல் அண்டங்கள் பலவும்; அழிந்து போயின அந்தப் பிரகாரம் அதற்கு ஓர் கணக்கில்லை. சூரியன் அளித்த யமதர்மன் அந்த வண்ணம் கையில் அகப்பட்ட உயிர்களுக்கு மரணத்தை அளித்து சென்ற நாட்களில் வந்த பாவக் கட்டினை அழிப்பதற்கு குற்றமில்லாத தவத்தைப் பூண்டு பன்னிரண்டு ஆண்டுகள் தனிமையில் இருந்த சமயம்.* **(6.5.8)**

**அதனாலே சாவில்லாப் பல்லுயிரால் அறநெருங்கும் அதிபா ரத்தை**
**எதனாலே தீர்வ(ம்)எனத் திருமாலைச் சரணாக எய்தும் பூமி**
**மதுசூதன் இருவடிவாய் அவனியிலே அவதரிக்கும் வசுதே வற்குச்**
**சுதனாகும் வடி(வு)ஒன்று பாண்டுவுக்குச் சுதனான சொரூபம் ஒன்றே.**

**பொழிப்புரை:** *அதனால் பல உயிரினங்களும் இறப்பு ஏற்படாமல் நெருங்கி அதிகமானதால் ஏற்பட்ட மிகுந்த பூபாரத்தை எந்த வழியில் குறைப்பது என்று திருமாலைச் சரணடைந்தாள் பூமி தேவி. மது என்னும் அசுரனைக் கொன்ற பகவான் நாராயணர் இரண்டு வடிவமாகப் பூமியிலே அவதரிக்கும். ஒரு வடிவம் வசுதேவருக்கு மைந்தனாகும். மற்றொரு வடிவம் பாண்டு அரசனின் புதல்வனாகும்.* **(6.5.9)**

**வாசுதே வப்பெயரும் அருச்சுனன்நா மமும்படைத்து வரு(ம்)அப் போதில்**
**வீசுதார் திருதராட் டிரன்மைந்தர் கிளைஞரொடும் விசயன் மேலே**
**ஏசுபோர் செய்யவரும் தன்கிளைஞர் மரணத்துக்(கு) இறங்கிப் பார்த்தன்**
**ஆசுசரா சனம்வளையான் அதுபொருட்டால் உபதேசம் அருளும் மாயன்.**

**பொழிப்புரை:** *வாசுதேவர் என்ற திருநாமமும்;, அர்ச்சுனன் என்ற பெயரும் தாங்கி வரும் அந்த காலத்தில், மணம் வீசும் மாலை அணிந்த திருதராட்டிரன் புதல்வர் உறவினர்களுடன் அர்ச்சுனன் மீது வசைபாடி போர் செய்ய வரும். தன்னுடைய உறவினர்களின் மரணத்துக்கு இரக்கம் கொண்டு அர்ச்சுனன் விரைவில் வில் வளைத்துப் போர் செய்யாமல் மயங்கி நிற்பான். அதன் காரணமாக கிருஷ்ண பகவான் உபதேசம் செய்தருளுவார்.* **(6.5.10)**

விசய(ன்)எனும் பெயர்உடற்கு விண்டுவெனும் ஞானவுடல் விளம்பும் உண்மை
இசையுறக்கேள் அனந்தமாய்த் தெரி(வு)அரிதாய் அடிமுடி(வு)அற்(று) இருக்கும் உன்னை
அசை(வு)அறப்பார் அருச்சுனா அறி(வு)உருவம் குற்றங்கள் இன்றி நிற்கும்
தசைஉடலில் ஒருக்காலும் பிறப்புறாய் இறப்புறாய் சத்தா நின்றாய்.

**பொழிப்புரை:** *அர்ச்சுனன் என்னும் பெயர் கொண்ட தேகத்திற்கு கிருஷ்ண பகவான் என்னும் ஞானத் திருமேனி உபதேசிக்கும் பொருளை மனம் இசையக் கேட்பாய். முடிவில்லாததாய், அறிதற்கு அரிதாய், ஆரம்பம் முடிவும் இல்லாமல் விளங்கும் ஆன்ம சொரூபத்தைச் சலனம் இன்றி நோக்குவாய். அர்ச்சுனா! சித்து வடிவம் குற்றங்கள் இன்றி திகழ்ந்து கொண்டிருக்கும். இந்த மாமிச உடலில் ஒருபொழுதும் பிறப்பு அடையமாட்டாய். இறப்பும் அடையமாட்டாய். சத்து வடிவமாக எப்பொழுதும் இருப்பாய்.* **(6.5.11)**

**பிறப்(பு)இல்லை இறப்(பு)இல்லை இவன்என்ன வடி(வு)இல்லை புன்(பு)உண் டாகா**
**அறப்பழைதாய் நித்தமாய் அழிகின்ற சரீரத்தில் அழியாச் சற்றும்**
**உறப்புரியும் தொழில்களைநீ யோயாது சங்கத்தை ஒருக்கிச் செய்வாய்**
**இறப்(பு)இல்பிர(மு) அர்ப்பண வாசார பிரமமாம் இமைப்பில் நிற்பாய்.**

**பொழிப்புரை:** *இந்த ஆன்மா பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை (பிறப்பும் இறப்பும் தேகத்தின் தர்மம் - இயல்பு), முன்பு இருந்து பின்பு இல்லாமல் போவதும் இல்லை என்பதால் இறப்பு இல்லை. முன்பு இல்லாதிருந்து பின்பு உண்டாவதும் இல்லை என்பதால் பிறப்பும் இல்லை. மிகப் பழையதாய் அதாவது எண்ணங்கள் இல்லாத நிலையில் நித்தியமாய் அழிகின்ற இந்த தேகத்தில் கொஞ்சமும் அழியாமல் இருக்கும். கிடைத்ததில் கிடைக்காததில் சமமாக இருந்து தொழில்களில் பயனின் விருப்பத்தை விட்டு, அழியாத சாசுவதமான பிரம்மத்தின் அர்ப்பணமாக காரியங்களைச் செய்திடில் கணப் பொழுதில் பிரம்ம சொரூபமே ஆவாய்.* **(6.5.12)**

**ஈச(ன்)இடத்(து) எப்பொருளும் சமர்ப்பித்து மிகு(ம்)ஈசன் வடிவம் எய்திப்**
**பாச(ம்)உறு உயிர்க்(கு)எல்லாம் ஈசனாய்ச் சங்கற்பப் பற்று மாய்த்து**
**நீசமனாய்ச் சாந்தமனத் தினன்ஆகி முனியாய்ச்சந் நியாசி ஆகி**
**ஏ(சு)அறுயோ கியும்ஞான வானுமாய் முத்தியினை எய்து(க) என்ன.**

**பொழிப்புரை:** *எல்லாப் பொருள்களையும் பரமாத்மாவிடம் சமர்ப்பணம் செய்து, பரமேசுவரனது வடிவத்தை அடைந்து, ஆவரணத்தை அடைந்த சீவர்களுக்கு எல்லாம் ஈசனாகி, எண்ணங்களின் சம்பந்தம் தொடராமல் அழித்து, நீ சமமான பார்வை உடையவனாய், சாந்தம் உடைய மனத்தினனாகி, முனியாகி, எல்லாவற்றையும் துறந்த சந்நியாசி ஆகி, குற்றம் அற்ற யோகியும், ஞானவானும் ஆகி, மோட்சத்தை அடைவாயாக என்று அருளிச் செய்ய.* **(6.5.13)**

**சங்க(ம்)அறுத் திடல்பிர(ம)அர்ப் பணம்ஈசு(ர) அர்ப்பணமே சந்நி யாசம்**
**பங்க(ம்)அறு ஞானமே யோகமே எனும்இவற்றின் பகிர்ச்சி யாதோ**
**செங்கண்முகி லேஎன்ற விசயனுக்கு மால்அருள்வான் செறிசங் கற்பம்**
**அங்(கு)உறவா தனைகெடஓர் நினைவு(ம்)இலா இடம்பரம வத்து என்பர்.**

**பொழிப்புரை:** *எல்லாவற்றிலும் பற்று விடல், பிரம்மத்திற்கு அர்ப்பணம், ஈசுவரனுக்கு அர்ப்பணம் இவையே சந்தியாசம். சகல துக்கங்களையும் போக்கும் ஞானம் யோகம் இவைகளின் பாகுபாடு என்னவோ? செந்தாமரைக் கண்களை உடைய முகில் வண்ணனே என்று அர்ச்சுனன் கேட்கவும், பகவான் கிருஷ்ணர் அருளிச் செய்வார்: பொருந்துகின்ற*

*சங்கற்பம் ஒடுங்க, வாசனைகள் கெட்டுப் போக, ஒரு எண்ணமும் இல்லாத இடமே பரப்பிரம்ம வத்து என்பர்.* **(6.5.14)**

**ஏகம்)எனும் பிரமத்துக்(கு) உறுமுத்தி யோகமே இலங்கு ஞானம்**
**யோகமும்)ஆங்(கு) அதுவென்பர் உலகமும்)நா னும்பிரமத்(து) உரு(வ்)என்(று) ஓர்தல்**
**ஆகுபிரம்) அர்ப்பணமாம் கருமபலம் விடல்சந்நி யாசம் ஆகும்**
**சோகம்)உறு சங்கற்பம் அறுத்தலே சங்கத்தைத் துடைத்த(து) என்பர்.**

**பொழிப்புரை:** *ஏகமாகிய (ஒன்றாகிய) பிரம்மத்தை அடையச் செய்யும் முயற்சியே வித்தையாகிய ஞானமாம், அங்கு அதுவே யோகமும் ஆகும் என்பர். ஜசுத்தும் நானும் பிரம்ம வடிவமே என்று விசாரம் செய்து உணர்தல் பிரம்ம அர்ப்பணம் ஆகும். கர்மத்தின் பலனை விட்டு விடலே சந்நியாசம் ஆகும். துக்கத்தைக் கொடுக்கும் எண்ணங்கள் அற்றுப் போதலே சங்கத்தை (அனைத்து பொருள்களின்) தொடர்பை விட்டதாகும் எனக் கூறுவர்.* **(6.5.15)**

**எண்ணம்)அனைத் தினும்ஈசன் ஒருவனே என்(று)இருமை எண்ணம் தீர்தல்**
**புண்ணியஈ சு(ர)அர்ப்பணமாம் எனைநாடி எனக்(கு)அன்பாய்ப் பூசித்(து) என்னை**
**நண்ணிஎனைத் தொழு(து)என்னைத் துதித்தாயேல் நான்எனும்நின் சொரூபச் சோதி**
**உ(ள்)நிறையும் பரமம்சா மானியம்)என்(று) இரண்டுவடி(வு) உண்(டு)எ னக்கே.**

**பொழிப்புரை:** *எல்லா எண்ணங்களிலும் பரமாத்மா ஒருவனே என்று (ஈசுவரன் வேறு, நான் வேறு என்ற) இரண்டுபட்ட எண்ணம் (துவைத நினைவு) தீர்தல் புண்ணியம் மிகுந்த ஈசுர அர்ப்பணம் ஆகும். என்னையே தியானித்து, எனக்கே அன்பாய் பூசனை செய்து, என்னையே அடைந்து, என்னையே வணங்கி, என்னையே துதிப்பாய் ஆயின் நான் என்னும் உனது சோதியாகிய வடிவம் உள்ளே நிறையும். வாசுதேவனாகிய எனக்கே பரமம் (அசாதாரணம்), சாமானியம் (சாதாரணம்) என்ற இரு வடிவங்கள் உண்டு.* **(6.5.16)**

**சங்(கு)ஆழி பயில்கரத்தை முதலான அங்கம்சா மானி யம்தான்**
**மங்காமல் அடிமுடி(வு)அற்(று) ஒன்றாய வடிவுபர வடிவம் ஆகும்**
**இங்கான பிரமம்)எனப் பரமம்)என இசைப்பதெலாம் இந்த ரூபம்**
**சிங்காமல் இதுதனைநீ தெளி(வு)அளவு நாலுபுயத் தேவை ஏத்து.**

**பொழிப்புரை:** *சங்கு, சக்கரம் முதலானவற்றைத் தரித்த கரங்களை உடைய திருமேனி சாமானியம் அதாவது பொதுவாகும். குன்றாமல் ஆதி அந்தம் இல்லாததான ஏகமான வடிவம் மேலான வடிவமாகும். இங்கு விவகரிப்பதற்காக பிரம்மம் எனவும், பரமம் எனவும் சொல்வதெல்லாம் இந்த வடிவமே ஆகும். சந்தேக விபரீதங்கள் இல்லாமல் இந்தப் பரம்பொருளை நீ தெளிந்து உணர்கின்ற வரையில் நான்கு கரங்களை உடைய தெய்வைத்தை உபாசிப்பாய்.* **(6.5.17)**

**அக்கடவுள் பூசையினால் அறிவுநிறைந்(து) அதனால்அப் பதமும் சேர்வை**
**மிக்கபர மாகியஎன் உருவம்)உறில் பிறவிநோய் மீண்டு சேரா**
**பக்கஅபி மானம்போய் மோகம்போய்ச் சங்கம்போய்ப் பரமே மெய்யாய்த்**
**துக்கசுக தொந்தம்போய் ஆசைபோய் அறி(வு)உற்றோர் தொடர்வர் ஆங்கே.**

**பொழிப்புரை:** *அந்த நான்கு கரங்களுடைய தெய்வத்தைப் பூசித்துக் கொண்டு வருவதால் ஞானம் பூரணமாகி, அதனால் அந்த பதத்தையும் அடைவாய். மிக்க மேலானதாகிய எனது உருவத்தை அடைந்தால் பிறப்பு என்ற நோய் மீண்டும் வந்து அணுகாது. தேகம் முதலியவற்றில் அபிமானம் போய், மோகமும் போய், பற்றும் அழிந்து, பரம்பொருளே மெய்யாய், துக்கம் சுகம் தொடக்கம் அற்று, நிராசையாய் ஞானம் அடைந்தவர் பற்றுவர் அந்த வாசுதேவனையே.* **(6.5.18)**

**காமம்(ம்)உறு சங்கற்பம் இன்றிஆ ரம்பம்(ம்)எலாம் கலந்து நிற்போர்**
**தாமம்(ம்)உறு ஞானத்தீ யால்கருமங் களைச்சுட்ட சான்றோர் என்பர்**
**சேமமு(ம்)மேல் வரும்பொருளும் சிந்தைஅறத் தொந்த(ம்)அறச் சித்தாம் உண்மை**
**தோ(ம்)அறப்பெற்(று) எப்போதும் தோற்றுதொழில் வழிநிற்பாய் துளக்கம் இன்றி.**

**பொழிப்புரை:** *ஆசை அதனால் வரும் எண்ணங்கள் இன்றி சகல தொழில்களையும் செய்து கொண்டிருப்போர் ஒளிர்கின்ற ஞான அக்கினியாலே கருமங்களைச் சுட்ட பெரியோர் என்று சொல்வர். இருப்பவற்றைக் காப்பதிலும், வாராதவற்றைப் பெறுவதிலும் மனம் செலுத்தாதவர் துவந்துவம் (இருமைகள்) அற்று, சச்சிதானந்த பரமாத்மாவைக் குற்றமற அடைந்து, எப்போதும் எதிர்ப்பட்ட தொழில்களில் எந்தவிதக் களங்கமும் இன்றி விவகாரம் செய்வர்.* **(6.5.19)**

**வீசியஊ ழிக்காற்று மேவிடினும் விந்தமலை வெடித்த போதும்**
**தேசிகன்நூல் கற்பித்த செந்நெறியை மதிமான்கள் திறம்பல் செய்யார்**
**மா(சு)அறுமெய்ஞ் ஞான(ம்)இலா மடமையால் வாதனைமெய் வடிவாய் நிற்கும்**
**கா(சு)அறுமெய்ஞ் ஞான(ம்)எனும் பெருங்கடல்கோத் தால்அதனுள் கரைந்து போமே.**

**பொழிப்புரை:** *வீசுகின்ற ஊழிக்காற்று வீசிய போதும், விந்திய மலை வெடித்து சிதறிய போதும், ஞானாசிரியர் மற்றும் ஆத்ம சாத்திரங்களும் கற்பித்த சிறந்த நெறியை அறிவுடையோர்கள் விட்டு மாறாகப் போக மாட்டார்கள். குற்றமில்லாத தத்துவ ஞானம் இல்லாத அறியாமையால் வாசனையானது உண்மை வடிவமாய் இருந்து தோற்றம் அளிக்கும். தத்துவ ஞானம் என்னும் பெருங்கடல் பரவினால் அதனுள்ளே கரைந்து போகும் என்பது நிச்சயம்.* **(6.5.20)**

**என்(று)அருளித் திருநெடுமால் இமைப்போது மோனம்போல் இருத்த லோடும்**
**வென்றிமிகு விசயன்மகிழ்ந்(து) உரைசெய்யும் வகைகேளாய் மெய்ம்மை வீரா**
**கன்றுதுயர் அனைத்தும்போய் எனதுமதி பரம்பொருளைக் கலந்த(து) ஐயா**
**துன்(று)இரவி காணவிரி கமலம்போல் எனவிசயன் சொல்லும் அன்றே.**

**பொழிப்புரை:** *என்று இவ்வாறு அருளிச் செய்து, பகவான் கிருஷ்ணர் கணநேரம் மௌனமானது போல் இருக்கவும், வெற்றி மிகுந்த அர்ச்சுனன் ஆனந்தத்தை அடைந்து கூறும் அந்த பிரகாரத்தைக் கேட்பாய் உண்மையான வீரனே! வாட்டுகின்ற துயரங்கள் அனைத்தும் நீங்கி, அடியேனுடைய புத்தியானது சூரிய ஒளிக்கதிர்களைக் கண்டு மலர்கின்ற தாமரை போல் பரமாத்ம வத்துவைக் கலந்தது என்று அர்ச்சுனன் கூறும்.* **(6.5.21)**

**(நிருவாணப் பிரகரணத்தில் அருச்சுனன் கதை முற்றும்)**

# (vi) சதவுருத்திரர் கதை

*முன்பு விவேகிக்கு யுத்தம் முதலியவையும் சித்த அமைதியைப் பாதிக்காது என்று அருச்சுனன் கதை சொல்லப்பட்டது. இப்போது இந்த பிறவிப் பரம்பரை தனது சங்கற்ப வடிவ பிராந்தி பரம்பரை மாத்திரத்தால் வரப்பெற்றது என்று தெரிவிப்பதற்கு இக்கதை கூறப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**மீட்டு(ம்)ஓர் கதைகேள் என்று வீரற்கு வசிட்டன் சொல்வான்**
**நாட்(டு)உளோர் சந்நி யாசி ஞானவான் சமாதி உள்ளோன்**
**நீட்(டு)உறு சமாதி யாலே நிமலமாம் நெஞ்சின் ஒன்றை**
**ஈட்(டு)உற நினையின் அப்போ(து) எய்துநீர் அலைஆ மாபோல்.**

**பொழிப்புரை:** *மறுபடியும் ஒரு கதை கேட்பாயாக என்று இராம பிரானுக்கு வசிட்ட முனிவர் கூறத் தொடங்குகின்றார். ஒரு நாட்டிலுள்ள சந்நியாசி ஞானம் உடையவன், சமாதி அப்பியாசம் உடையவன், நீண்ட கால சமாதி அப்பியாசத் தாலே நிர்மலமான மனதில் ஒரு பொருளை பெற எண்ணுகின்ற அப்போதே அது கிடைத்திடும் நீரானது அலையாக ஆவது போல.* **(6.6.1)**

**ஒருபகல் சமாதி நீங்கி இருந்தனன் உயர்சந் யாசி**
**கருதிடும் அவர்க்குப் பற்றிப் பாச்சறான் காணும் என்று**
**சுருதிஉண்(டு) உலகோர் செய்யும் தொழிலையாம் விநோத மாக**
**இருதயத்(து) உன்னு வோம்என்(று) எண்ணிய(து) இவன்தன் நெஞ்சம்.**

**பொழிப்புரை:** *ஒரு சமயம் அந்த சந்நியாசி சமாதியிலிருந்தும் எழுந்திருந்தனன். எண்ணியவர்க்கு எண்ணியபடியே தான் தோற்றும் என்று சாத்திர ஆணை உள்ளது. இவனுடைய மனமானது சாதாரண மக்கள் செய்கின்ற தொழிலை நாம் விளையாட்டாக இதயத்தில் நினைப்போம் என்று சிந்தித்தது.* **(6.6.2)**

**மற்றொரு புருடன் ஆனான் அசைவுமாத் திரத்தால் மீளப்**
**பற்றியும் பண்டை யோனைத் தான்எனப் பாவிக் கைக்குப்**
**பெற்றிலேன் காக தாலீ யப்படி பெற்ற வாஞ்சை**
**உற்றனன் சீவ டன்பேர் ஒருவ(ன்)என்(று) உணர்ந்தான் தன்னை.**

**பொழிப்புரை:** *(மன) அசைவு மாத்திரத்தில் மற்றொரு புருஷனாக ஆனான், திரும்ப முயற்சி செய்தும் பழைய தன்னை நான் தான் என்று பாவிப்பதற்கு ஆற்றல் பெற்றிலன். (காகம் அமர பனம்பழம் விழுந்தது என்று சொல்லும்) காகதாலீய நியாயம் போல, புதியதாக அடைந்ததில் ஆசை அடைந்தான். சீவடன் என்னும் பெயருடைய ஒருவனாகத் தன்னை அறிந்தான்.* **(6.6.3)**

சித்தம்வே(று) ஒருவன் ஆன சீவடன் இவ்வா(று) ஆகி
உற்றஇக் கனவில் செய்த நகரில்ஓர் தெருவில் மேவி
மெத்தநாள் இருந்தான் ஆங்கே விநோதபா னத்தை உண்டு
மத்தனாய் மதுவை உண்ட மதுபம்போல் உறக்கம் உற்றான்.

**பொழிப்புரை:** *மனம் வேறு ஒருவனாக ஆன அந்த சீவடன் இந்தப் பிரகாரம் இந்தக் கனவிலே அமைத்த நகரில் ஒரு வீதியை அடைந்து பல நாட்கள் இருந்தனன். அந்த இடத்தே வேடிக்கையாக மதுவைக் குடித்து உன்மத்தனாய் தேனையுண்ட வண்டினைப் போல உறங்கினான்.* **(6.6.4)**

கனமுறு கனவில் வேறோர் கலைமறை யவனாக் கண்டான்
மனனிலே பற்றிப் பாச்சல் மாத்திரம் அதனால் மற்றோர்
சனபதம் அடைதல் போலாய்ச் சரித்தனன் சின்னாள் அங்கே
தினமிகு வியாபா ரத்தால் தேகநொந்(து) உறக்கம் உற்றான்.

**பொழிப்புரை:** *(அந்த உறக்கத்தில் உண்டான) ஆழமான கனவில் மற்றொரு வேதம் ஓதும் அந்தணனாகக் கண்டான். மனதிலே தோற்றம் மாத்திரத்தினால் வேறொரு நாட்டை அடைதல் போலாய் அந்த இடத்திலே சிலகாலம் சஞ்சாரம் செய்தான். தினமும் செய்த தொழிலினால் தேகம் வாடி அயர்ந்து உறக்கத்தில் ஆழ்ந்தான்.***(6.6.5)**

பாதபம் விதையா னால்போல் பள்ளிகொள் மறையோன் தன்பால்
போதுறு கனவில் தன்னைப் பொருவில்வன் னியனாக் கண்டான்
மேதகும் உணவால் துஞ்சி மேவிய கனவில் தன்பால்
பூதலத்(து) அரச னாக அவன்தனைப் பொலியக் கண்டான்.

**பொழிப்புரை:** *மரமானது விதையானது போல, உறங்குகின்ற அந்தணன் தன்னிடத்தில் உண்டாகிய கனவில் தன்னைப் போர்புரியும் வில்லாளியாகக் கண்டான். மிகுந்த ஆகாரம் உண்டு உறங்கியதால் உண்டான கனவில் பூமண்டலத்திற்கு அரசனாக தான் விளங்குவதைக் கண்டான்.* **(6.6.6)**

அரச(ன்)ஓர் இரவு துஞ்சி அடைந்தஓர் கனவில் தன்னைச்
சுரமக ளாகக் கண்டான் சுரமகள் சுரதப் போரில்
பரவச மாகத் துஞ்சப் பயில்வுறு கனவில் தன்பால்
குரமட மானாக் கண்டாள் கூறுமான் துயின்ற(து) ஓர்கால்.

**பொழிப்புரை:** *அரசன் ஒரு இரவில் தூங்கவும், அதில் உண்டான ஒரு கனவில் தன்னைத் தேவ மங்கையாகப் பார்த்தான். தேவ மங்கை காம விளையாட்டில் ஆடி களைத்துப் பரவசமாக உறங்க, அந்த உறக்கத்தில் உண்டான கனவில் தான் குளம்புகளுடன் கூடிய பெண் மானாக இருப்பதாகக் கண்டான். கூறிய அந்த மான் ஒரு வேளை நன்றாக உறங்கியது.* **(6.6.7)**

துஞ்சமான் பரிச யத்தால் சூழ்ந்தஓர் கொடியாத் தன்பால்
செஞ்சவே கனவில் கண்ட(து) அண்ணலே திரியக் கேனும்
நெஞ்சுறக் கண்ட கேட்ட மறப்பில நிகழ்க னாவில்
சஞ்சரித் திடவே காணும் ஆதலால் சாற்றக் கேளாய்.

**பொழிப்புரை:** *தூங்கிய மான் பழக்க வசத்தால் சூழ்ந்த ஒரு கொடியாகத் தன்னிடத்தில் நன்றாகத் தன்னைக் கனவில் கண்டது. இராகவ! விலங்குகளாக இருப்பினும் மனமுறக் கேட்டவை கண்டவை முதலானவற்றை மறந்திடாது. உண்டான கனவில் தோற்றம் அளிப்பதாகவே காணும். ஆகவே சொல்லக் கேட்பாய்.* **(6.6.8)**

பூவுமென் தளிரும் காயும் பொலிந்தஅக் கொடிதன் காட்டில்
தேவதை யான அந்தத் தேவிவாழ் வனமாய்த் தோன்ற
மேவுவித்(து) எனும்அ வற்றில் அங்குர மேனி ஒப்பாய்த்
தாவுறு ஞேயம் உற்ற தன்னுடை அறிவி னாலே.

**பொழிப்புரை:** *(மான் அதனது கனவில் கண்ட) பூவும் மென்மையான தளிரும் காயும் பொலிந்து திகழும் அந்தக் கொடியானது தான் வாழும் நாட்டில் தேவதையான அந்த தேவி வாழ்கின்ற காடாக விளங்க, பொருந்துகின்ற விதை என்னும் அவற்றில் முளை வடிவத்திற்கு ஒப்பாய் தன்னுடைய உணர்வினாலே விஷயத்தை அடைந்தது.* **(6.6.9)**

தன்னுடை வணம்தூ ரத்தே சார்ந்ததாய்த் தன்னுள் கண்டு
முன்னிய சுழுத்தி உற்ற அறிவினால் மூடத் தன்மை
துன்னுற அனுப வித்துச் சுரும்(பு)எனத் தன்னைக் கண்ட(து)
அன்னவண்(டு) ஓடை கஞ்ச வலயம்கீண்(டு) அத(ன்)உள் ளான.

**பொழிப்புரை:** *தன்னுடைய நிறமானது தொலைவில் இருப்பதாகத் தன்னுள் கண்டு மிகவும் கனமான உறக்கத்தை (சுழுத்தியை) அடைந்தது, அறிவினால் மூடத் தன்மை பொருந்தி அனுபவித்து, வண்டு என்பதாகத் தன்னை (அக்கனவில்) கண்டது. அந்த வண்டானது ஓடையில் உள்ள தாமரை மலர்த் தண்டினைக் குடைந்து அதன் உள்ளே வசித்தது.* **(6.6.10)**

சடமதி உயிர்க்கு முன்னம் சார்ந்திடும் விளையாட்(டு) ஓர்பால்
மடல்வன சத்து(ள்) ஆங்கே வண்(டு)உறை தடத்து வந்(து)ஓர்
கடகரி குழப்பி வீசக் கஞ்சமும் கயமுன் வண்டும்
தொடர்பொடி யான அந்தத் தும்பியைத் தும்பி நோக்கி.

**பொழிப்புரை:** *கூட புத்தியை உடைய பிராணிக்கும் மனமானது ஓரோர் இடத்தில் விளையாட்டினை அடைந்திடும். இதழ்கள் விரிந்த அந்த தாமரையில் அவ்விடத்தில் அந்த வண்டு வசிக்கின்ற போது, ஒரு மத யானையானது வந்து தடாகத்தைக் குழப்பி வீசிட, தாமரையும் மதயானையின் முன்பு அந்த வண்டும் சேர்ந்து தூளாயின. அந்த யானையை வண்டானது பார்த்து,* **(6.6.11)**

அக்கரி யாகத் தன்னைக் கண்டது குளப்பள் ளத்தில்
கைக்கரி வீழ்ந்த(து) அந்தக் கரியைஓர் வேந்தன் பாகன்
சிக்கெனக் கொடுபோய் ஆங்(கு)ஓர் செருவிலே சிதையச் செய்தான்
பக்கவண்(டு) இணக்கத் தால்கைப் பகடுமீண்(டு) அளிஆய்ற்(று) அன்றே.

**பொழிப்புரை:** *அந்த யானையாகத் தன்னைக் கண்டது. ஆழமான குழியில் அந்த யானை வீழ்ந்தது. அந்த யானையை மன்னவனின் பாகன் ஒருவன் பிடித்துக் கொண்டு*

*போய் ஒரு யுத்தத்தில் ஈடுபடுத்தி மாளச் செய்தான். அருகில் இருந்த வண்டின் சம்பந்தத்தாலே யானையானது மறுபடியும் வண்டாக ஆயிற்று.* **(6.6.12)**

**கடுத்ததோர் களிறால் மீளக் கயத்தொ(டு)அவ் வண்டு தூளாய்**
**அடுத்தகூ லத்தில் அன்ன அறிவினால் அன்னம் ஆன(து)**
**உடுத்தநீர் உலகில் அன்னம் உலப்பிலா யோனி எய்தித்**
**தடுத்தநீர்க் கயக்கஞ் சத்(து)ஓர் சாரசம் ஆன(து) அன்றே.**

**பொழிப்புரை:** *கடுமையான ஒரு யானையால் மறுபடியும் தடாகத்துடன் (குளத்துடன்) அந்த வண்டு தூளாகப் போயிற்று. அருகில் இருந்த அன்னப் பறவையின் அறிவினால் அன்னப் பட்சியாக ஆனது. அந்தப் அன்னப் பறவை நீர் சூழ்ந்த உலகில் எண்ணிலாத பிறவிகளை அடைந்து நான்கு கரைகளை உடைய குளத்தில் பிரம்ம வாகனமான அன்னமாக ஆனது.* **(6.6.13)**

**அக்குரு(கு) ஒருகால் விண்போய் அரன்புரத்(து) அரனைக் கண்டு**
**மிக்கசங் கரன்நான் என்றே மெய்ம்மையாய் நினைத்த லோடு**
**நக்கன(து) உருவம் ஆகி நயந்தவா ஈசன் நாட்டில்**
**தொக்கபல் கணங்க ளோடும் சூக்கமெய் ஞானத் தோடும்.**

**பொழிப்புரை:** *ஒரு சமயம் அந்த அன்னப் பறவையானது ஆகாயத்தே பறந்து சென்று, கயிலை மலையில் மகாதேவரைக் கண்டு, மிக்க மகிமையுடைய மகாதேவர் யான் என்று தானே உண்மையாய் எண்ணியவுடனே அந்த மகாதேவர் வடிவமாக ஆகி, விருப்பப்படி அந்த மகாதேவர் வசிக்கும் இடத்தில் சேர்ந்திருக்கும் பல சிவ கணங்களுடன் சூக்குமமான சிவஞானத்துடனே.* **(6.6.14)**

**ஈசனாய் இயங்கு வான்முன் இயன்றன சரிதை எல்லாம்**
**மா(சு)அறு புந்தி யாலே மதித்தனன் மறைப்(பு)இ லாத**
**தேசுவிஞ் ஞான மேனிச் சிவன்தனி இருந்து செப்பும்**
**வீசிய கனவு நூற்றின் வியப்(பு)எலாம் விளங்க நோக்கி.**

**பொழிப்புரை:** *மகாதேவனாக விளங்குவான். முன்பு நடந்த சரித்திரங்கள் எல்லாவற்றையும் குற்றமில்லாத புத்தியினாலே எண்ணினான். ஆவரணம் அற்ற ஒளியோடு கூடிய உணர்வு வடிவ ருத்திரன் தனியாக இருந்து உண்டான நூறு கனவுகளின் அதிசயம் எல்லாம் பொலியக் கண்டு தனக்குள்ளே சொல்லும்.* **(6.6.15)**

**சித்திரம் அம்ம இந்தச் சகத்தைமோ கம்செய் மாயை**
**மித்தையாய் இருந்தும் கெட்டேன் மெய்ம்மையாம் கானல் போல**
**இத்திற மயக்க மாக இப்பெரு மாயைக் காட்டில்**
**ஒத்தபல் இடத்தில் புக்கேன் உழன்றனன் எல்லை இன்றி.**

**பொழிப்புரை:** *விசித்திரம் அந்தோ! இந்த உலகத்தை மயக்குகின்ற மாயையானது மித்தையாய் இருந்தும் கெட்டேன். கானல் நீரை உண்மை என நம்பியதைப் போல, இப்படி மோகமாக இந்தப் பெரிய மாயை எனும் காட்டில் மனதிற்கு ஒத்த பல இடங்களில் புகுந்தேன், உழன்றேன் எல்லையில்லாமல்.* **(6.6.16)**

என்னுள மாத்தி ரத்தில் எழுந்தகற் பனையி னாலே
முன்ஒரு சிருட்டிக் கேநான் மொழிந்தசீ வடப்பேர் ஆனேன்
பின்ஒரு சிருட்டி தன்னில் பெருங்கலை மறையோன் ஆனேன்
மன்னவன் ஆனேன் பின்பு வந்த(து)ஓர் சிருட்டி தன்னில்.

**பொழிப்புரை:** *எனது மனமாத்திரத்தில் எழுந்த கற்பனையினாலே முன்பு ஒரு படைப்பில் நான் கூறிய சீவடன் என்னும் பெயரை உடையவன் ஆனேன். பின்பு ஒரு படைப்பில் மிகப் பெரிய கலைகளை அறிந்த அந்தணன் ஆனேன். அதன் பின்பு வந்த படைப்பில் மன்னவனாக ஆனேன்.* **(6.6.17)**

இத்திறம் நூறு யோனி எய்திஈங்(கு) ஈசன் ஆனேன்
மெத்திய ஆண்(டு)உ கங்கள் விருத்திகள் அனேகம் சென்ற
அத்தனை பிறப்பும் போய்நாம் அறிகுவோம் அறிந்து நன்றாய்
ஒத்தவா(று) ஆக்கி எல்லாம் ஒருவழிப் படுத்து கிற்போம்.

**பொழிப்புரை:** *இப்படியாக நூறு வகை தேகங்கள் அடைந்து, இவ்விடத்தில் ருத்திரன் ஆனேன். நிறைந்த ஆண்டுகள், யுகங்கள், சரிதைகள் அளவில்லாதவை சென்றன. அத்தனை பிறவிகளையும் நாம் அறிவோம். உணர்ந்து நலமாகப் பொருத்தி எல்லாவற்றையும் ஒருவழிப்படுத்துவோம்.* **(6.6.18)**

என்(று)உணர்ந்(து) ஈசன் முன்னே இருந்தசந் நியாசி தன்பால்
சென்றவன் தனைஎ ழுப்பிச் சேதனத் தொடுநெஞ் சோடும்
ஒன்றுறச் செய்த லோடும் உணர்ந்தசந் நியாசி தானும்
நின்றதன் மயக்கம் எல்லாம் நினைவுற நோக்கி னானே.

**பொழிப்புரை:** *என்று இந்தப்படி ருத்திரன் சிந்தித்து முன்பு இருந்த சந்நியாசி ஆகிய தன்னிடத்தில் சேர்ந்து அந்த சந்நியாசியை எழுப்பி, அறிவோடும் மனத்தோடும் பொருந்திடுமாறு செய்திடவே, உணர்வினை அடைந்த சந்நியாசியும் இருந்த தனது மயக்கம் அனைத்தையும் எண்ணிப் பார்த்தான்.* **(6.6.19)**

சீவடன் ஆதி யாம்தன் வடிவத்தைச் சிவன்சிந் தித்துச்
தாவில்சிற் ககனத்(து) ஓர்பால் சார்ந்துசீ வடன்வாழ் தேசம்
கேவலம் தானும் சந்நி யாசியும் கிட்டி அன்னான்
மேவுற மனத்தி னோடும் அறிவொடும் மேவு வித்தான்.

**பொழிப்புரை:** *சீவடன் முதல் சிவன் வரையிலான தனது வடிவத்தைச் சிந்தித்து புலப்படாத சிதாகாசத்தில் ஓரிடத்தில் பொருந்தி சீவடன் வாழும் தேசத்தை நோக்கி ருத்திரனும் சந்நியாசியும் அடைந்து அந்த சீவடன் மனத்தினோடும், அறிவினோடும் சேர்ந்திடும்படியாகச் செய்வித்தான் ருத்திரன்.* **(6.6.20)**

மூவரும் அறிவு பெற்றோர் முதுபழக் கத்தி னாலே
மாவியப்(பு) உற்றும் சற்றும் வியப்(பு)இலார் வடிவம் ஒன்றே
மேவுமூ வடிவம் ஆனோர் மிகும்உருத் திரனும் மற்(று)அச்
சீவடன் தானும் சந்நி யாசியும் சேர்ந்து சென்று.

**பொழிப்புரை:** *உணர்வை அடைந்துள்ள அந்த மூன்று பேரும் முதிர்ந்த பயிற்சியினாலே பெரிய ஆச்சரியத்தை அடைந்தும் சிறிதும் ஆச்சரியப்படாமல் ஒரு வடிவமே பொருந்திய மூன்று வடிவம் ஆயினோர் உயர்ந்த ருத்திர பகவானும், சீவடனும், சந்நியாசியும் ஒருங்கே சேர்ந்து போய்.* **(6.6.21)**

**வேதியன் முதலாய் உள்ளோர் பிறப்பிடம் எல்லாம் மேவித்**
**தீது)அறக் கூட்டித் தெய்வ ஞானத்தால் தேசு மிக்க**
**சோதிருத் திரர்கள் ஆகி அறிவுற்றார் சொன்ன ஈசன்**
**போதி(ர்)என்(று) ஏவத் தத்தம் இடங்களில் போயி னாரே.**

**பொழிப்புரை:** *அந்தணன் முதலாக உள்ளவர்கள் பிறப்பெடுத்த இடங்களை எல்லாம் அடைந்து குற்றம் இன்றிச் சேர்த்து திவ்வியமாகிய ஞானத்தினாலே ஒளிமிகுந்த பிரகாசமான ருத்திர மூர்த்திகளாகி உணர்வை அடைந்தனர் போய் வாருங்கள் என்று கூறி ஏவவும் தங்கள் தங்கள் தேசங்களில் போய் சேர்ந்தனர்.* **(6.6.22)**

**சீவடன் மறையோன் ஆதி யாவரும் சென்று தத்தம்**
**பாவைய ரோடும் வாழ்ந்து பாலுற உடல்போம் நாளில்**
**மேவுருத் திரனைச் சேர்ந்தார் என்றலும் வீரன் கேளா**
**ஆஇது புதுமை என்ன அதன்திறம் வினவல் உற்றான்.**

**பொழிப்புரை:** *சீவடன் அந்தணன் முதலிய யாவரும் சென்று தங்கள் தங்கள் மனைவியரோடு வாழ்ந்திருந்து தங்களது உடல் போகும் நாளில் ருத்திர பகவானைச் சேர்ந்தனர் என்று உபதேசிக்கவும், இராமபிரான் கேட்டு, ஆகா! இது ஆச்சரியம்.இது அற்புதம் என்று அதன் தன்மையைக் கேட்கத் தொடங்கினார்.* **(6.6.23)**

**அங்குச்சீ வடனை ஆதி ஆனவர் சந்நி யாசி**
**சங்கற்பத்(து) உருவம் ஆனோர் சத்திய மான(து) எங்ஙன்**
**பொங்குற்ற சங்கற் பத்தின் பொருள்எலாம் பொய்யே அன்றோ**
**இங்(கு)இதை விளக்காய் என்ற இராமற்கு வசிட்டன் சொல்வான்.**

**பொழிப்புரை:** *"அவ்விடத்தில் சீவடன் முதலாக உள்ளவர் சந்நியாசியின் எண்ண வடிவத்தை எய்தினோர் உண்மையானது எப்படி? எழுகின்ற எண்ணத்தின் பொருள்கள் எல்லராம் மித்தை அல்லவா! இங்கு இதனை விளக்குவீர்" என்று கேட்கவும், இராமபிரானுக்கு வசிட்டர் கூறுவார்.* **(6.6.24)**

**எதுவும்)உண்(டு) அறிவின் உள்ளே எப்படி எத்தைக் கண்ட(து)**
**அதனைஅப் படிசித்(து) எய்தும் அனைத்து(ம்)ஆ தலினால் மெய்யே**
**எதுகன வில்காண் கின்ற(து) எதுசங்கற் பத்தில் சேர்ந்த(து)**
**அதுஅங்கே உண்(டு)எப் போதும் அப்படி வடிவம் ஆகும்.**

**பொழிப்புரை:** *சித்தில் எப்பொருளும் உண்டு. எப்படி எதனைப் பார்த்தது, அப்படி அதனைச் சித்து அடையும். அனைத்தும் ஆவதால் உண்மையே. எது கனவில் கண்டதாம் அது எண்ணத்தில் அடைந்ததாம், அது அங்கே எப்பொழுதும் உண்டு, அந்த வகையான உருவம் ஆகும்.* **(6.6.25)**

சங்கற் பத்தில் கனவுதனில் சார்ந்த பொருள்எப் படிசேர்ந்த(து)
அங்(கு)அப் பொருள்தான் பரமத்தின் அழுந்தும் பழக்கம் யோக(ம்)எனும்
துங்கத் திறத்(து)அல் லதுமெய்யாத் தோன்றாதுயோக விஞ்ஞானம்
இங்குப் பெறலால் சிவன்முதலோர் எங்கும் எல்லாம் காண்கின்றார்.

**பொழிப்புரை:** *சங்கற்பத்தில் (எண்ணத்தில்), கனவினில் சார்ந்த பொருள் எப்படி வந்து சேர்ந்தது, அங்கு அப்பொருளானது பரமாக (பிரம்மத்தில்) அழுந்தும் அப்பியாசம், யோகம் என்னும் சிறந்த தன்மை இல்லாமல் உண்மையாகத் தோன்றாது. யோகமும், ஞானமும் இங்கு அடையப் பெறுவதால் ருத்திரன் முதலானோர் எவ்விடத்திலும் யாவற்றையும் காண்கின்றனர். (எண்ணத்திலும், கனவிலும் வந்த பொருட்கள் யோகம் என்னும் சித்த நிரோதம்;- மனதை அடக்குதல், பழக்க வசத்தினைத் தடுத்தல் இவைகள் இன்றி உண்மையாக அடையப்படாது. யோகமும், ஞானமும் அதாவது அத்தியான்ம சாத்திர ஞானமும் பெற்றிருப்பதால் சிவன் முதலானவர்களுக்கு எல்லா இடங்களிலும் எதையும் காணமுடிகிறது)* **(6.6.26)**

இட்ட மான பொருள்எல்லாம் ஏக நிட்டர்க்(கு) எளி(து)எய்தும்
திட்ட மாம்தென் திசைநோக்கிச் செல்வார் வடக்(கு)எப் படிசேர்வார்
தொட்ட சங்கற் பத்(து)அருத்தம் சூழ்வார் அதுவே துன்னுவரால்
முட்டில் தமது பயன்வசத்தோர் முன்சேர் பொருளை முன்னாரே.

**பொழிப்புரை:** *விரும்பிய பொருள்கள் எல்லாம் மனம் ஒன்றி நிட்டையில் இருப்பவர்களுக்கு எளிதாக கிடைக்கும். இது திண்ணம். தெற்கு திசை நோக்கிச் செல்பவர் வடக்கு திசையை எப்படி அடைவார்? எண்ணிய எண்ணத்தின் பொருளை எண்ணிக் கொண்டே இருப்பவர் அதனை அடைவார். குறைவற்ற தமது ஆத்ம பிரயோசன வசத்தில் உள்ளவர் முன்பு சேர்ந்திருக்கின்ற விடய வத்துவை நினைக்க மாட்டார்கள்.* **(6.6.27)**

முன்னு பொருளில் சங்கற்ப முட்டி விரும்பு மொய்ப்புந்தி
அன்ன பொழு(து)ஏ கத்துவத்தில் அழுந்தா மையினால் அவ்விரண்டும்
இன்ன புந்தி நசிப்பிக்கும் இனிநான் விச்சா தரனாகும்
மன்னு கின்ற நான்இங்கு மறையோன் ஆம்என்(று) உறநோக்க.

**பொழிப்புரை:** *முன் எதிரே இருக்கும் பொருளில் புத்தியிருக்க, சங்கற்பத்தில் (எண்ணத்தில்) கொண்ட பொருளை அடைய இச்சிக்கும் அப்பொழுதே ஒன்றிலும் கருத்தில்லாமையால், அவிவேகியானவன் அவ்விரண்டும் அதாவது முன்னுள்ள பொருளும், சங்கற்பம் செய்த பொருளும் ஆகிய இரண்டையும் அந்த புத்தி கெடுப்பிக்கும். (புத்தி எண்ணிய பொருளை அடையாது எதனை அடைதற்கு புத்தி விரும்பும்? அவ்விரண்டும் கிடைக்காமையால் அழிவாம்) இனி நான் வித்தியாதரன் ஆகும் என்றாவது, நான் இங்கு பிராமணன் ஆகுக என்றாவது அழுத்தமாக நினைக்க.*
**(6.6.28)**

இதுவே ஏகத் துவம்தனில் எய்து பேற்றின் திட்டாந்தம்
அதுகா ரியசித் தியின்பொருட்டாம் ஆத லால்ஏ கப்பொருளின்
திதநிட் டையினால் சந்நியாசி சீவன் சிவனாய் சிவவடிவால்
உதவு கின்ற சங்கற்பத்(து) உற்ற பொருட்(கு)உண் மையைமேவும்.

**பொழிப்புரை:** *இதுவே ஒரு விடயத்தை அதாவது ஒன்றை மட்டும் எண்ணுவதால் அடையும் பயன் என்பதற்கான எடுத்துக்காட்டு ஆகும். அது காரிய சித்தி (காரியத்தை அடைதல்) பொருட்டாகும். ஆதலால் ஒரு பொருளைத் திடமாக எண்ணுவதால் சந்நியாசி சீவன் சிவனாய், அந்த சிவ வடிவத்தால் சங்கற்பத்தில் அடைந்த பொருளுக்குச் சத்தியத் தகைமை பொருந்திற்று. (சங்கற்பத்துக்கு உண்மைத் தன்மை பொருந்தியது என்பதாம்)* **(6.6.29)**

தெளிசந் நியாசி சங்கற்பத்(து) அவராம் சீவ டன்முதலோர்
களிகொள் தத்தம் வேற்றுலகை கண்டார் ஈசன் உருவத்தால்
விளிவில் சங்கற் பத்(து)உண்மை மேவி னார்தம் சங்கற்பத்(து)
எளிது சேரு நகர்அடைந்தார் ஈசன் விஞ்ஞா னத்தாலே.

**பொழிப்புரை:** *தெளிவடைந்த சந்நியாசியின் சங்கற்பத்தில் எழுந்தவர்களாம் சீவடன் முதலானோர் சந்தோஷம் கொண்ட தங்களின் வேறான உலகங்களை ருத்திர வடிவத்தினால் கண்டனர். சத்திய சங்கற்பத்தினால் தத்துவத்தை அடைந்தார்கள். ருத்திரனது ஞானத்தினால் தனது சங்கற்பத்தினால் எளிதாகச் சேருகின்ற பட்டணத்தில் சேர்ந்தார்கள்.* **(6.6.30)**

**(நிருவாணப் பிரகரணத்தில் சதவுருத்திரர் கதை முற்றும்)**

# (vii) வேதாளக் கதை

*முன்பு இந்த பிறவித் தொடர்ச்சி தன்னுடைய சங்கற்பத்தின் பிராந்தியால் பெறப்படுகிறது என்று தெரிவித்ததற்கு சதவுருத்திரன் கதை சொல்லப்பட்டது. இப்போது சுழுத்தி மௌனத்தைப் பெறக்கூடிய விவேகத்தைச் சொல்வதற்கு இந்தக் கதை கூறப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

சுழுத்தி மௌனத் தினன்ஆகித் தொடரும் மனத்தின் எழுச்சியற
அழுத்து மனக்கற் பனைநீக்கி அகண்ட பதத்தில் இருஎனலும்
வழுத்து கரண மவுனம்சொல் மவுனம் காட்ட மவுன(ம்)எனச்
செழித்த மூன்றும் தெளிந்திடமேல் சுழுத்தி மவுனம் செப்(பு)என்ன.

**பொழிப்புரை:** *சுழுத்தியாகிய மௌனத்தை உடையவன் ஆகி, மனதின் தொடர்ச்சி உதயமாகாமல், சம்சாரத்தில் மூழ்க வைக்கும் அசுத்த மனக் கற்பனையை அகற்றி, எங்கும் நிறைந்து வியாபித்திருக்கும் பதத்தில் நிலைநிற்பாய் என்று கூறவும், சிறப்பாகச் சொல்லப்படுகின்ற இந்திரிய மௌனம், வார்த்தை மௌனம் (வாக்கு மௌனம்), காஷ்ட மௌனம் என்ற சிறப்பான மூன்று மௌனங்களையும் தெளிவாக அறிவேன். மேற்கொண்டு சுழுத்தி மௌனத்தைக் கூறுவீர் என்று இராமபிரான் கேட்கவும்.* **(6.7.1)**

ஓவில் முனிவர் இருவகையாம் ஒருவன் காட்டத் தவன்ஆகும்
சீவன் முக்தன் மற்றவனாம் செய்யும் கிரியை தனில்அழுத்த
மேவு நினை(வு)உற்(று) இந்தியத்தை மிக்க வலியால் வென்றவனைக்
காவல் மன்னர் புகழ்வீரா காட்டத் தவனாம் முனிஎன்பர்.

**பொழிப்புரை:** *பிரம்மத்தில் மாறாது வீற்றிருக்கும் தவசீலர் இரண்டு வகையினர் ஆவர். ஒருவன் காஷ்ட தவம் உடையவன் ஆவன். மற்றொரு முனிவன் சீவன் முத்தனாம். செய்கின்ற தொழில்களில் அழுத்தமான நினைவை அடைந்து, புலன்களை மிகுந்த வலிமை கொண்டு வென்றவனை உலகத்தைக் காக்கின்ற மன்னர்கள் புகழ்கின்ற வீரனே! காஷ்ட முனிவன் என்று சொல்வர்.* **(6.7.2)**

சகநேர் உள்ள படிஉணர்ந்து தன்பால் தன்னை நினைத்(து)உலகை
நிகரா கியும்உள் அமைவுற்றோன் நிமல முத்த னாம்இந்த
மிகுநீள் சாந்த முனிவரன்பால் மிக்க மனத்தின் மெய்யுருவம்
தகுநீ(டு) உருவாம் பாவனையே சாற்று மௌனச் சொற்பொருளே.

**பொழிப்புரை:** *உலகத்தின் தன்மையை யதார்த்தமாகத் தெரிந்து கொண்டு, தன்னிடத்தில் தன்னையே நினைந்து (பிரம்மமே நான் என நிச்சயித்து) உலகத்தார் போல நடித்த போதிலும், உள்ளே மகிழ்ச்சி சாந்தியும் திருப்தியும் உடையவனாகி*

*இருப்பவன் சீவன் முத்தனாம். இந்த நிர்விகாரம் உள்ள முனிவன்பால் காணப்படும் மிகுந்த மனத்தின் உண்மை உருவம் நீடித்திருக்கும் சுபாவமாகிய சொரூப பாவனையே சொல்லப்படுகின்ற மௌனம் என்பதின் அர்த்தம்.* **(6.7.3)**

**வாக்கு மௌனம் சொல்தடையாம் வலிந்(து)இந் திரியம் அடக்குவித்தல்**
**தாக்கு கரணம் மவுன(ம்)அதாம் தனது சேட்டை எலாம்விடுதல்**
**வீக்கும் காட்ட மவுன(ம்)அதாம் விளங்கு சித்த வியாபார**
**நீக்கம் இல்லா மூவகையாய் நிகழ்த்து மவுன இவைஆகும்.**

**பொழிப்புரை:** *வாக்கு மௌனம் என்பது பேசாது இருத்தலாம். வலிமை கொண்டு இந்திரியங்கள் விஷயங்களில் செல்லாதவாறு அடக்குதல் புலன் அடக்கம் அதாவது கரண மௌனம் ஆகும். தேகம் மற்றும் அதன் உறுப்புகள் இவைகளின் செயல்கள் அனைத்தையும் விடுதல் காஷ்ட மௌனம் ஆகும். இந்த மூன்று மௌனங்களும் விளங்குகின்ற சித்தத்தின் விவகாரம் விடாத மௌனம் எனச் சொல்லப்படும். (இந்த மூன்றில் சித்தம் இருக்கும் எனப்பொருள்)* **(6.7.4)**

**வன்பில் இயற்றும் இம்மூன்று மவுனம் காட்டத் தவர்க்(கு)இயல்பாம்**
**முன்பின் இன்றிப் பிறி(வு)இன்றி மொய்த்த துயர்அற்(று) இருக்கின்ற**
**இன்ப அனுபூ தியர்க்(கு)எனினும் இலாதார்க்(கு) எனினும் இதுதானே**
**துன்பம் ஒன்றும் அணுகாத சுழுத்தி மவுனம் எனச்சொல்வர்.**

**பொழிப்புரை:** *மிகுந்த சிரமம் கொண்டு செய்கின்ற இந்த மூன்று மௌனங்கள் காஷ்ட தவம் உடையவர்களுக்கு சுபாவமாம். ஆரம்பமும் முடிவும் இன்றி, பிரிவும் இன்றி, பொருந்துகின்ற துன்பம் இல்லாது இருக்கின்ற ஆனந்த அனுபூதி உள்ளவர்களானாலும், இல்லாதவர்களானாலும் இதுவே துயரம் தொடராத சுழுத்தி மௌனம் என்று சொல்வர்.* **(6.7.5)**

**பன்மை மோகத்(து) இவ்வுலகைப் பற்றி உள்ள படிஉணர்ந்து**
**தன்மை நிலையாய் ஐய(ம்)அறல் தானே சுழுத்தி மவுன(ம்)அதாம்**
**சின்மை அனேக அறி(வு)உருவாம் சிவமே இவையா வையும்என்னும்**
**தொன்மை முடி(வு)இல் நிலைதானே சுழுத்தி மவுனம் எனச்சொல்வர்.**

**பொழிப்புரை:** *பலவிதமான மோகத்தைத் தரும் இந்த உலகத்தைக் குறித்து உள்ளபடி உணர்ந்து, சொரூப நிலையில் இருந்து கொண்டு சந்தேகம் இன்றி இருத்தலே சுழுத்தி மௌனம் ஆகும். சில உபாதிகளால் ஏற்பட்ட பலவகையான அறிவு உருவங்களுக்கும் ஆன்மாவாகிய சிவமே இவ்வனைத்தும் ஆகும் என்கின்ற தொன்மையான முடிவில்லாத நிலையே சுழுத்தி மௌனம் என்பர்.* **(6.7.6)**

**நின்ற விண்உண்(டு) அல்லவும்ஆம் நிகழும் அனைத்தும் உள(து)இல(து)ஆம்**
**என்று சமமும் சாந்தமுமாய் இருத்தல் சுழுத்தி மவுன(ம்)அதாம்**
**ஒன்று சுழுத்தி மவுனம்தான் உபய விதமாம் யோகியர்க்குத்**
**துன்று கின்ற சாங்கியமும் தூய தான யோகமுமே.**

**பொழிப்புரை:** *எங்கும் நிறைந்த ஆகாசமானது இருப்பதும், இல்லாததும் ஆகும், நிகழ்கின்ற அனைத்தும் உள்ளதும், இல்லாததும் ஆகும் என்று துணிந்து சமமாயும், சாந்தமாயும் இருத்தல் சுழுத்தி மௌனம் ஆகும். பொருந்துகின்ற சுழுத்தி மௌனமானது இரண்டு விதமான யோகியர்கள் அதாவது சாங்கியர், பரிசுத்தமான யோகத்தினர் இருவரும் பெறத்தக்கதாக இருக்கின்றது.* **(6.7.7)**

**தெளிவா ஞான உணர்வாலே தினமும் ஏக சமாதியினால்**
**அளவாம் சங்கை யால்அறிந்த அவர்சாங் கியயோ கியர்ஆகும்**
**உளதாம் பிராணன் முதல்வாயு உபசாந் தியில்ஊ கத்தாலே**
**எளிதாம் முடிவில் உயர்பதத்தை இயைந்தோர் யோக யோகியரே.**

**பொழிப்புரை:** *தத்துவ விசார ஞான உதயத்தால் இரண்டற்ற பிரம்மத்தில் சித்த அமைதியாகிய சமாதியில் சந்தேகம் அற்றுப் போக உணர்ந்த அவர்கள் சாங்கிய யோகியர் எனப்படுவர். உள்ளும் வெளியும் செல்கின்ற பிராணன் முதலான வாயுக்களை அடக்கிச் சாந்தப்படுத்தும் நெறிகளாலே எளிதாக முடிவில்லாத உயர்ந்த பதத்தை அடைபவர் யோகத்தின் யோகியர்.* **(6.7.8)**

**பண்ணப் படாத உபசாந்தப் பதமே எவர்க்கும் பற்றாகும்**
**எண்ணத் தகுசாங் கியர்எய்தும் இடமே இடமாம் யோகியர்க்கும்**
**கண்ணத் தகுவா தனைவலைசூழ் கடிய பிராணன் மனம்இரண்டும்**
**நண்ணப் படுசெய் தொழில்தீர நசிக்கில் அதுவே பரமபதம்.**

**பொழிப்புரை:** *சுபாவமாக உயர் சாந்தம் நிறைந்த அந்தப் பதமே எல்லோராலும் அடையத் தக்கதாகும். மதிக்கத்தக்க சாங்கியர் அடைகின்ற இடமே யோகியராலும் அடையத் தக்க இடமாகும். பயப்படத்தக்க வாசனைகளின் வலை சூழ்ந்திருப்பதும், அடங்காத பிராணன், மனம் இரண்டும் பந்தப்படுத்தலைச் செய்யும் செயல்கள் முழுவதுமாக அழியுமானால் அதுவே மேலான மோட்ச பதமாம்.* **(6.7.9)**

**வினவி நோக்கா மையில்சித்தம் மெய்போல் தோன்றும் பொய்யேஆம்**
**கனவில் தனது மரணம்தான் காணா நின்றும் உளதாமோ**
**அனக ஏகப் பொருள்பழக்கத்(து) அழுத்தம் பிராணன் உள்அடக்கல்**
**மனனை அடக்கல் இவைமுத்தி வசனப் பொருளாம் சுருக்கத்தில்.**

**பொழிப்புரை:** *ஆராய்ந்து விசாரித்துப் பார்க்காததினால் மனமானது சத்தியம் போலத் தோற்றம் அளிக்கும். ஆனால் அது மித்தையே ஆம். கனவில் தன்னுடைய மரணத்தைக் கண்டும் (உண்மையில்) இல்லாததே. பாவம் அற்ற புண்ணிய மூர்த்தியே ஒரு பொருளை ஊன்றி அப்பியாசம் செய்து அதிலேயே அழுந்துதல், பிராணனை உள்ளே அடக்குதல், மனதை ஒடுக்குதல் ஆகிய இவை மூன்றும் மோட்சம் என்ற சொல்லின் சுருக்கமான பொருளாகும்.* **(6.7.10)**

**உரமாம் ஒருமைப் பொருள்பழக்கம் உயிரின் ஒடுக்கம் உளத்(து)ஒடுக்கம்**
**தரமாம் ஒன்று பலிக்கு(ம்)எனில் தம்மில் தாம்மூன் றும்பலமாம்**
**பரமாம் உயிர்நெஞ்(சு) இலதாகில் பயிலா(து) எவர்க்கும் பாவனைகள்**
**திரமாம் இவைஒன் றாம்மலரும் மணமும் திலமும் தயிலமும்போல்.**

**பொழிப்புரை:** *அதி திடமாக ஏகாக்கிரமாய் (ஒருமைப்பட்ட மனதுடன்) செய்யும் ஒரு தத்துவத்தின் அப்பியாசம், பிராணனை அடக்குதல், மனதை ஒடுக்குதல் இந்த மூன்றில் ஒன்றேனும் பயன்பாட்டுக்கு வருமானால் இந்த மூன்றும் ஒன்றுக்கொன்று பயன் தருவதாகும். மேலாகிய பிராணனும், மனதும் அசைவின்றி ஒடுங்குமாகில் எவருக்கும் பாவனைகள் உண்டாகமாட்டாது. திடமாக இவை இரண்டும் ஒன்றே ஆகும். மலரும் மணமும், எள்ளும் எண்ணெயும் போலவாம்.* **(6.7.11)**

**ஆதார்) ஆதே யம்போலாம் அதில்ஒன்று) இறக்கில் அயல்அதும்போம்**
**ஓதா நின்ற இவைமாயில் உயர்ந்த வீடு உதவிடுமால்**
**மீதா கியதன் பரிசயத்தால் வெளியாய் நினைவு போம்அளவும்**
**ஏதா கிலும்ஓர் தத்துவத்தில் இறுக வேண்டும் பாவனையே.**

**பொழிப்புரை:** *பற்றுக்கோடும் பற்றுவதும் போலாம். இவ்விரண்டில் ஒன்று அழிந்தால் மற்றதும் அழியும். சொல்லப்பட்ட இவை இரண்டும் அழியுமாகில் மேலான மோட்சம் அடையப்பெறும். விசாரத்தால் பாவிக்கப்பட்ட ஆன்ம தியானப் பழக்கத்தால் வெளியே நினைவு போகின்ற வரையில் எந்த தத்துவத்திலேனும் பாவனையானது அவசியம் உரம் பெறல் வேண்டும்.* **(6.7.12)**

**நெடுநாள் பழகும் சுபாவத்தால் நெஞ்சின் ஒருமை ஒன்(று)உண்டாம்**
**உடனே மிகும்இத் திரள்எல்லாம் ஒருங்கிப் போகும் பிறப்(பு)இறப்பின்**
**இடமார் கனவு போய்விழித்த இகல்வே தாளம் இசைத்தவினாத்**
**தடமார் புயனே கேட்டிஎனத் தவமார் வசிட்டன் சாற்றிடுவான்.**

**பொழிப்புரை:** *வெகுகாலம் அப்பியாசம் செய்து வரும் பழக்க சுபாவத்தால் மனதின் ஒருமை தன்மை உண்டாகும். அக்கணமே மிகுந்த திருசியக் (காணப்படுகின்ற) கூட்டமெல்லாம் இல்லாமல் (அழிந்து அல்லது ஒதுங்கிப்) போகும். பிறப்பு இறப்புகளுக்கு இடம் தரும் கனவு போய்விட விழித்துக் கொண்ட பயங்கரமான வேதாளம் கேட்ட கேள்வியை, அழகிய திருமார்புடைய இராகவனே! கேட்பாயாக என்று தவம் நிறைந்த வசிட்ட முனிவர் கூறலானார்.* **(6.7.13)**

**விந்த வனத்(து)ஓர் வேதாளம் வேறோர் நாட்டில் வெம்பசியால்**
**வந்து புகுந்(து)ஓர் நல்லோன்பால் வரம்பில் பலிஏற்(று) உண்மகிழும்**
**முந்து பசித்தீ மூடுகிடினும் முன்வந் தோர்க்கு நிப(ம்)இன்றி**
**நிந்தை இன்றி கொலைபுரியா நெடியோர் நெறியை நீங்குவரோ.**

**பொழிப்புரை:** *விந்திய மலையில் ஒரு வேதாளமானது இருந்தது. வேறொரு நாட்டில் கொடிய பசியினால் வந்து சேர்ந்து, ஒரு நல்லவனிடத்தில் அளவில்லாத ஆகாரம் கொண்டு உள்ளே சந்தோஷத்தை அடையும். முந்துகின்ற பசித் தீயானது அதிகரித்த போதிலும், எதிரில் வந்தவர்களுக்குக் காரணம் இன்றி குற்றம் இல்லாமல் கொலை செய்யாது. பெரியோர் சன்மார்க்கத்தை விட்டு விடுவரோ? விடமாட்டார்.* **(6.7.14)**

கானின்(று) அந்த வேதாளம் கடும்தீப் பசியால் நீதியினால்
ஆன ஊகத் தால்சனத்தை அசனம் ஆக்க நகர்எய்தித்
தான நிருபன் இரவுதிரி சமயத்(து) அவனைத் தான்கண்டு
வானில் இடிபோல் வேதாளம் மன்னற்(கு) உரைத்த படிகேளாய்.

**பொழிப்புரை:** *காட்டிலிருந்தும் அந்த வேதாளமானது கொடிய பசித் தீயினால் நியாயத்தினால் கிடைத்த யுக்திகளால் மானிடர்களை உண்பதற்கு பட்சணமாக ஆக்க, நகரினை அடைந்து, அந்த நாட்டின் மன்னவன் நகர்சோதனைக்காக இரவில் திரிகின்ற பொழுது, அவனை இந்த வேதாளம் கண்டது. ஆகாயத்தில் இடி இடித்த சப்தம் போல கர்ஜித்து, வேதாளம் அரசனை நோக்கிக் கூறிய விதத்தைக் கேட்பாயாக.* **(6.7.15)**

மன்னா என்கைப் பட்டனையால் வானே(று) அனைய என்னாலே
உன்ஆ(ர்) உயிர்இற் றனைஇனிஎன் உண(வு)ஆ குதிஎன்(று) உரைத்தலுமே
நின்னால் நெறியால் அன்றிஎனை நெருங்கில் தலைநீ(று) எழும்என்னச்
சொன்னான் மன்னன் வேதாளம் சொன்ன மன்னற்(கு) எதிர்சொல்லும்.

**பொழிப்புரை:** *"மன்னவனே! எனது கையில் அகப்பட்டாய். மிகவும் உக்கிரமாகிய வேதாளமாகிய என்னாலே உனது அருமையான உயிர் விட்டுப் போனாய். இனி என்னுடைய ஆகாரமாக ஆவாய்" என்று கூறவும், "உன்னாலே முறையின்றி என்னைக் கொல்ல நெருங்கி வந்தால் உன் தலை சுக்கு சுக்காகிப் பொடியாகும்" என்று மன்னவன் பதில் கூறினான். அதற்கு வேதாளம் பதில் கூறிய மன்னவனுக்குச் சொல்வதாவது.* **(6.7.16)**

நீதி இன்றி உனைஅடரேன் நெறியே உரைக்கேன் நிருபாநீ
தீதில் இரவா ளருக்(கு)எல்லாம் சிறுமை தீர்க்கும் திறத்தனையால்
ஆத லால்என் குறைதீர்ப்பாய் ஐயப் பாடாம் குறைகேட்டு
நாத னேநின் சொற்கொடையால் நன்றாய் நிறைப்பாய் எனஉரைக்கும்.

**பொழிப்புரை:** *நியாயம் இல்லாமல் உன்னை நெருங்கமாட்டேன். முறையினைக் கூறுவேன். மன்னவனே! நீ குற்றமற்று வேண்டுபவர்களுக்கு எல்லாம் குறையைத் தீர்த்து வைக்கும் தன்மை உடையாய். ஆதலினால் எனது குறையைத் தீர்ப்பாய். சந்தேகமாகிய எனது குறையைக் கேட்டு, நாயகனே! உனது உபதேசமாகிய தானம் செய்து நலமுடன் நிறைந்து நிலைப்பாய் என்று (அந்த வேதாளம்) கூறத் தொடங்கயது.* **(6.7.17)**

எந்த வெய்யோன் கிரணங்கட்(கு) இந்தப் பிரமாண் டங்க(ள்)எலாம்
சிந்தும் சிறிய அணுத்திரளாய்த் திகழும் எந்த மாருதத்தில்
அந்தம் இல்லாக் ககன(ம்)எனும் அணுக்கள் விளங்கும் அளவின்றி
வந்த கனாமேல் கனவுற்று மாறாத் தெளிவாம் ஒளிவடிவென்.

**பொழிப்புரை:** *எந்த சூரியனது ஒளிக் கிரணங்களுக்கு இந்தப் பிரமாண்டங்கள் யாவும் அழிகின்ற சிறியதான அணுக்கூட்டங்களாய் விளங்கும்? எந்த பெரும்காற்றில் அளவில்லாத ஆகாயம் என்னும் அணுக்கள் அளவுகடந்து பொலிவாக விளங்கும்? அளவின்றி ஒன்றுக்கு மேல் ஒன்றாக வரும் கனவுகளிலிருந்து கனவு முடிவுக்கு வந்தும், அவற்றை ஒளிரச் செய்த சத்தியமான அந்த ஒளிப்பிரகாச வடிவம் எதுவோ?* **(6.7.18)**

**அரம்பைத் தண்டு உள்போயும் அந்தத் தண்டே ஆவதுபோல்**
**வரம்(பு)இல் உள்உள் ளேஎனினும் மற்றொன்(று) ஆகா அணுஏது**
**நிரம்பு மண்டம் விண்ணுயிர்கள் நிகழும் கதிர்பொன் கிரிஅனைத்தும்**
**பரம்பு பரமா ணுக்க(ள்)எனப் பயின்று நீங்கா அணுஏது.**

**பொழிப்புரை:** *வாழைத் தண்டினை உரித்து உள்ளே செல்லச் செல்ல அந்த தண்டே இருப்பது போல, எல்லையின்றி உள்ளே உள்ளே சென்று பாவித்த போதிலும் வேறொன்று ஆகாத அணு எது? நிறைகின்ற பிரமாண்டங்கள் ஆகாயம் பூதங்கள் பிரகாசிக்கின்ற சூரிய மண்டலம் பொன் மலை என்னும் இவை எல்லாவற்றிலும் பரவிய பரமாணுக்கள் என்று விளங்கி நீங்காமல் இருக்கின்ற அணு எதுவோ?* **(6.7.19)**

**அங்கம் ஒன்றும் அறப்பரம அணுவாம் எந்த மாகிரிக்குத்**
**தங்கு கல்போல் செறிந்(து)ஒன்றாம் சகங்கள் மச்சை யாம்என்று**
**துங்க வேதா ளம்சொன்ன சொற்கு நகைத்துச் சுடர்மௌலி**
**அங்கண் அரசன் சொன்னவெலாம் அடைவே கேட்டி இராகவனே.**

**பொழிப்புரை:** *உறுப்புகள் ஒன்றும் இல்லாத பரம அணுவாகிய எந்த மகத்தான மலைக்குப் பொருந்தியிருக்கும் கற்கள் போல நெருங்கியிருந்து மூவுலகங்களும் உணவாகும்?என்று பரிசுத்தமான வேதாளம் கேட்ட கேள்விகளுக்கு சிரித்து, ஒளிவீசுகின்ற கிரீடம் சூடிய அழகிய கண்களை உடைய மன்னவன் விடையாகக் கூறியவற்றை முறையாகக் கேட்பாய் இராகவனே!.* **(6.7.20)**

**உதித்த இந்தச் சிற்பரனுள் உலகாம் இவைஎல் லாம்விளங்கு**
**மதித்த விமல விஞ்ஞான வடிவாம் பரம ஆதித்தன்**
**கதித்த ஒளியாம் இவ்வெய்யோன் கதிர்க்(கு)இவ் வுல(கு)எ லாம்அணுவாம்**
**துதித்த இந்த மார்த்தாண்டன் சுடரால் தோன்றி விளங்கிடுமால்.**

**பொழிப்புரை:** *உதித்த இந்த சித் வஸ்துவில் இந்த உலகங்கள் அனைத்தும் விளங்கும். யாவரும் தங்களுடைய சொரூபமாக மதித்த நின்மலமாம் ஞான வடிவாகிய மேலான சூரியன் மிகுந்த பிரகாச மயமான இந்த சூரியனின் ஒளிக்கதிர்களுக்கு இந்த உலகங்கள் யாவும் அணுவாம், புகழ்ந்த இந்த சூரியனது ஒளியால் தோற்றமாகி விளங்கும்.* **(6.7.21)**

**காலம் உண்மை விசும்(பு)உண்மை கண்ணாய் அசையும் அறி(வு)உண்மை**
**சால விமல அறி(வு)உண்மை தன்னை முதலாம் உண்மைஎலாம்**
**சீலப் பரமப் பெருங்காற்றில் சிறுதூள் ஆகித் திகழ்ந்திடுமால்**
**கோல மலரின் மணம்போல்தாம் கொண்ட சொரூப சுபாவத்தால்.**

**பொழிப்புரை:** *காலம் என்னும் சத்து தன்மை, ஆகாச சத்து தன்மை, அசையும் குணத்தை உடைய வாயுவின் சத்து தன்மை, அறிவுமயம் எப்பொழுதும் நின்மலமாம் சித் சத்து கூறிய இந்த சத்துகள் யாவும் நித்தியத் தன்மை வாய்ந்த பரப்பிரம்மம் என்னும் பெருங்காற்றில் அற்ப அணுக்களாகி விளங்கும் (எப்படி எனில்) அழகிய பூக்களின் மணம் போல் அவைகள் எடுத்துக் கொண்ட உபாதியினால் வந்த வடிவ இயற்கையினால்.* **(6.7.22)**

**உலக நாமப் பெரும்கனவில் ஒன்றின் மேல்ஒன் றாக்கனவு**
**பலபற் றியும்தன் வடிவைவிடாப் பயில்சாந் தத்தால் விரிபிரமம்**
**இலகு கதலி உள்ளுள்ளே இலையே ஆகும் இயல்(பு)என்ன**
**அலகி லாத உள்ளுள்ளே ஆன போதும் அப்பிரமம்.**

**பொழிப்புரை:** *உலகம் எனப் பெயர்கொண்ட பெரிய கனவில் ஒன்றுக்குள்ள் ஒன்றாக கனவுகள் பல தோன்றிய போதும் தன் வடிவத்தை விடாமல் விளங்கும் சாந்தமாகி நிறைந்த பரப்பிரம்மம் வாழைத் தண்டின் உள்ளே உள்ளே சென்று பார்த்தால் வாழைப் பட்டையே இருப்பது போல் அளவில்லாதவைகள் உள்ளே உள்ளே ஆன போதிலும் அந்தப் பிரம்மமே ஆகும்.* **(6.7.23)**

**சூக்க மாளட் டாமையினால் சொன்ன பரமே பரமாணு**
**நீக்கும் எல்லை இலாமையினால் நெடிய மேரு முதல்அனைத்தின்**
**தாக்கு மூலம் இதுவாகும் தடமே ருவையா திகள்இதற்கு**
**நோக்கும் பரமா ணுவைப்போல நுடங்கி விளங்கும் நோக்கிடினே.**

**பொழிப்புரை:** *சூக்குமத் தன்மையாலே எட்ட முடியாமையால் கூறிய பரம்பொருளே பரம அணுவாகும். தள்ளத் தக்க எல்லை ஒன்று இல்லாமையால் பெரியதான மேரு மலை முதலானவற்றை உண்டாக்கும் மூல காரணம் இதுவாகும். விசாலமான மேரு மலை முதலியவைகள் இந்த வத்துவிற்கு பார்க்கும் பரமாணுவைப் போல ஆனால் ஆராய்ந்து நோக்கினால் அற்பமாகவே தோற்றும்.* **(6.7.24)**

**எட்டா மையினால் பரஅணுவாம் இவனே நிறைவால் பெரியகிரி**
**தட்டா அவய வங்க(ள்)எலாம் தரித்தும் அவைஇல் லாப்புருடன்**
**முட்டா விஞ்ஞா னத்(து)உருவாய் முழுது பொருட்கும் இடமாகும்**
**எட்டா இதற்கு விஞ்ஞான சார மச்சை இவைஅனைத்தும்.**

**பொழிப்புரை:** *கிடைக்காமையால் பரம அணுவாம். இப்பரம புருடனே நிறைந்து இருப்பதால் பெரிய மலையாம். தட்டாமல் எல்லா உறுப்புகளைத் தாங்கியும் அதாவது தூல பிரபஞ்ச வடிவமாயினும் உண்மையாக அவைகள் இல்லாதவனே அந்தப் புருடன். விஞ்ஞான மாத்திர ரூபமாய், எல்லா பிரபஞ்சத்திற்கும் ஆதார இடமாகும். எட்ட முடியாத இந்த விஞ்ஞான மாத்திர மயமான இதற்கு எல்லா உலகங்களும் மச்சை போன்றதே ஆகும்.* **(6.7.25)**

**இயல்விஞ் ஞான மாத்திரத்தின் இடையே உலகம் இருக்கு(ம்)என**
**உயர்மன் னவன்ஓ தலும்கேளா உளத்தே தன்மை உணர்வுற்று**
**மய(ல்)இல் விசாரத் தால்சாந்த மனவே தாளம் தனியிடம்போய்த்**
**துயர்கொள் பசியை மறந்(து)அசையாத் தூய தியானத்(து) இருந்ததுவே.**

**பொழிப்புரை:** *இயல்பாக விஞ்ஞான மாத்திரத்தின் இடையில் உலகம் இருக்கும் என்று உயர்ந்த மன்னவன் கூறவும், அதனைக் கேட்டு மனத்தே உணர்ந்து, மயக்கம் இல்லாத விசாரத்தோடு கூடிய சாந்தமான மனமுடைய வேதாளமானது தனி இடத்திற்குச் சென்று, துக்கத்தைத் தரும் பசியினை மறந்து, அசையாமல் இருந்து, பரிசுத்த தியானத்தில் இருந்தது.* **(6.7.26)**

**(நிருவாணப் பிரகரணத்தில் வேதாளக் கதை முற்றும்)**

# (viii) பகீரதன் கதை

*முன்பு சுழுத்தி மௌனத்தைக் கைவரப்பெறும் விவேகத்தைத் தெரிவிப்பதற்கு வேதாளக் கதை சொல்லப்பட்டது. இப்போது மிகக் கஷ்டமாயினும் சித்த அமைதி தனது முயற்சியாலே பெறப்படும் என்பதைத் தெரிவிப்பதற்கு இக்கதை கூறப்படுகிறது...*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**அசைவிலா உள்போ தத்தால் அனைத்தினும் உளத்தை வாங்கி**
**இசைவசெய்(து) இச்சை யின்றி இளைப்(பு)அற புந்தி யாறி**
**விசையிலா நெஞ்ஞால் நெஞ்சை விண்ணென விமலம் ஆக்கி**
**அசைவறு மவுனி ஏகன் சாந்தமே வடிவம் ஆகி**

**பொழிப்புரை:** *சலனம் இல்லாத உள் அறிவினாலே எல்லாவற்றிலிருந்தும் மனத்தை விலக்கி, ஒரு பொருளின் (பரமான்மாவின்) மீது இசையச் செய்து, அவைகளில் ஆசையற்றவனாய், சலிக்காமல் பரம சாந்த புத்தி உடையவனாய், ஒடுங்கிய உள்ளத்தினால் விரிந்த மனதை ஆகாயம் போல் நிர்மலமாக்கி, சலனமற்று மௌனியாய், தனித்திருப்பவனாய், சாந்த வடிவமாய் ஆகி.* **(6.8.1)**

**சமனுமாய் இதயம் விண்போல் சாலவும் தெளிந்து நிற்பாய்**
**நிமலமாம் புந்தி திண்மை நிறைவுற்று மூடம் இன்றி**
**அமரவந் தனபின் செல்லும் அரசனாம் பகீர தன்போல்**
**குமரனே அரிய தேனும் குறைவறப் பெறலாம் என்றான்.**

**பொழிப்புரை:** *சமம் உடையவனாய் இதயமானது ஆகாயம் போல் எப்பொழுதும் தெளிந்த நிலை நிற்பாய். நிர்மலமான புத்தியானது திடத்தன்மையுடன் நிறைந்து, மூடம் இன்றி, பொறுமையுடன் வினை வசத்தால் வந்த பொருள்களின் பின்னால் செல்லும். அரசனாகிய பகீரதன் போல, அன்புடைய குமரனே! மிகவும் கஷ்டமானது என்ற போதிலும் குறைவில்லாமல் அடையலாம் எனக் கூறினார்.* **(6.8.2)**

**என்றலும் அவனை நோக்கி எம்மன வல்ல பத்தால்**
**அன்றுகங் கையைக்கொ ணர்ந்தான் பகீதரன் ஐயா என்று**
**நன்(று)உணர் வள்ளல் கேட்ப நான்மறை வசிட்டன் சொல்வான்**
**ஒன்(று)உணர் பகீர தப்பேர் ஒருவ(ன்)உண்(டு) உலகில் வேந்தன்.**

**பொழிப்புரை:** *என்று கூறவும், வசிட்ட முனிவரைப் பார்த்து, "ஐயா! எத்தகைய உள்ளத்தின் சாமர்த்தியத்தால் அன்று கங்கையைக் கொண்டு வந்தான் பகீரதன்" என்று நன்மையை உணர்ந்த வள்ளல் இராமபிரான் கேட்க, நான்மறைகளை உணர்ந்த வசிட்டர் கூறுவார்... ஏக பரமான்மாவை உணர்ந்த பகீரதன் என்ற பெயர் கொண்ட மன்னன் ஒருவன் உலகில் இருந்தான்.* **(6.8.3)**

**மாநிலம் முழுதும் காப்போன் மணியினும் வண்மை மிக்கோன்**
**சானவி படிஒ முங்கால் சாம்பராய்ப் பாத லத்தில்**
**போனதன் கிளையை எல்லாம் பூமகன் உலகில் ஏற்றித்**
**தீநர(கு) ஒழிய வைத்தோன் திங்கள்வெண் கவிகை மன்னன்.**

**பொழிப்புரை:** *பூவுலகம் முழுவதையும் காப்பவன், சிந்தாமணியைக் காட்டிலும் கொடுப்பதில் மிகுந்தவன்.கங்கையைப் பூவுலகிற்குக் கொண்டு வருவதற்காக (கபில மகரிஷியின் சாபத்தால்) பாதாள லோகத்தில் சாம்பலாய்ப் போன தனது முன்னவர்கள் (பிதுர்க்கள்) அனைவரையும் பிரம (நான்முகன்) லோகத்தை அடையும் படி செய்து, கொடிய நரக வேதனை ஒழியச் செய்தவன், வெண்மையான சந்திரவட்டக் குடையை உடைய மன்னவன்.* **(6.8.4)**

**அன்னவன் காளை யான பருவத்தில் அவனி தன்னில்**
**இன்னல்கூர் நடையாம் இத்தை நோக்கலும் தன(து)எண் ணத்தில்**
**உன்னிய அற்ப மான விசாரத்தால் உதித்த(து) அந்தோ**
**மன்னிளம் பக்கு வத்தின் மனனத்தில் மா(சு)இல் தோற்றம்.**

**பொழிப்புரை:** *அந்த மன்னவன் இளைஞனாக இருந்த போது, உலகத்தில் துயரம் மிகுந்த விவகார வழக்கம் இதனைப் பார்த்தலும், தனது நினைவில் எண்ணிய சிறிய விசாரத்தினால் உதயமானது ஆச்சரியம். பொருந்திய இளம் பக்குவத்தின் சிந்தனையால் குற்றமில்லாது தோன்றிய தோற்றம்.* **(6.8.5)**

**விதியினால் கானல் மேட்டில் கொடியென விசாரம் தோன்ற**
**உதவு(ம்)ஏ காந்தம் எய்தி ஒன்றொ(டு)ஒன்(று) ஒவ்வாக் கூட்டத்(து)**
**அதிசய உலகின் தன்மை இதனைப்பார்த்(து) அகத்தில் தேர்வான்**
**புதி(து)இலை ஒன்றும் என்றும் போனதே புகுது மீட்டும்.**

**பொழிப்புரை:** *தெய்வ சம்பத்தால் கானல் பூமியில் தோன்றிய கொடியைப் போல விசாரமானது தோன்றியது. அதனால் சாதகமான தனியிடத்தை அடைந்து, ஒன்றோடு ஒன்று பொருந்தாத கூட்டமுடைய அதிசய உலகின் தன்மையை நோக்கி உள்ளத்தே சிந்திப்பான். எந்தப் பொருளும் எப்போதும் ஒரே மாதிரியாகத் தான் உள்ளது ஒன்றும் புதியதாக இல்லை, சென்று விட்டனவே திரும்பவும் வருவதாம்.* **(6.8.6)**

**போகிய பகலே மீளப் போகிய இரவே மீள**
**ஏகிய கொடையே மீள ஏகிய இரப்பே மீள**
**ஆகிய உணவே மீள ஆகிய தொழிலே மீள**
**மோகியர் மீள மீள முயலுவார் ஒன்றின் நாணார்.**

**பொழிப்புரை:** *கடந்து போன பகலே மீண்டும் வரும், கடந்து போன இரவு தான் மீண்டும் வரும், கொடுத்த தானமே மீண்டும் வரும், கேட்ட யாசகமே மீண்டும் கேட்க வரும், உண்ட உணவே மீண்டும் உண்பதாகும். செய்த செயலே மீண்டும் செய்வதாகும், இவைகளில் மயங்கியவர்கள் மீண்டும் மீண்டும் முயற்சி செய்து கொண்டே இருப்பர், எதனிலும் வெட்கத்தை அடையமாட்டார்கள்.* **(6.8.7)**

சுவையற உணங்கும் அந்தக் கருமமே சூழா நிற்பர்
நவையற எத்தைச் சேர்ந்தால் நன்னுறா(து) இல்லை என்ன
எவையும்வந்(து) அணுகும் அத்தை இயற்றலே இயல்பாம் செய்கை
கவையுறு மற்ற எல்லாக் கருமமும் விடுசி யாகும்.

**பொழிப்புரை:** *சுவையின்றி வற்றிய அந்த செயல்களையே மீண்டும் செய்துகொண்டிருப்பர். குற்றமற எதனைச் சேர்ந்தால் அடையப்பெறாதது ஒன்று இல்லை என்ன எல்லாமும் வந்து சேரும். அத்தகைய செயலைச் செய்தலே செய்கை ஆகும். பிரிந்து போகின்ற மற்ற எல்லாக் கர்மங்களும் விஷ வியாதியாகும்.* **(6.8.8)**

பலபடச் செய்த செய்வார் பாமரர் அறிஞர் செய்யார்
உலகியல் இதுஎன்(று) உள்ளம் வெருவினன் ஒருகால் சென்று
நலனுறு திரித லப்பேர் நற்குரு சரணம் தாழ்ந்து
சலனுறு பிறவிக்(கு) அஞ்சித் தனித்(து)இவை கழறல் உற்றான்.

**பொழிப்புரை:** *பலவகையாகச் செய்தவற்றையே செய்வர் அறிவிலார். அவ்வாறு விவேகிகள் செய்யமாட்டார். உலகின் இயல்பு இது என்று உள்ளத்தில் அஞ்சினன். ஒரு சமயம், நன்மையை அடைந்துள்ள திரிதலம் என்ற பெயர் கொண்ட சற்குருவிடம் சென்று அவரது பாதங்களில் பணிந்து, மாறி மாறி வருகின்ற பிறவிகளுக்கு அஞ்சி தனியாக இவற்றைக் கூறலானான்.* **(6.8.9)**

பகீரதன் உரைப்பான் ஐயா பயில்சரை மரண மோகம்
அகிலமாம் அச்சம் செய்யும் அருந்துயர்க்(கு) அவதி ஏது
திகழ்வுற அருள்வாய் என்னத் திரிதலன் உரைப்பான் மன்னா
நிகழ்வுறு நேயம் தன்னை நிறைவடி வாக நோக்கில்.

**பொழிப்புரை:** *பகீரத மன்னன் சொல்வான் "ஐயா குருமூர்த்தியே! வருகின்ற முதுமை, மரணம், மோகம் என்ற பயத்தைத் தரக்கூடிய சகல பெரிய துன்பங்களுக்கும் எல்லை (முடிவு) ஏது? விளங்கும் படியாக அருள்வீர்" என்று கேட்கவும், திரிதல ரிஷி கூறுவதாவது... மன்னவா! விளங்குகின்ற ஞேய வத்துவை (பிரம்மத்தை) எங்கும் நிறைந்த பூரண வடிவமாக நோக்கினால்.* **(6.8.10)**

அன்றுபோம் துன்பம் எல்லாம் அகப்பந்தம் அனைத்தும் மாயும்
ஒன்றலா ஐயம் போகும் உறுகரு மங்கள் மாயும்
நன்றதாம் நேயம் தானும் ஞானமே வடிவம் ஆகி
நின்(று)அதன் சொரூபம் ஆகும் நிகழ்த்திட இதனைக் கேளாய்.

**பொழிப்புரை:** *அப்பொழுது துன்பங்கள் எல்லாம் போகும், அகங்கார கிரந்தி (முடிச்சுகள்) எல்லாம் அழியும். பலவகையான சந்தேகங்கள் நீங்கும். வந்தடையும் கருமங்கள் மாய்ந்து போகும். நல்லதாகிய ஞேயம் என்பதும் அறிவு (சித்) வடிவாகி நிலைபெற்ற ஆன்ம சொரூபம் ஆகும் (அதாவது அறிவு வடிவமாயும், இனிய தூய்மையாயும் விளங்கும் ஆன்ம தத்துவமே ஞேயம் என்று உணர்வர்) இத்தகைய தன்மை அடைந்திட சிரவணம் செய்வாய்.* **(6.8.11)**

**எங்கணும் உளது நித்தம் எழுதல்(ல்)அத் தமித்தல் இல்லை**
**அங்கண்மெய் அறிவு சாந்தம் அமல(ம்)அச் சுதம்கு ணங்கள்**
**தங்குதல் இல்லை ஈ(து)ஒன்(று) உள(து)எனச் சாற்ற லோடும்**
**பங்க(ம்)இல் முனியை நோக்கிப் பகீரதன் உரைக்க லுற்றான்.**

**பொழிப்புரை:** *எவ்விடத்திலும் இருப்பது, எப்பொழுதும் இருப்பது, உற்பத்தி நாசம் அற்றது அந்த ஞேயப் பிரம்மம் அதிவியாபகமான சச்சிதானந்தம், சாந்தம், மலமில்லாதது, நழுவுதல் அற்றது, குணங்கள் எல்லாம் கடந்தது, இத்தகைய ஞேய வத்து (பிரம்மம்) ஒன்று உள்ளது என்று கூறிடவும், குற்றமற்ற திரிதல முனிவரை நோக்கி பகீரதன் கூறலானான்.* **(6.8.12)**

**ஒழிந்துள உடலம் ஆதி ஒன்றையும் காணேன் ஆகி**
**இழிந்துள தொழில்கள் எல்லாம் திரம்இன்றி ஏக நின்னால்**
**மொழிந்துள அறிவே ஆகி முட்(டு)அற இருப்ப(து) எங்ஙன்**
**பொழிந்துள கருணை ஐயா புகல்எனப் புகலல் உற்றான்.**

**பொழிப்புரை:** *ஒழிந்த உள்ளம், உடல் முதலான எதனையும் காணாதவனாகி, இழிந்த கர்மங்கள் அனைத்தும் திடமின்றிப் போக, நீர் மொழிந்த சித்தே ஆகி தடையில்லாமல் இருப்பது எப்படி? கருணை பொழியும் ஞானாசிரியரே! அருளிச் செய்வீர் என்று கேட்கவும், உபதேசிக்கத் தொடங்கினார்.* **(6.8.13)**

**திரிதலன் உரைப்பான் மன்னா சித்தம்தான் இதய விண்ணில்**
**விரியுஞா னத்தால் நேய நிட்டையை மேவும் பின்னர்**
**பெரியதாம் அனைத்து மேனிப் பெருந்தகை யாய சீவன்**
**பரிபவம் மாய சன்மம் பயில்வுறா(து) உலகில் மீட்டே.**

**பொழிப்புரை:** *திரிதல முனிவர் சொல்வதாவது... மன்னவனே! சித்தமானது இதய ஆகாயத்தில் விரிகின்ற அறிவினால் ஞேய (சொரூப) நிட்டையைப் பொருந்தும். பின்னர் பெரியதான சகல உடல்களையும் சேர்ந்து பெருந்தகைமை அடைந்த சீவன் துயர்மயமான பிறவிகளை உலகத்தில் மறுபடியும் அடையாது.* **(6.8.14)**

**இல்லவள் இல்லம் ஆதிப் பற்(று)அறல் இட்(டு)அ நிட்டம்**
**புல்லிடில் சமசிற் பாவம் பொருந்துதல் தனக்குப் பேதம்**
**அல்லவாய் அதன்தன் பாவம் நிரந்தரம் ஆதல் என்றும்**
**அல்லல்ஏ காந்தம் சேர்தல் மானிடத் திரளை நீத்தல்.**

**பொழிப்புரை:** *மனைவி, குடும்பம் வீடு முதலியவற்றில் பற்று விட்டுப்போதல், விருப்பமானதும் விருப்பம் இல்லாததும் அடைந்த போது சம பாவனையோடு இருத்தல், தனக்குப் பேதமாக இல்லாத அந்தப் பிரம்ம பாவனையே இடைவிடாமல் ஆதல், என்றைக்கும் சமாதிக்குச் சாதகமான தனியிடத்தைச் சேர்தல், ஜனக் கூட்டத்தைச் சேராது இருத்தல்,* **(6.8.15)**

ஆற்றும தத்து வத்தின் அகல்கிலா ஞான நிட்டை
ஊற்றமாம் உண்மை ஞானத்(து) உறுபொருள் காட்சி இந்தத்
தோற்றமாம் குறிகள் சேர்தல் ஞானமாய்ச் செல்வர் சொல்வர்
வேற்றுள வழிகள் முற்றும் விதனஅஞ் ஞானம் தானே.

**பொழிப்புரை:** *பிரம்ம தத்துவத்தின் நீங்காத ஞான நிட்டை. ஆழ்ந்த ஆராய்ச்சியினால் உண்டாகும் யதார்த்த ஞானத்தினால் சத்து வத்துவின் தரிசனம், கூறிய இந்த இலக்கணம் கொண்ட சின்னங்களைச் சேர்தல் ஞானம் என்று ஞானச் செல்வர் சொல்வர். வேறான மற்ற வழிகள் எல்லாம் முழுவதும் துன்பம் தரக்கூடிய அறியாமை தானே.* **(6.8.16)**

ஏதம்(ம்)அ தாக நா(ன்)என்(று) எண்ணுதல் இறந்த போது
காதலும் முனிவும் தீர்க்கும் களைகணாய்ப் பிறவி நோய்க்கு
மேதகு மருந்தா ஞானம் வெளிப்படும் என்று சொன்ன
சேதன முனிவன் ஆன திரிதலற்(கு) அரசன் செப்பும்.

**பொழிப்புரை:** *தேகத்தை நான் என்று எண்ணுதல் விட்டுத் தொலைந்த போது, விருப்பு வெறுப்புகளைத் தீர்க்கும் புகலிடமாய், பிறவி நோய்க்கு அரிய மருந்தாகிய பிரம்ம ஞானம் வெளியாகும் என்று கூறிய அறிவு வடிவமான முனிவராகிய திரிதல முனிவரை நோக்கிப் பகீரத மன்னவன் கூறுவான்.* **(6.8.17)**

மலைமிசை மரம்போல் நீள்நாள் வன்புற இந்த மெய்யில்
நிலைபெறல் நா(ன்)என்(று) எண்ணல் நீக்குவ(து) எங்ஙன் என்னத்
தலைமைசேர் குரவன் சொல்வான் தன்மன வருத்தத் தாலே
தொலைவறு போகத்(து) எண்ணம் துவக்(கு)அறத் துடைத்து நீக்கி

**பொழிப்புரை:** *மலையின் மேல் இருக்கின்ற மரம் போல, வெகுகாலம் வலிமையாக இந்த தேகத்தில் நிலைபெற்றிருக்கும் 'நான்' என்ற எண்ணத்தை (அகங்காரத்தை) அகற்றுவது எப்படி என்று கேட்க, தலைசிறந்த குருமூர்த்தியானவர் சொல்வான்... தன்னுடைய மனதின் (வாசனைகளின் அழிவு முதலான) முயற்சியாலே தொலைப் பதற்கு முடியாததான போகத்தின் நினைவு முதலிலேயே எழாத வண்ணம் அகற்றி ஓட்டி,* **(6.8.18)**

விரிவுறும் உண்மை மேவில் வினைஅகங் காரம் மாளும்
புரிவற இவற்றை எல்லாம் புந்தியால் தீர நீக்கித்
துரி(சு)அலை வின்றி நின்றாய் என்னி(ன்)நான் என்னும் தோற்றம்
தெரிகிலா(து) அதுவே நீயாம் தெளிந்ததற் பரமும் அஃதே.

**பொழிப்புரை:** *விரிந்திருக்கும் சத்து தத்துவத்தை அடைந்தால் சம்சார பந்தத்திற்குக் காரணமான அகங்காரம் மாய்ந்து போகும். ஒன்றையும் செய்யாமல் இவை அனைத்தையும் (விசார) புத்தியால் முழுதும் நீக்கி, குற்றமாகிய சஞ்சலம் இன்றி நிலைப்பாய் எனில், நான் என்பதான தோற்றம் தெரியாது மறைந்து போகும். அப்பொருளே நீ ஆவாய். தெளிந்த தற்பரம்பொருளும் அதுவே.* **(6.8.19)**

**அனைத்துள விசேடம் நீங்கி அச்ச(ம்)அற்(று) ஏட ணைக்குள்**
**தினைத்துணைப் பற்(று)அற்(று) இன்மை சிக்கெனச் சேர்ந்து செல்வம்**
**வினைப்பகைக்(கு) ஈந்து நா(ன்)என் பதுவிட்டு மேனிச் செய்கை**
**தனைத்துறந்(து) அவர்பால் ஐயம் தனைஇரந்(து) எனையும் விட்டு**

**பொழிப்புரை:** *(நான் பிராமணன், இல்லறத்தான் முதலான) சகல விசேஷங்களையும் நீக்கி, பயம் இல்லாது, மனைவி, புத்திரர் முதலியவற்றில் விஷய இச்சையை விட்டு, அரசு, செல்வம் இவற்றைத் துயர் தருகின்ற பகைவர்களுக்குக் கொடுத்து விட்டு, 'நான்' என்பதை அடியோடு விடுத்து, உடலைக் காப்பாற்றும் செய்கை தனையும் விட்டு, அவரிடத்தே பிச்சை வாங்கி உண்டு, ஆசிரியராகிய என்னையும் விடுத்து,* **(6.8.20)**

**நிற்பர மாய்இவ் வாறு நிற்கின்மே லுக்கு மேலாம்**
**தற்பர நீயே ஆதி என்(று)அவன் சாற்றக் கேட்டு**
**வெற்(பு)அடர் தோளான் நெஞ்சில் செய்வதாம் தன்மை மேவிப்**
**பற்பல தன்செய் கைக்கே பகீரதன் நிற்ப தானான்.**

**பொழிப்புரை:** *சொரூபத்தில் இவ்வாறு நிலைநிற்பாய் எனில் உயர்வுக்கு எல்லாம் உயர்வான பரமாத்ம வத்து நீயே ஆவாய் என்று அந்த முனிவர் உபதேசிக்கக் கேட்டு, மலை அனைய தோள் மன்னவன் சற்குரு உபதேசித்த காரியத்தைச் செய்யவேண்டும் என்று நெஞ்சில் கொண்டு, பலவிதமான தன் இராச்சிய சிந்தனை யாகிய செயல்களில் கருத்துள்ளவன் போல் ஆனான் பகீரதன்.* **(6.8.21)**

**சிறிதுநாள் கழிந்த பின்னர் சிறந்ததோர் வேள்வி செய்து**
**நெறிவளர் செல்வம் உற்று நீசமும் உயர்வும் நாடா**
**வறியராம் மறையோர் தெய்வம் கிளைமுதல் வந்தோர்க்(கு) ஈந்து**
**பிறிவறு துகி(ல்)ஒன்(று) அன்றிப் பிறி(து)இலன் மூன்று நாளில்**

**பொழிப்புரை:** *சில நாட்கள் கழிந்த பின்னர், ஒப்பற்ற சிறந்த ஒரு யாகத்தைச் செய்து, நெறிமுறைகள் தவறாமல் செல்வம் முழுவதையும் உயர்வு தாழ்வு கருதாமல், ஏழைகளாகிய பிராமணர், கோவில்கள், சுற்றத்தார் முதலாக வந்தவர்களுக்கு எல்லாம் தானமாகக் கொடுத்து, மூன்று நாட்களில் உடுத்தியிருக்கின்ற துணியைத் தவிர வேறொன்றும் இல்லாதவன் ஆயினான்.* **(6.8.22)**

**யாவரும் இரங்க யாதும் இன்மையாம் தனது நாட்டை**
**மேவரும் பகைவற்(கு) ஈந்து வேறறு துகி(ல்)ஒன்(று) ஆனோன்**
**தாவரு முனியாய் ஞான முனிக்குணம் சார்ந்து தன்னத(ு)**
**ஓவறு நாடு நீங்கி ஒருவனாய் உலாவல் உற்றான்.**

**பொழிப்புரை:** *அனைவரும் இரக்கப்பட்டு அழ, செல்வம் முதலியவை இல்லாத தனது நாட்டினைப் பகைவனுக்குக் கொடுத்து விட்டு, வேறு ஒன்றும் இல்லாமல் உடுத்திய துகில் ஒன்று மட்டும் உடையவன் ஆனான். ஒருவராலும் அடைய முடியாத ஒழுக்க நெறிகள் மனதில் உடையவனாய், ஞான முனிவருக்குரிய குணங்களைச் சேர்ந்து. தன்னுடைய விடமுடியாத நாட்டினை விட்டு நீங்கி, தனி ஒருவனாக உலாவித் திரிந்தான்.* **(6.8.23)**

முகத்தினால் பெயரால் கண்டோர் அறிகிலா மூதூர் தோறும்
நகத்(து)உயர் வனங்கள் தோறும் நண்ணினன் தீரன் ஆகி
அகத்தி(ல்)ஏ டணைகள் எல்லாம் அவிழ்த்தனன் சிறிது நாளில்
இகத்துயர் சாந்தி யால்தன் இடத்(து)இளைப் பாறி னானே.

**பொழிப்புரை:** *முகத்தைப் பார்த்தும், பெயரைக் கேட்டும் அறிந்து கொள்ள முடியாத பழமையான ஊர்கள்தோறும், உயர்ந்த மலைகள், காடுகள் தோறும் தைரியம் உடையவனாய் சுற்றி அடைந்தனன். உள்ளத்தில் ஆசாபாசங்கள் எல்லாம் அழித்தனன். சில நாட்களில் இங்கு உயர்ந்த சாந்தத்தினால் தன் சுய ஆத்ம சொரூபத்தில் மன அமைதி அடைந்து இளைப்பாறினான்.* **(6.8.24)**

படிமுழு(து) உழல்வான் ஓர்கால் பகைவற்குத் தான்முன் ஈந்த
கடிநகர் புக்கான் எல்லாக் கரணமும் வென்றான் சென்று
மடியிலா அமைச்சர் மற்றோர் மனையெலாம் ஐயம் ஏற்றான்
முடியுடை இவனை நோக்கி இரங்கினார் முன்பு கண்டார்.

**பொழிப்புரை:** *பூவுலகம் முழுதும் சுற்றி வலம் வந்து கொண்டிருந்தவன் ஒரு சமயம் பகைவருக்குத் தான் முன்பு தானமாகக் கொடுத்த மதில் சூழ்ந்த நகரத்தை அடைந்தான். பொறிபுலன்கள், அந்தக்கரணங்கள் யாவற்றையும் வென்ற அவன் அங்கு சென்று கெடுதல் இல்லாத அமைச்சர், மற்றவர்கள் வீடுகள் எல்லாவற்றிலும் பிச்சை எடுத்து உண்டான். முன்பு இவனைக் கண்டவர்கள் மகுடம் தரித்திருந்த இவனைப் பார்த்து இரக்கம் கொண்டனர்.* **(6.8.25)**

அதிகபூ சனைகள் பண்ணி அரசுசெய்(து) அருளு(க) என்றே
பதிபெறு பகைவன் தானும் பகரவும் பலியே அன்றி
எதிர்ஒரு திரண மேனும் இச்சைஅற்(று) இருந்து சின்னாள்
புதி(து)என்(று) எவரும் வெம்பப் போயினன் புறத்துத் தானே.

**பொழிப்புரை:** *அதிக பூசைகள் செய்து, அரசினை ஆள்க என்று முன்பு நாட்டினைப் பெற்றுக் கொண்ட பகைவனும் கூறவும், பிச்சையைத் தவிர எதிரில் ஒரு சிறு துரும்பு கூட விருப்பம் இன்றி சில நாட்கள் இருந்தான். இது மிக அற்புதம் என்று எல்லலோரும் துயர்கொள்ள, அந்த தேசத்தை விட்டு வேறிடத்திற்குத் தானே சென்றனன்.* **(6.8.26)**

சாந்தியே வடிவாய்ப் புந்தி தளர்(வு)இன்றி இன்பம் எய்திக்
காந்திசேர் தன்சொ ரூபக் கண்ணிலே விநோதம் மேவிப்
போந்திசை அதனில் வந்த குருவினைப் புகழ்ந்து சேர்ந்து
தாம்திரி யுற்றார் அன்னார் சைலத்தில்ன வனத்தில் நாட்டில்.

**பொழிப்புரை:** *சாந்தமே வடிவாகி, புத்தி தளர்வு அடையாமல், ஆனந்தம் அடைந்து, ஒளி பொருந்திய தனது ஆத்ம தரிசனத்தில் சந்தோஷித்து, தான் போய்க் கொண்டிருந்த திசையில் வந்த குருவினைப் புகழ்ந்து பணிந்து, குருவாகிய திரிதலருடன் சேர்ந்து. இருவரும் மலைகளிலும், காடுகளிலும், நகரங்களிலும் சுற்றித் திரிந்து வந்தனர்.* **(6.8.27)**

குருவும்மா ணாக்கன் தானும் குறைவறு சமத்தை மேவி
இருவரும் நிலைமை ஒப்போர் விநோதத்தால் ஆக்கை தாங்கிக்
கருஉடல் இருந்(து)என் போ(ய்)என் காமித்த படிஉ லாவி
ஒருமையில் உள்ள வாற்றால் உறைகென உறைக்க உன்னி.

**பொழிப்புரை:** *குருவும், சீடனும் குறைவில்லாத சாந்தியை அடைந்து, இருவரும் ஒரே நிலைமையில் இருப்பவர்கள் ஆனார். விளையாட்டாக இந்த உடலைத் தாங்கிக் கொண்டு, கருவில் வந்த உடல் இருந்து என்ன? போனால் தான் என்ன? என்று விருப்பப்படி உலாவி, இரண்டற்ற ஒருமை நிலையில் உள்ளபடி நிலைத்து நிற்கலாம் என்று திடமாக எண்ணி,* **(6.8.28)**

துன்புறா ஆனந் தத்(து)அ சுகத்தினும் மத்தி மத்தும்
இன்புறார் தனங்கள் மாதர் இயைநிதி இருநாற் செல்வம்
முன்புற விரும்பிச் சித்தர் தந்தவை மோகம் இன்றி
மென்பு(ல்)ஒத்(து) ஒழிந்தார் வேறோர் மேதகு நாட்டில் சென்றார்.

**பொழிப்புரை:** *துன்பம் இல்லாத ஆனந்தத்திலும், சுகம் இல்லாதவற்றிலும், இரண்டுக்கும் மத்தியிலும் மகிழாமல், செல்வங்கள், மங்கையர்கள், மற்ற சித்திகளாகிய செல்வம் அஷ்ட ஐஸ்வரியம் முதலானவை சித்தர்கள் அளித்தும் அவைகளில் மோகம் இன்றி பட்டுப்போன துரும்புக்கு ஒப்பாகக் கருதி வேண்டாம் என்று நிராகரித்தனர். வேறொரு சிறந்த நாட்டிற்குச் சென்றனர்.* **(6.8.29)**

மைந்த(ன்)இல் லாத அந்த மாநகர் மன்னன் ஆவி
நந்தலும் அமைச்சர் எல்லாம் நலங்கொள்மன் னவன்ஆர் என்று
சிந்தனை செய்யும் காலை சிறுபலி முனிவ னான
சுந்தர மன்னை நோக்கிச் சுடர்முடி வேந்தன் ஆக்க.

**பொழிப்புரை:** *அந்த நாட்டின் மன்னவன் மைந்தன்* (வாரிசு) *இல்லாமல் மரணம் அடையவும், அந்நாட்டு அமைச்சர் எல்லாரும் நலமுடைய மன்னவன் இனி யார் என்று சிந்திக்கின்ற சமயம், அற்ப பிச்சை மாத்திரம் ஏற்கக் கூடிய முனிவர் குணங்களை உடைய அழகான பகீரதனைப் பார்த்து, ஒளிமிகும் மகுடம் சூட்டி மன்னவனாக ஆக்க,* **(6.8.30)**

பகீரதன் அரசன் ஆகிப் பலபெரும் சேனை சூழ
மகிதலம் புரத்தல் கேட்டு வந்தனர் பண்டை நாட்டோர்
விகிதமாய் நீமுன் வைத்த எம்முடை வேந்தன் வீந்தான்
அகிலரும் களைகண் காணேம் அரசன்நீ ஆதல் வேண்டும்.

**பொழிப்புரை:** *பகீரதன் மன்னவன் ஆகிப் பலவகையான சேனைகளுடன் நாட்டினை ஆள்வதைக் கேள்விப்பட்டு, பழைய நாட்டைச் சேர்ந்தவர்கள் வந்தனர். விதிப்படி தாங்கள் முன்பு ஆக்கிய எங்களுடைய மன்னவன் மரணம் அடைந்தான். நாங்கள் அனைவரும் ஆதரவு ஒன்றும் காணவில்லை. அரசனாகத் தாங்களே ஆக வேண்டும் என்று கேட்டுக்கொண்டனர்.* **(6.8.31)**

**விருப்(பு)அறத் தானே வந்த வெறுக்கையை வெறுக்கை நன்(று)அன்(று)**
**ஒருப்படல் வேண்டும் என்றே உள்அன்பால் வேண்டக் கண்டு**
**திருப்பொலி மார்பன் சென்று திண்புவி சேர ஆண்டான்**
**இருப்புழி மௌனம் சாந்தி சமம்எய்தி இராகம் இன்றி.**

**பொழிப்புரை:** *விருப்பம் இன்றி தானே வந்த செல்வத்தை வெறுத்து ஒதுக்குதல் நல்லதல்ல, ஏற்றுக் கொள்ளல் வேண்டும் என்று உள்ளே அன்பால் தானே வேண்டுவதைக் கண்டு, லட்சுமி அருள் பொருந்திய மார்பனாகிய பகீரதன் அந்த நாட்டிற்குச் சென்று மகுடம் தரித்து அரசாட்சி புரிந்தான். அப்படி அரசாட்சி செய்கையில் தேவையற்று பேசாமால் மௌனமாக சாந்தியையும், சமமான பார்வையையும் உடையவனாகி, இச்சை இல்லாமல்,*
**(6.8.32)**

**மச்சரம் இன்றி வந்த தொழில்ஒன்றின் வழியில் நின்று**
**மெச்சிய வியப்(பு)இ லாதோன் மிகுந்தபல் லாண்டு நோற்றுத்**
**துச்ச(ம்)இல் தவத்தால் கங்கை கொணர்ந்துதொல் பிதாக்கள் உய்ய**
**இச்சக மிசையே கீர்த்தி ஈ(று)அற நிறுத்தி னானே.**

**பொழிப்புரை:** *பொறாமை இன்றி, தானே வந்தமைந்த செயல்களில் மாத்திரம் ஈடுபட்டு, புகழ்கின்ற ஆச்சரியம் இல்லாத அவன் மகாதேவரைக் குறித்து பலப்பல ஆண்டுகள் தவம் புரிந்து, அளவில்லாத அந்த தவத்தினால் கங்கையைக் கொண்டு வந்து பழைய பிதுருக்கள் உய்வடைய, இந்த உலகத்தில் புகழ் அழியாதபடி நிலை நிறுத்தினான்.*
**(6.8.33)**

**(நிருவாணப் பிரகரணத்தில் பகீரதன் கதை முற்றும்)**

# (ix) சிகித்துவசன் கதை

*கஷ்டமாக இருந்தாலும் மன அமைதி தனது முயற்சியால் பெறப்படும் எனத் தெரிவித்ததற்குப் பகீரதன் கதை முன்பு சொல்லப்பட்டது. இப்போது தடைகள் அழியாவிடின் கஷ்டமாயினும் சுய ஆன்ம ஞானம் ஆசாரியரின் முயற்சியின் அதிசயத்தால் பெறலாம் எனத் தெரிவிக்கும் பொருட்டு, பலகதைகளை உள்ளடக்கிய இக்கதை துவக்கப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**வகிர்த்துநிமிர் மனம்என்னும் மாப்பறவை தனைமுன்னம் மாற்றி ஓட்டிச்**
**சிகித்துவசன் தனைப்போல சாந்தனாய் உன்னிடத்தே செறிவாய் என்ன**
**சுகித்(து)உணர்வின் நின்(று)உளஅச் சிகித்துவசன் ஆர்ஜயா சொல்வாய் எல்லாம்**
**சகித்(து)உணர்வு மேன்மேலும் நிறைவதற்(கு)என்(று) அவன்கேட்பத் தவனும் சொல்வான்.**

**பொழிப்புரை:** *விஷயங்களை நினைந்து நினைந்து எழுகின்ற மனம் என்ற அதிவேக பெரிய பறவையை முன்பு விஷயச் செயல்களை மாற்றி உள்முகத் திருப்பி, சிகித்துவசன் என்னும் அரசனைப் போல சாந்தனாய், ஆத்மாவிலேயே நிலை நிற்பாய் என்று வசிட்ட முனிவர் கூறவும், ஆனந்தம் அடைந்து உணர்வில் நின்ற அந்த சிகித்துவசன் யார் ஐயனே! பொறுமையாக உணர்வு மேன்மேலும் பூரணமாக ஆவதற்கு எல்லாம் உரைத்தருளுவாய் என்றுஇராமபிரான் கேட்கவும், தவசியான வசிட்டர் கூறுவார்.* **(6.9.1)**

**துவாபரமாம் உகத்துமுதல் உண்டானோன் ஏழுமனு துஞ்சும் எல்லை**
**திவாகரன்நேர் மாளவதே சத்(து)இறைவன் சிகித்துவசன் செங்கோல் வேந்தன்**
**அவாமுதல்தீக் குணம்இல்லோன் உதாரமுதல் நற்குணங்கள் அனைத்தும் உள்ளோன்**
**விவாதம்(ம்)அறு மோனத்தோன் சமதமமாம் குணநிறைந்தோன் மிகவும் நல்லோன்.**

**பொழிப்புரை:** *துவாபர யுகத்தின் ஆரம்பத்தில் உதயமானவன். ஏழாவது மனு சென்ற போது, சூரியனுக்கு நிகரான மாளவ தேசத்தின் தலைவன் சிகித்துவசன் செங்கோல் ஏந்தி மன்னவன் ஆசை முதலான தீய குணங்கள் இல்லாதவன், கொடை முதலிய நல்ல குணங்கள் அனைத்தும் உள்ளவன், தேவையற்ற கர்மங்களில் வீணாக விவாதம் செய்யாத மௌனம் உடையவன், சமம், தமம் முதலிய குணங்கள் நிறைந்தவன், மிகவும் நல்லவன்.* **(6.9.2)**

**சூடாலை எனும்கன்னி சுராட்டிரமன் னவன்அளித்த தோகை போல்வாள்**
**வீடாத நற்குணத்தால் தனைஒப்பாள் அவளைஅவன் விவாகம் செய்தான்**
**வாடாத நினை(வு)ஒன்றிப் பிறி(வு)இன்றிச் செய்தொழில்கள் மாறு பாட்(டு)அற்(று)**
**ஈடான பலகலைக்கும் வல்லவராய் இருவரும்ஒத்(து) இனிது வாழ்ந்தார்.**

**பொழிப்புரை:** *சூடாலை என்னும் கன்னி சுராட்டிர நாட்டு மன்னவன் பெற்றெடுத்த மயில் போன்றவள். கெடாத நல்ல குணங்களால் தனக்குத் தானே சமம் ஆனவள்.*

*அவளைச் சிகித்துவசன் திருமணம் செய்துகொண்டான். வாடாத எண்ணங்கள் ஒன்றி, பிரிவு இன்றி, செய்கின்ற கர்மங்களில் மாறுபாடு இன்றி, பெருமையுள்ள பலகலைகளிலும் வல்லமை வாய்ந்தவராய், இருவரும் ஒருமித்து இனிதே வாழ்ந்து வந்தனர்.* **(6.9.3)**

**ஈருடலுக்(கு) ஓர்உயிர்போல் இருவரும்சேர்ந்(து) இளமைநலம் இனிது துய்த்தார்**
**சீருடைய வருடங்கள் இவ்வகையே எல்லைஅறச் செல்ல லோடும்**
**ஓ(ர்)உறுதி இலாஇளமை உடைந்தகுட நீர்போல ஒழுகிப் போக**
**நீ(ர்)உறுசெந் தாமரைமேல் பனிஇடிபோல் சரைவந்து நேர்ந்த(து) அன்றே.**

**பொழிப்புரை:** *இரண்டு உடல்களுக்கு ஒரு உயிர்போல், இருவரும் சேர்ந்திருந்து, இளமைக் காலத்து சுகங்களை இனிதே அனுபவித்தனர். சிறப்பான அளவில்லாத ஆண்டுகள் இந்த வழியே கடந்து போக, ஒரு நிலைக்கும் நிச்சயம் இல்லாத இளமையானது உடைந்த குடத்தில் நீர் ஒழுகுவது போல கழிந்து போகவும், நீரிலுள்ள செந்தாமரை மலர் மீது பனி இடி விழுந்தது போல் முதுமை வந்து நேர்ந்தது.*
**(6.9.4)**

**கரதலத்து நீர்அதுபோல் நித்தலும்வாழ் நாள்மெல்லக் கழன்று செல்லத்**
**திரள்மழைநாள் சுரைக்கொடிபோல் தீராமல் ஒன்றுமே தீர்க்க மாக**
**விரவுசரற் காலத்தில் ஆற்றுநீர் போல்அழகு விரைவில் ஓடப்**
**புரமுறுநற் சுகங்க(ள்)எல்லாம் சிலைவிடுத்த சரங்களைப்போல் போயிற்(று) அன்றே.**

**பொழிப்புரை:** *கையில் உள்ள தண்ணீர் போல, தினந்தோறும் வாழ்நாள் மெதுவாக கழிந்து செல்ல, மிகுந்த மழைக்காலத்தில் சுரைக் கொடியே போல, திருப்தி அடையாத ஆசை நீண்டு தொடர, சரற்காலத்தில் பரவிய ஆற்று நீர் போல் அழகானது வேகமாக ஓட, உடல் சம்பந்தமான நல்ல சுகங்கள் எல்லாம் வில்லில் இருந்து விடுபட்ட அம்புகளைப் போல் போயிற்று.* **(6.9.5)**

**கதலியுறு கருப்போல நிராசையைத்தந் ததுபயன்றீர் காரி யம்தான்**
**இதமுறஆங்(கு) அவர்நினைவார் எத்தைஅடைந்(து) உள்ளம்மீண்(டு) எங்கும் விழா(து)**
**அதுமிகநன்(று) அவ்வகையா னதுகிடையா(து) இம்மோகத்(து) அழுந்து வார்க்குத்**
**திதமுறவத்(து) யாத்துமதத் துவநூலே பிறவிநோய் தீர்ப்ப(து) அன்றே.**

**பொழிப்புரை:** *வாழை அடைந்த கருவைப் போல, பயனற்ற காரியங்கள் நிராசையைத் தந்தது, நன்மை உண்டாகும் வண்ணம் இருவரும் எண்ணுவர். எதனை அடைந்து உள்ளமானது மீண்டும் எவ்விடத்தும் விழமாட்டாதோ, அதுவே மிகவும் நல்லது. ஆனால் அத்தகையது கிடைக்கமாட்டாது. இந்த மோகத்திலே மூழ்கியவர்களுக்கு திடமாகவும், முறையாகவும் அத்யாத்ம ஞான சாத்திரமே பிறவியாகிய நோயைத் தீர்க்க வல்லது.*
**(6.9.6)**

**ஆற்றுமதத் துவஞானம் ஒன்றாலும் அலதுபிறப்(பு) அறா(து)என்(று) எண்ணி**
**ஊற்றமுறு தற்பரராய் அதில்மனமாய் அதில்சேர்ந்த உயிராய் நித்தம்**
**சாற்று(ம்)அதில் நிட்டையராய் அதற்(கு)அடுத்தோர் சார்வாய்ச்சான் றோர்கள் பூசைக்(கு)**
**ஏற்றசெய லால்சிறிதும் இடைவிடாப் பரிசயமாய் இரண்டு பேரும்.**

**பொழிப்புரை:** *ஆன்ம தத்துவ ஞானம் ஒன்றில்லாமல் மற்றவையால் பிறப்பு அற்றுப் போகாது என்று சிந்தித்து, ஊக்கமுடன் ஆத்மஞானத்தில் பெருவிருப்புடையராயும், அதில் மனம் உடையவர்களாயும், அதில் ஒன்றிய பிராணனை உடையவராயும், எப்போதும் சொல்லப்பட்ட அதன் நியமம் உடையவராயும், அதற்கடுத்த ஆத்ம ஞானம் உள்ளவர்களைச் பின்பற்றுபவர்களாயும், ஆத்ம ஞானம் உடைய பெரியோர்களைப் பூசித்தற்கு உகந்த செயல்களால் கொஞ்சமும் இடைவிடாமல் பயிற்சி செய்பவராய் இருவரும்,* **(6.9.7)**

**தம்மில்தாம் உணர்ந்(து)உளராய் அதற்(கு)அடுத்த ஆசாரம் தரித்து நீள்நாள்**
**விம்முற்ற மகிழ்ச்சியராய் விளங்கினார் பின்(பு)அந்த விவேக மங்கை**
**யம்மைக்கா நல்லபத ஒழுங்கினால் பேர்அறிஞர் அருளிச் செய்த**
**செம்மைச்சாத் திரப்பொருள்கள் தரிக்கலாம் அளவறிந்து திருந்தக் கேட்டு.**

**பொழிப்புரை:** *ஒருவருக்கு ஒருவர் பேசித் தெரிந்து கொள்பவராய், அடுத்து உரிய ஒழுக்கங்களைக் கைக்கொண்டு நீண்டகாலம் பொங்குகின்ற மகிழ்ச்சி உடையவராய்த் திகழ்ந்தனர். பின்பு விவேக மங்கையான சூடாலை, மறுமைக்காகிய நன்மையான பதக் கிரமத்தினால் பேரறிஞர்கள் அருளிச் செய்த செவ்வையான சாத்திரங்களின் அர்த்தங்களைக் கிரகிக்கும் அளவு அறிந்து நன்றாய் கேட்டு.* **(6.9.8)**

**எள்ளுறா வியாபாரம் வியாபாரம் இல்லாமை இரண்டும் இன்றி**
**வெள்ளிதாய் விளங்கியநற் புந்தியால் சூடாலை விசாரிக் கின்றாள்**
**தெள்ளியே தன்னைமுதல் நோக்கிநான் என்(று)எத்தைச் செப்பு கின்றோம்**
**உள்ளறா இம்மோகம் ஆருடையது எவ்வா(று)எங்(கு) உதித்த(து) எத்தால்.**

**பொழிப்புரை:** *தள்ளத் தகாத செயல்கள், செயல்கள் இல்லாமை ஆகிய இரண்டும் இன்றி, தூயதாய் விளங்கிய நல்ல புத்தியால் சூடாலை விசாரணை செய்கின்றாள். தெளிவாகத் தன்னை முதலில் பார்த்து, நான் என்பதாக எதைச் சொல்கின்றோம்? மனதில் நீங்காத இந்த மயக்கம் யாருடையது? எப்படி எவ்விடத்தில் எக்காரணத்தால் உதித்தது?* **(6.9.9)**

**முதலான உடல்சடமா மூகமாம் நான்என்று மொழியல் ஆகா**
**விதமான கருமஞா னேந்தியங்கள் சடமாகி வெவ்வே(று) ஆகும்**
**அதனா(ல்)நான் அன்றாகும் தடியினால் ஓடுகளை அசைக்கு மாபோல்**
**திதமாகா மனத்தாலே இவைஈ(ரி)ஐந் தும்சேட்டை செய்யும் அன்றே.**

**பொழிப்புரை:** *முன்னே தோற்றுகின்ற உடல் நான் என்னில் சடமாகவும், மூடமாகவும் இருப்பதனால் நான் என்று சொல்லத்தக்கது அன்று. தேகத்தை அசைப்பிக்கின்ற கருமேந்திரிய, ஞானேந்திரியங்கள் சடமாய் வேறு வேறாகும். அதனால் அவைகளை நான் என்று கூறுவது தகாது. தடியினால் ஓடுகளை அசைத்தால் அசைவது போல் நிலையாக இல்லாத மனதினாலே இந்த பத்து இந்திரியங்களும் சேட்டை செய்யும். அதனால் அவையும் நான் அல்ல.* **(6.9.10)**

**செறிதருசங் கற்பம்(ம்)எனும் சத்தியுள தாய்ச்சடமாம் சித்தம் தானும்**
**எறிகவணால் கல்போலப் புந்தியின்நிச் சயத்தாலே இயக்கம் எய்தும்**
**அறிவுறுபுந் தியும்சடமாம் அறுதியிட லேவடிவாய் அகங்கா ரத்தால்**
**நெறியுறுசெய் கையையுறுமால் பள்ளத்தால் ஓடுநதி நீர்க ளேபோல்.**

**பொழிப்புரை:** *மிகுதியான சங்கற்பம் என்னும் சத்தியை உடையதாய் சடமாம் மனமானது எறிகின்ற கவண்டியினால் வீசுகின்ற கல் செல்வதைப் போல, புத்தியின் நிச்சயத்தாலே இயக்கத்தைப் பெறுகிறது. (அதனால் அதனை நான் அல்லவாம்) அறிவு உருவமான புத்தியும் பள்ளத்தில் ஓடுகின்ற ஆற்றின் தண்ணீர் போல் துணிவதே வடிவமான அகங்காரத்தினால் செயல்வழியை அடையும். (அதனால் அதனையும் நான் எனலாகாது)*
**(6.9.11)**

**தீ(து)அகங்கா ரம்சடமாய்ப் பயனிலியாய் அவசமாய்ச் சீவ னாலே**
**சாதமுறும் இதுசிறுவர் மயக்கத்தில் பேய்தோன்றும் தன்மை போலாம்**
**ஓதியசீ வனும்தொழிலே வடிவாய்க்காற்(று) உருவாகி இதயம் உற்று**
**மேதகைய சுகுமார மாய்உள்ளே மற்றொன்றன் மேவி வாழும்.**

**பொழிப்புரை:** *தீய அகங்காரம் சடமாய், பயன் இல்லாததாய், பராதீனமாய், குழந்தைகளின் பிரமையினால் பேய், பிசாசு தோற்றும் விதத்தைப் போல, சீவனாலே தோற்றுகின்றது.(அதனால் அகங்காரமும் நான் அல்ல) சொல்லிய சீவனும் செய்கைகள் வடிவமாய், பிராண வடிவமாகி இதயத்திலிருந்து மேம்பட்ட மிகவும் மிருதுவாய் உள்ளே மற்றொன்றைச் (பிரத்யேகாத்மாவைச்) சார்ந்து வாழும். (அதனால் சீவனும் நான் அல்ல)*
**(6.9.12)**

**ஆற்றுமதத் துவஅறி(வு)என்(று) அறிந்தேன்ஈ(து) அறிபொருளால் அழுக்கு மேவா(து)**
**ஏற்று(ம்)என(து) உருவமாய்ச் சீரணமாம் சித்(து)உருவால் சீவன் வாழும்**
**தோற்றுபொருள் களின்மயங்கும் சித்(து)உருவால் சீவன்வாழ் தொடர்ச்சி கூறில்**
**காற்(று)அதனால் மணம்போலும் பள்ளத்தால் நீர்போலும் கருதும் காலே.**

**பொழிப்புரை:** *(சீவனை இயக்கும்) ஆத்ம தத்துவ அறிவுஎன்று உணர்ந்தேன். இது விஷயங்களால், அறியப்படும் பொருள்களால் களங்கத்தை அடையாது. போற்றும் என்னுடைய வடிவமாய், அநாதியாம் சித்து உருவத்தால் சீவன் வாழும். தோற்றுகின்ற பொருள்களில் மயங்கும் சித்து உருவத்தால் சீவன் வாழ்கின்ற முறைமையைச் சொல்லக் கருதும் போது, வாயுவினால் வாசனை போலும், பள்ளத்தில் தங்கும் தண்ணீர் போலவும் ஆகும்.*
**(6.9.13)**

**பொய்யாகிச் சடமான அறிபொருளின் புணர்ச்சியால் போத ரூப**
**மையான சடமாகிப் பெருநீருள் கனல்போல்தன் வடிவை விட்டு**
**மெய்யான சித்(து)உருவம் இப்படியே அறிபொருளை மேவ லாலே**
**ஐயோபொய் யாய்ச்சடமாம் அறிவினால் அறிவிக்க அறிந்த(து) அன்றே.**

**பொழிப்புரை:** *மித்தையாகி சடமான அறிபடும் பொருளின் சேர்க்கையால் சித்துருபம் களங்கமான சடமாகி மிகுந்த பெரும் தண்ணீருக்குள் நெருப்பு போல் தனது வடித்தை விட்டு, உண்மையான சித்து உருவம் இப்படியே அறிபடும் பொருளைச் சார்வதாலே*

*ஐயோ! மித்தையாய் சடமாகி ஆத்ம ஞானத்தினால் அறிவிக்க அறிந்தது. (அதுவே சிருட்டித்து, அதுவே பின் புகும் என்ற சுருதி வாக்கியத்தின் கருத்து இது)* **(6.9.14)**

**இந்தஅறி(வு) எத்தால்கா ணப்பட்ட(து) என்னில்வே(று) ஏதும் இல்லை**
**அந்த(ம்)இல்கா லத்தாலே அறியவேண்டி ய(து)அறிந்தேன் அம்ம அம்மா**
**முந்துஅறி வின்பரப்பை முடிவாக மனம்கரண தல எல்லாம்**
**சிந்தனைசெய் யாமையால் உதித்தினவாம் சிந்தித்தால் சேரப் பொய்யே.**

**பொழிப்புரை:** *இந்த ஆத்ம ஞானமானது எதனால் அறியப்பட்டது என்றால் வேறொன்றால் இல்லை (தன்னாலே தான் அறிந்தேன்) முடிவற்ற காலத்தினால் அறியத்தக்க ஆத்ம ஞானத்தை அறிந்தேன். ஆச்சரியம்! ஆச்சரியம்! முதன்மையான சித்தின் வியாபகத்தை முடிவாக (சித்தே முடிந்த முடிவு என்று) சிந்தனை செய்யாததால் மனம், இந்திரியம் முதலான எல்லாம் உண்டாயினவாம். சிந்தித்தால் மனம் முதலான அனைத்தும் மித்தையே.* **(6.9.15)**

**எல்லையில்பேர் அறிவேஇங்(கு) உள(து)இதனைப் பேருண்மை என்றும் சொல்வார்**
**அல்ல(ல்)உறும் களங்க(ம்)அறச் சமமாகி அகங்கர(ம்)இல் வடிவம் ஆகி**
**தொல்லைஒளி ஒருக்காலே துலங்குவதாய் நித்தபரி சுத்தம் ஆகி**
**மல்ல(ல்)உயர் பிரம(ம்)எனப் பரம(ம்)எனப் பெயர்பெற்று வழங்கும் அன்றே.**

**பொழிப்புரை:** *எல்லையில்லாத பெரும் சித்தே இங்கு உள்ளது.* இதனை மகாசத்தை *என்றும் சொல்வர். துயர்தரும் குற்றங்கள் நீங்கி, சமமாய், அகங்காரம் இல்லாத வடிவம் ஆகி, ஆதியற்றதான அந்த சுயம்பிரகாசமானது ஏக காலத்திலே ஒளிர்வதாய், நித்திய பரிசுத்தமாகி, திடமாக மேலான பிரம்மம் என்றும், பரமம் என்றும் பெயர்பெற்று விளங்கும்.* **(6.9.16)**

**இவ்வாறு தினந்தோறும் தன்சொரூபத் தேகளிக்கும் இதய நோக்கால்**
**தவ்வாத பகுதிநிலை யாய்ஆசை போய்ச்சங்கம் சற்றும் இன்றி**
**ஒவ்வாத தொந்தனைபோய்த் தொழில்இன்றிப் பற்றுவீ(டு) ஒன்றும் இன்றிக்**
**கவ்வாத இயல்தொழில்செய்(து) உயர்பரமப் பெரும்பேற்றால் கருத்து முற்றி.**

**பொழிப்புரை:** *இவ்வாறு தினந்தோறும் தனது ஆத்ம சொரூபத்தில் சுகம் அடையும் உள்முக நாட்டத்தால் தவறாத சுபாவ நிலையில் இருப்பவளாய், ஆசை நீங்கிட, எதனோடும் பற்று சம்பந்தம் இன்றி, பொருந்தாத துவந்துவம் (இருமைகள்) போய், செயல்கள் இன்றி, பற்று வீடு இரண்டும் நினையாமல், பற்றின்றி வினைவயத்தால் வந்தமைந்த செயல்களைச் செய்து, மேலான பிரம்மத்தை உணரும் பயனால் மனம் மிகப் பழுத்து,* **(6.9.17)**

**உள்ளுறுபூ ரணம்எய்தி உவமைகட்(கு)அப் பாலாகி ஒருவ ராலும்**
**தெள்ளிஅள விடவொண்ணா நிலையாம்தன் விவேகத்தின் செறிப ழுக்க**
**வெள்ளமுறத் தன்சொரூபம் வெளியாய்மென் மலர்க்கொடிபோல் விளக்கம் உற்றாள்**
**எள்ளரிய அபிநவமாம் பேர்எழில்கூர் இவள்பொலிவை இனிது நோக்கி.**

**பொழிப்புரை:** *உள்ளே உள்ள பரிபூரணத்தை அடைந்து, உவமானங்களுக்கு அப்பாலாய், ஒருவராலும் இவ்வளவு தான் என்று தெளிந்து வரையறை செய்ய முடியாத நிலைமையில் தனது விசார விவேகத்தினால் உண்டான பயிற்சி மிகுதியால் வலிமை அடைய, தனது ஆத்ம சொரூபம் பிரத்தியட்சமாய் மென்மையான மலர்க்கொடி போய் விளங்கினாள். இகழ்தற்கு அரிதான புதுமையான பேரழகு மிகுந்த இந்த சூடாலையின் தேகூசை (பொலிவினை) சிகித்துவன் நன்றாகப் பார்த்து,* **(6.9.18)**

**கண்(டு)அறியா அழ(கு)இதென மிகவியந்து சிகித்துவசன் கழறல் உற்றான்**
**பண்டைஇள நலம்மீண்டு படைத்தனைபோல் அலங்காரம் பலபெற் றாய்போல்**
**அண்ட(ர்)அமு(து) உண்டனைபோல் ஆர்க்குமுற அரியபதம் அடைவுற் றாய்போல்**
**மண்டுகின்ற ஆனந்தம் நிறைந்தனைபோல் பொலிகின்றாய் மாசி லாளே.**

**பொழிப்புரை:** *(இதுநாள் வரை) கண்டு அறியாத அழகு இது என மிகவும் ஆச்சரியப் பட்டு, சிகித்துவசன் சொல்கின்றான். பழைய இளமை அழகைத் திரும்பவும் பெற்றுவிட்டதைப் போல், பலவித அலங்காரம் அடைந்தது போல், தேவர்களின் அமிழ்தினைக் குடித்தது போல், யாவர்க்கும் பொருந்துதற்கு அரிதான பிரம்ம பதத்தை அடைந்தவள் போல், நெருங்குகின்ற ஆனந்தம் நிறைந்தவள் போல் களங்கம் அற்று விளங்குகின்றாய்.* **(6.9.19)**

**போகத்துக்(கு) இரங்காது சாந்தமாய் ஊற்றமாய்ப் பொலி(வு)உண் டாகி**
**ஏகத்தில் சமமாய்க்கெம் பீரமாய் உனதுமன(து) இருப்ப(து) என்னே**
**தேகத்தில் பெறும்அழகும் சித்தத்தில் பேரழகும் சேர்ந்த(து) எங்ஙன்**
**நீகற்பால் உரைஎன்னக் காதலற்குச் சூடாலை நிகழ்த்தல் உற்றாள்.**

**பொழிப்புரை:** *போகத்துக்கு விருப்பம் கொள்ளாமல், சாந்தமாய், அசையாதிருந்து, பிரகாசம் உண்டாகி, ஒன்றில் சமமாய்க் கெம்பீரமாக உனது மனம் இருப்பது என்னே! தேகத்தில் பெற்றிருக்கும் அழகும், மனதில் பேரழகும் உண்டானது எப்படி? உனது கற்பின் திறத்தால் மறைக்காமல் சொல்லென்று கேட்ட கணவர்க்குச் சூடாலை சொல்லத் தொடங்கினாள்.* **(6.9.20)**

**கிஞ்சிலு(ம்)இன் றிக்கிஞ்சில் வடிவான இதுவிட்டுக் கிஞ்சில் அன்றி**
**விஞ்சு(ம்)ஒரு வடி(வு)உற்றேன் அதனாலே சீருடைத்தாய் விளங்கா நின்றேன்**
**கிஞ்சிலே கிஞ்சி(ல்)எனச் சுபாவநிலை யாய்உதயம் கெடுதி இன்றாய்**
**விஞ்சுவ(து)ஏ(து) அதைஅறிந்தேன் அதனாலே சீருடைத்தாய் விளங்கா நின்றேன்.**

**பொழிப்புரை:** *(தேக பாவனை) அற்பமும் இல்லாமல், அற்ப உருவ முதலாய் இருக்கின்ற இந்த உலகத்தை நீக்கி, மகத்தான எஞ்சிய ஒப்பற்ற வடிவு ஒன்றை (ஞான சொரூபத்தை)ப் பெற்றேன். அதனாலே அழகுடையவளாய்ப் பிரகாசிக்கின்றேன். அணுவுக்கு அணுவாகியும், ஒரு தன்மையாய், உற்பத்தி நாசம் இல்லாததாய் மிஞ்சினது எதுவோ அதை அறிந்துகொண்டேன். அதனாலே அழகுடையவளாய்ப் பிரகாசிக்கின்றேன்.* **(6.9.21)**

**அருந்தாமல் தூரிதாம் போகங்கள் அருந்தினபோல் அமைந்(து)இன் புற்று**
**வருந்தாமல் விருப்புவெறுப்(பு) இலஅதனால் சீருடைத்தாய் வாழா நின்றேன்**
**பெருங்கோபம் பற்(று)இரண்டும் சிறுதொழில்பாங் கியர்அறிவாம் பெரிய பெண்கள்**
**மருங்கேசாத் திரநோக்கில் களிக்கின்றேன் அதனால்சீர் வாழ்வு பெற்றேன்.**

**பொழிப்புரை:** *தூரத்திலிருக்கும் போகங்களை அனுபவிக்காமல் இருந்தும் அனுபவித்தது போல் சாந்தமாய் ஆனந்தம் அடைந்து துன்பப்படாமல் விருப்பு வெறுப்பு இல்லாத காரணத்தால் அழகுடையவளாய்த் திகழ்கின்றேன். பெரிதான விருப்பு வெறுப்பு என்ற இரண்டு சிறு செயல் செய்யும் தோழியரோடு, ஞானமாகிய மகா மாதர்கள் அருகில் சாத்திரக் கோணத்தில் மகிழ்கின்றேன். அதனால் சிறப்புடைய வாழ்வினைப் பெற்றேன்.* **(6.9.22)**

**கிஞ்சில்மாத் திரம்உருவி லாதஉல குக்கெல்லாம் கிளர்தே வாகி**
**எஞ்ச(ல்)இலள் என்(று)என்பால் இன்புறுவன் அதனால்சீர் எழில்பெற் றேன்நான்**
**புஞ்ச(ம்)உறும் இவையெல்லாம் விட்டனன்வே றேபொய்யும் மெய்யும் ஆகி**
**விஞ்சு(ம்)அது முற்று(ம்)அடைந் தேன்அதனால் சீருடைத்தாய் விளங்கா நின்றேன்.**

**பொழிப்புரை:** *அற்பமும் (கொஞ்சமும்) உருவமில்லாத சகங்கள் எல்லாவற்றுக்கும் சுயம் பிரகாசமான பிரபுவே யாம் என்று எஞ்சியதாக எதுவும் இல்லா பூரணமாய் இருப்பவள் என்பதாக தன்னிலே (ஆத்மாவிலே) ஆனந்தம் அடைந்துள்ளேன். அதனால் சிறப்புடைய அழகு பெற்றவள் ஆனேன். திரளான அனைத்தையும் விட்டுவிட்டேன். வேறாய் அசத்தும், சத்துமாகி எஞ்சி அதனை முழுவதும் அடைந்தேன். அதனால் சிறப்புடையவளாய் திகழ்கின்றேன்.* **(6.9.23)**

**கண்ணால்பல் கரணத்தால் கருத்தால்இங்(கு) எதுகாண்கேன் அதுதான் கிஞ்சில்**
**நண்ணாமல் அதன்பிறிதாய்க் கிஞ்சிலா(து) ஒன்(று)உள்ளே நன்றாய்க் காண்கேன்**
**பண்ணான சீர்இதெனச் சூடாலை சொன்னவற்றைப் பற்றிப் பாரான்**
**எண்ணாமல் நகைத்(து)அவளைச் சிகித்துவசன் வே(று)ஒன்றை விளம்பல் உற்றான்.**

**பொழிப்புரை:** *எப்பொருள் தூரத்திலிருத்தலால்) கண்களாலும், (அருகில் இருத்தலால்) பல இந்திரியங்களாலும், (எது சென்றதோ வராததோ அதை) மனதாலும் இவ்விடத்தில் எதைப் பார்ப்பேனோ! அந்த காணப்படும் பொருள்களை அற்பமும் பாராமல் அதனினும் வேறாக அற்பமும் ஆகாத ஏகமான சைதன்யத்தை அகத்தில் நன்றாகப் பார்க்கின்றேன். உண்டாகிய அழகு இது என்று சூடாலை சொன்னவற்றை ஆராய்ந்து காணாமல், அதன் உட்பொருளை எண்ணாமல், சிரித்து, அவளை நோக்கி மற்றொன்றைக் கூறத் தொடங்கினான்.* **(6.9.24)**

**வஞ்சிஇடை யாய்இசையா ததுசொன்னாய் சிறியார்போல் மருளாய் நின்றாய்**
**விஞ்சுதரா திபர்வாழ்வில் மிளிர்கின்றாய் உன்னிலே மிளிரா நின்றாய்**
**கிஞ்சிலைவிட் டுக்கிஞ்சி லா(து)அடைந்தோர் முன்னிலையைக் கிட்டார் என்னில்**
**பஞ்சி(ல்)அடி யாய்அவர்தாம் முன்னிலையாய் விளங்குவ(து)எப் படியே சொல்வாய்.**

**பொழிப்புரை:** *வஞ்சிக் கொடிபோல் இடையுடையவளே! பொருத்தமில்லாத வார்த்தையைச் சொன்னாய். சிறியவர்களைப் போல மயங்கி நிற்கிறாய். மேலாகிய*

*அரசரின் செல்வ வாழ்வில் விளங்குகின்றாய். நீ உன்னிலே (ஆத்மாவிலே) எப்படி விளங்குவாய்? அற்பமான சகத்தை விட்டு, அற்பம் இல்லாத பூரண வத்துவை அடைந்தவர்கள், (எதிரே தெரிகின்ற சகத்து) காட்சியைச் சேரமாட்டார் எனில் பஞ் சினும் மிருதுவான பாதங்களை உடையவளே! அவர்கள் பிரத்தியட்சமாக பிரகாசிப்பது எப்படி சொல்வாய்.* **(6.9.25)**

**அருந்த(ல்)உறாப் போகத்தால் அகமகிழ்ந்தேன் என்(று)அதனை அகற்று கிற்பார்**
**பொருந்துமிடி யினர்போல்நிர்ப் பாக்கியராம் அவர்ளங்ஙன் பொலிவார் சொல்வாய்**
**திருந்(து)உறக்காண் பவைகாணேம் வேறேகாண் குதும்என்று செப்பு கிற்பார்**
**இருந்(து)உரைக்கும் இவ்வுரையை விடாம(ல்)அவர் விளங்குவ(து)எப் படியே சொல்வாய்.**

**பொழிப்புரை:** *அனுபவிக்காத போகத்தினால் யான் உள்ளே மகிழ்ச்சி அடைந்தேன் என்று அந்த போகத்தை விலக்குபவர்கள் பொருந்திய தரித்திரத்தைப் போல, அபாக்கியவான்கள் எப்படி விளங்குவார்கள்? சிறப்பாக சகத்தில் காண்பவற்றைக் காணமாட்டோம் வேறே ஆத்மாவைக் காண்போம் என்று சொல்பவர்கள் இருந்து கொண்டு கூறுகின்ற இத்தகைய வசனத்தைத் தவிர்த்து விடாமல் அவர்கள் விளங்குவது எப்படி சொல்வாய். (இங்கு உள்ளதைக் காணவில்லை, வேறாக உள்ளே இருக்கும் ஆத்மாவைப் பார்க்கின்றோம் என்று இங்கு இருந்து கொண்டு சொல்பவர் எப்படி விளங்குவார் சொல்வாய்)* **(6.9.26)**

**ஆதலால் பேதையாய் அறிவிலியாய் அலைபவளாய் அனேகம் சொல்லாற்**
**போதநீ களிக்கின்றாய் எனவெடிக்க நகைத்(து)அயலே போனான் மன்னன்**
**மாதராள் அதற்(கு)இரங்கித் தன்அறிவில் இளைப்பாறி மகிழான் ஆகி**
**பேதமாய் என்னுரையை மன்ன(ன்)அறிந் திலன்என்று பேசுற் றாளே.**

**பொழிப்புரை:** *ஆதலால் பேதைமை உடையவளாய், அறிவில்லாதவளாய், சஞ் சலம் உள்ளவளாய், அனேக வசனங்களால் மிகவும் சந்தோஷம் அடைகின்றாய் என்று வாய்விட்டு பெரிதாகச் சிரித்து, (அவ்விடம் விட்டு) வேறோர் இடத்திற்குப் போனான் மன்னவன். சூடாலை அவனது அறியாமைக்கு இரக்கமுற்று, தன் ஆத்ம ஞானத்தில் அமைதி அடைந்து, ஆனந்தம் அடையாதவனாகி வேற்றுமையாய் எனது வார்த்தையை மன்னவன் அறிந்து கொள்ளவில்லையே என்று சொல்லிக்கொண்டாள்.* **(6.9.27)**

**பின்னருமன் னனும்தானும் தலைநாள்போல் பேத(ம்)அறப் பெருநாள் வாழ்ந்தார்**
**துன்னு(ம்)அமை வாய்ஆசை ஒன்று(ம்)இலா(து) இருந்தும்சூ டாலை தானே**
**உன்னிஉயர் ஆகாசம் தனில்நடக்க இயற்றுது(ம்)என்(று) உறுபோ கங்கள்**
**இன்ன(ல்)அற அனைத்தையும்விட்(டு) ஏகாந்தச் சு(க)ஆசனத்தில் இருக்கை எய்தி**

**பொழிப்புரை:** *பின்பும், சிகித்துவச மன்னனும், சூடாலையும் முன்பு போல வேற்றுமை இல்லாமல் நீண்ட காலம் வாழ்ந்து வந்தனர். மிகுந்த அமைதியை உடையவளாய், ஆசை ஒன்றும் இல்லாதிருந்தும், சூடாலை சுயமாக நினைத்து, மேலான ஆகாயத்தில் நடந்து செல்லப் பழகுவோம் என்று, ராஜ போகங்கள், துன்பங்கள் அனைத்தையும் விட்டு, தனியிடத்தில் சுகாசனத்தில் இருந்து,* **(6.9.28)**

**பெரியபிரா ணனைநேரே மேல்நோக்கப் பழகினாள் பெருநாள் என்னக்**
**கரியமுகில் கேட்(டு)அருளி மிகவருந்தி நெடுங்காலம் கையாண் டக்கால்**
**அரியவிசும் பில்நடத்தல் முதலான சித்திஎலாம் அளிக்கத் தக்க**
**உரியவழி எதுசொல்வாய் எனக்கேட்ப வசிட்டமுனி உரைப்பது(து) ஆனான்.**

**பொழிப்புரை:** *பெரிய பிராணனை நேரே மேல் நோக்கும்படியாக வெகுகாலம் பயிற்சி செய்தாள் என்று வசிட்ட முனிவர் கூற, கார்மேக வண்ணனான இராம பிரான் அதனைக் கேட்டு, மிகவும் வருந்தி முயற்சி செய்து நீண்ட காலம் பயிற்சி செய்தால் அரிதான ஆகாயத்தில் நடத்தல் முதலான சித்திகளை எல்லாம் அளிக்கத் தகுந்த வழிமுறை எது என்று சொல்லல் வேண்டும் என்று கேட்கவும், வசிட்ட முனிவர் கூறத் தொடங்கினார்.* **(6.9.29)**

**சீமானாம் சிகித்துவசன் கதைக்கிடையே வினவுதலால் செப்பு கின்றேன்**
**கோமானே பிரா(ண)ஆதி பவனத்தின் பரிசயத்தின் கொள்கை யாகிச்**
**சா(ம்)ஆ(று)இல் லாப்பயன்செய் நெறிகேட்பாய் வாதனைகள் சற்றும் இன்றிப்**
**போ(ம்)ஆறு செய்(து)உளத்தில் இதற்(கு)அடுத்த வாதனையே பொருந்தி நின்று**

**பொழிப்புரை:** *செல்வனாகிய சிகித்துவச் கதைக்கு இடையில் கேட்பதால் கூறுகின்றேன். இராகவனே! பிராணன் முதலிய வாயுவின் பழக்கத்தின் குணமாகி இறப்பில்லாத பிரயோசனத்தைத் தருகின்ற வழிமுறையைக் கேட்பாய். கொஞ்சமும் வாசனைகள் இன்றி நீங்கிப் போகச்செய்து, மனதில் இந்த சாதனத்துக்குத் தகுந்த வாசனையையே பற்றி நின்று,* **(6.9.30)**

**குதமுதலாம் துவாரத்தின் சிறுமையால் தானமுதல் குறிக்கும் செய்கை**
**விதிஒழுங்கால் போசனத்தால் சு(க)ஆதனத்தால் சுத்தத்தால் மிக்க நன்னூல்**
**உதவுபொருள் பாவனையால் அதன்ஆசா ரத்தினால் உயர்ந்தோர் சார்வால்**
**அதனைஒழிந் தனஎல்லாம் விடுத்தலால் அடுத்தபிரா ணாயா மத்தால்**

**பொழிப்புரை:** *குதம் முதலிய துவாரங்களின் சுருக்கத்தாலும், மகாமுத்திரையான தான முதலாகக் குறிக்கின்ற தொழில்களின் விதி முறைமையாலும், உணவினாலும், சுகாசனத்தாலும், பரிசுத்தத்தாலும், மிகுந்த நன்மையுள்ள உதவுகின்ற சாத்திரங்களின் அர்த்த பாவனையாலும், அதன்படி நடப்பதினாலும், பின்பற்றி பயிற்சி செய்பவர்களின் சேர்க்கையாலும், இவை ஒழிந்த விரோத செயல்களை எல்லாம் விடுவதாலும், சாதகாமாகிய பிராணனது ஒடுக்கத்தாலும்,* **(6.9.31)**

**கோவலோ பாதியும்போ கமும்விடுத்த லால்சிலர்க்குக் குறித்த நாளில்**
**ஓவிலாப் பற்றுவீ(டு) ஒழிந்தநாள் கைவசமா உயிர்கள் தாமே**
**தேவரூ பிகள்ஆத லால்தங்கள் குணம்அறிந்து சேர்ந்(து)உ ளோருக்(கு)**
**ஏவலாள் போல்உலகை ஆள்விக்கும் வீ(டு)அளிக்கும் எல்லாம் நல்கும்.**

**பொழிப்புரை:** *கோபம் லோபம் முதலானவற்றையும், போகங்களையும் விட்டு விடுவதாலும் சிலர்க்குக் குறிப்பிட்ட காலத்தில் ஒழியாத பற்றிக் கொள்வதும், தள்ளி விடுவதும் ஒழிந்த பொழுது கைவசமாய், பிராணன்கள் தாமே தேவ வடிவாகின்ற*

*படியால் அந்த வாயுக்களின் தன்மை உணர்ந்து அடைந்தவர்களுக்குச் சேவகர்களைப் போல் பூமியை ஆளவைக்கும், முத்தி அளிக்கும், எல்லாம் தரும்.* **(6.9.32)**

**ஆந்திரவேட் டனிகைஎன்(று)ஓர் தனிநாடி நாடிக(ள்)நூ(று) அணுகி நிற்கும்**
**வாய்ந்தஇசை வீணையுடல் வட்டம்போல் நீர்ச்சுழிபோல் வட்ட மேயாய்**
**ஏய்ந்(து)உளதா னங்க(ள்)எலாம் எய்தலுறும் அயனிடத்தும் எறும்பின் பாலும்**
**போந்துளபல் உயிரிடத்தும் உடல்தோறும் தோன்றியே பொருந்தி நிற்கும்.**

**பொழிப்புரை:** *ஆந்திர வேட்டனிகை என்ற பெயர் பெற்ற ஒப்பற்ற ஒரு நாடியானது நூறு நாடிகளுக்கு நடுவிலே பொருந்தியிருக்கும். இசையைத் தரும் வீணையிலுள்ள வட்டத்தைப் போல, நீர்ச்சுழி போல், வட்ட வடிவமாய், பொருந்திய தானங்களில் (இடங்களில்) எல்லாம் (மர்மஸ்தானத்தைச் சார்ந்து) அடைந்திருக்கும். அயனிடத்தும், எறும்பினிடத்தும், உலகிலுள்ள எல்லா சீவர்களிடத்தும் தேகந்தோறும் இருந்து விளங்கும்.* **(6.9.33)**

**சீதவருத் தத்தினால் துயில்பாம்பின் உடல்போல்சிக் கெனவ ளைந்(து)எப்**
**போது(ம்)அசை வுறும்காற்றால் நிலைநிற்கும் கதலியின்மென் பூப்போல் உள்ளு**
**மேதகுமெல் லியதாகும் அதன்ஊடே ஒருசத்தி விசுத்தம் ஆகி**
**ஏத(ம்)அறு பரமமாய்ச் சத்திகட்(கு)எல் லாம்வெற்றி எய்தல் ஆகும்.**

**பொழிப்புரை:** *குளிரின் வருத்தத்தால் உறங்குகின்ற பாம்பின் உடல்போல், நன்றாய்ச் சுற்றிக்கொண்டு, எக்காலமும் சலனமுறும் பிராணவாயுவினால் நிலைநிற்கும். வாழையின் மென்மையான பூவைப் போல, உள் மேன்மையான மிருதுவாகும். அதனுள்ளே ஒரு சத்தியானது குற்றமின்றி மேலானதாய் எல்லா சத்திகளுக்கும் வெற்றியை அடையக் கொடுக்கும்.* **(6.9.34)**

**முனி(வு)உறுபெண் பாம்புபோல் மூச்(சு)எறியும் எப்போதும் முகம்மே லாகும்**
**அனிச(ம்)அசை வுக்(கு)ஏது வாம்இதய கோசத்தை அடைந்த நாடி**
**எனையவும்இங்(கு) இதன்இடையே கட்டுண்ணும் குண்டலினி இதன்பேர் ஆகும்**
**துனைத(ல்)உற அசைகின்ற பரிசஅறி வின்கலையால் சுத்தம் ஆகும்.**

**பொழிப்புரை:** *கோபம் மிகுந்த பெண் பாம்பினைப் போலப் பெருமூச்சு விடும். எப்போதும் முகம் மேல்நோக்கியே இருக்கும். எப்போதும் சலனத்துக்குக் காரணம் ஆகும். இதய கோசத்தை அடைந்த நாடிகள் எவையும் இங்கு இதனிடையே கட்டுப்பட்டிருக்கும். குண்டலினி என்பது இதன் பெயராம். நெருக்கமாக சலிக்கின்ற பரிச உணர்ச்சியின் கலையால் பரிசுத்தமாகும்.* **(6.9.35)**

**சிந்தனையால் கலையாகும் சேதனத்தால் சித்தாகும் சீவ னத்தால்**
**சந்த(ம்)உறும் சீவனாம் மனனத்தால் மனம்ஆகும் சங்கற் பத்தால்**
**அந்த(ம்)இல் சங்கற்பமாம் போதத்தால் புந்தியாம் அகங்கா ரத்தால்**
**வந்தஅகங் காரமாம் இனையபுரி அட்டகப்பேர் மருவும் தானே.**

**பொழிப்புரை:** *அக்குண்டலினி சத்தியானது பந்தனை காரணத்தால் கலையாகும். ஞானத்தை உதிக்கச் செய்தலால் சித்தாகும். மூச்சினை இழுத்தல், வெளி விடுதல் செய்தலால் சீவன் எனப்பெறும். எண்ணதலால் மனம் எனப்பெறும். பல மனோரத கற்பனையினால் சங்கற்பமாம். நிச்சயத்தை உண்டு பண்ணுவதால் புத்தியாம். அதுவே நான் என்று அபிமானம் கொள்வதால் அகங்காரமாம். இவ்வாறே புரியட்டகம் எனும் பெயரையும் பெறும்.* **(6.9.36)**

**குண்டலினி எனும்சீவ சத்திமிக நல்லதாய்க் கூடி நிற்கும்**
**மண்டுபிரா(ண) அபான வடிவ(ம்)ஆ தலில்கீழ்மேல் வந்து போகும்**
**மிண்டறமேல் போகிலும்எல் லாமாய்போம் மீளினும்எல் லாமாய் மீளும்**
**தண்ட(ல்)இலாப் புமானாகிச் சாமேவும் பிராணனும்அச் சத்தி தானே.**

**பொழிப்புரை:** *குண்டலி எனும் சீவ சத்தியானது மிக நல்லதாய்த் தேகத்தில் பொருந்தி நிற்கும். நெருங்கிய பிராணன், அபானன் வடிவமாக இருத்தலால், கீழும் மேலும் வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருக்கும். தடையில்லாமல் மேலே போனாலும் எல்லாமாய்ப் போகும். திரும்பினாலும் எல்லாமாய்த் திரும்பும். தடையில்லாது சீவனாய் மரணம் அடையும் பிராண வாயுவும் அந்தக் குண்டலினி சத்தியே ஆகும்.* **(6.9.37)**

**தன்னிடத்தே எப்படியும் போக்குவரத்(து) ஒழித்(து)இந்தச் சத்தி நிற்கின்**
**மன்னுயிர்க்கு நோய்வாரா(து) உள்ளுறவே மாருதத்தை மறுத்த லாலே**
**என்னலுமே ஆதிவியா திகள்இரண்டும் தோன்றுதலும் இறத்தல் தானும்**
**நின்னருளால் உரைஎன்ன இராகவன்கேட் டலும்வசிட்டன் நிகழ்த்தல் உற்றான்.**

**பொழிப்புரை:** *இந்தச் சத்தியானது, எப்படியும் போவது, வருவதை விலக்கி நிலைபெறுமாயின், உயிர்களுக்கு நோய்வராது. உள்ளேயே நிலைபெறுமாறு வாயுவைத் தடுத்தலினாலே என்று வசிட்டர் கூறியதும், இராம பிரான் உள் நோய், புற நோய் (ஆதியும், வியாதிகளும் ஆகிய) இரண்டும் தோன்றுவதும், நாசமாவதும் குறித்து தாங்கள் அருள் கொண்டு அருளிச்செய்வீர் என்று கேட்கவும், வசிட்டர் கூறுவார்.* **(6.9.38)**

**அங்கத்தின் வருத்தத்தை நோய்என்பர் வாதனையை ஆதி என்பர்**
**பங்கற்ற அஞ்ஞான மூலத்தே இருந்(து)உணர்வில் பாரிப் போகும்**
**பொங்குற்ற ஞான(ம்)இலா மையில்பொறிகள் தமைஅடக்கப் போகா வற்றால்**
**தங்குற்ற இதயத்தில் சிறுமையற மால்கோபம் தழைத்த லாலே.**

**பொழிப்புரை:** *தேகத்தின் துன்பத்தை நோய் என்பர். வாசனையை ஆதி என்பர். பகுக்காத அஞ்ஞானத்தின் மூலத்திலேயே இருப்பதாகி தத்துவ ஞானத்தினால் ஓடிப்போகும். பொங்குகின்ற ஞானம் இல்லாமையாலும், புலன்களை அடக்க முடியாதபடியாலும், தங்குகின்ற இதயத்தில் விசாலமாய் ஆசையும், கோப அகங்காரமும் வளர்வதாலும்,* **(6.9.39)**

**இதுபெற்றோம் ஈ(து)இல்லை என்னு(ம்)அவ தானத்தால் இறுகு மோகம்**
**அதுமெத்த உண்டாக மழைநாளில் செறிபனிபோல் ஆதி துன்னும்**
**முதிர்இச்சை வெளியாகி மூர்க்கபா வனைசால முற்றும் போதில்**
**விதியுற்ற தொழில்அன்றித் தீத்தொழில்கள் செய்தலினால் வியாதி உண்டாம்.**

**பொழிப்புரை:** *இதனை அடைந்தோம், இதனை அடையவில்லை என்பதான கவனத்தால் (எண்ணத்தால்) மோகம் திடப்படும். அது அதிகரிக்க அதிகரிக்க மழைக் காலத்தில் நெருக்கமாகும் பனிபோல் வாசனைகள் நெருங்கும். முதிர்ந்த ஆசையானது வெளிப்பட்டு, மூட பாவனை மிகவும் முற்றிப் போகும் போது, விதிக்கப்பட்ட செயல்கள் அன்றி, தீய செயல்களைச் செய்வதனால் நோயானது உண்டாகும்.* **(6.9.40)**

**பொல்லாத உணவினால் பொல்லாத தேசத்தில் போகை தன்னால்**
**பொல்லாத காலவிவ காரத்தால் செய்தொழில்கள் புரிபொல் லாப்பால்**
**பொல்லாத கயவர்(ர்)உறு கூட்டத்தால் பொல்லாத பொருள்எண் ணத்தால்**
**பொல்லாத இச்சையால் பொல்லாத எண்ணிக்கை பொருந்தல் தன்னால்.**

**பொழிப்புரை:** *பொல்லாத (கெட்ட) உணவினாலும், பொல்லாத இடங்களுக்குப் போவதாலும், பொல்லாத காலத்தில் விவகாரம் செய்வதாலும், செய்கின்ற செயல்களினால் வரும் பொல்லாங்கு (தீங்கு)களினாலும், பொல்லாத தீயவர் கூட்டத்தைச் சேர்தலாலும், பொல்லாத பொருள்களைச் சிந்திப்பதாலும், பொல்லாத இச்சையால் பொல்லாத நினைவுகளுடன் கூடுவதாலும்.* **(6.9.41)**

**நாடிகளின் வெளிகணுக்கள் சிறுகுதலால் பெருகுதலால் நற்பி ராணன்**
**ஓடிமிகச் சிதறுலுமே உடல்தானும் சிதறுதலை உறும்உற் றக்கால்**
**கேடு(டு)இதென முன்உரைத்த குற்றங்கள் காரணமாய்க் கிளர்நோய் உண்டாகும்**
**நீடியகோ டையும்மழையும் நதிக்குறைவு நிறைவுகளை நேரு மாபோல்.**

**பொழிப்புரை:** *நாடிகளின் வெளிக் கணுக்கள் சுருங்குவதாலும், பெருகுவதாலும் நல்ல பிராண வாயுவானது ஓடி மிகவும் சிதறுவதாலும் தேகமும் கலக்கத்தை அடையும். பொல்லாதது இவை என முன்பு சொல்லிய குற்றங்கள் காரணமாய் நீண்ட வெய்யில் காலத்தினாலும், மழைக் காலத்தினாலும் ஆற்று நீர் குறைவையும், நிறைவையும் அடைவது போல் தேகத்தில் மிகுந்த வியாதிகள் உண்டாகும்.* **(6.9.42)**

**தொல்லையதா கினும்இங்(கு)உள் ளனஎனினும் சுபம்எனினும் அசுப மேனும்**
**எல்லையற மிகுந்த(து)ஏ(து) அதுதன்பால் அப்படியே இழுத்துக் கொள்ளும்**
**புல்லுறஇவ் வகையாகி ஆதிவியா திகள்ஐந்து பூதத்(து) உண்டாம்**
**சொல்லியஇவ் வாதிகள்தாம் இருவகையாய் இறக்குநெறி சொல்லக் கேட்பாய்.**

**பொழிப்புரை:** *பழைய (முன்பிறவிகளில் உள்ள)தாயினும், இப்பிறவியில் உள்ளதாயினும், சுபமாயினும், அசுபமாயினும், அளவில்லாது அதிகமான வாசனை எதுவோ அது தன்னிடத்தில் அப்படியே சேர்த்துக் கொள்ளும். பொருந்தும்படியாக இவ்வாறு ஆதி வியாதிகள் (சூக்கும, தூல நோய்கள்) பஞ்ச பூதத்தில் உண்டாகும். சொல்லிய இந்த நோய்கள் இரண்டு விதமாய் நசிக்கின்ற கிரமத்தை (முறையை) சொல்லக் கேட்பாய்.* **(6.9.43)**

**மேவியசா மானியமும் சாரமு(ம்)என்(று) இருவகையாம் ஆதி என்பர்**
**தாவுறுசா மானியம்தான் உடல்பிணியாம் சாரம்தான் சனனம் ஆகும்**
**கேவலம்இவ் வுடல்பிணிதான் தனக்(கு)அடுத்த பொருள்பேற்றால் கெட்டுப் போகும்**
**பாவனையாம் ஆதிகள்இல் லாதாகில் தோன்றுபிணி பறந்து போமே.**

**பொழிப்புரை:** *பொருந்திய சமாமானியம் என்றும், சாரம் என்றும் ஆதியானது இரண்டு வகையாம். தாவுகின்ற (மிகுகின்ற) சாமானியம் தான் உடல் நோய் ஆகும். சாரம் என்பது பிறவியாகும். முழுதும் இந்த தேகத்திலுள்ள வியாதியானது தனக்கு உரிய பொருள் அடையப்பெற்றால் நசித்துப் போகும். பாவனையான ஆதிகள் இல்லாவிடில் உண்டாகும் வியாதி நீங்கிப் போகும்.* **(6.9.44)**

**சாரம்(ம்)எனும் பிறவிநோய் தத்துவஞா னத்(து)அன்றிச் சற்றும் போகா**
**தீரஇது கயிறு(று)என்னும் போதத்தால் அன்றிஅராச் சிதைவ(து) உண்டோ**
**பாரமுறும் ஆதியில்தோன் றாப்பிணிமந் திரமருந்து பலநூல் கற்ற**
**கூ(ர்)அறிவின் மருத்துவர்என்(று) இவ்வகையால் போம்இதுநாம் கூற வேண்டா.**

**பொழிப்புரை:** *சாரம் என்னும் பிறவி நோயானது ஆத்ம ஞானம் இல்லாமல் சற்றும் போகாது. திடமாக இது கயிறு என்னும் ஞானம் இன்றி, பாம்பின் தோற்றம் கெடுவதுண்டோ? சுமை மிகுந்த ஆதியில் உண்டாகாத தேக வியாதியானது மந்திரத்தாலும், மருந்தினாலும், அனேக வைத்திய சாத்திரங்களைப் பயின்று பயிற்சி பெற்ற ஆழ்ந்த அறிவுடைய மருத்துவராலும் இத்தன்மையால் போகும். இதனை நாம் சொல்ல வேண்டியதில்லை.* **(6.9.45)**

**என்றலுமே ஆதியில்நின்(று) எவ்வகைஉண் டாம்பிணிமற்(று) எவையால் மாளும்**
**குன்(று)அனையாய் உரைஎன்ன இராமன்கேட் டலும்வசிட்டன் கூறு கிற்பான்**
**நின்றமனம் கலங்குதலும் உடல்கலங்கும் உடல்கலங்கி நேர்வந்(து) உற்ற(து)**
**ஒன்று(ம்)அறி யாமல்நேர் வழிவிலங்கித் தீவழியில் ஓடா நிற்கும்.**

**பொழிப்புரை:** *என்று கூறியதும், இராமபிரான் "ஆதியிலிருந்து நோய்கள் எவ்வாறு உண்டாகும்? அவைகள் எவ்வகையில் அழியும்? என்பதை மலைபோல் தவத்தில் பெரியோய்! உரைத்தருளல் வேண்டும்" என்று கேட்கவும், வசிட்ட முனிவர் கூறுவார்: நிலையாய் இருந்த மனம் கலங்கவும், தேகம் கலங்கும். தேகம் கலங்கிட, முன்னால் வந்தடைந்த ஒன்றையும் தெரியாமல், நேர்வழியிலிருந்து விலகி தீய வழியில் செல்லும்.* **(6.9.46)**

**பிறைஅம்பு படும்மான்போல் முறிந்(து)ஓடும் கலக்கத்தால் பிராண வாயு**
**நிறைகின்ற சமம்இன்றிப் பரந்(து)ஓடும் நாடிகளும் நிலையில் நில்லா**
**அறைகின்ற குசீரணமாய் அசீரணமாய் அதிசீர்ணம் ஆகி அன்னம்**
**உறைகின்ற உடலுக்குக் கூற்றமாம் நாடிஉயிர் உலைவி னாலே.**

**பொழிப்புரை:** *பிறைவடிவ அம்பானது தைத்த மான் போல, பிராண வாயு சஞ்சலத்தால் சிதறி அலையும். நிறைகின்ற சமத்தன்மை இன்றி, பரவியோடும் நாடிகளும் தன் நிலையில் நிலைபெறாது, சொல்கின்ற சீரணமாகியும், சீரணமாகாமலும், அதி சீரணமாகியும் உணவானது தங்குகின்ற உடலுக்கு நாடிகள் பிராணன்களுடைய சலனத்தால் எமனாகும்.* **(6.9.47)**

**உடல்உள்ளே விரோதத்தால் உறைகின்ற அன்னம்வேற்(று) உருவம் ஆகி**
**விடல்உறா நோய்ஆகும் இவ்வகையால் ஆதியினால் வியாதி உண்டாம்**
**தொடர்வுறா ஆதிநசித் திடும்ஆகில் வியாதிகளும் துஞ்சிப் போகும்**
**கடவதா மந்திரத்தால் வியாதிகள்நீங் கிடும்நெறியைக் கழறக் கேட்பாய்.**

**பொழிப்புரை:** *உடலின் உள்ளே (இருக்க வேண்டிய முறைமைக்கு) மாறாக தங்குகின்ற உணவானது வேறு வடிவமாகி, தீராத வியாதி ஆகும். இந்த வகையால் ஆதியிலிருந்தும் நோய் உண்டாகும். ஆதியானது தொடர்ந்திடாமல் அழியுமாயின் நோய்களும் நாசமாகும். உச்சரிக்கின்ற மந்திரத்தால் நோய்கள் நீங்கிடும் முறையைச் சொல்லக் கேட்பாய்.* **(6.9.48)**

**எப்படியே கடுக்காய்கள் விரேசனத்தைப் பண்ணுகின்ற(து) இயல்பி னாலே**
**அப்படியே பாவனையால் யரலவஆ திகள்காரி யங்கள் ஆக்கும்**
**மெய்ப்படிபுண் ணியம்ஆகிச் சுத்தமாம் கிரியையால் மேலோர் சார்வால்**
**தப்(பு)இல்மனம் தெளி(வு)எய்தும் புடம்வைத்த லால்நன்றாம் தமனி யம்போல்.**

**பொழிப்புரை:** *எப்படி கடுக்காய் அதனது இயல்பினாலே மலம் கழித்தலைச் செய்கின்றதோ, அப்படியே யரலவ மந்திரங்களின் பாவனை காரியங்களை உண்டாக்கும். உண்மையாக தருமமாகி பரிசுத்தமான செயல்களாலும், மேலான சாதுக்களின் சேர்க்கையாலும், பொன்னைப் புடம் வைத்தலால் சுத்த தங்கமாவது போல் தவறில்லாமல் மனது பரிசுத்தம் அடையும்.* **(6.9.49)**

**சுத்த(ம்)உற மனம்தெளியில் உடலிலே ஆனந்தம் தோன்றா நிற்கும்**
**மெத்துமதி உதித்தக்கால் உலகமெலாம் நன்றாக விளங்கி டாதோ**
**சத்துவமாம் மனம்தெளியில் பிராணவா யுவும்ஒழுங்கில் சரித்(து)உ லாவும்**
**உய்த்துளஅன் னமும்நெறியில் சீரணிக்கும் அதனால்நோய் ஒன்றும் தோன்றா.**

**பொழிப்புரை:** *பரிசுத்தமாக மனம் தெளிவு அடையுமாயின் தேகத்தில் ஆனந்தம் உண்டாகும். முழுமையான சந்திரன் உதயமானால் உலகங்கள் எல்லாம் நன்மையாக பிரகாசிக்கமாட்டாதோ? சத்துவத்தை உடைய மனமானது தெளிவு அடையுமாயின் பிராணவாயுவும் ஒழுங்காக சஞ்சரிக்கும். புசித்த உணவும் முறையாக சீரணமாகும். அதனால் நோய் ஒன்றும் உண்டாகாது.* **(6.9.50)**

**ஆதிவியா திகள்இரண்டும் தோன்றிஒடுங் கிடும்நெறிகள் அறைந்தோம் அன்றே**
**ஓதியகுண் டலினிதனது) ஒழுங்கால்முன் உரைப்புற்ற யோகம் கேளாய்**
**தீ(து)இல்புரி அட்டகம்என்(று) ஒருபெயர்கொள் சீவனுக்குத் திகழ்பி ராண**
**வாத(ம்)எனும் பெயர்பெற்ற குண்டலினி மணத்துக்கு மலர்போல் நிற்கும்.**

**பொழிப்புரை:** *ஆதி வியாதிகள் (உள் நோய், வெளிநோய்) இரண்டும் உண்டாகி, அழியும் முறைகளைக் கூறினோம். சொல்லப்பட்ட குண்டலினி சத்தியின் ஒழுங்கினால் முன் கூறிய யோகத்தைக் கேட்பாய். குற்றமற்ற புரியட்டகம் என்று பெயர் கொண்ட சீவனுக்குத் திகழ்கின்ற பிராணவாயு என்னும் பெயர்கொண்ட குண்டலினி சத்தியானது வாசனைக்கு இடமாகிய மலரைப் போல் இருக்கும்.* **(6.9.51)**

**புகல்உறுகுண் டலிதன்னைப் பூரகத்தின் பரிசயத்தால் பூர்ணம் ஆக்கித்**
**திகழ்வுறநின் றால்அன்று வடமேரு நிகரான திண்மை உண்டாம்**
**மிகஉடலம் தடிப்(பு)எய்தும் பூரகத்தால் பிராண(ன்)நிறை(வு) உற்ற மெய்யைப்**
**பகர்அறிவு மேல்நோக்கி ஒருக்காலே விண்செல்லப் படர விக்கும்.**

**பொழிப்புரை:** *சொல்லிய குண்டலினியைப் பூரகத்தின் (முறைப்படி பிராணவாயுவை உள்ளிழுத்தல்) பயிற்சியால் பூரணம் ஆக்கி, விளங்கிட நிலைபெற்றால் (கண்டக் குழியிலிருந்தும் கீழே மார்பில் கூர்மாகாரமாக உள்ள ஒரு நாடி கூர்மநாடி எனப் பெயர், அதில் பிராணனை ஸ்தாபித்து சமமாக நிலைபெறச் செய்தால்) அப்போது வடமேரு மலைக்கு நிகரான திடம் உண்டாகும். தேகமானது மிகவும் பருமை அடையும். பூரகத்தால் பிராணன் நிறைந்திருக்கின்ற தேகத்தை உணர்வானது மேல்நோக்கிய பாவனையால் ஒருபொழுது ஆகாயத்தில் நடந்து செல்ல வைக்கும்.* **(6.9.52)**

**பாம்புபோல் விரைந்துதடி போல்நிமிர்ந்து குண்டலினி படர்ந்து மேல்போம்**
**தாம்புபோல் உடல்பிணித்த நரம்(பு)எல்லாம் தான்கவர்ந்து சரீரம் எல்லாம்**
**தேம்புறா வகைமேலே எழுப்புவிக்கும் காற்றினால் செறிந்த பைதான்**
**தூம்புசூழ் நீரி(ன்)இடையே அழுத்துகினும் மேல்கிளப்பும் தொடர்ச்சி போலே.**

**பொழிப்புரை:** *பாம்பினைப் போல் விரைந்து தடிபோல நேராக நிமிர்ந்து குண்டலனியானது பரவி மேலே போகும். கயிற்றைப் போல் உடலைக் கட்டியுள்ள நாடிகள் எல்லாவற்றையும் கவர்ந்து, தேகம் எல்லாம் வாடாத வகையாக மேலே கிளப்பும். காற்றினால் நிறைந்த தோல் பையானது மதகு சூழ்ந்த ஏரி நீரின் மத்தியின் அமிழ்த்தினாலும் மேலே எழுப்புகின்ற தொடர்பு போல மேலே கிளப்பிவிடும்.*
**(6.9.53)**

**இத்திறனே மிகப்பழகும் யோகத்தால் யோகிகள்தாம் எழுந்து விண்மேல்**
**கொத்திகவர் தூண்டில்சேர் மீன்போல உலாவுவர்குண் டலினி என்னும்**
**சத்தியது பிரமாநா டியில்ஓடிக் கபாலத்தின் தனிப்பு றம்போய்**
**உய்த்(து)உளமே லேவிரல்ஓர் பன்னிரண்டின் எல்லையினில் உறுவ(து) ஆகி**

**பொழிப்புரை:** *இந்த வழியே மிகவும் பயிற்சி செய்கின்ற யோகத்தினால் யோகிகள் ஆகாயத்தில் கிளம்பி, கொத்திக் கவர்கின்ற தூண்டிலை அடைந்த மீனைப் போலச் சஞ் சாரம் செய்வர். குண்டலினி என்ற சத்தியானது சுழிமுனைக்குள் சென்று, பிரமரந்தின் (கபாலத்தின்) மேலாகப் புறப்பட்டுப் பொருந்தியிருக்கின்ற மேலொரு பன்னிரண்டு அங்குல அளவை அடைவதாகி,* **(6.9.54)**

**நாடிகள்எல் லாம்தகையும் இரேசகத்தால் ஒருமுகுர்த்தம் நண்ணி நிற்கில்**
**நீடியவிண் சரிப்பவரைக் காணலாம் விஞ்ஞான நேர்மை யாலே**
**ஊடுறதூ ரத்தோடும் புந்திவிழி யால்விண்ணில் ஊன்றத் தோன்றும்**
**பீடுறுநற் பொருள்உதவும் சித்தர்கணம் கனாவிலே பிறங்கு மாபோல்.**

**பொழிப்புரை:** *நாடிகள் எல்லாவற்றையும் தடுக்கும் இரேசகத்தால் (பிராண வாயுவை வெளிவிடுதல்) ஒரு முகூர்த்த காலம் (இரண்டு நாழிகை) பொருந்தி நின்றால், நீண்ட காலம் ஆகாயத்தில் சஞ்சரிப்பவரைக் காணலாம். நல்லுணர்வு (ஞானம்) நுட்பத்தினால் ஊடுறுவும் தூரத்தோடும் சமீபத்திருப்பதாம் புத்தி விழிப்பார்வையால் (ஞான திருஷ்டியனால்) ஆகாயத்தில் பெருமையுள்ள அணிமா முதலான சித்திகளாம் நல்ல பொருள்களைத் தரும் சித்தர் கூட்டங்களைக் கனவிலே தோற்றுவது போல நிலையாகத் காணப்பெறுவர்.* **(6.9.55)**

**பன்னிரண்(டு)அங் குலத்தின்முகத் தின்புறம்போய் இரேசகத்தின் பழக்கத் தாலே**
**மன்னுயிர்தான் நெடிதுநிலை நிற்குமேல் வேற்(று)உடலை மருவும் என்னச்**
**சொன்னமுனி வனைவள்ளல் சூக்கவழி செல்கைக்கும் தூல மாய்விண்**
**தன்னைநிறை கைக்கும்அணுத் துவம்தூலத் துவம்உடற்குத் தருமா(று) எங்ஙன்.**

**பொழிப்புரை:** *(வேறொரு தேகத்தில் புகுதல் - பரகாயப் பிரவேசம் கூறல்) முகத்திலிருந்தும் பன்னிரண்டு அங்குலம் வெளியே தூரப் போய் இரேசகத்தின் பயிற்சியாலே பொருந்திய பிராணன் நெடும்பொழுது நிலைத்திருக்குமாயின் வேறு தேகத்தைப் பொருந்தும் என்று கூறிய வசிட்ட முனிவரை, இராமபிரான் சூக்கும வழியில் செல்வதற்கும், தூலமாய் ஆகாயத்தை நிறைவதற்கும், தேகத்திற்கு அணுத்தன்மை, தூலத்தன்மை கொடுக்கும் வண்ணம் எவ்வாறு?* **(6.9.56)**

**அருள்வாய்என் றலும்முனிவன் உரைசெய்வான் ஏகமாய் அறி(வு)ஒன் றேயாய்**
**ஒருவாத சமமாகிச் சாந்தமாய்ச் சுத்தமாய் ஒருபற்(று) இல்லாப்**
**பொருளாய்நுண் மையின்மிகவும் நுண்மையாய்ப் புவிஅன்றாய்ப் புவிசே ராதாய்**
**மருவாநின்(று) உள(து)அதுதான் சங்கற்பம் உறத்தனைத்தான் வகையாய்ச் செய்யும்.**

**பொழிப்புரை:** *உரைத்தருளல் வேண்டும் என்று கேட்கவும் வசிட்ட முனிவர் கூறுவார்: ஏகமாயும், சின்மாத்திரமாகியும், நீங்காத சமத்துவமாகியும், சாந்தமாகியும், சுத்தமாகியும், ஒரு பற்றும் (சம்பந்தமும்) இல்லாத பொருளாகியும், சூக்குமத்தில் மிகவும் சூக்குமம் ஆகியும், உலகம் அல்லாததாகியும், உலகத்தைச் சேராததாயும் பொருந்தியிருக்கின்றது ஒன்று உண்டு. அது தான் சங்கற்பத்தை உடைய தன்னைத் தானே பிரிவாகச் செய்யும்.* **(6.9.57)**

**பலவும்சூழ் வுறச்சீவ னாம்பொய்யே சங்கற்பம் பயில்ம யக்கால்**
**கலங்கும்சீ வன்சடமாய் இவ்வுடல்கா ணும்பாலர் காணும் பேய்போல்**
**குலவும்பல் உயிர்களும்இவ் வகையேஎப் படிஎத்தைக் குறிக்கின் றார்கள்**
**உலகின்கண் அப்படியே அதைக்காண்பார் நினைவின்கண் ஊற்றத் தாலே.**

**பொழிப்புரை:** *பலவிதமான கலக்கம் (பற்று) சூழ்ந்த போது சீவனாகும். சங்கற்பம் என்று சொல்லப்பட்ட பிரமையினால் (மித்தையால்) கலங்கிய (விட்சேபம் அடைந்த) சீவன், குழந்தைகள் பார்க்கின்ற பேய் போல, மித்தையாம் சடமான இந்த தேகத்தைப் பார்க்கும். பொருந்திய அனேக சீவர்களும் இந்த வழியே எப்படி எதைக் கருதுகின்றார்களோ அப்படியே உலகத்தில் மனதிலுள்ள பாவனையின் திடத்தினாலே அதைக் காண்பார்கள்.* **(6.9.58)**

**ஊற்ற(ம்)உறு பாவனையின் பரிசயத்தால் மூடர்களும் ஒன்றை ஒன்றால்**
**மாற்றிவிட அமுதாக்கி அமுதத்தை நஞ்சாக்கி மருவா நிற்பர்**
**ஏற்ற(ம்)உறும் சத்தியபா வனையாலே இத்தேகம் தேக மான**
**தோற்றிய தேகமீண்(டு) அசத்தியபா வனையால்விண் சொரூப மாய்ப்போம்.**

**பொழிப்புரை:** *திட பாவனையின் பயிற்சியால் அவிவேகிகளும் ஒன்றை மற்றொன்றினாலே மாறுபடச் செய்து, விஷத்தை அமுதமாகச் செய்து, அமுதத்தை விஷமாகச் செய்து, நிலைபெறுவர். உயர்வு பொருந்திய உண்மையான பாவனையினாலே*

*இந்த தேகம் தேகமாயிற்று. தோற்றம் அளித்த இத் தேகம் மறுபடியும் மித்தை என்னும் பாவனையினால் சூக்கும வடிவமாகும்.* **(6.9.59)**

**அணிமாதி குணப்பேற்றின் பாவனைஊ கங்களும்இவ் அடைவே ஆகும்**
**துணிவாலே யோகத்தின் சித்திஅறி வார்க்(கு)இதுதான் சுலபம் ஆகும்**
**குணியான அணிமாதி குணச்செல்வம் மிகப்பழகும் குறிப்பால் பெற்று**
**மணியாழி உல(கு)எல்லாம் கணத்தில்விளை யாடினாள் மறுவி லாதாள்.**

**பொழிப்புரை:** *அணிமா முதலான எண்வகை சித்திகளின் தன்மையை அடைவதின் பாவனைகளும், ஊகங்களும் இவ்வளவவே ஆகும். தெளிவினால் நிச்சயித்து யோக சித்தி அறிவபவர்களுக்கு இது எளிதாகும். காரணமாகிய அணிமா முதலான குண செல்வத்தை மிகவும் பயிற்சி செய்கின்ற கருத்தினால் அடைந்து, ரத்தினக் கற்களை உடைய கடல் சூழ் உலகமெல்லாம் கண நேரத்தில் களங்கம் அற்ற சூடாலையானவள் விளையாடி வந்தாள்.* **(6.9.60)**

**நாயகனை இமைப்போதும் நீங்காதாள் நல்அமுதாம் ஞானம் தன்னை**
**ஆயவனுக்(கு) அனேகஉபா யத்தினால் அறிவித்தும் அனைய மன்னன்**
**தூய்அறிவில் இளைப்பாறப் பெற்றிலன்மா யோகினியாம் சூடா லைக்கு**
**மேயகுணங் களும்அறிந்தான் இல்லைப்பா லகர்விஞ்சை மேவா தாப்போல்.**

**பொழிப்புரை:** *தன் நாயகனை இமைப்பொழுதும் நீங்காதவள், நல்ல அமுதமாகிய பிரம்ம வித்தையை அம்மன்னவனுக்கு பலவிதமான உபாயங்களினால் உணர்த்தியும், அந்த மன்னவன் பரிசுத்த அறிவில் சித்த அமைதியை அடையவில்லை. மகா யோகினியாகிய சூடாலைக்குப் பொருந்திய குணங்களையும் குழந்தைகள் கல்வியை அறியாததைப் போல அறிந்துகொள்ளவில்லை.* **(6.9.61)**

**தன்னறிவில் இளைப்பாறல் இலாமையினால் அவனுக்குத் தனது யோக**
**நல்நிதியை உரைத்திலளால் சூத்திரற்கு யாகநெறி நவில்வார் உண்டோ**
**என்னலுமே மகத்தான சித்தயோ கினிவருந்தி இயம்ப வேயும்**
**அன்னசிகித் துவச(ன்)அறி(வு) உற்றிலனேல் பிறர்எங்ஙன் அறிவார் ஐயா.**

**பொழிப்புரை:** *தனது சித்சொரூபத்தில் சித்த அமைதி அடையாததால் அந்த மன்னவனுக்குத் தனது யோக நல்ல மார்க்கத்தைக் கூறவில்லை. சூத்திரர்களுக்கு யாகநெறியைக் கூறுவார் உண்டோ? என்று (வசிட்டர்) கூறவும், மகத்தான சித்த யோகினி மிகவும் கஷ்டப்பட்டு எடுத்துக் கூறியும், அந்த சிகித்துவசன் அறிந்து கொள்ளவில்லை என்றால், ஞானாசிரியரே! மற்றவர்கள் எப்படி அறிவார்கள்?* **(6.9.62)**

**ஒல்லும்வகை உரைஎன்ன இராகவன்கேட் டலும்வசிட்டன் உத்த ரிப்பான்**
**நல்லஉப தேசம்தான் நம்பிக்கை மாத்திரத்தை நன்றாய்ச் செய்தல்**
**எல்லையிலா அறிவுக்குச் சுத்தமாம் மகன்அறிவே ஏது வென்று**
**சொல்லுதலும் மீண்(டு)அந்த முனிதனக்கு ரகுநாதன் சொல்லு கிற்பான்.**

**பொழிப்புரை:** *அடையும் வகையைக் கூறுவீர் என்று இராமபிரான் கேட்கவும், வசிட்ட முனிவர் பதில் சொல்வார்: ஞான சாத்திர உபதேசமானது நம்புதல் மாத்திரம் நன்றாகக் காப்பாற்றுதலாம். (நம்பிக்கையை திடமாக வைத்தலே பலன்தரும்) எல்லையில்லா ஆத்ம ஞானத்திற்குப் பரிசுத்தமான சீடன் அறிவே காரணமாகும் என்று சொல்லிய அளவில், மறுபடியும் வசிட்ட முனிவரை நோக்கி இராமபிரான் சொல்லுவார்.* **(6.9.63)**

**மகன்அறிவே ஏதுவெனில் குருவசனம் ஏதுவாய் வருவது) எங்ஙன்**
**மிகும்அறிவுக்(கு) எனக்கேட்ப வசிட்ட(ன்)அதற்(கு) உரைசெய்வான் விந்த வெற்பில்**
**அகல்வனத்தில் ஒருவேடன் பெரும்குடும்பி அவன்ஒருநாள் அடவி தன்னில்**
**புகுநெறியில் பலகறைஒன் றினைக்கெடுத்துத் தேடினான் புலம்ப லோடும்.**

**பொழிப்புரை:** *சீடனது அறிவே காரணம் எனில், பூரணமான ஞானத்திற்கு ஆசாரியர் வாக்கியம் காரணமாய் வருவது எப்படி? என்று கேட்கவும், அதற்கு வசிட்ட முனிவர் சொல்வார்: விந்திய மலையில் அகன்ற காட்டில் ஒரு வேடன் பெரிய சம்சாரி. அவன் ஒரு நாள் காட்டினுள் செல்லும் போது பலகறை (ஒரு இசைக்கருவி) ஒன்றைத் தொலைத்து அழுகையோடும் தேடினான்.* **(6.9.64)**

**மூன்றுநாள் தேடியபின் முழுமதிநேர் மணிஒன்று முன்னே கண்டான்**
**ஏன்றுபல கறைதேட ஏழ்உலகும் பெறுமணியை எதிர்ந்தான் வேடன்**
**ஞான்றஉப தேசத்தால் கல்வியால் ஞான(ம்)உறும் அதுவே போல**
**ஊன்றுறஒன் றைக்கருத ஒன்றுவெளிப் படும்குருவின் உபதே சத்தால்.**

**பொழிப்புரை:** *மூன்று நாட்கள் தேடிய பின்பு, பூரண சந்திரனுக்கு ஒப்பான ஒரு ரத்தினத்தை எதிரே கண்டான். ஏக்கமுற்றுப் பலகறையைத் தேட, ஏழு உலகங்களும் விலைபெறத்தக்க ஒரு ரத்தினத்தை வேடன் பெற்றான். அதைப் போல, பக்குவ காலத்தில் செய்யும் பிரம்ம உபதேசத்தினாலும், வேதாந்த சாத்திரத்தாலும் ஞானம் அடையப்படும். ஆசாரியர் உபதேசத்தினால் அன்னியமான ஒரு பொருளைத் திடமாகத் தியானிக்க, அன்னியமில்லாத ஒரு பொருள் கண்டு உணரப்படும்.* **(6.9.65)**

**நலன்உறுபேர் அறிவுக்குக் குருவசனம் காரணத்தை நண்ணா தேனும்**
**பலகறைநன் மணிக்(கு)ஏது வானாப்போல் ஏதுவாய்ப் பலத்தை நல்கும்**
**குலவுசிகித் துவசன்தான் ஞான(ம்)இலா மையின்மோகம் கூடிச் சாலச்**
**சுலப(ம்)உறு தன்செல்வம் பெரும்கனல்என்(று) எண்ணியே துன்பம் உற்றான்.**

**பொழிப்புரை:** *தத்துவ ஞானத்திற்குக் குருவின் உபதேசம் காரணமாகப் பொருந்தாது என்றாலும், பலகறையானது நல்ல ரத்தினமணிக்குக் காரணமானது போல், காரணமாகிப் பலனைத் தருவதாகும். திகழும் சிகித்துவசன் தனக்கு ஞானம் இல்லாமையால், மோகம் அடைந்து, மிகவும் சுலபமாகப் பெற்ற தனது செல்வம் பெரும் நெருப்பாகும் என்று எண்ணி துன்பம் அடைந்தான்.* **(6.9.66)**

**அருந்தானம் பலகொடுத்தான் தவமிகச்செய் தான்தீர்த்தம் அனைத்தும் தோய்ந்தான்**
**வருந்தாமை அவற்றாலும் பெற்றிலன்பேர் இடராலே மனம்நொந்(து) ஓர்நாள்**
**இருந்தா(ன்)ஏ காந்தத்தில் மடிமேலே சூடாலை இருக்கச் செய்து**
**பெருந்தாபம் உறுகின்ற துயர்எல்லாம் அவளுக்குப் பேசல் உற்றான்.**

**பொழிப்புரை:** *அரிய தானங்கள் பலவும் கொடுத்தான். மிகுந்த தவத்தை மேற்கொண்டான். புண்ணிய தீர்த்தங்கள் அனைத்திலும்; மூழ்கினான். அவைகளால் துன்பம் இல்லாமையைப் பெறவில்லை. பெரும் துயரத்தினால் மனம் நொந்து ஒரு நாள் தனிமையில் இருந்தான். சூடாலையைத் தன் மடிமீது இருத்தி, பெரும் மனச் சூட்டினால் அடைகின்ற துயர்களை எல்லாம் அவளிடத்தில் சொல்லத் தொடங்கினான்.*

**(6.9.67)**

**ஆண்டஅர சினும்புசித்த செல்வத்தும் இன்றுநான் ஆசை அற்றேன்**
**நீண்டவனம் புகநயந்தேன் துக்கசுகம் ஆபத்து நிதிகள் எல்லாம்**
**மாண்டவனத்(து) உறைவோரைத் துயர்செய்யா புவிபொருட்டால் மயங்க வேண்டா**
**காண்தகுதன் கிளைநாசம் தோன்றாது நாட்டினும்வன் காடு நன்றே.**

**பொழிப்புரை:** *ஆட்சி புரிந்த ராச்சியத்திலும், அனுபவித்த செல்வத்திலும் இன்று நான் ஆசை அற்றுவிட்டேன். நீண்ட கானகம் செல்ல விரும்புகின்றேன். துக்கம், சுகம், ஆபத்து, செல்வம் எல்லாம் மாட்சிமை உடைய காட்டில் வசிப்பவரைத் துன்பப்படுத்தாது. தேசத்தின் பொருட்டு மயங்க வேண்டாம். (காட்டில் காணத்தக்க தன்னைச் சார்ந்தோர் நாசம் தோன்றாது. ஆதலால் நாட்டைக் காட்டிலும் வலிய கானகம் நல்லதாம்.)* **(6.9.68)**

**பற்(று)இன்றித் தனித்(து)இருக்கும் மனத்தைப்போல் பனிமதியும் பதுமத் தோனும்**
**பொன்திரள்சேர் இந்திரனும் சுகம்அடையார் ஆதலில்கான் போகும் என்னைக்**
**குற்றம்(ம்)என விலக்கலைநீ கணவர்நயந் ததுவிலக்கார் குலத்தின் மாதர்**
**சிற்றிடையாய் என்(று)உரைத்த மன்னனுக்குச் சூடாலை செப்பல் உற்றாள்.**

**பொழிப்புரை:** *பற்றின்றி தனித்திருக்கும் மனதைப் போல, குளிர்ச்சியான சந்திரனும், நான்முகனும், பொன்னுலகத்து இருக்கும் இந்திரனும் சுகத்தை அடையார்கள். ஆதலால் கானகம் போகும் என்னைத் தவறு என்று நீ விலக்க வேண்டாம். கணவர் விரும்பியதை நல்ல குலத்தில் வந்த மாதர்கள் வேண்டாம் எனத் தடுக்க மாட்டார். சிறிய இடையுடையவளே! என்று கூறிய மன்னவனுக்குச் சூடாலை கூறத் தொடங்கினாள்.*

**(6.9.69)**

**வசந்தநாள் மலர்விளங்கும் சரற்காலம் காய்விளங்கு மரபு போல**
**இசைந்தநாள் செய்ததொழில் விளங்குமால் சரையாலே ஆக்கை நைந்தால்**
**பசைந்தமால் அறவனமே போகலாம் இளமைநாள் பான்மை அன்றாம்**
**அசைந்திடா(து) ஒழிகஎனச் சூடாலை சொல்லியதற்(கு) அரசன் சொல்வான்.**

**பொழிப்புரை:** *வசந்த காலத்தில் பூக்கள் மலர்ந்து, சரத் காலத்தில் காய் கனிகள் பிரகாசிக்கும் முறைமை போல, உரிய காலத்தில் செய்த கர்மங்கள் பிரகாசிக்கும்.*

*முதுமையாலே தேகம் நலிவடைந்தால், பற்றிய ஆசை ஒழிய கானகம் போகலாம். இளமை காலத்தில் போவது முறைமை அல்ல. செல்லாதிருப்பாய் என்று சூடாலை கூறியதற்கு மன்னன் சொல்வான்.* **(6.9.70)**

**தடா(து)ஒழிவாய் ஏகாந்த வனம்புகுந்தே நிற்பேன்நான் சற்றும் தாழேன்**
**படமாமுலைநீ சிறியையால் உடன்வருதற்(கு) ஆகாநீ பாரைத் தாங்கி**
**விடா(து)இருத்தி நன்மனையில் கணவ(ர்)அகன் றால்குடும்பம் மெலி(வு)உ றாமல்**
**கெடா(து)அளித்தல் குலமகளிர் விரத(ம்)என நீர்படிவான் கிளந்து போனான்.**

**பொழிப்புரை:** *தடுக்காமல் இருப்பாய், தனித்துள்ள கானகம் போய்த் தீர்வேன், நான் சற்றும் தாமதிக்கமாட்டேன். கச்சு இறுகிய தனத்தை உடைய நீ சிறியவள் ஆதலின் உடன் வருவது கூடாது. நீ பூமியைக் (ராச்சியத்தைக்) காத்து, நீங்காமல் இருப்பாய். நல்ல மனையில் கணவர் வெளியில் சென்றால் குடும்பம் நலிவடையாமல், கெட்டுப் போகாமல் காத்தல் குல மங்கையர் விரதம் என்று குளிப்பதற்காக எழுந்து சென்றான்.* **(6.9.71)**

**பகல்பொழுது சென்றதன்பின் சந்திநிய திகள்பண்ணிப் பாவை யோடும்**
**சுகித்(து)அமளி எனநிலத்தில் துயில்உற்றான் நள்ளிரவில் துயிலும் வஞ்சி**
**அகத்(து)இருப்ப மெல்லஎழுந்(து) அவள்அறியா வகைஏகி அறிந்தோர்க்(கு) எல்லாம்**
**நகர்க்கு(ள்)உலா வுதும்என்னா யாவரையும் நிறுத்திப்போய் நகரை நீத்தான்.**

**பொழிப்புரை:** *பகல் பொழுது போன பின்பு, சந்தியாவந்தனம் முதலான மாலைக் கடன்களைச் செய்து, சூடாலையோடும் மகிழ்ந்து, பஞ்சணை என நிலத்தில் உறங்கினான். நள்ளிரவில் உறங்கிக் கொண்டிருக்கும் வஞ்சிக் கொடி போன்ற சூடாலை உள்ளே படுத்திருக்க, அவள் அறிந்து கொள்ளாதவண்ணம் மெல்ல எழுந்து கிளம்பி, தெரிந்தவர்களுக்கு எல்லாம் நகர்சோதனைக்கு செல்வதாக எல்லோரையும் (உடன் வராமல்) நிறுத்தி விட்டுப் போய் நகரத்தைத் துறந்து சென்றான்.* **(6.9.72)**

**சடம்அகலாப் பெருந்திருவே உனைத்தொழுதேன் நில்லென்று தன்னோடு ஏகி**
**அடவிபுகுந் தான்தினம்ஓர் பன்னிரண்டில் பலகிரியும் ஆறும் நீங்கிப்**
**படர்சனங்கள் செலற்(கு)அரிதாய் மந்தரவெற் புக்(கு)அருகாம் பழுவம் புக்கான்**
**மடல்அவிழ்பங் கயவாவி மலர்ப்பொழில்சூழ் அவ்விடத்தில் வசிப்ப(து) ஆனான்.**

**பொழிப்புரை:** *சடமாய் இருக்கின்ற பெரும் ராஜ்ய லட்சுமியே (செல்வமே) உனைத் தொழுதேன்.(உடன் வராமல்) நிற்பாய் என்று தான் மட்டும் சென்று கானகம் புகுந்தான். பன்னிரண்டு நாட்களில் பல மலைகளையும், நதிகளையும் கடந்து, மக்கள் கூட்டம் போவதற்கு அரிதான மந்தர மலைக்கு அருகில் அமைந்த காட்டினை அடைந்தான். இதழ்விரிந்த தாமரைத் தடாகம், மலர்களின் நந்தவனம் சூழ்ந்த அந்த இடத்தில் வசிக்கத் தொடங்கினான்.* **(6.9.73)**

**சாலைஅமைத் தான்மூங்கில் தண்(டு)இழைத்தான் கமண்டலமும் சமைத்தான் அக்கு**
**மாலையும்கந் தையும்கனிகாய் அமைப்பனபாத் திரங்களும்மான் தோலும் சேர்த்தான்**
**மேலைஉயர் தவம்தொடங்கிச் சந்திநிய மமும்செபமும் விடிந்த சாமம்**
**சோலைமலர் பறித்தல்இரண் டாம்சாமம் இவ்வகையே தொழில்கள் ஆக்கி.**

**பொழிப்புரை:** *இருப்பதற்குக் குடில் ஒன்றை அமைத்தான். மூங்கிலால் (தவம் செய்வதற்கு உதவும்) தண்டம் செய்தான். கமண்டலமும் சேகரித்தான். கூபமாலையும், கந்தை துணியும், கனி, காய் முதலியவை வைப்பதற்கான பாத்திரங்களும், மான் தோலும் சேர்த்து வைத்தான். பின்பு உயர்ந்த தவம் செய்யத் தொடங்கி, விடிந்த காலைப் பொழுதான முதல் சாமத்தில் சந்தியாவந்தனம், ஜெபம், இரண்டாம் சாமத்தில் பூஞ்சோலையில் உள்ள மலர்களைப் பறித்தல் இவ்விதமாக செயல்களை வகுத்து,*
**(6.9.74)**

**கடவுள்பூ சனைமூன்றாம் சாமம்நா லாம்சாமம் கனிகாய் கொள்ளல்**
**படர்இர(வு)எல் லாம்செபமாம் இவ்வாறு தவம்புரிந்தான் பகர்ந்த வேந்தன்**
**மடவரல்இங்(கு) அரைஇரவில் கண்விழித்தாள் தன்அருகு மன்னைக் காணாள்**
**இடர்மருவி வாழ்(வு)அகன்று வனம்புகுந்தான் அரச(ன்)என இரங்கி வாடி.**

**பொழிப்புரை:** *கடவுள் பூசை மூன்றாம் சாமம், நான்காவது சாமம் கனி காய் புசித்தல், படர்ந்த இரவெல்லாம் செபம் என்று இவ்வாறாக தவம் புரிந்தான் கூறிய சிகித்துவச மன்னன். சூடாலை நாட்டில் அந்தப்புரத்தில் பாதி இரவில் கண் விழித்தாள். தன் அருகில் மன்னனைக் காணாமல், சற்று துயரம் அடைந்து, அரச வாழ்வினைத் துறந்து கானகம் சென்றான் மன்னவன் என்று இரக்கத்தால் வாட்டம் அடைந்து,* **(6.9.75)**

**பதிஒழிந்து கதியில்லை குலமகளிர்க்(கு) அரசனைநாம் பயிறும் என்னா**
**மதிநினைந்து சாளரத்தால் புறப்பட்டு வான்ஏகி வானில் சித்தர்**
**அதிக(ம்)இது)ஓர் மதிஎன்ன முகம்திகழப் போகின்றாள் ஆங்கே கண்டாள்**
**கதிர்வடிவாள் உடன்இரவில் தனிப்போம்மன் னனைக்கண்டு கருது கிற்பாள்.**

**பொழிப்புரை:** *குலமங்கையர்க்குக் கணவனை விட்டு கதியில்லை என்று நான் சென்று அரசனைச் சேர்வேன் என்று புத்தியில் நினைந்து, சன்னல் வழியாக வெளியே வந்து, வானத்தில் சென்று, வானில் உலவும் சித்தர்கள் மிகவும் அதிகம் இது என்று சொல்லும்படியாக முகம் விளங்க போனாள். அங்கே பிரகாசமான கூர்மையுடைய வாளுடன் இரவில் தனியாக போகின்ற மன்னவனைக் கண்டு, எண்ணுவாள்.*
**(6.9.76)**

**இனிஇவன்செய் வனஎன்னென்(று) எண்ணுதலும் மேற்செய்வ(து) எல்லாம் கண்டாள்**
**கனிமொழியாள் திரும்பினாள் இன்(று)இவனை நாம்சேரும் காலம் அல்ல**
**துனிஅறப்பின் சேர்வதே விதிநெறியாம் எனமீண்டு தொல்வீ(டு) உற்றாள்**
**வினவினர்க்கு மன்ன(ன்)ஓர் காரணத்(து)ஏ கினன்என்று விளம்பி யார்க்கும்**

**பொழிப்புரை:** *மன்னவன் இனி செய்யப்போவது எது என்று சிந்தித்தலும், யோக பலத்தினால் அவன் இனி செய்யப் போவதையெல்லாம் அறிந்தாள். இனிய மொழியுடைய சூடாலை தன் வசிப்பிடம் திரும்பினாள். இன்று மன்னவனை அடையும் காலம் அல்ல, துன்பம் அற பின்னர் அடைவதே விதியாகும் என்று மறுபடியும் தனது இல்லத்தை அடைந்தாள். கேட்ட எவர்க்கும் மன்னவன் ஒரு காரணமாக வெளியில் சென்றுள்ளான் எனக் கூறி,* **(6.9.77)**

**அரச(ன்)ஒழுங் கால்புவியைத் தனிகாத்தாள் சமநோக்கால் அணங்கு போல்வாள்**
**வரிசையுடன் பதினெட்(டு)ஆண்(டு) அகன்றுசூ டாலையும்தன் மனையில் வாழ்ந்தாள்**
**புரைசெறிகா னகத்(து)இருந்தான் சிகித்துவசன் அவன்பால்நாம் போவ தற்கு**
**விரவியநாள் இதுவென்ன இருளிலே புறப்பட்டு விண்ணில் போனாள்.**

**பொழிப்புரை:** *மன்னவன் (எப்படி ஆள்வானோ அந்த) முறைமையால் ராச்சியத்தைத் தனியாக நின்று, சம நோக்குடன், தெய்வம் போன்ற சூடாலை ஆண்டு வந்தாள். முறையுடன் பதினெட்டு ஆண்டு கழிந்திட, சூடாலையும் தனது அரண்மனையில் வாழ்ந்து வந்தாள். இடர்சூழ்ந்த கானகத்தில் சிகித்துவசன் தங்கி இருந்தான். அவனிடம் நாம் போவதற்கான பொருத்தமான காலம் இதுவென்று இரவிலே புறப்பட்டு ஆகாயத்தில் சென்றாள்.* **(6.9.78)**

**மாருதத்தின் கழுத்(து)ஏறி மறைந்துபோய் மந்தரமா மலையைச் சேர்ந்தாள்**
**ஆர(ம்)அற மணிப்பூண்கள் இன்றியே கறுத்(து)உலர்ந்த அங்கம் ஆகி**
**ஓ(ர்)உடல்நின் றதுகண்டாள் அறிந்திலள்மா யோகத்தால் உணர்ந்து மன்னைக்**
**கூறு(ம்)இடர் சிறி(து)அடைந்து தன்னிலே மனத்தோடு கூறல் உற்றாள்.**

**பொழிப்புரை:** *காற்றின் தோளில் ஏறி, மறைந்து போய், மந்தர மலையை அடைந்தாள். முத்து மாலை, ரத்தின ஆபரணங்கள் இல்லாமல் கருப்பாகி உலர்ந்த வடிவமாகி உடல் ஒன்று நிற்பதைக் கண்டாள். (யார் என்று) தெரிந்து கொள்ளவில்லை. மகா யோகத்தினால் மன்னவனை உணர்ந்தாள். சற்று துயரம் அடைந்து, தன்னிடத்தில் தன் மனதிலே கூறிக் கொண்டாள்.* **(6.9.79)**

**அறியாமை அறக்கொடி(து)அந் தோஅந்தோ அதனால்இவ் அரசன் நொந்தான்**
**பிறியாத ஞானமும்போ கமும்வீடும் இன்(று)அளிப்பேன் பிறி(து)ஒன் றில்லைச்**
**சிறியாள்நம் மனைவிஇவள் என்(று)இகழா வகைவேறோர் தேகம் மேவி**
**நெறியாக உணர்த்துவன்பே தைமைதீரும் நெஞ்சினனாய் நிருபன் நின்றான்.**

**பொழிப்புரை:** *அஞ்ஞானமானது மிகவும் கொடியது அந்தோ! அந்தோ! அதனால் இந்த மன்னவன் துயரம் அடைந்தான். பிரிவில்லாத ஞானமும், (அதனால் வரும்) சுகமும், மோட்சமும் இப்போதே அளிப்பேன். இதில் வேறொரு சந்தேகமில்லை. இவள் சிறியவள், தமது மனைவி என்று இகழாத வண்ணம் மற்றொரு தேகத்தை அடைந்து, முறையாக போதிப்பேன். அஞ்ஞானம் தீரும் மனம் உடையவனாய் மன்னவன் இருக்கின்றான்.* **(6.9.80)**

**பக்குவம்ஆ தலின்இந்த விமலமனத் தேஅறிவு பற்றி பாயும்**
**தக்க(து)இது என்(று)எண்ணி ஒருசிறிது தியானத்தால் தான்வே(று) ஆகி**
**மிக்க(து)ஒரு வேதியன்சே யாய்க்கணவன் முன்குதித்தாள் விண்ணில் நின்றும்**
**அக்கணமே அவன்நோக்கிக் கடி(து)எழுந்(து)அங் கீகாரம் அனைத்தும் செய்தான்.**

**பொழிப்புரை:** *பக்குவமாக இருத்தலால் அழுக்கில்லாத இந்த மனத்தில் ஞானம் பிரதிபலிக்கும், தகுதியானதே இது என்று எண்ணி, சிறியதொரு தியானத்தினால் தான் வேறான உருவமாகி, மேலான ஒரு பிராமண குமாரனாய் ஆகாயத்தில் இருந்தும் இறங்கி வந்து கணவன் முன் நின்றாள். அந்தக் கணமே மன்னவன் பார்த்து விரைந்து எழுந்து ஏற்கத்தகுந்த பூசைகள் அனைத்தும் செய்தான்.* **(6.9.81)**

**பொன்னிறத்தன் வெண்தரள மாலையன்வெண் துகில்உடையன் புரிவெண் நூலோன்**
**நன்னிலத்தை விடச்சிறிது மேல்நிற்போன் தனைநோக்கி நடஇங்(கு) என்று**
**தன்னிடத்(து)ஆ தனம்கொடுத்தான் சிகித்துவசன் மறையவன்சேய் தானும் மீண்டு**
**மன்னியற்கைத் தவமுனியே உனைத்தொழுதேன் என்றுமறு மாற்றம் சொல்லி**

**பொழிப்புரை:** *பொன்னிற மேனியன், வெண்மையான முத்துமாலை அணிந்தவன், வெண்ணிற ஆடை அணிந்தவன், முறுக்கிய வெண்ணிற பூணூல் அணிந்தவன், நல்ல பூமியை விடச் சற்று மேலே நிற்பவன் ஆகிய பிராமண குமாரனை நோக்கி இங்கே எழுந்தருளும் என்று தனதிடத்தில் ஒரு ஆசனம் கொடுத்தான் சிகித்துவசன். பிராமண குமாரன் மறுபடி இயல்பான தவத்தை உடைய ராஜ ரிஷியே உன்னைத் தொழுதேன் என்று பதிலுக்கு வணக்கம் கூறி,* **(6.9.82)**

**ஆதனத்தில் இருத்தலுமே மன்னன்(ன்)உரைப்பான் கடவுள்மகன் ஆன நீதான்**
**போதலினால் பயன்பெற்றேன் இன்(று)அன்றோ என்றுபல பூசை பண்ணி**
**ஏதம்(ம்)அற இட்டதே வதைஎன்றே கருதினான் இவனும் அந்தப்**
**பூதலமன் னனைநோக்கி நின்குணமும் வினயமும்ஆர் பொருந்து கிற்பார்.**

**பொழிப்புரை:** *ஆசனத்தில் அமர்ந்ததும் மன்னவன் கூறுவான்: தெய்வ புத்திரனாகிய நீர் தான் இங்கே எழுந்தருளியதால் இன்று அல்லவா அடைய வேண்டிய பயனைப் பெற்றேன் என்று பலவிதமான பூசைகள் செய்து, குற்றமற இஷ்ட தேவதை என்றே நினைத்தான். அந்த பிராமண குமாரனும் பூதல மன்னவனை நோக்கி நின்னுடைய குணமும், பணிவும் யார் தான் அடைந்துள்ளனர்?* **(6.9.83)**

**அதனாலே நீடூழி வாழ்தியால் உபசாந்தம் ஆன நெஞ்சால்**
**விதமான கற்பனைஅற்(று) அரியதவம் வீடுபெற மிகச்செய் தாயோ**
**சதவேள்வி வாசவன்நேர் வேந்தனாம் பதம்விட்டுத் தவவ னத்தை**
**இதமாக நினைந்(து)உறைதல் அசிதார விரதம்(ம்)எனும் இயற்கை ஒக்கும்.**

**பொழிப்புரை:** *அதனாலே நீண்ட காலம் வாழ்வாயாக. பரம சாந்தத்தை அடைந்த மனதால் விதவிதமான கற்பனைகளை விட்டு, அரிய தவத்தை முத்தி பெறுவதற்கு செய்கின்றாய் போலும். நூறு வேள்விகள் செய்த இந்திரனுக்கு ஒப்பான மன்னவனாகிய பதத்தை விட்டு, தவத்தைச் செய்யக் காட்டினை இனிதாக நினைத்து வசித்தல் கத்திமுனையில் செய்யும் தவம் என்கிற இயல்புக்குச் சமமாம். (இளமையுள்ளவன் கணவன் மனைவி போல் உள்ளே சம்பந்தம் இன்றி நடந்து கொள்வது அசிதார விரதம் என்றும் சொல்வர்)* **(6.9.84)**

**என்றமறை யவன்தனைப்பார்த்(து) அரச(ன்)உரைப் பா(ன்)இங்(கு)என் இயற்கை எல்லாம்**
**நன்(று)உணர்(வு)உற் றாய்தேவன் ஆதலால் இதில்வியப்பு நண்ணல் பாற்றாம்**
**நின்றனைநீ யார்புதல்வன் நின்பெயர்என் வருபொருள் நிகழ்த்து(க) என்ன**
**ஒன்று(ம்)ஒழி யா(து)உரைப்பக் கேட்டியென மறையவன்சேய் உரைக்க லுற்றான்.**

**பொழிப்புரை:** *என்று கூறிய பிராமண குமாரனைப் பார்த்து, மன்னவன் உரைப்பான்: என் சுபாவம் எல்லாம் நன்றாக அறிந்துகொண்டாய். நீ தேவன் ஆதலால் இதில் ஆச்சிரியம் கொள்வது என்னே! இங்கு வந்தருளிய நீர் யாருடைய புதல்வன்? உமது*

*பெயர் என்ன? இங்கு வந்த காரணம் என்ன? உரைக்க வேண்டும் என்று கேட்க, ஒன்றையும் மறைக்காமல் சொல்கிறேன் கேட்பாய் என்று பிராமண குமாரன் கூறத் தொடங்கினான்.* **(6.9.85)**

**நாரத(ன்)என்(று) ஒருமுனிவன் மெஞ்ஞான விளக்(கு)ஒப்பான் நல்நீர்க் கங்கைத்**
**தீரமுறு பொன்தலத்தில் சமாதிஇருந் தான்அந்தத் தியானம் விட்(டு)ஓர்**
**நேர(ம்)இருப் புழிவிளையாட்(டு) ஒலிஒன்று செவியுறஅந் நெறியைப் பார்த்தான்**
**பேர்அழகில் அரம்பைதிலோத் தமைஒப்பார் திரண்டுசில பெண்கள் வந்தார்.**

**பொழிப்புரை:** *நாரதன் என்று ஒரு முனிவன். மெய்ஞ்ஞான விளக்கைப் போன்றவன். தூய நீர் நிறைந்த கங்கைக் கரையில் அழகிய இடத்தில் சமாதியில் இருந்தான். அந்தத் தியானம் கலைந்து இருக்கின்ற ஒரு சமயம், விளையாடும் ஒலி ஒன்று அவன் காதில் விழ, அந்த வழியைப் பார்த்தான். பேரழகான அரம்பை, திலோத்தமை இவர்களுக்கு ஒப்பான சில மங்கையர்கள் ஒன்றாகத் திரண்டு வந்தனர்.* **(6.9.86)**

**கங்கையில்நீர் விளையாட்டில் களிப்(பு)உறுவார் புருட(ர்)அயல் காணா வாற்றால்**
**சங்கைஅறத் துகில்இல்லார் அவர்வரத்தைக் கண்டுமனம் தாவி ஓடித்**
**துங்கவிவே கம்துறந்து சுகம்அடைய உயிர்அலைந்து தொடர்ந்து நிற்கும்**
**பங்க(ம்)இலா நாரதன்தன் மனம்நழுவிச் சுக்கிலமும் பாய்ந்த(து) அன்றே.**

**பொழிப்புரை:** *கங்கை நதி நீரில் கூலக்கீரிடை (நீர் விளையாட்டு) ஆடி சந்தோஷம் அடைந்துநுஅருகாமையில் புருடர் யாரும் காணாததால் வெட்கமில்லாமல் ஆடையின்றி அந்த மங்கையர்கள் வருவதைக் கண்டு மனம் தாவி ஓட, உயர்ந்த விவேகம் நீங்கி, விஷய சுகத்தை அடைவதற்குப் பிராணன் சலனம் அடைந்திட, அதனைத் தொடர்ந்து நிற்கும் குற்றமற்ற நாரதன் மனமானது நழுவி, விந்துவும் ஒழுகியது.* **(6.9.87)**

**என்னலுமே நின்மொழியாம் இன்னமுதால் உளம்குளிர்ந்தேன் எனினும் வேறு**
**பன்னுமொழி பரம்பொருள்போல் அறி(வு)அரிதால் குவித்(து)உன(து)உற் பத்தி சொல்வாய்**
**பின்ன(ர்)உயர் பரம்பொருளை வருந்தியும்கேட் கின்றேன்மேல் பேசு(க) என்ன**
**மன்ன(ன்)உரை செயக்கேட்டுச் சூடாலை யாம்மறையோன் மைந்தன் சொல்வான்.**

**பொழிப்புரை:** *இப்படி என்று பிராமண குமாரன் சொல்லவும், உமது வார்த்தையாக இனிய அமுதத்தால் மனம் குளிர்ந்தேன் எனினும், வேறே சொல்கின்ற வசனம் பரமார்த்தத்தைப் போல அறிதற்கு அரியது. சுருக்கமாக நீ உதித்ததைச் சொல்வாய். பின்பு உயர்ந்த ஞானார்த்தத்தை வேண்டிக் கேட்கிறேன். மேற்கொண்டு சொல்லுவீர் என மன்னவன் கூறியதைக் கேட்டு, சூடாலையாகிய பிராமண குமாரன் சொல்வான். (மேன்மை உடையவராயும், சீவன் முத்தராயும், ஆசையற்றவராயும் இருந்த நாரத முனிக்கு இவ்வாறு விந்து ஒழுகியது எப்படி என்ற சந்தேகத்திற்கு பதில்: நிர்மலமான ஆத்ம சொரூபம் கண நேரம் மறக்கப்பட நேர்ந்தாலும், மழைக்காலத்தில் மேகங்கள் மூடி இருள் படர்வது போல, காணப்படும் விஷயங்கள் உல்லாசத்தை அடையும். சின்மாத்திர சொரூபமானது சதாகாலமும், கண நேரமும் மறக்கப்படாமல் இருக்குமாயின் காணப்படும் விஷயங்கள் பிரகாசிக்கமாட்டாது. சீவனுக்கு சுகதுக்கங்கள் மிகக் கொஞ்சமாக தென்படுவதே பந்தமாகும். அவைகள் இல்லாததே முத்தியாம்.)* **(6.9.88)**

நமுவுமனம் எனும்மத்த மதகயத்தை நாரதனார் நல்வி வேகப்
பழு(து)இல்பெருந் தூணிலே நற்புத்தித் தோட்டியால் பற்றிக் கட்டித்
தழுவுபடி கக்குடத்தில் தாதுவைவிட் டான்பாலைச் சால வார்த்தான்
செழுமதியம் பாற்கடலில் வளர்வதுபோல் கருவளர்ந்து சிறந்த(து) அன்றே.

**பொழிப்புரை:** *நழுவுகின்ற மனம் என்னும் மதயானையை நாரதன் நல்ல விவேகம் என்னும் பழுதில்லாத பெரிய தூணிலே, நல்ல புத்தி என்கிற அங்குசத்தால் அடங்கிப் பிடித்துக் கட்டி, அருகிலிருந்து படிகக் குடத்தில் ஒழுகிய விந்துவை விட்டான். அதில் பாலை நிரம்பவும் ஊற்றினான். சிறப்பாக நிலவானது பாற்கடலில் வளர்வது போல், கருவானது வளர்ந்து சிறப்புற்றது.* **(6.9.89)**

குடநின்று புறப்பட்ட குமரனுக்கு விஞ்சைஎனும் குறை(வு)இல் செல்வப்
படங்கள் உண்டாக்கிப் பிதாமகன்பால் கொடுபோகப் பதுமத் தோனும்
கட(ன்)என்று பேரனுக்கு மெய்ஞ்ஞானக் கரைகாணக் காட்டி விட்டான்
உடன்அந்நாள் அன்னவனால் குடம்பெறலால் கும்ப(ன்)எனும் ஒருபேர் பெற்றேன்.

**பொழிப்புரை:** *குடத்திலிருந்து வெளிவந்த குமரனுக்கு வித்தை என்னும் குறைவில்லாத செல்வ வளங்களை அளித்து, பிரமனிடம் அழைத்துப் போக, பிரமனும் கடமை என்று பேரனுக்கு மெய்ஞ்ஞானத்தின் கரையைக் காணக் காண்பித்தான். உடனே அந்த நாள் அவனால் குடத்திலிருந்து (கும்பத்திலிருந்) வந்ததால் கும்பன் என்ற ஒரு பெயரைப் பெற்றேன்.* **(6.9.90)**

செய்யகலை மகள்எனக்குத் தாயாம்கா யத்திரிதான் சிறிய தாயாம்
மைஇல்சதுர் வேத(ம்)எனும் தோழருடன் விளையாடி வந்தேன் என்ன
ஐயஉனைத் தெரிசித்தேன் பெறவேண்டும் பே(று)எல்லாம் அமையப் பெற்றேன்
மெய்யிதுவென் றான்மன்னன் கும்ப(ன்)அதற்(கு) இவ்வாறு விளம்பல் உற்றான்.

**பொழிப்புரை:** *சிறந்த கலைமகள் எனக்குத் தாயாம். காயத்திரி தான் சிறிய தாயாம். குற்றமற்ற நான்கு வேதங்கள் என்னும் நண்பர்களுடன் விளையாடிக் கொண்டு வந்தேன் என்று கூறவும், ஆசாரியரே! உம்மைத் தரிசித்தேன், பெற வேண்டிய பயன்கள் எல்லாம் பெற்றேன், இது உண்மை என்று மன்னவன் கூறவும், கும்பமுனி அதற்கு இவ்வாறு சொல்லத் தொடங்கினார்.* **(6.9.91)**

எனைஉரைத்தேன் உனக்குமுதல் நீயார்என் செய்கின்றாய் எனக்கு நீயும்
உனைஉரைப்பாய் என்றலுமே மன்ன(ன்)உரைப் பான்பிறவிக்(கு) உள்ளம் அஞ்சி
வினைஅறுகா னகம்புகுந்தேன் சிகித்துவசன் பேர்நாட்டில் வேந்(து)ஆம் தன்மை
தனைஇகழ்ந்(து)இங்(கு) இருக்கின்றேன் பிறவிக்கே விடாம(ல்)உளம் தவியா நின்றேன்.

**பொழிப்புரை:** *என்னைப் பற்றி உனக்கு சொல்லிவிட்டேன். முதலில் நீ யார்? என்ன செய்கின்றாய் என்பதை நீயும் எனக்கு உன்னைக் குறித்துச் சொல்வாய் என்று கும்ப முனி கேட்கவும், மன்னவன் சொல்வான்: பிறவிக்கு மனம் அஞ்சி, செயல்கள் அற்ற கானகம் வந்தேன். சிகித்துவசன் என்பது பெயர். பெரிய தேசத்தில் அரசனாகும் தன்மையை நீக்கி, இங்கு தங்கியிருக்கின்றேன். பிறவிகளுக்கே ஓயாமல் தவிக்கின்றேன்.* **(6.9.92)**

**இப்பரிசே தவத்தொழிற்கு வேண்டினஎல் லாம்தேடி இயற்றா நின்றும்**
**செப்(பு)அரிய துயர்விட்டுப் பெருந்துயர்சேர்ந் தே(ன்)அமுதம் தீநஞ்(சு) ஆன(து)**
**ஒப்(பு)அரியாய் என்றலுமே கும்ப(ன்)உரைப் பான்குரவன் உணர்த்து ஞானம்**
**மெய்ப்படவந் தால்சுகமாம் போதுபோக் கும்கிரியை விநோதம் அன்றோ.**

**பொழிப்புரை:** *இப்படியாக தவம் செய்வதற்குத் தேவையான அனைத்தையும் தேடிச் சேர்த்தும், சொல்வதற்கு அரிய துயரத்தை நீங்கி, பெரிய துயரத்தை அடைந்தேன். இனிய அமுதமானது விஷமானது. ஒப்பிடுதற்கு அரியவரே! என்று மன்னவன் கூறவும், கும்பமுனி சொல்வான்: ஆசாரியர் உணர்த்துகின்ற ஞானம் உண்மையாக வந்தால் ஆனந்தமே ஆம். காலத்தைப் போக்குகின்ற செயல்கள் விளையாட்டு அல்லவா!* **(6.9.93)**

**ஞான(ம்)இல்லா(து) அவர்க்(கு)எல்லாம் கிரியையே கதியாம்நற் கிரியை வேந்தா**
**ஈன(ம்)உறு வாதனைமாத் திரம்பலம்ஆ தலில்பலமும் எய்த நல்கும்**
**மான(ம்)உறு இருதுவரின் முன்பலங்கள் அங்ஙனே மாய்தல் போல**
**ஊன(ம்)உறும் வாதனைமாய்ந் தால்கிரியை உறுபலமும் ஒழிந்து போமே.**

**பொழிப்புரை:** *ஞானம் இல்லாதவர்க்கு எல்லாம் செயல்களே கதி அளிப்பதாம். நல்ல செயலானது, மன்னவனே! இகழத்தக்க வாசனை மாத்திரமே பயன் உடையது. ஆதலால் கர்மமும், பயனை அடையும்படி கொடுக்கும். இரண்டு மாத அளவினை உடைய பருவகாலம் மாறி மற்றொரு பருவகாலம் வந்தால், முந்தைய பருவ காலத்தின் பயன்கள் அழிவது போல, கேடு உடைய வாசனை அழிந்தால் செயல்களில் உண்டாகும் பயனும் ஒழிந்து போய்விடும். (செய்பவன், அனுபவிப்பவன் என்ற வாசனை நீங்கிவிட்டால், சிரத்தையேனும், இராகமேனும் எழுவதில்லை.)* **(6.9.94)**

**பல(ம்)அதனை ஒருகாலும் பலியாத சரவணத்தின் பரிசு போல**
**அலமருவா தனைதீர்ந்த கிரியையும்மேல் பலம்தன்னை அளிக்க மாட்டா**
**உலகமெலாம் பிரம(ம்)எனும் பாவனையால் அஞ்ஞானம் ஒழிந்து போனால்**
**மல(ம்)உறுவா தனைதோன்றா கானல்நீர் உண்(டு)என்று மதிப்பார் உண்டோ.**

**பொழிப்புரை:** *பலனை ஒருகாலும் கொடுக்கமாட்டாத நாணலின் தன்மைபோல, துன்பத்தைத் தரும் வாசனைகள் தீர்ந்த செயல்களும் மேற்கொண்டு பலனைத் தரமாட்டாது. உலகமெல்லாம் பிரம்மம் என்னும் பாவனையால் அஞ்ஞானம் ஒழிந்து போனால் பிறவியைத் தரும் வாசனைகள் தோன்றமாட்டாது. கானல் நீர் உண்டென்று நிச்சயிப்பவர் உண்டோ?* **(6.9.95)**

வாதனைமாத் திரம்விட்டால் சரைமரணம் உறுபிறவி மருவா தான
தீ(து)இல்பதம் உண்டாகும் வாதனையோ டேசேர்ந்த சித்தம் தானே
பேதமைஅஞ் ஞானமாம் வாதனைதீர் மனம்தானே பிறவா ஞானம்
ஏத(ம்)அறு ஞானத்தால் நேய(ம்)உணர்ந் தால்பிறவி எய்தா(து) அன்றே.

**பொழிப்புரை:** *வாசனைகள் மட்டும் விடப்பட்டு விட்டால், முதுமை, மரணம் உடைய பிறவி இல்லாத துயரற்ற பதமானது உண்டாகும். வாசனையோடு கூடிய மனம்*

*தான் வேற்றுமையைத் தரும் அஞ்ஞானமாம். வாசனை தீர்ந்த (நீங்கிய) மனம் தான் பிறவாத ஞானமாம். குற்றமற்ற ஞானத்தால் ஞேயத்தை (பிரம்மத்தை) உணர்ந்தால் பிறவி வரப்பெறாது.* **(6.9.96)**

**ஞானமிக நன்(று)என்றே அயன்முதலா நல்லோர்கள் நவிலா நிற்க**
**நீநயவா(து) இருந்தனைஎன் யான்ஆர்இவ் வுல(கு)எங்ஙன் நேர்ந்த(து) எங்ஙன்**
**தானம்(ம்)உற இறக்கு(ம்)என நினைகிலைஎன் பேதையர்போல் தளர்கின் றாய்என்**
**ஆனகுர வரைஇறைஞ்சிப் பந்தம்வீ(டு) எப்படிஎன்(று) அறிகி லாய்என்.**

**பொழிப்புரை:** *ஞானமே மிக நல்லது என்றே நான்முகன் முதலான பெரியோர்கள் அருளிச் செய்திருக்க, நீ விரும்பாமல் இருக்கின்றாய் என்னே! நான் யார்? இந்த உலகம் எப்படி உண்டாயிற்கு? எவ்விடத்தில் அது ஒடுங்கும் என நினைத்துப் பாராதது என்ன? அறியாதவர் போல் துன்பம் அடைந்து தளர்கின்றாய் என்னே ஆசாரியரை வணங்கிப் பந்தம் எது? மோட்சம் எது? என்று விசாரணை செய்து அறியாதது என்ன?* **(6.9.97)**

**நிறைஅறிவின் சமமான நோக்கினரைச் சேவித்து நிரந்த ரித்துப்**
**பொறையுடனே வினவினால் முத்திபெறும் நுண்ணறிவு பொருந்தும் என்னா**
**மறையவன்போ தித்தலுமே கண்கணீர் சொரிந்(து)இரங்கி மன்னன் சொல்வான்**
**இறையவனே அறப்புதுமை உன்னாலே உணர்வுற்றேன் ஏழை யோனே.**

**பொழிப்புரை:** *நிறைந்த அறிவினால் சமமான பார்வையுடையவர்களைச் சேவித்து, இடைவிடாமல் பொறுமையுடன் கேட்டால் முத்தி அடையும் சூக்கும அறிவானது கிடைக்கப்பெறும் என்று பிராமண குமாரன் கூறவும், கண்களில் கண்ணீர் வழிய, அழுது, மன்னவன் சொல்வான்: ஆசாரியனே! மிகவும் ஆச்சரியம். உம்மாலே எளியவன் தெளிவடைந்தேன்.* **(6.9.98)**

**மடமையால் பெரியவர்தம் சேவையைவிட் டுத்தனியே வனத்தில் வந்தேன்**
**இடர்மேவு பாவமெலாம் இன்(று)ஒழிந்தேன் வனத்தில்நீ எய்தி என்னைக்**
**கடனாக உணர்த்துதலால் குருநீஎன் பிதாநீஎன் காத லோன்நீ**
**திடமான மாணாக்க னாய்த்தொழுகின் றேன்கருணை செய்ய வேண்டும்.**

**பொழிப்புரை:** *அறியாமையால் பெரியவர்களின் சேவையை விட்டு, தனியாக காட்டிற்கு வந்தேன். துயரம் தரும் பாவம் அனைத்தையும் இப்பொழுது ஒழித்து விட்டேன். காட்டில் நீர் வந்து, என்னைக் கடமையாக அறிவித்ததால் ஆசாரியன் நீ, எனது தந்தை நீ, எனது நண்பனும் நீ, திடமான சீடனாகத் தொழுகின்றேன். கருணை புரிய வேண்டும்.* **(6.9.99)**

**உதாரமிக உண்டாகி உணர்வுற்றால் துன்பமெலாம் ஒழிப்ப(து) ஆகிச்**
**சதாசுகமாம் பொருளாக நீஅறிந்த(து) ஏ(து)அதனைச் சாற்று கிற்பாய்**
**பிதாமகன்ஒப் பாய்என்ற மன்னனுக்குக் கும்பன்தான் பேசு கிற்பான்**
**கதாவிஎழு மனம்ஒருப்பட்(டு) உணர்தியேல் உனக்(கு)உண்மை கழறு கிற்பேன்.**

**பொழிப்புரை:** *பெருமை உடையதாகியும், அறிந்தால் துன்பம் அனைத்தும் நீக்குவதாகியும், எப்பொழுதும் ஆனந்தமான பொருளாக நீர் அறிந்தது எது? அதனை*

*எனக்குச் சொல்வீர், எனது தந்தைக்கு நிகரானவரே! என்ற மன்னவனுக்குக் கும்பமுனி கூறுவான்: வேகமாய்த் தாவி எழுகின்ற மனம் ஒருமைப்பட்டு அறிவாய் ஆயின் உனக்கு உண்மையை உரைப்பேன்.* **(6.9.100)**

**சொன்னதுகைக் கொள்ளாது விநோதத்தால் கேட்பவர்க்குச் சொன்ன வார்த்தை**
**பன்னியும்ஓர் பயன்ஆகா(து) இருளிலே விழிக்(கு)உணர்வு பலிப்ப(து) உண்டோ**
**என்னலும்மன் னவன்உரைப்பான் வேதவிதி யேநீஇங்(கு) இசைத்த எல்லாம்**
**நின்னருளால் கைக்கொண்டு சத்தியமே நன்றாக நினையா நிற்பேன்.**

**பொழிப்புரை:** *சொன்னதைக் கிரகிக்காது விளையாட்டாக கேட்பவர்க்கு சொன்ன வாசகங்கள் சொல்லப்பட்டிருந்தாலும் ஒரு பயனையும் அளிக்காது. இருட்டிலே கண்களுக்கு அறியும் பயன் உண்டோ? என்று கும்பமுனி சொல்லவும், மன்னவன் சொல்வான்: நீர் இங்கு உரைத்தவை அனைத்தும் வேத நியதியே. உமது அருளால் உண்மையாகக் கிரகித்துக் கொண்டு நன்றாகச் சிந்திப்பேன்.* **(6.9.101)**

**(வேறு)**

**என்று மன்னன் உரைசெய்ய எழிலார் கும்பன் உரைசெய்வான்**
**ஒன்றும் அறியாப் பாலகனுக்(கு) உரிய தந்தை உரைப்பதுபோல்**
**வென்றி மன்னா நான்உனக்கு விளம்பும் உரையை வினவாது**
**நன்(று)இ(து) என்றே கேள்என்று ஞானம் தோன்ற நவில்வுற்றான்.**

**பொழிப்புரை:** *என்று மன்னவன் கூறவும், அழகுடைய கும்பமுனி சொல்வான்: ஒன்றும் தெரியாத சிறுவனுக்கு உரிமையான தந்தை சொல்வதைப் போல, வெற்றி உடைய மன்னவா! நான் உனக்குச் சொல்லும் வார்த்தைகளைத் தடுத்துக் கேளாமல் நல்லது இது என்றே கேட்பாய் என்று ஞானம் தோன்றக் கூறத் தொடங்கினார்.* **(6.9.102)**

**மன்னா ஈ(து)ஓர் கதைகேட்பாய் மற்(று)இக் கதையின் உட்பொருளைப்**
**பின்னால் உரைக்கேன் முன்னாளில் பெரியோன் ஒருவன் பெரும்செல்வன்**
**பன்னா நின்ற கலைநூல்கள் பலவும் வல்லோன் ஞான(ம்)இலோன்**
**அன்னான் உயர்சிந் தாமணியை அறவே முயன்று தேடுற்றான்.**

**பொழிப்புரை:** *மன்னவனே! இந்த ஒரு கதையைக் கேட்பாய். இந்தக் கதையில் உட்பொருளைப் பின்னால் சொல்கின்றேன். முன்னொரு காலத்தில் பெரியவன் ஒருவன் இருந்தான். பெரும் செல்வத்தை உடையவன். சொல்கின்ற பல கலை நூல்கள் பலவும் படித்து வல்லமை வாய்ந்தவன். ஆத்ம ஞானம் இல்லாதவன். அவன் உயர்ந்த சிந்தாமணியை முழு முயற்சியோடு தேடினான்.* **(6.9.103)**

**மிக்க வருத்தத் தால்தீர மேவ வேண்டும் எனுமுயல்வால்**
**தக்க மணிகிட் டினவருந்திச் சால முயன்றார்க்(கு) ஏன்கிடையா**
**தொக்க சுடர்மா மணிதன்முன் தோன்றி மதியின் விளங்கிடவும்**
**நக்க மணியைக் கைக்கொள்ளான் நானா விதமாய் நாடுற்றான்.**

**பொழிப்புரை:** *மிகுந்த கஷ்டம் உள்ள தேடலால் அடைந்தே தீர வேண்டும் என்னும் முயற்சியினால் உரிய மணி கிடைக்கப்பெற்றது. மிகவும் கஷ்டப்பட்டு முயற்சி செய்வார்க்கு ஏன் கிடைக்காது? அதிக பிரகாசமுள்ள சிந்தாமணி தன் முன்னால் கிடைத்து, சந்திரனைப் போல் விளங்கியும், பிரகாசித்த அந்த சிந்தாமணியை எடுத்துக் கொள்ளாமல், பலவிதமாக சிந்தித்தான்.* **(6.9.104)**

**சிந்தா மணிஅன்(று) இதுவேறோர் சிறுமா மணிசிந் தாமணிதான்**
**நொந்(து)ஆ ராய்ந்து வாழ்நாள்போய் நுடங்கும் போ(து)அல் லால்வருமோ**
**நைந்தா லும்பா வியர்க்(கு)எய்தா நல்லோர் சிலர்க்கு நண்ணலுறும்**
**தந்தாம் வினையை நினையாமல் தளர்ந்தால் கடிதின் எய்திடுமோ.**

**பொழிப்புரை:** *இது சிந்தாமணி அல்ல. வேறான ஒரு சிறிய மணி. சிந்தாமணியானது வருத்தப்பட்டு நீண்டநாட்கள் தேடி, வாழும் காலமெல்லாம் போய், மெலிகின்ற காலத்தில் அல்லாமல் கிடைக்குமோ? துன்பப்பட்டாலும் பாவிகளுக்குக் கிடைக்காது. நல்லவர் சிலபேர்களுக்கு கிடைக்கும். அவரவர் வினையை நினைக்காமல் சோர்வடைந்தால் விரைவில் கிடைத்திடுமோ?* **(6.9.105)**

**மனிதன் நான்என் தவம்அற்பம் வல்ல பங்கள் சிறிதில்லை**
**துனிசெய் நிர்ப்பாக் கியன்எனக்குத் தோன்றா மணிமுன் தோன்றிடுமோ**
**நனிஇன் னமும்தே டுதும்என்று நன்மா மணியை எடுத்திலனால்**
**புனித மணியும் போயினதால் பொல்லா தவர்க்கு நலன்உறுமோ.**

**பொழிப்புரை:** *நான் மனிதன், என் தவம் அற்பமானது, வல்லமை கொஞ்சமும் இல்லை, துன்பம் உடைய பாக்கியம் இல்லாதவன், எளிதில் தோன்றாத சிந்தாமணி எனக்கு முன்னால் தோன்றிடுமோ? நன்றாக இன்னமும் தேடுவோம் என்று நல்ல மாமணியை எடுக்காமல் விட்டு விட்டான். புனிதமான அந்த மணியும் வந்தபடியே சென்று விட்டது. பொல்லாதவர்க்கு நன்மை உண்டாகுமோ?* **(6.9.106)**

**மீண்டும் வருந்தித் தேடுற்றான் வெம்பிச் சிலநாள் உழன்றனவே**
**ஆண்டு மறைந்து சிலசித்தர் அவனை நகுவான் காட்டுவிக்க**
**கீண்ட வளையின் முறிஒன்று கிடப்பக் கண்டான் அறிவில்லான்**
**மாண்ட சிந்தா மணிஇ(து)என மகிழ்ந்து வியந்து கைக்கொண்டான்.**

**பொழிப்புரை:** *மீண்டும் கஷ்டப்பட்டு தேடிக்கொண்டிருந்தான். மனம் வெம்பி சிலநாள் சுற்றினான். அங்கே மறைவாக இருந்த சில சித்திகளை உடையவர்கள் அவனைக் கேலி செய்யும் பொருட்டு, உடைந்த வளையலின் சிறு துண்டினை (பளிங்கு மணி என்றும் சொல்வர்) எதிரே காண்பிக்க, அவன் ஒரு மணி இருப்பதாகக் கண்டான் அறிவில்லாதவன். பெருமையான சிந்தாமணி இது என்று மகிழ்ந்து ஆச்சரியப்பட்டு எடுத்துக் கொண்டான்.* **(6.9.107)**

**வெந்த மணியை மிகப்பேணி மிக்க நிதிஎல் லாம்விட்டான்**
**வந்த மணிஎல் லாம்அளிக்கும் மற்ற நிதிகள் என்னென்றே**
**சிந்தை செய்தான் இத்தேசம் தீயோர் உண்டு சுகம்இல்லை**
**இந்த இடம்தீ(து) எனவனத்தில் இருந்து சுகிப்போம் என்(று)அகன்றான்.**

**பொழிப்புரை:** *நெருப்பு பட்ட அந்த சிறு துண்டினை மிகவும் காப்பாற்றி, செல்வங்களை எல்லாம் இழந்தான், கிடைத்த சிந்தாமணி எல்லாவற்றையும் தரவல்லது, மற்ற செல்வங்கள் இருந்து என்ன பயன் என்பதாகச் சிந்தித்தான். இந்த நாட்டில் தீவர்கள் உள்ளனர். சுகமும் இல்லை. இந்த இடம் தீயது, அதனால் காட்டில் இருந்து சுகம் அடைவோம் என்று அங்கிருந்து சென்றான்.* **(6.9.108)**

**வாழ லாம்என்(று) எண்ணிப்புன் மணியால் வருத்தம் எலாம்உற்றுத்**
**தாழ நின்றான் வேறொன்றும் சாற்றக் கேளாய் புந்திக்குச்**
**சூழ அறி(வு)உண் டாக்குவிக்கும் தொல்லை விந்த வனத்திடையே**
**வேழம் ஒன்று கரிகட்கு மேலாம் மிகவும் உயர்ந்ததுவே.**

**பொழிப்புரை:** *வாழலாம் என்று எண்ணி, சிறுமையான மணியாலே துன்பம் அனைத்தையும் அடைந்து, தாழ்வை அடைந்தான். மற்றொரு கதையைச் சொல்லக் கேட்பாய். புத்திக்குப் பூரணமான அறிவைத் தரும். பழமையான விந்திய மலை காட்டில் யானைகளுக்கு எல்லாம் மேலாக மிகவும் பெரியதான யானை ஒன்று இருந்தது.* **(6.9.109)**

**வயிரத் தினும்நீண்(டு) அறக்கூராய் வலிதா கியகோ(டு) இரண்(டு)உளது**
**பயில்வு(ற்று) இருப்புக் கயிற்றாலே பாகன் பிணித்து விலங்கிட்டான்**
**செயிர்பற் றியபல் பிணிப்பாலே சிந்தை தளர்ந்து கொம்(பு)இரண்டால்**
**குயில்வித் துளவன் கட்டெல்லாம் குலைத்த(து) ஒருநாற் கடிகையிலே.**

**பொழிப்புரை:** *வச்சிரத்தைக் காட்டிலும் நீண்டு முழு கூர்மையுடையதாய், வலிமையான இரண்டு தந்தங்கள் உள்ளன. அதனுடன் பழகி, இரும்புச் சங்கிலியாலே பாகன் கட்டி, விலங்கிட்டு வைத்தான். வருத்தம் தரும் பல கட்டுகளினாலே மனம் நொந்து இரண்டு தந்தங்களினாலும் நெருக்கி வைத்த வலிமையான கட்டுகள் அனைத்தையும் நான்கு நாழிகையில் அறுத்தது.* **(6.9.110)**

**விலங்கு முறிந்த படிகண்டான் வேழத் தலைவீழ்ந்(து) உயர்பாகன்**
**கலங்கி வீழ்ந்தான் அவன்விழக் கண்ட களிறு கருணையினால்**
**மலங்க வதம்செய் யா(து)அகல மற்(று)அப் பாகன் மீண்(டு)எழுந்து**
**சலம்கொண்(டு) ஏகி அக்களிற்றைத் தானே தேடி எதிர்உற்றான்.**

**பொழிப்புரை:** *சங்கிலி அறுந்ததைக் கண்டான் பாகன். ஒரு மரத்தில் ஏறி, யானையின் தலை மீது குதிக்கையில் தவறிக் கலங்கி கீழே விழுந்தான். பாகன் வீழ்ந்ததைக் கண்ட யானையானது கருணையால் அவனைக் கலங்கும்படி கொல்லாமல் விடுத்து, அங்கிருந்து சென்றுவிட, பின் அந்தப் பாகன் எழுந்து கோபத்தோடு சென்று அந்த யானையை முன்னாலே தேடிச் சென்றான்.* **(6.9.111)**

**ஒருகான் இடையே அக்கரியை உற்றான் குழிஒன்(று) உண்டாக்கிச்**
**சருகால் கொடியால் மறைவித்தான் தந்தி சிலநாள் திரிந்(து)அங்கே**
**வருகா லையில்வீழ்ந் ததுகுழியில் வந்த பாகன் உறப்பிணித்தான்**
**கருதா நின்ற துயரோடும் களிறு நின்ற(து) இப்போதும்.**

**பொழிப்புரை:** *ஒரு காட்டின் நடுவில் அந்த யானையைக் கண்டான். குழி ஒன்றினை உண்டாக்கி, காய்ந்த சருகாலும், கொடியாலும் மறைத்தான். அந்த யானை சில நாட்கள் அங்குமிங்கும் திரிந்து, அங்கே வந்த போது குழியில் வீழ்ந்தது. மறைந்திருந்த பாகன் வந்து யானையை வலிமையாகக் கட்டினான். யானை துயரத்தை நினைந்து இப்போதும் இருந்தது.* **(6.9.112)**

**தனது வீட்டில் சிறையிருக்கும் தனிமா வலிபோல் நின்றகரி**
**முனமுன் வீழ்ந்த பகைப்பாகன் மூளை சிதறிற்(று) எனில்வந்து**
**வனவெம் குழியில் கட்டுண்டு மயங்க வேண்டாம் அதுபோல**
**வினவி நிகழ்கா லத்தால்மேல் வினைநோக் காதார் மெலிகுவரே.**

**பொழிப்புரை:** *தனது அரண்மனையில் சிறைபட்ட ஒப்பற்ற மகாபலிச் சக்கரவர்த்தி போல இருந்த யானையானது, முன்னாளில் தன் முன் வீழ்ந்த பகைவனாம் பாகனின் மூளை சிதறும்படி செய்திருந்தால், காட்டுக்கு வந்து கொடிய குழயில் விழுந்து, சங்கிலியால் கட்டுப்பட்டு கலங்க வேண்டியதிருக்காது. அது போல, விசாரித்து ஆராயாமல் (அஞ்ஞானத்தினால்) நிகழ்காலச் செயல் முறைகளால் வருங்கால விஷயத்தை சோதிக்காதவர் துன்பத்தை அடைவர். (எதுவரை எல்லா துக்கங்களுக்கும் காரணமான அறியாமையானது அழியவில்லையோ, அது வரை ஆயிரக்கணக்கான முறைகளில் சாந்தம் அடைய முயற்சி செய்தாலும் வீணாகப் போகும் என்பது கருத்து.)* **(6.9.113)**

**என்ற லோடும் சிகித்துவசன் எந்தாய் சிந்தா மணியாலும்**
**வென்றி வேழம் தன்னாலும் விளம்பு கதையை விளக்கு(க்)என**
**நின்ற கும்பன் உரைசெய்வான் நெடுநூல் பொருள்கள் பலஉணர்ந்தோன்**
**நன்றி ஞானம் இல்லாதோன் நன்மா மணிதே டியஅவன்தான்.**

**பொழிப்புரை:** *என்று கூறியதும், சிகித்துவன் எனது தந்தையே சிந்தாமணியாலும், வெற்றியை உடைய யானை தன்னாலும் கூறிய கதையை விளக்க வேண்டும் என்று கேட்கவும், நிலையான கும்பமுனி கூறுவான்: மிகுந்த பல சாத்திர அர்த்தங்கள் உணர்ந்தவனாய், நன்மையான தத்துவ ஞானம் இல்லாதவன் நல்ல சிந்தாமணியைத் தேடியவன் அவன் தான்.* **(6.9.114)**

**என்ன உரைத்த(து) உனையாம்நீ எல்லா நூலும் கற்(று)உணர்ந்து**
**மன்னு சாந்தி பெற்றிலைவான் மணிஎன் றதுதான் ஏ(து)என்னில்**
**உன்னு வஞ்சம் அறஎல்லாம் ஒழிதல் ஆகும் துயர்அனைத்தும்**
**துன்னல் இல்லா அதுதேடத் தொடங்கி அரசு துறந்தனையால்.**

**பொழிப்புரை:** *என்று கூறியது உன்னையே. நீ எல்லா சாத்திரங்களும் கற்று உணர்ந்து நிலையான சாந்தம் பெறவில்லை. உயர்ந்த மணி என்று கூறியது எதுவென்றால், கருதும் வஞ்சம் அற்றுப் போக அனைத்தையும் விடுதலாகும். துயர் எல்லாம் நெருங்காத அதனைத் தேடத் துவங்கி, அரசினைத் துறந்தாய்.* **(6.9.115)**

**மனையும் கிளையும் துறந்(து)இங்ஙன் வனத்தில் வந்தாய் நாட்(டு)அகன்றாய்**
**அனைய சகலத் தியாகநிறை(வு) ஆகும் அளவில் அதன்விகற்ப**
**நினைவில் வளர்ந்து விண்மூடு நீல முகில்போல் உனைமறைக்க**
**இனைய சகலத் தியாக(ம்)உயர் இன்பம் அல்ல மகத்தல்ல.**

**பொழிப்புரை:** *மனைவியையும், உறவுகளையும் துறந்து இந்தக் காட்டில் வந்தாய். உனது தேசத்தை விட்டு நீங்கினாய். அப்படிப்பட்ட சகலத் தியாகமானது நிறைவடையும் சமயத்தில் அந்தத் தியாக விகற்ப அபிமானமாவது (நான் இவ்வளவு தியாகம் செய்திருக்கின்றேன் என்ற நினைவானது) மனதில் வளர்ந்து ஆகாயத்தை மறைக்கும் கார்மேகம் போல உன்னை மறைத்திட, இப்படிப்பட்ட சகலத் தியாகமானது உயர்ந்த சுகம் அல்ல, பெரிதானதும் அல்ல.* **(6.9.116)**

**பிறி(து)ஒன்(று) உயர்ந்த(து) உள(து)அதுதான் பெருநாள் முயன்றால் எய்து(ம்)என**
**வெறிய விகற்பம் மனம்நிறைய மிக்க தியாகம் போயினதாம்**
**நெறிகொள் சகலத் தியாகம்போய் நினது தவமாம் வளையின்முறி**
**அறி(வு)இல் விகற்ப விழியால்கண் டதுநன்(று) என்றே அழுங்குதியால்.**

**பொழிப்புரை:** *வேறொன்று மேலானது உளது என்று நினைத்து, அது அந்த சகலத் தியாகம் நீண்ட கால முயற்சியால் கிடைக்கும் என்று பயன் இன்றிய விகற்பமானது (எண்ணமானது) மனதில் நிரம்பி வழிய, உயர்ந்த எல்லாவற்றினது தியாகமானது நீங்கிப் போய்விட்டது. நல்ல மார்க்கமுள்ள எல்லாவற்றின் தியாகம் என்கின்ற ரத்தினம் போக உனது தவமாகிய வளையல் ஓட்டினை அறிவில்லாத விகற்பமாகிய (எண்ணமாகிய) கோணத்திலே நோக்கி, அது நன்மையே என்று துயரப்படுகிறாய்.* **(6.9.117)**

**அளவற்(று) எளிதாம் சுகம்அகற்றி அரிதாய் அற்ப மாம்பொருளில்**
**உள(ம்)உற் றவரே உயிர்கொலைஞர் உயர்வஞ் சகர்என்(று) உல(கு)உரைக்கும்**
**வளமிக்(கு) உயர்சிந் தாமணிநீ வந்த(து) என்(று)எண் ணியதவத்தால்**
**தளர்(வு)அற் றிலைபெற் றிலைஒன்றும் தந்தி என்ற(து) இனிக்கேளாய்.**

**பொழிப்புரை:** *அளவில்லாது எளிதாகக் கிடைத்த சுகத்தை நீக்கி, அரியதான அற்பமான வத்துவில் மனம் பற்றியவரே உயிரைக் கொன்றவர், அதி வஞ்சகர் என்று மேலோர் கூறுவர். வளமான உயர்ந்த சிந்தாமணியானது கிடைத்தது என்று நீ கருதிய தவத்தால் தளர்வு நீங்கினாய் இல்லை. ஒரு பிரயோசனத்தையும் அடையவில்லை. இனி யானை என்று சொன்னதைக் கேட்பாய்.* **(6.9.118)**

**மதமா என்ற(து) உனையாகும் வயிராக் கியமும் விவேகமுமே**
**அதன்நீள் கொம்பாம் உன்குணங்கள் ஆனை மேற்கொண்(டு) உழல்பாகன்**
**விதமா உன்னை மெலிவிக்கும் மிகும்அஞ் ஞானம் அதனாலே**
**சிதறா நின்றாய் அரந்தைகளால் செலுத்தும் அவனால் கரிபோல.**

**பொழிப்புரை:** *மதயானை என்றது உன்னையே ஆகும். வைராக்கியமும், விவேகமும் அதன் நீண்ட இரு தந்தங்கள் ஆகும். உனது அறியாமையுடைய குணங்களே யானை மேல் ஏறி நடத்துகின்ற பாகன் ஆகும். பலவிதமாக உன்னை மெலிவு செய்கின்றது மிகுந்த*

*அஞ்ஞானம் ஆகும். அந்த அஞ்ஞானத்தால் உண்டான துன்பங்களால் நடத்துகின்ற அந்த பாகனால் யானை (துயரம் அடைந்ததைப்) போலச் சிதறுகின்றாய்.* **(6.9.119)**

**இருப்புக் கயிறும் விலங்குகளும் இச்சா பாசம் என்பனவாம்**
**பெருக்க இவற்றால் கட்டுண்டாய் பேசும் இரும்பின் மிகுவன்பாம்**
**இருப்புக் கயிறும் விலங்குகளும் மிகுநாள் செல்லில் தேய்ந்(து)ஒழியும்**
**செருக்கும் ஆசை மேன்மேலே திடமாய் வளரும் தீர்க்கமுற.**

**பொழிப்புரை:** *இரும்புச் சங்கிலியும், விலங்குகளும் ஆசாபாசம் என்பனவாம். மிகவும் இவைகளால் பந்தப்பட்டாய். சொல்லப்பட்ட இரும்பைக் காட்டிலும் இச்சை அதிக வலிமை உள்ளதாம். இரும்புச் சங்கிலியும், விலங்குகளும் நீண்ட காலமானால் தேய்ந்து கெடும். கர்வத்தால் வரும் ஆசையானது மேன்மேலும் திடமாய் நெடிதாக வளரும்.* **(6.9.120)**

**மூரிக் கயிறும் விலங்குகளும் முறித்த(து) ஆனை என்றதுதான்**
**பாரிச் சுகம்எல் லாம்நீமுன் பற்(று)அற்(று) ஒழித்த படியாகும்**
**சூரில் பாகன் வீழ்ந்ததுநின் துறவின் மடமை வீழ்ந்ததுவாம்**
**பேர்(ர்)இச் சையைநீக் கிடில்பின்னைப் பிறவி தரும்பே தைமைஉண்டோ.**

**பொழிப்புரை:** *பலமான சங்கிலி, விலங்குகளை யானை அறுத்தது என்று சொன்னது, ராச்சிய சுகபோகங்களை நீ முன்பு பற்றற்று ஒழித்ததே ஆகும். சூரத்தன்மை இல்லாத பாகன் வீழ்ந்தது என்று கூறியது உனது எல்லாவற்றின் தியாகத்தால் அறியாமை அழிந்ததே ஆகும். மிகுந்த ஆசையை ஒழித்துவிடின் பின்னர் பிறவியைக் கொடுக்கின்ற அஞ்ஞானம் உளதாமோ?* **(6.9.121)**

**போக மயலை விரத்தியினால் போக்க நினையில் அஞ்ஞானம்**
**ஏக நினைந்து வெட்டுமரத்(து) இருக்கும் பேய்போல் நின்(று)அலையும்**
**மோகம் அறவே போகங்கள் முற்றும் விவேகத் தால்விட்டால்**
**வேகம் உறப்போம் அஞ்ஞானம் வெட்டி வீழ்ந்த மரப்பேய்போல்.**

**பொழிப்புரை:** *போகத்தின் மயக்கத்தை வைராக்கியத்தினால் (துறவினால்) கெடுக்க நினைத்தால் அஞ்ஞானம் ஓடிவிட நினைத்து வெட்டுகின்ற மரத்திலிருக்கும் பேய் போல் இருந்து அலையும். மயக்கம் கெடும்படியாக போகங்கள் அனைத்தையும் விவேகத்தினால் நீக்கினால், வெட்டி வீழ்த்திய மரத்திலிருக்கும் பேய் போல், அஞ் ஞானமானது வேகமாகப் போய் விடும்.* **(6.9.122)**

**மட்டில் போகம் எலாம்ஒழித்தால் மடமைத் தொடர்ச்சி எல்லாம்போம்**
**வெட்டி வீழ்ந்த மரநின்று வீழ்ந்து போம்புள் கூடுகள்போல்**
**கிட்டி வனம்நீ அடைந்தளவே கிளர்அஞ் ஞானம் வீழ்ந்துளதால்**
**தட்(டு)இல் சகலத் தியாக(ம்)எனும் தனிவா ளால்கொன் றிலைஅதனை.**

**பொழிப்புரை:** *அளவில்லாத போகங்கள் எல்லாவற்றையும் ஒழித்தால் அஞ் ஞானத்தின் தொடர்ச்சி எல்லாம் வெட்டி வீழ்ந்த மரத்திலிருந்தும் பறவைக் கூடுகள்*

*போல் அறுந்து போகும். காட்டினை நீ நெருங்கி அடைந்த போதே கிளர்ச்சி அடையும் அஞ்ஞானம் வீழ்ந்துவிட்டது. தடையற்ற எல்லாவற்றின் தியாகம் என்கின்ற ஒப்பற்ற வாளால் அதனைக் கொல்லாமல் விட்டுவிட்டாய்.* **(6.9.123)**

**அதனால் மீள முளைத்(து)எழுந்த அஞ்ஞா னத்தால் அறநொந்தாய்**
**மதமா வுக்குப் படுகுழியை வகுத்தான் பாகன் என்றதுதான்**
**திதமா உனக்குத் தவத்துன்பம் செறிஅஞ் ஞானம் சேர்த்தியதாம்**
**சுதமார் குழிமேல் மென்கொடிகள் துயர்கூர் தவஞ்சேர் நல்தொழில்கள்.**

**பொழிப்புரை:** *அதனைக் கொல்லாமையால் மறுபடியும் முளைத்து எழுந்த அஞ்ஞானத்தால் மிகவும் வருந்தினாய். மதயானைக்குப் படுகுழியைப் பாகன் உண்டாக்கினான் என்று சொன்னது திடமாக உனக்குத் தவம் செய்வதன் துயரத்தை மிகுந்த அஞ்ஞானமானது கொடுத்தது ஆகும். கேடு உடைய குழியின் மீது மெல்லிய கொடிகள் என்பது துயரம் மிகுந்த தவத்தைச் சார்ந்த நல்ல செயல்கள் என்பதாம்.* **(6.9.124)**

**இவ்வா(று) இன்றும் இடர்தவமாம் இந்தக் குழியில் உழக்கின்றாய்**
**வெவ்வாள் வலிமா வலிசிறையாய் மிகுபா தலத்தில் இருப்பதுபோல்**
**தவ்வா மொழிமென் சூடாலை சாற்றும் ஞானம் இழந்தனைஏன்**
**நைவாய் சகல தியாகத்தை நழுவி னாயே நவில்(க)என்ன.**

**பொழிப்புரை:** *இவ்விதமாக இன்றைக்கும் துயர்மயமான தவமாகிய படுகுழியில் கொடிய வாள் ஏந்திய வலிமையான மகாபலிச் சக்கரவர்த்தி அதி பாதாளத்தில் சிறைபட்டிருப்பது போல் அவதிப்படுகிறாய். தவறாத வசனத்தை உடைய இனிய சூடாலை உபதேசித்த ஞானத்தை இழந்தாய். ஏன் வருந்துகிறாய்? சகல தியாகத்தையும் முழுமையாகச் செய்யாமல் நழுவியது ஏன்? சொல்வாய் என்று கேட்கவும்.* **(6.9.125)**

**வேந்தன் உரைப்பான் பார்விட்டேன் வீடு விட்டேன் நிதிவிட்டேன்**
**காந்தை தனைவிட் டேன்சகல தியாகம் கைவிட் டதுமற்(று)என்**
**தேர்ந்து புகல்என் றலும்கும்பன் செப்பு வான்நீ தேசமுதல்**
**சார்ந்த எல்லாம் விட்டாலும் சகலத் தியாகம் அன்றாகும்.**

**பொழிப்புரை:** *மன்னவன் கூறுவான்: நாட்டினை விட்டேன், அரண்மனையை விட்டேன், செல்வங்களை விட்டேன், மனைவியையும் விட்டேன், சகல தியாகம் என்பது இப்பொழுது விட்டுவிட்டதைக் காட்டிலும் வேறு எது? ஆராய்ந்து சொல்ல வேண்டும் என்று அரசன் கேட்கவும், கும்பமுனி சொல்வான்: நீ சார்ந்த நாடு முதலாக அனைத்தையும் விட்டாலும் சகலத் தியாகம் அது அல்ல.* **(6.9.126)**

**எல்லாத் திலும்பற்(று) உண்(டு)உனக்(கு)அவ் இச்சை எல்லாம் அறவிட்டு**
**நல்லார்க்(கு) உரிய நல்இன்பம் நண்ணு(க) என்ன மன்உரைப்பான்**
**மல்லார் புவிவிட் டதுசகலம் அன்றேல் வனமே எனக்(கு)உளது**
**கல்லால் தருவால் நிறைகாட்டில் காதல் உறுவா தனைவிட்டேன்.**

**பொழிப்புரை:** *எல்லாவற்றிலும் உனக்கு ஆசையானது உளது, அந்த ஆசை அனைத்தையும் முழுவதுமாக விடுத்து, சாதுக்களுக்கு உரிய பேரானந்தத்தை அடைவாய் என்று சொல்லவும், மன்னவன் சொல்வான்: வளமை நிறைந்த நாட்டினை விட்டது சகலத் தியாகம் அல்ல என்றால் கானகமே எனக்கு உளது. மலைகளாலும், மரங்களாலும் நிறைகின்ற கானகத்தில் விரும்பப்பட்ட வாசனையை நீக்கி விட்டேன்.* **(6.9.127)**

**இனிநான் சகல தியாகத்தை எய்தி னேன்என் றலும்கும்பன்**
**கனியார் மரமும் நெடுமலையும் கழன்றால் சகலம் அன்(று)உனக்குத்**
**துனியார் பற்(று)உண்(டு) அனைத்தினு(ம்)அத் துன்பம் துறந்தால் சுகம்என்னப்**
**புனிதா இதுவும் அன்றாகில் புகல்வேன் எனப்பூ பதிபுகலும்.**

**பொழிப்புரை:** *இப்பொழுது நான் சகல தியாகம் என்பதை அடைந்துவிட்டேன் என்று சொல்லவும், கும்பமுனி கனிகள் நிறைந்த மரங்களும், பெரிய மலைகளும் நீங்கினால் சகல தியாகம் அல்ல. உனக்குத் துன்பம் தரும் ஆசை உளது. அனைத்தினும் அந்த துன்பத்தை நீக்கினால் பரம சுகம் அடையலாம் என்று கூறவும், பரிசுத்த முனியே! இதுவும் சகல தியாகம் அல்ல என்றால் சொல்வேன் என்று மன்னவன் கூறுவான்.* **(6.9.128)**

**கந்தை தண்டு செபமாலை கலைத்தோல் பாண்டம் கமண்டல(ம்)உண்(டு)**
**எந்தை இவற்றை விடுகின்றேன் என்று கூட்டி எரிகொளுத்திச்**
**சிந்தை களித்து வெற்(று)உடலாய்ச் சிக்(கு)அற் றனன்பற் றிலன்என்றே**
**முந்தை அறிஞன் முகநோக்கி மொழியல் உற்றான் சிகித்துவசன்.**

**பொழிப்புரை:** *கந்தை துணி உண்டு, செபமாலை, மான்தோல், பாத்திரம், கமண்டலம் உண்டு. எனது தந்தையே! இவைகளையும் விட்டுவிடுகின்றேன் என்று ஒன்றாகச் சேர்த்து நெருப்பில் கொளுத்தி, மனம் மகிழ்ந்து, வெற்று உடலாய், தடை அற்றனன், பற்று இல்லாதவன் என்றே முன்னவனாகிய அறிஞனாம் கும்பமுனியின் திருமுகம் நோக்கி, சிகித்துவசன் கூறத் தொடங்கினான்.* **(6.9.129)**

**அம்ம அம்ம கடவுள்மகன் ஆன உன்னால் அறிவுற்றேன்**
**மம்மர் ஒழிந்தேன் கேவலமாய் மலங்கள் அற்றேன் இதுவென்று**
**விம்மு சங்கற் பத்(து)எய்தா வேறொன்(று) அறயா வையும்விட்டேன்**
**செம்மு பொருளின் திரள்எல்லாம் செனனம் அளிக்கும் பந்தனையே.**

**பொழிப்புரை:** *ஆச்சரியம்! ஆச்சரியம்! தேவ குமாரனாகிய உம்மால் தெரிந்து கொண்டேன். துயரம் அழிந்தேன். தனிமையாய் களங்கம் அற்று விட்டேன். இப்படிப்பட்டது என்று எண்ணத்தினால் நினைப்பதற்கு மற்றொன்றும் இல்லாமல் சகலத்தையும் விட்டேன். சிறப்பான பொருள்களின் கூட்டம் எல்லாம் பிறவியை அளிக்கும் பந்தமே ஆகும்.* **(6.9.130)**

பொருள்கள் எம்மட்(டு) எம்மட்டுப் போன(து) அம்மட்(டு) அம்மட்டும்
தெருளு மனம்தான் சுகம்அடையும் செயித்தே அந்தச் சுகம்பெற்றேன்
மருள்செய் பந்தங் களும்அற்றேன் மா(சு)இ லாத திகம்பரனாய்
அருள்செய் சகலத் தியாகத்தை அடைந்தேன் வே(று)என் உளஎன்றான்.

**பொழிப்புரை:** *பொருள்கள் எவ்வளவுக்கு எவ்வளவு விட்டுப் போனதோ, அவ்வளவுக்கு அவ்வளவு உணர்வுற்ற மனம் ஆனந்தம் அடையும். வெற்றிகொண்டே அந்த ஆனந்தத்தை அடைந்தேன். மயக்குகின்ற பந்தங்களையும் துறந்தேன். குற்றமில்லாத நிர்வாணமாய் தேவரீர் அருள்கின்ற எல்லாவற்றின் தியாகத்தையும் (விட்டு விடுதலையும்) பெற்றேன். வேறு என்ன உளது என்றான்.* **(6.9.131)**

**கும்பன் உரைப்பான் சகலமும்விட் டிலைநீ இந்தக் கூத்தாடல்**
**வம்பு காண்என் றலும்மன்னன் மனத்தில் நினைத்து மீண்(டு)உரைப்பான்**
**வெம்பு கரணப் பாம்புகள்சேர் வெள்என்(பு) ஊனாம் உடல்ஒன்றே**
**இம்பர் மீந்த(து) எனக்(கு)இதனை இன்றே எளிதின் விடுகின்றேன்.**

**பொழிப்புரை:** *கும்ப முனி சொல்வான்: எல்லாவற்றையும் நீ விடவில்லை. இப்படிக் கூத்தாடுவது பயன் இல்லாததே காண்பாய் என்று கூறவும், மன்னவன் தனது மனதில் சிந்தித்து மறுபடியும் சொல்வான்: கொடிய கரணங்கள் என்னும் பாம்புகள் வாழும் வெள்ளை எலும்புகளும், மாமிச சதையும் சேர்ந்த உடல் ஒன்று மட்டுமே இங்கே எனக்கு மிஞ்சி உள்ளது. இந்த உடலையும் இப்பொழுதே சுலபமாக விட்டு விடுகின்றேன்.* **(6.9.132)**

**காண்டி என்(று)ஓர் வரைஏறிக் கவிழும் அளவில் உயர்கும்பன்**
**ஈண்(டு)இ(து) என்னே இவ்வுடல்தான் என்ன குறைசெய் ததுபேதாய்**
**மாண்டு பயன்என் இளம்கன்றை வல்லேறு அடர்ந்து முனிவதுபோல்**
**தாண்டி விழுந்து மெய்விடினும் சகலத் தியாகி ஆகாயே.**

**பொழிப்புரை:** *காண்பீர் என்று ஒரு மலையில் ஏறி விழப்போகும் போது, உயர்ந்த கும்பமுனி "இங்கு இதென்ன விபரீதம். இந்த உடல் தான் என்ன குற்றம் செய்தது? அறியாதவனே! மாண்டு போவதால் என்ன பயன்? இளம் கன்றுக் குட்டியை வலிமை வாய்ந்த எருது சினம்கொண்டு துன்புறுத்துவது போல், குதித்து விழுந்து உடலை விட்டாலும், எல்லாவற்றையும் தியாகம் செய்தவனாக ஆக மாட்டாய்.* **(6.9.133)**

**எத்தால் உடலம் அசைகின்ற(து) எதுதான் பிறவி கருமத்தின்**
**வித்தாய் நின்ற(து) அதுவிட்டால் வேந்தா எல்லாம் விட்டனவாம்**
**நித்தா ர(ம்)இ(து)என் றலும்உடலை அசைத்துப் பிறவி நிறைவித்தாய்த்**
**தத்தா நின்ற(து) ஏ(து)அதனைத் தவிரும் ஆறு சொல்லென்ன.**

**பொழிப்புரை:** *எதனால் உடல் இயங்குகின்றது?எது தான் பிறவியைத் தரும் கருமங்களின் வித்தாக இருப்பது? அதனை விட்டு விட்டால் மன்னவா! எல்லாவற்றையும் விட்டு விட்டதாக ஆகும். முடிவு இதுவே என்று கூறவும், உடலை இயக்கி, பல பிறவிகளுக்கு வித்தாகி, தாவா நின்றது எதுவோ? அதனை நீக்கும் வழியைச் சொல்லவேண்டும் என்றான் மன்னவன்.* **(6.9.134)**

**இயலார் கும்பன் உரைசெய்வான் எல்லா சகமும் இதுவாகி**
**வியனார் சீவன் பிராண(ன்)என மேவும் பெயர்கள் பலபெற்றுப்**
**பயனார் சடமும் அசடமும்அன்(று) ஆகிப் பரந்த சித்தத்தை**
**உயர்வோர் சகலம் என்(று)உரைப்பர் உலகும் இதுபந் தமும்இதுவே.**

**பொழிப்புரை:** *இயல்பாகத் திகழும் கும்பமுனி கூறுவான்: எல்லா உலகங்களும் இதுவாகி, அற்புதமாகிய சீவன் எனவும், பிராணன் எனவும் பொருந்திய பல பெயர்களை அடைந்து, பயனுடைய சடமும், அசடமும் (சடமில்லாமை) அல்லாததாய் ஆகி, விரிந்த மனதைப் பெரியோர் சகலம் (அனைத்தும்) என்று சொல்வர். உலகம் இதுவே, பந்தமும் இதுவே.* **(6.9.135)**

**சனன கருமங் களின்வித்தாய்த் தருவை அசைக்கும் காற்றேபோல்**
**தினமும் உடலை அசைப்பதுவும் சித்தம் இதனைத் தீர்வதுவே**
**அனக சகலத் தியாகம்)அதாம் அதுவே பரம ஆனந்தம்**
**வினவு பிறஎல் லாம்மிகவும் வெருவு கின்ற வெம்துயரே.**

**பொழிப்புரை:** *பிறவியைத் தரும் கருமங்களின் வித்தாய், மரத்தை அசைக்கின்ற காற்று போல, தினமும் உடலை இயக்குவதும் மனமே. இதனை விட்டு விடுவதே, களங்கம் அற்றவனே! எல்லாவற்றையும் தியாகம் செய்வதாக ஆகும். அதுவே பரமானந்தம். சொல்லப்படும் மற்றவை அனைத்தும் மிகவும் பயப்பட வைக்கும் கொடிய துன்பங்களே.* **(6.9.136)**

**சகல தியாகம் தனைச்செய்து சாந்த னாய்மச் சரம்இன்றிப்**
**பகுதி நிலையில் தெளிவுற்றால் பயின்ற வடி(வு)ஏது) அதுநீயாய்**
**நிகழு வாய்என் றலும்மன்னன் உரைப்பான் நீசொல் நெஞ்சுக்குப்**
**பகரு முதலாம் வடி(வு)ஏது)எப் படிநான் தீர்ப்பது) உரைஎன்ன.**

**பொழிப்புரை:** *எல்லாவற்றையும் தியாகம் செய்து, சாந்தனாகித் துவேஷம் இன்றி, இயல்பான நிலையாகத் தெளிவடைந்தால், அந்த தெளிந்த வடிவம் எதுவோ அதுவே நீயாகி விளங்குவாய் என்றதும், மன்னவன் சொல்வான்: நீர் சொல்லிய மனதுக்கு முதல் வடிவம் எது? சொல்வீர். எந்த வகையில் நான் அதனை விட்டுவிடுவது என்பதையும் கூறுவீர்.* **(6.9.137)**

**மற்றும் கும்பன் உரைசெய்வான் மனத்துக்(கு) உருவம் வாதனையே**
**உற்ற மனம்என்(று) உரைக்கு(ம்)உரை உறுவா தனையின் பரியாயம்**
**குற்றம் எல்லாம் குவிந்(து)இருக்கும் கூடாம் நான்என் பதுதானே**
**செற்ற மரமாம் மனத்துக்குத் திகழும் விதையாம் தேர்வேந்தே.**

*மறுபடியும் கும்பமுனி சொல்வான்: மனதுக்கு உருவம் வாசனையே ஆகும். பொருந்திய மனம் என்று சொல்லப்படும் வார்த்தையானது பொருந்திய வாசனையின் மற்றொரு பெயராம். குற்றங்கள் எல்லாம் குவிந்திருக்கும் கூண்டாம் நான் என்ற அகங்காரம் தானே தேரினை உடைய மன்னவனே! கெட்டுப்போன மனமாகிய மரத்துக்கு விதையாகும்.* **(6.9.138)**

**(எண்சீர் ஆசிரிய விருத்தம்)**

**ஆதியி(ல்)உண் டானஇதன் அங்கு ரம்தான்**
**அனுபவம்மெய் யாய்அறுதி இடுவ தாகி**
**ஓதுஉரு அன்றியிலே உதிக்கும் அத்தை**
**உரைசெய்வர் புந்திஎன உரைத்த விந்த**

நீதியும் புந்தியெனும் அங்கு ரத்தின்
நிறைவளர்வைக் கொம்பைச்சங் கற்பம் என்பர்
பேத(ம்)இவை ஆதலால் சித்தம் புந்தி
பெரியமனம் என்பதெலாம் பேர்கள் தாமே.

**பொழிப்புரை:** *முதலில் உண்டாகிய இந்த அகங்காரத்தின் முளையானது அனுபவ வடிவமாய், நிச்சய சுபாவமாகி, சொல்லப்பட்ட உருவம் இன்றியதாய் (வெளிப்புற விஷயம் சாராததாய்) உண்டாகும் அதனைப் புத்தி என்று சொல்வர். சொல்லப்பட்ட இந்த முறையாலே புத்தி என்னும் முளையின் முழு வளர்ச்சியை உடைய கொம்பினை (கிளையை)ச் சங்கற்பம் (எண்ணம்) என்பர். பேதமாக இவை ஆவதால் சித்தம், புத்தி, மனம் என்பவை அகங்காரத்தின் பெயர்களாம்.* **(6.9.139)**

இனையமனம் எனும்பொல்லா மரத்தின் கொம்பை
எப்பொழுதும் வெட்டிவேர் ஈர்த்து மாய்ப்பாய்
வினையுறுவா தனைப்பணைகள் பலகாய் காய்க்கும்
வேதனவா ளால்உள்ளே வெட்டின் மாயும்
நினை(வு)அறப்பற்(று) அறமவுனம் ஆகி வந்து
நேர்ந்ததுசெய் வார்உள்ளே நெஞ்சைச் செற்றார்
அனையமரப் பணைவெட்டல் கெவுணம் என்பர்
அதன்வேரை அறுத்தலே அறநன்(று) என்பார்.

**பொழிப்புரை:** *இத்தகைய மனம் என்கிற பொல்லாத மரத்தின் கிளையை நாடோறும் வெட்டி, வேரைப் பிடுங்கி அழிப்பாய். கர்மத்தை உடைய வாசனை என்னும் கிளைகள் பல காய்களைக் காய்க்கும். ஞானம் என்னும் வாளால் உள்ளேயே வெட்டினால் மாய்ந்து போகும். எண்ணம் (பாவனை) இன்றி, பற்றற்று, மௌனமாகி, வந்தமைந்ததைச் செய்பவராகி, உள்ளே மனதைச் செயித்தவர் அந்த மரத்தின் கிளைகளை வெட்டுதல் உபசாரம் என்பர். அந்த மரத்தின் வேரினைப் பிடுங்கிக் கெடுத்தலே முக்கியம் (நல்லது) என்பர்.* **(6.9.140)**

ஆதலினால் மிகநல்ல நெறியா லேநீ
அந்தமன மரத்தின்வேர் அறுத்துச் சுட்டால்
சாத(ம்)உறா(து) என்றலுமே மன்னன் சொல்வான்
தனிமரத்தின் வித்தாகும் அகம்பா வத்தை
மாதவனே சுடக்கனல்ஏ(து) எனலும் கும்பன்
மறுத்(து)உரைப்பான் நான்ஆர்என்(று) எண்ணு கின்ற
போதவிசா ரம்தானே மனத்தின் வித்தை
பொன்றுவிக்கும் கனல்எனவும் பூபன் சொல்வான்.

**பொழிப்புரை:** *ஆதலால் மிக நல்ல நெறியாலே நீ அந்த மனம் என்னும் மரத்தின் மூலமாகிய வேரினைப் (அகங்காரத்தைப்) பிடுங்கி சுட்டுவிட்டால், மனமானது உண்டாகாது என்று கும்பமுனி சொல்லவும், அரசன் சொல்வான்: ஒப்பற்ற மனமாம் மரத்தின் வித்தாகும் அகம்பாவத்தை பெரும் தவமுடையவனே! சுட்டெரிக்கும் அக்கினி*

*எது? என்று கேட்கவும், மறுபடியும் கும்பமுனி கூறுவான்: நான் யார் என்று சிந்திக்கின்ற ஆத்மஞான விசாரம் தானே மனதின் விதையை அழிக்கின்ற நெருப்பு என்று கூறவும், அரசன் சொல்வான்.* **(6.9.141)**

**என்னுடைய புந்தியினால் எண்ணி னேன்நான்**
**இச்சகம்நான் அல்லமல உடல்நான் அல்ல**
**துன்னுபொறி களும்அல்ல மனமும் அல்ல**
**தொடர்புந்தி அல்லஅகங் காரம் அல்ல**
**இன்னசடம் ஆதலினால் எனவும் கும்பன்**
**இவைஅன்றேல் வே(று)ஆர்நீ இயம்பு(க) என்ன**
**மன்ன(ன்)உரைப் பான்எல்லாம் படைத்(து)அ ளித்த**
**மா(சு)அறுசின் மாத்திரமாம் வடிவம் நானே.**

**பொழிப்புரை:** *என்னுடைய புத்தியினால் நான் விசாரம் செய்தேன். நான் இந்த உலகம் அல்ல. மலம் நிறைந்த உடல் நான் அல்ல. நெருங்கிய புலன்களும் நான் அல்ல. மனமும் நான் அல்ல. அதனைத் தொடரும் புத்தியும் நான் அல்ல. அகங்காரம் நான் அல்ல, இவை அனைத்தும் சடம் ஆவதால் என்று கூறவும், கும்பமுனி "இவைகள் நீ இல்லையெனில் வேறு யார் நீ சொல்வாய்" என்றதும், மன்னன் சொல்வான்: எல்லாம் படைந்து அளித்த குற்றமற்ற சின்மாத்திர வடிவமே நான் ஆவேன்.* **(6.9.142)**

**இந்தவடி வாம்எனக்(கு)ஓர் ஏது காணேன்**
**இடர்மனத்தா ருவின்விதையாம் அகங்கா ரத்தை**
**உந்தும்வகை அறிகிலேன் உந்த உந்த**
**ஓடிவரும் இதனால்உள் உடைந்தேன் என்ன**
**அந்தணன்சொல் வான்மன்னா கார ணத்தை**
**அன்றிஓர் காரியம்உண் டாக மாட்டா**
**முந்து(ம்)அகங் காரகார ணத்தை நாடி**
**மொழிஎன்ன மீண்(டு)அரசன் மொழிவ(து) ஆனான்.**

**பொழிப்புரை:** *இந்த வடிவமான எனக்கு ஒரு காரணத்தைக் காணேன். துயர்தரும் மனமாம் மரத்தின் விதையாகிய அகங்காரத்தைத் தள்ளும் வழி அறியேன். தள்ளத் தள்ள ஓடிவரும் இதனால் மனம் உடைந்து போனேன் எனச் சொல்லவும், அந்தணனாம் கும்பமுனி கூறுவான்: மன்னவனே! காரணம் இல்லாமல் ஒரு காரியமும் உண்டாகமாட்டாது. முந்துகின்ற அகங்காரத்தின் காரணத்தை விசாரம் செய்து சொல்வாய் எனவும், அரசன் கூறுவான்.* **(6.9.143)**

**அகம்என்னும் குற்றத்தின் கார ணம்தான்**
**அறிவாகும் அவ்வறி(வு)இங்(கு) அடங்கு(ம்) ஆ(று)என்**
**மிகவும்காண் பவற்றி(ல்)அறி(வு) எழுத லாலே**
**மெலிகின்றேன் காண்பவற்றை விடும்ஆ(று) எங்ஙன்**

புகல்(க)என்ன மீண்(டு)அந்தக் கும்பன் சொல்வான்
போதத்தின் காரணம்நீ புகன்றால் பின்னை
நிகழும்கா ரணமும்அகா ரணமும் சொல்வேன்
நினக்குநான் எனஅதற்கு நிருபன் சொல்வான்.

**பொழிப்புரை:** *அகங்காரம் என்னும் குற்றத்தின் காரணம் தான் அறிவாகும். அந்த அறிவு இங்கு அடங்கும் வழி எதுவோ? அதிகமாகக் காண்பவற்றில் (திருசியம்) அறிவு உண்டாவதாலே துயர் அடைகின்றேன். காண்பவற்றை நீக்குகின்ற விதம் எப்படி என்று கூறவேண்டும் என்றதும், மீண்டும் அந்த கும்பமுனி சொல்வான்: அறிவின் காரணத்தை நீ கூறினால், பின்பு உனக்கு நான் நிகழும் காரணம், காரணமின்மை இவைகளைச் சொல்வேன் எனக் கூறவும், அரசன் சொல்வான்.* **(6.9.144)**

புகன்றஉடல் முதல்பொருள்உண் டாத லாலே
போதம்(ம்)உள தாம்அவைபொய் யானால் இல்லை
அகங்கரவே தனம்என்னும் மனத்தின் வித்தும்
அடங்கிவிடும் எனஅதற்குக் கும்பன் சொல்வான்
உகந்தஉடல் ஆதிஉள தேல்சித்(து) உண்டாம்
உடலாதி பல்பொருள்கள் இலாத போதில்
நிகழ்ந்தஅறி(வு) எப்படியே நின்ற(து) என்று
நிகழ்த்(து)என்ன மீண்(டு)அந்த நிருபன் சொல்வான்.

**பொழிப்புரை:** *கூறிய உடல் முதலான பொருள்கள் இருப்பதனாலே அறிவு உண்டாகும். அவைகள் மித்தையானால் அறிவில்லை. அகங்கார உணர்வு என்னும் மனதின் விதையும் ஒடுங்கிவிடும் என்று கூறவும், அதற்குக் கும்பன் கூறுவான்: விரும்பி உடல் முதலான பொருள்கள் இருக்குமாயின் அறிவு உண்டாகும். உடல் முதலான பல பொருள்கள் இல்லாத பொழுதில் விளங்கிய அறிவு எப்படி நிலை நின்றது எனச் சொல்வாய் எனவும், மீண்டும் அரசன் சொல்வான்.* **(6.9.145)**

கரசரண முதல்அங்க முதலாய்ச் செய்யும்
கருமபலம் உளதாய்க்கை யாளும் காயம்
குரவஇல(து) எனும்படிஎன் என்னக் கும்பன்
கூறுவான் காரணத்தைக் கூடா(து) என்னில்
விரவியகா ரியம்தானும் இலதாம் அந்த
வேதனமும் மயக்கமே மிகும யக்கால்
வருவனஎல் லாம்இலதாம் ஏது இன்றி
வருபொருள்பொய் யாம்கயிற்றில் வருநா கம்போல்.

**பொழிப்புரை:** *கை கால்கள் முதலான உறுப்புகளால் செய்யும் கருமங்களின் பலன் உண்டாகி அனுபவிக்கும் உடல் ஆசாரியனே! இல்லை என்கின்ற விதம் எப்படி எனக் கேட்கவும், கும்பமுனி கூறுவான்: கருமத்தால் உளதாகும் இந்த உடல் காரணத்தைப் பொருந்தாது என்றால், பொருந்திய அறிவு என்னும் காரியமும் இல்லையாகும். அந்த அறிவும் பிராந்தியே. அந்த மிகுந்த மயக்கத்தால் வருவனவாகிய அகம்பாவம் முதலிய*

*சகலமும் இல்லாததாகும். காரணம் அல்லாமல் வரப்பட்ட பொருள்கள், கயிற்றில் தோற்றம் உண்டான பாம்பினைப் போல, மித்தையாம்.* **(6.9.146)**

**என்றலுமே ஆதிமுதல் உள்ள வேதா**
**இயற்றியபல் படைப்பாகும் இந்த ஞாலம்**
**நின்றஅவன் இதற்குக்கா ரணம்அல் லாத**
**நெறிஏது)என் றலும்கும்பன் நிகழ்த்து கிற்பான்**
**துன்றுசிருட் டியின்முன்பு வெறிதாய் சாந்தத்**
**தொடர்பிரம மேஉளதாய்த் துலங்கும் அந்த**
**ஒன்(று)ஒழிய இரண்(டு)இல்லாக் கார ணத்தால்**
**உயர்வேதா காரணத்தை உறான்என்(று) ஓத.**

**பொழிப்புரை:** *என்று கும்பமுனி சொல்லவும், ஆரம்பத்தில் இருந்த அயன் செய்த பலவிதமான படைப்பு இந்த உலகம் ஆகும். படைப்பவனாக இருந்த அந்த அயன் இந்த படைப்புக்கு காரணம் அல்லன் என்ற முறை எப்படி என்று மன்னன் கேட்கவும், கும்பமுனி சொல்வான்: நெருங்கிய சிருட்டிகளுக்கு முன்பாக கேவலமாய், சாந்தமாய், தொடர்ந்து பிரம்மமே சத்தாய்ப் பிரகாசிக்கும். அந்த ஒன்றைத் தவிர இரண்டில்லாத காரணத்தினால் மேலான அயனும் காரணத் தன்மையை அடையமாட்டான் என்று கூற,* **(6.9.147)**

**காவலன்பார்த்(து) உயர்பிரமம் வேதா வுக்குக்**
**காரணம்அன் றோஎன்னக் கும்பன் சொல்வான்**
**கேவலம்அச் சுதம்அனந்தம் சாந்தம் சுத்தம்**
**கேடுபிறப்(பு) இடர்தோற்றம் கிட்டா(து) என்றும்**
**பாவனைஅற்(று) அடிமுடி(வு)அற்(று) ஒன்றாயத் துன்றிப்**
**பகர்வரிதாய் நாடரிதாய்ப் பரம நிற்கும்**
**தாவரிய அதுளங்ஙன் ஏது எத்தால்**
**சமைப்பவனாய் புசிப்பவனாய் சாரு மாறே.**

**பொழிப்புரை:** *அரசன் கும்பமுனியை நோக்கி மேலான பிரம்மம் அயனுக்குக் காரணம் அல்லவோ என்று கேட்க, கும்ப முனி சொல்வான்: தனித்ததாயும், கெடாததாயும், அளவில்லாததாயும், உபசாந்தமாயும், பரிசுத்தமாயும், இறத்தலும் பிறத்தலும் துன்பமும் வியத்தமும் எப்போதும் நெருங்காமல் பாவனையைக் கடந்ததாய், ஆரம்பம் முடிவு அற்றதாய், அத்துவிதமாக நிறைந்து, நாடுதற்கு அரியதாய், சிந்தனாதீதமாகியும் (சிந்தனையைக் கடந்ததாய்) பிரம்ம சொரூபம் இருக்கும். சலனமில்லாத அந்தப் பிரம்மம் எதனது கருத்தாவாய் எதனது போக்தாவாய் எவ்வகையில் சார்ந்திருப்பதாமோ? (இரண்டற்ற பிரம்மம் எந்த ஒன்றினால் செய்பவனாகவும், அனுபவிப்பனாகவும் ஆகுமோ?)* **(6.9.148)**

**ஆதலினால் ஈ(து)ஒன்றும் செய்த(து) அல்ல**
**அடுத்துளஇச் சகம்இல்லை அறிவு மட்டும்**
**மேதகுசங் கற்பிதமே வேதா ஆகும்**
**மெய்யாக அறி(வு)அன்றி வே(று)ஒன்(று) இல்லை**

சேதனமாத் திரத்(து)உதித்த சிருட்டி அந்தச்
சேதனமே வடி(வு)என்று செப்ப லாகும்
ஓதியசெய் வோன்புசிப்போன் இரண்டும் அல்லன்
உறுபவம்தீர் பிரமமே உள்ள எல்லாம்.

**பொழிப்புரை:** *கருத்துருத்துவம் இல்லாமையால் இந்த உலகம் எதுவும் செய்தது அல்ல. சேர்ந்துள்ள இந்த உலகம் உண்மையில் ஒன்றும் இல்லை. சின்மாத்திர கற்பிதமே மேலான அயனாகும். உண்மையாக சித்தே அல்லாமல் வேறொன்றும் கிடையாது. அறிவு மாத்திரத்து உதித்த சிருட்டியானது அந்த சேதன உருவமே என்று கூறலாகும். கூறிய செய்பவன் (கர்த்தா), புசிப்பவன் (போக்தா) இரண்டும் நீ ஆகாய். இருக்கின்ற அனைத்தும் பிறப்பற்ற பிரம்மமே ஆகும்.* **(6.9.149)**

திடம்உறநிச் சயித்(து)உள்ளே அஞ்ஞா னத்தைச்
சிதைவித்தால் அஞ்ஞானம் சிதைந்த தேயாம்
படர்கருமச் சிதைவினால் அன்றி மோகம்
பகர்நிலைமை நழுவாது பகர்அஞ் ஞானம்
அடைவுறத்தேய்ந் திடில்பழைய நிலைமை நீங்கா
ஆதிபத மாம்அதனால் ஆதி தேவன்
தடம்உறுசிற் சொரூபத்தால் தன்ம னத்தால்
தானேநித் தலும்சிருட்டி தந்து நல்கும்.

**பொழிப்புரை:** *அதிதிடமாகத் துணிந்து உள்ளே அஞ்ஞானத்தை நாசமாக்கினால் அஞ்ஞானம் நாசமாகிப் போனதே ஆம். விரிந்த கரும நாசத்தினால் அல்லாமல் மயக்கமாகச் சொன்ன நிச்சயம் வழுவாது. கூறிய அஞ்ஞானம் முறையாக நசித்திடில் முன்னுள்ள சகத்தின் நிச்சயம் விட்டொழியவே நிர்விகாரம் உண்டாகும். அதனால் ஆதி தேவன் (பரமான்மா) வியாபகமான சித் சொரூபத்தால் தனது சித்தத்தால் தானே எப்போதும் சிருட்டியைக் கொடுத்துக் கொண்டே இருக்கும். (கர்மத்தால் அஞ் ஞானம் வளரும். கர்மம் நசிக்க அஞ்ஞானம் அழியும். சிருட்டியானது கர்மமாகக் கருதப்படாமல் பிரம்மமே தன் சித் வடிவத்தால் சிருட்டியாக ஜகமாகத் தோற்றம் தந்து கொண்டிருப்பதால் கர்த்தா போக்தா தன்மையின்றி பிரம்மத்தில் எந்தவித மாறுபாடும் எழுவதில்லை என்று விளங்கிக் கொள்ளலாம்)* **(6.9.150)**

ஆற்றுமதத் துவமான அதனால் தானே
அயன்என்று சொலப்பட்ட(து) அகிலம் ஆகித்
தோற்று(ம்)இவை உபசாந்த சொரூபம் ஆகும்
தோன்றலே எனஒக்கும் சொன்ன எல்லாம்
ஏற்றனவே படைப்பவன்இன் மையினால் வையம்
இல்லையாம் அதனால்பல் பொருள்நோக்(கு) இல்லை
தேற்றுகின்ற இவ்வகையால் அறிந்தேன் நன்றாய்ச்
சிவம்ஆனேன் வே(று)ஒன்றும் தெரியக் காணேன்.

**பொழிப்புரை:** *ஆத்ம தத்துவமாகிய அதனால் தானே அயன் என்று சொல்லப்பட்டது, எல்லாமாய் காணப்பட்ட இந்த சகங்களுக்கு உபசாந்த சொரூபமே ஆகும், அரசனே என்று கும்பமுனி கூறவும், (மன்னவன் சொல்வதாவது) சொல்லிய அனைத்தும் பொருத்தம் உடையனவே ஆகும். ஏற்கத் தகுதியுடையதே ஆகும். படைப்பவன் இல்லாமையால் உலகம் இல்லையாம். அதனால் பலவகையான பொருள் சிருஷ்டியில்லை. தெளிவாக உபதேசித்த இவ்வகையால் நன்றாக அறிந்தேன். சிவ (பிரம்ம) சொரூபமே ஆயினேன். வேறொன்றும் தோற்றுவதாகக் பார்த்திலேன்.*

*(பிரம்மமே அயனைப் போலவும், பிரபஞ்சம் போலவும் தோற்றினதே அன்றி, வேறானது அல்ல என்னும் அனுபவத்தினால் அஞ்ஞானம் கெடும் எனப் போதிக்க முன்னமே புலப்படாததான பிரம்ம மாத்திரமாய் விளங்குவதால், அது எப்படி காரணம் ஆகும்? காரணம் ஆகாத போது சகம் எப்படி காரியமாக ஆகும்? அப்படி ஆகாத போது அதை அறியும் போதம் எங்ஙனம் உண்டாகும்? அறிவு உண்டாகாத போது அதை யான் என்னும் அகம்பாவம் எங்ஙனம் உண்டாகும்? அகம்பாவம் இல்லாத போது அதைச் சிந்திக்கும் சித்தம் எங்ஙனம் உண்டாகும்? ஆதலால் அனைத்தும் பிரம்மம் என்னும் திருஷ்டியால் அனைத்தும் இல்லாமல் போனதால் அஞ்ஞானம் நீங்கிப் பிரம்ம சொரூபமாய் விளங்குகின்றேன் என்பது பொருள்)* **(6.9.151)**

**எனைத்தொழுதேன் பல்பொருள்நோக்(கு) அறிவி னாலே**
**இப்படிப்பொய் யாய்த்தோன்றிற்(று) இப்போ தத்தால்**
**நினைப்(பு)இ(ல்)உப சாந்தமாய் விசும்பி னைப்போல்**
**நிற்கின்றேன் எனநிருபன் நிகழ்த்த லோடும்**
**தனைத்தரும்கும் பனும்சொல்வான் தேசம் காலம்**
**தடம்திசைசிந் தனைதொழில்கள் சார்ந்த வெல்லாம்**
**அனைத்தையும்காண் பதுசகத்தைப் பிறித்துக் காண்கை**
**அதுநெடுநா ளில்சாந்தம் ஆகிப் போகும்.**

**பொழிப்புரை:** *ஆத்மாவாகிய என்னையே தொழுதேன். பல பொருள்களை நாடும் அறிவினாலே இப்படி மித்தையாகவே தோன்றியது. இப்போது இந்த ஞானத்தினால் சிந்தனையற்ற உபசாந்தமாகி ஆகாயத்தைப் போலத் தெளிந்து நிலைத்து நிற்கின்றேன் என்று மன்னவன் சொல்லவும், தன்னையே கொடுக்கும் கும்ப முனி கூறுவான்: இடம், காலம், விசாலாமான திசைகளும், மன செயல்கள் இவற்றைப் பற்றிய அனைத்து பொருள்களையும் நாடுவது, உலகைப் பகுத்துக் காண்பதாகும். அது நீண்டகாலத்தில் சாந்தமாய் (விடுபட்டு) விடும்.* **(6.9.152)**

**சாந்த(ம்)உற அழி(வு)அற்ற பிரமம் ஆங்கே**
**தனிநிற்கும் எனக்கும்பன் சாற்ற லோடும்**
**வேந்த(ன்)அறி(வு) உற்றுமிக விளங்கி நின்றான்**
**வெம்மாயைக் குகைநின்று வெளியில் ஆனான்**
**ஆம்திறமே பணதிஅறக் கும்பன் சொன்ன**
**அதுகுறித்து தனதாம்இத் தற்ப தத்தே**
**காந்தியுறச் சேர்ந்(து)ஒளித்தான் மனமும் கண்ணும்**
**கட்டுரைஅற் றான்நிறைந்தான் கணத்தில் ஆங்கே.**

**பொழிப்புரை:** *பரமசாந்தமான அழிவற்ற பிரம்மம் அங்கே தனியாய் இருக்கும் என்று கும்பமுனி கூறவும், மன்னவன் ஞானத் தெளிவினை அடைந்து மிகவும் பிரகாசமாய் இருந்தான். கொடிய மாயை என்னும் குகையிலிருந்து வெளியே வந்தான். அப்படியே கற்பனை நீங்கும்படி கும்பமுனி உபதேசித்த அதனைக் கருதி தனதாகிய இந்தப் பிரம்ம பதத்தில் பிரகாசமாகச் சேர்ந்து ஒடுங்கினான். மனமும், பார்வையும், பேச்சும் இல்லாதவன் ஆனான். ஒரு கணத்தில் அந்தப் பிரம்ம பதத்தில் பூரணம் ஆனான்.* **(6.9.153)**

ஒருமுகுர்த்தம் இருந்(து)உணர்ந்து விழித்த லோடும்
உயர்கும்பன் உரைசெய்வான் உளதாய் நன்றாய்
நிருமலமாய்ச் சுத்தமாய் மிகமெத் தென்று
நிருவிகற்பங் களுக்(கு)எல்லாம் நிலயம் ஆகித்
திருமிகும்இப் பதத்திலே சுகமாய்த் துன்பம்
தீர்ந்தனையோ உள்உணர்வு தெளிவுற் றாயோ
வருமயக்கம் ஒழிந்தனையோ ஞேய நன்றாய்
அறிந்தனையோ காண்பனகண் டனையோ என்றான்.

**பொழிப்புரை:** *ஒரு முகூர்த்த காலம் (இரண்டு நாழிகை) நிருவிகற்பமாய் இருந்து உணர்ந்து, கண் விழித்ததும் உயர்ந்த கும்பமுனி கூறுவான்: சத்தாய், நலமாய், நிர்மலமாய், சுத்தமாய், மிகவும் மிருதுவாய், நிர்விகற்பங்களுக்கு எல்லாம் இடமாய் ஆகி, அழகு மிகுந்த இந்தப் பிரம்ம பதத்தில் ஆனந்தமாய் இருந்து துன்பம் நீங்கினாயோ? ஆத்ம ஞானத்தில் தெளிவடைந்தாயோ? வருகின்ற மயக்கம் நீங்கினாயோ? அறியத்தக்கதை நன்றாய் அறிந்தனையோ? காண வேண்டியது அனைத்தையும் கண்டனையோ? என்று கேட்டான்.* **(6.9.154)**

நரபாலன் அதற்(கு)உரைப்பான் பகவா னேநின்
அருளாலே பெருஞ்செல்வ நலத்தால் மிக்குப்
பரமாகி அனைத்திற்கும் மேலாய் விஞ்சு
பதம்கண்டேன் அகோஅகோ பரம ஞானம்
திரமான பெரும்பெரியோர் கூட்டம் கிட்டாத்
தெள்அமுதாய்ப் பேரின்பம் தேங்க நல்கும்
வரமாநின் கூட்டத்தால் ஒருகா லத்தும்
வாராத நல்லமுது வரப்பெற் றேனால்.

**பொழிப்புரை:** *அதற்கு அரசன் பதில் சொல்வான்: பகவானே! உமது அருளினால் பெருஞ்செல்வமாகிய இன்பத்தினால் மிகவும் பெரியதாகி எல்லாவற்றுக்கும் உயர்;ந்ததாய் மிஞ்சிய பரம பதத்தை அறிந்தேன். ஆச்சரியம்! ஆச்சரியம்! பிரம்ம ஞானத்தைத் திடமாகப் பெற்ற பெரிய சாதுக்களின் தொடர்பு கிடைத்தற்கு அரிய தெளிந்த அமுதமாய்ப் பேரின்பம் தேங்கி நிற்க, கிடைக்கும் அத்தகைய வரமான உமது தொடர்பினால் ஒரு காலத்திலும் கிடைக்காத நல்ல அமிர்தம் கிடைக்கப் பெற்றேன்.* **(6.9.155)**

அனந்தமாம் இவ்வமுதம் எனக்கு முன்னாள்
அரிதானது) என்னஎனக் கும்பன் சொல்வான்
மனம்தனிலே சாந்தியாய்ப் போகம் கைத்து
வன்பொறிமீண்(டு) உளமடமை மாய்ந்த போதே
புனந்தருசெங் குசும்பைநீர் அழுக்குப் போன
புடவையிலே நிறம்உறல்போல் புதல்வர் நெஞ்சில்
கனந்தருசற் குருவசனம் கலந்து நன்றாம்
காயமலங் களும்மரத்தின் காய்கள் போல்போம்.

**பொழிப்புரை:** *அளவில்லாததாகிய இந்த அமுதம் எனக்கு முன்னாளில் அரிதாக இருந்தது என்னவென்று மன்னவன் கேட்க, கும்பமுனி சொல்வான்: மனதில் சாந்தம் அடைந்து, விஷய விருப்பத்தில் கசப்பு (வெறுப்பு) வந்து, வலிமையான இந்திரியங்கள் உள்முகமாகத் திரும்பி, மன அஞ்ஞானம் மாய்ந்த போதே, சோலையில் சிவந்த பூக்களின் நீர்த்துளிகள் அழுக்கில்லாத தூய்மையான ஆடையில் வர்ணத்தைக் காட்டுவது போல, சீடனுடைய மனதில் மேன்மையான சற்குரு வாக்கியம் கலந்து நன்மையாகும். தேகத்தில் உள்ள களங்களும் மரத்தின் கனிகளைப் போல் நழுவிப் போகும்.* **(6.9.156)**

உள்ளத்தில் இருமையென ஒருமை என்ன
உன்னுதல்அஞ் ஞான(ம்)இவை ஒழிதல் ஞானம்
தெள்ளூற்ற கதியு(ம்)அது தெளிந்து முத்தி
சேர்ந்தனைசித் தமும்விட்டாய் செல்வன் ஆகித்
தள்ளூற்ற மலம்நீங்கி மௌனி யாகித்
தனிநிற்பாய் என்றலுமே தமைஉ ணர்ந்தோர்
கொள்ளூற்ற தொழில்எல்லாம் மனத்த(து) அன்றோ
கொள்மனம்அன் றியில்நடக்கும் கொள்கை என்னோ.

**பொழிப்புரை:** *மனதில் இரண்டென்றும், ஒன்று என்றும் நினைத்தலே அஞ் ஞானம் ஆகும். இவ்விரண்டும் ஒழிதலே ஞானமாகும். தெளிந்த பரகதியும் அதுவே ஆகும். தெளிவடைந்து முத்தியையும் அடைந்தாய். மனதை விட்டொழித்தாய். ஞான செல்வனாகி, நீக்கிய மலத்தைப் பற்றாமல் விடுத்து, மௌனியாகித் தனித்து இருப்பாய் என்று கும்ப முனி கூறவும், தன்னை உணர்ந்தவர்கள் கொண்ட செயல்கள் எல்லாம் மனதைச் சார்ந்தது அல்லவா! கொள்ளும் மனம் தான் இல்லாமல் போனதால் செயல் செய்வதெப்படியோ* **(6.9.157)**

உரைஎனமன் னவன்கேட்பக் கும்பன் சொல்வான்
உளம்என்று சொன்னதுவே(று) ஒன்றும் அன்று
கரைஅறுபல் பவம்தரும்வா தனையே உள்ளம்
கண்(டு)அதனை அறிந்தால்அக் கவலை இல்லை
வரையறக்கண் டவர்கருமங் களில்ச ரிக்கும்
வாதனைதான் மறுபிறப்பை வழங்கா(து) அந்தப்
புரைமனம்சத் துவம்என்பர் சித்தம் என்று
போத(ம்)இல்லா சித்தத்தைப் புகல்வர் அன்றே.

**பொழிப்புரை:** *அருளிச்செய்யவேண்டும் என்று மன்னவன் கேட்கவும், கும்பமுனி கூறுவான்: மனம் என்று சொன்னது வேறு ஒன்றும் இல்லை, அளவில்லாத அனேக பிறவிகளைத் தரும் (மலின) வாசனையே மனம் ஆகும். கண்டு அதனை உணர்ந்தால் அந்தத் துன்பம் இல்லை. தடையறக் கண்டவர்கள் கருமங்களில் ஈடுபடும் சுத்த வாசனை மறு பிறவியைத் தராது. அவர்களின் செயல்களுக்குச் சாதகமான உயர்ந்த அந்த மனமானது சத்துவம் என்று கூறுவர். மலின வாசனையோடு கூடிய மனதையே சித்தம் என்பர். (மறு பிறவியைத் தரும் மலின வாசனையே சித்தம் என்ற சொல்லால் கூறப்படும். எந்த சுத்த வாசனையில் தன்னை அறிந்தவர்கள் செயல்புரிவார்களோ அந்த மனதைச் சத்துவம் என்று சொல்வர் எனப் பொருள்.)* **(6.9.158)**

**ஞானமனம் சத்துவமே என்று சொல்வர்**
**ஞானம்(ம்)இலா தார்சித்த நடையில் நிற்பர்**
**ஈனம்(ம்)அறு ஞானிகள்சத் துவத்தே நிற்பர்**
**ஏதொன்று சுவர்க்கம்வீடு) எல்லா நல்கும்**
**ஆனவைஎல் லாம்விட்டுச் சமமாம் சோதி**
**யானால்ஏது) ஆகுதிஇங்(கு) அதுநீ ஆகும்**
**ஊனம்(ம்)உறு பொருள்ஒன்றும் கைக்கொள் ளாமல்**
**உள்ளம்(ம்)அசை(வு) அறநிற்பாய் உறுதி யாக.**

**பொழிப்புரை:** *ஞானமுள்ள மனதைச் சத்துவம் என்று சொல்வர். ஞானம் இல்லாதவர் மனதின் போக்கில் இருப்பவர். குற்றமற்ற ஞானிகள் சத்துவத்தில் நிற்பர். எந்த ஒன்று சுவர்க்கம், மோட்சம் எல்லாம் தருகின்றதோ, ஆன இந்த எல்லாவற்றையும் விடுத்து, சமமான சுயம் பிரகாசமானால் எதுவாக ஆவாயோ அது இங்கு நீ ஆவாய். ஈனமாகிய பொருள்கள் எதனையும் கைவரப் பெறாமல், மனம் சலனம் இல்லாமல் திடமாக நிற்பாய்.*

*(வாசனை வடிவமான மனம் இரண்டு விதமாம் அவற்றுள் இராசத தாமதத்துடன் கூடி வெளிமுகத்தில் அறிவின்மையாகச் செய்யும்; கருமங்களால் பிறவியைக் கொடுக்கும் மனதுக்கு மனம் என்று பெயர். சத்துவத்துடன் கூடி ஞானமயமாய் செய்யும் செயல்களினால் முத்தியைக் கொடுக்கும் (மறுபிறவியைக் கொடுக்காத) மனதுக்கு மனம் எனப் பெயர் சொல்வதில்லை. அந்த இரண்டையும் நீக்கி, மகாவாக்கிய அர்த்தப்படி சலனம் சலனமின்மை ஆகி சுயம்சோதியாய் விளங்குவாய்)* **(6.9.159)**

**நெஞ்சிலாத வர்பிறவி நெடும்தூ ரம்போம்**
**நீள்நிலத்தில் துயர்ஒன்றும் நேர்ந்த(து) அல்ல**
**அஞ்சுமனம் அசைதலில்உண் டான(து) ஆகும்**
**அசை(வு)அசையா மைகள்இரண்டும் அயிக்கம் ஆகி**
**சஞ்சலமாற் றிச்சித்தாம் படிநில் என்னத்**
**தரணிபன்சொல் வான்அயிக்கம் சார்வ(து) எங்ஙன்**
**விஞ்சு(ம்)அசை(வு) அசையாமை இரண்டும் ஒன்றாய்**
**விடும்படிசொல் எனக்கும்பன் விளம்பல் உற்றான்.**

**பொழிப்புரை:** *மனம் இல்லாதவர்கள் பிறவியானது நீண்ட தூரம் ஓடிப் போகும். நீண்ட நிலத்தில் துயரம் ஒன்றும் சற்றும் நேரிடாது. பயப்படும் மனம் சஞ்சலத்தினால் உண்டானதாம். சலனம், சலனம் இல்லாமை என்ற இரண்டினையும் ஒன்றாக்கி, சஞ் சலத்தை விடுத்து, ஞானமாகும்படி நிற்பாய் என்று கும்பமுனி கூறவும், மன்னவன் கேட்பான்: ஐக்கியம் அடைவது எப்படி? மிகுந்த சலனம், சலனம் இன்மை இரண்டும் ஒன்றாகி நீங்கும்படி சொல்வாய் எனவும், கும்பமுனி சொல்லத் தொடங்கினார்.*
**(6.9.160)**

உவரிநீர் போல்உல(கு)எல் லாம்ஒன் றான
உணர்வுமாத் திரம்அதுதான் உற்ற புந்தி
கவர்உறுத லால்அசையும் நிறையும் நீர்தான்
கல்லோலத் தால்அசையும் கணக்கே போலச்
சிவம்உணர்வு மாத்திரம்மெய்ப் பிரமம் ஆதித்
திரள்பெயராய்ப் புகல்பொருளைச் சகம்என்(று) எண்ணித்
தவ(ம்)அறுபே தையர்காண்பர் அறிவு தானே
சற்(று)அசைந்த மாத்திரத்தால் சருக்கம் உண்டாம்.

**பொழிப்புரை:** *சமுத்திரத்தின் நீரினைப் போல சகங்கள் அனைத்தும் ஏகமாகிய சின்மாத்திரமே ஆகும். அந்த சின்மாத்திரமானது பொருந்திய புத்தியைக் கிரகிப்பதனால் நிறைந்த நீரானது அலைகளால் அசைகின்ற தன்மையே போல், சஞ்சரிக்கும். சிவமும், சின்மாத்திரமும்,சத்தியமும், பிரம்மமும் ஆகிய அனேக பெயர்களை உடையதாய்ச் சொல்லிய அந்த பர வத்துவை உலகம் என்று மதித்து தவமில்லாத மூடர்கள் காண்பார்கள். சித்தானது கொஞ்சம் அசைந்த மாத்திரத்தில் ஜக சிருட்டி உண்டாகும்.*
**(6.9.161)**

உண்டான சிருட்டிதான் நன்றாய் பார்க்கில்
ஒழிந்துபோம் உறுதியா உணரா ஆற்றால்
கண்டார்கள் கயிற்றிலே பாம்(பு)என் பார்போல்
காட்சியுறும் கலைநூலால் கற்றோர் சார்வால்
தண்டாத பரிசயத்தால் சிலகா லத்தில்
தாவுமனம் நின்மலமாய்ச் சசிபோல் நிற்கில்
பண்டாய அனுபூதி மயமாய்த் தானே
பாக்கியவான் களுக்(கு)இந்தப் பார்வை தோன்றும்.

**பொழிப்புரை:** *உண்டான சிருட்டியானது நன்றாக விசாரத்தால் பார்க்கும் போது திண்ணமாக மறைந்து போகும். திடமாக அறியாத தன்மையினால் கயிற்றில் பாம்பு என்பவர்களைப் போலப் பார்த்தார்கள். பிரத்தியட்சமாகின்ற ஞான சாத்திரங்களினாலும், சாதுக்களின் தொடர்பினாலும், தடையற்ற பயிற்சியாலும், சில காலத்தில் தாவுகின்ற மனம் நின்மலமாய்ச் சந்திரனைப் போல் நிற்குமாயின், பழமையான அனுபூதி மயமாகவே கடந்த பிறவிகளில் புண்ணியம் உடையவர்களுக்கே இவ்விதமான திருஷ்டி தோன்றும்.*
**(6.9.162)**

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**உல(கு)அதன் உதய நாச உண்மையை உரைத்தேன் இத்தை**
**நலனுறச் செய்து நாடி நழுவுறா நயந்த வண்ணம்**
**விலக(ல்)அற்(று) எதிர்ந்த எல்லாம் மெய்ப்பதத்(து) ஆக்கி நிற்பாய்**
**திலகமாம் சொன்ன நாடு சேர்வன்நான் காலம் ஈதே.**

**பொழிப்புரை:** *உலகத்தின் உற்பத்தி, ஒடுகத்தின் தத்துவத்தைக் கூறினேன். இந்த அர்த்தத்தை நலம் உண்டாகப் பயிற்சி செய்து, நழுவிடாமல் விரும்பியபடி, இடைவிடாமல் தோற்றும் அவற்றை எல்லாம் பிரம்ம பதத்துக்காகச் செய்திருப்பாய். எல்லாவற்றுக்கும் திலகம் போன்ற சுவர்க்க லோகத்தை நான் அடைவேன். உகந்த காலம் இதுவே.* **(6.9.163)**

**அயன்உல கினும்பொன் நா(டு)உற்(று) அங்(கு)எனைக் காணான் என்னில்**
**பயமுற முனியும் எந்தை நாரதன் பரிந்த மைந்தர்**
**உயர்குரு முனியப் பண்ண ஒருசற்றும் ஒண்ணா மன்னா**
**மயல்அறப் பேதம் நீக்கி மகிழந்(து)இதை நோக்கி நிற்பாய்.**

**பொழிப்புரை:** *சத்திய லோகத்திலிருந்தும், தெய்வலோகத்தை அடைந்து அவ்விடத்தில் என்னைக் காணவில்லை எனின், எனது தந்தை நாரதன் பயம் உண்டாகும்படி கோபப்படுவார். அன்புள்ள புத்திரர் உயர்ந்த குருவாகிய தந்தையை எள்ளளவும் கோபம் கொள்ளும்படி செய்யக்கூடாது. மன்னவனே மயக்கமில்லாமல் பேதம் நீங்கி, மகிழ்ந்து இந்த திருஷ்டியில் இருப்பாய்.* **(6.9.164)**

**போதுநாம் என்னக் கும்பன் மறைதலும் பூபன் எண்ணும்**
**சீதளம் சுத்தம் சாந்தம் தெள்ளமு(து) ஊறல் ஒக்கும்**
**ஈ(து)ஒரு பதவி என்னுள் இருந்தவா(று) என்னே என்னே**
**கோ(து)இல்என் சத்து வத்தில் குளிர்வுறச் செய்த(து) என்றான்.**

**பொழிப்புரை:** *யாம் போகின்றோம் என்று கும்பமுனி மறைந்ததும், மன்னவன் எண்ணுகின்றான். குளர்ச்சி, சுத்தம், சாந்தமாய், தெளிந்த அமுதின் தாரையை ஒத்த இந்த ஒப்பற்ற பதவியானது என்னுள்ளேயே இருந்துள்ள விதம் என்ன ஆச்சரியம்! ஆச்சரியம்! குற்றமற்ற எனது சத்துவத்தில் குளிர்ச்சி அடையச் செய்தது என்றான்.* **(6.9.165)**

**ஆனவா தனைகள் இன்றி அசைவற்றுப் பேரான் ஆகி**
**மோனமாய் நிருவி கற்ப மாய்ப்பற்று முற்றும் அற்ற**
**தானமே அழுந்திக் கல்போல் தருவைப்போல் சுவர்போல் நின்றான்**
**போனசூ டாலை பண்டைப் பொற்கொடி வடிவம் எய்தி.**

**பொழிப்புரை:** *வந்த வாசனைகளை அகற்றி, அசைவில்லாமல் எழுந்திராதவன் ஆகி, மௌனமாய், நிருவிகற்பமாய், பற்று முழுவதும் நீங்கிய இடத்தில் மூழ்கி, கல்லினைப் போல, மரத்தினைப் போல, சுவரினைப் போல நின்றான். சென்ற சூடாலை பழைய மகாராணி வடிவத்தை அடைந்து,* **(6.9.166)**

அம்பரத்(து) ஏகி அந்தப் புரம்புக்காள் அவனி காவல்
நம்பரம் என்று காத்தாள் நடந்தது வருட மூன்று
கும்பனாய்க் கணவன் காட்டைக் குறுகிஆங்(கு) அவனைக் கண்டாள்
தம்பமாய் நிருவி கற்ப சமாதியில் இருத்தல் கண்டு.

**பொழிப்புரை:** *ஆகாய மார்க்கமாகச் சென்று அரண்மனையில் அந்தப்புரத்தை அடைந்தாள். பூமியைக் காப்பது நமது கடமை என்று அரசாட்சி செய்தாள். மூன்று வருட காலம் கழிந்தது. கும்பமுனி வடிவமாய்க் கணவன் இருந்த காட்டினை அடைந்து, அங்கு அவனைக் கண்டாள். கம்பம் போல் நிர்விகற்ப சமாதியில் அவன் இருப்பதைக் கண்டு,* **(6.9.167)**

அறிவிப்போம் என்று சிங்க நாதத்தால் ஆர்த்த மட்டில்
பொறியுற்ற(து) இல்லை மேன்மேல் தொனித்திவள் பூபன் தன்னை
மறியத்தள் ளுதலும் வீழ்ந்து மறிந்திலன் மற்(று)என் னென்று
நெறிஉய்க்கும் கும்பன் மேனி நேரிழை நினைப்ப(து) ஆனாள்.

**பொழிப்புரை:** *தமது வரவினைத் தெரிவிக்கலாம்; என்று சிங்கத்தின் தொனியில் சப்தம் செய்த அளவிலும் அவன் அறிந்திடவில்லை. மேன்மேலும் சப்தம் செய்து, இவன் மன்னவனை விழும்படி தள்ளவும், வீழ்ந்தும் அறிந்திடவில்லை. இனி என்ன செய்வது என்று முறைப்படி வாழும் கும்பமுனி வடிவில் உள்ள சூடாலை சிந்திக்கத் தொடங்கினாள்.* **(6.9.168)**

உத்தமன் தற்ப தத்தோ(டு) ஒன்றினன் வியப்(பு)இ(து) அம்மா
இத்தனி உடலைப் பார்த்தால் இதயத்தின் அறிவின் வித்தாம்
சத்துவ சேடம் உண்டேல் தலைவனைப் புணர்வ மெல்லென்(று)
அத்தியால் வாழ்தும் அன்றேல் அங்கனை வடிவம் விட்டு

**பொழிப்புரை:** *உத்தமனான மன்னவன் பிரம்ம பதத்தோடு ஒன்றிவிட்டனன். ஆச்சரியம் இதுவே. இந்த தனியாக இருக்கும் உடலைப் பார்த்தால் இதயத்தில் அறிவுக்கு விதையாகிய சத்துவம் எஞ்சி இருக்குமாயின், நாயகனைச் சேர்ந்து மென்மையாகத் திடமாக வாழ்வோம். இல்லையெனில் இந்த பெண்ணுருவம் விட்டு,* **(6.9.169)**

மறுபவம் உறாத வண்ணம் மாசறு பதத்தைச் சேர்தும்
அறுதிஈ(து) என்ன உன்னிப் பரிசத்தால் விழியால் அன்னான்
உறும்அறி வுக்கு வித்தாய் உற்றசத் துவசே டம்தான்
இறுதிஅற்(று) இதயம் தன்னில் இருந்தது கண்டாள் என்ன.

**பொழிப்புரை:** *மறு பிறவியை அடையாதபடி குற்றமில்லாத பிரம்ம பதத்தை அடைவோம் இதுவே முடிவு என்று எண்ணி, பரிசத்தாலும், விழியாலும் அந்த மன்னவன் பொருந்திய அறிவுக்கு விதையாம் சத்துவம் எஞ்சி கெடுதல் இல்லாமல் இதயத்தில் இருந்ததைக் கண்டாள் என்று வசிட்ட முனிவர் சொல்ல,* **(6.9.170)**

கேட்டலும் இராமன் சொல்வான் கிளர்மனம் தீர மாய்ந்து
காட்டலோட் டம்போல் சுத்தக் கண்ணிலே கலந்(து)உ ளோருக்(கு)
ஈட்டுசத் துவசே டம்தான் எங்ஙனே இருக்கும் என்ன
வாட்ட(ம்)இல் ஞான மிக்க வசிட்டமா முனிவன் சொல்வான்.

**பொழிப்புரை:** *கூறியதைக் கேட்டதும், இராமபிரான் சொல்வார்: கிளர்ச்சி செய்யும் மனமானது முழுதும் மாய்ந்து, கட்டை, கல் போல், பரிசுத்த ஞானமான திருஷ்டியில் கலந்துள்ளவர்களுக்கு, இங்கே சத்துவ மிச்சமானது எப்படி இருக்கும் என்று கேட்கவும், வாட்டமில்லாத ஞானம் மிகுந்த வசிட்ட மாமுனி சொல்வார்.* **(6.9.171)**

**வித்தினுள் பூவும் காயும் மேவல்போல் இதயம் தன்னில்**
**சித்தின்கா ரணம தான சத்துவ சேடம் நிற்கும்**
**முத்தனாய் மனம்இ றந்தால் மொய்உடல் போகா போகத்**
**தொத்தஇன் பத்துன் பங்கள் சார்த(ல்)அற்(று) ஒருமைத்(து) ஆகும்.**

**பொழிப்புரை:** *விதையின் உள்ளே பூவும், காயும் இருப்பது போல், இதயத்தில் சித்தின் காரணமான சத்துவ மிச்சம் இருக்கும். முத்தனாய் மனம் நசித்தால் தேகமானது நசிக்காது. போகத்தில் பொருந்திய சுகதுக்கங்களால் மகிழ்வு சோர்வும் அடையாது, சமமாகவே இருக்கும்.* **(6.9.172)**

**ஆதலால் இராம னேஅவ் அணங்கனாள் அந்த மெய்விட்(டு)**
**ஏத(ம்)இல் ஆதி அந்தம் இன்றிய அறிவின் உள்போய்**
**மேதகு சத்து வம்சேர் வேந்தன்நெஞ்(சு) அசையப் பண்ணித்**
**தீ(து)இல்தன் உடலில் மீளச் சேர்ந்தனள் கூடார் புள்போல்.**

**பொழிப்புரை:** *ஆதலால் இராமனே! அந்த மங்கை சூடாலை (பிறர் உடலில் புகும் வல்லமை உள்ளதால்) தனது உடலை விடுத்து, குற்றமற்ற ஆரம்பம் நடு முடிவு இன்றிய சித்தின் உள்ளே புகுந்து மேன்மையான சத்துவ மிச்சம் சேர்ந்திருக்கின்ற வேந்தன் மனதை அசையச் செய்து, தீதிலாத தன் உடலில் கூட்டினை அடைகின்ற பறவையைப் போல் மறுபடியும் வந்து சேர்ந்தனள்.* **(6.9.173)**

**கும்பன்மெய் யாகிப் பூமேல் இருந்தனள் குழல்போல் பாடத்**
**தம்பமாய் இருந்தோன் மெய்யில் சத்துவ குணம்சார் போதம்**
**தும்பிநேர் பாட்டைக் கேட்டுப் பையப்பையச் சூரி யன்சேர்**
**அம்புயம் போல்வி ரிந்(து)அங்(கு) அவன்மன நிலைஆ யிற்றே.**

**பொழிப்புரை:** *கும்பமுனி உடலை அடைந்து பூமியில் இருந்தாள். குழல் இசை போல் பாடவும், கம்பம் போல் இருந்தவன் உடலில் சத்துவ குணத்தோடு கூடிய உணர்வானது வண்டின் ரீங்காரம் போன்ற இனிய பாட்டினைக் கேட்டு, மெள்ள மெள்ள சூரியனது கிரணங்கள் சேர்ந்த தாமரை போல் விரிந்து அங்கு அவனது மனது நிலையாக ஆனது.* **(6.9.174)**

**கண்டனன் கும்பன் தன்னைக் களிப்புறு மனத்தன் ஆகித்**
**தண்ட(ல்)இல் அருளால் தானே வாழ்விப்பான் தானே வந்தான்**
**பண்டைஅக் குரவன் என்று பரவிநன் மலர்தூ யேத்த**
**மண்டல வேந்தன் தன்னை மற்(று)அவன் நோக்கிச் சொல்வான்.**

**பொழிப்புரை:** *கும்பமுனியைக் கண்டான், களிப்புடைய மனமுடையவன் ஆகி, தடையற்ற அருளினால் எனது வேண்டுதல் இன்றி தானே என்னை வாழவைக்க வந்தனன் பழைய ஆசாரியன் என்று போற்றி, வாசனை மலர்கள் தூவி ஏத்த, பூமியாளும் அரசனை நோக்கி, கும்பமுனி சொல்வான்.* **(6.9.175)**

**இங்குநின்(று) அகன்ற நாள்தொட்(டு) இன்றள(வு) உன்பால் சித்தம்**
**பங்(கு)அற நின்றது அண்டர் பதியும்நின் கூட்டம் போல**
**அங்(கு)இதம் அல்ல என்ன அண்ணலே வாழ்ந்தேன் நின்னால்**
**துங்கமாய் உற்ற இன்ப சமாதியில் துயரம் தீர்ந்தேன்.**

**பொழிப்புரை:** *இங்கிருந்து சென்ற நாள் முதலாக இன்றைய நாள் வரைக்கும் உன்னிடத்தில் என்மனமானது பிரிவற்று இருந்தது. தேவலோகமும் உனது சம்பந்தத்தைப் போல இன்பம் அல்ல என்று கும்பமுனி கூறவும், அண்ணலே உம்மால் சுகம் அடைந்தேன். பரிசுத்தமாக அடைந்த சுக சமாதியில் துயரம் எல்லாம் தீர்ந்தேன்.* **(6.9.176)**

**நிருவிகற் பத்தில் இன்பம் நிறைந்தபொன் நாட்டும் இல்லை**
**ஒருமையுற்(று) அதனை மேவி உம்பரில் இம்பர் தன்னில்**
**திரிவ(ன்)என்(று) அரசன் சொல்லக் கும்பனும் செப்பு கிற்பான்**
**அரியஆ னந்த வாழ்வில் அயர்(வு)எலாம் அறவாழ்ந் தாயோ.**

**பொழிப்புரை:** *நிர்விகற்ப சமாதியில் ஆனந்தம் எல்லா செல்வ வளங்களும் நிறைந்த சுவர்க்கத்திலும் இல்லை. ஒருமையுடன் இருந்து (ஏகாக்கிரமாய்) அதனை அடைந்து, பரலோகத்திலும் இகலோகத்திலும் சஞ்சாரம் செய்வேன் என்று மன்னவன் சொல்லவும், கும்பமுனி கூறுவான்: அரியதான ஆனந்த வாழ்வில் வருத்தம் எல்லாம் நீங்கி வாழ்ந்தாயோ?* **(6.9.177)**

**பேதமே வடிவம் ஆன துன்பங்கள் பேதித் தாயோ**
**போதல்போ(து) இனிதாம் சங்கற் பத்தினில் பூண்ட இன்பம்**
**தீ(து)என வேரும் செற்றுச் சமதரி சனம்உற் றாயோ**
**யாதினும் வீடு பற்(று)அற்(று) இயைந்தசெய்(து) இன்புற் றாயோ.**

**பொழிப்புரை:** *வேற்றுமையே வடிவமான துன்பங்களைக் கெடுத்தாயோ? வரும்பொழுதில் இனிமையாகிய சங்கற்பத்தில் கொண்ட இன்பத்தைத் தீது என்று வேருடன் (மூலத்துடன்) கெடுத்து, சம திருஷ்டி அடைந்தாயோ? எதிலும் விடுதலும் பற்றுதலும் இன்றி நேர்ந்த (வந்தமைந்த) காரியங்களைச் செய்து சுகம் அடைந்தாயோ?* **(6.9.178)**

**எனலும்நின் அருளால் பங்கில் தெய்வத்தால் எலாம்விட்(டு) அப்பால்**
**மனநிலை நின்றேன் மாயை கரைகண்டேன் வருபே(று) எல்லாம்**
**கனமுறப் பெற்றேன் கேட்கக் காணவேண் டுவ(து)ஒன்(று) இல்லை**
**அனவர தமும்நி றைந்தேன் அயர்(வு)அற்றேன் பிறவி அற்றேன்.**

**பொழிப்புரை:** *என்று கேட்கவும், உமது அருளால், என் பக்கத்திருந்த தெய்வத்து அருளால் எல்லாவற்றையும் விட்டு, அப்பாலான மனநிலையில் நிலைபெற்று உள்ளேன். மாயையின் கரையைக் கண்டேன். அடைய வேண்டிய பயனை எல்லாம் அடையப் பெற்றேன். கேட்க வேண்டியதாகவோ, காண வேண்டியதாகவோ ஒன்றும் இல்லை. எப்போதும் எங்கும் உள்ளேன். சந்தேகத் துன்பம் அற்றேன். பிறவியும் நீங்கினேன்.* **(6.9.179)**

**பயம்அற்றேன் மோகம் அற்றேன் பற்(று)அற்றேன் சமமாய் நின்றேன்**
**உயர்(வு)உற்றேன் எல்லாம் ஆனேன் ஒருசெயல் அற்றேன் விண்ணுள்**
**இயல்ஒத்த தெளிவாய்ச் சாந்தம் எய்தினேன் என்றான் மோகச்**
**செயல்முற்றும் கடந்த சிந்தை சிகித்துவ சப்பேர் மன்னன்.**

**பொழிப்புரை:** *பயம் நீங்கினேன், மோகம் நீங்கினேன், பற்றும் நீங்கினேன், சமமாய் நின்றேன். உயர்வினை அடைந்தேன். எல்லாமும் ஆனேன். ஒரு செயலும் இல்லேன். ஆகாயத்தில் இயல்பாக உள்ள தெளிவாய் சாந்தியை அடைந்தேன் என்று மோகச் செயல் முழுதும் கடந்த மனதை உடைய சிகித்துவசன் என்னும் பெயருடைய மன்னவன் கூறினான்.* **(6.9.180)**

**அவ்வகை இரண்டு பேரும் ஆத்தும தத்து வத்தின்**
**செவ்விய விசாரத் தாலும் தெளிதரு மொழிக ளாலும்**
**தவ்வறு நேயம் மிக்கோர் தம்மில்தாம் உணர்தல் உற்று**
**வெவ்வனம் ஓடை குன்று வே(று)அற எங்கும் வாழ்ந்தார்.**

**பொழிப்புரை:** *அவ்விதமாக இருவரும் ஆத்ம தத்துவத்தின் சிறந்த விசாரத்தாலும், தெளிவுடைய வசனங்களாலும் தவறாத நேயம் மிக்கோராய் ஒருவருக்கு ஒருவர் உணர்ந்து கொண்டு, பாலைவனம், ஓடை, மலைப்பிரதேசம் என்று பேதம் இல்லாமல் சுற்றி வாழ்ந்து வந்தனர்.* **(6.9.181)**

**இயல்அறி அன்பு செய்கை இணையற்றோர் பற்றும் வீடு**
**மயல்அற விட்டுத் தென்றற்(கு) அசைவுறா வடகுன்(று) ஒப்பார்**
**பயில்உடல் ஒருகால் தூளி படர்விப்பார் ஒருகால் நீறு**
**வியனுற அணிவர் ஓர்கால் சந்தன விரையே சேர்வார்.**

**பொழிப்புரை:** *சுபாவமான ஞானத்திலும், அன்புள்ள செயல்களிலும் ஒப்பிலாதவர்கள். இராகமும், துவேஷமும் ஆகிய மயக்கத்தை விட்டு, தென்றல் காற்றுக்கு அசையாத மாமேரு மலைக்கு ஒப்பானவர்கள். சொல்லப்பட்ட தேகத்தில் ஒருபொழுது புழுதியைப் படரச் செய்வர். ஒருபொழுது காண்பவர் ஆச்சரியப்படும்படி திருநீறு அணிந்து கொள்வர். ஒருபொழுது வாசனை மிக்க சந்தனத்தைப் பூசிக்கொள்வர்.* **(6.9.182)**

**சிறிதுநாள் உடனே வாழ்ந்து தேமொழி வேந்தை நோக்கிப்**
**பிறிவுறு கணவன் சால உதாரமாய்ப் பீடை அற்றான்**
**செறிஎழில் விடலை ஆகும் செல்வம்பூ மனையும் எல்லாம்**
**வறியபோல் அவல மாய்ப்போம் வாழுநர் இலாமை யாலே.**

**பொழிப்புரை:** *சிலகாலம் கூடவே வாழ்ந்து, இனிய மொழியாள் சூடாலை மன்னவனை மனதிற்குள் நினைத்துப் பார்த்து சிந்திப்பாள். பிரிந்திருக்கின்ற கணவன் சிகித்துவசன் மிகவும் அனுபூதியில் உறுதியுள்ளவனாய் துன்பம் இல்லாதிருக்கிறான். மிகுந்த அழகுடைய இளமையாகிய செல்வமும், பூக்கள் நிறைந்த அரண்மனையும் எல்லாம் இல்லாமையைப் போல, வாழ்பவர்கள் இல்லாமையால் வீணாகப் போகும்.* **(6.9.183)**

**இழிவறு ஞானம் பெற்றோர் இயல்புறத் தானே வந்தது**
**ஒழிவுற விடுவர் என்னில் உண்மையை உணர்ந்தது என்னாம்**
**வழிபடு மன்னன் நம்பால் மணம்செயற்கு ஆனது ஒன்றை**
**அழிவறு மனத்தி னால்இங்கு அமைத்தும்என்று உளத்தில் எண்ணி.**

**பொழிப்புரை:** *பூரண ஞானத்தைப் பெற்றவர்கள் இயல்பாக தானே வந்ததைத் தவிர்க்கும் படியாக விடுவார்களே ஆயின், தத்துவத்தை அறிந்து என்ன பயன்? வழிபடுகின்ற மன்னவன் நம்மிடத்தில் திருமணம் செய்வதற்கான உத்தி ஒன்றினை அழிவற்ற உணர்வினால் இங்கு உண்டாக்குவோம் என்று மனதில் எண்ணி,* **(6.9.184)**

**தலைவனை நோக்கிச் சொல்வாள் சதமகன் உலகில் இன்றுஓர்**
**நிலைபெற விழாஉண்டு ஆங்கே நேருநா ரதரோடு யானும்**
**உலைவற நிற்றல் வேண்டும் உயர்விதி வலியார் வெல்வர்**
**மலைமிசை இரவி போம்கால் வருவன்இவ் விரைவில் இங்கே.**

**பொழிப்புரை:** *நாயகனை நோக்கிக் கும்பமுனியாகிய சூடாலை சொல்வாள். தேவலோகத்தில் இன்று முறையாக நடக்கும் ஒரு திருவிழா உண்டு. அதற்கு வருகின்ற நாரதருடன் யானும் அவசியமாக இருக்க வேண்டும். உயர்ந்த விதியின் பலத்தை யார் வெல்வர்? மலையின் மீது சூரியன் அத்தமிக்க செல்லும் நேரத்தில் இதோ சீக்கிரமாய் இவ்விடத்தில் வருவேன்.* **(6.9.185)**

**நீங்கரும் உணர்வி னோடு நீஇவண் இருத்தி என்றுஓர்**
**தேன்கமழ் மலரின் கொத்தைச் சிகித்துவ சனுக்கு நல்கி**
**ஓங்கினள் விசும்பில் ஏகி அவன்விழி உறாத மட்டில்**
**தாங்கிய கும்பன் மேனி தவிர்ந்துதன் வடிவம் ஆனாள்.**

**பொழிப்புரை:** *நீங்குதற்கு அரிய உணர்வுடன் நீ இங்கேயே இருப்பாய் என்று தேன் நிறையும் ஒரு மலர்க்கொத்தினைச் சிகித்துவசனுக்கு அளித்து, ஆகாயத்தில் எழும்பிச் சென்று, அவன் கண்ணுக்குத் தெரியாத தூரம் வரை சென்று, தாங்கிய கும்பமுனி வடிவத்தைத் தவிர்த்து தனது சூடாலை வடிவம் ஆனாள்.* **(6.9.186)**

**இந்திரன் இருக்கை ஏய்ந்த இல்லம்புக்கு அறியா வண்ணம்**
**மந்திர நெறியில் மன்னன் காரியம் மரபில் செய்து**
**சந்திர வதனி மீண்டும் கும்பனாய்த் தலைவன் தன்பால்**
**வந்துஇழி வுற்றுச் சால வாடிய முகத்தள் போலாய்.**

**பொழிப்புரை:** *இந்திரனது இருப்பிடத்தைப் போன்றதான அரண்மனை அந்தப்புரம் சென்று யாரும் அறிந்து கொள்ளாதவண்ணம் இருந்து மனுநீதிப்படி அரசன் செய்கின்ற காரிங்களை முறைப்படி செய்து, சந்திரன் போன்ற முகம் உடைய சூடாலை மறுபடியும் கும்பமுனியாய் நாயகனிடம் ஆகாய மார்க்கமாக வந்து இறங்கி, மிகவும் வாடிய முகம் உடையவள் போல் ஆகி,* **(6.9.187)**

பனிபடர் மதியம் என்னப் பங்கயம் என்னச் சோம்பி
நனிமுகம் வாடிச் சிந்தை அயர்விலாள் நணுக லோடும்
புனிதநா யகனும் நோக்கிப் பொருக்கென வருந்தி எந்தாய்
துனியுறு கின்றார் போன்றாய் துயரம்(ம்)என் துடைத்தி என்னா.

**பொழிப்புரை:** *பனி சூழ்ந்த சந்திரனைப் போலவும், தாமரையைப் போலவும் சோம்பி, மிகவும் முகமானது சுருங்கி, உள்ளம் அயர்வு இல்லாதவள் அவனிடம் வரவும், புனித நாயகன் அவளைப் பார்த்து விரைந்து எழுந்து கஷ்டப்பட்டு எனது பிதாவே! துன்பம் அடைந்தாய் போல் இருக்கின்றாய். துயரம் என்ன? அதனை விட்டு விடுவாய்.* **(6.9.188)**

தத்துவ ஞானம் உற்றார் தளர்வுறார் மகிழார் கஞ்சப்
பத்திரம் பயின்ற நீரில் பற்றுமோ என்ற லோடும்
குத்திர மேனிக் கும்பன் குழம்புறும் குழலின் பண்போல்
சித்திர மாக ஒன்றைச் சிகித்துவ சனுக்குச் செப்பும்.

**பொழிப்புரை:** *தத்துவ ஞானத்தை அடைந்தவர் தளர்ச்சி அடையார், மகிழமாட்டார். தாமரை இலை தான் இருக்கும் நீரினைப் பற்றிக்கொள்ளுமோ? என்று சொல்லவும், குழம்புகின்ற புல்லாங்குழலின் இசை ஒலியைப் போல் அதிசயமாக ஒரு சரித்திரத்தைச் சிகித்துவசனுக்குச் சொல்வாள்.* **(6.9.189)**

உடல்உள அளவும் கன்மேந் தியத்துடன் உறல்செய் யாரேல்
திடமுற சமச்சித் தத்தே செறிபவர் அறிஞர் அல்லார்
சடர்களே ஆவர் தானே சார்வுறும் அவத்தை வென்று
விடநினைத்(து) அறிவி லாதார் வீணிலே மெலிந்து நைவர்.

**பொழிப்புரை:** *உடல் இருக்கும் வரையில், திடமாகச் சமத்தன்மை கூடிய மனதைச் சேர்ந்தவர்கள் கர்மேந்திரியத்துடன் பொருந்தாமல் இருந்தால் ஞானிகள் அல்லர். வஞ்சகரே ஆவர். (தத்துவ ஞானம் அடைந்தாலும் பிரரரத்த கருமங்களைக் கர்மேந்திரியம் கொண்டு யெ்து கொண்டிருப்பவர்களே ஞானிகள் என்பது கருத்து) தானாக வந்தமைகின்ற துக்கங்களை வெற்றி கொள்ளும்படி கருதி ஞானமில்லாதார் வீணாக இளைத்து வருந்துவார்.* **(6.9.190)**

திலம்உள அளவும் போகாத் தயிலம்போல் தேக மட்டும்
பலபல அவத்தை நீங்கா பற்(று)அற இவற்றைத் தீர்ப்பார்
அலகிலா விண்ணை வாளால் அறுப்பவர் ஒக்கும் மன்னா
மலஉடல் அவத்தை நீக்கி அதற்(கு)ஒக்கும் வாழ்(வு)உண் டாமோ.

**பொழிப்புரை:** *எள் இருக்கின்ற வரையில் நீங்காத எண்ணெயும் போல், உடல் இருக்கின்ற வரையில் பலப்பல அவத்தை (துன்பம்) நீங்காது. அவற்றைப் பற்றற நீக்குபவர் அளவிட முடியாத ஆகாயத்தை வாளினால் அறுப்பவர்க்கு ஒப்பாகும் மன்னவனே! மலம் நிறைந்த உடலின் துன்பங்களைக் கர்மேந்திரியங்களை அடக்குதலால் நீக்கினால் அதற்கு நிகரான வாழ்வு உண்டோ?* **(6.9.191)**

**(வேறு)**

**ஒருபால் ஞானேந் தியத்துடனும் ஒருபால் கன்மேந் தியத்துடனும்**
**வருமாறு) உளதாம் உடலுக்கு மலரான் முதலாம் எல்லோரும்**
**தெருள்பான் மையரா யினும்தேக அவத்தை தீரா(து) என்(று)உணர்கை**
**அருகா நின்று வழுவாமல் அறுதி யான விதிநெறியே.**

**பொழிப்புரை:** *ஒருபுறம் ஞானேந்திரியங்களுடனும், ஒருபுறம் கர்மேந்திரியங்களுடனும் வரும் மாறுபாடுகள் தேகத்திற்கு உண்டு. நான்முகன் முதலாக எல்லோரும் தெளிவடைந்தவர் என்ற போதிலும் தேகத்தின் துக்கம் திடமாகத் தீராது என்று உணர்தல் அழிந்து போகாத நிச்சயமான விதி முறையாகும். (ஞானத்தை அடைந்தாலும் பிராரப்தத்தை அனுபவிக்க இந்திரியங்கள் தேவை)* **(6.9.192)**

**கற்ற அறிஞர் அறிவில்லோர் எல்லாம் காணப் படுபொருளாய்**
**உற்ற படியால் விதிவசத்தே உறுவர் கடலில் உறுநீர்போல்**
**நித்தம் அறிஞர் சமபுந்தி நிலையால் கைகால் அசைதலினால்**
**பெற்ற உடலம் விடும்அளவும் பெயரா விதியைப் பின்செல்வர்.**

**பொழிப்புரை:** *கற்றுணர்ந்த ஞானவான்களும், அஞ்ஞானிகளும் யாவரும் காணப்படும் பொருளாய்ப் பொருந்திய படியால் சமுத்திரத்தில் உள்ள தண்ணீரைப் போல நியதியின் படியே செல்வர். நாடோறும் ஞானவான்கள் சமமான புத்தியின் நிச்சயத்தால் கைகால் அசைவினால் இயங்கும் உடல் நீங்கும் வரையில் மாறாத நியதியை அனுசரிப்பார்கள்.* **(6.9.193)**

**இரங்கித் தேம்பி அறிவில்லோர் இன்ப துன்பங் களில்மூழ்கிக்**
**குரம்பைத் திரள்கள் எடுத்(து)அவற்றால் குறையா விதியைப் பின்செல்வர்**
**நிரம்பப் புகன்(று) என் நான்பட்ட நெறியில் துன்பம் தனைக்கேளாய்**
**அரங்கட்(கு) உவமை யாம்துன்பம் அன்பர்க்(கு) உரைத்தால் ஆறாதோ.**

**பொழிப்புரை:** *அஞ்ஞானிகள் இரங்கிஅழுது, இன்ப துன்பங்களில் மூழ்கி, பல தேகங்கள் எடுத்து அவைகளால் குறையாத விதியைப் பின் தொடர்ந்து செல்வர். அதிகமாகக் கூறுவதால் என்ன? நான் சென்ற வழியில் அடைந்த துன்பத்தைக் கேட்பாய். அறுக்கும் ரம்பத்திற்கு இணையாக உற்ற துன்பத்தை அன்புடையவரிடம் சொன்னால் ஆறுதல் வராதோ?* **(6.9.194)**

**கொத்தார் மலர்தந்(து) உனைஅகன்று குதித்து விண்போய்ப் பொன்னுலகில்**
**மெய்த்தா தையைச்சேர்ந்(து) இந்திரன்முன் மேவி மீண்(டு)இங்(கு) உறஎண்ணித்**
**தத்தா விண்ணின்(று) இழிந்(து)இரவிக்(கு) அருகே காற்றின் தடநெறியால்**
**இத்தா ரணிசேர் வுறவருவான் எழில்இப் பதத்தில் ஏகுதலும்.**

*பூங்கொத்தினைக் கொடுத்து, உன்னை விட்டு நீங்கி, விளம்பி ஆகாயத்தில் சென்று தேவலோகத்தில் உண்மையுள்ள தந்தையை அடைந்து, இந்திரனின் சபையில் இருந்து, மறுபடியும் இவ்விடம் வருவதற்காக சிந்தித்து, தாவி ஆகாயத்திலிருந்து இறங்கி, சூரிய மண்டலத்தின் பக்கமாக காற்றின் அனுகூலமான மார்க்கத்தால் இந்த பூமியை வந்தடைவதற்காக மேக மார்க்கத்தில் போகவும்.* **(6.9.195)**

**ஏக லுற்ற தூர்வாசன் என்னும் முனியை எதிர்கண்டு**
**மாக மட்டில் அடிதொழுது மற்று முனிவன் தனைநோக்கி**
**நீக றுத்த துகில்உடுத்தாய் நெறிதீர் பிறனை விழைபவர்போல்**
**போக லுற்றாய் என்றஎனைப் போத முனி(வு)உற்(று) அம்முனிவன்.**

**பொழிப்புரை:** *சென்று கொண்டிருந்த தூர்வாசன் என்ற முனிவரை எதிரில் கண்டு, ஆகாயத்தில் பெருமையுள்ள பாதத்தை வணங்கி, அந்த முனிவரைப் பார்த்து, நீர் கறுத்த ஆடையை உடுத்தியிருக்கிறாய். முறையின்றி அன்னியனை விரும்புபவர் போல் செல்லத் தொடங்கினாய் என்று கூறிய என்னை அந்த முனிவர் மிகவும் கோபம் அடைந்து,* **(6.9.196)**

**இதுசொல் லுதலால் இரவுதொறும் எழில்ஏந் திழையாய் இருத்தியென**
**முதுவன் சாபம் உரைத்தலும்அம் மொழிகேட்(டு) இரங்கி முனிதாளாம்**
**பதுமம் புகழ்ந்து வேண்டுதற்குப் பார்த்தேன் இமைப்பில் முனிமறைந்தான்**
**அதுகண்(டு)உளம்நொந்(து)இங்(கு)அணைந்தேன் அணங்காம்தன்மைஅகலாதே**

**பொழிப்புரை:** *இவ்வாறு நீ சொல்வதால், ஒவ்வொரு இரவிலும் அழகுடைய மங்கையாய் இருப்பாய் என்று பேரறிவாளனாம் முனிவன் சாபம் இடவும், அந்த வாக்கினைக் கேட்டு அழுது முனிவரின் தாமரைப் பாதங்களைப் புகழ்ந்து சாபத்தை மாற்றிக் கொள்வதற்கு வேண்டுவதற்குப் பார்த்தேன். அந்த முனிவன் இமைப்பொழுதில் மறைந்துவிட்டான். அதனைக் கண்டு மனம் நொந்து இவ்விடம் வந்து சேர்ந்தேன். பெண்ணாகும் தன்மை மாறாதே, வந்தே தீரும்.* **(6.9.197)**

**குருவா னவர்மா தவர்முதலோர் கூட்டம் காணக் கூசாமல்**
**இருள்வாய் மகளாய் எவ்வண்ணம் இருப்பேன் எனவும் சிகித்துவசன்**
**வெருவா(து) ஒழிநீ புலம்புதலால் மேவு பயன்என் விதிவலியால்**
**வருமே வருக உடற்(கு)அல்லால் மா(சு)இல் அறிவில் பற்றாதே.**

**பொழிப்புரை:** *ஆசாரியர்கள், தேவர்கள், மகாதவசிகள் முதலானோர் கூட்டத்தைக் காண்பதற்கு கூசாமல் இரவு நேரத்தில் பெண்ணுருவாய் எப்படி இருப்பபேன் என்று கும்பமுனி கூறவும், சிகித்துவசன் பயப்படுதலை ஒழிப்பாய் நீ. புலம்புவதால் அடையும் பயன் என்ன? விதி வலிமையால் வருவது வரட்டும். இது உடலுக்கே தவிர சேதனத்திற்கு அல்ல்.* **(6.9.198)**

அறிவால் உயர்ந்த நீதுன்பத்(து) அமிழ்ந்தற்(கு) உரித்தோ அறிவற்ற
சிறியார் அன்றோ உள்அயர்வார் என்று தேற்றித் தம்மில்தாம்
பிறியா இன்ப துன்பங்கள் பிறி(வு)அற்(று)இருந்தார் அவ்வளவில்
நெறியார் கும்பற்(கு) அணங்(கு)உருவம் நேர்வான் போல்வெய் யவன்ஒளித்தான்.

**பொழிப்புரை:** *விவேகத்தினால் உயர்ந்துள்ள நீ துன்பத்தில் மூழ்குவது உரியது தானா? விவேகம் இல்லாத சிறியவர் தான் உள்ளே துன்பப்படுவார் என்று ஆறுதல் கூறி, ஒருவருக்கு ஒருவர் பிரியாமல் இன்ப துன்பங்கள் பேதம் இல்லாதிருந்தனர். அந்த அளவில் நெறியுடைய கும்ப முனிக்கு பெண்ணுருவம் வரவேண்டும் என்பதைப் போல சூரியன் மறைந்தான்.* **(6.9.199)**

அந்தி வரலும் நியமங்கள் ஆற்றி இருந்தார் அதுகாலை
முந்தும் அரசன் முகம்நோக்கி மொழிவான் கும்பன் தளர்ச்சியொடும்
இந்த உடல்வீழ் வதுபோல்மேல் எழுதல் போல்நின்(று) இயங்குதல்போல்
வந்து பெருநா ணொடும்பெண்மை மன்னா என்னை வளைந்ததுவே.

**பொழிப்புரை:** *மாலைப் பொழுது வரவும், செய்ய வேண்டிய நித்திய கர்மங்களைச் செய்து இருந்தனர். அப்பொழுது முன்னால் இருக்கும் அரசன் முகத்தைப் பார்த்து தளர்வோடும் கும்பமுனி சொல்வான்: இந்த உடல் வீழ்வது போலவும், மேலே எழுவது போலவும், நின்று இயங்குவது போலவும், மிகுந்த வெட்கம் கூடிய பெண் தன்மை மன்னவனே! என்னை வளைத்துக் கொண்டதே.* **(6.9.200)**

கூந்தல் வளர்கின் றதுபாராய் கொங்கை எழுகின் றதுபாராய்
சேர்ந்து வருமே கலைபாராய் செறியும் முன்பின் உண்டான
காந்தை வடிவா னதுபாராய் காவ லாஎன்(று) இரங்கினனாய்ச்
சாந்த முறுகும் பனும்இருந்தான் தலைவன் தானும் தளர்ந்(து)இருந்தான்.

**பொழிப்புரை:** *கூந்தல் வளர்வதைப் பார்ப்பாய். மார்பகங்கள் எழுவதைப் பார்ப்பாய். சேர்ந்து வரும் ஆடையைப் பார்ப்பாய். நெருங்கும் முன்புறம், பின்புறம் உண்டான பெண் வடிவத்தைப் பார்ப்பாய். மன்னவா! என்று வாடியவளாய் சாந்தமுடைய கும்பமுனி இருந்தான். அரசனும் தளர்ந்திருந்தான்.* **(6.9.201)**

ஞான வான்நீ விதிநெறியை நன்றாய் அறிந்தாய் உரற்பால
தானது) உற்றால் இரங்கலைஎன்(று) அரசன் உரைப்ப உயர்கும்பன்
தானும் சொல்வான் இனிச்செயல்என் தப்பா விதியை யார்தடுப்பார்
மேனி பெண்மை யாய்இரவு மேவக் கடவேன் என்(று)உரைத்து.

**பொழிப்புரை:** *ஞானம் உடையவன் நீ. விதி முறைமையை நன்றாய் அறிந்துள்ளாய். வர வேண்டியது வந்தால் துன்பப்படாதே என்று மன்னவன் சொல்லவும், உயர்ந்த கும்பன் சொல்வான்: இனி செய்ய வேண்டியது என்ன இருக்கிறது? தப்பாத விதியைத் தடுப்பவர் யார்? பெண் தண்மை உடலை அடைந்து இரவுப் பொழுதைக் கடப்பேன் என்று கூறி,* **(6.9.202)**

**பாயல் ஒன்றில் அவ்விரவு பயின்றார் வெறிதே விடிஅளவில்**
**மேய பெண்மை தனைவிட்டு மீண்டு கும்ப வடிவாக**
**ஏய இவ்வாறு இராப்பெண்ணாய் இரவு போனால் கும்பனுமாய்**
**ஆய கன்னி அழியாமல் அமர்ந்தாள் சின்னாள் சூடாலை.**

**பொழிப்புரை:** *படுக்கை ஒன்றில் அந்த இரவில் வெறிதாக (வெறுமையாக) உறங்கினர். விடிகின்ற பொழுதில் வந்த பெண் வடிவம் விட்டு மறுபடியும் கும்பமுனி வடிவமாக, இவ்வாறாக இரவு முழுதும் பெண்ணாகவும், இரவு கழிந்தால் கும்பனுமாக கன்னித் தன்மை கெடாமல் சூடாலை சிலநாள் இருந்தாள்.* **(6.9.203)**

**அன்னாள் கும்ப மேனியளாய் அரசன் தனைப்பார்த்(து) ஒருபகலில்**
**மன்னா நித்தம் இராப்பெண்மை வருமேல் மடவார் இயல்(பு)இன்றி**
**என்நாள் இருப்ப(து) ஒருகணவன் எய்த வேண்டும் உனைஅலது**
**பின்ஆ ரையும்மூ வுலகினும்யான் பேணேன் அன்பால் பெருமையினால்.**

**பொழிப்புரை:** *அந்த சூடாலை கும்பமுனி வடிவில் இருந்து ஒரு பகலில் மன்னவனை நோக்கி மன்னவா! தினமும் இரவில் பெண் வடிவம் வந்து கொண்டிருக்குமே ஆயின், பெண்களின் இயற்கை இல்லாமல் எத்தனை நாள் இருப்ப? ஒரு கணவனை அடையவேண்டும். உன்னைத் தவிர மற்ற எவரையும் மூவுலகிலும் விரும்பேன். அன்பினால், பெருமையால்,* **(6.9.204)**

**மனைவி யாக விவாகத்தால் வரிப்பாய் நிசிக்(கு)எப் போது(ம்)எனை**
**இனைய இயற்றில் தீங்குநலம் இரண்டும் இல்லை எனலோடும்**
**அனைய விருப்பே நன்(று)என்றான் அரசன் அதுகேட் டலும்கும்பன்**
**புணையு நலத்(து)ஆ வணிமாதப் புரணை இன்று புரவலனே.**

**பொழிப்புரை:** *திருமணத்தால் இரவுக்கு என்றும் மனைவியாக என்னை ஏற்பாய். இப்படிச் செய்வதால் தீது, நன்மை இரண்டும் இல்லை என்று கூறவும், அந்த விருப்பமே நல்லது என்றான் மன்னவன். அதைக் கேட்டதும், கும்பன் "அனேக நன்மைகள் நிறைந்த ஆவணி பௌர்ணமி தினம் இன்றே மன்னவா!"* **(6.9.205)**

**திங்கள் உதிக்கும் காலத்தில் விவாகம் செய்க எனச்செப்பி**
**அங்கண் அரச னொடுமேவி அணியும் அணிப்பூண் சந்தனங்கள்**
**துங்க மலையில் கொடுவந்து தூய்நீர்க் கங்கை தனில்மூழ்கிப்**
**பொங்கு நெறியால் கடவுள்ர்தென் புலத்தோர் தவத்தோல் கழல்போற்றி.**

**பொழிப்புரை:** *சந்திரன் உதிக்கின்ற வேளையில் திருமணம் செய்யலாம் என்று கூறி, அழகிய கண்களை உடைய அரசனோடு சென்று, அலங்காரம் செய்யும் இரத்தின ஆபரணம், சந்தனம் முதலியவற்றைச் சிறந்த மலையில் இருந்து கொண்டு வந்து, தூய கங்கை நீரில் குளித்து, உயர்ந்த நெறிமுறைகளால் தேவர்கள், பிதுருக்கள், தவசிகள் ஆகியோர்களின் பாதங்களை வணங்கி.* **(6.9.206)**

கிரியை ஒழியார் பலம்விரும்பார் கிளர்கற் பகநல் கியவெண்பட்(டு)
உரிய(து) எனச்சாத் தினர்வெய்யோன் உயர்ந்த வெற்பின் இடைச்சென்றான்
பெரிய இந்து தோன்றுதலும் பேசு முறைமை கிரியைகளால்
அரிய நியமம் செய்துமணம் செய்தான் அரசன் அப்போது.

**பொழிப்புரை:** *செயல்களைத் தவிர்க்காதவர்களும், பலனை விரும்பாதவர்களும் ஆகிய இவர்கள் விளங்கிய கற்பகம் மரம் அளித்த வெண்பட்டினை உரியது என்று உடுத்தனர். சூரியனும் உயர்ந்த மலையில் அத்தமன் ஆனான். பூரண சந்திரன் உதயமாகவும், அப்போது சொல்லப்பட்ட முறையான கருமங்களால் அருமையான நியமங்களைச் செய்து அரசன் திருமணம் செய்தான்.* **(6.9.207)**

இவ்வா(று) உயர்மந் தரவெற்(பு) இடையே மணம்செய்(து) இவர்கள்
கவ்வா இன்பம் துய்த்தும் கடம்சூழ் வனங்கள் தோறும்
செவ்வாய் மயில்மன் னவனும் திரிந்தார் தினமும் மூன்றில்
வெவ்வாள் அரசன் துயிலும் வேளை தனில்சூ டாலை.

**பொழிப்புரை:** *இவ்வாறு உயர்வான மந்தர மலையில் திருமணம் செய்து கொண்ட இவர்கள், பற்றில்லாத இன்பத்தை அனுபவித்தும், யானைகள் சூழ்ந்த காடுகள் தோறும் சிவந்த இதழ் மயில்போன்ற மங்கையும், மன்னவனும் திரிந்தனர். மூன்று தினங்களுக்கு ஒரு முறை கொடிய வாளாயுதம் உடைய மன்னவன் உறங்குகின்ற நேரத்தில் சூடாலை,* **(6.9.208)**

சென்று சென்று மன்னன் தேச நீதி நடாத்தி
ஒன்றும் பாயல் தன்னில் ஒழியா(து) அவள்போல் மீளும்
மன்றல் மதனி கைப்பேர் மனைவி யான மாது
நின்ற சிலநா ளில்பின் நெஞ்சில் ஒன்றை நினைப்பாள்.

**பொழிப்புரை:** *அடிக்கடி சென்று அரசனது தேசத்தை நீதி நெறியோடு கவனித்து நடத்தி, உறங்கும் படுக்கையில் நீங்கி வெளியே செல்லாதவள் போல் திரும்பி வந்து சேர்வாள். மணம் செய்துகொண்ட மதனிகை என்ற பெயர்கொண்ட மனைவியாகிய மங்கை சில நாட்கள் கழிந்த பின்னர், மனதில் ஒன்றைச் சிந்தனை செய்வாள்.* **(6.9.209)**

உற்ற போகங் களில்பற்(று) ஒன்றா(து) இவனுக்(கு) என்றும்
துற்ற போகங் களினால் சோதிப் போம்என்(று) எண்ணி
கற்ற மாயை யாலே கைத வ(ம்)ஒன்(று) இழைத்தாள்
சுற்றும் தேவர் நெருங்கச் சுரர்கோன் வனத்தில் தோன்ற.

**பொழிப்புரை:** *இவ்வுலகில் கிடைத்த போகங்களில் மன்னவனுக்கு எப்போதும் ஆசை பொருந்தாது. மிகுந்த தேவ போகங்களினால் சோதனை செய்து பார்க்க வேண்டும் என்று கருதி, பயிற்சி செய்து பெற்ற சித்திகளாலே தேவர்கள் சூழ, தேவேந்திரன் இந்த காட்டில் தோன்றும்படி ஒரு மாயை செய்தாள்.* **(6.9.210)**

**வந்த மகவான் தன்னை மன்னன் கண்டு வணங்கி**
**முந்து பூசை செய்து முதல்வ நீஇங்(கு) எய்த**
**எந்த அறமுன் செய்தேன் என்ன இமையோர் இறையும்**
**அந்த மன்னை நோக்கி அன்பால் இவ்வா(று) அறைவான்.**

**பொழிப்புரை:** *வந்த தேவேந்திரனை மன்னவன் பார்த்து, வணங்கி, முன்னே சென்று பூசைகள் செய்து, முதன்மையானவரே! நீர் இங்கு எழுந்தருள என்ன தருமம் முன்னாளில் செய்தேனோ என்று கூறவும், தேவர்களின் அரசன் அந்த மன்னவனை நோக்கி அன்பினால் இவ்வாறு சொல்வான்.* **(6.9.211)**

**உனது குணத்தின் நலத்தால் உம்பர் உடன்நான் வந்தேன்**
**கனக உலகம் உமக்கே கடவ தாம்அங்(கு) உள்ளோர்**
**நினது வரவு நோக்கி நின்றார் அரம்பை முதலோர்**
**வனச வதன மலர மார்த்தாண் டனைப்போல் வருவாய்.**

**பொழிப்புரை:** *உன்னுடைய சிறந்த குணங்களின் நன்மையினால் தேவர்களுடன் நான் வந்தேன். பொன்னுலகம் உமக்கே செல்வதற்கு உரியதாம். அங்கு இருப்பவர் உனது வரவினைப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். அரம்பை முதலானோர் தாமரை முகம் மலர, சூரியனைப் போல் வருவாய்.* **(6.9.212)**

**கற்பம் அளவும் இருந்து கடவுள் போகம் எல்லாம்**
**சிற்பம் அன்றித் துய்க்கச் சீவன் முத்தி மன்னா**
**அற்பம் தாழா(து) அடைவாய் அழைப்பான் வந்தேன் என்ற**
**சொற்பங் கிகளைக் கேட்டுத் தூய மன்னன் சொல்வான்.**

**பொழிப்புரை:** *கற்ப காலம் வரையில் இருந்து தேவ போகங்கள் முழுவதும் சிந்தனையின்றி (தடையின்றி) அனுபவிக்க, சீவன் முத்தனாம் மன்னவனே! சற்றும் தாமதம் செய்யாமல் வருவாய், அழைப்பதற்காகவே இங்கு வந்தேன் என்று கூறிய சொல் சாதுரியத்தைக் கேட்டு, பரிசுத்த மன்னவன் கூறுவான்.* **(6.9.213)**

**அங்கும் துறக்கத்(து) இன்பம் அனைத்தும் அறிவேன் எந்தாய்**
**இங்(கு)என்(று) அங்(கு)என்(று) இல்லை எங்கும் சுவர்க்கம் எனக்குப்**
**பொங்கும் சுகமே எங்கும் பொன்நா(டு) அதனால் வேண்டேன்**
**தங்கும் பதமே(வு) என்றே சற்றும் பற்(று)அற்(று) உரைப்ப.**

**பொழிப்புரை:** *அவ்விடத்தில் சுவர்க்கத்தில் உள்ள இன்பம் அனைத்தும் அறிவேன் எனது தந்தையே! இவ்விடம் என்றும், அவ்விடம் என்றும் பேதமில்லை. எல்லா இடமும் எனக்குச் சுவர்க்மே. எல்லா இடமும் எனக்குப் பொங்கிவரும் சுகமே. அதனால் சுவர்க்கம் விரும்பேன். நீர் வசிக்கும் இடம் செல்லலாம் என்பதாக சிறிதும் பற்று இல்லாமல் சொல்ல,* **(6.9.214)**

**மடங்கி அமரர் கூட்டம் வந்த வழியே போகத்**
**தொடங்கு மாயை பலவால் சோதித் திடவும் நெஞ்சம்**
**அடங்கி விடுதல் கண்டும் அயலோர் மாயை யாலே**
**தடங்கண் மயில்கூ டாலை தனிச்சோ தனைசெய் தனளே.**

**பொழிப்புரை:** *திரும்பி தேவர்கள் கூட்டம் வந்த வழியே போய்விடவும், தொடங்கிய மாயையினால் (சித்திகளினால்) பலவிதமாக சோதிக்கவும், மனம் ஒடுங்கி விடுவதைக் கண்டும், வேறொரு மாயையால் விசாலமான கண்களை உடைய மயில் அனைய சூடாலை தனியாக ஒரு சோதனை செய்தாள்.* **(6.9.215)**

திங்கள் உதித்த அளவில் செபித்துக் கங்கைக் கரையில்
துங்க அரசன் இருப்பத் தோகை அன்னாள் புறம்போய்க்
கொங்கு மலராள் நிறைந்த கோல அமளி ஒன்றில்
தங்கும் ஒருதூர்த் தனைத்தான் சங்கற் பித்துப் புணர்ந்தாள்.

**பொழிப்புரை:** *சந்திரன் உதித்த வேளையில் கங்கைக் கரையில் செபித்து, பரிசுத்த சிகித்துவச மன்னவன் இருக்க, மயில் அனைய சூடாலை வெளியே சென்று, தேன் சிந்தும் மலர்களால் நிறைந்த அழகிய படுக்கை ஒன்றில் இருக்கின்ற ஒரு காமுகனை உண்டாக்கி கூடுவது போலக் காட்டினாள்.* **(6.9.216)**

சந்தி முடித்து மாதைச் சாரல் தோறும் தேடி
வந்த வழியில் புணர்ந்து மகிழும் அவரை நோக்கிச்
சிந்தை விகற்பம் இன்றிச் சித்தம் மகிழ்ந்(து)அங்(கு) அவரை
முந்த இடையூ(று) அறநீர் முயங்கும் என்று போனான்.

**பொழிப்புரை:** *(சிகித்துவசன்) சந்தியாவந்தனம் செய்து முடித்து, மங்கையான மதனிகையைச் சோலைதோறும் தேடி வருகின்ற வழியில் கூடி மகிழ்வது போல் காணப்பெறும் அவர்களை நோக்கி, மனவிகாரம் இன்றி, சித்தம் மகிழ்ந்து அங்கு அவர்களை எந்தவொரு தடையுமில்லாமல் கூடுவீர் என்று சொல்லிப் போனான்.* **(6.9.217)**

போகி மறைந்து முகுர்த்தம் போன பின்னர் இவளும்
வேகி யாது போனாள் விகற்பம் இன்மை காண்பான்
ஏகி அமளித் தொடர்ச்சி எழிலும் வடிவும் தோன்ற
யோகி முன்னர் நின்றாள் ஒதுங்கி நாணி வணங்கி.

**பொழிப்புரை:** *மறைந்து போய் ஒரு முகூர்த்த காலம் (இரண்டு நாழிகை) கழிந்த பின்பு, மதனிகையும் கோபிக்காமல் போனாள். விகற்பம் இல்லாமையைக் காணும்படி போய், படுக்கையின் தொடர்பும், அதன் அழகும், அதன் உருவமும் தோற்றும்படி இராசயோகி முன்பு ஒதுங்கி நாணத்துடன் வணங்கி நின்றாள்.* **(6.9.218)**

மதனி கைப்பெயர் மங்கையும் இவ்வணம் வருந்தி
விதனம் உற்றனள் போல்நிற்ப வேந்தனும் சமாதி
அதனை உற்றிருந் தான்அறி வுற்றனன் பார்த்துக்
கதம்)அ றக்குளிர் புந்தியான் மெல்லெனக் கழறும்.

**பொழிப்புரை:** *மதனிகை என்னும் பெயர்கொண்ட மங்கையும் இவ்வாறாக வருந்தி, கவலை அடைந்தவள் போல் நிற்க, மன்னவனும் சமாதியில் இருந்தனன் உணர்வு அடைந்தான். அவளைப் பார்த்து கோபம் இல்லாமல் சாந்தமான புத்தியால் மென்மையாகக் கூறுவான்.* **(6.9.219)**

விரைவில் வந்த(து)என் முயங்குறு மகிணனை விட்டு
நிரைவ ளைக்கையாய் மீண்டுபோய் இன்பமே நிறைஎன்(று)
உரைசெய் காலையில் மதனிகை உரைசெய்வாள் உயர்ந்த
புரைஇ லாதவர் பிழைபல பொறுப்பது புகழே.

**பொழிப்புரை:** *கூடுகின்ற நாயகனை விட்டு சீக்கிரமாக வந்தது என்ன? வளையல்கள் வரிசையாக நிறைந்த கரத்தினளே! மறுபடியும் போய் இன்பம் அடைவாய் என்று கூறிய போது, மதனிகை சொல்வாள். உயர்ந்த குற்றம் அற்றவர்கள் மூடர்களின் பல குற்றங்களைச் சகிப்பது மேலான புகழே ஆகும்.* **(6.9.220)**

மாத ரார்இயல் அளவறு பேதமாய் மருளும்
காத லோஎனில் எண்மடி கரும(ம்)ஒன்(று) அறியார்
ஆத லால்என(து) அரும்பிழை பொறுத்(து)அருள் என்ன
போத பாரகன் மதனிகைக்(கு) இவ்வுரை புகன்றான்.

**பொழிப்புரை:** *பெண்களின் சுபாவம் அளவில்லாத பேதமாக மயங்கும். ஆசையோ என்றால் எட்டு மடங்காகும். ஒரு காரியமும் தெரிந்து கொள்ள மாட்டார்கள். ஆதலால் எனது அரிதான பிழையைப் பொறுத்தருள்வீராக என்று சொல்ல, ஞானத்தின் கரைகண்டவன் மதனிகைக்கு இந்த வசனத்தைச் சொன்னான்.* **(6.9.221)**

வானி லேமரம் முளைக்கினும் முனி(வு)என்கண் வாரா(து)
ஆன மேலவர் இகழ்வ(ர்)என்(று) அன்னமே உன்னை
மே(ல்)ந யந்துபெண் எனவிரும் பலன்என்று வேந்தன்
ஈனம் இல்லதோர் சம(ம்)உறு பார்வையோ(டு) இருப்ப.

**பொழிப்புரை:** *வானத்திலே மரம் முளைத்தாலும் என்னிடத்தில் கோபம் வராது. பெரியோர்கள் இகழ்வர் என்று அன்னம் போன்றவளே! உன்னை மேலாக அன்பு செய்து பெண் என்று விரும்பவில்லை என்று கூறி, மன்னவன் குறைவில்லாத சமத்துவ பார்வையுடன் இருக்க,* **(6.9.222)**

கண்டு நின்றகூ டாலையும் கருத்தினால் நினைவாள்
மண்(டு) இராகமும் கோபமும் வே(ர்)அற மாய்த்தான்
மிண்டு போகமும் செல்வமும் மேவிடா(து) இவனைத்
திண்தி றல்புயன் ஞானத்தின் கரைகண்டு சேர்ந்தான்.

**பொழிப்புரை:** *(இதனைக்) கண்டு நின்ற கூடாலையும் மனதினால் சிந்தித்தாள். மிகுந்து நெருங்கும் ஆசையும், கோபமும் அடியோடு அறுத்தான். மிகுந்த போகமும், செல்வமும் சேர்ந்திடாது இந்த மன்னவனை, வலிமை மிக்க தோள்களை உடையவன் ஞானத்தின் கரைகண்டு அடைந்தனன்.* **(6.9.223)**

மறைதல் மட்(டு)இனி மதனிகை வடிவினை மாற்றி
முறைமை யானகூ டாலையாய் முன்நிற்பன் என்னா
இறைவன் முன்புகூ டாலையாய்த் தோன்றவும் இவளைப்
பொறையில் நின்(று)அவன் நோக்கிநல் வியப்பொடு புகலும்.

**பொழிப்புரை:** *மறைந்திருப்பது போதும், இனி மதனிகை வடிவத்தை விட்டு, தனக்கு முறைமையான சூடாலையாய் எதிரில் நிற்பேன் என்று கருதி, மன்னவன் முன்பு சூடாலையாய்த் தோன்றவும், இவளைப் பொறுமையுடன் இருந்து நோக்கி நல்ல ஆச்சரியத்தோடு சொல்வான்.* **(6.9.224)**

வடிவும் வார்த்தையும் ஒடுக்கமும் மற்றுள குணமும்
முடிவி லாதசூ டாலைபோல் தோன்றினை முன்னே
நெடிய கண்ணிநீ யார்என நிருபதி கேட்பக்
கடிம ணம்செய்சூ டாலைநான் எனமற்றும் கழறும்.

**பொழிப்புரை:** *உருவமும், பேச்சும், அடக்கமும் மற்றும் உள்ள குணங்களும் முடிவில்லாத சூடாலை போல் முன்னால் தோன்றினை நீண்ட கண்களை உடையவளே! நீ யார்? என்று மன்னவன் கேட்கவும், நீர் திருமணம் செய்து கொண்ட சூடாலையே நான் என்று சொல்லி, மேற்கொண்டு சொல்வாள்.* **(6.9.225)**

கும்ப வேடமும் மதனிகை வேடமும் கொடுநான்
நம்ப னேஉனை உணர்த்தினேன் ஞானத்தின் நிலைமை
இம்பர் மாயையால் சோதனை பண்ணினேன் இவற்றைக்
கம்பம் இன்றிய தியானத்தால் காண்குதி என்ன.

**பொழிப்புரை:** *நான் கும்பமுனி வேடமும், மதனிகை வேடமும் கொண்டு எனது நாயகனே! உனக்கு ஞானத்தின் நிலைபேற்றை உணர்த்தினேன். ஞானத்தின் நிச்சயத்தை இவ்விடத்தில் மாயையினால் சோதித்துப் பார்த்தேன். இவற்றை அசைவின்றிய நிர்விகற்ப சமாதியில் இருந்து காண்பாய் என்றாள்.* **(6.9.226)**

ஞான யோகமாம் தியானத்தால் நரபதி நோக்கி
மான ராச்சியம் துறந்தது முதல்இவண் வந்து
தா(ன்)ந லம்செய்சூ டாலையாய்த் தோன்றிய(து) அளவாய்
ஈனம் இன்றியே யாவையும் உணர்ந்தனன் இருந்து.

**பொழிப்புரை:** *ஞான நிட்டையாகிய தியானத்தினால் மன்னவன் நோக்கி, பெருமை வாய்ந்த ராச்சியத்தை விட்டு இங்கு வந்தது முதல், தானே வந்து அனுபவத்தை விளக்கின சூடாலையாய்த் தோன்றினது வரை குறைவில்லாமல் எல்லாவற்றையும் சமாதியில் இருந்து அறிந்தனன்.* **(6.9.227)**

தியான நீங்கிநன் புளகமே நிறைந்தனன் திண்தோள்
தயாவும் அன்பும்(ம்)ஈ(து) என்னெனத் தயங்குசூ டாலைக்
குயாச லம்தழறிஇ நெடி(து)இருந்(து) ஒன்றுமேல் கூறான்
நியாய மன்னவன் ஆனந்தத்(து) அமிழ்ந்தனன் நிமிடம்.

**பொழிப்புரை:** *சமாதியிலிருந்தும் நீங்கி, நல்ல புளகாங்கிதம் நிறைந்தவன் ஆனான் வலிமை பொருந்திய தோள்களால் தயவும் (கருணையும்) அன்பும் இது என்னே என்று அடக்கத்துடன் நிற்கும் சூடாலை மலை அனைய தனங்களுடன் மார்புறத்*

*தழுவி, வெகுநேரம் அப்படியே இருந்து மேற்கொண்டு ஒன்றும் பேசாமல் இருந்தான். நெறிமுறை உடைய மன்னவன் இன்பக் கடலில் கணத்தில் மூழ்கினான்.* **(6.9.228)**

**மடியின் மேல்அந்த வஞ்சியை வைத்தவன் உரைப்பான்**
**முடி(வு)இல் பேர்இருள் குகைநிகர் மோகநின்(று) என்னை**
**நெடிய புந்தியால் உய்த்தனை உனக்(கு)எவர் நிகரோ**
**கொடிம ருங்குலாய் இயற்றும்கைம் மாறு(ம்)ஒன்(று) உளதோ.**

**பொழிப்புரை:** *தனது மடியின் (தொடையின்) மீது சூடாலையை வைத்துக் கொண்டு சொல்வான். முடிவில்லாத பெரிதான இருண்ட குகைக்கு நிகரான மோகத்தில் இருந்து என்னை அதி சூக்குமமான புத்தியால் கரையேற்றினாய். உனக்கு யார் தான் நிகர் ஆவார்? கொடி போன்ற இடையாளே! உனக்கு செய்யும் பதில் உபகாரம் ஒன்று உண்டோ?* **(6.9.229)**

**வருப வக்கடல் கரையிலாய் நிராசையை மருவும்**
**தரும மேஇதற்(கு) என்கைம்மா(று) உள(து)எனச் சாற்றத்**
**தெரிவை ஓதுவாள் உணங்குபல் கிரியையில் தியங்கும்**
**கருமம் கண்(டு)உனை உய்விக்க நாடினேன் கவன்று.**

**பொழிப்புரை:** *வருகின்ற பிறவிக் கடலின் கரையேறி இருப்பவளே! நிராசையைப் பொருந்தி இருக்கும் தருமம் நிறைந்தவளே! இதற்குப் பதிலாக என்ன கைம்மாறு உள்ளது? என்று மன்னவன் கேட்க, சூடாலை சொல்வாள்: வாடுகின்ற பல தவச் செயல்களால் கலங்குகின்ற கர்மத்தைக் கண்டு உன்னைக் கரையேற்ற வருத்தமாய்த் தேடி வந்தேன்.* **(6.9.230)**

**நீஇ தற்(கு)எனை மேம்பட நிகழ்த்துவ(து) என்னே**
**மேய புன்தொழில் நினைவுகள் சங்கற்பம் விகற்பம்**
**ஆய(து) எத்தனை அவையெலாம் அகற்றினை அன்றோ**
**தூய நாயக என்னலும் வேந்தனும் சொல்வான்.**

**பொழிப்புரை:** *நீ இதற்கு என்னை மேன்மையாகக் கூறுவது என்னே! பொருந்திய அற்பச் செயல்களும், நினைப்புகளும், சங்கற்பம் விகற்பம் ஆகிய எவ்வளவோ அவை எல்லாவற்றையும் நீக்கினாய் அல்லவா! பரிசுத்த நாயகனே! என்று கூறவும், மன்னவனும் சொல்வான்.* **(6.9.231)**

**ஐயம் அற்றேன் ஆசைஅற் றேன்பிறி(வு) அற்றேன்**
**நொய்ய விண்ணைஒத் தேன்பொருள் வடிவமாய் நுடங்கேன்**
**செய்யல் ஆவதோர் நிட்டையுற் றேன்சித்த மகிழ்ச்சி**
**வெய்ய துன்ப(ம்)ஒன்(று) இலன்இது அதுவென விளங்கேன்.**

**பொழிப்புரை:** *சந்தேகம் அகன்றேன், ஆசை நீங்கினேன், பேதம் அற்றேன், சூக்குமமாகிய ஆகாயத்தைப் போன்று இருக்கின்றேன். பொருள்கள் வடிவமாக வாடேன். செய்யத் தக்கதாகிய நிட்டையை அடைந்தேன். மனம் மகிழ்ச்சி, கொடிய துக்கம் ஒன்றிலும் பொருந்தியில்லேன். இது அது என்று விளங்கமாட்டேன்.* **(6.9.232)**

**சோதி மண்டலத்(து) எழுந்ததாய்ச் சுவரினில் படாமல்**
**மீது விஞ்சுதல் குறைத(ல்)அற்(று) இருப்பதோர் விளக்கம்**
**தீதி லாஎனக்(கு) உவமையாம் சகத்தினைத் தீர்ந்து**
**யாது மேவிவிண் நிற்பதற்(கு) இணைஒத்து நின்றேன்.**

**பொழிப்புரை:** *சோதி மண்டலத்தில் உதயமாவதாய், சுவரினில் படாமல் மேலாக விரிதல் குறைதல் இன்றி இருப்பதான ஒரு பிரகாசம் தீதிலாத எனக்கு உவமையாகும். (நித்திய பிரகாசத்துக்கு ஒப்பானேன்) காணப்படும் பொருளான சகத்தை மறந்து, எல்லாமும் ஆகி, ஆகாயம் இருப்பதற்கு ஒப்பாகி இருந்தேன்.* **(6.9.233)**

**உண்(டு)எ னும்தன்மை என்உரு வே(று)ஒன்றும் உரைக்கக்**
**கண்டி லேன்அத னால்எனைக் கருணைசெய் குருநீ**
**முண்ட கப்பதம் தொழுதனன் என்(று)அவன் மொழியத்**
**தொண்டை வாயவள் மேற்செயல் சொல்லுதி என்றாள்.**

**பொழிப்புரை:** *சத்தாக இருக்கும் தன்மையே எனது உருவம், வேறு ஒன்றும் சொல்வதற்குக் காணேன். அதனால் எனக்கு கருணை புரிந்த குரு நீ. தாமரை மலர்ப்பாதம் தொழுதேன் என்று மன்னவன் கூறவும், கோவைக்கனி போன்ற இதழ் உடைய சூடாலை மேற்கொண்டு இனி செய்யும் காரியத்தைச் சொல்லும் என்று கேட்டாள்.* **(6.9.234)**

**பற்று வீடிலன் படிகமேல் பாய்ஒளி என்ன**
**நிற்ற நீசொன்ன செய்குவன் என்றனன் நிருபன்**
**உற்ற(து) ஈ(து)எனில் பேதைமை ஒன்றையும் ஒழித்து**
**மற்றை முன்னுள இயற்கையில் இருப்பது வழக்கே.**

**பொழிப்புரை:** *பற்றிக் கொள்வதும், விட்டு விடுவதும் இல்லாதவன் ஆனேன். படிகத்தின் மீது பாய்கின்ற ஒளி போல, நீ சொல்வதன்படி செய்வேன் என்று மன்னவன் கூறினான். நீ அடைந்தது இதுவென்றால், அறியாமை மாத்திரம் தள்ளி, முன்பு போல அரச வாழ்க்கையில் இருந்து வாழ்வதே முறையாகும்.* **(6.9.235)**

**சிறிது கால(ம்)நாம் இவ்வகை இருந்துபின் தேகம்**
**பிறியு நாள்அந்த நிலையினைப் பெறுதுமால் என்ன**
**நெறிசெல் வேந்தனும் இயைந்தனன் நேரிழை எழுந்து**
**குறிகொள் சங்கற்ப விதியினால் இவைஇவை கொணர்ந்தாள்.**

**பொழிப்புரை:** *சிறிது காலம் நாம் இந்த விதமாய் வாழ்ந்து, பின்பு தேகம் விழுகின்ற நேரத்தில் அந்த நிலையினை (விதேக முத்தியைப்) பெறுவோம் என்று கூற, முறைப்படி நடக்கும் மன்னவனும் சம்மதித்தான். சூடாலை எழுந்து சென்று, குறிப்பாகக் கொண்ட சங்கற்ப நியமத்தால் இன்ன இன்ன கொண்டு வந்தாள்.* **(6.9.236)**

ஏழு வாரிநீர் மணிக்குடத்(து) இவனைநீ ராட்டிக்
கேழு லாமணித் தவிசிடைக் கிளர்வுற வைத்து
வாழி என்றனள் அளவறு சேனையும் வகுத்தாள்
வேழ வெம்பரித் தேரொடும் வீரரால் விளங்க.

**பொழிப்புரை:** *ஏழு கடல் நீரினை இரத்தின மணிக் குடங்களில் கொண்டு வந்து மன்னவனை நீராட்டி, ஒளிபொருந்திய நவரத்தினம் பதித்த சிம்மாசனத்தில் பிரகாசிக்கும்படி அமர்த்தி, நீடூழி வாழ்க என்று ஆசிர்வதித்து, அளவில்லாத யானை, குதிரை, தேர், வீரர்; என சேனைகளையும் உண்டாக்கினாள்.* **(6.9.237)**

இனைய வேலையில் இதய(ம்)ஒத்(து) இன்பமே இயற்றும்
அனைய தேவிசூ டாலையும் அரசனும் எழுந்து
புனையும் வேழமேல் கொண்டனர் பொன்னகர் நோக்கி
வினைசெய் நாற்பெரும் படையொடு மகிழ்வுற மீண்டார்.

**பொழிப்புரை:** *இத்தகைய சமயத்தில் மனம் ஒத்து இன்பமே தருகின்ற அத்தகைய தேவி சூடாலையும், மன்னவனும் ஏழுந்து அலங்கரித்த யானை மீது ஏறினார்கள். செல்வ வளம் மிக்க நகரினைப் பார்த்து, யுத்தம் செய்யும் நால்வகைப் படைகளுடன் மகிழ்ச்சி அடைந்து திரும்பினர்.* **(6.9.238)**

புரியை நண்ணலும் நகர்உறு தானைபொம் என்று
வரிசை யால்எதிர் கொளஇரு தானையும் வயங்கப்
பரிவில் நண்ணினர் நகர்பதி னாயிரம் வருடம்
தெரிவை யோ(டு)இருந்(து) அழிவிலாப் பதம்பின்பு சேர்ந்தான்.

**பொழிப்புரை:** *நகரத்தை அடைந்ததும், நகரத்தில் உள்ள நால்வகை சேனையும் கலகல வென்று வரிசையாக எதிர்கொண்டு அழைக்க, இரு தரப்பு சேனைகளும் கலந்து விளங்க, அன்புடன் நகரத்தை அடைந்தனர். பதினாயிரம் ஆண்டுகள் சூடாலையுடன் வாழ்ந்து, பின்பு அழிவிலாத பதம் அடைந்தான்.* **(6.9.239)**

வள்ள லேஇந்த மரபினால் தொழில்களில் மருவித்
துள்ளும் இன்ப(ம்)இல் சாந்த(ம்)எப் போதினும் தொடர்ந்தால்
தெள்ளு போகமும் வீடு(ம்)உண் டாம்என்று தெளிந்த
உள்ள மாதவ வசிட்டமா முனிவரன் உரைத்தான்.

**பொழிப்புரை:** *இராகவனே! இந்த முறைமையினால் செயல்களில் கூடித் துள்ளி எழுகின்ற விடய சுகம் இன்றி சாந்தமாக எப்போதும் தொடர்ந்தால் தெளிவான போகமும், மோட்சமும் கிடைக்கும் என்று தெளிந்த மனதையும், மகா தவத்தையும் உடைய வசிட்ட முனிவர் கூறினார்.* **(6.9.240)**

**(நிருவாணப் பிரகரணத்தில் சிகித்துவசன் கதை முற்றும்)**

# (x) கசன் கதை

*முன்னர் சுய ஆன்ம ஞானம் ஆசாரியரின் முயற்சியால் பெறலாம் என அனேக உள்கதைகள் மூலமாகத் தெரிவிக்கப்பட்டது. இப்போது சித்தத் தியாகமே சகலத் தியாகமாம் அன்னியம் அன்று என்பதற்காக இக்கதை சொல்லப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**தெளிவின் மிக்(கு)உயர் சிகித்துவ சன்கதை செப்பினன் இவ்வாறே**
**அளிய நிற்றியால் அருந்துயர் அணுகலை அனையவன் நெறிபோலக்**
**குளிர்மு கச்சுரர் குருமகன் உணர்ந்தனன் அதுகுறித்(து) உணர்(க)என்ன**
**வெளிப்ப டஅவ(ன்)உ ணர்ந்துள நெறியினை விளம்புதி எனக்கேட்டான்.**

**பொழிப்புரை:** *தெளிவினாலே மிக உயர்ந்த சிகித்துவசன் கதை கூறினோம். இவ்வாறே கருணையே வடிவான இராகவனே! நீ இருப்பாய். பெருந்துயர் ஒன்றையும் நீ அடையமாட்டாய். அந்த மன்னவனின் மார்க்கம் போல குளிர்ந்த முகம் உடைய தேவர்களின் குருவின் மகன் உணர்ந்தனன். அது குறித்து தெரிந்து கொள்வாய் என்று கூறவும், வெளிப்படையாக அந்த கசன் உணர்ந்துள்ள நெறியினைச் சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொண்டார் (இராம பிரான்).* **(6.10.1)**

**குரிசில் கேட்டலும் வசிட்ட(ன்)அங்(கு) உரைசெய்வான் குருமகன் கசன்என்பான்**
**தெரிப தத்தொடு பதப்பொருள் தெரிந்துளோன் தேவர்தே சிகன்முன்போய்**
**விரிபி றப்(பு)எனும் கூட்டினின்(று) உயிர்எனும் வெம்கரி புறம்போகைக்(கு)**
**உரிய ஆ(று)எது கூ(று)எனக் கேட்டலும் உம்பர்மந் திரிசொல்வான்.**

**பொழிப்புரை:** *இராமபிரான் கேட்கவும், அதற்கு வசிட்ட முனிவர் கூறுவதாவது... குருவின் (பிரகஸ்பதி) மகன் கசன் எனப் பெயர் உடையவன் எல்லா சாத்திர அர்த்தமும் தெரிந்தவன் தேவர்களுடைய குருவின் முன் சென்று "விரிகின்ற பிறப்பு என்கின்ற கூட்டிலிருந்து சீவன் என்ற கொடிய யானை வெளியே போவதற்கு உரிய மார்க்கம் எது என்று கூறுவீர்" என்று கேட்கவும், தேவ குரு சொல்வான்.* **(6.10.2)**

**அனர்த்த மாமக ரங்களுக்(கு) உறையுளாய் அகன்றஇப் பவவேலை**
**கனத்த தோர்சக லத்தியா கத்தினால் கடக்கலாம் என்(று)ஓதத்**
**தனத்தை ஆதியாம் சகலமும் விட்டனன் தனியனாய்க் கசன்சென்று**
**வனத்தின் மேவினன் எட்டிஆண் டிருந்தனன் மறித்தவன் பிதாவந்தான்.**

**பொழிப்புரை:** *தொல்லைகள் என்னும் முதலைகள் வாழும் இருப்பிடமான அகன்ற இந்தப் பிறவிக் கடலினை அதிதிடமாக எல்லாவற்றையும் தியாகம் செய்வதனால் கடக்கலாம் என்று கூறவும், கசன் செல்வம் முதலிய அனைத்தையும் விட்டனன். தனி ஒருவனாகச் சென்று காட்டினை அடைந்தனன். எட்டு ஆண்டுகள் இருந்தான். மறுபடியும் தந்தையிடம் வந்தான்.* **(6.10.3)**

**வந்த தந்தையை வணங்கியே சகலமும் மாற்றியே எட்(டு)ஆண்டு**
**சிந்தை அற்(று)இருந் தும்துயர் தீர்ந்திலேன் நிமலனே என்னென்று**
**நொந்து கூறலும் சகலமும் நீக்(கு)என நுவன்றுமீ ளவும்போனான்**
**தந்தை போனபின் வற்கலை முதலிய சகலமும் நீத்தான்.**

**பொழிப்புரை:** *வருகை புரிந்த தந்தையை வணங்கி "எல்லாவற்றையும் விடுத்து எட்டு ஆண்டுகள் அப்பொருள்களைப் பற்றிய சிந்தனையை அறவே நீக்கி இருந்த போதிலும் துக்கம் தீரவில்லை, நிர்மலமான தந்தையே! எதனால்?" என்று மனம் வருந்திக் கூறவும், "எல்லாவற்றையும் விடுவாயாக" என்று கூறி தந்தை மறுபடியும் போய்விட்டான். தந்தை சென்ற பின்பு மரவுரி முதலிய அனைத்தையும் முழுவதுமாக நீக்கினான்.* **(6.10.4)**

பானு மாமதி முகில்உடு முதலிய பற்(று)அறு சரத்கால
வானம் ஒத்தனன் தமியனாய்க் கசன்சென்று வனத்தின்மீ ளவும்தாதை
யான வன்தனை எய்தினன் அன்பினால் அடிதொழு(து) அயர்(வு)எய்தி
யா(ன்)அ ணிந்துள வற்கலை முதலிய யாவையும் அறநீத்தேன்.

**பொழிப்புரை:** *சூரியன், அழகான சந்திரன், மேகங்கள், நட்சத்திரங்கள் முதலான யாவும் சம்பந்தம் இல்லாமல் நிலைத்திருக்கும் சரத்கால ஆகாயம் போன்றவன் ஆனான். தனியனாய்க் கசன் சென்று ஒரு காட்டில் மறுபடியும் தந்தையாகிய குருவை அடைந்தான். அன்புடன் பாதம் தொழுது, களைப்புடன் "யான் அணிந்துள்ள மரவுரி முதலான யாவற்றையும் முழுதும் துறந்தேன்"* **(6.10.5)**

**யாது நீத்து(ம்)என் பால்இளைப் பாறிலேன் இனிச்செயல் ஏ(து)என்னத்**
**தாதை கூறுவான் மனத்தையே உலகெலாம் சகலம்என்(று) உரைசெய்வர்**
**ஆத லால்மனம் அகற்றுதல் சகலமும் அகற்றுதல் அதனாலே**
**கேத நீங்(கு)என்(று) அகன்றனன் மந்திரி கிளர்கசன் இதுசெய்தான்.**

**பொழிப்புரை:** *"எதை விட்ட போதிலும் என்னிடத்தில் சித்த அமைதி உண்டாகவில்லை. இனி செய்ய வேண்டியது என்ன?" என்று கசன் கேட்கவும், தந்தை கூறுவான்... பெரியோர்கள் யாவரும் மனதே சகலமும் என்று சொல்வார்கள். ஆதலால் மனதை அகற்றுதலே சகலத்தையும் அகற்றுவதாகும். அதனாலே துன்பம் நீங்கும் என்று சொல்லிச் சென்றனன் ஆசாரியன். கசன் இதனைச் செய்தான்.* **(6.10.6)**

**சித்தம் ஏ(து)என நாடினன் அறிந்திலன் தேக(ம்)ஆ திகள்எல்லாம்**
**சித்தம் அன்(று)எனில் குறைசெயா இதனையான் தீர்ந்து(ம்)என் பயன்என்னச்**
**சித்தம் ஏ(து)எனச் சுரர்குரு விடத்துறச் சென்றுகேட் டலும்அன்னான்**
**சித்தம் ஆவது நான்எனச் செப்புவர் சித்தத்தை அறிவுற்றோர்.**

**பொழிப்புரை:** *சித்தம் எது என்று ஆராய்ந்தனன். தெரிந்திலன். தேகம் முதலிய யாவும் சித்தம் அல்ல என்றால் குற்றம் செய்யாத இவற்றை அகற்றியும் என்ன பயன் என்று சித்தம் என்பது எது என்று தேவ குரு இருக்கும் இடத்தைத் தேடிச் சென்று அடைந்து கேட்டான். தேவ குரு "மனமாவது நான் (அகங்காரம்) எனச் சொல்வர் சித்தத்தை அறிந்தவர்கள் (என்று தொடர்ந்து சொல்வான்)."* **(6.10.7)**

**உயிர்கள் யாவையும் உள்ளுற நான்என உன்னுபா வனைதானே**
**செயிர்செய் சித்த(ம்)என்(று) உரைத்தலும் இங்(கு)இது தீர்ப்பது மிகவன்பாம்**
**வயிர மாவது தீர்வ(து)எவ் வகைஎன மறித்துமந் திரிசொல்வான்**
**வெயில்செய் துன்பமோ சிறி(து)இலை அகங்கரம் விடமிக எளிதாகும்.**

**பொழிப்புரை:** *பிராணிகள் அனைத்தும் உள்ளுக்குள்ளே 'நான்' என்று எண்ணுகின்ற பாவனையே துன்பம் தருகின்ற சித்தம்" என்று கூறவும், "இங்கு இதை நீக்கி விடுவது மிக மிக முடியாத காரியம். வச்சிரமாக இருக்கும் இதனை அகற்றுவது எந்த வகையால்" என்று கசன் கேட்கவும், ஆசான் மறுபடியும் சொல்வான்... வெயில் தருகின்ற துன்பம் கொஞ்சமும் இல்லை, அகங்காரம் விடுவதற்கு மிகவும் எளிதாகும்.* **(6.10.8)**

**அலர்க சக்குமுன் இமைக்குமுன் அகங்கரம் அகற்றுதல் எளிதாகும்**
**பலஉ ரைப்ப(து)என் ஏகமாய் அனந்தமாய்ப் பரமசித் தேயாகிக்**
**குலவு சுத்தமாய் விண்ணிலும் நுண்ணிதாம் குறைவிலாப் பொருள்நிற்கும்**
**சலனம் அற்(று)அதைப் பாவனை செய்(து)உப சாந்தனாய் இடர்தீர்வாய்.**

**பொழிப்புரை:** *மலரைக் கசக்கும் முன், கண் இமைக்கும் முன் அகங்காரத்தை நீக்குதல் எளிதாகும். பலவிதமாகக் கூறுவதனால் என்ன பயன்? ஏகமாய், முடிவு இல்லாததாய், மேலான சித்து ஆகி, விளங்குகின்ற சுத்தமாய், ஆகாயத்தினும் சூக்குமமாய், சலனம் இல்லாத பிரம்மத்தைப் பாவனை (சிந்தனை) செய்து, மேலான சாந்தியுடையவனாய்த் துயரம் தீர்வாய்.* **(6.10.9)**

**சுத்த மித்தையே ஆதலின் அகங்கரம் தொலைந்துபோம் மெய்யான**
**தத்து வம்தனை நினைதலால் சித்திலே சாற்(று)அகங் கரம்எங்கே**
**மெத்து நீரிலே புழுதியும் கனலிலே மேவுதோ யமும்உண்டோ**
**நித்த ரூபத்தை நினைந்(து)இவன் நான்என நிச்சயம் அறநிற்பாய்.**

**பொழிப்புரை:** *முழுதும் மித்தையே ஆதலால் அகங்காரம் தொலைந்து போகும். சத்தியமான சித் சொரூபத்தையே பாவனை செய்தலால், சித்தில் கூறிய அகங்காரம் எங்கே உள்ளது? மிகுந்த தண்ணீரில் புழுதியும், நெருப்பில் தண்ணீரும் உண்டோ? நித்தியமான பிரம்ம வடிவத்தைச் சிந்தித்து, இவன் நான் என்பதான நிச்சயத்தைத் தவிர்த்து நிற்பாய்.* **(6.10.10)**

**திக்கும் காலமும் முதலிய வசத்(து)உறு சிறுவடி(வு) அறத்துன்பம்**
**தொக்க அன்னவற் றால்மறை யாமலே சூக்கமாய் நொய்தாகி**
**மிக்க சோதியாய் அனைத்துமாய் ஒன்றுமாய் மெய்யறி(வு) ஒன்றேஆம்**
**தக்க இந்நிலை நில்லென உரைத்தனன் தலைமையாம் உபதேசம்.**

**பொழிப்புரை:** *திசையும், காலமும் முதலான இவைகளின் வசத்தில் பொருந்திய அற்பமாகிய வடிவம் இல்லாமல் (எல்லையற்றதாய்) துயர்மயமான அவைகளினால் மறைவுபடாமல், சூக்குமமாய், தெளிவாய், மிகுந்த சோதியாய், யாவுமாய், ஏகமாய், சத்திய ஞான வடிவம் ஏகமாம் (ஒன்றே ஆம்) தகுந்த இந்த நிலையில் நிற்பாய் என்று கூறினான், (இது) தலையாய - முக்கியமான உபதேசம்.* **(6.10.11)**

**சீவன் முத்தனாம் நிலைமைபெற்(று) அகங்கரம் தீர்ந்(து)என(து) என்னாமல்**
**மேவு உள்பந்தம் வீழ்ந்துபோய்ப் புந்தியில் விகற்பங்கள் அனைத்தும்போய்ப்**
**பாவம் முற்றிய கசன்நின்ற நிலையில்நீ பற்றுதல் அறநிற்பாய்**
**கேவ லத்(து)இந்த அகங்கரம் பொய்ம்மையாம் கெடுத்தல்பற் றுதல்வேண்டாம்.**

**பொழிப்புரை:** *சீவன் முத்தன் நிலையை அடைந்து, அகங்காரம் தீர்ந்து, எனது என்பதை எண்ணாமல், பொருந்திய உள் பந்தம் (கட்டு) விழுந்து ஒழிந்து, புத்தியில் அனைத்து விகற்பங்கள் நீங்கி, பாவனை முதிர்ந்த கசன் அடைந்த நிர்விகற்ப நிலையில் இராகவனே! நீ பற்று அற நிலைநிற்பாய். கைவல்யத்தில் இந்த அகங்காரம் பொய்யேஆம். தள்ளுதலும் கொள்ளுதலும் வேண்டாம்.* **(6.10.12)**

**பொய்ய தாம்முயற் கொம்பினைப் பற்றவும் போக்கவும் நினைப்பார்ஆர்**
**ஐய னேபர போதபூ ரணத்திலே அயல்ஒன்று வருமா(று)என்**
**பொய்ய தாகிய அனேகபா வனையினைப் பொருந்தல்புன் பிறப்பாகும்**
**ஐயம் இன்றிய ஏகபா வனையினில் அழுந்துதல் பவம்தீர்தல்.**

**பொழிப்புரை:** *முழுவதும் பொய்யே ஆகின்ற முயல்கொம்பினைப் பற்றிக்கொள்ளவும், தள்ளி விடவும் நினைப்பவர் யார்? ஐயனே! பிரம்ம ஞானமாகிய பூரணத்தில் வேறொன்று வருகின்ற விதம் என்ன? (எனக் கேட்ப), அசத்தியமாகிய பலவிதமான பாவனைகளைக் (எண்ணங்களைக்) கூடுதல் கீழான பிறப்பாகும். சந்தேகம் இன்றிய ஒரே வத்து பாவனையில் கூடுதல் பிறப்பு இறப்பு தீர்ந்து போவதற்குக் காரணமாகும்.* **(6.10.13)**

**(நிருவாணப் பிரகரணத்தில் கசன் கதை முற்றும்)**

# (xi) மித்தியா புருடன் கதை

*முன்பு சித்தத்தை விடுதலே சகலமும் விட்டதாகும் எனச் சொல்லப்பட்டது. இப்போது விசாரம் இல்லாத போது இன்பமாம் இவ்வகங்காரம் சம்சாரத்தில் வியர்த்தமாகவே துன்புறும் என்பதற்காக இக்கதை சொல்லப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

இருமையோ(டு) ஒருமை நீக்கி நின்(று)அதில் எய்தி இன்பம்
மருவுவாய் மித்தை யான புருடன்போல் வருந்த வேண்டாம்
குரிசிலே எனவும் எந்தாய் கூறுபொய்ப் புருடன் ஆனோன்
ஒருபயன் இன்றித் துன்பம் உற்றவன் உலைந்த வா(று)என்.

**பொழிப்புரை:** *துவைதத்துடன் ஏகத்தையும் நீக்கி, எஞ்சி நிற்பதில் நிலைபெற்று இன்பம் பெறுவாய், மித்தையான புருடன் போல் வருந்த வேண்டாம் இராகவனே! என்று (வசிட்டர்) கூறவும், எனது ஆசிரியத் தந்தையே! கூறிய பொய்யான புருடன் ஒரு பிரயோசனமும் இல்லாமல் துன்பத்தை அடைந்து அவன் அலைந்த விதம் என்ன?* **(6.11.1)**

ஞானமாம் அமுதி னாலே நலம்பெற நிறைந்த தேனும்
யா(ன்)அறி வுறஇத் தன்மை இயம்(பு)என இராமன் கேட்ப
மானமார் வசிட்டன் சொல்வான் வள்ளலே நகைக்கு மூல
மானஇக் கதையான் சொல்வ(து) அறவியப்(பு) உளது மன்னோ.

**பொழிப்புரை:** *ஞானமாகிய அமிர்தத்தினால் நலம்பெற நிறைந்தாலும், இத்தன்மையை யான் அறிந்து கொள்ளும்படி கூறுவீராக என்று இராமபிரான் கேட்கவும், மாட்சிமை பொருந்திய வசிட்ட முனிவர் கூறுவார்... வள்ளலே சிரிப்புக்கு இடமான இந்தக் கதையை யான் கூறுவது முழுவதும் வியப்புக்கு உரியதாம்.* **(6.11.2)**

ஒருதலத்(து) ஏகாந் தத்தில் உற்றசூ னியத்தில் உண்டாய்
மருவு(ம்)அத் தலத்தில் நிற்போன் மாயையந் திரம யத்தோர்
புருட(ன்)உண்(டு) அஞ்ஞா னத்தோன் புன்மையாய் இன்மைப் பண்பாய்
மிருதுவாம் புந்தி உள்ளோன் கேவலம் மிகுந்த மூர்க்கன்.

**பொழிப்புரை:** *ஒரு தனித்த இடத்தில் இருந்த சூனியத்தில் உண்டாகி, உண்டான அந்த இடத்தில் இருப்போன் மாயை யந்திர மயமாக ஒரு புருடன் (அகங்காரன்) இருக்கின்றான். அறியாமை உடையவனாய், கீழாய், குழந்தையின் குணம், அற்ப புத்தி உள்ளவனாய் கேவலம் மிகுந்த மூர்க்கன்.* **(6.11.3)**

வானிலே சுருண்டு தோன்றும் மயிர்ச்சுருள் மருத்த லத்தில்
கானல்நீர் என்ன அன்னான் தோன்றியே கலந்த பாழில்
சூனியம் அலா(து)ஒன்(று) இல்லை யாதொன்று தோற்றிற்(று) அங்கே
மானவ அதுவும் அன்னான் மற்றவன் வளர்வும் ஆங்கே.

**பொழிப்புரை:** *ஆகாயத்திலே சுருளாகத் தோன்றும் மயிர்ச் சுருள், பாலை நிலத்தில் தோற்றம் அளிக்கும் கானல் நீர் போல, அந்த மித்தையா புருடன் உண்டாகிக்*

*கலந்திருக்கின்ற சூனியத்தில் சூனியமே அல்லாமல் வேறொன்றும் இல்லை. அவ்விடத்தில் எந்தப் பொருள் தோற்றம் அளித்ததோ (அதாவது அகங்காரத்தினால் உண்டானது) இராகவனே! அதுவும் அவனே ஆகும். அந்த மூர்க்கனது வளர்ச்சியும் அப்படியே.* **(6.11.4)**

**வேறு மாயே எப்போதும் விளங்கும் தன்மை அவன்காணான்**
**கூறு வான்ஓர் சங்கற்பம் கூடி விண்ணி னைப்பேணி**
**ஊறு படாமல் வைக்குது(ம்)ஈ(து) உயர்ந்த தேஎன்(று) உளத்(து)உன்னித்**
**தேறும் உவகை யுடன்விண்ணைச் சேமிப் பான்ஓர் வீ(டு)அமைத்தான்.**

**பொழிப்புரை:** *பிரபஞ்சத்திற்கு வேறாக எப்போதும் விளங்குகின்ற தன்மையை (சித்தினை மந்த புத்தியுள்ளதால்) அவன் காணவில்லை. சொல்லப்பட்ட அந்த மித்தையா புருடன் ஒரு சங்கற்பத்தை அடைந்தான். ஆகாயத்தைக் காப்பாற்றி கெடாமல் வைப்போம், இது மேலானதே என்று உள்ளத்தில் எண்ணி, தெளிந்த சந்தோஷத்துடன் ஆகாயத்தைக் காப்பாற்றும் பொருட்டு ஒரு வீட்டினை அமைத்தான்.* **(6.11.5)**

**அந்த மனையில் விண்ணினைவைத்(து) அளிக்கின் றோம்என்(று) அதில்ஆசைப்**
**பந்தம் உறலும் அவன்வீடு படர்கா லத்தால் அழி(வு)எய்தி**
**இந்த மருத்தால் தரங்கம்போல் இருது முடிவால் வருடம்போல்**
**சிந்தி ஒழிய அவன்கண்டு சேண்போ யின(து)என்(று) அலறுற்றான்.**

**பொழிப்புரை:** *அந்த வீட்டில் ஆகாயத்தை வைத்துக் காக்கின்றோம் என்று அதில் ஆசையாகிய பந்தக் கட்டு இடவும், அவன் வீடு வந்துற்ற காலத்தில் அழிந்து, காற்றினால் நீரலை போலவும், சரத் கால மேகம் போலவும் கெட்டுப் போகவும் அவன் அதைப் பார்த்து, ஆகாயம் போய்விட்டது என்று அலறினான்.* **(6.11.6)**

**நில்லா வீட்டில் விண்ணேயோ நீஎங்(கு) அகன்றாய் ஒருகணத்தில்**
**அல்லாய் ஆனாய் எனவீட்டின் ஆகா சத்துக்(கு) அறப்புலம்பிப்**
**பொல்லா மனத்தால் மீண்(டு)அங்(கு)ஓர் புதிய கிணறு சமைத்(து)ஒருவர்**
**கொல்லா(து) இதனில் இருத்து(ம்)எனக் கூ(ப்)ஆ காச பரன்ஆனான்.**

**பொழிப்புரை:** *வீட்டில் நில்லாமல் ஆகாயமே! நீ எங்கு சென்றாய்? ஒரு கணத்தில் இல்லாமல் ஆனாய் என்று வீட்டின் ஆகாயத்துக்கு மிகவும் புலம்பி, பொல்லாத மனம் உடைய அவன் மறுபடியும் அந்த இடத்தில் புதிய ஒரு கிணறு உண்டாக்கி எவரும் கெடுக்காத வண்ணம் இதில் ஆகாயத்தை வைப்போம் என்று கிணற்று ஆகாயத்தில் பற்றுள்ளவன் ஆனான்.* **(6.11.7)**

**காலம் அதனால் கூபந்தான் கழித லோடும் கதறுற்றான்**
**சால வருந்தி மீண்(டு)அங்கே தனைக்காப் பதற்(கு)ஓர் குடம்பண்ணிக்**
**கோலம் உடைய(து) எனமகிழ்ந்து கும்(ப)ஆ காச பரன்ஆனான்**
**நீல முகிலே அக்குடமும் நிகழ்கா லத்தால் உடைந்ததுவே.**

**பொழிப்புரை:** *காலத்தினால் அந்த கிணறும் அழிந்த போது கதறினான். மிகவும் வருந்தி, மறுபடியும் அங்கே தன்னைக் காப்பதற்கு ஒரு குடத்தைச் செய்து, அழகாக இருக்கிறது என்று மகிழ்ந்து, குட ஆகாயத்தில் பற்றுள்ளவன் ஆனான். நீல மேக வண்ணனே! அந்தக் குடமும் வந்த காலத்தால் உடைந்தது.* **(6.11.8)**

**நம்பி நம்பி அடைந்த(து)எலாம் நாசம் எய்தத் திருவிலிஅக்**
**கும்ப விண்ணுக்(கு) அழுததன்பின் குண்டம் ஒன்(று)அங் கேகெல்லித்**
**தம்பம் என்று தற்பரனாய்ச் சார்ந்தான் அந்தக் குழிதனையும்**
**தும்பி காலம் அழித்துளதால் துன்னும் இருளைச் சுடர்போல.**

**பொழிப்புரை:** *நம்பிக்கை வைத்து நம்பிக்கை வைத்து அடைந்தவை எல்லாம் நாசமாகிப் போக, அதிர்ஷ்டம் இல்லாதன் குட ஆகாயத்திற்கு அழுது, அதன் பின்னர் அங்கே குழி ஒன்றைத் தோண்டி, இது அசையாது என்று அதன்மீது பற்றுள்ளவன் ஆனான். அந்த பள்ளத்தையும் நெருங்கிய இருளைக் கெடுக்கின்ற பிரகாசம் போல, ஒரு காலத்தில் யானை அதனை அழித்தது.* **(6.11.9)**

**குண்ட விண்ணுக்(கு) அழுததன்பின் குலவு நாற்சா கரங்கட்டி**
**மண்டு மருள்கூர் தற்பரனாய் வாழ்ந்தான் அந்த மனைதனையும்**
**அண்ட முழுதும் கொல்காலம் அழிவு செய்ய அதற்(கு)அழுது**
**சண்ட பவனன் இடைப்பட்ட சருகு போலத் தளர்ந்(து)உலைந்தான்.**

**பொழிப்புரை:** *குழி ஆகாயத்திற்கு அழுது, அதன் பின்னர் நாற்புறமும் தாழ்வாரம் உள்ளபடி ஒரு வீடு அமைத்து அதில் மிகுந்த மயக்கத்துடன் பற்றுள்ளவனாகி வாழ்ந்தான். அண்டங்களை எல்லாம் அழிக்கின்ற காலமானது அந்த வீட்டினையும் நாசம் செய்ய, அதற்கு அழுது, மிகப் பெருங்காற்றில் அகப்பட்ட சருகு போலத் தளர்ச்சி அடைந்து நொந்தான்.* **(6.11.10)**

**தடனார் நாற்சார்க்(கு) அழுததன்பின் தற்காப் பதற்(கு)ஓர் குதிர்பண்ணி**
**இடனார் குதிர்புக்(கு) அவன்இருப்ப இதுவும் காலன் இறப்பித்தான்**
**உடனே குதிர்விண் ணினுக்(கு)அழுதான் ஒன்றோ வீடு குதிர்குண்டம்**
**குடநாற் சாரம் என்பவற்றால் குறைவில் காலம் துயருற்றான்.**

**பொழிப்புரை:** *விசாலமான அந்த நாற்புறமும் தொட்டிக்கட்டு அமைந்த வீட்டுக்கு அழுது அதன் பின்னர், தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்கு (தானியம் கொட்டி வைக்கும்) ஓர் குதிர் அமைத்து, விசாலமான இடம் அமைந்த அந்த குதிராகிய கூட்டினுள் நுழைந்து வாழ்ந்து கொண்டிருக்க, இதனையும் காலன் அழித்துவிட, உடனடியாக அவன் அந்த குதிர் ஆகாயத்திற்கு அழுதான். (இப்படியாக) வீடு ஆகாயம், குதிர் ஆகாயம், நாற்சதுர மனை ஆகாயம், குழி ஆகாயம், குட ஆகாயம் எல்லாவற்றுக்குமாக நீண்டகாலம் துன்பத்தை அடைந்தான்.* **(6.11.11)**

**விண்ணை வீட்டில் அடைத்தவனாய் வீட்டில் விண்தான் தானாகி**
**உள்நை வுற்ற பெருந்துயரால் உழைக்கும் பிழைக்கும் ஓர்ஒருகால்**
**எண்ணி நிற்ப(து) இதுபோவ(து) இதுஎன்(று) அறியான் இவன்என்று**
**புண்ணி யத்தின் வடிவானோன் புகல வீரன் புகலுற்றான்.**

**பொழிப்புரை:** *ஆகாயத்தை வீட்டில் அடைத்தவனாய், வீட்டின் ஆகாயமே தானாகி, உள்ளே நொந்து பெரும் துன்பத்தால் அலைச்சலையும், அலுப்பினையும் அடையும், ஒவ்வொரு சமயத்தில் நிலைப்பது இது, போவது இது என்று அறியாதவன் இவன் என்று தரும வடிவமாகிய வசிட்டர் கூறவும், வீரனாகிய இராமபிரான் கூறுவதாவது.* **(6.11.12)**

**பொய்யா மனிதன் கதையால்என் புகன்றாய் மாயா புருடனையே**
**ஐயா இவன்விண் காத்தன(ன்)என்(று) அறைந்த(து) ஏ(து)என்(று) அருள்(க)என்ன**
**மெய்யாம் வசிட்டன் உரைசெய்வான் மித்தியா புருடன் இவன்என்ற**
**மையார் முகிலே சூனியமாம் வானில் எழுந்த அகங்கரமே.**

**பொழிப்புரை:** *மித்தியா (பொய்யான) புருடன் கதையினால் எதைக் கூறினீர்? மித்தியா புருடனைப் பற்றியே அது. ஐயனே! இவன் ஆகாயத்தைக் காப்பாற்றினான் என்று கூறியது எது என்று அருளிச்செய்வீர் என்று கேட்கவும், உண்மையான வசிட்ட முனிவர் உரைப்பார்... கார்மேக வண்ணனே! மித்தியா புருடன் (பொய்யான மனிதன்) என்று கூறிய இவன், சூனியமாம் (ஒன்றுமில்லாத) ஆகாயத்தில் உண்டான அகங்காரமே ஆகும்.* **(6.11.13)**

**இந்த உலகெல் லாம்இருக்கும் இந்த விண்ணே தநிறைவுற்(று)**
**அந்தம் இன்றிச் சிருட்டிதனக்(கு) ஆதி தனில்தா னேநிற்கும்**
**மைந்த அதன்பால் அகங்காரம் மருத்தின் பரிசம் வருவதுபோல்**
**முந்து தோன்றித் தனைக்காக்க முயன்றான் வடிவாய் முளையாதோன்.**

**பொழிப்புரை:** *இந்த உலகம் எல்லாம் இருக்கும் இந்த ஆகாயம் எதுவோ அது நிறைந்து, முடிவு இன்றி, சிருட்டிக்கு முன்பே சுயமாகவே இருக்கும். மைந்தனே! அதனிடத்தில் அகங்காரமானது காற்றில் தொடு உணர்ச்சி (பரிசம்) வருவது போல், முதலில் உதயமாகி தன்னைக் (ஆத்மாவைக்) காக்க முயற்சித்தான், சூனியமானவன் (வடிவம் ஒன்றும் இல்லாதவன்).* **(6.11.14)**

**கூவம் குண்டம் குடநாற்சார் குதிர்என் பனவாம் குரம்பைகளை**
**மேவ நானா விதமாக விதித்து மீண்டு மீண்(டு)இழந்து**
**தாவம் உற்றான் உடல்தோறும் தனைக்காத் தனன்என்(று) ஆகாச**
**பாவ னைக்கே நிலைப்பட்டான் பாழே வருந்திப் பதைத்தனனால்.**

**பொழிப்புரை:** *கிணறு, குழி, குடம், நாற்சாரி, குதிர் என்று சொல்லப்பட்ட தேகங்களைப் பொருந்த பலவகையாக உண்டாக்கி திரும்ப திரும்ப இழந்து துன்பம் அடைந்தான். உடல்தோறும் தன்னைக் காத்தனன் என்று ஆகாச பாவனைக்கே நிலையானான். வீணாக வருத்தப்பட்டு அலறினான்.* **(6.11.15)**

**விண்நான் என்றே சேமித்து வீட்(டு)ஆ காசம் ஆதிகளில்**
**நண்ணா மெலிவுற் றிடும்மித்தை யான்போல் வருந்தா(து) ஒழிகமலர்க்**
**கண்ணா விண்ணின் மிகப்பெரிதாய்க் களங்கம் அற்று நுண்ணியதாய்**
**எண்ணால் அடங்கா அழி(வு)இல்சிவ இயல்ஆத் துமதத் துவம்தானே.**

**பொழிப்புரை:** *ஆகாயம் நான் என்றே காப்பாற்றி, வீட்டு ஆகாயம் முதலியவற்றில் பொருந்தி தளர்வினை அடைந்திடும். பொய்ப்புருடன் போல் வருந்தாது ஒழிக, மலர்க்கண்ணா! ஆகாயத்தினும் மிகவும் வியாபகமாய், மாசற்று சூக்குமமாய், எண்ணிக்கையில் அடங்காத அழிவற்ற சிவமே சுபாவமான ஆத்ம தத்துவம் ஆகும்.* **(6.11.16)**

**அவ்ஆத் துமதத் துவம்காணல் ஆமோ எவர்க்கும் அகப்படுமோ**
**இவ்வாறு இருக்க உடல்இறந்தால் இத(ு)ஆ காச மாத்திரத்தை**
**வெவ்வாள் அரசே நான்இறந்தேன் என்று மெலிவர் விவேகம்(ம்)இலோர்**
**தவ்வா விசும்பு கடாதிகள்தான் தகர்ந்த போது தணந்திடுமோ.**

**பொழிப்புரை:** *அந்த ஆத்ம தத்துவம் காணப்பெறுமோ? எவர்க்காவது கிடைக்குமோ? இவ்வாறிருக்க தேகம் இறந்தால் உள்ளிருக்கும் ஆகாச மாத்திரத்தைக் கொடிய வாள் ஆயுதத்தைத் தரித்த அரசே! நான் இறந்தேன் என்பதாக தளர்ந்து போவர் விவேகம் இல்லாதவர். தவிர்க்க முடியாத ஆகாயமானது குடம் முதலியவைகள் அழிந்த போது அழியுமோ? (நீங்கிப் போமோ?)* **(6.11.17)**

**கடம்(ம்)அ(து) உடைந்தால் விண்பிரியா காயம் அழிந்தால் உயிர்அழியா**
**தடவி தாம்சின் மாத்திரமாய்ச் சத்தாய் விண்ணின் நுண்ணியதாய்த்**
**தொடரும் அணுவுக்(கு) அணுவாகும் சொரூபம் மைந்தா நான்என்று**
**படரும் அனுபூ தியின்அளவே பயிலும் நபம்போல் நசித்திலதால்.**

**பொழிப்புரை:** *குடமானது உடைந்து போனால் ஆகாயமானது பிரியமாட்டாது. தேகம் அழிந்தால் ஆத்மா அழியமாட்டாது. விசாலமான அறிவு மாத்திரமாய், இருப்பு மாத்திரமாய், ஆகாயத்தினும் அதிசூக்குமமாய், தொடர்ந்திருக்கும் அணுவுக்கும் அணுவாகும் வடிவம் மைந்தா! அனுபூதியின் அளவே ஆகும், யான் என்று சொல்லிய அகங்காரமானது குடத்தைப் போல் அழியும்.* **(6.11.18)**

**யாதும் என்றும் எவ்விடத்தும் இறத்தல் பிறத்தல் இலதாகும்**
**ஓதும் விவர்த்த ரூபத்தால் உலகாய்ப் பிரம மேவளரும்**
**ஆத லால்இவ் வுலகெல்லாம் அடியும் முடியும் நடுவு(ம்)அறப்**
**பேதம் அறப்பா வாபாவம் பிறவாப் பொருள்என்(று) இடர்தீர்வாய்.**

[*பாவாபாவம் = பாவ அபாவம்]

**பொழிப்புரை:** *எதுவும், எப்பொழுதும், எவ்விடத்திலும் இறத்தலும் பிறத்தலும் இல்லாததாக ஆகும். வேதாந்தங்களில் சொல்லப்பட்ட விவர்த்த வடிவத்தாலே ஜகத்தாய் பிரமமே தோற்றம் அளிக்கும். ஆதலால் காணப்படும் இந்த உலகம் எல்லாம் அடியும் முடியும் நடுவும் இல்லாத பேதமற்ற பாவமும் அபாவமும் உண்டாகாமல் இருக்கின்ற பர வத்து என்று எண்ணி துயர் நீங்குவாய்.* **(6.11.19)**

**ஆபத் துக்கெல் லாநிலயம் அநித்தம் அவசம் அவிவேகம்**
**பாபத் துக்கு முதல்மடமை பவவித்(து) அழிவைப் பற்றியது**
**தாபத் துக்(கு)ஓர் இடமான தக(வு)இல் அகங்கா ரம்தன்னை**
**நீபற்(று) இல்லா அறிவாலே நீக்கில் அதுவே நிமலநிலை.**

**பொழிப்புரை:** *ஆபத்துகளுக்கெல்லாம் இடமாகியும், அநித்தியமாயும், விவேகம் அற்றதாயும், பாவத்துக்கு முதலாகியும், அஞ்ஞானமாகியும், பிறவிக்கு வித்தாகியும், நாசம் உடையதாகியும், துன்பத்துக்கு ஒர் இடமாகியும், அறிவற்ற அகங்காரத்தை இராகவ! நீ பற்றில்லாத அறிவினாலே (ஆத்ம ஞானத்தினாலே) நீக்கி விடுவாயானால் அதுவே நிர்மலமான சீவன் முத்தி நிலை ஆகும்.* **(6.11.20)**

**(நிருவாணப் பிரகரணத்தில் மித்தியா புருடன் கதை முற்றும்)**

# (xii) விரதத்திரய கதை - ஸ்ரீபிருங்கீசர் உபாக்கியானம்

*(முன் கதையில் அகங்காரத்திற்கே மித்தையான சோக காரணம் எனக்கூறி அது நீங்கில் சர்வம் பிரம்ம மயமாய் விளங்கும் என்பதை அறிவித்து இந்த அனுபவம் யாவைக்கும் சான்று நானே என்று மகா கர்த்திருத்வ முதலியவற்றால் விளங்கும் என்பதை அறிவிக்க இக்கதை சொல்லப்படுகிறது)*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**ஆதலால் காண்பவற்றின் உண்மைநிலை இப்படியே அறி(வு)இல் வையம்**
**பேதமாய் வேறொன்றில் பிறந்த(து)இலை கயிற்றி(ல்)அரா பிறப்ப தேபோல்**
**ஆதபனில் வேறிலைஆ தபம்என்றே பாவித்தோர்க்(கு) ஆத பம்தான்**
**பேத(ம்)அற ஆதபனாம் பேணுநிரு விகற்ப(ம்)இது பேசும் காலே.**

**பொழிப்புரை:** *ஆதலால் காணப்படும் அனைத்தின் நிச்சயமானது இந்தப் பிரகாரமே ஆகும். ஆத்ம ஞானத்தில் இந்தக் காணப்படும் யாவும் கயிற்றில் பாம்பின் தோற்றம் உண்டாவது போல உதித்தவையே அன்றி பேதமாக மற்றொன்றில் உண்டானதில்லை. சூரியனை விட சூரிய கிரணமானது வேறாக இல்லை என்று பாவனை செய்தவர்களுக்கு வேற்றுமையில்லாமல் (பேதமில்லாமல்) சூரியனாகும். சொல்லப்போனால் இதுவே விரும்பப்பட்ட நிர்விகற்பமாம்.* **(6.12.1)**

**பொன்னில்வேற் றுமைஅன்று கேயூரம் எனநினையில் பொன்ஒன் றேயாம்**
**இன்னதே நிருவிகற்பம் என்பரால் இரவிவெயில் என்று நாடின்**
**மின்னுகதிர் இரவிக்கு வேறுபோ லாம்கண்டாய் விவித மாகத்**
**துன்னுநா நாத்துவம்விட்(டு) அறிவ(து)இலா நல்லறிவில் துணிந்து நிற்பாய்.**

**பொழிப்புரை:** *பொன்னைக் காட்டிலும் ஆபரணம் வேறாக ஆகாது என்று எண்ணினால் பொன்னே ஆகும். இது தானே நிர்விகற்பம் என்று கூறுவர். சூரிய கிரணம் (ஒளிக்கதிர்) என்று நோக்கினால் மின்னுகின்ற ஒளிக்கதிர் சூரியனுக்கு வேறு போலக் காண்பாய். பலவிதமாகப் பொருந்துகின்ற பலவிதமான தன்மையை விடுத்து சுத்தமான சின்மாத்திரமாய் காண்பவற்றின் (திருசிய) சம்பந்தமின்றிய நல்லறிவில் துணிந்து நிற்பாய்.* **(6.12.2)**

**சங்கற்பம் எனும்புரண சத்தியினைத் தற்பரமம் தானே தன்னால்**
**பொங்குற்ற வாயுஅலை வைச்செய்யு மாறுபோல் புரிந்த போது**
**சங்கற்ப விரியுருவாய் அயல்போலாய்ச் சகவடிவாய்த் தனைத்தான் நாடிப்**
**பொங்குற்ற மனமாகும் சங்கற்ப மயமாம்இப் புவியைக் காண்க.**

**பொழிப்புரை:** *வீசுகின்ற காற்றானது அசைகின்ற தன்மையைச் செய்தல் போல, சங்கற்பம் என்று சொல்லப்பெற்ற விளங்குகின்ற சத்தியினைத் தற்பரம் பொருளானது தன்னைத் தானாகவே தன்னாலே செய்த போது, விரிந்த சங்கற்ப வடிவமாய், அயலே (வேறொன்று) போல உலகு வடிவமாய் தன்னைத் தானே நோக்கிய பொங்கிய மனமாகும். விசாலமான இந்த உலகினைச் சங்கற்ப மயமாகவே காண்க.* **(6.12.3)**

**தெரிபொருள்ஒன்(று) உள(து)அல்ல பொய்யு(ம்)அல சொற்பனத்தின் திரள்போல் தோன்றும்**
**தெரிபவன்கேட் போன்சொல்வோன் பரிசிப்போன் மணம்கொள்வோன் செல்வோன் மீள்வோன்**
**புரிவனஎல் லாம்தானே புதி(து)ஆகும் அலஎல்லாம் பொருள்என்(று) ஓர்வாய்**
**புரிதருநின் தொழில்எல்லாம் மலம்அறுசின் மாத்திரமாம் பொருளே கண்டாய்.**

**பொழிப்புரை:** *தெரிகின்ற, காண்கின்ற (திருசியம்) யாவும் (தத்துவ ஞானத்தில் நாசமாவதால்) சத்து அல்ல, (வியவகாரத்தில் உள்ளதால்) மித்தையும் அல்ல. கனவுக் கூட்டம் போல் தோன்றும் தெரிபவன், கேட்பவன், சொல்பவன், பரிசிப்பவன், முகர்பவன், செல்பவன், திரும்பி வருபவன் இப்படி செய்வன எல்லாம் புதியது அல்ல. எல்லாம் சத்திய வத்து என்றே சிந்திப்பாய். செய்கின்ற நினது செயல் எல்லாம் மலமில்லாத சின்மாத்திர வத்து என்றே கண்டு கொள்வாய்.* **(6.12.4)**

**பெரும்பெரிய வடிவான பிரமமே ஆதலால் பிறி(து)ஒன்(று) இல்லை**
**வரும்பொருள்எல் லாம்அறிவின் கனதையாய் இருத்தலில்இவ் வையம் எல்லாம்**
**கரும்புயலே அறிவேயாம் கற்பனைவே(று) இல்லையால் காணப் பட்ட**
**வரும்பொருள்கள் தமில்அறி(வு)உண் டாதலினால் அறிபொருளாம் அனைத்தும் இல்லை.**

**பொழிப்புரை:** *பெரியதுக்கெல்லாம் பெரியதான ஒன்றாக பிரம்மமே ஆவதால் வேறாக ஒன்று இல்லை. வருகின்ற பொருள்கள் எல்லாம் சித்தின் வடிவாகி இருத்தலால் இந்த உலகம் எல்லாம் கார்மேக வண்ணனே! சித்தேயாம். கற்பனை வேறொன்றும் கிடையாது. காணப்படும் அரும் பொருள்களிலும் சித்தே (அறிவே) காணப்படுவதால் காணப்படும் பொருள்களாக எதுவுமில்லை.* **(6.12.5)**

**ஆதலினால் பந்தம்வீ(டு) எங்(கு)உளது வீ(டு)இதென அடுத்த பந்தம்**
**ஈ(து)எனஎண் ணுவ(து)எல்லாம் வலிந்(து)அகற்றி அபிமானம் இறையும் இன்றித்**
**தீதுதவிர் மௌனியாய்ப் பொறிவென்று மானமதம் தீர்மே லோனாய்**
**ஓதியநின் காரியம்செய்(து) இராமனே அகங்காரம் ஒழிந்து நிற்பாய்.**

**பொழிப்புரை:** *ஆகையால், பந்தமும் வீடும் எங்கு உள்ளது? வீடு இது எனவும், வந்த பந்தம் இது எனவும் எண்ணுதல் எல்லாம் கஷ்டப்பட்டு நீக்கி, அபிமானம் சற்றும் இல்லாமல், குற்றமற்ற மௌனியாகிப் புலன்களை வென்று, மானமும், செருக்கும் இல்லாத உயர்ந்தோனாய், சொல்லப்படுகின்ற காரியங்களைச் செய்து இராமனே! அகங்காரம் ஒழிந்து வாழ்வாய்.* **(6.12.6)**

**மோகத்தில் வரும்ஐயம் எல்லாம்போய் அறுதிநிலை முற்றும் பற்றி**
**மாகத்தன் மாபோகி மகத்தான தியாகியாய் வாழ்தி என்ன**
**மேகத்தை நிகர்வள்ளல் இம்மூன்று குணங்க(ள்)எவை விளம்பாய் என்ன**
**யோகத்தை உணர்முனிவன் அக்குணமூன் றையும்தோன்ற உரைக்க லுற்றான்.**

**பொழிப்புரை:** *மோகத்தினால் வரும் சந்தேகம் அனைத்தும் நீங்கி, முடிந்த முடிவான நிலையினைக் கைக்கொண்டு, மாகத்தன், மாபோகி, மாத் தியாகியாய் வாழ்வாய் என்று வசிட்டர் உபதேசிக்கவும், மேக நிற வண்ணனாகிய வள்ளல் இராமபிரான் "இந்த மூன்று குணங்களை எவை என்று கூற வேண்டும்" எனக் கேட்கவும், அனைத்து யோக மார்க்கங்களையும் உணர்ந்த வசிட்ட முனிவர் அந்தக் குணங்கள் மூன்றினையும் தெரியும் படியாகக் கூறத் தொடங்கினார்.* **(6.12.7)**

**மூன்றுவகை விரதம்)என்னும் இதுதன்னைப் பிருங்கீசன் மோகம் போக**
**ஏன்றுபரம் பொருள்அறியும் விருப்பினால் ஏமகிரி வடகோ(டு) எய்தி**
**வான்துணையாம் சங்கரனைத் தொழு(து)இறைஞ்சி இப்பிறவி மயக்கை நோக்கித்**
**தோன்(று)உணர்வில் ஆறுதல்இல் லாமையினால் மோகித்துத் துவண்டேன் என்றும்.**

**பொழிப்புரை:** *மூன்று வகையான இந்த விரதங்களாகிய இதனைப் பிருங்கீசர் என்ற ரிஷியானவர் தனது மோகம் நீங்குவதற்குப் பின்பற்றி, பரமான்ம வத்துவை அறியும் விருப்பத்தால் மேரு மலையின் வட சிகரத்தை அடைந்து, சிறந்த துணையான மகாதேவரைத் தொழுது இறைஞ்சி, இந்தப் பிறவியாகிய மோகத்தை நோக்கி தோன்றும் அறிவில் மன அமைதி இல்லாமையால் மயங்கித் தளர்ச்சி அடைந்தேன் என்றும்,* **(6.12.8)**

**இச்சகமாய் பழங்குடிலில் இளைப்பாறி நான்திரிவ(து) எங்ஙன் என்றும்**
**அச்ச(ம்)அறு நிச்சயமாம் ஒழுங்கைஅருள் வாய்என்றும் அன்பால் கேட்ப**
**நிச்சயமாய் அரன்அருள்வான் ஐய(ம்)எலாம் அறுத்(து)அறுதி நிலைமை பற்றி**
**மெச்சியமா கத்தன்மா போகிமாத் தியாகியாய் விடுவை என்ன.**

**பொழிப்புரை:** *இந்த உலகமாகிய பழமையான குடிசையில் இளைப்பாறி நான் உலவுவது எவ்வாறு என்றும், பயமில்லாத முடிவாகிய வழியை எனக்கு அருள் செய்க என்றும் பக்தியினாலே கேட்கவும், நிச்சயமான ஒன்றைப் பரமேசுவரர் கூறுவார்: சந்தேகம் எல்லாம் நீக்கி, முடிவான நிலையைப் பற்றி, யாவரும் மெச்சுகின்ற மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி ஆகி சகல கவலைகளையும் விட்டு ஒழிப்பாய் என்று அருளிச் செய்யவும்,* **(6.12.9)**

**செப்பியஇம் மாகத்தன் மாபோகி மகத்தான தியாகி என்ற**
**இப்பரிசு விளங்கஅருள் எனக்கேட்ட பிருங்கீசற்(கு) ஈசன் சொல்வான்**
**வெப்ப(ம்)உறு இராகமுனி(வு) இன்ப(ம்)இடர் அறம்பாவம் மிகு(ம்)இ வற்றின்**
**தப்பில்பலா பலம்இவற்றில் விருப்ப(ம்)அறச் செய்வோனே தனிமா கத்தன்.**

**பொழிப்புரை:** *கூறி அருளிய இந்த மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி என்ற இத்தகையவரைப் பற்றி விளங்கும்படியாக அருள்செய்ய வேண்டும் எனக் கேட்ட பிருங்கீசருக்கு பரமேசுவரர் சொல்வார்: கொடியதான விருப்பு வெறுப்பு, இன்பம் துன்பம், புண்ணியம் பாவம் அதிகமாக உடைய இவற்றின் தப்பாத பலம் பலமில்லாமை இவைகளில் இச்சையில்லாமல் செய்பவனே ஒப்பிலாத மாகர்த்தன் ஆவன்.* **(6.12.10)**

**மோன(ம்)உற அகங்கரமும் மானமு(ம்)அச் சரமும்போய் முடுகி வாடா(து)**
**ஈன(ம்)இலா தனசெய்வோன் எங்கணும்அன்(பு) அறச்சாட்சி எனலாய் இச்சை**
**தா(ன்)அறவே காரியம்செய் வோன்வெருட்சி ஆனந்தம் தாக்கு றாதோன்**
**ஆனசம னாய்த்தொழிலால் இடர்சுகங்கள் உதய(ம்)உறா தவன்மா கத்தன்.**

**பொழிப்புரை:** *மௌனமாக இருந்து, அகங்காரமும், மானமும், பொறாமையும் நீங்கி, வாட்டம் அடையாமல், ஈனமாக இல்லாத செயல்களைச் செய்வோன், எதனிடத்தும் பற்று அற்று சாட்சியே தானாகி, ஆசையின்றிக் காரியம் செய்வோன், பயம் சுகம் தாக்காதவன் ஆகி சமமாக இருந்து தொழில்களால் இன்ப துன்பங்களை அடையாதவன் மாகர்த்தன் ஆவன்.* **(6.12.11)**

**சனனத்தில் மரணத்தில் உதயத்தில் அத்தமனம் தனில்நே ராகி**
**மனம்(ம்)ஒத்தோன் மாகத்ததன் எனத்தெளிவாய் மாபோகி மரபு கூறில்**
**சினம்(ம்)உற்(று)ஒன் றினைநீக்கான் ஒன்றைவிரும் பான்பகுதி சேரத் துய்ப்போன்**
**வினவுற்ற மாபோகி இவன்பெருமை மீளவும்நாம் விளம்பக் கேளாய்.**

**பொழிப்புரை:** *பிறப்பில் இறப்பில், எழுச்சியில் வீழ்ச்சியில், சமம் உடையவனாய் மனம் ஒத்து நிற்பவன் மாகர்த்தன் என்று தெளிந்து கொள்வாய். மாபோகியின் தன்மை குறித்து கூறினால் கோபம் அடைந்து எதனையும் தள்ளமாட்டான், எதனையும் விரும்ப மாட்டான், இயல்பாக வந்ததை அனுபவிப்பன், கேட்ட மாபோகி இவனே ஆவன். இவன் பெருமையை மறுபடியும் சொல்லக் கேட்பாய்.* **(6.12.12)**

**மிகவெருவல் ஆனந்தம் இல்லவாய் மயக்கமே விளைப்ப தான**
**சுகம்(ம்)இடர்கள் புசித்(து)அவற்றால் கலங்காதோன் சராமரணம் தொடரும் ஆபத்(து)**
**அக(ல்)அரசு மிடிகளும்நன்(று) எனப்புசிப்போன் புளிப்புகைப்(பு) அழற்சி உப்பு**
**பகர்நிறைவு குறைவுசம மாய்ப்புசிப்போன் மாபோகிப் பான்மை யோனே.**

**பொழிப்புரை:** *மிகவும் பயப்படுதல், இன்பம் இல்லாதவனாய் மயக்கத்தைத் தருகின்ற இன்ப துன்பங்கள் அனுபவித்தலால் கலங்காதவன், மூப்பு, மரணம், தொடரும் ஆபத்து, விரிந்த அரசு, தரித்திரம் இவைகளும் நல்லது என்று அனுபவிப்பவன். புளிப்பு, கசப்பு, சுடுகை, காரம், உப்பு இப்படிச் சொல்கின்ற அவைகள் அதிகமாயினும், குறைந்தாலும் சமமாக இருந்து உண்பவன் மாபோகி தன்மையோனே.* **(6.12.13)**

**உப்பி(ன்)இயல்(பு) எனநன்மை தீமைஇரண் டிலும்சமமாய் ஒத்து நிற்போன்**
**துப்புறுமா போகியாம் மகத்தான தியாகிகுணம் சொல்லக் கேளாய்**
**தப்பி(ல்)அறம் பாவ(ம்)இடர் சுகம்மரணம் சனன(ம்)எல்லாம் சேரத் தள்ளும்**
**செப்பமுள புந்தியுளோன் மகத்தான தியாகிஎனத் தெளிந்து கொள்வாய்.**

**பொழிப்புரை:** *உப்பின் இயல்பு போல, நன்மை தீமை இரண்டிலும் அதிகமாகமாலும், குறையாமலும் சமமாய் ஒத்து நிற்போன் பிராரத்தத்தை உடைய மாபோகியாம். மாத் தியாகி குணம் சொல்லக் கேட்பாய். தவறில்லாத புண்ணியம் பாவம், துன்பம் இன்பம், இறப்பு பிறப்பு அனைத்தையும் முழுவதும் தியாகம் செய்வன் நல்ல புத்தியை உடையவன் மாத் தியாகி எனத் தெளிந்துகொள்வாய்.* **(6.12.14)**

**அனைத்(து)ஆசை அனைத்(து)ஐயம் அனைத்தான தொழில்அனைத்தாம் அறுதி யாவும்**
**தினைத்தானும் மேவாத புந்தியோன் தன்னைமகத் தியாகி என்பர்**
**எனைத்தான அறம்பாவ மனமனைத் தொழில்இதயத்(து) எல்லாம் தீர்ந்தோன்**
**வினைத்தாய பிருங்கீசா மகத்தான தியாகிஎன விளம்பும் அன்றே.**

**பொழிப்புரை:** *எல்லாவிதமான ஆசை, எல்லாவிதமான சந்தேகம், எல்லாவிதமான தொழில்கள், எல்லாவிதமான முடிவான நிச்சயங்கள் அனைத்தையும் அணுவளவும் சேராத புத்தி உடையவன் தன்னை மாத்தியாகி என்பர். எல்லா புண்ணிய பாவம் மனதின் தொழில்கள் எல்லாம் விட்டவன் இதுவரை வினையின் வயமாக இருந்த பிருங்கீசா! மாத்தியாகி என்று சொல்லப்படுவான்.* **(6.12.15)**

தெரிபவற்றில் எண்ணமாய்க் காணு(ம்)இவை எவ்வள(வு)அத் திரள்கள் எல்லாம்
கரி(சு)அறநன் றாய்விட்டோன் மகத்தான தியாகிஎனக் கருணை ஈசன்
உரியபிருங் கீசனுக்கு முன்னாள்ஓ தினன்இந்த உயர்ந்த நோக்கைப்
பரிசய(ம்)உற் றுப்பிடித்துத் துயர்ஒழிவாய் உல(கு)அளிக்கும் பதுமக் கண்ணா.

**பொழிப்புரை:** *தெரிகின்றவற்றில் எண்ண வடிவமாய் காணும் இவைகள் எவ்வளவு, அந்தக் கூட்டங்கள் அனைத்தையும் குற்றமற நன்றாக விட்டவன் மாத்தியாகி என்று கருணையுடைய பரமேசுவரர் தகுதியான பிருங்கீசருக்கு முன்னாளில் அருளிச் செய்தார். இந்த உயர்ந்த நோக்கினை நன்றாகப் பழகிப் பின்பற்றித் துன்பம் நீங்குவாய் உலகத்தைக் காக்கும் தாமரைக் கண்ணா!* **(6.12.16)**

நித்தமுறும் உதய(ம்)உள(து) ஆதியா குவ(து)அனந்த நிமலம் ஏகம்
அத்தகைய பிரமமே உளதுவிகற் பத்(து)எண்ணம் அயலஒன் றில்லை
இத்திறம்என் றேபாவித்(து) அழுக்கிலனாய்ச் சுகமேவி இயற்றும் செய்கை
சுத்தவிம லச்சாந்தம் உறஎல்லாம் மேவுவாய் சுத்த வீரா.

**பொழிப்புரை:** *நித்திய உதயமாய் இருப்பது, ஆதியாவது, முடிவற்றது, மலமற்றது, ஏகமானது அத்தகைய பிரம்மமே உள்ளது. பேதமாகத் தோற்றும் வேறு ஒன்றில்லை. இத்தன்மையது என்றே பாவித்து அழுக்கில்லாதவனாய், ஆனந்தம் அடைந்து, செய்யும் செய்கை தூயதாய், நிர்மலமாய், சாந்தமாய் இருப்பதாகி எல்லாம் அடைவாய் சுத்த வீரனே!* **(6.12.17)**

தீங்(கு)இடர்தீர் பிரமமாய்க் கற்பனைஎல் லாம்மேவிச் செய்கைக்(கு) ஒன்றாய்
ஓங்கியவித் தாய்ப்பரம ரூபமாய்ப் பெரிதாகி உயர்ம கத்தாய்
வீங்கியபா வனைஎல்லாம் நிறைவதாய் மெய்ஞ்ஞான வீரா கிஞ்சில்
ஈங்(கு)இல(து)என்(று) உரைப்பதாம் ஆகாயம் ஏ(து)அதுவே என்றும் உண்டால்.

**பொழிப்புரை:** *குற்றமுற்ற துயர் நீங்கிய பிரம்மமாய், கற்பனை எல்லாம் பொருந்தி, செயல் ஒன்றுக்கும் உயர்ந்த வித்தாய், பரமாத்ம வடிவமாய், பெரிதாகி, மேலான பெருகியதாகி, விருத்தியான பாவனைகள் யாவும் நிறைந்ததாய் மெய்ஞ்ஞான வீரனே! கொஞ்சமும் இங்கு இல்லை என்று கூறுவதாகிய ஆகாயம் எதுவோ அதுவே எப்போதும் உளதாம்.* **(6.12.18)**

அன்னியமா ஓரிடத்தில் இதுகிஞ்சில் எனஎன்றும் அசத்தும் சத்தும்
துன்னலுறா(து) என்(று)உள்ளே திடநிலையாய் அகங்காரம் துடைத்து நிற்பாய்
உன்னுள்ளே முகமாகிப் புறத்தின்வரு வனஎல்லாம் ஒழுங்கு செய்து
பின்னுதொழில் இடர்மேவா(து) உருவ(ம்)இலா அகந்தையைநீ பிரிய என்றான்.

**பொழிப்புரை:** *வேறான ஓரிடத்தில் இது அற்பம் எனவும், எப்போதும் அசத்தும், சத்தும் என இல்லாதது என்பதாக உள்ளே திட நிலையாக இருந்து அகங்காரத்தை நீக்கி நிலைநிற்பாய். உனது உள்முகமாகி, புறத்தில் வருவதை எல்லாம் ஒழுங்காகச் செய்து, பற்றிய செய்கைகளில் துயர் அடையாது, உருவம் இல்லாத அகங்காரத்தைப் பிரித்து நிலைநிற்பாய் என்றார்.* **(6.12.19)**

**(நிருவாணப் பிரகரணத்தில் விரத்தத்திரய கதை முற்றும்)**

# (xiii) இட்சுவாகு கதை

*முன்பு சமாதியின்றியும் மாகர்த்தன் முதலிய தன்மைகளினால் சித்த அமைதி வாய்க்கப்பெறும் எனச் சொல்லப்பட்டது. இப்போது தன் விசாரத்தால் அறிதற்கு அரியதாயினும் தத்துவம், குருவின் உத்தியால் அறிவதற்கு எளிதே ஆகும் என்று இந்தக் கதையால் சொல்லப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**தருமம் எல்லாம் உணர்முனியே சாற்றும் அகங்கா ரப்பெயரை**
**மருவு மனம்தன் வடி(வு)இருக்க மாய்ந்தால் அந்த உண்மைக்குப்**
**பெருகு குறிஏ(து) உரையெனஎம் பெருமான் கேட்ப முனிஉரைப்பான்**
**உருவம் இருக்க மனம்இறந்த உண்மைக்(கு) உள்ள குறிகேளாய்.**

**பொழிப்புரை:** *எல்லா தருமங்களையும் உணர்ந்த முனிவரே! கூறிய அகங்காரம் என்ற பெயரைச் சேர்கின்ற மனம் தன் வடிவம் இருக்க (கற்பனா வடிவம்) அழிந்தால் அந்த தத்துவத்துக்குப் பெரிதான அடையாளம் ஏது? அருளிச் செய்வீர் என்று இராமபிரான் கேட்கவும், வசிட்டர் சொல்வார்: வடிவம் இருக்க, மனம் அழிந்தால் அந்த தத்துவத்துக்கு உள்ள அடையாளம் கேட்பாய்.* **(6.13.1)**

**அழுந்து வசத்தில் இருப்போனை அம்பு யத்தின் நீர்போல**
**எழுந்த லோப மோகமுதல் எக்குற் றமும்வன் புறநலியா**
**முழுந்து முதிதை முதற்குணங்கள் முகத்தில் அழகாய்ச் சிறி(து)அகலா**
**விழுந்து பாவம் எல்லாம்போம் மிகுவா தகைக்கட்(டு) அறும்மெல்ல.**

**பொழிப்புரை:** *தன் சொரூப சுகத்திலே அழுந்தி தன் வசமாய் இருக்கும் பெரியோனைத் தாமரையிலைத் தண்ணீர் போல், வினை வசத்தால் எழுந்த ஆசை, மயக்கம் முதலான எல்லாக் குற்றமும் வலிமையுடன் துன்புறுத்தாது. முழுமையான முதிதை (புண்ணிய புருஷரைக் கண்டபோது, அவர்களின்பேரில் விருப்பம் உண்டாவது) முதலான குணங்கள் முகத்தில் அழகாகத் திகழ்ந்து சற்றும் விலகமாட்டாது. பாவம் எல்லாம் விழுந்து போகும்.மிகுந்த வாசனையின் பந்தம் மெல்லக் கெடும்.* **(6.13.2)**

**வேகம் தேயும் உலோபகுணம் மெலியும் காம வினைஅடங்கும்**
**மோகம் போய்எங்(கு) ஒளித்திடுமோ முடுகிக் கிளரா(து) ஐம்பொறிகள்**
**சோகம் தாவி அடராது சுகமும் மேலிட்(டு) எழமாட்டா**
**தாகம் தீர்ந்து குளிர்ந்(து)உள்ளே சமம்தோன் றிடுமால் எவ்விடத்தும்.**

**பொழிப்புரை:** *கோபமானது அழியும், ஆசையுள்ள குணமும் இளைக்கும், காமத் தொழில்கள் அடங்கும். மயக்கம் போய் எவ்விடத்தில் ஒளித்துக் கொள்ளுமோ? ஐம்புலன்களும் விருப்பப்படி வெளியே கிளம்பாது. சோகமானது மேல் விழுந்து துன்புறத்தாது. இன்பமும் மிதமிஞ்சிப் பொங்கிவராது. துன்பமானது தீரவும், குளிர்ச்சி அடைந்து, உள்ளே சமமானது தோன்றும் எவ்விடத்தும்.* **(6.13.3)**

**துன்பம் இன்பம் எலாம்முகத்தில் தோன்றும் எனினும் தோன்றிடுக**
**வன்(பு)இல் அவைநெஞ் சினைநலியா மனமே இறக்கில் வானோரும்**
**அன்பின் நயப்பர் நலன்உண்டாம் ஆங்கே சமமாம் மதிஉதிக்கும்**
**என்பு குளிரும் சாந்திஎழில் எய்தும் தடைதீர் பெருமையுறும்.**

**பொழிப்புரை:** *துன்ப இன்பம் எல்லாம் முகத்தில் தோன்றிடும் என்றால் தோன்றட்டும். வலிமை இல்லாத அவை மனதை நலியச் செய்யாது. மனமானது இறக்கில் தேவர்களும் அன்போடு கூடி இருப்பர். நன்மை உண்டாகும். அங்கே சமமான புத்தி உதயமாகும். எலும்பும் குளிரும் சாந்தி அழகானது வரப்பெறும், தடைகள் இல்லாத பெருமையும் வந்து வாய்க்கும்.* **(6.13.4)**

**பணிதல் ஒளிர்தல் நொய்மையுறும் பழு(து)இல் அமல வடிவுண்டாம்**
**பிணிஇல் பெரியோர் குடும்பமயல் பெரிதாய்ப் புதுமைத் தானாலும்**
**தணி(வு)இல் பா(வ)அ பாவத்தால் தள்ளுற் றாலும் இன்ப(ம்)இடர்**
**கணிதம் எனினும் செயமாட்டா கருணைத் தடங்கண் கருங்காரே.**

**பொழிப்புரை:** *எல்லோரும் பணிதலும், பிரகாச வடிவமாதல், தெளிதல் ஆகியவை உண்டாகும். பழுது இல்லாத நிர்மல வடிவம் உண்டாகும். நோயற்ற பெரியோர் சம்சார மயக்கம் புதுமையாக ஆயினும் தணியாத பாவம், பாவம் இன்மையால் தள்ளப்பட்டாலும், இன்ப துன்பங்கள் அற்பம் என்றாலும் ஒன்றும் செய்ய மாட்டா, விசாலமான கருணைக்கண்கள் உடைய கார்மேக வண்ணனே!* **(6.13.5)**

**புந்திப் பார்வைக்(கு) எட்டுவதாய்ப் புகல்ஆ பத்(து)எல் லாம்இறந்த**
**இந்தப் பொருளை மோகத்தால் எய்தா(து) அவர்சீ சீஇழிந்தோர்**
**தொந்தம் சிலகா லப்பற்றால் தோன்றும் துயரா மணிகள்செறி**
**பந்தப் பிறவிக் கடல்கடக்கும் பான்மை நயந்தோர் நெறிகேளாய்.**

**பொழிப்புரை:** *புத்தியின் விசாரப் பார்வைக்கு எட்டுவதாய், சொல்லப்படும் ஆபத்துகள் எல்லாம் ஒழிந்த இந்த வத்துவை மோகத்தால் அடையாதவர் சீ சீ இழிந்தவர் ஆவர். பிணிப்பதாகிய சில காலப் பற்றுதலால் தோன்றும் துன்பம் என்கிற மணிகள் நிறைந்த பந்தமாகிய பிறவிக் கடலைக் கடக்கும் தன்மையை விரும்பியவர் மார்க்கத்தைக் கேட்பாய்.* **(6.13.6)**

**ஊனார் பிறவிக் கடல்கடப்போர்க்(கு) உரிய இளைப்பா றுதல்எய்த**
**நா(ன்)ஆர் இந்தச் சக(ம்)எங்ஙன் நாடும் பரமன் ஆராகும்**
**ஆனா விடய போகத்தால் ஆவ(து) என்னோ என்னுமதி**
**தானாம் பரம உபாய(ம்)எனச் சாற்றும் கண்டாய் சற்குணனே.**

**பொழிப்புரை:** *தேக சம்பந்தமான பிறவிக் கடலைக் கடப்பவர்க்குத் தேவையான இளைப்பாறுதல் அடைய நான் யார்? இந்த உலகம் எவ்வாறு உண்டானது? நாடக் கூடிய பரம்பொருள் யாராகும்? திருப்தி அடையாத விஷய போகத்தினால் ஆவது என்னவோ? என்று விசாரம் செய்யும் புத்தியே மேலான உபாயம் ஆகும் என்று உரைப்பதைக் காண்பாய் நல்ல குணமுடைய இராகவனே!* **(6.13.7)**

ஏற்றம் உனது குலமுதல்வன் இக்கு வாகு எனுமன்னன்
ஆற்றல் உயர்வீடு அடைவுற்ற அடைவு கேளாய் அருள்வேந்தன்
தோற்றம் உடைய தன்புவனம் தொல்லை நெறியில் நடத்திடுநாள்
ஊற்றம் உடைய உளத்தாலே ஒருவன் தானே இருந்(து)உணர்வான்.

**பொழிப்புரை:** *ஏற்றம் உடைய உனது குலத்தின் முதல்வன் இக்குவாகு என்னும் மன்னவன் ஆற்றலில் உயர்ந்த வீடு அடைந்த முறையைக் கேட்பாய். அருள் வடிவான மன்னவன் செழித்து விளங்கும் தனது அரசினைப் பழைய நெறிகளின் படி ஆண்டு வந்த போது, மேலான மனதினாலே தனி ஒருவனாக இருந்து சிந்திப்பான்.*

**(6.13.8)**

சரைசா(வு) இன்ப துன்பங்கள் தளர்மோ கங்கள் மயக்கங்கள்
வரையா நிலையாய்க் காண்பனவும் மட்டி லாத சகத்துக்குப்
புரைதீர் மூலம் ஏதென்று புரிந்து நினைந்தான் பூபாலன்
உரைசார் உலகின் மூலத்தை உன்னா நின்றும் உணர்ந்திலனால்.

**பொழிப்புரை:** *முதுமை, இறப்பு, இன்ப துன்பங்கள், தளர்ச்சியைத் தரும் மோகம், மயக்கம், மலைபோல் நிலையாகக் காணப்படுவனவும், அளவில்லாத உலகுக்குக் குற்றமற்ற காரணம் எது என்று நன்றாக சிந்தித்துப்பார்த்தான் மன்னவன். எல்லா சாத்திரங்களும் சொல்லும் உலகின் காரணத்தைச் சிந்தித்துப் பார்த்த பின்பும் அறிந்திலன்.* **(6.13.9)**

அய(ன்)நாட் டினும்வந்(து) அடைவுற்ற ஆதி மனுவாம் பகவனைக்கண்(டு)
இயலால் பூசித்(து) அருள்செல்வா இன்று நீஇங்(கு) எளி(து)எய்தி
முயல்வால் அளித்த நின்னருளால் மோகம் தீர்ந்து நிலைநிற்கும்
பயனால் என்னை அருள்என்று பரவி அரசன் உரைசெய்வான்.

**பொழிப்புரை:** *பிரம தேவன் லோகத்திலிருந்தும் வந்து இங்கு சேர்ந்த முதல் மனுவாகிய பகவானைக் கண்டு அன்புடன் பூசை செய்து அருள்நிதியே! இன்று நீவிர் இங்கு எளிதாக வந்து எண்ணாமலே தந்தருளிய உமது அருளால் மோகம் தீர்ந்து நிலையாய் நிற்கும் பலனால் எனக்கு அருள்செய்வீர் என்று மன்னவர் கூறத் தொடங்கினான்.* **(6.13.10)**

எங்கு நின்று வந்துள(து)இச் சிருட்டி இதற்(கு)எப் படிஉருவம்
மங்கும் உலகம் எம்மட்டு மற்றார் உடையது எதுகாலம்
இங்(கு)ஈ(து) எதனால் எனஉணர்த்தி ஏறிக் குறைந்த இப்பிறவிப்
பொங்கு மயக்கை வலைஅகலும் புள்போல் நீங்கும் வகைபுகல்வாய்.

**பொழிப்புரை:** *இந்த சிருட்டியானது எங்கிருந்து வந்திருக்கிறது? இதன் உருவம் எப்படி? அழிகின்ற உலகம் பரிமாணத்தாலும், எண்ணிக்கையாலும் எவ்வளவு? மற்று பரமேசுவரனை உடையதா? அன்றி சீவர் உடையதா? எக்காலத்தில் உண்டானது? இங்கு இது எந்தக் காரணத்தினால் உண்டானது? என்பதை அருளிச் செய்வீர். வலையை விட்டு வெளியில் செல்லும் பறவை போல் ஏற்றத் தாழ்வுகளை உடைய இந்த பிறவியாம் பொங்கி வரும் மயக்கத்தை விட்டு நீங்கும் வழியை உரைப்பீர்.* **(6.13.11)**

என்ற லோடும் அறப்புதிதாம் எண்ணில் காலத் தோடேநீ
துன்று விவேக விசாலத்தால் சொன்ன வினாவே விதிப்பொருளைப்
பொன்று விக்கும் என்றுமனு புகல்வான் சிறிதாக் காணு(ம்)இவை
ஒன்றும் இல்லை கந்தர்ப்ப ஊர்போல் மருப்பூ மியில்சலம்போல்.

**பொழிப்புரை:** *என்று கேட்கவும், மிகவும் ஆச்சரியமாம். எண்ணிலாத காலத்துடன் நீ விவேக மிகுதியினால் பொருந்தி நின்று கேட்ட கேள்விகளே எல்லாத் துன்பங்களையும் (மித்தையைக்) கெடுக்கும் என்று மனு சொல்வார். சிறியதாகக் காணும் இவை ஒன்றுமே கிடையாது. கந்தர்வ நகரம் போலவும், கானல் நீரினைப் போலவும்.* **(6.13.12)**

கிஞ்சில் கரணங் களுக்(கு)எட்டாக் கிளர்வா னிலும்சற் றாய்முடி(வு)இல்
எஞ்சல் இலதாம் அழிவின்றி இருந்த(து) என்று ஆன்மாவாம்
விஞ்சும் அந்தப் பெருங்கண்ணா டியிலே நேய விரிவிடய
பஞ்ச பூத சிருட்டிஎலாம் பத்தி பாய்ந்து விளங்கிடுமால்.

**பொழிப்புரை:** *அற்ப கரணங்களுக்கு எட்டாது, சூக்கும ஆகாயத்தினும் சூக்குமமாய், முடிவு இன்றியதாய், எங்கும் வியாபித்ததாய், அழிவில்லாமல் எப்போதும் இருப்பது ஆத்மா ஆகும். மேலான அந்தக் கண்ணாடியிலே பிரதிபிம்பித்து விஷயமாகிய பஞ்ச பூத சிருட்டி எல்லாம் தோற்றம் அளிக்கும்.* **(6.13.13)**

பிரமத் தினவாய் ஒளிஉருவாய்ப் பிறந்து பிறங்கும் சக்திகள்தாம்
விரவிப் பிரமாண் டத்தினது மேனி யாகி நின்றசில
உரவு பலபூ தத்திரளின் உருவம் ஆகி நின்றசில
சுரர்பொற் பதியாய் நின்றசில தோன்று சகத்தின் நிலைஇதுவே.

**பொழிப்புரை:** *பிரம்மத்தின் சம்பந்தம் உடையனவாய், ஒளி உருவாய் உதயமாகி விளங்கும் சக்திகள் கலந்து பிரம்மாண்டங்கள் ஆகி இருந்தன சிலவாம். பலம் வாய்ந்த பூதக் கூட்டங்களின் வடிவமாகி இருந்தன சிலவாம். தேவர்களின் லோகங்களாகி நின்றன சிலவாம். தோற்றும் படியான உலகத்தின் நிலைமை இதுவே ஆகும்.* **(6.13.14)**

பந்தம் இல்லை வீ(டு)இல்லை படர்தீர் பிரம மேஉளதாம்
அந்த ஐக்யம் இல்லைஇரண்(டு) இல்லை அறிவே வளர்ந்(து)எழுந்த
சிந்து தரங்கப் பங்கத்தால் திகழு கின்ற நீர்போல
அந்தம் இல்லா அறிவுருவே விளங்கும் அயல்ஒன்(று) இலதாகும்.

**பொழிப்புரை:** *பந்தம் இல்லை, முத்தியும் இல்லை, துன்பமற்ற பிரம்மமே உள்ளதாம். ஐக்கியம் (ஒருமை) இல்லை, இரண்டு (துவந்துவம்) என்பதாகவும் இல்லை. சித்தே விரிந்து விளங்குகின்றது. கடல் அலைகளின் வேறுபாட்டினைப் போல் திகழுகின்ற தன்மை போல, முடிவில்லாத சித்து உருவமே விளங்கும், வேறொன்றும் இல்லை.* **(6.13.15)**

பந்த முத்தி நினைவுகளைப் பயிலா(து) ஓட்டி உன்வசமாய்
முந்து பிறவிப் பயம்எல்லாம் முற்றும் ஒழித்து நிலைநிற்பாய்
அந்த நீசங் கற்பநினை(வு) அடைந்தால் சின்மாத் திரஅறிவு
வந்து சீவத் துவம்அடைந்த வாரி அலைஆ வதுபோல.

**பொழிப்புரை:** *பந்தம், முத்தி என்ற நினைவுகளைக் கருதாமல் விட்டு, உன் வசமாய், முந்துகின்ற பிறவிப் பயம் எல்லாம் முற்றும் ஒழித்து நிலை நிற்பாய். அத்தகைய நீ சங்கற்பம் (எண்ணங்கள்) அடைந்தால் சின்மாத்திர அறிவே கடல் நீரானது அலை ஆவது போல, வெளிமுகமாகி சீவத்தன்மை அடையும்.* **(6.13.16)**

ஆதி காலத்(து) எழுந்தபவத்(து) அனைய சீவர் உழல்கின்றார்
ஓதும் இன்ப துன்பமயக்(கு) உளத்துக்(கு) ஒழிய உயிர்க்(கு)இல்லை
மீது தெரியா இராகுமதி மேவித் தெரிதல் போலஅனு
பூதி அளவாம் உயிர்காணும் பொருளால் காணப் படும்அன்றே.

**பொழிப்புரை:** *ஆதி காலத்தில் உண்டான பிறவிச் சம்சாரத்தில் அத்தகைய சீவர்கள் உழல்கின்றார்கள். சொல்லப்படும் இன்ப துன்ப மயக்கம் (பிராந்தி) மனதுக்கே தவிர ஆத்மாவுககு இல்லை. வெளியே தெரியாத இராகு, சந்திரனை அடைந்து தெரிதல் போல, அனுபவ மாத்திரமான ஆன்மா காணப்படும் பொருளான மனம், தேக உபாதிகளால் அறியப்படுவன்.* **(6.13.17)**

கலைக ளாலும் குருவாலும் காண்டற்(கு) அரிய பரன்தானே
தலைமை யான சாத்திகம்சேர் தன்புந் தியினால் தன்னாலே
நிலையில் வெளியாம் நெறிபோவார் நெறிசேர் காட்சி களில்புந்தி
செலவு பற்றில் லாததுபோல் தெவ்வாம் கரணங் களைக்காண்பாய்.

**பொழிப்புரை:** *ஞான சாத்திரங்களாலும், குருவினாலும் அறிதற்கு அரியதான பரம் பொருள் தானே முதன்மையான சாத்துவிகம் சேர்ந்த தனது புத்தியால் தன்னால் நிற்கும் நிலையில் வெளிப்படும். அந்த வழியில் செல்பவர்கள் மார்க்கத்தில் சேர்கின்ற காணப்படும் அவற்றில் புத்தி விருப்பு வெறுப்பு அடையாதது போல, பகையாம் கரணங்களைப் பார்ப்பாய்.* **(6.13.18)**

இனைய கரணங் களைப்பற்றல் இகழ்தல் இரண்டும் இயல்(பு)அல்ல
வினைசெய் உடல முதல்பொருள்கள் மேவும் இயல்பின் மேவிடுக
அனைய பொருள்கள் புந்தியினால் அகல நீக்கி அதிசீதம்
புனைஉள் கரணத் தினனாய்ப்எப் போதும் பரம மயம்ஆவாய்.

**பொழிப்புரை:** *இத்தகைய கரணங்களைப் பற்றுதல், இகழ்தல் இரண்டும் நியாயம் அல்ல. கர்மம் செய்யும் உடல் முதலான பொருள்கள் அதனதன் இயல்பில் செயலாற்ற விட்டு விடுக. அத்தகைய பொருள்களை அறிவினால் விளங்கும்படி தள்ளிவிட்டு, மிகுந்த குளிர்ச்சியை உடைய அந்தக்கரணம் உடையவனாய் எப்பொழுதும் பரப்பிரம்ம மயமே ஆவாய்.* **(6.13.19)**

உடல்நான் என்னும் புந்திபிறப்(பு) உற்ற கட்டாம் ஒருக்காலும்
இடர்தீர் வீடு விருப்(பு)உறுவோர்க்(கு) இயல்(பு)அன்(று) ஆகும் இப்புந்தி
திடமாம் கிஞ்சின் மாத்திரமும் இல்லாச் சின்மாத் திரவடிவன்
தடவா னிலும்நான் அணுஎன்னும் சமமாம் புந்தி பிறப்(பு)அறுக்கும்.

**பொழிப்புரை:** *தேகம் யான் என்னும் புத்தியானது பிறப்பினைத் தருகின்ற பந்தமாம். ஒருபோதும் துன்பமே இல்லாத மோட்சத்தை அடைய விரும்புவோர்க்கு இந்தப் புத்தியானது உரியதல்ல. இந்தப் புத்தியானது அற்பமும் இல்லாத திரமாகிய சின்மாத்திர வடிவம் உள்ளவன் விசாலமான ஆகாயத்தினும் யான் சூக்குமம் என்கின்ற சமமாகிய புத்தியானது பிறவியைக் கெடுக்கும்.* **(6.13.20)**

**தெளியு நீரில் உள்புறம்பு செறியும் வெயில்போல் பொருள்அனைத்தில்**
**ஒளிகொள் ஆன்மா நின்றிடுமால் உருவம் எல்லாம் உட்புகுந்து**
**வெளிசெய் பணிகள் தொறும்பொன்னின் விசித்தி ரம்போல் விளங்கிடுமால்**
**அளிய அ'தல் லாஉருவாம் ஆன்மா உடைய சகம்ஆதி.**

**பொழிப்புரை:** *தெளிந்த தண்ணீரில் உள்ளும் வெளியிலும் நெருங்கிக் காணும் சூரிய ஒளிக்கிரணம் போல, எல்லாப் பொருள்களிலும் பிரகாசமான ஆத்மா நிற்கும். வடிவங்கள் எல்லாவற்றிலும் உள்ளே புகுந்து ஆபரணங்களாக வெளியில் தோன்றும் பொன்னின் விசித்திரம் போல் (ஆன்மா) விளங்கிடும். கருணை வடிவமே! அபின்னமாக (வேறாக) விளங்காத வடிவமானது ஆத்ம சத்துடைய உலகமாகத் தோற்றும்.***(6.13.21)**

**நாச வடவைக் கனல்படர நடுக்கம் செய்யும் காலமெனும்**
**மூசு கடலில் சகத்திரளா முடுகு நதிகள் பல்லுயிராம்**
**வீசு தரங்கத் தொடுபாய்ந்து நிறையா(து) அந்த வேலையையும்**
**ஆச மனம்செய் அகத்தியனாம் ஆன்மா என்றும் அகத்(து)உணர்வாய்.**

**பொழிப்புரை:** *நாசமாகிய வடவாமுகாக்கினி படர்ந்து வர, பயப்படுத்தும் காலம் என்கின்ற நெருங்கிய கடலில் உலகக் கூட்டமாகிய ஆறுகள், பல சீவர்களாகிய மோதுகின்ற அலைகளுடன் பாய்ந்தும் நிறைவு பெறாது. அக்கடலையும் உள்ளங்கை நீராகக் குடிக்கும் அகத்திய முனிவர் என்னும் ஆன்மாவை எப்பொழுதும் உள்ளத்தால் அறிவாய். (காலம் = கடல், உலகக் கூட்டம் = ஆறுகள், சீவர்கள் = அலைகள், அகத்திய முனிவர் = ஆன்மா என்பதாக வர்ணனை செய்யப்பட்டுள்ளது)* **(6.13.22)**

**தா(ன்)அ லாதாய் முன்சொன்ன சகத்தின் திரளாய் உடலமுதல்**
**ஆன பொருளின் சாலத்தை ஆன்மா என்ப(து) அறத்தள்ளி**
**ஞான சற்பா வம்தன்னை நனிமேற் கொண்டு மறைந்தோனாய்**
**ஈனம் இல்லா மதிவேந்தே இச்சை யான படிநிற்பாய்.**

**பொழிப்புரை:** *ஆன்மா அல்லாததாய், முன்பு சொன்ன உலகக் கூட்டங்களாய் உடல் முதல் உண்டான பொருள்களின் கூட்டத்தை ஆன்மா அல்ல என முழுதும் தள்ளி, சச்சிதானந்தமாகிய தன்னை நன்றாகத் தெளிந்து கொண்டு அடக்கம் உடையவனாய் இகழ்தல் இல்லாத புத்தி உடைய மன்னா! பிராரத்தத்திற்குத் தகுந்தபடி இருப்பாய்.* **(6.13.23)**

**தனங்கள் ஊடே துயில்மகவைத் தாய்தான் மறந்து மிகத்தேடி**
**மனம்கன் றுதல்போல் சராமரணம் மருவா தம்மை அறியாமல்**
**செனங்கள் சலித்துக் கெட்டேன்நான் செறியும் நாதர் இலாதவன்நான்**
**அனம்கொள் காயம் போம்அளவில் அழிந்தேன் ஆவா என்(று)அழுவார்.**

**பொழிப்புரை:** *(பால் குடித்து விட்டு) கொங்கையின் இடத்தில் அப்படியே உறங்கி விடுகின்ற குழந்தையைத் தாயானவள் மறந்து மிகவும் தேடி மனம் வாடுதல் போல, மூப்பு, மரணம் எதுவும் அடையாத தன் வடிவத்தை உணராமல், மக்கள் சலிப்படைந்து, கெட்டேன் நான், நெருங்கிய நாயகர் இல்லாதவன் என்றும், அன்னமயமாகிய தேகம் போகின்ற பொழுது செத்தேன் அந்தோ அந்தோ என்று அழுவார்.* **(6.13.24)**

**வாரி அசைந்த வடிவில்பல வடிவாம் அதுபோல் சங்கற்ப**
**நேரி னாலே சிற்பிரம நெடிது விரியும் சங்கற்ப**
**பார களங்கம் அறவிட்டுப் படர்ந்த அறிவை ஆன்மாவில்**
**தீர நிறுத்திச் சந்தேகத் திறங்கள் எல்லாம் தீர்ந்தோனாய்.**

**பொழிப்புரை:** *கடல் அசைந்த அசைவினாலே பல வடிவங்கள் ஆவது போல, சங்கற்பம் நேர்வதாலே சித்தாகிய பிரம்மம் விரிந்து விளங்கும். சங்கற்பம் (எண்ணங்கள்) என்னும் கனமாகிய களங்கத்தை முழுதும் விட்டுப் படர்ந்த அறிவை ஆன்மாவில் திடமாக நிலைநிறுத்தி, சந்தேகத்தன்மை எல்லாம் தீர்ந்தவனாகி,* **(6.13.25)**

**அலைவில் அலையாது உயர்பரம ஆன்மாப் போல நிலைநின்று**
**நிலைகொள் சுகியாய் இவ்வரசு நெடிது புரப்பாய் நிருபதியே**
**தலைமை ஆன்மா தன்னிடத்தே தன்ன தான அசைவுகளால்**
**தொலைவி லாத விளையாட்டைத் தொடர்பில் செய்யும் பாலரைப்போல்.**

**பொழிப்புரை:** *அசைவிலும் அசையாத (விவகாரங்களிலும் நிர்விகற்பமான) உயர்ந்த மேலான ஆன்மாவைப் போல நிலைபெற்று, நிலையான ஆனந்தம் உடையவனாய் இந்த அரசினை நெடுங்காலம் காப்பாய் மன்னவனே! முதன்மையான ஆன்மா தன்னிடத்தில் தனது சங்கற்ப சக்திகளினால் அளவற்ற (முடிவிலாத) விளையாட்டைத் தொடர்பாகச் (முறையாகச்) செய்கின்ற சிறுவர்களைப் போல இயற்றும்.* **(6.13.26)**

**அழிக்கும் தன்சத் தியினால்பின் அழித்துத் தன்பால் அமர்ந்திடுமால்**
**இழிக்கும் பந்தம் உறும்சத்தி இதற்குத் தன்பால் எழுந்தானே**
**பழிக்கும் பந்தம் எப்படியோ பற்று)அற்று அகலும் அப்படியே**
**ஒழிக்கும் சத்தி தானேவந்து) உதயம் ஆகும் இவனுக்கே.**

**பொழிப்புரை:** *அழிக்கும் தன் சத்தியினால் பின்பு அழித்து தன்னிடத்திலேயே பொருந்தி விடும். இழிவான பந்தத்தை அடைகின்ற சத்தி இந்த ஆத்மாவுக்குத் தன்னிடத்தில் தானே உண்டாகும். பழிக்கும் பந்தமானது எப்படியோ, அப்படியே பற்று அறுந்து நீங்கும் ஒழிக்கும் சத்தியும் இந்த ஆன்மாவுக்குத் தானே உண்டாகும். (பந்த மோட்சம் இரண்டிற்கும் காரணமான சத்திகள் இரண்டும் ஆன்மாவுக்குச் சுபாவ சித்தங்கள் என்று பொருள்)* **(6.13.27)**

**மதியோடு) இரவி கதிர்வன்னி மணிக ளில்சேர் ஒளிகளைப்போல்**
**முதிரு மரங்கள் கனிஇலையை முதலா யினபோல் அருவிகளில்**
**பிதிரும் துளிகள் போல்சாலப் பிறங்கும் பிரமத்து) இடைதோன்றும்**
**கதிகொள் புந்தி முதலாகக் கற்பி தம்சேர் இச்சகமே.**

**பொழிப்புரை:** *சந்திர சூரியனுடைய கிரணம் நெருப்பு, ரத்தின மணிகளில் சேர்கின்ற பிரகாசங்களைப் போல், முதிர்ந்த மரங்கள் பழம், இலை முதலாக ஆயின போல், அருவிகளில் சிதறும் துளிகள் போல், மிகவும் விளங்கும் பிரம்மத்தில் சலனத்தை உடைய புத்தி முதலாகக் கற்பிதமான (மித்தையான) இவ்வுலகம் உண்டாகும்.* **(6.13.28)**

**அதுதான் அறியார்க்(கு) இடர்நல்கி அதுவே அதுஅல் லாததுபோல்**
**திதமாய் நிற்கும் இம்மாயைச் சித்தி ரம்தான் அற்புதமே**
**பொதுவாய் அங்கம் அத்தனையும் புணர்ந்து பிறி(வு)அற்(று) இருக்கவும்தான்**
**இதமாய் உயிரை உயிர்காணா(து) இருக்க மயக்கும் யாரையுமே.**

**பொழிப்புரை:** *தோன்றிய அதுவே அறியாதவர்க்குத் துன்பத்தை அளித்து, அந்தச் சகமே மித்தையாக அல்லாதது போல் நிலைபெற்றதாக நிற்கும். இந்த மாயையின் விசித்திரம் மிகவும் ஆச்சரியமானதே. பொதுவாக உறுப்புகள் அத்தனையும் கலந்து பிரிவின்றி இருக்கவும், இதமாக ஆன்மாவை ஆன்மா காணாது இருக்கும் படியாக மயக்கும் யாவரையும்.* **(6.13.29)**

**பரம விண்ணே சகலமெல்லாம் என்று பாவித்(து) ஆசைஅறில்**
**பிரம கவசன் இன்ப(ம்)உள பெரியோன் ஆகும் நான்என்னும்**
**பொருளை நீக்கி நினை(வு)இன்மை வடிவாம் நினைவால் பொருள்அனைத்தும்**
**உருவம் இல்லை நிராலம்பம் உணர்வு சாந்தம் எனநினைவாய்.**

**பொழிப்புரை:** *சிதாகாசமே எல்லா உலகமும் என்று பாவனை செய்து, ஆசை அற்றுப் போனால் பிரம்ம பாவனையே கவசமாக உடையவனாய் ஆனந்தம் உடைய சீவன் முத்தன் ஆவான். நான் என்னும் அர்த்தத்தை அதாவது அகங்காரத்தை நீக்கி, சங்கற்பம் இல்லாத வடிவ பாவனையால், எல்லாப் பொருளுக்கும் காரணத்தைத் தவிர வடிவமே இல்லை, விவர்த்தம் ஆவதால் பற்றுக்கோடு இல்லாதது, சித்தாகவும், சாந்தமாகவும் இருக்கும் என பாவிப்பாய்.* **(6.13.30)**

**இதுவே நன்(று)இ(து) அன்(று)என்னும் இதுவே வித்தாம் இடர்ஒழுங்குக்(கு)**
**அதுதான் சமமாம் அங்கியில்வெந்(து) அழிந்தால் இடருக்(கு) அவசரம்என்**
**பொதுவா நலம்தீங்(கு) எனும்பேதம் அபாவம் என்னும் பொருவாளால்**
**விதமாம் புருட வருத்தத்தால் மெல்ல மனதில் வெட்டுதியால்.**

**பொழிப்புரை:** *இதுவே நல்லது, இது நல்லது அல்ல என்பதுவே துன்பம் முறையாக வருவதற்கு விதையாகும். அது சமம் என்கின்ற அக்கினியில் வெந்து அழிந்தால் துன்பம் வருவதற்கு அவசரம் எங்கே? பொதுவாக நன்மை, தீமை என்னும் பேதம், அபாவம் என்ற பாவனையாகிய (அபாவனையாகிய) வெட்டும் வாளினால் பலவிதமான புருடனின் முயற்சியாலே மெல்ல மனதில் வெட்டுவாய்.* **(6.13.31)**

**நினைவால் முடிக்கும் கரும(ம்)எனும் நீண்ட பெரிய வன்காடு**
**தனைநீ நினை(வு)இன் மையினாலே தடிந்து பரம பதமேவி**
**வினைதீர் உனது விவேகத்தை மேவி என்றும் நிலைநிற்பாய்**
**புனைதார் இக்கு வாகுவெனும் புகழால் நிறைந்த பூபதியே.**

**பொழிப்புரை:** *எண்ணப் பாவனையால் நிறைவேற்றும் கருமங்கள் என்னும் நீண்டு விரிந்த பெரிய காட்டினை, அபாவனையாலே கெடுத்து, பரம்பொருளை அடைந்து, பற்றுடன் கூடிய கர்மங்களை ஒழிப்பாய். உனது விவேகத்தை அடைந்து, என்றும் நிலைபெற்றிருப்பாய். வெற்றி மாலை அணிந்த இக்குவாகு என்னும் புகழால் நிறைந்த மன்னவனே!* **(6.13.32)**

**உலகின் பரப்பை உள்ளாக்கி உன்னும் நினைவுக்(கு) அப்பாலாய்க்**
**கலக மடவார் பொருள்என்னும் காதல் நழுவி நான்என்னும்**
**குலவும் இருள்போய் விவேகநிலை கூடும் அவனே பரானந்தம்**
**இலக அடைந்தோன் நெடுங்காலம் இவனே துன்பம் இல்லாதோன்.**

**பொழிப்புரை:** *விரிந்த உலகப் பரப்பினைத் தனக்குள் அடக்கி, நினைக்கின்ற பேத நினைவுக்கு அப்பாலாகி, கலக்கத்தை விளைக்கின்ற பெண்களும், பொருளும் என்கின்ற ஆசை விட்டு, யான் என்று நின்ற அஞ்ஞான இருள் நீக்கி, விவேக நிலையில் கூடி நிற்கும் அவனே பரமானந்தம் வெளிப்பட அடைந்தவன், நீண்ட காலம் இவனே துன்பம் இல்லாதவன்.* **(6.13.33)**

**சாந்தன் ஆகிச் சமநிலையாய்ச் சால நொய்தாய் அறிவுருவை**
**வேந்த னேசந் ததம்நினைவாய் என்று மனுமீண்(டு) உரைசெய்வான்**
**ஆய்ந்த நூலால் நல்லோரால் அறிவை வளர்க்க வேண்டுமுதல்**
**ஏய்ந்த யோகத் தினுக்குமுதல் பூமி இதுயோ கிக்குஇல்லை.**

**பொழிப்புரை:** *சாந்தம் உடையவனாகி, சம நிலையில் நிற்பவனாகி, மிகவும் சூக்குமமாய், சித்து வடிவத்தை மன்னவனே! எப்பொழுதும் சிந்திப்பாய் என்று மனுவானவர் மறுபடியும் கூறுவதாவது-விசாரம் செய்யும் சாத்திரத்தால், நல்லோரால், விவேகத்தை விருத்தி செய்தல் வேண்டும். ஆரம்பத்தில் மோட்ச சாதனத்தில் முதல் பூமி (சுபேச்சை), அற்புதமான யோகிக்கு இது இல்லை.* **(6.13.34)**

**அயர்(வு)இல் விசாரம் இரண்டாகும் அசங்க பாவம் மூன்றாகும்**
**பயிலு நாலாம் விலாபினியே படர்வா தனையைப் பற்(று)அறுக்கும்**
**மயர்(வு)இல் சுத்த நல்லறிவின் மயஆ னந்த வடிவைத்தாம்**
**துயில்சாக் கிரம்பா திகள்இல்லாத் தொடர்சீ வனின்முத் தியும்இதுவே.**

**பொழிப்புரை:** *அயர்வு அடையாத (இடைவிடாத) ஆத்ம விசாரம் இரண்டாவது பூமியாகும். அசங்க சொரூபத்தின் பாவனையே மூன்றாவது பூமியாகும் (மனதுக்கு தனுத்துவத்தைச் சம்பாதிப்பது ஆகலின் தனுமானசி எனப்பட்டது. அதாவது அசங்க அத்விதீய ஆன்மாவின் பாவனை வடிவ நிதித்தியாசனம் மூன்றாம் பூமி)*

*பயிற்சி செய்யும் விலாபனி என்னும் பாதசாதினியே நான்காம் பூமி (தத்துவ சாட்சாத்காரத்தினாலே அஞ்ஞான முதலிய பிரபஞ்சத்தின் பாதக சாதகம் என்னும் விலாபனி நான்காம் பூமி. இது வாசனையையும் அதன் பற்றுக் கோடான அவித்தையையும் விலயம் செய்வதாம். விலாபினி என்பது வடமொழிப் பாடாந்தரம். வாசனையின் விலயத்தால் சித்தம் சத்துவம் உறுதலால் சத்துவாபத்தி எனப்பட்டது). மயக்கமற்ற தூய*

*நல்லறிவின் மய ஆனந்த வடிவு ஐந்தாம் பூமியாம். பாதி நித்திரையும், பாதி விழிப்பும் சம்பந்தம் உடையதாம் இது. இது தானே சீவன் முத்திப் பதமும் ஆகும்.* **(6.13.35)**

**அறிவி லாமை வடிவாகி அக(ல்)ஆ னந்தம் ஒன்றாலும்**
**செறியும் வடிவாய்ச் சுழுத்தியைப்போல் திகழும் ஆறாம் உயர்பூமி**
**பிறிவில் சமமாய் அறநொய்தாய்ப் பெரிது நன்றாய்ச் சாந்த(ம்)அதாய்**
**வெறிய துரியம் கேவலமாம் வீடே ஏழாம் வியன்பூமி.**

**பொழிப்புரை:** *அறிவிலாமை வடிவாகி (ஞான மயமாகி) அபரிமித ஆனந்தம் ஒன்றாலும் நெருங்கிய வடிவமாய் சுழுத்தியைப் போல் திகழும் மேலான ஆறாம் பூமி. வேற்றுமையின்றி முழுதும் தெளிவாய் சூக்குமமாய், மிகவும் நல்லதாய், சாந்தமாய், சுத்த துரியமாயும் இருக்கின்ற கைவல்யமாகிய மோட்சமே ஏழாவதாகிய அற்புதமான பூமியாகும்.*
**(6.13.36)**

**மன்னு விடயம் விடுதலினால் வாழும் இவ்வே ழாம்பூமி**
**தன்னை நிருவா ணத்(து)உருவாய்ச் சான்ற துரியா தீதபதம்**
**என்ன உரைத்தார் சிலர்வேறே இவ்வேழ் அவத்தை களின்முன்னம்**
**சொன்ன அவத்தை ஒருமூன்றும் தொடர்சாக் கிரமாக் கருதுவதாம்.**

**பொழிப்புரை:** *நெருங்கிய விஷய வாசனைகள் விட்டு நீங்குவதால் பேரானந்தத்தில் வாழும் இந்த ஏழாம் பூமியை மோட்ச வடிவமாய் மேம்பட்ட துரியாதீத பதம் என்று சிலர் சொல்கின்றார்கள். இந்த ஏழ் அவத்தைகளில் முதலில் சொன்ன அவத்தைகளான மூன்று பூமிகளும் விழிப்பு அவத்தைக்குத் தொடர்புடையதாகக் கருதப்படும்.*
**(6.13.37)**

**சகங்கள் கனவில் தோற்(று)அரவாம் தன்மை நாலா வதுகனவாம்**
**நிக(ழ்)ஆ னந்தம் ஒன்றாலும் நெருங்கு வடிவம் ஐந்(து)என்று**
**புகன்ற அவத்தை சுழுத்தியதாம் போதம் இன்மை வடிவமாகித்**
**திகழ்ந்த ஆறாம் அவத்தையினைச் சிறந்த துரியம் எனலாகும்.**

**பொழிப்புரை:** *உலகங்கள் கனவைப் போலத் தோற்றும் தன்மையான நாலாவது பூமி கனவு ஆகும். விளங்குகின்ற ஆனந்தம் ஒன்றாலும் நெருங்கிய வடிவம் ஐந்தாவது பூமி என்று கூறிய அவத்தை சுழுத்தி ஆகும். அறிதல் இல்லாத வடிவமாகித் திகழ்ந்த ஆறாவது பூமியை விசேடமான துரியம் எனக் கூறலாம்.* **(6.13.38)**

**தரியா மனவாக்(கு) எட்டரிதாய்த் தனதே(சு) உண்மை வடிவான**
**துரியா தீதப் பதஅவத்தை தூய ஏழாம் உயர்பூமி**
**பிரியா(து) உள்ளே வசமான பிரத்தி யாகா ரத்தாலே**
**தெரியா தாகிக் காண்கின்ற திரள்கள் அனைத்தும் போமாகில்.**

**பொழிப்புரை:** *நிலையாத மனதிற்கும், வாக்கிற்கும் எட்டுவதற்கு அரிதாய், சுயம்பிரகாச உண்மை வடிவான துரியாதீதப் பத அவத்தை தூயதான உயர்ந்த ஏழாம் பூமி. பின்னப்படாமல் உள்ளே வயப்பட்ட பிரத்தியாகாரம் என்பதாலே (சித்தத்தைத் தடுப்பதனால்) காணப்படும் கூட்டங்கள் எல்லாம் தெரியாதாகி நீங்குமானால்.*
**(6.13.39)**

**அந்த மகாசத் தையினாலே அவனே முத்தன் ஐய(ம்)இலை**
**வந்த போக சுகதுக்க வகையால் தாக்கா(து) அறநிறைந்த**
**புந்தி உளனாய் ஆன்மாவில் பொருந்தி மகிழ்ந்து நிற்கு(ம்)எனில்**
**இந்த மனிதன் நிலைதானே இங்கே தோன்றும் உயர்முத்தி.**

**பொழிப்புரை:** *அந்த மகாசத்தையினாலே அவனே (சீவன்) முத்தன், சந்தேகம் இல்லை. வந்த போகங்களின் சுகம் துக்க வகைகளினால் தாக்கப்படாது முழுதும் நிறைந்த பூரணமான புத்தி உடையவனாய், ஆன்மாவில் கலந்து மகிழ்ச்சி அடைந்திருக்குமாயின் இந்தப் புருடனின் நிலைமை தானே இங்கே தோன்றும் உயர்ந்த மோட்சம் என்பது.* **(6.13.40)**

**பொங்கு தொழில்மே வினன்சாந்தன் புகல்வீட்(டு) உறைவோன் சந்நியாசி**
**அங்கம் உள்ளோன் சரீர(ம்)இலோன் எனினும் அவனே முனியாகும்**
**எங்கும் இறவேன் உயிர்வாழேன் இலனும் உளனும் அலன்இவனே**
**தங்கு நான்கிஞ் சிலும்இலன்என்(று) உன்னித் தீரன் தளர்(வு)அணுகான்.**

**பொழிப்புரை:** *வந்தடையும் தொழில்களைச் செய்பவன், தொழிலின்றி சாந்தமானவன், சொல்கின்ற இல்லறத்தோன், சந்நியாசி, தேகத்தோடு கூடியவன், கூடாதவன், என்றாலும் அவனே சீவன் முத்தனாகும். எந்த இடத்திலும் சாக மாட்டேன், உயிர் வாழேன், , அசத்தனும் சத்தனும் ஆகேன், இவன் என்பதும், தங்குகின்ற நான் என்பதும் கொஞ் சமும் இல்லாதவன் என்பதாக எண்ணிய தைரியம் உடையவன் தளர்வு அடையான்.* **(6.13.41)**

**ஒன்றில் அணுகேன் நான்சரைபற்(று) உள்ள மமதை அகங்காரம்**
**என்ற ஒன்றும் இலன்என்றே எண்ணித் தீரன் இடர்அணுகான்**
**துன்று குணமூன்(று) இலன்சரைசா(வு) இலன்நான் சுத்தன் தூஅறிஞன்**
**நின்ற சாந்தன் சமரசன்நான் என்று நினைத்தோன் துயர்அணுகான்.**

**பொழிப்புரை:** *ஒன்றையும் சாரமாட்டேன், நான் மூப்பு, பற்று, மனம், மமதை, அகங்காரம் என்ற யாதொன்றும் இல்லாதவன் என்று எண்ணிய தீரன் துயரம் அடையான். நெருங்கிய மூன்று குணங்களும் இல்லாதவன், மூப்பு, இறப்பு இல்லாதவன், நான் பரிசுத்தன், தூய அறிஞன், நிலையான சாந்தம் உடையவன், சமத் தன்மையில் இருப்பவன் நான் என்று சிந்தித்தவன் துயரை அடையான்.* **(6.13.42)**

**திரண நுனிகள் விசும்(பு)இரவி தேவர் உரகர் நரர்இடத்தில்**
**விரியும் அறிவே நான்என்று விளங்கும் தீரன் மெலி(வு)அணுகான்**
**புரியும் குறுக்கு மேல்கீழ்என் போதப் பெருமை உலாவிய(து)என்(று)**
**அரிதின் அனந்த விசாரம்செய்(து) அதனை அறிந்தோன் அழிவில்லோன்.**

**பொழிப்புரை:** *துரும்பின் நுனி, ஆகாயம், சூரியன், தேவர்கள், நாகரிடத்திலும், மனிதரிடத்திலும் விரிந்து பரந்திருக்கும் சித்தே நான் என்று பிரகாசிக்கும் தீரன் தளர்ச்சியை அடையான். சொல்லும் குறுக்கும் மேல் கீழும் எனது சித்து வியாபித்து உள்ளது என்று அரியதான அளவில்லாத விசாரம் செய்து அதனை அறிந்தவன் அழிவில்லாதவன்.* **(6.13.43)**

திரவா சனையோடு எப்பொருள்கள் அனுப விக்கச் சேர்ந்(து)உளவோ
துரி(சு)இல் அதுவே சுகம்செய்யும் சுகம்ஏ(து) அளிக்கும் அதுவிரைவில்
வெருவு காலத் தால்நசிக்கும் அதனால் துன்பம் விளைபொருட்டாம்
பெரிய சுகதுக் கங்களுக்குப் பிரி(வு)அற்(று) இருக்கை பிரசித்தம்.

**பொழிப்புரை:** *திடமான வாசனையுடன் எந்தப் பொருள்கள் அனுபவிப்பதற்காகச் சேர்ந்தனவோ, குற்றமில்லாத அவையே சுகத்தை அளிக்கும். சுகத்தை அளிப்பது எதுவோ அதுவே சீக்கிரத்தில் பயங்கர காலத்தால் அழியும், அதனால் துன்பம் விளையும். பெரிதான சுக துக்கங்களுக்கு உடன் நிகழும் நியமம் (முறைமை) என்பது பிரசித்தமாம் (வெட்ட வெளிச்சமாம்)* **(6.13.44)**

நிருவா சனையின் ஆனாலும் நேர்வா சனையின் ஆனாலும்
பொருள்தான் அடையின் அதனாலே இன்ப துன்பம் பொருந்தாவாம்
வரும்போ(து) இரண்டும் ஒன்றாக வந்து விளங்கும் சுகதுக்கம்
அருகா நின்ற நாசத்தில் அவைகள் இரண்டும் அடங்கிடுமால்.

**பொழிப்புரை:** *வாசனை இல்லாததாக ஆயினும், சுருங்கிய வாசனையதாக ஆயினும், பொருள் அடையப்படுமாயின் அதனாலே இன்ப துன்பம் உண்டாகாது. இன்ப துன்பங்கள் உண்டாகும் போது இரண்டும் ஒருமித்து உண்டாகி நிலைபெறும், குறைந்து கெடும் போதில் அந்த இன்ப துன்பங்கள் இரண்டும் ஒன்றாய் அழிந்து போகும். (நான்காவது முதலிய பூமிகளில் வாசனையின் குறைவாம், ஏழாவது பூமியிலோ வாசனையின் விலயம் ஆகும்)* **(6.13.45)**

புந்தி தணிந்த வாசனையால் புரிகா ரியம்மீண்(டு) அங்குரியா
வெந்த விதையின் உடல்கரண முதல வெவ்வே றாய்விரிந்து
நந்து கரும காரணங்கள் நாட்டும் ஒருவன் செய்வோன்தான்
முந்து புசிப்போன் தான்எவனே முன்வந்(து) அடைவன் அவ்விடத்தே.

**பொழிப்புரை:** *வாசனை தணிந்த புத்தியால் புரிகின்ற காரியமானது, மறுபடியும் முளைக்க மாட்டாத வறுத்த விதையைப் போல, திரும்பச் சுகதுக்கங்களாக உண்டாகாது. தேக இந்திரியங்கள் முதலிய வேறு வேறாக விரிந்து காரணங்களினால் திடமான பேத கன்மங்கள் உண்டாகும். ஒருவன் கருத்தா, ஒருவன் அனுபவிப்பவன் என்பதாக அங்கு எவன் முன்னால் வந்து நிற்பன். எவனுமே வரான். (தேக இந்திரியாதி கரணக் கூட்டத்தினால் கருமங்கள் கற்பிக்கப்பெறும். அதனால் அக்கருமங்களைச் செய்பவன், அனுபவிப்பவன் நான் என்று எவனுமே முன்னால் வந்து உரிமை கொண்டாடமாட்டான் என்று பொருள்)* **(6.13.46)**

பாவிப் பனயா வையினு(ம்)உளம் பற்றா(து) உயர்ந்தோன் தாரகையின்
தேவில் குளிர்ந்து நிறைந்(து)ஒளிர்வன் செய்ய கதிரோன் தன்கதிரின்
பூவில் தொழிலின் உலைந்(து)உழலும் பொத்த உடலாம் இலவுதனை
மேவு தொழில்பஞ்(சு) ஓடிப்போம் ஞானக் காற்றால் விரைந்(து)ஒருபால்.

**பொழிப்புரை:** *விஷயத்தால் பாவிக்கப்பட்ட எல்லாப் பொருள்களிலும் மனம் பற்றாது உயர்ந்தோன் சந்திரனைப் போல் குளிர்ந்து நிறைந்து ஒளிர்வன், சிறந்த சூரியனின்*

*கிரணங்களைப் போல் பிரகாசிப்பன். பூமியில் விவகாரங்களில் வருந்திச் சுழல்கின்ற ஒன்பது துவாரமுள்ள தேகம் என்னும் இலவ மரத்தில் பொருந்திய சஞ்சித ஆகாமியம் என்னும் பஞ்சானது தத்துவ ஞானமான பெருங் காற்றினால் வேகமாக ஒருபுறமாக (எங்கேயோ) ஓடிப்போகும்.* **(6.13.47)**

**எண்ணம் எல்லாம் பழகாமை யாலே இறக்கும் பிறப்போர்க்குக்**
**கண்ண தான விஞ்ஞானக் கலைதான் ஒருகால் தோன்றிடினும்**
**பண்ணு நல்ல கழனிதனில் பயின்ற வித்து பலிப்பதுபோல்**
**திண்ண மான வன்பாலே மிகவும் வளரும் சிறப்பாக.**

**பொழிப்புரை:** *பிறக்கின்ற சீவர்களுக்கு மதிக்கின்ற வித்தையானது அடிக்கடி பழகா விட்டால் (பயிற்சி செய்யாமல் போனால்) அழிந்துவிடும். கண் போன்ற விசேட ஞானக் கலையானது ஒரு போது உண்டாயினும் உழவு செய்திருக்கின்ற நல்ல வயலில் விதைத்த விதையானது பலன் கொடுப்பது போல், அதி திடமான வலிமையாலே மிகவும் மேன்மையாக வளர்ச்சி அடையும். (எல்லாக் கலையும் பயிற்சி என்னும் பழக்கம் இல்லாவிட்டால் அழிந்து விடும். இந்த ஞானக் கலையோ உள்ளே ஒருபொழுது உண்டாயின் நாளுக்கு நாள் வளரும்)* **(6.13.48)**

**முழுது வடிவ மாய்ஒன்றாம் ஆன்மா முழுது சத்தியினும்**
**கெழுமு நதியில் உவரிகளில் கீலா லம்போல் நின்(று)ஒளிரும்**
**ஒழி(வு)இல் நினைவின் பரப்(பு)இலதாய் ஒன்றாம் சற்பா வம்தன்னில்**
**தழுவு கூறு மாத்திரமாய் உணர்வாய் சகல சகங்களையும்.**

**பொழிப்புரை:** *எல்லா வடிவங்களுமாய், ஏகமாய்த் திகழ்கின்ற ஆன்மா, எல்லா சத்திகளிலும் விளங்கும், நதிகளில், கடல்களில் உள்ள தண்ணீரைப் போல. நீங்காத எண்ணக் கூட்டம் இல்லாததாய், ஏகமாய் இருக்கின்ற சத்து வடிவத்தில் எல்லா உலகங்களையும் ஒரு கூறு மாத்திரமாக அறிவாய்.* **(6.13.49)**

**என்று மனுமீண்(டு) உரைசெய்வான் இயைந்த புலன்போ கத்(து)ஆசை**
**நின்ற(து) எம்மட்(டு) அம்மட்டும் நிகழ்சீ வப்பேர் பெறும்ஆன்மா**
**ஒன்றும் அவிவே கத்தால்அவ் ஆசை உண்டாம் தன்னாலே**
**அன்று நிருபா விவேகத்தால் அந்த ஆசை அழி(வு)எய்தும்.**

**பொழிப்புரை:** *என்று மனு மறுபடியும் கூறுவார்: பொருந்திய புலன்களின் போகங்களில் ஆசை எதுவரையில் நின்றிருக்குமோ அதுவரையில் திகழும் சீவன் என்ற பெயரை ஆன்மாவானது அடையும். விவேகம் இல்லாமல் இருப்பதாலே அந்த ஆசையானது உண்டாவதாகும். உண்மையில் இல்லாததாம். மன்னவனே! விவேகம் உடைய விசாரத்தாலே அந்த ஆசை அழிவை அடையும்.* **(6.13.50)**

**காதல் என்று போம்அன்று கலந்த சீவத் திறம்விட்டுத்**
**தீதி லாத பரப்பிரமத் திறத்தை ஆன்மா சேர்ந்திடுமால்**
**கேத மாக மேல்நின்றும் கீழே எய்தும் கீழ்நின்றும்**
**ஏதம் இல்லா மலேமேல்சென்(று) எய்தும் நெடுநாள் இவ்வான்மா.**

**பொழிப்புரை:** *ஆசை எப்பொழுது போகுமோ அப்பொழுது இடையில் வந்து கலந்த சீவத் தன்மையை விட்டு, தீதிலாத பரப்பிரம்மத் தன்மையை ஆன்மா சேர்ந்திடும். நெடுங்காலம் இந்த ஆன்மா துயரம்பெற மேலிருந்து கீழேயும், (சொர்க்கத்திலிருந்து நரகத்திற்கும்), துயரம் இல்லாமலே கீழிருந்து மேலேயும் (நரகத்திலிருந்து சொர்க்கத்துக்கும்) சென்றுகொண்டிருக்கும்.* **(6.13.51)**

**கனமார் பிறவிப் பெரும்பூட்டைக் கருத்தாம் கயிற்றில் கடமாகேல்**
**எனது)ஈ(து) இதற்கு நான்என்றே இறுகும் பிராந்தி விவகாரம்**
**நனிமோ கத்தில் செறிபவர்யார் அந்த நவைசேர் வஞ்சகரே**
**தனிவேல் மன்னா கீழ்நின்றும் கீழே சரிக்கத் தக்கவரே.**

**பொழிப்புரை:** *கூட்டமாய் உள்ள அல்லது கனமான கர்மங்கள் நிறைந்த பிறவியாகிய பெரிய நீர் இறைக்கும் ஏற்றத்தின் சிந்தனை என்கின்ற கயிற்றின் குடம் ஆகாதே. என்னுடையது இது, இதற்கு நானே கருத்தா என்று இறுகிப் பிணிக்கும் பிராந்தி விவகாரப் பெரு மோகத்தில் விழுபவர் யார்? அந்தக் குற்றத்தைச் சேரும் வஞ்சகரே, ஒப்பற்ற வேலினை உடைய மன்னவா! கீழுக்கும் கீழான கதியை அடையத் தக்கவர் ஆவர்.* **(6.13.52)**

**இதற்கு நான்ஈ(து) எனக்(கு)அவன்மற்(று) இவன்நான் நான்என் றிடுமோக**
**விதத்தை உயர்புந் தியினாலே விட்டோர் மேற்கு மேல்செல்வோர்**
**திதத்தன் ஒளிகூர் ஆன்மாவைச் சிறிதும் தாழா(து) உறப்பற்றி**
**உதித்த சகத்தைத் தற்புரண உருவ மாக நோக்குதியால்.**

**பொழிப்புரை:** *இந்தப் பொருளுக்கு உரியவன் நான், இந்தப் பொருள் எனக்கே உரியது, அவன், இவன், அவன் நான், இவன் நான், நான் நான் என்றிடும் மோக விதத்தை உயர்ந்த புத்தியினாலே விட்டு விட்டவர், மேலுக்கும் மேலாகச் (முத்தி நோக்கி) செல்பவர். நிலைபெற்ற தனது பிரகாசத்தாலே பிரகாசிக்கும் ஆன்மாவைக் கொஞ்சமும் விட்டு விடாமல் திடமாகப் பற்றி, விவர்த்தமாகவே தோற்றும் உலகத்தை ஆன்மாவாகவே நோக்குவாய்.* **(6.13.53)**

**என்(று)இப் படித்தன் சித்(து)உருவம் இரண்(டு)அற்(று) உள்ளே தனித்தோன்றும்**
**அன்(று)இப் பவம்போய் பரமேசன் ஆக லாகும் அயன்சிவன்மால்**
**வென்றிக் குலிசத் தவன்முதலோர் செய்த எல்லாம் மெய்ம்மையினால்**
**ஒன்றிச் செறிசித்(து) உருவுடைநான் செய்கின் றேன்என்(று) உணர்(வு)உறுவாய்.**

**பொழிப்புரை:** *எப்போது இப்படி தனது சித்து உருவம் இரண்டாக இல்லாமல் உள்ளே ஒப்பற்றதாகத் தானாகவே தோன்றுகின்ற அப்போது இந்தப் பிறவி போய் பரப்பிரம்மம் ஆகலாம். நான்முகன், ருத்திரன், விஷ்ணு, வெற்றி பொருந்திய வஜ்ஜிராயுதத்தைத் தாங்கிய தேவேந்திரன் முதலானோர் செய்கின்ற அனைத்தும் தத்துவத்தில் கலந்து சித்து உருவுடைய யான் இயற்றுகின்றேன் என்பதாக உணர்வாய்.* **(6.13.54)**

**யாது யா(து)எப் பொழு(து)எதிர்ந்த(து) அவற்றில் என்னே சொல்லப்பட்ட(து)**
**ஓதும் அவைஎல் லாம்தடைதீர் உணர்வின் விலாச மேநன்றாம்**
**தீ(து)இல் அறிவு மாத்திரமாம் திறனாய்க் காலம் செயம்பண்ணிக்**
**கோ(து)இல் மனத்தோ(டு) இருப்பவன்சேர் குறை(வு)இல் சுகத்தோ(டு) எதுநிகரே.**

**பொழிப்புரை:** *எந்த எந்த தரிசனங்கள் எப்போது நேரிடுதோ அந்தத் தரிசனங்களில் எது தத்துவமாகச் சொல்லப்பட்டதோ, சொல்லப்பட்ட அவை அனைத்தும் தடையற்ற ஞானத்தின் இனிதான லீலையே ஆம். தீதிலாத சின்மாத்திரமான குணத்தை உடையவனாய்க் காலத்தை வெற்றி கொண்டு (காலத்திற்குள் அகப்படாமல்) குற்றமற்ற மனதுடன் இருப்பவன் அடைகின்ற பூரண ஆனந்தத்துடன் எது ஒப்பாகும்? (எதுவும் அதற்கு ஒப்பாகாது)* **(6.13.55)**

**இல்லது) அன்று)உண்(டு) அல்லஅறி(வு) இல்லா உருவில் அறிஉருவம்**
**அல்ல ஆன்ம உருவ(ம்)அல அயல்அன்(று) உலகம் எனநினைவாய்**
**சொல்லும் இந்தச் சொரூப(ம்)உறத் தொடர்ந்த பகுதி போய்இறக்கும்**
**புல்லு தேசம் கால(ம்)அல புறத்(து)ஓர் நிலைஅன்(று) உயர்முத்தி.**

**பொழிப்புரை:** *உலகம், இல்லாததும் அல்ல, உண்டானதும் அல்ல, அசித்து உருவம் அல்ல, சித்து உருவமும் அல்ல, ஆன்ம வடிவமும் அல்ல, அனாத்ம வடிவமும் அல்ல என்று நினைப்பாய். சொல்லும் இந்த சொரூபத்தை அடைய, பழமையாய் தொடர்ந்த மாயை போய் இறக்கும். மேலான மோட்சமானது, ஆதார இடமும், காலமும் அல்ல, புறம்பான ஒரு நிலையும் அல்ல.* **(6.13.56)**

**அகங்கா ரத்தின் அகம்என்னும் மோகம் அழிந்தால் பாவனையாம்**
**மிகும்பேர் பெற்ற பகுதிஅந்த மேவும் இதுவே வீ(டு)ஆகும்**
**தொகும்சாத் திரத்தின் பொருள்நினைவில் துவள்வும் நாநா விதஇன்பம்**
**புகும்கா வியவேட் கையும்அனைத்து விகற்பத் துயரும் பொருந்தாமல்**

**பொழிப்புரை:** *அகங்காரத்தின் நான் என்கின்ற மோகம் அழிந்தால், வாசனை வடிவமான பாவனை எனப் பெரும்பெயர் பெற்ற அவித்தை முடிவுறும் (அழியும்). இந்த மாயையின் நாசமே மோட்சம் ஆகும். அனேக சாத்திர அர்த்தத்தில் சஞ்சலமும், பலவகையான ரசனை நிறைந்த காவியம் படிக்கும் விருப்பமும், அனைத்து சங்கற்ப விகற்ப துயரங்களும் அடையாமல்* **(6.13.57)**

**அன்னான் சமமாய் அழிவில்லா ஆன்மா வாய்நின்(று) இன்ப(ம்)உறும்**
**என்னா கினும்ஒன்(று) உடுப்பவனாய் என்னா கினும்ஒன்(று) உண்பவனாய்**
**உன்னா(து) எங்கா கினும்ஒருபால் உறங்கு வோனாய் ஆங்(கு)அவனே**
**பொன்னார் பூமி முழு(து)ஆளும் பூபா லனைப்போல் பொலிவுறுமால்.**

**பொழிப்புரை:** *(இருக்கின்ற) அத்தகையவன் சமமாய், அழிவில்லாத ஆன்ம வடிவமாய் நின்று ஆனந்தத்தை அடைவன். ஏதாவது ஒன்றை உடுப்பவனாய், ஏதாவது ஒன்றை உண்பவனாய், ஆலோசிக்காமல் எங்காவது ஓரிடத்தில் உறங்குபவனாய் இருக்கப்பெற்ற அத்தகைய சீவன் முத்தனே, பொன் நிறைந்த பூமி முழுவதையும் அரசாளும் சக்கரவர்த்தியைப் போல் பொலிவுற்றுத் திகழ்வான்.* **(6.13.58)**

**வருணாச் சிரம ஆசார வழிநூல் நடத்தும் நடைநீங்கி**
**அருகா உலகின் வலைஅகன்றோன் அரும்கூ(டு) அகன்ற கேசரிபோல்**
**நிருபா உரைகட்(கு) எட்டரியோன் நேடிப் பிறக்கு நிலைநீத்தோன்**
**ஒருசோ பையைச்சேர்ந் தவன்மழைபோய் ஒளித்த நாளில் விண்டலம்போல்.**

**பொழிப்புரை:** *வலிமையான இரும்புக் கூண்டிலிருந்து நீங்கிய சிங்கத்தைப் போல, கர்ம சாத்திரங்கள் நடத்துகின்ற வர்ண ஆசிரம தரும நெறியின் நடையினை விட்டு, அழிகின்ற உலகின் வலையிலிருந்து அகன்றவன் மன்னவனே! வாக்குகளால் எட்ட முடியாதவன், தன்னைத் தேடிப் பிறக்கும் நிலையை நீக்கியவன் மேகம் மறைந்த சரற் காலத்தில் உள்ள தெளிந்த ஆகாயத்தைப் போல ஒப்பற்ற சாந்தியை அடைவன்.* **(6.13.59)**

**தெளிவு கம்பீ ரங்கள்கிரி சேர்ந்த பெரிய சுனைபோல்வன்**
**களிகொள் பரம சுகச்சுவையாம் தன்பால் தானே கலங்காமல்**
**எளிது சுகிப்பன் கருமபலம் எல்லாம் விட்டோன் அழி(வு)இன்றி**
**ஒளிரும் நிறைவோன் இருவினைவே(று) ஒன்றும் தாக்கா(து) ஒன்(று)அணுகான்.**

**பொழிப்புரை:** *தெளிவும், ஆழமும் உள்ள மலையைச் சேர்ந்த பெரிய சுனைக்கு (குளத்துக்கு) ஒப்பானவன், களிப்பை உடைய பரமானந்த ரசமாகிய தன்னிடத்தில் (ஆத்மாவில்) கலக்கம் இன்றி எளிதாக சுகம் அடைபவன், கரும பலன்கள் எல்லாவற்றையும் விட்டவன், அழிவின்றிப் பிரகாசிக்கும் பூரணன், இரு வினைகள் ஒன்றும் தாக்காதவன், எந்த ஒன்றையும் சாராதவன்.* **(6.13.60)**

பத்தி பாய்ந்(து)உள் பற்றாத பளிங்கு போலாக் கருமபலம்
பத்தி பாய்ந்(து)உள் பற்றாதோன் பலநீள் மனிதர் உடன்உறைந்தும்
பத்தி யால்அர்ச் சித்தாலும் பகையால் உடலை அரிந்தாலும்
பத்தி பாச்சல் உற்றதுபோல் பயிலும் மகிழ்வு துயர்அறியான்.

**பொழிப்புரை:** *நிறங்கள் பிரதிபலித்தும் உள்பிடிப்பில்லாத (மாறாத) படிக மணியைப் போலக் கர்ம பலமானது பிரதிபலித்தும் உள்ளத்தில் பற்றாதவன். பலவிதமாக விரிந்த விவகாரம் உடைய மனிதர்களுடன் கூடியிருந்தாலும், பத்தியால் ஆராதனை செய்தாலும், விரோதத்தால் தேகத்தை அரிந்தாலும் பிரதிபலித்ததே போல, உண்டாகும் சுக துக்கங்களை அறியமாட்டான்.* **(6.13.61)**

துதிகள் கடவுள் ஓமங்கள் தொடர்பூச் சியன்பூ சைகள்இல்லோன்
விதிசெய் நீதி ஆசாரம் மேவப் படுவோன் மேவாதோன்
எதிரும் தன்னால் உலகோர்கள் இறையும் வெருவா வகைஇருப்போன்
உதித மான உலகத்தில் ஒன்றால் வெருவா(து) உறைகிற்போன்.

**பொழிப்புரை:** *துதிகள், தேவ யாகங்கள் தொடர்பாகப் பூசிக்கப்படுபவன் பூசைகள் இல்லாதவன். வேத விதிப்படி செய்கின்ற தரும ஒழுக்கம் பொருந்தி நிற்பவன், பொருந்தாதவன், எதிர்ப்படும் தன்னாலே மக்கள் கொஞ்சமும் பயப்படாத வண்ணம் இருப்போன், உண்டான உலகத்தில் எப்பொருளாலும் பயப்படாது இருப்பவன்.* **(6.13.62)**

பற்று முனிவு பயம்சுகங்கள் பயிலான் எனினும் பயின்றிடினும்
சொற்ற எவர்க்கும் பிரமேயம் தொடரான் எனினும் நன்பாலர்
பெற்ற பிரமே யத்(து)உறினும் பெரிய மனத்தோன் காசியில்சா(வு)
உற்ற பொழுதும் நாய்க்கறிப்போர் உழைசா(வு) உறினும் உறும்பதம்கேள்.

**பொழிப்புரை:** *பற்று கோபம் (விருப்பு வெறுப்பு), பயம், சுகங்கள் இவற்றுடன் கூடாதவன் ஆயினும், கூடினவன் ஆயினும் முன் சொல்லப்பட்ட யாவருக்கும் அறிதற்கு விஷயமாகத் தோன்றான். நல்ல பாலகர் பெற்ற விஷயத்தை அடைந்தவன் ஆயினும் பெரிய மனத்தோன் காசியில் மரணம் அடைந்தாலும், புலையர் வீட்டில் இறந்தாலும், அடையப்பெறும் பதங்களைக் கேட்பாய்.* **(6.13.63)**

**ஞானம் அடைந்த பொழுதி(ல்)இவன் நல்வீ(டு) உற்றோன் மனம்இறந்தோன்**
**ஈன மான அகம்பாவப் பிராந்தி அன்றோ இடர்பந்தம்**
**ஆன வீடா வதுமடமை அந்த காரம் கெடல்அன்றோ**
**மான மிகுந்த இவன்எய்தின் மனிதர் பூசை செயவேண்டும்.**

**பொழிப்புரை:** *பிரம்ம ஞானம் அடைந்தபொழுதே இவன் நல்ல மோட்சத்தை அடைந்தவன்.மனம் கடந்தவன் (இறந்தவன்). நீசமான அகம்பாவ பிராந்தி அல்லவோ துன்பத்தைத் தரும் பந்தமாம். ஞானத்தாலான மோட்சமாவது அறியாமையாகிய பேரிருள் கெடுவது அல்லவோ! மாட்சிமை பொருந்திய இந்த அறிஞர் வரின் மனிதர்கள் பூசை செயல்வேண்டும்.* **(6.13.64)**

**போற்ற வணங்கப் பூசிக்கப் புகழ வருந்திப் போய்க்காண**
**ஆற்ற உரியோன் எவன்அவன்வன் பிறவி அறுப்போர்க்(கு) அனவரதம்**
**சாற்று மகத்தால் தீர்த்தத்தால் தவத்தால் தானத் தால்கிட்டா**
**ஊற்ற அறிவால் பிறவிஅறுத்(து) உயர்ந்தோன் பத்தி தரும்பயனே.**

**பொழிப்புரை:** *பிறவியைப் போக்கிக் கொள்ள விரும்புபவர்களுக்கு எப்பொழுதும் துதிக்க, வணங்க, பூசை செய்ய, புகழ, வருந்திச் சென்று போய் தரிசிக்க. பணிவிடை செய்ய தக்கவன் யார் என்றால் திட ஞானத்தினாலே பிறவியை அறுத்த மேலானவன் ஆகும். அவனுடைய அன்பு கொடுக்கும் பிரயோசனம், கரும காண்டத்தால் விதித்த யாகத்தால், தீர்த்தங்களினால், தவங்களினால், தானங்களினால் அடைய முடியாததாம்.* **(6.13.65)**

**பரிந்(து)இவ் வாறு கற்பித்துப் பகவன் மனுவாம் பேர்உடையோன்**
**விரிஞ்சன் தனது நகரத்தைப் புக்கான் இக்கு வாகுவெனும்**
**விரிந்த புகழ்மன் னனும்அந்த விழியே பற்றி நிலைநின்றான்**
**வரிந்த கழல்கால் இராமஎன வசிட்ட முனிவன் அருள்செய்தான்.**

**பொழிப்புரை:** *அன்புடன் இவ்வாறு உபதேசித்து மனு பகவான் என்னும் பெயரை உடையவர் நான்முகனுடைய நகரத்தை அடைந்தார். இக்குவாகு என்னும் பரந்த புகழ் கொண்ட மன்னவனும் அந்த திருஷ்டியைக் (சொன்ன பார்வைக் கோணத்திலே) கடைப்பிடித்து நிலைநின்றான். வீர தண்டையைத் தரித்த பாதமுடைய இராமனே! என்று வசிட்ட முனிவர் அருளிச்செய்தார்.* **(6.13.66)**

**(நிருவாணப் பிரகரணத்தில் இட்சுவாகு கதை முற்றும்)**

# (xiv) மானுவேடன் கதை
## (முனி வியாதன் / மிருக வியாதன் கதை)

*(முன் கதையில் தனது விசாரத்தால் அறிதற்கு அரியதாயினும் தத்துவம், குருவின் உபதேசத்தால் எளிதில் அறியலாம் எனத் தெரிவிக்கப்பட்டது. தத்துவத்தை அறிந்த மன அமைதி உடையவனுக்கு மிகவும் லௌகீக விவகாரம் இல்லையென உதாரணம் மூலம் தெரிவிப்பதற்கு முனிவியாதன் கதை சொல்லப்படுகிறது)*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**இந்தவா(று) இருக்கில் சீவன் முக்தனாய் இனிய தான**
**புந்திசேர் இவனுக்(கு) ஏது புதுமையாம் அதிச யம்தான்**
**அந்த(ம்)இல் பரத்தைக் கண்டோர்க்(கு) அதிகனே என்று கேட்ட**
**சுந்தர இராமற்(கு) அந்தத் தொல்மறை வசிட்டன் சொல்வான்.**

**பொழிப்புரை:** *இவ்வாறு இருக்கையில், சீவன் முத்தனாய் இனியதான புத்தியைச் சேர்ந்த இந்த மகானுக்குப் புதுமையானது எது? அதிசயமானது எது? முடிவற்ற பிரம்மத்தைக் கண்டவர்களுக்குள் மேன்மை மிக்கவரே! என்று கேட்ட அழகன் இராம பிரானுக்குப் பழமையான வேதங்களை உணர்ந்த வசிட்டர் சொல்வார்.* **(6.14.1)**

**ஒப்பறு ஞானி புந்தி ஒன்றிலே அதிச யிக்கும்**
**தப்பற நிறைந்து சாந்த னாய்அவன் தன்பால் நிற்கும்**
**செப்புமந் திரங்கள் நோன்பு தந்திரம் சித்தி யானோர்**
**கைப்படு விண்போக்(கு) ஆதி கருமத்தில் புதுமை என்னே.**

**பொழிப்புரை:** *ஒப்பிலாத ஞானியின் புத்தியானது, இரண்டற்ற ஏகமானதிலே (பிரம்மத்தில் / ஆன்மாவிடத்தில்) குற்றமறப் பூரணனாய் சாந்தம் உடையவன் தன்னிடத்திலே நிலைபெற்று நிற்பான். செபிக்கும் மந்திரங்கள், நோற்கும் விரதங்கள் அனேக யுத்திகள் சித்தியாகிக் கைவந்தவர்கள் கையாளும் ஆகாயத்தில் நடத்தல் போன்ற கருமங்களில் புதுமை என்ன இருக்கிறது?* **(6.14.2)**

**உலகாய் விரிந்த இவராலும் ஒழுங்கால் விரிந்த வருத்தத்தால்**
**பலமாம் அணிமா தியும்பண்ணப் படும்ஆ தலினால் தனைஅறிந்தோர்க்(கு)**
**இலதாம் இவர்க்(கு)ஓர் விசேட(ம்)உள(து) இழிந்த மூடப் புந்திகள்போல்**
**அலன்ஆ குவன்எங் கணும்ஆசை அறலால் இவன்நெஞ்(சு) அமலமதாம்.**

**பொழிப்புரை:** *உலகமாய் விரிந்திருக்கும் சாமானியர்களாலும், ஒழுங்கான அதிக முயற்சியினாலும் (கஷ்டத்தினாலும்) பலனாகக் கூடிய அணிமா முதலான எட்டு சித்திகளும் செய்யப்படும். ஆதலால் தனது யதார்த்த வடிவத்தை அறிந்தவர்களுக்கு இல்லையாம், அறிவுள்ளோர்களுக்கு ஒரு சிறப்பு உள்ளது. இழிந்த மூடப் புத்தி யுடையவர் போல் ஆகமாட்டார்கள். எவ்விடத்திலும் ஆசை இல்லாதபடியால் இவனது மனம் நிர்மலமாகவே இருக்கும்.* **(6.14.3)**

**குறிதீர் வடிவாய்ப் பிறப்(பு)இறப்பில் கொடுநீள் கால மயக்(கு)அறலால்**
**பிறியா இன்பத்(து) அறிஞனுக்குப் பேசும் குறிஇவ் வள(வு)அன்றோ**
**வெறிகூர் ஆசை சினம்மோகம் விதனம் உலோபம் ஆபத்துச்**
**சிறிதா நிபுண நாளு(ம்)எனச் செப்பி வசிட்டன் மீண்(டு)உரைப்பான்.**

**பொழிப்புரை:** *(வருணாச்சிரம) குறிகள் இல்லாதவனாய், பிறப்பு இறப்பில் நீண்டகாலமாகக் கொண்டிருந்த பிராந்தி அற்றுப் போனதால் ஆனந்தமயமான விவேகம் உடையவனுக்குச் சொல்லும் குறிகள் (அடையாளங்கள்) இந்த அளவினது அல்லவோ! வெறிபிடித்த ஆசை, கோபம், மயக்கம், கவலை, உலோபம், ஆபத்துமாகிய இவை நிர்விகாரமாய் தினந்தோறும்சிறிதாகத் தேய்ந்து போகும் என்று கூறி, வசிட்ட முனிவர் மறுபடியும் சொல்வார்.* **(6.14.4)**

**மறையோன் ஒருவன் தன்னுடைய மகிமை கடந்து சூத்திரனாய்**
**முறைதீர் வதுபோல் சீவ(ன்)என முளைத்தான் ஈசன் சிருட்டிதொறும்**
**நிறைநீ(டு) உயிர்கள் அளவின்றி நிகழும் மூலச் சித்(து)அசைவால்**
**துறைதோ(று) அவைதாம் தோன்றிடுமால் தொடர்கா ரணம்இங்(கு) இலதாகும்.**

**பொழிப்புரை:** *அந்தணன் ஒருவன் தனது மகிமையைக் கடந்து சூத்திரனாய் முறையற்றதை அடைவதே போல், பரமேசுவரன் சீவ பாவத்தை அடைந்தனன். ஒவ்வொரு சிருட்டியிலும் நிறைந்த அனாதி சீவர்கள் அளவில்லாமல் விளங்குவார்கள். மூல சித்து அசைவினாலே வேண்டிய வேண்டிய புவனங்களில் அவ்வுயிர்கள் தாம் பிறந்திடும். தொடர்ந்த (சம்பந்தம்) உடைய காரணம் இங்கே இல்லாததாகும்.* **(6.14.5)**

**ஈச னிடைநின்(று) உற்பவமாய் எழுந்த உயிர்கள் தாம்செய்த**
**வீசு கருமங் களினாலே மேன்மேல் பிறவி களைமேவும்**
**தேசம் உடையாய் காரியகா ரணத்தின் செய்த இதுவாகும்**
**ஏசு பிறவி கரும(ம்)எனும் இரண்டி னுக்கும் இப்படியே.**

**பொழிப்புரை:** *பரமேசுவரனிடத்தில் இருந்தும் உண்டாகி வெளியே வந்த சீவர்கள் தமது முயற்சியினாலே பலன் தரும் கருமங்களினாலே மேன்மேலும் பிறவிகளை அடைந்தனர். தேசத்தை உடைய இராமனே! காரிய காரணத்தின் விவகாரம் இதுவாகும். நிந்திக்கத் தக்க பிறவி, கருமம் என்னும் இரண்டினுக்கும் இப்படியே.* **(6.14.6)**

**பரமம் அதனில் அகாரணத்தால் பரந்த உயிர்எல் லாம்உண்டாம்**
**விரவும் அதன்பின்(பு) அவர்க்கெல்லாம் மிகுத்தாம் செய்த கருமங்கள்**
**உரிய சுகதுக் கங்க(ள்)தமக்(கு) உறுகா ரணமாம் தனைஅறியாப்**
**பிரமம் தனில்சேர் சங்கற்பம் பேசு கருமங் களின்மூலம்.**

**பொழிப்புரை:** *மேலான அதனில் (பிரம்மத்தில்) இருந்தும் காரணம் இல்லாமலே பரந்த சீவர்கள் யாவரும் உண்டாவர். கலந்த அதன் பின்னர் அவர்கள் எல்லோருக்கும் உரிய சுக துக்கங்களுக்கு மிகவும் தாம் செய்த கருமங்களே உரிய (தகுந்த) காரணமாம். தன்னை (ஆன்மாவை) அறியாத அஞ்ஞானத்தில் இருந்து உண்டாகும் சங்கற்பமே சொல்லப்பட்ட கருமங்களின் காரணமாம்.* **(6.14.7)**

**பந்த நிதானம் சங்கற்பம் அன்றோ அதுநீ பற்(று)அறுப்பாய்**
**முந்து சங்கற் பம்தவிர்ந்தான் முத்தி அதுவாம் அதுதன்னைப்**
**புந்தி அதனால் பரிசயிப்பாய் பொருளும் பொருள்கொள் பவனு(ம்)உறில்**
**மைந்த மெள்ள எப்போதும் மறவா(து) ஒழிப்பாய் சங்கற்பம்.**

**பொழிப்புரை:** *பந்தத்திற்குக் காரணமானது சங்கற்பம் அல்லவோ! அதனை நீ பற்றறுப்பாய். வாசனை வசத்தால் எழும் எண்ணங்களை எழாமல் செய்தால் மோட்சமாம். அதனைப் புத்தி அதனால் பயிற்சி செய்வாய். பொருளும், பொருள் கொள்பவனும் (காண்பவனும், காணப்படும் பொருளும்) சம்பந்தப்படில், மைந்தனே! பயிற்சி முறைமையால் எப்போதும் மறவாமல் விழிப்புணர்வுடன் இருந்து சங்கற்பம் (எண்ணம்) ஒழிப்பாய்.* **(6.14.8)**

**கொள்ளும் பொருளா கவும்வேண்டாம் கொள்வோன் வடிவா கவும்வேண்டாம்**
**எள்ளும் கருத்(து)எல் லாம்நீக்கி எதுசே டித்த(து) அதுவாவாய்**
**நள்ளும் பொருள்ஒன் றினைஇந்த நாடும் பொறிகள் உறில்ஆங்கே**
**தெள்ளும் பற்(று)உள் ளதுபந்தம் சிறக்கும் பற்(று)இல் லதுமுத்தி.**

**பொழிப்புரை:** *கொள்ளும் பொருளாகவும் (காண்பவற்றில் அபிமானமும்) வேண்டாம். கொள்வோன் வடிவாகவும் (காண்பவன் என்பதில் அபிமானமும்) வேண்டாம். தள்ளத்தக்க எல்லா எண்ணங்களையும் நீக்கி, எது எஞ்சி நிற்கின்றதோ அந்தப் பொருள் ஆவாய். விரும்பும் பொருள் ஏதாவது ஒன்றைப் புலன்கள் நாடிச் சென்றிடில் அங்கே மிக்க பற்று உள்ளதாக ஆவதே பந்தம். சிறக்கும் பற்று இல்லாதது முத்தி.* **(6.14.9)**

**அற்பம் உனக்(கு)ஒன்(று) இனி(து)ஆகில் அதனால் பிறப்பில் அகப்பட்டாய்**
**பொற்ப உனக்(கு)ஒன் றினும்இனிமை பூணா(து) என்னில் பிறப்(பு)அகன்றாய்**
**நிற்ப நடப்ப பொருள்திரளில் நினக்குத் திரண முதலாகத்**
**தற்ப முறுபொன் முடிவாகச் சற்றும் இனிமை உறவேண்டாம்.**

**பொழிப்புரை:** *உனக்கு ஒரு பொருளில் கொஞ்சம் இனிமை (ருசி) உண்டாகில் அதனால் பிறப்பில் அகப்பட்டாய். அழகுடையாய்! உனக்கு ஒன்றிலும் இனிமை உண்டாகாது எனில் பிறப்பிலிருந்து விடுபட்டாய். அசையும் அசையாப் பொருள் கூட்டங்களில் உனக்குத் துரும்பு முதல் கர்வத்தை அடையும் தேவ வடிவம் வரையில் கொஞ்சமும் இனிமை (ருசி) உண்டாக வேண்டாம்.* **(6.14.10)**

**பற்றி லா(து)என்(று) எண்ணுதிஎன் பண்ணா நின்றாய் எதைவிடுதி**
**உற்ற செய்வோன் புசிப்போ(ன்)அன்(று) உபசாந் தியன்நீ மதிமாண்டோன்**
**மற்று நல்லோர் சென்றபொருட்(கு) இரங்கார் வருவ மதித்(து)எண்ணார்**
**முற்று நிகழ்கா லப்பொருளை முறையால் எய்திக் கைக்கொள்வார்.**

**பொழிப்புரை:** *பற்றில்லாமல் எதனைச் சிந்திக்கின்றாயோ, எதனைச் செய்கின்றாயோ, எதனை விடுகின்றாயோ அந்தச் செயல்களில் நீ செய்வோனும் அல்ல, அனுபவிப்பவனும் அல்ல, சாந்தம் உடையவன் நீ. மனம் இறந்தவன் (கடந்தவன்). தவிர மகான்கள் இழந்த பொருள்களுக்காக இரங்கமாட்டார்கள். இனி வருவதைக் குறித்து சிந்தித்துக்*

*கொண்டிருக்கமாட்டார்கள். முற்றும் வினைவயத்தால் கிடைக்கும் நிகழ்காலப் பொருளை முறைமையுடன் கொள்வர்.* **(6.14.11)**

மதமா மோக மையல்முதல் மனத்தில் பிணித்த கயிறுகளாம்
திதமா மனத்தை மனத்தாலே சேதித் திடலாம் அறிவேரரால்
இதமா நெடுங்கூர் விவேகத்தால் இரும்பால் இரும்பை அறுப்பதுபோல்
விதமா மனத்தை மனத்தாலே வீய்ப்பாய் பிறவி மயக்(கு)அறவே.

**பொழிப்புரை:** *மதம் மகாமோகம் ஆசை முதலானவை மனதில் பிணித்து வைக்கப்பட்ட கயிறுகளாம். விஷயங்களில் நிலைபெற்றுள்ள (மலின) மனதினை (சத்துவ மய) மனதினால் வெட்டி விடலாம் அறிவுடையவரால், மிக்க நீண்ட இதமான விவேகத்தாலும் இரும்பினை இரும்பால் அறுப்பது போலும் பலவிதமாய் உள்ள மனதை (சத்துவத்தால் ஒருமைப்பட்ட) மனதினால் பிறவி மயக்கம் அற்றுப்போக வீழ்த்துவாய்.* **(6.14.12)**

அழுக்கை அழுக்கால் கழுவுவர்கொல் அம்பை அம்பால் தடைசெய்வர்
வழுக்கு நஞ்சை எதிர்நஞ்சால் மாற்று கிற்பர் மதியுடையோர்
ஒழுக்கம் உறுமூன்(று) உளசீவர்க்(கு) உபயம் தூல சூக்க(ம்)என
விழுக்க மாம்ஒன்(று) உயர்பரமாம் இதுசேர்ந்(து) அந்த இரண்(டு)ஒழிப்பாய்.

**பொழிப்புரை:** *துணியின் அழுக்கினை உவர்மண் முதலான அழுக்கினால் போக்குவர். கொல்ல வரும் அம்பினை அம்பால் தடுப்பர். உயிரைப் பறிக்கும் நஞ்சினை அதற்கு எதிரான நஞ்சினால் மாற்றுவர் புத்திசாலிகள். சீவர்க்கு முறையாக மூன்று வடிவங்கள் உண்டு. இரண்டு தூலம், சூக்குமம் என இழிவுள்ளதாம். ஒன்று மேலான பிரம்மமாம். இதனைச் சார்ந்து அவ்விரண்டினையும் ஒழிப்பாய்.* **(6.14.13)**

மேகம் அனையாய் கைகால்கள் மேவும் இந்த உடல்தானே
போகம் உண்ணச் சீவனுக்குப் பொருந்து தூல உருவாகும்
பாக மருவு சங்கற்ப மயமாய்ப் பவபா வனைபண்ணும்
சோக மனம்சீ வனுக்(கு)உருவாம் சூக்க ஆதி வாகியமே.

**பொழிப்புரை:** *மேகம் போன்ற இராமனே! கைகால்கள் உடைய இந்த உடல் தானே போகத்தை அனுபவிக்கச் சீவனுக்குப் பொருந்திய தூல வடிவமாகும். பலவகையாய்க் கூடும் எண்ண மயமாய்ப் பிறவிப் பாவனை செய்யும் துயரம் தரும் மனம் சீவனுக்கு வடிவமாம் சூக்கும ஆதி வாகியம்.* **(6.14.14)**

மெய்யாய் மூலம் ஈ(று)இன்றி விகற்பம் அறுசின் மாத்திரமே
மொய்யார் சீவன் பரவடிவாம் மூன்றா குவது முண்டகம்போல்
கையாய் சுத்த துரியபதம் கண்டாய் இதுவே இதில்அழுந்தி
மையார் முதல்சொல் வடி(வு)இரண்டு மாற்றி அவைநான் எனவேண்டா.

**பொழிப்புரை:** *சத்தியமாய், ஆதி அந்தம் இல்லாததாய், நிர்விகற்ப சின்மாத்திரமே விஷயங்களில் பொருந்தி உலாவும் சீவனின் மேலான வடிவமாம் மூன்றாவது ஆகும்.*

*தாமரை மலர்போன்ற திருக்கரத்தாய்! தூய துரிய பதம் இதுவே காண்பாய். இதில் நிலைநின்று, களங்கம் என்று முன்பு சொன்ன இரண்டு வடிவங்களையும் மாற்றி (நீக்கி), அவற்றை நான் (ஆன்மா) என்று சொல்ல வேண்டாம்.* **(6.14.15)**

**என்னு முனியை இராமனும்பார்த்(து) எந்தாய் நனவு கனாச்சுழுத்தி**
**துன்னும் அதுவா யினமூன்றில் தோன்றா ததுவாம் துரியத்தை**
**உன்னி விசேடம் உறஉரைப்பாய் உயர்ந்த முனிநா யகஎன்ன**
**மன்னும் அமுத மழைபோலும் வாக்கால் வசிட்ட முனிஅருள்வான்.**

**பொழிப்புரை:** *என்று அருளிச்செய்த வசிட்ட முனிவரைப் பார்த்து இராம பிரானும் என் தந்தையே! நனவு, கனவு, சுழுத்தி (ஆழ்துயில்) இவற்றில் நெருங்கியிருந்தும், இந்த மூன்றில் அறியப்படாத நான்காவதான துரியத்தைப் பகுத்து விசேடமாக உரைத்தருள வேண்டும் உயர்ந்த முனிவர்களுக்கு நாயகனே! என்று கேட்கவும், நிறைந்த அமுத மழை போன்ற வசனத்தினால் வசிட்ட முனிவர் சொல்வார்.* **(6.14.16)**

**அகம்என் பதும்என் னாததுவும் உளதும் இலதும் அறவிட்டு**
**நிகழும் சமமாய்ப் பற்(று)அறத்தன் நிலைக்கே நிற்றல் துரியமதாம்**
**தகுதன் நிலையாய்ச் சமமாகிச் சகத்தின் தொழிற்குச் சான்றாகி**
**புகல்சீ வனின்முத் தியுமாகிப் பொருகற் பனைதீர் நிலைதுரியம்.**

**பொழிப்புரை:** *நான் என்பதும், நான் என்னாததும், உள்ளதும், இல்லாததுமாகிய இவற்றை முழுதும் விட்டு, திகழும் சமமாய், பற்று அற்று, தன்னிலையில் (ஆத்ம நிச்சயத்தில்) நிற்றல் துரியம் எனப்படும். மேலான ஆத்ம நிச்சயமாகியும், சமமாகியும், உலகின் செயல்களுக்குச் சாட்சியாகியும், சொல்லப்பட்ட சீவன் முத்தியுமாகி, துயர் தரும் கற்பனை அற்ற நிலையே துரியம் ஆகும்.* **(6.14.17)**

**இதுதான் நனவு கன(வு)அல்ல இடர்சங் கற்பம் இலாமையினால்**
**பொதுவாம் சுழுத்தி தான்அன்று போதம் இன்மை தீர்தலினால்**
**சதுரா இந்தச் சகநன்றாய்த் தனது நிலைக்கே சமித்(து)இறக்கும்**
**முதுஞா னிகட்(கு)இங்(கு) இதுதுரியம் மூடர்க்(கு) உலகம் திரநிலையாம்.**

**பொழிப்புரை:** *இந்த துரியம் தான், நனவும் அல்ல, கனவும் அல்ல, துயர்தரும் சங்கற்பம் (எண்ணம்) இல்லாமையால் பொதுவான சுழுத்தி தான் அல்ல, அறியாமை அகன்று போய்விடுவதால் அதிதீர வீர! இந்த உலகம் முழுதும் இருந்தபடியே இருந்து சாந்தமாகி விலயமாகும் (ஞானத்தினால் பொய்யென்று போம்). முதிர்ந்த ஞானிகளுக்கு இங்கு இதுவே துரியம் எனப்படும். அறியாதவர்களுக்கு உலகம் மிக சத்தியம்.* **(6.14.18)**

**யானா எண்ணம் அறில்சமம்தான் எய்திச் சித்தம் ஒருக்காலும்**
**ஆனா வினைசெய் யாதபடி ஆக்கில் துரிய நிலைநிற்கும்**
**ஞானா தீத னாம்கிழவோன் எனினும் ஞானம் நனிமேவ**
**மேல்)நாள் நடந்த(து) ஒருசரிதை கேட்பாய் மேதை களின்மிக்கோய்.**

**பொழிப்புரை:** *நான் என்னும் எண்ணம் தான் அழிந்தால் சமம் தான் அடைந்து, மனம் ஒருபோதும் ஓயாத காரியம் செய்யாதபடி பண்ணினால் துரிய நிலையில் நிற்கும். சகல விருத்தி ஞானங்களும் கிழவோன் என்ற போதிலும், பிரம்ம வித்தையை நன்றாக அடைய முன்னொரு காலத்தில் நடந்த ஒரு சரித்திரத்தைக் கேட்பாய் புத்திமான்களில் சிறந்தவனாக விளங்கும் இராகவனே!* **(6.14.19)**

**பெரிய அடவி ஒன்றிடைஓர் பெரிய முனிவன் மகாமவுனம்**
**புரியு நிலையோன் அவன்தனைஓர் பொருவில் வேடன் வந்(து)அணுகி**
**எரியும் என்கைக் கணைபடநொந்(து) இங்(கு)ஓர் நவ்வி ஓடியதால்**
**தெரிய அ'(து)எங்(கு) அகன்ற(து)எனச் செப்பு முனிவ எனக்கேட்டான்.**

**பொழிப்புரை:** *பெரியதான காடு ஒன்றில் ஒரு பெரிய முனிவன் மகா மௌன விரதத்தைக் கடைப்பிடிக்கும் நிலையில் உள்ளவன் அத்தகைய முனிவனை, கொல்லும் வில் ஏந்திய வேடன் ஒருவன் வந்து அணுகி "என் கை வில்லில் இருந்து விடுபட்ட எரிகின்ற அம்பு தைக்கவே நொந்து ஒரு மான் இங்கு ஓடி வந்தது. அது எங்கு சென்றது என யான் அறியும்படியாகக் கூறுவீர் முனிவரே" என்று கேட்டான்.* **(6.14.20)**

**கேட்ட கிராதன் தனைஅந்தக் கேடில் முனிபார்த்(து) இனியோனே**
**காட்டில் உறைவோர் சமநிலைமைக் கண்ணா முனிவர் கணம்நாங்கள்**
**நாட்டு விவகா ரம்புரியும் நவைஆங் காரம் ஆகிலம்நாம்**
**கூட்டு பொறியின் தொழில்எல்லாம் கொள்ளு மனம்செய் குவ(து)அன்றே.**

**பொழிப்புரை:** *கேட்ட வேடனை அந்தக் களங்கமற்ற முனிவன் பார்த்து "இனியவனே காட்டில் இருப்பவர்களாகிய நாங்கள் சமமான நிலையான பார்வை உடைய முனிவர் கூட்டம் ஆவோம். நாட்டின் விவகாரம் செய்யும் குரூரம் பொருந்திய அகங்காரம் உடையவர்கள் அல்ல. விஷயங்களைச் சேர்க்கும் இந்திரியங்களின் செய்கை எல்லாம் அவற்றைக் கவரும் மனம் செய்வதல்லவா!* **(6.14.21)**

**அதனால் அகங்கா ரத்(து)உருவாம் அந்த மனம்நிச் சயமாகத்**
**திதமாய் நழுவி நெடுநாளாம் செறிசாக் கிரசொப் பனசுழுத்திப்**
**பதமாம் அவைஒன் றையும்அறியேம் பரம துரிய நிலையானேம்**
**விதமாய்க் காணப் படுபொருள்கள் விமல துரியத்(து) இலஎன்றான்.**

**பொழிப்புரை:** *அதன் காரணத்தால் அகங்கார வடிவமாம் அந்த மனம் நிச்சயமாக நிலையாய் நழுவி நீண்ட காலம் ஆகிவிட்டது. நெருங்கிப் பொருந்தும் விழிப்பு, கனவு, ஆழ்துயில் என்கின்ற அவத்தைகள் எதையும் அறியமாட்டோம். பரம துரிய நிலையிலேயே இருக்கின்றோம். பல்வகையாகக் காணப்படும் பொருள்கள் நிர்மல துரிய அவத்தையில் இல்லாதன ஆகும்.* **(6.14.22)**

**தீதில் முனிவன் உரைபொருள்கள் தெரியா வேடன் ஆங்(கு)அகன்றான்**
**ஆத லால்கேள் துரியத்துக்(கு) அயலோர் நிலையும் உள(து)அன்றால்**
**ஏத மான விகற்பமெலாம் இறந்த அறிவே துரியமதாம்**
**ஈ(து)அ லா(து)இங்(கு) அயல்ஒன்றும் இல்லை கண்டாய் இராகவனே.**

**பொழிப்புரை:** *தீதிலா முனிவன் கூறிய அர்த்தங்கள் தெரியாத வேடன் அவ்விடத்தை விட்டுச் சென்று விட்டான். ஆதலால் கேட்பாய். துரியத்துக்கு வேறாக ஒரு நிலையும் உள்ளதல்ல. குற்றம் பொருந்திய வேற்றுமைகள் அனைத்தும் நீங்கிய ஞானமே துரியமாகும். இதைத் தவிர இவ்விடத்தில் இராகவனே! வேறொன்று இல்லை.* **(6.14.23)**

**கண்ட நனவு கோரமதாம் கனவு சாந்தம் எனப்பெயராம்**
**கொண்ட சுழுத்தி மூடமதாம் கூறும் இம்மூன்(று) அவத்தைகளும்**
**விண்ட மனத்தின் வடிவாகும் விளம்பும் இம்மூன் றையும்விட்டால்**
**தண்டு மனம்போம் மனம்இறந்தால் சத்தாய் ஒன்றாம் சமநிலையாம்.**

**பொழிப்புரை:** *கண்ட நனவு (விழிப்பு- புண்ணிய பாவம், மறுபிறப்பு உண்டாக்குவதால்) கோரம் ஆகும். கனவு (நனவு போல் எதனையும் உண்டாக்கும் வல்லமை இல்லாமையால்) சாந்தமாம். கொண்ட சுழுத்தி (அறியாமை மிகுவதால்) மூடம் ஆகும். இந்த மூன்று அவத்தைகளும் பகுத்த மனதின் உருவமாகும். சொல்லப்பட்ட இந்த மூன்று அவத்தைகளையும் விட்டு விட்டால் தடிமனம் ஒழியும். மனமானது ஒழிந்தால் சத்தாகி அத்விதமான (ஏகமான) சமநிலை உள்ளதாகும்.* **(6.14.24)**

**அந்த நிலையே யோகிகள்தாம் அரிதில் சாதித்(து) அடைகின்றார்**
**வெந்த துயர்செய் சங்கற்பம் விகற்பம் இல்லாத் துரியத்தே**
**மைந்த நிலையாய் இடர்தீர்வாய் மகத்தா உயர்ந்த முனிவரராய்ப்**
**பந்தம் இலராய்ப் பேத(ம்)அறும் பழையோர் விடா(து)இப் பதத்(து)உறைவார்.**

*அந்தத் துரிய நிலையினையே ஞானவான்கள் மிகவும் முயற்சி செய்து சாதித்து அடைகின்றனர். வேகின்ற துக்கத்தைச் செய்யும் எண்ணங்கள், வேற்றுமைகள் எல்லாம் இழந்த துரிய அவத்தையில் நிலைபெற்று மைந்தனே! துயர்தீர்வாய். மகான்களாய், மேன்மை மிக்க முனிவராய், பந்தம் இல்லாதவராய், பேதம் அற்றிருக்கும் (அபேதத்தை உடைய) பழைய சீவன் முத்தர்கள் அகலாது இத்துரிய பதத்தில் இருப்பர்.* **(6.14.25)**

**(நிருவாணப் பிரகரணத்தில் மானுவேடன் கதை முற்றும்)**

# நிருவாணப் பிரகரணம்
# இதோபதேசம் - யோக சத்த பூமிகை

*முன்பு சித்த அமைதி அடைந்தவனுக்கு வெளி விவகாரம் இல்லை எனத் தெரிவிக்கப்பட்டது. இப்போது சகலமான இந்த ஞான சாத்திரத்திற்கு ஞான பூமியே சாரமாதலால் அதன் சொரூபத்தை விரிவாக நிரூபிக்க இக்கதை ஆரம்பிக்கப்படுகிறது.*

**(அறுசீர் ஆசிரிய விருத்தம்)**

**எனைத்து ஞான நன்னூலின் இயம்பும் அறுதி யாது(உ)என்னில்**
**அனைத்தும் கனவு காண்பதுவே அன்றோ அவிஞ்சை இங்(கு)இல்லை**
**வினைத்திண் கவலை செய்கின்ற வெய்ய மாயை தான்இல்லை**
**தினைத்துன் பமும்அற்(று) உபசாந்தத் திறமாம் இதுவே திகழ்பிரமம்.**

**பொழிப்புரை:** *எல்லா நல்ல ஞான சாத்திரங்களில் சொல்லப்படுகின்ற முடிவு யாதெனில், அனைத்தும் கனவு காண்பதுவே அல்லவோ! அவித்தை என்பது இங்கே கிடையாது. செயல்களையும் அவற்றால் உண்டாகும் பெரிதான கவலைகளையும் செய்விக்கின்ற கொடிய மாயையும் கிடையாது. அற்பமும் துயரம் இல்லாமல் பரம சாந்தத் தன்மையதாம் இதுவே திகழ்கின்ற பிரம்மம்.* **(6.இ.1)**

**சாந்த மாகிச் சிதம்பரமாய்ச் சமமாய் நொய்தாய் ஆன்மாவாய்**
**ஏந்து சத்தி அளவிலதாய் இடும்பேர் பிரமம் எனும்இதற்கே**
**சேர்ந்த பலநிச் சயம்பண்ணிச் சிலர்பாழ் என்பர் பரமேசன்**
**வாய்ந்த உருவம் என்பர்சிலர் மாவிஞ் ஞானம் என்பர்சிலர்.**

**பொழிப்புரை:** *சாந்தமாய், சிதாகாசமாய், சமமாய், சூக்குமமாய், ஆன்மாவாய், தாங்கும் சத்தி அளவிலாததாய் பிரம்மம் எனும் பெயரிட்டு அழைக்கும் இதனுக்கே. புத்தியில் எட்டியபடி பல நிச்சயங்களைச் செய்து, சிலர் சூனியம் என்று பெயரிடுவர். பரமேசுவரராகப் பொருந்தி உருவம் என்பர் சிலர், மகாவிஞ்ஞானம் என்று சொல்வர் சிலர்.* **(6.இ.2)**

**எல்லா நீக்கி மகாமவுனத்(து) இருப்பாய் நிருவா ணத்தினனாய்**
**பொல்லா மனம்போய்ச் சித்தம்போய்ப் புந்தி போய்த்தான் என்பதுபோய்ச்**
**சொல்லா ஊமை குருடுசெவி(டு) ஒத்துத் தூய ஆன்மாவில்**
**நில்லாய் உள்ளே முகமாகி நித்தம் நொய்தாய் நிறைமதியாய்.**

**பொழிப்புரை:** *எல்லாவற்றையும் நீக்கி, மிகப்பெரிய மௌனத்தில் இருப்பாய். பேரானந்தம் உடையவனாய், பொல்லா மனம் போய், சிந்தனையற்றவனாய், புத்தியும் போய், நான் என்பது நீங்கி, பேசாத ஊமை, குருடு, செவிடு போலத் தூய ஆன்மாவில் நிற்பாய். உள்முகமாகி எப்போதும் குறையற்றவனாய் பூரண புத்தி உடையவனாய் இருப்பாய்.* **(6.இ.3)**

நனவில் சுழுத்தி நிலைமேவி நன்றாய் எல்லாம் உள்அகற்றித்
தன(து)இச் சையில்வந் ததுபுறத்தே சமைப்பாய் சித்தம் உண்டாகை
கனதுக் க(ம்)அதாம் சித்த(ம்)அறில் கனத்த சுகமாம் சித்தத்தை
உன(து)உட் படுத்தி உணர்வின்மை யாலே ஒழிப்பாய் உணர்(வு)உருவாய்.

**பொழிப்புரை:** *நனவில் சுழுத்தி நிலை அடைந்து (நிர்விகார சித்தம் உடையவனாய்), (விருப்பு வெறுப்பு முதலானவற்றை) நன்றாய் எல்லாம் உள்ளே அகற்றி, தானே வந்தமைந்த கருமத்தைப் புறத்தே செய்வாய். சித்தமானது உண்டாகி இருப்பதே கனத்த துயரம் ஆகும். சித்தம் ஒழிந்தால் கனத்த சுகமாம். சித்தத்தை உனது வயப்படுத்தி, சிதாகாச மயமாய் இருந்து, வெளி எண்ணங்கள் எழாதவண்ணம் இருந்து (சித்தத்தை) ஒழிப்பாய்.* **(6.இ.4)**

சோக நன்மை தீமைகளைச் சூழ்வு(ற்று) இருந்தும் சமமாகிப்
பாகம் இன்றிக் கல்போலப் படிந்து நிற்பாய் பலபிறவி
மோகம் அகலும் அவ்வளவு முயலும் தனது முயற்சியினால்
நாகம் அனையாய் சுகதுக்க நடுஉள் எதுநீ நாடலையாய்.

**பொழிப்புரை:** *சோகம் நன்மை தீமைகளைச் சூழ்ந்திருந்தும், சமமாகி வேற்றுமையின்றி கல் போல அசையாதிருப்பாய். பல பிறவியாகத் தொடரும் மோகம் அகலும் வரையில், முயற்சி செய்யும் தனது முயற்சியினால் மலை போன்றவனே! சுகம் இது, துக்கம் இது, சுகதுக்கம் இது என்ற மத்திமம் இவற்றை நீ நாடாய்.* **(6.இ.5)**

இந்த அளவாம் தன்முயற்சி இடர்தீர் முடிவில் பதம்அளிக்கும்
சிந்து கலைகள் நிறைமதிபோல் சீத அமுதே உள்நிறைய
அந்த அறிவன் சுகம்அடைவன் அகில உலகில் பொருள்சாரம்
முந்த அறிந்து செயல்செய்யா தவனாய் முத்தி எய்திடுமே.

**பொழிப்புரை:** *இந்த அளவுள்ள தனது முயற்சி துயர் தீர்ந்த முடிவில்லாத பதத்தை அளிக்கும். கலைகள் நிறைந்த சந்திரனைப் போல் குளிர்ச்சியான அமுதம் உள்ளே நிறைந்திட, அந்த அறிவுடையவன் சுகத்தை அடைவன். எல்லா உலகின் பொருள்களின் சாரத்தை முதலில் தெரிந்து கொண்டு செய்தும் செய்யாதவனாய் (அபிமானம் இல்லாததால்) மோட்சம் அடைந்திடுவான்.* **(6.இ.6)**

யோக பூமி ஏழுக்கும் உறுசெய் தொழில்கள் எவ்வண்ணம்
ஆக இந்தப் பூமிகளை அடைந்த யோகிக்(கு) எதுகுறிகள்
மோகம் இல்லாய் உரைஎன்ன முனிவன் இராமற்(கு) உரைசெய்வான்
போக வசம்செல் பவன்மீண்டோன் என்று புருடர் இருவகையாம்.

**பொழிப்புரை:** *ஞான பூமிகள் ஏழுக்கும் உரியனவான பயிற்சிகள் எவை? எவ்வாறு செய்ய வேண்டும்? சாத்தியமான இந்தப் பூமிகளை அடைந்த ஞானிகளுக்கு அடையாளங்கள் (குறிகள்) எவை? மோகம் இல்லாதவரே! உரைத்தருள வேண்டும் என்று கேட்கவும், வசிட்ட முனிவர் இராமபிரானுக்குக் கூறுவார்: போகத்தின் வசம் செல்பவன் என்றும், போகத்திலிருந்து மீண்டவன் என்றும் புருடர் இரு வகையினர் ஆவர்.* **(6.இ.7)**

**சுவர்க்க முத்தி களைவிரும்பித் தொடரும் அவர்தம் குறிகேளாய்**
**உவக்கும் வீடே எவ்வளவிற்(று) உலக நடையே உயர்ந்த(து)எனா**
**நிவக்கும் அறுதி யால்செய்வோன் நெடும்போ கத்தில் செல்பவனாம்**
**எவர்க்கும் விவேகம் உறுபிறவி எய்தற்(கு) அரிய இயல்பினதே.**

**பொழிப்புரை:** *சுவர்க்கம், முத்தியை விரும்பி அவற்றிற்குரிய சாதனங்களைப் பின்பற்றும் அவர்களின் இலக்கணம் கேட்பாய். சந்தோஷம் தரும் மோட்சம் எத்தகையது? உலகத்தின் ஒழுங்கே மேலானது என்று அதிதிட நிச்சயத்தால் அதற்கான சாதனத்தை மேற்கொள்பவன் நீண்ட போகத்தில் செல்பவனாம் (அனுபவிப்பவன் ஆம்). எவர்க்கும் விவேகத்தோடு கூடிய பிறவி கிடைத்தற்கு அரிய தன்மை உடையதாம்.* **(6.இ.8)**

**எறியும் கடலில் நுகத்துளையில் ஆமை கழுத்து புகுவதுபோல்**
**பொறிவெம் பிறவி அனேகத்தால் புருடன் விவேகி எனப்பிறந்து**
**முறியும் பிறவிப் பயன்இல(து)இம் மோகம் அமையும் செய்தொழிலால்**
**செறிவ(து) என்னே இவற்றாலே தினங்கள் எல்லாம் சென்றிடுமால்.**

**பொழிப்புரை:** *அலைகள் வீசுகின்ற கடலில் அலையும் நுகத்தடி துளையில் ஆமையின் கழுத்து நுழைவதைப் போல், துயர் தரும் பிறவிகள் அனேகம் அனேகம் சென்ற பின்பு, புருடன் விவேகியானவன் என்று சொல்லும்படி பிறந்து, அழிகின்ற பிறவியால் பயன் இல்லை, மோகத்தால் செய்கின்ற செயல்களால் அடைவது என்ன? இவற்றால் நாட்கள் எல்லாம் வீணாகவே கழிந்திடும்.* **(6.இ.9)**

**தொழிலின் மிகுதி அற்(று)உயர்ந்து துயர்தீர் அஃ(து)ஏ(து) என்(று)உள்ளே**
**அழி(வு)இல் அறுதி உள்ளோனே அடங்கத் திரும்பும் அவனாகும்**
**கழி(வு)இல் மயல்போய்ப் பவக்கடலைக் கடப்பது எவ்வா(று) எனஉன்னும்**
**ஒழி(வு)இல் விசாரத் தால்விரத்தி உள்ளே உறுவன் நாள்வேண்டா.**

**பொழிப்புரை:** *கருமங்களின் ஏற்றத்தாழ்வான பலன்களில் விடுபட்டு, உயர்ந்து, துயரம் தீர்ந்தது எது என்று உள்ளே மாறாத நிச்சயம் உடையவனே உலக விஷயங்கள் அடங்கித் திரும்புபவன் ஆகும். ஞானத்தால் அன்றிக் கெடாத மோகம் போய், பிறவிக் கடலைக் கடப்பது எவ்வாறு என்று சிந்திக்கும் ஓயாத விசாரத்தால் உள்ளே வாசனைகளில் வைராக்கியத்தைத் தினந்தினம் அடைவன்.* **(6.இ.10)**

**உதார மான தொழில்களிலே முயன்று நாளும் உள்மகிழ்வன்**
**கதாவு கின்ற கிராமியமாம் கருமச் சழக்கிற் குச்சரிப்பன்**
**விதான கருமங் களைச்செய்வன் விளம்பான் செய்த கருமங்கள்**
**பதாதி உலகோர் வெருவாத படிமெத் தென்ற தொழில்புரிவன்.**

**பொழிப்புரை:** *சித்த சுத்திக்குச் சாதகமாய் சகுணப் பிரம்மத்தில் சேர்ப்பிக்கும் செயல்களிலே முயற்சி செய்து நாளும் உள்ளே மகிழ்வன். இகழத்தக்க நீசத் தனமான காரிய சேஷ்டைகளில் அருவருப்பு அடைவன். மறைவாகப் புண்ணிய கர்மங்களைச் செய்வன். விதிப்படி அமைந்த கர்மங்களைச் செய்வான். செய்த கர்மங்களை வெளியே சொல்லான். எவ்வுயிரும் பயந்து நடுங்காதபடி அகிம்சையான தொழில்களைச் செய்வான்.* **(6.இ.11)**

தீய வினைக்(கு)அஞ் சுவன்என்றும் செறியும் போக வேட்கையுறான்
நேய நயமாய் மெத்தென்று நிபுண மாகி இடம்பொழுதுக்(கு)
ஏய உரைகள் உரைசெய்வான் இவ்வா றான இவன்தானே
ஆய பொழுது முதல்பூமி யான ஒன்றை அடைந்தவனே.

**பொழிப்புரை:** *தீய செயல்கள் செய்ய அஞ்சுவான். என்றும் வினைப்படி வந்த போகத்திலும் ஆசை கொள்ளான்.அன்புடன் ஆசாரமாய் அமைதியாய் சாமர்த்தியமாய் இடம் காலங்களுக்கு ஏற்றபடி பேசுவான். இப்படிப்பட்ட இவன் இவ்வாறு ஆன பொழுது முதல் பூமியான ஒன்றை (சுபேச்சை) அடைந்தவன்.* **(6.இ.12)**

ஒக்க மூன்று கரணத்தால் உயர்நல் லோரைப் பின்செல்வன்
மிக்க நன்னூல் எங்கணும்போய் விரும்பிக் கொணர்ந்து பரிசயிப்பன்
தொக்க சனனம் மறுப்பதற்குத் துணிந்(து)இவ் விசாரம் படைத்தவனே
தக்க பூமி அறிந்தோனாம் தகும்ஆ ரியனாம் மற்(று)அவனே.

**பொழிப்புரை:** *மூவித கரணங்கள் ஒத்து, உயர்ந்த சத் புருடர்களைத் தொடர்ந்து பின்செல்வன். மேலான ஞான சாத்திரங்களை எவ்விடத்திலாவது போய் விரும்பிக் கொண்டு வந்து பயிற்சி செய்வான். தொடர்ந்து வரும் பிறவியை அறுப்பதற்குத் துணிந்து, இந்த விசாரம் மேற்கொண்டவனே தகுந்த முதல் பூமியை அறிந்தவனாம். தகுதியான சன்மார்க்கத்தில் இருப்பவனாம்.* **(6.இ.13)**

இருள்இல் விசாரம் எனுநாமத்(து) இரண்டாம் பூமி எய்தினனாம்
சுருதி மிருதி நல்லொழுக்கம் தொடர்தா ரணைநல் தியானங்கள்
மருவு கருமங் களைக்கேட்பான் மா(சு)இல் விருத்திப் பொருள்நிகழ்த்தும்
பெருகு புகழ்சேர் பண்டிதரில் பெரியோர் தம்மை இனி(து)அடைந்து.

**பொழிப்புரை:** *அறியாமையைத் தராத விசாரம் என்னும் இரண்டாம் பூமியை அடைந்தவனாம், சுருதி, உபநிடதம், நல்லொழுக்கம் தொடர்பாகச் செய்யும் தாரணை, நல்ல தியானம் அவற்றிற்குச் சாதகமான பயிற்சிகளைக் கேட்டு அறியும் பொருட்டு, குற்றமின்றி விரிவுரை செய்யும் மிகுந்த புகழ் சேர்ந்த பேரறிஞரில் மேலான மகான்களை இனிமையுடன் அடைந்து,* **(6.இ.14)**

செறியும் பதார்த்தப் பிரி(வு)அறிந்து செய்யும் தவிரும் கர்மங்கள்
அறிவன் செல்வ மானமனைக்(கு) அதிபன் மனையை அறிவதுபோல்
மறியும் மதமாச் சரிய(ம்)அபி மானம் உலோபம் மோக(ம்)எலாம்
வெறிது புறத்(து)எய் தினும்சிறிதாய் விடுவன் பாம்பு தோல்விடல்போல்.

**பொழிப்புரை:** *நிறைந்த நித்திய அநித்திய பொருள்களின் பிரிவைத் தெரிந்து செய்கின்ற கர்மங்களையும், செய்யத்தகாத கர்மங்களையும், செல்வம் நிறைந்த வீட்டின் உரிமையாளன் அந்த வீட்டினை அறிவது போல அறிந்து கொள்வான். அழிகின்ற செருக்கு, பொறாமை, அகங்காரம், உலோபம், மோகம் இவை எல்லாம் வெளிப்புறத்தில் உலக மரியாதை நிமித்தமாகப் பற்றியது போல் காணப் பட்டாலும் பாம்பு தோல் விடுவது போல் அற்பமாக நீக்குவான்.* **(6.இ.15)**

**மதிஇவ் வாறு)உள் ளவன்நூலால் வணங்கு குருவால் நல்லோரால்**
**அதிகம் குய்யப் பொருள்அனைத்தின் அறுதி அறிவன் அதன்பின்னர்**
**முதிர்பற்(று) இன்மை எனப்பெயராம் முந்து மற்றைப் பூமிதனைப்**
**புதிதாம் மலரில் மெல்லணைபோல் பொருந்த நிற்பன் பொலிந்(து)அவனே.**

**பொழிப்புரை:** *இத்தகைய புத்தியுள்ளவன் சாத்திரங்களால், வணங்கும் குருவினால், சாதுக்களால் மிகமிக இரகசியமான பொருள் அனைத்தின் முடிவினை அறிவான். அதன் பின்பு, திடமான பற்றின்மை எனப் பெயர் கொண்ட மேம்பட்ட மூன்றாவது பூமி தனை (தனுமானசி-மனம் சிறுகுதல்) புதியதான மலரால் ஆன மெல்லணை போல், பயிற்சியால் ஊக்கமுடைய அவன் சேர்ந்து பொலிவான்.* **(6.இ.16)**

**உள்ள படியே நூல்பொருளில் ஒழுக்கம் திரமாய்க் கைக்கொண்டு**
**தள்ளில் முனிவர் இடந்தோறும் தளர்(வு)ஒன்(று) இல்லா மெய்ஞ்ஞானத்**
**தெள்ளு கதையின் ஒழுங்குகளால் தீர்க்க வாழ்நாள் அதுகழிப்பன்**
**பள்ளி கொளவும் இருப்பதற்கும் படர்ந்த பாறை இடமாவன்.**

**பொழிப்புரை:** *சாத்திரங்களின் பொருள்களை (அர்த்தத்தை) உள்ளபடியே ஒழுங்காகத் திடமாகப் பின்பற்றி, நீங்காத பெருமையுடைய முனிவர் வசிக்கும் இடங்கள்தோறும் தளர்ச்சி இல்லாமல் தத்துவ ஞானம் தெளிந்த கதைகளைக் கேட்கும் மார்க்கங்களில் நீண்ட வாழ்நாளைக் கழிப்பன். படுத்துக் கொள்வதற்கும், இருப்பதற்கும் விசாலமான பாறைக்கல்லையே கொள்வன்.* **(6.இ.17)**

**பாயு மனமா றியநலத்தால் பற்றா இன்பம் சமமாகித்**
**தோயும் அடவி களில்உலவித் தொக்க காலம் செலவிடுவன்**
**ஆயும் நன்னூல் பரிசயத்தால் அறங்கள் செயலால் மானிடருக்(கு)**
**ஏயும் இந்தப் பொருள்நோக்கம் இலங்கும் உள்ள படியாக.**

**பொழிப்புரை:** *தாவும் மனமானது அடங்கியிருக்கின்ற நன்மையினால் அசங்க (பற்றிலாமை) சுக சாந்தமாகி சமமாய், பொருந்திய காடுகளில் உலவி நீண்டகாலம் கழிப்பான். ஞான சாத்திர விசாரப் பயிற்சியாலும், அறச் செயல்களாலும் மனிதருக்குப் பொருந்திய இந்த வத்துவின் நாட்டமானது உள்ளபடியாகத் திகழும்.* **(6.இ.18)**

**உற்ற மூன்றாம் பூமியைச்சேர்ந்(து) உணர்ந்தோன் தானே அனுபவிக்கும்**
**பற்றி லாமை இருவகையாம் பகுத்து நாம்இங்(கு) உரைசெயக்கேள்**
**முற்று சாமா னியம்ஒன்று முதிர்ந்த சேட்டம் ஒன்றாகும்**
**மற்(று)இவ் விரண்டும் ஓர்ஒன்றில் இரண்டு வகையாம் மனுகுலத்தோய்.**

**பொழிப்புரை:** *அடைந்த மூன்றாம் பூமியில் இருந்து கொண்டு, அதை அறிந்தவன் தானே அனுபவிக்கும் பற்றிலாமை இரண்டு வகையாகும். அதனைப் பகுத்து நாம் இங்கு சொல்லக் கேட்பாய். முடிந்த பொதுவென்று (சாமானியம்) ஒன்று. முதிர்ந்த சிரேட்டம் (மேன்மையானது) மற்றொன்று. கூறிய இவ்விரண்டும் ஒவ்வொன்றிலும் இரண்டு வகையாகும் மனு குலத்தவனே!* **(6.இ.19)**

பொருள்கள் தமில்செய் பவன்அல்லேன் புசிப்போன் அல்லேன் தெளிவோனும்
குருவும் அல்லேன் எனப்பற்று)இல் குணமாம் சாமா னியவிரத்தி
பருகு துன்ப இன்பம்)எலாம் பண்டை வினையால் வரும்)அன்றே
அருள்செய் கடவுள் வசம்தானாம் அமைப்போன் ஆதல் எனக்(கு)எங்கே.

**பொழிப்புரை:** *பொருள்களினிடத்தில் செய்பவன் (கர்த்தா) அல்லன், புசிப்போன் (போக்தா) அல்லன், சீடனும் அல்லன், குருவும் அல்லன் எனப் பற்றில்லாத குணமுடைமையே சாமானிய வைராக்கியமாம். அனுபவிக்கும் இன்ப துன்பம் எல்லாம் முன் வினைப்படி வரும் அல்லவா! அருள்செய்யும் கடவுள் வசத்தில் உள்ளதாம். கர்த்தாவாக ஆவது எனக்கேது?* **(6.இ.20)**

கொல்வ தான பெருநோயாம் கொடிய போக பரப்பெல்லாம்
செல்வம் எல்லாம் ஆபத்துக்(கு) இடமாம் செத்தல் பிறப்பதற்காம்
ஒல்வ தான நற்புந்திக்(கு) உள்ள கவலை நெடுநோயாம்
சொல்வ ஞாலம் எலாம்காலன் தொலைக்க முயலும் விடா(து)என்றே.

**பொழிப்புரை:** *பரந்த போகம் எல்லாம் கொல்கின்ற பெருநோயாம். செல்வம் எல்லாம் ஆபத்துக்கு இடமாம். சாவது பிறப்பதற்காம். அடங்கி வரும் நல்ல புத்திக்கு உள்ள கவலை நீண்ட நோயாம். சொல்லும் இந்த உலகம் எல்லாம் காலன் விடாமல் தொடர்ந்து தொலைக்க முயல்வான்.* **(6.இ.21)**

பண்டம் அனைத்தின் பற்று)அற்ற பகர்பா வனைஉள் ளூறஉண்டாம்
கொண்ட உயர்வாக் கியப்பொருளைக் குறிப்பால் அழுந்து மனத்தோர்க்குக்
கண்ட இதுசா மானியமாம் கவர்பற்று) இல்லா இந்நெறியால்
அண்டு பெரியோர் கூட்டரவால் அறிவி லாதோர் நீக்கத்தால்.

**பொழிப்புரை:** *பொருள்கள் அனைத்திலும் பற்று அற்ற சொல்லப்பட்ட இந்தப் பாவனை உள்ளத்தில் பொருந்தி இருந்துகொண்டே இருக்கும். கிரகித்த மகா வாக்கிய அர்த்தத்தைக் குறிப்பால் கொண்டு சிந்தனை செய்கின்ற மனம் உடையவர்க்குக் காணப்பெற்ற இதுவே சாமானிய பற்றின்மையாம். கிரகிக்கின்ற ஆசையில்லாத இவ்வழியினாலும், அடையத்தக்க சாது சத்சங்கத்தினாலும், மூடர்களுடன் சேராதிருத்தலாலும்,* **(6.இ.22)**

தானாம் உணர்வின் உள்தெளிவால் தக்க புருட வருத்தத்தால்
ஆனா நன்னூல் பரிசயத்தால் அங்கை நெல்லி தோன்றுதல்போல்
ஊனார் பிறவிப் பெருங்கடலின் உயர்கா ரணமாம் பெரியகரை
தேனார் அலங்கல் மணிமார்பா தெளியக் காணப் பெறும்திடமாய்.

**பொழிப்புரை:** *உள்ளே ஆன்ம விசாரத்தின் செய்தலால் உண்டான தெளிவினாலும், தகுந்த புருடனின் முயற்சியாலும், ஞான சாத்திரங்களின் குறையாத பயிற்சியாலும், உள்ளங்கையில் நெல்லிக்கனி தெரிவதே போல், மாமிசச் சதை கொண்ட தேகப் பிறவியாகிய பெருங்கடலின் மேலான காரணமாம் பெரிய கரையானது தேன் நிறை மலர்மாலையும், ரத்தினமும் சூடிய மார்பனே! தெளிவாய் அதி திடமாய்க் காணப்பெறும்.* **(6.இ.23)**

**செய்வான் நான்அன்று) ஈசன்தான் செய்வான் அல(து)என் பழவினைதான்**
**இவ்வா றான சொற்பொருளின் எண்ணம் எல்லாம் நிச்சயமாய்க்**
**கவ்வா(து) அதிதூ ரத்(து)அகற்றிக் கலந்த சாந்த மோனநிலை**
**பெய்வான் கருணை முகிலேமுன் பேசு சேட்டப் பற்றின்மை.**

**பொழிப்புரை:** *செய்பவன்* **(***கர்த்தா***)** *நான் அல்லன், ஈசுவரன் தான் செய்பவன், அல்லது எனது முந்தைய வினைதான் செய்கின்றது என்பதான இத்தகைய எண்ணங்களை எல்லாம் துணிந்து பற்றாது, வெகு தூரத்திற்கு அகற்றி, கலந்த சாந்தமான மௌன நிலையில், அருள்பொழியும் கருணை மேகமே! முன்பு சொல்லிய சிரேட்டப் பற்றின்மை ஆகும்.*
**(6.இ.24)**

**அகத்தில் புறத்தில் மேல்கீழில் ஆசை களில்ஆ காயத்தில்**
**சகத்தில் பொருளில் பொருள்அல்லா தவற்றில் சடத்தில் தனிஅறிவில்**
**பகுத்துக் கருதா(து) உபசாந்தம் பயின்று நினை(வு)அற்(று) ஒளியற்று**
**மிகுத்துப் பிறப்(பு)அற்(று) அடிமுடி(வு)இல் மேன்மை சேட்டப் பற்றின்மை.**

**பொழிப்புரை:** *உள்ளேயும், வெளியிலேயும், மேலேயும், கீழேயும், திசைகளிலும், ஆகாயத்திலும், உலகத்தில் உள்ள பொருள்களிலும், பொருள் அல்லாத வற்றிலும், சடம் சித்துகளிலும் பிரித்து நினையாமல் பரம சாந்தத்தையே பயிற்சி செய்து, எண்ணம் இறந்து, ஒளியிறந்து, அளவற்ற பிறவிகள் அழிந்து, ஆதியும், முடிவும் இல்லாததே மேலானதாகிய சிரேட்டப் பற்றின்மை.* **(6.இ.25)**

**மகிழ்வாம் வாச மதுரமுடன் வருநல் தொழிலாம் தளிர்மேவித்**
**தகவா மனத்தால் நுனிசேர்ந்து தடையாம் உள்ளும் நிறைந்(து)அறிவாம்**
**மிகும்ஓர் கமலம் அடைந்(து)உள்சேர் விசார இரவி யால்மலர்ந்து**
**பகர்இம் மூன்றாம் பூமிதனைப் பலமாய் பலிக்கும் பற்றின்மை.**

**பொழிப்புரை:** *மகிழ்ச்சி எனும் மணம் கலந்த இனிமையுடன், வருகின்ற சத் காரியங்களாம் இலைகளோடு கூடி, தெளிவுள்ள மனம் என்னும் தண்டின் முனையை அடைந்து, தடைகள் என்கிற முட்கள் நிறைந்திருக்கின்ற ஞானமாம் மேலான ஒப்பற்ற விவேகமாகிய தாமரையைச் சேர்ந்து உள்ளே விரவிய விசாரம் என்னும் சூரியனால் மலர்ந்து, இருப்பதாகக் கூறும் இந்த மூன்றாம் பூமியைச் சிரேட்டப் பற்றின்மையானது பிரயோசனமாகக் கொடுக்கும்.* **(6.இ.26)**

**மோகம் இல்லா தவர்செறிவால் முதுநல் அறத்தின் சமூகத்தால்**
**காக தாலீ யம்போலக் கருத்தில் உதிக்கும் முதலான**
**யோக பூமி உதித்தலுமே உள்ளே அமுத முளைஒப்பாம்**
**ஏக விவேக நீர்பாச்சி இதுகாத் தளிக்கப் படும்அன்றே.**

**பொழிப்புரை:** *மயக்கம் இல்லாதவர்களின் சேர்க்கையால் முதிர்ந்த நிஷ்காம புண்ணியத்தின் கூட்டத்தினால் (காகம் அமர பனம்பழம் விழுந்ததாம் என்ற) காகதாலீய நியாயம் போல, மனதில் உண்டாகும் முதலாவதான பூமி உதயமான அந்த அளவே உள்ளே அமுதத்தின் முளைக்கு ஒப்பாகும். ஒப்பற்ற விவேகமாகிய நீர் பாய்ச்சி இது காக்கப்பெறும் முயற்சி செய்தே.* **(6.இ.27)**

விடுதி யாலே தழைக்கும்()இது விசாரத் தால்அவ் விடுதிதனை
வடுவில் உழவர் நெல்முளைபோல் வருந்தி வளர்க்க நாடோறும்
ஒடிவில் மறுபூ மிக்(கு)இந்த ஒன்றே சனன பூமியென
முடிவில் வெளியாம் அதில்இரண்டாம் மூன்றாம் பூமி தனைப்பெறலாம்.

**பொழிப்புரை:** *பற்றின்மையால் (வைராக்கியத்தினால்) இந்த (முதல் பூமி) வளரும். விசாரத்தால் அந்தப் பற்றின்மையை களங்கமற்ற உழவர் நெல்முளையை வளர்ப்பது போல நாடோறும் கஷ்டப்பட்டு வளர்த்து வர, கெடுதல் இல்லாத மற்றைய பூமிக்கு இது ஒன்றுதானே ஜென்ம பூமி என்று கடைசியில் தெரியவரும். அதிலிருந்து இரண்டாம், மூன்றாம் பூமிகளை அடைந்திடலாம்.* **(6.இ.28)**

சேட்டம் எனச்சொல் பற்றின்மை சேர்ந்தான் மூன்றாம் பூமியதாம்
ஈட்டு புருடன் சங்கற்ப எண்ணம் ஒன்றும் இல்லென்னக்
கேட்ட குமரன் உரைசெய்வான் கீழாம் குலத்தோன் உணர்வில்லோன்
பூட்டு தொழிலோன் பொல்லாதோன் புகன்ற யோகம் இல்லாதோன்.

**பொழிப்புரை:** *சிரேட்டம் என்று சொல்லப்பெற்ற பற்றின்மையைச் சேர்ந்தால் அது மூன்றாம் பூமியாகும். இவ்வாறு இதனை அடைந்த புருடன் சங்கற்ப எண்ணம் (சங்கற்ப விகற்பம்) ஒன்றும் இல்லாதவன் என்று கூறியதைக் கேட்ட இராமபிரான் கூறுவார்: தாழ்ந்த குலத்து உதித்தவன், அறிவில்லாதவனும், பந்தம் தரும் தொழிலைச் செய்பவனும், பொல்லாதவனும் சொல்லப்பட்ட யோகம் இல்லாதவனும்,* **(6.இ.29)**

அவனுக்(கு) எங்ங னேஉண்டாம் அறைந்த நன்மை இதுநிற்க
இவணம் உயர்பூ மியில்ஒன்றை இரண்டை மூன்றை வேறு)ஒன்றைக்
கவர்உற்(று) அடைந்தோர் உயிர்மாய்ந்தால் கலந்து மேவும் கதிஏது
தவரில் பெரியோர் உரைஎன்னச் சான்ற வசிட்டன் உரைசெய்வான்.

**பொழிப்புரை:** *ஆகிய அத்தகையவனுக்குக் கூறிய நன்மை எவ்வாறு உண்டாகும்? இது தவிர, கூறிய வண்ணம், மேலான பூமிகளில் முதல் பூமியையாவது, இரண்டாம் பூமியையாவது, மூன்றாம் பூமியையாவது வருத்தப்பட்டுப் பயிற்சி செய்து அடைந்தவன் உயிர் பிரிந்தால் சேர்ந்து அடைகின்ற கதி தான் என்ன? என்பதைத் தவசிகளுள் சிறப்பானவரே! உரைப்பீர் என்று இராமபிரான் கேட்கவும், வசிட்ட முனிவர் சொல்வார்.* **(6.இ.30)**

மூடன் ஆகிப் பலகுற்றம் மூடும் அவனுக்(கு) அனேகம்)என
நீடு பிறப்பாம் முதல்பூமி நேரும் மட்டும் பிறப்(பு)அகலா
நாடும் இதுஅன் றியில்காக தாலீ யம்போல் நல்லநெறி
கூடும் எனினும் அதனாலே குறை(வு)இல் நிராசை அதுபிறக்கும்.

**பொழிப்புரை:** *மூடனாகி, பல குற்றங்கள் மூடிக் கொண்டிருக்கும் அவனுக்கு அனேக பிறவிகள் நீளும். முதல் பூமி கிடைக்கும் வரையில் பிறவிகள் நீங்காது. நாடக் கூடிய இது மட்டுமல்ல, காகதாலீய நியாயம் போல நல்ல மார்க்கம் சேரும் என்றாலும் அதனால் குறைவில்லாத வைராக்கியம் உண்டாகும்.* **(6.இ.31)**

**அன்றி நல்லோர் கூட்டரவால் அடுத்த விராகம் அதுபிறக்கும்**
**ஒன்றும் நிராசை உறுபோதே யோக பூமி உறல்தப்பா**
**துன்றும் அதனால் பிறப்(பு)அகலும் தொகுநூல் பொருளின் சுருக்க(ம்)அதாம்**
**நின்ற யோக பூமியுடன் நிதனம் அடைந்தோர் நெறிகேளாய்.**

**பொழிப்புரை:** *தவிரவும், சாதுக்களின் சேர்க்கையாலும் சிரவண சாதகமான வைராக்கியம் உண்டாகும். பொருந்துகின்ற வைராக்கியம் உண்டான போதே யோக பூமி அடைவது தப்பாது. பூமி நெருங்கியதால் பிறவிகள் அகலும். சொல்லப்பட்ட சாத்திரங்களின் சுருக்கம் இதுவாம். (தாங்கள்) பயிற்சி செய்த யோக பூமியுடன் மரணம் அடைந்தவர் மார்க்கத்தைக் கேட்பாய்.* **(6.இ.32)**

**யோக பூமி அம்சம்விடா(து) உறலால் பழைய தீவினைபோம்**
**மாக விமானம் அதன்பின்பு வந்து கொடுபோய் வானவர்வாழ்**
**நாக முதலாம் உயர்பதியில் நல்மே ருவின்சூழ் பொழில்முழையில்**
**போக மடவா ரொடும்கூடிப் புணர்ந்து சிந்தை களிகூர்வன்.**

**பொழிப்புரை:** *யோக பூமியின் அம்சம் விடாது தொடர்வதால் பழைய தீவினைகள் போகும். தெய்வ விமானம் அதன் பின்பு வந்து கொண்டு போய், தேவர்கள் வாழும் தெய்வலோகம் முதலான மேலான இடத்தில், உயர்ந்த மேரு மலையைச் சூழ்ந்த சோலைகள், குகைகளில் போக மங்கையருடன் கூடிச் சேர்ந்து குலவி மனம் மகிழ்ச்சி அடைவன்.* **(6.இ.33)**

**அருந்து போகம் மாய்தலினால் அளவில் பண்டை இருவினையும்**
**பொருந்த மாயும் அப்போது புவியில் பிறப்பர் யோகிகள்தாம்**
**திருந்து செல்வம் குணம்சுத்தம் சிறந்த நல்லோர் மனைபிறந்து**
**வருந்தி முன்னம் பழகுதலால் வழுவா யோக நெறிநிற்பர்.**

**பொழிப்புரை:** *அனுபவிக்கும் போகம் மாய்ந்ததும், அளவில்லாத பழைய இரு வினைகளும் பொருத்தமாக மாய்ந்து போகும். அப்போது பூமியில் ஞானிகளாகப் பிறப்பர். மேம்பட்ட செல்வம், நற்குணம், சுத்தம் உடைய சிறந்த நல்லவர்களின் வீடுகளில் பிறந்து கஷ்டப்பட்டு முன்பு பயிற்சி செய்ததால் வழுவாமல்* **(***தவறாமல்***)** *யோக மார்க்கத்தில் நிலைபெறுவர்.* **(6.இ.34)**

**விதமாம் சகத்தைச் சாக்கிரத்தின் மிகப்பே தம்சேர் புந்தியினால்**
**பொதுவாய் நோக்கும் அதனால்இப் பூமி மூன்றும் சாக்கிரமாம்**
**அதுவே தனிக்கே வலம்யோகிக்(கு) ஆரி யப்பேர் பெறும்திறமாம்**
**இதனால் இவனே உய்ந்தவன்என்(று) ஏத்தத் தோன்றும் அறிவிலார்க்கும்.**

**பொழிப்புரை:** *பலவிதமான உலகத்தை விழிப்பில் மிகவும் பேதம் சேர்ந்த புத்தியினால் பொதுவாய் (சாமானியமாய்) நோக்குவதால் இந்த பூமிகள் மூன்றும் சாக்கிரமாம் (இப்பூமிகளில் விழிப்பு அவத்தை போல் திடமாய் பேத புத்தி தொடர்ந்து இருப்பதால் நனவாம்) அதுவே ஒப்பற்ற கேவலமாம். யோகிக்கு ஆரியன் என்ற பெயர் உண்டாகும் திறம் ஆகும். இதனால் இம்மகானே மேலானவன் என்று அறிவிலார்க்கும் போற்றத் தோன்றும்.* **(6.இ.35)**

செயலின் உரிய மிகச்செய்வோன் செய்யத் தகாத செய்யாதோன்
இயல்பின் ஒழுக்கம் தனிநிற்போன் யாவன் அவனே ஆரியனாம்
முயலும் ஒழுக்கம் நூல்சித்தம் முந்து நிலைமை விவகாரம்
புயலின் நிறத்தோய் உள்ளபடி பொருந்தும் அவனே ஆரியனாம்.

**பொழிப்புரை:** *செய்தற்கு உரிய செயல்களை நன்றாகச் செய்வன். செய்யத் தகாத செயல்களைச் செய்யாதவன். சுபாவமாகவே நல்லொழுக்கத்தில் இருப்பவன் எவனோ அவனே ஆரியன் எனப்படுவன். முயல்கின்ற ஒழுக்கத்தின்படி, சாத்திரத்தின் படி, சித்தப்படி, முன்வரும் நிலைமைக்கு ஏற்ப விவகாரத்தைக் கார்மேக வண்ணனே! கிடைத்தபடி நன்றாக ஏற்றுச் செய்பவனே ஆரியன்.* **(6.இ.36)**

முதலாம் யோக பூமியிலே முளைக்கும் இரண்டா வதில்மலரும்
ததையும் மூன்றா வதில்பலிக்கும் தனிஆ ரியனாம் திறம்யோகி
இதனில் இறந்தால் நெடுங்காலம் இருந்து சுத்த சங்கற்பத்து
உதவு போகங் களைஅருந்தி யோகி யாய்மீண்(டு) உற்பவிப்பான்.

**பொழிப்புரை:** *ஞானிக்கு ஒப்பற்ற ஆரியனாம் திறம் முதலாவது பூமியில் முளைக்கும், இரண்டாவது பூமியில் மலரும், நிறைந்த மூன்றாவது பூமியில் பலன் தரும். யோகி இதில் இறந்தால், நீண்ட காலம் இருந்து தூய சங்கற்பத்தால் உண்டாய போகங்களைப் புசித்து ஞானியாகவே மீண்டும் அவதரிப்பன்.* **(6.இ.37)**

மூன்று பூமி பரிசயத்தால் மூடத் தன்மை இறந்துழியே
ஆன்ற ஞானோ தயம்உண்டாய் ஆதி அந்தம் அறவிரிந்து
பூன்ற மதியின் உதயம்போல் பொலியும் மனத்தில் போதமுற
ஊன்று யோகத் துடன்சேர்ந்த உள்ளம் உடைய யோகிக்கே.

**பொழிப்புரை:** *மூன்று பூமிகளின் பயிற்சியாலே மூடத்தன்மை அழிந்த போது பெருமை வாய்ந்த ஞானோதயம் உண்டாய், ஆரம்பம் முடிவு அற விரிந்து பூரண சந்திரனின் உதயம் போல் பொலிகின்ற மனதில் ஞானம் அடைய, ஆழ்ந்த யோகத்தோடு கூடிய மனமுடைய ஞானிக்கு விளங்கும்.* **(6.இ.38)**

சமம தாகச் சொப்பனம்போல் சகத்தில் அனைத்தும் நோக்கிடுவர்
அமர நாலாம் பூமிதனை அடைந்தோர் முதல்பூ மிகள்மூன்றும்
குமர னேசாக் கிரம்ஆகும் கூறு நாலா வதுகனவாம்
விமல சித்தம் சரத்கால மேக சாலம் போல்இறக்கும்.

**பொழிப்புரை:** *மோட்சத்தைத் தரும் நான்காம் பூமியை அடைந்தவர் சமமாகக் கனவு போல உலகத்தில் உள்ள எல்லாவற்றையும் நோக்குவர். முதல் பூமிகள் மூன்றும் மைந்தனே! நனவாகும். கூறிய நாலாவது பூமி கனவாம். நிர்மலமாகிய மனமானது சரத்கால மேகக் கூட்டம் போல் இறக்கும்.* **(6.இ.39)**

**சிறக்கும் சத்பா வந்தானே சேட மாக நின்றிடுவர்**
**பறக்கும் சித்தம் இறத்தலினால் படர்ந்த விகற்பம் எலாம்தோன்றா**
**உறக்கும் சுழுத்திப் பதம்என்ன உரைக்கும் ஐந்தாம் பூமியில்போய்**
**நிறக்கும் விசேடம் அனைத்து(ம்)அற நிற்பன் ஒன்றாம் நிலைமட்டில்.**

**பொழிப்புரை:** *சிறந்த சற்பாவம் தானே எஞ்சி நிற்க நிலைபெறுவர். சஞ்சல மனம் அழிந்ததால், விரிந்த (உலக) விகற்பங்கள் எல்லாம் தோற்றம் அளிக்காது. துயிலும் சுழுத்திப் பதம் போல கூறும் ஐந்தாவது பூமியில் சென்று பூரிக்கும் சிறப்பு (வருணாசிரம பிரிவுகள் முதலானவை) நீங்க, அத்விதீய நிலையில் நிலைபெற்று நிற்பன்.* **(6.இ.40)**

**இருமை என்னும் இருள்போய்உள் எறியா நின்ற பேர்உணர்வோன்**
**அருமை யான சுழுத்திநிலை ஆகி நிற்பன் அனவரதம்**
**பொரு(வு)இல் உள்நோக் குடன்நிற்பன் புறத்தில் தொழிலில் புரிந்தேயும்**
**ஒருமை உபசாந் தத்தாலே உறக்கம் மிகுந்தோன் போல்தெரிவன்.**

**பொழிப்புரை:** *துவைதம் என்னும் அந்தகாரம் போய், உள்ளே பிரகாசிக்கின்ற பெரும் ஞானத்தை உடையவன், அருமையான சுழுத்தி நிலையாகி, எப்போதும் நிலைத்து நிற்பன். சஞ்சலகம் இன்றி உள்முக நோக்கத்துடன் இருப்பன். வெளிப் புறத்தில் செயல்களில் செய்வது போல் தெரிந்தாலும்,, ஏக மனதாய் சாந்தமாக உறக்கம் அதிகரித்தவனைப் போல் தெரிவன்.* **(6.இ.41)**

**அழுந்து துரியம் எனும்நாமத்(து) ஆறாம் பூமி அடைந்(து)ஒழுங்கின்**
**எழுந்து பலவா தனைஇலனாய் இப்பூ மியிலே பரிசயிப்பன்**
**உழைந்து நான்என் பதும்என்னா(து) அதுவும் உளதும் இல்லாதும்**
**கழிந்து வெறிதே நினை(வு)இலனாய்க் காணான் இருமை ஒருமைகளை.**

**பொழிப்புரை:** *அழுத்தமான துரியம் என்னும் பெயரையுடைய ஆறாவது பூமியை அடைந்து. கிரமமாகக் கிளம்பி வாசனை பலவும் இல்லாதவனாய் இந்தப் பூமியிலே பயிற்சி செய்வன். வருத்தம் தரும் நான் என்பதும், நான் என்பது இல்லாததும், உள்ளதும், இல்லாததும் போய், வெறுமனே எண்ணங்கள் இல்லாதவனாய், பேத அபேதங்களைக் காணான்.* **(6.இ.42)**

**செறியும் முடிச்சும் ஐயமும்போய்ச் சீவன் முத்த சுபாவத்தால்**
**வெறிது வீடு(டு)அன் றியும்வீடு விளைந்(து)ஓ வியத்தின் விளக்(கு)ஒப்பான்**
**பிறிவில் விண்ணில் வெறும்குடம்போல் பிறிது புறன்உள் சூனியமாய்**
**எறியும் கடலில் நிறைகடம்போல் எங்கும் புறன்உள் நிறைந்(து)இருப்பன்.**

**பொழிப்புரை:** *நெருங்கிய முடிச்சும் (கிரந்தியும்) சந்தேகமும் நீங்கி, சீவன் முத்த சுபாவத்தால், வெறுமனே தேகத்தில் அகங்காரம் இன்றி இருத்தலால் முத்தியாய் ஓவியத்தில் வரையப்பட்ட தீபத்திற்கு ஒப்பாக இருப்பான். அபேத ஆகாயத்தில் சூனிய குடத்தைப் போல, வேறாகிய பிரபஞ்ச சிருட்டியானது வெளிப்புறமும், உள்ளும் இன்றி அலைகள் வீசுகின்ற சமுத்திரத்தில் நிறைந்த குடம் போல், எவ்விடமுமான பிரம்ம திருஷ்டியால் உள்வெளி இரண்டிலும் பூரணனாய் இருப்பன். (பிரம்ம பாவனையால் நிறைந்திருப்பன்.)* **(6.இ.43)**

**இவனே உளதாய்ச் சிறி(து)ஆங்கே இவனே சிறிதும் இலன்ஆவன்**
**தவறா ஆறாம் பூமியிலே தனிநின்(று) ஏழாம் பூமிதனை**
**அவனே அடைவன் உடல்இன்றி அடையும் முத்தி அதுவாகும்**
**கவர்சாந் தமுமே மொழிக்(கு)எட்டாக் கனபூ மிகளின் எல்லையிதாம்.**

**பொழிப்புரை:** *ஆறாம் பூமியை அடைந்த இந்த யோகி, சத்து வடிவமாவதால் உண்டானவனாய், இவனே விவகாரம் செய்தற்கு அரியவன் ஆவதால் உண்டானவன் அன்றாம். குறையாத ஆறாம் பூமியில் தனியாய் நிலைத்து நின்று, ஏழாம் பூமியை அவனே அடைவன். தேகம் இல்லாமல் அடைகின்ற முத்தி (விதேக முத்தி) அதுவாகும். கிரகிக்கின்ற மேலான சாந்தமும், வசனத்திற்கு எட்டாததும் ஆகும். மேன்மையான ஞானபூமிகளின் அளவிது ஆகும்.* **(6.இ.44)**

**குலவும் உடல்தீர் முத்திஎனக் கூறும் ஏழாம் பூமிதனைச்**
**சிலர்நல் சிவம்என்(று) உரைசெய்வர் சிலர்சூ னியம்என்(று) உரைசெய்வர்**
**இலகு பொருள்என்(று) உரைப்பர்சிலர் இயைந்த காலம் என்பர்சிலர்**
**விலகு பகுதி என்பர்சிலர் வெவ்வே றாக விசாரித்து.**

**பொழிப்புரை:** *பொருந்திய தேகம் தீர்ந்த முத்தி எனக் கூறப்பட்ட ஏழாம் பூமியை விசாரணை செய்து வேறு வேறாகப் பிரித்து, சிலர் பரமசிவம் என்று சொல்வர். சிலர் சூனியம் என்று கூறுவர். சிலர் விளங்குகின்ற விஞ்ஞானம் என்பர். சிலர் பொருந்திய காலம் என்று உரைப்பர். சிலர் நீங்குகின்ற பிரகிருதி என்பர்.* **(6.இ.45)**

**அயலோர் ஆன்ம விகற்பத்தோர் அவதா னம்தீர் பேதத்தோர்**
**இயல்பால் இதுவென்(று) அறிவிக்க எட்டா இதனை மிகவருந்தி**
**முயல்வார் ஆகி அறிவிப்பர் மொழிந்த பூமி இவைஏழும்**
**மயல்தீர் நிலையால் பரிசயிக்கில் வருத்தம் சிறிதும் வாராதே.**

**பொழிப்புரை:** *பிறர்கள் தமது விகற்பத்தினால் ஒரு நிர்ணயமான முடிவாக இல்லாத வேற்றுமையினால் ஒரு தன்மையினாலும் இது என்று அறிவிப்பதற்கு புலப்படாத இந்த விதேக பூமியை மிகவும் வருத்தப்பட்டு முயற்சியுடையவர்களாய்த் தெரிவிப்பார்கள். சொல்லப்பட்ட இந்த ஞானபூமி ஏழும் மயக்கமற்ற குணத்தினால் பயிற்சி செய்தால் துன்பமானது கொஞ்சமும் வராது. (ஞான பூமிகள் ஏழின் பெயர்கள் மற்றும் இலக்கணங்கள் முன்பு உற்பத்திப் பிரகரணத்தில் இலவணன் கதையில் சொல்லப்பட்டுள்ளதால் இங்கே கூறப்படவில்லை. அங்கே சொல்லப்படாத இந்தப் பூமிகளை அடைந்தவர்களின் அடையாளங்கள் இங்கே கூறப்பட்டுள்ளன)* **(6.இ.46)**

**மிகவு மதத்து மதம்பொழிந்து மெத்தென்(று) இனிதா நடையுடைத்தாய்**
**புகர்கொள் துதிக்கை நுனிபதறிப் பொருகோட் டிணைசங் கிளைநிகராம்**
**பக(டு)உண்(டு) அனர்த்தம் பண்ணு(ம்)அது படுக்கப் படுமேல் அப்பொழுதே**
**சுகமாய் விரைவில் நரர்கடப்பர் சொன்ன பூமிப் பரப்பெல்லாம்.**

**பொழிப்புரை:** *மிகவும் மதம்கொண்டு, மத நீரைப் பொழிந்து, மிருதுவாக, இனிய நடையுடையதாய், புள்ளிகளை உடைய தும்பிக்கையின் முனை துடித்து, சங்கினைப்*

*போலப் பொருந்துகின்ற தந்தங்களை உடைய யானையானது உண்டு. துன்பம் செய்கின்ற அது வெற்றி கொள்ளப்படுமாயின் அப்போதே ஆனந்தமாக விரைவில் மானிடர்கள் முன் சொல்லப்பட்ட ஞான பூமிகளின் விரிவு அனைத்தையும் தாண்டுவார்கள்.* **(6.இ.47)**

**வழியும் கடமாக் களிறு்அதனை வன்பால் கொல்லாது் இருப்பளவும்**
**இழியும் துயர்ஆர் போர்க்களத்தில் எவனே சுபடன் ஆம்என்ன**
**மொழியும் தவனை நீசொன்ன மூரிக் களிறு்ஏது் அமர்க்களம்்ஏது்**
**அழியும் படிஎது் உறைவிடம்்ஏது் அருள்வாய் என்றான் அருள்மூர்த்தி.**

**பொழிப்புரை:** *மத நீர் ஒழுகுகின்ற பெரிதாகிய யானையை பலத்தினால் கொலை செய்யாதிருக்கின்ற வரையில் இழிவுள்ள துன்பம் நிறைந்த போர்க்களத்தில் எவன் மகாவீரன் ஆவான்? என்று கூறிய தவமுனிவரை நோக்கி, தாங்கள் சொன்ன பலமுள்ள யானை எது? போர்க்களம் எது? அது அழியும் தன்மை எது? அது வாசம் செய்யும் இடம் யாது? என்று அருளிச் செய்வீர் எனக் கேட்டார் கருணை வடிவாகிய அருள்கின்ற இராமபிரான்.* **(6.இ.48)**

**ராக வர்க்கு முனிசொல்வான் ஈது்உண் டாக எனல்வடிவாய்ச்**
**சோக இச்சை எனப்பெயர்கொள் சொரிமா மதத்த வெங்களிறு**
**தேகம் என்னும் பெரும்காட்டில் திரளாம் செருக்கு மிகச்செய்யும்**
**வேக மதத்த இந்தியமாம் வெங்கன் றுகளை உடைத்தாகும்.**

**பொழிப்புரை:** *இராமபிரானுக்கு வசிட்ட முன்வர் சொல்வார்: இது எனக்கு உண்டாக வேண்டும் என்ற உருவமாய்த் துன்பத்தை விளைக்கும் இச்சை என்ற பெயருடைய மாமதம் சொரிகின்ற கொடிய யானையானது தேகம் என்கின்ற பெருங்காட்டில் கூட்டமான கர்வத்தால் லீலையை மிகச் செய்யும். கோபமும் மதமும் உள்ள இந்திரியங்களாகிய கொடிய குட்டிகளை உடையதாகும்.* **(6.இ.49)**

**இனிது நாவால் உரைசெய்யும் இதயம் என்னும் காட்்உறையும்**
**பனிவல் வினைக்கோடு் இரண்்உளவாம் பலவா தனையாம் மதம்சொரியும்**
**அனிசம் எங்கும் படர்வடிவாம் அறிவில் பிறவி நோக்கங்கள்**
**முனிவில் அடுபோர்ப் பூமிகளாம் மூரி இச்சை மதகளிறே.**

**பொழிப்புரை:** *இனிதாக நாக்கினால் பேசும். மனம் என்கின்ற காட்டில் வாழும். நடுக்கம் செய்கின்ற கொடி இருவினைகளாகிய இரண்டு கொம்புகள் உள்ளதாம். பற்பல வாசனைகளாகிய மதங்களைப் பொழியும். எப்பொழுதும் எவ்விடத்திலும் பரவுகின்ற உருவத்தை உடையதாம். உணர்வில்லாத சம்சார திருஷ்டிகளே (பிறவிகளே) சினத்தினால் கொல்லுகின்ற போர்க்களம் ஆகும். பலமுள்ள ஆசையே (இச்சையே) மத யானை ஆகும்.* **(6.இ.50)**

**வெற்றித் திறமும் தோல்விகளும் மேன்மேல் நல்கி இச்சைஎனும்**
**செற்றக் களிறு தீனர்களாம் சீவத் திரளைச் சஞ்சரிக்கும்**
**நிற்றத் தொழில்வா தனைபாவ நெஞ்சு மதிசங் கற்பங்கள்**
**பற்றும் பிறவும் இதன்பெயராய்ப் பண்ட மாய்நெஞ்்சு் உள்ளிருக்கும்.**

**பொழிப்புரை:** *வெற்றியும் தோல்விகளும் மேன்மேலும் கொடுத்து இச்சை என்னும் கோபத்தை உடைய யானையானது எளியரான சீவ கோடிகளைக் கொல்லும். நிலையாய் இருக்கின்ற வாசனையும், பாவனையும், மனமும், புத்தியும், சங்கற்பங்களும், ஆசைகளும், மற்றவைகளும் இதனது பெயர்களாய், ஒரு பொருளாய், அந்தக்கரணத்தில் இருக்கும்.* **(6.இ.51)**

**நிலைமை என்னும் உயர்கணையால் நிறைந்த வலியால் விநோதத்தால்**
**தொலைவில் பொருள்யா வையும்ஆகித் துன்னி ஒன்றாம் இச்சைதனை**
**உலை(வு)இல் எல்லா வகையாலும் யோகி வெல்வ(து) உத்தமமாம்**
**அலைவோ(டு) ஈ(து)உண் டாகஎனல் அகத்தே தழைக்கில் அதுகேளாய்.**

**பொழிப்புரை:** *தைரியம் என்கின்ற மேலான அம்பினால், மிகுந்த பலத்தினால் விளையாட்டால், அளவற்ற பொருள்கள் அனைத்துமாய் நெருங்கி ஒன்றாகிய ஆசை என்கின்ற யானையை அச்சமில்லாமல் எந்த வழியிலாவது ஞானியர் வெற்றிகொள்வது நன்மையாகும். சஞ்சலத்துடன் இது எனக்கு உண்டாக வேண்டும் என்பது மனதில் வளர்ந்தால் அது செய்வதைக் கேட்பாய்.* **(6.இ.52)**

**பேசும் இதுதான் நிற்பளவும் பிறப்பாம் நச்சு விடூசிகைதான்**
**நாசம் அடையா(து) இராகவனே ஞானச் சுருக்கம் இதுகேளாய்**
**பாசம் உறஈ(து) உண்டாக என்று படரும் மனம்தானே**
**ஏசு பிறவி இம்மனத்தின் இறவே முத்தி இவ்வளவே.**

**பொழிப்புரை:** *கூறிய இந்த ஆசையானது இருக்கின்ற வரையில் பிறவியாகிய விஷ விடூசிகை தான் நாசம் அடையாது, இராகவனே! ஞானச் சுருக்கமாம் இதனைக் கேட்பாய். பந்தம் அடைய இது எனக்கு உண்டாக வேண்டும் என்று விரிகின்ற மனதே நிந்திக்கத்தக்க பிறவியாம். இந்த மனதினது நாசமே மோட்சமாகும். இவ்வளவு தான்.* **(6.இ.53)**

**மருளும் மயல்தீர் விமலன்பால் வடித்துத் தெளிந்த உபதேசம்**
**தருதல் கண்ணா டியின்புறத்தில் தயிலத் துளிபோல் இளைப்பாறும்**
**தெருளும் உணர்வால் இம்மோகம் தீர்ந்(து)இவ் இச்சை அங்குரமாய்**
**உருவ மனம்கிஞ் சிலும்தோன்றா(து) உணர்வி லாமை மாத்திரத்தால்.**

**பொழிப்புரை:** *விஷயங்களில் மயங்கும் மயக்கம் தீர்ந்த நிர்மல அதிகாரியின் இடத்தில் மிகவும் தெளிவாகத் தெளிந்த உபதேசத்தைத் தருவது கண்ணாடியின் மீது விட்ட தைலத் துளி போல் அமைதியடையும். தெரிவுள்ள ஞானத்தினால் இந்தப் பிறவி மயக்கம் நீங்கி, இந்த ஆசையே முளையாக வடிவம் அடைந்த மனமானது, ஒன்றையும் கருதாத மாத்திரத்தாலே சிறிதும் தோன்றாது.* **(6.இ.54)**

**ஊறா அனர்த்தம் தரும்இச்சை ஒருகால் வரினும் அப்போதே**
**ஆறா விடயத்(து) உணர்(வு)இன்மை ஆன அதனால் அறுத்திடுவாய்**
**கூறாம் இச்சை பலவடிவாய்க் கோத்த(து) எனினும் இவ்வுடலில்**
**மாறா தான வாதனையை மாற்றா(து) இரா(து)இவ் வுணர்(வு)இன்மை.**

**பொழிப்புரை:** *நிரந்தரம் துயரைச் செய்கின்ற இச்சையானது ஒருகால் வந்தாலும் அப்போதே திருப்தி அடையாத அவ்விஷயத்தில் நினைப்பு இன்மையான (அது குறித்து யோசித்தல் இல்லாத) அதனைக் கொண்டு அறுத்திடுவாய். கூறும் அந்த இச்சையானது பலவித உருவங்களில் சேர்ந்தது என்றாலும் இத்தேகத்தில் தீராததான வாசனையைத் தீர்க்காது இருக்காது நினைப்பின்மை.* **(6.இ.55)**

தள்ளு முடி(வு)இன் றியின்இத்தைச் சவத்தின் திரளை விருப்(பு)அறல்போல்
தெள்ளும் பிரத்தி யாகாரத் திறத்தி னாலே வாதனையை
நள்ளும் இச்சை மாத்திரமாய் நயவா(து) இருக்கும் அப்போதே
உள்ளு வெறிதே இருப்பதுவே உணர்வி லாமை உறுமுயற்சி.

**பொழிப்புரை:** *முடிவின்றி இருக்கும் இதனை, பிணக்கூட்டத்தை விருப்பின்றி விடுதல் போல, தெளிந்து செய்யும் இந்திரியத்தை மீட்டெடுப்பதாலே, தள்ளி (விட்டு) விடுவாய். வாசனையை விருத்தியாம் ஆசை மாத்திரமாக வளர்க்காமல் இருக்கும் அந்தக் கணமே உள்ளே மனம் வாளா இருக்கும் அதுவே உணர்விலாமையை அடைகின்ற முயற்சி ஆகும். (சித்தம் சும்மா உணர்விலாமையாம் - அசம்வேதனம்)* **(6.இ.56)**

என(து)ஈ(து) என்னும் அறிவுதனை இடர்கற் பனைஎன்(று) உரைசெய்வார்
கனமாம் அறிவின் பாவனையால் காண்ப எல்லாம் கைஅகலின்
அனகா திபனே கற்பனைகள் அற்ற(து) என்றார் உயர்நல்லோர்
மனமா நினைவே சங்கற்பம் மனத்தில் நினை(வு)அற் றதுசிவமே.

**பொழிப்புரை:** *என்னுடையது இது என்னும் உணர்ச்சியைத் துயர்தரும் கற்பனை எனச் சொல்வர். ஆழமான மனதின் பாவனையால் காண்கின்ற அனைத்தும் நழுவிப் போகுமாயின் (வெளிப்பொருள்களின் பாவனை இல்லாமை) புண்ணிய மூர்த்திகளுக்குள் புண்ணிய மூர்த்தியே! கற்பனைகள் அற்றது என்றார் உயர்ந்த மகான்கள். மனதின் நினைவே (எண்ணமே) சங்கற்பம், மனதில் நினைவு இலாமையே (எண்ணம் அற்றதே) மோட்சமாகும்.* **(6.இ.57)**

எட்டி அறிந்த(து) அறியாதது இரண்டும் பாவிப் பதுநினைவாம்
பட்ட மரம்போல் இவைஇரண்டில் பற்று நினைவு தனைமறந்து
வட்டம் இடும்யா வையும்விரைவில் மறந்து சான்ற மதியுடைத்தாய்
திட்ட முறத்தோன் றுதல்இல்லாத்திறத்தோன் ஆகி நிலைநிற்பாய்.

**பொழிப்புரை:** *சுட்டிக் காட்டி அறிந்து கொண்டதும், அறிந்து கொள்ளாததும் ஆகிய இரண்டினையும் எண்ணுவதே நினைப்பாம். காய்ந்த மரத்தைப் போல, இந்த இரண்டிலும் தொடர்பு கொள்ளும் எண்ணம் தனை மறந்து, சுற்றிக் கொண்டு திரியும் எல்லாவற்றையும் விரைவில் மறந்து, மகா மதியுடையவன் ஆகி, திடமாக யாவருக்கும் தெரியாதவன் (மூடன்) போல இருப்பாய்.* **(6.இ.58)**

கேளா நின்றான் இவன்என்ன ஒருவன் கிட்டா மையினாலே
தோளால் உயரக் கையெடுத்துத் தோன்ற நின்று சொல்கின்றோம்
மீளா தான அசங்கற்பம் விமல மான பரமபதம்
வாளா உள்ளே பாவிக்க மாட்டார் அதனை என்னம்மா.

**பொழிப்புரை:** *கூறுவதைக் கேட்கின்றான் இவன் என்று சொல்ல ஒருவன் கிடைக்காமையால் தோளுக்கு மேல் கையை உயரத் தூக்கி கூப்பிட்டுக் கூறுகின்றோம். மீண்டும் திரும்பாததாகிய சங்கற்பம் இல்லாமையே நிர்மலமான மேலான மோட்சம். வீணாக உள்ளே அந்த சங்கற்பம் இல்லாமையை பாவிக்காமல் இருக்கின்றார் என்னே ஆச்சரியம்.* **(6.இ.59)**

செறிபார் முழு(து)ஆள் பவன்பதமும் திரணம் என்னப் பரமபதம்
வெறிதே இருக்கும் இருப்பினால் மேவும் அன்றே பேர்ஊருக்கு
நெறிபோம் பதிகன் தனக்(கு)இருதாள் நினையா(து) இருக்க நடப்பதுபோல்
பொறிகூர் தனது தொழில்நடக்கும் பூணா வாளா இருந்திடவே.

**பொழிப்புரை:** *நிறைந்த பூமி முழுவதையும் ஆள்பவனின் நிலையும் (மோட்சத்தை நோக்கின்) துரும்புக்குச் சமமாம். அந்த மோட்சமானது சும்மா இருப்புத் தன்மையில் இருப்பதனால் எளிதாக அடையலாம் அல்லவோ! ஒரு நாட்டுக்கு சாலை வழியாக நடந்து செல்லும் ஒரு வழிப்போக்கன் நடக்கையில் தனக்கு இரு கால்கள் உள்ளதை நினைத்துக் கொண்டிருக்காமல் நடந்து செல்வது போல, தான் சங்கற்பம் இன்றி சும்மாவே இருந்த போதிலும், தனது இன்றியமையாத விவகாரங்களை இந்திரியங்களே செய்து முடிக்கும்.* **(6.இ.60)**

இங்கு பன்னும் பலவால்என் இயம்பும் சுருக்கம் இதுகேளாய்
சங்கற் பம்தான் பவபந்தம் சங்கற் பம்தீர்ந் ததுமுத்தி
பங்(கு)அற்(று) எல்லை அழி(வு)அலைவு பவம்அற்(று) ஆறும் அறிவுருவே
துங்கச் சகங்கள் எனநோக்கிச் சுகம்எப் படிஅப் படிநிற்பாய்.

**பொழிப்புரை:** *இங்கு பலவிதமாகக் கூறுவதால் என்ன பயன்? சுருக்கமாகக் கூறுவதைக் கேட்பாய். சங்கற்பம் (எண்ணங்கள்) தான் பிறவிப் பந்தம். சங்கற்பம் இல்லாமையே முத்தி. பிரிவு இல்லாமல், எல்லையில்லாமல், அழிவில்லாமல், சலனம் இல்லாமல், பிறப்பில்லாமல் அமைதியுறும் சித்து உருவமே இப்பலவிதமான உன்னத உலகங்கள் எனப் பார்த்து ஆனந்தம் எவ்வாறு அவ்வாறே நிற்பாய்.* **(6.இ.61)**

ஒழியா நிலையாம் உபசாந்த யோகம் என்ப(து) உணர்(வு)இன்மை
கழியா யோக நிலையினனாய்க் கவர்பற்(று) ஒழித்துத் தொழில்செய்வாய்
இழியா(து) இயற்றப் படாஉள்ளம் இறந்த யோகம் உணர்(வு)இன்மை
வழியால் மிகவும் அதின்மயமாய் வல்லை நிற்பாய் மகிழ்ந்தபடி.

**பொழிப்புரை:** *ஒழியாத நிலையாம் உபசாந்த யோகம் என்பது உணர்வின்மை ஆகும். துழியாத யோகத்தில் நிலைபெற்று, கவர்கின்ற பற்று ஒழித்துக் காரியம் செய்வாய். இழிவாகாது இயற்கையான மனோநாச யோகம் உணர்வின்மை ஆகும். முறையாக மிகவும் அதன்மயமாகி, விரைவில் திரும்பாமல் மகிழ்ந்த வண்ணம் நிலைபெறுவாய்.* **(6.இ.62)**

எனக்(கு)ஈ(து) என்னும் உணர்வுடைமை இடர்விட்(டு) அகலா(து)உணர்(வு)இன்மை
அனர்த்தம் இல்லா வீ(டு)அளிக்கும் ஆசை ஏ(து)இங்(கு) அதுசெய்வாய்
சனிப்பில் சிவம்எங் கணும்உளது சாந்தம் சுபம்சித்(து) உருஎன்னும்
கனத்த அந்த ஒருநினைவே கருமத் தியாகம் இராகவனே.

**பொழிப்புரை:** *எனக்கு இது வேண்டும் என்னும் உணர்ச்சி உடையதாக இருப்பது துன்பத்தை விடவே மாட்டாது. (அந்த உணர்வினால் துன்பம் இருந்து கொண்டே இருக்கும்). உணர்வின்மையானது எல்லா துக்கங்களும் இல்லாத முத்தியை அளிக்கும். உனக்கு எப்படி விருப்பமோ அப்படி செய்வாய். பிறப்பிலாத பரப்பிரம்மம் எங்கும் உள்ளது. சாந்தம், ஆனந்தம், சித்து உருவம் என்னும் கனமான அந்த ஒப்பற்ற ஏக நினைவில் இருப்பதே எல்லாக் கருமங்களையும் தியாகம் செய்வதாகும் (விட்டு விட்டதாகும்) இராகவனே!* **(6.இ.63)**

என்னா வசிட்ட முனிராமற்(கு) இசைத்தான் என்று வான்மீகி
சொன்னான் நூற்(று)ஆ யிரம்கிரந்தத் தொகையில் பரத்து வாசனுக்குப்
பின்னாள் அதில்ஆ றாயிரத்தைப் பிரித்தான் இவ்வாற்(று) உல(கு)உய்யப்
பன்னா மறைதீர் கான்மீரப் பண்டி தப்பேர் பரமகுரு.

**பொழிப்புரை:** *இப்படி என்று வசிட்ட முனியானவர் இராமபிரானுக்கு உபதேசித்தார் என்று இலட்சம் கிரந்தக் கணக்கினால் பரத்துவாச ரிஷிக்கு வான்மீக முனியானவர் அருளிச் செய்தார். பிற்காலத்தில் அதில் ஆறாயிரம் கிரந்தத்தை இவ்வண்ணம் உலகத்தில் உள்ளோர் பிரம்மானந்தத்தில் மூழ்கி உய்வுபெற, சுயமாய் உண்டான வேதத்தை ஆராய்ந்து அறிந்த கான்மீரப் பண்டிதன் என்னும் பெயரை உடைய பரமகுருவானவர் பிரித்தெடுத்தார்.* **(6.இ.64)**

சாத்தி ரத்தில் பெரிய(து)இது தடங்கா வியத்தில் பெரிய(து)இது
மாத்தி ரத்தில் மெய்ஞ்ஞான வழியால் பெரிய(து) இதுஞான
நேத்தி ரத்தில் பெரியோர்க்கு நிதிபோல் பெரிய(து) இதுகதிரோன்
கோத்தி ரப்பொற் பாத்திரத்தில் குதித்த அமுதாம் வாசிட்டம்.

**பொழிப்புரை:** *ஞான வாசிட்டம் என்னும் இந்நூலே ஞான சாத்திரங்களில் பெரியதாம். இதுவே விசாலமுள்ள காவியங்களில் பெரியதாம். இதுவே தத்துவ ஞானத்தின் மார்க்கத்தில் பெரியதாம். இதுவே ஞான திருஷ்டியில் சத்துக்களுக்கு சங்கநிதி, பதுமநிதி போல் மகத்தானதாம். சூரியனது கோத்திரம் என்னும் பொன் பாத்திரத்தில் பாய்ந்த அமுதாகும்.* **(6.இ.65)**

மலரோன் வாழி நாமாது வாழி வசிட்ட முனிவாழி
உல(கு)ஆள் இராமன் மிகவாழி உயர்வான் மீக முனிவாழி
நலமார் பரத்து வாசமுனி நாளும் வாழி வாசிட்டம்
பலமா வாழி கான்மீர பண்டி தப்பேர் முனிவாழி.

**பொழிப்புரை:** *நான்முகன் வாழ்க. நாமகள் வாழ்க. வசிட்ட முனி வாழ்க. உலகை ஆள்கின்ற இராமபிரான் மிகவும் வாழ்க. உயர்ந்த வான்மீக முனி வாழ்க. நலம் நிறைந்த பரத்துவாச முனி நாளும் வாழ்க. ஞானவாசிட்டம் பலன்தருவதாக வாழ்க. கான்மீரப் பண்டிதப் பேர் முனி வாழ்க.* **(6.இ.66)**

தேமென் மலரோன் பதம்புகழ்வோ தெளிந்த வசிட்டன் பதம்பரவோ
ராமன் கமலப் பதம்துதிக்கோ இயல்வான் மீகி பதம்ஏத்தோ
பாமன் கீர்த்திப் பரத்துவாசன் பதமே பழிச்சோ வாசிட்ட
நாமம் பெறுநூல் பதம்வியக்கோ நான்சேர் பதத்தை நன்(று)என்கோ.

**பொழிப்புரை:** *தேன்நிறை மெல்லிய தாமரையில் வீற்றிருக்கும் நான்முகனைத் துதிப்பேனோ! தெளிந்த வசிட்ட முனிவர் பாதங்களைத் துதிப்பேனோ! இராம பிரானின் தாமரை மலர்ப்பாதங்கள் துதிப்பேனோ! இயல்புடைய வான்மீக பாதங்கள் துதிப்பேனோ! புகழ் உடைய பரத்துவாசன் பாதங்களைத் துதிப்பேனோ! வாசிட்டம் என்னும் பெயர் பெற்றிருக்கின்ற ஞான சாத்திரத்தின் பதத்தை (நிலையை) அதிசயிப்பேனோ! நான் அடைந்திருக்கின்ற நிலையை நன்று எனச் சொல்லுவேனோ!* **(6.இ.67)**

பரம மேனி வசிட்டமுனி பச்சை மேனி இராமற்குப்
பிரம ஞானம் உணர்வித்த பெருவா சிட்ட நன்னூலைத்
திரம தாகக் கற்பளவே சீவன் முத்தி பதம்சேர்வர்
உரம தாக உள்ளுணர்வோர் உறுபேர் எங்ஙன் உரைப்பதுவே.

**பொழிப்புரை:** *பிரம்ம சொரூபமாய் இருக்கின்ற வசிட்ட முனிவர் மேக நிற வண்ணனாகிய இராமபிரானுக்குப் பிரம்ம ஞானத்தைப் போதித்த பெருமையான ஞானவாசிட்டம் என்னும் ஞான சாத்திரத்தை நிலையாக (திரமாக) கற்ற மாத்திரத்தில் சீவன் முத்திப் பதத்தை அடைவர். ஞான மாத்திரமாக உள்ளத்தில் தெளிபவர்கள் அடையும் பேற்றினை எப்படிச் சொல்வது? (சொல்வதற்கு அரியது)* **(6.இ.68)**

**(நிருவாணப் பிரகரணத்தில் யோக சத்த பூமிகை முற்றும்)**

**(நிருவாணப் பிரகரணம் முற்றிற்று)**

**ஞானவாசிட்டம் முற்றும்.**



# ஞான வாசிட்டப் பாடல்களின் அகர வரிசைப் பட்டியல்
## (எண்கள் பக்க எண்களைக் குறிக்கும்)

